# ஸுசுருத ஸம்ஹிதை

(அறுவைச் சிகிச்சையைப் பற்றிய ஆயுர்வேத நூல்)

## இரண்டாம் பகுதி

தமிழாக்கம்


கலைமாமணி

எஸ்.என்.ஸ்ரீராம தேசிகன்

கவுரவத் தனி அலுவலர்
ஆயுர்வேத மொழிபெயர்ப்புப் பிரிவு
இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்



வெளியீடு

இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்
ண்ணா மருத்துவமனை, சென்னை-106

शेषाद्रीशस्य नित्यं वदनविधुकनच्चन्द्रिकासान्द्ररोचि-
र्दत्वा साम्राज्यलक्ष्मीं स्मितमिह रघुनाथाख्यभूपालमौलिम्॥१॥

काप्यागच्छति मामकीनभवनं त्रैलोक्यसंमोहिनी-
मेनां द्वारि न मुञ्चतात्र विदितं गोपीविटत्वं हरेः॥
श्रुत्वेत्थं गदितं श्रिया प्रतिसखीर्यन्मोहिनीरूपभाक्
चक्रे तद्रघुनाथभूपमवतां नित्यं मुरारेः स्मितम्॥ २॥

शुम्भत्संरम्भसम्भावितदितिजमदारम्भकुम्भीन्द्रकुम्भा-
लम्भारम्भोग्रदम्भः कटुविकटरदस्तम्भसम्भूतजृम्भः॥
संभिन्नस्तम्भसीमासुरभयमहरद्यः कृपाकेलिसीमा
भीमानीरातटाकस्थितिरिह रघुनाथक्षितीन्द्रं स पायात् ३

कन्तुर्मे क गतोद्य रुक्मिणि हरे हृद्येव जागर्त्यसौ
सत्यं ते वचनं यदद्य हृदि ते जागर्ति कन्तुद्वयम्॥

# ஸுசுருதஸம்ஹிதை

## (அறுவை சிகிச்சையைப் பற்றிய ஆயுர்வேத நூல்)

## இரண்டாம் பகுதி


தமிழாக்கம்

**கலைமாமணி எஸ். என். ஸ்ரீராமதேசிகன்**

கவுரவத் தனி அலுவலர்

ஆயுர்வேத மொழி பெயர்ப்புப் பிரிவு

இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநரகம்






வெளியீடு:

**இந்திய மருத்துவம்**

மற்றும்

**ஓமியோபதி இயக்குநரகம்**

**அண்ணா மருத்துவமனை, சென்னை - 600 106.**

**1995**

முதற்பதிப்பு-அக்டோபர் 1995
1000 பிரதிகள்

பி.ஏ. எம்.எஸ்.
ஆயுர்வேதப் பட்டப் படிப்பின்
ஐந்தாண்டுகட்கும் பயன்படும் பாட நூல்

**விலை ரூ.**

அச்சிட்டோர்:

***டான்சி பிரஸ்,***
தொழிற்பேட்டை,
கிண்டி,
சென்னை - 32.

புத்தகம் கிடைக்குமிடம்:

விற்பனைப் பிரிவு,
**இந்திய மருத்துவம் மற்றும்**
**ஓமியோபதி இயக்குநரகம்,**
அண்ணாமருத்துவமனை வளாகம்,
சென்னை - 600 106.

இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்
ஆயுர்வேத மொழிபெயர்ப்புத் துறை வெளியீடு

# மலர் ஆறு

மூலம் 25,000 சுலோகங்கள் தமிழாக்கம் 6400 பக்கங்கள்

---

## எஸ்.என். ஸ்ரீராமதேசிகனின்
## பிற மொழிபெயர்ப்பு நூல்கள் :

1. அஷ்டாங்க சங்கிரகம் (ஸூத்ரஸ்தானம்)
தமிழ் மொழி பெயர்ப்பு - 682 பக்கங்கள் விலை : ரூ. 71

2. சரகஸம்ஹிதை (முதற்பகுதி)
தமிழாக்கம் 954 பக்கங்கள் விலை: ரூ. 105-30

3. சரகஸம்ஹிதை (இரண்டாம் பகுதி)
தமிழாக்கம் (175 மூலிகைகளின் வண்ணப் படங்களுடன் கூடியது) 1135 பக்கங்கள் விலை: ரூ. 253-65

4. சரகஸம்ஹிதை (மூன்றாம் பகுதி) தமிழாக்கம் (275 மூலிகைகளின் வண்ணப்படங்களுடன் கூடியது) (மூலிகைகளிலுள்ள இரசாயனக் கலவைகள்) 1318 பக்கங்கள் விலை: ரூ. 390-00

5. ஸுசுருதஸம்ஹிதை (முதற்பகுதி)
தமிழாக்கம் 1308 பக்கங்கள் :
(உடற்கூறு மற்றும் கருவளர்ச்சி பற்றிய 283 வண்ணப் படங்களுடன் கூடியது) விலை: ரூ.390-00



## சமர்ப்பணம்

ஆரோக்யக் கடவுளாகிய
தன்வந்தரி பகவானின் உபதேச வடிவில்
வெளிவந்த ஸுசுருத ஸம்ஹிதையின் தமிழாக்கம்
(இரண்டாம் பகுதியை) வெளியிட்டு மக்கள் நல வாழ்வையும்
தன்வந்தரி பகவானின் உபதேச மொழிகளையும்
தமிழ்த்தாய் வாயிலாகக் காத்தருளிய

*தமிழக முதல்வர், புரட்சித் தலைவி*

# டாக்டர் ஜெ. ஜெயலலிதா

அவர்களின்

48ஆவது பிறந்த நாளன்று (24-2-1996)

ஆரோக்யக் கடவுளும் ஆயுர் வேதத்தைத் தோற்றுவித்தவருமான தன்வந்தரி பகவான், புரட்சித் தலைவி அவர்களுக்கு, நீண்ட ஆயுளையும், ஆரோக்யத்தையும் அளிக்குமாறு வேண்டி, இந்நூலை காணிக்கையாகச் சமர்ப்பிக்கின்றேன்.

24—2—1996 எஸ். என். ஸ்ரீராமதேசிகன்





11-3-1993 அன்று கலைவாணர் அரங்கில்
தமிழக முதல்வர், புரட்சித் தலைவி,
**டாக்டர் ஜெ. ஜெயலலிதா** ***அவர்கள்***
**எஸ். என். ஸ்ரீராமதேசிகன்** ***அவர்களுக்கு***
'கலைமாமணி' பட்டம் அளித்து கௌரவிக்கிறார்.

माद्यद्बन्धुरगन्धसिन्धुरचलत्यादातपादाहति-
क्षुण्णक्षोणितलोच्चलद्बहुरजःप्रोद्भिन्नदिग्भित्तिका ॥
हेषाघोषविघूर्णिताहितचमूयोधाधिनाथोद्भटा
नृत्यत्तुङ्गतुरङ्गपुङ्गवघनारङ्गीच्छुभाङ्गी चमूः ॥ ७ ॥
स्तुत्वा सर्वंसहेति प्रतिपदमखिलास्ताडयन्ते पदैर्मां
यस्या लोके क्षमावांस्तमखिलमनुजाः क्लेशयन्ति ह्यजस्रम् ॥
स्तुत्येषां किं ममेति क्षितिरतिकुपिता सर्वलोकोपरिष्टा-
दारूढे वा बिभासे बलचलितमहाधूलिकापालिकाग्रे ॥८॥
बहुचलवराभिरामासमुदीक्षतमत्तवारणोन्नासाः ॥
रथ्या विविशुः पुरतो विलसितमुखलीनगन्धर्वाः ॥ ९ ॥
पटुतरकोणताण्डवविजृम्भितकुम्भिवर-
स्थितघनदुन्दुभिप्रचुरभांकृतिसंश्रवणात्[1] ॥
मम शिशवः शिशुर्मम कुत्र गता इति
जननीजनैर्ममृगिरे धुरि माणवकाः ॥ १० ॥
मत्ते देहि ममावकाशमबले तिष्ठात्र मुग्धे मना-
गुन्नम्याननमत्र पश्य ललिते त्वं तिष्ठ दष्टं मया ॥
मन्दे तत्र नृपोत्र पश्यसि किमु स्निग्धे तवापि स्थिते-
रत्रास्तेन्तरमम्ब किञ्चिदपि मे द्रष्टुं न हत्स्थेन्तरम् ११
हित्वा सर्वांसमृद्धिं वनभुवमदिशज्जानकीलक्ष्मणाभ्या-
मेवं प्रागद्य मत्वा नगरततिमयीं सर्ववन्यां च धन्याम् ॥

१ दुन्दुभिशब्दानुकरणमेतत् ।

## நூல் விளக்கம்


தலைப்பு : ஸுசுருத ஸம்ஹிதை தமிழாக்கம்
(பகுதி இரண்டு)

ஆசிரியர் : 'கலைமாமணி' எஸ். என். ஸ்ரீராமதேசிகன்

பதிப்பு : முதற்பதிப்பு

வெளியீடு : அக்டோபர், 1995.

உரிமை ந்திய மருத்துவம் மற்றும் ஓமியோப
இயக்குநரகம், சென்னை - 106.

தாள் 70 கிராம் மேப் லித்தோ

எழுத்து 10 புள்ளி

பக்கங்கள் 1018

படிகள் 1000

விலை

பதிப்பு, வெளியீடு : இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோப
இயக்குநரகம், சென்னை - 106

அச்சகம் டான்சி அச்சகம், சென்னை - 32.

நூல் கிடைக்குமிடம்: விற்பனைப் பிரிவு
இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி
இயக்குநரகம், அண்ணா மருத்துவமனை
வளாகம், சென்னை - 106.

# முன்னுரை

## 1. ஆயுர்வேதத்தின் சிறப்பு

ஆயுளைப் பற்றியும் நீண்ட பிணியற்ற ஆயுளைப் பற்றியும் விளக்குவதால் இதற்கு ஆயுர்வேதமெனப் பெயர் வந்தது. பிணியைப் போக்குதல், ஆரோக்கிய நிலையில் உள்ளவர்களின் ஆரோக்கியத்தைக் காத்தல் எனும் இவை ஆயுர்வேதத்தின் முக்கிய குறிக்கோளாகும். அதர்வவேதத்துடன் ஆயுர்வேதத்திற்கு நெருங்கிய தொடர்பு இருப்பதால் இதை அதர்வ வேதத்தின் துணை வேதமெனச் சரகர், ஸுசுருதர் முதலிய ஆயுர்வேத ஆசாரியர்கள் கூறுகிறார்கள்.

காச்யபஸம்ஹிதையிலும் பிரம்மவைவர்த்த புராணத்திலும் ஆயுர்வேதம் ஐந்தாவது வேதமாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. வேதம் என்ற சொல்லுக்கே ஆயுர்வேதம் என்பதுதான் பொருள் என்ற அளவிற்கு ஆயுர்வேதத்தை உயர்த்துகிறார் ஓர் இடத்தில் ஸுசுருதர். மந்திரம், தந்திரம், வேள்வி, தேவ பூஜை முதலிய சடங்குகளால் பிணிகளைத் தீர்த்த செய்தி வேதங்களில் குறிப்பிடப்பட்டுள்ளதாக இதுவரை அறிந்துள்ளோம். ஆனால் அதர்வவேதத்தில் பிணி, அதைப் போக்கும் மூலிகை, அதைப் பயன்படுத்தும் முறை ஆகிய செய்திகள் குறிப்பிடப்பட்டுள்ளதைப் பார்க்கும் போது மூலிகை மருந்துகளால் பிணிகளைப் போக்கும் ஆயுர்வேத மருத்துவ முறை வேதகாலத்திலேயே ஆரம்பமாகி விட்டது என்பதை நம்மால் நன்கு உணர முடிகிறது. அதர்வ வேதத்தில் மட்டுமின்றி எல்லா வேதங்களிலும் ஆயுர்வேதத்தின் செல்வாக்கு மலிந்து கிடப்பதை ஆராய்ச்சியாளர் நன்கு உணர்வர்.

## 2. நான்கு வேதங்களிலும் ஆயுர்வேதச் செல்வாக்கு

### (அ) ரிக்வேதம்

வேதங்களில் அச்வினிகுமாரர்கள் தேவ மருத்துவர்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளனர். ரிக் வேதத்தில் இவர்கள் ததீசி என்பவரின் தலையை வெட்டி அதற்குப் பதில் குதிரைத் தலையை ஒட்டி மறுபடியும் அதையும் நீக்கிப் பழைய தலையையே வைத்ததாகவும், ராஜ கன்னிகையின் ஒடிந்த காலுக்குப் பதில் இரும்புக்காலை இணைத்துச் சரிசெய்ததாகவும், கட்கவான் என்பவருக்குக் குருட்டுத் தன்மையையும் செவிட்டுத் தன்மையையும் போக்கியதாகவும், பூஷா என்பவரின் உடைந்த

பல்லை நீக்கிப் புதிதாகப் பல்லைக் கட்டிச் சரி செய்ததாகவும், ச்யவனமகரிஷியின் முதுமையை நீக்கி இளமையையும் நீண்ட ஆயுளையும் அளித்ததாகவும், வத்ரிமதி என்பவருக்கு மலட்டுத் தன்மையை நீக்கி மகப்பேற்றை அளித்ததாகவும் வரலாறு காணப் படுகிறது. அதே ரிக்வேதத்தில் அபாலா என்பவரின் தோல் வியாதியையும், ஸ்ரோணா என்பவருடைய நொண்டித் தன் மையையும், பராவராஜா என்பவருடைய கண்பிணியையும் இந்திரன் போக்கியதாகச் செய்தி உள்ளது. இவை யாவும் மந்திர தந்திர பலன்களின்றி மருத்துவ முறையைக் கையாண்டு இச்சாதனைகளைப் புரிந்ததாகத்தான் நன்கு தெரியவருகிறது. ஏனெனில் பிணியைக் கூறி அதைப் போக்கும் மருந்தைக் கூறி யிருப்பதால் மருத்துவம் செய்துதான் பிணியைத் தீர்த்தார்கள், அருளால் அன்று என்பது நன்கு விளங்கவில்லையா? அவ்விடங் களில் தங்கள் தவவலிமையால் இப்பிணிகளைப் போக்கியதாகக் காணவில்லை. இருந்தால் மற்ற இடங்களைப் போல் இங்கும் குறிப்பிடப்பட்டிருக்கும் அல்லவா? தவிர பிற பிராணிகளின் உறுப்புகளைச் சேர்த்துப் பிணியைப் போக்கும் பிளாஸ்டிக் சர்ஜரி என்ற விஞ்ஞான காலத்தில் செய்து வரும் மருத்துவம் ரிக்வேத காலத்தில் அச்வினி குமாரர்களால் முன்பே துவக்கி வைக்கப்பட்டது என்பதை அறியும் போது நவீன மருத்துவத்திற் கும் வேதம்தான் வழிகாட்டி என்று திட்டவட்டமாகக் கூறலாம்.

ரிக்வேதம் வாத பித்த கபம் எனப்படும் அடிப்படையான மூன்று தோஷங்களை "திரிதாது" என்ற சொல்லால் விளக்கு வதைக் காணலாம். இந்த மூன்று தோஷம் என்ற முறை ஆயுர் வேதத்திற்கே உரியது. ஆகையால் இங்கு "திரிதாது" என்ற சொல் ஆயுர்வேதத்தைதான் குறிக்கிறது என்று உறுதியாகச் சொல்லலாம்.

### (ஆ) சுக்லயஜுர்வேதம்

சுக்லயஜுர் (ஐத்ரேயஸம்ஹிதா) வேதத்திலும் சில மருந்து களைப் பயன்படுத்திக் குட்டம் இருதயரோகம் எனும் இவற்றைப் போக்குவதைக் குறிப்பிடுவதோடு பைத்தியம், காசம் போன்ற பிணிகளையும் மூன்று தோஷங்களையும் குறிப்பிடும் மந்திரங் களும் ஏராளமாக இருக்கின்றன.

### (இ) அதர்வவேதம்

இதுதான் ஆயுர்வேத மருத்துவ முறை ஆரம்பமாவதற்கு மூல காரணம். இங்கு ஆயிரக்கணக்கான மந்திரங்கள் இதைப் பறை சாற்றுகின்றன. இதில் பிணி, பிணியைப் போக்கும் மருந்துகள்

மூலிகைகள், த்ரிதோஷ சித்தாந்தம், பிணிகளின் பெயர்கள், அவைகளின் உட்பிரிவுகள், அவைகளைப் போக்கும் மருந்துகள், உடல் உறுப்புகள், எட்டுவிதமான ஆயுர்வேதத்திற்கே தனித் தன்மையாக விளங்கும் மருத்துவ முறை ஆகியவைகள் வெகு விஸ்தாரமாக விளக்கப்பட்டுள்ளன. சுருங்கச் சொன்னால் இவ் வேதம் ஆயுர்வேத மருத்துவ முறையை விளக்குவதையே முக்கிய நோக்கமாகக் கொண்டிருக்கலாம் என்று சொல்லத் தோன்றுகிறது.

## 3. வெளிநாடுகளில் ஆயுர்வேதம்

***கிரீஸ்*** (Greece):

பல ஆயிரமாண்டுகளுக்கு முன்பே ஆயுர்வேத மருத்துவ முறை வெளிநாடுகளுக்குச் சென்று அங்கு அவர்களால் மதிக்கப் பட்டும் கையாளப்பட்டும் வருகிறது என்பது காணக் கிடைக் கின்றது. ஸம்ஸ்கிருத இலக்கிய வரலாற்றை இயற்றிய கீய்த் (Keith) என்ற மேல்நாட்டவர் நம்நாட்டு ஆயுர்வேத முறைக்கும், அந்நாட்டில் இருந்த மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமையை வெகுவாகக் குறிப்பிட்டிருக்கிறார். ஹிபோகிரிடிஸ் (Hippocrates) என்ற கிரீஸ் நாட்டு மருத்துவர் எழுதிய மருத்துவ நூலைப் படித் தால் இரு நாட்டின் மருத்துவ முறையிலுள்ள ஒற்றுமை நன்கு புலனாகும். மூன்று தோஷப்பிணி அதன் தோற்றம் அதற்குச் செய்யும் மருத்துவம் என இவைகளிலே இரு நாட்டு மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமை நன்கு அங்கு விளக்கப் பட்டிருக்கிறது. ஸுசுருதஸம்ஹிதையில் ஸூத்திரஸ்தானம் 21-8ல் கூறப்பட்ட 'சந்திரன் கபத்திற்கும் சூரியன் பித்தத்திற்கும் வாயு வாதத்திற்கும் அதிபதிகள். இம்மூன்றினால் ஆக்கப்பட்டதுதான் உடல்' என்ற கருத்தை கிரேக்க மருத்துவ நூலில் அப்படியே காணலாம். சரகர் சாரீரஸ்தானம் 2-31ல் மகாபூதங்கள் நான்கு என்கிறார். ஸுசுருதர் சாரீரஸ்தானம் 1-47ல் மகாபூதங்கள் ஐந்து என்கிறார். இந்த பூதங்களைப் பற்றிய கருத்து வேற்றுமையை கிரீஸ் நாட்டு மருத்துவரும் அப்படியே ஏற்றுக் கொண்டுள்ளார்.

(1) வாதபித்த கபங்களின் சரியான நிலைதான் ஆரோக் கியம். மாறுபட்ட நிலைதான் பிணி (2) மருந்து என்று ஆரோக் கியத்திற்காக மதுவைச் சிறிது அருந்தலாம் (3) பல் வியாதிக்கும் பித்தம்தான் காரணம் (4) பருவக்காலத்திற்கு ஏற்றவாறு பிணி களின் ஏற்றத்தாழ்வு (5) கண் அறுவைச்சிகிச்சை செய்யும் பொழுது வலக்கண்ணை இடக்கையாலும் இடக்கண்ணை வலக் கையாலும் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். இது போன்ற 36 விதமான மருத்துவ முறைகளில் ஆயுர்வேதத்திற்கும் கிரீஸ்

நாட்டு வைத்தியத்திற்கும் உள்ள ஒற்றுமையை ஹிபோகிரிடிஸ் என்பவர் விளக்கமாகக் கூறியுள்ளார்.

**சீனா** (China):

வேத காலம் தொடங்கி கலாசாரம், மருத்துவம், வாணிபம் ஆகியவற்றில் சீன நாட்டிற்கும் நமக்கும் ஒற்றுமை இருந்து வருவது சரித்திரம் அறிந்த உண்மை. பௌத்த மதப் பிரசாரத்திற்காக நம்மவர் சீனநாட்டிற்குச் சென்றது, நம் நாட்டுப் பல நூல்கள் அந்நாட்டில் பிரசாரத்தில் இருந்து வருவது போன்ற உண்மைகளைச் சரித்திரம் பேசுகிறது. மகாபாரதத்தில் பட்டுத் துணி சீனாம்சுகம் (சீனப்பட்டு) என்று குறிப்பிடப்பட்டுள்ளது. கௌடில்யரின் அர்த்தசாஸ்திரத்தில் சீன நாட்டிலிருந்து நம் நாட்டிற்கு வரும் பொருள்களுக்கு வரிவிதிக்கும் முறை குறிப்பிடப் பட்டுள்ளது. இப்படிப் பல துறைகளில் அந்நாட்டுடன் ஒற்றுமை இருப்பது போல் மருத்துவ முறையிலும் ஒற்றுமை இருக்கிறது. ஆயிரக்கணக்கான ஜுரங்கள், நாடீபரிட்சை, பிணிகள், மஞ்சள், நெல்லிக்காய், சில மர இலைகள் என இவைகளைக் குறிப்பிடும் சீன நாட்டுப் பழமையான நூலைப் பார்க்கும்போது இது நனகு தெரியவருகிறது. அத்துடன் சீன நாட்டிற்குச் செல்லும் பாதையில் காராசர் என்ற இடத்தில் கூர்ச்சபாஷா என்பது அங்குள்ளவர்களால் பேசப்பட்டு வருகிறது. ஆயுர்வேதச் சொற்களுக்கும் அம்மொழியிலுள்ள சொற்களுக்கும் நூறு சதவிகிதம் உள்ள ஒற்றுமையைக் காணும்போது அவ்வழியாகத்தான் ஆயுர்வேதம் சீனா சென்றிருக்க வேண்டும் என்று சொல்லத் தோன்றுகிறது.

**ஈரான்** (Iran):

ஈரான் நாட்டில் ஜண்டவெஸ்தா (Zendavesta) என்ற நான்கு பாகங்கள் கொண்ட மிகப் பழமையான நூலில் ஒரு பகுதி மருத்துவத்தை விளக்குவதாக அமைந்துள்ளது. அதில் சரமா வசியம் என்ற ஒரு மருத்துவர் பிணி தீர தேவதையை வணங்கி சோம என்றொரு ( தனது ஒளியால் ஆயிரக்கணக்கான மூலிகைகளைத் தரவல்ல) மூலிகையைப் பெற்றார். அது மூலிகைக்கு அரசன் என்று அங்கு பேசப்பட்டுள்ளது. அதேபோல் சரகஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானம் அத்தியாயம் ஒன்றில் "சோமம் என்ற மூலிகை மூலிகைகளுக்கெல்லாம் அரசன். இது சந்திர ஒளியால் வளர்வதும் அது இல்லாத போது குறைவதும் வழக்கம்" என ஒரு பகுதி காணப்படுகிறது. இதனால் இரண்டு மருத்துவ முறைக்கும் உள்ள ஒற்றுமை நன்கு புலனாகிறது. அக்னி வழிபாடு வேள்வி, சோமம் என்ற மூலிகையைப் புகழ்தல், அதை மூலிகைக்கு அரசன் எனக் கூறுவது, வேள்வியில்

மூலிகைகளைப் பயன்படுத்துதல் போன்ற பாரதீய மருத்துவப் பண்பாடு, ஈரான் நாட்டு நூல்களிலும் அப்படியே பேசப் பட்டிருப்பதைக் காணலாம்.

**தென் கிழக்கு ஆசியா** (South East Asia):

கம்போடியா, மலேஷியா, இந்தோனேஷியா, தாய்லாந்து, ஜாவா, சுமத்தரா முதலிய தென்கிழக்கு ஆசிய நாடுகளில் பல ஆயுர்வேத நூல்கள் அங்குள்ள வட்டார மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டு அச்சாகி வழக்கில் இருந்து வருகின்றன. அதே போல் பதினெட்டாவது நூற்றாண்டில் பர்மா பாஷையில் பழம் பெரும் ஆயுர்வேத முதல் நூலாகிய ஸுசுருதம் மொழி பெயர்க்கப்பட்டு இம்மருத்துவ முறை அங்குள்ள மக்களைக் கவர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இந்தியாவுடன் பல துறை களில் தொடர்பு கொண்ட பர்மா ஆயுர்வேத மருத்துவத்துறை யிலும் தொடர்பு கொண்டிருப்பது தனிப்பெரும் சிறப்பு ஆகும். சுருங்கச் சொன்னால் நம் நாட்டைவிட அங்குதான் மக்கள் ஆதரவும் முன்னேற்றமும் ஆயுர்வேதத்திற்கு இருந்து வருவது தெரியவருகிறது. நம் நாட்டில் இந்நூல் தமிழில் வெளிவருவதற்கு இதுவே முதல் முயற்சியாகும்.

**இலங்கை** (Sri Lanka):

பௌத்தவிஹாரங்களில் ஆயுர்வேதம் தழைத்து ஓங்குவ தோடு அங்குள்ள புத்த பிக்ஷுகள் ஆயுர்வேத மருத்துவர்களாகவும் இருந்து வருகிறார்கள். இந்திய மருத்துவக் கல்லூரி கொழும்பு வில் அமைக்கப்பட்டு ஆயுர்வேதம், யூனானி, சித்தம் இவை கற்பிக்கப்பட்டு வருகின்றன. ஒரு அரசாங்கமே ஆயுர்வேதக் கல்லூரியை நடத்தி வருவதோடு பண்டாரநாயகா நினைவு ஆயுர்வேத ஆராய்ச்சிக் கூடம் ஒன்று அமைக்கப்பட்டிருப்பது அந்நாட்டில் அதற்குள்ள பெருமையையும் மக்களுடைய ஆதரவையும் எடுத்துக் காட்டுகிறது.

**நேபாளம்** (Nepal):

காட்மாண்டுவில் அரசாங்க ஆயுர்வேதக் கல்லூரி ஒன்றை அரசாங்கம் நிறுவி ஆயுர்வேதத்தை வளர்க்க முன்வந்துள்ளது. குருபரம்பரையாக அங்கு ஆயுர்வேதம் கற்பிக்கப்படுவதுடன் அங்குள்ள மருத்துவர்கள் நமது நாட்டிலுள்ள மருத்துவர்களோடு தொடர்பு கொண்டு இம்முறையை வளர்த்து வருகிறார்கள்.

**திபெத்து** (Tibet):

இந்நாட்டில் கேஞ்ஜுர், தேஞ்ஜுர் என்ற இடங்களில் அந்நாட்டு மொழியில் மொழி பெயர்க்கப்பட்ட ஆயுர்வேத நூல்

களில் அஷ்டாங்கஹ்ருதயம் என்ற ஆயுர்வேத நூலில் வைடூரியம் என்ற உரையும் ஒன்றாகும். இங்கு நாகார்ஜுனன் எழுதிய பல ஆயுர்வேத நூல்கள் கிடைத்ததோடு இங்குள்ள மாணவர்கள் வாராணசிக்கு வந்து கல்லூரியில் சேர்ந்து படித்து வருவதன் மூலம் இந்நாட்டு மருத்துவம் அங்கு செல்ல ஒரு வாய்ப்பு ஏற்பட்டு இருக்கிறதாகத் தெரிகிறது.

## 4. புத்தர் காலத்தில் புத்தர் கையாண்ட (பஞ்ச கர்ம) ஆயுர்வேத முறை

வாந்திக்கும் பேதிக்கும் மருந்து உட்கொள்வது மூக்கில் மருந்திடுதல் ஆசனவாய் வழியாக எண்ணெய் கஷாயங்களை உள்ளே செலுத்துதல் உடலிலுள்ள கெட்ட இரத்தத்தைக் கீறியோ அல்லது அட்டையைக் கொண்டோ எடுத்தல் என ஐவகைச் செயல் களால் வயிறு தலை உடலிலுள்ள எல்லாப் பகுதிகளிலிருந்தும் இருக்கும் மலங்களை வெளிப்படுத்தித் தூய்மையாக்கும் (பஞ்ச கர்மா) என்ற இம்மருத்துவ முறை ஆயுர்வேதத்தில் மிகமிக முக்கியமானது. வமனம், விரேசனம், நஸ்யம், வஸ்தி, ரக்த மோக்ஷணம் என்ற இந்த ஐவகையான முக்கியமான பஞ்ச கர்மாக்களைப் பயன்படுத்துவதற்கு முன் உடலில் பல வழி களால் வியர்வை வரவழைத்தல், உடலில் எண்ணெய் பூசி எண்ணெய்ப்பசை உண்டாக்குதல் (ஸ்வேதம், ஸ்நேகம்) எனும் இரு துணைச் செயல்களையும் முன் கூட்டிச் செய்விக்க வேண் டும். இதன் பின் பஞ்சகர்ம முறை செய்வது வழக்கம். இவை களைப் பயன்படுத்தி மருந்தின்றியே எல்லாப் பிணிகளையும் போக்கிவிடலாம் என்பது ஆயுர்வேத்தின் அடிப்படையான சித்தாந்தம். எல்லா ஆயுர்வேத நூல்களும் இதையே பறை சாற்றுகின்றன. மற்றவர்களை விட சரகர் என்பவர் இதை விஸ்தாரமாக வெகு விரிவாக விளக்கி இதன் பல முறைகளையும் பல யுக்திகளையும் தமது நூலில் அலசி ஆராய்ந்திருக்கிறார்.

புத்தர் காலத்தில் இந்த பஞ்சகர்ம முறையால் புத்த பகவான், மற்றவர் பிணிபோக்க அவர்களுக்கு இதை எடுத்துரைத்ததோடு தானும் இம்முறையைக் கையாண்டு பிணி நீங்கிப் பயன் பெற்றார் என "வினயபிடகா" என்னும் பௌத்த நூலால் அறிய வருகிறது. இந்நூலில் வாத நோயால் துன்புறும் விளிந்தவாசன் என்பவருக்கு வியர்வையை உண்டாக்கும் சிகிச்சையைக் கூறி அவருடைய பிணியைத் தீர்த்து வைத்ததாக ஒரு கதையுள்ளது. இதே நூலில் வியர்வையை உண்டாக்கும் ஸ்வேதகர்மா நான்கு விதமாகப் பிரிக்கப்பட்டு விளக்கப்பட்டுள்ளது.

1. பூமியில் பள்ளம் தோண்டி அதில் நெருப்பினால் சூடாக்கித் தணலை நீக்கியபின் மணல் தழை ஆகியவற்றால் நிரப்பி எண்ணெய் பூசிய நோயாளியை இருக்கச் செய்து வியர்வையை வரவழைத்தல்.

2. வியர்வை வரவழைக்கக்கூடிய இலைகளில் நோயாளியைப் படுக்க வைத்தல்.

3. வெந்நீர்த் தொட்டியில் நோயாளியைக் குளிக்கச் செய்து வியர்வையை வரவழைத்தல்.

4. இலைக்கஷாயம செய்து வியர்வையை வரவழைத்தல். புகை நிறைந்த ஒரு அறையில் நோயாளியை இருக்கச் செய்து அதன் மூலம் வியர்வையை வரவழைப்பதைக் கூறும் ஜேந்தாகஸ் வேதம் என்ற ஐந்தாவது வியர்வை முறையும் இங்கு கூறப் பட்டுள்ளது. இதை ஜேந்தாகஸ்வேதம் என்ற பெயரில் சரகர் தனது நூலில் கையாண்டிருக்கிறார். வாதரத்த நோயினால் துன்புறும் விளிந்தவாசனுக்கு புத்தபகவான் கொம்பின் உதவி யால் உடலிலிருந்து இரத்தத்தைக் கீறி வெளியேற்றும் ரக்த மோக்ஷணம் என்ற செயலை உபதேசித்த செய்தி ஒன்று இதே நூலில் காணப்படுகிறது. புத்தர் காலத்தில் நடந்த பல கதை களைக் கூறும் "வைத்திய ஜீவகன்" என்ற நூலில் சாகேத நகரில் வாழ்ந்த ஒரு செட்டியின் மனைவி தலைவலியை மூக்கில் நெய்யை மருந்தாக ஏற்றும் நஸ்யம் என்ற செயலால் போக்கி னார் என்றும், ப்ரத்தியோதன் என்ற உஜ்ஜயினி அரசனுக்கு நெய்யைப் பருகக் கொடுத்து வாந்தி எடுக்கச் செய்ததாகவும், அதேபோல் மன்னனுடைய வேலைக்காரருக்கு மருந்துப் பொருள் களால் தயாரித்த கஷாயத்தைக் கொடுத்து வாந்தியெடுக்கச் செய் ததாகவும் பற்பல கதைகள் கூறப்பட்டுள்ளன. தலையிலுள்ள தோஷங்களை வெளிக்கொணர புத்தபகவானுக்கு ஜீவகன் என்பவர் மூக்கு வழியாக மருந்தைச் செலுத்தி வலியைப் போக்கியதாக இதே நூலில் உள்ளது. எனவே அக்காலத்தில் புத்தபகவான் இந்த பஞ்சகர்ம என்னும் ஆயுர்வேத முறையைப் பிணி தீரத் தானும் கையாண்டு மற்றவருக்கும் எடுத்துரைத்தார் என்று புலனாகிறது. ஆயுர்வேத வைத்தியம் புத்தரையே கவர்ந்து விட்டது. புத்தர்காலத்தில் பிரபலமாயிருந்த ஜீவகன் கதைகள் பிறகு சில காலம் மக்களிடையே நிலவி வந்திருக்கின்றன.

## 5. நூல் தோன்றிய வரலாறு

எட்டு உட்பிரிவுகளைக் கொண்ட ஆயுர்வேதத்தை பிரம்மா )யற்றி தக்ஷப்ரஜாபதிக்கு 'கற்பித்தார். அதை அவரிடமிருந்து

கற்ற அச்வினி குமாரர்கள் இந்திரனுக்கு உபதேசித்தனர். அதை யறிந்த இந்திரன் பூவுலக மக்கள் பிணியின்றி வாழ விரும்பி ஆயுர்வேதத்தின் ஒரு பிரிவாகிய உடல் மருத்துவத்தை பரத் வாஜ முனிவருக்குக் கற்பித்தார். பரத்வாஜரிடமிருந்து ஆத்ரே யர், அவரிடமிருந்து அக்னிவேசர், சரகர் என முறையே ஆயுர்வேதத்தைப் பயின்று உடல் மருத்துவத்தைக் கூறும் சரக ஸம்ஹிதை என்ற நூல் உருவாயிற்று. ஆயுர்வேதத்தின் மற்றொரு பிரிவாகிய அறுவை சிகிச்சை முறையை தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசிக்க அவரிடமிருந்து சீடர்களுள் ஒருவரான ஸுசுருதர் அதைப் பயின்று எழுதிய நூல்தான் ஸுசுருதஸம்ஹிதை என்ற பெயரால் விளங்கி வருகிறது.

இந்நூலின் உத்தரஸ்தானம் 66வது அத்தியாயம் சிகித்ஸாஸ் தானம் 2வது அத்தியாயம் மஹாபாரதம் ஆனுசாசன பர்வா (அத் 4), கருடபுராணம் போன்ற நூல்களில் விசுவாமித்ரருடைய புதல்வர்களுள் ஸுசுருதரும் ஒருவராகக் கூறப்பட்டிருப்பதால் ஸுசுருதர் விசுவாமித்ரரின் புதல்வர் எனத் தெரிய வருகிறது. காசி மன்னன் திவோதாசர் என்பவர்தான் தன்வந்தரி என்ற பெயரால் அழைக்கப்படுகிறார். திவோதாசரும் தன்வந்தரியும் ஒருவரே. இவரிடம் அறுவைச் சிகிச்சை பயின்று ஸுசுருதர் நூலை உருவாக்கினார்.

## 6. இந்நூலாசிரியர் நால்வர்

ஸுசுருதர் என்ற பெயரில் இருவர் இருந்ததாக ஆராய்ச்சி யாளர்கள் கூறுகின்றனர். விசுவாமித்திரரின் புதல்வரும் தன் வந்தரியின் சீடருமான ஸுசுருதர் விருத்த ஸுசுருதர் என்ற பெயரால் அழைக்கப்பட்டார். ஸுசுருத ஸம்ஹிதையை இயற்றிய இவர் முதலாம் ஸுசுருதராவார். இரண்டாம் ஸுசுருதர் முதல் ஸுசுருதர் எழுதிய நூலில் ஆங்காங்கு ஆராய்ந்து திருத்தம் செய்து அதையே புது உருவம் கொடுத்து வெளிக்கொணர்ந்தார். ஸூத்திரஸ்தானம், நிதானஸ்தானம், சாரீரஸ்தானம், சிகித்ஸா ஸ்தானம், கல்பஸ்தானம் என 120 அத்தியாயங்கள் கொண்டு 5 ஸ்தானங்களுடன் முற்றுப்பெறாது இருந்த இந்நூலுடன் நாகார் ஜுனன் என்பவர் இந்நூலில் கடைசி பாகமாகிய உத்தரஸ் தானத்தை இயற்றி இணைத்து இந்நூலுக்கு பூரண உருவம் தந்து நிறைவு பெறச் செய்தார்.

பிறகு சந்திரடர் என்பவர் பூரண உருவம் பெற்ற இந்நூலில் சில பாடங்களைத் திருத்தியும் புகுத்தியும் புதுப்பித்தும் புதிய பொலிவுடன் உருவாக்கினார். இதுதான் இன்று நாம் போற்றிக் கற்றுவரும் ஸுசுருதஸம்ஹிதையாகும்.

ஆத்ரேயர், அக்னிவேசர், சரகர், த்ருடபலர் என நால்வருடைய கூட்டுப் பொறுப்பில் சரகஸம்ஹிதை உருவாகி அது நால்வருடைய சம்பந்தத்தையும் பெற்றது போல், விருத்த ஸுசுருதர், இரண்டாம் ஸுசுருதர், நாகார்ஜுனன், சந்திரடர் என நால்வருடைய கூட்டுப்பொறுப்பில் உருவாகிய ஸுசுருதஸம்ஹிதையில் இந்நால்வரும் பங்கு பெற்றிருக்கிறார்கள். சொல் அமைப்பு, பொருளை விளக்கும் முறை எனுமிவற்றின் மாறுபாட்டைக் கொண்டும் இந்நூல் பலரால் உருவாக்கப்பட்டது என்பது நன்கு புலனாகிறது.

இந்நூலுக்கு உரையெழுதிய டல்ஹணர் என்பவர் தமது உரையில் நாகார்ஜுனனால் பிறகு உத்தரஸ்தானம் எழுதப்பட்டு இந்நூலின் முடிவில் இணைக்கப்பட்டது எனக் கூறியிருப்பதால் உத்தரஸ்தானமியற்றியவர் நாகார்ஜுனன் என்பது நன்கு புலனாகிறது. பல நாடுகளைச் சுற்றிவரும் வழக்கம் கொண்ட நாகார்ஜுனனால் இயற்றி சேர்க்கப்பட்ட உத்தரஸ்தானத்தில் பல நாடுகளின் பெயர்கள் இடம் பெற்றிருப்பது பொருத்தமானதாகவே கருதப்படுகிறது. காச்யப ஸம்ஹிதையில் ஹோமத்துக்குரிய தேவதைகளான ப்ராஜாபதி, இந்திரன் முதலானோருடன், தன்வந்தரியையும் இணைத்துப் பேசியிருப்பதாலும் புராணங்களில் தேவாசுரர்கள் பாற்கடலைக் கடையும்போது அதிலிருந்து அம்ருதகலசத்துடன் தன்வந்தரி தோன்றினார் என பேசியிருப்பதாலும் தன்வந்தரி பகவான் தேவர்களுக்கு சமமான நிலையில் வைத்து அக்காலத்தில் போற்றப்பெற்று வந்தார் எனத் தெரிகிறது.

மனிதனுக்குப் பிணி தோன்றுவதற்கு முன்பே தேவாசுர யுத்தத்தில் காயமடைந்த தேவர்களுக்கு அறுவைச் சிகிச்சை பயன்படுத்தப்பட்டதாகவும் வேதகாலத்தில் யக்ஞபுருஷன், ததீசி போன்றவருடைய தலை அறுபட்டு மறுபடியும் அதே இடத்தில் வைத்து சரிசெய்ய அறுவைச் சிகிச்சை பயன்பட்டதாகவும் கூறியிருப்பதை வைத்து ஆயுர்வேதத்தின் உட்பிரிவாகிய அறுவைச் சிகிச்சை முறைதான் முதன்முதலில் கையாளப் பட்டது. ஆயுர்வேதமென்றாலே அறுவைச் சிகிச்சைதான் என்று அனைவரும் எண்ணி வந்தனர் எனக் கருத ஆதாரமிருக்கிறது. உடல் மருத்துவம் பிறகுதான் தோன்றியது. "தேவர்களின் மூப்பு, பிணி, மரணம் இவைகளை முன்பு நான் போக்கி மறுபடியும் தன்வந்தரியாக தோன்றியிருக்கிறேன்" என தன்வந்தரி பகவான் இந்நூலில் ஸூத்ரஸ்தானம் அத்-1ல் கூறியிருப்பது இக்கருத்தை மேலும் வலியுறுத்துவது போல அமைந்தது.

## 7. பருவ காலத்தை பாகுபடுத்திய ஸுசுருதர்

பருவகாலத்தை ஆறுவகையாகப் பிரிப்பது கவிகளின் மரபு. இதில் கருத்து வேற்றுமை கிடையாது. அப்பருவ பாகுபாட்டை இரண்டு வகையாகப் பிரித்து அதிலும் ஓர் புதுமையை புகுத்தியிருக்கிறார் ஸுசுருதர். இலையுதிர்காலம், இள வேனில், முதுவேனில், கார், கூதிர், முன்பனி என இது முதல் வகை. கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில் முது வேனில் என இது இரண்டாவது வகை. முதல் பிரிவில் குளிர் காலம் இரண்டு வகையாகவும், இரண்டாவது பிரிவில் கார் காலம் இரண்டு வகையாகவும் பேசப்பட்டு இருப்பது இங்கு புதுமையான ஒரு கண்டுபிடிப்பாகும். இதில் முதல் பாகுபாடு கங்கை நதிக்கு வடக்கே இமயமலை பகுதிக்கும் இரண்டாம் பாகு பாடு கங்கைக்கு தெற்கே உள்ள பகுதிகளுக்கும் பொருந்தும் என்பது அறிஞர்களின் கருத்து.

ஏகேந்திரநாத்கோஷ் என்பவர் கணித முறையில் இரண்டுக்குமுள்ள இடைவெளியை வைத்து தன்வந்தரியின் காலத்தில் முதல் பிரிவும், இரண்டாம் ஸுசுருதர் காலத்தில் இரண்டாம் பிரிவும் பொருந்துமெனக் கூறியிருக்கிறார்.

## 8. பாம்பு விஷத்தை மருந்தாகப் பயன்படுத்தி சாதனை படைத்த ஸுசுருதர்

கருநாகத்தை எரித்து அதன் சாம்பலை தான்றிக்காய் எண்ணெயுடன் சேர்த்துப் பூசினால் வெண்குட்டம் நீங்கும் என்றும் (சிகித்ஸாஸ்தானம் அத் 9 - ஸ்லோ 17) கருநாகத்தை எரித்துச் சாம்பலை க்ஷாரமுறைப்படி நீரில் ஏழுமுறை தூய்மைப்படுத்தி அந்த க்ஷாரநீரை 4 பங்கு அளவு எடுத்து எண்ணெய் மருந்து செய்து அதைப் பூசினால் வெண்குட்டம் நீங்கும் என்றும் (சிகித்ஸாஸ்தானம் அத்9-ஸ்லோ 18) கழுகு மற்றும் மான் ஆகியவற்றின் பாலுடன் இந்துப்பு தேன் ஆகியவற்றைக் கலந்து புடம் செய்து அவ்வாறே கழுகு, நாகம், கோழி, ஆகியவற்றின் வசையை அதிமதுரத்துடன் கலந்து மெய் மருந்தாகப் பயன்படுத்தினால் வாதத்தால் தோன்றும் திமிரம் என்னும் கண்நோய் விலகும் என்றும் (உத்தரஸ்தானம் அத்17 ஸ்லோ35). ஸ்ரோதாஞ்சனத்தை கருநாகத்தின் வாயில் வைத்து வாயின் இருபகுதிகளையும் தர்பத்தை கொண்டு கட்டி ஒருமாத காலம் கழிந்த பிறகு அதை மல்லிகை மொட்டு இந்துப்பு ஆகியவற்றுடன் சேர்த்து அரைத்து திமிரம் என்னும் கண் நோயில் பயன்படுத்துவதால் கண்பார்வை மலரும் என்றும்,

அபார்ஷனுக்கு பாம்பின் தோலையும் காலரா நோய்க்கு பாம்பு விஷத்தையும் மருந்தாகப் பயன்படுத்தலாம் என்றும் ஸுசுருதர் தனது நூலில் கூறியுள்ளார்.

விஞ்ஞானம் வளர்ச்சியடைந்த இக்காலத்தில் நவீன மருத்துவர்கள் கையாளும் பாம்பு விஷ சிகிச்சைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கும் முன்பே ஸுசுருதர் வித்திட்டு இவர்களுக்கு வழிகாட்டியாக விளங்கினார் என்பதை காணும்போது முன்னோர்கள் வருங்காலத்தை திட்டமிட்டு உணர்ந்து வழிகாட்டியாக விளங்கியதை நினைத்து நவீன விஞ்ஞானிகள் திகைப்படைவார்கள் என்பதில் ஐயமில்லை.

## 9. காலம்

விருத்த ஸுசுருதருடைய காலம் கி.மு. 1000 - 1500, இரண்டாம் ஸுசுருதர் காலம் கி.பி. 2ம் நூற்றாண்டு, நாகார்ஜுன காலம் கி.பி. 5, சந்திரருடைய காலம் கி.பி.10 என்பது பொதுவாக எட்டிய கருத்து. எனினும் இதில் கருத்து வேற்றுமைகள் பல இருந்து வருகின்றன. தன்வந்தரியினுடைய கொள்கைகள் சரகஸம்ஹிதையில் பல இடங்களில் இடம் பெற்றிருப்பது போல் ஆத்ரேயருடைய கொள்கை ஸுசுருத ஸம்ஹிதையில் எங்குமே இடம் பெறாமையால் ஆத்ரேயருக்கு முற்பட்டவர் தன்வந்தரி எனப் புலனாகிறது. எனவே அவர் சீடராகிய விருத்த ஸுசுருதருடைய காலமும் ஆத்ரேயருக்கு முற்பட்டதாகவே இருக்க வேண்டும் என்பது ஒருசாராரின் கருத்து. கிரேக்கச் சொல்லாகிய ஹோரஸ் என்ற சொல்லின் சிதைவான ஹோரா என்ற சொல் இந்நூலில் காணப்படுகிறது. எனவே கிரேக்க நாட்டோடு பாரதத்திற்கு தொடர்பு உண்டாகிய கி.மு.4ம் நூற்றாண்டுக்கு பிற்பட்டக் காலத்தில் இந்நூல் இயற்றப் பெற்றிருக்கலாம் என்பது மற்றொரு சாராரின் கருத்து.

சரகர் கூறாத காதுகுத்தல் என்னும் சடங்கு இந்நூலில் விரிவாக இடம் பெற்றிருப்பதால் இந்நூல் கி.பி.2ம் நூற்றாண்டில் தோன்றியிருக்கலாமெனவும் கூற இடமிருக்கிறது. ஸுசுருத ஸம்ஹிதையில் கூறியுள்ள 107 மர்மஸ்தானங்கள் யாக்ஞவல்க்ய ஸ்மிருதியில் இடம் பெற்றிருப்பதை வைத்து யாக்ஞவல்க்யர் (கி.பி. முதல் நூற்றாண்டு) தோன்றுவதற்கு முன் அதாவது கி.பி. முதல் நூற்றாண்டுக்கு முன் இந்நூல் தோன்றியிருக்கலாம் என கூறுவோரும் உள்ளனர். ஸுசுருத ஸம்ஹிதையில் உத்தரஸ்தானத்தில் கூறியுள்ள தந்து யுக்தி என்ற பகுதி கௌடில்யரின் அர்த்தசாஸ்த்திரத்தில் இடம் பெற்றிருப்பதால் கௌடில்யரின்

காலமான (கி.மு.4ம்) நூற்றாண்டிற்குப் பிறகு உத்தர ஸ்தானப்பகுதி எழுதி இதில் இணைக்கப் பெற்றிருக்க வேண்டும் என்பது அறிஞர்களின் கருத்து.

கம்போடிய நாட்டு அரசன் யசோவர்மனின் (கி.பி.889-910) கல்வெட்டில் ஸுசுருதரின் பெயர் காணப்படுகிறது.

## 10. நாகார்ஜுனன்

நாகார்ஜுனன் என்ற பெயரில் பலர் காணப்படுகின்றனர். அவற்றில் நால்வர் முக்கியமானவர்கள் 1. கனிஷ்கர் காலமாகிய கி.பி. முதல் நூற்றாண்டில் ஒருவர் இருந்தார். சாதவாகன சக்ர வர்த்தி கௌதம புது சாதகர்ணியன் குருவான நாகார்ஜுனன் கி.பி. 2ல் இருந்தவர். இவர்தான் இரண்டாம் நாகார்ஜுன ராவார். குப்தர் காலத்தில் ஒரு நாகார்ஜுனன் இருந்தார். அவர் காலம் (கி.பி.4-5). ஸர்ஹுபருடைய சீடர் சித்த நாகார்ஜுனன் என்பவர் கி.பி. எட்டாவது நூற்றாண்டை சேர்ந்தவர். இந்நால்வருள் ஸுசுருதஸம்ஹிதையை திருத்தம் செய்து உத்தரஸ்தானத்தை இயற்றி அத்துடன் இணைத்த நாகார்ஜுனன் யார் என்பது ஆராயத்தக்கது.

## 11. நூலின் சாரம்

'ஸ்தானம், நிதானஸ்தானம், சாரீரஸ்தானம் சிகித்ஸாஸ்தானம், கல்பஸ்தானம், உத்தரஸ்தானம் என ஆறு ஸ்தானங்கள் இதில் அடங்கியுள்ளன. 46 அத்தியாயங்கள் கொண்ட ஸூத்திரஸ்தானத்தில் மருத்துவத்தில் சிறப்புப் பொருள்கள், அறுவைச் சிகிச்சைக்குரிய கருவிகள், இயந்திர கருவிகள், க்ஷார நெருப்பு சிகிச்சை செய்யும் வகை, அரிஷ்டத்தை அறியும் வகை, பொருள்களின் தன்மை முதலியவைகள் விளக்கப் பட்டுள்ளன. 16 அத்தியாயங்கள் கொண்ட நிதான ஸ்தானத் தில் நோய்களின் அறிகுறிகள், அவை தோன்றக் காரணங்கள், அதன் வகைகள், அதன் இலக்கணங்கள் முதலியன பேசப் பட்டுள்ளன. 10 அத்தியாயங்கள் கொண்ட சாரீரஸ்தானத்தில் உலகப் படைப்பு, மனிதப்படைப்பு, உடல் கூறு பற்றிய விளக்கம், கரு உருவாகும் வகை, கருவைக் காக்கும் முறை ஆகியவை கூறப் பட்டுள்ளன. 40 அத்தியாயங்கள் கொண்ட சிகித்ஸாஸ் தானத்தில் அறுவைச் சிகிச்சை முறை, இரஸாயன வாஜீகரண முறைகள், பஞ்சகர்மா என உடலைத் தூய்மைப்படுத்தும் ஐவகை சிகிச்சை ஆகியவை இடம் பெற்றுள்ளன. எட்டு அத்தியாயங்கள் கொண்ட கல்பஸ்தானத்தில் விஷ சிகிச்சை முறைகளின் விளக்கத்தைக் காணலாம். 66 அத்தியாயங்கள் கொண்டு

பிற்காலத்தில் இத்துடன் இணைக்கப்பட்ட உத்தர ஸ்தானத்தில கண், காது, மூக்கு, காமாலை, பீநஸம், சிறுநீர்த் தடை போன்ற நோய்களுக்கு சிகிச்சை, குழந்தை மருத்துவம், சாலாக்கியம், உடல் சிகிச்சை முறைகள், பூதவித்யை, அதைச் சார்ந்த மன நோய்கள் ஆகியவைகளை இங்கு விரிவாகக் காணலாம். அறுவைச் சிகிச்சைக்குரிய கருவிகளின் விரிவான விளக்கம் இங்கு முக்கியமாகப் போற்றற்குரிய ஒரு பகுதியாக விளங்குகிறது.

## சிகித்ஸாஸ்தானம்

அறுவைச் சிகிச்சையைப் பற்றி கூற வந்த ஸுசுருதர் அத்துடன் மூலிகை மருந்துகளைக் கொடுத்து மருத்துவம் செய்யும் உடல் மருத்துவ முறையையும் நூலில் விஸ்தாரமாகக் கூறியிருக்கிறார். சுருங்கச் சொன்னால் ஏதோ சில இடங்களைத் தவிர உடல் மருத்துவம்தான் இதில் அதிகமாக விளக்கப்பட்டிருக்கிறது. மூலிகை மருத்துவத்தால் பிணியை நீக்க இயலாத கடைசி நிமிஷத்தில்தான் அறுவைச் சிகிச்சை தவிர்க்க முடியாததாகும் என்பது ஸுசுருதரின் கருத்து. அறுவைச் சிகிச்சைக்குப் பிறகும் பிணி முற்றிலுமாக நீங்கி ஆரோக்கியம் பெற மூலிகை மருத்துவத்தை தொடரவேண்டும் என்பதுதான் அவர் கருத்து. ரணச்சிகிச்சை, வாதநோய், குட்டநோய், நீரிழிவு நோய், அதனால் ஏற்படும் கட்டிகள், கர்பச் சிதைவு, கட்டி, அக்கி, விதை வீக்கம் போன்ற சாதாரண பிணிகளையும் விளக்கி முதல் 20 அத்தியாயம் வரை அதற்குரிய சிகிச்சை முறைகளும் விரிவாக பேசப்பட்டிருக்கின்றன. 22வது அத்தியாயத்தில் வாய்க் குள் உதடு, நாக்கு தொண்டை, பல் ஆகியவற்றில் தோன்றும் பிணிகளுக்கான சிகிச்சை முறைகள் விவரிக்கப்பட்டிருப்பதை காணலாம்.

பல்லில் கெட்ட நாற்றம், பயோரியா, பல் ஆட்டம் கொடுத்தல், அதிகப்படியான பல் முளைத்தல், பல்லில் கறை கட்டுதல் போன்ற பல் நோய்களுக்கும் தொண்டையில் கட்டி டான்ஸில் (உள்நாக்கு) போன்ற தொண்டை நோய்களுக்கும் முள் போன்ற சொரசொரப்பாக உள்ள உள்நாக்கு என இந்நோய்களுக்கும் விளக்கம் தருவதோடு அவற்றைப் போக்கும் முறைகளும் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. காது, மூக்கு, தொண்டை மூன்றையும் ஒன்றாகச் சேர்த்து E.N.T. என்று நவீன மருத்துவர்கள் கூறும் மூன்றில் தொண்டையைப் பற்றி மாத்திரம் 22வது அத்தியாயத்தில் கூறிவிட்டு காது, மூக்கு என மற்ற இரண்டுக்கும் உத்தரஸ்த்தானத்தில் சிகிச்சை கூறியிருப்பதைக்

காணலாம். பல் துலக்கி எண்ணெய் குளியலைக் கையாண்டு, ஓடி வழி நடந்து உடற்பயிற்சி செய்து அளவோடு கலவியில் ஈடுபடும் ஒரு மனிதர் பிணியின்றி நீடுழி வாழ்வார். அவருக்கு மருத்துவம் தேவையில்லை. பிணி வராமல் தடுப்பதுதான் சிறந்த முறை என தனது சிறந்த கருத்தை 24வது அத்தியாயத்தில் ஸுசுருதர் கூறியிருப்பதை மக்கள் அனைவரும் மனதில் கொள்ள வேண்டும். உடல் வலிவின்றி ஆண்மையிழந்து தீர்க்காயுளையும் பறிகொடுத்து முதுமையையும் அடைந்து வருந்தும் மனிதர்கள் நீண்ட ஆயுளையும் வலிமையும் ஆண்மையும் பெற்று வாழ இரசாயன வாஜீகரணம் (காயகல்பம்) என இரு சிகிச்சா முறைகளை 26 முதல் 30 அத்தியாயம் வரையில் கூறி சிகிச்சையின்றி மருந்தின்றி இன்ப வாழ்வு பெற ஸுசுருதர் வழிகோலியிருப்பதை காணும் பொழுது பெரும் வியப்பாக இருக்கிறது.

ஆயுர் வேதத்திற்கே உரித்தான பஞ்சகர்மா எனும் முறை (அதாவது வாந்தி பேதியாக வழிச் செய்தல், வேர்வை வரவழைத்தல், ஆசனவாய் மூக்கு வழியாக மருந்தேற்றுதல்) 31 முதல் 40 வரை சிறப்பாக பேசப்பட்டுள்ளது. பொதுவாக 27 இடங்களை அறுவைச் சிகிச்சைக்கு உரியதாக தேர்ந்தெடுத்து அறுவைக் கருவிகளைக் கொண்டு அறுவை சிகிச்சையை கையாளும் முறை இந்த ஸ்தானத்தில் பேசப்பட்டுள்ளது. மகப்பேறு ஏற்படும்பொழுது குழந்தை வெளிவராத நிலையில் ('சிஸேரியன்') அறுவைச் சிகிச்சை செய்து அதை வெளிக்கொணருதல், சிறுநீரகத்திலுள்ள கல்லை அறுவைச் சிகிச்சையால் வெளிக்கொணருதல், 'பிஸ்டுலா' (Pistula) என சொல்லப்படும் ஆஸனவாயிலுள்ள முளையை அறுத்து வெளியேற்றுதல், மூலநோயை அறுவை கருவிகளால் அறுத்து அகற்றுவது போன்றவை பற்றி விஸ்தாரமாக இந்த ஸ்தானத்தில் ஸுசுருதர் கூறியிருப்பதை கவனிக்கும்போது 2000 ஆண்டுகளுக்கு முன்பே எதிர்காலத்தில் தோன்றப் போகும் இக்கடின நோய்களுக்கு அறுவைச் சிகிச்சை முறையைக் கண்டுபிடித்து நவீன விஞ்ஞானிகளுக்கு வழிகாட்டியாய் விளங்குவதை எண்ணிப்பார்க்கும் ஒவ்வொரு இந்தியரும் உண்மையிலேயே இந்திய மருத்துவத்தின் சிறப்பை நினைத்து மகிழாமல் இருக்க முடியாது. உடலை அறுத்து உடல் உறுப்புக்களை அறியும் "அனாடமி" என்ற முறையை சாரீரஸ்தானம் 5வது அத்தியாயத்திலும் அறுபட்ட மூக்கு காது இவைகளுக்கு மாற்று உறுப்பை வைத்துத் தைத்து செய்யும் பிளாஸ்டிக் அறுவை (Plastic Surgery) முறையை ஸூத்திரஸ்தானம் 16வது

அத்தியாயத்திலும் விளக்கியிருப்பதோடு அறுவைச் சிகிச்சையின் போது கள்ளை மயக்க மருந்தாக பயன்படுத்துவதையும் சுட்டிக்காட்டியிருக்கிறார் ஸுசுருதர்.

**உத்தரஸ்தானம்**

கண்நோய்கள் 76 எனக் கூறி அவற்றை மூன்று வகைகளாகப் பிரித்து அவைகளுக்குள்ள இலக்கணம் அறிகுறி அதற்குரிய மருத்துவம் ஆகியவற்றை 1 முதல் 19வது அத்தியாயம் வரை வெகு விரிவாக கூறப்பட்டிருப்பதைக் காணலாம். இதிலுள்ள பல கண் நோய்கள் நவீன மருத்துவர்கள் கூறும் கண்நோய்களோடு ஒற்றிருப்பதை இரண்டு மருத்துவ முறையையும் நன்கு ஆராய்ந்து உணர்ந்தவர்கள் நன்கறிவர். முதல் அத்தியாயத்தில் வாதம் பித்தம் கபம் ரக்ததோஷம் ஸந்நிபாதம் புறக்காரணங்கள் என ஆறு வழிகளால் 76 வகையான கண்நோய்கள் தோன்றுகின்றன எனக் குறிப்பிட்டு அவற்றுக்குரிய இலக்கணம் சிகிச்சை ஆகியவைகள் கூறப்படுகின்றன. அதே அத்தியாயத்தில் கண் இணைப்புகள் இமைகள் வெள்ளை விழிப்பகுதி கருவிழி எல்லா கண்பகுதி கண்பார்வை என 6 இடங்களில் 76 கண்நோய்களும் தோன்றுவதாகக் கூறி அவற்றின் இலக்கணம் சிகிச்சை முறைகள் விரிவாக 9வது அத்தியாயம் முடிய அலசி, விரிவாக ஆராயப்படுகின்றன. பிறகு 8வது அத்தியாயத்தில் அறுவை சிகிச்சை செய்தும் கீறியும் குத்தியும் கண்நோயைப் போக்கலாம். சில நோய்களுக்கு காலம் கடந்து சிகிச்சை அளிக்க வேண்டும். சில மருந்தால் தீர்க்கத்தகாதவை, சில சிகிச்சையால் தீர்க்கத்தக்கவை என 76 வகையான கண்நோய்களைத் தீர்க்கும் 8 அறுவை வழிவகைகளை கூறி அவற்றை 19வது அத்தியாயம் வரை விரிவாக ஆராய்ந்து எடுத்துரைக்கிறார் ஸுசுருதர்.

காதில் தோன்றும் செவிட்டுத்தன்மை, ஒருவிதமான ஒலி, சீழ்க்கட்டி போன்ற காது நோய்களையும் அதைப் போக்கும் வழிகளையும் 20, 21 அத்தியாயங்களில் அலசுகிறார் ஆசிரியர். 22, 24 அத்தியாயங்களில் 31 விதமான மூக்கு நோய்கள், தீராத 'சயனஸ்' போன்ற முக்கியமான மூக்கு நோய்கள், அதற்கு உரிய இலக்கணங்களோடும் சிகிச்சையோடும் விளக்கப்பட்டிருப்பதை பார்க்கலாம். 25, 26 அத்தியாயங்களில் தலையில் தோன்றும் தலைவலி போன்ற நோய்களுக்கான சிகிச்சை முறைகள் ஆராய்ந்து கூறப்படுகின்றன. 27 முதல் 38வது அத்தியாயம் வரையில் 9 விதமான கிரகங்கள் குழந்தைகளைப் பற்றிக்கொண்டு வாட்டும்பொழுது அதற்கான சிகிச்சை யாதென பேசப்படுகிறது.

ENT என்று சொல்லப்படும் காது மூக்கு தொண்டை நோய்களுள் காது மூக்கு பற்றி இங்கு விரிவாக விளக்கி விட்டு சிகித்ஸாஸ்தானத்தில் தொண்டை நோயை தனியாகப் பிரித்து 22வது அத்தியாயத்தில் பல் நோயோடு இணைத்துப் பேசி அதற்குரிய சிகிச்சையையும் ஆசிரியர் கூறுகிறார்.

பொதுவாக இந்தஸ்தானத்தில் கண்புரை நோய் ஆசன வாயில் தோன்றும் முளை, பிஸ்டுலா (Pistula) இவைகளுக்கான தக்க கருவிகளைக் கொண்டு செய்யும் அறுவை சிகிச்சை முறைகள் விரிவாக இங்கு பேசப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. தவிர உடலில் 28 இடங்களில் அறுவை சிகிச்சை செய்யும் முறைகளையும் கருவிகளையும் பிணியின் பெயர்களையும் சுருக்கமாகக் கூறுகிறார் ஆசிரியர். இந்த ஸ்தானத்திலும் அறுவை சிகிச்சையைக் காட்டிலும் மூலிகை மருந்துகளைக் கொடுத்து இவைகளைப் போக்கும் முறையை அதிகமாகப் பேசி, தவிர்க்க முடியாத நிலையில்தான் அறுவைச் சிகிச்சை முறையைக் கையாள வேண்டும் என தன்னுடைய திடமான கருத்தை தெரிவிக்கிறார் ஸுசுருதர்.

## 12. *சில சிறப்புகள்*

101 இயந்திரங்களைப் பற்றிய விளக்கம் இங்கு போற்றற் குரியது. நாட இயந்திரம், சலாகா இயந்திரம், உப இயந்திரங் கள், தால இயந்திரம், ஸ்வஸ்திக இயந்திரம், ஸம்தம்ச இயந்திரம் என இயந்திரங்கள் ஆறு வகையாகப் பிரிக்கப்பட்டு விளக்கப் பட்டுள்ளன. இயந்திரங்களை செம்மைப்படுத்த தேவையான உலோகங்கள் கருவிகளின் அமைப்பு, அவைகளைக் கைபடாமல் பாதுகாக்கும் முறை, அவைகளை வைத்துப் பாதுகாக்கும் பெட்டியின் அமைப்பு போன்ற சில சிறப்பான அம்சங்கள் இங்கு விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம். இக்கருவிகளைக் கொண்டு செய்யும் எண் வகையான அறுவைச் சிகிச்சை முறைகள் பேசப்பட்டுள்ளன.

சரகஸம்ஹிதையில் கூறப்படாத பல புதிய மூலிகைகள் இங்கு விளக்கப்பட்டிருக்கின்றன. அறுவைச்சிகிச்சை மட்டுமின்றி பல நோய்களுக்கு மருந்து கொடுத்து சிகிச்சை செய்யும் உடல் மருத்துவ முறையையும் இடையிடையே விரிவாக விளக்கு கிறார் ஆசிரியர். மூலிகைகளின் மருத்துவப் பயன்கள் அவற் றைப் பயன்படுத்தும் முறை போன்ற உடல் மருத்துவத்தின் சில முக்கியமான விளக்கங்கள் இங்கு காணப்படுகின்றன. சுருங்கச் சொன்னால் உடல் மருத்துவம், அறுவைச் சிகிச்சை, கண் காது மூக்கு மருத்துவம், குழந்தை மருத்துவம், பேய், பிசாசுகளால் வரும்

தீங்கைப் போக்கும் மருத்துவம், விஷவைத்தியம், ரஸாயனம், வாஜீகரணம் என ஆயுர்வேதத்தின் உட்பிரிவுகளாகிய எட்டுவித சிகிச்சை முறைகளையும் சுருக்கமாகக் கூறி முழுமையான ஆயுர் வேத மருத்துவ முறையை ஸுசுருதர் இங்கு கூறியிருப்பது அரிய பெரிய விஷயமாகும்.

அறுவைச் சிகிச்சையில் ஆயுர்வேதத்திற்கும் நவீன மருத்துவத்திற்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விளக்கும், 'அறுவைச் சிகிச்சையில் ஆயுர்வேதமும் நவீன மருத்துவமும்" என்ற பகுதி, அதர்வ வேதத்தில் ஆயுர்வேத மருத்துவம் எவ்வாறு விளக்கப்பட்டிருக்கிறது மூலிகைகள் அதில் இடம் பெற்றிருக்கும் வகை ஆகியவற்றை விளக்கும் அதர்வவேதமும் ஆயுர்வேதமும் என்ற பகுதி, அறுவைச் சிகிச்சைக்குரிய கருவிகளின் பெயர் பயன்படும் இடம் நோய்கள் ஆகியவற்றை விளக்கும் பட்டியல், 76 வகையான கண் நோய்களின் பெயர்கள் அவை கண்களுள் 7 இடங்களில் எவ்வாறு இடம் பெற்றிருக்கின்றன அவற்றுக்குரிய இலக்கணம் அறிகுறிகள் போக்கும் முறை ஆகியவற்றை விளக்கும் கண் பட்டியல், 76 கண் நோய்களை குத்தியும் பிளந்தும் கீறியும் அறுவைச் சிகிச்சை செய்து எவ்வாறு போக்க வேண்டும் எவை சிகிச்சைக்கு அடங்காதவை போன்றவற்றை விளக்கும் மற்றொரு கண்நோய் விளக்கப் பட்டியல், அறுவை சிகிச்சைக் கருவிகளின் படங்கள், அதன் கீழ் அவற்றின் பெயர்கள் பயன்படுத்தும் முறை பிணி ஆகியவைகள் என இவை யாவும் இந்நூலில் விளக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

## 13. உரை ஆசிரியர்கள்

இந்நூலுக்கு உரை எழுதியவர் பலர். அவற்றுள் கயதாஸ் (கி.பி.11) எழுதிய நியாயசந்திரிகா, சக்ரபாணி தத்தர் (கி.பி.11) எழுதிய பானுமதி, டல்ஹணர் (கி.பி.12) எழுதிய நிபந்தசங்கிரஹம், ஹாராணசந்திரன் (கி.பி.18) எழுதிய ஸுசுருதார்த்த ஸ்ந்தீபனம் போன்ற உரைகள் புகழ் பெற்று அனைவராலும் போற்றப்பட்டு முக்கியமாய் விளங்குகின்றன. அரபிக், லத்தின், ஜெர்மனி, ஆங்கிலம் போன்ற வெளிநாட்டு மொழிகளில் இந்நூல் பல ஆண்டுகளுக்கு முன்பு மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளது. ஹார்னலே, யூ.சி. தத். ஏ.சி சட்டோபாத்தியாயா, குஞ்சிலால், ஜி.டி.ஸ்கல் போன்றவர்கள் இந்நூலுக்கு எழுதிய ஆங்கில மொழி பெயர்ப்புகள் மிகப் பயனுள்ளவைகளாகக் காணப்படுகின்றன.

ஹிந்தி, மராத்தி, பெங்காலி, தெலுங்கு போன்ற இந்திய மொழிகளிலும் இது மொழி பெயர்க்கப்பட்டு வெளிவந்துள்ளது.

## 14. அறிவியலுக்கு இந்தியர்கள் முன்னோடி என ஆங்கிலேயர்களின் பாராட்டு

ஸுசுருதஸம்ஹிதையில் காணப்படும் சில அறுவைச் சிகிச்சை முறைகளைப் பார்க்கும்போது விஞ்ஞான உலகில் இன்று காணப் படும் அற்புத சாதனைகளுக்கு ஸுசுருதர் முன்னோடியாக விளங் கினார் என சொல்லத் தோன்றுகிறது. "கள்ளை மயக்க மருந்தாக கொடுத்து அறுவை சிகிச்சை செய்யும் முறையில் ஸுசுருதர் நிபு ணராக இருந்தார் (ஸு-அத்-17) என TWHAPLE என்னும் ஆங்கிலேயர் தனது "THE STORY OF WOUND REPAIR" என்னும் நூலில் குறிப்பிட்டிருப்பதுடன் "SUSRUTA WAS A PIONEER IN ANAESTHESIA ALSO" என்று பாராட்டியுள்ளார். அறுபட்ட மூக்கு காதுகளுக்கு பதில் உடலில் மற்றப் பகுதியை அறுத்து எடுத்த சதையை அங்கு இணைத்து வைத்துச் செய்யும் PLASTIC SURGERY முறையை வெபர் (WEBER) என்ற ஆங்கிலேயர் Our modern surgeons have been able to borrow from them (Hindus) the operations of RHINOPLASTY" (மூக்கைச் சார்ந்த PLASTIC SURGERY முறையை நவீன மருத்துவர்கள் இந்திய மருத்துவர்களிடமிருந்து கற்றுக் கொண்டனர்) என தன் நூலில் கூறியுள்ளார்.

இதே கருத்தை "HIRSEHBERG" என்ற ஆங்கிலேயர் தனது நூலில் "The whole Plastic Surgery in Europe had taken its new flight when these cunning devices of Indian workmen become known to us. The transplanting of the viable skin flaps is also as essentially Indian method" (இந்திய மருத்துவர்களில் சிகிச்சை நுணுக்கங்களை அறிந்த பிறகு ஐரோப்பாவில் "Plastic Surgery" முறை இன்றைய அளவிற்கு வளர்ச்சி பெற்று வருகிறது. சிகிச்சைக்குப் பிறகு வளரக்கூடிய தோல்மாற்றுச் சிகிச்சை முறையும் இந்தியர்கள் கையாண்ட முறையே) எனக் கூறியுள்ளார்.

மிக நுண்ணியமான நரம்புகள் போன்றவற்றை கண்ணால் கண்டு கொள்ளும்படி சவத்தைப் பக்குவப்படுத்தி அறுத்துப் பார்க்கும் முறையை (ANATOMY) சாரீரஸ்தானம் அத் 5 ஸுசுருதர் விளக்கியுள்ளார் என ஹார்நலே (HORNELE) போன்ற மேல் நாட்டவர்களும் வியந்து புகழ்ந்திருக்கின்றனர்.

"ANATOMY என்று சொல்லப்படும் 'உடலில் உள்ள எல்லா உறுப்புகளையும் ஆராய்ந்து அறிவதில் இந்தியர்கள் வல்லவர்" என கீத், மேக்டானல் (KEITH, MCDONAL) போன்ற மேல் நாட்டறிஞர்கள் விளக்கியிருக்கிறார்கள்.

## 15. பிளாஸ்டிக் சர்ஜெரிக்கு இந்தியர்கள் வழிகாட்டி

1792ல் திப்புசுல்தானுக்கும் ஆங்கிலேயருக்கும் நடந்த போரில் ஆங்கிலேயரைச் சார்ந்த கோவார்ஜி என்ற வண்டிக் காரன் மற்றும் நான்கு போர்வீரர்கள் அடிபட்டு மூக்கை இழந்தனர். அவர்கள் புனேயில் மராத்திய மருத்துவ நிபுணரிடம் சிகிச்சை பெற்று மீண்டும் மூக்கை பொருத்திக் கொண்டனர். இந்த சிகிச்சையை டொமாஸ் குரூஸோ, ஜேம்ஸ்பிண்டலே என்ற ஆங்கிலேயர்கள் கண்கூடாகக் கண்டு அறிந்து, பிறகு இங் கிலாந்து சென்று இம்மருத்துவ முறையைக் (பிளாஸ்டிக் சர்ஜெரி) கையாளத் துவங்கினர் என்ற இச்செய்தி புகைப்படங்களுடன் அன்றைய மதராஸ் கெஜட்டிலும் லண்டனிலிருந்து வெளிவரும் ஜென்டில்மேன் மேகசினிலும் 1794 அக்டோபர் இதழில் வெளியாகியுள்ளதை இன்றும் காணலாம்.

## 16. அறிவியலுக்கு வித்திட்டவர் ஸுசுருதர்

கருவை அறுவை சிகிச்சையால் நீக்குவது பிரசவத்தில் குழந்தை பெறும்பொழுது ஸிஸேரின் என்ற அறுவைச் சிகிச்சை யால் கருவில் இருந்து குழந்தையை வெளிக் கொணர்வது போன்ற அற்புத சாதனைகளை ஸுசுருதர் தனது நூலில் கூறியிருக்கிறார். (சிகி-அத்15) உயிர் அணுக்களை எடுத்துச் செல்லும் நரம்புகளை துண்டித்து மகப்பேறு ஏற்படாமல் தடுக்கச் செய்யும் கருத்தடை முறையை அதர்வணவேதத்தில் ஆயுர் வேதத்தை விளக்கும் பகுதியில் தெளிவாகக் காணலாம். கலவி யின் போது கரு தோன்றாமல் தடுக்கும் முறை ஆரணிய உபநிஷத்தில் விளக்கப்படுகிறது. கருச் சிதைவு ஏற்படும் போது சிகிச்சைகளின் மூலம் துயரத்தை நீக்கி சரி செய்யும் முறையும் (சாரீர, அத்-10) விரும்பிய ஆண் அல்லது பெண் குழந்தையை பெறுவதற்குரிய வழியும் ஸுசுருதத்தில் (சாரீர ஸ்தானம் மூன்றாம் அத்தியாயத்தில்) சொல்லப்பட்டிருக்கிறது.

மர்மஸ்தானங்கள் எனக் கூறப்படும் 107 உயிர் நிலைகளில் அறுவைச்சிகிச்சை தவிர்க்கப்படவேண்டும். செய்வது தவிர்க்க முடியாவிடின் சிகிச்சையின்போது கவனம் அதிகம் செலுத்த வேண்டும் என்பதை ஸுசுருதர் தனது நூலில் (சாரீர-அத் 6ல்) பேசியிருப்பதோடு அறுவைச் சிகிச்சைக்கு பயன்படும் 64 ஆயுதங்களையும் அழகாக எடுத்துக் கூறியுள்ளார். சாபத்தினால் இந்திரன் தன் விதையை இழக்க ஆட்டின் விதையை எடுத்து பொருத்தி ஆண்மையை தோற்றுவித்ததாக இராமாயணத்தில் கூறும் செய்தி தற்காலத்தில் பிராணிகளின் உறுப்புகளை பொருத்தி செய்யும் நவீன மருத்துவமுறையை நினைவுபடுத்துவது போல் அமைந்துள்ளது.'

## 17. தமிழாக்கப் பணியில் சந்தித்த பெரியோர்கள்

மூல சம்ஸ்கிருத நூலைத் தெளிவாய் எளிய நடையில் தமிழில் மொழி பெயர்த்துப் பத்திவாரியாகப் பிரித்து அவை களுக்கேற்ப தலைப்புகளைத் தந்து அச்சிட்டிருப்பதால் பகுதி பகுதியாக நூலின் கருத்தை அறிய வாய்ப்புள்ளது. மூல சுலோ கங்களின் எண்களைப் பின்பற்றி அதே வரிசையில் தமிழாக் கத்திலும் சுலோக எண்கள் தரப்பட்டுள்ளன. இங்கும் சந்தர்ப் பத்திற்கேற்பப் பகுதிபகுதியாகப் பிரித்து எண்கள் தரப்பட்டி ருப்பதால் குறிப்பிட்ட மூலத்தின் கருத்தை அறிய வாய்ப்பு உள்ளது.

சம்ஸ்கிருத சொற்களில் உள்ள மருந்து மூலிகைகளின் பெயர் கள், அறுவைசிகிச்சைக் கருவிகள், செயல்முறைகள் ஆகிய வற்றிற்குத் தகுந்த பொருத்தமான தமிழ்ப் பெயர்களை நன்கு ஆராய்ந்து தேடிப்பிடித்து இதில் பயன்படுத்தியுள்ளேன். பல ஆயுர்வேத வல்லுநர்கள், மரபு வைத்தியர்கள் ஆகியோர்களுடன் கலந்துரையாடியும், ஆயுர்வேத மருந்து தயாரிக்கும் கூடங்கள், பல நூலகங்கள் ஆகியவற்றை சென்று பார்த்தும் அகராதிகளைப் புரட்டி குறிப்பெடுத்தும் மூலிகைகள் மற்றும் அறுவைக் கருவிகள் ஆகியவற்றின் தமிழ்ப் பெயர்களைக் கூடுமானவரை சரியான முறையில் உணர்ந்து இதில் பயன்படுத்த பெருமுயற்சி மேற் கொண்டுள்ளேன். இனி வரும் காலத்தில் ஸம்ஸ்கிருத வல்லுநர் களிடம் சென்று ஸம்ஸ்கிருதத்தில் உள்ள மருந்துகளின் பெயர் களைத் தெரிந்து கொள்ள கஷ்டப்படாமல் எளிதில் இந்நூலின் வாயிலாக நேரிடையாக மருந்து மூலிகைகளின் பெயர்களையும், கருவிகளின் பெயர்களையும் அறிந்து, தமிழர்கள் அனைவரும் மருத்துவம் செய்யவும், மருந்து செய்யவும் ஒரு வாய்ப்பு கிடைத் துள்ளது.

## 18. தமிழாக்கத்தின் பயன்

ஆறு ஸ்தானங்கள் நூற்றெண்பத்தாறு அத்தியாயங்கள் 8307 சுலோகங்கள் கொண்டது இந்நூல். இந்நூலை ஐந்து பகுதி களாகப் பிரித்து B.A.M.S ஆயுர்வேத ஐந்தாண்டு பட்டப் படிப்பில் ஓராண்டுக்கு ஒரு பகுதி வீதம் நூல் முழுவதும் பாடபுத்தகமாக அமைத்திருப்பதால் முழுநூலையும் மாணவர் கள் பாட புத்தகமாகப் படித்தாக வேண்டும். எனவே அவர் களின் நன்மையைக் கருதி 3609 சுலோகங்கள், 80 அத்தியா யங்கள் கொண்ட (ஸூத்திரஸ்தானம், நிதானஸ்தானம், சாரீரஸ் தானம், கல்பஸ்தானம்) நான்கு ஸ்தானங்களும் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு முதல் பகுதியாக வெளியிடப்பட்டு விற்பனை யாகி வருகிறது.

3009 சுலோகங்கள் (சிகித்ஸாஸ்தானம் 40 அத்தியாயங்கள் உத்தரஸ்தானம் 38 அத்தியாயங்கள்) கொண்ட இரண்டாம் பகுதி தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு இந்நூல் வடிவில் வெளியாகி யிருக்கிறது. 1689 சுலோகங்கள் (உத்தரஸ்தானத்தில் மிகுதியுள்ள 28 அத்தியாயங்கள்) கொண்ட மூன்றாம் பகுதியின் தமிழாக்கம் விரைவில் அச்சாகி வெளிவரப் போகிறது என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன். இத்துடன் ஸுசுருதஸம்ஹிதை தமிழாக்கம் நிறைவு பெறுகிறது.

முக்கியமான ஆயுர்வேத நூல்களுள் ஒன்றாகவும், B.A.M.S ஆயுர்வேத பட்டப்படிப்புக்கு பாட நூலாகவும் அமைந்திருப்ப தால் இத்தமிழாக்கம், ஆயுர்வேத கல்லூரி மாணவர்களுக்குப் பயன்படுவதோடு மருத்துவம் செய்யவும், மருந்து செய்யவும், அறுவை சிகிச்சையைப் பற்றி விவரமறிந்து செயல்படவும் உதவும். ஆவலோடு காத்திருக்கும் தமிழக மக்கள் அனைவருக்கும் இது வழிகாட்டியாக அமையுமென்பதில் ஐயமில்லை. இந்நூல் தமிழில் ஆக்கப்பட்டு முதன்முறையாக வெளிவருகிறது என்பதை மிக்க மகிழ்ச்சியோடு தெரிவித்துக் கொள்கிறேன். 15,000 சுலோகங்கள் கொண்ட உடல் மருத்துவத்தைக் கூறும் சரகஸம்ஹிதா எனும் நூல் தமிழாக்கம் செய்யப்பட்டு மூன்று பகுதிகளாக வெளி வந்து விற்பனையாகிக் கொண்டிருக்கிறது.

புது தில்லி, ஆயுர்வேத சித்த மத்திய ஆராய்ச்சிக்கழகம் ஓய்வு பெற்ற உதவி இயக்குநர் டாக்டர் எஸ். வெங்கட்ராகவன், சென்னை வெங்கடரமணா ஆயுர்வேதக் கல்லூரி ஓய்வு பெற்ற முதல்வர் திரு கே.எஸ். விசுவநாதசர்மா என்ற இரு ஆயுர்வேத வல்லுநர்களும் இத்தமிழாக்கம் முழுவதையும் படித்து ‘ஆயுர்வேதமுறை தவறாமல் நல்ல முறையில் இம்மூலத்திற்கு ஒத்தாற்போல் இம்மொழி பெயர்ப்பு அமைந்துள்ளது’ என அளித்திருக்கும் நற்சான்று இந்நூலுக்கு மேலும் மெருகூட்டும் என எண்ணி மகிழ்கிறேன்.

* * *

# நன்றி நவிலல்

ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஆயுர்வேத நூல்களைத் தமிழில் மொழி பெயர்த்து அதன் வாயிலாகத் தமிழக மக்கள் அனைவரும் ஆயுர்வேதமுறையை அறிந்து மருத்துவம் செய்தும் மருந்து தயாரித்தும் பயன்பெற வேண்டுமென்கிற பரந்த நோக்கத்துடன் சென்னை இந்திய மருத்துவம் 'மற்றும் ஓமியோபதி இயக்குநரகத்தில் 3-2-83 அன்று தமிழக முதல்வர் அமரர் **எம்.ஜி.ஆர்** அவர்கள் தனிப்பட்ட ஆர்வமும் அக்கரையும் கொண்டு மொழி பெயர்ப்புப்பிரிவை துவக்கி வைத்து என்னை அங்கு அவர்களே கௌரவத் தனி அலுவலராக நியமித்தார்கள். எனக்கு இப்பணி செய்யும் வாய்ப்பளித்த அமரர் **எம்.ஜி.ஆர்** அவர்களுக்கும் இம்மொழி பெயர்ப்புப் பிரிவை தொடர்ந்து நடத்த உதவி இதில் பணியாற்ற எனக்கு ஊக்கமும் உற்சாகமும் உதவியும் அளித்து 6400 பக்கங்கள் கொண்ட 6 (ஆறு) நூல்களை வெற்றிகரமாக வெளிக் கொணர மூலகாரணமாயிருந்த **தமிழக முதல்வர் புரட்சித் தலைவி செல்வி டாக்டர் J. ஜெயலலிதா** அவர்களுக்கும் தமிழக அரசுக்கும் என் உளங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அன்று முதல் இன்று வரை பன்னிரண்டரை ஆண்டு காலமாக தொடர்ந்து இப்பணி நடைபெற்று வருகிறது. இதுவரை 25 ஆயிரம் ஸம்ஸ்கிருத சுலோகங்கள் தமிழாக்கம் செய்யப்பட்டு 6 பகுதிகளாக 6400 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளன.

இம்மொழிபெயர்ப்புப் பணிக்கும் இது அச்சாகி வெளி வருவதற்கும் தேவையான உதவிகளை எல்லாம் உடனுக்குடன் செய்து தந்து இந்த நூல் விரைவில் வெளிவர உதவிய சுகாதாரம் மற்றும் குடும்ப நலத்துறை செயலாளர், திரு. **இரா. பூர்ணலிங்கம்** இ.ஆ.ப. அவர்களுக்கும், இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநர் திரு. **S. அன்சர் அலி** இ.ஆ.ப. அவர்களுக்கும் என் அன்பு கலந்த நன்றி உரித்தாகுக.

இம்மொழி பெயர்ப்புப் பணியில் தேவைப்படும் விவரங்களையெல்லாம் சேகரித்து உதவிய புலவர்கள், உதவி ஆசிரியர்கள் இவர்களுக்கும், விரைவிலேயே அச்சிட்டு இந்நூல் கிடைக்க உதவிய **டான்சி** நிறுவனத்தாருக்கும், அறுவைக் கருவிகளின் வரைப்படங்களையும் அழகான கண்கவரும் வண்ண முகப்புப்படத்தையும் வரைந்து தந்துதவிய **ஓவியர் சாரதி** அவர்களுக்கும் எனது நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**எஸ்.என். ஸ்ரீராமதேசிகன்**
கவுரவத் தனி அலுவலர்.

இந்திய மருத்துவம் மற்றும்
ஓமியோபதி இயக்குநரகம்,
சென்னை - 600 106.

தேதி : 10-10-95.

# எஸ்.என். ஸ்ரீராமதேசிகனின் (21-6-1921)
# 55 ஆண்டு இலக்கியத் தொண்டு

## பதவிகள்

1. ஆராய்ச்சி மாணவன், ஸ்ரீவெங்கடேச்வரா கீழ்த்திசை ஆராய்ச்சி நிறுவனம், திருப்பதி 1943 முதல் - 2½ ஆண்டுகள்.

   (ஆழ்வார்கள் பாசுரங்களில் சங்ககால இலக்கியச் செல்வாக்கைப் பற்றி ஆராய்ந்து கட்டுரை வரைதல்)

2. ஆராய்ச்சிப் புலவர், இந்திய அரசாங்கம், புது தில்லி - 2½ ஆண்டுகள் (1961 முதல் 1963 வரை)

   (ந்யாயபரிசிஷ்டம் என்ற அரியதொரு பழமையான தர்க்க சாஸ்திர நூல், புதியதொரு உரையுடன் பதிப்பிக்கப் பெற்று, ஆராய்ச்சி முறையில் எழுதிய முன்னுரையுடன் திருப்பதி கேந்திரிய ஸம்ஸ்கிருத வித்யாபீடத்தின் வாயிலாக வெளியிடப்பட்டுள்ளது.)

3. பகுதிநேர விரிவுரையாளர் - (ஸம்ஸ்கிருதம்) - கிண்டி இன்ஜினீயரிங் கல்லூரி, அடிப்படை ஆராய்ச்சி பிரிவு - 4 ஆண்டுகள் (1965-1969)

   (விஞ்ஞான நுணுக்கங்கள் அடங்கிய பழங்கால தர்க்க சாஸ்திர நூல்களை பொறியியல் கல்லூரி ஆசிரியர்களுக்கு விஞ்ஞானரீதியில் போதித்து அக்கருத்துக்களை ஆராய்ச்சிக் கட்டுரையாக எழுதி, கிண்டி பொறியியல் கல்லூரி அடிப்படை ஆராய்ச்சி நிறுவனத்தின் மூலம் அச்சிட்டு வெளியிடுதல்)

4. ஆராய்ச்சி அலுவலர் - கேந்திரீய ஸம்ஸ்கிருத வித்யா பீடம் - திருப்பதி - இது ஒரு இந்திய அரசாங்க நிறுவனம், இன்று ஸம்ஸ்கிருத பல்கலைக்கழகம். 3 1/2 ஆண்டுகள் (1972-1975).

   (சங்ககாலம் தொடங்கி 20வது நூற்றாண்டு வரையிலுள்ள தமிழ் நூல்களையும் வேதகாலம் தொடங்கி இன்று வரை யாக உள்ள வடமொழி நூல்களையும் ஒப்பிட்டுப் பார்த்து ஆராய்ந்து ஒன்றோடொன்று கருத்தொற்றுமை கொண்டு இரு கண்கள் போல் இயங்கி வரும் நிலையைப் பற்றி 1000 பக்கங்களில் ஆராய்ச்சிக் கட்டுரை தயார் செய்தல்).

5. கௌரவ ஆசிரியர் - தஞ்சாவூர் சரஸ்வதி மஹால் நூலகம் - (1980)

(மஹாபாரதக் கதையின் சுருக்கத்தை விளக்கும் பிராஸ பாரதம் என்னும் வடமொழி நூலின் தமிழாக்கம். இந்நூல் நூலகத்தின் வாயிலாக வெளியிடப்பட்டது.)

6. கௌரவ ஆராய்ச்சி செயலாளர் - தமிழ் - ஸம்ஸ்கிருதம் மற்றும் பிறமொழி ஆராய்ச்சி நிறுவனம், சென்னை 1975-1981

(வெகுநாட்களாக தமிழ், ஸம்ஸ்கிருத மொழிகளுக்கிடையே இருந்த சர்ச்சைக்குரிய சில கருத்து வேறுபாடுகளை அகற்றி இரு மொழியாளர்களுக்கும் இரு மொழிகளுக்கும் இடையே ஒற்றுமை காண முறையே சென்னை கவர்னர் கே.கே. ஷா, பிரபுதாஸ் பட்வாரி, மோகன்லால் சுகாடியா ஆகியவர் களைத் தலைவர்களாகக் கொண்ட இந்நிறுவனத்தின் கௌரவ ஆராய்ச்சி அலுவலராக இருந்து பல அறிஞர்கள் எழுதிய ஆராய்ச்சிக் கட்டுரை அடங்கிய ஒரு தொகுப்பை வெளியிடுதல், பல்துறைகளில் புகழ்பெற்ற பல அறிஞர் களைக் கொண்ட பல துணைக் கமிட்டிகளை அமைத்து கருத்தரங்கு மாநாடுகளை நடத்தி இரு மொழிகளுக்கும் பாலம் அமைத்து தொண்டாற்றி வருதல்).

7. கௌரவத் தனி அலுவலர் - ஆயுர்வேத மொழி பெயர்ப்புப் பிரிவு, இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்கு நரகம், தமிழக அரசு, சென்னை. 1983 முதல் தொடர் கிறது.

(13 ஆண்டு காலமாக பழம்பெரும் ஸம்ஸ்கிருத மொழி யிலுள்ள ஆயுர்வேத நூல்களை தமிழாக்கம் செய்து, நவீன விஞ்ஞான உலகில் இன்று காணப்படும் அரிய விஞ்ஞான நுணுக்கங்களை விளக்கி பல மூலிகைப் படங்களையும் இணைத்து தயாரித்த நூல், தமிழக அரசின் வாயிலாக ஐந்து பகுதிகளாக அச்சிட்டு வெளியாகியிருக்கிறது).

8. உதவி ஆசிரியர் - 'அனுமான்' தமிழ் வாரப்பதிப்பு - 1950.

9. சரஸ்வதி கிரி வேத ஸம்ஸ்கிருத பாடசாலையின் தலைவராக இருந்து இலவச ஸம்ஸ்கிருத வகுப்புகளை நடத்தி பல ஸம்ஸ் கிருத பரீட்சைகளுக்கு மாணவர்களை அனுப்பி தொண் டாற்றியுள்ளார். (1973-1986)

10. கௌரவ ஆலோசகர் - சென்னை அரசு [illegible]ளை ஓலைச் சுவடி நூலகம், சென்னை, (1988) ஓர் ஆண்டு.

(வெகு காலமாக அச்சேறாமல் ஓலைச்சுவடி வடிவத்திலுள்ள தமிழ் ஸம்ஸ்கிருத மொழி நூல்களை அச்சிடுவதற்கு ஏற்றவாறு பதிப்பித்து அச்சிட திட்டம் வகுத்து அளித்தல்.)

11. 1940 முதல் இன்று வரை எழுத்தாளராக இருந்து, பல ஆங்கில, தமிழ் தினசரி, வாரப் பத்திரிகைகளில் ஆராய்ச்சிக் கட்டுரை, புத்தக விமர்சனம் எழுதி வருதல்.

12. ஸ்தாபகச் செயலர் - தென்னிந்திய ஸம்ஸ்கிருத சங்கம், சென்னை. 1950 முதல் இன்று வரை.

(1950 முதல் இன்று வரை இச்சங்கத்தின் வாயிலாக பல இலவச ஸம்ஸ்கிருத வகுப்புகள் பல மகாநாடுகள், ஆராய்ச்சி அரங்கங்கள், அறக்கட்டளை சொற்பொழிவுகள் ஆகியவற்றை நடத்தி ஸம்ஸ்கிருத வடமொழிக்குத் தொண்டு புரிதல்).

## பாராட்டுகள்

1. ஸம்ஸ்கிருத புலமைக்காக இந்திய ஜனாதிபதி வழங்கிய பாராட்டு - 1971.
2. உத்தரப்பிரதேச அரசு, அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலுக்குப் பரிசு அளித்தல் - 1973.
3. தமிழக அரசு, மொழி பெயர்ப்புப் பணிக்காக வள்ளுவர் விழாவில் பொன்னாடை அளித்து கௌரவித்தல் - 1986.
4. சரகஸம்ஹிதை மொழி பெயர்ப்புப் பணிக்காக இந்திய மருத்துவ ஓமியோபதி இயக்குநரகம், சால்வை அளித்து கௌரவித்தல் - 1988.
5. சென்னை பல்கலைக் கழகத்தில் பி.யு.சி. சிறப்பு ஸம்ஸ்கிருத தேர்வுக்கு அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் பாடப்புத்தகமாக வைக்கப்பட்டது. (1973 முதல்)
6. தமிழ் எழுத்தாளர் சங்கம், சென்னை-பொற்பதக்கம் அளித்து கௌரவித்தல் - 1969.
7. காரைக்குடி கம்பன் கழகம், பொன்னாடை போர்த்தி கௌரவித்தல் - 1965.
8. சென்னை பாரதியார் சங்கம் கேடயம் அளித்துக் கௌரவித்தல் - 1963.

9. இலக்கியச் சங்கம் 'ஸம்ஸ்கிருத ரத்னா' என்ற பட்டம் வழங்கி கௌரவித்தல் - 1970.

10. தமிழக அரசு - கலைமாமணி பட்டம் அளித்து கௌர வித்தல் - 1993 மார்ச்.

## வெளியீடுகள்

1. அஷ்டாங்கசங்கிரகம், சரகஸம்ஹிதா, ஸுசுருத சம்ஹிதா, ஆகிய 25,000 சுலோகங்கள் கொண்ட வடமொழி ஆயுர் வேத நூல்கள் தமிழாக்கம் செய்யப்பட்டு தமிழக அரசால் ஆறு பகுதிகளாக 6400 பக்கங்களில் வெளியிடப்பட்டுள்ளன.

   பரத முனிவரால் எழுதப்பெற்ற 6000 சுலோகங்கள் 36 அத்தியாயங்கள் கொண்ட 'பரத நாட்டிய சாஸ்திரம்' என்ற ஸம்ஸ்கிருத நூல் தமிழாக்கம் செய்யப்பட்டு விரைவில் அச்சாகி வெளிவர இருக்கிறது.

3. திருக்குறள், ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு தமிழ் ஆங்கில விளக்க உரையுடன்.

4. நாலடியார், ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு தமிழ் ஆங்கில விளக்க உரையுடன்.

5. சுப்பிரமணிய பாரதியார் நூல்களின் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு, ஆங்கில விளக்க உரையுடன்.

6. பத்துப்பாட்டு, (சங்க இலக்கியம், திருமுருகாற்றுப்படை, முல்லைப்பாட்டு) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

7. எட்டுத் தொகை, (சங்க இலக்கியம்-பரிபாடல்) ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு.

8. கம்பராமாயணம், (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

9. சிலப்பதிகாரம் - ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

10. அவ்வையார் நீதி நூல்கள் - ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

11. ஆந்திரகவி வேமனாவின் பாடல்கள், ஸம்ஸ்கிருத-தமிழ் மொழி பெயர்ப்புகளுடன்.

12. ஏழு நாடகக் கதைகள் - (ஏழு ஸம்ஸ்கிருத நாடகங்களின் கதைச் சுருக்கம்) தமிழில்.

13. ஸ்ரீ கிருஷ்ண லீலா - ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மாவின் சரிதம் - குழந்தைப் பருவம் முதல் - தமிழ்.

14. இரு மொழி இலக்கிய இன்பம் - (ஆராய்ச்சிக் கட்டுரைகளின் தொகுப்பு) தமிழ்.

15. மகாபாரதத்தை இயற்றியவர் யார்? (ஓர் ஆராய்ச்சிக் கட்டுரை) தமிழ்.

16. கிருஷ்ண கதா சங்கிரகா - (ஸம்ஸ்கிருத சுலோகங்கள்).

17. தேசிகமணி சதகம் - (வேதாந்த தேசிகரின் வாழ்க்கை வரலாறு) - ஸம்ஸ்கிருத சுலோகங்கள்.

18. திருப்பாவை - ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.

## பாராட்டியவர்கள்

1. இராஜாஜி.
2. வி.வி.கிரி.
3. மொரார்ஜி தேசாய்.
4. காஞ்சி சங்கராச்சாரியார்.
5. சிருங்கேரி சங்கராச்சாரியார்.
6. கே.கே. ஷா. ஆளுநர்.
7. பிரபுதாஸ் பட்வாரி. ஆளுநர்.
8. டாக்டர். சி.பி. ராமஸ்வாமி அய்யர்.
9. எம்.ஜி.ஆர்.
10. டாக்டர் புரட்சித்தலைவி தமிழக முதல்வர் ஜெ.ஜெயலலிதா.

# ஆசிரியருக்கு அறிஞர் பெருமக்களின் பாராட்டுக்கள்

(ஆசிரியருடைய நூல்களுக்கு முன்னுரை எழுதியும் நூல் வெளியீட்டு விழாவில் தலைமை தாங்கி அவற்றை வெளியிட்டும் ஆசிரியருடைய தொண்டைப் பாராட்டிப் பரிசளித்த ஜனாதிபதி, பாரதப் பிரதமர், கவர்னர்கள், துணை வேந்தர்கள், மடாதிபதிகள், நீதிபதிகள், மத்திய அமைச்சர்கள் ஆகியோருடைய பெயர்களும் பாராட்டு வழங்கிய தேதிகளும் கீழே தரப்படுகின்றன.)

## ஜனாதிபதி

திரு. டாக்டர் வி.வி.கிரி (ஜனாதிபதி)
பத்துப்பாட்டு, ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டிப் பரிசளித்தார். 16-2-1973

## துணை ஜனாதுபதுகள

1. திரு. டாக்டர் வி.வி.கிரி (துணை ஜனாதிபதி)
சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டிப் பரிசளித்தார். 21-1-68

2. திரு.பி.டி. ஜட்டி (துணை ஜனாதிபதி)
திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு இரண்டாம்
பகுதிக்கு முன்னுரை எழுதி பாராட்டியுள்ளார். 15-3-79

## பாரதப் பிரதமர்

திரு. மொரார்ஜி தேசாய் (பாரதப் பிரதமர்)
திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு இரண்டு
பகுதிகளையும் வெளியிட்டு பரிசளித்தார் 14-4-79

## முதுபெரும் பேரறிஞர்

திரு. ராஜாஜி (முதல் இந்திய கவர்னர் ஜெனரல்)
கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
(பாலகாண்டம்) முதற்பகுதியை வெளியிட்டுப்
பாராட்டி பரிசளித்தார். 1-11-64

**கவர்னர்கள்**

1. திரு. வி.வி.கிரி (கேரள கவர்னர்)
வேமன பத்ய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல்
வெளியீட்டு விழாவிற்கு தலைமை தாங்கினார் 28-3-62

2. திரு. ஸ்ரீ. ஸ்ரீபிரகாசா (மஹாராஷ்டிர கவர்னர்)
ஆசிரியரின் புலமையை பாராட்டி நற்சான்று
அளித்துள்ளார். 30-3-57

3. திரு. டாக்டர் சம்பூர்ணானந்தா (ராஜஸ்தான் கவர்னர்)
கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு (பாலகாண்டம்)
நூலுக்கு முன்னுரை எழுதி சிறப்பித்திருக்கிறார். 19-10-64

4. திரு. பி. ராமகிருஷ்ண ராவ் (உத்தர பிரதேச கவர்னர்)
ஆண்டாள் திருப்பாவை ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு
நூலுக்கு முன்னுரை எழுதியிருக்கிறார். 24-4-61

5. திரு. எம். அனந்தசயனமய்யங்கார் (பீஹார் கவர்னர்)
வேமன பத்ய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு
முன்னுரை எழுதியுள்ளார். 28-6-62

அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல்
வெளியீட்டு விழாவிற்கு தலைமையும்
தாங்கினார். 5-7-71

6. திரு. கே. கே. ஷா (தமிழ்நாடு கவர்னர்)
பத்துப்பாட்டு ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு
முன்னுரை எழுதியுள்ளார். 20-12-72

அந்நூல் வெளியீட்டு விழாவிற்கு தலைமையும்
தாங்கியுள்ளார். 16-2-73

அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை
வெளியிட்டார். 5-7-71

7. திரு. பிரபுதாஸ் பி. பட்வாரி (தமிழ்நாடு கவர்னர்)
எட்டுத்தொகை ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு
முன்னுரை எழுதியுள்ளார். 16-8-77

அந்நூல் வெளியீட்டு விழாவிற்கு தலைமையும்
தாங்கியுள்ளார். 23-10-77

8. திரு. பீஷ்மநாராயணசிங் (தமிழ்நாடு கவர்னர்) கலைமாமணி பட்டத்திற்கான பொற்பதக்கத்தை அளித்து சால்வையும் போர்த்தி கௌரவித்தார். 11-3-93

9. டாக்டர் கே.எம். முன்ஷி (முன்னாள் கவர்னர், உத்தரப் பிரதேச அரசு. தலைவர், பாரதீய வித்யா பவன், பம்பாய்)

   கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலைப் படித்து புகழ்ந்து பாராட்டுகளை வழங்கியுள்ளார். 19-10-64

**தமிழக முதல்வர்கள்**

1. திரு. எம். பக்தவத்ஸலம் (தமிழ்நாடு முதல்வர்) வேமனபத்ய ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டுள்ளார். 23-8-62

2. திரு. டாக்டர் எம்.ஜி.ஆர். (தமிழக முதல்வர்) மொழிபெயர்ப்புப் பணியைப் பாராட்டி தமிழர் திருநாள், வள்ளுவர் விழாவில் பொன்னாடை போர்த்தி கௌரவித்தார். 16-1-86

   சரக ஸம்ஹிதா தமிழாக்க நூலின் இரண்டாம் பகுதிக்கு வாழ்த்துரை வழங்கி அந்நூலுக்கு பெருமையும் சேர்த்துள்ளார். 4-3-1987

3. புரட்சி தலைவி டாக்டர் ஜெ. ஜெயலலிதா (தமிழக முதல்வர்) கலைமாமணி பட்டம் அளித்து கௌரவித்தார். 11-3-93

   ஸுசுருத ஸம்ஹிதா தமிழாக்க நூல் முதல் பகுதிக்கு வாழ்த்துரை வழங்கிப் பாராட்டி அந்நூலுக்குச் சிறப்பைத் தந்துள்ளார். 10-9-1992

**மத்திய மந்திரிகள்**

1. திரு. சி.ஆர். பட்டாபிராமன் (இந்திய அரசு செய்தி ஒலிபரப்புத் துறை அமைச்சர்)

   கம்பராமாயண ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு (பால காண்டம்) நூலுக்கு பாராட்டுரை வழங்கியுள்ளார். 15-10-64

2. திரு. பா. ராமச்சந்திரன் (மத்திய அமைச்சர் - எரிசக்தி)
எட்டுத்தொகை ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டினார். 23-10-77

3. திரு. டாக்டர் கைலாஸநாத கட்ஜு
(மத்திய உள்துறை அமைச்சர்)
கம்பராமாயண (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத மொழி
பெயர்ப்பு நூலுக்கு பாராட்டுரை வழங்கி
சிறப்பித்துள்ளார். 19-10-64

**நீதிபதிகள்**

1. ஜஸ்டிஸ் பி. ராஜகோபாலன்
(பிரதம நீதிபதி, உயர்நீதி மன்றம் - சென்னை)
திருப்பாவை ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பேசினார். 12-7-61

2. திரு. எம். பதஞ்சலி சாஸ்திரி
(உச்ச நீதி மன்ற தலைமை நீதிபதி - டெல்லி)
திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் முதற்பகுதி
வெளியீட்டு விழாவிற்கு தலைமை தாங்கினார். 28-3-62

3. திரு. ஜஸ்டிஸ் எம். அனந்த நாராயணன்
(உயர்நீதி மன்ற தலைமை நீதிபதி - தமிழ்நாடு)
சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் வெளியீட்டு
விழாவிற்கு தலைமை தாங்கினார். 21-1-68

4. திரு. டி.எல். வெங்கட்ராமய்யர்
(உச்ச நீதிமன்ற நீதிபதி - டெல்லி)
ஏழு நாடகக் கதை நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 1-8-61

**துணை வேந்தர்கள்**

1. திரு. டாக்டர் சி.பி.ராமஸ்வாமி அய்யர்
(அண்ணாமலைப் பல்கலைக் கழக துணைவேந்தர்)
பாரதியார் ஸம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு நூலை
வெளியிட்டுப் பாராட்டினார். 4-9-63

கம்பராமாயண (பாலகாண்டம்) ஸம்ஸ்கிருத
மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரையும் வழங்கியுள்ளார்.
19-10-64

2. டாக்டர் எஸ். கோவிந்தராஜுலு, (வெங்கடேஸ்வரா பல்கலைக் கழக துணை வேந்தர் - திருப்பதி) பாரதியார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 27-8-63

3. திரு. டாக்டர் கே.ஆர். ஸ்ரீநிவாசய்யங்கார் (ஆந்திரா பல்கலைக் கழக துணைவேந்தர்) பத்துப்பாட்டு ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரை எழுதியுள்ளார். 20-9-72

4. டாக்டர் ஸி.டி.தேஷ்முக் (முன்னாள் துணை வேந்தர், டில்லி பல்கலைக் கழகம்) சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலைப் புகழ்ந்து எழுதியுள்ளார். 28-2-1968

   திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலைப் படித்துப் பரவசம் அடைந்து தன் மேலான கருத்தை வெளியிட்டுள்ளார். 5-12-1961

5. திரு. டி. எம். நாராயணசாமி பிள்ளை (முன்னாள் துணைவேந்தர், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்) எழு நாடகக் கதைகள் என்ற நூலுக்கு முன்னுரை எழுதி தன் பாராட்டுதலை தெரிவித்துள்ளார். 30-8-1961

### மடாதிபதிகள

ஸ்ரீ சிருங்கேரி சாரதாபீட ஜகத்குரு பாரதிதீர்த்த சங்கராசார்ய ஸ்வாமிகள் நாலடியார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை வெளியிட்டுப் பாராட்டியருளினார். 16-1-82

2. ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஜயேந்திர சரஸ்வதி ஸ்வாமிகள் சுப்ரமணிய பாரதியாரின் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு பிரதியை வெளியிட்டு பாராட்டியருளினார். 12-12-82

### அரசாங்கப் பாராட்டுகள்

1. ஸம்ஸ்கிருதப் புலமைக்காக ஜனாதிபதியால் பாராட்டப் பெற்றார். 5-10-71

2. அவ்வையார் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலை பாராட்டி உத்தரப் பிரதேச அரசு ரொக்கப் பரிசு அளித்து கௌரவித்தது 1973

3. தமிழக அரசால் கலைமாமணி பட்டம் அளித்து கௌரவிக்கப்பட்டார். 11-3-93

**மத்திய சாஹித்ய அகாடமித் தலைவர்கள்**

1. திரு. டாக்டர் சுனீத்குமார் சாட்டர்ஜி (மத்திய சாஹித்ய அகாடமித் தலைவர்) சிலப்பதிகார ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூலுக்கு முன்னுரை எழுதி பாராட்டியுள்ளார். 8-1-68

2. திரு. டாக்டர் உமாசங்கர் ஜோஷி (மத்திய சாஹித்ய அகாடமித் தலைவர்) திருக்குறள் ஸம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு நூல் முதற்பகுதிக்கு முன்னுரை எழுதி பாராட்டியுள்ளார். 12-6-78

**பத்திரிகைகள்**

ஹிந்து, இண்டியன் எக்ஸ்பிரஸ், பவர்ன்ஸ் ஜர்னல், இந்துஸ்தான் டைம்ஸ், தினமணி, சுதேசமித்திரன், ஆனந்தவிகடன், கல்கி போன்ற பத்திரிகைகளில் ஆசிரியருடன் பேட்டி, புத்தக விமர்சனம், கட்டுரைகள், புத்தக வெளியீட்டு விழாச் செய்திகள், பாராட்டு விழாச் செய்திகள் ஆகியவை இடம் பெற்றிருக்கின்றன.

**குறிப்புகள்**

ஜனாதிபதி
இரண்டு உபஜனாதிபதிகள்
மூதறிஞர் இராஜாஜி
பாரதப் பிரதமர்
ஒன்பது கவர்னர்கள்
மூன்று தமிழக முதல்வர்கள்
மூன்று மத்திய மந்திரிகள்
நான்கு நீதிபதிகள்
ஐந்து துணைவேந்தர்கள்
இரண்டு மடாதிபதிகள்
இரண்டு மத்திய சாஹித்திய அகாடமித் தலைவர்கள்
மூன்று மாகாண அரசுகள்

தமிழக கவர்னர் திரு. கே.கே.ஷா அவர்களுடைய தலைமையில் ஜனாதிபதி திரு.வி.வி. கிரி அவர்கள் இவருடைய நூலை வெளியிட்டிருப்பதும், கவர்னர் திரு. பிரபுதாஸ் பட்வாரி அவர்களின் தலைமையில் பாரதப் பிரதமர் திரு. மொரார்ஜி தேசாய் அவர்கள் இவருடைய நூலை வெளியிட்டிருப்பதும் குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

# மொழிபெயர்ப்புப் பணிக்கு உதவிய பேரறிஞர்கள்

வித்வான்
நடாதூர் விஜயராகவாசாரியார்,
(பன்மொழிப்புலவர், பரம்பரை
முறையில் ஆயுர்வேதம் கற்றவர்)

பி.ஆர்.பத்மநாபன், B.A.,
உதவி ஆசிரியர்.

என்.ஆர். விஜயராகவன்,
வித்வான்.

டி. இராமசாமி, B.A.,
உதவி ஆசிரியர்.

எஸ். சுந்தரவரதன்
வித்வான், சிரோமணி,
சிக்ஷாசாஸ்த்ரி, வித்யாவாரிதி.

எஸ். திருமலை
உதவி ஆசிரியர்.

ஆர். சுந்தராம்பாள்
கோவிதா.

**இந்நூலை மதிப்பீடு செய்த வல்லுநர்கள்:**

டாக்டர் கே.எஸ். விசுவநாத சர்மா,
ஓய்வு பெற்ற முதல்வர்,
வெங்கட்ரமணா ஆயுர்வேதக் கல்லூரி,
மயிலாப்பூர்,
சென்னை - 600 004.

டாக்டர் எஸ். வெங்கட்ராகவன்,
உதவி இயக்குநர் (ஓய்வு)
ஆயுர்வேத சித்த மத்திய ஆராய்ச்சிக் கழகம்,
புது தில்லி.

# முன்னிணைப்பில் கண்டுள்ள ஆங்கிலப் பதங்களை சரி பார்த்து உதவிய நவீன மருத்துவர்களின் பெயர்கள்

ஆயுர்வேதத்தில் கூறியுள்ள பொது அறுவை சிகிச்சை, கண், பல், காது, மூக்கு, தொண்டை, தாடை இவற்றில் செய்யும் அறுவைச் சிகிச்சை, முதலியவைகளை ஆங்கில மருத்துவ அறுவைச் சிகிச்சையோடு ஒப்பாய்வு செய்து 227 பக்கங்களில் விரிவாக செய்த ஆராய்ச்சிப் பகுதி, இந்நூலில் முதலில் முன் இணைப்பாக சேர்க்கப்பட்டுள்ளது. அதில் வரும் ஆங்கிலப் பதங்களை சரி பார்த்து அவைகள் தகுந்த இடங்களில் இடம் பெற்று இருக்கின்றனவா என்பதையும் ஆராய்ந்து எங்களுக்கு உதவிய அந்தந்தத் துறையைச் சேர்ந்த வல்லுநர்களான டாக்டர் களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்வதோடு அவர் களுடைய பெயர்களும் கீழே தரப்படுகின்றன.

* மரு.ச.டொ. சுவாமிநாதன், எம்.பி.பி.எஸ்.,
டி.டி.சி.டி.எப்.சி.சி.பி.,
நெஞ்சக நோய் இயல் மருத்துவர்
அரசு ஸ்டான்லி மருத்துவமனை,
சென்னை.

* டாக்டர் ராஜலக்ஷ்மி ராதாகிருஷ்ணன், M.D. (Pathology)
கூடுதல் பேராசிரியர்,
நோய்க்குறி இயல் துறை,
சென்னை மருத்துவக் கல்லூரி,
சென்னை.

* டாக்டர் ஆ. கருணாகரன், எம்.எஸ்.டி.எல்.ஓ.
காது, மூக்கு மற்றும் தொண்டை மருத்துவர்,
ஸ்டான்லி மருத்துவமனை,
சென்னை.

# அறுவை சிகிச்சையில் ஆயுர்வேதமும் நவீன மருத்துவமும்

## தலைப்புகள்

# I. அறுவைச் சிகிச்சையில் ஆயுர்வேதமும், நவீன மருத்துவமும்

## 1. ஸுசுருதஸம்ஹிதையின் சிறப்பு

உலக நாடுகளில் ஒன்றிரண்டில் தவிர ஏனையவற்றில் மக்கள் விலங்குகளுக்கு இடையே தாமும் ஓரினமாக வாழ்ந்து வந்த காலத்தில் நம் நாடு பண்பிலும், நாகரிகத்திலும் சிறந்து விளங்கியது என்பதற்கு வேத இலக்கியம் ஒப்பற்ற சான்றாகும். வேதகாலம் கி.மு. 2000 முதல் 250 வரை என முடிவு செய்யலாம் என்பது ஆராய்ச்சியாளர்களின் கூற்று. 'வேதம்' என்ற சொல் 'வித்' (ஞானம்) எனும் வினையடியாகத் தோன்றியது. எனவே ஆன்றோர் தாம் உணர்ந்த உயர்ந்த பொருள்களை வேதங்களின் வாயிலாக நமக்கு உணர்த்துகின்றனர் எனலாம். சீரான சொற்றொடர் அமைப்பு, கவிதை நயம், பொருள்களுக்குப் பொருத்தமான பெயர்களைச் சூட்டி குறிப்பிடும் திறன் முதலியவற்றை ஆராய்ந்தபோது அக்காலத்தவர்களது நுட்பமான ஆராய்ச்சித் திறனையும் உண்மையைக் கண்டறிவதில் அவர்களுக்கு உள்ள ஊக்கத்தையும் நாம் அறிந்து கொள்ள முடிகிறது.

மற்ற விஞ்ஞானத் துறைகள் ஒருபுறம் இருக்க மக்களின் நல்வாழ்வுக்கு இன்றியமையாத மருத்துவ விஞ்ஞானத்திலும் அக்காலத்து ஆன்றோர் சிறந்து விளங்கினர் என்பது வேத - உபநிஷத்துக்களிலும், பிராமண, ஆரண்யக கிரந்தங்களிலும் காணப்படும் குறிப்புகளால் தெளிவாகிறது. வேதங்களுக்குச் சிறப்பாக அதர்வண வேதத்திற்கு ஓர் உறுப்பாக ஆயுர்வேதம் தோன்றியது என்பது ஆயுர்வேதத்திற்கு முதன் நூல்களான சரக-ஸுசுருத ஸம்ஹிதைகளின் வாயிலாக நாம் உணரலாம்.

வேதமெனும் வித்தில் முளைத்து வளர்ந்த ஆயுர்வேதம் இரு கிளைகளாக உலகில் பரவியது. பரத்வாஜ முனிவர் இந்திரனிடம் ஆயுர்வேதத்தில் காய சிகிச்சை எனும் மருந்துப் பொருள்களால் நோய்களை நீக்கும் முறையைக் கற்று உணர்ந்து புனர்வசு முனிவரின் புதல்வரான ஆத்ரேய மஹரிஷிக்கு உபதேசம் செய்தார். ஆத்ரேயரிடம் அக்னிவேசர், பேளர், ஜதுகர்ணர், பராசரர், ஹரிதர், க்ஷாரபாணி என்பவர்கள் மருத்துவம் கற்றுத் தாம் அறிந்தவுடன் தம் அனுபவத்தில் கண்ட பொருள்களையும் நூல்களாக இயற்றி உலகுக்கு அளித்தனர். அந்நூல்களில் அக்னிவேசரால் இயற்றப்பெற்று சரகரால் திருத்தம் செய்யப் பட்டு த்ருடபலரால் நிறைவுபடுத்தப்பட்ட ஸம்ஹிதையே

'சரகஸம்ஹிதை' என்று வழங்கப்படுகிறது. ஆத்ரேயரின் மருத்துவ முறைக்கு இணையற்ற கருவூலமான சரகஸம்ஹிதை மூன்று பகுதிகளாகத் தமிழாக்கம் செய்யப்பெற்று "இந்திய மருத்துவம் மற்றும் ஓமியோபதி இயக்குநரகத்தால்" வெளியிடப்பட்டுள்ளது.

மகாவிஷ்ணுவின் அவதாரமாகப் பாற்கடலில் அமுதத்திற் காகத் தேவர்களும், அசுரர்களும் கடைந்த போது தோன்றியவர் தன்வந்தரி பகவான். அன்னாரின் அவதாரமாகக் காசி மன்ன னாகத் தோன்றிய திவோதாஸர் எனும் பெயர் கொண்ட தன் வந்தரி பகவான் வேத காலத்திலிருந்து விளங்கி வந்த அறுவைச் சிகிச்சை முறையை மேலும் விரிவுபடுத்தி ஸுசுருதர், ஔபதேனவர், வைதரணர், ஔரப்ரர், பௌஷ்கலாதர், கர வீரியர், கோபுரக்ஷிதர் எனும் சீடர்களுக்கு உபதேசம் செய்தார். அச்சீடர்களும் தாம் கற்ற கல்வியை தம் அநுபவத்தால் மேலும் வளர்த்துக் கொண்டு தாம் உணர்ந்த பொருள்களை ஸம்ஹிதை எனும் நூல்களின் வாயிலாக உலகோருக்கு உணர்த்தியுள்ளனர். அவற்றில் ஸுசுருத ஸம்ஹிதையொன்றே நமக்கு கிடைத்துள்ளது. இந்நூலின் சிறப்பான பொருள்களைத் தெளிவுபடுத்துவதே இக் கட்டுரையின் நோக்கமாகும்.

## 2. ஸுசுருதரின் காலம்

ஸுசுருதரின் காலத்தைக் கணக்கிடுவது எளிதான செயலல்ல. அவருடைய நூலைக் கொண்டு காலத்தைக் கணக்கிடுவதற்குப் போதிய வலிவுள்ள ஆதாரங்கள் கிடைக்கவில்லை. ஆனால், விசுவாமித்ரருடைய குமாரர் என்பது மட்டும் உறுதியாகிறது. (ஸுசுருத ஸம்ஹிதை தமிழாக்கம் முதற்பகுதி பக்கம் ii) விசுவாமித்ரர் வேதகாலத்து முனிவர்களுள் புகழ் பெற்றவர். மற்றும் விசுவாமித்ரருடையவும், ஸுசுருதருடையவும் பெயர்கள் மகாபாரதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. ஆராய்ச்சியாளர்கள் பலரும் கி.மு. 3-வது நூற்றாண்டைச் சேர்ந்தவர் ஸுசுருதர் என முடிவு செய்துள்ளனர். மேலும் ஸுசுருதஸம்ஹிதை - இன்று நாம் காணும் புத்தகத்தில் "நம: ப்ரஜாபத்யச்விபல பித்தந்வந்தரி ஸுச்ருதப்ரபிருதிப்யர்" எனக் காணப்படுவதால் முதலில் விருத் தஸுசுருதர் இந்நூலை இயற்றினாரென்றும், பிறகு மற்றொரு வரான ஸுசுருதரெனும் பெயர் கொண்டவர் அந்நூலை சீர்படுத்தி எழுதினாரென்றும் சிலர் கூறுகின்றனர். ஸுசுருதஸம் ஹிதையைச் சீர்திருத்தம் செய்தவர் நாகார்ஜுனர் என்ற கருத்தும்

காணப்படுகிறது. இது எப்படி இருந்தாலும் தற்சமயம் நாம் காணும் ஸுசுருதஸம்ஹிதையை இயற்றியவர் கி.மு. மூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர் என்பது ஆராய்ச்சியாளர்களின் முடிவான கருத்தாகும்.

## 3. மருத்துவ நிலையம்

சில கடுமையான நோய்களுக்கும், சிறப்பாக அறுவைச் சிகிச்சைக்கும் மருத்துவரின் கண்காணிப்பில் நோயாளி தங்கி யிருந்து சிகிச்சை பெற வேண்டியிருக்கும். தற்காலத்தில் எல்லா வசதிகளுடன் கூடிய மருத்துவமனைகளைப் போல அன்றும் தனிப்பட்ட மருத்துவ மனைகள் இருந்தன. அவை:

(1) குமாராகாரம், (2) ஸூதிகாகாரம் - CHILDREN WELFARE AND MATERNITY CENTRE

(3) வைத்யக்ருஹம் - MEDICAL OFFICER'S CHAMBER

(4) ஆரோக்யசாலா - MEDICAL WARDS (GENERAL HOSPITAL)

(5) பேஷஜாகாரம் - DISPENSARY

(6) ரஸசாலா - PHARMACY

(7) விரணிதாகாரம் - SURGICAL WARD

அவற்றைத் தவிர சிறப்பான சிகிச்சைகளைப் பெற

(8) குடீபிரவேசிகாரஸாயன கிருஹம் (தனியாக ரஸாயன முறையில் சிகிச்சை பெறுவதற்கு)

(9) கல்பாகாரம் (10) பஞ்சகர்ம கிருஹம் (11) மஹாநஸம் (சமையல்அறை) - மகாநஸிகவைத்யன் (சமையலறையில் பொருள்களின் தன்மையறிந்த, நச்சுப் பொருள்கள் மற்றும் அவற்றிற்கு குறிப்புகள் முதலான மருத்துவ நுட்பங்கள் அறிந்த ஒருவர் அவசியம் இருக்க வேண்டும்.) (12) பசுசிகித்ஸாலயம்

என அவற்றின் கட்டட அமைப்பு, அவற்றில் இருக்க வேண் டிய கருவிகள் போன்ற நுட்பமான விஷயங்கள் அனைத்தும் சரக ஸுசுருதஸம்ஹிதைகள் முதலிய மருத்துவ நூல்களில் காணலாம். எடுத்துக்காட்டுக்குச் சிலவற்றை இங்கு குறிப்பிடுவது தகும்.

சரகஸம்ஹிதை - ஸூத்ரஸ்தானம் - பதினைந்தாம் அத்தியா யத்தில் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது:

"கட்டடக் கலையை நன்கு அறிந்தவர் மூலம் முதலில் ஒரு சிறந்த கட்டடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள்ள வேண்டும். அந்தக் கட்டடம் உறுதியாகவும், காற்றோட்டமுள்ள இடத்தில் அமைந்ததாகவும், காற்று வருவதற்காக ஒரு அமைப்பு உள்ள தாகவும் இருக்க வேண்டும். அந்த வீடு நோயாளி உலவுவதற்கு வசதியாக அமைவதோடு மலைச்சாரலில் அமைக்கப்பட்டதாக இருக்கக்கூடாது. வெயில், நீர், தூசி ஆகியவற்றுக்கு இடம் அளிக் காமல் மனதிற்கு அருவருப்பைத் தரும் ஒலி, தொடுஉணர்வு, உருவம், சுவை, மணம் எனும் இவைகளின்றி நீர் நிறைந்த தொட்டியுடன் அவ்வீடு அமைய வேண்டும். தேவையான பொழுது பயன்படுத்துவதற்கு உரல், உலக்கை ஆகிய இவற்றைத் தவிர கழிப்பிடம், நீராடுமிடம், சமையலறை, எனும் இவை தனித்தனியாக தகுந்த இடத்தில் அமைந்திருக்க வேண்டும்." (சரகஸம்ஹிதை - தமிழாக்கம், முதற்பகுதி, பக்கம் 169-170).

இதைத் தவிர மருத்துவமனையில் இருக்க வேண்டிய பணி யாளர்களின் இலக்கணங்கள், தன்மைகள், பொருள்கள் முதலிய வற்றைப் பற்றிய விளக்கங்கள் இந்த அத்தியாயத்தில் காணலாம்.

அவ்வாறே ஸுசுருதஸம்ஹிதை, ஸூத்ரஸ்தானத்தில் (அத்-5) அறுவைச் சிகிச்சைக்குரிய அறை, கருவிகள், அறுவைச் சிகிச்சை செய்யத்தக்க மருத்துவரின் இலக்கணம் முதலியன கூறப்பட்டுள்ளன. மருத்துவருக்குரிய இலக்கணங்களைக் கூறும்போது கூறப்பட்டுள்ள பொருள்கள் குறிப்பிடத்தக்கவை.

மன்னரால் அரசாங்கத்தின் அனுமதி பெற்றவரும் நகங்களைக் நன்றாக கத்தரித்துக் கொண்டும், தலை முடியை வெட்டிக் கொண்டும், உடல் தூய்மையுடன் இருப்பவரும், வெண்ணிற ஆடை, குடை, கைத்தடி, செருப்பு ஆகியவற்றை அணிந்தவரும் ஆன மருத்துவர் சிகிச்சை செய்யத் துவங்க வேண்டும். மருத்து வர்கள் REGISTERED MEDICAL PRACTITIONER களாக இருக்க வேண் டும் என்ற விதி முறையையும், வெள்ளை நிற ஆடை மருத்து வருக்கு ஏற்றதென்ற விதியையும் அன்றே ஸுசுருதர் குறிப்பிட்டுள்ளது கவனிக்கத்தக்கது. (ஸூ-அத்10)

தந்வந்தரி தமப்ருதாம் வரிஷ்டோவாக்விசாரர்க : |
விச்வாமித்ராத்மஜம்ருஷிம் சிஷ்யம் ஸுச்ருதமந்வசாத் ||
ஸர்வசாஸ்த்ரார்த்த தத்வஞ்ஜோ தபோத்ருஷ்டிருதார தீ:' |
வைச்வாமித்ரம் சசாஸாத சிஷ்யம் காசீபதிர் முநி:' ||

- மகாபாரதம் - அநுசாஸனபர்வ - 139

மருத்துவப் பயிற்சி முறையை ஸுசுருதர் தம் நூலில் ஸூத்ரஸ்தானத்தில் 6ம் அத்தியாயத்தில் குறிப்பிட்டுள்ளார். அறுவைச் சிகிச்சைக்குப் பயிற்சி பெறுபவர் உயிரற்ற உடலைக் கூறிட்டு, நுட்பமான உறுப்புகளைக் கண்டறியும் முறையை மருத்துவத்தில் முதலில் புகுத்தியவர் ஸுசுருதர். விலங்குகளின் மேல் அறுவை சிகிச்சை முறையைப் பயன்படுத்திக் கற்றுக் கொள்ளும் முறைக் கும் வழி வகுத்தவர் ஸுசுருதரே. இன்றும் பெரும்பாலும் பயிற்சி பெறுபவர் இம்முறைகளைக் கையாளு வதைக் காணும்போது ஸுசுருதரின் மருத்துவ முறையின் பெருமையை நாம் உணரலாம்.

ஸுசுருதஸம்ஹிதை - ஸூத்ரஸ்தானத்தில் பத்தொன்பதாம் அத்தியாயத்தில் விரண நோயாளி தங்கியிருக்கத்தக்க மருத்துவ மனையின் அமைப்பு மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளது. நாகரிக உலகில் இன்றும் மருத்துவமனை அமைந்து இருக்கத்தக்க லக்கணங்கள் இவை என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

அறுவைச் சிகிச்சைக்கு உரிய நோயாளிக்குச் சிகிச்சை புரியும் போது வலி தெரியாமல் இருக்கச் செய்யும் முறையை ஸுசுருதர் கூறியுள்ளார்.

நோயாளியை அறுவைச் சிகிச்சைக்கு முன் நன்கு உண்ணச் செய்து தீக்ஷ்ணத்தன்மை கொண்ட மதுவைப் பருகச் செய்ய வேண்டும். இதனால் அறுவைச் சிகிச்சையால் தோன்றும் துன்பத்தை நோயாளி தாங்கிக் கொள்வார். உணவு உண்டதால் நோயாளி நினைவிழக்காமல் இருப்பார். மதுவினால் மயக்கம் கொண்டிருப்பார். அதனால் கருவியைப் பயன்படுத்தும் போது தோன்றும் வலியை உணரமாட்டார் என்பது ஸுசுருதரின் உரையாகும். (ஸூ - அத் 17 - ஸ்லோ 16)

கிரேக்க, ரோம நாடுகளில் அறுவைச் சிகிச்சைக்கு உரிய நோயாளிக்கு 'மண்ட்ராகோரா' (MANDRAGORA) என்பதை உட் கொள்ளச் செய்து மயக்கங் கொள்ளச் செய்யும் முறை வழக்கத்திலிருந்ததாகத் தெரிகிறது. முதல் நூற்றாண்டில் இருந்த ப்ளினீ எனும் விஞ்ஞானி "நேச்சுரல் ஹிஸ்டரி" எனும் நூலில் ஒரு வகை மூலிகையை முகரச் செய்வதால் நோயாளி நினைவிழக்கச் செய்யும் முறை வழக்கத்தில் உள்ளது எனக் கூறி யுள்ளார். சீன நாட்டு மருத்துவர் ஆஜ் என்பவரும் நோயாளியை முகரச் செய்து மயங்க வைக்கும் மருந்தைப் பற்றிக் குறிப் பிட்டுள்ளார். பதிமூன்றாம் நூற்றாண்டைச் சேர்ந்த தியோ

டோரிக் என்பவர் "ஸ்பாஞ்சியோ ஸோம்பிடா" (SPONGIO SOMMPHITA) என்னும் மூலிகையைக் கண்டு கொண்டார். இதை முகர்ந்தவர் மயக்கம் கொண்டு அறுவைச் சிகிச்சையில் தோன்றும் துன்பத்தை அறியார். இந்தக்காலத்தில் அபினியினால் நோயாளியை மயக்கம் கொள்ளச் செய்யப் பயன்படுத்தும் முறை தோன்றியது. கி.பி. பத்தாவது நூற்றாண்டில் பல்லாளர் என்ற புலவர் இயற்றிய போஜபிரபந்தத்தில் "ததஸ்தாவ பிராஜாரளை மோஹசூர்ணேன மோஹயித்வா சிர: கபால மாதாய தக்கரோடிகாபுடே ஸ்திதம் சபர குலம் கிருஹ்த்வா" என்று மயக்கம் தரும் மூலிகைகளின் துகளை முகரச் செய்து போஜ மன்னரை மயக்கத்தில் ஆழ்த்தி அவரது மண்டை ஓட்டை எடுத்து அதற்குள்ளிருந்து மீன் குஞ்சை வெளிப்படுத்தி மருத்துவர் அறுவைச் சிகிச்சை செய்ததாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்தச் சூரணம் பற்றிக் கால வெள்ளத்தில் மறைந்து போன ஆயுர்வேத நூல்களில் ஏதேனும் ஒன்றில் குறிப்பு இருந்திருக்கலாம். மன்னருக்கு அறுவை சிகிச்சை செய்து முடிந்த பிறகு ஏதோ ஒரு ஸஞ்சீவினி மூலிகைகளின் உதவியால் நினைவு மீண்டும் திரும்பியதாக அந்நூலில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் அம்மூலிகையின் பெயர் குறிப்பிடப்படவில்லை.

மருத்துவமனையில் பயன்படுத்தத்தக்க நீரைத் தூய்மைப் படுத்தும் முறையையும் நீர் முதலான தேவையான பொருள்களை வைக்கத்தக்க உலோகப் பாத்திரங்களையும் ஸுசுருதர் தம் நூலில் விளக்கியுள்ளார். எடுத்துக்காட்டுக்கு ஒன்று இங்கு குறிப்பிடப் ப . (உத் - அத் 18)

கண் நோய்களுக்கு மருந்துப் பொருள்களைக் கொண்டு மை யிடும் முறை ஒன்று உண்டு. அந்தந்த தோஷத்திற்கு ஏற்ப மை தயார் செய்யும் மருந்துகள் மாறுபடும். அம்மருந்துகளின் சுவைக்கு ஏற்ற பாத்திரங்களில் அந்த மை மருந்துகள் வைக்கப்பட வேண்டும்.

"இனிப்புச் சுவை கொண்ட மை மருந்து தங்கப் பாத்திரத் திலும், புளிப்புச் சுவையுள்ளது வெள்ளிப் பாத்திரத்திலும், உவர்ப்புச் சுவை கொண்டது விலங்குகளின் கொம்பாலான பாத்திரத்திலும், துவர்ப்புச் சுவை கொண்டது தாமிரம் அல்லது இரும்புப் பாத்திரத்திலும், கசப்புச் சுவை கொண்டது படிகக் கல்லாலான பாத்திரத்திலும், கார்ப்புச் சுவை கொண்டது கலப்பு உலோகத்தாலான பாத்திரத்திலும் வைக்கப்பட வேண்டும்" என்கிறார் ஸுசுருதர். (உத் - அத் 18).

## 4. அறுவைச் சிகிச்சைக்கு உரிய கருவிகள்

அறுவைச் சிகிச்சைக்குரிய கருவிகள் தங்கம், வெள்ளி, தாமிரம் முதலிய உலோகங்களால் செய்யப்பட வேண்டும். சிறப்பாக ஒரு வகை இரும்பு அதாவது எ.:.கு இதற்குப் பயன்படுத்தப்பட்டு வந்தது. இரும்பைக் கருவிகளுக்குத் தக்கபடி எ.:.காகச் செய்யும் முறை அன்று பழக்கத்திலிருந்தது. எ.:.கை பற்றி பௌத்ராகார்ஜுனர் சிறப்பாக ஆராய்ச்சி செய்து வெற்றி கண்டவராகக் கூறப்படுகிறது. கண்களுக்கு மருந்திட, மை தீட்ட ஈயம் அல்லது தாமிரத்தாலான குச்சிகளைப் பயன்படுத்த வேண்டும் என்கிறார் ஸுசுருதர். சிறப்பாக 'லிங்கநாசம்' எனும் கண் நோய்க்குத் தாமிரக் குச்சியைப் பயன்படுத்த வேண்டும். (உத் - அத் 18)

அறுவைச் சிகிச்சைக்குப் பயன்படுத்தும் கருவிகள் மிக்க கூர்மையுள்ளவையும், நினைத்தபடி துண்டிக்கவல்லவையும், மழுங்காதவையாகவும் இருக்க வேண்டும். அறுவைச் சிகிச்சையில் வேறு வேறு செயல்களுக்குத் தக்கபடி அவற்றின் கூர்மை அமைந்திருக்க வேண்டும்.

உலோகங்களைக் கூர்மையாகத் தீட்டி முனை மழுங்காமல், கூர்மை கெடாமல் இருக்கச் செய்யும் முறைகளை அக்காலத்தவர் தெரிந்து கொண்டிருந்தனர். பிளக்க முடியாத உலோகக் கவசங் களையும் இலையைத் துண்டிப்பது போல வெட்டும்படி உலோகத் தகடுகள் (கத்தி முதலானவற்றிற்குக் கூர் ஏற்றும் முறை சார்ங்கதார் முதலியவர்களால் குறிப்பிடப்பட்டுள்ளது). அந்தந்த செயலுக்கு ஏற்ற கருவிகளின் கூர்மை எவ்வாறு இருக்க வேண்டும் என்பதையும் நன்கு விளக்கியுள்ளார் ஸுசுருதர். நுட்பமான தலை முடியையும் பிளக்கத்தக்க கூர்மையுள்ளவையாக இருக்க வேண்டிய சஸ்திரங்களையும் குறிப்பிடுகிறார். எடுத்துக்க ாட்டுக்குக் கண் இமையைப் பிளக்கக் கூடியக் கருவியையும் பயன் படுத்தும் முறையை ஸுசுருதர் கூறியுள்ளது கவனிக்கத் தக்கது. (இதைப் பற்றி வேறு ஓரிடத்தில் விளக்கப்படும்). கருவி களின் சிறப்பினையும், அவற்றில் திறமையற்ற தொழிலாளியால் கருவிகள் செய்வதில் ஏற்படக்கூடிய தவறுகளையும் நன்கு விளக்கியுள்ளார் ஸுசுருதர் தம் ஸம்ஹிதையின் ஸூத்திர ஸ்தானத்தில். (அத் 7,8).

---

நாகார்ஜுனம் முனீந்தம் சசாஸ யல்லோஹ சாஸ்த்ரமாதிகஹனம்
தஸ்யார்த்தஸ்ய ஸ்ம்ருதயே வயமேத த்விசதாக்ஷரைர்ப்ரூம:

சக்ர - ரஸாயன்

அது மட்டுமல்ல, கருவியைக் கையாள்வதிலும், தேவையற்ற போது அவற்றைச் சீராக வைக்க வேண்டிய முறையிலும் கவனம் செலுத்த வேண்டும். கருவிகளை வைக்கும் பெட்டி எவ்வாறு இருக்க வேண்டும், அவற்றைத் தேவையான இடத்திற்கு எடுத்துச் செல்லத் தக்கவை எவ்வாறு அமைந்திருக்க வேண்டும், கருவி களைப் பயன்படுத்துவதற்கு முன்பும், பயன்படுத்திய பிறகும் அவற்றைத் தூய்மைப்படுத்த வேண்டிய முறைகள் முதலிய வற்றையும் விளக்கமாகத் தம் நூலில் அவர் குறிப்பிட்டுள்ளது கருத்தில் கொள்ளத்தக்கது. (ஸூ - அத் 8 - ஸ்லோ 10)

## 5. அறுவைக்குரிய இருக்கைகள்

இன்று அலோபதி மருத்துவத்தில் அறுவைச் சிகிச்சைக்குப் பயன்படுத்தப்படும் கருவிகளுடன் ஸுசுருதர் கூறிய கருவிகளை ஒப்பு நோக்கி ஆராய்ந்தால் அன்று மருத்துவம் பெற்றிருந்த சிறப்பினை அறியப் பெரிதும் பயன்படும். ஆகையால் அவ்வழியில் சில விளக்கங்கள் இங்கு கூறப்படுகின்றன. (ஸூ - அத் 7,8)

அறுவை சிகிச்சையில் பயன்படுத்தப்படும் கருவிகள் பொதுவாக இரு வகைப்படும்.

1. யந்திரம் (சல்யத்தை வெளியில் எடுக்கப் பயன்படும் கருவி)
2. சஸ்திரம் (அறுவைச் சிகிச்சையில் நேரிடையாகப் பயன்படும் கருவி)

இவற்றில் ஸ்வஸ்திக இயந்திரங்கள் பயனைச் சார்ந்து இருபத்தி நான்கு வகைப்படும்:

1. நிர்காதனம் - சல்யத்தைக் கல் முதலியவற்றால் அடித்தல் (HAMMERING)
2. பூரணம் - மருந்துப் பொருளை நிரப்புதல் (FILLING)
3. பந்தனம் - கட்டுதல் (BANDAGING)
4. வியூஹனம் - விரணத்தின் உதடுகளைச் சேர்த்தல் (BRINGING TOGETHER THE EDGES OF THE WOUND)
5. சாலனம் - ஒரு பக்கத்திலிருந்து மற்றொரு பக்கத்திற்கு சேர்த்தல் அல்லது பதிந்திருக்கும் சல்யத்தைக் கிளப்புதல் (TRANSFERRING OR MOVING A FOREIGN BODY)
6. வர்த்தனம் - தன் நிலையில் திரும்ப வைத்தல் (REPLACEMENT)

7. விவர்த்தனம் - சல்யத்தை வெளிப்படுத்துவதற்கு சுழற்றுதல் (TURNING ROUND)

8. பீடனம் - விரணம் முதலியவற்றில் உள்ள கெட்ட பொருளை அழுத்தி வெளியேற்றுதல் (PRESSING)

9. விவரணம் - விரிவுபடுத்துதல் (DILATION)

10. மார்கவிசோதனம் - சிறுநீர்வழி, மலவழிகளை தூய்மைப் படுத்துதல் (CLEARING THE URETHRA AND RECTAL CANNAL)

11. விகர்ஷணம் - பிடித்து இழுத்தல் (EXTRACTION)

12. ஆஹரணம் - வெளியே எடுத்தல் (PULLING OUT)

13. ஆஞ்சனம் - சுருங்கிய பகுதியை இழுத்தல் (PULLING UP)

14. பஞ்சனம் - முறித்தல் (CRUSHING)

15. ஆசூஷணம் - கெட்ட இரத்தத்தைக் கொம்பு முதலியவற்றின் உதவியால் உறிஞ்சி வெளியேற்றுதல். (SUCTION)

16. உன்னமனம் - சல்யத்தை உயர்த்திப் பிடித்தல் (ELEVATION)

17. விநமநம் - உயர்ந்திருக்கும் சல்யத்தை கீழ்நோக்கி அழுத்து தல் (DEPRESSION)

18. உன்மதனம் - சலாகையால் குடைதல் (PROBING OR STIRRING)

19. ரிஜுகரணம் - நேராகச் செய்தல் (STRAIGHTENING)

20. தாரணம் - பிளத்தல் (SPLITTING)

21. ஏஷணம் - கருவியைக் கொண்டு ஆழம் காணுதல் (EXPLORATION)

22. பிரமார்ஜனம் - துடைத்தல் (RUBBING OUT A FOREIGN BODY IN THE EYE)

23. பிரக்ஷாளனம் - கழுவுதல் (WASHING OF WOUND)

24. பிரதமனம் - குழாய் போன்ற கருவியைக் கொண்டு மருந்துத் துகளை ஊதி உட்செலுத்துதல் (BLOWING OR INSUFFLATION).

இத்தகைய செயல்களுக்குப் பயன்படுத்தப்படும் கருவிகள் யந்திரங்களாகும். இத்தகைய யந்திரங்கள் நூற்றொன்று எனக் கூறுகிறார் ஸுசுருதர். கைதேர்ந்த மருத்துவர் தேவைப்பட்டால் தம் அறிவாற்றலைக் கொண்டு மேலும் புது யந்திரத்தைக் கண்டு பயன்படுத்தலாம். மற்றும் அது அவருக்கு மருத்துவத்தில் உள்ள பேராற்றலைப் பொருத்த விஷயமாகும் எனத் தம் நூலில் ஸுசுருதர் குறிப்பிட்டுள்ளார்.

இந்த நூற்றொன்று கருவிகளையும் ஆறு வகைகளாக இணைத்துக் கூறுகிறார் ஸுசுருதர். அவை ஸ்வஸ்திக (24), ஸம்தம்ச (2), தாள (2), நாடி (20), சலாகா (28), மற்றவை உபயந்திரங்கள்.

## 6. ஸ்வஸ்திக யந்திரங்கள்
## (CRUCIFORM INSTRUMENTS OR FORCEPS)

பொதுவாக இந்த ஸ்வஸ்திக யந்திரங்கள் பதினெட்டங்குல நீளமும், இடையில் ஆணியால் இணைக்கப்பட்ட இரு பகுதிகளும் கொண்டவையாகும். இவற்றின் முனை வளைந்தும், அடிப்பகுதி அங்குசம் போல மடங்கியும் இருக்கும். ஸ்வஸ்திகத்தின் தோற்றத்தில் காணப்படுவதால் இந்தக் கருவிகளுக்கு இப்பெயர் ஆயிற்று. இவற்றில் ஸிம்ஹ - (சிங்கம்), வியர்க்ர (புலி), விருக (ஓநாய்), தரக்ஷு, ரிக்ஷ (கரடி), த்வீபி (யானை), மார்ஜார (பூனை), மிருக (மான்), சிருகால (நரி) என்பன ஒன்பதும் குறிப்பிட்ட விலங்குகளின் வாய் போன்ற தோற்றத்தில் முனைப்பகுதி கொண்டிருப்பதால் இவற்றிற்கு அப்பெயர்கள் இடப்பட்டன. இவை கண்களுக்குப் புலனாகும்படி உடலில் மேலோடு பதிந்திருக்கும் சல்யங்களை அகற்றப் பயன்படும். காகமுகம் (காகத்தின் அலகு) முதலாக நந்தீமுகம் (நந்தி எனும் பறவையின் அலகு) வரை உள்ளவை கூர்மையாகச் சற்று நீண்டு பறவைகளின் அலகுகளைப் போல இருப்பதால் ஆழமாக என்பில்கூடப் பதிந்துள்ள சல்யங்களை வெளியேற்றப் பயன்படும்.

இன்று அலோபதி மருத்துவத்திலும் இத்தகைய கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன. அவற்றின் பெயர்கள் கண்டு பிடித்தவர்களை ஒட்டியும், பயன் தரும் செயலை ஒட்டியும் இடப்பட்டவை. காலத்திற்கு ஏற்ப சற்று தோற்றத்தில் மாறு பட்டவையும் ஆகும். அவற்றில் சில இங்கு குறிப்பிடப் படுகின்றன. பர்க்யூஸன் போர்ஸெப், பெட்போட்ஸ் போர்ஸெப் முதலியன கருவிகளைக் கண்டு பிடித்தவரின் பெயரிலும், ‘டென்டல் போர்ஸெப்’ என்பது பற்களிலும், ஆரல் போர்ஸெப் காதுகளிலும் பயன்படுத்தப்படும் கருவிகளாகையால் அவ்வுறுப்பு

களின் பெயரைக் கொண்டும் பயன்படுத்தப்படுகின்றன. ஸிம்ஹ முகம் (லயன் போர்ஸெப்), பாஸமுகம் (ஈகிள் போர்ஸெப்) எனப் பறவைகள், விலங்குகள் ஆகியவற்றின் பெயர்களிலேயே வழங்கப்படுகின்றன.

## 7. ஸந்தம்சயந்திரங்கள்
## (PINCHERLIKE INSTRUMENTS OR FORCEPS)

அடிப்பகுதியில் ஆணியால் இணைக்கப்பட்டு முனை திறந்துள்ள கருவிகள் ஸந்தம்சயந்திரங்களாகும். இவை நுட்பமான தோல், மாமிசம், ஸிரை, நரம்பு முதலியவற்றில் பொத்துக் கொண்டுள்ள சல்யங்களை வெளியேற்றப் பயன்படுத்தப்படும். இவற்றின் நீளம் பதினாறு அங்குலங்களாகும். இப்பிரிவுகள் ஆணியால் இணைக்கப்பட்டுள்ள ஸந்தம்சயந்திரம் ஸநிக்ரஹம் என்றும், மடக்கப்பட்டு இணைப்பின்றி முனை திறந்துள்ள ஸந்தம்சயந்திரம் அநிக்ரஹம் என்றும் கூறப்படும்.

தற்கால மருத்துவத்தில் எபிலேஷன் போர்ஸெப் (EPILATION FORCEP) என்பது ஸம்தம்ச யந்திரமாகும்.

## 8. தாளயந்திரங்கள்
## (SPOON SHAPED INSTRUMENTS)

ஏகதாளம், த்விதாளம் என தாளயந்திரம் இருவகைப்படும். இவை பன்னிரண்டு அங்குல நீளம் கொண்டவையாகும். காது, மூக்கு போன்ற துளைகளின் வழியாக உட்புகுந்த சல்யங்களை வெளியேற்றப் பயன்படும். தற்காலத்தில் மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் ஸ்கூப் (SCOOP) இணையந்திரமாகும். இது SINGLE SCOOP, DOUBLE SCOOP எனப்படும். காதில் பயன்படுத்தப்படுவது EAR SCOOP எனப்படும்.

## 9. நாடீயந்திரங்கள்
## (TUBULAR INSTRUMENTS)

)வை பல வகைப்படும். ஒரு வாய் உள்ள குழாய், இரு பக்கங்களிலும் வாய் உள்ள (திறந்துள்ள) குழாய் போன்றவை யாகும். இவற்றில் சில ஸ்ரோதஸ்களில் உள்ள சல்யங்களை வெளியேற்றவும், சில நோய்களைச் சோதனை செய்யவும், சில உறிஞ்சி கெட்ட பொருள்களை உடலிலிருந்து வெளியேற்றவும், சில அறுவைச் சிகிச்சையை எளிதாகச் செய்வதிலும் பயன் படுத்தப்படும்.

ஸ்ரோதஸ் முதலியவற்றில் பதிந்துள்ள சல்யத்தை ஆராய் வதற்குப் பயன்படுத்தப்படும் நாடீ யந்திரங்கள் (SPECULUMS, SCOPES) எனப்படுகின்றன. தற்கால மருத்துவத்தில் பயன் படுத்தப்படும் நாடீ யந்திரங்களாவன:-

1. நாஸாவீக்ஷண யந்திரம் (NASAL SPECULUM)
2. நேத்ரதர்சனயந்திரம் (OPTHALMOSCOPE)
3. கர்ணவீக்ஷணயந்திரம் (AURAL SPECULUM)
4. களாந்தர்தர்சகயந்திரம் (PHARYNGOSCOPE)
5. வஸ்திதர்சனயந்திரம் (CYSTOSCOPE)
6. ஸ்வராந்தல்தர்சகயந்திரம் (LARYNGOSCOPE)
7. அண்ணஹாந்தர்தர்சகயந்திரம் (OESAPHAGOSCOPE)
8. ச்வஸநிகாந்தர்தர்சகயந்திரம் (BRONCHOSCOPE)
9. ஆமாசயதர்சகயந்திரம் (GASTROSCOPE)
10. புப்புசாவிருத்திததர்சகயந்திரம் (PLEUROSCOPE)
11. குதாவீக்ஷணயந்திரம் (RECTAL SPECULUM)
12. குதாந்தர்தர்சகயந்திரம் (SIGMOIDOSCOPE)

நாடீயந்திரங்களை பகந்தரம், மூலம், மூத்ரவிருத்தி, தூரபகர்மா, நிருத்தபிரகாசம், ஸந்நிருத்தகுதம், அர்புதம், விரணவஸ்தி, உத்தரவஸ்தி முதலிய நோய்களை ஆராயவும், சிகிச்சை புரியவும் பயன்படுத்தலாம்,

## 10. கண்டசல்யாவலோகினி (THROAT SPECULUM)

இந்த யந்திரம் பத்து அங்குல நீளமும், ஐந்து அங்குலச் சுற்றளவும் கொண்டதாகும். தொண்டையில் சிக்கிக் கொண் டுள்ள சல்யங்களை வெளியேற்றப் பயன்படுவதாகும். தொண்டையில் சிக்கிக் கொண்டுள்ள பொருளை வெளியேற்ற ஸுசுருதர் மூன்று முறைகளைக் கூறியுள்ளார்.

தொண்டையில் சிக்கியது மெழுகு போல உருகக் கூடிய பொருளானால் தாமிரத்தாலான ஒரு குழாய்க்குள் நீண்ட, நன்கு காய்ச்சிய இரும்புக் கம்பியைப் (PROBE OR SOUND) புகுத்தி அக்குழாயை தொண்டைக்குள் செலுத்த வேண்டும். சூட்டினால் கரைந்த சல்யம் கம்பியில் ஒட்டிக் கொள்ளும். குழாய் வழியாகக் குளிர்ந்த நீரைச் செலுத்தினால், இளகிய அப்பொருள் திடப்

பட்டு சலாகையின் பிடியில் சிக்கி எளிதாக வெளியேற்றப்படும்.

தொண்டைக்குள் புகுந்தது கெட்டிப் பொருளானால் சலாகை முனையில் மெழுகை வைத்துத் தொண்டையில் செலுத்திக் கெட்டிப் பொருள் முனையில் ஒட்டிக் கொள்ளச் செய்து வெளியேற்ற வேண்டும்.

மற்ற வகைப் பொருளை (ஊசி முதலியவை தொண்டையில் குத்திக் கொண்ட போது அவற்றை) வெளியேற்ற கேசோண்டுகம் என்பதைப் பயன்படுத்த வேண்டும். (இதன் விளக்கம் வேறு பகுதியில் காணலாம்.)

## 11. பகந்தரயந்திரம்

இது இன்று பயன்படுத்தப்படும் RECTAL SPECULUM போன்றதாகும். நோயைக் கண்டறிவதற்கும், சிகிச்சை புரிவதற்கும் ஏற்றபடி அமைந்திருக்கும். இன்று நோயைக் கண்டறிய RECTOSCOOPE என்பதும், ஸ்தூல ஆந்தத்ர (பெருங்குடல்) வளையங்களைக் கண்டறிய SIGMOIDO SCOPE என்பதும் பயன் படுத்தப்படுகின்றன.

## 12. யோனித்ரணேக்ஷண யந்திரம் (VAGINAL SPECULUM)

இது பெண்குறியின் உட்பகுதியை ஆராயப்பயன்படும் யந்திரமாகும். இதன் நீளம் பதினாறு அங்குலம், சுற்றளவு ஆறு அங்குலம். இது நான்கு பலகைகளாலானது. அடிப்பகுதி குறுகியும், முனைப்பகுதி அகன்றும் இருக்கும். ஒவ்வொரு பலகையிலும் ஒரு சலாகை (LIVER ROD) இணைக்கப்பட்டிருக்கும். கருவியைக் குறிக்குள் செலுத்தி இந்தச் சலாகையின் மூலம் கருவியின் முனையைத் தாமரை மலர்போல விரிவடையச் செய்து குறிக்குள் கருவறை முதலிய பகுதிகளை ஆராயலாம். இன்று பல வகையான யோனிவீக்ஷண யந்திரங்கள் பழக்கத்தில் உள்ளன. (1) பர்கூஸன் ஸ்பெகுலம் (FARGUSSION SPECULUM) (2) த்விமுக (BI VALVE) வார்னேயினுடைய நியூஜேபாவர் அல்லது கஸ்கோவினுடையது (3) திரிமுகம் (TRIVALVE) (4) சதுர்முகம் (QUADRI VALVE). (எலியம் ஸ்பெகுலம்.)

வாக்படர் கூறியுள்ள யோனி த்ரணேக்ஷணயந்திரம் இன்று பழக்கத்திலுள்ள நான்கு முகங்களுள்ள 'வெஜினைல் ஸ்பெகுலம்' போன்றதேயாகும். தூமயந்திரம் (INHALER OR FUMIGATOR), தகோதரயந்திரம் (CANULA), விருத்தியந்திரம் (TUBULAR

INSTRUMENTS FOR HYDROCELE), நிருத்தபிரகாசயந்திரம் (TUBULAR INSTRU-MENTS FOR URETHRAL STRICTURE OR PHIMOSIS), புஷ்பநேத்ரம் (TUBULAR INSTRUMENTS FOR URETHRA), உத்தரவஸ்தி (TUBULER INSTRUMENT FOR VAGINA), தூமநாடி (TUBULAR INSTRUMENTS FOR INHALATION) போன்ற பல கருவிகள் அன்று பழக்கத்தில் இருந்தன.

## 13. சலாகாயந்திரங்கள்

(RODS, PINCHERLIKE INSTRUMENTS, PROBES)

சலாகாயந்திரங்கள் பல வகைகளாகும். இவை பல வகைச் செயல்களுக்குப் பயன்படுவனவாகும் (ஸூ - அத் 7). எடுத்துக் காட்டுக்குச் சில :

(1) விரணத்தில் புரை ஓடிய ஆழத்தை அறியப் பயன்படுபவை கண்டூபத முகி (BLUNT PROBE),

(2) விரணங்களின் விளிம்புகளைச் சேர்த்துப் பிடித்துக் கொள்ளப் பயன்படுபவை ஸர்ப்பணம் (RECTRATERS),

(3) சல்யத்தை அசைக்கப் பயன்படுபவை சரபுங்கம்,

(4) சல்யத்தைப் பிடித்து வெளிப்படுத்தப் பயன்படுபவை படிசமுகம் (HOOK),

(5) நெருப்பால் சுடும் சிகிச்சைக்குப் பயன்படும் ஜாம்பவவதனம் (CAUTERY),

(6) மூக்கில் தோன்றும் 'நியாஸார்சஸ்' எனும் நோயில் பயன்படுத்தப்படும் மாத்ராமுககம (NASAL CURETTE),

(7) கண்களில் மையிடப் பயன்படும் அஞ்சனார்த்தசலாகா (COLLYRIUM PROBE),

(8) சிறுநீர் வழியில் பயன்படுத்தப்படும் மூத்ரமார்கவிசோதனி (URETHRAL SOUNDS) போன்றவை சலாகாயந்திரங்களில் சிறப்பானவை. இத்தகைய கருவிகள் இன்றும் அந்தந்த நோய்களுக்கு அலோபதி மருத்துவத்தில் பயன்படுத்தப் படுகின்றன.

## 14. பந்தனம் (கட்டுப் போடுதல் - BANDAGE)

அறுவைச் சிகிச்சையில் கட்டுப் போடுதல் சிறப்பான தனிப் பட்ட செயலாகும். உடலுறுப்புக்குள், நோய்க்கும், அறுவைச் சிகிச்சை முறைக்குள் ஏற்றவாறு கட்டுப் போடுதல் பல வகைப்படும். அன்று ஸுசுருதர் கூறிய முறைப்படியே ஏறக்குறைய

'ன்றும் அலோபதி மருத்துவத்தில் கட்டுப் போடப்படுகிறது என்பது கருத்தில் கொள்ளத்தக்கதாகும்.

1. கோசபந்தம் (SHEATH BANDAGE),
2. ஸ்வஸ்திக பந்தனம் (CROSS BANDAGE OR SPICA),
3. அநுவேல்லிதம் (SPIRAL BANDAGE OR ENCIRCLING BANDAGE),
4. ஸ்தகிகா (STUMP BANDAGE),
5. கட்வாபந்தம் (ENT BANDAGE),
6. சீனபந்தம் (BANDAGE OF THE EYE),
7. விதானபந்தம் (CAPHELINE BANDAGE),
8. கோபணபந்தும் (SLING BANDAGE OR T.SHAPED BANDAGE),
9. உத்ஸங்கபந்தம் (ARM SLING BANDAGE) போன்ற பதினான்கு வகை பந்தனங்களை ஸுசுருதர் விளக்கியுள்ளார். (ஸூ - அத் 18 - சுலோ 17)

## 15. சஸ்திரங்கள் (SHARP INSTRUMENTS)

கூரிய கருவிகளைப் பயன்படுத்திப் பிளப்பது, அறுப்பது போன்ற அறுவைச் சிகிச்சைகள் அந்தந்த நோய்க்குத் தக்கவாறு செய்யப்படும். இச்செயல்கள் எட்டு வகைப்படும். அவையாவன : -

(1) சேதனம் - உறுப்புகளிலிருந்து வெட்டி வேறுபடுத்த வேண்டிய மூலநோய் முளை போன்றவற்றை நீக்குவது (EXCISION)

(2) பேதனம் - சீழ்க்கட்டி முதலியவற்றைப் பிளந்து ஆற்றுவது (INCISION)

(3) லேகனம் - மாமிசகந்தம் போன்ற நோய்களில் கீறி எடுப்பது (SCRAPING OR SCARIFICATION)

(4) வேதனம் - ஸிரைகளிலிருந்து கெட்ட இரத்தத்தைக் குத்தி நீக்குவது (PUNCTURING)

(5) ஏஷணம் - கருவியைக் கொண்டு நாடீ விரணம் முதலியவற்றில் புரை ஓடிய ஆழத்தைக் காண்பது (PROBING OR EXPLORATION)

(6) ஆஹரணம் - பற்றியிழுத்து நீக்குவது (EXTRACTION)

(7) விஸ்ராவணம் - விரணத்தில் சீழ் முதலியவற்றைப் பெருகச் செய்து நீக்குவது (DRAINING)

(8) ஸ்வணம் - தைப்பது (SUTURING OR STITCHING) வாக்படர் இவற்றைத் தவிர வேறு நான்கு வகைகளையும் சேர்த்துக் கூறியுள்ளார். (ஸூ - அத் 5)

அவையாவன:-

1. உத்பாடனம் - மேல் நோக்கிக் கிளப்புவது (EXTRACTION)
2. குட்டனம் - ஊசி முதலியவற்றால் தோலில் குத்தித் துளை செய்வது (PRICKING OR TATOOING)
3. மந்தனம் - கடைவது போல குடைந்து கொண்டே நீக்குவது (DRILLING)
4. பிடித்துக் கொள்வது (CATCHING)

ஸூத்திரஸ்தானம் - இருபத்தைந்தாம் அத்தியாயத்தில் எந்தெந்த அறுவைச் சிகிச்சை முறைகள் கையாளப்படும் என்பதை குறிப்பிட்டுள்ளார் ஸுசுருதர். மற்றும் அந்தந்த நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்கும்போதும் கூறியுள்ளார். அவற்றை மீண்டும் இங்கு குறிப்பிடுவது தேவையற்றதென்பதால் அவை இங்கு குறிப்பிடப்படவில்லை.

இச்செயல்களுக்குப் பயன்படும் கருவிகள் இருபது வகைப்படும் என ஸுசுருதர் கூறியுள்ளார். வாக்படர் இவற்றைத் தவிர மேலும் ஆறு வகை சஸ்திரங்களைக் (ஸூ - அத் 8) கூறியுள்ளார்.

ஸுசுருதர் கூறிய கருவிகளுடன் இன்று அலோபதி மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் கருவிகைளயும் ஒப்பு நோக்கி ஆராயத்தக்க விளக்கங்களை இங்கு கூறுவது தகும்.

**1. மண்டலாக்ரம்**

வட்டமான முனை கொண்டவையாகையால் மண்டலாக்ரம் எனப் பெயராயிற்று. இவை ஆறு அங்குல நீளமுள்ளவையாகும். இந்தக் கருவி சேதனம், இலேகனம் எனும் செயல்களுக்குப் பயன் படும். கலசுண்டிகா (TONSIL), மூடகர்ப்பம் முதலிய நோய்களின் சிகிச்சையில் பயன்படுத்தப்படும். கருப்பை முகத்தைப் பிளப்பதற்கு இக்கருவியைப் பயன்படுத்த வேண்டும் என்கிறார் ஸுசுருதர் (ஸூ - அத் 8). அர்மம், போதகீ, சிராஜாலம் போன்ற கண் நோய்களுக்கு உரிய அறுவை சிகிச்சைக்கும் இக்கருவிகள் பயன்படுத்தப்படும். இன்று இச்செயல்களுக்கு CIRCULAR

KNIFE, RAZOR LIKE ROUND HEADED KNIFE, DECAPITATION HOOK, SHARP CURETTE முதலியவை நவீன மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகின்றன.

## 2. கரபத்ரம்

கையைப் போல அமைப்பைக் கொண்டதால் கரபத்ரம் என்கிற பெயரைப் பெற்றது. இது ஆறங்குல நீளமுள்ளதாகும் என ஸுசுருதரும் (ஸூ - அத் 8), பத்தங்குல நீளமுள்ளதாகும் என வாக்படரும், பன்னிரண்டங்குல நீளமுள்ளதாகும் என போஜரும் கூறுகின்றனர். என்புகளை வெட்டுவதற்கும், கீறு வதற்கும் பயன்படும் கருவியாகும். அலோபதி மருத்துவத்தில் BONE SAW எனப்படும்.

கி.மு. 5ஆம் நூற்றாண்டில் இருந்த ஜீவகன் எனும் மருத்துவர் போஜ மன்னருக்குத் தோன்றிய தலை வலியைப் போக்க ஸம்மோஹனி எனும் துகளை முகரச் செய்து மயங்க வைத்து அஸ்திவேதகம் எனும் கருவியால் மன்னரின் கபாலத்தை வேறு படுத்தி மூளைப்பகுதியிலிருந்து சபரி எனும் வகையைச் சார்ந்த மீன் குஞ்சை அப்புறப்படுத்திச் சிகிச்சை செய்ததாக பல்லாளர் எனும் புலவர் தம் போஜ பிரபந்தத்தில் கூறியுள்ளார். இந்தக் கருவி இன்று பழக்கத்தில் உள்ள TREPHNE எனும் ஆங்கிலக் கருவியைப் போன்றதாகும்.

## 3. விருத்திபத்ரம்

விருத்தி எனும் மூலிகைச் செடியின் இலையைப் போன்ற தோற்றமுள்ளதால் விருத்திபத்ரம் எனப் பெயராயிற்று. இது இரு வகைப்படும். நேராக முனை கொண்டது பிரியதாக்ரம் என்றும், வளைந்த முனை கொண்டது அஞ்சிதாக்ரம் என்றும் பெயர் பெறும். மேலும் இது தீர்க்கபத்ரம், ஹ்ரஸ்வபத்ரம் என இரு வகைப்படும். தீர்க்க பத்ரம் என்பது ஆழமாக உள்ள சீழ்க் கட்டியைப் பிளப்பதிலும், ஹ்ரஸ்வபத்ரம் என்பது உறுப்பின் மேல் பகுதியில் உள்ள வீக்கத்தையும், வித்ரதியையும் பிளப் பதிலும் பயன்படுத்தப்படும். ஸுசுருதர் இக்கருவி உரோமங்கள் அடர்ந்துள்ள விரணப்பகுதியில் உள்ள உரோமங்களை நீக்க பிரயதாக்ரம் என்பது பயன்படும் என்றும் (ஸூ - அத். 8) கொழுப்பினால் தோன்றும் விரை வீக்கத்தை (ELEPHATIASIS OF THE SCROTUM) பிளந்து கொழுப்பை அகற்றவும், சிலந்தியின் கடியால் தோன்றும் விரணத்தில் மேல் தோலைக் கீறவும் பயன்படும் எனக் கூறுகிறார். இன்று அலோபதி மருத்துவத்தில் இச்சிகிச்சையில் பயன்படுத்தப்படும் கருவிகள் பின்வருமாறு :-

விருத்திபத்ரம் (RAZOR), பிரயதாக்ரம் (SCALPEL DISSECTING), அஞ்சிதாக்ரம் (CURVED BISTOURY), ஹ்ரஸ்வக்கரம் (SHORT MOUTHED), தீர்கவந்தரம் (LONG MOUTHED) ஆகியவை. முன் காலத்தில் விலங்குகளுக்கான மருத்துவத்தில் (பசு வைத்யத்திலும்) இந்த சஸ்திரங்கள் பெரிதும் பயன்படுத்தப் பட்டு வந்தன என ஜயதத்தஸூரி என்பவர் இயற்றிய அச்வவைத்யக (குதிரை வைத்தியத்தைச் சார்ந்த) நூலால் தெரிய வருகிறது. பாலகாப்யர் (பசு மருத்துவ நூல் இயற்றியவர்) என்பவரும் இதைக் குறிப்பிட்டுள்ளார்.

தோலைக் கீறி மருந்தைச் செலுத்தும் முறையால் அவபாஹுகம், விச்வாச், கிருத்ரஸி எனும் நோய்களில் துன்பம் தணிக்கும் முறையை சார்ங்கதரர் கூறுகிறார். இம்முறைக்கு விருத்திபத்ரம் பயன்படுத்தப்பட்டது. தற்கால மருத்துவத்தில் (HYPODERMIC MEDICATION) எனும் இம்முறைக்கு சிரெஞ்சு பயன்படுத்தப்படுகிறது.

ஸந்நிபாதத்தில் நினைவிழந்து கிடக்கும் நோயாளியின் தலையில் விருத்திபத்ரம் அல்லது க்ஷுரம் எனும் கருவியால் கீறி ரஸ மருந்தை அப்பகுதியில் அழுத்தித் தேய்த்தால் மருந்து இரத்தத்தில் கலந்து நினைவு தோற்றுவிக்கும். நாகம் தீண்டிய நோயாளி நினைவிழந்த போதும் இம்முறை பயன்படுத்தப்படும். இம்முறை ஸுசுருதரின் கல்பஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளது. (கல்பம் - அத் 5)

**4. அங்குளிசஸ்த்ரம்**

ஆள்காட்டி விரலில் மோதிரம் போல அணியத்தக்க வளையமும், அதை ஒட்டி அதன் கீழ்ப்பகுதியில் விருத்திபத்திரம் போன்ற கருவியும் கொண்டதாக அங்குளி சஸ்திரம் அமைக்கப் பட்டிருக்கும். பயன்படுத்தும் போது இது ஒரு நூலுடன் மருத்துவரின் மணிக்கட்டுடன் இணைக்கப்பட்டிருக்கும். தொண்டை நாளத்தில் தோன்றும் நோயில் அறுவைச் சிகிச்சை செய்ய இது பயன்படும். மூடகர்ப்ப சிகிச்சையிலும் இது பயன்படுத்தப்படும். செயின்ட் ஆண்ட்ரூஸ் எனும் பகுதியில் விளங்கிய ஸிம்ப்ஸன் எனும் மருத்துவர் விரலில் அணியத்தக்க RING SCALPEL எனும் கருவியைக் கண்டுபிடித்தார். கருவில் மரித்த குழந்தையின் கபாலத்தைப் பிளந்து வெளியேற்றும் முறையில் இது பயன்படுத்தப்பட்டது. கிரேக்க மருத்துவர்கள் இச்செயலுக்கு RING KNIFE எனும் கருவியைப் பயன்படுத்தினர். இவை அனைத்தும் ஸுசுருதர் கூறிய அங்குளி சஸ்திரங்களேயாகும்.

### 5. உத்பலபத்ரம்

நீலாம்பல் இதழ் போன்ற தோற்றமுள்ளதால் இது இப்பெயர் கொண்டதாயிற்று, சேதனம், பேதனம் எனும் செயல்களில் பயன்படுத்தப்படுவதாகும். சிரையைக் கீறுவதில் குதிரை மருத்துவத்திலும் பயன்படுத்தப்படும் என்பது 'அச்வவைத்யகம்' எனும் நூலால் தெரியவருகிறது. யானை மருத்துவத்திலும் பயன்படுத்தப்பட்டு வந்ததாக பாலகாப்பியரின் நூலால் தெரிய வருகிறது. இது தற்காலத்தில் ஆங்கில மருத்துவத்தில் பயன் படுத்தப்படும் வகையைச் சேர்ந்ததாகும்.

### 6. ஸூசீ (ஊசி)

அறுவைச் சிகிச்சையில் தையல் போடுவதற்குப் பயன்படும் ஊசிகள் மூன்று வகைப்படும். இரண்டு அங்குல நீளம் கொண்ட முதலாவது ஊசி குறைந்த அளவு மாமிசமுள்ள பகுதியைத் தைக்கப் பயன்படும். மூன்று அங்குல நீளமும், மூன்று பட்டை களையும் கொண்டது மாமிசம் அதிக அளவில் உள்ள பகுதியைத் தைக்கப் பயன்படுவது இரண்டாவது வகையாகும். இரண்டரை அங்குல நீளமும், வில்லைப் போல வளைந்திருப் பதும், உயிர் நிலைகளிலும் பலகோசம் முதலிய பகுதிகளிலும் தைக்கப் பயன்படுவது மூன்றாவது வகையாகும். இவை மூன்றும் முனை மிகக் கூர்மையாகவும், பின்பக்க முனை தட்டையாக ஒரு நூல் புகுமளவிற்குத் துளை உள்ளதாகவும் இருக்கும். வில்லைப் போன்ற ஊசியின் முனை, நெல்லைப் போன்ற தோற்றத்தில் இருக்கும். இவை சாதிமலரின் காம்பு போன்ற பருமன் உள்ளன வாகும். இன்றும் அலோபதி மருத்துவர்கள் இத்தகைய 1. STRAIGHT, 2. HALF CURVED, 3. FULLY CURVED NEEDLES ஆகிய மூன்று விதமானவற்றைப் பயன்படுத்துகின்றனர்.

இவற்றைத் தவிர ஸுசுருதர் யவமுகி எனும் ஊசியைக் கூறியுள்ளார். இது (ஸூ - அத் 8) அர்புதமெனும் கட்டியின் வேர்ப் பகுதியில் நூலைவிட்டு நான்கு பக்கங்களிலும் சுற்றிக் கட்டி அர்புதத்தை நீக்கிவிடும் முறைக்குப் பயன்படுவதாகும்.

பாலகாப்பியர் பசுக்களுக்கான மருத்துவத்தில் எட்டு அங்குல நீளமும், யானை துதிக்கையைப் போன்றதுமான ஊசியைக் கூறு கிறார். மூன்று பட்டைகள் கொண்ட ஊசி, நான்கு பட்டைகள் கொண்ட ஊசி, வட்டவடிவமுள்ள நீண்ட ஊசி என அவை மூன்றாகும்.

### 7. குசபத்ரம்

ஆறங்குல நீளமும், தர்ப்பை இலை போன்ற இடைப் பகுதியும் கொண்டு முனை கூராக உள்ளதால் இப்பெயர் வந்தது. இது வித்ரதி எனும் இரத்தக்கட்டியில் உள்ள சீழை வெளியேற்றப் பயன்படும். கலகண்டம் எனும் நோயிலும், நாக்கின் கீழ்ப்பகுதி ஸிரையையும் கீற இது பயன்படும் என்பர் யோகரத்னாகரா ஆசிரியர். இன்று அலோபதி மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் PAGETS' KNIFE என்பது இவ்வகையைச் சேர்ந்ததே.

### 8. ஆடீமுகம்

கெட்ட இரத்தத்தைப் பெருகச் செய்து வெளியேற்றப் பயன் படும் இக்கருவி 'ஆடீ' எனப்படும் பறவையின் அலகு போன்ற தோற்றம் கொண்டிருக்கும். இன்று நவீன மருத்துவத்தில் பழக்கத் திலுள்ள (LANCET) என்ற வகையாகும்.

### 9. சராரீமுகம்

இது சராரீ எனும் பறவையின் அலகு போன்றது. விரணப் பகுதியிலுள்ள உரோமங்களைக் கத்தரித்து நீக்கப் பயன்படும் கத்தரியாகும். இது A PAIR OF SCISSORS) எனப்படும் ஆங்கிலக் கருவியாகும்.

### 10. அந்தர்முகம்

இது பிறைவடிவத்தில் ஒன்றரை அங்குலம் உள்ள கருவி யாகும். சீழ்க்கட்டியைக் கீறுவதற்குப் பயன்படும் CURVED BISTOURY என இன்று நவீன மருத்துவத்தில் புழக்கத்திலுள்ள கருவியைப் போன்றது.

### 11. திரிகூர்ச்சகம்

இது இன்று உலோகத்தால் செய்யப்பட்டு வழக்கத்திலுள்ள BRUSH போன்றது. சீழ்கட்டியில் சீழைப் போக்கப் பயன்படும் கூர்ச்சகத்தைப் போன்ற 'கஜம்' எனும் கருவியை வாக்படர் கூறுகிறார். கஜம் என்பது எட்டு ஊசிகளைக் கொண்டது. இதன் முனை அரை அங்குல நீளமுள்ளது. இது மூக்கினுள் உள்ள கெட்ட ரத்தத்தைப் போக்கப் பயன்படும்.

### 12. குடாரிகா

சிறு கோடாலியைப் போன்ற கருவியாகும். சிரையைக் கீறுவதில் பயன்படுத்தப்படும். சிறப்பாக எலும்பைச் சார்ந்துள்ள

ஸிரையைத் துண்டிப்பதிலும் பயன்படுத்தப்படும். தற்காலத்தில் இதைப் போல AXE SHAPED KNIFE OR LANCET என்கிற கருவி பயன்படுத்தப்படுகிறது.

### 13. விரீஹிமுகம்

நெல்லின் தோற்றமுள்ள முகம் கொண்ட கருவி என்பதால் இப்பெயர் வந்தது. இந்தக்கருவி பெருவயிறு எனும் நோயில் வயிற்றில் சேர்ந்துள்ள நீரை வெளிப்படுத்தவும், விரை வீக்கத்தில் விரைப்பையில் தங்கியுள்ள கெட்ட நீரை வெளியேற்றவும் பயன்படும். இது இன்று நவீன மருத்துவத்தில் பயன்படுத்தப் படும் TROCA எனும் கருவியைப் போன்றது.

### 14. ஆரா

எட்டு அங்குல நீளமும், எள்ளைப் போலத் தட்டையான முகமும் கொண்டது. வீக்கம் பக்குவம் பெற்றுள்ளதா, இல்லையா என்பதை அறிய இதன் முனையை அப்பகுதியில் செலுத்திச் சீழ் பிடித்ததை அறிந்து கொள்ள வேண்டும். சதைப்பற்று மிக்க காதின் பாளியைக் (காதணி அணியும் பகுதி) குத்துவதிலும் பயன்படும்.

### 15. வேதஸபத்ரம்

வஞ்சி இலையைப் போன்ற தோற்றமுள்ளதால் இப்பெயர் ஆயிற்று. நீண்டு, மெல்லிய கூர்மையான முனை கொண்டிருக்கும். வியதனம் எனும் செயலில் பயன்படுத்தப்படும். இன்று நவீன மருத்துவ பழக்கத்தில் உள்ள SCALPEL போன்ற கருவியாகும்.

### 16. படிசம்

மீன் பிடிக்கப் பயன்படும் தூண்டில் முள் (படிசம்) போன்றதாகையால் இப்பெயராயிற்று. இது மிக்க வளைவுள்ளது, குறைந்த அளவு வளைவு கொண்டது என இரு வகைப்படும். ஆறங்குல நீளம் கொண்டதாகும். சிறுநீர் வழியில் உள்ள சல்யம், அல்லது சிறுநீர்ப்பையில் தோன்றும் கல்லை (அச்மரி) வெளிப்படுத்தப் பயன்படும். கண்ணைச் சார்ந்த அர்ம எனும் நோயிலும், கலசுண்டிகா (உபஜிஹ்வா) எனும் நோயிலும் அறுவைச் சிகிச்சையில் பயன்படுத்தப்படும் கருவியாகும். இன்று பழக்கத்தில் உள்ள DISSECTING FORCEPS எனும் ஆங்கில மருத்துவ கருவியைப் போன்றது.

**17. தந்த சங்கு**

ஆறு அங்குல நீளமும், நான்கு பக்கங்களைக் கொண்ட முகமும், முனையில் கூர்மையும், சங்கு போலச் சற்று வளைந்த தோற்றமும் கொண்ட கருவி தந்த சங்கு. முகப் பகுதி அரை அங்குல நீளமுள்ளதாகும். பற்களில் படிந்துள்ள சர்க்கரை போன்ற பொருள் முதலியவற்றைச் சுரண்டி எடுக்கப் பயன்படும். இது அலோபதி மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் TOOTH SCALER கருவி ஆகும்.

முன் காலத்தில் அசையும் பற்கள், சொத்தைப்பல் முதலியவற்றை நீக்கும் முறையும் பழக்கத்தில் இருந்தது. வில்வம் முதலிய பழங்களில் இருக்கும் விதைகளை நீக்கி பற்களைப் பிடுங்கும் முறையை மாணவர்கள் கற்றுக் கொள்ள வேண்டும் என ஸுசுருதர் ஸூத்ரஸ்தானத்தில் யோக்யா ஸூத்ரீய அத்யாயத்தில் கூறியுள்ளார். செயற்கைப் பல்லைப் பொருத்தும் முறையையும் முன்னோர் அறிந்திருந்தனர். "கி.பி. 1194ல் சஹாபுத்தீன் ஜயசந்திரனைத் தோற்கடித்துப் போரில் இறந்த அம்மன்னரை அவரது செயற்கைப் பற்களால் அடையாளம் கண்டு கொண்டார்" எனச் சரித்திர வரலாறு கூறுகிறது. (ஸூ - அத் 9 - ஸ்லோ 3).

இன்று மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் நவீன கருவிகள் போன்றவற்றை நம் முன்னோர்கள் அறிந்து சீராகப் பயன்படுத்தி வந்தனர் என்பதைக் குறிப்பிடச் சில எடுத்துக்காட்டுகள் இங்கு விளக்கப்பட்டன. இனி ஸுசுருதஸம்ஹிதை முதலிய முதல் நூல் களைக் கொண்டு அக்காலத்தில் அறுவைச் சிகிச்சை நடைபெற்று வந்த முறையைக் காண்போம்.

## விரண சிகிச்சை

அறுவைச் சிகிச்சைக்கு உரிய நோயாளிக்குப் பின்வரும் மூன்று நிலைகளில் பணிவிடை செய்யப்படும்: (1) PREPARATION OF THE PATIENT - நோயாளியை அறுவைச் சிகிச்சைக்கு தக்கவனாக்குதல் (2) MAIN OPERATION - அறுவைச் சிகிச்சை (3) AFTER TREATMENT - அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு முழுமையாக நலம் பெறும் வரை செய்யத்தக்க சிகிச்சை. இம்மூன்று நிலைகளும் முன்காலத்தில் பூர்வகர்மா, பிரதான கர்மா, பச்சாத்கர்மா எனப்பட்டன.

### 1. பூர்வகர்மா

நோய்க்குத் தக்கபடி பூர்வகர்மா செய்யப்படும். பட்டினி

கிடத்தல், பேதியாகச் செய்தல், வஸ்தி முறையைப் பயன் படுத்துதல் முதலான உடலைத் தூய்மைப்படுத்துவதும், அறுவைக் குரிய பகுதியைத் தூய்மைப்படுத்துவதும் பூர்வ கர்மாவாகும். அந்தக் காலத்தில் இன்று போல முழுமையாக நோயாளியை மயக்கத்தில் ஆழ்த்திச் சிகிச்சை செய்யும் முறை இல்லை. மது முதலியவற்றால் ஓரளவு துன்பம் தெரியாத நிலை தோன்றி னாலும் நோயாளி ஓரளவு நினைவாற்றல் கொண்டிருப்பார். ஆகவே அறுவைச் சிகிச்சை முடியும் வரை நோயாளி அசை யாமல் இருக்க வலிமையுள்ள பணியாளர்கள் அவரை இறுக்கமாக பிடித்துக் கொண்டிருப்பர். அறுவைச் சிகிச்சை வெற்றி பெறுவது தெய்வச் செயலாகவே கருதப்பட்டு வந்தது. (இன்றும் எல்லா அறுவைச் சிகிச்சைகளும் வெற்றி பெறுவதில்லை என்பதும், அறுவைக்குப் பின் வேறு விளைவுகள் ஏற்படுவதும் கண்கூடு). அதனால் நல்ல நாள் பார்த்தல், சிகிச்சை வெற்றி பெற தெய்வவழிபாடு செய்தல் போன்றவற்றிற்கும் முக்கிய இடம் தரப்பட்டு வந்தது.

மருத்துவர் சிகிச்சைக்குத் தேவைப்படும் பொருள்கள், கருவி கள், மருந்துகள் முதலியவற்றை நன்கு அறிந்து, சேகரித்து வைத்துக் கொள்ள வேண்டும். (ஸூ-அத் 5-ஸ்லோ 6, 7)

அறுவைச் சிகிச்சையால் சோர்வு ஏற்படாமல் இருக்கவும், அறுவையின்போது இரத்தப் பெருக்கைக் குறைக்கவும் நோயாளிக்கு இலேசான உணவு அளிக்கப்படும். ஆனால், மூலநோய், மூடகர்ப்பம், சிறுநீர்ப்பையில் கல் எனும் அச்மரி, பெருவயிறு போன்ற நோய்களில் நோயாளிக்கு உணவு அளிக்கப்படுவதில்லை. ஏனெனில் அவ்வாறு அளிப்பதால் நோயாளிக்கு அறுவையின்போது வாந்தி ஏற்படும். மதுப் பழக்கமுள்ளவருக்குத் தீக்ஷ்ணத்தன்மை கொண்ட மதுவும், பழக்க மற்றவர்களுக்கு ஓரளவு மதுவும் கொடுக்கப்பட்டன. மது அருந்துவ தால் அறுவையின்போது நோயைப் பொறுத்துக் கொள்ளும் வலிமை உண்டாகும். மது மயக்கம் இதற்குத் துணை செய்யும். (ஸூ - அத் 17 - ஸ்லோ 12,14).

அறுவைச் சிகிச்சைக்கு உரிய நோயாளியை மருத்துவ மனையில் அறுவைக்கு என உரிய இடத்தில் சேர்க்க வேண்டும். (இன்று இரண்டு மூன்று நாட்கள் முன்னதாகவே நோயாளி மருத்துவமனையில் சேர்க்கப்படுகிறார்). ஆகவே குறைந்த அளவு 48 மணி நேரம் முன்னதாகவே அவர் மருத்துவ மனையில் சேர்க் கப்பட வேண்டும். அதற்கு முன்பே அறை நன்கு தூய்மைப் படுத்தப் பட வேண்டும். அவ்வாறே முன்னதாகவே அறுவைக்

குரிய உட்பகுதியைத் தூய்மைப்படுத்த வேண்டும். அப்பகுதியில் உரோமங்கள் நீக்கப்பட வேண்டும்.

நோயாளியைக் கிழக்குமுகமாகப் படுக்க வைத்து நன்கு வெளிச்சம் படும்படிச் செய்து மறுபக்கத்தில் மருத்துவர் இருந்து சிகிச்சை செய்ய வேண்டும்.

## 2. பிரதானகர்மா

நோய்க்கு ஏற்றபடி அறுவைச் சிகிச்சை மாறுபடும். விரணத்தில் உயிர் நிலைகளில் இணைப்பு, சிரை, நரம்பு முதலியவற்றில் கீற வேண்டியிருந்தால் எச்சரிக்கையுடன் அறுவையை கையாள வேண்டும். உரோமங்கள் தோன்றிய வழியிலேயே கீற வேண்டும். எதிர்த் திசையாகக் கீறக்கூடாது.

சீழ் பரவியுள்ள பகுதி வரை கருவியைச் செலுத்தி அதை வெளிப்படுத்த வேண்டும். சில கட்டிகளில் இரண்டு, மூன்று அங்குல நீளம்கூட கீற வேண்டியிருக்கும். மிக ஆழமாக புரை யோடியிருந்தால் அடுத்தடுத்த இரண்டு மூன்று இடங்களில் கீற வேண்டியிருக்கும். அவ்வாறு கீறும்போது ஒரு விரணத்திலிருந்து மற்றொரு விரணத்திற்கு இரண்டு அங்குலம் இடைவெளியிருக்கும் படிக் கீறவேண்டும். கருவியால் விரணம் தோற்றுவிக்கும் போது ஒரே தடவையில் தேவையான அளவுக்குக் கீற வேண்டும். அவ்வாறு செய்வதற்கு மருத்துவர் விரைந்து செயல்படு பவராகவும், கை நடுக்கமில்லாதவராகவும், தைரியமுள்ள வராகவும், மதிமயக்கம் கொள்ளாதவருமாகவும் இருக்க வேண்டும் என்கிறார் ஸுசுருதர். கட்டியைக் கீறும் போது ஏற்படும் விரணம் கீழ் வருமாறு இருக்க வேண்டும். (ஸூ-அத் 5-ஸ்லோ 10)

1. விரணத்தின் நீளமும், பரப்பும் கட்டியின் அளவுக்கு ஏற்பச் சீழ் முழுவதும் வெளியேறும்படி இருக்க வேண்டும்.
2. கருவி கூர்மையாக இல்லாவிடில் விரணக்கட்டி ஒரே முறை யில் அறுபடாமல் இருக்கும். மீண்டும் அறுப்பதற்கு கருவியைப் பயன்படுத்துவதால் தோலும் மாமிசமும் சிதைவுபடும். பிறகு விரணத்தை (விளிம்புகளை) இணைத்து ஆற்றச் செய்வது சிரமமாகும். ஆறிய பிறகு ஏற்படும் அடையாளமும் பெரிதாகிவிடும். ஆகவே தகுந்த அளவு ஒரே தடவையில் கீற வேண்டும்.
3. விரலை அழுத்திச் சீழ் முழுவதையும் எப்பகுதியிலும் தங்காமல் வெளியேற்றிவிட வேண்டும்.

4. கட்டி பக்குவம் பெறாத நிலையில் கீறினால் சீழ் முழுவதும் வெளிப்படாது. கட்டியுள்ள பகுதியில் தோல் முதலியன சிதைந்து வலி கடுமையாகும். சீழ் உள்தாதுக்களில் பரவிப் புரையோடி அதிக துன்பத்தை விளைவிக்கும். ஆகையால் கட்டி நன்கு முற்றிப் பக்குவமடைந்ததை அறிந்த பிறகே கீற வேண்டும்.

5. ஓரிடத்தில் கீறுவதால் சீழ் முழுவதும் வெளிப்படாவிடில், அது பரவியுள்ள பகுதிகளை அறிந்து தேவையான விரணங் களைத் தோற்றுவிக்க வேண்டும்.

6. கீறும் முறையும் நோய் தோன்றிய பகுதிக்கு ஏற்ப மாறுபடும். எவ்வாறெனில், புருவம், கன்னம், பொட்டில், நெற்றி, உதடு, ஈறு, அக்குள், வயிறு, தொடை இடுக்கு போன்ற பகுதிகளில் குறுக்காகக் கீற (INCISION) வேண்டும். கை, கால் ஆகிய பகுதிகளில் சந்திர மண்டலம் போல வட்டமாகக் கீற வேண்டும். குதம், ஆண்குறி ஆகிய பகுதிகளில் பிறை வடிவில் அரைவட்டமாகக் கீற வேண்டும். இவ்விடங்களில் இதற்கு மாறாகக் கீறினால் ஸிரை, நரம்பு முதலியன அறுந்து துன்பம் மிகும். விரணம் ஆறுவதும் தாமதப்படும். மாமிசம் கட்டிப்போய் முண்டுகள் ஏற்படும்.

### A. கட்டுப் போடுதல்

விரணம் ஏற்படுத்திச் சீழை வெளியேற்றிய பின் முறையாக கட்டுப் போட வேண்டும். (ஸூ-அத் 5).

அறுவைச் சிகிச்சை முடிந்த பிறகு நோயாளிக்கு நினைவு திரும்ப குளிர்ந்த நீரைப் பருகச் செய்ய வேண்டும். குளிர்ந்த நீரை முகத்தில் தெளிக்க வேண்டும்.

விரணத்தின் நான்கு பக்கங்களிலும், உள்ளும், புறமும் கஷாய நீரால் நன்கு கழுவ வேண்டும். பிறகு விரணத்திற்குள் நீரைத் துணியால் துடைத்து உலரச் செய்து எள்ளின் விழுது, தேன், நெய் என்பனவற்றைக் கலந்து வத்தியாக்கி (GAUZE) அதை விரணத்திற்குள் வைக்க வேண்டும். வத்தி மிக்க வறட்சியோ, அதிக எண்ணெய்ப்பசையோ உடையதாக இருக் கக் கூடாது. எண்ணெய்ப்பசை மிகுந்தால் அப்பகுதி சதசதப்புக் குள்ளாகி சீழ் வெளிப்படாது. வறண்டிருந்தால் விரணத்தின் விளிம்புகள் அளவுக்குமீறி உலர்ந்து விரணம் நன்கு ஆறா மலிருக்கும். விரணத்தின் ஆழத்திற்கு ஏற்ப வத்தியின் நீளம் இருக்க வேண்டும். விரணத்தின் ஆழம் அதிக அளவில் இருந்தால்

ரப்பர் குழாய் (DRAINAGE TUBE) வைத்து விரணத்தின் மேல் கபளிகா எனப்படும் (LINTPAD) மடித்ததுணி வைத்து அதன் மேல் கட்டுப் போடுவது உண்டு. கட்டுப் போடும் துணி, கபளிகா (PAD) விகேசிகா அல்லது வத்தி (GAUZE) ஆகியவை உயிரணுக்கள் அற்றவையாக இருக்க வேண்டும். நோயாளியின் விரணத்தின் மீது கட்டப்பட்ட துணியை மூன்றாம் நாள் அவிழ்த்து மீண்டும் வேறு துணியால் கட்ட வேண்டும். அவசரப்பட்டு இரண்டாம் நாள் அவிழ்க்கக் கூடாது. அவ்வாறு செய்தால் விரணத்தின் மீது முடிச்சுகள் ஏற்படும். அதனால் விரணம் ஆறுவது தாமதப்படும். ஆகவே மூன்றாம் நாள் கட்டை அவிழ்த்துச் சிகிச்சை செய்ய வேண்டும்.

இளவேனில், பனிக்காலம் போன்ற பருவங்களில் மூன்றாம் நாள், கூதிர் பருவம், முதுவேனில் போன்ற நாட்களில் இரண் டாம் நாள் கட்டவிழ்த்துப் புதுக்கட்டுப் போட வேண்டும். விரணத்தில் பக்குவம் பெறுதல் கடுமையாகவும், பித்தத்தால் தோன்றிய விரணமாகவும் இருந்தால் கூதிர் பருவமானாலும் நாள் தோறும் இரு வேளையும் கட்டை அவிழ்த்து விரணத்தைத் தூய்மைப்படுத்திப் புதிய கட்டுப் போட வேண்டும். வாதத்தால் அல்லது கபத்தால் தோன்றிய விரணத்தில், இளவேனில் பருவத் தில் மூன்றாம் நாள் கட்டவிழ்த்துப் புதுக் கட்டுப் போட வேண்டும்.

கட்டு அதிக இறுக்கமாகவோ, தளர்ந்தோ இருக்கக்கூடாது. (இத்தகைய முறைகள் அனைத்தும் இன்றும் அலோபதி மருத்து வத்தில் பின்பற்றப்படுவது இங்கு நினைவில் கொள்ளத்தக்கது). இதுவரை தரப்பட்ட விளக்கம் பிரதானகர்மாவைச் சார்ந்தது. (ஸூ - அத் 5)

## 3. பச்சாத்கர்மா

அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு நோயாளியை விரணிதா காரம் (SURGICAL WARD) என்பதில் தங்கியிருக்கச் செய்ய வேண்டும். படுக்கை நன்கு ஏற்றத்தாழ்வின்றி கிழக்கே தலை வைக்கத்தக்கதாகவும், மனத்திற்கு மகிழ்ச்சி தருவதாகவும் அமைய வேண்டும். பிறகு துன்பத்தைப் போக்கி உயிரணுக்கள் சேராமல் செய்யப் புகை போட வேண்டும். கெட்ட நாற்றம், நோய்க் கிருமிகள் தோன்றாமல் இருக்க அறையிலும் புகை போட வேண்டும். இதற்கு அகில், குங்குலியம், கடுகு, வசம்பு, மஞ்சள் கடுகு முதலியவற்றின் தூள், உப்பு, வேப்பிலை ஆகியவற்றை நெய்யுடன் சேர்த்து அறையில் எரிக்க வேண்டும். (ஸூ - அத் 19) (விரணிதோ பாஸனீயம்).

## காப்பு

விரணம் எளிதில் ஆறவும், வேறு துன்பங்கள் தோன்றாமலும் இருக்கச் செய்யும் முறை காப்பு (ரக்ஷாகர்மா) எனப்படும். எழுந்திருத்தல், உட்காருதல், அசைதல், புரண்டு படுத்தல், உலாவுதல், உரக்கப் பேசுதல் போன்றவற்றில் நோயாளி மிக்க கவனத்துடன் இருக்க வேண்டும். கலவிக்கு ஏற்ற பெண்ணுடன் பார்த்தல், உரையாடுதல், தொடுதல் போன்ற செயல்களை விலக்க வேண்டும். ஏனெனில் விந்து நழுவுதலால் உடலுக்கு முக்கியமான தாது தளர்ந்து போவதால் விரணம் ஆறுவது தாமதப்படும். (ஸு - அத் 19-ஸ்லோ 11-15).

## விரணத்தில் உணவு முறை

பழைய அரிசிச் சோறு எண்ணெய்ப்பசை கொண்டு இளஞ் சூடுள்ளதாக இருக்க வேண்டும். காட்டுப் பகுதியில் வாழும் விலங்குகளின் புலால், புலால் சாறு ஆகியவை விரணத்தை விரைவில் ஆற்றும். கீரைப்பாலை, சிறுகீரை போன்ற கீரை வகைகள், நெய்யில் வறுத்து இந்துப்புடன் கூடிய நெல்லிக்கனி, பயறு, யவதானியப் பொரிமா முதலியவை உணவாகப் பயன்படுத்தத்தக்கவை.

புதுதானியம், உளுந்து, எள், கொள்ளு, புளி, உவர்ப்பு மற்றும் கார்ப்புச் சுவை கொண்ட பொருள்கள், வெல்லம், மாவுப் பண்டங்கள், உலர்ந்த காய்கறி, உலர்ந்த புலால், ஆட்டுப்புலால், நீர்ப்பாங்கான இடத்தில் அல்லது நீரில் வாழும் விலங்குகளின் புலால், வசை, குளிர்ந்த நீர், பால், மோர் முதலியவற்றை விரணம் கொண்டபின் விலக்க வேண்டும். இவற்றைப் பயன்படுத்தினால் விரண தோஷம் முற்றிச் சீழ் தோன்றக் காரணமாகும்.

மதுவகைகளை விலக்க வேண்டும். அவை புளிப்பு, உஷ்ணம், வறட்சி மற்றும் தீக்ஷ்ணத்தன்மை கொண்டு, விரைந்து பரவக் கூடியவையாகையால் விரணத்தை மேலும் கேடுறச் செய்யும். (ஸு - அத் 19 - ஸ்லோ 32-35)

வெகுநேரம் அதிக காற்றுள்ள இடம், வெயில், புகையுள்ள பனிபடர்ந்த இடம் ஆகியவற்றில் தங்கக்கூடாது. அதிக அளவில் உணவு உட்கொள்ளக் கூடாது. அவருக்கு விருப்பமற்ற பொருள் களை கண்களில் படும்படி வைக்கக்கூடாது. அவ்வாறு வைத்தால் பொறாமை, சினம், அச்சம் போன்ற எண்ணங்கள் தோன்றி மனத்தைக் கலங்கச் செய்யும். இரவில் கண் விழித்தல், பகலில்

உறங்குதல், உணவு உட்கொள்ளாமை, ஒன்றுக்கொன்று மாறான பொருள்களை உண்ணுதல் போன்ற செயல்களை விலக்க வேண்டும். விரணநோய் கொண்டவரின் உடலில் இரத்தமும், மாமிசமும் குறைவதால் சடராக்னி குறைந்திருக்கும். உண்ட உணவு சரியாகச் செரிமானமாகாது. அசீரணம் தோன்றினால் வாயுக்கோளாறு உண்டாகும். அதனால் விரணத்தில் வீக்கம், துன்பம், எரிச்சல், மிக்க சீழ்ப் பெருக்கு ஆகியவை தோன்றும். பகல் தூக்கத்தாலும் இரவு கண்விழித்தலாலும் இத்தகைய துன்பங்கள் விளையும்.

சிறப்பாக விரணமுள்ளவரை உயிரணுக்களிடமிருந்து காக்க வேண்டும். இரத்தத்திலும் மாமிசத்திலும் விருப்பம் கொண்டு அலையும் நுட்பமான உயிரணுக்கள் விரணமுள்ளவரைச் சூழ்ந்து கொண்டு (விரணத்தில் சேர்ந்து) பலவகை துன்பங்களை விளைவிக்கும். அத்தகைய நுட்பமான உயிரணுக்களை அரக்கர், பிசாசு என்ற பெயரில் முன்னோர்கள் குறிப்பிட்டுள்ளனர். (அரக்கர், பிசாசு என்ற சொற்கள் நோயைத் தோற்றுவிக்கும் நுட்பமான உயிரணுக்கள் என்று வேத மந்திரத்திற்கு பொருள் கூறிய மஹீதரர் தம் உரையில் விளக்கியுள்ளார்.)

ஆயுர் வேதத்தில் இத்தகைய நுண்ணிய கிருமிகளைப் போக்க வேப்பிலை, கடுகு, நெய், இந்துப்பு ஆகியவற்றைக் கொண்டு நாள்தோறும் புகை போடும் முறை விளக்கப் பட்டுள்ளது. நோயாளியின் தலை மீது, சத்ரா, அதிச்சத்தரா, லாங்கல், ஜடிலா, பிரும்மசாரிணீ, லக்ஷ்மீ, குஹா, அதிகுஹா, சதவீர்யா, ஸஹஸ்ரவீரியா, சித்தார்தக என்பன போன்ற மூலிகைகளைக் கட்டி வைக்க வேண்டும். இவ்வாறு ஸுசுருதர் மிக விரிவாகச் சிகிச்சை முறைகளை விளக்கியுள்ளார். (ஸூ-அத் 19-ஸ்லோ 28,29)

இன்று விரணநோயாளியை உயிரணுக்கள் நெருங்காதபடி செய்ய பலவகை இரஸாயன மருந்துகள் பயன்படுத்தப்படு கின்றன. ஜீவாணுக்களை நெருங்கவிடாமல் தடுக்க ANTISEPTIC மருந்துகளும், உயிரணுக்களை அழிக்க ASEPTIC முறைகளும் கையாளப்படுகின்றன. கார்பாலிக் ஆஸிட், ஸ்டெரிலைஸ்ட் வாட்டர் (STERILISED WATER), கொதிக்கும் நீர் போன்றவை பயன்படுத்தப்படுகின்றன.

தூய நீருக்கு மாறாக முன் காலத்தில் பல வகை மருந்துப் பொருள்கள் கலந்த நீர் பயன்படுத்தப்பட்டன.

அத்தி, ஆலம் போன்ற பாலுள்ள மரங்களின் பட்டைத் தூள், முத்துச்சிப்பித்தூள் கலந்த நீர், வேப்பிலை, வசம்பு, பெருங்காயம், நெய், இந்துப்பு ஆகியவற்றின் தூளைப் பயன் படுத்திய புகை ஆகியவை உயிரணுக்களைப் போக்கும்.

சங்கபற்பம், டங்கண சூர்ணம் முதலியவற்றைப் பயன்படுத்தி னால் நுட்பமான உயிரணுக்கள் நெருங்கா; டங்கணத்தூளைத் தேன் கலந்து பூசினால் உயிரணுக்கள் சேரா.

பூண்டின் விழுதை விரணப்பகுதியில் பூசினால் நோய்க் கிருமிகள் அணுகா.

பொதுவாக வாதத்தால் தோன்றும் விரணங்களைப் பஞ்ச மூல கஷாயத்தாலும், பித்தத்தால் தோன்றும் விரணங்களை ஆலம், அத்தி முதலானவற்றின் கஷாயத்தாலும், கபத்தால் தோன்றும் விரணங்களைச் சரக்கொன்றை முதலிய மருந்துப் பொருள்களாலான கஷாயத்தாலும் தூய்மைப்படுத்தலாம்.

இவற்றைத் தவிர கந்தக திரவம், துத்த திரவம், ரஸகர்ப்பூர திரவம், மஞ்சகுண தைலம் போன்றவை உயிரணுக்களை ஒழித்து விரணத்தை ஆற்றக் கூடியவையாகக் கூறப்பட்டுள்ளன. நோயாளியின் அறை, படுக்கை, அணியும் ஆடை முதலிய வற்றைத் தூய்மைப்படுத்தும் முறை சரகஸம்ஹிதையில் கூறப் பட்டுள்ளது.

மயிலிறகு, கொக்கின் என்பு, கடுகு ஆகியவற்றை நெய்யுடன் சேர்த்து எரித்து அதன் புகையை அறை, படுக்கை, ஆடை, இருக்கை முதலியவற்றின்மேல் படும்படிச் செய்தால் நோய்க் கிருமிகள் அணுகா.

பட்டாடைத்துண்டு, யவதானியம், நெய், தேன் ஆகிய வற்றை எரித்து நாடீயந்திரம் வழியாக நாள்பட்ட விரணத் திற்குப் புகை போட வேண்டும்.

நோயாளி இருக்கும் இடம், ஆடை இவையின்றி அறுவைக்கு உரிய கருவிகளையும் உயிரணுக்கள் சேராமல் பாதுகாக்கும் முறையை ஸுசுருதர் கூறியுள்ளார்.

கருவிகளை நன்கு நெருப்பில் காய்ச்சி முறையே எண்ணெய், நீர், க்ஷாரம் ஆகியவற்றில் தோய்த்து எடுத்துப் பத்திரப்படுத்த வேண்டும். (ஸு - அத் 8 - ஸ்லோ 12,13)

ஆயுர்வேத மருத்துவத்திற்கும், அலோபதி மருத்துவத்திற்கும் சிறப்பான, முக்கியமாகக் குறிப்பிடத்தக்க வேற்றுமை ஒன்றுண்டு.

ரஸாயன மருத்துகளால் உடலைத் திடப்படுத்தி, நோய்க் கிருமிகளாலும் உயிரணுக்களாலும் கேடுறாவண்ணம் அதை வலிமையுள்ளதாகச் செய்வதை அடிப்படையாகக் கொண்டது ஆயுர் வேத மருத்துவம்.

நோய்க் கிருமிகளையும், உயிரணுக்களையும் அழித்து அவ்வகையில் உடலைக் காக்கும் முறையை அடிப்படையாகக் கொண்டது அலோபதி மருத்துவம்.

அலோபதி மருத்துவத்தால் நோய்க் கிருமிகள் அணுகா. ஆனால் அம்மருந்துகளைப் பயன்படுத்துவதால் நோய் எதிர்ப்புத் திறமை (BODY RESISTANCE AGAINST BACTERIAL INFECTIONS OR NATURAL IMMUNITY OR VITALITY) நாள் தோறும் குறைந்து போகும் அபாயம் உள்ளது.

## ரக்த மோக்ஷணம் (இரத்தத்தை வெளியேற்றுதல்)

ஆயுர்வேதத்தில் மருந்துகளால் நோயையகற்றும் காய சிகிச்சை முறையில் வஸ்திகர்மா (மருந்துக்கஷாயத்தை ஆஸன வாய் வழியே செலுத்தும்) முறைக்கு சிறப்பான இடம் உள்ளது. காய சிகிச்சையில் வாயுவுக்கு முக்கிய இடமுள்ளது. ஏனெனில் பொதுவாக வாயுவின் தொடர்பின்றி உடலில் நோய்கள் தோன்றுவதில்லை. நம் உடலில் பிராண வாயுவுக்கு இதயம் போல தூய்மையற்ற அபானவாயுவுக்கு ஆசனவாய், ஸமான வாயுவுக்கு நாபியும் இருக்கைகளாகும். ஆகவே வாயுவின் இருப்பிடத்தில் அதன் சீற்றத்தைத் தணித்து விட்டால், மற்ற பகுதிகளில் சீற்றமுற்ற வாயு தானே தணிந்து விடும். எனவே வஸ்தி முறையைச் சீராகச் செயல்படுத்தினால் பாதி சிகிச்சை வெற்றி பெற்றதாகிவிடும். (ஸூ-அத் 14)

காய சிகிச்சையில் வாயுவுக்குப் போலச் சஸ்திர சிகிச்சை (அறுவைச் சிகிச்சையில்) பொதுவாக இரத்தம் சிறப்பான இடம் பெற்றுள்ளது. எவ்வாறெனில், தோஷங்களால் கேடுற்ற இரத்தம் தான் விரணங்கள் தோன்றவும், சீழ்பிடிக்கவும் ஆறவும் வழி செய்கின்றன. இந்த கெட்ட இரத்தத்தைச் சிரைகளின் வழியே வெளியேற்றிவிடுவதால் நோயின் துன்பம் வெகுவாகக் குறைந்து விடுகிறது. மாமிசம், கொழுப்பு, எலும்பு, எலும்புக்குள் உள்ள சோறு, தமனி ஆகியவற்றிலிருந்து கேடுற்ற இரத்தத்தை வெளியேற்றுவதால் நோய் தணியும். வேறு உபாயங்களால் இரத்தம் தூய்மை பெறுவதில்லை. ஆகவே சல்ய சிகிச்சையில் இரத்தத்தை வெளியேற்றுவதால் பாதியளவு சிகிச்சை வெற்றி பெற்றதாகிறது. ஆனால் காலப் போக்கில் இவ்விரு முறைகளும் மறைந்து போயின.

பெரிய வீக்கம், விஷத்தன்மை, கடுமையான வலி ஆகியவை தோன்றிய உடனே அந்நோய்களில் இரத்தத்தை வெளியேற்றுவது, செய்யத்தக்க சிறந்த சிகிச்சை என்கிறார் ஸுசுருதர். (ஸூ - அத் 14). வீக்கத்திற்கு இரண்டு நிலைகள் உண்டு. அவை (1) தணிதல் (2) பக்குவம் பெறுதல். வீக்கம் முற்றி சீழ் பிடித்து விட்டால் இச் செயலால் பயனில்லை. பக்குவம் பெறாமல் வீக்கம் ஆம (துவக்க) நிலையில் இருக்கும் போது கெட்ட இரத்தத்தை வெளியேற்றிவிட்டால் தணிவது எளிதாகிவிடும். இரத்தத்தை வெளியேற்றும் பழக்கமுள்ளவருக்கு தோல் நோய், கிரந்தி, விரணம், வீக்கம் முதலான கெட்ட இரத்தத்தால் தோன்றும் நோய்கள் தோன்றா என ஸுசுருதர் ஸூத்ர ஸ்தானத்தில் 14-ம் அத்தியாயத்தில் ஸ்லோ-34-ல் கூறியுள்ளார். சரகரும் - 'தத் விசுத்தம் ஹிருதிரம் பலவர்ண ஸுகாயுஷா' - கெட்ட இரத்தத்தை வெளியேற்றித் தூய்மைபடுத்துவதால் உடல் வலிமை, பொலிவு, சுகம், ஆயுள் முதலியன உண்டாகின்றன என்கிறார். (சர - ஸூ - அத் 24).

வித்ரதி, விஸர்ப்பம், பிடிகா, கண்டமாலை எனும் நோய்களுக்கு இரத்தத்தை வெளியேற்றுதல் சிறந்த முறை என அஷ்டாங்க ஸங்கிரகம் ஸூத்ரஸ்தானம் 13வது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது.

## இரத்தத்தை வெளியேற்றும் முறைகள்

உஷ்ணமும், இனிப்பும், எண்ணெய்ப்பசையும் கொண்ட மாட்டின் கொம்பால் வாதத்தால் கேடுற்ற இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

அட்டைப்பூச்சி நீரில் வாழ்வது; குளுமைத்தன்மையுள்ளது. ஆகையால் பித்தத்தால் கேடுற்ற இரத்தத்தை அட்டைப்பூச்சியின் உதவியால் வெளியேற்ற வேண்டும்.

கார்ப்புச் சுவையும், வறட்சித்தன்மையும் தீக்ஷ்ணமும் கொண்ட சுரைக்குடுக்கையால் கபத்தால் கேடுற்ற இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

கீறி வெளிப்படுத்துவதற்கு எளிதான வழியில்லாமல் ஒரே இடத்தில் குவிந்துள்ள இரத்தத்தை மிக்க கூர்மையான கருவியால் வெளிப்படுத்த வேண்டும். ஆழமான பகுதியில் சேர்ந்துள்ள கெட்ட இரத்தத்தை அட்டைப்பூச்சியின் உதவியால் வெளிப்படுத்த வேண்டும். தோலைச் சார்ந்துள்ள தோஷத்தைக் கொம்பு, சுரைக் குடுக்கை முதலியவற்றின் உதவியால்

வெளிப்படுத்த வேண்டும். உடல் முழுவதிலும் பரவியபோது கெட்ட இரத்தத்தை ஸிரையைக் கீறி வெளிப்படுத்த வேண்டும்.

இரத்தத்தால் உடல் பளு மிகுந்த போது உயிர் நிலையில் இரத்தமின்மை, பக்கவாதம், சிறுநீர் விஷமாதல், நாள்பட்ட இதய நோய், ஸர்ப்பவிஷம், சுவாசப்பை - கல்லீரல் - மண்ணீரல் - மூளைப்பகுதி ஆகிய இடங்களில் உள்ள இரத்தம் கெட்டிருத்தல் என்ற நிலைகளில் ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

நோய்க்கு ஏற்றவாறு இரத்தத்தை வெளியேற்றுவதற்கான ஸிரைகளும் வேறுபடும். (ஸு - சா - அத் 8 - ஸ்லோ - 16,17,18) எவ்வாறெனில் : -

1. பாதத்தில் எரிச்சல், அவபாஹுகம், சிப்பம், விஸர்ப்பம், வாதரத்தம், வாத கண்டகம், விசர்ச்சிகா, பாததாரீ எனும் நோய்களில் க்ஷிப்ரம் எனும் உயிர் நிலைக்கு இரண்டு அங்குலம் மேற்பகுதியில் ஸிரையைக் கீற வேண்டும். அதாவது வாதத்தால் தோன்றும் துன்பங்களுக்கு (NEURALGIAS & NEURITIS), க்ஷிப்ரமர்ம (DORSAL VENOUS ARCH) கட்டை விரல் மற்றும் விரல்களுக்கு இடையே கீற வேண்டும்.

2. குரோஷ்டுசீர்ஷம் - கஞ்சம், பங்கு எனும் வாத நோயாளியின் கால் மணிக்கட்டுப் பகுதிக்கு நான்கு அங்குலம் உயரத்தில் ஸிரையில் கீற வேண்டும். இங்கு SMALL SAPHENOUS VEIN என்பதில் (ஆடுசதைப் பகுதியில்) கீற வேண்டும். (ஸு - அத் 8 - ஸ்லோ-17).

3. அபசி எனும் நோய் கண்டவருக்கு இந்தரவஸ்தி எனும் மர்மஸ்தானத்திற்கு இரண்டு அங்குலம் கீழ்ப்பகுதியில் முன் கூறிய ஸிரையில் கீற வேண்டும்.

4. கிருத்ரஸி எனும் நோய் கண்டவரின் முழங்கால் இணைப்புக்கு இரண்டு அங்குலம் மேலே அல்லது கீழாக ஸிரையில் கீற வேண்டும்.

5. கலகண்டம் எனும் நோயுற்றவருக்கு தொடையடிப் பகுதியில் உள்ள ஸிரையில் கீற வேண்டும்.

6. மண்ணீரல் வீக்கம், அல்லது மண்ணீரல் வீக்கத்தால் தோன்றும் பெருவயிறு எனும் நோய் கண்டவருக்கு இரண்டு ஸிரைகள் கீறத்தக்கவைகளாகும். இடது முழங்கை இணைப்புக்குள் கூர்ப்பத்திற்கு முன் உள்ள MEDIAN CUBITAL VEIN

எனும் ஸிரையைக் கீற வேண்டும். மற்றும் சுண்டு விரல், மோதிர விரல்களுக்கு இடையில் (ஸு-சா- அத் 8 - ஸ்லோ 17) FIRST META CARPAL VEIN ஸிரையில் கீற வேண்டும்.

7. கல்லீரல் வீக்கத்தாலான பெருவயிறு நோயாளியின் வலது கையில் முன்கூறிய ஸிரையில் கீற வேண்டும். (ஸு-சா-ஸ்லோ-17)

8. சுவாசகாச நோயில் அதாவது இதய நோய் அல்லது சிறுநீர் குண்டிகைக் கோளாறுகளால் தோன்றும் சுவாசகாச நோயினால் பீடிக்கப்பட்டவரின் ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றுவது நன்மை தரும். இன்று அலோபதி மருத்துவத்திலும் தேவைப்பட்டால் MEDIAN CUBITAL VEIN-2 எனும் ஸிரையைக் கீறி இரத்தம் வெளியேற்றப்படுகிறது.

9. மற்றும் அந்தர்வித்ரதி எனும் நோயாளியிடமும் முன் கூறிய ஸிரையைக் கீறும் முறையே கையாளப்படுகிறது.

10. கிருத்ரஸி, விச்வாசீ, விஷக்காய்ச்சல் ஆகிய நோய் கண்டவர்களின் கூர்ப்பரத்தின் நடுவில் உள்ள ஸிரையில் கீற வேண்டும்.

11. வலியுடன் கூடிய பிரவாஹிகை நோயாளியின் பின் தட்டுக்கு அருகில் இரண்டங்குலம் மேல் பகுதியில் உள்ள ஸிரையில் கீற வேண்டும்.

12. பரிவர்த்திகா, உபதம்சம், சூகதோஷம், சுக்ரவியாபதம் எனும் நோய் பீடிக்கப்பட்டவர்களின் ஆண்குறியில் நடுவில் உள்ள SUPERFICIAL DORSAL VEIN ஸிரையைக் கீற வேண்டும்.

13. விலாவலியுடையவரின் இடது பக்கத்தில் மார்பு - ஸ்தனம் ஆகியவற்றிற்கு இடையில் ஸிரையில் கீற வேண்டும். சுஷ்கபுப்புஸாவிரணசோபம், இதய நோய் ஆகியவற்றில் விலாவலி தோன்றுவதற்கு இது சிகிச்சையாகும்.

14. பாஹுசோஷம் - அவபாஹுகம் எனும் நோய் கண்டவர்களின் ஸிரையைக் கீறுதல் நன்மை தரும்.

15. திருதீயக - சாதுரர்திகக் காய்ச்சல், பைத்தியம், அபஸ்மாரம் எனும் நோய்களில் - திரிதீயகக் காய்ச்சலுடையவரின் திரிகப்பகுதிக்கு இடையில் உள்ள ஸிரையிலும், சாதுரர்திகக் காய்ச்சலுடையவரின் ஸ்கந்தஸந்திக்குக் கீழ் உள்ள ஸிரையிலும் கீற வேண்டும். பைத்தியம் - அபஸ்மாரம் -

விஷக்காய்ச்சல் நோயாளிகளின் சுங்கப் (பொட்டில்) பகுதி மற்றும் (சா - அத் 8 - ஸ்லோ 17). தலைமுடிக்கு இணைப்பில் உள்ள SUPERFICIAL TEMPORAL VEIN ஸிரையைக் கீற வேண்டும் என்பது சரகர் கொள்கையாகும்.

ஸுசுருதர் அபஸ்மார நோயுடையவரின் தாடை என்பு இணைப்புக்கு இடையில் உள்ள SUBMANDIBULAR ஸிரையில் கீற வேண்டும் என்றும், பைத்தியம் பிடித்தவரின் சங்க - கேசாந்தம், புருவங்களுக்கு நடுப்பகுதி, மார்பு, கடைக்கண், நெற்றி ஆகிய பகுதிகளில் ஏதேனும் ஒன்றில் உள்ள ஸிரையைக் கீற வேண்டும் என்கிறார். அதாவது FRONTAL OR SUPRA ORBITAL VEIN, SUPERIOR TEMPORAL VEIN - INTER COSTAL VEIN ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றில் கீற வேண்டும் என்பதாகும். (சாரீ - அத் 8 - ஸ்லோ 17).

16. நாக்கு நோயாளி மற்றும் பல் நோயாளியின் நாக்கின் அடிப்பகுதியில் உள்ள ஸிரையைக் கீற வேண்டும்.

17. காதுவலி போன்ற காது நோயாளியின் காதுக்கு மேல் பகுதி ஸிரையைக் கீற வேண்டும்.

18. நாசி நோயாளியின் மூக்கு முனை ஸிரையைக் கீற வேண்டும்.

19. திமிரம் - அக்ஷிபாகம் எனும் கண் நோயாளிகளின் மூக்குக்கு அருகில் உள்ள நெற்றியில் உள்ள கடைக்கண் பகுதியில் உள்ள ஸிரைகளில் ஒன்றில் கீற வேண்டும்.

20. தலை நோய் - அதிமந்தம் எனும் நோய் கண்டவரின் நெற்றி யில் உள்ள அல்லது கடைக்கண் பகுதியில் உள்ள ஸிரையைக் கீற வேண்டும்.

அந்தந்த நோய்க்கு உரிய சிரைகளில் கீற வேண்டுமெனக் கூறப்பட்டுள்ளது. ஆனால் அந்தந்தப் பகுதிகளில் கீறக்கூடாத ஸிரைகள் உள்ளன. மருத்துவர் மிக்க கவனத்துடன் அவற்றை விலக்கித் தகுந்த ஸிரையிலேயே கீற வேண்டும். அவ்வாறின்றி விலக்கத்தக்க ஸிரைகளைக் கீறுவதால் உறுப்புகளுக்கு ஊனம் ஏற்படுதல் அல்லது மரணமும் நேரக்கூடும். கூடாத ஸிரையைக் கீறுவதால் இரத்தப் பெருக்கு மிகும்.

## விலக்கத்தக்க ஸிரைகள்

கால் - GREAT SAPHENOUS VEIN, உர்வீ - FEMORAL ARTERY AND VEIN, லோஹிதாக்ஷம் - AXILLARY VEINS.

*கை : ஜாலந்தரா* - CEPHALIC VEIN, *ஊர்வி* - BRACHIAL VESSELS.

*அடிவயிறு, விடபப்பகுதி* - SPERMATIC VESSELS, *கடிகதருண* - GLUTEAL VESSELS.

*பின்தட்டு: பிருஹதீ* - SUBSCAPULAR, *மேட்ரோபரி* - INTERIOR EPIGASTRIC VESSELS.

*மார்பு: ஸ்தன மூலாதி* - INTERNAL MAMMARY AND LATERAL THORACIC VESSELS.

*கழுத்து: மாத்ருகா* - CAROTID ARTERY AND JUGULAR VEINS.

*கிருகாடிகா* - OCCIPITAL VEINS, *விதூர* - POST AURICULAR VESSELS.

*தாடை: ஹநுஸந்திகதம்* - INTERNAL MAXILLARY VESSELS.

*நாக்கு: ரஸவஹோ - வாக்வஹே* - DEEP LINGUAL VESSELS.

*மூக்கு: ஔபநாஸிகீ* - ANGULAR VESSELS.

*கண்: அபாங்க* - ZYGOMATIC TEMPORAL VESSELS.

*காது: சப்தவாஹிநீ* - ANTERIOR TYMPANIC VESSELS.

*நெற்றி; கேசாந்தாநுகா*- SUPRA ORBITAL & TEMPORAL VESSELS.

*ஆவர்த்த* - FRONTAL BRANCH OF THE SUPERFICIAL TEMPORAL VESSELS, *சங்கஸந்திகத* - SUPERFICIAL TEMPORAL VESSELS, *உத்க்ஷேப* - PARIETAL BRANCH OF SUPERFICIAL TEMPORAL, *ஸீமாந்த - அதிபத்* - BRANCHES OF OCCIPITAL VESSELS.

மேற்கண்ட ஸிரைகளுக்கு தீங்கு விளையாமல் கவனம் கொள்ள வேண்டும்.

## ஸிரையைக் கீறும் அறுவைச் சிகிச்சையைத் துவங்குவதற்கு முன் செய்ய வேண்டியவை

### பூர்வகர்மா

முதலில் நோயாளிக்கு எண்ணெய்ப்பசையுண்டாக்கி வியர்க்கச் செய்ய வேண்டும். இவ்வாறு செய்வதால் உடலில் இருக்கும் தோஷங்கள் இரத்த நாளங்களைச் சேரும். அப்பொழுது

ஸிரையைக் கீறுவதால் அவை வெளிவந்துவிடும். பருவம், நேரம், தோஷம் ஆகியவற்றால் தோன்றிய மாறுபாடு ஆகியவற்றிற்கு மாறான நீர்த்தன்மை கொண்ட பொருள்களை உண்ணச் செய்ய வேண்டும். யவாகூ எனும் கஞ்சியை அல்லது அப்பொருள் களுடன் கூடிய உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். இதனால் இரத்தம் வெளிப்படுவதால் உடலில் ஏற்படும் நீர்க் குறைவு ஈடு செய்யப்படும். (சா-அத் 8)

மிக்க குளுமையோ, மிக்க வெப்பமோ, கடுங்காற்றோ, மேக மூட்டமோ இல்லாத நேரம் சிரையைக் கீறுவதற்கு ஏற்றது. ஆனால் நோய் கடுமையாக இருந்தால், கூடாத நேரத்திலும் தக்கபடி கவனத்துடன் இம்முறையைக் கையாளலாம். கீற வேண்டிய உறுப்பின் மேல் பக்கத்தில் தமனியின் இரத்த ஓட்டத்திற்குத் தடை நேராவண்ணம், ஆனால் ஸிரை மேல் நோக்கி எழும்பி இருக்கும்படி பிடித்துக் கொள்ளத்தக்கபடி, கட்டுக் கட்ட வேண் டும். ஸிரைகளைக் கீறுவதற்கு மிக்க கூர்மையுள்ள குடாரிகா, விரீ ஹிமுகம், ஆரா, வேதஸபத்ரம் எனும் கருவிகள் தேவைப்படும்.

## பிரதானகர்மா

தலையில் சிரையைக் கீற வேண்டியிருந்தால் ஒரு கை நீளம் உயர்ந்த இருக்கையில் நோயாளியை உட்காரச் செய்ய வேண்டும். (தரை மீது உட்கார வைக்க வேண்டும் என்பர் ஹாராண சந்திரர்). நோயாளியின் முகம் சூரியனை நோக்கி இருக்க வேண்டும். இடம் போதிய வெளிச்சமுள்ளதாக இருக்க வேண் டும். நோயாளி தன் இரு கால்களையும் மடக்கி வைத்துக் கொள்ள வேண்டும். முழங்கால் இணைப்புகளின்மேல் கால் மணிக்கட்டை வைத்துக் கொண்டு கட்டைவிரல் உள்நோக்கி இருக்கும்படி உட்கார வேண்டும். இரு கை முட்டிகளை இறுக்கி வைத்துக் கொள்ள வேண்டும். இம்முட்டிகளை மருத்துவர் மன்யா எனும் பகுதிகளில் .வைத்துப் பட்டியை கழுத்து, முட்டிகளில் மேலாகச் சுற்றி மேல் பக்கம் வீசி வைக்க வேண்டும். பின் பக்கமாக நின்று கொண்டவர் இடது கையை உயர்த்திக் க்ருவியைப் பிடித்துக் கொண்டு மருத்துவரின் ஆணையின்படி வலது கையால் பட்டியைச் சுற்ற வேண்டும். வாயை மூடிக் கொண்டு நோயாளி பற்களைக் கடித்து இருமுதல் வேண்டும். இதனால் தலைப்பகுதி ஸிரை நன்கு மேல் நோக்கித் தெளிவாகக் காணப்படும். அப்பொழுது தக்க ஸிரையை மருத்துவர் விரைவாகக் கீற வேண்டும். (சா-அத் 8 - ஸ்லோ 8).

கையில் ஸிரையைக் கீற வேண்டுமானால் கட்டை விரலை உள்வைத்து விரல்களை மூடிக் கையைக் கட்ட வேண்டும். அல்லது ஒரு கல்லை உள்ளங்கையில் வைத்துக் கொண்டு

'ப் பிடித்துக் கொள்ள வேண்டும். இதனால் கையில் உள்ள ஸிரைகள் நன்கு மேலெழும்பிக் காணப்படும். மருத்துவர் தக்க ஸிரையைக் கீற இயலும். இவ்வாறு மற்ற உறுப்புகளில் ஸிரையைக் கீற வேண்டிய முறையை மிகத் தெளிவாக, நுட்பமான பொருள்களுடன் ஸுச்ருதர் கூறியுள்ள விதம் கவனிக்கத்தக்கது. (சா - அத் 8 - ஸ்லோ 3).

### ஸிரையைக் கீறும் முறைக்குத் தகாதவர்கள்

சிறுவர், முதியவர், அடிபடுதலால் உடல் இளைத்தவர், மிக்க அச்சம் கொள்பவர், சோர்வுற்றவர், கலவியில் ஈடுபடுதலால் சோர்வுற்றவர், மது அருந்தியவர், வாந்தி எடுத்தவர், பேதியான வர், நிரூஹ அநுவாஸன வஸ்திகளைப் பயன்படுத்திக் கொண்ட வர், கண்விழித்தவர், கருவுற்றவள், கடும் காய்ச்சல் உள்ளவர், வீக்கம், ஆக்ஷேபகம் - நாவறட்சி - மூர்ச்சை போன்ற நோய் கொண்டவர்கள் ஆகியோர் ஸிரையைக் கீறும் சிகிச்சைக்குத் தகாதவர்களாவர். கண்களுக்கு நன்கு புலனாகாத ஸிரையைக் கீறக்கூடாது. (சா-அத் 8-ஸ்லோ 3)

சிறு குழந்தைகளாயினும், BRONCHO PNEUMONIA - (ச்வஸனகம்) மூச்சுத் தடையுடன் குரல்வளை வீக்கம் கொண்டி ருந்தாலும் ஸிரையைக் கீறலாம். அவ்வாறே பக்கவாதம் கொண்ட வருக்கு இரத்த அழுத்தம் (BLOOD PRESSURE) அதிக அளவில் இருக்கும்போது ரத்த அழுத்தத்தைக் குறைக்க ஸிரையைக் கீற லாம். கருவுற்றவள் கர்ப்பாபாதனகம் (ECLAMPSIA) கொண்ட போது ஸிரையைக் கீறலாம். அரவம் தீண்டிய போது எந்த நிலையிலும் எந்த நோயாளிக்கும் கடிபட்ட இடத்தில் உள்ள ஸிரையைக் கீறி நஞ்சு கலந்த இரத்தத்தை வெளிப்படுத்தலாம். விஷத்தால் தோன்றிய காமாலையிலும் ரத்தத்தில் கலந்த நஞ்சைத் தணிக்க ஸிரையைக் கீறலாம்.

கார்பன்மொனாக்ஸைட் நஞ்சு கலந்த போது இரத்தத்தை வெளிப்படுத்த ஸிரையைக் கீறும் முறை இன்று பழக்கத்தில் உள்ளது.

இரத்தத்தை வெளியேற்ற வேண்டிய கட்டாயம் நேர்ந்தால் சிறுவர், முதியவர் போன்றவர்களுக்கும், வேறு சில நேரங்களிலும் அட்டைப்பூச்சியினால் கெட்ட இரத்தத்தை உறிஞ்சச் செய்து வெளிப்படுத்தும் முறையை ஸுச்ருதர் தம் ஸூத்திரஸ்தானத்தில் மிக விளக்கமாகக் கூறியுள்ளார். (ஸூ-அத் 13)

அட்டைப்பூச்சியின் வகைகள், அவற்றின் தன்மைகள், அட்டைப்பூச்சிகளில் நஞ்சு கொண்டவை, விலக்கத்தக்கவை, அட்டைப்பூச்சியைக் கொண்டு இரத்தத்தை உறிஞ்சச் செய்யும்

வகை, சிகிச்சை முடிந்ததும் அப்பூச்சியை நோயாளியின் உடலி லிருந்து வேறுபடுத்தும் வகை போன்ற நுட்பமான பொருள்களை மிக விளக்கமாக ஸுசுருதர் தம் நூலில் (ஸூ-அத் 13ல்) கூறியுள்ளார்.

## ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றிய பிறகு செய்ய வேண்டியவை

### பச்சாத்கர்மா

ஸிரையைக் கீறும் போது வெளிவரும் இரத்தத்தை ஒரு பாத்திரத்தில் பிடிக்க வேண்டும். வெளியேறிய இரத்தத்தின் அளவு அறிந்து கொள்ள இது பயன்படும். தேவையான அளவு இரத்தம் வெளிவந்ததும் ஸிரையின் அறுபட்ட பகுதியைக். கட்டை விரலால் அழுத்திப் பிடித்துக் கொண்டு அப்பகுதியின் சிகிச்சைக்கு முன் கட்டப்பட்ட கட்டை நீக்க வேண்டும். பிறகு எண்ணெயில் நனைத்த துணித்துண்டை அறுபட்ட இடத்தின் மேல் வைத்து கட்டுப் போட வேண்டும். சில நாட்கள் வரை நோயாளிக்கும், அறுபட்ட உறுப்பிற்கும் ஓய்வு கொடுக்க வேண்டும். தக்க பத்தியமான உணவை உண்ணச் செய்ய வேண் டும். செரிமான வலிமையை நன்கு பாதுகாத்தல் மிக அவசிய மாகும். மிக்க குளிர்ச்சி, மிக்க உஷ்ணம் இல்லாத இலேசான சட ராக்னியை வளர்க்கக்கூடிய உணவை உண்ணச் செய்ய வேண்டும்.

சிகிச்சையைக் குறைந்த அளவில் அல்லது தேவைக்கு அதிக அளவில் பயன்படுத்தினால் தோன்றக் கூடிய விளைவுகள் அதற்குரிய சிகிச்சைகள் போன்றவற்றையும் ஸுசுருத ஸம்ஹிதை யில் விளக்கமாகக் காணலாம்.

## அலோபதி மருத்துவத்தில் ஸிராவேதை

இன்று அலோபதி மருத்துவத்திலும் சில நோய்களில் ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றும் சிகிச்சை முறைகள் கையாளப்படுகின்றன: 1. சில உடல் கோளாறுகளால் இரத் தத்தின் பளு மிகுந்து, அதனால் தலைவலி, தலைசுற்றல், பக்க வாதம், மூளைப்பகுதிக் கோளாறு காணப்பட்டபோதும், கோளாறு, சிறுநீர்க் குண்டிகையில் கோளாறு நேர்ந்த போதும் சிரையைக் கீறி இரத்தம் வெளியேற்றப்படுகிறது.

2. இரத்தம் நஞ்சு கலந்ததானபோது, அதாவது சிறுநீர் இரத்தத்தில் கலந்து நஞ்சாதல், கருவுற்றபோது ஏற்படும் இரத் தத்தின் நச்சுத்தன்மை, விஷத்தால் தோன்றும் காமாலை, ஸர்ப்ப விஷம் ஆகியவற்றில் ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளி யேற்றும் முறை கையாளப்படுகிறது.

3. சுவாசப்பை தன்னில் தோன்றிய கோளாறினால் அல்லது இதயம் முதலான வேறு உறுப்புகளில் தோன்றிய கோளாறினால் இரத்தத்தைத் தூய்மைப்படுத்த இயலாதபோது இரத்தம் தூய்மை பெறாததால் மெய்த்தோல் நீலநிறமாகுதல், ஸிரைகள் விரிதல் போன்ற துன்பங்கள் தோன்றும். இந்த இலக்கணங்கள் சுவாசப் பையில் வீக்கம், புப்புசங்களில் இரத்தம் அதிக அளவில் சேர்தல், மகாதமனி விரிவடைதல், வாதோரஸ், இதயத்தில் வலதுபாதி கதவு போன்ற உறுப்பில் கோளாறு போன்ற நோய்களில் காணப் படும். இவற்றில் சிரையைக் கீறி இரத்தம் வெளியேற்றப்படும்.

4. புப்புச வீக்கம், புப்புச நாளத்தில் வீக்கம் (நியுமோனியா, பிராங்கோ நியுமோனியா), குரல்வளை வீக்கம், மூளைப்பகுதி மேல் புரை வீக்கம் போன்ற நோய்களில் மேல் மூச்சு வாங்குதல், பிதற்றல் முதலான இலக்கணங்கள் தோன்றும்போது சில நேரங்களில் ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தும் முறை கையாளப்படுகிறது.

ஏதேனும் ஒரு பகுதியில் தோன்றும் இரத்த தோஷத்தை வெளிப்படுத்த இன்று அலோபதி மருத்துவத்தில் இம்முறை பின்பற்றப்படுவதில்லை. ஆனால் இரத்த நாசியை, வேறு வகை இரத்த தோஷத்தைக் குறைக்க இம்முறை பின்பற்றப்படுகிறது. இன்று அலோபதி மருத்துவத்தில் எந்த நோயானாலும் இரத் தத்தை வெளிப்படுத்த முழங்கை இணைப்பு இடைப்பகுதியில் உள்ள சிரையைக் கீறுவதே சிறப்பான முறையாகக் கருதப் படுகிறது. ஏனெனில் இந்தச் செயலை எளிதாகச் செய்வதற்கு ஏற்றது அப்பகுதியேயாகும். சில சமயம் மாத்ருகாஸிரா (EXT-JUGULAR VEIN) என்பதிலும் கீறப்படுவது உண்டு.

## இரத்தப்பெருக்கைத் தடுத்து நிறுத்தல்

ஸிரையைக் கீறுதலாலும், வேறு வகை அறுவைச் சிகிச் சையைக் கையாளுதலாலும், (ஸ்லோ 37,38) புறக்காரணங் களாலும் (கல், கட்டை முதலியவற்றால் அடிபடுதல் போன்றவை) இரத்தம் அதிக அளவில் பெருகிவிடுவது உண்டு. இந்த இரத்தப் பெருக்கு கண்களுக்குப் புலனாகும்படி ஏற்படலாம் அல்லது உடலுக்குள்ளேயே புறக்கண்களுக்குக் காணப்படாதபடி நிகழலாம். (ஸூ - அத் 14)

தோஷங்களால் அல்லது அடிபடுதலால் இரத்த நாளங்கள் சிதைந்து அல்லது கட்டிகளில் தோன்றும் விரணங்களிலிருந்து இரத்தம் பெருகலாம். மேலும் உமிழ் நீருடனும், சிறுகுடல், வயிறு

முதலிய பகுதிகளில் தோன்றும் துன்பங்களால் வாந்தியுடனும் அல்லது மலம் சிறுநீர் முதலியவற்றுடனும் இரத்தம் வெளிப்படலாம். இவை கண்களுக்குப் புலனாகும் இரத்தப் பெருக்குகளாகும்.

வெளிவழியே வெளியேறும் இரத்தப்பெருக்கு மூன்று வகைப்படும். தமனி வழியாக (ஆர்டீரியல்), ஸிரை வழியாக (வெய்ின்) மற்றும் கேசிகைகள் வழியாக (கேபிலரி) வெளியேறுபவைகளே அவை.

அறுவைச் சிகிச்சையில் தோன்றும் இரத்தப் பெருக்கு மீண்டும் மூன்று வகைப்படும். அவையாவன :

1. பிராதமிகம் - அறுவைச் சிகிச்சை துவங்கியதும் விரணத்தில் தோன்றுவது (பிரைமரி) 2. பிரதிகிரியாத்மகம் - இரத்த நாளங்களில் போட்ட கட்டு தளர்ந்து போவதால் இரத்த அழுத்தம் மிகுதியானபோது அறுவைச் சிசிச்சை முடிந்த பிறகோ, சிலமணி நேரங்களுக்குப் பிறகோ தோன்றுவது (ரியாக்ஷனரி) 3. ஔபத்ரவிகம் அல்லது த்விதீயகம் - இத்தகைய இரத்தப் பெருக்கு அறுவைச் சிகிச்சையில் உயிரணுக்கள் முதலியன சேருவதால் தோன்றுவது (ஸெகெண்டரி).

புறத்தில் நேரும் இரத்தப்பெருக்கு கண்களுக்குப் புலனாகும். ஆனால் குடலுக்குள், உடலுறுப்புகளுக்குள் நேரும் இரத்தப் பெருக்கு அந்தந்த உடற்பகுதிகளில் இரத்தம் கட்டிப் போவதைக் கொண்டு தெரிந்து கொள்ள வேண்டும்.

எடுத்துக்காட்டுக்கு இரத்த வாஹினிகளிலிருந்து தோன்றிச் சேர்ந்த இரத்தப்பெருக்கு ரக்தஸஞ்சய அர்புதம் (ஹிமைடோமா), மார்புக் கூண்டில் சேர்ந்த இரத்தப்பெருக்கு ரக்தோரஸம் (ஹுமைடோமா), உதராவரணத்தில் தோன்றும் இரத்தப்பெருக்கு (ஹிமோபேரிடானியம்), இணைப்புகளில் சேர்ந்த இரத்தப்பெருக்கு (ஹிமோபீலியா) அல்லது ஸ்கர்வி என்றும் கூறப்படுகின்றன.

;னால் இணைப்புகளில் வீக்கம், வலி, இணைப்புகள் செயல்படுதலில் துன்பம் முதலியன தோன்றும்.

ஸுசுருதர் இரத்தப்பெருக்கின் விளைவுகளைக் கீழ் வருமாறு கூறுகிறார் :

அதிக இரத்தப்பெருக்கினால் தலைவலி, கண்கள் தெரியாமை, அதிமந்தம், திமிரம், தாதுக்ஷயம், ஆக்ஷேபகம், அழற்சி, பக்கவாதம், ஏகாங்கவிகாரம், விக்கல், சுவாசம், காசம், பாண்டு நோய், மரணம் ஆகியவை தோன்றலாம்.

உடலுக்குள் ஏற்படும் இரத்தப்பெருக்கு அஷ்டாங்க ஸங்கிர ஹத்தில் 'அந்தர்லோஹிதம்' எனப்பட்டது. (ஸூ-அத்14-ஸ்லோ30). அந்தர்லோஹிதம் என்பதனால் கை, கால், வாய், மூச்சு ஆகியவை குளிர்ந்து போகும். கண்கள் சிவந்துவிடும். முகம் மஞ்சள் நிறம் கொள்ளும். கால்கள் வீங்கும். இது கேடு விளைவதன் அறிகுறிகளாகும். இந்த இலக்கணங்கள் அனைத்தும் காணப்பட்டால் அத்தகைய நோயாளிக்குச் சிகிச்சையால் பயன் ஏற்படாது.

## இரத்தம் அழிவதால் தோன்றும் இலக்கணங்கள்

பார்வை குறைதல் - கண்களைச் சார்ந்த நாளங்களில் இரத்தம் குறைவதால் இது ஏற்படும்.

உடல் வெளிறிச் சோகை நோய் தோன்றுதல்.

பக்கவாதம் - மூளைப்பகுதியில் இரத்த ஓட்டம் குறைவதால் தோன்றும்.

இழுப்பு - பிராணவாயு (ஆக்ஸிஜன்) குறைவதால் தோன்றும்.

நாவறட்சி - இரத்தக் குறைவால் உடலில் நீர்ப்பகுதி குறைந்து போவதால் தோன்றும்.

நினைவிழத்தல் - மூளைப்பகுதியில் இரத்தம் குறைந்து போவதால் தோன்றும்.

இரத்த அழுத்தம் இயற்கை நிலைக்குக் குறைதல்.

சிறுநீர்க்குண்டிகையில் கோளாறு - இரத்தத்தில் பிராணவாயு குறைவதால் தோன்றும்.

இதயபேசிகள் வலிமையிழந்து விடும்.

இதயம் செயலிழந்து போவதால் அல்லது பிராணவாயு குறைவதால் மரணம் தோன்றும்.

ஆகவே இரத்தப்பெருக்கு தோன்றியதும் அதை நிறுத்த முற்பட வேண்டும். நோயுற்ற இடத்தில் தக்க சிகிச்சை செய்தல் மற்றும் உடல் முழுவதற்கும் ஏற்ற சிகிச்சையைச் செய்தல் ஆகியவை இதற்கு இரு முறைகளாகும்.

## நோயுற்ற இடத்தில் செய்யத்தக்க முறைகள்

1. குளிரச் செய்தல் 2. பக்குவம் பெற வெப்பமுண்டாக்குதல் 3. சுடுதல் 4. இரத்தஸ்தாபக பிரயோகம் (ஸ்கந்தனம்) 5. அவபீடனம் 6. பந்தனம் (இணைத்தல்) 7. நோயுள்ள உறுப்பை உயர்த்திப் பிடித்துக் கொள்ளுதல்.

1. ஸந்தானம் - கருவியால் தோல், தமனி, ஸிரை ஆகியவற்றில் தோன்றிய பிளவைச் சேர்த்து, விரணத்தின் ஓரங்களைச் சேர்த்து இணைத்தல். இம்முறையில் அவபீடனம் (TORSION) அல்லது பீடனம் (PRESSURE ON POINTS) செய்கைகள் அடங்கும். (இன்று பீடனம் எனும் செயல் ஒரு வகை). ஸ்வஸ்திகயந்திரம் (ARTERY FORCEP) மூலம் இது செய்யப்படுகிறது. இதனால் ஸிரை அல்லது தமனி அழுத்திப் பிடித்துக் கொள்ளப்படுகிறது. இரத்தம் தனக்குத்தானே நின்று விடுகிறது. ஆழமான இடங்களில் இரத்தப்பெருக்கு ஏற்படும் போது அறுவைச் சிகிச்சையில் இது தேவைப்படும். சிறு தமனிகளில் இரத்தப்பெருக்கு நிற்காவிடில் தமனீஸம்தம்சம் எனும் கருவியால் பிடித்துக் கொண்டு, இரண்டு மூன்று முறைகள் அழுத்திப் பிடிப்பதால் (TORSION) இரத்தம் நின்று விடும்.

செயலால் இரத்தப்பெருக்கு நிற்காவிடில் LIGATURING எனும் முறையால் தையல் போட்டு இரத்தப் பெருக்கை நிறுத்த வேண்டும். தைப்பதற்குப் பல வகை நூல்கள் பயன் படுத்தப்படுகின்றன. அவற்றில் CAT GUT அதிக அளவில் பயன் படுத்தப்படுகிறது. (ஸூ-அத்25-ஸ்லோ20) ஸம்தம்ச யந்திரத்தால் ரக்தவாஹினி பிடித்துக் கொள்ளப்பட்டு தையல் போடப் படுகிறது.

2. ஸ்கந்தனம் - இரத்தத்தைக் கட்டிப் போகச் செய்யும் முறை. இது (கட்டிய இரத்தம்) இரத்தம் வெளிவருவதைத் தடுக்கும். மற்றொரு செயல் ரத்த வாஹினியின் முனை சுருங்கிப் போதலால் இரத்தப்பெருக்கு தடைப்படும். சாதாரணமாக இரத்தப்பெருக்கு இம்முறையில் நின்று விடுகிறது. தனக்குத்தானே இரத்தப்பெருக்கு நிற்காத போது வேறு பொருளைப் பயன்படுத்த வேண்டும். துவர்ப்புச் சுவை கொண்ட பொருள் (ASTRINGENTS) இரத்தத்தில் உள்ள, இரத்தப் பெருக்கில் உள்ள அல்ப்யூமின் போன்ற புரதப் பொருளுடன் சேர்ந்து இரத்தம் பெருகுவதைத் தடைப்படுத்துகிறது. குளிர்ச்சித்தன்மை கொண்ட பொருள்களுக்கும் இத்தன்மை உண்டு. மருத்துவர்கள் தற்கால மருத்துவத்தில் படிகாரம், ஜரன்பர்க்ளோரைட், கொலிடியன் முதலியவற்றைப் பயன்படுத்துகின்றனர்.

3. பாசனம் - சாம்பல் முதலியவற்றைப் பயன்படுத்தி விரணப் பகுதி உலர்ந்து போகும்படிச் செய்தல் பாசனமாகும். ரக்தவாஹினியின் வாய் சுருங்கி விரைவில் இரத்தப்பெருக்கு நின்று போகும்.

4. தாஹனம் - இரத்தப்பெருக்கை நிறுத்த இது சிறந்த வழியாகக் கருதப்படுகிறது. வேறு வழி பயன்படாத நிலையில் இம்முறை தவறாமல் பயன் தருகிறது. இதைப் பயன்படுத்தினால் இரத்தத்தில் உள்ள அல்ப்யூமின் முதலான புரதப்பொருள்கள் சேர்ந்து விடுவதாலும் இரத்தக் குழாய் முகம் சுருங்கி விடுவதாலும் இரத்தப் பெருக்கு நின்று விடும்.

ஸிரை, தமனி போன்றவற்றிலிருந்து இரத்தப்பெருக்கு ஏற்பட்டால் சூடாக்கிய சலாகையைக் கொண்டு அதன் முனையைச் சுட வேண்டும். இரத்தப்பெருக்கு உள்ள இடம் பிரிந்திருந்து ஸெல்களின் வழியே இரத்தப்பெருக்கு ஏற்பட்டால் 132 - 160 டிகிரி பா. ஹீட் அளவு வெப்பம் கொண்ட வெந்நீரைப் பயன்படுத்த வேண்டும்.

உடல் முழுவதையும் சார்ந்த பணிவிடை:- இரத்தப்பெருக்கு அதிகமானால் உடலில் உள்ள இரத்தம் குறைந்து விடும். அதை நிரப்ப வேண்டும். குளிர்ச்சி தரும் பொருள்களை உட்கொள்ளுதல் இரத்தத்தை ஸ்தம்பிக்கும்படி செய்வதற்கு உதவும்.

காகோலி முதலிய இனிப்புச் சுவை கொண்ட பொருள்களின் கஷாயத்தில் சர்க்கரையும், தேனும் கலந்து உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

பித்தத்தால் கெட்ட இரத்தப்பெருக்கு நேர்ந்த போது அல்லது நன்கு வளர்ந்த சடராக்னியில் பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

கபம் மிகுந்துள்ள நோயாளிக்கு, கபத்தால் கெட்ட இரத்தப் போக்கிற்கும், நடுத்தர சடராக்னி வலிமை கொண்டவருக்கும் எண்ணெய்ப்பசை கொண்ட கஞ்சி வகையைப் பயன்படுத்த வேண்டும். வாதம் மிகுந்துள்ள நோயாளிக்கு வாதத்தால் கெட்ட இரத்தப் பெருக்கிற்கும், குறைந்த அளவுள்ள சடராக்னி வலிமை கொண்டவருக்கும் மாமிசச் சாறு கொடுக்க வேண்டும்.

இரத்தம் குறைந்தபோது கரியமான், எருமை, பன்றி, முயல் ஆகியவற்றின் இரத்தத்தைப் பருகச் செய்ய வேண்டும். (ஸு - அத் 14 - ஸ்லோ36)

இம்முறையில் இன்று அவரவர் உடலுக்கு ஏற்ற வேறு ஒருவருடைய இரத்தம் ஏற்றப்படுகிறது.

இரத்தப் பெருக்கை நிறுத்த லஸீகா (SERUM) பயன்படுத்தப் படுகிறது. சிறப்பாக குதிரையின் ஸிரம் (HORSE SERUM, COAGULINE CIBA) பயன்படுத்தப் படுகிறது.

படிகாரம் இரத்தப் பெருக்கை நிறுத்துவதில் சிறந்தது. சிறப்பாகப் பல்லைப் பிடுங்கியதால் ஏற்பட்ட பல் ஈற்றின் பள்ளத்திலிருந்து பெருகும் இரத்தப் பெருக்கை நிறுத்த படிகாரத் தூளை நிரப்புதல் நல்ல பயன் தரும்.

இன்று 'ஸ்டிப்டோஸிட்' மாத்திரை நாளுக்கு மூன்று வேளை கொடுக்கப்படுகிறது. ஸ்டிப்டோஸிட், ஸ்டிப்டோஸியான், கால்ஷியம், விடமின்ஸ், விடமின் கே, அயாபான் முதலியன இத்துறையில் பயன்படுத்தப்படுகின்றன.

## க்ஷார அக்னி கர்மா

அறுவைச் சிகிச்சை முறையில் கார மருந்துகளைப் பயன் படுத்திச் சுட்டெரித்தல் ஒரு முறையாகும், (ஸூ - அத்11)

'க்ஷரம்' என்ற சொல்லுக்கு 'சிதைதல்' எனப் பொருள். சிதைத்து அதாவது துண்டித்து வேறுபடுத்தும் பொருள் க்ஷாரம் அல்லது காரம். க்ஷாரங்கள் பொதுவாக மூலிகைகளை எரித்து எடுத்த சாம்பலால் தயார் செய்யப்படுபவையாகும். ஆகவே பொதுவாக க்ஷாரங்கள் மூன்று தோஷங்களைத் தணிக்கும். வெண்ணிறம் கொண்டு சௌம்யத்தன்மையுள்ளவையாகும். எரித்தல், பக்குவப்படுத்துதல், துண்டித்தல் எனுமிவற்றில் சிறந்த வலிமை கொண்டவையாகும்.

உடலுக்குப் புறத்தில் பயன்படுத்துவதால் விரணம், கட்டி முதலியவற்றை விரைவில் பக்குவப்படுத்தும். உட்கொள்ளச் செய்வதால் அசீரணம் முதலான துன்பங்களைப் போக்கும். கார்ப்பு, வெப்பம், தீக்ஷ்ணத்தன்மை கொண்ட மூலிகைகளால் செய்யப்படுவதால் சீழை வெளிப்படுத்தி விரணத்தைத் தூய்மைப்படுத்தும். தமனி, ஸிரை போன்ற குழாய் வழிகளின் வாயைச் சுருங்கச் செய்து இரத்தப் போக்கை நிறுத்தும்.

கிருமி, ஆமம், குட்டம், குன்மம், நஞ்சு ஆகியவற்றைப் போக்கும். க்ஷாரம் பிரதிஸாரணீயம் (CAUSTIC), பாநீயம் (ALKALI), மிருது, மத்ய, தீக்ஷ்ண க்ஷாரங்கள் எனப் பல வகைப்படும்.

இன்று அலோபதி மருத்துவத்திலும் பொடாஷியம் நைட்ரேட், அஸிடேட், பைகார்பனேட், கார்பொரேட், நைட்ரேட், லிதியம்ஸைட்ரேட், லிதியம் கார்பொனேட் போன்ற பல வகை காரப் பொருள்கள் பயன்படுத்தப்படுகின்றன.

ஸுசுருதர் கூறிய க்ஷார கர்மா அலோபதியில் உள்ள 'பொடென்ஷியல் காடரி' முறையாகும். (ஸூ-அத்11).

ஸோடியம் கார்பொனேட், பொடாஷியம் கார்பொனேட், கால்ஷியம் ஆக்ஸைட், மெக்னீஷியம் ஆக்ஸைட், லஸிகா முதலிய வேதியியற் பொருள்கள் தாவர கனிமப் பொருள்களாலான க்ஷார வகைகளே.

மென்மையான க்ஷாரோதகத்தைச் சுண்ணாம்பு (LIME), பாஷாணம் (MARBLE), க்ஷீரபாகம் (CHALK), சங்கு (CONCH SHELL) முத்துச் சிப்பி ஆகியவற்றை எரித்துத் தயார் செய்கின்றனர்.

### பிரதிஸாரணீயக்ஷாரம்

பிரதிஸாரணீய (மேல் பூச்சாகப் பயன்படும்) க்ஷாரத்திற்கு மூன்று சக்திகள் உள்ளன. 1. நீரை வற்றச் செய்தல் 2. சுக்லி (ALBUMIN) என்பதைக் கரைப்பது 3. வேறு பொருளுடன் சேர்ந்து சோப்பு ஆவது (SAPONIFICATION).

இந்த மூன்று தன்மைகள் கொண்டிருப்பதால் உடலில் உள்ள கலங்களுடன் (ஸெல்களுடன்) இணைந்து விடுவதால் அந்த ஸெல்கள் அல்ப்யூமின் முதலான போஷகப் பொருள்கள் இன்மையால் அழிந்து விடுகின்றன. ஆகவே இந்த க்ஷாரம் உடலில் தேவையற்ற நீர், திலகாலகம், மசகம், சர்மகீலம், அர்புதம் போன்ற விகாரங்களையும், கெட்ட விரணம், நாடீவிரணம், பகந்தரம் போன்ற நோய்களையும் அழிக்கப் பயன்படுகிறது. இதை அலோபதி மருத்துவர்கள் லைகர் பொடாஷ், லைகர் ஸோடா, லைகர் அமோனியா, ஸில்வர் நைட்ரேட், ஜிங்க்ளோரைட் போன்றவற்றை க்ஷாரகர்மா (CAUSTIC) முறைக்குப் பயன்படுத்துகின்றனர். பகந்தரம், அர்புதம், அர்சஸ், துஷ்டவிரணம், குட்டம், கிடிவம், தத்ருமண்டலம், கிலாஸம், நாடீவிரணம் சர்மகீலம், திலகாலகம், நியச்சம், வங்கு, மசகம், வித்ரதி, கிருமிகீபகங்களின் கடியால் தோன்றிய விஷம், உபஜிஹ்வா, உபகுசம், தந்தவைதர்பம், ஏழு வகை முக நோய்கள் முதலியன இந்தப் ப்ரதிஸாரணக்ஷார முறையால் நீக்கத்தக்கவையாகும்.

க்ஷார முறை வெட்டுவது, பிளப்பது, கீறுவது என்ற செயல் களை மிகச் சிக்கலான நுட்பமான கருவிகளைப் பயன்படுத்தக் கூடாத பகுதிகளிலும், உயிர் நிலைகளிலும் பயன்படுத்தத் தக்கதாக அமைந்துள்ளது. கருவிகளைப் பயன்படுத்தியும் பலன் கிடைக்காத போது க்ஷார முறையைப் பயன்படுத்தி வெற்றி காணலாம். (ஸூ-அத் 11-ஸ்லோ7)

## க்ஷார கர்மா (POTENTIAL CAUTERY)

### பூர்வ கர்மா

க்ஷாரகர்மாவுக்குத் தேவையான பொருள்களைச் சேகரித்து வைத்துக் கொண்ட பிறகு பெருங்காற்றில்லாத, தக்க காற்றோட்ட மும், வெளிச்சமும் உள்ள அறையில் நோயாளியை உட்காரச் செய்ய வேண்டும். (ஸூ-அத் 11-ஸ்லோ18)

### பிரதான கர்மா

வாதத்தால் கேடுள்ள பகுதியானால் இலேகனம் (கீறுதல்) எனும் முறையாலும், பித்தத்தால் நோய் தோன்றிய ப( யானால் கர்க்ஷண (தேய்த்தல்) முறையாலும், கபத்தால் நோயுற்ற பகுதியானால் துணியால் மூடிச் சலாகையின் உதவி யாலும் க்ஷார மருந்தைத் தேய்க்க வேண்டும்.

### பச்சாத்கர்மா

நூறு எண்ணுவதற்குப் பிடிக்கும் காலம் வரை க்ஷார மருந்தை நோயுற்ற பகுதியில் வைத்திருந்து பிறகு துடைத்துவிட வேண்டும். அப்பகுதி நன்கு சுடப்பட்டதை அறிந்த பிறகு அப்பகுதியில் நெய், தேன் ஆகியவற்றைத் தடவி விட வேண்டும். பிறகு பால், தயிர்த் தெளிவு, காடி போன்ற திரவப் பொருள்களால் கழுவி விட வேண்டும். இனிப்புச் சுவை கொண்டு குளுமையைத் தோற்றுவிக்கும் மருந்துப் பொருள்களை அரைத்து அதை அப்பகுதியில் தடவி விட வேண்டும். (ஸூ-அத்11-ஸ்லோ20-21).

கபத்தைத் தோற்றுவிக்கும் உளுந்து, தயிர் முதலியவற்றை உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

சுட்ட இடத்தில் நாவல்பழ நிறம் தோன்றிக் கெட்ட நீர்ப்பெருக்கு நின்று துன்பம் தணிந்தால் க்ஷார கர்மா நன்கு நிறைவேற்றப்பட்டதாக அறிக.

சுட்ட இடத்தில் அரிப்பு, வீக்கம், உடல் பளுவாகத் தோன்றுதல், துன்பம் தணியாமை என்பன க்ஷாரகர்மா நன்கு செயல்படவில்லை என்பதன் இலக்கணங்களாகும். அந்நிலையில் மீண்டும் இச்செயலைப் பயன்படுத்த வேண்டும்.

இன்று அலோபதி மருத்துவத்தில் இம்முறை பயன்படுத்தப் படுகிறது. ஆனால், நோக்கம், செய்முறை, விளைவு, செயல்படுத்தத்தக்க நோய் முதலியவற்றில் ஆயுர்வேத முறைக்கு மாறானதாகும்.

எடுத்துக்காட்டுக்கு பாக்விலின்ஸ் தஹன முறை (POQUIL-INS THERMO CAUTERY) - இதில் கருவியைச் சூடாக்கி அறுவைச் சிகிச்சை செய்தல், மின்சாரத்தைக் கொண்டு சுடுவது (GALVANO CAUTERY), டயோதர்மிகாடரி, ரேடியம் தெரபி, பனிபோல மிகக் குளிர்ந்த கார்பன் டைஆக்ஸைட் ஸ்நோ முதலியவற்றால் சுடும் சிகிச்சை முறை முதலியன அலோபதி மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகின்றன. இது தனிப்பட்ட சிகிச்சையாக அல்லாமல் சிகிச்சையில் ஒரு பகுதியாக இன்று பயன்படுத்தப்படுகிறது.

சுடப்படுவதால் அப்பகுதியில் உள்ள உயிர் அணு அழிந்து விடும். அதனால் அப்பகுதி தூய்மை பெறுகிறது (STERILE). அதனால் அந்தப் பகுதியில் சீழ்பிடிக்கும் (SEPTIC) வாய்ப்பு அரிதாகிறது.

ஆயுர்வேதத்திலும் STERILIZATION பற்றிய அறிவு அன்றே மலர்ந்திருந்தது. அக்னியில் சுடப்பட்ட கருவியால் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். இல்லாவிடில் சீழ்பிடிக்கும் என்பது ஸுசுருத ஸம்ஹிதையில் குறிப்பிடப்பட்டுள்ளது. நெருப்பால் சுடப்பட்ட இடத்தில் இரத்தப் பெருக்கு நிகழ்வதால் உடலில் தேவையற்ற ஸெல்களை நீக்க இன்று சுடும் முறை அலோபதி மருத்துவத்தில் பயன்படுத்தப்படுகிறது.

ஆயுர்வேதத்தில் அக்னிகர்மா சிகிச்சையின் அங்கமாக அல்லாமல் இது ஒரு தனிப்பட்ட முறையாக நோய்களைத் தீர்க்கப் பயன்படுத்தப்பட்டு வந்தது. (ஸூ-அத் 12-ஸ்லோ 12).

## அக்னிகர்மாவின் சிறப்புகள்

நெருப்பால் சுடப்பட்டு நீக்கப்பட்ட நோய் மீண்டும் தோன்றுவதில்லை. நெருப்பு நோயை வேருடன் அகற்றிவிடுகிறது. மருந்து, க்ஷாரகர்மா முதலியவற்றால் நீங்காத நோய்களும் இம் முறையால் நீங்குகின்றன.

நெருப்பால் சுடுவதால் சிரைகளின் முனை சுருங்கிப் போவதால் இரத்தப்பெருக்கு ஏற்படுவதில்லை. (ஸூ-அத் 12-ஸ்லோ-3).

சுடப்பட்ட பகுதியில் நோயை அல்லது துன்பத்தை விளைவிக்கும் உயிர் அணுக்கள் அழிந்து விடுவதால் சீழ் பிடிப்பதில்லை.

### சுடும் முறைக்கு உகந்த கருவிகள்

திப்பிலி, ஆட்டுப் புழுக்கை, பசு மாட்டுப் பல், பாணம், சலாகை எனும் இவற்றைச் சூடுபடுத்தித் தோல் மேல் சுடுவதற்குப் பயன்படுத்தத் தகும். இது நடுத்தர அளவில் சுடப் பயன்படும். ஜாம்பௌஷ்டம், உலோகக் கருவிகள் (தங்கம் - வெள்ளி - தாமிரம் - ஈயம் முதலியவற்றாலானவை) மாமிசத்தைச் சார்ந்த நோய்களைச் சுடப் பயன்படுத்தத் தக்கவை. தங்கத்தாலான சலாகை, கண்ணிமைகளைச் சார்ந்த நோய்களிலும், அபான வழியில் தோன்றும் பிடகை எனும் கட்டிகளைப் போக்குவதிலும் பயன்படுத்தத் தகும். ஸிரை, நரம்பு, இணைப்புகள், என்பு முதலியவற்றைச் சார்ந்த நோய்களில் அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு இரத்தப்பெருக்கு மிகுந்தால் தேன், வெல்லம், எண்ணெய் ஆகியவற்றைச் சூடுபடுத்தி அதைக் கொண்டு அதைத் தடுக்கப் பயன்படுத்தலாம். (ஸூ-அத்12-ஸ்லோ4).

### சுடும் செயலுக்கு ஏற்ற நோய்கள்

தலைநோய், அதிமந்தம் (ACUTE GLAUCOMA) எனும் நோய்களில் புருவம், நெற்றி, பொட்டு ஆகிய பகுதிகளில் சுட வேண்டும்.

கண்ணிமைகளைச் சார்ந்த நோய்களில் ஈரத்துணியால் இமையை மூடி அதன் பேரில் சுடுதல் முறையைப் பயன்படுத்த வேண்டும். தோல், மாமிசம், ஸிரை, நரம்பு, இணைப்பு, என்பு ஆகியவற்றில் தோன்றும் வாதத்தாலான நோய்களுக்கும், உணர்ச்சியற்ற மாமிசத்துடன் கூடிய விரணம், கிரந்தி, மூலநோய், அர்புதம், பகந்தரம், யானைக்கால், சர்மகீலம், திலகாலகம், அண்டவிருத்தி, ஸந்திரோகம், நாடீவிரணம் போன்ற நோய்களுக்கும் அந்தந்த நோய்களுக்கு உரிய சிகிச்சைப் பிரகரணத்தில் கூறியபடி சுடும் செயலைச் செய்ய வேண்டும். (ஸூ-அத்12-ஸ்லோ9,10)

### அக்னிகர்மாவுக்கு (ACTUAL CAUTERIZATION) பூர்வகர்மா

நோயாளியைக் கிழக்கு முகமாக இருக்கச் செய்து, வலிமை கொண்டவர்களும், நன்மையை விரும்புகிறவர்களுமானவர்களால் நோயாளியைப் பிடித்துக் கொண்டிருக்கச் செய்ய வேண்டும். நன்கு நிலையாக எரிந்து கொண்டிருக்கும் கருங்காலித் தணல்களைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டும்.

### பிரதான கர்மா

நோயுற்ற உடற்பகுதியின் தடிமனைக் கருத்தில் கொண்டு உயிர் நிலைகளையும் வலிமை கொண்ட, வலிமையற்ற உடற்

பகுதிகளையும் கவனித்து, நோய், பருவகாலம் முதலியவற்றை ஆராய்ந்து தக்கபடி அக்னிகர்மாவைச் செயல்படுத்த வேண்டும்.

**பச்சாத்கர்மா**

நெருப்பால் சுடுவதால் தோன்றிய விரணத்தில் இரத்த பித்தத்தால் தோன்றக்கூடிய வலியைப் போக்கி விரணத்தை ஆற்ற தேன் மற்றும் நெய்யை ஊற்ற வேண்டும். பிறகு அதிமதுரம், இலவம்வேர் முதலிய பொருள்களால் குளுமைப் படுத்தும் மேல் பூச்சு பூச வேண்டும்.

இயற்கையாகப் பித்தம் மிகுந்த உடல் கொண்டவர், இரத்தபித்தம் - அதிஸாரம் போன்ற நோய் கொண்டவர், உடலி லிருந்து சல்யம் நீக்கப்படாதவர், வலிமையற்றவர், சிறுவர், முதியவர், அச்சம் மிகுந்தவர், பல விரணங்களால் துன்புறுகிறவர் போன்றவர்களுக்கு இம்முறையைப் பயன்படுத்தக்கூடாது. மேலும் சரியாகச் செயல்படாமையின் விளைவுகள் போன்ற நுட்பமான பொருள்களை ஸுசுருத ஸம்ஹிதையில் காணலாம்.

## தீப்புண்ணுக்குச் சிகிச்சை

சிகிச்சை முறையால் அன்றி வேறு விபத்துக்களால் (ACCIDENTAL) தீக்காயத்திற்கு உட்பட்டவர்களுக்குச் சிகிச்சை முறைகள் ஸுசுருத ஸம்ஹிதையில் 12ம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன.

எதிர்பாராத விபத்தால் நேரக்கூடிய தீப்புண் இரு வகையான காரணங்களால் தோன்றும். தீப்பிழம்பு, காய்ச்சிய உலோகத்துண்டு, கல் முதலியவற்றால் தோன்றுவது வறட்சிப் புண், ஆங்கிலத்தில் BURN எனப்படும். கொதிக்கும் எண்ணெய், நெய், நீர் முதலியவற்றால் ஏற்படுவது ஸ்நிக்த விரணம் (SCALD) எனப்படும்.

இவ்வாறு ஏற்படும் விபத்தால் தோன்றிய புண்களை தற்கால மருத்துவம் மூன்று வகைப்படுத்தியுள்ளது.

**1. தாஹநிலை**

எரிச்சலின் பரப்பளவு, ஆழம் அதிகமானபோது (SHOCK) ஏற்படுவது தாஹநிலை. அதனால் இதயச் செயல் நின்று விடும். ஆழமான புண்ணைவிட பரந்த அளவில் தோன்றிய புண் மிக்க அச்சத்தை விளைவிக்கும்.

**2. சோத நிலை**

மெய்த்தோல், மாமிசம், இரத்தம் முதலிய தாதுக்கள் எரிந்து போதல், காய்ச்சல், அழற்சி, நாவறட்சி, இருமல் போன்ற துன்பங்கள் காணப்படும். விரணம் ஏற்பட்ட பகுதிக்கேற்பத் துன்பங்கள் விளையும். தலை, மார்பு, வயிறு போன்ற உயிர் நிலைகளில் தீப்புண் நேர்ந்தால் மஸ்திஷ்க (மூளைப்பகுதி) ஆவரண வீக்கம், புப்புச ஆவரண வீக்கம், நியுமோனியா போன்ற துன்பங்கள் தோன்றும். விரணங்களில் உயிரணுக்கள் சேர்ந்து துன்பம் விளைவிக்கும் அபாயமும் நேரலாம்.

**3. ரோபண நிலை**

உயிரணுக்கள் உடலில் புகாமல் இருப்பதால் நிகழ்வதாகும் ரோபண நிலை. இல்லாவிடில் விஸர்ப்பம், தனுஸ்தம்பம் (டிடேநஸ்) போன்ற நோய்கள் தோன்றலாம்.

ஆயுர்வேதத்தில் இவ்வாறு விபத்துகளில் தோன்றிய தீப்புண் நான்கு வகைகளாகக் கூறப்பட்டுள்ளன.

1. பிலுஷ்டம், துச்சம்: தோல் நிறம் விகாரப்பட்டு தோல் சுருங்கிக் காணப்படும். தோல் அழிவதில்லை. இன்று இது முதல் நிலை எனக் கருதப்படுவதாகும்.

2. துர்தக்தம்: தோல் மேல் கொப்புளங்கள் தோன்றிக் குத்தல் வலியும் கடுமையாகி எரிச்சலும் தோன்றும். விரணம் சிவந்து பக்குவம் பெற்று பல நாட்கள் கடந்த பின் ஆறும். இது இன்று மருத்துவத்தில் இரண்டாவது நிலையாகக் கருதப்படுகிறது. அடித் தோலுக்கும் மேல் தோலுக்கும் இடையில் லஸீகா (நிணநீர்) சேர்ந்து கொப்புளங்களைத் தோற்றுவிக்கும். (ஸூ-அத் 12)

3. ஸம்யக்ததக்தம்: நிறம் பனம்பழம் போலக் காணப்படும். முன் கூறிய இலக்கணங்களும் காணப்படும். இது இன்று மூன்றாவது நிலை எனக் கூறப்படுகிறது.

4. அதிதக்தம்: மாமிசம் சிதைந்து கீழ் நோக்கித் தொங்கிக் கொண்டிருக்கும். உறுப்புகள் பிளந்துவிடும். ஸிரை, நரம்பு, இணைப்புகள், என்பு முதலியவை அழிந்து விடும். காய்ச்சல், அழற்சி, நாவறட்சி, நினைவிழத்தல் போன்றவை தோன்றும். பல நாட்கள் கழித்து விரணங்கள் ஆறினாலும் தோல் இயற்கை நிறம் பெறாது. (ஸு-ஸூ-அத் 12-ஸ்லோ 25-26)

   இன்று இந்த நான்காவது நிலை மேலும் மூன்று நிலைகளாகப் பிரிக்கப்படுகிறது.

தோல், கீழ்த்தோல், திசுக்கள் (SUBCUTANEOUS) வரை எரிந்து போகும். ஸ்பர்சாங்குரம், வியர்வைச் சுரப்பிகள், எண்ணெய் சுரப்பிகள் முழுவதும் அழிந்து விடும். இது நான்காம் நிலையாகும்.

தோல், அடித்தோல், மாமிசபேசிகள், ஸிரை, நரம்புகள் ஆகியவை எரிந்து போன நிலை ஐந்தாவதாகும்.

உறுப்பு முழுவதும் - ஸிரை, நரம்பு, இணைப்பு, என்புகள் - எரிந்து, உறுப்பு சீர் குலைந்து (DISORGANISED) போன நிலை ஆறாவதாகும்.

தீப்பிழம்புபட்ட உறுப்புகளில் தோன்றும் இலக்கணங் களுடன் தீ விபத்தால் உடல் முழுவதிலும் தோன்றும் துன்பங்கள் ஸம்ஹிதைகளில் விளக்கப்பட்டுள்ளன.

விபத்துக்கு உட்பட்டவரின் உடலில் இரத்தம் மிகவும் தன்மை இழந்து விடுவதால் பித்தம் சீற்றமுறும். சீற்றமடைந்த பித்தமும், நெருப்பால் சீற்றமடைந்த இரத்தமும் கடும் வேதனை, அழற்சி, காய்ச்சல், நாவறட்சி ஆகிய துன்பங்களைத் தோற்று விக்கும். உடல் முழுவதிலும் ஏற்படும் விளைவுகள் மூன்று வகை யாகும்.

எரிச்சல் ஆழத்தைவிட பரவலாக ஏற்பட்டிருந்தால் மிக்க அச்சம் விளைவிக்கும். மெய்த்தோலில் மூன்றில் ஒரு பங்கு புலுஷ் டமானால் நோயாளி இரண்டு நாட்களில் மரிப்பார். விரணம் ஆழமாகவும் பரப்பளவில் மிகுந்தும் இருந்தால் அதிர்ச்சி ஏற்படும். நோயாளி நினைவிழந்து கிடப்பார். இதய இயக்கம் தடைப்பட்டு மரணமும் நேரும்.

இன்று தீப்புண் ஏற்பட்டுள்ள அளவு சதவிகிதத்தில் கணக் கிடப்படுகிறது. இதை ஒட்டி உயிர் நிலைகள் தாக்கப்படுதல், உயிர் நிலைகளின் அழிவு, நச்சுத்தன்மை, உடலில் நீர்ப்பகுதி அழிந்த அளவு, நேர இருக்கும் துன்பங்கள், நோயாளி குண மடைவது, அடையாதது போன்ற நிலைகள் கணக்கிடப் படுகின்றன. (ஸு-ஸூ-அத் 12).

மார்பு பகுதி முழுவதும், வயிற்றின் முன் பகுதியும் எரிந்து போனால் 19%, முன் பின் மார்புப் பகுதிகள், வயிறு எரிந்து போனால் 38%, ஒரு கால் முழுவதும் எரிந்து போனால் 19%, இரு கால்களும் எரிந்து போனால் 38%, ஒரு கை மட்டும் எரிந்து போனால் 9%, இரு கைகளும் எரிந்து போனால் 18%, தலை மட் டும் கழுத்துப்பகுதி எரிந்திருந்தால் 6% என்ற முறையில் சதவிகித அளவில் தீ விபத்தில் நேர்ந்துள்ள புண் அளவிடப்படுகிறது.

தோல், இரத்தம் மற்ற தாதுக்கள் எரிந்து போனால் நச்சுத்தன்மை உடல் முழுவதும் பரவும். அதனால் காய்ச்சல், அழற்சி, நாவறட்சி போன்ற துன்பங்கள் தோன்றும். தலை, மார்பு, வயிறு, மூளை, ஆவரண வீக்கம், வயிற்று ஆவரண வீக்கம், சுவாசப்பை ஆவரண வீக்கம் முதலிய உயிர் நிலைப்பகுதிகளில் கோளாறு ஏற்பட்டால் உயிரணுக்கள் உடலில் தொற்றிக் கொள்வதால் அபாயம் நேரக்கூடும்.

உயிரணுக்கள் புண்களில் தொற்றிக் கொண்டால் அக்கி, தநுஸ்தம்பம், கல்லீரல் கோளாறுகள் முதலியன நேரக்கூடும்.

உடலில் உள்ள நீர்ப்பகுதி குறைந்து போனால் (DEHYDRATION) லஸீகா (நிணநீர்) குறைந்து போகும். இது குறைந்த அளவில் இருந்தால் பாதகம் இல்லை. அதிக அளவில் இருந்தால் மரணம் நேரும். (ஸூ-அத் 12-ஸ்லோ16).

### விபத்தால் நேர்ந்த தீப்புண்களுக்குச் சிகிச்சை

தீப்புண்ணுக்கு புற உடலுக்கும், உள்ளுக்கும் உஷ்ணம் தரும் பணிவிடைகள் செய்ய வேண்டும். ஏனெனில் வெப்பத்தால் வியர்வை தோன்றும். இரத்த ஓட்டம் மிகும். அதனால் தீப்புண் நேர்ந்த இடத்தில் வெப்பம் குறையும். நோயாளிக்கு நிம்மதி உண்டாகும். குளிர்ச்சி தரும் பணிவிடைகள் செய்யக்கூடாது. ஏனெனில் குளிர்ந்த நீரால் இரத்தம் அடர்த்தி பெறும். அதனால் புண்பட்ட இடத்தில் வெப்பம் நிலை பெற்றுத் துன்பம் விளைவிக்கும்.

துர்கந்தம் எனும் வகையைச் சேர்ந்த தீப்புண்ணில் ஆழமாக இல்லாதபோது உஷ்ண சிகிச்சையையும், புண் அதிக ஆழமாக ஏற்பட்ட போது குளிர்ச்சி முறையையும், உஷ்ண முறையையும் கலந்து, அதாவது முதலில் குளிர்ச்சி தரும் சிகிச்சையையும், பிறகு வெப்பம் தரும் சிகிச்சையையும் செய்ய வேண்டும். அல்லது முதலில் வெப்பம் தரும் சிகிச்சையையும், பிறகு குளிர்ச்சி தரும் சிகிச்சையையும் பயன்படுத்த வேண்டும். நெய், கஷாயம் முதலியவற்றைக் குளுமையுள்ளவையாகப் பயன்படுத்த வேண்டும். (ஸூ-அத் 12-ஸ்லோ 22).

ஸம்யக்தக்தம் என்ற நிலையில் மூங்கில் உப்பு, அரசமரப் பட்டை, சிவப்புச் சந்தனம், சீந்தில் கொடி ஆகியவற்றை அரைத்து நெய் கலந்து அதைப் புண்களின் மேல் பூச வேண்டும். அல்லது கிராமங்களில் வாழும் குதிரை, மாடு, பன்றி, எருமை,

மற்றும் நீரில் வாழும் ஆமை முதலியவற்றின் புலாலை அரைத்துப் பூச வேண்டும்.

எரிச்சல் மிகுந்துள்ள போது பித்த வித்ரதிக்குக் கூறிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். (ஸூ-அத் 12-ஸ்லோ-23-24).

அதிதக்தத்தில் மாமிசம் சிதைந்து தொங்கிக் கொண்டிருந்தால் குளிர்ச்சி தரும் முறையில் சிகிச்சை செய்ய வேண்டும். அரிசிமாவை நெய் கலந்து பூச வேண்டும். பிறகு சீந்தில் கொடி இலை, தாமரை இலை போன்றவற்றால் மூடி விட வேண்டும். பித்த விஸர்ப்பத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன் படுத்த வேண்டும். (ஸூ-அத் 12-ஸ்லோ 25-26).

நோயாளி நினைவிழந்திருந்த போது வெப்பம் தரும் சிகிச்சை மிக்க நலம் தரும். வெப்பமுள்ள அறையில் நோயாளியை இருக்கச் செய்தல், வெப்பம் தரும் துணிகளால் உடலைப் போர்த்துதல், வெந்நீரைப் பாட்டிலில் நிரப்பி சுற்றிலும் வைத்தல் ஆகியவை தகும். தலையைக் கீழாகவும், கால்களை உயர்த்தியும் படுக்க வைக்க வேண்டும். அதிக அளவில் குடிக்க நீர் தர வேண்டும். தேவைக்கு ஏற்றபடி ஸிரை வழியாகவோ, அடித் தோல் வழியாகவோ உடலுக்குள் திரவம் செலுத்த வேண்டும். வெப்பத்தைத் தூண்டும் குடி வகைகளைத் தர வேண்டும்.

நினைவு திரும்பியதும் புண்ணை ஆற்றும் சிகிச்சையில் அதிக கவனம் செலுத்த வேண்டும். டேனிக் ஆஸிட் 2.5 சதவிகிதம் கலந்த கலவையில் பஞ்சை நனைத்துப் புண்களின் மேல் வைக்க வேண்டும். கடுக்காய்த் தூளாலான சீத கஷாயத் தால் புண்ணைக் கழுவுதல் நல்லது.

தீப்புண்ணால் சிதைந்த பகுதி வேறுபட்டு விழுந்துவிட்டால் டேனிக் ஆஸிட் என்பதாலான மேல் பூச்சு மருந்தைத் தடவ வேண்டும்.

தீப்புண்களை ஆற்ற இன்று பல வகை பூச்சு மருந்துகள் உள்ளன. ஸுசுருதர் இப்புண்களுக்கு தேன்மெழுகு, மஞ்சிட்டி, அதிமதுரம், பாச்சோத்தி, சந்தனம், பெருங்குரும்பை ஆகியவற்றை சம அளவில் கொண்டு நெய் கலந்து காய்ச்சிப் பூச வேண்டும் என்கிறார். (ஸூ-அத் 12-ஸ்லோ 27-28).

ஸுசுருத ஸம்ஹிதை ஸூத்ரஸ்தானத்தில் 12ம் அத்தியாயத்தில் மேலும் பல வகையான தீ விபத்துகளைப் பற்றிய விளக்கம் காணப்படுகிறது. அவையாவன :-

1. **தூமோபஹதம்** - புகை சூழ்வதால் தோன்றும் கேடு (ASPHYXIATION), கார்பன் டைஆக்ஸைட் (CO2), கார்பன் மோனாக்ஸைட், கந்தகப்புகை, அமோனியா ஹைட்ராஜ்ஸல்பைட் முதலிய நச்சுப் புகைகளைச் சுவாசிப்பதால் தூய்மையான உயிர் காற்றை உட்கொள்ளாமையால் தும்மல், மூச்சுத்திணறல், இருமல், கண்களில் எரிச்சல், வயிற்று உப்புசம், மணம், சுவை முதலியவற்றை அறிய இயலாமை முதலியன தோன்றும்.

உடல் முழுவதிலும் உள்ள பேசிகளில் இழுப்பு உண்டாகும். கெட்ட இரத்தம் மூளைப் பகுதியில் சேர்ந்து விடும். நாவறட்சி, அழற்சி, காய்ச்சல் தோன்றும். நினைவு தவறும். இறுதியில் உயிர் நீங்கும்.

இத்தகைய சூழ்நிலையில் நோயாளியைத் திறந்த வெளியில் காற்றோட்டமுள்ள இடத்தில் சேர்த்தல், கழுத்து, மார்பு முதலிய பகுதிகளில் ஆடைகளை நீக்கி முகத்தில் குளிர்ந்த நீரைத் தெளித்தல், நாக்கை அடிக்கடி வெளியே இழுத்து விடுதல், கால் கைகளில் வெப்பமுள்ள நீரை ஊற்றிக் கொண்டிருத்தல் ஆகிய வற்றைச் செய்ய வேண்டும்.

நெய், கருப்பஞ்சாறு, திராட்சைசாறு, பால், ஷர்பத், இனிப் பும் புளிப்புமான சுவை கொண்ட பானங்கள் ஆகியவற்றைக் கொடுக்க வேண்டும். வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அல்லது வயிற்றைக் 'ஸ்டமெக்ட்யூப்' கொண்டு கழுவ வேண்டும்.

இனிப்பு, புளிப்பு, உவர்ப்பு, கார்ப்புச் சுவை கொண்ட சாறுகளை வாயில் கொண்டு கொப்பளிக்கச் செய்ய வேண்டும். இதனால் புலன்கள் தெளிவு பெறும்.

நோயாளியின் வலிமைக்கு ஏற்ப நஸ்ய முறையைப் பயன்படுத்த வேண்டும். திரிகடுகசூர்ணம் இதற்கு நல்லது. இன்று அமோனிய (AMMONIA) வாயுவைப் பயன்படுத்தி நினைவு திரும்பச் செய்கின்றனர். குளுமைத்தன்மை கொண்ட இலேசான எண்ணெய்ப்பசை கொண்டு எளிதில் செரிமானமடையக் கூடிய உணவு தர வேண்டும்.

இன்று தேவையானால் செயற்கை முறையில் மூச்சு விடச் செய்யப்படும் (ARTIFICIAL RESPIRATION), தூய பிராணவாயு செலுத்துதல் (OXYGEN INHALATION), மார்பின் பேனிக் நரம்பை மின் சக்தியால் தூண்டுதல், ஸிரைகளைக் கீறி விடுதல், ஸெலைன் வாட்டர் உட்செலுத்துதல், 40 முதல் 80 தோலா வரை கெட்ட இரத்தத்தை வெளியேற்றி அந்த அளவு உப்புக் கரைசலைச் செலுத்துதல் முதலியனவும் செய்யப்படுகின்றன.

இம்முறையால் இதயம், மூளை முதலிய பகுதிகள் நன்கு தூண்டப்பட்டுச் செயல்படுவதால் மூச்சுத்தடை நீங்கும்.

2. **உஷ்ணவாதாதபதக்தம்** - வெப்பம் மிகுந்த நாடுகளில் முது வேனில் பருவத்தில் சூரியனின் வெப்பத்தால் காற்று மிகுந்த வெப்பம் கொண்டு வீசும். அந்தக் காற்றால் உடல் வெப்பம் மிகும். இந்த வெப்பம் 108, 112 டிகிரி பா.ஹீ. வரை இருக்கும். அதனால் ஹீட்ஸ்ட்ரோக், ஸன்ஸ்ட்ரோக் (HEAT STROKE, SUN STROKE OR THERMIC FEVER) ஆகியவை உண்டாகும். இது 'லூ' என வழங்கப்படும் காற்றினால் விளையும் துன்பங்களாகும். தலை, கழுத்து ஆகியவற்றின் பின்பக்கத்தில் நேராக ஆதவனின் கிரணங்கள் படுவதால் புறத்தில் உள்ள வெப்பத்தால் மூளைப் பகுதியில் சுஷு முனையின் வெப்பத்தை கட்டுப்படுத்தும் பகுதி யில் (HEAT REGULATING MECHANISM) கோளாறு தோன்றும். அதனால் உடலின் வெப்பம் மிகும். தலை வலி, வாந்தி, ஒக்காளம், நினைவு தவறுதல் என்பன இதன் விளைவுகளாகும். மூச்சு குர்குர் எனும் ஒலியுடன் வெளிவரும். நாடி வலிமையை இழக்கும்.

இதற்கு ஸுசுருதர் கூறும் சிகிச்சையாவது: நோயாளியை உடனே குளுமையான இடத்தில் சேர்க்க வேண்டும். ஈரத் துணியை உடலின் மேல் போர்த்த வேண்டும். நீரை உடலின் மேல் ஊற்ற வேண்டும். தலையைப் பல முறை குளிர்ந்த நீரால் கழுவ வேண்டும். தலையில் ஐஸ்கட்டி நிறைந்த பையை வைக்க வேண்டும். உடல் வெப்பம் 102 டிகிரி அளவிற்குக் குறைந்ததும் குளுமைத்தன்மையை விளைவிக்கும் சிகிச்சையை நிறுத்த வேண்டும். பித்தத்தின் சீற்றம் தணிந்ததும் புற உடலைக் குளுமைப்படுத்துவதை நிறுத்தி, பித்தத்தைத் தணிக்கும் குளுமைத் தன்மை கொண்ட மருந்துகளை உட்கொள்ளச் செய்ய வேண்டும். (ஸூ-அத் 12-ஸ்லோ 38-39).

3. ***சீதவாதாதபதக்தம்*** - மிகக் குளிர்ந்த நாடுகளில் பனி மிகுந்த காற்றினால் கால் கைகளில் உள்ள இரத்த ஓட்டம் குறைந்து, காது, மூக்கு ஆகியவை திறந்திருப்பதால் 'குளிர் காற்றால் எரிக்கப்படுதல்' எனும் துன்பம் விளையும். உறுப்புகள் முடங்கி மெழுகைப் போலாகிவிடும். அவ்வுறுப்புகளில் திடீரென இரத்த ஓட்டம் தோன்றினால் மிக்க துன்பம் உண்டாகும் (INFLAMMATORY GANGRENE). இந்த நோய் "ப்ராஸ்ட் பைட்" எனப்படும்.

உஷ்ணமும், எண்ணெய்ப்பசையும் கொண்ட சிகிச்சை செய்ய வேண்டும். குளுமையால் தாக்கப்பட்ட பகுதியில் இரத்தம் சேர்ந்து விடும். அதைக் கரைத்து பெருகச் செய்ய வேண்டும். அப்பகுதியைத் தேய்த்து, இரத்த ஓட்டம் சீராக நடைபெறச் செய்ய வேண்டும். முதலில் குளிர்ந்த சூழ் நிலையில் இறுத்தி மெல்ல மெல்ல வெப்பத்தை அதிகப்படுத்த வேண்டும். திடீரென வெப்பப்படுத்தினால் இரத்த ஓட்டம் திடீரென ஏற்பட்டு வீக்கம் (INFLAMMATORY GANGRENE) எனும் துன்பம் தோன்றும். குளுமை தணிந்து உடல் நிலை சீர் படத் துவங்கியதும் சூடான பானம் கொடுக்க வேண்டும். உடலைச் சூடு உண்டாக்கும் ஆடையால் போர்த்தி விட வேண் டும். செயற்கையாக வெப்பம் தோற்றுவித்தால் தாக்கப்பட்ட உறுப்பில் அது கோளாறை உண்டாக்கும்.

மின்னலால் தாக்கப்பட்டபோது மூளைப்பகுதி நரம்புகள் செயலிழந்து NEURO PARALYSIS தோன்றி மரணம் நேரும். தாக்குதல் வலிமை குறைந்ததாக இருந்தால் நினைவிழத்தல், பார்வை கெடுதல், கால்கை வலி, பைத்தியம் போன்ற துன்பங்கள் தோன்றலாம். அந்தந்த நோய்க்கு உரிய சிகிச்சைகளைச் செய்ய வேண்டும்.

### சல்யத்தை நீக்குதல் (REMOVAL OF FOREIGN BODIES)

'சல்' என்ற வினைக்கு விரைவு, துன்புறுத்தல் எனும் பொருள்கள் உண்டு. வேகமாக உடலில் புகுந்து கொள்வது, உடலில் புகுந்து துன்புறுத்துவது சல்யம் ஆகும். புல், குச்சி, முள், கட்டை, கல், தூசி, உலோகத்துண்டு, எலும்பு, நகம் போன்றவை உடலில் துளைத்துக் கொண்டு துன்பத்தை விளைவிக்கும். நகம், கேடுற்ற ரஸம் போன்ற திரவப்பொருள்கள், விகாரப்பட்ட வாதம் முதலிய தோஷங்களால் உடலில் சீழ் பிடித்துத் துன்பம் விளைவிக்கும். இவை அனைத்தும் சல்யங்கள் எனப்படும். காதில் நீர், பூச்சி போன்றவை புகுந்து கொள்வதால் தோன்றும் துன்பமும் சல்ய தோஷமே ஆகும். முன் காலத்தில் போரில் கூரிய ஆயுதங்களான வேல், அம்பு போன்றவற்றைப் பகைவர் களின் மேல் எய்துவது வழக்கம். இன்றும் துப்பாக்கியால் சுடுதல், குண்டு வீசுதல் முதலியவற்றால் உடலுக்குள் புகுந்து கொள்ளும் துப்பாக்கி குண்டு போன்றவை சல்யங்களே.

சிறியவையோ, பெரியவையோ ஆன சல்யங்கள் உடலுக் குள் ஐந்து வகைகளில் புகுந்து கொள்ளக்கூடும். அவை (1) கீழ்த்திசைகளிலிருந்து வரும் சல்யம் மேல் நோக்கிப் புகும்

(2) மேலிருந்து வரும் சல்யம் கீழ் நோக்கிப் புகும் (3) சில சல்யங்கள் குறுக்காகக் கோணலாகப் புகுந்து கொள்ளும். (4) நேராக விடும் சல்யம் நேராகப் புகுந்து கொள்ளும் (5) பக்கங்களிலிருந்து வரும் சல்யம் குறுக்காகப் புகும்.

சில தோல், மாமிசப் பகுதிகளில் தங்கிவிடும். மற்றும் சில தமனி, சிரை, என்பு ஆகியவற்றில் தங்கும். சல்யம் எந்தப் பகுதியில் தங்கியுள்ளது என்பதை நுட்பமாக ஆராய்ந்து அறிந்து கொள்ள வேண்டும்.

சல்யம் தோல் பகுதியில் தங்கியிருந்தால் தோலின் நிறம் மாறும். வலியும், வீக்கமும் தோன்றும்.

சல்யம் மாமிசத்தில் தங்கியிருந்தால் வீக்கம் பரவி, சல்யம் புகுந்த வழி மூடப்படாமல் (ஆறாமல்), தொடு உணர்ச்சியைத் தாங்க இயலாதபடி அழற்சியும், பக்குவம் கொண்டும் காணப்படும்.

சல்யம் பேசிகளில் புகுந்து கொண்டிருந்தால் முன் கூறிய இலக்கணங்கள் காணப்படும். ஆனால் வீக்கம் இருக்காது.

சல்யம் ஸிரைகளில் புகுந்திருந்தால் இரத்த ஓட்டம் தடுக்கப்பட்டு ஸிரைகளில் வீக்கம், ஸிரைகளில் வலி, வீக்கம் ஆகியவை தோன்றும்.

சல்யம் நரம்புகளைச் சார்ந்திருந்தால் நரம்புகள் சுருங்கி கடும் வீக்கமும், கொடிய வலியும் காணப்படும்.

சல்யம் சுரோதஸ்களில் தங்கியிருந்தால் தடை காரணமாக அவற்றின் செயல் தடுக்கப்பட்டிருக்கும்.

சல்யம் தமனியில் தங்கியிருந்தால் நுரையுடன் கூடிய இரத்தம் ஒலியுடன் பெருகும். உறுப்புகளில் பிடிப்பு, நாவறட்சி, உமட்டல் ஆகியவை தோன்றும்.

சல்யம் என்பில் புகுந்திருந்தால் பலவகை துன்பங்கள், வீக்கம் ஆகியவை காணப்படும்.

சல்யம் இணைப்புகளில் தங்கியிருந்தால் என்புகளைச் சார்ந்திருக்கும் இலக்கணங்களும், இணைப்புகளில் கடும் வலியும் தோன்றும்.

சல்யம் குடலில் தங்கிய போது வயிற்று உப்புசம், விரணத்தின் வாயிலிருந்து சிறுநீர், மலம், உண்ட உணவு ஆகியவை வெளிவரும். உயிர் நிலைகளில் தங்கிய சல்யத்தால் அந்தந்த மர்மத்திற்குக் கூறியபடி துன்பங்கள் விளையும்.

சல்யங்கள் சிறியவையானாலும் வெளிப்படுத்தாமல் உடலிலேயே தங்கிவிட்டால், வாதம் முதலிய தோஷங்களைச் சீற்றமுறச் செய்யும்.

வீக்கம், பக்குவம் பெறுதல், கடும்வலி, நினைவிழத்தல் போன்ற துன்பங்களை விளைவித்து உயிரையும் போக்கக்கூடும். (ஸு-ஸூ-அத் 26).

இன்று சல்யங்கள் புகுந்துள்ள உடற்பகுதியை எக்ஸ்ரே படம் (ஸ்லோ 109-112) எடுத்தல் முதலிய உபாயங்களால் அறிந்து கொள்ள முடிகிறது. உடலுக்குள் சல்யம் புகுந்துள்ள பகுதியைச் சரியாகத் தெரிந்து கொள்ள பல வழிகளை ஸுசுருதர் கூறுகிறார்.

யானை, குதிரை மேல் சவாரி செய்வித்தல், மலை ஏறச் செய்தல், உடற்பயிற்சி செய்வித்தல், பள்ளத்தைத் தாண்டி குதிக்கச் செய்தல், இருமுதல்-தும்முதல்-சிரித்தல், உடலை முறித்துக் கொள்ளுதல் போன்ற செயல்களைப் புரியச் செய்தல் போன்ற உபாயங்களால் செயல்கள் புரியும் போது உடலில் துன்பம், வலி, வீக்கம் முதலிய தோன்றுமிடத்தை நுட்பமாக அறிந்து அந்தப் பகுதியில் சல்யம் தங்கியுள்ளதாக அறிந்து கொள்ள வேண்டும். (ஸூ-அத் 26-ஸ்லோ 13-15).

கண்களில் ஏதேனும் புகுந்தால் அதனால் வரும் கண்ணீர்ப் பெருக்கு அதை நீக்கிவிடுகிறது. நாசியில் புகுந்தால் தும்மல் அதை வெளிப்படுத்துகிறது. வாயில் புகுந்தால் இருமல் அதை வெளியேற்றுகிறது. சிறுநீர், மலம் முதலியவற்றுடன் குடல், வயிறு ஆகிய பகுதிகளில் உள்ள சல்யம் நீங்கும். ஆனால் இறுக்கமாகப் பற்றிய சல்யங்கள் இத்தகைய உபாயங்களால் நீங்கா. அவற்றை அறுவைச் சிகிச்சை மூலம்தான் வெளிப்படுத்த வேண்டும்.

அவ்வாறு சல்யங்களை வெளிப்படுத்தும் முறைகளாவன :-

1) பாசனம்:- அகத்தி, கோஷ்டம், அகில், சணல் வேர் முதலியவற்றை அரைத்துப் பூசுவதால் சல்யம் புகுந்துள்ள விரணம் பக்குவம் பெற்றுச் சீழ்பிடித்து மாமிசப்பகுதியில் ஆழமாகப் பதிந்துள்ள சல்யங்களும் இரத்தம், சீழ் முதலிய வேகத்துடன் தானே வெளிவந்து விடும்.

2) பேதனம்:- பக்குவம் பெற்றும் வெளிப்படாத சல்யத்தைக் கருவியால் விரணப் பகுதியைக் கீறி வெளியேற்ற வேண்டும்.

3) தாரணம்:- தக்க கருவிகள் இல்லாத போது சிரபில்வா முதலான மூலிகைகளை அரைத்துப் பூசி அப்பகுதிதானே பிளந்து போகச்செய்து சல்யத்தை வெளிப்படுத்த வேண்டும்.

4) பீடனம்:- விரணமாகி அதன் வாய் வழியே சல்யம் வெளிப்படும் நிலையில் இருந்தால் அப்பகுதியைப் பிசுபிசுப்புள்ள பொருள்களைக் கொண்டு செய்த உலர்ந்த பூச்சுகளை அப்பகுதியில் அழுத்தி வைத்துச் சல்யத்தை நீக்க வேண்டும்.

5) பிரமார்ஜனம்:- கண் முதலான நுட்பமான இடத்தில் உள்ள சல்யத்தை ஒற்றடம் கொடுத்தல், நீரான மருந்துப் பொருள்களை ஊற்றுதல், உபாயமாகக் கையால் அல்லது துணி முதலியவற்றால் துடைத்தல் ஆகிய முறைகளால் நீக்க வேண்டும்.

6) நிர்தாபனம்:- குழாய் வழியே மருந்துப் பொருள்களை மூக்கு முதலிய பகுதிகளுக்குள் ஊதி, அதன் வழியே சல்யம் வெளிப்படச் செய்தல் தகும். உணவுக் குழாயில் சிக்கிய உணவுப் பொருள், கபம் முதலியவற்றை நீண்ட மூச்சு இழுத்து விடுதல், அல்லது நஸிய முறை முதலியவற்றால் வெளிப்படுத்த வேண்டும். இம்முறை ஆங்கிலத்தில் INSUFFLATION எனப்படும். காதில் புகுந்துள்ள சல் யத்தை வெளிப்படுத்த இன்று இம்முறை பயன்படுத்தப்படும். (ஸூ - அத் 27 ஸ்லோ 5).

இது மூன்று வகையாகும் ;

i) வேலஸல்யா முறை : - இது பிராணாயாம முறையைப் போன்றது. உதடு, மூக்கு ஆகியவற்றை மூடிக் கொண்டு வேகமாக மூச்சு விடுதல் - இதனால் காது சுரங்கம் (EUSTACHIAN TUBE) வழியாகக் காற்று நடுக்காதைச் சேரும்.

ii) பொலிடஜர் முறை:- இரப்பர் பையின் வழியே ஒரு மூக்குத்துளையில் காற்று செலுத்தப்படும். அவ்வமயம் மற்றொரு மூக்குத் துளையும், வாயும் மூடிக் கொள்ளப் படும்.

iii) காதுச் சுரங்க நாடி வழி:- யூஸ்ட்ரேசியன் கைதேடர் வழியாக நேராகக் காற்று வாய் வழியாகக் காது சுரங்கத்திற்குச் செலுத்தப்படும்.

7) வமனம்:- வயிறு, உணவுக்குழாய்களில் உள்ள சல்யம் வாந்தி எடுக்கச் செய்வதால் வெளியேற்றப்படும்.

(STOMACH WASH TUBE) ரப்பர் குழாய் பயன்படுத்தப்படுகிறது.

8) பக்குவாசயத்தில் உள்ள சல்யம் அதாவது கிரகணி முதல் ஆஸனவாய் வரையில் உள்ள பகுதியில் உள்ள சல்யத்தை வெளியேற்றப் பேதியாகச் செய்யும் முறை பயன்படுத்தப் படும்.

9) விரணப்பகுதிக்குள் உள்ள சீழ் முதலான சல்யங்களைத் தூயநீர் அல்லது மருந்துப் பொருள்களாலான கஷாயம் என்பதைக் கொண்டு கழுவுதல் இம்முறையாகும்.

10) பிரதிமர்சம்:- விரலால் எண்ணெய் முதலான எண்ணெய்ப் பசை கொண்ட பொருள்களை நஸிய முறையில் தடவுவதால் சல்யம் வெளிப்படும்.

11) பிரவாஹணம்:- அபானம், சிறுநீர், மலம், கரு ஆகியவை தடைப்பட்டு நின்றபோது தோன்றும் துன்பங்களை நீக்க பிரவாஹண முறை பயன்படுத்தப்படும்.

12) ஆசூஷணம்:- எலும்பைச் சார்ந்த வாயு, காதில் புகுந்த நீர், கெட்ட இரத்தம் ஆகியவற்றை வெளிப்படுத்த கொம்பு, குழாய் முதலியவற்றின் ஒரு முனையை நோயுற்ற பகுதியில் வைத்து மற்றொரு முனையில் வாய் வைத்து உறிஞ்சுதல் மூலம் சல்யத்தை வெளியேற்றும் முறை இதுவாகும்.

13) அயஸ்காந்தம்:- (LOAD STONE) காந்தக்கல்லைக் கொண்டு விரணப்பகுதிக்குள் புகுந்துள்ள உலோகத்துண்டை வெளிப் படுத்த வேண்டும்.

14) ஹர்ஷணம்: - மனத்தில் சல்யம் போலத் துன்புறுத்திக் கொண்டிருக்கும் கவலை, வருத்தம் முதலான சல்யங்களை மகிழ்வித்தல் மூலம் போக்க வேண்டும்.

சல்யங்களை வெளிப்படுத்துவது இரு வகைப்படும்: (1) ஆழமாக உறுப்பின் நடுபாகத்திற்கும் மேலாகப் பதிந்திருந்தால் சல்யம் எவ்வாறு புகுந்ததோ அவ்வழியிலேயே அதை வெளிப்படுத்துவது. இதனால் சல்யம் வெளிவரும் வழி சிறியதாக இருக்கும். (ஸூ - அத் 27).

(2) சல்யம் ஆழமாக அல்லாமல் பதிந்தபோது அதன் வழிக்கு மாறான திசையில் அதை வெளிப்படுத்துதல் இரண்டாவது முறையாகும்.

வயிறு, மார்பு, கக்கம், தொடை இடுக்கு, விலா எலும்புகளின் மையப்பகுதி ஆகியவற்றில் புகுந்த கூர்மையான சல்யத்தைக் கையினால் எடுக்க முடிந்தால் அவ்வாறே எடுக்க வேண்டும். அவ்வாறு முடியாதபோது கருவியால் அதை அசைத்துத் தளர்த்திய பிறகு கருவியால் எடுக்க வேண்டும்.

சல்யங்களை எடுக்கப் பயன்படுத்த வேண்டிய கருவிகளைப் பற்றி அஷ்டாங்க ஹ்ருதயத்தில் கீழ் வருமாறு கூறப்பட்டுள்ளது:

தூஷ்ய சல்யங்களை ஸிம்ஹ, ஸர்ப்ப, மகர, வர்மி, கர்கட முகக் கருவிகளாலும், கண்களுக்குப் புலனாகாமல் மறைந்துள்ள சல்யங்களை கங்கம், பிருங்கம், குராம், சராரி, வாயஸம் எனும் முகங்களைக் கொண்ட கருவிகளாலும், தோலின் மேல் பதிந் துள்ள சல்யங்களை ஸந்தம்ச யந்திரத்தாலும், துளையுள்ள சல்யங்களைத் தாள யந்திரத்தின் உதவியாலும், மற்ற சல்யங் களை அவற்றிற்கு ஏற்ற கருவிகளைக் கொண்டும் நீக்க வேண்டும்.

விசல்யக்ன மர்மங்கள் என உடலில் மூன்று உயிர் நிலைகள் உள்ளன. அவற்றில் சல்யம் புகுந்தால் துன்பம், வீக்கம் இல்லாத போது அவற்றை நீக்கியதும் அடிபட்டவர் மரிப்பார். அந்த சல்யங்களை நீக்காமல் விட்டால் பிழைத்திருப்பார். ஆகவே அவற்றை நீக்காமல் அப்படியே விட்டு வைத்திருக்க வேண்டும்.

இன்றும் சில உடற்பகுதிகளில் நுட்பமான உயிர் நிலைப் பகுதிகளில் புகுந்த துப்பாக்கிக் குண்டு போன்ற சல்யங்களை மருத்துவர்கள் நீக்காமல் விட்டு வைப்பது குறிப்பிடத்தக்கது.

சல்யங்களை நீக்கும்போது நோயாளி நினைவிழந்தால், முகத்தில் சிறிது சிறிதாகக் குளிர்ந்த நீரைத் தெளிக்க வேண்டும். கீறும் போது உயிர் நிலைகளுக்குக் கேடு வராமல் கவனம் கொள்ள வேண்டும்.

**பச்சாத்கர்மா**

சல்யத்தை நீக்கிய பிறகு விரணத்திலிருந்து பெருகும் இரத் தத்தைத் துடைத்து வியர்க்கச் செய்யத்தக்க விரணத்தை நெய், நெருப்பு முதலானவற்றின் துணையுடன் வியர்க்கச் செய்து சுடத் தக்க விரணத்தை நெருப்பின் உதவியால் சுட்டும், பிறகு நெய்யும் தேனும் கலந்து பூச வேண்டும். (ஸு-அத்27-ஸ்லோ12).

விரணத்திற்குத் தக்க கட்டுப் போட்டு தக்க உணவு, பணிவிடை, பத்திய முறை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

தொண்டைப் பகுதிக்குள் சிக்கிய சல்யம் அரக்கு போன்ற தாயின் ஒரு குழாயைத் தொண்டைக்குள் செலுத்தி அதற்குள் நெருப்பில் காய்ச்சிய சூடான கம்பியில் அச்சல்யத்தை ஒட்டிக் கொள்ளச் செய்து, பிறகு குளிர்ந்த நீரின் உதவியால் கம்பியைக் குளிரச் செய்தால் சல்யம் கெட்டிப்பட்டுக் கம்பியில் ஒட்டிக் கொண்டு விடும். அப்பொழுது அதை எளிதில் நீக்கி விடலாம்.

என்புத்துண்டு போன்ற பொருள் தொண்டையில் சிக்கிக் கொண்டால் தலை முடியைப் பந்து போலச் சுருட்டி திடமான கயிற்றின் முனையில் கட்டி அப்பந்தை விழுங்கச் செய்ய வேண்டும். தொண்டை வரை உணவு உட்கொள்ளச் செய்து பிறகு வாந்தி எடுக்கச் செய்க. அப்பொழுது பந்து போன்ற தலை முடி சல்யத்தில் சிக்கிக் கொள்ளும். அதைக் கட்டியுள்ள கயிற்றை உபாயத்துடன் அசைத்து வெளியே இழுத்தால் மெல்ல சல்யம் வந்துவிடும்.

இன்று PROBANG எனப்படும் கருவி (குதிரை மயிர் கட்டப்பட்டுள்ள கருவி) இத்தகைய சல்யங்களை நீக்கப் பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது.

தொண்டையில் சிக்கிக் கொண்ட மீன் எலும்பு போன்ற வற்றை வெளியேற்ற மென்மையான குச்சு போன்ற முனை கொண்ட கருவி பயன்படுத்தப்படும். அவ்வாறு வெளியேற்ற இயலாவிடில் அறுவைச் சிகிச்சையால் நீக்க வேண்டும்.

ஆறு, குளம், கிணறு முதலியவற்றில் முழுகி விபத்துக் குள்ளானவர்கள், கழுத்தை நெரித்தல் (THROTENING), கொடி கயிறு முதலியவற்றால் கழுத்தை இறுக்குதல், தூக்கு போட்டுக் கொள்ளுதல் (STRANGULATION OR HANGING) முதலியவற்றால் விபத்துக்கு உள்ளானவர்கள் ஆகியவர்களுக்கு ஸுசுருதர் கூறிய சிகிச்சை முறைகளே இன்றும் பின்பற்றப்படுகின்றன. (ஸூ-அத்27-ஸ்லோ20,22).

## ஸந்தான கர்மா (PLASTIC SURGERY)

காது, மூக்கு, உதடு ஆகிய பகுதிகள் அறுபட்டபோது வேறு உடற்பகுதியிலிருந்து தோலை எடுத்து இணைத்துச் சிசிச்சை செய்யும் முறையை ஸுசுருதர் தம் ஸம்ஹிதையில் விரிவாக உரைத்திருப்பது சிறப்பான பொருளாகும். டாக்டர் நியூஸர்ஜர் என்னும் விஞ்ஞானி இந்திய மருத்துவ முறையை எடுத்துக்

காட்டாகக் கொண்டே பத்தொன்பதாம் நூற்றாண்டில் பிளாஸ்டிக் ஸர்ஜரிக்கு “ஆங்கில மருத்துவத்தில் வழி கோலப்பட்டது” எனக் குறிப்பிட்டுள்ளார். (ஸு-அத்16- ஸ்லோ14,27-32).

மூக்கை இணைக்கும் (RHINO PLASTY) முறை அலோபதி மருத்துவத்தில் ஸுசுருதரின் வழியை அப்படியே தழுவியதாகும். அதற்குப் பெயரும் INDIAN METHOD எனக் குறிப்பிடப்பட்டுள்ளது கவனிக்கத்தக்கது. (ஸு-அத்-16).

இத்தாலி, பிரெஞ்சு முதலிய நாடுகளில் பழக்கப்பட்டிருந்த முறைகள் சில தவறுகளுடன் கூடியவை. எனவே, அவை கைவிடப்பட்டு நம் நாட்டு முறையையே மேலை நாட்டினர் பின்பற்றியதையும் இங்கு அவசியம் குறிப்பிட்டேயாக வேண்டும்.

பேசிகள், நரம்புகள், என்புகள் முதலியவற்றையும் வேறு பகுதியிலிருந்து எடுத்து இணைக்கும் முறைக்கு வழிகாட்டியது ஸுசுருதரின் இம்முறையே என்றால் அது மிகையாகாது.

மேலும் இதயம், சிறுநீர்க் குண்டிகை, கல்லீரல் போன்ற பகுதிகளையும், வேறு நபரின் உடலிலிருந்து பெற்று இணைக்கும் முறை வெற்றி முகம் கண்டிருப்பது (அலோபதி மருத்துவத்தில்) பாராட்டத்தக்கதே. நம் நாட்டில் குழந்தை பிறந்த ஆறாம் மாதம் அல்லது எட்டாம் மாதம் (சாஸ்திரப்படி) காது குத்துதல் மங்கலச் சடங்காகக் கொண்டாடப்படுகிறது. இயற்கையாகவே காதில் சிரை, தமனி முதலியவை அற்ற துளை ஏற்படுத்தத்தக்க இடம் நுட்பமானது உண்டெனவும், வெயில் காதில் படும்படி பார்த்தால் அந்த இடம் கண்களுக்குப் புலனாகும் என்றும் கூரிய கருவியால் துளை செய்து மெல்லிய நூலைப் புகுத்திக் கட்ட வேண்டும் என்றும் கூறுகிறார் ஸுசுருதர். தவறான இடத்தில் குத்துவதால் தோன்றும் துன்பங்களுக்கு சிகிச்சை முறைகளையும் அவர் கூறுகிறார் (ஸு-அத்16-ஸ்லோ14-32).

(காதில் தங்க நகை அணிவதால் நுட்பமான நோய்க் கிருமிகள் அணுகா என்பது அதர்வவேதத்தில் கூறப்பட்டுள்ளது).

துளைக்கப்பட்ட காதில் தோஷங்களாலோ, அடிபடுதலாலோ (புறக்காரணத்தாலோ) காதணி அணியும் பகுதி பிளவு பட்டால் அல்லது பிறவியிலேயே காது சரியான தோற்றம் கொண்டிராமல் இருந்தால் அதைச் சீர்ப்படுத்த அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும்.

காது இணைக்க வேண்டிய முறைகள் (1) நேமிஸந்தானகம், (2) உத்பலபேத்யகம் (3) வல்லூரகம் (4) ஆஸங்கிமம் (5) கண்டகர்ணம், (6) ஆஹார்யம் (7) நிர்போதம் (8)

வியாயோஜிமம் (9) கபாட ஸந்திகம் (10) அர்தகபாடஸந்திகம் (11) ஸங்க்ஷிப்தம் (12) ஹீநகர்ணம் (13) வல்லீகர்ணம் (14) யஷ்டிகர்ணம் (15) காகோஷ்டிகம் எனப் பதினைந்து வகைகள் என்றும், முதலில் கூறப்பட்ட பத்து வகைகள் எளிதில் அறுவைச் சிகிச்சையால் செய்யத்தக்கவை என்றும் மற்ற ஐந்தும் சிகிச்சைக்கு உட்படாதவை என்றும் ஸுசுருதர் விளக்கியுள்ளார்.

## இணைக்கும் முறை

(1) பூர்வகர்மா: அக்ரோபஹரணீயம் (ஸூ - அத்5) எ அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளபடி காது இணைப்புக்குத் தேவையான கருவிகளையும் சிறப்பாக சுராமண்டம் (கள் தெளிவு), பால், நீர், தானியாமிலம், கபால சூர்ணம் ஆகியவற்றையும் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு நோயாளியின் தலைமுடியை நன்கு முடித்து இலேசாக உணவு உட்கொள்ளச் செய்து காது அறுந்துள்ள அல்லது குறை பெற்றுள்ளவரை அசையாமல் பிடித்துக் கொள்ளச் செய்து, பிறகு ஸந்தானமெனும் அறுவைச் சிகிச்சை செய்ய முற்பட வேண்டும்.

## கர்மா (காதின் பிளந்த பகுதிகளை இணைத்தல்)

துண்டித்தல், பிளத்தல், கீறுதல், குத்துதல் எனும் நான்கு வகையான அறுவைச் சிகிச்சைகளில் நோயாளிக்கு எதைப் பயன்படுத்த வேண்டும் என்பதை முடிவு செய்து கொள்ள வேண்டும். குறையுள்ள காதில் உள்ள இரத்தம் தூயதா, தோஷங்களால் (வாத-பித்த-கபங்களால்) கேடுற்றதா என்பதை அறிந்து, கெட்டிருந்தபோது தோஷத்திற்கு ஏற்பக் கழுவி விட வேண்டும். எவ்வாறெனில், காதில் பரவும் இரத்தம் வாதத்தால் கேடுற்றதாக இருந்தால் புளிக்காடி, வெந்நீர் ஆகியவற்றைக் கொண்டு கழுவ வேண்டும்.

இரு காதுகளையும் கழுவி அறுந்த இரு காதின் பாளிப் பகுதிகளையும் ஏற்றத் தாழ்வின்றிச் சீராக இணைத்து, ஊசி நூல் கொண்டு தைக்க வேண்டும். (ஸூ-அத்16-ஸ்லோ10). பிறகு தேன், எண்ணெய் கலந்து பூசி பஞ்சை அப்பகுதி மேல் வைத்து நூலால் இறுக்கமாகவோ, தளர்ச்சியாகவோ இல்லாமல் நடுநிலையாகக் கட்டி விட வேண்டும். விரணத்திற்குத் தக்க சிகிச்சை செய்க. மூன்று நாட்கள் அப்பகுதிமேல் எண்ணெய் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்து பிறகு கட்டை அவிழ்த்துத் துன்பமேதும் இல்லாவிடில் மெல்ல மெல்ல காதுத் துளையை வளர்க்க (பெரியதாக்க) காதோலை அணியத்தக்கதாகச் செய்ய வேண்டும். யவதானியம், அமுக்கராங்கிழங்கு, அதிமதுரம், எள்

ஆகியவற்றைச் சேர்த்து அரைத்து அப்பகுதியில் பூசினால் பாளி வளரும்.

கர்ணபாளி சரியாக அமைந்திராவிடில் கன்னத்திலிருந்து சிறிது மாமிசத்தை வெட்டி எடுத்துப் பாளியை உருவாக்கும் முறையை ஸுசுருதர் விளக்கியுள்ளார். (ஸூ-அத் 16-ஸ்லோ22-23)

## வெட்டுண்ட மூக்கை இணைக்கும் முறை

மூக்கின் அறுபட்ட பகுதிக்குச் சரியாக ஏதேனும் ஒரு மரத்தின் இலையைக் கொண்டு அறுபட்ட பகுதி அளவு எடுத்து அந்த அளவிற்கு மூக்கைச் சார்ந்துள்ள கன்னப்பகுதியின் தோலை சிரைகளுக்கோ தமனிகளுக்கோ, நரம்புகளுக்கோ சேதம் விளையாதபடி சரியாக (முன் அளவெடுத்த இலையின் உதவியால்) சீராகப் பிய்த்து எடுக்க வேண்டும். அடிப்பகுதியில் கத்தரிக்கப்பட்ட தோல் கன்னத் தோலுடன் ஒட்டிக் கொண்டே இருக்க வேண்டும். அவ்வாறு இருந்தால்தான் மூக்கில் இணைத்த தோல் பகுதி நன்கு வளரும். தமனியைச் சார்ந்த ஸெல்கள் அதிகமுள்ள பகுதியைக் கண்டு, அப்பகுதித் தோலை இணைக்க முற்படுவது நல்லது. அறுந்த மூக்குப் பகுதியில் (அடிப்பகுதி இணைப்பு அறுந்து போகாமல்) வைத்து வெட்டி எடுத்த தோல் மாமிசப் பகுதியைச் சரியாகப் பொருத்தித் தைக்க வேண்டும். மூன்று நாட்கள் சென்ற பின் சிறு குழாய்களைப் போன்ற இரு குச்சிகளைச் சுவாசத்திற்குத் தடையில்லாதபடி வைத்து இணைத்த தோலை மூக்குக்குச் சரியாக உயர்த்தி வைக்க வேண்டும். மூக்கு சரியான நிலையில் இருக்கும்படியும், மூச்சிழுத்து விடத் தடங்கல் நேராதபடியும் மூக்கை அமைக்க வேண்டும். பிறகு சிவப்புச் சந்தனம், அதிமதுரம், ரஸாஞ்சனம் ஆகியவற்றின் தூளைத் தூவ வேண்டும். அதன் மேல் பஞ்சை வைத்து எள் எண்ணெயை விட்டு வைக்க வேண்டும். நோயாளிக்கு நெய்யைப் பருகத் தர வேண்டும். நெய் செரிமானமடைந்த பிறகு மென்மையான பேதியாகச் செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். விரணம் ஆறிய பிறகு மூக்கின் இணைப்புத் தோல் கன்னத்துடன் சேர்ந்திருந்த பகுதியிலிருந்து கத்தரித்து விட வேண்டும். பொதுவாக பத்தாவது நாள் முதல் பதினான்காம் நாளுக்குள்ளாக இந்தத் தொடர்பு கத்தரிக்கப்படும். ஆனால் அதற்குப் பிறகும் மூக்கின் இணைப்பு சீராக்கப்பட வேண்டியிருந்தால் இதுவும் தாமதப் படும். இந்த முறையால் மூக்கு முழுமையாக இயற்கையாக இருப்பது போலவே காணப்படும்.

உதடு அறுந்தாலும் இம்முறைப்படியே இணைக்கப்படும். ஆம, பக்வ விரணங்களைப் பற்றியும், ஆகந்துஜ (எதிர்பாராமல் புறத்தாக்குதலால் தோன்றும்) விரணங்களைப் பற்றியும் மிக விளக்கமான சிகிச்சை முறைகளை ஸுசுருதர் தம் நூலில் விளக்கி யுள்ளார். (ஸூ-அத்17).

**திடீர் தாக்குதலால் தோன்றும் விரணங்களாவன:-** (1) சின்னம் (EXCISED WOUND) (2) பின்னம் (DEEP PUNCTURED WOUND) (3) வித்தம் (SUPERFICIALLY PUNCTURED WOUND OR GUN SHOT WOUND OR POISONED WOUND) (4) க்ஷதம் (INCISED WOUND) (5) பிச்சிதம் (CONTUSED WOUND OR CONTUSION) (6) கிருஷ்டம் (LACERATED WOUND) என நுட்பமாகப் பிரிவுகளைக் கூறி அவற்றின் இலக்கணங் களையும், சிகிச்சை முறைகளையும் விவரித்துள்ளார்.

**ஆகந்துஜ ஸத்யோவிரணங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளாவன:-**

(1) இரத்தப் பெருக்கைத் தடுத்தல் (ARREST OF HAEMORRAGE)

(2) காயத்தைத் தூய்மைப்படுத்துதல் (STERILIZATION OF WOUND)

(3) விரணங்களின் விளிம்புகளைச் சேர்த்துத் தைத்தல் (APPOSITION OF SURFACES)

(4) அலம்புதல் (DRAINAGE)

(5) உறுப்புகளுக்கு ஓய்வு தருதல் (REST)

(6) ஆற்றுதல் (HEALING)

(7) பத்தியமான உணவு முதலியவற்றைப் பின்பற்றுதல் (GENERAL TREATMENT) என முறை வகுத்துக் கூறியுள்ள வகை இன்றைக்குப் பின்பற்றத் தக்கதாக உள்ளது.

## வித்ரதி (சீழ்க்கட்டி)

வித்ரதி என்பது (ABSCESS) சீழ்க்கட்டி. இது பல வகைப்படும்.

(1) குத வித்ரதி (ISCHIO RECTAL ABSCESS, PELVIRECTAL ABSCESS)

(2) நாபி வித்ரதி (UMBELICAL ABSCESS)

(3) குக்ஷி வித்ரதி (PUS COLLECTION IN THE LUMBAR REGION)

(4) *வஸ்தி வித்ரதி* (CYSTITIS OR PELVIC ABSCESS)

(5) *வங்க்ஷண வித்ரதி* (PSOAS ABSCESS OR BUBO)

(6) *தக்ஷிண வங்க்ஷண வித்ரதி* (APPENDICULAR ABSCESS)

(7) *விருக்க வித்ரதி* (PERINEPHRIC ABSCESS)

(8) *யக்ருத் வித்ரதி* (LIVER ABSCESS)

(9) *பிலீஹவித்ரதி* (SPLEENIC ABSCESS)

(10) *ஹ்ருதய வித்ரதி* (SUBPHRENIC ABSCESS)

(11) *க்லோம வித்ரதி* (PERITONSILAR ABSCESS OR LUNG ABSCESS OR BRAIN ABSCESS)

(12) *மக்கல வித்ரதி* (PUTRID ENDOMETRITIS OR PUERPERAL ABSCESS OR SEPSIS)

(13) *மஜ்ஜபரிபாகம்* (ACUTE INFECTIVE OSTEOMYELITIS).

)வற்றின் இலக்கணங்கள், தோன்றக் காரணங்கள், சிகிச்சை முறைகள் முதலியன ஸுசுருதஸம்ஹிதை நிதானஸ்தானத்தில் (அத்-9) விளக்கப்பட்டுள்ளன.

கிரந்தி (TUMOURS), அபசி (CYSTS) ஆகியவற்றின் விளக்கம் நிதான ஸ்தானத்தின் பதினோராம் அத்தியாயத்தில் காணலாம். அர்புதம் என்பது TUMOUR OR NEOPLASMS எனப்படும். இதில் பல வகைகள் உள்ளன. தற்கால மருத்து வத்திலும் எளிதில் தீர்க்கக் கூடிய அர்புதம் இரு வகைகளாகக் கூறப்பட்டுள்ளது.

ஆனால் உயிர் நிலைகளில் தோன்றும் அர்புதம் உயிருக்குத் தீங்கு விளைவிக்கக் கூடியது. இத்தகைய அர்புதம் அலோபதி மருத்துவத்தில் புற்று நோய் (CANCER) எனப்படுகிறது.

வஸார்புதம் (LIPOMA), பீதார்புதம் (XANTHOMA), சார்டி லேஜார்புதம் (CHONDROMA), அஸ்திஅர்புதம் (OSTEOMA), மஜ்ஜார்புதம் (MYELOMA), மாம்ஸார்புதம் (MYOMA), ஸௌத் ரார்புதம் (FIBROMA), நாடி அர்புதம் (NEVROMA), தந்தார்புதம் (DONTOMA), திவகங்குரார்புதம் (PAPILLOMA) என்பன அந்தந்த தாதுக்களைச் சார்ந்து தோன்றுவனவாகும்.

ஒரு அர்புதத்தைச் சார்ந்து துன்பம் விளைவிப்பதாகி வேறு அர்புதம் தோன்றுவதுண்டு. அலோபதி மருவத்துவத்தில் SARCOMA, CANCER எனப்படுபவை இவ்வகையாகும்.

உதடு, நாக்கு, வாய், உணவுக் குழாய், வயிறு, சிறு குடல், பெருங்குடல், (பெண்களின்) கருப்பை, கொங்கை, ஆடவர்களின் உடலில் தோன்றும் அஷ்டீலா எனப்படும் கட்டி, ஆண் குறி ஆகிய உறுப்புகளில் தோன்றும் அர்புதங்கள் இத்தகையவை,

புற்று நோய் நான்கு வகைப்படும். அவை : (1) எபிதீலியோமா (EPITHELIOMA) (2) SPHEROIDAL - CELLED CANCER (3) COLUMNAR CANCER (4) COLOID CANCER என்பனவாகும்.

மாம்ஸார்புதம் தோன்றக் காரணங்களை ஸுசுருதர் கூறுகிறார். குத்தப்படுதலால், கத்தியால் அடிபட்டதால் மாமிசம் கெடுதலாகி எண்ணெய்ப்பசை கொண்டு தோல் நிறத்துடன் பக்குவம் பெறாத கல்லைப் போலக் கடினமாக, நிலையான வீக்கம் கொண்ட மாம்ஸார்புதம் தோன்றும். மாமிசம் மிகுதியாக உண்பவருக்கு இது தோன்றும் என அவர் குறிப்பிட்டுள்ளார். உலகில் வட அமெரிக்காவில் இந்நோயால் மடிபவர்களின் எண்ணிக்கை மிகுதியாக இருப்பதற்குக் காரணம் அந்நாட்டவர் புலால் உணவு மிதமிஞ்சி உட்கொள்வதேயாகும்.

அர்புதங்களில் ரக்தார்புதமும், மாம்ஸார்புதமும் சிகிச்சைக்கு உட்படாதவை என்பதால் இவற்றிற்குச் சிறப்பான சிகிச்சை முறை விளக்கப்படவில்லை. இன்றைய மருத்துவத்திலும் ஸர்கோமா, கார்ஸிகோமா என்பவை சிகிச்சைக்கு உட்படாதவை என்றே கூறப்படுகின்றன. ஏனெனில் இந்த அர்புதங்களில் 'த்விரர்புதோத்பத்தி' (METASTASIS) உண்டாகும். அதனால் அவற்றை அடியோடு (COMPLETE EXCISION) கத்தரித்து எடுத்தல் இயலாததாகும். இன்று 'க்ஷகிரணம்' 'ரேடியம்' 'ஸைடோடாக்டிஸிக்', 'யாகிமோ தெரபி' முதலிய வகைகளில் சிகிச்சை செய்வதால் ஓரளவு வெற்றி காணப்படுகிறது. (நிதா - அத் 11 - ஸ்லோ 22).

## ம் (SIMPLE GOITRE)

தொண்டையில் சிறியதாகவோ, பெரியதாகவோ சீற்றமடைந்த வாயு கபங்களாலும், கொழுப்பாலும் மாமிசத்தைச் சார்ந்து தோன்றும் கட்டி கலகண்டமாகும். இது தொண்டைப் பகுதியில் உள்ள 'அவடுகா கிரந்தி' (THYROID) வீங்குவதால் தோன்றுவதாகும். உடல் நலத்திற்கு இந்த கிரந்திகள் இன்றியமையாதவை. இவற்றால் உடல் வளர்ச்சி, உணவு செரிமானமாதல் ஆகியவை சீராக நடைபெறும். இந்தக் கிரந்தி ஜம்புகி (அயோடின்) என்பதைக் கிரஹித்து அதனால் 'தைரோக்ஸின்' எனும்

திரவத்தைத் தோற்றுவிக்கும். இந்தத் திரவம் இரத்தத்தில் கலப்ப தால், முன் கூறிய இரண்டு செயல்களும் சீராக நடைபெறும். இந்தத் திரவம் குறைந்து போனால் அல்லது அளவில் மிகுந்தால் அப்பகுதியிலும், உடல் முழுவதிலும் கோளாறு ஏற்படும். மற்ற உடற் பகுதியை விட இந்தக் கிரந்தி இந்தத் திரவம் குறைவ தாலோ, மிகுதலாலோ மிக்க துன்பத்திற்கு உள்ளாகும். அதனால் உட்கொள்ளும், பருகும் உணவுப் பொருள்களில் 'ஜம்புகி' (அயோ டின்) குறையும். கொழுப்பு மிகும். விடமின் (A,B) குறைவுபடும். பாஸ்பேட் குறையும், குடலில் என்ஸைம்கள் குறையும். இந்தக் காரணங்களால் உணவுப் பொருள்களில் தேவையான அளவு அயோடின் தோன்றினாலும் அவை சரியாகத் தாதுக்களில் கலவாமல் (செரிமானமாகாமல்) போகும். அதனால் இந்த கிரந்தியில் 'தைரோக்ஸின்' தகுந்த அளவு தோன்றுவதில்லை. முதலில் இந்தக் குறைபாடு கிரந்தியில் தோன்றுவதால் அவை பெரியவையாகின்றன.

கலகண்டம் எனும் இந்நோய் நீர்ப்பாங்கான இடங்களில், சிறப்பாக இமாலயமலைத் தொடர்சரிவில் (ENDEMIC) உள்ள நாடுகளில் மிகுதியாகக் காணப்படுகிறது. இப்பகுதியில் உள்ளவர் களின் உணவு, பருகும் நீர் ஆகியவற்றில் 'ஜம்புகி' எனும் கனிமம் குறைவாகக் காணப்படுவதே இந்நோய்க்குக் காரணமாகும்.

ஆனால் இயற்கை (NATURE) இக்குறைபாட்டை நீக்க வழி வகுத்துள்ளது. எலுமிச்சை, இஞ்சி, வெங்காயம், வெள்ளைப் பூண்டு முதலான உணவுப் பொருள்கள் இங்கு அதிகமாக விளை கின்றன. இவற்றில் ஸேந்திரிய ஜம்புகி (ORGANIC IODINE) அதிக அளவில் உள்ளதால், இப்பொருள்களைப் பயன்படுத்தி இப்பகுதி மக்கள் உடல் நலம் பெற வழி ஏற்பட்டுள்ளது.

கலகண்டம் எனும் நோய் உடலுக்கு மிக்க தேவையான உறுப்புகள் உள்ள பகுதியில் தோன்றுவதாகும். கட்டி பெரியதாக வளர வளர அந்த உறுப்புகளும் கோளாறுக்கு உட்படும். முக்கியமாக சுவாசக் குழாய் மேல் அழுத்தம் உண்டாவதால், அது நசுங்கி ஒரு பக்கமாக நகர்ந்து விடுவதால் மூச்சுத் தடை உண்டாகும். குரல்வளை நரம்புகளின் மேல் (RECURRENT LARYNGEAL NERVES) அழுத்தம் ஏற்படுவதால் குரல் மாறுபாடு போன்ற கோளாறுகள் உண்டாகும். இரத்த நாளங்களின் மேல் அழுத்தம் உண்டாவதால் தொண்டைப்பகுதி ஸிரைகள் வீங்கும். மூளைப்பகுதிக்கு இரத்த ஓட்டம் சீராக இருக்காது. அதனால் நினைவிழத்தல், தலைசுற்றல் முதலியன தோன்றும். உணவுக்குழாய் மேல் அழுத்தம் ஏற்படுவதால் உணவு விழுங்கு

வதில் துன்பம் உண்டாகும். சுவையின்மை முதலியவையும் தோன்றும். முக்கியமாக தைரோக்ஸின் அதிக அளவில் இரத்தத்தில் கலந்தால் கண்கள் பிதுங்குதல், கண்கள் அகன்று விரிவடைதல், கண்ணிமைகளை மூடுவது கடினமாதல், கீழ் நோக்கிப் பார்வையைச் செலுத்தும் போது இமைகள் கீழ் நோக்கி அசையாமை, வாதம் மிகுவதால் இதயம் நாடி ஆகியவை நிமிடத்திற்கு 120 முதல் 150 வரை துடிப்பு மிகுதல், கைகள் நடுங்குதல், சிடுசிடுப்பு மிகுதல், சிறிதளவு வேலை செய்தாலும் பெருமூச்சு வாங்குதல், உடலின் வலிமை நாளுக்கு நாள் குன்றிப்போதல் போன்றவை ஏற்படும். இந்நிலையில் பஹிர்நேத்ர கலகண்டம் (EXOPTHALMIC GOITRE) எனும் நோய் தோன்றும்.

கலகண்டத்திற்குச் சிகிச்சை முறைகள் ஸுசுருதஸம்ஹிதை, சிகித்ஸாஸ்தானத்தில் அத் 18ல் ஸ்லோ 41 - 52ல் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

மருந்துகளால் நோய் நீங்காவிடில் அதற்குரிய அறுவைச் சிகிச்சையும் கூறப்பட்டுள்ளது.

அறுவை முறையால் அவபாடனம் அல்லது விதாரணம் செய்து கெட்டுப் போன கொழுப்புப் பகுதியை வெட்டி எடுத்து விட வேண்டும். பிறகு தையல் போட வேண்டும். பிறகு மஜ்ஜை, நெய், தேன் முதலியவற்றால் அப்பகுதியைச் சுடும் சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். இதனால் மீண்டும் நோய் தோன்றாது.

சிகிச்சையால் சுட்ட இடத்தில் தேனையும், நெய்யையும், தடவ வேண்டும். அன்னபேதி, மயில் துத்தம், மஞ்சள் ஆகியவற்றின் துகளைத் தூவ வேண்டும். அல்லது இப்பொருள் களைச் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும்.

கொழுப்பால் தோன்றும் கலகண்டத்தில் கெட்டுப் போன கொழுப்புப் பகுதியை மட்டும் அறுவைச் சிகிச்சையால் நீக்கும் முறையை ஸுசுருதர் கூறியுள்ளார். (சிகி - அத் 18-ஸ்லோ 51,52). மற்ற வகை நோய்களுக்கு மருந்துகளை மட்டுமே பயன்படுத்த வேண்டும். இன்று ஆங்கில மருத்துவத்திலும் கெட்டுப் போன பகுதிகள் (PATHOLOGICAL TISSUES) மட்டும் (ENUCLEATION) வெட்டி எடுக்கப்படுகின்றன. தைராயிட் கிரந்தியின் (SECRETIONS) செயலுக்குக் குந்தகம் விளையாமல் பாதுகாத்து அறுவை செய்யப்பட வேண்டுமென்பதை இன்றைய மருத்துவ முறை போல ஸுசுருதர் உணர்ந்திருப்பது கவனத்தில் கொள்ளத்தக்கது. (சிகி-அத் 18-ஸ்லோ 52).

அறுவைச் சிகிச்சையைத் தவிர்த்து அயோடின் கலந்த மருந்துகள், அல்ட்ராவயலெட் கிரணத்தைப் பயன்படுத்தி எரிக்கும் முறை, அயோடின், விடமின் மாத்திரைகளை உட்கொள்ளச் செய்தல் முதலிய முறைகளால் நோயின் துவக்கத்தில் சிறப்பாகச் சிகிச்சை செய்யலாம். இன்று கலகண்ட சிகிச்சையில் 'ரேடியோ ஐஸொடோப்ஸ்' முறை பழக்கத்தில் உள்ளது.

## பிரத்னம் அல்லது விருத்தி (SCROTAL SWELLING)

வயிற்றுக்குக் கீழ்ப் பக்கத்தில் உள்ள உடற்பகுதியில் தோஷங்கள் சீற்றமடைந்து விரைப்பகுதியை அடைந்து அதை வீங்கச் செய்யும். இந்நோய் ஏழு வகைப்படும். அவையாவன :-

(1) வாதத்தால் தோன்றுவது (பல நாட்களாக இருப்பதாகும்) - CHRONIC ORCHITIS

(2) பித்தத்தால் தோன்றுவது (கடுமையானது) - ACUTE ORCHITIS

(3) கபத்தால் தோன்றுவது (பல நாட்களாக இருப்பது) - CHRONIC OR TUBERCULOUS ORCHITIS

(4) கொழுப்பால் தோன்றுவது (கபத்தால் தோன்றுவது) - ELEPHANTIASIS OF SCROTUM OR SIMPLE TUMOUR

(5) இரத்தத்தால் தோன்றுவது (ஸிரைகளின் கோளாறால் ஏற்படும்) - HAEMATOCELE

(6) மூத்ரஜவிருத்தி (விரைப்பையில் நீர் சேர்தல்)-HYDROCELE

(7) ஆந்த்ரவிருத்தி (குடல் இறக்கம்) - HERNIA

இவற்றில் குடல் இறக்கம் தவிர மற்றவை விரைகளில் தோன்றும் வீக்கத்தின் வேறுபட்ட நிலைகளாகும். இவற்றில் சில விரைப்பகுதியில் அடிபடுதலாலும், தொற்றும் உயிர் அணுக்களாலும் தோன்றுபவை அல்லது வாதரத்தத்தால் தோன்றும் காய்ச்சல், பாஷாண கர்தபம் எனும் நோய் ஆகியவற்றால் தோன்றுபவையாகும். (நிதா - அத் 12).

விரைகளைச் சுற்றியுள்ள (TUNICA VAGINALIS) புரைகளுக்குள் நீர் சேர்ந்து விடுவதால் தோன்றுவது ஹைட்ரோஸில் எனப்படும். நீர்ப்பெருவயிறு (ஜலோதரம்) போல இதுவும் நிணநீர் (லஸீகாவாஹினிகள்) விரைப்பை ஆவரணத்தில் நிரம்பி விடுவதால் ஏற்படும் நோய் ஆகும்.

ஸுசுருதர் இதற்குச் சிறுநீரை அடக்கி வைப்பது காரணமென்பார். மற்றும் சிலர் யானைக்கால் நோய்க் கிருமிகளால் தோன்றுவது என்பர். (நிதா-அத் 12-ஸ்லோ 36).

பொதுவாக விரைவீக்க நோய் வகைகள் அனைத்திலும் காணப்படும் இலக்கணங்களாவன:- சிறுநீர்க்குண்டிகை, இடுப்பு, விரை, ஆண்குறியாகிய பகுதிகளில் வலி, அபான வாயு தடை படுதல், விரைகளில் வீக்கம் என்பனவாகும். வாதபித்தகப இரத்தங்களின் சீற்றத்தால் தோன்றும் விரை வீக்கங்களுக்குத் தனித்தனியாக இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன.

குடல் இறக்கம் என்பது விரை வீக்கத்தில் தனிப்பட்ட வகையாகும். விரைகளில் தோன்றுவது என்பதும் இந்நோய்க்கு வாதம் காரணம் என்பதும் தவிர மற்ற வகைகளில் இது விரை வாதங்களில் தனி நோய் எனவே குறிப்பிடத்தக்கதாகும். குடலில் வீக்கமோ, வேறு கோளாறோ ஏற்படுவதில்லை. ஆனால் வயிற் றில் தன் இருக்கையை விட்டு நீங்கி, விரை உறைப் பகுதிக்குள் இறங்குவதே இந்நோயின் முக்கிய இலக்கணமாகும். இந்நோய் ஆங்கிலத்தில் 'ஹெர்னியா' எனப்படும். பொதுவாக 'ஹெர் னியா' என்பது விரைப்பகுதியைச் சார்ந்த நோயாகக் கருதப் பட்டாலும், உடலில் வேறு எந்த உறுப்பாயினும் தன் இயற்கை நிலையை விட்டுத் தன் பகுதியில் உள்ள துளை வழியே வெளி வந்து வேறு உறுப்பின் பகுதியைச் சேர்வதே 'ஹெர்னியா' ஆகும். இந்நோய் சுவாசப்பை (புப்புசம்), மூளை ஆகிய பகுதிகளிலும் தோன்றக் கூடும். மேலும் குடல் இறக்கம் என்பது தொடை, தொடை இடுக்கு, தொப்புள் பகுதியைச் சார்ந்தும் தோன்றலாம். ஆயுர் வேதத்தில் கூறப்பட்டுள்ள குடல் இறக்கம் தற்கால மருத்துவத்தின்படி தொடை இடுக்குகளில் ஏற்படும் குடல் இறக்கமாகும். குடல் விரைப்பை வரை இறங்காத போது 'அப்ராப்த பலகோசவிருத்தி' எனப்படும். தற்கால மருத்துவத்தில் INCOMPLETE HERNIA OR BUBONOCELE எனப்படும். குடல் விரைப்பைகள் வரை இறங்கியபோது பூர்ணவிருத்தி (COMPLETE HERNIA) எனப்படும்.

சிறு குடலைத் தவிர மற்ற வபை, ஸ்தூலாந்திரம், உண்டுகம், உண்டுகபுச்சம் (APPENDIX), வஸ்தி, பீஜகிரந்தி, பீஜவாஹினி ஆகியவையும் கீழ் நோக்கி நழுவக் கூடும்.

தனித்தனியாக ஒவ்வொரு வகை 'விருத்தி நோய்க்கும் துவக்க நிலை, நடுநிலை, முற்றிய நிலைகளில் பலவகை சிகிச்சை முறை களைச் சிகித்ஸாஸ்தானத்தில் (அத் 19) ஸுசுருதர் கூறியுள்ளார்.

மருந்துகளால் நோய் தணியாத போது அறுவைச் சிகிச்சையைக் கையாள வேண்டும். முதலில் விரைப்பகுதியை வியர்க்கச் செய்து கீறத்தக்க இடத்தை மட்டும் விட்டுப் பிற பகுதியைத் தூய ஆடையால் மூட வேண்டும். பிறகு விருத்தி

பத்ரம் எனும் கருவியைக் கொண்டு கீற (INCISION) வேண்டும். பிறகு கெட்டிருக்கும் பகுதியை நன்கு உணர்ந்து வெட்டிவிட வேண்டும். விதைப்பகுதியையும் இடையில் உள்ள ஸீவனியையும் விட்டு நோயுற்ற பகுதியை மட்டும் வெட்டி எடுக்க வேண்டும். பிறகு அன்னபேதி, இந்துப்பு ஆகியவற்றைக் கலந்து தூவிப் பிறகு கோபண பந்தம் (STUMP BANDAGE) எனும் முறையில் கட்டுப் போட வேண்டும். பிறகு மனோசிலை, அரிதாரம், இந்துப்பு, சேராங்கொட்டை ஆகியவற்றைக் கொண்டு செய்த எண்ணெய் மருந்தால் விரணத்தை ஆற்ற வேண்டும்.

மூத்ர விருத்தியால் தோன்றும் விரை வீக்கம் மருந்துகளால் (PALLIATIVE TREATMENT) தீராது. நீரை வெளியேற்ற வேண்டும்.

விரீஹிமுகம் எனும் கருவியால் துளையிட்டு நாடீயந்திரத்தில் நீரை வெளியேற்ற வேண்டும். ஆனால் மீண்டும் அப்பகுதியில் நீர் சேர்ந்து விடும். அப்போது மீண்டும் நீரைக் கருவியால் வெளியேற்ற வேண்டும். இவ்வாறு அடிக்கடி செய்ய வேண்டும்.

நோயாளியைப் படுக்க வைத்து அல்லது நாற்காலியில் உட்காரவைத்து இம்முறையைச் செய்யலாம். முதலில் ஒரு மெழுகுவர்த்தியையோ, மின்விளக்கையோ விரைக்கு பக்கத்தில் வைக்க வேண்டும். மருத்துவர் தன் கைவிரலால் விரையின் தோலை அழுத்தி விளக்கை விரணப்பகுதி நடுவில் ஒளி படும்படி பிடித்துக் கொள்வார். விதைப்பையில் நீர் நிரம்பியிருந்தால் அதனுள் உள்ள பொருள் விளக்கு ஒளியில் சிவப்பாக மினுமினுப்புடன் காணப்படும். ஒளி காணப்படாவிட்டால், அங்கு நீர் இல்லை என்று உணர வேண்டும். இவ்வாறு நோயை அறிந்து மருத்துவர் விரையில் மேல் தோலைத் தூய்மைப்படுத்தி விரலால் தோலை மேல் நோக்கி இழுத்துப் பின் நோக்கி அழுத்துவார். இதனால் விதைப்பைக்குள் இருக்கும் கிரந்திகள் மேல் நோக்கி எழும்பும். பிறகு மருத்துவர் தன் வலது கையால் "ட்ரோகார் மற்றும் கேன்யுலா" எனும் கருவியைக் கொண்டு தூய்மைப் படுத்திய பகுதியில் பின்பக்கமாக மற்றும் கீழ் நோக்கியவாறு கருவியைச் செலுத்துவார். யந்திரம் உட்புகுந்ததும் சஸ்திரம் வெளியே எடுக்கப்படும். அப்பொழுது திரவப்பொருள் வெளிப்படும். நீர் முழுமையாக வெளிவந்ததும் நாடீ யந்திரத்தை எடுத்து விட்டு அப்பகுதியின் மேல் கொலிடியனில் நனைத்த பஞ்சை வைப்பார்.

பலமுறை நாடீயந்திரத்தால் திரவத்தை நீக்கிய பிறகு நாடீ யந்திரத்தின் உதவியால் டிஞ்சர், அயோடின், க்விநீன், ஸைலிஸிரேட், ஸோடியம் மோரேட் ஆகிய கலவைகளை விரை ஆவரணத்தில் நிரப்புவார்.

## நோயை நீக்கும் முறை

இன்று இருவகைகளான அறுவை சிகிச்சைகள் கையாளப் படுகின்றன.

1. விருஷண ஆவரணத்திற்குப் (TUNICA VAGINALIS) புறத் துள்ள புரையைக் (PARIETAL) கத்தரித்து (EXCISION) எடுத்தல். விதைப்பை கொழுப்பு மிகுதல் முதலியவற்றால் மிக்க பருத்திருக்கும் போது இம்முறை பயன்படும்.
2. விருஷண ஆவரணப்பையைத் (TUNICA) திறந்து அதற்குள் உள்ள நீரை நீக்கித் தைத்தல் (EVERSION OF THE SAC).

விதைப்பைத் தோலைத் தூய்மைப்படுத்தித் தோல் ஆவர ணத்தைக் கத்தரித்துப் பை புரைகளைப் பிளக்க வேண்டும். அப் பிளவின் வழியாக கோசத்திற்குள் உள்ள திரவப்பொருள் வெளி வந்து விடும். இந்தப் பிளவு, விதைப்பையின் புறத்தில் அழுத் தினால் அண்டகிரந்தி அவ்வழியாக வெளிவந்து விடும் அள விற்கு திறந்து இருக்க வேண்டும். இவ்வாறு அண்டகிரந்தி வெளி வந்த பிறகு கோசம் தலை கீழாகி விடும். அதாவது விதைப்பை யின் உட்பகுதி வெளிப்புறமாகவும், புறப்பகுதி உள்புறமாகவும் ஆகும். அப்பொழுது அறுபட்ட பகுதியைத் தைத்து விட வேண்டும். பிறகு அண்டகிரந்தியைப் பிளந்த தோல் வழியாகப் பைக்குள் வைத்துப் பையின் மேல் தோல் பிளவைத் தைத்து விட வேண்டும்.

ஸுசுருதர் மூத்ரவிருத்தி நோய்க்கு நீரை வெளியேற்றும் (TAP-PING) முறையைக் கூறினார். மிக்க பருத்த மேதோ விருத்திக்கு அறுவைச் சிகிச்சையால் விரை ஆவரணப்பையைப் பிளந்து கெட்ட பகுதியை நீக்கி (UPTO PARIETAL LAYER OR TUNICA) விடும் முறையை விளக்கியுள்ளார். (சிகி-அத் 19-ஸ்லோ18-20).

குடல் இறக்கத்திற்கு ஸுசுருதர் கூறிய அறுவைச் சிகிச்சை வருமாறு:-

தொடை இடுக்குப்பகுதி (INGUINAL CANAL) நாளத்தைக் குறுகலாக்கிக் குடல் இறங்க வழியில்லாதபடி செய்வது இதன் கருத்தாகும். அப்ராப்த பலகோசவிருத்தி (BUBONOCELE) நோயில் 'அர்தேந்துவக்த்ரம்' (பிறைச் சந்திரனைப் போன்ற முக

முள்ள கருவி) என்பதால் சுட வேண்டும். இம்முறையால் வழி தடைப்பட்டு குடலிறக்கம் நின்று விடும். மற்றொரு முறை: குடலிறக்கம் வலப்பக்கமானால் இடது கால் கட்டை விரலிலும், குடலிறக்கம் இடது பக்கமானால் வலது கால் கட்டை விரலிலும் நடுப்பகுதியில் தோலைக் கீறி மாமிசத்தில் சுடுதல் முறையைப் பயன்படுத்த வேண்டும். (சிகி-அத் 19-ஸ்லோ 1-22,23).

மற்றும் சங்குபகுதி (பொட்டில்) மேல் காதின் முடிவில் ஸிவனத்தை எச்சரிக்கையுடன் தவிர்த்து குடலிறக்கம் வலது பக்கமானால் இடது பக்கத்திலும், இடது பக்கமானால் வலது பக்கத்திலும் சிரையைக் குத்தி விட வேண்டும். இதனால் குடலிறக்க நோய் தணியும்.

இன்று அலோபதி மருத்துவத்தில் குடலிறக்கத்திற்குக் கோசத்தை துண்டித்து தைத்து வழியை அடைத்தல், தொடை இடுக்கு நாளங்களில் வழியைத் தடுத்தல் ஆகியவற்றிற்கு அறுவைச் சிகிச்சை முறைகளின் பயன்கள் கையாளப்படுகின்றன. பாஸினி, ஹால்ஸீட், கைலி முறைகள் இன்று பழக்கத்தில் உள்ளன. (சிகி-அத் 19-ஸ்லோ 23-24).

## உபதம்சம், ஸ்லீபதம் நோய்களுக்கு அறுவைச் சிகிச்சை

உபதம்சம் என்பது 'ஸிபிலிஸ்' எனப்படும் பால்வினை நோயாகும். (சிகி-அத் 19). கெட்ட நடத்தையுள்ள வேசிகள் போன்ற மாதர்களின் தொடர்பால் தோன்றும் இந்நோய் கொண்டவர்களின் குழந்தைகளுக்கும் தொற்றிக் கொள்ளும் கொடிய நோயாகும். முளையிலேயே சரியான சிகிச்சை பெறாவிடில், ஆண்குறி மாமிசப்பகுதி சிதைந்து விழுந்து, குறிப் பகுதியே அழிந்து போகக் கூடிய் கடுமையான நோயாகும். இந்நோய்க்குக் காரணம் (BACILLUS DUCREY) தண்டாணுக்கள் எனப்படும் நுண்ணுயிர் கிருமிகளாகும். இந்நோய்க்கு உட் கொள்ளவும், மேல் பூச்சாகப் பயன்படுத்தவும் பல மருந்துகளை ஸுசுருதர் சிகித்ஸாஸ்தானம் 19ம் அத்தியாயத்தில் கூறியுள்ளார். இம்முறைகள் பயன் தராத போது ஆண் குறியில் ஸிரையைக் கீறியோ, அட்டைப் பூச்சிகளைக் கொண்டோ இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

மூன்று தோஷங்களாலும் தோன்றும் உபதம்ச விரணத்திற்கு ஜாம்பாவளஷ்டம் எனப்படும் கருவியால் விரணப்பகுதியைச் சுட்டு அப்பகுதியில் தேனைத் தடவ வேண்டும் என்பன ஸுசுருதர் கூறிய முறைகளாகும். (சிகி-அத் 19-ஸ்லோ 49-51).

ஸ்லீபதம் எனப்படும் யானைக்கால் நோய்க்கு ஸுசுருத ஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானத்தின் 19ம் அத்தியாயத்தில் பல சிகிச்சை முறைகள் கூறப்பட்டுள்ளன.

வாதத்தால் தோன்றும் யானைக்கால் நோய்க்கு கால் மணிக் கட்டுப் பகுதிக்கு நான்கு அங்குலம் மேலாக ஸிரையைக் கீற வேண்டும். பித்தத்தால் தோன்றிய யானைக்கால் நோய்க்குக் கால் மணிக்கட்டுக்குக் கீழே ஸிரையைக் கீற வேண்டும்.

வாதத்தால் தோன்றிய சிலீபதத்திற்கு ஸிரையைக் கீறுவது டன் நெருப்பால் சுடும் முறையைக் கையாள வேண்டும்.

பொதுவாக யானைக்கால் நோய்க்கு பட்டினிகிடத்தல், மேல்பூச்சு, வியர்க்கச் செய்தல், பேதியாகச் செய்தல், இரத்தத்தை வெளியேற்றுதல், கபத்தைத் தணிக்கும் வெப்பம் தரும் பணி விடைகளைக் கையாளுதல் என்பன ஸுசுருதர் கூறிய சிகிச்சை முறைகளாகும். (ஸு-சிகி-அத் 19).

## பக்ன நிதானம் - எலும்பு முறிவுக்குச் சிகிச்சை

எலும்பு முறிவு பலவகைப்படும். (ஸு-நிதா-அத்15) விரணத்தைத் தோற்றுவித்தது (OPEN), விரணத்தைத் தோற்று விக்காதது (CLOSED), முறிவு முழுமையானது (COMPLETE), முழுமையல்லாதது - அபூர்ணம் (INCOMPLETE) ஆகியவை யாகும். இவை மீண்டும் பலவகைப்படும்.

## இணைப்புகள் நழுவுதல் (DISLOCATION)

(1) உத்பிஷ்டம் (FRACTURE DISLOCATION)
(2) விச்லிஷ்டம் (SUB LAXATION OR INCOMPLETE DISLOCATION)
(3) விவர்திதம் (LATERAL DISPLACEMENT)
(4) அவக்ஷிப்தம் (DOWNWARD DISPLACEMENT)
(5) அதிக்ஷிப்தம் (COMPLICATED FRACTURE)
(6) திர்யக்க்ஷிப்தம் (COMPLETE DISLOCATION)

## எலும்பு முறிவு : பன்னிரண்டு வகைகள்

(1) கர்க்கடம் (SPIRAL)
(2) அச்வகர்ணம் (OBLIQUE)
(3) சூர்ணதம் (COMMINUTED)
(4) பிச்சிதம் (COMPLICATED)
(5) அஸ்திச்சலிதம் (LONGITUDINAL)
(6) காண்டபக்னம் (TRANSVERSE COMPLETE FRACTURE)
(7) மஜ்ஜாநுகதம் (IMPACTED)

(8) அதிபாதிதம் (COMPLETE FRACTURE)

(9) வக்ரம் (GREEN STICK)

(10) சின்னம்

(11) பாடிகம் (FISSURED)

(12) ஸ்புடிதம் (FISSURED FRACTURE)

இவற்றிற்கு இலக்கணங்களையும், சிகிச்சை முறைகளையும், ஸுசுருதர் நிதானஸ்தானம் 15ம் அத்தியாயத்தில் விளக்கியுள்ளார். உடைந்த என்புகள் சீராக இணையாமல் போவதற்குக் காரணங்களையும் கூறியுள்ளார். அவையாவன: -

உடைவதற்கு முன்பே என்பு கெட்டிருத்தல், எலும்பு கோணலாக இருத்தல், வளைந்திருத்தல், மென்மையாக இருத்தல், அஸ்தி அர்புதம் தோன்றுதல், என்பு உள்ள பகுதி உறுப்பில் கோளாறு, பக்கவாதம் போன்ற நோய் ஆகியவற்றில் ஒன்றிருந்தால் உடைந்த என்பு சரியாகப் பொருந்தாது. மருத்துவர் சரியாகப் பொருத்திவிடாமை, உடைந்த பகுதியில் வைத்துக் கட்ட மரத்தின் பிளாச்சுகள், பஞ்சு முதலியவற்றைச் சீராக வைக்காமல் கட்டுதல், உடைந்த என்புகள் ஒன்றோடொன்று உராய்ந்து கொண்டிருத்தல், நோயாளி உடல் வலிவின்மை, எலும்புப் பிளவுகளுக்கிடையே பேசி, நரம்பு முதலியன சிக்கிக் கொள்ளுதல், பிளந்த என்புகளுக்கு ஊட்டம் தரும் இரத்தக் குழாய்கள் சிதைவுறுதல் எனுமிவற்றால் போதிய அளவு இரத்தம் பரவாததால் எலும்பு சீராகாது.

**உடைந்த எலும்பு இணையும் முறை**

இயற்கையாகவே உடைந்த என்புகள் இணைவதற்கான நிலை உடலில் தோன்றுகிறது. புதிய முளைகள் தோன்றும். இவற்றை வளர்க்க இரத்த நாளங்கள் உண்டாகும். இந்த இரத்த நாளங்களைச் சுற்றிலும் ஸௌத்ரிக தந்துகள் தோன்றும். இவை மெல்ல மெல்ல என்பைச் சார்ந்த தந்துகளாக (இழைகளாக) மாறும். இந்நிலையில் இந்த இழைகளில் என்பை உருவாக்கும் ஸெல்கள் இருக்கும். மெல்ல மெல்ல அப்பகுதியில் சுண்ணாம்பைப் போன்ற பொருள் சேரும். உடைந்த என்புகளுக்கு இடையே உடைப்பை இணைக்கும் பொருள் தோன்றும். முதலில் அப்பொருள் என்பிற்காக நான்கு பக்கங்களிலும் சூழ்ந்து கொள்ளும். மெல்ல மெல்ல சுருங்கி தேவையான இடத்தை அடைத்துக் கொள்ளும். சிறுவர் உடம்பில் இச்செயல் எளிதாக, விரைவாகத் தோன்றும். முதியவர்கள் உடலில் மெல்ல மெல்ல மிகச் சிரமத்துடன் ஏற்படும். சீராக இணையாதபோது ஏற்படும்

விளைவுகளாவன:- (1) முழுமையாக இணையாமை (ABSOLUTE NONUNION) (2) ஸௌத்ரிகஸம்போஜனம் அதாவது உடைந்த என்புகளுக்கு இடையில் ஸௌத்ரிகதாது இணைப்பாக ஏற்படுதல் (3) தவறான இணைப்பு.

பொதுவாக ஸுசுருதர் இணைப்புக்காகக் கூறும் சிகிச்சை முறைகள் பத்தியம் இருத்தல், கூடாத உணவு, செயல்கள் ஆகிய வற்றை விலக்குதல், அத்தி, அரசு போன்ற மரக்கட்டைகளின் பிளாச்சுகளால் கட்டுப் போடுதல், மருந்துப் பொருள்களை அரைத்துப் பூசுதல், எண்ணெய் மருந்தை ஊற்றிக் கொண்டி ருத்தல், பாலைப்பருகச் செய்தல், முன்போலச் சரியான நிலைக்கு என்பைப் பொருத்துதல் போன்றவையாகும். (சிகி-அத் 3).

அந்தந்த உறுப்புகளில் ஏற்பட்ட என்பு முறிவுகளுக்கு அந்தந்த உறுப்புக்கு ஏற்றபடி சிகிச்சை முறைகளை ஸுசுருதர் மிக விளக்கமாகக் கூறியுள்ளார். (சிகி-அத் 3).

## மூல (அர்சஸ்) நோய்க்குச் சிகிச்சை

தோஷங்கள் காரணமாகத் தோன்றிய மாமிச வளர்ச்சி அல்லது முளை (அர்சஸ்) மூலம் எனப்படும். ஏதேனும் உறுப்பில் தோன்றும் அர்சஸ் ஆங்கிலத்தில் 'போலிபஸ்' (POLYPUS) எனவும், ஆஸனவாய்ப்பகுதியில் தோன்றுவது 'பைல்ஸ்' அல்லது ஹெமோராயிட்ஸ் (PILES OR HAEMORRHOIDS) எனவும் கூறப் படும். அலோபதி மருத்துவத்தில் அர்சஸ்ஸை மாம்ஸாங்குரம் என்று கருதாமல் ஸிரைகளின் முனைப்பகுதியில் இரத்தம் சேர்ந்து பருத்துவிடுபவையே பைல்ஸ் முளைகள் எனக் கருதப் படுகின்றன.

குடலில் உள்ள ஸிரைகள் அகன்றிருக்கும். பெருங்குடலில் மலப்பையில் உள்ள ஸிரைகள் நீண்டிருக்கும். அவற்றில் கதவு களைப் போன்ற அமைப்பு இல்லை. நான்கு பக்கங்களிலும் திடமான ஆதாரங்கள் இல்லை. ஆகையால் மலம் வெளியேறும் முன்பும் பின்பும் அவற்றில் இரத்தம் நிரம்பும். ஸிரைகளில் அடிப்பகுதிகள் சற்று பெரிதாகும். பல நாட்கள் இவ்வாறு ஏற்படுவதால் ஸிரைகள் பருத்து முளைகளாகி விடும். இந்த முளைகள் மிகவும் சிறியவையாக இருக்கும். ஆனால் புல், கட்டை, கல், ஆடை முதலியவற்றின் உராய்வினால், குளிர்ந்த நீர், ஈரநிலம் ஆகியவை படுவதால் வளர்ந்து பெரியவையாகித் துன்பம் விளைவிக்கும். வாத பித்த கப திரிதோஷ, இரத்த தோஷங்களால் தோன்றுபவை அல்லாது மூல நோய் பலவகைப்படும். அவை ஆஸனவாய் வெளிப்பகுதியில் உள்ளது

(EXTERNAL PILES), ஆஸனவாய்க்குள் உள்ள வளையங்களில் தோன்றுவது BLEEDING PILES எனப்படும். தாய் தந்தையர் களுக்கு இருந்தால் குழந்தைகளுக்கும் தோன்றலாம். இது (CON-GENITEL OR HERIDITARY PILES) தற்கால மருத்துவத்தில் கூறப்படவில்லை. ஆண்குறியில் தோன்றுவது லிங்காசம் (PAPIL-LOMA), யோனி அர்சம், கர்ணார்சம் (EAR POLYPUS), நேத்ரார் சம் (EYE POLYPUS), நாஸார்சம் (NASAL POLYPUS), முகார்சம் (ORAL POLYPUS OR ADENOIDS), வியானார்சம் (WARTS) போன்றவையாகும்.

இவ்வனைத்திற்கும் இலக்கணங்கள், தோன்றக் காரணங்கள், சிகிச்சை முறைகள் போன்றவை ஸுஸ்ருத ஸம்ஹிதை நிதான ஸ்தானம் 2ம் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. மூல நோயை மருந்துகளைக் கொண்டே நீக்குவது சிறந்தது என்கிறார் சரகர்.

"அறுப்பது, எரிப்பது, சுடுவது எனும் மூவகை அறுவைச் சிகிச்சைகளைக் கையாள்வதில் தவறு நேர்ந்தால் ஆண்மை கெடும். குதத்தில் வீக்கம் தோன்றும். அபானமும், மலமும், சிறுநீரும் தடைப்படும். வயிறு வீங்கும். வயிற்றில் கொடிய வலி உண்டாகும். துன்பம் மிகும். இரத்தம் மிகவும் அதிகமாக வெளியேறும். முளைகள் நீங்கினாலும் மறுபடியும் தோன்றிப் பரவும். அவை தோன்றிய இடத்திலேயே அழுகிப் போகும். குதம் தன்னிலையிலிருந்து நழுவும். ஒருக்கால் சாவும் நேரிடலாம். ஆகவே அறுவைச் சிகிச்சையை மிகவும் கவனத்துடன் கையாள வேண்டும். எனவே மூல நோயை மருந்துகளாலேயே எளிதில் போக்கும் முறைகளைக் கூறுகிறேன்" எனக் குறிப்பிட்டு சில முறைகளைத் தன் ஸம்ஹிதையில் அவர் கூறியுள்ளார். (சரக - சிகி-அத் 14-35-36).

மூல நோயை மருந்துகளைக் கொண்டே தீர்க்கக் கூடிய பல சிகிச்சை முறைகள் ஆயுர்வேதத்தில் விளக்கப்பட்டுள்ளன. அம் முறைகளில் பல்லாதக (சேராங் கொட்டையைப் பயன்படுத்தும்) முறை சிறப்பானது. (இம்முறையின் விளக்கம் ஸுஸ்ருத ஸம்ஹிதை-சிகித்ஸாஸ்தானம் 6ம் அத்தியாயத்தில் காணலாம்).

ஸுஸ்ருதர் மூல நோயை நான்கு வகைப்படுத்தி மருந்து, கார மருந்து, சுடும் முறை, அறுவை ஆகிய முறைகளால் தீர்க்கக் கூடியவையாகும் என்கிறார்.

குறைந்த அளவு தோஷங்களைக் கொண்டு, குறைந்த அளவு துன்பம் விளைவிக்கும் மூல நோய் மருந்தால் தணிக்கத்தக்கது.

வாத கபங்களால் தோன்றி நன்கு எழும்பியதும், இரத்த பித்தத்தால் தோன்றியதும் மென்மைகொண்டு ஆழமாகப் பரவி யுள்ளதுமான மூல நோய் க்ஷார (கார) மருந்துகளால் தீர்க்கத் தக்கது. தடித்துக் கடினமாகி நிலை பெற்றிருப்பதும், வாத கபங்களால் தோன்றியதுமான மூல நோய் அக்னிகர்மாவினால் (நெருப்பால் சுடுவதால்) தணிக்கத்தக்கது. நுட்பமான வேர் கொண்டு நன்கு எழும்பி சதசதப்புடன் கூடிய எல்லா வகை மூல நோய்களும் அறுவைச் சிகிச்சையால் தீர்க்கத் தக்கவை என்பது அவரது கொள்கை. (சு-சிகி-அத் 6).

அறுவைச் சிகிச்சை வழியாக மூலத்தைப் போக்கும் முறை ஸுசுருத ஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானம் 6ம் அத்தியாயத்தில் (ஸ்லோகம் 4,8) விளக்கமாகக் காணலாம்.

இன்று ஊசி மருந்தைச் செலுத்தும் முறை ஒன்றுள்ளது. மென்மை கொண்டு உள் பகுதியிலிருக்கும் மூலத்தைப் போக்க இம்முறை சிறந்தது. கார்பாலிக் ஆஸிட் 5 சதவிகிதம் கலந்துள்ள கரைசலில் வாதுமை எண்ணெய் கலந்து ஊசி வழியாக 3 c.c. அளவு மூல முளைக்குள் செலுத்தப்படும். ஏழு நாட்களுக்கு ஒரு முறை அல்லது பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையாகச் சில தடவைகள் இது செலுத்தப்பட வேண்டும். நோயாளி படுக்கை யில் இருக்க வேண்டிய தேவையில்லை. க்வினீன் மற்றும் யூரியா கலந்துள்ள கலவையும் இதற்குப் பயன்படுத்தப்படுகிறது.

## பகந்தரம் (FISTULA IN ANO)

பகம், குதம், வஸ்தி எனும் பகுதிகளைத் துன்புறுத்தும் நோயாகையால் பகந்தரம் எனப் பெயர் ஆயிற்று. குதத்தின் பக்கத்தில் இரண்டு அங்குலப் பகுதியில் முதலில் பிடகை எனும் சிறுகட்டியாகத் தோன்றும். குதத்தின் உள் அல்லது புறத்தில் சிறுகட்டியாகத் தோன்றிய பிறகு விரணமாகித் துன்புறுத்தும். இது 1) சதபோநகம் (MULTIPLE FISTULA) 2) க்ஷ்ட்ரகிரீவம் 3) பரிஸ்ராவி 4) சம்பூகாவர்த்தம் 5) சல்யஜம் என ஐந்து வகைகளாகும். இவற்றிற்கு அறுவைச் சிகிச்சை முறைகளை ஸுசுருதர் சிகித்ஸாஸ்தானம் 8ம் அத்தியாயத்தில் ஸ்லோகம் 11-27ல் கூறியுள்ளார்.

### க்ஷாரஸூத்ரம்

கார மருந்து தடவிய நூலைக் கொண்டு மூலநோய், பகந் தரம் முதலியவற்றைத் தீர்க்கும் முறை ஒன்று ஆயுர்வேத நூல் களில் கூறப்பட்டுள்ளது. சரக, ஸுசுருத, வாக்படர் ஆகியவர்

களின் நூல்களில் இம்முறையைப் பற்றிய குறிப்பு காணப் படவில்லை. ஆனால் சார்ங்கதர ஸம்ஹிதையில் இம்முறை குறிப்பிடப்பட்டுள்ளது.

### முறையின் விளக்கம்

பஞ்சாலான நூலின் மேல், கள்ளிப்பாலை இருபத்தோரு முறை தடவி பாவனை செய்து உலர்த்த வேண்டும். (ஒரு முறை தடவி உலர்த்தி, மீண்டும் தடவி உலர்த்துதல் பாவனையாகும்). ஒவ்வொரு முறையும் கள்ளிப்பால் தடவிய பிறகு மஞ்சள் தூளையும் தடவ வேண்டும். கோடைப்பருவத்தில் விரைவில் உலர்ந்து விடும். ஆகையால் ஒரே நாளில் இரண்டு மூன்று முறை கள்ளிப்பாலைத் தடவி உலர்த்தலாம். நூலை இருபத்தோரு முறை பாவனை செய்த பின் ஈரம் படாமலும், அழுக்கு சேராமலும் பத்திரப்படுத்த வேண்டும். நாடீவிரணம், பகந்தரம், மூல நோய் ஆகியவற்றில் இந்தக் கார நூலைப் பயன்படுத்தலாம். மஞ்சள் பூச்சிகளைக் கொல்லக் கூடியதாலும், வீக்கத்தைத் தணிக்கக் கூடியதாலும் அது நூலின் பயனைச் சிறப்பாக்கும்.

### பகந்தரத்தில் கார நூலைப் பயன்படுத்துதல்

பகந்தர நோயாளியை நன்கு பரீட்சை செய்த பின் உடலைத் தூய்மைப்படுத்தும் முறையால் மலத்தைப் போக்க வேண்டும். குதப்பகுதி உரோமங்களைப் போக்கி, மருந்து கலந்த நீரால் நன்கு கழுவி தூய்மைப்படுத்த வேண்டும். அங்கு நோயால் பெருகும் கெட்ட நீரைத் துடைத்து விட வேண்டும். மல்லாந்து படுக்க வைக்க வேண்டும். நோயாளியின் முழுங்கால்களை மேல் நோக்கி மடக்கி குதப்பகுதி நன்கு புலனாகும்படி (LITHOTOMY POSITION) படுக்கச் செய்ய வேண்டும். மருத்துவர் கைகளைத் கழுவிக் கொண்டு கையுறையை அணிந்து கொள்ள வேண்டும். பகந்தரமுள்ள பக்கத்திற்கு அடுத்த பக்கமாக விரலைக் குதத்திற்குள் செலுத்தி, பகந்தர நோயின் அடிப்பாகத்தை அதாவது உள் பக்க துவாரத்தை உணர்ந்து மற்றொரு கையில் சலாகையைப் பிடித்துக் கொள்ள வேண்டும். பிறகு அதில் க்ஷார நூலை இணைத்து, பகந்தர விரணத் திற்குள்ளாகச் செலுத்தி, உள் பகுதி துவாரத்தின் வழியாகச் சலாகையுடன் வந்த நூலைப் பிடித்துக் கொண்டு சலாகையை மட்டும் வெளியே எடுத்து குதத்தில் செலுத்த வேண்டும். அப்படி உள் புகுத்திய நூல் முனையை மற்றொரு கைவிரலால் குதத்தின் வழியாக வெளியே எடுத்து, கார நூல் முனைகளைச் சேர்த்து இறுக்கிக் கட்டி விட வேண்டும். பிறகு அணு தைலத்தில் பஞ்சை நனைத்து விரணப்பகுதியில் வைத்துக் கோபண முறையில் கட்டு போட வேண்டும். நோயாளி வீட்டிற்குச் சென்று நடமாடலாம். நாள்தோறும் மலங்கழித்தபின் வெந்நீரால் கழுவ வேண்டும். ஏழு

நாட்களுக்குப் பின் நோயாளி மருத்துவ நிலையம் செல்ல வேண்டும். மருத்துவர் கட்டை நீக்கி, நூலை வெட்டி, ஒரு முனையில் புது நூலை இணைத்து உள்வழியாக இழுத்தால் புதுநூல் விரணத்தின் வழியாக உள்ளே செல்லும். அதைப் பழைய நூலின் உதவியால் குதத்திற்கு வெளியே இழுத்துப் பழைய நூலை நீக்கி விட்டு, நோய்ப் பகுதியில் புது நூலைக் கட்ட வேண்டும். இவ்வாறு நோய்ப்பகுதி வேறுபட்டு நீங்கும். மூல நோயிலும் இவ்வாறே மூல முளையின் அடிப்பகுதியில் க்ஷார நூலைக் கட்டி வாதத்தைப் போக்கும் எண்ணெயால் அப் பகுதியை நனைத்து வந்தால் முளை அகன்று வெளிவந்து விடும்.

## வயிற்று நோய்கள்

வயிற்றுக்குள் உள்ள உறுப்புகளின் கோளாறு காரணமாக வயிற்றில் தோன்றும் வீக்கம் பல வகைப்படும். (1) வாதோதரம், (2) பித்தோதரம் (3) சிலேஷ்மோதரம் (4) ஸந்நிபாதோதரம் (5) ப்லீஹயக்ருத்தால்யுதரம், (6) பத்தகுதோதரம் (7) க்ஷதோதரம் (8) ஜலோதரம் ஆகியவை உதர நோய்களில் முக்கியமானவை.

இவற்றில் ப்லீஹயக்ருத்தால்யுதரம் என்பது SPLENIC AND HEPATIC ENLARGEMENT என்றும், பத்தகுதோதரம் INTESTINAL OBSTRUCTION என்றும், க்ஷதோதரம், PERFORATION OF BOWEL AND PERITONITIS என்றும் தகோதரம் அல்லது ஜலோதரம் ACITES என்றும் கூறப்படும். இவை தோன்றக் காரணம், நோயின் இலக்கணம், சிகிச்சை முறை ஆகியவை ஸுசுருத ஸம்ஹிதை நிதானஸ்தானம் 7ம் அத்தியாயத்தில் விளக்கப் பட்டுள்ளன.

ஸுசுருதர் இந்நோய்களில் பத்தகுதோதரத்திற்கும், பிலீஹோதரத்திற்கும், யக்ருத்தால்யுதரத்திற்கும், ஜலோதரத்திற்கும் அறுவைச் சிகிச்சையைக் கூறியுள்ளார். (ஸு-சிகி-அத்14-ஸ்லோ 17,18).

பிலீஹஉதரம் ஆங்கிலத்தில் SPLENOMEGALY எனப் படும். இந்நோயில் மண்ணீரலின் தோற்றம் பெரிதாகி விடும். அலோபதி மருத்துவத்தில் இதற்குக் காரணம் விளக்கப் பட்டுள்ளது. மண்ணீரலுக்கு இரத்தத்துடன் மிக்க தொடர்பு உள்ளது. இயற்கையில் மண்ணீரல் செய்யும் பணிகளாவன:- இரத்த கணங்களைத் தோற்றுவித்தல், தன்செயலைச் செய்து விட்டு ஆயுள் முடிந்து போன சிவப்பு அணுக்களை அழித்தல், இரத்தத்தைத் திரட்டுதல், உடலில் புகுந்த தீங்கு விளைவிக்கும் உயிரணுக்களை அழித்தல் ஆகியவையாகும். ஏதேனும் ஒரு நிலையில் இந்த வேலைப்பளு அதிகமானபோது பிலீஹத்தின் செயலும் அதிகமாகும். அதனால் மண்ணீரலும் பெரிதாகி விடும். இந்நிலை ப்லீஹோதரம் எனப்படும். இரத்தத்தைச் சார்ந்த உயிரணுக்களைச் சார்ந்த நோயில் மண்ணீரல் வீக்கம் ஏற்படும்.

முக்கியமாக (LEUKAEMIA, SPLENO MEDULLARY, LEUKAEMIA LYMPHATIC OR MIXED, SPLEINIC ANAEMIA, PERICIOUS ANAEMIA) நாட்பட்ட விஷக்காய்ச்சல், பால்வினை நோய், அர்புதம் எனும் கட்டி ஆகியவற்றால் மண்ணீரல் வீக்கம் தோன்றும்.

யக்ருத்தால்யுதரம் - வயிற்றின் வலது பக்கத்தில் கல்லீரல் கோளாறு ஏற்படுவதால் தோன்றும் நோயே மண்ணீரல் வீக்கம், கல்லீரல் வீக்கம் எனப்படும். கல்லீரல் வீக்கம், மண்ணீரல் வீக்கம் ஆகிய இரண்டிற்கும் தோன்றக் காரணம், இலக்கணம், சிகிச்சை முறை ஆகியவை ஒன்றே. ஆகையால் இரண்டையும் ஒன்றாகவே நூல்கள் கூறுகின்றன. வேற்றுமை: இடது பக்கம் தோன்றும் வீக்கம் மண்ணீரல் வீக்கம் எனவும், வலது பக்கத்தில் தோன்றும் வீக்கம் கல்லீரல் .வீக்கம் எனப்படுவது ஒன்றே இவ்விரண்டிற்கும் உள்ள வேற்றுமையாகும்.

பத்தகுதோதரம் - குடலில் கொழகொழப்புள்ள சோறு, தலைமுடி, கடினமான பொருள் (DUE TO HARD AND BULKY FAECES) இருந்து அதன் மேல் தோஷங்கள், அழுக்குப் பொருள்கள் ஆகியவை சேர்ந்து மலத்தைத் தடுத்து விடும். மலம் சிறிது சிறிதாக வெளிப்படும். அதனால் இதயம், நாபி ஆகிய பகுதிகளில் வலியுண்டாகும். அப்பகுதிகள் வீங்கும்.

உணவுடன் தலைமுடி போன்றவை கலந்து பெருங்குடல் வழியைத் தடுத்து விடும் போது (STRICTURE OF ANUS) உதாவர்த்தம் (SPASM OF THE ANAL SPHINCTER), அர்சஸ் (மூலம்) (HAEMORRHOID) அல்லது குடல் செயலிழத்தல், ஆந்த்ர பரிவர்த்தனம் (VOLVULUS) ஸ்தூலாந்த்ரகாதம், பெருங்குடல் தாக்கப்படுதல் (PARALYTICILIAS) முதலிய காரணங்களால் அபானவாயு கீழ் நோக்கிச் செல்லாது. தன் வழி தடைப்படுவதால் வாதம் சீற்றமடைந்து தாது அக்னியைக் கெடுத்து மலம், பித்தம், கபம் ஆகியவற்றைத் தடுத்து விடும். இந்நோய் 'பத்தகுதோதரம்' எனப்படும்.. (சிகி-அத்-14).

தற்கால மருத்துவத்தின் கொள்கைப்படி (1) பத்தகுதம் (PELVI RECTAL STASIS) மற்றும் ஆந்த்ரஸம்மூர்ச்சன ஜன்யபத்தகுதம் (ACUTE INTESTINAL OBSTRUCTION) ஆகிய இரண்டும் சேர்ந்துள்ளன.

## அலோபதி மருத்துவப்படி பத்தோதர விளக்கம்

(ACUTE INTESTINAL OBSTRUCTION)

இன்றைய மருத்துவத்தில் கடுமையான பத்தோதரம் மூன்று பகுதிகளாக விளக்கப்படுகிறது.

1) குடலில் பித்தாசயத்தில் கல், சல்யம், உயிரணுக்களின் சேர்க்கை, போலியஸ் போன்ற அர்புதத்தால் தோன்றுவது.

2) அர்புதத்தால் இலியா ஆஸிஸ், பைப்ரஸ் ஸ்டிரிக்சுர் தோன்றுவது.

3) ஏதேனும் அர்புத பிண்டம் முதலியவற்றால் ஏற்படும் அழுத்தத்தால் தோன்றுவது, குடலில் அழுத்தம், ஸ்டராங் குலேஷன் ஏற்படுவது போன்ற காரணங்களால் தோன்றும் கோளாறு என பத்தோதரம் மூன்று வகைப்படுவதுடன் அவற்றிற்கான சிகிச்சை முறைகளும் மாறுபடுகின்றன.

குடலுக்குள் ஏற்படும் ஹெர்னியா கடுமையான நோயாகும். உடனுக்குடன் சிகிச்சை செய்யாவிடில் ஆபத்தைத் தோற்றுவிக்கும்.

வயிற்று நோய்களில் குன்மமும் ஒன்று.

வயிற்று நோய்களுக்குத் தக்க சிகிச்சையை நோய் தோன்றிய உடனே மேற்கொள்ளாவிடில் ஜலோதரம் உண்டாகும். இது வயிற்று நோய்களின் முற்றிய நிலையில் தோன்றுவதாகும் என்பது ஸுசுருதர் கருத்து (நிதா-அத் 9).

வாதோதரத்தைவிட பித்தோதரமும், அதை விட கபோ தரமும், அதைவிட ஸந்நிபாதோதரமும், அதை விட ஜலோதர மும் மிகவும் கஷ்டப்பட்டுச் சிகிச்சை செய்ய வேண்டிய நோய் களாகும். இந்நோய்களுக்குப் பல மருந்து முறைகள் ஸுசுருத ஸம்ஹிதை சிகித்சாஸ்தானம் அத் 14ல் கூறப்பட்டுள்ளன.

பத்தகுதோதரத்திற்கு 'லெப்ராடமி' (LAPRATOMY) முறையிலும் மற்றும் ஜலோதரத்திற்கு TAPPING முறையிலும் சிகிச்சை புரிய வேண்டுமென ஸுசுருதர் கூறியுள்ளார். (சிகி- அத் 14-ஸ்லோ 17-18).

பத்தகுதம் மற்றும் பரிஸ்ராவி (A INTESTINAL OBSTRUCTION, ACUTE DIFFUSE PERITONITIS DUE TO PERFORATION OF THE BOWEL) எனும் நோய்களுக்கு அறுவைச் சிகிச்சையாவது :-

தொப்புளுக்குக் கீழ்ப் (BELOW UNBELICUS) பகுதியில் மத்யரேகைக்கு நான்கு அங்குலம் தொலைவில் இடது பக்கத்தில் வயிற்றைப் பிளக்க (INCISION) வேண்டும். ஒரு தனிப்பட்ட கருவியின் மூலம் வயிற்றைத் திறந்து கீழ் நோக்கிச் செலுத்தி நான்கு அங்குல அளவிற்குப் பிளவு உண்டாக்க வேண்டும். குடலை வெளிப்படுத்தி குடலில் தடை ஏற்பட்டுள்ள பகுதியை ஆராய வேண்டும். மண்கட்டி, தலைமுடி, மலம் போன்றவற்றைக் குடலைக் கீறி வெளிப்படுத்திக் குடலைத் தூய்மைப்படுத்தி தையல் போட வேண்டும். பிறகு தேனையும் நெய்யையும் பூசிக் குடலை முன்போல இருப்பிடத்தில் வைத்து, வயிற்றின் மேல் பகுதியிலும் பிளந்த இடத்தைச் சேர்த்துத் தைத்து விரணத்தை ஆற்ற வேண்டும். (ஸு-சிகி- அத் 14).

இன்று ஆங்கில மருத்துவத்திலும் OPEN ABDOMEN BELOW UMBLICUS THROUGH RECTUS INCISION என்ற முறைப்படி வயிற்றைப் பிளந்து குடலை ஆராய்ந்து (OPEN BOWEL AND REMOVE THE CAUSE OF OBSTRUCTION) தடங்கலைத் தோற்று வித்த பொருளை அகற்றிய பின் 'லேம்டல்ட்' முறைப்படி தையல் போடப்படுகிறது.

குடலில் பிளந்த இடத்தை இணைப்பதற்குப் பயன்படும் பொருள் ஸேந்திரய (ORGANIC) பொருளாக இருக்க வேண்டும். காலங்கடந்த பின் அது தாதுக்களுடன் கலந்து விடும். அதனால் வேறு துன்பம் தோன்றாது. இன்று இதற்கு 'கேட்கட்' பயன் படுத்தப்படுகிறது. ஸுசுருதர் குடலின் இரு பிளவுகளையும் சீராக இணைத்து, கட்டெறும்புகளால் கடிக்கச் செய்து, அதன் தலை தவிர மற்ற உடற்பகுதியை நீக்கி விட்டுக் குடலை எப்பொழுதும் போல பொருத்த வேண்டுமெனக் கூறியுள்ளார். சிகிச்சைக்குப் பிறகு ஆத்மானம், மர்மாபிகாதம் முதலியன நேராமல் இருக்க நோயாளியை எண்ணெய் அல்லது நெய் நிரம்பிய தொட்டியில் இருக்கச் செய்ய வேண்டும். நோயாளிக்குப் பாலும், புலால் சாறும் உணவாகக் கொடுக்க வேண்டும். (ஸு-சிகி-அத் 14-ஸ்லோ 18).

ஜலோதரத்தில் தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியில் நடுப்பகுதிக்கு நான்கு அங்குலம் விட்டு, இடது பக்கத்தில் விரீஹிமுகம் எனும் கருவியை கட்டைவிரல் இடைப்பகுதி அளவு ஆழத்திற்குத் துளை போட்டு நீரை வெளிப்படுத்த வேண்டும். பிறகு சிறிதளவு நீர் வயிற்றில் தங்க விட்டுப் பிறகு விரணப் பகுதியில் எண் ணெயையும் இந்துப்பையும் தடவிக் கட்டுப் போட வேண்டும். வயிற்றில் உள்ள நீர் முழுவதையும் வெளிப்படுத்தினால் நாவ றட்சி, காய்ச்சல், அதிஸாரம், சுவாஸம், உள்ளங்கால் எரிச்சல் போன்ற துன்பங்கள் விளையும். வயிற்றில் காற்று நிரம்பி உடனே உயிரைப் போக்கும். மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, எட்டு, பத்து, பன்னிரண்டு முறை மீண்டும் நீரை வெளிப்படுத்த வேண்டும்.

இன்றும் இந்நோய்க்கு ABDOMINAL PARACENTESIS எனப் படும் முறையே பயன்படுத்தப்படுகிறது.

ஆனால் இம்முறை தற்காலத்திற்கு நோயின் வேகத்தைத் தணிக்குமேயன்றி இந்நோய் முழுவதும் குணமாவது மிகக் கடினம். (ஸு-சிகி-அத் 7).

## அச்மரி சிகிச்சை
## (TREATMENT OF VESICAL CALCULUS)

சிறுநீர்க்குழாயில் கல் போன்ற பொருள் தோன்றி, அடைப்பு தோன்றுவது அச்மரி எனப்படும்.

வகைகளாவன:-

1. வாதாச்மரி (CALCIUM OXALATE CALCULUS): இன்று இது சிறுநீரின் உவர்ப்புத் தன்மையால் தோன்றுவதாகக் கருதப்படுகிறது.
2. பித்தாச்மரி (URIC ACID CALCULUS: சிறுநீரின் அமிலத் தன்மையால் தோன்றுவது.
3. சிலேத்துமாச்மரி (PHOSPHATIC CALCULUS): சிறுநீரின் காரத்தன்மையால் தோன்றுவது.
4. சுக்ராச்மரி (SPERMOLITH): சிறுநீர்க்குழாயில் விந்து தங்கிவிடுவதால் தோன்றுவது.

புதுப்பானையில் வைத்திருந்த நீருக்கடியில் மண் (சேறு) தங்குவது போல வஸ்தியில் சிறுநீரில் உள்ள உப்பு போன்ற பொருள் தங்கிவிடுமாயின் அது கல் போல கெட்டிப்பட்டு விடுவதால் அச்மரி தோன்றும். வானத்தில் தங்கியுள்ள நீரைக் காற்றும், மின்னல் எனும் நெருப்பும் (ஆலங்) கட்டியாக்கி விடுவது போல, வஸ்தியைச் சார்ந்த கபத்தை வாதத்துடன் கூடிய பித்தம் கட்டிப் போகச் செய்து அச்மரி (கல்போன்ற பொருள்) ஆகச் செய்கிறது. (ஸு - நிதா - அத் 3-ஸ்லோ 22-23).

இன்றைய மருத்துவத்திலும் கீழ்வருமாறு கூறப்படுகிறது: "விருக்க (சிறுநீர்க்குண்டிகை) நாளங்கள் வழியாக ஏதேனும் காரணத்தால் சிறுநீருடன் யூரிக் ஆஸிட், யூரேட்ஸ், ஆக்ஸலேட்ஸ் போன்ற உப்புகள் அதிக அளவில் வெளிவந்தால் அவை சிறுநீரில் உள்ள நீருடன் கரைவது கடினமாகையால் சிறுபடிகங்களாக வஸ்தியிலும், வஸ்திக் குழாயிலும் தங்கிவிடும். அத்துடன் சில நேரங்களில் உலர்ந்த கபம் சேர்ந்து திரண்ட இரத்தம், கிருமிகளின் முட்டை (OVA OF BITHARZIA) போன்றவை சேர்ந்து கட்டிப் போகும். மூத்திரத்தில் அமிலத்தன்மை மிகுந்திருந்தால் பித்தாச்மரி (URIC ACID STONE), காரப்பொருள் மிகுந்திருந்தால் சிலேத்துமாச்மரி (PHOSPHATIC STONE) என்பவை தோன்றும்."

இன்றைய மருத்துவத்தில் அச்மரியை உடைத்துப் பார்த்தால் அச்மரியின் மையம் (NUCLEUS) உலர்ந்த கபம், அதாவது முயூகஸ் அல்லது இரத்தம் உறைந்த ஜீவ அணு அல்லது கிருமிகளின் முட்டைகளாக இருப்பது கண்டு கொள்ளப்படுகிறது.

உடலை பஞ்சகர்மாவினால் தூய்மைப்படுத்திக் கொள்ளாதவர்களுக்கும், கூடாத உணவு உட்கொள்பவர்களுக்கும் கபம் சீற்றமடைந்து சிறுநீருடன் கலந்து சிறுநீர்க் குண்டிகைக்குள் சேர்ந்து

அச்மரி எனும் நோயைத் தோற்றுவிக்கும். தாய் தந்தையர்களின் விந்து சோனிதங்களின் குறைபாட்டினால் (ஜெனிடிக் ஃபாக்டர்) அச்மரி தோன்றும் என்கிறது ஹாரீக ஸம்ஹிதை.

வெகுநேரம் சிறுநீரை அடக்கிக் கொண்டிருத்தல், கடும் வெயிலில் வெகு நேரம் தங்கி வேலை செய்தல், குறைந்த அளவு நீரைப் பருகுதல், வியர்வை அதிக அளவில் தோன்றுதல், உடலில் நீர்ப்பகுதி வெகுவாகக் குறைதல் போன்ற காரணங் களால் சிறுநீரில் கனப்பொருள் மிகுதல், பால் குறைந்த அளவு உட்கொள்ளுதல், சடராக்னிக் குறைவு, மலத்தடை, உடற்பயிற்சி யின்மை, உவர்ப்புச் சுவையுள்ள அல்லது காய்கறி கீரை வகைகளை உட்கொள்ளாமை, பருகும் நீரில் படிகப்பொருள் மிகுந்திருத்தல் போன்றவற்றால் இந்நோய் தோன்றக் கூடும். மூளை வலிவின்மை, வாதரத்த நோய் கொண்டவர்களுக்கும், சிறுவர், வாலிபர் ஆகியவர்களுக்கும், ஆடவர்களுக்கும், வெப்பம் மிகுந்துள்ள பகுதிகளில் வசிப்பவர்களுக்கும் இந்நோய் எளிதில் தோன்றக் கூடும். (ஸு-சிகி-அத்7).

சிறுநீர்க்குண்டிகையில் வலி, சிரமப்பட்டுச் சிறுநீர் கழித்தல், சிறுநீர்க்குண்டிகை மற்றும் வஸ்திசிரம் (INTERNAL URETHRAL ORIFICE) ஸிரை, ஆண்குறி ஆகிய பகுதிகளில் துன்பம் தோன்று தல் முதலியவை இந்நோய்க்கு முற்குறிகளாகும். இந்நிலையில் தோஷங்களுக்கு உரிய நிறத்தில் சிறுநீர் மிக்க கஷ்டத்துடன் வெளிவரும்.

சிறுநீர்கழிக்கும் போது தொப்புள், சிறுநீர்க்குண்டிகை, ஆண் குறி, ஸேவனி, நரம்புகள் முதலியவற்றில் வலி தோன்றும். அச் மரி எனும் கல்லின் உராய்வினால் சிறுநீரில் இரத்தம் கலந்து வெளிவருவதும் உண்டு. நடத்தல், குதித்தல், நீந்துதல் முதலான செயல்களில் ஈடுபட்டால் வஸ்தியில் வேதனை தோன்றும்.

தோஷங்களுக்கு ஏற்பத் தோன்றும் தனித்தனியான இலக் கணங்கள், சிகிச்சை முறைகள் ஸுசுருத ஸம்ஹிதையில் விளக்கப் பட்டுள்ளன. (நிதா-அ 3-சிகி-அத் 7).

சிறு குழந்தைகளுக்கும் எளிதில் இந்நோய் தோன்றும். பகலில் தூங்குதல், குளுமையும், எண்ணெய்ப் பசையும், குருத் தன்மையும் (PROTINACEOUS SUBSTANCES) இனிப்புச் சுவையும் கொண்ட உணவை மிகுதியாக உட்கொள்ளுதல் முதலியன இதற்குக் காரணங்களாகும். மேலும் அவர்களுடைய உடலும், வஸ்தியும் சிறியவையாக இருப்பதால், கருவிகளின் மூலம் கல்லை நீக்குவது எளிதாகும். சுக்ராச்மரி என்பது வாலிபர் களுக்கும், முதியவர்களுக்கும் மட்டும் தோன்றுவதாகும்.

அச்மரி நோய் கொண்டுள்ளபோது சிறுநீரில் கனப்பொருள் கலந்து வெளிவருவது உண்டு. அந்நிலையில் சிறுநீரைப் பிடித்து

வைத்தால் சிறிது நேரம் கழித்து ஆராயும் போது சிறுநீருக்கு அடியில் வெண்மை, வெண்மையும் கருநிறமும் கலந்த அல்லது சாம்பல் நிறமுடைய வண்டல் போன்ற பொருள் படிந்திருப்பதைக் காணலாம். முறையே சர்க்கராச்மரி, லிகதாச்மரி, பஸ்மகமேஹம் எனப்படும் இம்மூன்றும் சர்க்கரா (PASSING OF GRAVEL) எனப்படும்.

சர்க்கரா, அச்மரி என்பன தோற்றத்திலும் இலக்கணங் களிலும், தோன்றுவதற்கான காரணங்களிலும் ஒன்றே ஆயினும் சிறு வேற்றுமை கூறப்பட்டுள்ளது. அச்மரி வாயுவால் சிதைக்கப் பட்டால் சர்க்கரா எனப்படும். அதாவது அச்மரி வாயுவால் சிதைவுற்றுத் தானாக சிறுநீருடன் வெளிவரும். இவ்விரண்டிற்கும் உள்ள நுட்பமான வேற்றுமை "வாயு அநுகூலமாக இருந்தால் சர்க்கரா சிறுநீருடன் வெளிவந்துவிடும். வாயு பிரதிகூலமாக இருந்தால் அச்மரியாகத் தங்கி விடும்" என்பதேயாகும்.

அச்மரி நோய்க்கு நெய் மருந்து, பால் மருந்து, கஷாயம், க்ஷார மருந்து, உத்தரவஸ்தி முறை ஆகியவை ஸுசுருதஹிதை சிகித்ஸாஸ்தானம் அத் 7-ஸ்லோ 27ல் விளக்கப்பட்டுள்ளன. இம்முறைகளால் நோய் நீங்காவிடில் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும்.

ஸுசுருதர் இரு வகைகளாக சிகிச்சையைக் கூறியுள்ளார். (1) வஸ்தியில் உள்ள அச்மரி (VESICAL CALCULUS) சிறுநீர் குண்டிகையில் அச்மரி உள்ள போது செய்யப்படுவது (2) சிறுநீர் வழியை (URETHRA) அடைந்துள்ள அச்மரியை நீக்குவது.

## பூர்வகர்மா

வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் நோயாளியின் உடலைத் தூய்மைப்படுத்த வேண்டும். பிறகு நோயுற்ற அதாவது வஸ்திப்பகுதியை எண் ணெயைத் தடவி வியர்க்கச் செய்ய வேண்டும். நோயாளிக்கு உடல் நலம் உண்டாகத் தெய்வவழிபாடு செய்து வலிமை கொண்டவர் மடியில் நோயாளியை மல்லாந்து படுக்கச் செய்து இடுப்புக்குக் கீழ்ப்பகுதி சற்று உயரமாக இருக்கும்படி அடியில் துணியை இழுத்து வைக்க வேண்டும். நோயாளி முழங்காலையும் முழங்கையையும் மடக்கிக் கொள்ளச் செய்து சேர்த்துக் (LITHOTOMY POSITION) கட்ட வேண்டும். (ஸு-சிகி-அத் 7-ஸ்லோ 30).

மருத்துவர் தன் கைகளால் நோயாளியின் தொப்புளுக்குச் சேர்ந்த பகுதியில் எண்ணெய் தடவி நன்றாகத் தேய்க்க வேண்டும். வஸ்தியுள்ள பகுதிக்கு மேல் சற்று இடது பக்கத்தில்

சிறப்பாகத் தேய்த்துவிட வேண்டும். தன் கை முட்டியால் அப்பகுதியை அழுத்திக் கீழ் நோக்கித் தேய்த்து அச்மரியை வஸ்திக்குக் கீழ்ப்பகுதியில் வந்து சேருமாறு செய்ய வேண்டும். மெல்ல அச்மரி அங்கு வந்து சேரும். பிறகு மருத்துவர் தன் இடது கையின் சுட்டு விரல், நடு விரல்களில் எண்ணெயைத் தடவிக் கொண்டு இரண்டு விரல்களையும் சேர்த்தபடி நோயாளியின் குதத்திற்குள் செலுத்தி ஸேவனியின் தொடர்பால் அச்மரியின் அடிப்பகுதி வரை (IN THE COURSE OF MEDIAN) கொண்டு செலுத்த வேண்டும். வலிமையுடனாவது கீழ்நோக்கி நகர்ந்து வந்த அச்மரியை மேலும் கீழ்நோக்கிக் கொண்டு வர வேண்டும். இப்பொழுது அச்மரி குதத்திற்கும், ஆண்குறிக்கும் (ANUS AND PENIS) இடையில் இருக்கும். வஸ்தி தோல் சுருக்கமும், ஏற்றத்தாழ்வுமின்றியும், நீட்சி இன்றியும் இயற்கையாக இருக்க வேண்டும். பிறகு இரண்டு விரல்களால் அழுத்தி, அப்பகுதி கட்டிக்குச் சமமாக இருக்கும்படிச் செய்ய வேண்டும்.

அச்மரியைப் பிடித்துக் கொள்ளத்தக்கபடி கொண்டு வர வேண்டும். இந்நிலையில் நோயாளிகளில் சிலருக்குப் பின்வரும் குறிப்பிட்ட இலக்கணங்கள் காணப்படும். கண்கள் திறந்த நிலையில் விரிவடைந்து (WITHOUT CORNEAL REFLEX) குத்திட்ட நிலையில் இருக்கும். நினைவாற்றல் மறைந்து போகும் (COMATOSE CONDITION). உயிர்நிலைகள் தாக்கப்பட்டன போன்றும் (SHOCK SYMPTOMS) அதிர்ச்சிக்கு உட்பட்டிருப்பன போன்றதுமாகிய நிலை தோன்றும். இந்நிலை காணப்பட்டால் அத்தகையவருக்கு அறுவைச் சிகிச்சை செய்யக்கூடாது. செய்தால் நோயாளி இறந்து விடுவார். இந்த இலக்கணங்கள் காணப்படாத போது அறுவைச் சிகிச்சையால் அச்மரியை நீக்க வேண்டும். (ஸு-சிகி-அத் 7-ஸ்லோ 33-34).

பிறகு இடது பக்கத்து ஸேவனி இருக்கும் இடத்தில் ஒரு யவதானிய அளவு விட்டு அச்மரிக்கு ஏற்பக் கீற வேண்டும். அறுவைச் சிகிச்சை எளிதாகத் தோன்றினால், தேவைக்கு ஏற்ப வலது பக்கத்திலும் அப்பகுதியைப் பிளக்க வேண்டும். அச்மரி உடையாமலும், பொடியாகாமல் இருத்தலிலும் கவனம் கொள்ள வேண்டும். ஏனெனில் அதன் ஒரு பகுதி தங்கியிருந்தாலும், பிறகு பெரிதாக வளர்ந்து துன்பம் தரும். அக்ரவக்ரம் எனும் கருவியால் சல்யத்தைப் பிடித்துக் கொண்டு முழுமையாக வெளியே எடுத்து விட வேண்டும்.

நோயாளி பெண்ணானால் மிக்க கவனத்துடன் இச் செயலைச் செய்ய வேண்டும். ஏன் எனில், பெண்களின் உடலில் வஸ்திக்கு அருகிலேயே கருப்பை உள்ளது. அறுவையின் போது

கருவி சற்று ஆழமாகப் பதிந்தால் கருப்பை, பெண்குறிப் பகுதிகளுக்கும் கேடு விளையும். ஆண்களுக்கும் மூத்திரபிரஸேகம் (URETHREL SPHICTAR) அறுந்து விடும் அபாயம் உண்டு. ஆகவே மேலெழுந்த வாரியாக (SUPERFICIAL) அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். வஸ்திப் பகுதி உயிர்நிலைக்கு கேடு விளையாமலும் கவனமாக அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும்.

ஒரே முறை கீறி அச்மரியை வெளிப்படுத்த வேண்டும். மீண்டும் விரணத்தை அதாவது இரண்டாவது முறையாகக் கீறக் கூடாது. இரண்டாவது முறை பிளப்பதால் விரணம் ஆறாமல் உயிரைப் போக்கும் அபாயம் நேரும். (ஸு-சிகி-அத் 7-ஸ்லோ 34,35-37).

அறுவையால் அச்மரியை நீக்கியதும் நோயாளியை இளஞ்சூடுள்ள நீர் நிரம்பிய தொட்டியில் மூழ்கி இருக்கச் செய்ய வேண்டும். இதனால் இரத்தப் பெருக்கு நின்று விடும். மற்றும் வஸ்திப் பகுதியில் இரத்தம் தங்காது. சிறுநீரகத்தில் இரத்தம் சேர்ந்தால் பாலுள்ள மரங்களின் கஷாயத்தைக் கொண்டு உத்தரவஸ்தியைச் செலுத்திக் கழுவி விட வேண்டும்.

பாலுள்ள மரங்களின் கஷாயத்தால் கழுவுவதால் இரத்தப் பெருக்கு நின்று விடும்.

சிறுநீர்க்குழாயில் தோன்றிய அச்மரிக்கு அப்பகுதியைப் பிளந்து படிசயந்திரத்தால் அச்மரியை வெளிப்படுத்த வேண்டும். முன் கூறியபடியே பிறகு விரணத்தை ஆற்ற வேண்டும். விரணத்தின் மேல் நெய்யும் தேனும் கலந்து பூச வேண்டும்.

அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு செய்ய வேண்டிய பணிவிடைகள், நோயாளீ மேற்கொள்ளத்தக்க பத்திய முறைகள் முதலியன ஸுசுருதஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானம் அத் 7ல் (ஸ்லோ 35-36) விளக்கப்பட்டுள்ளன.

)ப்பகுதி மிக்க நுட்பமான உயிர் நிலைகள் நிறைந்துள்ளது.

(1) மூத்திரவஹம் (URETER) - இது அறுபட்டால் வஸ்திப் பகுதியில் சிறுநீர் நிரம்பிவிடும், மரணம் நேரும்.

(2) சுக்கிரவஹம் (SEMINAL VASICAL OR VASDEFERENS) - இது அறுபட்டால் ஆண்மை இழக்க நேரும், மரணமும் நேரலாம்.

(3) முடிகஸ்ரோதம் (SPERMATIC CORD EJACULATORY DUCT TESTES) - இது அறுபட்டால் த்வஜபங்கம் (ஆண்குறி எழுச்சியின்மை) நேரும்.

(4) மூத்திரபிரஸேசம் (URETHRAL SPHINCTER) - இது அறு பட்டால் சிறுநீர் நிற்காமல் வெளியேறிக் கொண்டிருக்கும்.
(5) ஸேவனி (PERINEAL RAPHE) - இது அறுபட்டால் மிக்க துன்பம் விளையும்.
(6) யோனி (VAGINA) - இது அறுபட்டால் மிக்க துன்பம் விளையும்.
(7) குதம் (ANAL CANNAL) - இது அறுபட்டால் மிக்க துன்பம் விளையும்.
(8) வஸ்தி (BLADDERS) - இது அறுபட்டால் மிக்க துன்பம் விளையும்.

இந்த எட்டையும் பாதுகாத்துக் கொண்டு அறுவை சிகிச்சை செய்ய வேண்டுமென்பது ஸுசுருதர் கூற்றாகும். (சிகி-அத்-ஸ்லோ 37).

அலோபதி மருத்துவத்தில் இன்று அச்மரியை நீக்க இரண்டு முறைகள் பழக்கத்தில் உள்ளன (1) லிதோடொமி (LITHOTOMY) (2) மற்றொரு வகை அச்மரியை வஸ்தியிலேயே தூளாக்கிப் பிறகு வெளிப்படுத்தும் முறை (LITHALOPAXY OR LITHOTRITY). நோயாளியின் நிலை, வயது, வலிமை, பால் நோயின் தன்மை ஆகியவற்றை ஆராய்ந்து, இவ்விரண்டில் தகுந்த முறை மேற் கொள்ளப்படுகிறது.

அச்மரியை உடைத்தல் முறை (LITHALOPAXY OR LITHOTRITY) : இது ஒரே சமயத்தில் வஸ்திக்குள் உள்ள அச்மரியைத் தூளாக்கி வெளியேற்றும் முறையாகும். வஸ்திக்குள் நான்கு அல்லது ஐந்து அவுன்ஸ் வரை 1 : 5000 ஆக்ஸிஸைநேட் ஆப் மெர்க்குரி எனும் சக்தி வாய்ந்த கலவை புஷ்பநேத்ரமாகச் (உத்தர வஸ்தி) செலுத்தப்படும். பிறகு LITHOTRITY எனப்படும் கருவி புகுத்தப்படும். கருவி உள்புகுந்ததும், அதன் இரு முனைப் பலகைகள் அகன்று அச்மரியைப் பிடித்துக்கொள்ளும். பிறகு அந்தக் கருவி வெளியே எடுக்கப்பட்டு "விக்லி ஆப் இவைக் வேடர்" என்பது இணைக்கப்படும். அது உடைந்த அச்மரித் துண்டுகளை வெளியேற்றும். சிறுநீர்க்குழாயில் ரப்பர் கை பேடர் வைத்துக் கட்டிச் சில நாட்கள் வைத்திருக்க வேண்டும்.

சிறுவர்களுக்கும் இம்முறை பயன்படுத்தப்படுகிறது. வஸ்தியில் வீக்கம், அச்மரி மிகப் பெரியதாக இருத்தல் அல்லது கடினமாக இருத்தல், வஸ்தியில் ஒட்டிக் கொண்டிருத்தல் போன்ற நிலைகளில் வேறு முறையில் அச்மரி அகற்றப்படுகிறது.

அச்மரியை வெளியே எடுக்கும் முறைகளில் 1. கருவழி (VAGINAL) 2. சிறுநீர் வழி (URETHRAL) 3. பகத்தின் மேற்

பகுதியைப் பிளத்தல் (SUPRA PUBIC) 4. மத்ய மூலாதார பீடச் சேதனம் (MEDIAN PERINEAL LITHOTOMY) ஆகியவையும் அடங்கும்.

இன்று பழக்கத்தில் உள்ள இம்முறைகளில் ஸுசுருதர் கூறியது நான்காவது முறையாகும் என்பது குறிப்பிடத்தக்கது. இம்முறை "பெரினியல்ஸிஸ்டோடமி" (PERINEAL CYSTOTOMY) என்றும் கூறப்படுகிறது. எல்லா முறைகளையும் விட இது சிறந்த முறை யாகும் எனலாம்.

இம்முறைகளில் சில தவறுகளும், சில நன்மைகளும் கலந்து உள்ளன. (1) வஸ்திப்பகுதி உயிர் நிலைகளுக்கு அருகில் இருந்து சிக்கல் மிகுந்ததாக இருப்பதால், அச்மரியை வெளிப்படுத்துவது சிரமம் (2) அறுவைச் சிகிச்சை புரியும் மருத்துவர் விரலை விட்டு வஸ்திப்பகுதி முழுவதையும் ஆராய முடிவதில்லை, ஏனெனில் வஸ்தியின் ஆதாரப்பகுதி வரை மட்டும் விரல் நுழைகிறது. அதனால் அச்மரியைப் பிடித்துக் கொள்ள முடிவதில்லை. இதில் மலாசயம், மூத்திரஸ்ரோதஸ் இரண்டும் பிளந்து விடும் எனும் அச்சம் தோன்றுகிறது. பலருக்கு இரத்தப்பெருக்கு (அறுவையின் போது) மிகுந்த அளவில் ஏற்பட்டு விடுகிறது. பிரஸேகஸங் கோசனி (SPHINCTER) யில் காயம் (LACCRATION) ஏற்பட்டால் எப்பொழுதும் மூத்திரம் பெருகும் விரணம் (INCONTINENCE OF URINE) ஏற்படும். இவை குற்றங்களாகும். இம்முறையில் சில நன்மைகளும் இருக்கின்றன. விரணம் எதிர்பார்த்ததை விட விரைவில் ஆறும். சிறுநீர் தன் வழியிலேயே வெளிவரும். இந்தச் செயலில் குறைந்த அளவு தாதுக்களே அழிகின்றன. அச்மரி உபஷ்டீலா மூத்ரமார்க்கத்தில் (PROSTATIC URETHRA) ஒட்டிக் கொண்டிருக்குமானால், அந்நிலையில் இந்த முறை சிறந்ததாகும். முதியவர்களில் ஷ்டீலா விருத்தியுடன் வஸ்தியைச் சார்ந்த அச்மரி தோன்றினால் அவர்களுக்கு இம்முறையில் சிகிச்சை நன்மை தரும். ஏனெனில் அவர்களுக்கு அச்மரியை வெளியேற்றுவதுடன் ஷ்டீலாச்சேதனம் (PERINIAL PROSTATECTOMY) என்பதையும் செய்து விடலாம்.

## அச்மரிக்கு அலோபதியில் அறுவைச் சிகிச்சை

உடலைத் தூய்மைப்படுத்தி மலக்குடலைச் சுத்தமாக்க வேண்டும். முழங்கால்களையும் முழங்கைகளையும் மடக்கச் செய்து (LITHOTOMY POSITION) சேர்த்துக் கட்ட வேண்டும். துணை உதவியாளர் விரைப்பையை முன்னோக்கி இழுத்துப் பிடித்துக் (இதனால் அறுவைச் சிகிச்சையில் தடங்கல் நேராது) கொண்டிருப்பார். மருத்துவர் மூலாதாரப் பீடத்தை நோக்கி அமர்ந்து அப்பகுதி இடையில் இரண்டு அங்குலம் வரை

பிளப்பார். மலவழிக்கு மேல் ஓர் அங்குலம் இடைவெளியிருக்கும்படி வெட்டப்படும். அதனால் ஸ்ரோதஸ்ஸுக்கும், ஸங்கோச பேசிக்கும் கேடு விளையாது. வெட்டுப்பட்ட பகுதியில் ஆழத்தில் மூலாதார பீட பேசியும், குதஸங்கோசனியும் இணையும் பகுதி காணப்படும். இந்நிலையில் மாறுபட்ட முறையில் வெட்டி (TRANSVERSE INCISION) பாஹ்யமூத்திர ஸங்கோசனி (EXTERNAL SPHINCTER)யையும் மூத்திரவாஹினீ நாளத்தையும் (EJACULATOR URINAE) வேறுபடுத்துவார். 'பல்ப்' என்பதை முன்னோக்கி இழுத்து மூத்திர மார்க்கத்தின் சிலேத்துமக்கலைப் பகுதியைத் தெளிவுபடுத்திக் கொள்வார். இடது கை சுட்டு விரலால் மூத்திர மார்க்கத்தைத் தெளிவுபடுத்திக் கொண்டு விருத்தி பத்ரம் எனும் கருவியால் சிறுநீர் வழியைச் ஷ்டைலா எனும் பகுதி வரை எடுத்துச் செல்வார். பிறகு விருத்திபத்திரத்தை எடுத்து விட்டு சங்குத் தோற்றமுள்ள ஏஷணியைப் புகுத்துவார் (CONICAL POINTED DIRECTOR). பிறகு இந்த ஏஷணியின் வழியாக வலது கை சுட்டு விரலை உட்புகுத்தி ஆராய்வார். வஸ்தியின் ஆழ மான பகுதியில் ஒரு எல்லை வரை விரலைப் புகுத்த முடியும். விரலைப் புகுத்தத் தேவையானால் கருவியால் அவ் வழியை விரல் புகும் அளவிற்கு அகலப்படுத்திக் கொள்ள வேண்டும். சிறு அச்மரியை தாலம் (SCOOP) எனும் கருவியால் எடுத்துவிடலாம். அவ்வாறு வெளிவராவிடில் அக்ரவக்ரஸம்தம்சம் (LITHOTOMY FORCEP) எனும் கருவியின் மூலம் வெளியே எடுத்து விட வேண் டும். கல் (அச்மரி) மிக நீளமாக இருந்தால் வஸ்தியின் கழுத்துப் பகுதியில் ஒரு பக்கத்தில் சிறிதளவு கீறி (BILATERAL CUT) விட வேண்டும். இப்பொழுது மூத்திரஸங்கோசனி (URETHRAL SPHINCTER) சேதப்படாமல் கவனம் கொள்ள வேண்டும்.

அச்மரியை நீக்கிய பிறகு ஒரு ரப்பர் குழாயை மூத்திராசயத்தில் புகுத்தி மூலாதார பீடத்துத் தோலைத் (பிளவுபட்ட இடத்தை) தைத்துவிட வேண்டும். இரண்டு நாட்கள் அவ்வாறே இருக்க வேண்டும்.

இந்த விளக்கத்தில் கவனிக்கத்தக்கது யாதெனில் ஸுசுருதரின் முறைக்கும் நவீன முறைக்கும் ஆதாரத்தில் மட்டும்தான் வேற்றுமை காணப்படுகிறது. (சிகி-அத் 7-ஸ்லோ 30), முன் காலத்தில் குதத்திற்குள் சுட்டு விரலைப் புகுத்தி அதனால் அறுவைக்கு உரிய வழி காணப்பட்டது.

இன்று ஒரு வகை சலாகை (A CURVED STAFF WITH A WIDE GROOVE) மூலம் செயல் வெற்றிகரமாகச் செய்யப்படுகிறது. மற்றபடி வேறு சிறப்பான வேற்றுமை இல்லை என்பது கவனத்தில் கொள்ளத்தக்கது.

மூத்திராகாதம் (RETENTION OF URINE) : வாக்படர் சிறு நீர்த்தடை எனும் இந்நோய் இருபது வகைப்படும் என்றும், ஸுசுருதர் பன்னிரண்டு வகைப்படும் என்றும் கூறுகின்றனர். (உத்-அத் 50). இவற்றில் சில மருந்தால் தீரும். சில அறுவைச் சிகிச்சையால் தீர்க்க வேண்டியவையாகும். மூத்திர உத்ஸங்கம், மூத்திரகிரந்தி, வாதஷ்டீலா, விட்விகாதம் என்பன அறுவைச் சிகிச்சையால் தீர்க்கக் கூடியவையாகும்.

மூத்திராகாதம் என்பது ஆங்கிலத்தில் "ரிடென்ஷன் ஆப் யூரின்" எனப்படும். தற்காலத்தில் ரப்பர் கைதெடர்ஸ், டீமென்ஸ் ஹார்ட் ரப்பர் கைதெடர்ஸ் கம் எலாஸ்டிக் கைதெடர்ஸ், மெடல் கைதெடர்ஸ் எனும் கருவிகள் பயன்படுத்தப் படுகின்றன. இவற்றில் பயன் இல்லாவிடில் மூத்திராசயத்தின் வயிற்றுப் பகுதியைப் பிளந்து சிகிச்சை செய்யப்படுகிறது. இது "ஸுப்ராப்யூபிக்பேக்சர்" அல்லது "ஸுப்ராப்யூபிக் ஸிஸ்டோடமி" எனப்படும். ஆயுர்வேத முறையில் இந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை ஸுசுருத ஸம்ஹிதை உத்தரஸ்தானம் 58ம் அத்தியாயத்தில் காணலாம்.

பிரமேஹபிடகை (CARBUNCLE) வசையும், கொழுப்பும் அளவில் மிகுந்து உடலில் சேரும் போது பத்து வகையான பிடகைகள் (கட்டி) தோன்றும். நீரிழிவு நோய் கொண்ட வர்களுக்கு இந்நோய் தோன்றும்.

இந்தப் பிடகைகள் தோல், அடித்தோல் (SUBCUTANEOUS) பகுதிகளில் தோன்றி பரந்து வலையைப் போலப் பல நுட்பமான கண்களைக் கொண்டு சீழ் பிடித்ததாக இருக்கும். இந்தக் கட்டிகள் ஆங்கிலத்தில் (CARBUNCLE) எனப்படும். இன்றைய மருத்துவம் கீழ்த்தோல் தாதுக்களில் (SUBCUTANEOUS TISSUES) ஒரு வகை உயிரணுக்கள் சேர்வதால் தோன்றும் என்கின்றது. நீரிழிவு நோய் முற்றிய நிலை இதற்கு முக்கியக் காரணமாகும்.

STAPHYLOCOCCUS PYOGENES AUREUS எனப்படும் உயிரணுக்கள் கொத்துக் கொத்தாகச் சேர்ந்து மஞ்சள் நிறமுள்ள சீழைத் தோற்றுவிக்கும் என இன்றைய மருத்துவம் கூறுகிறது.

பொதுவாக இந்தப் பிடகைகள் கழுத்துக்குப் பின்பக்கம் (பிடரி) முதுகு, தோள், பின்தட்டு, உதடு, முகம் ஆகிய பகுதி களில் தோன்றும். மேலும் குதப்பகுதி (PERINEUM), இதயம் (CARDIAC REGION), தலை போன்ற பகுதிகளிலும் தோன்றக் கூடும். ஸுசுருத ஸம்ஹிதை, நிதானஸ்தானம் 7ஆம் அத்தியாயத் தில் இவற்றைப் பற்றிய விளக்கங்கள் காணலாம். இந்நோய்க்கு விரிவான சிகிச்சை முறைகளும் கூறப்பட்டுள்ளன. தாந்வந்தர கிருதம், ஸாலஸாராதி லேஹியம், திரிபலாலௌஹம், லோஹா ரிஷ்டம் போன்றவை சிறந்த மருந்துகளாகும்.

அலோபதி முறையிலும் TOLBUTAMIDE, DIABENESE போன்ற மருந்துகள் பல உள்ளன.

பக்குவம் பெற்ற விரணங்களில் கெட்டுப் போன பகுதியை வெட்டி எடுத்து (FREE EXCISION OF THE NECROTIC TISSUES), விரணத்தை ஆற்றப் பல தைலங்களும், கஷாயங்களும் பயன்படுத்த வேண்டும். ஆரக்வதாதிகஷாயம், பிப்பல்யாதி கஷாயம் போன்றவை பயன்படுத்தப்படும்.

இன்றைய மருத்துவத்திலும் இம்முறையை ஒட்டியே சிகிச்சை செய்யப்படுகிறது. விரணத்தைக் கழுவ காரப்பொருள்கள் (PHENOL OR CAUSTIC LOTION), மேல் பூச்சுக்கு மேக்லால்ப்லேபம் (CREAM NAG SULPH PASTE), SU-MAG முதலியன பயன் படுத்தப்படுகின்றன. 'பென்ஸின்' பயன்படுத்தப்படுவதால் சீழ் தோன்றுவது குறைந்து விரைவில் விரணம் ஆறுகிறது.

## க்ஷுத்ர ரோகங்கள்

க்ஷுத்ர ரோகாத்யாயம் எனும் பெயரில் ஸுசுருதர் நாற்பத்து நான்கு நோய்களைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றில் வல்மீகம் (ACTINOMYCOSIS AND MYCETOMA OR MADURA FOOT), கர்ணமூல கலாலாகிரந்தி (PAROTID GLAND), அர்புதம் (ADENOMA), (FIBROMA) (END OTHELIOMA), கர்ணபேரம் (EPIDEMIC PAROTITIS OR MUMPS), விஸ்போடகம் (BULLOUS ERUPTIONS), கக்ஷாஸ்போடம் (HERPES ZOSTER), சிப்பம் (ONYCHIA PURULENTO), நகமாம்ஸம் (NAIL - MATRIEX), குநகம் (ONYCHOGRYIPHOSIS), சர்க்கரார்புதம் (COCK'S PECULIAR TUMOUR) OR SABAVEAOUS HORN) பாததாரி (RHAGADES), அலஸம் (CHILBLAIN), அருஷிகா (ECZEMA OF THE FACE AND SCALP), மஸூரிகா (SMALL POX), சீதலா (CHICKEN POX OR VARIOELLA), ரோமாந்திகா (MEASLES), பத்மினீ கண்டகம் (PAPILOMA OF THE SKIN), பரிவர்த்திகா (PARAPHYMOSIS), அவபாடிகா (TEAR IN THE PREPUCE), நிருத்தபிரகசம் (PHIMOSIS), ஸந்நிருத்தகுதம் (STRICTURE OF THE RECTUM), ஆஹிபூதனம் (INFANTILE ERYTHEMA OF JAQUET OR NAPKIN, RASH OR SORE BUTTOCKS), விருஷணகண்டூ (ECZEMA OF THE SCROTUM) போன்ற நோய்களுக்குத் தோன்றும் காரணம், இலக்கணம், சிகிச்சை முறைகள் ஸுசுருத ஸம்ஹிதை நிதானஸ்தானம் 13-ம் அத்தியாயத்திலும் - மற்றும் சிகித்ஸா ஸ்தானத்தில் 20-ம் அத்தியாயத்திலும் கூறப்பட்டுள்ளன.

இவற்றில் வல்மீகம் எனும் நோய்க்கு ஸுசுருதர் கருவியால் வெட்டிவிடுதல், சுடுதல், விரணத்தை ஆற்றுதல் எனும் முறையில் சிகிச்சையைக் கூறியுள்ளார். இன்று அலோபதி மருத்துவத்திலும் உத்கர்த்தனம் (FREE EXCISION), தாஹகர்மா (CAUTERIZATION), க்ஷகிரணம் (X RAY) எனும் முறைகள் பின்பற்றப்படுகின்றன.

இந்தரலுப்தம் எனும் நோய் ALOPECIA எனப்படுகிறது. இதற்கு ஸுசுருதர் எண்ணெய் மருந்து, வியர்க்கச் செய்தல், ஸிரையைக் கீறுதல் எனும் சிகிச்சை முறைகளைக் கூறியுள்ளார். (ஸு-சிகி-அத் 20-ஸ்லோ 24,26). இன்று அலோபதி மருத்துவர்கள் கைந்தரெபன், லாய்கர், அமோனியா போர்ட் போன்ற மருந்துகளாலான எண்ணெயைப் பயன்படுத்துகின்றனர்.

ஒவ்வொரு நோயைப் பற்றியும் விளக்க வேண்டுமெனில் தனிப் புத்தகமாக வெளியிட வேண்டிய அளவு விரிவு பெறும். சில முக்கிய நோய்களுக்கு மட்டும் இக்கட்டுரையில் விளக்கம் தரப்பட்டுள்ளது.

இதனால் பலவகை மருத்துவ முறைகளுக்கு வழி கோலியது ஆயுர்வேதம் என்பதை ஒப்புக் கொள்ள மனமில்லாதவர்களும், அலோபதி போன்ற மருத்துவ முறைகள் தோன்றுவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே ஒவ்வொரு நோயையும், அதன் நுட்பமான வேறுபாடுகளையும் நன்கு ஆராய்ந்து அவற்றிற்குத் துவக்க நிலை, நடுநிலை, முற்றிய நிலைகளில், நிலைமைக்கு ஏற்பச் சிகிச்சை முறைகளும் வகுக்கப்பட்டுள்ளன என்பதையும், மேலும் அறுவைச் சிகிச்சைகள் நன்கு பழக்கத்தில் இருந்தன என்பதையும் ஒப்புக் கொண்டாக வேண்டும். இதை மறுக்கவோ, மறைக்கவோ முடியாத சான்றுகளாக சரக-ஸுசுருத-வாக்பட ஸம்ஹிதைகள் விளங்குகின்றன.

மருந்து முறைகள் இன்றும் பழக்கத்தில் உள்ளன. ஆயினும் ஆயுர்வேதத்தில் அறுவைச் சிகிச்சை வழக்கொழிந்தமைக்குக் காரணங்கள் பல.

அறுவைச் சிகிச்சையைக் கற்றுக் கொள்ள வேண்டுமெனில், முதலில் சவத்தை அறுத்து நுட்பமான உடற்பகுதிகளை அறிந்து கொள்ள வேண்டும். இம்முறையை வைதிக மதத்தினரும், பௌத்த, ஜைன மதத்தினரும் வெகுவாக இகழ்ந்ததால் அறிவாற்றல் மிக்கவர்கள் இம்முறையை மேற்கொள்ளத் தயங்கினர்.

பிறகு மகமதிய ஆட்சியிலும், ஆங்கிலேயர் ஆட்சியிலும் அரசாங்கத்தின் ஆதரவு இல்லாமையோடு, நம் நாட்டுக் கலைகளையும், வித்தைகளையும் அவர்கள் பெரு முயற்சியுடன் அழித்து, நூல்களையும் பாழ்படுத்தி விட்டதை சரித்திரம் அறியும். இத்தகைய காரணங்களால் ஆயுர்வேத மருத்துவத்தில் புது மலர்ச்சி ஏற்படவில்லை.

ஆனால் இன்று நமக்குக் கிடைத்துள்ள ஒரு சில நூல்களைக் கொண்டே மேலும் பலவகைகளில் இம்மருத்துவத்தைச் சிறப்புற வளர்க்கலாம் என்பதே எம் கருத்து.

* * *

## II. சாலாக்ய தந்திரம்

ஆயுர்வேதத்தின் எண்வகைப் பிரிவுகளில் சாலாக்ய தந்திரம் ஒன்று. சலாகை என்றால் உலோகத்தாலான குச்சி (ROD). அத்தகைய சலாகையின் உதவியைக் கொண்டு சிகிச்சை செய்யப்படும் முறை சாலாக்ய தந்திரமாகும். ஐத்ரு (CLAVICLE) எனப்படும் தோள் என்புகளுக்கு மேற்பகுதியில் உள்ள உடற்பகுதியில் தோன்றும் நோய்கள் அதாவது தொண்டை, கண், காது, மூக்கு, வாய், தலை ஆகிய பகுதிகளில் தோன்றும் நோய் களுக்குச் சிகிச்சை முறைகள் இப்பகுதியில் விளக்கப்படுகின்றன.

ஆங்கில மருத்துவத்தில் இவை தனித்தனி பிரிவுகளாகக் கருதப்படுகின்றன. கண் நோய்களுக்கான சிகிச்சை முறைகள் OPHTHALMOLOGY எனவும், பல் நோய் சிகிச்சை முறைகள் DENTRISTY எனவும், காது, மூக்கு, தொண்டைகளைச் சார்ந்த நோய்களுக்கான சிகிச்சை முறைகள் THE SCIENCE OF EAR, NOSE AND THROAT DISEASES எனவும் கூறப்படுகின்றன. தலையைச் சார்ந்த நோய்கள் மற்ற நோய்களைப் போல உடலைச் சார்ந்த நோய்களில் கணக்கிடப்படுகின்றன.

ஸுசுருத ஸம்ஹிதை உத்தரஸ்தானத் துவக்கத்தில் கூறப் பட்டுள்ளபடி *சாலாக்ய தந்திரத்தை முதலில் தோற்றுவித்தவர் விதேஹ நாட்டு மன்னர் நிமியாவார். இராமாயணத்தில் இடம் பெற்றுள்ள ஜனக மகாராஜாவின் குலத்தில் அவருக்கு முன்பு தோன்றியவர் நிமி. இவர் கண் மருத்துவத்தில் சிறந்தவர். இவர் பெயரில் 'நிமிஷ' எனும் கண் நோய் குறிப்பிடப்பட்டுள்ளதாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

ஆத்ரேய, புனர்வசு, தந்வந்தரி, பரத்வாஜ, காச்யப, நிமி, ஆலம்பாயனர் முதலியவர்கள் இந்திரனுடன் அவையில் வீற்றிருந்தார்கள் என அஷ்டாங்கஸங்கிரகம் ஸூ-அத் 2ல் கூறப் பட்டுள்ளது. ஆகவே ஆயுர்வேத ஸம்ஹிதையின் தொல் ஆசிரியர்களான ஆத்ரேயர், பத்ரகாப்யர் முதலானவர்கள் விளங்கி இருந்த காலத்தவர் நிமி எனத் தெரிய வருகிறது. பௌத்தஜாதகத்தில் மகாபாரத யுத்தத்திற்கு 200 ஆண்டுகளுக்கு முன் நிமி கந்தர்வ நக்னஜித் என்பவர் காலத்தில் விளங்கி வந்தார் எனக் கூறப்பட்டுள்ளது. நிமியல்லாத மேலும் பலர் கண் ணோய் மருத்துவத்தில் புகழ் பெற்றுத் தனித்தனியாக ஸம்ஹிதைகள் இயற்றியுள்ளனர்.

---

* சாலாக்ய தந்த்ராபிஹிதா விதேஹாத்பவகீர்த்திதா (உத்.அத்1-சூ5)

**கராளர்**

சரகாசாரியர் கண் நோய்களில் பயிற்சியுடையவர் அல்லர். ஆயினும் தம் நூலில் தொண்ணூற்றாறு கண்ணோய்களைக் குறிப்பிட்டுள்ளார். சரகஸம்ஹிதைக்கு உரை எழுதிய சக்ரபாணி எனும் ஆசிரியர் "விதேஹ மன்னன் கண்ணோய்கள் எழுபத்தாறு எனக் குறிப்பிட்டுள்ளார். கராளர் தொண்ணூற்றாறு நோய்களைக் கணக்கிட்டுள்ளார். ஸாத்யகி எண்பது நோய்களைத் தன் நூலில் குறிப்பிட்டுள்ளார். இந்தக் கொள்கைகளில் கராளரின் கருத்தை சரகர் ஏற்றுள்ளார்" எனக் கூறியுள்ளார்.

கராளர் இயற்றிய ஸம்ஹிதை சக்ரபாணி காலத்தில் பழக்கத்தில் இருந்ததாக அவருடைய உரையால் தெரிய வருகிறது.

**சௌனகர், பத்ரசௌனகர்**

ஸுசுருதஸம்ஹிதை உத்தரஸ்தானத்தில் முதல் அத்தியாயத்தில் உரையாசிரியர் டல்ஹணர், சௌனகரின் பெயரைக் குறிப்பிட்டுள்ளார். சக்ரபாணியும் தன் சரகஸம்ஹிதை ஸூத்ர ஸ்தானத்தின் உரையில் காசியபரின் நூலிலிருந்து சில வாக்கியங்களை எடுத்துக் குறிப்பிட்டுள்ளார். மற்றும் பத்ரசௌனகர் என்பவரது கூற்றாகவும் சில வாக்கியங்கள் அவரது உரையில் குறிப்பிடப்பட்டுள்ளன.

**காங்காயனர்**

சரகர் தம் ஸம்ஹிதையில் "காங்காயனோ பாஹ்லிக பிஷக்" எனக் காங்காயனர் பாஹ்லிகம் எனும் நாட்டில் விளங்கிய மருத்துவராகக் குறிப்பிட்டுள்ளார். (சாரீ 6-21). பாலகாப்யர் தாம் இயற்றிய ஹஸ்திசாஸ்திரத்தில் (1-1)ல் காங்காயனர் தசரத மன்னரது நண்பராகிய ரோமபாதரின் அவையில் இருந்தவர் எனக் குறிப்பிட்டுள்ளதால் இவர் இராமாயண காலத்தவர் என்பது தெரிய வருகிறது.

**கார்க்யர்**

இமயமலைப் பகுதியில் மருத்துவ ஆராய்ச்சிக்காகக் கூடிய முனிவர்களில் இவரும் ஒருவராவர். பாலகாப்யரின் ஹஸ்தி ஆயுர்வேதத்தின்படி (1-1) இவர் அக்காலத்தவராகத் தெரிய வருகிறது. (பாலகாப்யர் தசரத மன்னரின் நண்பரான ரோமபாதரின் அவையில் இருந்தவர் என்பது முன்பே குறிப்பிடப்பட்டுள்ளது.)

**காலவர்**

ஆத்ரேயருடன் இமயமலையில் நடைபெற்ற முனிவர்களின் ஆராய்ச்சிக் குழாமில் காலவரும் ஒருவராவர்.

**ஸாத்யகி**

ஆயுர்வேத நூல்களுக்கு உரை வகுத்த டல்ஹணரின் உரையின்படி ஸாத்யகி சிறந்த மருத்துவராகக் குறிப்பிடப் பட்டுள்ளார். 'திமிரம்' எனும் கண்ணோய்க்கு உரிய சிகிச்சையை விளக்கும் பகுதியில் உரையாசிரியர் டல்ஹணர் இவரைக் குறிப்பிட்டுள்ளதால் ஸாத்யகி சாலாக்ய தந்திரத்தில் புகழ் பெற்றவராகத் தெரிகிறது. மகாபாரதத்தில் கிருஷ்ணனுக்குத் தம்பியாகக் கூறப்பட்டுள்ள ஸாத்யகி இவரா அல்லது வேறு ஒருவரா என்பது ஆராய்ச்சிக்கு உரியது.

**சக்ஷுஷ்யர்**

'சக்ஷுஷ்யேன தந்திரம்' எனும் சாலாக்ய தந்திர நூல் ஒன்று விளங்கி வந்ததாக திருகணநாத ஸேன் போன்ற மருத்துவ நூல் விற்பன்னர்கள் கூறுகின்றனர்.

**போஜன்**

உரையாசிரியர் டல்ஹணர் தம் உரையில் அடிக்கடி போஜ ஸம்ஹிதையில் உள்ளது எனச் சில பொருள்களை எடுத்துக் கூறுகிறார்.

இவ்விளக்கத்தால் இராமாயண-மகாபாரத காலத்திலிருந்தே ஆயுர்வேதத்தில் கண் நோய்களுக்கும், மற்ற சாலாக்ய தந்திரத்தைச் சார்ந்த நோய்களுக்கும் சிறப்பான சிகிச்சை முறைகள் நம் நாட்டில் விளங்கி வந்தன என்பது தெளிவாகும்.

இராமாயணம் கி.மு. 5ம் நூற்றாண்டுக்கு முற்பட்டது என்பதும், மகாபாரதப் போர் கி.மு. 1200-1100 இடையே நடைபெற்றது என்பதும் ஆராய்ச்சியாளர்களின் முடிவு என்பது இங்கு நினைவிற் கொள்ளத்தக்கது.

சாலாக்ய தந்திரத்தைச் சார்ந்த ஸம்ஹிதைகளில் ஸுசுருதரின் உத்தரதந்திரம் ஒன்றே இன்று கிடைத்துள்ளது. மற்றவை கால வெள்ளத்தில் மறைந்து போயின. அவற்றைப் பற்றிய சில குறிப்புகள் மட்டும் ஆயுர்வேத நூல்களுக்கு உரை வகுத்த ஆசிரியர்களால் தம் நூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளன.

குறிப்பிட்ட பகுதியில் தோன்றும் பிணி யாதென அறிய உதவும் வகையில் பல பகுதிகளைக் கொண்ட கண் படங்கள் இங்கே தரப்படுகின்றன.

# III. கண் படங்கள்

# ANATOMY OF THE EYE




**Fig. 2-1** External landmarks of the eye. The sclera is covered by transparent conjunctiva. (Photo by HL Gibson, from: *Medical Radiography and Photography*).




**Fig. 2-2 Internal structures of the human eye. (Redrawn from an original drawing by Paul Peck and reproduced, with permission, from: *The Anatomy of the Eye*. Courtesy of Lederle Laboratories).**




கண்கோள குருதிச் சுற்றோட்டம்




கண்கோள உடற்கூறு அமைப்பு - வலப்பக்கத் தோற்றம்

1. மேல் இமை
2. லென்சு
3. முன் கண்ணறை
4. கருவிழி
5. பின் கண்ணறை இரசம்
6. கீழ் இமை
7. கண் குழி என்பு பகுதி
8. நெற்றி என்பு
9. பார்வை நரம்பு
10. கண்கோள நாடி

## ஸுசுருத ஸம்ஹிதையில் கண்ணோய்கள்

ஸுசுருதர் தம் நூலில் குறிப்பிட்டுள்ள கண்ணோய்கள் எழுபத்தாறு. அவற்றில்

1. இணைப்புகளைச் சார்ந்தவை ஒன்பது

2. கண்ணிமைகளைச் சார்ந்தவை இருபத்தொன்று

3. வெண்விழிப்பகுதிகளைச் சார்ந்தவை பதினொான்று

4. கருவிழியைச் சார்ந்தவை நான்கு

5. கண் முழுவதையும் சார்ந்த நோய்கள் பதினேழு

6. கண்ணின் கருமணியைச் சார்ந்தவை பன்னிரண்டு

7. புறப்பகுதியைச் சார்ந்தவை இரண்டு. இன்றைய அலோபதி மருத்துவத்தில் விளக்கப்பட்டுள்ள நோய்களையும், ஸுசுருதர் விளக்கியவற்றையும் ஒப்பிட்டு நோக்கும் போது ஸுசுருதர் விளக்கியவற்றை விட வேறு கண்ணோய் ஒன்று கூட இன்றைய மருத்துவத்தில் கூறப்படவில்லை என்பது நினைவிற் கொள்ளத் தக்கது.

ஸுசுருதர் குறிப்பிட்டுள்ள கண்ணோய்களும், அவற்றிற்கு இன்றைய அலோபதி மருத்துவம் கூறும் பெயர்களும் அடுத்து வரும் பட்டியலில் குறிப்பிடப்பட்டுள்ளன.

# IV. கண் நோய்கள்

## (1) கண்களில் உள்ள இணைப்புகளைச் சார்ந்த

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | பூயாலஸம் | ACUTE DACRYO CYSTITIS OR CHRONIC DACRYOCYSTITIS | ஸந்நிபாதம் | கனீனிகை இணைப்பு |
| 2. | உபநாஹம் | LACRIMAL CYST | கபம் | ஸந்தி திருஷ்டி |
| 3. | (நேத்ரஸ்ராவம்) (1) கபஜஸ்ராவம் (அ) சிலேஷ்மா ஸ்ராவம் | CHRONIC DACRYOCYSTITIS EPIPHORA | கபம் | கனீனிகை இணைப்பு |
| 4. | (2) இரத்த ஸ்ராவம் | CHRONIC DACRYOCYSTITIS | இரத்தம் | ,, |
| 5. | (3) பித்தா ஸ்ராவம் | CHRONIC DACRYOCYSTITIS | பித்தம் | கனீனிகை ஸந்நிதி |
| 6. | பூயாஸ்ராவம் | CHRONIC DACRYOCYSTITIS | ஸந்நிபாதம் | ,, |

## நோய்கள் - 9 (உத்தரஸ்தானம் - அத்தியாயம் 2)

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| வீக்கத்துடன் பக்குவம் பெறுதல் | அதிக அளவு சீழ் பெருகுதல் | இரத்தத்தை வெளிப்படுத்துதல், உபநாஹஸ்வேதம், விரண வீக்கத்தைப் போக்கும் பூச்சு, உள்ளும் புறமும் தூய்மைப்படுத்துதல் | சிகிச்சைக்கு உட்பட்டது |
| கட்டியாக இருக்கும் பக்குவம் பெறாது | அரிப்பு (வலியின்மை) | பேதனம் (பிளத்தல்) | ” |
| தோஷம் தண்ணீர் வழியில் சென்று வலியற்ற நீர்ப் பெருக்கைத் தோற்றுவிக்கும் | வெண்ணிறமுள்ள அடர்த்தியான நீர்ப்பெருக்கு | கிராஹி தூய்மைப்படுத்தும் இரசாயன முறைகள் | சிகிச்சைக்கு உட்படாதது |
| ” | வெப்பத்துடன் கூடிய அடர்ந்த இரத்தப் பெருக்கு | சிரையைக் கீறுதல் | ” |
| தோஷம் கண்ணீர் வழியை அடைந்து வலியற்ற ஸ்ராவத்தைத் தோற்றுவிக்கும் | மஞ்சளும் நீலமுமான நிறங்களுடன் வெப்பமுள்ள நீர் பெருகுதல் | கழுவுதல், கபப் பெருக்கில் திரிபலை கஷாயம், இரத்த பித்தத்தில் நெய் கலந்த திரிபலா கஷாயம் | ” |
| தோஷம் கண்ணீர் வழியை அடைந்து வலி அற்ற ஸ்ராவத்தைத் தோற்றுவிக்கும் | சீழ் பெருகுதல் | தேன் கலந்த திரிபலை கண்மை இடுதல் | ” |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 7. | பர்வணி | PHLYCTENULAR CONJUNC-TIVITIS MARGINAL CORNEAL ULCER | இரத்தம் | வெள்ளை விழி கரு விழி இணையும் பகுதி |
| 8. | அலஜி | PHLYCTENULAR CONJUNC-TIVITIS P. KERATITIS | ஸந்நிபாதம் | வெள்ளை விழி கரு விழிகளின் இணைப்பு |
| 9. | கிருமிகிரந்தி | BLEPHARITIS | கபம் | கண்ணிமை உரோமங்களின் இணைப்பு |

## (2) கண்ணிமைகளைச் சார்ந்த நோய்கள் - 21 DISEASES

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | உத்ஸங்கினி | MEIBOMIAN CYST IN LOWER LID | மூன்று தோஷங்கள் | இமை |
| 2. | போதகீ | TRACHOMA OR GRANULAR CONJUNCTIVITIS | கபம் | இமை |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| சிறிதளவு வீக்கம் | எரிச்சல் வலி | சேதனம் (வெட்டுதல்) | சிகிச்சைக்கு உட்பட்டது |
| கம்பீர வீக்கம் | பெரும் வீக்கம், எரிச்சல், குத்தல் வலி | | சிகிச்சைக்கு உட்படாதது |
| அரிப்பு | | நன்றாகவியர்க்க செய்தல், பிறகு பிளத்தல், பிறகு மைஇடுதல், அன்ன பேதி, மயில் துத்தம், தேன் கலந்த பிரதி ஸாரணம், இந் துப்பு, திரிபலை கஷாயத்தால் ரஸமுறை | |

## OF THE LIDS (உத்தரஸ்தானம் - அத்தியாயம் 3)

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| இமையின் அடிப் பகுதி மேலுயர்ந் துள்ள பகுதியில் உள்முகமாக உள்ள கட்டி | கடினம், சிறிதளவு துன்பம் உடையது | கீறுதல் (லேகனம்) | சிகிச்சைக்கு உட்பட்டது |
| சிவப்புக்கடுகு போன்ற தடித்த பிடகைகள் | நீர்ப் பெருக்கு, அரிப்பு, வலி | கீறுதல் (லேகனம்) | " |

| வரிசை எண் 1 | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் 2 | அலோபதியில் கண்நோயின் பெயர் 3 | நோய் தோன்றக் காரணமான தோஷம் 4 | நோய் தோன்றும் கண் பகுதி 5 |
|---|---|---|---|---|
| 3. | கும்பீகா, கும்பீகா பிடகா | ZEI'S GLAND CYST OR MEIBOMIAN CYST | மூன்று தோஷங்கள் | இமை |
| 4. | வர்த்ம சர்க்கரா | LITHIASIS CONJUNCTIVA OR CONCRETIONS IN THE CONJUNCTIVA | ஸந்நிபாதம் | ,, |
| 5. | அர்சோவர்த்ம | PAPILLARY FORM OF TRACHOMA OR FOLLICULAR CONJUNCTIVITIS | ஸந்நிபாதம் | ,, |
| 6. | சுஷ்கார்சம் | POLYP OF THE CONJUNCTIVA GRANULOMA OF CONJ. | ஸந்நிபாதம் | ,, |
| 7. | அஞ்சனநாமிகா | STYE OR EXTERNAL HORDEOLUM | இரத்தம் | ,, |
| 8. | பஹுலவர்த்ம | MULTIPLE MEIBOMITIS | ஸந்நிபாதம் | ,, |
| 9. | வர்த்மபந்த அல்லது வர்த்ம விபந்த | ALLERGIC OCDEMA OF LIDS | ,, | ,, |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| மாதுளை விதை போன்ற பிடகை | உடைந்த பின் வீக்கம் | கீறுதல் (லேகனம்) | சிகிச்சைக்கு உட்பட்டது |
| சிறு மற்றும் கன மான சொரசொரப் புள்ள பிடகைகள் | | ” | ” |
| கக்கரி விதையைப் போன்ற சொரசொரப் புள்ள, சிறிதளவு துன்பம் விளை விக்கும் பிடகைகள் | | வெட்டுதல் (சேதனம்) | ” |
| பெரிய, சொரசொரப் புள்ள, கடினமான மிகவும் துன்பம் தரும் மாமிசாங்குரம் (மாமிசமுளை) | ” | ” | ” |
| இமையில் தோன் றும் சிறிய, தாமிர நிறமுள்ள, எரிச் சலும் குறைந்த அளவு துன்பமும் உள்ள பிடகை | கடுமை | வியர்க்கச் செய்து வெட்டுதல் | ” |
| நான்கு பக்கங் களிலும் சமான நிற தோற்றமுள்ள பிடகைகளால் இமை பளுவாகத் தோன்றுதல் | | லேகனம் (கீறுதல்) | ” |
| அரிப்பு, ஊசியால் குத்துவது போன்ற வலி, இமை வீக்கம் | கண்ணிமைகளை மூட இயலாமை | ” | ” |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 10. | கிலிஷ்ட வர்த்ம | PALPEBRAL TYPE OF SPRING CATARRH | இரத்தம் | இமை |
| 11. | வர்த்ம கர்தமம் | LID ABSCESS | ஸந்நிபாதம் | ,, |
| 12. | சியாவவர்த்ம | LID-HAEMATOMA OR CHRONIC CONJUNC-TIVITIS | ,, | ,, |
| 13. | பிரக்லின்ன வர்த்ம | CONDITION OF CONJUNCTIVITIS | கபம் | ,, |
| 14. | அபரிக்லின்ன வர்த்ம | ANKYLOBLEPHARON OR MUCOPURULENT CONJUNCTIVITIS | ஸந்நிபாதம் | ,, |
| 15. | வாதஹத வர்த்ம | LAGOPHTHALMOS | வாதம் | ,, |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| இமை முழுவதும் ஈரப்பசையுடன் சிறிதளவு துன்பம் விளைவிப்பதுடன் தாமிர நிறமுள்ளது | சிவப்பு நிறம் கொள்ளும் | கீறுதல் | சிகிச்சைக்கு உட்பட்டது |
| கபத்தால் கெட்ட இரத்தம் பித்தத் துடன் கலந்து விடும் | இமைகள் சத சதப்புடன் கூடி, வீக்கம் கொண்டிருக்கும் | மருந்துப் பொருள்களால் லேகனம் | (கிலிஷ்டவர்த்ம) முற்றியநிலை சிகிச்சைக்கு உட்பட்டது |
| இமை உட்பகுதி யிலும், புறப் பகுதியிலும் வீக்கம், கறுத்துப் போதல் | எரிச்சல், அரிப்பு, துன்பம், சதசதப்பு | லேகனம் (கீறுதல்) | " |
| இமைகளுக்கு வெளிப்பகுதியில் சிறிது வலி, வீக்கம் உட்பகுதியில் சத சதப்பு, நீர்ப் பெருக்கு | அரிப்பு, ஊசியால் குத்துவது போன்ற வலி | மருந்துப் பொருளால் லேகனம் | சிகிச்சைக்கு உட்பட்டது |
| பக்குவம் பெறாமை, அடிக்கடி கழுவினா லும் இமைகள் மீண்டும் ஒட்டிக் கொள்ளும் | | வியர்க்கச் செய்தல் கிராஹி மருந்துகள் (அறுவை கூடாது) | " |
| இமைகள் வெண் விழியிலும், கடைக் கண்ணிலும், கனீ னிகையிலும் உள்ள இணைப்புகள் விட்டுப் போவதால் கண்ணிமைகள் மூட முடியாமல் இருப்பது | இமைகள் செயல்படா, துன்பம் இருக்கும், இல்லாமலும் இருக்கலாம் | | சிகிச்சைக்கு உட்படாதது |

| வரிசை எண் பெயர் 1 | ஆயுர்வேதத் தில் கண் நோயின் பெயர் 2 | அலோபதியில் கண் நோயின் பெயர் 3 | நோய் தோன்றக் காரணமான தோஷம் 4 | நோய் தோன்றும் கண் பகுதி 5 |
|---|---|---|---|---|
| 16. | அர்புதம் | TUMOR OR ANGIOMA | ஸந்நிபாதம் | இமை |
| 17. | நிமேஷம் | BLINKING OF EYE-LIDS | வாதம் | " |
| 18. | சோணிதார்சம் | WARTS OR CANCER | இரத்தம் | " |
| 19. | லகணம் | CHALAZION | கபம் | " |
| 20. | பிஸவர்த்ம | ULCERATIVE ECZEMA OR KANTHALASMA | ஸந்நிபாதம் | " |
| 21. | பக்ஷ்மகோபம் | TRICHASIS OR ENTROPION | ஸந்நிபாதம் | " |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| இமைக்குள் வலி யின்றி சிறிது தொங்கிக் கொண்டி ருக்கும் சமமற்ற தோற்றமுள்ள இரத்தத் துடன் கூடிய கட்டி யைப் போன்ற வீக்கம். | | வெட்டுதல் ஆனால் ANGIOMAவில் கூடாது | சிகிச்சைக்கு உட்பட்டது ஆண்களில் அதிகமாகக் காணப்படுகிறது |
| வாதம் இமைகளைச் சார்ந்த நிமேஷணி ஸிரைகளில் பரவிய போது தோன்றும் | இமைகள் எப் போதும் அசைந்து கொண்டே இருக்கும் | | சிகிச்சைக்கு உட்படாதது |
| இரத்தத்தினால் இமையில் இரத்த முளைகள் தோன் றும், வெட்டினால் மீண்டும் தோன்றும். | எரிச்சல் அரிப்பு, வலி | | ” |
| இமையில் நன்கு எழும்பி இலந்தைக் கொட்டை போலக் காணப் படும் கட்டி | பக்குவம் பெறாது, வலி இருக்காது, அரிப்பு, பிசுபிசுப்பு தோன்றும். | பிளத்தல் இன்றைய மருத்துவத்தில் வெட்டுதல் | சிகிச்சைக்கு உட்படுவது |
| இமை வீங்கும், நீர் நிரம்பி, தாமரைத் தண்டில் உள்ளது போல சிறுகண்ணறை கள் காணப்படும் | | பிளத்தல் (பேதனம்) | ” |
| கண்ணிமை உரோமப் பகுதியில் மூன்று தோஷங்களும் சேர்ந்து முனைப் பகுதியை சொர சொரப்புள்ளதாக்கும். படிந்து கண்களில் உராய்வு உண்டாக்கும் | கண்களில் எரிச்சல், வலி, உரோமங்களை நீக்கினால் துன்பம் குறைதல், காற்று, புகை, வெப்பம் தாங்க முடியாமை | அறுவை சிகிச்சை | ” |

## (3) கண்களின் வெள்ளைவிழிப் பகுதியில் தோன்றும் நோய்கள்-11 (உத்தரஸ்தானம் -

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் [illegible] |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | |
| 1. | அர்ம, பிரஸ்தாரி அர்ம | PTERYGIUM | மூன்று தோஷங்கள் | வெள்ளை விழி |
| 2. | சுக்லார்ம | PTERYGIUM OR PINGUECULA | கபம் | ” |
| 3. | லோஹிதார்ம அல்லது க்ஷதஜ அர்ம | PROGRESSIVE PTERYGIUM | இரத்தம் | ” |
| 4. | அதிமாம்ஸ அர்ம | PAPILLOMA | மூன்று தோஷங்கள் | ” |
| 5. | ஸ்நாயு அர்ம | CONJUNCTIVAL TUMOUR | ” | ” |
| 6. | சுக்திகா | XEROSIS | பித்தம் | ” |

# DISEASES OF THE SCLERA WITH THE CONJUNCTIVA
அத்தியாயம் 4)

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| வெள்ளை விழிப் பகுதியில் இரத் தத்தைப் போன்ற மெல்லிய நீல நிறம் கலந்து பரவி இருப்பது | | வெட்டுதல் (சேதனம்) | சிகிச்சைக்கு உட்படுவது |
| வெண்விழிப் பகுதி யில் மெல்ல மெல்ல சிறிது ஈரப்பசையுடன் வெண்ணிறத்துடன் படர்வது | | ” | ” |
| செந்தாமரையைப் போலப் பரவும் மாமிசம் | | ” | ” |
| கல்லீரலைப் போல ஈரப்பசை கொண்டு தடித்து மாமிசம் பரவுவது | | ” | ” |
| வெள்ளை விழியில் கடினஸ்பர்சம் கொண்டு வெண்ணி றத்தில் மாமிசம் வளர்தல் | | ” | ” |
| வெள்ளைவிழியில் முத்துச் சிப்பி போல மாமிசம் போன்ற புள்ளிகள் | | பித்த அபிஷ்யந் தத்திற்குப் போல குளுமை தரும் பொருள்களால் மை இடுதல் | ” |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 7. | அர்ஜுன | SUB-CONJUNCTIVAL HAEMORRHAGE | இரத்தம் | வெள்ளை விழி |
| 8. | பிஷ்டகம் | PINGUECULA | கபம் | ” |
| 9. | ஸிராஜாலம் | HAEMANGIOMA | இரத்தம் | ” |
| 10. | ஸிராபிடகா | EPISCLERITIS, PHLYCTENULAR OR LIMBAL NODULE | மூன்று தோஷம் | ” |
| 11, | பலாஸ கிரதிதம் | CONJUNCTIVAL CYST | கபம் | ” |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| முயல் இரத்தம் போல சிவப்பு பிந்துக்கள் | | பித்த அபிஷ்யந்தத் திற்கு கூறிய ஸ்ரம் ஸன, ஸேக, லேப, கருப்பஞ்சாறு, தேன், சர்க்கரை, தாய்ப்பால், மரமஞ்சள், அதிமதுர, இந்துப்புகளுடன் அஞ்சனம், ஸேகம் | சிகிச்சைக்கு உட்படுவது. |
| அரிசியாவு போல வெண்ணிறமுள்ள நீரைப் போல எழும்பிய பிந்து | | மருந்துப்பொருள்களால் மை இடுதல் | ” |
| கடின ஸிரைகளுடன் கீழ் நோக்கி மேல் நோக்கி பரவிய வலை போன்ற இரத்தம் கொண்ட ஸிரைகளின் கூட்டம் | | வெட்டுதல் (சேதனம்) | ” |
| கருவிழிக்கு அருகில் வெள்ளைப்பகுதியில் ஸிரைகளில் சுற்றிக் கொண்டிருக்கும் ஸிரையைப் போல தோன்றும் வெண்ணிற பிடகைகள் | | சேதனம் செய்த பிறகு லேகனப் பொருள்களைப் பூசித் தேய்த்தல் | ” |
| நீர்த்துளிகளைப் போல தோற்றத்தில் கடினமான துன்பமற்ற கபம் போன்ற பொருள் | | சிரையைக் கீறுதல், நசிய முறை, கபத்தால் தோன்றும் அபிஷ்யந்தத் திற்கு உரிய சிகிச்சை | ” |

# (4) கண்ணின் கருவிழியைச் சார்ந்த நோய்கள் - 4 DISEASES

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | ஸ்வர்ணசுக்ல | ULCER-CORNEA OR ULCERATIVE KERATITIS | இரத்தம் | கருவிழி |
| 2. | அவிரணசுக்லம் KERATITIS | CORNEAL OPACITY OR INTERSTITIAL | " | " |
| | அக்ஷி பாகாத்யயம் | KERATITIS SERPIGINOUS, ULCER-CORNEA | மூன்று தோஷம் | " |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| கருவிழியில் கம்பீரமாகப் பார்வையைத்தடுத்து ஊசியால் குத்துவது போன்றவலி, வட்ட மாக காணப்படுவது கருவிழியின் நான் கில் ஒரு பகுதி வீக்கத்துடன் காயப் பட்டு அமுங்கியது போல காணப்படும். அதன் நடுப்பகுதி சிதையாமல், மாமி சத்தால் சூழப்பட்டு ஸிரைகள் இல்லாமல் தோலைச் சாராமல் பக்கம் சிவக்காமல் சூடான நீர்ப்பெருக்கு மற்று காணப்படுவெது ஒருவேளை சிகிச் சைக்கு உட்படலாம் | கண்களில் சுடும் வலி, நீர்ப் பெருக்கு காணப்படும் | ஸந்தர்ப்பணம் வெண்ணிறப் பகுதி கடினமாக இருந்தால் லேகனம் பிறகு ஸந்தர்ப்பண மை, 1. வாகை விதை, திப்பிலி, மிளகு இந்துப்பு, 2.இந்துப்பு 3. தாமிரம் முதலான தூள் அஞ்சனம் 4. மனோசிலை-4 மிளகு-2 இந்துப்பு-1 5. நீலாஞ்சனம் | சிகிச்சைக்கு உட்படாதது. கரு மணிக்கு அருகில் இல்லாமல், கம்பீர மாக இல்லாமல், மிக்க நீர்ப்பெருக்கு மில்லாமல் குறைந்த அளவு துன்பம் இருந்தால் காயம்பட்ட பகுதி போல இல்லாமல் இருந் தால் ஒரு வேளை சிகிச்சைக்கு உட்படலாம். |
| இது அபிஷ்யந்தத்தால் அபிஷ்யந்தத்திற்குரிய இலக்கணங்களுடன் அதிக துன்பமின்றி வானத்தில் உள்ள மேகம் போல தூய தாகிக் காணப்படும் | | உள்பகுதியில் பரி மார்ஜனம், சிரையை கீறுதல், பேதியாகச் செய்தல், சிரோ விரேசனம், வெளிப் பகுதியில் பரிமார் ஜனம், பிரலேபம், பரிஷேகம், நசியம், புகை போடுதல்,ஆச் யோதனம் எண்ணெய் முழுக்கு, தர்ப்பணம் புடபாகம், பிறகு ›க்ய அஞ்சனம் | சிகிச்சைக்கு உட்படும். கம்பீர மாகவும், இருபுரை களை சாராமல் தடிப்பு இல்லாதது தும், நாள்படாதது மானபோது சிகிச்சையால் கஷ்டப்பட்டு தீர்க் கக் கூடியதாகும் |
| அக்ஷிகோபம் அல்லது அபிஷ்யந் தத்தால் கருவிழி முழு வதும் வெண்ணிறப் புரையால் மூடப்படும் | கடும் வலி தோன்றும் | | சிகிச்சைக்கு உட்படாதது |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 4. | அஜகாஜாதம் | IRIS-PROLAPSE OR ANTERIOR STAPHYLOMA | கபம் | கருவிழி |

## (5) கண் முழுவதிலும் தோன்றும்

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 1. | வாதிக அபிஷ்யந்தம் | SUB-ACUTE CONJUNCTIVITIS | வாதம் | கண் முழுவதிலும் |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| கொழுப்புடன் இரத்தம் கலந்துள்ள மாமிசப் பகுதி கருவிழியைக் கிழித்துக் கொண்டு வெளிப் படும். கண் சிவக் கும். கண்ணிலிருந்து சிவப்பு நிறத்துடன் பிசுபிசுப்புள்ள நீர் பெருகிக் கொண்டிருக்கும். | கடும் வேதனை தோன்றும் | மேலெழும்பிய பகுதியை ஊசி யால் பிளந்து AQUEOUS என்பதைப் பெருகச் செய்து விரணத் தில் நெய், பசு மாமிசம் நிரப்ப வேண்டும். அஜகா துண்டம் மேலெழும்பி இருந்தால் அடிக்கடி லேகனம் செய்க. | சிகிச்சைக்கு உட்படாதது |

## நோய்கள் - 17 (உத்தரஸ்தானம்-அத்தியாயம் 6)

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| ஊசியால் குத்துவது போன்ற வலி, செயலற்ற நிலை (மரத்துப் போதல்), சொரசொரப்பு, கடினத்தன்மை உலர்ந்து போதல் குளிர்ந்த நீர்ப் பெருக்கு | வெப்பத்தில் விருப்பம் தோன்றும். மயிர் கூச்சம், தலை வலி காணப் படும். | வாதத்தைப் போக்கும் எண்ணெய்ப்பசை உள்ள உணவு, 1) வாதத்தைப் போக் கும் நீர்ப்பாங்கான அல்லது நீர் நிலை களில் வாழும் விலங் குகளின் புலால், புளிப் புச் சுவையுள்ள பொருள் களால் ஸேகம். 2) இந்துப்புடன் கூடிய இளஞ் சூடுள்ள பாலால் | சிகிச்சைக்கு உட்படுவது |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 2. | பைத்திக அபிஷ்யந்தம் | ACUTE PURULENT OR MUCO PURULENT CONJUNCTIVITIS | பித்தம் | கண் முழுவதிலும் |
| 3. | பேஜ அபிஷ்யந்தம் | ACUTE-MUCOPURULENT CONJUNCTIVITIS | கபம் | ” |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| | | ஸேகம், உபநாஹ ஸ்வேதம் சால்வண ஸ்வேதம், பாலால் ஆச்யோதனம், பெரும்பஞ்சமூலம் ஆமணக்கால் ஆன பாலால் அஞ்சனம், அதிமதுரம், மஞ்சள் தேவதாரு. | |
| கண் எரிச்சல், மிகவும் பக்குவம் பெறுதல், விரண வீக்கம் புகை மண்டி யிருப்பது போன்ற தோற்றம் காணப்படு தல், நீர்ப்பெருக்கு, வெப்பமுள்ள கண் ணீர் பெருக்குதல், கண் மஞ்சளாகுதல் | குளிர்ச்சியில் விருப்பம் மிகும் | தோஷத்திற்கு ஏற்ப பழைய நெய்யைக் கொண்டு ஸ்நேஹனம், வியர்க்கச் செய்தல், ஸிரையைக் கீறுதல், பேதியாகச் செய்தல், வஸ்தி ரக்தவிஸ்ராவணம், விரேசனம், நசியம், பித்தவிஸர்ப்பத்திற்கு உரிய சிகிச்சை (1) ஸேகம்-சந்தனம், அதி மதுரம், வேப்பிலை, ரஸாஞ்சனம், இந்துப்பு, நீர், தேன் (2) ஆச்யோதனம் - வேப்பிலை, பாச் சோத்தி, தாய்ப்பால் (3) பிண்டி-நெல்லிக் காய் (4) பிடாலகம் (5) அஞ்சனம் (6) ஆலேபம் | சிகிச்சைக்கு உட்படும் |
| கண் பளுவாகுதல், வீக்கம், வெண்ணிறம் கொண்டு குளிர்ந்து காணப்படுதல், அரிப்பு, கண்ணிலிருந்து அடிக்கடி பிசுபிசுப் புள்ள நீர் பெருகுதல் | வெப்பத்தில் விருப்பம் தோன்றும் | சிரையைக் கீறுதல், வியர்க்கச் செய்தல், அவபீடம், புகை, கண்மை, ஸேகம், பிர லேபம், கபளம் வறண்ட ஆச்யோதனம், புடபாகம் கபத்தைத் தணித்தல் | |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 4. | ரக்தஜ அபிஷ்யந்தம் | PURULENT OR MUCO PURULENT CONJUNCTIVITIS | இரத்தம் | கண் முழுவதிலும் |
| | அதிமந்தம் | GLAUCOMA OR IRITIS | வாதம் முதலியவை | " |
| 5. | வாதிக அதிமந்தம் | ACUTE CONGESTIVE GLAUCOMA | வாதம் | " |
| 6. | பைத்திக அதிமந்தம் | CHRONIC CONGESTIVE GLAUCOMA (FULMINATING TYPE) | பித்தம் | கண் முழுவதும் |
| 7. | கபஜ அதிமந்தம் | CHRONIC CONGESTIVE GLAUCOMA OR SIMPLE CHRONIC GLAUCOMA | கபம் | " |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| கண்சிவத்தல், தாமிரநிற நீர்ப் பெருக்கு, நான்கு பக்கங்களிலும் சிவந்த இரத்தம் நிரம்பிய சிரைகள் பித்தத்தால் தோன் றும் அபிஷ்யந்த இலக்கணங்கள் காணப்படும். | குளிர்ந்த பொருள்களில் விருப்பம் மிகும். | இரத்தஜஅபிஷ்யந்த அதிமந்த, ஸிரோத் பாத ஸிராஹர்ஷங் களுக்கு உரிய சிகிச்சை | சிகிச்சைக்கு உட்ட |
| கண்ணைப் பெயர்த் தல் அல்லது குடை வது போன்ற வலி, தலைப்பகுதி ஒரு பாதியில் வலி | நோயுற்ற கண்ணில் கடைவது போன்ற வலி, பாதி தலை வலி. | இரத்த மோக்ஷணம் முதலியவை | ” |
| கண்ணை பெயர்த் தல் போன்ற குடை வது போன்ற வலி, சொரசொரப்பு, ஊசி யால் குத்துவது போன்ற வலி, பாதி தலை வலி, நடுக்கம். | பாதி தலைப் பகுதியில் வலி | வாத அபிஷ்யந்தத் திற்கு உரிய சிகிச்சை தோஷத்திற்கு ஏற்ப ஸேகம், அஞ்சனம், ஆச்யோதனம், புகை, நசியம், POLO CORPIN, லக்ஷ்மி விலாஸம் | ” |
| கண்களில் எரிச்சல் இரத்த வாஹினி, சிரையில் இரத்தம் நிரம்பியிருத்தல், இமை வீக்கம், வியர்வ | கடும் வலி, நினைவிழத்தல், மஞ்சள் நிறம் காணப்படுதல். | இரத்த அபிஷ்யந்தத் திற்கு உரிய சிகிச்சை, இரத்த மோக்ஷணம் முதலியன | ” |
| கண்ணில் வீக்கம், அதிக சிவப்பு இன்மை, நீர்ப் பெருக்கு, அரிப்பு, குளுமைத்தன்மை, பிசுபிசுப்பு | கஷ்டப்பட்டுப் பார்த்தல், தலைவலி. | கபத்தால் தோன்றும் அபிஷ்யந்தத்திற்கு உரிய சிகிச்சை | ” |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 8. | ரக்தஜ அதிமந்தம் | CONGESTIVE GLAUCOMA IRIDOCYC LITIS SECONDARY GLAUCOMA | இரத்தம் | கண் முழுவதிலும் |
| 9. | ஹதாதி மந்தம் (1) | PHTHISIS BULBI | வாதம் | ” |
| | ஹதாதி மந்தம் (2) | INTERCALARY STAPHYLOMA (POST GLAUCOMATOUS) | | ” |
| 10. | ஸசோப அக்ஷிபாகம் | PANOPHTHALMITIS | மூன்று தோஷங்கள் | ” |
| 11. | அசோப அக்ஷிபாகம் | ENDOPHTHALMITIS | ” | ” |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| கண் மிகவும் சிவத்தல், தொடுகையைப் பொறுக்காமை, இரத்தம் நிறைந்த பெருக்கு | சிவப்புப் பொருள் காணப்படுதல் | இரத்த அபிஷ்யந்தத்திற்கு உரிய சிகிச்சை | சிகிச்சைக்கு உட்படும் |
| வாதத்தால் தோன்றும் அதிமந்தத்தை அலட்சியப்படுத்தினால் துன்பம் விளைவித்துக் கண்ணைக் குறுக்கி வி[illegible]ம | கடும்வலி | | சிகிச்சைக்கு உட்படாதது |
| வாயுதிருஷ்டிமண்டலத்தை வெளிப்படுத்தி விடும். மிகவும் கொடிய வலி தோன்றும். | கடுமையான வலி, விழி பிதுங்குதல் | | ” |
| கண்பக்கம் அத்திப் பழம் போல ஆகுதல், வீக்கம், வலி, எரிச்சல், நீர்ப் பெருக்கு | கண் மிகவும் சிவந்து துன்பத்துடன் பக்குவம் பெறுதல் | எண்ணெய்ப்பசை தோற்றுவித்தல், வியர்க்கச் செய்தல், சிரையை கீறுதல், ஸேகம், ஆச்யோதனம், நசியம், புடபாகம், ரஸகிரியை, மை இடுதல். | (சிகிச்சைக்கு உ[illegible] படுவதாக நூலி[illegible] உள்ளது) இன்[illegible] இது சிகிச்சைக்[illegible] உட்படுவதில்லை[illegible] |
| ஸசோப அக்ஷிபாக இலக்கணங்கள், ஆனால் வீக்கம் இன்மை, சிவத்தல், அழற்சி, அரிப்பு, சொரசொரத்தல், நீர்ப் பெருக்கு, சதசதப்பு. | தாமிரநிறம் கொள்ளுதல், அழற்சி, வலி. | ஸசோப அக்ஷி பாகத்திற்கு உரிய சிகிச்சை | சிகிச்சைக்கு உட்படும் |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 12. | க்ஷ்காக்ஷி பாகம் | ADVANCED STATE OF TRACHOMA UVEITIS | வாதம் | இமை வறண்டிருத்தல் |
| 13. | வாதபர்யாயம் | GLAUCOMATOUS PAIN TRIGEMINAL NEURALGIA | " | " |
| 14. | அன்யதோ வாதம் | SPHENOIDAL SINUSITIS TRIGEMINAL NEURALGIA | " | கண் முழுவதும் |
| 15. | அம்லாத்யுஷிதம் | ALLERGIA OEDEMA OF ORBITAL TISSUES | பித்தம் | " |
| 16. | ஸிரோத்பாதம் | ALLERGIC CONJUNC-TIVITIS ANGIO-NEUROTIC OEDEMA OF THE EYE | இரத்தம் | " |
| 17. | ஸிராபிரஹர்ஷம் | ANGIO NEUROTIC OEDEMA OF THE EYE OR ORBITAL CELLULUTIS | " | " |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| மேல் நோக்கிய விழிகள் கண்பீளை மிகுதல், கண்திறக்க முடியாமை. | கண்மூடி இருத்தல் | 1. நெய் பருகச் செய்தல்<br>2. ஜீவநீயகிருததர்ப்பணம்<br>3. அணுதைல நசியம்<br>4. குளிர்ச்சி தரும் ஆச்யோதனம்<br>5. கண்மை | சிகிச்சைக்கு உட்படும் |
| தோஷமுற்ற வாயு கண் இமைகள், புருவம் ஆகிய பகுதி களில் திரிந்து கொண்டு துன்பம் தரும் | கண்களுக்குள் கடும் வேதனை | வாதிக அபிஷ்யந் தத்திற்கு உரிய சிகிச்சை | " |
| கழுத்தின் பின்பக்கத் திலிருந்து காது, தலை,தாடை,கண், புருவம் ஆகிய பகுதிகளில் வேதனை | கழுத்தின் பின் பகுதியிலிருந்து காதுவரை வலி | வாதஜ அபிஷ்யந் தத்திற்கு உரிய சிகிச்சை | " |
| புளிப்புச் சுவை யுள்ள எரிச்சலைத் தோற்றுவிக்கும் உண வால் கண்கள் வீங்கி சிவந்து விடும் | கண்களில் வீக்கம் | பித்த அபிஷ்யந்தத் திற்கு உரிய சிகிச்சை, இரத்தத்தை வெளியேற்றக் கூடாது திரிபலாகிருதம்,தைல்வக கிருதம், விரேசனம், குளுமை தரும் லேபம் | " |
| கண்களில் இரத்த வாஹினி, சிரை கள் மிகவும் சிவந்து மீண்டும் இயற்கைத் தன்மை கொள்ளும். இதில் வலி தோன்ற லாம், தோன்றாமலும் இருக்கலாம் | திடீரென கண் சிவத்தல், திடீரென சரியாதல் | இரத்தஜ அபிஷ்யந் தத்திற்கு உரிய சிகிச்சை, எண்ணெய்ப் பசை தோற்றுவித்த பிறகு இரத்தம் வெளி யேற்றல், தேன் நெய் அஞ்சனம், மை இடுதல். | " |
| விரோத்பாதம் ஆன பிறகு கண்ணீர் பெருகுதல், பார்வை வலிவிழத்தல் | கண்ணீர் பெருக்கு பார்க்க முடியாமை | (1) பாணிதம் தேன்<br>(2) அன்னபேதி தேன் | |

## (6) திருஷ்டி (கருமணி)யைச் சார்ந்த நோய்கள்-12 (DISEASES

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | | 4 | |
| 1. | பிரதமபடலகத திமிரம் | INITIAL ERROR OF REFRACTION | வாதம் முதலியவை | திருஷ்டி மண்டலம் தேஜோ லாச்ரிதம் |
| 1. (A) | த்விதீயபடலகத திமிரம் | PROGRESSIVE ERROR OF REFRACTION CHOROIDITIS | " | திருஷ்டி மண்டல மாமிசத்தை சார்ந்தது |
| (B) | த்ருதீயபடலகத திமிரம் | IMMATURE CATARACT AMETROPIA | " | திருஷ்டி மண்டல கொழுப்பு பகுதியை சார்ந்தது |

## OF PUPIL AND LENS) (உத்தரஸ்தானம் - அத்தியாயம் 7)

| நோயின் )ம் | நோயின் க்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| | | 8 | |
| திமிரத்தைத் தோற்றுவிக்கும் தோஷம் சிரை வழியாக கண்ணுக்குள் பரவி, திருஷ்டியைச் சேரும் நோயாளி தெளிவாகப் பார்க்க முடியாது | தெளிவற்ற பார்வை | எண்ணெய் மருந்து, வியர்க்கச் செய்தல், ஸிரோமோக்ஷணம், விரேசனம், பழைய நெய் | சிகிச்சைக்கு உட்படும் |
| கண்களின் முன், ஈ, பூச்சி, வலை, தலை முடி போன்றவை பறப்பது போல காண்பார். அருகில் இருப்பது தொலைவில் இருப்பது போலவும், தொலைவில் இருப்பது அருகில் இருப்பது போலவும் தோன்றும் | கற்பனையாக பொருள்களை காணல் | திரிபலை கிருதம், சதாவரி கிருதம் | ” |
| விலங்கு, மனிதர் உறுப்புகள் இருந்தும் இல்லாதது போலக் காணப்படல். ஒரு பொருள் இரண்டாக, மூன்றாகக் காணப்படுதல், தோஷம் மேற்பகுதியைச் சார்ந்திருந்தால் தொலைவில் உள்ள பொருள்கள், கீழே இருந்தால் அருகில் உள்ள பொருள்கள் காணப்படா. | ஒன்று பலவாகக் காணல், அருகில் இருப்பது காணப்படாமை அல்லது தொலைவில் உள்ளவை காணப்படாமை. | | |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண்நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| (C) | சதுர்த்தபடலகத திமிரம் (லிங்க நாசம்) | MATURE CATARACT | கப, பித்த, வாத, ரக்த ஸம்ஸர்க, ஸந்நிபாதங் களில் ஒன்று | திருஷ்டி மண்டலத்தின் என்புப் பகுதியைச் சார்ந்தது |
| (D) | வாதிகதிமிரம் | ERRORS OF REFRACTION OR IMMATURE CATARACT | வாதம் | திருஷ்டி |
| (E) | பித்தஜதிமிரம் | | பித்தம் | ” |
| (F) | கபஜதிமிரம் | | கபம் | |
| (G) | ரக்தஜதிமிரம் | | இரத்தம் | |
| (H) | ஸாந்நிபாதிக திமிரம் | | மூன்று தோஷங்கள் | |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| பார்வை முழுமை<br>யாக தடுக்கப்படும்,<br>முற்றாத நிலையில்<br>சந்திர, சூரிய, நக்ஷத்<br>திரங்கள் காணப்<br>படும். | பார்வை<br>தடுக்கப்<br>படும் | கபத்தால்<br>தோன்றியதில்<br>அறுவைச்<br>சிகிச்சை | கபத்தால்<br>தோன்றுவது<br>சிகிச்சைக்கு உ<br>படும். மற்றவை<br>உட்படா |
| பொருள்கள்<br>அசைந்து கொண்<br>டிருப்பது போலக்<br>காணப்படும். அழுக்<br>கடைந்து கோணலாக<br>அல்லது சிவப்பு<br>மாகக் காணப் | | எண்ணெய், வியர்க்<br>கச் செய்த பிறகு<br>ரக்த மோக்ஷணம்,<br>விரேசனம், திரிபலா,<br>கிருதம் முதலியன | சிகிச்சைக்கு<br>உட்படும் |
| பொருளில் மின்<br>மினுப்பூச்சி மின்னல்,<br>மயில்தோகை<br>போன்ற தோற்றங்<br>கள் காணப்படும்.<br>நீலநிறமாகக்<br>காணப்படும். | | மை, ரஸ கிரியாஞ்சனம்<br>பால் இனிப்புச் சுவை<br>யுள்ள மருந்துப்<br>பொருள்கள் ஆகிய<br>வற்றாலான பால்<br>மருந்து, நசியம்,<br>தர்ப்பணம். | ” |
| பொருள் அடர்த்தி<br>யாக வெண்ணிற<br>முள்ளதாக மேக<br>மில்லாதபோது வானத்<br>தில் மேகங்கள் இருப்பது<br>போல காணுதல் | | நசியம், தர்ப்பை.<br>பாச்சோத்தி, ஞாழல்,<br>புகை போடுதல்,<br>தர்ப்பணம். | ” |
| சிவப்பு நிறம்,<br>மண்டியிருப்பது<br>போலக் காணுதல் | | பித்தத்தால்<br>தோன்றிய திமிரத்<br>திற்கு உரிய சிகிச்சை,<br>நஸியம், தர்ப்பணம் | |
| பொருள்கள் பல நிறம்<br>கொண்டு, இரண்டு<br>மூன்றாகப் பலவாகக் | | மூன்று தோஷங்களையும்<br>போக்கும் தர்ப்பணம்,<br>புடபாகம் ரஸகிரியை | ” |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண்நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் ப |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | |
| (I) | வாதிகலிங்க நாசம் | CATARACT | வாதம் | திருஷ்டி |
| | பைத்திகலிங்க நாசம், நீலிகா அல்லது காசம் | CATARACT | பித்தம் | " |
| 3. | கபஜலிங்க நாசம் | CATARACT | கபம் | " |
| 4. | ரக்தஜலிங்க நாசம் | CATARACT | ரத்தம் | " |
| 5. | திரிதோஷஜ லிங்கநாசம் | | மூன்று தோஷங்கள் | " |
| 6. | பரிம்லாயி | EALES'S DISEASE | பித்த, ரத்தம் | " |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| காணப்படுதல், அல்லது குறைவுள்ள தாகக் காணுதல் | | திரிதோஷ ஸ்ரோதோஞ்சனம் | |
| திருஷ்டி மண்டலம் சிவத்தல், சஞ்சலம், தொடுகைக்குக் கடினமாக காணப் படுதல் | | பிரதிஷேகம், திரி பலாகிருதம், சதாவரி கிருதம் அதன் பாயசம், ஜீவந்தி முதலியன, மான் புலால் | சிகிச்சைக்கு உட்படாதது |
| நான்காவது பட லத்தைச் சார்ந்த தோஷத்தில் திருஷ்டி மண்டலம் சிறிது நீலநிறம் கொண்டு மஞ்சளாகவும் காணப்படும். | கண் கருமணி மஞ்சள் நிறம் கொள்ளும். | | ” |
| திருஷ்டி மண்டலம் தடித்து எண்ணெய் பசையுடன் சங்கு சந்திரன் போல வெயி லில் குறுகி, நிழலில் விரிந்து காணப்படும் | திருஷ்டி மண்டலம் வெளுத்து காணப்படும் | அறுவைச் சிகிச்சை | சிகிச்சைக்கு உட்படும் |
| திருஷ்டி மண்டலம் பவழம் போல, தாமரை இதழ் போல காணப்படும். | | | சிகிச்சைக்கு உட்படாதது |
| திருஷ்டி மண்டலம் பல நிறம் கொண்டு காணப்படும் | | | ” |
| நான்கு திசைகளும் மஞ்சள் நிறம் கொண்டு காணப்படும், சூரியன் உதிப்பது போலக் காணப் படும். மரம் முதலியன மின்மினுப்பூச்சி நிறைந்ததாக காணப்படும் | | | ” |

| வரிசை எண் | ஆயுர்வேதத்தில் கண்நோயின் பெயர் | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் | நோய் தோன்றும் கண் பகுதி |
|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 |
| 7. | பித்தவிதக்த திருஷ்டி | DAY BLINDNESS CENTRAL CATARACT | பித்தம் | திருஷ்டி |
| 8. | கபவிதக்த திருஷ்டி | NIGHT BLINDNESS RETINITIS PIGMENTOSA | கபம் | ” |
| 9. | தூமதர்சி அல்லது தூமரம் | CATARACT OR GLAUCOMA | பித்தம் | • |
| 10. | ஹ்ரஸ்வ ஜாட்யம் | NIGHT BLINDNESS | ” | நான்கு புரைகள் |
| 11. | நகுலாந்தியம் | NIGHT BLINDNESS | மூன்று தோஷங்கள் | திருஷ்டி |
| 12. | கம்பீரிகா | PHTHISIS BULBI | வாதம் | ” |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| பொருள்கள் மஞ்சள் நிறம் கொண்டு காணப்படும். பகலில் பார்வை இருக்காது. இரவில் தெளிவாகத் தோன்றும். | பகலில் பார்வை இன்மை | பித்த அபிஷ்யந் தத்தைப் போக்கும். நசியம், ஸேகம், அஞ்சனம். புடபாகம், தர்ப்பணம் | சிகிச்சைக்கு உட்படும் |
| எல்லாப் பொருள்களும் வெண்ணிறமாகக் காணப்படுதல், இரவில் பார்வை இன்மை | இரவில் கண் தெரியாமை | திரிபலா கிருதம், ஸிராவியதம் கூடாது, அஞ்சனம், கைரிகாதி ஸ்வயம் குப்தாஞ்சனம் | ” |
| மிக்க வருத்தம், காய்ச் சல் முதலியவற்றால் கண்பார்வை கெட்டு எல்லாம் புகை மண்டியிருப்பது போலக் காணப்படும் | | ரக்தஜ அபிஷ்யந்தத் திற்கு கூறிய ஸேகம், புடபாகம், ஆச்யோ தனம், அஞ்சனம், பித் தஜ விஸர்ப்பத்திற்கு கூறிய சிகிச்சைகள் | ” |
| பகலில் கஷ்டப்பட்டு பார்வை இருக்கும், ...ல் இருக்காது | - | | சிகிச்சைக்கு உட்படாதது |
| பார்வை கீரிக்கு உள்ளது போல ஆகும் | | | ” |
| வாதத்தால் பார்வை கெட்டு கண் கரு மணி சுருங்கும். மிக்க வலி தோன்றும். | பார்வை விகாரப்படும். | | ” |

## 7. புறப்பகுதியில்

| வரிசை எண் 1 | ஆயுர்வேதத்தில் கண் நோயின் பெயர் 2 | அலோபதியில் கண்நோயின் பெயர் | நோய் தோன்றக் காரணமான தோஷம் 4 | நோய் தோன்றும் கண் ப |
|---|---|---|---|---|
| 1. | ஸந்நிபாதலிங்க நாசம் (ஸநிமித்த லிங்க நாசம்) | OPTIC NEURITIS | நச்சுக்குளிர் போன்றவை தீண்டுதலால் தோன்றும் | திருஷ்டி |
| 2. | அநிமித்தலிங்க நாசம் (காயம் படுதலால் லிங்க நாசம்) | MACULAR BURN RETINAL HAEMORRHAGE OR DETACHMENT | தேவரிஷி சாபம், ஸர்ப் பத்தால் அல்லது மிக்க ஒளியுள்ள பொருளை காண்பதால் தோன்றும். | ” |

| நோயின் தோற்றம் | நோயின் இலக்கணம் | சிகிச்சை முறைகள் | நோயின் தரம் |
|---|---|---|---|
| 6 | 7 | 8 | 9 |
| கருமணி கெடும், பார்வை இருக்கும் | | திரிபலைகிருதம், சதா வரிகிருதம், திரிபலா சூரணம், திரிபலா சதாவரி பாயசம் | சிகிச்சைக்கு உட்படாதது. |
| திருஷ்டி சிதைந்து குறைந்து போகும். | | | |

## V. 76 கண் நோய்கள்-8 வகை அறுவைச் சிகிச்சைகள்

எழுபத்தாறு கண் நோய்களையும், அவற்றுக்குரிய எட்டு வகை அறுவைச் சிகிச்சை முறைகளையும் கூறி, அவற்றுள் எவ்வகை கண் நோய்களுக்கு எந்த அறுவை சிகிச்சை தேவைப்படுகிறது என்கிற பட்டியல் கீழே தரப்படுகிறது. (உத்தரஸ்தானம் 8-ம் அத்தியாயம் பார்க்க).

| | | |
|---|---|---|
| 1. | அறுவைச் சிகிச்சைக்குரிய கண் நோய்கள் | 11 |
| 2. | கீறி நீக்கத் தக்க கண் நோய்கள் ........ | 9 |
| 3. | பிளக்கத் தக்க கண் நோய்கள் ........ | 5 |
| 4. | குத்தி நீக்கத தக்க கண் நோய்கள் ........ | 15 |
| 5. | ஆயுதமின்றி மருந்தால் நீக்கத்தக்க கண் நோய்கள்........ | 12 |
| 6. | பொறுத்துப் பார்த்து சிகிச்சை அளிக்க வேண்டிய கண் நோய்கள் ........ | 7 |
| 7. | எத்தகைய சிகிச்சையாலும் நீக்க இயலாத கண் நோய்கள் ........ | 15 |
| 8. | புறக்காரணங்களால் தோன்றும் கண் நோய்கள் | 2 |
| | மொத்தம் | 76 |

### 1. அறுவைச் சிகிச்சைக்குரிய கண் நோய்கள் - 11

1. அர்சோ வர்த்ம
2. சுஷ்கார்சம்
3. வர்த்மார்புதம்
4. ஸிரா பிடகா
5. ஸிரா ஜாலம்
6. பிரஸ்தூரி
7. சுக்லம்
8. லோஹிதம்
9. அதிமாம்ஸஜம்
10. சுக்லம் எனும் 5 வகை அர்மங்கள்
11. பர்வணிகா

### 2. கீறி நீக்கத்தக்க கண் நோய்கள் - 9

1. உத்ஸங்கினி
2. பஹலவர்த்ம

3. கர்தமவர்த்ம
4. சியாவவர்த்ம
5. பத்தவர்த்ம
6. கிலிஷ்டவர்த்ம
7. போதகி
8. கும்பீகினி
9. வர்த்மசர்க்கரா

**3. பிளக்கத் தக்க கண் நோய்கள் - 5**

1. சிலேத்தும உபநாஹம்
2. லகனம்
3. பிஸவர்த்ம
4. கிருமி ஜன்ய கிரந்தி
5. அஞ்சனநாமிகா

**4. குத்தி நீக்கத் தக்க கண் நோய்கள் - 15**

1. ஸிரோத்பாதம்
2. ஸிராபிரஹர்ஷம்
3. வீக்கத்துடன் கூடிய நேத்ர பாகம்
4. வீக்கமில்லாத நேத்ர பாகம்
5. அன்யதோவாதம்
6. பூயாலஸம்
7. வாதவிபர்யயம்

8-11 வாதிக-பைத்திக-சிலேத்துமிக - ரக்தஜம் எனும் 4 வகை அதிமந்தங்கள்

12-15 வாதிக-பைத்திக-சிலேத்துமிக-ரக்தஜ எனும் 4 வகை அபிஷ்யந்தங்கள்

**5. ஆயுதமின்றி மருந்தால் நீக்கத் தக்க கண் நோய்கள் - 12**

1. சுஷ்காக்ஷிபாகம்
2. கபவிதக்த திருஷ்டி
3. பித்தவிதக்த திருஷ்டி
4. அம்லாப்யுஷிதம்
5. அவிரண சுக்ரம்
6. அர்ஜுனம்
7. பிஷ்டகம்
8. அக்லின்னவர்த்ம

9. தூரமதர்சி
10. சுக்திதா
11. பிரக்லின்னவர்த்ம
12. பலாஸகிரதிதம்

**6. பொறுத்துப் பார்த்து சிகிச்சை அளிக்க வேண்டிய கண்நோய்கள் - 7**

1. வாதிக காச நோய்
2. பைத்திக காச நோய்
3. சிலேத்துமிக காச நோய்
4. ரக்தஜ காச நோய்
5. ஸந்நிபாத காச நோய்
6. பரிம்லாயி
7. பக்ஷ்ம கோபம்

**7. எத்தகைய சிகிச்சையாலும் நீக்க இயலாத கண் நோய்கள்-15**

1. **வாத சீற்றத்தால் தோன்றும்** ஹ்ருத அதிமந்தம்
2. நிமிஷம்
3. கம்பீரிகா
4. வாதஹதவர்த்மா
5. பித்த சீற்றத்தால் தோன்றும் ஹ்ரஸ்வ ஜாட்யம்
6. பித்தஜஸ்ராவம்
7. கபத்தின் சீற்றத்தால் தோன்றும் கபஜஸ்ராவம்
8. இரத்த விகாரத்தால் தோன்றும் ரக்தஜஸ்ராவம்
9. அலகாஜாதம்
10. சோனிதார்சம்
11. ஸவிரணசுக்ரம்
12. மூன்று தோஷங்களாலும் தோன்றும் பூயாஸ்ராவம்
13. நகுலாந்த்யம்
14. அக்ஷிபாகாத்யயம்
15. அலஜி

**8. புறக்காரணங்களால் தோன்றும் கண் நோய்கள் - 2**

1. ஸநிமித்த நோய்
2. அநிமித்த நோய்

)வ்விரண்டும் கூட சிகிச்சையால் நீக்க இயலாதவை)

# VI. நேத்ரசாரீரம் (ANATOMY OF THE EYE)

ஏனைய நோய்களுக்கும் கண் நோய்களுக்கும் பல வேற்றுமைகள் உண்டு. கண் உடலுறுப்புகளில் மென்மையானது, மிக நுட்பமானது. ஆகவே அதில் தோன்றும் நோய்களை மிக நுட்பமாக ஆராய்ந்து தக்க சிகிச்சை செய்ய வேண்டும். ஏனைய உறுப்புகளில் தோன்றும் நோய்களுக்குத் தவறான சிகிச்சை செய்ய நேர்ந்தால் சில துன்பங்கள் தோன்றலாம். அவற்றால் தவறை உணர்ந்து மீண்டும் தக்க முறைகளைக் கவனமாகச் செயல்படுத்துவதால் நோயாளியைக் குணப்படுத்தலாம். கண் நோய்கள் அவ்வாறல்ல. முதலிலேயே சரியாக நோயை அறிந்து தக்க சிகிச்சை மேற்கொள்ள வேண்டியது அவசியமாகும். சிறிது தவறு நேர்ந்தாலும் கண்கள் பார்வையை இழந்து விடும்.

எடுத்துக்காட்டாக கபத்தால் தோன்றும் அதிமந்தமானால் தவறான சிகிச்சையால் 7 நாட்களில் கண் பார்வையை இழந்து விடும். இரத்தத்தாலான அதிமந்தமானால் 5 நாட்களிலும், வாதத்தால் தோன்றும் அதிமந்தமானால் 6 நாட்களிலும், பித்தத்தால் தோன்றும் அதிமந்தமானால் தவறான சிகிச்சை செய்தால் ஒரே நாளிலும் பார்வை அழிந்து போகும் என்கிறார் ஸுசுருதர் (உத்-சு-6-அத் 20). இந்நோய் ஆங்கில மருத்துவத்தில் GLAUCOMA எனும் நோயாகும் என்பது ஆராய்ச்சியாளர்கள் கருத்தாகும். சிகிச்சை செய்யாமல் விட்டுவிட்டாலும் இந்த நிலை தோன்றும்.

ஆகவே ஸுசுருதர் தம் உத்தரஸ்தானத்தில் முதல் அத்தியா யத்தில் 10வது சுலோகத்திலிருந்து 19வது சுலோகம் முடிய கண்ணின் அமைப்பை நன்கு விளக்கியுள்ளார். மிகச் சுருக்கமாக இருந்தாலும் தெளிவுபடக் கூறியிருப்பது கவனத்தில் கொள்ளத் தக்கது.

முதலில் கண் விழியின் அளவு கூறப்பட்டுள்ளது. அவரவர் களுடைய கட்டை விரல் நடுப்பகுதி ஒரங்குலம் எனப்படும். அதைக் கொண்டு அளவிட்டால் கண்விழி ஆழம் (அந்தப்ர வேசபிரமாணம் - ANTERO POSTERIOR) இரண்டு அங்குல மாகும். அதாவது 23.48 மி. மீட்டருக்குச் சமம். கண்விழியின் ஆயாமம் (நீளம், பூர்வபச்சிம வியாஸம் - HORIZONTAL) 1.023 அங்குலம். அதாவது 24.15 மி.மீட்டர். கண்விழியின் உத்தர தக்ஷிணவியாசம் (VERTICAL DIAMETER) மேலிருந்து கீழாக அளவு 24.13 மி.மீட்டராகும். அலோபதி மருத்துவ அறிஞர் களான க்லாட் பர்த் மற்றும் சார்லஸ் ஹெச் என்பவர்கள்

"The eye ball is composed of segment of two spheres; The out anterior (cornea) about 12 M.M. in diameter is the smaller and more prominent; the larger posterior corresponds to the sclera. The eye ball measures about one inch in diameter, 24 M.M. from side to side, 24 M.M. from before to back ward and 23 M.M. from above to downwards." (A manual of diseases of the eye - Page 92) கூறியுள்ளனர்.

கண் ஐந்து பூதங்களின் சேர்க்கையாலானது என்பது ஆயுர் வேதத்தின் கொள்கையாகும். கண்களின் மாமிசப்பகுதி நிலம், இரத்தப்பகுதி நெருப்பு, கருவிழிப் பகுதி வாயு, வெள்ளை விழி நீர். கண்ணீர் சுரக்கும் சுரோதஸ்கள் ஆகாயம் எனும் தத்துவங்களாலானது (ஸு-உத்-அத் 1-சு 11).

அலோபதி மருத்துவத்தில் கண்ணின் உறுப்புகள் இரு பகுதி களாக விளக்கப்பட்டுள்ளன. (1) அங்கம் (ORGANS) (2) உபாங் கம் (APPENDAGES). இவற்றில் அங்கங்கள் (1) நேத்ர கோளகம் (EYE BALL) (2) தமனிகள் (ARTERIES), சிரைகள் (VEINS), இரஸவாஹினிகள் (LYMPHATIES), வாதஸூத்ரம் (NERVES) (3) நேத்ரசாலக மாமிச பேசிகள் (OCULAR MUSCLES) (4) நேத்ர சிலேஷ்மாவரணம் (CONJUCTIVA).

உபாங்கங்கள் :- (1) பலக - நேத்ரச்சதம் (EYELIDS) (2) ப்ரூ (EYE BROW) (3) அச்ருஜனகபிண்டம் (அ) அச்ரு கிரந்திகள் (LACHRYMAL GLANDS) (ஆ) அச்ருப்ரணாளிகா (LACHRY-MAL DUCTS) (இ) அச்ருத்வாரம் (PUNCTA LACHRYMALIS) (ஈ) அச்ருவாஹகநாளிகா (CANALICULI) (உ) அச்ருவாசயம் (LACHRYMAL SAC) (ஊ) நாஸாகத அச்ருவாஹிகா (NOSE DUCT) (4) நேத்ரகுஹா (ORBIT).

நேத்ர கோளகம் (EYE BALL) என்பதன் முக்கியப் பகுதி களாவன : (1) சுக்லமண்டலம் (CORNEA) (2) நேத்ரபாஹ்ய படலம் (SCLEROTIC COAT OR SCLERA) 3) தாரா மண்டலம் (IRIS) (4) தந்துஸமூஹம் (CILIARY BODY) (5) நேத்ரமத்யபடலம் (CHOROID) (6) நேத்ரதர்ப்பணம் அல்லது திருஷ்டிவிதானம் (RETINA) (7) பூர்வஜலமயரஸகண்டம் (ANTERIOR CHAMBER) (8) பச்சிமகண்டம் (POSTERIOR CHAMBER) (9) திருஷ்டிமணிகாச (CRYSTALLINE LENS) (10) திருஷ்டி மணி ஆவரணம் (LENS CAPSULE) (11) காசரூ பரஸஸாந்த்ரஜலம் (VITREOUS HU'MOR) (12) திருஷ்டி நாடி (OPTIC NERVE) (13) தர்சன நாடி ஸிரா (OPTIC DISC).

ஸுசுருதர் கண்களின் உறுப்புகளை ஐந்து மண்டலங்கள், ஆறு

ஸந்திகள், ஆறு படலங்கள் என வகுத்துக் கூறியுள்ளார். (உத்.அத்.1)

மண்டலங்களாவன: (1) பக்ஷ்ம மண்டலம், (2) வர்த் மண்டலம், (3) சுவேத மண்டலம், (4) கிருஷ்ண மண்டலம், (5) திருஷ்டி மண்டலம் என்பனவாகும்.

ஸந்திகளாவன : (1) பக்ஷ்ம வர்த்மகத ஸந்தி (2) வர்த்மசுக்லகத ஸந்தி (3) சுக்லகிருஷ்ணகத ஸந்தி (4) கிருஷ்ண திருஷ்டிகத ஸந்தி (5) கனீனிகாகத ஸந்தி (6) அபாங்ககத ஸந்தி என்பனவாகும்.

ஆறு படலங்களில் இரண்டு வர்த்மபடலங்கள், மற்றவை நான்கும் அக்ஷ கோளக படலங்கள்.

1. மண்டலங்களாவது CIRCLES, ஸந்திகளாவது JUNCTIONS, படலங்களாவது LAYERS OR TUNICS எனக் கொள்க. இவற்றில் **பக்ஷ்ம மண்டலம்:** இது EYE LASHES ஆகும். மேல்கீழ் இமைகள் சேரும்போது இந்த உரோமங்கள் மண்டலம் போலக் காணப்படும்.

2. **வர்த்மமண்டலம்** : டார்ஸி அல்லது ஐ லிட்ஸ் (EYE LIDS) எனப்படுபவை மேல் கீழ் இமைகளாகும். இமைகளின் அடிப்பகுதியில் சிலேத்துமக் கலையாலான ஆவரணம் உள்ளது. மேற்பகுதி தோலாலானது. இவ்விரண்டும் இணையும் இடம் இமையின் முனை எனப்படும். இம்முனையில் வெண்ணிறக் கோடு உள்ளது. அதன் மேல் உரோமவரிசை தோன்றும். இந்த உரோமங்களின் அடிப்பகுதியில் நுட்பமான பிண்டங்கள் (ZEIS GLANDS) எனும் சுரப்பிகள் உள்ளன. இதிலிருந்து தோன்றும் திரவத்தால் உரோமங்கள் ஈரப்பசையுடன் மென்மையாகக் காணப்படும். இங்குள்ள வெண்ணிறக் கோடு முக்கியமானது. பிரவாளம் எனும் நோய்க்கு உரிய அறுவையில் இந்த வெண் ணிறக் கோடு முக்கியமானது. இந்தக் கோட்டில் சுருவியைச் செலுத்தி, கண் இமையை இரண்டாகப் பிளந்து, அங்குள்ள நேத்ரஉன்மீலனீ மற்றும் நேத்ரநிமீலினீ மாமிச பேசிகளில் தோன்றும் நோய்க்குத் தக்க அறுவைச் சிகிச்சை செய்யும் முறையை ஸுசுருதர் தம் நூலில் விளக்கியுள்ளார். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மிக நுட்பமான இம் முறையை ஸுசுருதர் விளக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

3. **சுவேதமண்டலம்** அல்லது நேத்ரசிலேஷ்மமண்டலம்

3. **சுவேதமண்டலம்** அல்லது நேத்ரசிலேஷ்மமண்டலம் (CONJUNCTIVA): இது இமை முனையில் துவங்கி கண்விழிமேல் சிலேத்தும ஆவரணமாகக் காணப்படும். வெளிப்பக்கத்திலிருந்து காணும்போது வெண்ணிறமாகக் காணப்படும் பகுதி சுவேத மண்டலம் (SCLERA) எனப்படும். இது கண்ணின் 5/6 பங்கில் பரவியுள்ளது. இந்தப் புரை நுட்பமான இழையங்களாலானது. ஏனைய படலங்களைவிடத் தடித்து திடமாகக் காணப்படும். இது கண்ணின் முன் பகுதிக்கு வந்து மெல்லியதாகி ஒளிக்கதிர்கள் உட்புகும் வண்ணம் அமைந்திருக்கும் பகுதி தூயதாகிக் காணப்படும். இது கிருஷ்ண மண்டலமாகும். இதன் பின் பக்கத்தில் ஒரு துளை உண்டு. அதன் வழியாக கண் நரம்புகள், இரத்தக் குழல்கள் ஆகியவை நேத்ரகோளத்தில் புகுந்திருக்கும்.

4. **கிருஷ்ண மண்டலம் :** இது கண் கருவிழியாகும். ஆங்கிலத்தில் CORNEAL CIRCLE எனப்படும். இதன் குறுக்களவு TRANSVERSE DIAMETER 11.6 மி.மீட்டர் ஆகும். நேர் அளவு VERTICAL DIAMETER 10.6 மி.மீட்டர் ஆகும். முதுமையில் இப்பகுதியில் வெண்மை நிறம் கொள்ளத் துவங்கும். இம்மாற்றம் ARCUS SENILIS எனப்படும். ஆனால் இதனால் பார்வைக் கோளாறு தோன்றாது.

ஐந்து புரைகளாலானது :

அவையாவன (1) அக்ரிமஸ்தரம் - ANTERIOR EPITHELIAL MEMBRANE (2) த்விதீயஸ்தரம் BOWMEN'S MEMBRANE (3) கர்பஸ்தரம் - STROMA (4) சதுர்த்தஸ்தரம் - DESEMENTS MEMBRANE (5) பச்சிமஸ்தரம் - POSTERIOR EPITHELIAL MEMBRANE.

5. **திருஷ்டிமண்டலம் :** 'திருஷ்டி' என்ற சொல் ஆயுர்வேதத்தில் கனீனிகா (PUPIL) மற்றும் திருஷ்டிமணி (LENS) ஆகியவற்றைக் குறிப்பதாகும். CIRCLE OF THE PUPIL எனப்படும்.

கனீனிகா (PUPIL) ஒளிபட்டால் சுருங்குவதும், இருட்டில் விரிவடைவதுமான தன்மைகள் கொண்டிருக்கும். தொலைவில் உள்ள பொருள்களைக் காணும்போது விரிவடையும். அருகில் உள்ள பொருள்களைக் காணும்போது சுருங்கும். அச்சம், வியப்பு, வருத்தம் எனும் நிலைகளில் விரிவு பெறும். உறங்கும்போது சுருங்கும். இதன் அளவு 2.5 முதல் 6 மி.மீட்டர் வரையிலாகும்.

கருவில் இருக்கும் குழந்தைக்கு இப்பகுதியில் சிலேத்துமக் கலை (PUPILLARY MEMBRANE) எனப்படும் புரை ஒன்று

இருக்கும். எட்டாம் மாதத்தில் இது மறைந்து விடும். அவ்வாறு மறையாவிடில் பிறக்கும் குழந்தை பிறவிக் குருடாகி விடும். தாராமண்டலத்தின் முன் ANTERIOR CHAMBER என்பதும், பின்பக்கத்தில் POSTERIOR CHAMBER என்பதும் இருக்கும். இவற்றிற்கு பின்பக்கத்தில் LENS இருக்கும். தாராமண்டலத்தில் இரு மாமிசபேசிகள் இருக்கும். முதலாவது கனீனிகா ஸங்கோசகம் (SPHINETI ? PUPILAC) எனப்படும். இதன் இழையம் வட்ட வடிவமுள்ளது. இரண்டாவது கனீனிகா பிரஸாரகம் (DIDATER PUPILAE) எனப்படும். இது நீளவடிவ இழையங்களாலானது.

இவ்வாறு ஆயுர்வேதம் ஐந்து மண்டலங்களாகக் கண்களைப் பாகுபடுத்தி உள்ளது.

## ஸந்திகளின் விளக்கம்

இரு பகுதிகள் இணைவது ஸந்தியாகும். கண்களில் உள்ள இணைப்புகள் ஆறு. அவையாவன :

(1) பக்ஷ்மவர்த்ம கதஸந்தி (FREE MARGINS OF THE LIDS)

(2) வர்த்ம சுக்லபிகதஸந்தி (FORMIX). இதில் நான்கு புடங்கள் உண்டு. அவையாவன. (i) ஊர்த்வவர்த்மபுடம், ஊர்த்வ வர்த்ம கோணம், (SUPERIOR FORMIX) (ii) அதப்புடம், நிம்னவர்த்ம கோணம் (INFERIOR FORMIX) (iii) மத்யபுடம், மத்யவர்த்ம கோணம் (MEDIAL FORMIX) (iv) பார்ச்வபுடம், பார்ச்வ வர்த்ம கோணம் (LATERAL FORMIX)

3. சுக்ல கிருஷ்ண கதஸந்தி (LIMBUS). சுவேத மண்டலத்திலிருந்து SELERA: என்பதைச் சேர்ந்து கிருஷ்ண மண்டலத்துடன் (CORNEA) இணையும்.

இணைப்பு ஸந்தான மண்டலம் ஆகும். இந்த ஸந்தான மண்டலம் மூன்று பகுதிகளாலானது: (i) தந்துமயமண்டலம் அல்லது ஸந்தானவலயிகா - CILIARY MUSCLE (ii) தந்துமய புடஸந்தானதர்சிகா CILIARY FROSESSE (iii) தந்துமய பேசி அல்லது ஸந்தான பேசிகா - ORBICULARIS ILARIS.

4. கனீனிகா கதஸந்தி - MEDICAL PALPEHRAL COMMI-SURE). இது மூக்கின் அருகில் உள்ள இணைப்பு ஆகும். அதனால் நாஸா ஸமீபஸ்தித ஸந்தி விசேஷம் எனப்படும். நேத்ராக் கோணமாகும். (INNER CANTHUS).

5. அபாங்கஸந்தி - நேத்ரபஹிக்கோணம் எனவும் பெயருண்டு. இது கடைக்கண் பகுதியில் உள்ள இணைப்பு (OUTER CANTHUS) ஆகும். முட்டை வடிவமுள்ளது.

கண்ணீர் திரண்டு அச்ருகுச்சித்ரம் (கண்ணீர்துளை) வழியாக மூக்கின் அருகில் செல்லும். இங்கு நேத்ரபிண்டம் (CAUSTICULE LACRIMATIS) இருக்கும்.

கண்களில் ஆறு படலங்கள் உள்ளன. இவற்றை TUNIC OF THE EYE எனக் கூறலாம்.

கண்விழிகளைச் சார்ந்த படலங்களின் முன்பக்கம் தேஜோஜலத்துடன் கூடியதாகும். இங்கு தேஜம் (ஒளி) என்பது ஆலாசகதேஜஸ் (பார்வை ஒளிக்கு) என்பதற்கு இருக்கையான சிரையில் இருக்கும் இரத்தம் மற்றும் நீரால் தோலைச் சார்ந்திருக்கும் தாது ஆகும். இது BLOOD VESSELS AND LYMPHATICS என்பதாகும். இந்த ஆறு படலங்களாவன: (1) புறத்தோலைச் சார்ந்த புரை (2) உள்பகுதியில் உள்ள சிலேத்துமக் கலையாலான ஆவரணம். மற்ற நான்கு புரைகளும் மிகவும் நுட்பமானவை. அவை (3) தேஜோஜலாச்ரித பாஹ்ய படலம் (4) பிசித ஆச்ரித படலம் (5) மேதஸ்ஸமாச்ரித படலம் (6) அஸ்தி ஆச்ரித படலம் என்பனவாம்.

அலோபதி மருத்துவத்தின்படி முதல் படலம் CORNEA என்பதாகும். அதற்குப் பின் பக்கத்தில் உள்ளதை ANTERIOR CHAMBER எனவும் கூறலாம். ஆனால் மற்ற நான்கு படலங்ளும் இவை எனக் குறிப்பிடுவது இயலாததாகும் என அறிஞர்கள் கருதுகின்றனர்.

அலோபதி மருத்துவத்தில் மூன்று படலங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. அவையாவன:- (1) பாஹ்யபடலம் - இதில் ஸௌத்ரிக படலம் (FIBROUS TUNIC,) நேத்ர பாஹ்ய படலம் (SCLERA), கிருஷ்ணமண்டலம் (CORNEA) முக்கியமானவை. (2) மத்ய படலம் இதில் ரக்தவாஹினீமயரஞ்சித படலம் (VASCULAR PIGMENT TUNIC), தாராமண்டலம் (IRIS), நேத்ரமத்ய படலம் (CHOROID) ஸந்தான மண்டலம் (CILIARY BODY) ஆகியவை முக்கியமானவை. (3) நேத்ராந்தர படலத்தில் நேத்ராந்தர நாடீ மண்டலம் (NERVOUS TUNIC), திருஷ்டி விதானம் (RETINA) எனுமிவை முக்கியமானவை.

யூனானி மருத்துவத்தில் ஏழு படலங்கள் குறிப்பிடப் பட்டுள்ளன. அவையாவன :- 1. ஜபன் (பாஹ்யவர்த்ம) 2. முல்தஹிமா (ஆப்யந்தரவர்த்ம) 3. ஸலவியா 4. கர்னியா (சுவேத படலம்) 5. முசீமியா இன்வியா (கிருஷ்ண படலம் - தாரகா) 6. இனக்பூதியா (மேதஸ்படலம் - காச கோசம்) 7. சப்கியா (திருஷ்டி படலம்) என்பனவாம்.

## கண்நோய்கள் தோன்றக் காரணம்

ஆயுர்வேதத்தில் கண் நோய்கள் தோன்றுவதற்குக் கூறப் பட்ட காரணங்கள் தவறான உணவு உட்கொள்ளுதலால் வாத பித்த கபங்கள் சீற்றமடைந்து, சிரைகளின் வழியாகத் தலையைச் சேர்ந்து கண்களில் கொடிய நோய்களைத் தோற்றுவிக்கின்றன.

அலோபதி மருத்துவம் கூறுவதாவது:- கண்களுக்குள் நுட்பமான உயிரணுக்கள் நுழைதல் (சேர்தல்), நஞ்சு கண்களில் பரவுதல் ஆகியவற்றால் கடும் நோய்கள் தோன்றும். இவை (உயிரணுக்கள்) புறத்திலிருந்து வந்து சேர்வதாகவும், உடலுக்குள் தோன்றுவனவாகவும் இருக்கலாம்.)

வெளிப்புறத்திலிருந்து நுண்ணிய உயிரணுக்கள் கண்களில் சேர்வதால் கண்விழிகளைச் சார்ந்த உறுப்புகளில் விரணம், வீக் கம், இரத்தாதிமந்தம், இரத்தக்குழல்கள் கேடுறுதல், நிணநீர்ப் பெருக்கம், அதனால் சீழ்ப்பெருக்கம் ஆகியவை தோன்றும்.

உடலில் ஏதேனும் ஒரு உறுப்பில் பாகம் (SUPPURATION) ஏற்படுவதால் அந்தச் சீழ், உயிரணு அல்லது அதன் நஞ்சு, இரத்தந்தில் கலந்து இரத்தக் குழல்களின் வழியாகக் கண்களில் சேரும். அதனால் கண்களில் வீக்கம், சிவத்தல், நீர்ப்பெருக்கு முதலிய கோளாறுகள் தோன்றும் என்பது அலோபதி மருத்து வத்தின் கொள்கையாகும்.

## நோய்கள் தோன்றச் சிறப்பான காரணங்கள்

ஸுசுருதர் வியாதி ஸமுத்தேசீய அத்தியாயத்தில் (ஸூ-அத் 24) நோய்களுக்குக் காரணத்தை ஏழு வகையாகக் கூறுகிறார். அலோபதி மருத்துவத்திலும் கண் நோய்கள் தோன்றும் காரணங்கள் இவ்வாறே கூறப்பட்டுள்ளன. அவையாவன:-
1) ஆதிபலபிரவிருத்தம் (HEREDITARY DEFECTS) அல்லது ஜன்மபலப்ரவிருத்தம் அதாவது பிறவியில் தோன்றுவது (CON-GENITAL DEFECTS.)

## ஸங்காதபலப்ரவிருத்தங்கள்

2) தேஹாபிகாதஜன்யம் (PHYSICAL INJURIES)

3) யந்த்ரவிகாதம் (MECHANICAL INJURIES)

4) ராஸாயனிகவிகாதஜம் (CHEMICAL INJURIES)

### தோஷபலப்ரவிருத்தங்கள்

5) கீடாணுஜன்யாபிகாதஜம் (PARASITIC INJURIES)

6) அபகிராந்தி ஜவிக்ருதி (DEGENERATIVE CHANGES)

7) அர்புதஜன்யவிகாரம் (NEW GROWTHS)

முன்காலத்தில் வேறு இரு காரணங்களும் கூறப்பட்டன :- அவை

1. காலபலப்ரவிருத்தருதுஜன்ய ரோகம் (SPRING CATARRH)
2. தைவபலப்ரவிருத்த - மின்னல் தாக்குதல் முதலியவற்றால் தோன்றுவது (LIGHTNING)

ஜன்மபலப்ரவிருத்த விகாரங்கள்:- (CONGENITAL DEFECTS) நேத்ரகோளம் (கண்விழி) அல்லது மற்ற உறுப்புகளில் முழு மலர்ச்சி தோன்றாமை, அதாவது இமைகளை மேல் நோக்கி எழுப்புவதில் கோளாறு (PTOSIS), தாராமண்டலம் இன்மை, காசம் (காடராக்ட்) முதலியன. ஆதிபலப்ரவிருத்த விகாரங் களா வன:- (HEREDITARY) தாய் தந்தை அல்லது வமிசாவளி வழி யாகத் தோன்றும் கோளாறுகள்:- சுக்லாங்கதா (ALBINISM) நக் தாந்த்யம் - இரவில் கண்தெரியாமை (NIGHT BLINDNESS) முதலியன.

பௌதிக காரணங்களாவன: (PHYSICAL INJURIES): சூரியன், நெருப்புப் பிழம்பு, கடுமையான மின்னொளி எனும் இவற்றின் வேகத்தால் கோளாறுகள் ஏற்படுதல். GLASS BLOWERS CATARACT நம் நாட்டிலும், ஆப்பிரிக்க நாட்டிலும் கடும் வெப்பமுள்ள பகுதிகளில் வசிப்பவர்களுக்கு இந்நோய் உண்டாகும். மிக்க குளிர் உள்ள நாடுகளில் பனிக் கட்டிகள் மீது நடப்பவர்களுக்கு SNOW BLINDNESS உண்டாகும். இதைப் போலவே மாயோபியா (தொலை நோக்கு) அல்லது ஸூக்ஷ்மேக்ஷணம் மெட்ரோபியா (அருகு நோக்கு) முதலியனவும் கண்களில் அழுத்தம் தோன்றுவதால் உண்டாகும். யாந்திரிக அபிகாதங்களாவன (MECHANICAL INJURIES):-

இருவகைப்படும். (1) சித்ரரஹிதம் (WITHOUT PERFORATION) (2) சித்ரஸஹிதம் (WITH PERFORATION).

சித்ரஸஹிதமானதும் இருவகைப்படும் (1) கண்களைத் துளைத்துக் கொண்டு புறப்பொருள்களுக்கு உள் பகுதியில் புகுதல் (2) துளைத்துக் கொண்டு புறப்பொருளுக்கு அருகில் சேருதல்.

ராஸாயனிக திரவத்தால் தோன்றும் (CHEMICAL INJURIES) கோளாறுகளாவன:- 1. பாகியம் - கண்களில் விடப்படும்

வேதியியற் பொருள்கள் 2) ஆந்தரங்கிகம் - வாய் வழியாக நோயாளிக்குக் கொடுக்கப்பட்ட வேதியியற் பொருளால் தோன்றியது. வேதியியிற் பொருள்களில் எட்ரோவின், கிரிஸ ரோபின், நெப்தெலீன், க்ஷாரப்பொருள், அமிலம், நெருப்பால் சுடுதல் முதலியவற்றால் கண்களில் கோளாறுகள் தோன்றும். இப்பொருள்களை தவறாகவோ அல்லது அளவுக்கு மீறிப் பயன் படுத்துவதாலோ கண்களில் கோளாறு ஏற்படும். எட்ரோபின் என்பதால் கண்ணின் சிலேத்தும ஆவரணம் எரிந்து போகும். கிரிஸரோபின் என்பதால் இமைகள் வீங்கும். நெப்தெலீன் என்பதால் காசபிந்து எனும் நோய் தோன்றும். காஸ்டிக் பொடாஷ், காஸ்டிக் ஸோடா, அமோனியா, சுண்ணாம்பு போன்ற காரப்பொருள்கள் கண்களில் பட்டால் வெள்ளை விழியும், கண்களில் சிலேத்தும ஆவரணமும் எரிந்து போகும்.

அமிலங்களாகிய கந்தக அமிலம், நைட்ரிக் அமிலம், ஹைட்ரோக்ளோரிக் அமிலம், கார்பாலிக் அமிலம் போன்ற வற்றை (பகைமை உணர்ச்சி கொண்டு தீங்கு விளைவிக்க மாற்றார் முகத்தில் வீசுவதால்) கண்ணிமை, விழிகள் ஆகிய வற்றில் துன்பங்கள் தோன்றும்.

நெருப்பால் சுடுதல்:- சமையல் செய்யும் போது நெய் அல்லது எண்ணெய் போன்ற பொருள்களை காய்ச்சி அதில் பூரி போன்ற பொருள்களை இடும் போது கொதிக்கும் நெய் அல்லது எண்ணெய்த்துளிகள் சிதறிக் கண்களில் படலாம். சூளை, இன்ஜின்கள் முதலியவற்றில் வேலை செய்பவர்களின் கண்களில் தீப்பொறிகள் படலாம். அவ்வாறு படுவதால் கண்களின் புறப்படலங்களில் விழிகளில் துன்பங்கள் தோன்றும்.

ஆந்தரங்கிக ஹேது:- நச்சுப் பொருள்களாகிய க்வினைன், மெதிலேடெட்ஸ்பிரிட் மற்றும் குடலில் புழுக்களைக் கொல்லத் தரப்படும் ஸெண்டோவின் முதலியவற்றைத் தவறாகப் பயன்படுத்துவதாலோ, அளவுக்கு மீறிப் பயன்படுத்துவதாலோ கண்களில் கோளாறுகள் தோன்றும்.

சிலவகை உயிரணுக்கள் கண்களிலும், கடைக்கண்களிலும் சேர்ந்தும் (EOTOGENOUS) இரத்தத்தில் புகுந்து கண்களில் சேர்ந்தும் (ENDOGENOUS) நோய்களை தோற்றுவிக்கும். ஸ்டெபி லோகோகாயி ஆல்பஸ், ஜெரோஸிர் பேஸிலா, ஸ்டெபிலோ கோகஸ், ஔரிகஸ் ஆகியவை இமைகளில் துன்பங்களைத் தோற்றுவிக்கும். நியூமோ கொகாய், ஸ்ப்ரெப்டோ கொகாய்,

கோநோகொகாய் போன்றவை கண்களில் சிலேத்தும மண்டலத்தைச் சார்ந்து நோய்களைத் தோற்றுவிக்கும்.

அபகிராந்திஜநிதவிக்ருதி (DEGENERATIVE CHANGES) களில் சுக்லமண்டலத்தில் ஒளிபுகாமை (ARCUSSENITIS), கண்களின் சிலேத்தும ஆவரணத்தில் மஞ்சள்நிறப் புள்ளிகள் தோன்றுதல் (PINGUECOULA), ப்ரொடிபூததிருஷ்டி (PRESBYOPIA) ஆகியவை முக்கியமானவை. கிரந்தி அர்புதம் (TUMOURS) என்பன கண்ணிமை, அச்ருபிண்டம், நேத்ரமண்டல படலம் நேத்ரதர்ப் பணம் போ்ன்ற பகுதிகளில் தோன்றும்.

வாத சீற்றத்தால் தோன்றக் கூடியவை:-

வாதசீற்றத்தால் ஹதாதிமந்தம் (ATROPHY OF THE EYE BALL), நிமிஷம் (BLEPHAROSPOSM), கம்பீரிகா (PARALYSIS OF THE 6th CRANIAL NERVE) வாதஹதவர்த்ம (PARALYSIS OF THE 7th CRANIAL NERVE LAGOPTHALMUS OR PTOSIS), காச ரோகம் (CATARACT), சுஷ்காக்ஷிபாகம் (OPTHALMOPLAGIA), வாதஅபிஷ்யந்தம் (ACUTE CONJUNCTIVITIES), வாதபர்யயம் CRANIAL NERVE ATROPHY), அன்யதோவாதம் (NEURALGIA OF THE 5th CRANIAL NERVE) போன்றவை தோன்றும்.

பித்தத்தின் சீற்றத்தால் தோன்றுவன:-

ஹ்ரஸ்வஜாட்யம் (RETINITIS PIGAMENTOSA), ஜலஸ்ராவம் (WATERY DISCHARGE), பரிம்லாயிகாசம் (GLAUCOMA), நீல காசம் (BLACK CATARACT), அபிஷ்யந்தம் (CONJUNCTIVITIS), அதிமந்தம் (GLAUCOMA ACUTE), அம்லாப்யுஷிதசுக்திகா (XEROSIS), பித்த அபிஷ்யந்த திருஷ்டி (RETINITIS PIGAMENTOSA), தூமதர்சி (GLAUCOMATIC STAGE) என்பன வாகும்.

கபத்தின் சீற்றத்தால் தோன்றுவன :-

கபஜஸ்ராவம் (MUCUS DISCHARGE), கபஜகாசம் (CATA-RACT), அதிமந்தம் (GLAUCOMA ACUTE), பலாஸகிரதிதம், சிலேத்தும விதக்ததிருஷ்டி, (NYCTALOPIA (NIGHT BLINDNESS), போதகீ (GRANULAR CONJUNCTIVITIES OR TRACHOMA), லகணம் (CALAZION OR MEIBOMIAN CYST), கிருமி கிரந்தி, பரிக்லின்னவர்த்ம (ANKYLO BLEP HARON) சுக்லார்ம (PTERIJ-GIAM), பிஷ்டகம் (PINGUECULA), சிலேத்தும உபநாஹம் முதலியன.

இரத்தத்தின் சீற்றத்தால் தோன்றுவன:-

அஜகாஜாதம் (ANTERIOR STAPHYLOMA), ஸவ்ரணசுக்ரம் (ULCERATIVE KERETITIS OR CORNEAL ULCER), கிலிஷ்டவர்த்ம (ANGLO NEUROTIC OEDEMA), ஸிராஹர்ஷம் (ORBITAL CELLUTITIS) ஸிரோத்பாதம் (HYPEREMIA OF THE CONJUNCTIVA), அங்சனநாமிகா (EXTERNAL STYE), ஸிரா ஜாலம் (PANUS), பர்வணி (MAGRINAL ULCERS OF CORNEA), அவ்ரணசுக்ரம் (OPACITY OF CORNEA), அர்ஜுனம் (SUB-CONJUNCTIVAL ECHYMOSIS OR PHLYCTENULAR CONJUNCTIVITIS) என்பனவாகும்.

ஸந்நிபாதத்தால் தோன்றுபவை அல்லது கண்ணுறுப்புகள் அனைத்தையும் துன்புறுத்தும் நோய்களாவன:-

பூயாஸ்ராவம் (PURULENT DISCHARGE), நகுலாந்த்யம் (RETICITIS PIGAMENTOSE OR CENTRAL OPACITY OF THE LENS), அக்ஷிபாகாத்யயம் (HYPOPYON OR KERATA-MALACIA), அலஜி (PHLYCTENULE), பக்ஷ்மகோபம் (TRICHIA-SIS DISTRICHIASIS AND ENTROPION), வர்த்மாவபந்தம் (NON INFLAMATORY OEDEMA OF THE EYELIDS), ஸிராபிடகா (DEEP SCLERITIS), உத்ஸங்கினி (CHALIZION), பூயாலஸம் (ACUTE DACRYOCYSTITIS), அர்புதம் (TUMOUR), சியாவ கர்தமம், சியாவவர்த்ம, அர்சோவர்த்ம (PAPILLARY FORM), சர்க்கராவர்த்ம, ,ஸசோபபாக, அசோபபாக, பஹலவர்த்ம, அக்லின்னவர்த்ம, கும்பீகா, பிஸவர்த்ம முதலியனவாகும்.

இந்நோய்கள் ஸந்திகத ரோகங்கள், வர்த்மகத ரோகங்கள், சுக்லமண்டலகத ரோகங்கள், கிருஷ்ணகத ரோகங்கள், ஸர்வகத ரோகங்கள் என வேறுபடுத்தி அவற்றின் இலக்கணங்களையும் சிகிச்சை முறைகளையும் உத்தரஸ்தானத்தில் ஸுசுருதர் விளக்கியுள்ளார். (உத்-அ 2-சு 19).

**ஸுசுருதர் கூறிய சிகிச்சை முறைகள்**

பொதுவாக கண்நோய் சிகிச்சை முறைகள் இரண்டு வகைப்படும்: (A) உடல் முழுவதையும் சார்ந்த சிகிச்சை, (B) கண்ணின் நோயுற்ற உறுப்புகளைச் சார்ந்த சிகிச்சை. (A) தோஷங்களின் சீற்றத்தால் கண் நோய்கள் தோன்றுகின்றன. எனவே உடலுக்குத் தோஷங்களை தணிக்கச் செய்யும் சிகிச்சை முறையும் அவசியமாகிறது. அம்முறைகளாவன:- 1. ஸ்நே ஹனம் (LUBRICATION) 2. ஸ்வேதனம் (FOMENTATION)

3. வமனம் (EMETICS) 4. விரேசனம் (PURGATIVES) 5.ஆஸ் தாபன வஸ்தி (ANEMA) 6. நஸியம் (SNUFF) 7. தூமம் (SMOKING) 8. கபளம் 9.கண்டூஷம் (GARGLES) 10. விச்ராமம் (REST) 11. வியாயாமம் (EXERCISE) 12. அப்யங்க (MASSAGE) 13. ஔஷதி (DRUGS SUBMINISTA) 14. ரக்தமோக்ஷணம் (VENORALLYSECTION) 15. பத்யாபத்யம் 16. தாபோத்பாதனம் (ARTIFICIAL) 17. ரக்தரஸம் (SERMN) 18. காகபதாங்கனம் (VACCINA) 19. மாம்ஸபேசீகத (MUSCULAR) சிரோவஸ்தி 20. லங்கனம்.

(B) நோயுற்ற உறுப்புகளுக்கான சிகிச்சை முறைகள்

(1) பரிஷேசனம் (IRRIGATION) 2. தர்ப்பணம் (OILING) 3. புடபாகம் 4. பிரதிஸாரணம் (CASTIC TOUCHES) 5. ஆச்யோதனம் (DROPS) 6. அஞ்சனம் (OINTMENTS) 7. ஸேகம் (FOMENTATION) 8. கஜ்ஜலம் (COLLIRIUMS) மற்றும் ஔஷதி (MEDICINE) 9. ஸூசீபேதம் (SUBCONJUNCTIVAL AND RATROBULBULAR INJECTIONS) 10. வித்யுத்சிகித்சா (ELECTRIC TREATMENT) 11. ஆப்யங்கம் - நேத்ரகோளக மர்தனம் (MASSAGE) 12. பிரகாச சிகிச்சை (PHOTOTHERAPY) 13. எக்ஸ்கிரணம் (RADIUM THERAPY) 14. சஸ்த்ரகார்யம் (OPERATION TREATMENT) 15. ருதிரஸ்ராவம் (VENESECTION) 16. சிரோவஸ்தி.

இந்த முறைகளின் விளக்கமும், எந்தெந்த நோய்களுக்கு எந்தெந்த சிகிச்சை முறைகளை எவ்வாறு பயன்படுத்த வேண்டும் எனும் பொருள்களையும் உத்தரஸ்தானத்தில் 1 முதல் 19 அத்தியாயங்களில் காணலாம்.

ஒவ்வொரு நோயிலும் சிகிச்சையின் போது நேரக் கூடிய தவறுகளையும், சீராகச் சிகிச்சை செய்யாவிடில் ஏற்படக் கூடிய துன்பங்களையும், அவற்றை நீக்கும் முறைகளையும் ஸுசுருதர் நன்கு விளக்கியுள்ளது குறிப்பிடத்தக்கது.

**கண் நோய்களுக்கு அறுவைச் சிகிச்சை**

எழுபத்தாறு கண் நோய்களில் அறுவைக்குரியவை 40 நோய்கள் மட்டுமே என்பதை ஸுசுருதர் தெளிவாக குறிப்பிட்டுள்ளார்.

அவற்றில் சேதனத்திற்கு உரியவை 11, லேக்யங்கள் 9. பேத்யங்கள் 5, வேத்யங்கள் 15 ஆகும்.

**1. சேதன முறை**

சேத்யத்திற்கு அதாவது கத்தரித்து நீக்குதல் (CUTTING, DIVIDING, SPLITTING) என்பதற்கு உரியவை அர்சோவர்த்ம, சுஷ்கார்சம், வர்த்மார்புதம், ஸிராஜாபிடகா, ஸிராஜாலம், பர் வணிகா, பிரஸ்தார்யர்ம, சுஷ்கார்ம, ரக்தார்ம, அபிமாம்ஸார்ம, ஸ்ராவ்யர்ம என்பவையாகும்.

இம்முறையில் பின்பற்றத்தக்க செயல்கள்:-

1. நோயுற்ற பகுதியைத் தூய்மைபடுத்துதல் - பரிஷேசனம், ஆச்யோதனம்
2. பிரதிஸாரணம் (TOUCHES)
3. ஸ்வேதனம் (FOMENTATION)
4. சேதனம் (INCISION)
5. ஸ்நேஹதானம் (OINTING)
6. விரணபந்தனம் (BANDAGING) என்பனவாம்.

இம்முறையில் பயன்படுத்தப்படும் கருவிகளாவன:-

இயந்திரம் (HOOK), சலாகா (PROBE), படிசம், முசுண்டி, ஸூசி (NEEDLE), வாலம், மண்டலாக்ரம், கரபத்ரமுக கர்த்தரி, மண்டலாக்ர கர்த்தரி, அஞ்சிதாக்ர கரபத்ரம், விருத்திபத்ர மண்டலாக்ரம் என்பனவாகும்.

**2. லேகன முறை**

லேக்யம் - லேகனம் (CUTTING OR MAKING INCISION AND SCRAPING) எனும் முறைக்கு உரிய நோய்கள் அர்ம, போதகீ, ஸிராஜாலம், சியாமவர்த்ம, கும்பீகினி, பிடகா. செயல்முறையாவது:- உஷ்ணகஸகம், பிரமார்ஜனம், சஸ்திர பதாங்கனம், லேகனம், ரக்தஸ்தாபனம், பிரதிஸாரணம், பிரக்ஷா ளனம், ஸந்தானம் என்பனவாம். இம்முறைக்கு பயன்படும் கருவிகள் மண்டலாக்ரம், கரபத்ரம் எனும் இரண்டேயாகும்.

**3. பேதன முறை**

இதற்கு உரிய நோய்கள் சிலேஷ்மஉபநாஹம், லகணம், பிஸவர்த்ம, கிருமிகிரந்தி, அஞ்சனநாமிகா எனும் ஐந்தாகும்.

இம்முறைக்கு உரிய செயல்கள் முறையே:-

1. சோதனம் (தூய்மைப்படுத்துதல்) 2. ஸ்வேதனம் (வியர்க்கச் செய்தல்) 3. பேதனம் (பிளத்தல்) (DIVIDING) 4. அவசூர்ணனம்

(மருந்துப்பொருளின் தூளைத் தூவுதல்). 5. பிரதிஸாரணம் (CAUTERY) 6. தேனையும் நெய்யையும் தடவுதல் 7. பந்தனம் (கட்டுப் போடுதல்) என்பனவாம்.

ில் பயன்படுத்தப்படும் கருவிகளாவன :-

1. சலாகா (PROBE) 2. ஸந்தம்சம் (PINCHER KNIFE FORCEPS) 3. மண்டலாக்ரம் (CURVED KNIFE 4. நிபீடன கூர்ச்சகம் (NEEDLE FIXED BRUSH) 5. தாளயந்திரம் (SPOON AND SCOOPS) 6. பந்தனம் (BANDAGES).

4. **வேதனம் - வியதனம்**

(ஊசியால் குத்துதல்) NEEDLING AND PUNCUTRING AND TREFINING.

இம்முறைக்கு உரிய நோய்களாவன :-

ஸிரோத்பாதம், ஸிராஹர்ஷம், சுஷ்கநேத்ரபாகம், ஸவ்ரண பாகம், அந்யதோவாதம், பூயாலஸம், வாத (அநில) விபர்யயம், நான்கு வகை அதிமந்தம், நான்கு வகை அபிஷ்யந்தம் ஆகியவை சிரையில் வேதனம் செய்வதால் தணியும்.

இந்நோய்களில் நோயுற்ற சிரையைக் குத்தி பிளவு படுத்துவதால் நோய் தணியும்.

இங்கு நினைவில் கொள்ளத்தக்கது எதுவெனில், ஸுசுருதர் கூறிய முறைகளே பெரும்பாலும் இன்றும் கையாளப்படுகின்றன என்பதேயாம். ஆச்யோதனம் (DROPS), அஞ்சனம் (OINTMENT) போன்ற முறைகள் இன்றும் கையாளப்படுகின்றன. வேதனம் செய்தபின் மீண்டும் மீண்டும் அப்பகுதி வளர்ந்து தடைப்பட்டு நோய் திரும்பாமல் இருக்கும் முறையை ஸுசுருதர் விளக்கி யுள்ளது இன்றைய மருத்துவத்திற்கும் பின்பற்றத் தக்க முறை யாகும்.

அதிமந்த நோயில் வேதனம் செய்த பிறகு (TREFINING) அத்துளை மூடிக் கொள்ளாமலிருக்க பசுவின் மாமிசத்தூளை அத்துளையில் நிரப்ப வேண்டும் என்கிறார் ஸுசுருதர். இது அப்பகுதியில் உள்ள மாமிச இழையங்கள் மீண்டும் வளர்ந்து துளையை மூடாமல் தடுத்து அழுத்தத்தைத் குறைக்கிறது.

சேதனம் செய்தபிறகு அப்பகுதியைத் தைக்க மூன்று வகை யான ஊசிகளை நோயுற்ற பகுதிக்கும் ஏற்றவாறு பயன்படுத்த வேண்டும்.

அவையாவன : 1. விருத்தா (ROUND NEEDLE), 2. வியக்ரா (SIMPLE TRIANGULAR NEEDLE), 3. தநுர்வக்ரா (HALF FULLY CURVED NEEDLE): மெலிந்து திடமாக இருக்கும் நூலைத் தைக்கப் பயன்படுத்த வேண்டும்.

அச்மந்தக-சண-மூர்வா குடுசீபட்டைகளாலான அல்லது பட்டாலான அல்லது விலங்குகளின் நுண்ணிய நரம்புகள், மயிர்கள் முதலியவற்றாலான நூலைப் பயன்படுத்த வேண்டும் என்கிறார் ஸுசுருதர். (ஸு-அத்25-சுலோ20-25). இன்றும் 'கேட்கட்' (பூனை நரம்பு) பயன்படுத்தப்படுவது குறிப்பிடத்தக்கது. பக்ஷ்ம கோபத்தில் குதிரை மயிரால் தைக்க வேண்டும் என தெளிவாகக் கூறியுள்ளார் ஸுசுருதர். (உத்-அத் 16-ஸ்லோ-3-6).

### க்ஷாராக்னி முறை

காரப்பொருள், நெருப்பில் காய்ச்சிய சலாகை முதலியவற்றால் நோயுற்ற பகுதியைச் சுடும் முறையில் சில நோய்களுக்குச் சிகிச்சை அளிக்க வேண்டும் என்கிறார் ஸுசுருதர் (ஸு-அத் 12ல்). இம்முறையில் சிகிச்சை செய்ய தனித் திறமை பெற்றவர்கள் (SPECIALIST) அந்தக்காலத்தில் இருந்தார்களாம். இதை "க்ஷாராக்னி விதி கோவித;"(கார மருந்து: நெருப்பால் சுடுதல் ஆகியவற்றில் தனித்திறமை பெற்றவர்) எனக் குறிப்பிடுகிறார் ஸுசுருதர். 1. SPECIALIST IN USING ACID AND ALELINE TOUCHES. 2. SPECIALIST IN CAUTERISATION என இவர்களைக் கூறலாம்.

சில நோய்களில் அழுத்தத்தைக் (TENSION) குறைக்க 'இரத்த மோக்ஷணம்' ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றுதல், அல்லது அட்டைப்பூச்சியைப் பயன்படுத்திக் கெட்ட இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் முறையை ஸுசுருதர் கூறியுள்ளார். (ஸு - அத் 13).

இன்று அலோபதி மருத்துவத்தில் அட்டைப்பூச்சியைக் கொண்டு அழுத்தம் தணிக்கப்படும் முறை கையாளப்படுகிறது. (ஆங்கில மருத்துவத்தில் அழுத்தத்தைக் குறைக்க வேறு சிறப்பான முறை ஏதும் குறிப்பிடப்படவில்லை என்பது நினைவில் கொள்ளத்தக்கது).

### ஸர்ப்ப விஷம்

கண் நோய்களுக்கு உரிய சிகிச்சையில் ஸர்ப்ப விஷத்தைக் கொண்டு சிகிச்சை செய்யும் முறையை ஸுசுருதர் கூறியுள்ளது குறிப்பிடத்தக்கது. (உத்-அத் 17-ஸ்லோ 35-37.)

நீலிகாகாசம் (CATARACT) நோயைத் தடுக்க ஸர்ப்ப விஷத்தைக் கொண்டு அஞ்சன மருந்தைப் பற்றி (மை) விளக்கி யுள்ளார் ஸுசுருதர். இந்த நோயைத் தடுக்க வேறு எந்த மருத்து வத்திலும் இன்றுவரை எத்தகைய மருந்தும் கூறப்படவில்லை என்பது கவனிக்கத்தக்கது. ஆயுர்வேத மருத்துவ நூலில் காலரா (விசூசிகா) நோயில் நினைவு தவறி உயிர் நீங்கும் நிலையில் உள்ள நோயாளிக்கு ஸர்ப்ப விஷத்தாலான "விஷஸூசீவித்வம்ஸ கரஸம்", "அதீர நிருஸம்ஹரஸம்" எனும் மருந்துகள் குறிப் பிட்டுள்ளன. ஸந்நிபாதத்தால் உடல் குளிர்ந்து நரம்பு மண்டலம் தாறுமாறாகச் செயல்படும்போது ஸர்ப்பவிஷத்தாலான 'ஸூசீவே தரஸம்' எனும் மருந்து பயன்படுத்த வேண்டும் என்பது ஆயுர்வேத்தின் சிறப்பான முறையாகும். திமிரம்-காசம் எனும் கண் நோய்கள் வளராமல் தடுக்க, குருட்டுத்தன்மை தோன்றாமல் நோயாளியைக் காப்பாற்ற ஸர்ப்பவிஷத்தாலான மை மருந்து பயன்படுத்த வேண்டும் என ஸுசுருத ஸம்ஹிதையில் - உத்தரஸ்தானம் அத் 17-சு35-37 கூறப்பட்டுள்ளது.

இரவில் சுற்றும் விலங்குகளின் வசை, சிறப்பாகக் கரு நாகத்தின் வசை (கொழுப்பு) திமிர நோய்களில் மிக்க நலம் தரும் என ஆயுர்வேத நூல்கள் கூறுகின்றன. ('உத்-அத் 17 சு-35-37.)

சிலேத்துமலிங்கநாசம் (CATARACT) நோய் தோன்றாமல் வளராமல் தடுக்கக்கூடிய மருந்து இன்றைய மருத்துவத்தில் இன்று வரை கண்டு கொள்ளப்படவில்லை என்பது நினைவில் கொள்ளத்தக்கது.

### வேறு சில நாடுகளில் கண் மருத்துவம்

சீன நாட்டில் கி.மு. 3679 ஆண்டுகளுக்கு முன் ஹு ஆங்டீம் எனும் மன்னன் தானே காச (CATARACT) நோய்க்கு அறுவைச் சிகிச்சை செய்து வந்ததாக ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அக்காலத்தில் கண் நோய்களைப் பற்றிய 'ஸூயேன்' எனப்படும் மருத்துவ நூல் எழுதப்பட்டதாம்.

கி.பி. 628ல் ஸந்ஸுவோமாய்வோ என்பவர் 81 கண் நோய்களைப் பற்றிய மருத்துவ நூல் எழுதினாராம்.

கி.பி.1644ல் வாங்க்கூபாஸோ என்பவர் சீனமொழியில் 100 கண் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்கியுள்ளாராம்.

கி.மு. 1610-1550க்கு இடையில் எகிப்து நாட்டில் மருத்துவ முறை மற்ற கல்வி முறைகளுடன் கற்பிக்கப்பட்டு வந்தது.

கி.மு. 561-430க்கு இடையில் கிரேக்க (யூனானீ) நாட்டில் ஹிபோகிரிடீஸ் சிறந்த மருத்துவராக விளங்கினார். இவர் வெளிநாடுகளுக்குச் சென்று மருத்துவம் கற்று வந்தாரெனக் கூறப்படுகிறது. இவர் 'போதகீ' எனும் கண்நோய்க்கு தம் நூலில் அறுவைச் சிகிச்சை முறையை விளக்கியுள்ளார்.

ரோம் நாட்டில் ஆரிலஸ் கார்னேலியஸ் கேலஸஸ் என்பவர் சிறந்த மருத்துவராக விளங்கி வந்தார். இவர் எழுதிய மருத்துவ நூல் 'தி மெடிஸினா' என்பது கி.பி.29ல் புகழ் பெற்றிருந்தது. இவரது மருத்துவ நூலில் உள்ள பல பொருள்களுக்கும் ஸுசுருதரின் கூற்றுக்கும் ஒற்றுமை காணப்படுகிறது.

கி.பி. 10வது நூற்றாண்டில் அரபு நாட்டைச் சேர்ந்த 'கலீபா ஹாரூன்' மம்ஸூர் எனும் மன்னனின் ஆணை பெற்று அந்நாட்டு மருத்துவர் "கிதாப்-உல்-பிஹாரிஸ்த்" எனும் மருத்துவ நூலை நம் நாட்டு மருத்துவ நூல்களின் மொழி பெயர்ப்பாக இயற்றினார்.

வில்ஸன் மெரிக் என்ற பேராசிரியர் "சிகிச்சை முறையில் சரக-ஸுசுருத ஸம்ஹிதைகள் சிறந்தவை" எனவும், அராபிய மொழியில் இவை மொழி பெயர்க்கப்படுவதற்கு முன்பே ஈரானீ மொழியில் மொழி பெயர்க்கப்பட்டன' எனவும் கூறியுள்ளார். (JOURNAL OF ASIATIC SOCIETY OLD SERIES-VI P.P 105-115).

ஹிப்ரூ மொழியில் பேன் பேனுப்ஸ் அப்ரியஸ் என்பவர் ஐரோப்பாவில் புகழ் பெற்ற கண் மருத்துவராக விளங்கினார். வர் "பிராக்டிகா ஆக்யூலோரம்" என்னும் நூலை இயற்றினார். லத்தீன் மொழியிலும் மொழி பெயர்க்கப்பட்டது.

பீடர் தி ஸ்பாநியர்ட் என்பவர் பதினோராம் போப் ஆவார். இவர் மூன்று பாகங்களில் கண் மருத்துவத்தைப் பற்றி ஒரு நூல் இயற்றியுள்ளார்.

பிற்காலத்தில் பலர் இம்மொழியில் நூல்கள் இயற்றியுள்ளனர்.

## யூனானி (திப்பி) மருத்துவத்தில் கண் நோய்கள்

பெரும்பாலும் யூனானி மருத்துவ முறையில் உள்ள கண் சிகிச்சை முறைகள் ஆயுர்வேத முறையைப் போலவே இருக்கின்றன. ஒரு சில வேற்றுமைகளும் காணப்படுகின்றன. இங்கு சில நோய்களுக்கு யூனானி மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள சிகிச்சை முறைகள் குறிப்பிடப்படுகின்றன.

**1. அமராஜுல் அஜபான் (இமையைச் சார்ந்த நோய்)**

மேல்பூச்சு மருந்து கொண்டு சிகிச்சை செய்து இமையில் தோன்றிய வீக்கத்தைத் (அபிஷ்யந்தத்தை) தணிக்க வேண்டும். அப்படியும் நீங்காவிடில் மூக்கினுள் உள்ள சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

சில நேரங்களில் இமைகளில் உள்ள நரம்புகளிலும், மாமிசப் பேசிகளிலும் அடிபடலாம். அதனால் தோன்றும் வீக்கத்திற்கு வேறு முறையில் சிகிச்சை செய்ய வேண்டும்.

**2. சதரா (கண்ணிமைகள் சுருங்குதல்)**

இந்நோயில் இமைகளைச் சீராக மூட முடியாமற் போவதால் கண்களில் தூசி முதலியன சேர்ந்து வேறு துன்பங்களைத் தோற்றுவிக்கும். இந்நோய் பிறவிக் கோளாறாக ஏற்படலாம். அல்லது கீழே குறிப்பிடப்படும் காரணங்களால் தோன்றலாம்.

(1) பக்ஷ்மசாதம் அல்லது பரபால் எனும் நோயால் இமையில் கோளாறு தோன்றுதல் .

(2) இமைக்குள் மாமிசப்பகுதி அளவுக்கு மீறி வளர்ந்து விடுதல்

(3) வேறு கண் நோய்க்கு அறுவைச் சிகிச்சை செய்யும் அளவுக்கு அதிகமாக இமைப்பகுதி வெட்டப்படுதல்.

(4) 'ஸவல்'-சிரையைக் கீறும் போது இமைப்பகுதி சிதைவுறுதல்

(5) தலையில் அடிபடுதலால் கண்ணிமை நரம்பு கோளாறுக்கு உட்படுதல்

(6) நேத்ரோத்தாபனி பேசியில் கோளாறு தோன்றி அது சுருங்குவதால் இமையும் சுருங்கிப் போதல் (1) மாமிச வளர்ச்சியால் இந்நோய் தோன்றினால் அப்பகுதியை அறுவைச் சிகிச்சையால் நீக்கவும் (2) வேறு அறுவைச் சிகிச்சையாலானால் அம்முறையை மீண்டும் சரிப்படுத்திச் செய்க. நரம்பு சுருங்குவதால் தோன்றிய நோயானால் எண்ணெய்ப் பசை உண்டாக்கி நரம்பு சீராக வளரச் செய்க. (3) சயர் முன் கலப், சயர் ஜாஇத் (பரபால்-பக்ஷகோபம்): கண்ணிமைகளில் உள்ள உரோமங்களைச் சார்ந்த நோய்கள் இவை. இவற்றில் சயர் முன் கலப் என்பதில் உரோமங்கள்

உள்நோக்கி முடங்கி வளர்ந்து வெண்விழிகளைத் தொடுதலால் அங்கு உராய்வு, கண்ணிமைகளின் முனையில் உள்நோக்கி உரோமங்கள் வளர்தல் எனுமிவை 'சயர் ஜாஇத்' எனப்படும்.

இதற்கு மருந்துகளால் முதலில் சிகிச்சை செய்ய வேண்டும். வாந்தி எடுக்கச் செய்து தோஷத்தை வெளிப்படுத்த வேண்டும். மருந்துக் கஷாயத்தால் கண்டூஷம் (கொப்பளித்தல்) எனும் முறையைப் பயன்படுத்தத் தலைப்பகுதி (மூ... தூய்மைப்படுத்த வேண்டும். நோயாளியின் உடலியற்கை வெப்பமானால் கடுக்காய் முரப்பா, குளுமைத்தன்மை கொண்டதானால் மஸ்தகி மற்றும் இலவங்கம் ஆகியவற்றை மென்று தின்னச் செய்க. தேவையற்ற உரோமங்களை மற்ற உரோமங்களுடன் வேறுபடுத்துக. சூடாக்கிய சலாகையால் இமைப்பகுதி முனையைச் சுடுக.

### 4: வயாஜ் உல் அஹ்தாப் (இமைகள் வெளுத்தல்)

இதற்கு உடலைத் தூய்மைப்படுத்தித் தோஷங்களை நீக்கவும். ஆலிவ் எண்ணெய், ஆட்டின் கொழுப்பு அல்லது கரடியின் கொழுப்புடன் கலந்து மேல் பூச்சாகப் பயன்படுத்துக. முத்துச்சிப்பியை எரித்துச் சாம்பலுடன் கரடியின் கொழுப்பு கலந்து மேல் பூச்சாகப் பயன்படுத்துக.

### 5. கமலுல் அஜபான் (இமைகளில் கிருமிகள்)

கண்ணிமைகளைக் கழுவாமல் அழுக்கு சேர வைத்துக் கொண்டால் அதில் மூன்று வகையான கிருமிகள் தோன்றும்.

1. ஸீவோ - மிக நுண்ணிய வெள்ளைக் கிருமிகள் கண் இமைகளின் உரோமங்களில் தங்கியிருக்கும். 2) கம்காம் அல்லது கமல் எனப்படும் இவை கோதுமை அல்லது மண் நிறத்தில் சற்று பெரியவையாகக் காணப்படுபவையாகும். 3) கிர்தா - சற்று பெரியவையாக நீண்ட கால்கள் கொண்டவை.

கிருமிகளை நீக்கி இமைகளைத் தூய்மைப்படுத்தி உப்புக் கரைசலால் கழுவ வேண்டும். படிகாரம், திராட்சை இவற்றை அரைத்து மேல் பூச்சாகப் பயன்படுத்த வேண்டும். பாதரஸத்தாலான கஜ்ஜலி (கஜ்ஜலி - மை) எனும் மருந்தை மேல்பூச்சாகப் பயன்படுத்த வேண்டும்.

### 6. கரப் அல்லது நாஸூர் (நாட விரணம்)

இது கண்களுக்குள் கனீனிகைப் பகுதியில் கண்ணீர் சுரப்பிகளில் தோன்றும் விரணமாகும். உடலைத் தூய்மைப்படுத்தி சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். இலேசாகி எளிதில் செரிமானமாகக்கூடிய வலிமை தரும் உணவு தர வேண்டும்.

அறுவை மூலம் வெளியே கத்தரித்து நீக்குதல், சுடுதல் எனும் இரண்டு [illegible]
வேண்டும்.

### 7. குத்தா (கடைக்கண் பகுதியில் மாமிசம் வளர்தல்)

கண்ணின் கனீனிகை அல்லது கடைக்கண் பகுதியில் மாமிசம் வளர்ந்து கண்களில் அழுக்கு (பீளை) சேரும். கண்ணீர் பெருகும். முற்றிய நிலையில் வீக்கமும், பார்வை இழத்தலும் ஏற்படும். உடலைத் தூய்மைப்படுத்தி மேல் பூச்சு மருந்தால் நோயைத் தணிக்க வேண்டும். பருத்துக் காணப்பட்டால் அறுவைச் சிகிச்சையால் வெட்டி எடுக்க வேண்டும். பிறகு மேல் பூச்சு மருந்தைப் பயன்படுத்த வேண்டும். எரிச்சல் தோன்றினால் முட்டையின் வெள்ளைக்கரு, பன்னீர் கலந்து பூச வேண்டும்.

மைரா அரபீ, ராங்காஸபேதா, ஐங்கார் என்பவற்றை ஒவ்வொன்றும் ஏழு உளுந்து அளவு எடுத்துக் கொண்டு துளசி இலைச்சாறு விட்டு அரைத்து, வத்தியாகச் செய்த பிறகு அதை மை போல் இடப் பயன்படுத்த வேண்டும்.

இவ்வாறு யூனானி மருத்துவத்தில் பல கண் நோய்களுக்கு மருத்துவம் கூறப்பட்டுள்ளது. ஆயுர்வேதத்தில் கூறப்பட்டுள்ள படி உடலைத் தூய்மைப்படுத்துதல், மேல்பூச்சு, மையிடுதல், சிரையைக் கீறுதல், ஆச்யோதனம், தூள் மருந்தைப் பயன்படுத்துதல், அறுவைச் சிகிச்சையைப் பயன்படுத்துதல் போன்றவற்றையே மற்ற மருத்துவ முறைகள் பின்பற்றுகின்றன எனவும், வேறு மருத்துவ முறைகளைக் கற்றுணர்வதால் நோய்களைப் பற்றியும், மருத்துவ முறைகளைப் பற்றியும் பல நுட்பமான பொருள்களை அறிந்து மருத்துவத்தைச் சிறப்பாகச் செய்ய இயலும் என்பதையும் உணர்த்தவே இவை இங்கு குறிப்பிடப்பட்டுள்ளன.

# VII. காதின் அமைப்பு

ஸுசுருதஸம்ஹிதையில் உத்தரதந்திரத்தில் கண்நோய்களுக்குப் பிறகு காதைச் சேர்ந்த நோய்கள் இருபதாம் அத்தியாயத்திலும், அந்நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் இருபத்தொன்றாம் அத்தியாயத்திலும் விளக்கப்பட்டுள்ளன.

புலன்களால் நுகரப்படும் சுவை முதலான பொருட்கள், கண்களுக்குப் புலனாகாவென்றும், நுட்பமானவையென்றும், கண், காது, மூக்கு போன்ற புலன்களாகத் தோன்றும் உறுப்புகள் [illegible] என்றும் ஆயுர்வேதம் கூறுகிறது. அதாவது மின்சக்தி கண்களுக்குப் புலனாகாது. ஆனால் உலோகக் கம்பியில் மின்சக்தி பரவியபோது அதை நாம் உணர்கிறோம் அல்லவா! அதைப்போலவே அறிவுப்புலன் களும். ஆகவே ஒலியைக் கேட்கும் காது எனும் புலன் ஒன்றே யாயினும், அதைச் சார்ந்த உறுப்புகள் இரண்டாக உள்ளன என அறிக.

கண்களின் அமைப்பைப் பற்றி விளக்கியது போல ஸுசுருதர் காதின் அமைப்பை விளக்கவில்லை. அலோபதி மருத்துவத்தில் இப்புலன்களைப் பற்றிய உடற்கூறு மிக விளக்கமாகக் கூறப்பட்டுள்ளது. அதன் சுருக்கத்தை இங்கு காண்போம்.

காதை (1) புறக்காது (EXTERNAL EAR), (2) நடுக்காது (MIDDLE EAR), (3) உள்காது (LABYRINTH OR INTERNAL EAR) என மூன்று பகுதிகளாகப் பிரிக்கலாம்.

தொன்னைபோல காணப்படும் புறப்பகுதி புறக்காதாகும்.இது தருணாஸ்தி எனப்படும் கார்டிலேஜ் என்பதாலானது. தொன்னை போன்ற கர்ணசஷ்குலி பகுதி 'பின்னா' (PINNA) என ஆங்கிலத்தில் கூறப்படும். புறக்காதின் முக்கோண வடிவமுள்ள பகுதி 'கர்ணபுத்ரிகா' எனவும், ஆங்கிலத்தில் 'டிரேகஸ்' (TRAGUS) மற்றும் ஆன்டி டிரேகஸ் (ANTI TRAGUS) எனவும் கூறப்படும். கர்ணபாளி எனும் அடிப்பகுதி (காதணி அணியும் பகுதி) (LOBULE) கொழுப்பால் ஆனது.

புறக்காதின் துளை போன்ற பகுதி 'கர்ணகுஹை' (EXTERNAL AUDITORY MEATUS) எனப்படும். இது 24 மி.மீ.நீளமுள்ளது. இதன் வெளிப்பகுதி 1/3 பங்கு குருத்தெலும்பு (கார்டிலேஜ்) என்பதாலும், உள் பகுதி 2/3 பங்கு எலும் பாலும் ஆனது. குருத்தெலும்பாலான பகுதியில் அழுக்கு நீர்ச்சுரப்பிகளும், எண்ணெய் சுரப்பிகளும் உள்ளன. புறக்காதின்

உள்பக்கம் கர்ணபடஹம் (செவிப்பறை) என்பதுடன் முடியும். ஆங்கிலத்தில் இப்பறை டிம்பேனிக் மெம்ப்ரேன் (TYMPANIC MEMBRANE) என்று கூறப்படும். இப்பறையின் உட்பகுதியி லிருந்து நடுக்காது துவங்குகிறது. ஒலி அலைகள் காதுக்குள் புகுந்து இப்பறையில் படும்போது நமக்கு உணர்வு ஏற்படுகிறது.

செவிப்பறை சாம்பல் நிறம் கொண்ட சவ்வு ஆகும். இது வெளிப்பக்கத்தில் குவிந்தும், உட்பக்கத்தில் குழிவாகவும் காணப் படும். இதை விசைப்பகுதி (PARS TENSA) எனவும், தளர்ந்த பகுதி (PARS FLACCIDA) எனவும் இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

நடுக்காது என்பதான குகை போன்ற பகுதி வெளிப் பக்கத்தில் அகன்றும், உள்பக்கத்தில் குறுகியும் இருக்கும். நடுச் செவிச்சந்தில் நடுச்செவி அறை, காது, மூக்கு தொண்டைக் குழாய் (EUSTACHIAN TUBE), மேல் சன்னல் போன்ற பகுதி (ADITUS), காது எலும்பு, காற்றறை (MASTOID ANTRUM), காது காற்றறை யின் வாயுக்கலங்கள் (ஸெல்கள்) (MASTOID AIRCELLS) ஆகியவை அடங்கும்.

காது மூக்குத் தொண்டைக் குழாய் என்பது மேல் தொண்டையையும், நடுச்செவியையும் இணைப்பதாகும். இதன் தொண்டை முனைப்பகுதி பொதுவாக மூடியிருக்கும். உணவை விழுங்கும் போதும், கொட்டாவி விடும் போதும் இப்பகுதி திறக்கும்.

நடுச்செவி அறையின் உட்பக்கச் சுவரில் நத்தை எலும்பின் இறுதி முனை இணைந்துள்ளது. இது COCHLEAR PROMON-TORY எனப்படுவதாகும். இதன் , முன்பு முகநரம்பு (FACIAL NERVE) உள்ளது. முட்டை வடிவத்தில் உள்ள சன்னல் போன்ற பகுதி (OVAL WINDOW) நத்தை எலும்பின் இறுதி முனைக்கு மேலும், வட்டவடிவமான சன்னல் போன்ற பகுதி (ROUND WINDOW) இறுதி முனைக்கு கீழ்ப்பக்கத்திலும் உள்ளன. முட்டை வடிவச் சன்னல் அங்கவடி எலும்பின் கால் தட்டினாலும், வட்ட வடிவச் சன்னல் இரண்டாவது செவிப்பறையினாலும் மூடப் பட்டிருக்கும்.

முன்சுவரில் கீழ்ப்பகுதியில் காது, மூக்கு, தொண்டைத் துளைகளும் மற்றும் செவிமடல், விசைதசை, கால்வாயும் (CANAL FOR TENSOR TYMPANI MUSCLE) உள்ளன.

பின் சுவரில் காற்றறை மேல் சன்னலும், காது காற்றறை எலும்பு அறையின் திறவும் உள்ளன. இதன் கீழ்ப்பக்கத்தில் கூம்பு முனை (PYRAMID) உள்ளது.

மேற்சுவர் TEGMEN TYMPANI எனப்படும் எலும்பாலானது. இது நடுச்செவியையும், மத்திய கபாலக் குழியையும் (MIDDLE CRANIAL FOSSA) பிரிக்கிறது.

நடுச் செவியின் உள்உறுப்புகள், சுத்தி எலும்பு (MALLEUS), பட்டை எலும்பு (INCUS), அங்கவடி எலும்பு (STAPES) என்பன வாகும்.

நடுச் செவியில் செவிப்பறை இழுப்புத்தசை (TENSOR TYMPANI), அங்கவடி எலும்பு இணைப்புத்தசை (STAPEDIUS TENDON), செவி நரம்பு, முடிச்சு (TYMPANIC PLEXUS), செவிப் பறை நாண் நரம்பு (CHORDA TYMPANI) சிரை, தமனி ஆகியவை உள்ளன.

உள்காதின் அமைப்பு மிகவும் சிக்கலானது. உண்மையில் இப்பகுதிதான் காது எனும் புலனாகும். மூளைப் பகுதியின் எட்டாம் நரம்பு (AUDITORY NERVE) இதில் பரவி உள்ளது.

உள்காதை எலும்பாலான பகுதி, சவ்வாலான பகுதி என இரு பகுதிகளாகப் பிரிக்கலாம்.

என்பாலான பகுதியில் உட்செவி அறை (VESTIBULE), நத்தை (சம்பூகாஸ்தி) எலும்பு (COCHLEA), அரை வட்டக் குழாய்கள் (SEMICIRCULAR CANALS) என்பன அடங்கும்.

சவ்வாலான உட்செவி ENDOLYMPH எனப்படும் நிண நீரால் நிரப்பப்பட்டுள்ளது. இதன் பகுதிகளாவன: உள்காதுப் பை (SACCULE), உள்காதுப் பெட்டகம் (UTRICLE), அரைவட்டக் குழாய்கள் (MEMBRANOUS SEMICIRCULAR CANAL) ஆகியவையாகும். இக்குழாய்கள் சவ்வாலானவை. என்பாலான உள்காதுப் பகுதியில் ஒரு வகை திரவம் (PERILYMPH) இருக்கும். இதுவும் நிணநீரே 'பாஹ்ய லஸீகா' எனப்படுவதாகும்.

ஒலி காதுக்குள் புகுந்து இந்தத் திரவத்தில் அலைகளைத் தோற்றுவிக்கும். அந்த அலைகள் உள்பகுதியில் உள்ள நிணநீரில் அலைகளைத் தோற்றுவிக்கும். அவை அந்த நிணநீரில் பரவி யுள்ள சுருதி நாடி எனப்படும் மூளையின் எட்டாவது நரம்பின் நுட்பமான பகுதிகளின் மூலம் ஒலியை மூளைக்கு அனுப்பும். அப்பொழுது நாம் உணர்வைப் பெறுகிறோம்.

## காது ஒலியைக் கேட்கும் வகை

புறக்காது குழாய் வழியாக ஒலிகள் காதுக்குள் பரவிச் செவிப்பறையில் அதிர்வை உண்டாக்குகின்றன. இந்த அதிர்வு நடுக்காது எலும்புகளால் உள்காதுக்குக் கடத்தப்படுகின்றன. உட்காதிலிருந்து மூளையின் ஒலியை உணரும் எட்டாவது நரம்பின் வழியாக மூளைக்குப் போய்ச் சேரும். அப்பொழுது நாம் ஒலியை உணர்கின்றோம்.

காது ஒலியைக் கேட்பதற்கு மட்டும் அல்லாது நம் உடலை எந்நிலையிலும் சம நிலையில் இருககுப்படியும் செய்கிறது. இது ஆங்கிலத்தில் EQUILIBRIUM எனப்படும். இதனால் மயக்க மில்லாதிருக்கும் நிலையைப் பெறுகிறோம். இப்பகுதியில் கோளாறு தோன்றினால் நாம் மயக்கம் அடைகிறோம். (ஸுசுருதஸம்ஹிதை மொழிபெயர்ப்பு முதற்பகுதி பக்கம் - ccxviii - ccxxviii)

## காது நோய்கள்

ஸுசுருதஸம்ஹிதையின் கூறப்பட்டுள்ள காது நோய்களாவன:- கர்ணசூலை (EARACHE), கர்ணநாதம் (TINNITUS), கர்ணபாதிர்யம் (DEAFNESS), கர்ணக்ஷ்வேடம் (LABYRINTHITIS), கர்ணஸ்ராவம் (OTORRHOEA), கர்ணகண்டு (ITCHING SENSATION IN THE EAR), கர்ணவர்ச்சம் (WAX IN THE EAR), கிருமிகர்ணம் (WORMS IN THE EAR), கர்ணபிரதிநாஹம் (OBSTRUCTION OF EUSTACHIAN TUBE). இரண்டு வகை கர்ணவித்ரதி (FURNCULOSIS IN THE EAR OR HERPES IN EXT. EAR), கர்ணபாகம் (SUPPURATION IN THE EAR), பூதிகர்ணம் (FOETID DISCHARGE FROM THE EAR), நான்கு வகை கர்ணார்சம் (POLYPUS IN THE EAR), ஏழு வகை கர்ணார்புதம் (HARD TUMOUR IN AUDITORY MEATUS), நான்கு வகை கர்ணசோபம் (INFLAMMATORY CONDITION OF THE EAR) என்பனவாகும். (ஸு - உத் - அத் 20 - ஸ்லோ 3-5)

வாக்படம் முதலிய ஆயுர்வேத நூல்களில் காது நோய்களின் எண்ணிக்கை வேறு வகையாகக் கூறப்பட்டுள்ளது.

பொதுவாகக் காது நோய்களைக் காதின் மூன்று வகைகளைச் சார்ந்து மூன்று வகையாகப் பிரிக்கலாம்.

### 1. புறக்காதைச் சார்ந்த நோய்கள்

(i) பிறவியிலேயே தோன்றுபவை (CONGENITAL ABNORMALITIES) : காதுமடல் இன்மை, பாளி இன்மை, காதுத்துளை மூடியிருத்தல், காதுமடலில் வேறு சில கார்டிலேஜ்கள், கொழுப்பு

முதலியவை சேர்ந்து மற்றொரு காது தோன்றுதல் என்பனவாம். இவ்வாறு மற்றொரு காது தோன்றுதல் என்பது கர்ணபிப்பலி, கூசிகர்ணகம் எனப்படும் என்கிறார் வாக்படர்.

(ii) கர்ணரக்தஜகிரந்தி (HEAMATOMA AURIS): இந்நோய் அடிபடுதலால் தோன்றுவதாகும். மற்போர் முதலியவற்றில் ஈடுபடுவோருக்குக் காதில் அடிபடுவதால் நோய்ப்பகுதி சிவந்து, வீக்கத்துடன் காணப்படும். இதில் வேதனம் (குத்துதல்) முதலான அறுவைச் சிகிச்சையால் தோஷத்தைப் போக்க வேண்டும் என்றும், அவ்வாறு சிகிச்சை செய்யாவிடில் பேசி சுருங்குவதால் இப்பகுதியில் விகாரம் (DEFORMITY) தோன்றும் எனவும் வாக்படர் கூறுகிறார். அவருடைய நூலில் இது பரிபோடகம் எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இதைப் போலவே உன்மதம், துக்க வர்த்தனம் எனும் நோய்களும் தோன்றும்.

(iii) விசர்ச்சிகா (ECZEMA), ரக்ஸா எனும் நோய்கள்: இவை காது மடல், மற்றும் பாளியில் தோன்றக் கூடியவையாகும். இவற்றிற்கு நோயைத் தணிக்கும் மேல் பூச்சு மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும்.

(iv) பாஹ்யாபிகாதகர்ண ரோகம் (TRAUMATIC AFFECTION OF THE EAR) : ஸுசுருதர் இவ்வாறு கூறப்பட்ட நோய்களிலும் சலாகாயந்திரத்தைப் பயன்படுத்த வேண்டிய தேவை இன்மையாலும், கர்ணதர்சக (AUROSCOPE) யந்திரத்தைப் பயன்படுத்த வேண்டிய தேவையின்மையாலும் இவற்றைச் சல்யதந்திரத்தைச் சார்ந்த நோய்களாகக் கணக்கிட்டுள்ளார். ஆகவே இதற்காகக் கர்ணவேதனவிதி எனும் ஒரு தனி அத்தியாயத்தை எழுதி கர்ணபாளியில் தோன்றக் கூடிய பல நோய்களுக்குச் சிகிச்சையை விளக்கியுள்ளார். மற்றும் புறக்காதைச் சேர்ந்த ஸந்தானகர்மாவுக்குத் (PLASTIC SURGERY) தக்க நோய்களைத் தனியாகக் கூறியுள்ளார். (ஸு-ஸூ-அத் 16 - ஸ்லோ 10-15).

வாக்படர் முதலியவர்கள் அத்தகைய கர்ணபிப்பலி, விதாரிகா, பாலிசோஷம், தந்திரிகா, பரிபோடம், உத்பாதம், உன்மதம், கல்லிரம், துக்கவர்தனம், லோஹிகா (பரிலேஹி) எனும் நோய்களைச் சாலாக்ய தந்திரத்தில் கூறியுள்ளார். ஆனால் இவை சல்யதந்திர முறைப்படி சிகிச்சை செய்யத் தக்க நோய்களாகும்.

## 2. நடுக்காதைச் சார்ந்த நோய்கள்

(i) கர்ண சல்யம் (FOREIGN BODY) - கோதுமை, கடலை போன்ற பொருள்கள் காதுக்குள் சென்றுவிடுதல் (ii) காதுக்குள் அழுக்கு சேருதல் (CERUMEN) (iii) காதில் கொப்புளம் தோன்றுதல் (FURUNCULOSIS) (iv) வீக்கம் (ACUTE OR CHRONIC INFLAMATION OF THE MIDDLE EAR) ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

## 3. உள்காதைச் சார்ந்த நோய்கள்

(i) வீக்கத்தால் தோன்றும் கோளாறுகள் (LABYRINTHITIS), (ii) பாகத்தலான விகாரங்கள், (iii) இந்திரிய விகாரம், (iv) செவிட்டுத்தன்மை (OTOSCLEROSIS), (v) பிரமம் (VERTIGO) முதலியனவாகும்.

இந்நோய்கள் தோன்றக் காரணங்கள், முற்குறிகள், இலக்கணங்கள், சிகிச்சை முறைகள் ஆகியவற்றை ஸுச்ருதஸம்ஹிதை-உத்தரஸ்தானத்தில் 20,21 அத்தியாயங்களில் காணலாம்.

அலோபதி மருத்துவத்துறையில் மற்ற நோய்களைப் போலவே காது நோய்களுக்கும் நோயின் தன்மையைப் பரிசோதனை செய்யவும், சிகிச்சை புரியவும் புது இயந்திரக் கருவிகள் பல ஏற்பட்டுள்ளன. பெரும்பாலும் ஆயுர்வேதத்தில் கூறப்பட்டுள்ள நோய்களுக்கு சிகிச்சை முறைகள் வேறு வகையில் அலோபதியில் விளக்கப்பட்டுள்ளன. அவற்றை இங்கு கூறுவதால் நூல் விரிவு பெறும் என்பதால் முக்கியமான சில வகை நோய்களுக்கு உரிய சிகிச்சைகள் மட்டும் இங்கு விளக்கப்படுகின்றன.

## காது நோய்களில் சோதனை முறைகள்

காது கேட்கும் அளவைக் கணக்கிட டியூனிங்போர்க் டெஸ்ட் (TUNING FORK TEST) செய்யப்படுகிறது. 256 $H_Z$, 512 $H_Z$, 1024 $H_Z$ அளவுள்ள இசைக் கருவிகள் இச்சோதனைக்குப் பெரிதும் பயன்படுத்தப்படுகின்றன.

1. ரினி சோதனை (RINNE TEST) 2) வெபர் சோதனை (WEBER TEST) 3) எலும்பின் முழு ஒலிக் கடத்தல் சோதனை (ABSOLUTE BONE CONDUCTION) என்னும் முறைகளில் கேள்வி அளவு கணக்கிடப்படுகிறது.

## 1. ரினி சோதனை (RINNE TEST)

இந்தக் கருவியை எலும்பு நன்கு வெளியே தெரியும் பகுதியில் அல்லது இரப்பர் தட்டில் தட்டிய பிறகு, அதில்

அதிர்வு உண்டாக்கப்படும். பிறகு இக்கருவியைக் காதுக்கு ஒரு அங்குலத் தொலைவில் காட்டப்படும். காற்றில் ஒலி கடத்தப் படுதல், எலும்பில் கடத்தப்படும் ஒலியுடன் ஒப்பிடப்படுகிறது. எலும்பில் கடத்தப்படும் ஒலியை உணர, இக்கருவி காது காற்றறை எலும்பின் மீது வைக்கப்படும்.

மெஸ்டைட் புரோஸெஸ் மீது வைக்கப்படும் போது ஒலி கேட்காவிட்டால், ரினி பரீட்சை (+) எனப்படும். ஒலி மெஸ்டைட் மீது வைத்தபோது கேட்கப்பட்டால் ரினி (-) எனப்படும். இந்நிலை ஸம்வஹனஜன்யமான செவிட்டுத்தன்மை (CONDUCTIVE DEAFNESS) எனப்படும்.

## 2. வெபர் சோதனை (WEBER TEST)

இம்முறையில் இசைக்கவை அசைக்கப்பட்டு உச்சித்தலையில் (மத்திய ரேகை) நடுக்கோட்டின் மீது வைக்கப்படும். நோயாளி யின் காதிரண்டும் ஒழுங்காக ஒரே முறையில் கேட்டுக் கொண்டிருந்தாலும் சரிசமமாக இரு காதுகளிலும் கேட்கும். ஒரு காதில் மட்டும் கேட்கும் பொழுது அந்தக் காது செவிடாகி இருந்தால், அது கனைத்தல் குறைச் செவிடு என்றும், அந்தக்காது நல்ல காதாக இருந்தால் அடுத்த காது செவிடு என்றும் அறிந்து கொள்ள வேண்டும்.

## 3. உறுதியாக்கப்பட்ட எலும்பில் ஒலிக்கடத்தல் சோதனை

தூண்டப்பட்ட இசைக்கவையை நோயாளியின் காதின் பின்பக்கம் மஸ்டாயிட் (காது காற்றறை எலும்பின்) மேல் பொருத்திக் கேட்க முடிகிறதா என நோயாளியைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டும். துல்லியமாகக் கேட்பதற்காக காதின் துளையை அடைத்து விட வேண்டும். எலும்பின் மேல் செலுத்தப்பட்ட ஒலி ஓர் உறுதியளிக்கப்பட்ட எலும்பில் ஒலிபடு தல் ஆகும். இது ABSOLUTE BONE CONDUCTION எனப்படும்.

மருத்துவர் தம் காதின் காற்றறை எலும்பின் மீது இசைக் கவையை வைத்துக் கேட்கும் தன்மையை ஒப்பிட்டுப் பார்த்தல் வேண்டும்.

## 4. கேட்டலை, (கேள்வி உணர்வை) அளக்கும் கருவி (AUDIOMETER)

இது மின் சக்தியால் இயங்கும் ஒரு வகைக் கருவி. இது நான்கு வகைப்படும் :

1. தூயகுரல் சார்ந்த கருவி (PURE-TONE AUDIOMETER)
2. பேச்சு சம்பந்தமுள்ள கருவி (SPEECH AUDIOMETER)

3. பேக்ஸி (BEKESY) சம்பந்தமுள்ள கருவி

4. இம்பீடென்ஸ் கருவி

இந்த இயந்திரம் மனிதனின் (காது) கேட்டல் தன்மையை வரைபடம் (CHART) மூலம் தெரிவிக்கிறது. அதாவது காது கேட்கும் தன்மையை ஒரு பதிவாக (RECORD) மாற்றித் தருகிறது.

**5. ஹார்ட்மேன்ஸ் கார்டனர் - பிரௌவின் டியூனிங் போர்க்**

(HARTMANN'S GARDINER BROWINE TUNING FORK)

இந்தக் கருவி செவிட்டுத் தன்மையின் வகைகளை (அளவை) கண்டு கொள்ளப் பயன்படும்.

**6. AURAL SYRINGE OF ABERCNETHY**

இது காதைக் கழுவி, காதுக்குள் உள்ள அழுக்கை வெளியேற்றப் பயன்படும் பீச்சாங்குழல் போன்ற கருவியாகும்.

**7. ஸீகல்ஸ் நியுமேடிக் ஸ்பெகுலம்**

(SIEGLE'S PNEUMATIC SPECULUM)

நடுக்காதின் வீக்கத்தில் மருந்தைச் செலுத்தவும், காதுப் பறை அசைவதைக் காணவும், காதின் பறையில் தோன்றும் துளையை ஆராயவும், 'பிஸ்டுலா' எனும் நோயை ஆராய்வதிலும் பயன்படும்.

**8. கிரேமர், யூஸ்டேசியன் கெதடர்**

(KRAMER'S OR PURUE'S EUSTACHIAN CATHETER)

நடுக்காதில் மருந்து அல்லது காற்றைச் செலுத்தப் பயன்படும். யூஸ்டேசியன் குழாயில் தடங்கல் ஏற்பட்டால் அதை நீக்கப் பயன்படும். அந்தக் குழாயில் ஏற்பட்டுள்ள தடங்கலைக் கண்டுகொள்ளப் பயன்படும்.

**9. ஜென்கின்ஸ் - மஸ்டாயிட் கூஜ்**

(JENKIN'S MASTOID GOUGE)

_ ில் ச்வார்ட்ஸ் (SCHWARTZ) கூஜ், மேயர் (MAYER) கூஜ் போன்ற பல வகைகள் உள்ளன. MASTOIDECTOMY எனும் அறுவைச் சிகிச்சையில் இது பயன்படுவதாகும்.

### 10. மேக் - இவேன்ஸ்செல் ஸீகர்
### (MAC EWEN'S CELL SEEKER OR ADITUS SEEKER WITH SCOOP MASTOIDECTOMY)

அறுவைச் சிகிச்சையில் பயன்படுத்தப்படும் மற்றொரு கருவியாகும் இது.

### 11. ஜான்சென் மற்றும் வெஸ்லெண்டர் மெஸ்டாயிட் ரிட்ரேக்டர்
### (JANSEN'S AND WERSLANDER'S SELF-RETAINING HAEMASTATIC MASTOID RETRACTOR)

CORTICAL AND RADICAL MASTOIDECTOMY எனும் அறுவைச் சிகிச்சையில் பயன்படுத்தப்படும். சுரயந்திரத்தில் (LARYNGO - FISSURE) அறுவையிலும், தைராயிட் சுரப்பியைச் சார்ந்த அறுவையிலும் (THYROIDECTOMY) இது பயன் படுத்தப்படும்.

### 12. ஹார்ட்மேன் இடுக்கி
### (HARTMANN'S FORCEPS OR AURAL DRESSING FORCEPS)

காதை சீர்படுத்திக் கட்டுவதில் இது பயன்படுத்தப்படும்.

### 13. ஸ்டேக்ஸ் - கைட்
### (STAECKES GUIDE)

காதைச் சார்ந்த அறுவைச் சிகிச்சையில் இது முகநரம்பைக் காக்கப் பயன்படும். காதின் பரிசோதனையிலும் இது பயன்படும்.

### 14. பாலென்ஸ் காது ஸ்நேர்
### (BALLANCE'S AURAL SNARE)

இது காது அறுவைச் சிகிச்சையில் பயன்படும்.

### 15. லேம்பர்ட் காது ஸ்பெகுலம்
### (LEMPERTS ENDAURAL SPECULUM)

இது MASTOIDECTOMY எனும் காது அறுவையில் பயன்படுத்தப்படும்.

இவ்வாறு இன்று அலோபதி முறையில் சிகிச்சைக்குப் பல கருவிகள் பயன்படுத்தப்படுகின்றன.

# VIII. மூக்கின் அமைப்பு

மூக்கின் அமைப்பு (ANATOMY OF THE NOSE) : மூக்கின் உடற்கூறில் புறமூக்கு (பாஹ்யநாஸா EXTERNAL NOSE, மூக்குக்குகை (நாஸாகுஹா - NASAL CAVITY), மூக்கின் தொண்டைப் பகுதி (நாஸாகளபிரதேசம் - NASO - PHARYNX) என்ற பகுதிகள் உள்ளன.

புற (வெளி) மூக்கு கூம்பு போன்ற தோற்றம் கொண்டதாகும். இதன் அடிப்பகுதி மேல் நோக்கியும், அடித்தளம் (BASE) அடிப்பகுதியிலும் உள்ளன. அடித்தளம் இரு துளைகளைக் கொண்டது. வலமும், இடமுமாக உள்ள இந்தத் துளைகளுக்கு இடையில் மூக்கின் இடைச்சுவர் (SEPTUM) உள்ளது. கூம்பின் திறந்த கோணத்தின் பெயர் 'எபெக்ஸ்' (APEX) ஆகும். மூலத்தையும், எபெக்ஸ் எனும் பகுதியையும் இணைக்கும் எல்லைக்கோடு 'டோர்ஸம்' (DORSUM) எனப்படும். அதன் மேற்பகுதி மூக்கெலும்பைச் சார்ந்திருக்கும். இதற்கு இணைப்புப் பாலம் (BRIDGE) எனப் பெயர். மூக்கின் ஒவ்வொரு பக்கத்திற்குக் கீழே உருண்டை வடிவமான உயர்ந்து எழும்பிய பகுதி உண்டு. இதன் எல்லை எலாநஸி (ALANASI) ஆகும். எபெக்ஸ் என்பதன் தடித்த தோலும், உள்ளிருக்கும் திசுவும் திடமாகப் பிணைக்கப் பட்டிருக்கும். அதில் ஸிபேஸியஸ் (SEBACEOUS) எனப்படும் சுரப்பிகள் பல இருக்கும்.

புறமூக்கு, என்பு மற்றும் குருத்தென்பால் ஆனது. மேற்பகுதியில் உள்ள என்புப் பகுதிகள் இரு எலும்புகளாலானது. மூக்கென்பு ஒவ்வொரு பக்கத்திலும் ஊர்த்வஹனு அஸ்தியின் 'ப்ரண்டல் பிராஸெஸ்' (FRONTAL PROCESS) என்பதுடன் இணைந்திருக்கும். மூக்கெலும்பின் மேல் விளிம்பு புரக்க பாலாஸ்தி (FRONTAL BONE) அதாவது கபாலத்தின் முன்பகுதி என்புடன் இணைந்திருக்கும். அடிப்பகுதியில் இது குருத் தெலும்புடன் இணைந்ததாகும். இவ்வாறு மூக்கெலும்பு குருத் தெலும்புடன் இணைந்து மூக்கின் துளைகளை உருவாக்குகிறது.

(1) மூக்கெலும்பு (2) ஊர்த்வஹநு அஸ்தியின் முன்பக்கம் (FRONTAL PROCESS OF MAXILLA) (3) பக்கத்தில் இருக்கும் குருத்தெலும்பு (LATERAL CARTILAGE) (4) நாளாமத்யப்ரா சீரத்தின் (CARTILAGE OF SEPTUM) குருத்தெலும்பு (5) மற்றொரு குருத்தெலும்பு (ACCESSORY CARTILAGE) (6) பிருஹத்தர தருணாஸ்திபங்கம் (GREATER ALAR CARTILAGE) (7) பக்கத்தில் உள்ள 'கிரஸ்' (LATERAL CRUS) (8) ஆந்தர 'கிரஸ்' (MEDIAL

CRUS) ஆகியவை சேர்ந்து வெளிமூக்கு தோற்றம் கொண்டதாகும்.

நாஸாகுகை (NASAL CAVITY) என்பதில் (1) ஊர்த்வஹநு அஸ்தியின் வாயுநாடி (MAXILLARY AIRSINUS) (2) நிம்நதன கங்கா (INFERIOR CONCHA) (3) மத்யகங்கா (MIDDLE CONCHA) (4) எதிமாயிடல் ஸெல்கள் (ETHMOIDAL CELLS) (5) நாஸாமத்ய பிராசீரம் (NASAL SEPTUM) என்பன அடங்கும்.

நாஸாமத்ய பிராசீரம் என்பது என்பு மற்றும் குருத்தென்புகளாலானது. முன்பக்கத்தில் இந்தப் ப்ராசீரம் நான்கு மூலைச் சதுர வடிவ குருத்தென்பாலானது. இதன் பின்பக்கம் எத்மாயிட் (ETHMOID) என்பதன் தட்டு (PLATE) உள்ளது. இதற்குப் பின்பக்கத்தில் ஸ்பெனாயிட் எனும் என்பின் ரோஷ்டிரம் (SPHENOID ROSTRUM) உள்ளது. இது மத்யபிராசீரம் உருப்பெறுவதில் துணையாகும். கீழே உள்ள நான்கு மூலைச் சதுர வடிவ குருத்தென்பு, ஹநுஅஸ்தியின் பந்தனகம் (SPINE) மற்றும் வோமர் (VOMER) என்பனவற்றுடன் இணையும். கீழ் முனையில் 'வோமர் நாஸல்' (VOMERNASAL) எனப்படும் குருத்தெலும்பு உள்ளது.

இந்த மத்யபிராசீரம் 'அஸ்த்யாவரணகலா' (PERIOSTEUM) எனப்படும் சவ்வினால் மூடப்பட்டிருக்கும். இதற்கு முன்பகுதியில் இது வெண்ணிற சளிச்சவ்வினால் (MUCOUS MEMBRANE) மூடப்பட்டிருக்கும்.

பக்கத்துச்சுவரைச் சார்ந்து கங்கீ (CONCHAE) எனப்படுவதன் முனைகள் (RIDGES) உள்ளன. இவை 'டர்பினேட்ஸ்' எனப்படும். ஒவ்வொரு டர்பினேட்டும் (CONCHA OR TURBINATE) 'மீமீட்ஸ்' எனப்படும் அறைகளின் மேல் இருக்கும். இந்த டர்பினேட்டுகள் மூன்றாகும். அவையாவன:- நிம்நகங்கா (INFERIOR CONCHA), மத்யகங்கா (MIDDLE CONCHA), உபரிஸ்தகங்கா (SUPERIOR CONCHA) ஆகும்.

இவற்றில் நிம்நகங்கா மூக்கின் பக்கத்துச்சுவர் மேல் இணைந்திருக்கும். நடுவிலும், மேற்புறத்திலும் உள்ளவை சர்சராஸ்தி (ETH MOID BONE) என்பதன் பகுதிகளாகும்.

இது காலெம்னர் ஸிலியேடெட் எபிதேலியம் (COLUMNAR CILIATED EPITHELIUM) என்பதுடன் கூடிய சளிச்சவ்வு சிலேத்துமகலா (MUCOUS MEMBRANE) என்பதால் சூழப்பட்டிருக்கும்.

மூக்குத் துளையிலிருந்து (MEATUS) தனிப்பட்ட வாயுநாளம் (ACCESSORY AIR SINUSES) வழியாக நீர்ப்பெருக்கு உண்டாகும்.

மூக்கின் இட வலப் புறங்களைச் சார்ந்து நான்கு காற்றறைகள் உண்டு. அவை பொட்டு எலும்புக் காற்றறை (FRONTAL SINUSES), மேல் தாடை எலும்புக் காற்றறை (MAXILLARY SINUSES), மெத்தை எலும்புக் காற்றறை (ETHMOIDAL SINUSES), ஆப்பு எலும்புக்காற்றறை, (SPHENOID SINUSES) எனப்படும். இவற்றின் மேல் தாடை எலும்பு காற்றறை மூக்கின் இரு பக்கமும் உள்ளது. இந்தக் காற்றறையின் கீழ், மேல் தாடைப்பற்கள் வரிசையாக அடுக்கப்பட்டிருக்கும். அந்தக் காற்றறையிலிருந்து நீர் இரு துளைகளின் வழியாக மூக்குக்குச் செல்லும். பொட்டு எலும்புக் காற்றறை மூக்கின் மேல் பகுதியில் இருக்கிறது. இவற்றின் நீர் (SINUS SECRETION) நீளமான நாளத்தின் வழியாக மூக்கினுள் செல்லும். மெத்தை எலும்புக் காற்றறையில் சிறு சிறு காற்றறைகளாக ஏழிலிருந்து பதினைந்து காற்றறைகள் வரை இருக்கும். இவை கண்ணுக்கும், மூக்குக்கும் இடையில் பல துளைகளாகவோ, ஒன்றிரண்டு சேர்ந்தோ மூக்குக்குள் திறந்திருக்கும். ஆப்பு எலும்புக் காற்றறை மூக்கின் பின்னால் அமைந்திருக்கிறது. இது மூளை மற்றும் மூளை நரம்புகளின் அருகிலிருக்கிறது.

காற்றறைகள் மூக்கு, சுவாச மண்டலங்களுக்கு நுழைவாயில் போல அமைந்துள்ளன. இவற்றின் வழியாக உள்ளிழுக்கப்படும் காற்று உட்சென்று, நுரையீரலை அடையும். அவ்வாறே நுரையீரலிலிருந்து வெளிப்படும் அசுத்தக் காற்று மூக்குத் துளைகளின் வழியாக வெளியேறிவிடுகிறது.

மூக்கின் சளிச்சவ்வில் பல இரத்தக்குழாய்கள் உள்ளன. அவை சுவாசக்காற்றின் வெப்ப நிலையைச் சீராக்குகிறது. வெப்ப நிலை மாறுவதால் மூக்கிற்கு உண்டாகும் தீங்கு தவிர்க்கப் படுகிறது.

இந்தக்காற்றறைகள் நம் குரல் தெளிவாக ஒலிக்க உதவுகிறது.

மூக்கினுள் உள்ள வெப்பநிலை மாறுபாடு கண்களையும், மூளையையும் பாதிக்காதபடி பாதுகாக்கிறது. கபால என்புகளில் காற்றறைகள் இருப்பதால் முக எலும்புகளின் எடை குறைகிறது. தலை நிலையாக நிற்க இது பயன்படும்.

## மூக்கின் தொழில்கள்

1. மூக்கு வாசனையை அறிகிறது 2. உள்ளிழுக்கும் காற்றில் தூசி முதலியன இல்லாமல் வடிகட்டுகிறது 3. புப்புசத்திற்குச் (நுரையீரலுக்கு) செல்லும் காற்றில் தேவையான வெப்பம், ஈரப்பசை ஆகியவை இருக்கும்படி சீர்படுத்துகிறது. 4. நம் குரல் நன்கு ஒலிக்கும்படி செய்கிறது.

### நாஸா மத்யகத - வாசனை அறிதல்

பிராசிரம் (SEPTUM) என்பதும், ஊர்த்வசுக்தி மேலுள்ள சவ்வும் வாசனை அறியப் பயன்படுகின்றன. அந்தச் சவ்வில் வாசனையை உணரும் நரம்பு (OPTIC NERVE) வலை போலப் பரவி இருக்கும். அதன் வழியாக வாசனை நுகரப்படும்.

மூச்சுக்காற்றை உள்ளிழுக்கும்போது, அதில் உள்ள தூசி, அணுக்கள் முதலான நுட்பமான பொருள்கள் சிலேத்தும சவ்வினாலான புரை மேலும், மூக்குத் துளையில் உள்ள உரோமங்களிலும் ஒட்டிக் கொண்டுவிடும். அதனால் தூயகாற்று நுரையீரலை அடையும். மூக்குப் பகுதியில் ஒட்டிக் கொண்டுள்ள பொருள் தும்முதல், சிந்துதல் முதலிய செயல்களால் வெளிப் பட்டுவிடும்.

### ஸுசுருதர் கூறிய மூக்கு நோய்கள்

ஸுசுருதர் முப்பத்தொரு வகை மூக்கு நோய்களைக் குறிப்பிட்டுள்ளார். அவையாவன :-

1. அபீநசம் - ATROPHIC RHINITIS
2. பூதிநஸியம் - OZAENA
3. நாஸாபாகம் - CHRONIC RHINITIS
4. சோணிதபித்தம் - EPISTAXIS
5. பூயசோணிதம் - LUPUS IN THE NOSE
6. க்ஷபது - VASOMOTOR RHINORRHOEA
7. பிரம்சது - MUCOID DISCHARGE OF THE THICKENED LINING MEMBRANE OF THE SINUS
8. தீப்தம் - SEVERE BURNING OR IRRITATION IN THE NOSE OR CORYZA
9. நாஸாநாஹம் - DEVIATION OF SEPTUM

10. பரிஸ்ராவம் - ACUTE AND CHRONIC RHINORRHOEA

11. நாஸாசோஷம் - RHINITIS SICCA

12. நாஸார்சஸ் - NASAL POLYP

13. நாஸாசோப - DERMETITIS FISSURES, BOILS IN THE VESTIBULE

14. நாஸார்புதம் - NEW GROWTHS IN THE NOSE

15. பிரதிசியாயம் - ACUTE RHINITIS

இவற்றில் நாஸார்சஸ் நான்கு வகை, நாஸாசோப நான்கு வகை, நாஸார்புதம் ஏழு வகை, பிரதிசியாயம் ஐந்து வகை யாகையால், அவ்வுட்பிரிவுகளும் சேர்ந்து முப்பத்தொரு மூக்கு நோய்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளன. (ஸு-உத்-அத் 3-5)

தற்கால மருத்துவத்தில் நாஸாசல்யம் (FOREIGN BODY IN THE NOSE), நாஸாகிருமி (MAGGOTS IN THE NOSE), நாஸா விவாசோத (SINUSITIS) என்பன மூன்றும் கூறப்பட்டுள்ளன.

## மூக்கு நோய் இலக்கணங்களின் விளக்கம்

பெரும்பாலான மூக்கு நோய்களில் காணப்படும் பொது இலக்கணம் மூக்கு தடைப்படுதல் (NASAL OBSTRUCTION).

1. மூக்கின் அமைப்பைச் சார்ந்து தோன்றக் கூடிய இலக்கண மாவது (ANATOMICAL OR DEVELOPMENTAL): நாஸாய வனிகா என்பது தவறான வழி நோக்கிச் செல்லுதல் (DEVIATION) அல்லது மூக்குத்துளைகள் சுருங்குதல் (CONGENITAL NARROWING) அல்லது ஒன்று அல்லது இரண்டு சுக்திகை நிறைவாகத் தடைபடுதல் (ATRESIA), 2. சிலேத்தும சவ்வு என் பதைச் சார்ந்து தோன்றும் விகாரம் (PATHOLOGICAL CHANGES OF THE MUCUS MEMBRANE) : இதனால் சிலேத்துமக் கலாவிருத்தி, நாஸா கலா சோதம் என்பன அடிக்கடி தோன்றுவ தால் இந்நிலை ஏற்படும். நாஸார்சஸ் என்பதனாலும் நாஸாகலா விருத்தி ஏற்படும். நீர்ப்பெருக்கு மிகுதியாகச் சேர்ந்தும் விருத்தி ஏற்படும். இதை முன்னோர்கள் நாஸாசோஷம் என்றனர். 3. மூக்கைச் சார்ந்த வாத நாடிகள் அதிக அளவு தூண்டப்படுதல் (HYPER SENSITIVITY OF NERVOUS MECHANISM OF THE NASAL MUCUS MEMBRANE): இதன் காரணத்தால் மூக்குச் சவ்வில் வீக்கம் ஏற்படும். இதனால் மூச்சு தடைபடும். இதனால் நாஸாபிரதிநாஹம் அல்லது நாஸா சோஷம் என்பன தோன்றும்.

மூக்கு நோய்கள் பலவற்றிற்குப் பொதுவான இலக்கணம் மூக்கிலிருந்து சளி மிகுதியாகப் பெருகுதலாகும். இதற்குக் காரணம் மூக்குக்குக் குழப்பத்தை உண்டு பண்ணும் பொருள்களுடன் தொடர்பு உண்டாவது ஆகும். அதனால் மூக்கில் உள்ள சிலேத்துமச் (சளி) சவ்வு அடிக்கடி வீங்கும். இந்நிலையில் நீரைப் போன்ற அடர்த்தியற்ற (THIN AND WATERY) சளி ஒழுகும். நீர்ப்பெருக்கு மிகுதியாகும்போது, மூச்சுத் தடையும் தோன்றும். நாள்பட்ட நீர்ப்பெருக்கு அடர்த்தி பெறும். இந்த நீர்ப்பெருக்கு அடர்த்தி பெற்றபோது கோசாங்குரங்கள் அந்தச் சளியை வெளியேற்றும் வலிமையற்றவையாக இருப்பதால், மூக்கின் பின் பகுதியில் அடர்ந்தசளி சேர்ந்து தங்கிவிடும். பிறகு கீழ் நோக்கி நாஸாகிரஸநிகாவை அடைந்து, வாய் வழியாக வெளியே தள்ளப்படும். சில சமயங்களில் இந்த நீர்ப்பெருக்கத்தில் சீழ் தோன்றுவதும் உண்டு. அதாவது மூக்கைச் சார்ந்த வீக்கங்களில் நீர்ப்பெருக்கு, இறுதி நிலையில் சீழுடன் கூடிய அடர்ந்த சளிப்பெருக்காக (MUCOPURULENT DISCHARGE) மாறும். இன்று பல வகைப் பெருக்குகளாகக் கூறப்படும் இவை அனைத்தும் ஆயுர்வேதத்தில் "பரிஸ்ராவம்" எனும் நோயாகக் கூறப்பட்டுள்ளது. ஆயுர்வேதத்தில் இந்நோய் நான்கு வகையாகக் கூறப்பட்டுள்ளது.

இதைப் போன்றதே 'பிரம்சது' எனும் நோயும். இதிலும் நான்கு வகையான சளிப் பெருக்குகள் உண்டு.

1. மெலிந்த நீர் போன்ற பெருக்கு (THIN AND WATERY SECRETION OR COPIOUS SECRETION): இது புதிதாகத் தோன்றும் சலதோஷம் அல்லது சிலேத்துமக்கலையின் வீக்கம் அல்லது ஒவ்வாமை (ALLERGY) காரணமாகத் தோன்றுவதாகும். ஒவ்வாமை எனும் நிலையில் நீர்ப்பெருக்கு திடீரெனத் தோன்றித் திடீரென நின்று போவதும் உண்டு. இதன் சிறப்பான இலக்கணம் நீர்போன்ற சளி பெருகுவதாகும்.

2. அடர்ந்த சளிப்பெருக்கு

3. அடர்ந்து மஞ்சள் நிறம் கொண்டு பிசுபிசுப்புடன் (THICK AND STICKY OR MUCOPURULENT DISCHARGE) சளிப் பெருக்கு: இந்தப் பரிஸ்ராவம் தோன்றுவதற்குப் பல காரணங்கள் உண்டு. மூக்கின் சளிச்சவ்வு வீங்கி பல நாட்கள் கடந்து போதல் அல்லது சவ்வு தடித்து வளர்தல், அல்லது மூக்குத் துளைகளில் தோன்றும் மாறுபாடுகள் போன்றவை காரணங்களாகும். இதனால் மஞ்சள் நிறச்சளி இடைவிடாமல் ஒழுகிக் கொண்டிருக்கும்.

## மூக்கு வலி

மூக்கு நோய்களில் வலி தோன்றுதல் தனிப்பட்ட க்கணங் கொண்டதாகும். அதாவது ஒரு பக்கத்துத் துளையில் தடையான (NASAL OBSTRUCTION) துன்பம் ஏற்படும். அடுத்த துளையில் சளிப்பெருக்கைத் தோற்றுவிக்கும். அதை அடுத்து எரிச்சல் (BURNING IRRITATION) தோன்றும். இது கடுமையான சலதோஷத்தினால் தோன்றுவதாகும். இது முற்றியபோது கடுமையான பிரதிசியாயம் (ACUTE CORYZA) ஆகும்.

மூக்கில் எரிச்சலைத் தோற்றுவிக்கும் வாயு, தூசி போன்றவை உட்புகுவதாலும் வலி தோன்றும்.

மூக்கைச் சார்ந்த அருஷிகா (FURUNCULOSIS) என்பதில் மூக்குத்துளையைச் சார்ந்த உரோமகூபங்களில் கோளாறு தோன்றுவதால் வலி தோன்றும்.

இதைப்போலவே கக்ஷா (HERPES) மற்றும் விசர்ச்சிகா (ECZYMATOUS ERUPTIONS) என்பதிலும் வலி தோன்றும். நாஸா சோதம், நாஸாபாகம், மூக்குத் துளைகளின் மேற்பகுதிச் சுவரில் வெடிப்புகள் (OUTER AND LOWER BORDER FISSURES) தோன்றுவதாலும் வலி தோன்றும்.

சில சமயங்களில் சர்சராஸ்தி (ETHMOIDAL AND FRONTAL) மற்றும் நெற்றி எலும்புகளைச் சார்ந்த காற்றறைகளில் வீக்கம் தோன்றி வலி உண்டாகி அது மூக்கைச் சார்ந்து வெளிப்படுதலும் உண்டு. மூளைப்பகுதியில் ஐந்தாவது நரம்பு, திரிதாராநாடி ஆகியவற்றில் தோன்றும் கோளாறுகளால் அல்லது பல் நோய்களால் மூக்கில் வலி தோன்றுவதும் உண்டு.

மூக்குக் கோணல்: பிறவியிலேயே தோன்றுவதாலோ, அடிபடுதலாலோ மூக்கு ஒரு பக்கமாக வளைந்து போதல் உண்டு. இரண்டு பக்கத்துளைகளும் சமமின்றி வளர்வதாலும் கோணுவது உண்டு. இதனால் மூச்சு விடுதல் சீராக இருக்காது. அடிபட்டு மூக்கிலுள்ள எலும்பு நிலை தவறிப்போவதாலும் மூக்குக் கோணல் ஏற்படும். பால்வினை நோய், க்ஷயம், குட்டம் போன்ற நோய்கள் காரணமாகவும் மூக்கு கோணிப்போதல் அல்லது விகாரமடைதல் ஏற்படும்.

இத்தகைய மூக்கு நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் ஸுசுருதஸம்ஹிதை உத்தரஸ்தானத்தில் 23-24, அத்தியாயங் களில் விளக்கப்பட்டுள்ளன.

## அலோபதி மருத்துவத்தில் மூக்கு நோய்களும், சிகிச்சை முறைகளும்.

அலோபதி மருத்துவத்தில் குறிப்பிடப்பட்டுள்ள முக்கிய மூக் கு நோய்களும் சிகிச்சை முறைகளும் இங்கு விளக்கப்படுகின்றன.

### கடுமையான அல்லது புதிதாகத் தோன்றிய சலதோஷம் (ACUTE RHINITIS OR CORYZA):

மூக்குத் துளையைச் சார்ந்த சளிச்சவ்வில் (MUCOUS MEMBRANE) உயிர் அணுக்கள் சேர்வதால், இரத்த நாளங்கள் பருத்தல், சுரப்பி (GLAND) வீங்குதல், சளிப்பெருக்கு மிகுதல் என்பன தோன்றும்.

நோயின் துவக்கத்தில் தொண்டையில் கரகரப்பும், மூக்கு உலர்ந்தது போலவும் தோன்றும்.

நோய் முற்றிய நிலையில் நீர்த் தோற்றத்தில் சளி வெளிவருதல், மூக்கு அடைப்பு, கண்களில் நீர்ப்பெருக்கு தோன்றுதல், சிறிதளவு காய்ச்சல் தோன்றுதல், தலைவலி என்பன காணப்படும். இறுதி நிலையில் (RECOVERY STAGE) முதலில் சளிப்பெருக்கும், பிறகு மூக்கு அடைப்பும் காணப்படும். சளி அடர்த்தியாகிச் சீழுடன் கூடியிருக்கும். மற்ற துன்பங்கள் குறையும். சில மணி நேரங்கள் அல்லது நாட்கள் கடந்த பிறகு சளிப்பெருக்கு நின்று விடும். மூச்சு சீராக இயங்கும்.

### சிகிச்சை முறை

நோய் தொற்றிக் கொள்ளக் கூடியதாகையால் நோயாளி தனித்திருக்க வேண்டும். புகை ஆவி (STEAM INHALATION) பிடிப்பதால் சளிச்சவ்வு சீராகி மூக்கில் சளி ஒழுகுதல் நிற்கும். எபிட்ரீன் (EPHEDRINE) 1/2%முதல் 1% சாதாரண ஸெலைன் வாட்டரில் கலந்து பயன்படுத்துதலால் வீக்கம் தணியும். 'ஸல்பா' மருந்துகளாலும் 'ஆன்டிபயோடிக்' மருந்துகளாலும் துன்பங்கள் நீங்கும். எபீல் 25 மி. கி. ஸைநோபென் பொராஷ்டில் ஒரு மாத் திரை வீதம் நாள் தோறும் மூன்று முறைகள் கொடுக்க வேண்டும்.

விடமின் - ஸி 500 மி.கி. ஒருமுறை பயன்படுத்தலாம். ஆயுர்வேதத்தில் இதற்கு லக்ஷ்மீவிலாஸம், திரிபுவனகீர்த்திரஸம், ராமபாணரஸம், சிருங்கபற்பம், சுத்தடங்கணம் முதலியன முறையாகப் பயன்படுத்தப்படும்.

நாள்பட்ட ஹைபர்ட்ராபிக் ரைனிடிஸ் (CHRONIC HYPERTROPHIC RHINITIS): இதில் ஹைபர்டிராபிக் ரைனிடிஸ்,

அட்ரோபிக் (ATROPHIC) ரைனிடிஸ், ரைனிடிஸ் ஸிக்கா (SICCA) என மூன்று வகைகள் உண்டு. (1) ஹைபர் டிராபிக் ரைனிடிஸ்:- கடுமையான ரைனிடிஸ் எனும் நோய் முழுவதும் தீராத நிலையில் இந்நோய் தோன்றும். தடை, அடிபடுதல், ஒவ்வாமை, ஸைநுஸிடிஸ் (SINUSITIS), பல நாட்கள் ஆச்சோதனம் (DROPS), ஸ்ப்ரே (SPRAY) பயன்படுத்துதல், தூசி புகை போன்றவற்றால் இந்நோய் தோன்றும்.

துவக்கத்தில் சளிச்சவ்வு வீங்குதல், சிவத்தல் காணப்படும். சிறப்பாக இவை CONCHA மற்றும் SEPTUM (சுவர்) எனும் பகுதிகளில் காணப்படும். சளி அடர்ந்து பிசுபிசுப்பு மிக்கதாகக் காணப்படும். 'கங்கா', ஸெப்டம் எனும் பகுதிகளுக்கு இடையே சுபம் கயிற்றைப் போலக் காணப்படும். பிராசீரம் எனும் மூக்கின் இடைச்சுவர் கோணலாகக் காணப்பட்டால், ஒரு பக்கத்தைப் பரிசோதனை செய்வது கடினமாகிவிடும். இதனால் ஹைபர் டிராபிக் நிலை ஏற்படும். இந்நிலையில் சிலேத்துமசவ்வு உருண்டையாகக் காணப்படும். இது மல்பேரியிங் (MULBERR-YING) எனப்படும்.

### இந்நோயின் முக்கிய இலக்கணங்கள்

மூக்கு அடைப்பு (ஒருக்களித்துப்படுக்கும் போது கீழ்ப்பகுதி மூக்குத் துளையில் இது அதிக அளவில் காணப்படும்), சளி அடர்ந்து காலை வேளையில் மூக்கில் ஒலி மிகுந்து காணப்படுதல், பல நாட்கள் தொடர்ந்து சளி பெருகுதல், (காது மூக்குத் தொண்டைக்குழாயில்) யுஸ்டேசியன் (EUSTACHIAN CATARRH) வீக்கம், காதடைப்பு (செவிட்டுத்தன்மை) ஆகியவை காணப்படும். மற்றும் தலைவலியும் தலைப்பளுவும் காணப்படும். வாயால் மூச்சு விடுதல், உறங்கும் போது மூக்கில் 'குர்' 'குர்' எனும் ஒலி தோன்றுதல் ஆகியவையும் காணப்படும். அடைப்பினால் ஸைநஸ் (SINUS DISEASE) நோய் தோன்றும்.

### விடாத சளி (பீநசம்)

விடாமல் நாள்பட இருக்கும் சலதோஷம் (CHRONIC ATROPHIC RHINITIS) என்கிற பீநச நோயில் மூக்கின் சிலேத்துமக்கலை, என்பு, குருத்தெலும்பு, சுரப்பி முதலியன கேடுற்று மெலிந்து விடும். இந்நோயில் மூக்கிலிருந்து கெட்ட நாற்றம் தோன்றினால் அப்பொழுது இந்நோய் 'ஒஜீனா' (OZAENA) எனப்படும். மூக்கடைப்பு ஏற்படும். சில சமயங்களில் மூக்கிலிருந்து இரத்தம் வெளியேறும். மூக்கு சீராக மணமறியும் தன்மையை இழக்கும். மூக்கினுள் நோய்க்கிருமிகள் இருப்பதால்

அடிக்கடி தொண்டை நோய்களும் தோன்றக்கூடும். இருமல் உண்டாகும். அடிக்கடி மூக்கிலிருந்து பொருக்குகள் வெளிப்படும். சில நேரங்களில் இந்தப் பொருக்குகள் மூக்கின் பின்புறமாகத் தொண்டைக்குள் வந்து விடுவதும் உண்டு. அந்நேரங்களில் மூச்சுத்தடையும், கடும் இருமலும் உண்டாகும்.

**நோய் தோன்றக் காரணமும், இலக்கணமும்**

பருவத் துவக்கத்திலும், பெண்களுக்கு மாதவிடாய் நின்று போகக் கூடிய வயதிலும் பலருக்குப் பீநசம் தோன்றும். இந்நோய் கொண்டவர்களின் மூக்குச் சுவர்கள் உலர்ந்து போய் இருக்கும். மூக்கின் முளைகளில் சிமெண்ட் நிறத்திலோ, கருநிறத்திலோ பொருக்குகள் சேர்ந்திருப்பதைக் காணலாம். இந்தப் பொருக்கு களை நகத்தால் எடுத்தால் சிறிது இரத்தம் வருவதும் உண்டு.

பருவத்திலும், மாதவிடாய் நின்று போகும் காலத்திலும் தோன்றும் ஹார்மோன்கள் இந்நோய்க்கு ஒரு காரணம் எனக் கருதப்படுகிறது.

ஸிப்லிஸ், எலும்புருக்கி நோய்க்கிருமிகள் மூக்கில் சேர்ந்தால் இந்நோய் தோன்றும்.

மூக்கில் அடிபடுதல், மூக்கைச் சார்ந்த அறுவைச் சிகிச்சை பெறுதல் ஆகியவற்றாலும் இந்நோய் தோன்றலாம்.

இந்நோயில் மூக்கினுள் உள்ள திசுக்களுக்கு இரத்தத்தைச் சேர்க்கும் இரத்தக் குழாய்களில் தடை ஏற்படுவதால், சளிச்சவ்வு போதிய இரத்தம் இன்றி உலர்ந்து சுருங்கும். சளிச்சவ்வின் அடிப்பகுதியில் உள்ள மென்மையான திசுக்கள், சளிச்சுரப்பிகள் ஆகியவையும் சீராக இயங்கா. அங்கு நோயுற்ற கணங்கள் (கலங்கள்) தோன்றி அடிக்கடி பொருக்குகளாக மாறும்.

இந்நோய் எளிதில் குணம் பெறாது. ஆகவே, நோய் கொண்டவர் எப்பொழுதும் மூக்கை மருத்துவரின் உதவியால் ஈரப்பசை கொண்டதாகச் செய்து கொள்ள வேண்டும். நாள் தோறும் ஸெலைன் வாட்டரால் தூய்மைப்படுத்துதல், இரவு கிளிஸிரின்பாக் கொண்டு ஈரப்பசையை உண்டாக்கிக் கொள்ளு தல் அவசியம். நோய்க் கிருமிகளை அழிக்கும் மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும்.

5 மி.கி.ஸ்டில்பெஸ்டராலை ஒரு அவுன்சு கிளிஸரினில் கலந்து நாள்தோறும் நான்கைந்து முறைகள் அதை மூக்கினுள் தடவிக் கொள்ள வேண்டும். இம்முறையால் மூக்கினுள் ஈரம் உலராமல் இருப்பதுடன், நோய்க்கிருமிகளும் நிலையாகத் தங்கா.

## மூக்கில் அலர்ஜி (NASAL ALLERGY)

தூசிபடுதல், எதையேனும் உட்கொள்ளுதல், அல்லது பாக்டீரியா கிருமிகள் மூக்கில் சேருதல், வானிலை மாறுபடுதல் போன்றவற்றால் சிலருக்கு அடுத்தடுத்து தும்மல்கள் தோன்றும். மூக்கிலிருந்து சளி வழியும். இது மூக்கின் அலர்ஜி அல்லது வாஸோ மோடார் ரைனிடிஸ் எனப்படும். சிலருக்குச் சில காலங்களில் அலர்ஜி ஏற்படுவதுண்டு. இது 'ஹேபீவர்' எனப்படும்.

### அலர்ஜி தோன்றக் காரணம்

சிலருக்குச் சில பொருள்கள் ஒத்துக் கொள்ளா. இந்தக் குணம் பிறவியிலிருந்தே இருக்கலாம். அல்லது வேறு காரணங்களால் வாழ் நாளுக்கு இடையில் தோன்றலாம். ஒவ்வாத பொருள்கள் சேர்ந்தபோது அலர்ஜி தோன்றி மூக்கிலிருந்து நீர்ப்பெருக்கு உண்டாகும். இவ்வாறு ஒவ்வாத பொருள்கள் 'அலர்ஜன்' எனப்படும். இந்த அலர்ஜன் மூக்கைச் சேர்ந்ததும், அப்பகுதியில் உள்ள இரத்தக் குழாய்கள் சுருங்கும். சிறு இரத்தக்குழாய்கள் இரத்தம் நிறைந்து வீங்கும். அதனால் மியூகஸ் மெம்பெரீன் வீங்கும். மூக்குத் துளைகள் அடைபடும். அப்பொழுது மியூகஸ் (சளிச்) சுரப்பிகள் அதிக அளவில் நீரைப் பெருகச் செய்யும். ஒரு பக்கத்தில் மூச்சுவிட முடியாமல் தடை ஏற்படுதல், மற்றொரு பக்கம் மூக்கிலிருந்து நீர் பெருகுதல் ஆகியவை உண்டாகும். இந்நோயால் தலைவலியும் தோன்றும். ஆனால், இந்நோய் திடீரெனத் தோன்றுவதுபோலத் திடீரென நீங்கவும் செய்யும். தாய் தந்தையர்களுக்கு 'அலர்ஜி' இருந்தால் குழந்தைகளுக்கும் தொற்றிக் கொள்ளலாம்.

இதற்குச் சிகிச்சை ஒவ்வாத பொருளைச் சேரவிடாமல் தடுத்துக் கொள்வதேயாகும். காரணம் தெரியாதபோது ஹைட்ரோ கார்டி ஜோன் ஊசி வழியே மூக்கினுள் இன்பீரியல் டர்பினேட் அடியில் 3,4 வாரங்களுக்கு ஒருமுறை செலுத்திக் கொள்வது பலன் தரும். அலர்ஜியைத் தடுக்கும் மாத்திரை களையும் பயன்படுத்தலாம்.

## மூக்கு பாலிப் (NASAL POLYP)

மூக்கினுள் இருக்கும் 'மியூ கோஜா' வீங்கி, இரப்பர் குமிழைப் போல ஆவதால் இந்நோய் தோன்றும். மூக்கினுள் 'டிஷ்யூ பாலிப்' தோன்றித் தடையாகக் குறுக்கே நிற்கும். இந்நோய் பெரும் பாலும் மூக்கின் பக்கத்தைச் சார்ந்து தோன்றும். இந்நோய்க்கு பெரும்பாலும் மூக்கின் ஒவ்வாமை (அலர்ஜி) காரணமாகும்.

பாலிப் தோன்றியவர்களில் பத்து சதவிகிதத்தினருக்கு மூக்கில் புற்றுநோய் தோன்றக்கூடும்.

மூக்கினுள் நோய்க்கிருமிகள் சேருதல் இந்நோய்க்குக் காரணமாகும்.

மூக்கில் ஒவ்வாமை (அலர்ஜி) தோன்றிய போது சளிச் சவ்வின் அடிப்பகுதியில் நீர் போன்ற திரவம் சேரும். ஈஸி நோபிள்ஸ் போன்ற கணங்கள் சேரும். அதனால் சவ்வு பளுவாகி வீக்கம் கொள்ளும். அதனால் இரப்பர் குமிழ்போல மூக்கினுள் அது மிதந்து கொண்டிருக்கும். அதனுள் இரத்தக்குழாய்கள், நிணநீர் சுரப்பிகள் கூட இருக்கும். சளிச் சவ்வில் நீர் சேர்வதால் இந்த இரத்தக்குழாய் முதலியவையும் கீழ் நோக்கி வளைந்து மிதக்கும்.

**நேஸல் பாலிப் சிகிச்சை**

'பாலிப்ஸ்நேர்' எனும் கருவியைக் கொண்டு இதை அறுவைச் சிகிச்சை செய்து நீக்க வேண்டும். 'பாலிப்' என்பதைத் துண்டித்து வேறுபடுத்திய பிறகு இரத்தம் பெருகாமல் ஒரு நாள் பஞ்சைக் கொண்டு மூக்குத் துளையை அடைக்கவேண்டும். அடுத்த நாள் பஞ்சை எடுத்து விடலாம். இரத்தம் பெருகாது.

சிலருக்கு 'எலெக்ட்ரிகல் காடரைஸேஷன்' (மின்சக்தியால் சுடுதல் முறை) எனும் முறையால் பாலிப் என்பதை நீக்குவதுண்டு.

## 'ஸைனஸைடிஸ்'

மூக்கைச் சார்ந்து மண்டை என்பில் 'ஸைனஸ்' எனப்படும் வெற்றிடங்கள் உண்டு. இந்தப் பகுதிகளில் காற்றைத் தவிர வேறு பொருள் ஏதும் இருக்காது. மூக்கின் இரு பக்கங்களிலும், மேல் என்புகளிலும் இவ்வாறு வெற்றிடங்கள் இருக்கும். மூக்கின் பக்கங்களில் இருப்பவை 'மாக்ஸிலரி ஸைனஸ்' எனப்படும். இவை மற்ற ஸைனஸ்களைவிடப் பெரியவை. இந்த என்பு அறைகளுக்குள் சளிச்சவ்வு இருக்கும். சில சமயங்களில் இந்த சவ்வுகள் வீங்கலாம். மேலும் இந்த ஸைனஸ் வெற்றிடங்களில் சீழ், நோய்க்கிருமிகளுடன் கூடிய திரவப்பொருள் ஆகியவை நிரம்பிவிடும். இவ்வாறு தோன்றும் நோய் ஸைனஸைடிஸ் (SINUSITIS) எனப்படும். 'ரைனோஸ்கோபி' எனும் கருவியைக் கொண்டு இந்நோய் ஆராயப்படும். இந்நோய் முற்றியபோது 'அக்யூட் ஸைனஸைடிஸ்' எனப்படும்.

மூக்கின் வழியாகவோ, இரத்தத்தில் கலந்தோ நோய்க் கிருமிகள் சேருவதால் இந்நோய் தோன்றும்.

**'அக்யூட் ஸைனஸைடிஸ்' நோய் தோன்றக் காரணங்கள்**

மூக்கில் அடிபடுவதால் அந்தக் காயத்தின் வழியாக நோய்க்கிருமிகள் மூக்கினுள் சேர்ந்து, ஸைனஸ் பகுதியை அடைவதால் இந்நோய் தோன்றலாம்.

பற்களில் தோன்றும் நோயில் ஈறுகளில் சேர்ந்த நோய்க் கிருமிகள் எளிதாக ஸைனஸ் பகுதியை அடைந்து நோயைத் தோற்றுவிக்கலாம்.

'அக்யூட் ஸைனஸைடிஸ்' தோன்றிய போது ஸைனஸ் பகுதிகளில் மியூகஸ் மெம்பரீன் நீர் கோர்த்துக் கொள்வதால் அவை வீங்கி சிவந்து விடும். ஸைனஸ்களில் இரத்தம் மிகுதி யாகும்.

வெற்றிடங்களில் நோய்க்கிருமிகள் சேர்ந்து நோயைத் தோற்றுவித்தாலும், உடலில் நோய் எதிர்ப்பு வலிமை இருந்தால் நோய் எளிதில் தணிந்து விடும். நோய் எதிர்ப்பு வலிமை குறைந்து போனால் நோய்க் கிருமிகள் சீற்றம் கொண்டு நோயை முற்றச் செய்து, இன்ப்லிமேடரி திரவத்துடன் சீழைத் தோற்று விக்கும். ஸைனஸ்ஸில் சீழ் சேர்ந்தால் ஸைனஸ் என்பதற்கும் மூக்கிற்கும் இடையே உள்ள துளை மூடப்பட்டுவிடும். அதனால் மேலும் சீழ் சேர்ந்து விடும்.

இந்நோயைத் தோற்றுவிக்கும் நுண்ணுயிர்கள் நியூமோ கோகஸ், ஸ்டிரெப்டோ கோகஸ், ஸ்டேபலோகோகஸ் பாக்டீரி யாக்கள் எனப்படும்.

**'அக்யூட் ஸைனஸைடிஸ்' நோயின் இலக்கணம்**

அக்யூட் ஸைனஸைடிஸ் நோய் தோன்றியபோது தலைவலி கடுமையாகும். எந்தப் பக்கத்தில் நோய் உள்ளதோ அந்தப் பக்கம் தலை பளுவாகத் தோன்றும். அந்தப் பக்கத்துக் காதில் குத்தல் வலி, பல் வலி முதலியனவும் தோன்றும்.

அந்தப் பகுதி ஸைனஸ் மீது விரல் வைத்துச் சற்று அழுத் தினால், தாங்க முடியாத வலி தோன்றும். காய்ச்சல், குளிர், உடல் நடுக்கம் போன்ற கோளாறுகளும் காணப்படும். ஸைன ஸைடிஸ் தோன்றிய பகுதி மூக்கினுள் ஆராய்ந்தால், அந்தப் பகுதி சிவந்து வீங்கியிருப்பதைக் காணலாம். நோய்க்கிருமிகள்

தொண்டையைச் சார்ந்து தொண்டை வலியையும் தோற்று விக்கும்.

யான்டீரியர் ரைநோஸ்கோபி, போஸ்டீரியர் ரைனஸ்கோபி எனும் கருவிகளைக் கொண்டு இந்நோயை அறியலாம். பாஸ்ட் யுரல் சோதனை, டிரான்ஸ் இல்யூமினேஷன் சோதனை, எக்ஸ்ரே, பாராநேஸல் ஸைனஸ் முதலியவற்றால் நோயைக் காணலாம்.

**'அக்யூட் ஸைனஸைடிஸ்' நோய்க்குச் சிகிச்சை**

ஸைனஸைடிஸ் வலி குறைய 'காம்பிப்ளாம்' போன்ற மாத்திரைகளை காலை, நண்பகல், இரவு ஆகிய வேளைகளில் வேளைக்கு ஒன்று வீதம் ஐந்தாறு நாட்கள் பயன்படுத்த வேண்டும். வலி குறையும் வரை ஓய்வு கொள்ள வேண்டும். நல்ல உணவு உட்கொள்ள வேண்டும்.

ஸைனோஸ்டாட் கோட்ரெமோக்யஜால், ஸிப்ரான் போன்ற மாத்திரைகளை காலையில் ஒன்று, இரவில் ஒன்று என ஒரு வாரம் அல்லது பத்து நாட்கள் உட்கொள்ள வேண்டும்.

இம்மருந்துகளுடன் நன்கு கொதிக்கும் நீராவியை மூக்குப் பகுதியில் படும்படி பிடிக்க வேண்டும். அந்த நீரில் சிறிதளவு டிஞ்சர் பென்ஜாயின் விட்டு, ஆவியைப் பிடிப்பதும் நல்லது.

**'ஸைனஸ்பஞ்சர்'** (SINUS PUNCTURE)

'டிரோகார் மற்றும் கேனுலா' சிறு குழாயுடன் கூடிய ஊசி எனும் கருவியை ஸைனஸ்க்குள் புகுத்தி, சீழை வெளியேற்றும் முறை 'ஸைனஸ்பஞ்சர்' எனப்படும். அக்யூட்ஸைனஸைடிஸ் நோயின் துவக்கத்தில் சீழ் சேராது. எலும்பு அறை வீக்கம் கொள்வது மட்டுமே காணப்படும். அந்நிலையில் வலி குறைய மருந்துகள், ஆன்டிபயாடிக் மருந்துகள் ஆகியவற்றைப் பயன்படுத்தினால் நோய் தணிந்து துன்பம் நீங்கும். அவ்வாறு தணியாமல் நோய் முற்றிய போது கெட்ட நீர், சீழ் முதலியன சேரும். அந்நிலையில் மாத்திரைகளைப் பயன்படுத்துவதால் பயன் விளையாது. அப்பொழுது சீழை முழுவதும் வெளிப்படுத்த வேண்டும். இதற்கு ஸைனஸ் பஞ்சர் முறை பயன்படுத்தப்படும். பிறகு 'ஏன்ட்ரம்வாஷ்' எனும் முறையால் நன்கு கழுவ வேண்டும்.

இந்த முறையில் வாரத்திற்கு இரண்டு முறை வீதம் மூன்று வாரகாலம் கழுவ வேண்டும். இவ்வாறு கழுவும் போது சீழ் வெளிப்படாமல் வெறும் நீர் மட்டும் வெளிவந்தால், பிறகு இம்முறையைப் பயன்படுத்திக் கழுவ வேண்டியதில்லை.

சிலருக்கு இந்த முறையாலும் பயன் விளையாது. அத்தகையவர்களுக்கு அறுவைச் சிகிச்சையால் ஸைனஸ் என்பதற்குள் அழுகிப் போன சளிச்சவ்வை முழுமையாக நீக்கிவிட வேண்டியிருக்கும்.

சிலருக்கு ஸைனஸைடிஸ் தோன்றுவதற்கு நேஸல்பாலிப் இருப்பது, மூக்கு இடைச்சுவர் என்பு வளைந்திருப்பது, நடுடர்பினேட் பருத்து விடுவது காரணங்களாகலாம். ஆகவே ஸைனஸைடிஸ் நோய் முழுமையாக நீங்க வேண்டுமாயின், அதற்குக் காரணமான கோளாறுகளைப் போக்க வேண்டும்.

## நேஸல் ஸெப்டம் டீவியேஷன்
## (DEVIATION OF NASAL SEPTUM)

மூக்கின் நடுப்பகுதியில் சுவர் போன்ற அமைப்பு இருந்து, அதை இரு பிரிவுகளாகச் செய்கிறது. இந்தச் சுவர் போன்ற உறுப்பு ஒரு பக்கமாக வளைந்த போது,. அந்தப்பகுதியில் உள்ள மூக்குத் துளையைத் தடுத்து விடும். இது 'நேஸல்ஸெப்டம் டீவியேஷன்' எனப்படும்.

)வவாறு ஒரு பககமாக வளைவதறகுக காரணஙகள: 1. பிறவிக்கோளாறு 2. மூக்கின் மேல் அடிபடுதல் 3. மூக்கினுள் தோன்றும் கட்டிகள். இந்த வளைவு 'C' அல்லது 'S' அல்லது இவ்விரண்டு எழுத்துகளின் தோற்றத்தில் காணப்படும். 'ரைனோஸ்கோபி' அல்லது நாஸா போரிங்கோஸ்கோப்' எனும் கருவிகளைக் கொண்டு இதை நன்றாகக் காணலாம்.

### மூக்குச்சுவர் வளைவதன் விளைவுகள்

மூக்குச்சுவர் வளைவதால் மூச்சு விடுவது சிரமமாகும். மணம் சீராக அறிய முடியாது. மூக்கிலிருந்து இரத்தம் அடிக்கடி வெளிவரும். சிறிதளவு அடிபட்டாலும் 'லிடில்ஸ் ஏரியா' விலிருந்து இரத்தம் வெளிப்படும். மூக்கின் ஒரு பக்கத்துளை தடுக்கப்படுவதால், வாயால் காற்று விடும்படியாகும். ஸைனஸ் ஸில் எளிதாகக் காற்று சென்று வருவதின்றி 'வாக்யூம் ஹெட்ஏக்' எனும் தலைவலி தோன்றும். காதிலும் குத்தல் வலி தோன்றும். காது கேட்கும் வலிமையும் குறையும்.

வாயால் மூச்சு விடுவதால் தொண்டை உலர்ந்து போகும். அந்நிலையில் எளிதில் நோய்க்கிருமிகள் தொண்டையைச் சேர்ந்து விடும். தொண்டைவலி, இருமல் ஆகியவை தோன்றும். பிறவியிலேயே இந்தக் கோளாறு இருக்கும் சிறுவர்கள், வாயால்

மூச்சுவிடும் பழக்கம் கொண்டிருப்பவர் ஆகியவர்களுக்கு வாயின் தோற்றம் மாறும், முகம் விகாரப்படும். இந்த விகாரம் 'எடினாயிட் பேஸிஸ்' எனப்படும்.

**இந்நோய்க்குச் சிகிச்சை**

சிலருக்கு மூக்குச் சுவர் வளைந்திருந்தாலும், மூச்சுவிடுவதில் எத்தகைய சிரமமும் ஏற்படாது. அத்தகையவருக்குச் சிசிச்சை தேவையில்லை. அவ்வாறல்லாது இந்தக் கோளாறினால் மூச்சு விடுதல் சிரமமாதல் போன்ற துன்பங்கள் விளைந்தால் சிகிச்சை செய்ய வேண்டும்.

## மூக்கிலிருந்து இரத்தம் வெளிவருதல் (EPISTAXIS)

மூக்கிலிருந்து இரத்தம் வெளிவருவது மூக்கைச் சார்ந்த நோய்களால் ஏற்படலாம். அல்லது உடலில் வேறு சில நோய்கள் இருந்தால் அதன் காரணமாகவும் மூக்கிலிருந்து இரத்தம் வெளி வரலாம்.

மூக்கைச் சார்ந்த நோய்களால் இரத்தம் வெளிவரும்

1. காரணம் வெளிப்படாமல் தோன்றலாம். பிறவியிலேயே மூக்கில் ஏற்பட்ட கோளாறு காரணமாக இரத்தம் வெளிவரலாம். அவையாவன: (1) ஒஸ்லர் (OSLER) நோய் (2) பிறவியிலேயே சிரைகள் வீங்கியிருத்தல் (3) டெலென்ஜியேக்டஸீஸ் (MULTIPLE TELANGIECTASIS).

2. அடிபடுதலால் மூக்கிலிருந்து இரத்தம் வெளிவரும்.

(1) மூக்கின் மேல் குத்தப்படுதல் அல்லது கீழே விழுதல் காரணமாக மூக்கின் எலும்பு உடைதல், அல்லது வேறு காரணங்களால் 'பெரியோஸ்டிஸம்' அல்லது 'மியூகோ பெரி கோண்டியம்' பிளந்து போவதால் இரத்தப் பெருக்கு உண்டாகும்.

(2) அறுவைச் சிகிச்சையினால் தோன்றும் கோளாறு காரணமாக இரத்தம் வெளி வரலாம்.

(3) லிட்டில் கிஸல்பாக் (LITTLE, KIESSELBACH'S AREA) பகுதியில் நகத்தால் கீறுவதால் இரத்தம் வெளிப்படலாம்.

(4) மூக்கினுள் (சோதனைக்காகக்) கருவியைப் புகுத்துவதால் ரத்தப் பெருக்கு ஏற்படலாம்.

(5) கத்தி முதலான கூரிய கருவிகள் பட்டு இரத்தம் வெளிவரலாம்.

(6) கடலை, பட்டாணி, மலர்மொட்டு போன்றவை மற்றும் நுண்ணிய கிருமிகள் முதலியன மூக்கினுள் புகுவதால் இரத்தப்பெருக்கு ஏற்படலாம்.

(7) மண்டை ஓட்டின் அடிப்பகுதி (BASE OF SKULL) உடைதலால் இரத்தப்பெருக்கு தோன்றலாம்.

3. (1) மூக்கின் டிப்தீரியா, அல்லது மூக்கில் வீக்கம் (ACUTE RHINITIS) ஏற்படுவதால் இரத்தப்பெருக்கு தோன்றும்.

(2) நாள்பட்ட ஸிப்லிஸ் (பால்வினை நோய்), க்ஷயம், குட்டம், கிலைடர் எனும் நோய்களாலும், நாள்பட்ட மூக்கின் வீக்கத்தாலும் (ATROPHIC RHINITIS OZENA, RHINITIS SICCA, CRUSTING RHINITIS) எனும் நோய்களால் இரத்தம் பெருகலாம்.

4. (1) என்டினோமைகோஸிஸ் 2) ரைனோ ஸ்போரிடியஸிஸ் (RHINO-SPORIDIOSIS) என்பதால் இரத்தம் பெருகலாம்.

5. கட்டிகள் (1) போலிபஸ் பிளவுபடுதல் (2) பைப்ரோமா (NASO - PHARYNGEAL FIBROMA) (3) ஹிமென்ஜியோமா (4) எபிடெமிக் டிராப்ஸியால் தோன்றும் கட்டி (5) புற்று நோய், (6) ஸார்க்கோமா போன்றவற்றால் இரத்தம் வெளிப்படலாம்.

6. வேறு காரணங்கள் :

(1) வேரி கோஸபேன் (2) ஸைனஸ் (PARANASAL SINUS) (3) தமனி தாக்கப்படுதல் (4) இரத்த அழுத்தம் அதிகமாதல் (5) சிறுநீர்க்குண்டிகையில் நாள்பட்ட வீக்கம் (CHRONIC: INTERESTITIAL NEPHRITIS) (6) தமனி கோணிப்போதல் (ARTERIO SCLEROSIS) (7) தட்பவெப்ப நிலையில் வெப்பம் மிகுதல் அல்லது குளுமை அதிகமாதல் (8) வெகுநேரம் தொடர்ந்து வேலை செய்தல் (9) ஆகாய விமானத்தில் (காற்று அழுத்தம் மிகுதல்) பயணம் செய்தல் (CAISSON) எனும் நோய் (10) கல்லீரல் கோளாறு (11) மைட்ரல் ஸ்டெனோஸிஸ் (M.S.) (12) வலது பக்க இதயம் செயலற்றுப் போதல் (C.C.F) (13) கழுத்து அழுத்தப்படுதல் (தூக்கில் தொங்குதல்) (14) இதயப்பகுதி அல்லது கழுத்தில் கட்டி தோன்றுதல் (15) நுரையீரலில் காற்றுப்பைகள் வீங்குதல் (எம்பைஜீமா) (16) பிராங்கைடீஸ் (17) ஹிமோபீலியா (18) ஸ்கர்வீ (19) பர்ப்யூரா (20) லியுகீமியா (21) பர்நிசஸ் அநீமியா (22) காமாலை (23) எப்லாஸ்டிக் அநீமியா போன்ற நோய்கள் கொண்டபோது மூக்கிலிருந்து இரத்தம் வெளிவரலாம்.

7. நச்சு மருந்துகளாகிய க்விநீன், ஸைலிஸிலேப் பாஸ்பரஸ் மேலும் ஸர்ப்பவிஷம் முதலியவற்றால் துன்புறும்போது மூக்கி லிருந்து இரத்தம் வெளிவரும்.

8. இன்ப்லூரயன்சா, டிப்தீரியா, டைபாயிட், சிறிய அம்மை, ஸ்கார்லேட் காய்ச்சல், எரிலிபெலஸ் ருமாடிக் காய்ச்சல் போன்ற தொற்று நோய்கள் கடுமையானபோது மூக்கிலிருந்து இரத்தம் வெளிவரலாம்.

9. மாதவிடாய் கோளாறு (VICARIOUS MENSTRUATION), மிக்க உயரமுள்ள இடம் செல்லல் ஆகியவற்றாலும் மூக்கிலிருந்து இரத்தம் வெளிப்படும்.

**மூக்கிலிருந்து இரத்தம் வெளிவருவதற்குச் சிகிச்சை முறைகள்**

இரத்தப் பெருக்குக் காரணமான நோய்க்குச் சிகிச்சை செய்ய வேண்டும்.

முதல்உதவியாகக் கட்டை விரல், சுட்டு விரல்களால் மூக்கை அழுத்திப் பிடித்துக் கொள்ள வேண்டும். ஏறக்குறைய 10 நிமிடங்கள் இவ்வாறு பிடித்துக் கொண்டால் இரத்தப்பெருக்கு நின்றுவிடும்.

மேலும் நிற்காமல் வெளிப்படுமானால், மெல்லிய துணியை 1:1000 எட்ரினலீன் கலவையில் நனைத்து, அதை மூக்குத் துளைக்குள் வைத்துக் கட்ட வேண்டும்.

ஒரு நாள முழுவதும இவவாறு கட்டி வைககலாம. அந்நிலையில் வாயினால் மூச்சு விட வேண்டும்.

மூக்கின் மேல் ஐஸ்கட்டி அல்லது குளிர்ந்த நீர் தடவ வேண்டும்.

இரத்த அழுத்தம் மிகுதியாக உள்ள போது இவ்வாறு மூக்கிலிருந்து இரத்தம் வெளிவந்தால் அழுத்தத்தைத் தணிக்க மருந்து கொடுக்க வேண்டும். நோயாளியைப் படுக்கையில் ஓய்வு கொள்ளச் செய்ய வேண்டும்.

உணர்வற்றுப் போதலைத் தணிக்க வாலிபர்களுக்கு பெதேடின் 100 மி.கி. அல்லது மார்பின் 30 மி.கி. சதையில் ஊசி மருந்தாக (I.M) செலுத்த வேண்டும். சிறுவர்களுக்கு இதைப் பயன்படுத்தக்கூடாது. சிறுவர்களுக்கு அவர்களது வயதுக்கு ஏற்றபடி ‘க்ளோரல் ஹைட்ரஸ்’ அல்லது ‘பார்பிடோன்’ கொடுக்க வேண்டும்.

முன்கூறிய முறைகளால் இரத்தப் போக்கு நிற்காவிடில், இரத்தத்தைக் கெட்டியாகச் செய்யும் மருந்துகள், விடமின்-ஸி, கே, கால்ஷியம் கௌகோரெட், கோயேகுலீன் போன்ற மருந்துகளை ஊசி மூலம் செலுத்த வேண்டும்.

இரத்த நாளத்தைக் (LIGATE) கட்டிப்போட வேண்டி வரலாம்.

மூக்குத் துளையில் மருந்தில் நனைத்த மெல்லிய துணி காஜ் - (GAUZE) வைத்த போது நுண்ணுயிர்கள் தொற்றும் வாய்ப்பு உண்டாகும். அதைத் தடுக்க பெனிஸிலின் போன்ற தடுப்பு மருந்துகளைக் கொடுக்க வேண்டும்.

இரத்தப்பெருக்கு நின்ற பிறகு மீண்டும் அந்நிலை ஏற்படாதவாறு சில முறைகளைக் கையாள வேண்டும்.

1. இரத்தப்பெருக்குக்குக் காரணம் அறிந்து அந்நோயைத் தணித்தல் 2. மூக்குச் சுவரான என்பில் கோளாறு இருந்தால் அறுவைச்சிகிச்சை (S.M.R) செய்தல் 3. கட்டி முதலியவை இருந்தால் அவற்றை நீக்குதல், மின் சக்தியால் இரத்தப்பெருக்கு நிற்க (COAGULATE) முயற்சி செய்தல்.

கொடும் துன்பம் தரும் கட்டி முதலியன இருந்தால் ரேடியம் அல்லது எக்ஸ்ரே சிகிச்சை செய்தல், லிட்டில் (LITTLE) எனும் பகுதியிலிருந்து அடிக்கடி ரத்தம் வெளிப்படுமானால் மின்சக்தி யால் ரத்தம் கட்டிப் போகச் செய்யும் (ELECTRIC COAGULATION) முறையைப் பயன்படுத்தல் அல்லது அப்பகுதியை குரோமிக் அமிலத்தால் சுடுதல், புறப்பகுதியில் கைரோடிட் தமனியைக் கட்டிப்போடுதல் (அதன் லிங்குவல் கிளைக்கு முன் பகுதியில் கட்டுபோட வேண்டும்.) இம்முறையாலும் இரத்தப் பெருக்கு நிற்காவிடில் எதிமாயிட் தமனியையும், மாக்ஸிலரி தமனியையும் கட்டிப் போட நேரலாம்.

இரத்தம் அதிக அளவில் வெளிப்பட்டிருந்தால் அநீமியா ஏற்படும். அதற்கு உரிய சிகிச்சையைக் கையாள வேண்டும். அல்லது சிரைவழியே இரத்தம் செலுத்த வேண்டும். (B.T).

மூக்கில் என்ஜியோமா (ANGIOMA), பைப்ரோமா (FIBROMA), ஆஸ்டியோ கிளாஸ்டோமா (OSTEO - CLASTOMA), பாபில்லோமா (PAPILLOMA), எடினோமா (ADENOMA), காண்டரோமா (CHONDROMA), ரைனோபைமா (RHINOPHYMA), கார்டோமா (CHORDOMA) போன்ற கட்டிகளும், வேறு சில நோய்களும் தோன்றுவதுண்டு. அவற்றின்

லக்கணங்கள், சிகிச்சை முறைகள் முதலியவற்றை அலோபதி மருத்துவ நூல்களில் விரிவாகக் கண்டு உணர்க.

யூனானி மருத்துவத்தில் மூக்கு நோய்கள் "அம்ராஜுல் அந்ப்" எனப்படுகின்றன. அம்மருத்துவத்தில் 1) நஜ்லா வஜுகாம் (பிரதிசியாயம்) 2) ருஆப் (நாஸாகதரத்தபித்தம்) 3) கசம் (க்ராணாஞ்ஞானம்) (ANOSMIA) 4) பசூருல் அந்ப் (அபீநசம், பீநசம்) 5) பூதிநஸ்யம் (OZAENA) 6) உதாஸ் (க்ஷவது - SNEEZING) 7) ஜபாபுல் அந்ப், ஹிக்காதுல் அந்ப் (நாஸா சோஷம் (RHINITIS SICCA) 8) பவாஸீருல் அந்ப் (நாஸார்சம் - POLYPUS NASI) 9) ஏஹ் திபாஸுச்சை பில் அந்ப் (நாஸாகத சல்யம் - FOREIGN BODY IN THE NOSE) 10) ஸுத்தயேனகரூம் (நாஸாப்ரதிநாஹம் (NASAL OBSTRUCTION) 11) புஸுர்குரூஹுல் அந்ப் (நாஸா கதபிடகா - நாஸாபாகம் - ULCERS OF THE NOSE - PUSTULES OF THE NOSE) 13) ஔராமுல் அந்ப் (நாஸாதாஹம் - தீப்த்தி-நாஸாசோதம் - ACUTE RHINITIS) ஆகிய நோய்களுக்கு விரிவான சிகிச்சை முறைகள் கூறப் பட்டுள்ளன. பெரும்பாலும் சிகிச்சைகள் ஆயுர்வேதத்தில் கூறப் பட்டுள்ளது போல மூலிகை மருந்துகளால் செய்யப்படும் முறைகளே விளக்கப்பட்டுள்ளன. ஆயுர்வேதத்திற்கும், யூனானி மருத்துவத்திற்கும் பெரும்பான்மை தொடர்பை எடுத்துக்காட்டவே இவ்விஷயம் இங்கு குறிப்பிடப்பட்டுள்ளது. புத்தகம் விரிவாகும் என்ற காரணத்தால் சிகிச்சை முறைகள் இங்கு விளக்கப்பட வில்லை.

## IX. முகத்தின் அமைப்பு

ஆயுர்வேத்தில் உதடு, நாக்கு, பல், ஈறு, தாடை, தொண்டை, கழுத்து ஆகியவற்றைச் சார்ந்த நோய்கள் முக நோய்கள் எனக் குறிப்பிடப்பட்டுள்ளன. தற்கால மருத்துவத்தில் பற்களைச் சார்ந்த நோய்கள் தனிப்பிரிவாகவும், மற்றவை ,E.N.T. மருத்துவப் பிரிவாகவும் கருதப்படுகின்றன.

விதைப்பை, முகவாய், பற்களைச் சார்ந்த மாமிசப்பகுதி, நாஸாபுடம், கர்ணமூலம், கண்களின் இடைவெளி ஆகியவை இரண்டு அங்குலம் அளவு கொண்டவையாகும்.

கழுத்துக்கும் இதயத்திற்கும் இடையே உள்ள பகுதியின் அளவு பன்னிரண்டு அங்குலம் ஆகும். முகத்தின் நீளம் பன்னிரண்டு அங்குலங்களாகும். வாயின் இடைவெளி, அதாவது திறந்த வாயின் இடைவெளி நான்கு அங்குலங்களாகும். கழுத்தின் சுற்றளவு இருபது அங்குலங்களாகும்.

சிபுகம் (முகவாய்), ஸ்ருக்கனி அல்லது முக கோணம் (CORNERS OF THE MOUTH) களசுண்டிகா, (UVULA) உபஜிஹ்விகா (TONSILS), கோஜிஹ்விகா (EPIGLOTTIS) ஆகியவை முகத்தின் கிளை உறுப்புகளாகும்.

இன்றைய மருத்துவத்தில் முகத்தைச் சார்ந்த சாரீரம் அமைப்பு கீழ்வருமாறு விளக்கப்பட்டுள்ளது:

கண்டம் அல்லது களம் (PHARYNX) எனப்படுவது மண்டை ஓட்டின் அடிப்பகுதி (BASE OF THE SKULL) முதல் முதுகுத்தண்டு என்புகளில் ஆறாவது கசேருகை (6TH CERVICAL VERTEBRA) வரை உள்ள பகுதியாகும். இது அடிப்பகுதியில் உணவுக் குழாய் (OESOPHAGUS) என்பதுடன் இணைந்திருக்கும். மேலிருந்து கீழாக இது மூன்று பகுதிகளாகக் கருதப்படும். அவை (1) நேஸோபாரிங்க்ஸ் (NASO PHARYNX) (2) ஓரோபாரிங்க்ஸ் (OROPHARYNX) 3) லேரிங்கோ பாரிங்க்ஸ் (LARYNGO - PHARYNX).

மேலே பேஸி-ஸ்பிநோயட் (BASIC-SPHENOID) பகுதி முதலாகக் கீழே மிருதுதாலு (SOFT PALATE) பகுதி வரை உள்ள பாகம் நேஸோ பேரிங்க்ஸ் எனப்படும். மிருதுதாலுப் பகுதியிலிருந்து எபிக்ளாடிஸ் (EPIGLOTTIS) முனைப்பகுதி வரை உள்ள பாகம் 'ஓரோபேரிங்க்ஸ்' எனப்படும். எபிக்ளாடிஸ் முனைப் பகுதியிலிருந்து ஒஸோபேகஸ் (OESOPHAGUS) பகுதி அல்லது கிரிகாயிட் என்பதன் குறுத்தெலும்பு (CRICOID CARTIL AGE) வரை உள்ள பகுதி லெரிங்கோபேரிங்க்ஸ் எனப்படும்.

பேரிங்க்ஸ் என்பது மூன்று புரைகளைக் கொண்டிருக்கும். எல்லாவற்றிற்கும் உள்ளான பகுதி சிலேத்துமக்கலையாக இருக்கும். நடுப்புரை ஸூத்ரமயதந்து அதாவது இழை நரம்புகளாலானது. புறப்பகுதி மாமிசச் சதையாகும். பேரிங்க்ஸ் சிலேத்துமச் சுரப்பிகளால் (MUCOUS GLANDS) மூடப்பட்டிருக்கும். பேரிங்க்ஸ் என்பதன் ஏதேனும் ஒரு பகுதியில் விரண வீக்கம் தோன்றினால் அது மற்ற பகுதிகளையும் சார்ந்து துன்பம் தரும்.

**'நேஸோபேரிங்க்ஸ்'** (NASOPHARYNX)

பேரிங்க்ஸ் எல்லைக்கோடு திடமாகவும், நிலையாகவும் இருக்கும். ஆனால் இதன் மேற்பகுதி மிருதுதாலு (SOFT PALATE) என்பதால் ஆனது. இந்தப்பகுதி ஈரப்பசை கொண்டு நிலையற்றதாக இருக்கும். இதன் பின் பிராசீரம் எதிர்பக்கத்தில் பிறைபடலம் கொண்டு, ஸ்பினாயிட் என்பு (SPHENOID BONE)

மற்றும் பேஸி ஆகிபிடல் (BASI-OCCIPITAL) ஆகியவற்றால் கூரையாக அமைந்திருக்கும். மேற்கூரையும், பின்பிராசீரமும் இணையும் பகுதியில் நிணநீர் திசுக்கூட்டம் இருக்கும். அது எடினாயிட்ஸ் (ADENOIDS) எனப்படும். இதை 'நேஸோ பேரின்ஜியல் டான்ஸில் (NASO-PHARYNGEAL TONSIL)' என்றும் கூறுவர். முன்பகுதியில் நேஸோ பாரிங்க்ஸ் மூக்குக் குகையின் இரு பின்துளை (POSTERIOR NARES OR CHOANAE) களால் மூக்கிலிருந்து வழியாக அமைந்திருக்கும். இதன் கீழ்ப்பகுதியில் மென்மையான நரம்பு இணைந்திருக்கும். இதற்கு பின் யுஷ்டேசியன் ட்யூப் (EUSTACHIAN TUBES) என்பதன் துளை இருக்கும். இதன்பின் யுஷ்டேசியன் குஷன்ஸ (EUSTACHIAN CUSHIONS) எனப்படும் மேடான பகுதி இருக்கும். இதற்குப் பின் பள்ளம் போன்ற அமைப்பு இருக்கும். இது FOSSAE OF ROSENMULLER எனப்படும். யுஷ்டேசியன் புறப்பகுதி சிலேத்துமகலையாலும், நேஸோபேரிங்க்ஸ் என்பதன் புறப்பகுதி கலையாலும் (சவ்வு) மூடப்பட்டிருக்கும். அதில் CILATED EPITHELIUM என்பதும், பல சிலேத்துமச் சுரப்பிகளும் (MUCOUS GLANDS) இருக்கும்.

### **'ஓரோ பேரிங்க்ஸ்** (ORO-PHARYNX)

மிருதுதாலுவின் (SOFT - PALATE) பின்பக்கத்தில் ஒரு வளைவு (ARCH) போல தொங்கிக் கொண்டிருக்கும் உறுப்பு சவ்வுமயமான மாமிசத்தாலானது. இதன் நடுவில் கலகுண்டிகா (UVULA) தொங்கிக் கொண்டிருக்கும். சிலருக்கு இது இரு பகுதிகளாக பிரிந்து காணப்படும். அது 'பைபிட்யுவுலா' (BIFID UVULA) எனப்படும். தாலுவின் ஒவ்வொரு பக்கத்திலும் சளிச்சவ்வு மற்றும் மாமிச பேசியின் இரு மடிப்புகள் (FOLD) நாக்கின் பக்கங்களில் கீழ்ப்பக்கத்தில் காணப்படும். இது முன் பக்கத்து மற்றும் பின்பக்கத்து (PILLARS OF THE FAUCES) கம்பங்களாகும். இந்தக் கம்பங்களுக்கு இடையில் பாஸியேல் அல்லது பேலெடின் (FAUCIAL OR PALATINE) டான்ஸில்ஸ் (TONSILS) இருக்கும். இவை லிம்பாயிட் டிஷ்யூ (LYMPHOID TISSUE) களாலானது. அவற்றின் கீழ் நாக்கின் ஓரத்தில் லிம்பாயிட் டிஷ்யூவின் பிண்டம் இருக்கும். அது லின்குயேல் டான்ஸில் (LINGUAL TONSILS) எனப்படும். பருவம் பெற்றவரின் டான்ஸில் பொதுவாக வாதுமையைப் போலக் காணப்படும். இதன் நீண்ட அக்ஷரேகை (LONGAXIS) நீண்டு (VERTICAL) காணப்படும். ஆனால் இதன் தோற்றத்திலும், பருமனிலும் வேற்றுமை காணப்படும். நாக்கின் அடிப்பகுதியின் பின்னால்

EPIGLOTTISன் ஆதாரம் காணப்படும். அங்கு GLOSSO-EPIGLOTIC LIGAMENT பந்தனியால் நாக்கு EPIGLOTTIS என்பதுடன் பிணைக்கப்பட்டிருக்கும். ஓரோபாரிங்க்ஸ் என்பதன் பின்பிராசீரத்தில் சிறு லிம்பைட் டிஷ்யூக்களின் கொத்துகள் காணப்படும். இவை அவ்வப்பொழுது வளர்ந்து வீங்குவதுண்டு. பொதுவாக வயது வந்தவர்களுக்கு டான்ஸிலின் பாதிப்பகுதி பேரிங்க்ஸ் என்பதன் பிராசீரத்தில் மறைந்திருக்கும்.

**'லேரிங்கோ பேரிங்க்ஸ்'** (LARYNGO PHARYNX)

பேரிங்க்ஸ் என்பதன் இந்தப் பகுதியில் (LARYNX) குரல் வளை இருக்கும். எபிக்ளடிஸ் (EPIGLOTTIS) என்பதன் முன் இரு வெற்றிடங்கள் உள்ளன. இவை 'வெபலெக்யூலி' (VALLECULAE) எனப்படும். கிளஸி எபிக்ளடிகிபந்தணியால் இவை மத்ய ரேகையில் பிரிவு கொண்டிருக்கும். இவற்றின் பின்னால் PHARYNGO EPIGLOTIC பந்தணி இருக்கும். இது சிலேத்துமக்கலையின் ஆவர்தனமாகும். பந்தணியின் பின்னால் ஒவ்வொரு பக்கத்திலும் PYRIFORM SINUSES இருக்கும். பேரிங்க்ஸ் என்பதன் பெரும் பகுதியால் இந்த SINUSES செய்யப்பட்டிருக்கும். இவை பேரிங்க்ஸ் என்பதன் அடிப்பகுதியை இரண்டாகப் பிரிக்கும். குரல் ஒலிக்கும் போதும், உணவு உட்கொள்ளும் போதும் இவை சிறிது திறந்து கொள்ளும்.

பேரிங்க்ஸ் என்பதன் சளிச்சவ்வின் பின்னால் மாமிசத்திசு, அதன் பிறகு என்பாலான உறுப்பு உள்ளன. மூச்சு விடுதல், உணவு உட்கொள்ளுதல் ஆகிய செயல்களுக்கு மாமிசபேசியின் அசைவு தேவை. இதில் முக்கிய பேசிகள் ஸங்கோசனீதளமாகும். இவை மேலும் கீழுமாக இருக்கும். இவை பேரிங்க்ஸ் என்பதை வட்டமாகச் சூழ்ந்திருக்கும். இவற்றைத் தவிர பேரிங்க்ஸ் என்பதைச் சுருக்க, மற்றும் மென்மையான தாலுவைத் தேவைக்கேற்ப அசைக்க இரு வேறு வேறு பேசிதளங்கள் உள்ளன. இவை நேஸோபேரிங்க்ஸ் என்பதை வாய்க்குகையுடன் இணைக்கும். உணவு உட்கொள்ளும் போது மூக்கினுள் போகாமல், மூச்சு விடும்போது நேஸோபேரிங்க்ஸ் திறந்திருக்கவும் 'வை செயல்படுகின்றன. .

பேரிங்க்ஸ் என்பதன் இரத்த ஓட்டம் அஸென்டிங் பேலெடின் (ASCENDING PALATINE) மற்றும் டான்ஸிலார் தமனி வழியாக, எக்ஸ்டர்னல் மாக்ஸிலரி (EXTERNAL MAXILLERY ) தமனி வழியாக, அஸென்டிங் பேரின்ஜெல் (ASCENDING PHARYNGEAL) தமனி மற்றும் இன்டர்னல் மாக்ஸிலரி (INTERNAL MAXILLARY) தமனி வழியாக நடைபெறும்.

# X. முக நோய்கள்

ஸுசுருதர் நிதானஸ்தானத்தில் முக நோய்களைப்பற்றி விளக்கியுள்ளார். சாலாக்ய தந்திரத்தைச் சேர்ந்த கண், மூக்கு, காது, தலை நோய்களைப் பற்றிய விளக்கங்களை உத்தரதந்திரத்தில் கூறிய அவர் முகநோய்களைப் பற்றி மட்டும் நிதானஸ்தானத்தில் கூறியுள்ளது ஏன்? இதை ஆராய்ந்த நிபுணர்கள் சிலர் முக நோய்களைப் பற்றிய விளக்கம் ஸுசுருதர் தந்துள்ளார் என்றும், மற்ற உத்தரதந்திரத்தைப் பிற்காலத்தில் வேறு ஆசிரியர் எழுதி, இந்தத் தந்திரத்துடன் இணைத்துள்ளார் என்றும் நினைக்க வேண்டியுள்ளதாகத் தெரிவிக்கின்றனர்.

முகநோய்களை ஸுசுருதர் முறையாக கூறியுள்ளார். அதாவது உதடு, ஈறுகள், பல், நாக்கு, உள்தாடை, தொண்டை மற்றும் இவை அனைத்தையும் சேர்ந்தவை முக நோய்கள் என அவர் முறைப்படுத்தியுள்ளார். மொத்தம் இந்த ஏழு நிலைகளைச் சார்ந்து அறுபத்தைந்து நோய்கள் தோன்றக் கூடும் என்பதையும் அவர் கணக்கிட்டுள்ளார்.

அஷ்டாங்கஹ்ருதயத்தில் வாக்படர் முகநோய்கள் 75 என விளக்கியுள்ளார். பாவப்ரகாசர் 67 முக நோய்களைத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இவற்றின் விளக்கம் வருமாறு:-

## உதட்டு நோய்கள்

ஸுசுருதர் தம் நூலில் கூறியுள்ள உதட்டைச் சார்ந்த நோய்கள் எட்டு. அவையாவன:-

1. வாதத்தால் தோன்றும் உதட்டு நோய் - CRACKED CHAPPED LIPS
2. பித்தத்தால் தோன்றும் உதட்டு நோய் — இம்மூன்றும்
3. கபத்தால் தோன்றும் உதட்டு நோய் — ஆங்கிலத்தில்
4. மூன்று தோஷங்களாலும் தோன்றும் உதட்டு நோய் — HERPES LABIALIS எனக் கூறப்படுகின்றன.
5. ரக்த (துஷ்ட)க் கேட்டால் தோன்றும் உதட்டு நோய் - HIP - GRANULOMA
6. மாமிச (துஷ்ட)க் கேட்டால் தோன்றும் உதட்டு நோய் - EPITHELIOMA

7. மேதோ துஷ்ட (கொழுப்பு மிகுவதால் தோன்றும்) உதட்டு நோய் - MACROCHELIA OR HERPES LABIALIS HYPERTROPHY OF THE LIPS

8. அபிகாதஜ (அடிபடுவதால் தோன்றும்) உதட்டு நோய் - HARE - LIP

வாக்படர் இவற்றைத் தவிர மூன்று உதட்டு நோய்கள் பற்றியும் கூறுகிறார். அவையாவன:-

1. கண்டோஷ்டம் (இது அபிகாதஜ வகையைச் சேர்ந்ததேயாகும்.) - HARE - LIP
2. ஓஷ்டார்புதம் - EPITHELIOMA
3. ஜலார்புதம் - CYST IN THE LIPS

(வாத கபங்கள் சேர்ந்து சீற்றமுறுவதால் உதட்டில் தோன்றும் கொப்புளங்கள்).

# XI. பல்நோய்கள்

## தந்தமூல (ஈறுகளில்) நோய்கள்

ஸுசுருதர் ஈறுகளில் தோன்றும் நோய்கள் பதினைந்து எனக் குறிப்பிட்டுள்ளார்.

அஷ்டாங்க ஹ்ருதயத்தில் பதிமூன்று எனவும், பாலபிரகாசத்தில் பதினாறு எனவும் கூறப்பட்டுள்ளன.

1. சீதாதம் - BLEEDING OF SPONGY GUMS
2. தந்தபுப்புடகம் - GINGIVITIS GUMBOIL, ALVEOLAR OR APICAL ABSCESS
3. ததாவேஷ்டகம் - PYORRHOEA ALVEOLARIS
4. சௌஷிரம்
5. மகாசௌஷிரம் - APICAL ABSCESS OR CHRONIC GINGIVITIS
6. பரிகரம் - CANCRUMORIS OR GANGRENOUS STOMATITIS
7. உபகுசம் - STOMATITIS
8. தந்தவைதர்பம் - ALLERGIC GUMS

**(உண்மையில் சௌஷிரம் முதலாக வைதர்பம் வரை உள்ள நோய்கள் தந்தவேஷ்ட பிரகோபத்தின் (GINGIVITIS) வேறு வேறு**

நிலைகளேயாகும்.)

9. தந்தவர்தனம் - EXTRA TOOTH

(சிலர் இதை WISDOM TOOTH எனக் கருதுகின்றனர்.)

10. அதிமாம்சம் - IMPACTED WISDOM TOOTH

மற்ற ஐந்து வகையான ஈறு நோய்கள் தந்த நாடியைச் சேர்ந்தவை. ஆங்கிலத்தில் இவை SINUSES OF GUMS எனப்படும்.

)வை வாதிக - பைத்திக - சிலேஷ்மிக - ஸாந்நிபாதிக - சல்யஜங்கள் என ஐந்து வகைப்படும் எனக் கூறி, மொத்தம் பதி னைந்து வகையான ஈறு நோய்களை ஸுசுருதர் விளக்கியுள்ளார்.

**தந்தகத (பற்களைச் சார்ந்த) நோய்கள்**

பல் நோய்கள் எட்டு வகைப்படும் என ஸுசுருதர் கூறியுள்ளார். அவற்றின் விளக்கம் வருமாறு :

(1) தாளனம் - TOOTH - ACHE OR ODONTINA OR CRACKED TOOTH

(2) கிரமிதந்தம் - DENTAL CARIES

(3) தந்தஹர்ஷம் - ODONTITIS DUE TO EXPOSED NERVE FILAMENT, ATTRITION.

(4) மஞ்சனகம் - CRACKED OR FISSURED TOOTH

(5) தந்தசர்க்கரா - TARTARS

(6) கபாலிகா - ENAMEL SEPARATION

(7) சியாவதந்தகம் - BLACK TOOTH

(8) ஹநுமோக்ஷா - DISLOCATION OF THE JAW OR MANDIBLE

அஷ்டாங்கஹ்ருதயத்தில் வாக்படர் இந்த எட்டுடன் (1) கராளதந்தம் (ILLFORMED TEETH) (2) தந்தசாலம் (LOOSE TOOTH) என்பனவற்றையும் சேர்த்து பத்து எனப் பல் நோய்களைக் கணக்கிட்டுள்ளார். அவர் தாளனம் என்பதை சீததந்தம் என்றும், மஞ்சனகம் என்பதை தந்த பேதம் எனவும் குறிப்பிடுகிறார். ஸுசுருதர் கூறிய ஹநுமோக்ஷத்தை வாக்படர் கூறவில்லை. அஷ்டாங்க ஹ்ருதயத்தில் கூறப்பட்டுள்ள பல் நோய்களாவன :- 1) சீததந்தம், 2) தந்தஹர்ஷம் 3) தந்தபேதம் 4) தந்தசாலம் 5) கராள தந்தம் 6) அதிதந்தம் 7) தந்தசர்க்கரா 8) கபாலிகா 9) சியாவதந்தம் 10) கிருமிதந்தம் என்பனவாம்.

# XII. நாக்கைச் சார்ந்த நோய்கள்

வாத பித்த கபதோஷங்களால் தோன்றும் நாக்கு நோய்களாகிய கண்டகங்கள் மூன்றுடன் அலாஸம், அதிஜிஹ்வா என்கிற வேறு இரண்டும் சேர்ந்து நாக்கைச் சார்ந்த நோய்கள் மொத்தம் ஐந்து என ஸுசுருதர் கூறியுள்ளார். வாக்படர் அதிஜிஹ்வா என்பன நாக்கு நோயாகக் கொண்டு மொத்தம் நாக்கு நோய்கள் ஆறு எனக் கணக்கிட்டுள்ளார். ஸுசுருதர் கருத்தின்படி அதிஜிஹ்வா என்பது தொண்டை நோயாகும்.

(1) வாதஜஜிஹ்வா கண்டகம் - CRACKED OR FISSURED TONGUE

(2) பித்தஜஜிஹ்வாகண்டகம் - RED GLAZED TONGUE

(3) கபஜஜிஹ்வாகண்டகம் - ICHTHYOSIS

(4) அலாஸம் - CARCINOMA (சிலர் இது SUBLINGUAL ABSCESS எனக் கருதுகின்றனர்).

(5) அதிஜிஹ்வா - RANULA OR CYSTIC SWELLING

ஸுசுருதரின் கொள்கைப்படி தாலுகத நோய்கள் கலசுண்டிகா, துண்டகேரி, அத்ருஷம், மாம்ஸகச்சபம், அர்புதம், மாம்ஸஸங்காதம், தாலுபுப்புடம், தாலுசோஷம், தாலுபாகம் என ஒன்பதாகும்.

அவற்றின் விளக்கம் வருமாறு :

(1) கலசுண்டிகா - ELONGATED UVULA

(2) துண்டிகேரி - ELONGATED TONSIL OR TONSITITIS

(3) அத்ருஷம் - PALATITIS

(4) கச்சபம் (மாம்ஸகச்சபம்) - ADENOMA OF PALATE

(5) அர்புதம் - EPITHELIOMA

(6) மாம்ஸஸங்காதம் - FIBROMA, ADENOMA

(7) தாலுபுப்புடம் - EPULIS OF THE PALATE

(8) தாலுசேஷம்

(9) தாலுபாகம் - ULCERATION OF THE PALATE

அஷ்டாங்கஹ்ருதயத்தில் வாக்படர் கூறிய தாலு நோய்கள் எட்டு. அவையாவன:- (1) தாலுபிடகா, (2) கலசுண்டிகா (3) தாலுஸம்ஹதி (4) தாலு அர்புதம் (5) தாலுகச்சபம் (6) தாலுபுப்புடம் (7) தாலுபாகம் (8) தாலுசோஷம் என்பனவாம்.

வாக்படர் தாலுபாகம் நான்கு வகைப்படும் எனக் கூறி யுள்ளார். அவையாவன: 1) சாதாரணம் (SIMPLE) 2) பிரஞ்சுஜம் (SYPHLITIC) 3) சர்மகீலஜம் (LUPOIDAL 4) காதகார்புதம் (EPITHELIOMA).

## XIII. கண்டகத (தொண்டையைச் சார்ந்த) நோய்கள்

ஸுசுருதர், தொண்டையைச் சார்ந்த நோய்கள் பதினேழு எனக் குறிப்பிட்டுள்ளார். அவையாவன: - ரோஹிணி என்பது ஐந்து வகை, கண்டசாலூகம், அதிஜிஹ்வம், வலயம், பலாஸம், ஏகவிருந்தம், சதக்னி, கிலாயு, கலவித்ரதி, கலௌகம், ஸ்வரக்னம், மாமிசதானம், விதாரி என்பனவாம்.

1. ரோஹிணி மூன்று தோஷங்களால் தோன்றுவது. மூன்று தோஷங்களும் சேர்வதால் தோன்றுவது மற்றும் இரத்தச்சீற்றத்தால் தோன்றுவது என ஐந்து வகைப்படும். இவற்றில் ரோஹிணி என்பது ஆங்கிலத்தில் DIPHTHERIA எனப்படுவதாகும்.

தோன்றிய பகுதியைக் கருதி அலோபதி மருத்துவத்தில் இந்நோய் பலவகைப்படும். (1) கலதோரணிகா கதரோஹிணி (FACIAL) (2) ஸ்வர்தந்திரகத ரோஹிணி (3) அநுநாஸிக ரோஹிணி (4) கர்ணரோஹிணி (5) நேத்ரகலாகத ரோஹிணி (CONJUNCTIVAL) (6) யோனிகதரோஹிணி (7) விரணோத் பன்ன ரோஹிணி என்பனவாம்.

2. கண்டசாலூகம் - (ADENOIDS)
3. அதிஜிஹ்வம் - EPIGLOTTIS
4. வலயம் - TUMOUR IN THROAT
5. வலாஸம் - BENIGN OR MALIGNANT TUMOUR
6. ஏகவிருந்தம்
7. கிலாயு - BENIGN GROWTH OR CYST
8. சதக்னி - RETROPHARYNGEAL ABSCESS
9. காலளகம்
10. ஸ்வரக்னம் - PARALYSIS OF LARYNX
11. மாம்ஸதானம் - DIPHTHERIA OR MALIGNANT TUMOUR
12. விதாரி

வாக்படர் கூறிய தொண்டை நோய்கள் பதினெட்டு. அவை : 1-5. ரோஹிணி ஐந்து வகை 6. கண்டசாலூகம் 7. விருந்தம் 8. துண்டிகேரிகா 9. கலௌகம் 10. வலயம் 11. கிலாயுகம் 12. சதக்னி 13. கலவித்ரதி 14. கலார்புதம் 15. வாதஜகலகண்டம் 16. கபஜகலகண்டம் 17. மேதோஜகலகண்டம் 18. ஸ்வரக்னம் என்பனவாம்.

தொண்டை நோய்களில் ரோஹிணி முக்கியமானது. இது பெரும்பாலும் காணப்படுவதும், சிறு குழந்தைகளுக்கு கொடும் விளைவைத் தோற்றுவிப்பதுமான நோயாகும்.

**ரோஹிணி** (DIPHTHERIA)

வாதம், பித்தம், கபம் என்பன தனித்தனியாகவோ அல்லது ஒன்று சேர்ந்தோ அத்துடன் இரத்தமும் சீற்றமடைந்து தொண்டைப் பகுதி மாமிசத்தைக் கெடுத்துத் தொண்டையை அடைக்கும் மாமிச முளைகளைத் தோற்றுவிக்கும் நோய் ரோஹிணியாகும். இது மிகவும் கொடியதும், உயிரைப் போக்கவல்லதுமாகும். இதன் வகைகளில் மூன்று தோஷங்களும் ஒன்று சேர்ந்து சீற்றமுறுவதால் தோன்றியதும், இரத்தச் சீற்றத்தால் தோன்றியதுமான ரோஹிணி சிகிச்சையால் தீர்க்க இயலாதவையாகும்.

**வாதத்தால் தோன்றும் ரோஹிணி**

நாக்கின் நான்கு ஓரங்களும் மிக்க துன்பம் விளைவித்துத் தொண்டையை அடைக்கும் மாமிச முளைகளை தோன்றச் செய்து, தொண்டை அடிக்கடி உலர்ந்து போகும் நிலை கொண்டது வாதத்தால் தோன்றும் ரோஹிணியாகும். தாடை, காதுப்பகுதிகளில் இந்நோய் கடுமையான வலியைத் தோற்றுவிக்கும். அலோபதியில் DIPHTHERIA எனப்படும்.

**பித்தத்தால் தோன்றும் ரோஹிணி**

பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் ரோஹிணியில் மாமிச முளைகள் வெகு விரைவாகத் தோன்றும். கடுமையான காய்ச்சல் காணப்படும். மிக விரைவில் எரிச்சலைத் தோற்றுவித்துக் கொண்டு முற்றிவிடும். நாவறட்சி, நினைவிழத்தல், தொண்டையில் புகை மண்டியிருத்தல் போன்ற உணர்ச்சிகள் காணப்படும். அப்பகுதி தொடு உணர்ச்சியை தாங்க இயலாததாக இருக்கும். இது அலோபதியில் TOXAEMIA உடன் கூடிய DIPHTHERIA எனப்படும்.

**கபத்தால் தோன்றும் ரோஹிணி**

கபத்தால் தோன்றும் ரோஹிணியில் தொண்டை உலர்ந்து போகும். ஆனால் இந்த நோய் மெல்ல மெல்ல பக்குவம் பெறும் (முற்றும்). தொண்டை கொழகொழப்புடன் பளுவாகத் தோன்றும். இது அலோபதியில் MILD DIPHTHERIA எனப்படும்.

**மூன்று தோஷங்களாலும் தோன்றும் ரோஹிணி**

மூன்று தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றும் ரோஹிணியில் முன் கூறிய மூன்று வகை இலக்கணங்களும் சேர்ந்திருக்கும். மாமிசம் முதலியன மிகவும் பருத்து, நோய் பரவி அதிக அளவில் துன்பம் விளைவிப்பதாகக் காணப்படும். இது அலோபதியில் கடுமையான நிலையில் உள்ள டிப்தீரியா எனக் கருதப்படுவதாகும்.

**இரத்த சீற்றத்தால் தோன்றும் ரோஹிணி**

தொண்டையில் பல கொப்புளங்கள் போன்றவை தோன்றி, பித்தச் சீற்றத்தால் ஏற்படும் நோய்க்கு உரிய இலக்கணங்கள் காணப்படுதல் இரத்தச் சீற்றத்தால் தோன்றிய ரோஹிணி நோயாகும்.

விரைவாகத் தக்க சிகிச்சை மேற்கொள்ளாவிடில், வாதத்தால் தோன்றிய ரோஹிணி ஏழு நாட்களிலும், பித்தத்தால் தோன்றியது நான்கு நாட்களிலும், கபத்தால் தோன்றியது மூன்று நாட்களிலும், மூன்று தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றுவது உடனேயும் உயிரைப் போக்க வல்லவை என நியாய சந்திரிகை எனும் மருத்துவ நூல் கூறுகிறது.

இந்நோய்க்கு ஆயுர்வேத முறையில் செய்யத்தக்க சிகிச்சைகள்: 1) ரக்த மோக்ஷணம் 2) வமனம் 3) தூம்ரபானம் 4) கண்டூஷம் 5) நசியகர்மா.

வாதத்தால் தோன்றும் ரோஹிணிக்கு ரக்தமோக்ஷணத்திற்குப் பிறகு லவண பிரதிஸாரணம் (உப்பு மருந்தைத் தேய்த்தல்), அடிக்கடி இளஞ்சூடுள்ள எண்ணெய் மருந்தை வாயில் கொண்டு கண்டூஷம் (கொப்பளித்தல்) செய்தல் ஆகியவை சிறப்பான சிகிச்சை முறைகளாகும்.

பித்தத்தால் தோன்றும் ரோகிணியில் சிவப்புச் சந்தனம், சர்க்கரை, தேன் ஆகியவற்றால் தேய்த்தல், திராட்சை, சிற்றீச்சை கஷாயம் ஆகியவற்றால் கபள கிரஹணம் (வாயில் கஷாயத்தைச் சிறிது நேரம் வைத்திருந்து பிறகு உமிழ்தல்) எனும் சிகிச்சைகள் மேற்கொள்ளத்தக்கவை.

கபத்தால் தோன்றிய ரோஹிணிக்குக் கடுகரோஹிணி, ஒட்டடை ஆகியவற்றைத் தேய்த்தல், வெள்ளைக்காக்கணாங் கொடி, வாயுவிடங்கம், நேர்வாளம் ஆகியவற்றாலான எண்ணெ யில் இந்துப்புவை கலந்து நசியமாகப் பயன்படுத்துதல் என்பன சிறப்பான சிகிச்சைகளாகும். மற்றும் இந்த எண்ணெய் மருந்தையே கபளதாரணத்திற்குப் பயன்படுத்த வேண்டும்.

**கண்டசாலூகம்** (ADENOIDES OR NASOPHARYNGEAL TONSIL)

கபத்தின் சீற்றத்தால் தொண்டையில் சற்று உருண்டையான தோற்றத்தில் முள்ளைப் போல சுரசுரப்பு கொண்டு நிலையாக இருக்கும் கட்டி போன்ற நோய் கண்டசாலூகம் எனப்படும். இது அறுவைச் சிகிச்சையால் நீக்கத்தக்கதாகும்.

வாக்படர் கொள்கையின்படி கண்டசாலூகம் எனும் நோயில் தோன்றும் மேல் எழும்பிய வீக்கம் இந்நோயில் தொண்டையை அடைத்துக் கொள்ளும். மாமிசமுளைகள் நிரம்பிய கட்டி போலத் தோன்றும் நோயாகும்.

ஸுசுருதர் இந்நோய்க்கு துண்டகேரா (TONSIL) எனும் நோய்க்குக் கூறிய முறையில் அதாவது அறுவைச் சிகிச்சையை மேற்கொள்ள வேண்டும் எனக் கூறியுள்ளார்.

1. இரத்தமோக்ஷணம் 2. துண்டகேரியைப் போல பிளப்பது அல்லது கீறுவது எனும் அறுவைச்சிகிச்சை முறைகளைக் கையாளுதல் இதற்குச் செய்யத்தக்கவை.

ஒரு முறை நெய்யுடன் கூடிய யவதானியச் சோற்றை குறைந்த அளவில் உட்கொள்ள வேண்டும். ரோஹிணி முதலியவற்றிற்கு போல இரத்த மோக்ஷணமும், கபத்தாலான ரோஹிணிக்கு கூறியது போல வேறு சிகிச்சை முறைகளும் மேற்கொள்ளத்தகும்.

மேலும் தூய்மைப்படுத்தும் மருந்துகளால் தெளித்தல் (SPRAYING), காட்லிவர் எண்ணெய், ஆர்ஸெனிக் முதலிய வற்றைப் பயன்படுத்துதல், ஆழ்ந்த சுவாச பயிற்சி (BREATHING EXERCISE) செய்தல் ஆகியவை நன்மை தரும்.

**அதிஜிஹ்வா** (EPIGLOTTIS)

கபம் மற்றும் ரக்த தோஷத்தால் நாக்கு முனையைப் போல நாக்கின் அடிப்பகுதியில் தோன்றும் வீக்கம் அதிஜிஹ்வா எனப்படும். இந்நோய் பக்குவம் பெற்றால் கைவிடத்தக்கதாகி விடும். இந்நோயை ஸுசுருதர் 'உபஜிஹ்வா' எனக் கூறியுள்ளார்.

நியாயசந்திரிகையில் 'அதிஜிஹ்வா' என்பது நாக்கின் அடிப்பாகத்தின் மேற்பகுதியில் தோன்றுவது எனவும், அங்கு

கீழ்ப்பகுதியில் தோன்றுவது உப ா எனவும் கூறப் பட்டுள்ளது.

)ன்றைய மருத்துவ முறைப்படி இது விரணவீக்கத்தால் (INFLAMMATORY) தோன்றுவது எனக் கூறப்படுவதாகும். ஸுசுருதர் இதற்கு கீறி எடுத்தல், க்ஷார மருந்தைத் தேய்த்தல் சிரோவிரேசன நஸியத்தைப் பயன்படுத்துதல், கண்டூஷம், புகைபிடித்தல் எனும் முறைகளைக் கூறியுள்ளார்.

**வலயம்** (TUMOUR IN THE THROAT, BENIGN OR MALIGNANT)

கபம் சீற்றமடைந்து தொண்டையில் நீண்டு மேலெழும்பிய வீக்கத்தைத் தோன்றச் செய்யும் வலயம் எனும் நோய். உணவுக் குழாயை இது தடுத்து விடும். சரகர் இதை 'பிடாலிகை' எனக் கூறியுள்ளார். சிகிச்சைக்கு உட்படாத நோயாகும்.

**வலாஸம்** (TUMOUR, BENIGN OR MALIGNANT IN THE LARYNX OR PHARYNX).

கபமும், வாயுவும் சீற்றம் பெறுவதால் தொண்டையில் மிக்க வேதனையுடன் சுவாஸ நோயை தோற்று வித்து உயிர் நிலையைத் துன்புறுத்தும், வீக்கம் தோன்றும். இது வலாஸம் எனப்படும். இது சிகிச்சைக்கு உட்படாத நோயாகும் அல்லது மிகவும் கஷ்டப்பட்டுச் சிகிச்சை செய்யத்தக்கதாகும்.

**ஏகவிருந்தம்**

கபமும், இரத்தமும் சீற்றம் பெறுவதால் தோன்றும் நோயாகும் ஏகவிருந்தம். இதில் தொண்டையில் உருண்டையான வீக்கம் தோன்றும். அரிப்பும், எரிச்சலும் காணப்படும். கடினமும், பளுவும் உடையதாகும். ஆனால் பக்குவம் பெறாது. இது ஏகவிருந்தம் எனப்படும். இதற்கு இரத்த மோக்ஷணம் செய்து தூய்மைப்படுத்தும் முறையை மேற்கொள்ள வேண்டும். சிரோவிரேசனம், புகைபிடித்தல், மேல் பூச்சு மருந்து, கார மருந்தைப் பயன்படுத்துதல் முதலிய முறைகளால் தூய்மைப் படுத்த வேண்டும்.

**விருந்தம்**

பித்தமும், ரத்தமும் சீற்றமுறுவதால் தோன்றும் நோயாகும் விருந்தம். இது தொண்டையில் மேல் எழும்பிக் கடும் எரிச்சலையும், காய்ச்சலையும் தோற்றுவிக்கும் வீக்கமாகும். ஊசியால் குத்துவது போன்ற வலி தோன்றினால் வாத, இரத்த சீற்றத்தால் தோன்றியது என அறிக.

கபத்தாலான ரோஹிணிக்குப் போல இதற்குச் சிகிச்சை புரிய வேண்டும் என வாக்படர் கூறியுள்ளார்.

**கிலாயு** (BENIGN GROWTH OR CYST)

கபமும் இரத்தமும் சீற்றமுறுவதால் தொண்டையில் நெல்லிக்கொட்டையைப் போன்றதும், சிறிதளவு வலியைத் தோற்றுவிப்பதும், அசையாமல் நிலை பெற்றிருப்பதுமான கட்டி தோன்றும். இது 'கிலாயு' எனப்படும். தொண்டையில் ஏதோ உணவுப் பொருள் அடைத்துக் கொண்டிருப்பது போன்ற உணர்ச்சி ஏற்படும். மூச்சிழுத்து விடுவதும், உணவு உட்கொள்வதும் சிரமமாகும். இதற்கு அறுவை மூலம்தான் சிகிச்சை செய்ய வேண்டும்.

**கலவித்ரதி** (RETROPHARYNGEAL OR PERITONSILAR ABSCESS)

மூன்று தோஷங்களும் சீற்றம் பெறுவதால் தொண்டை முழுவதிலும் பரவி வீக்கம் தோன்றும். மூன்று தோஷங்களாலும் தோன்றக் கூடிய துன்பங்கள் இணைந்து காணப்படும். இத்தகைய கட்டி கலவித்ரதி எனப்படும். இந்நோய் விரைவில் தோன்றி விரைவாகவே பக்குவம் பெறும். கடும் வலியைத் தோற்றுவிக்கும். கெட்ட நாற்றம் கொண்டு சீழைப் போன்று திரவம் பெருகிக் கொண்டிருக்கும்.

இதற்குச் சிகிச்சை :- நன்கு முழுவதும் பக்குவம் பெற்ற பிறகு, கட்டி உயிர் நிலைப்பகுதியில் தோன்றியில்லாத போது, பேதனம் (பிளத்தல்) எனும் அறுவைச் சிகிச்சையைக் கையாள வேண்டும். பேதனம் செய்த பின் கண்டூஷம், தூய்மைப்படுத்தல், விரணத்தை ஆற்றும் சிகிச்சை முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

கலவித்ரதியில் இரத்தத்தை வெளியேற்றிய பிறகு திரிபலை, மஞ்சள், ரஸாஞ்சனம் பாச்சோத்தி, கைரிகம், இந்துப்பு, சிவப்புசந்தனம், திப்பிலித்தூள் ஆகியவற்றின் கஷாயத்தைக் கொண்டு கண்டூஷம் (வாயில் மருந்துப்பொருளை சிறிது நேரம் கொண்டு நன்கு கொப்பளித்தல் எனும் முறையைச்) செய்து, மேலும் அம்மருந்துப் பொருள்களான தூளைக் கொண்டு நோயுற்ற பகுதியில் தடவித் தேய்க்க வேண்டும்.

இந்நோய்க்கு அலோபதி முறையில் நோயின் துவக்கத்தில் STREPTO STAPHYLO COCCAL INFECTIONனில் நோய் அணுக்களை ஒழிக்கும் பெனிஸிலின் (PENICILLIN), டெட்

ராஸைக்ளின் (TETRACYCLINE), கந்தகம் (SULPHA) ஆகிய வற்றைச் சார்ந்த மருந்துகள் பயன்படுத்தப்படுகின்றன. KOCH'S INFECTION ஏற்பட்ட போது ஸ்ட்ரெப்டோமைஸின் (STREPTO-MYCIN) கொடுப்பது முக்கியமாகும்.

**கலெளகம்** (RETROPHARYNGEAL ABSCESS)

கபமும் இரத்தமும் சீற்றமடைவதால் தொண்டைப்பகுதியில் வீக்கமும், கடும் காய்ச்சலும் தோன்றும். உணவு நீர் உட்கொள்ளவும், மூச்சை இழுத்து விடவும் இயலாத அளவில் இந்த வீக்கம் காணப்படும். தொண்டையின் உட்பகுதியிலும், புறப்பகுதியிலும் கூட வீக்கம் காணப்படும். தலைப்பளு, சோம்பல், வாயிலிருந்து எச்சில் ஒழுகிக்கொண்டிருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 'டிப்தீரியா' விலும் இந்த இலக்கணங்கள் உண்டு. ஆனால் இந்நோயில் காணப்படும் அளவிற்கு வீக்கம் அந்நோயில் காணப்படாது.

இந்நோய் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும். ஆனால் வீக்கத்தைத் தணிக்கவும், நோயைத் தோற்றுவிக்கும், உயிரணுக் களை அழிக்கவும் மருந்துகளைக் கொடுக்கலாம்.

**ஸ்வரக்னம்** (TUBERCULOSIS OR CANCER OF THE LARYNX OR PARALYSIS OF THE LARYNX)

வாதத்தின் சீற்றத்தால் மூச்சுக்குழாய்ப்பகுதியில் தடை ஏற் பட்டு நோயாளி மிகவும் சிரமப்பட்டு மூச்சை உட்கொண்டு வெளிப்படுத்தும் நிலை தோன்றிய போது 'ஸ்வரக்னம்' எனும் நோய் தோன்றியுள்ளதென்று உணர்க. மூச்சு விடுவதில் மிகவும் சிரமம், குரல் ஒலிக்காமை, தொண்டை உலர்ந்து போதல், தொண்டை வலிவின்றியிருத்தல், கண்கள் இருண்டு போதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். நோயாளி நினைவிழந்த வரைப் போல் காணப்படுவார். எப்பொழுதும் வேகமாக மூச்சிழுத்துவிட்டுக்கொண்டிருப்பார்.

இந்நிலை சுவாச காச நோயிலும் (PULMONARY TUBER-CULOSIS) காணப்படும்.

இந்நோய் எளிதில் சிகிச்சையால் தீர்க்க முடியாததாகும்.

**மாம்சதானம்** (CELLULITIS OR CANCER OF THE THROAT)

மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தொண்டையில் பரவும் தன்மை கொண்டு, மிக்க துன்பம் விளைப்பதான வீக்கம் மெல்ல மெல்ல தொண்டையில் தடையைத் தோற்றுவித்துக் கொண்டு தோன்றும். இது தொங்கிக் கொண்டிருக்கும். இந்நோய் சிகிச்சை யால் தீர்க்க இயலாததாகும்.

**விதாரி** (GANGRENOUS STOMATITIS OR RETROPHARYNGEAL ABSCESS) (AFTER BURSTING)

பித்தமும், இரத்தமும், சீற்றம் பெறுவதால் தொண்டைக்குள் எரிச்சலையும், ஊசியால் குத்துவது போன்ற வலியையும் வாய்க்குள் தோற்றுவிக்கும் வீக்கம் விதாரி எனப்படும். இதில் மாமிசம் சிதையத் துவங்கும். நோயாளி எந்தப் பக்கத்தில் ஒருக்களித்துக் கொள்வாரோ அந்தப் பக்கத்திற்கு வீக்கம் செல்லும். இந்நோயும் சிகிச்சைக்கு உட்படாததாகும்.

**கலார்புதம்** (BENIGN THROAT TUMOUR)

நாக்கின் முடிவில் மற்றும் தொண்டை துவங்கும் பகுதியில் சீற்றமடைந்த தோஷம் நிலைபெற்று, சிவப்பு நிறத்துடன் துன்பமின்றி பக்குவம் பெறாமல் வீக்கம் காணப்பட்டால் அது கலார்புதம் எனப்படும்.

கட்டி முற்றிய நிலையில் இது பருக்காமல் இருந்தால் வெட்டி எடுத்து விட வேண்டும். பிறகு ஸர்ஜக்ஷாரம், சுக்கு, தேன், எண்ணெய் ஆகியவற்றைக் கலந்து அதனால் நோயுற்ற பகுதியைத் தேய்த்து விட வேண்டும். சீந்தில் கொடி, வேப்பிலை அல்லது பட்டை ஆகியவற்றின் விழுதின் கஷாயத்தில் தேனும், எண்ணெயும் கலந்து அதனால் கண்டூஷம் செய்விக்க வேண்டும். யவதானிய சோற்றை உண்ணச் செய்ய வேண்டும். கடுகு எண்ணெய் போன்ற தீக்ஷ்ணத்தன்மையுள்ள எண்ணெயை நசிய மருந்தாகப் பயன்படுத்துவதுடன், அந்த எண்ணெயைத் தேய்த்துக் கொண்டு குளிக்கச் செய்ய வேண்டும்.

**கலகண்டம்** (GOITRE)

ஸுசுருதர் கலகண்டம் நோயை முக நோய்களிலோ, தொண்டை நோய்களிலோ கணக்கிடாமல் கிரந்தி, அபசி முதலிய நோய்களுடன் சேர்த்துக் கூறியுள்ளார். வாக்படர் இதைத் தொண்டை நோய்களில் ஒன்றாகக் கணக்கிட்டுள்ளார்.

வாயுவும், கபமும், கொழுப்பும் சீற்றமுறுவதால் கலகண்டம் தோன்றும். வாதத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது, கொழுப்பால் தோன்றியது என இது மூன்று வகைப்படும்.

**வாதத்தால் தோன்றும் கலகண்டம்**

வாதம் சீற்றமுற்று கபத்தால் அல்லது கொழுப்பால் மன்யா எனும் பகுதியில் வீக்கத்தைத் தோற்றுவிக்கும். இது தொண்டை

யில் புறப்பகுதியிலிருந்து வளரும். தொண்டையில் கட்டியாகக் காணப்படும். சில நேரங்களில் பெரியதாகும். சில நேரங்களில் சிறியதாகும். இதில் எத்தகைய வலியும் இருக்காது.

வாதத்தால் தோன்றிய கலகண்டத்தில் தொண்டையின் புறத்தே ஊசியால் குத்துவது போன்ற வலி தோன்றும். கறுப்பு நிற சிரைகள் காணப்படும். கட்டி தோன்றிய இடம் கறுப் பாகவோ, சிவப்பாகவோ காணப்படும். அதில் கொழுப்பு நிறைந்திருக்கும். தடித்து சில நாட்களுக்குப் பின் அடர்த்தி யடைந்து காணப்படும். அப்போது துன்பம் ஏதும் இருக்காது.

வாதத்தால் தோன்றும் கலகண்டம் வறண்டு தாமதமாகப் பருக்கும் தன்மை கொண்டிருக்கும். இது பக்குவம் பெறாது. ஆனால் சிலருக்குத் திடீரென பருத்து விடுவதும் உண்டு. இது பெரியதானதும் அண்ணமும், தொண்டையும் உலர்ந்திருக்கும்.

**வாத கலகண்டத்திற்குச் சிகிச்சை**

1. வாதத்தைப் போக்கும் பொருள்களால் நாடீஸ்வேதம் செய்வித்தல் 2. இரத்தத்தை வெளியேற்றுதல் 3. உபநாஹம் 4. விரணத்தை ஆற்றுதல் 5. சீந்தில் கொடி, வேம்பு, ஹம்ஸபதி, திப்பிலி, பேராமுட்டி, தேவதாரு முதலியவற்றாலான எண் ணெயைப் பருகச் செய்தல் முதலியன இதற்குச் செய்யத்தக்கவை.

**கபத்தால் தோன்றும் கலகண்டம்**

கபத்தாலான கலகண்டம் நிலைபெற்றிருக்கும். உடல் தோலின் நிறம் கொண்டிருக்கும். வலி குறைந்த அளவில் இருக் கும். மிகவும் அரிப்பு தோன்றும். தொடு உணர்ச்சிக்கு குளிர்ந்து, தோற்றத்தில் பெரியதாகக் காணப்படும். தாமதமாக பக்குவம் பெறும். அவ்வப்போது சாதாரணமான துன்பத்தை தரும். பளு வாகக் தோன்றும். வாய் இனிப்புச் சுவை கொண்டிருக்கும். பெரியதாக வளர்ந்த பிறகு தொண்டை., அண்ணம் ஆகிய பகுதி களில் ஏதோ பூசிக்கொண்டுள்ளது போன்ற உணர்வு காணப் படும்.

**கப கலகண்டத்திற்குச் சிகிச்சை**

1. வாதகண்டத்திற்கு போல 2. வியர்க்கச் செய்தல் ஒற்றடம் கொடுத்தல் போன்றவற்றை அதிக அளவில் செய்தல் 3. இரத்தத்தை வெளியேற்றல் 4. வாந்தி எடுக்கச் செய்தல் 5. சிரோவிரேசன நசியத்தைக் கையாளுதல் 6. விரேசனப் புகை முறை 7. பழுத்தபின் விரண சிகிச்சை செய்தல் 8. மேல்பூச்சு

மருந்தைப் பயன்படுத்துதல் என்பன உரிய சிகிச்சை களாகும்.

**கொழுப்பால் தோன்றும் கலகண்டம்**

கொழுப்பால் தோன்றும் கலகண்டம் அடர்த்தியும், வெண் ணிறமும் கொண்டிருக்கும். எண்ணெய்ப்பசை கொண்டதாகும். கெட்ட நாற்றமுள்ளதாகும். தொங்கிக்கொண்டிருக்கும். உடல் பருத்தால் இது பருக்கும். உடல் இளைத்தால் இதுவும் சிறிய தாகும். வாய் எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும். தொண்டை யில் ஏதோ ஒரு வகை ஒலி தோன்றிக் கொண்டே இருக்கும்.

**மேதோஜகலகண்டத்திற்குச் சிகிச்சை**

1. எண்ணெய்ப்பசை தோற்றுவித்த பின் ஸிரையைக் கீறுதல் 2. ஸாலஸாரத்தாலான திரவத்தைப் பருகச் செய்தல் 3. அறுவை சிகிச்சை 4. பிறகு தையல் போடுதல் 5. காய்ச்சிய எண்ணெ யால் சுடுதல் 6. எண்ணெய் குளியலுக்குப் பின் கோமயத் தாலான சாம்பலைப் பருகச் செய்தல், மேல் தூவி தேய்த்தல் 7. திரிபலை கஷாயத்தைப் பருகச் செய்ல் 8. இறுகக் கட்டுதல், 9. யவதானியச் சோறு உண்ணச் செய்தல் 10. கபத்தைப் போக்கும் சிகிச்சை முறைகளைக் கையாளுதல் என்பன செய்யத்தக்கவை.

**ஸர்வஸரமுகபாகம்** (STOMATITIS)

வாய்க்குள் முழுப்பகுதி ஊசியால் குத்துவது போன்ற வலியுடன் விரணம் கொண்டிருந்தால் அது வாதத்தால் தோன்றும் ஸர்வஸரமுகபாகம் எனப்படும். சிவப்பு, மஞ்சள் நிறங்களில் ஏதேனும் ஒன்று கொண்டு மெலிந்து எரிச்சலுடன் கூடியிருப்பது பித்தத்தால் தோன்றிய முகபாகமாகும். அரிப்பும், சிறிதளவு வலியும் கொண்டு மேல் தோலை போன்ற நிறம் காணப்பட்டால், கபத்தால் தோன்றிய முக பாகமாகும். பித்தத்தால் தோன்றிய நோய்க்கு உரிய இலக்கணங்கள் காணப் பட்டால் இரத்தத்தால் தோன்றிய முகபாகம் என்று அறிக.

வாக்படர் கூறிய இலக்கணங்களின்படி வாதத்தால் தோன்றிய நோயில் விரணம் சிவப்பு நிறம் கொண்டு, வறண்டு, அசையும் தன்மை கொண்டிருக்கும். உதட்டுத் தோல் பிய்ந்து சிவப்பு நிறத்துடன் காணப்படும். நாக்கு குளுமையைத் தாங்க இயலாததாக இருக்கும். பளுவாகக் காணப்படும். நாக்கில் கோடுகளைப் போன்ற வெடிப்புகள் காணப்படும். முட்கள் போன்றவை நிரம்பியிருக்கும். வாய் திறப்பதும் மிகவும் கஷ்டமாகத் தோன்றும்.

### பித்தத்தால் தோன்றும் முகபாவம் (ACUTE STOMATITIS)

பித்தத்தால் தோன்றிய முகபாகத்தில் எரிச்சல், வாயில் கசப்புச் சுவை, விரணத்தில் காரம் பூசியது போன்ற உணர்ச்சி என்பன காணப்படும். இரத்தத்தால் தோன்றிய முகபாகத்திலும் இந்த இலக்கணங்கள் காணப்படும்.

### கபத்தால் தோன்றும் முகபாகம்
(SUBACUTE OR CHRONIC STOMATITIS)

கபத்தால் தோன்றிய முகபாகத்தில் வாய் இனிப்புச் சுவை கொண்டிருக்கும். அரிப்பும் கொழகொழப்பும் கொண்டு விரணங் கள் தோன்றும். கபம் தாடையின் உட்பகுதியை சார்ந்து கருநிறம் அல்லது வெண்ணிறம் கொண்ட சீழ்க்கட்டியைத் தோற்றுவிக்கும். இதை அசைத்தால், வெட்டினால், அமுத்தினால் அது பெரிய தாகி விடும்.

### முகப்பாகத்திற்குப் பொது சிகிச்சை

முகபாகத்திற்கு (1) சிரையைக் கீறுதல், (2) சிரோவிரேசன நஸியம் (3) பேதியாகச் செய்தல் (4) தேன், பசுவின் சிறுநீர், நெய், பால் முதலியவற்றால் கபள தாரணம் செய்வித்தல், (5) ஆல், அத்தி முதலான ஐவகை மரங்களின் பட்டைகளுடன் திரிபலையைச் சேர்த்துக் கஷாயம் காய்ச்சி அதைக் கொண்டு கழுவுதல் எனும் சிகிச்சைகள் கையாளத்தக்கவை.

### சிகிச்சைக்கு உட்படாத முக நோய்கள்

மாமிசத்தாலான உதட்டு நோய், இரத்தம் கேடுறுதலாலான உதட்டு நோய், மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் நோய் ஆகியவை சிகிச்சைக்கு உட்படாதவையாகும். மற்றும் சியாவதந்தம், தாளனம், பஞ்சனகம், ஸந்நிபாதத்தால் தோன்றிய தந்த நாடி, ஸெளஷிரம் எனும் பல் நோய்களும், அலாஸம் எனும் நாக்கைச் சார்ந்த நோயும், தாலு அர்புதம் எனும் அண்ணத்தைச் சார்ந்த நோயும், ஸ்வரக்னம்-வலயம்-விருந்தம்-விதாரி-விலாஸம், கலெளகம், மாம்சதானம், சதக்னி, ரோகிணி (மூன்று தோஷங்களால் தோன்றியது) எனும் தொண்டை நோய்களும் சிகிச்சையால் தீர்க்க இயலாதவைகளாகும்.

# XIV. தலை நோய்கள்

உயிரினங்களுக்கு வாதம், பித்தம் முதலியவற்றால் தலையில் தோன்றும் துன்பம் தலை நோய் ஆகும். தலையில் துன்பம் தோற்றுவிப்பதுதான் தலை நோயின் இலக்கணமாகும். ஆகவே துன்பம் தோற்றுவிக்காத வழுக்கை முதலியன தலை நோய்களாக கூறப்படுவது 'லலை.

நம் உடலில் 107 (மர்மங்கள்) உயிர் நிலைகள் உள்ளன. 'வை நடு உடலையும், கைகால்களையும் சார்ந்து இருக்கும் இந்த உயிர் நிலைகளில் சிறப்பாக உயிரின் அம்சம் தங்கியிருப்பதால், இவற்றில் தாக்குதல் உண்டானால் பொறுக்க முடியாத துன்பம் விளையும். கைகால்களில் உள்ள மர்மங்களை விட நடு உடலில் உள்ள மர்மங்கள் மிக முக்கியமானவை. அவற்றிலும் இதயம், வஸ்தி (சிறுநீர்க்குண்டிகை), தலை முக்கியமானவை. ஏனெனில் இம்மூன்றும் உடலின் நலத்திற்கு இன்றியமையாதவை. இங்குள்ள மர்மங்களில் துன்பம் தோன்றினால் உயிருக்குத் தீங்கு விளையக் கூடும். சிருங்காடகம், அதிபதி, இரண்டு சுங்கப்பகுதிகள், தொண்டை, தலை, ஆஸனவாய், இதயம், சிறுநீர்க்குண்டிகை, தொப்புள் ஆகிய பகுதிகளில் உள்ள மர்மங்களில் நோய் தோன்றினால் நோயாளி விரைவில் மரணம் அடைவார்.

இதயத்தில் 10 தமனிகள், பிராணன், அபானன், மனம், புத்தி, நினைவாற்றல், ஐந்து பூதங்கள் ஆகியவை தொப்புள் பகுதியில் சக்கரத்தின் ஆரங்கள் போல அமைந்துள்ளன. தலையில் புலன்கள், புலன்களைச் சார்ந்த சுரோதஸ்கள், பிராணனைத்தாங்கும் ஸ்ரோதஸ் முதலியன உள்ளன. சூரியனில் கிரணங்கள் இருப்பது போல புலன்களில் பிராணனின் ஸ்ரோதஸ் தலையில் உள்ளது.

இவற்றில் எதற்கு துன்பம் நேரிட்டாலும் விரைவில் உடல் அழிந்து விடும். ஏனெனில் ஆதாரம் அழிந்தால் அதைச் சார்ந்துள்ளவையும் அழிவது திண்ணம். ஆகவே தலை முதலான சிறப்பான உறுப்புகள் தாக்குதலுக்கு இலக்காகாமல் உடலைப் பாதுகாத்துக் கொள்ள வேண்டும். வாதம் முதலியன இந்த இடங்களில் சீற்றம் பெறாதபடி பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

மன்யாஸ்தம்பம், அர்திதம், கண்சுற்றுதல் (NYSTAGMUS), நினைவிழத்தல் உத்வேஷ்டனம், செயலாற்றும் திறனின்மை, இருமல், மேல்மூச்சு வாங்குதல், தாடைப்பிடிப்பு (LOCK-JAW), தெளிவற்ற பேச்சு, கண்களை மூடிக் கொண்டிருத்தல், தொண்டை அடைப்பு, முகம் கோணுதல் முதலியன தலையில் அடி படுவதால் தோன்றுவனவாகும்.

;யம், தலை, வஸ்தி ஆகிய இம்மூன்று உயிர் நிலைகளிலும் பிராணன் நிலை பெற்றிருக்கும். அதனால் இவற்றை எப்பொழுதும் கருத்துடன் பாதுகாத்துக் கொள்ள வேண்டும்.

ஸுசுருதர் தலை நோய்கள் பதினொன்று எனக் ப பிட்டுள்ளார். அவையாவன :-

1. வாதிகம் - NEURALGIC HEADACHE OR IDIOPATHIC HEADACHE
2. பைத்திகம் - BILIOUS HEADACHE
3. சிலைஷ்மிகம் - CATARRHAL OR SINUSITIS
4. ஸாந்நிபாதம் (மூன்று தோஷங்களாலும் தோன்றுவது)
5. ரக்தஜம் - DUE TO HIGH BLOOD PRESSURE OR ACUTE ALCOHOLISM
6. கிருமிஜம் - BACTERIAL
7. ஸூர்யாவர்த்தம் - FRONTAL SINUSITIS MIGRAINE
8. அநந்தவாதம் - TRIGEMINAL NEURALGIA
9. அர்தரவபேதகம் - HEMICRANIA OR MIGRAINE
10. சுங்ககம் - MASTOID ABSCESS OR LATERAL SINUS THROMBOSIS
11. க்ஷயஜம் - TUBERCULOSIS

சரகர் தம் நூலில் வாதிகம், பைத்திகம், சிலைஷ்மிகம், திரிதோஷஜம், கிருமிஜம் என ஐந்து நோய்களைக் குறிப்பிட்டுள்ளார்.

வாக்படர் தம் நூலில் 1. உபசீர்ஷகம் 2. சிரோவித்ரதி 3. சிரோகிரந்தி 4. சிரோர்புதம் 5. அரூம்ஷிகா 6. தாருணகம் 7. இந்திரலுப்தம் 8. காலித்யம் 9. பலிதம் என ஒன்பது நோய்களைக் குறிப்பிட்டுள்ளார்.

**தலை நோய்களுக்குக் காரணம்**

புகை, வெயில், பனி, நீரில் (நீந்தும் போது) குதித்து விளையாடுதல், அளவுக்கு மீறிய உறக்கம், அதிக நேரம் கண்விழித்தல், உடல் அதிக அளவு வியர்த்தல், மன வருத்தம், எதிர்காற்று, கண்ணீரைத் தடுத்தல், அழுகை, தேவைக்கு மீறித்

தண்ணீர் பருகுதல், மதுபானம், கிருமிகள் தோன்றுதல், தும்மல் கொட்டாவி போன்றவற்றை வெளிவராமல் தடுத்தல், ஏற்றத்தாழ்வான பலகை மேல் படுத்து உறங்குதல், எண்ணெய் குளியலை விலக்குதல், நனைந்த போது உடலைத் துடைத்துக் கொள்ளாமை, கண்கொட்டாமல் எதையேனும் பார்த்துக் கொண்டிருத்தல், ஆம உடலுக்கு ஒவ்வாத மணத்தை நுகர்தல், தோஷம், அளவுக்கு மீறி உரையாடுதல் போன்றவற்றால் தலை நோய் தோன்றும்.

வாதிக சிரோரோகம் (NEURALGIC HEADACHE, IDIOPATHIC REFRACTORY HEADACHE) மண்டை ஓட்டின் உள் பகுதிக் கோளாறு, அல்லது புறத்தாக்குதல் எனும் காரணங்களால் இந்நோய் தோன்றும் என தற்கால மருத்துவம் கூறுகிறது. ஆனால் உண்மையில் தலை நோய்களுக்குக் காரணங்கள் எண்ணற்றவை. ஏனெனில் உடலில் வேறு பகுதிகளில் தோன்றும் பல நோய்களால் தலை நோய் தோன்றக்கூடும். சிறப்பாக

I. (1) பெரும் ரக்தவாஹினி சிரைகளில் அழுத்தம் ஏற்படுதல், (2) தலையில் உள்ள ஐந்தாவது, ஒன்பதாவது, பத்தாவது நரம்புகளில் தோன்றும் கோளாறுகள் ஆகியவை இதற்குக் காரணங்களாகும். இவற்றால் 1. மஸ்திஷ்கீய (மூளையைச் சார்ந்த) அர்புதம் (கட்டி) 2. மெனிஞ்சைடீஸ் (MENINGITIS) 3. ஸுஷுமுனையைச் (முதுகுத்தண்டுக்குள் நரம்பு பகுதியைச்) சார்ந்த நீர்பகுதி அதிகமாதல் 4. கண், மூக்கு, காதுப்பகுதிகளில் விரண வீக்கம் ஆகியவை தோன்றும்.

II. பிரண்டல் ஸைநஸிடிஸ் (FRONTAL SINUSITIS) அல்லது ஆஸ்டியோமைலிடிஸ் (OSTEOMYELITIS)

III. ஸஞ்சாரி வேதனை (REFERRED PAIN - IRITIS, GLAU COMA-OTITIS MEDIA) போன்றவை.

IV. நெர்வஸ் ஹெட்ஏக் (NERVOUS HEADACHE)

V. உடல் முழுவதையும் சார்ந்து தோன்றக்கூடிய URAEMIA, CHRONIC NEPHRITIS HIGH BLOOD-PRESSURE.

### வாஹிக சிரோரோக இலக்கணம்

தெளிவான காரணம் ஏதும் இன்றி தலையில் வலி தோன்றுதல், இரவு நேரங்களில் இது கடுமையாதல், தலையைத் துணி முதலியவை சுற்றிக் கட்டிக் கொள்வதாலோ சூடான பொருளைத் தடவுவதாலோ வலி குறைதல் எனும் இலக்கணங்களைக் கொண்டது வாத சீற்றத்தால் தோன்றும் தலை நோயாகும்.

அஷ்டாங்க ஹிருதயத்தில் இந்நோய்க்குக் கூறப்பட்டுள்ள இலக்கணம் பின்வருமாறு :-

வாதத்தால் தோன்றும் தலை நோயில் பொட்டில் பகுதியில் ஊசியால் குத்துவது போன்ற துன்பம் உண்டாகும். பிடறிப்பகுதி பிளந்து விடுவது போலத் தோன்றும். புருவங்களின் இடைப்பகுதி, மண்டை ஓட்டின் முன் பகுதி ஆகியவை அவற்றில் ஏற்படும் வலியால் கழன்று விடுவது போலத் தோன்றும். காதில் வலி தோன்றும், மற்றும் ஒலி தோன்றிக் கொண்டே இருக்கும். கண்கள் பிதுங்கி விடுவது போலாகும். தலைசுற்றலும், இணைப்புகள் விட்டுபோதல் போன்ற வலியும் தோன்றும். சிரைகளில் நடுக்கம் ஏற்படும். தோள்பகுதி, தாடை ஆகியவை செயலற்று அசையாமல் நின்றுவிட்டவை போலாகும். வெளிச்சத்தையும் நன்கு காண முடியாது. மூக்கிலிருந்து திரவம் ஒழுகிக் கொண்டிருக்கும். தலைவலி திடீரெனத் தோன்றுவதும், திடீரெனத் தணிவதுமாக இருக்கும். இந்நோயில் தேய்த்துவிடல், எண்ணெயைப் பயன் படுத்துதல், வியர்க்கச் செய்தல், தலையைச் சுற்றி இறுகக் கட்டுதல் போன்றவற்றால் வலி தணியும்.

**தலை நோய்களுக்குச் சிறப்பான சிகிச்சை**

தலை நோய்களுக்கு நஸியமுறை (மூக்கில் மருந்திடுதல்) சிறப்பான சிகிச்சை என சரகர் கூறுகிறார். தலைக்கு வாசல் போன்ற உறுப்பு மூக்காகும். அதனால் மூக்கின் வழியாகச் செலுத்தப்படும் மருந்து தலை நோய்களை எளிதில் தீர்க்கும். இம்முறைக்கு ஷட்பிந்து தைலம் ஏற்றதாகும். இதைத் தடவித் தேய்க்கவும் பயன்படுத்தலாம்.

தலை நோய்களுக்கு உடனே தணியச் செய்தல் (SHORT TERM), வெகுகாலம் சிகிச்சை பெற வைத்து குணப்படுத்துதல் (LONG TERM) ஆகிய இரண்டு முறைகள் உண்டு.

தலை நோய்களில் சில, வேறு நோய்களையும் தோற்று விக்கக்கூடும். எடுத்துக்காட்டுக்கு, மூக்கு நோயான ஸைனஸைடிஸ் (SINUSITIS) தோன்றுவதற்கு தலை நோய் காரணமாகும். இதற்கு மூல காரணமான நோயைத் தணித்தல், உடனே துன்பத்தைப் போக்கும் சிகிச்சை செய்தல் ஆகியவை மேற்கொள்ளத் தக்கவையாகும்.

பொதுவாகத் தலை நோய்களைத் தணிப்பதில் மேற் கொள்ளத்தக்க சிகிச்சை முறைகள் பின்வருமாறு:-

(1) பிராணாயாமம் - ஒரு பக்கத்து மூக்குத் துளையைக் கைவிரலால் அழுத்திக் கொண்டு, மற்றொரு துளையால் மூச்சை

)க்க வேண்டும். பிறகு அந்தத் துளையை விரலால் மூடி அழுத்திக் கொண்டு முதலில் அழுத்திய துளையால் மூச்சை வெளியே விடவேண்டும். இவ்வாறு மாற்றி மாற்றி ஒரு துளையால் உள்ளுக்கு இழுத்து மற்றொரு துளையால் மெல்லமெல்ல மூச்சை வெளியிட வேண்டும். உள்ளுக்கு இழுத்த வேகத்தைவிட வெளியேற்றும் வேகம் மிகவும் குறைந்த அளவில் இருக்க வேண்டும். இவ்வாறு 20, 30 முறைகள் செய்க.

(2) சவாஸனம் - கை கால்களை நீட்டி மல்லாந்து கைகால்களை தளர்த்தி வைத்துக் கொண்டு படுத்திருக்க வேண்டும். மூச்சை நன்கு உள்ளே இழுத்துக் கொண்டு, பிறகு மெல்ல வெளியேற்ற வேண்டும்.

(3) இரவில் உணவு உட்கொண்டபின் நெய் பருகவும் அல்லது இரவில் அதிக அளவு நெய் விட்டுப் பக்குவம் செய்த சோற்றை உட்கொள்க.

(4) இரவில் தலைவலி இருந்தால் காலையில் காற்றோட்ட முள்ள திறந்த வெளியில் உலாவுதல் நல்லது.

(5) தட்பவெப்பநிலையில் மாறுதல், உடலுக்கு ஒவ்வாத உணவு உட்கொள்ளுதல் போன்றவை முக்கிய காரணங்களாகும். ஆகவே காரணமறிந்து அதற்கு மாறான முறைகளைக் கையாள வேண்டும்.

வாதத்தாலான தலை நோய்க்கு வாதத்தைத் தணிக்கும் பத்ரதாரு முதலான பொருள்களாலான நெய் மருந்தைச் சிறிது சூடான நிலையில் தலை மேல் விட்டுக் கொள்க.

வாதத்தைத் தணிக்கும் பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிய பாயஸம் சிறிதளவு சூடாக உள்ள போது அதைக்கொண்டு தலைக்கு ஒற்றடம் கொடுத்தல், மேல் பூச்சாகத் தடவுதல் ஆகியவற்றை செய்க.

எலும்பை நீக்கிய மீன் புலாலைக் கொதிக்க வைத்து இளஞ்சூடுள்ள போது அதைக் கொண்டு தலைக்கு ஒற்றடம் கொடுக்கவும்.

இந்துப்பு சேர்த்துச் செய்த பொங்கலைத் தலையில் பற்றாகப் போடவும்.

சந்தனம், நீலாம்பல் ஆகிய இவ்விரண்டையும் அரைத்து அதனுடன் திப்பிலியையும் சேர்த்தபிறகு அதை மேல் பூச்சாகப் பயன்படுத்துக.

நோயாளிக்கு எண்ணெய்ப்பசையுண்டாக்க, நண்டின் புலால் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெயை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துக.

மாவிலங்கை முதலான கூட்டுப் பொருள்களாலான பாலில் காகோலி முதலான கூட்டுப் பொருள்களைச் சேர்த்துப் பருகவும். மூடகர்பத்திற்காக சிகிச்சையில் கூறப்பட்ட பலா தைலத்தை அபதானகத்திற்குக் கூறப்பட்ட திரைவிருத தைலம் ஆகிய ஒன்றைப் பருகவும், எண்ணெய் குளியலுக்கும், மூக்கிலிடு மருந் தாகவும், வஸ்தியாகவும் பயன்படுத்துக.

வாதத்தாலான தலைநோய்க்குச் சரகர் ராஸ்னாதி தைலத்தை மூக்கிலிடும் மருந்தாகவும், மாயூரகிருதம், மஹாமாயூர கிருதம் ஆகியவற்றைப் பருகவும் தகும் எனக் கூறியுள்ளார்.

தலையைச் சுற்றிக் கட்டுவதற்கு ஏற்ற அளவுள்ளபடி எட்டு அங்குல உயரத் தோலைத் தலையைச் சுற்றிக் கட்ட வேண்டும். தலையைச் சுற்றியுள்ள அந்தத் தோலின் அடிப்பகுதி சுற்றிலும் உளுந்தின் விழுதை (எண்ணெய் கீழ் நோக்கிக் கசியாதபடி) பூசவும். நோயாளியை நேராக உட்காரச்செய்து தலையில் பள்ளமுள்ள தொப்பி போல் அமைந்துள்ள தோல் சுற்றுக்குள் இளஞ்சூடுள்ள எண்ணெயை நிரப்பவும். தலையில் துன்பம் தணியும் வரை அந்த எண்ணெயை நோயாளி தாங்கிக் கொண்டிருக்கும்படி செய்க. இந்த சிரோவஸ்தி முறையால் வாதத்தாலான தலைவலி நீங்கும். தாடை, மன்யா, கண் முதலியவை சீர்படும். காதுவலி அர்திதம், மஸ்தககம்பனம் எனும் தலைநடுங்கும் நோய் முதலியன தீரும்.

கபத்தினால் தோன்றிய தலை வலியில் 800 நொடி நேரமும், வாதத்தாலான தலை நோயில் 1000 நொடி நேரமும் எண்ணெயைத் தாங்க வேண்டும் எனச் சிலர் கூறுகின்றனர்.

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், மஞ்சள், நிலவேம்பு, வேப்பம்பட்டை, சீந்தில் கொடி ஆகியவற்றின் கஷாயத்தில் வெல்லம் சேர்த்துப் பருகினால் தலைவலி நீங்கும் என சார்ங்கதரர் தம் நூலில் கூறியுள்ளார்.

எல்லா வகையான தலை நோய்களிலும் ஷட்பிந்து தைலம் என்பதை மூக்கிலிடு மருந்தாகவும், மேல் பூச்சாகவும் பயன்படுத்தத் தகும் என சக்ரதத்தாவில் கூறப்பட்டுள்ளது.

### ஷட்பிந்து தைல முறை

ஆமணக்கு வேர், தகரை வேர், கீரைப்பாலை, சித்தரத்தை, இந்துப்பு, இலவங்கப்பட்டை, வாயுவிடங்கம், அதிமதுரம், சுக்கு, கறுப்பு எள் எண்ணெய், ஆட்டுப்பால் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு கரிசலாங்கண்ணிச்சாறு எனக்கொண்டு எண்ணெய்ப் பக்குவம் செய்க. இந்த எண்ணெயில் ஆறு சொட்டு நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். இது ஷட்பிந்து தைலம் எனப்படும் மருந்தாகும்.

## பித்தத்தாலான தலை நோய்
## (BILIOUS HEADACHE, ACUTE SINUSITIS)

தலை, கண், மூக்கு ஆகிய பகுதிகளில் தணல் பட்டது போல எரிச்சல் தோன்றினாலும், புகை கிளம்புவது போலத் தோன்றினாலும் குளுமையால் அல்லது இரவில் வலி குறைந்து காணப்பட்டாலும், அது பித்தத்தால் தோன்றிய தலைவலி என்று உணர்க. இந்நோயில் காய்ச்சல், கண்களில் எரிச்சல், மிக்க வியர்த்தல், நினைவிழத்தல் ஆகியவை தோன்றக்கூடும் என்பது அஷ்டாங்க ஹ்ருதயத்தில் கூறப்பட்டுள்ளது.

### பித்தத்தாலான தலை நோய்க்குச் சிகிச்சை

குளுமைத்தன்மையும், இனிப்புச் சுவையும், எண்ணெய் பசையும் கொண்ட பொருள்களாலான மருந்தைக் கொண்டு தலையை நனைத்தல், மேல்பூச்சு பூசுதல் போன்ற முறைகளைக் கையாள வேண்டும். வாந்தி எடுக்கச் செய்தல் எனும் முறையைத் தவிர்த்து, பஞ்சகர்ம சிகிச்சையில் ஏனைய நான்கு முறைகளையும் (பேதியாகச் செய்தல், சிரோவிரேசன முறை, அநுவாஸன வஸ்தி முதலியவற்றை) பயன்படுத்த வேண்டும்.

பால், கருப்பஞ்சாறு, புளிக்காடி, தேன் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

தலையில் பூசுவதற்கு நலம் எனும் புல், வஞ்சி, செவ்வாம்பல் சிவப்புச் சந்தனம், நீலாம்பல், தாமரை, மூங்கில் இலை, அருகம்புல், அதிமதுரம் முதலியவற்றைச் சேர்த்துப் பயன்படுத்த வேண்டும். அக்கி நோய்க்கு உரிய சிகிச்சையில் கூறப்பட்ட உசீர (வெட்டிவேர்) முதலியவற்றாலான மேல் பூச்சு மருந்துகளைப் பயன்படுத்தலாம். இனிப்புச் சுவை கொண்ட பொருள்களாலான எண்ணெயை நஸிய முறைக்குப் பயன்படுத்துக.

பாலில் எடுத்த வெண்ணெயாலான நெய், காட்டுப் பகுதியில் வாழும் விலங்குகளின் கொழுப்பு முதலியவற்றை நஸிய மருந்தாகப் பயன்படுத்தலாம். ரத்தபித்த நோய்க்குக் கூறப்பட்ட மேல் பூச்சு மருந்துகள், நஸிய முறைகள் முதலியவற்றைப் பயன்படுத்தலாம். இந்நோயில் கபத்தின் சீற்றம் காணப்பட்டாலும், வாயுவின் சீற்றம் தணியாமல் இருந்தாலும் நெருப்பால் சுடுதல் எனும் முறையைப் பின்பற்ற வேண்டும்.

பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் தலைவலியில் குளிர்ந்த பால், நெய், குளிர்ச்சிதரும் பொருள்களின் திரவத்தால் நனைத்தல், அத்தகைய பொருள்களைப் பூசுதல், நஸிய முறை ஆகியவை மேற்கொள்ளத்தக்கவை. பித்தத்தைத் தணிக்கும் திரவப் பொருளைப் பருகுதல் அத்தகைய பொருள்களை உட்கொள்ளுதல், கீரைப்பாலை முதலிய கூட்டுப் பொருள்களாலான நெய்யைப் பருகுதல் ஆகியவை நலம் தரும்.

சிவப்புச் சந்தனம், வெட்டி வேர், அதிமதுரம், புலிநகப் பூண்டு, ஆம்பல் முதலியவற்றைப் பால் விட்டு அரைத்து மேல் பூச்சுக்குப் பயன்படுத்துக. இலவங்கப்பட்டை, கற்கண்டு முதலியவற்றை அரிசி கழுவிய நீர் விட்டு அரைத்து, அவபீடன நஸிய முறைக்குப் பயன்படுத்துக. நெய்யை நஸியமாகப் பயன்படுத்துவதும் பித்தச் சீற்றத்திற்குத் தகும். அதிமதுரம், சந்தனம், பால், அனந்தமூலம் முதலியவற்றாலான நெய் மருந்து நஸியமாகப் பயன்படுத்தத்தக்கது.

எலி, கோழி, அன்னப்பறவை, முயல் முதலியவற்றின் நெய், மயில் நெய் முதலிய மருந்துகளைத் தயார் செய்து, தோள்களுக்கு மேல் உள்ள உடற்பகுதியில் தோன்றும் தோய்களுக்கு நஸியமாகவும், பருகவும், எண்ணெய்க் குளியலுக்கும் பயன்படுத்துவது மிக்க பயன்தரும்.

## கபத்தாலான தலை (நோய்) வலி

## (HEADACHE DUE TO COLD SINUSITIS)

தலையும், தொண்டையும் கபத்தால் சூழப்பட்டுப் பளுவாக அசைவற்றது போலக் குளிர்ந்து காணப்பட்டாலும், கண், முகம் முதலியன வீக்கம் கொண்டிருந்தாலும் அது கபச்சீற்றத்தாலான தலை நோய் என்று உணர்க.

### கபத்தாலான தலை நோய்க்குச் சிகிச்சை

கபத்தாலான தலை நோயில் வாந்தி எடுக்கச் செய்தல், சிரோவிரேசன நஸியம், கபத்தைத் தணிக்கச் செய்வதான உடல்

வியர்க்கச் செய்யும் முறை, வாய்க் கொப்பளித்தல் போன்ற சிகிச்சை முறைகள் செய்யத்தக்கவை. இந்நோயில் நெய்யைப் பருகச் செய்க. அடிக்கடி வியர்க்கச் செய்க. வாந்தி எடுக்கச் செய்து, கபத்தைக் குறைத்துப் பிறகு நெய்யைப் பருகச் செய்க. அல்லது வாந்தி எடுக்கச் செய்யும் முன்பும் நெய்யைப் பருகச் செய்யலாம்.

தலையில் எண்ணெய்பசையைத் தோற்றுவித்து ப்பைப் பிசினால் விரேசன நஸிய முறையைச் செய்க. அல்லது ஆடு தீண்டாப்பாளையை சிரோவிரேசனத்திற்குப் பயன்படுத்துக.

சிரோவிரேசன நஸிய முறையால் கபத்தைத் தணித்த பிறகு, காரை அல்லது ஆடுதீண்டாப் பாளையால் செய்த வத்தியைப் பயன்படுத்திப் புகை பிடிக்கச் செய்க. கபத்தைத் தணிக்கும் மருந்துப் பொருள்களாலான கஷாயத்தைக் கபள முறையில் பயன்படுத்துக. சரளமரக்கட்டை, கோஷ்டம், தேவதாரு, ரோகிஷப்புல், புல்லாலான க்ஷாரம் ஆகியவற்றைச் உப்பு கலந்து அரைத்துச் சூடாக நெற்றியில் பற்றாகப் பூசுக.

திரிகடுகம், யவக்ஷாரம் கலந்த அறுபதாங்குருவை அரிசி சோற்றை உண்ணச் செய்க. புடலை, பயறு, கொள்ளு ஆகியவற்றாலான கஞ்சியைப் பருகச் செய்க.

கபத்தாலான தலை நோய்களில் வியர்க்கச் செய்தல், புகை, நஸியமுறை, வாந்தி எடுக்கச் செய்தல் முதலிய முறைகளால் தூய்மைப்படுத்திய பிறகு கபத்தைத் தணிக்கும் மேல் பூச்சு, குடிநீர், உணவு முதலியவற்றைப் பயன்படுத்துக. பழைய நெய்யைப் பருகுதல், தீக்ஷ்ணமான பொருள்களாலான வஸ்தி ஆகியவற்றை பயன்படுத்தலாம்.

ஆமணக்கு, குங்கிலியம், அகில், சந்தனம் ஆகியவற்றாலான வத்தியைப் புகை முறைக்குப் பயன்படுத்துக.

கபத்தாலான தலை நோய்களிலும், வாதத்தால் தோன்றும் தலை நோய்களிலும் சரகர் நெருப்பால் சுடும் முறையைப் பயன்படுத்த வேண்டும் என்கிறார். பித்தத்தால் மற்றும் இரத்தத்தாலான தலை நோய்களில் இரத்தத்தை வெளியேற்றும் முறையைக் கூறுகிறார்.

கபத்தாலான மற்றும் வாதத்தாலான தலை நோய்களில் கண்புருவங்கள், பொட்டில் பகுதி, நெற்றி ஆகிய இடங்களில் நெருப்பால் சுடும் முறையைத் தகுந்தபடி பயன்படுத்த வேண்டும் என ஸுசுருதர் கூறியுள்ளார்.

## இரத்தச் சீற்றத்தாலான தலைவலி

## (HEADACHE DUE TO ACUTE ALCOHOLISM OR HIGH BLOOD PRESSURE)

இரத்தம் சீற்றமுறுவதால் தோன்றும் தலைவலியில் பித்தத்தால் தோன்றும் தலைவலிக்குக் கூறியது போல 'நெருப்பால் சுடுதல் போன்றும், குளுமையில் அல்லது இரவு நேரங்களில் துனபம தணிந்தும் இருக்கும். தலை தொடு உணர்ச்சியைத் தாங்க 'யலாமல் இருப்பது இந்நோயின் சிறப்பான 'லககண மாகும்

## மூன்று தோஷங்களின் சீற்றத்தாலான தலைவலி

மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதாலான தலைவலியில் தனித் தனியாக அந்தந்த தோஷங்களுக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் கலந்து காணப்படும். (தகுந்தபடி மூன்று தோஷங்களாலான தலை வலிக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கலந்து பயன்படுத்துக) சிறப்பாக பழைய நெய்யைப் பருகச் செய்தல் இந்நோய்க்கு உரிய சிகிச்சையாகும்.

## க்ஷயத்தாலான தலைவலி

தலையைச் சார்ந்த வசை, கபம், இரத்தம் முதலியன குறைந்து போவதால் தோன்றும். தலைவலியில் க்ஷயத்தாலான கடுமையான தலைவலி தோன்றும். வியர்க்கச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், புகை, நஸியம், இரத்தம் வெளியேற்றுதல் போன்ற முறைகள் அனைத்தும் இந்நோயில் விலக்கத்தக்கவை. இவற்றைப் பயன்படுத்தினால் துன்பம் மிகும்.

எனவே, இதற்குக் குறைவுற்ற தாது, இரத்தம், வசை போன்றவை எவை என உணர்ந்து அவற்றை மிகுதிப்படுத்தும் சிகிச்சை முறையையே பயன்படுத்த வேண்டும்.

பருகவும், நஸிய முறைக்கும் வாதத்தைத் தணிக்கும் இனிப்புச் சுவை கொண்ட பொருள்களாலான க்ஷயத்தையும், காசத்தையும் போக்கவல்ல நெய் மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே உடலிளைப்பைப் போக்கவல்ல உணவு தர வேண்டும்.

## கிருமிகளாலான தலைவலி

## (HEADACHE DUE TO TAENIA ECHINOCOCCUS, HYDATID CYST OR TAENIA SOLIUM)

தலைவலியில் ஊசியால் குத்துவது போன்ற துன்பம் விளையுமானாலும் புழுபூச்சிகள் அரித்து விடுவதால் உள்ளே உடைந்து போனது போலத் தோன்றுமானாலும், மூக்கிலிருந்து

இரத்தம் கலந்த சளி பெருகுமானாலும் அத்தகைய கொடிய வலி கிருமிகளால் தோன்றியது என உணர்க.

உடலுக்கு ஒவ்வாத உணவு, குடிநீர் முதலியவற்றைப் பயன்படுத்துவதால் தலையில் இரத்தமும், மாமிசமும் சிதைவுறும். அதனால் மூன்று தோஷங்களும் சீற்றமுற்று கொடுமையான தலைவலி தோன்றும். இந்தக் கிருமிகள் தலைக்குள் இரத்தத்தைப் பருகி, கடும் வலியை தோற்றுவிக்கும். அதனால் மனமும் பேதலிக்கலாம், காய்ச்சல், இருமல், வலிவின்மை, உடல் வறண்டு போதல், வீக்கம், மண்டையோட்டில் வீக்கம், வலி, பிளத்தல் போன்ற துன்பம், எரிச்சல், நடுக்கம் போன்ற துன்பங்களும் காணப்படும். சீழ் நாற்றம் வெளிப்படும். மண்டை ஓட்டுக்குள், அண்ணப்பகுதி, தலை ஆகிய பகுதிகளில் அரிப்பு, வீக்கம், ஈரத்துணி வைத்துள்ளது போன்ற உணர்ச்சி ஆகியவை காணப்படும். மூக்கிலிருந்து தாமிரநிறமுள்ள கபம் வெளிப்படும். காதில் ஒலி தோன்றும்.

இதற்கு (விலங்குகளின்) இரத்தத்தை நஸியமாக மூக்கில் விடவேண்டும். அந்த இரத்தத்தின் மணத்தால் கிருமிகள் மூக்கின் வழியே வெளிப்படத் துவங்கும். அந்நிலையில் தக்க கருவிகளைக் கொண்டு அவற்றைப் பிடித்து வெளியேற்ற வேண்டும். அவ்வாறு கருவியால் வெளிப்படுத்த இயலாத நிலையில் சிரோவிரேசன முறையைப் பயன்படுத்த வேண்டும். வாயுவிடங்கம், மிளகு, நாயுருவி விதை, முருங்கை விதை முதலியவற்றுடன் அவுரியைச் சேர்த்து பசுவின் சிறுநீர்விட்டு அரைத்து சிரோவிரேசன முறைக்குப் பயன்படுத்துக. அழுகிய மீனின் புலாலைச் சேர்த்து கிருமிகளைப் போக்கும் மருந்துப் பொருள்களால் புகை போட்டுப் பயன்படுத்துக. ஸுரஸாதி கூட்டுப் பொருள்கள் கலந்த கஞ்சி வகைகளை உணவாகக் கொடுக்க வேண்டும்.

## ஸூர்யாவர்த்தம், அநந்தவாதம், அர்தாவபேதகம் மற்றும் சங்கிகஸூர்யாவர்த்தம்.

## (FRONTAL SINUSITIS, MIGRAINE)

இந்நான்கு வகைத் தலைவலிகளும் மூன்று தோஷங்களின் சீற்றத்தால் தோன்றக்கூடியவை.

### ஸூர்யாவர்த்தம்

சூரியன் உதயமாகி வளரும் நேரத்தில், தலைவலி முதலில் குறைந்த அளவில் தோன்றி, பொழுது ஏற ஏறத் துன்பமும் அதிகமாகி விடும். பிறகு கண்கள், புருவங்கள் ஆகிய பகுதி களைச் சார்ந்து மிகவும் துன்புறுத்துவது இந்நோயின் இலக்கண மாகும். சூரியன் மறையத் துவங்கும் போது துன்பமும் குறையத்

துவங்கும். குளிர்ச்சி தரும் பொருள்களால் இந்நோயின் துன்பம் தணியும். ஆனால் சில நேரங்களில் வெப்பம் தரும் பொருள் களாலும் குறையலாம். இந்நோய் மூன்று தோஷங்களின் சீற்றத் தால் தோன்றும்பொழுது இது மிகுந்த துன்பம் விளைவிப்பதுமாகும்.

வாதம் பித்தத்துடன் இணைந்து பொட்டில், கண், நெற்றி ஆகிய பகுதிகளில் துடிக்கும் அதாவது விட்டு விட்டுத் தோன்றும் (PULSATING PAIN) வலியைத் தோற்றுவிக்கும்.

இதற்கு நஸியம், மேல்பூச்சு, திரவமருந்தால் நனைத்துக் கொண்டிருத்தல், கபளகிரஹம், சிரோவஸ்தி முதலான முறைகளைப் பின்பற்ற வேண்டும். வாந்தி எடுக்கச் செய்வதை தவிர்த்து, மற்ற பேதியாகச் செய்தல், வஸ்தி முறைகள், சிரோவிரேசன முறை ஆகியவை பயன்படுத்தத்தக்கவை என்பது நூலாசிரியர் சிலரது கருத்து.

காட்டுப் பகுதி விலங்குகளின் புலால், பால் சோறு முதலியன இந்நோயில் உண்ணத்தக்கவை. உணவு உட்கொண்டதும் நெய்யைப் பருகச் செய்ய வேண்டுமென்பது சரகரது கொள்கையாகும்.

நெய், எண்ணெய், வசை ஆகியவற்றைத் தலை மேல் தேக்கி வைக்கும் சிரோவிரேசன முறை பின்பற்றத்தக்கது. காட்டு விலங்குகளின் புலால் கொண்டு தலைப்பகுதியிலும் ஒற்றடம் கொடுக்கலாம். அல்லது அதை வைத்துக் கட்டலாம். தலை மேல் நெய் அல்லது பாலை விட்டுக் கொண்டிருந்தாலும் நலம் தரும். மயில், லாவகப்புள், தித்திரிப்பறவை முதலியவற்றின் புலாலுடன் கூடிய பாலால் தயார் செய்த நெய்யை நஸியமாகப் பயன்படுத்துக. அதில் ஜீவநீய கூட்டுப் பொருளுடன் எட்டு மடங்கு பால் கலந்து நெய் தயார் செய்யலாம்.

**அநந்த வாதம்** (TRIGEMINAL NEURALGIA MIGRAINE)

மூன்று தோஷங்களும் சீற்றமடைந்து மன்யாம் (STERNOMASTOID REGION) பகுதியைத் துன்புறுத்தி, பிடறிப் பகுதியைச் சார்ந்து துன்புறுத்தும் தலைவலி அநந்தவாதம் எனப்படும். இது தாடைப்பகுதிகளில் நடுக்கம், தாடைப்பிடிப்பு, கண்நோய் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும்.

பட்டினி கிடத்தல், மிக்க வருத்தம், உடல் மிகவும் வறண்டிருத்தல், குளிர்ச்சி, குறைவாக உண்ணுதல் போன்ற காரணங்களால் மூன்று தோஷங்களும் சீற்றமடைந்து இந்நோயை தோற்றுவிக்கும். அந்யதோ வாதமும் அநந்த வாதமும் ஒன்றே என சிலர் கூறினாலும் உண்மையில் இவை இரண்டும் வேறு வேறானவையே. அந்யதோ வாதம் வாதசீற்றத்தால் மட்டும்

தோன்றுவதாகும். அந்த வாதம் மூன்று தோஷங்களாலும் தோன்றும். மற்றும் இந்நோய் கண், புருவம், பொட்டில் பகுதி களையும் துன்புறுத்தும். தாடையில் நடுக்கத்தையும் தாடைப் பிடிப்புகளையும் இந்நோய் தோற்றுவிக்கும்.

இதற்கு ஸூர்யாவர்தத்திற்குக் கூறப்பட்டது போலவே மேல் பூச்சு, திரவ மருந்தால் நனைத்தல், கபள கிரஹம், சிரோவஸ்தி, நஸிய முறை, வாந்தி எடுக்கச் செய்தல் தவிர மற்ற பஞ்சகர்மா முறைகள் ஆகியவற்றைப் பயன்படுத்திச் சிகிச்சை செய்ய வேண்டும்.

வாத பித்தங்களைத் தணிக்கும் உணவு உட்கொள்ளச் செய்க. ஷட்பிந்து தைலத்தை நஸிய முறைக்கும், மேல் பூச்சுக்கும் பயன்படுத்துவது நலம் தரும். பத்யாதி க்வாதம், சிரச்சூலாதி வஜ்ரம், ஸூதாநிதிரஸம், மயூர கிருதம் முதலிய மருந்துகளும் நலம் தருபவையாகும்.

## அர்தாவ பேதகம்
## (HEMICRANIA GLAUCOMA-PAIN)

தலையில் பாதிப்பகுதியில் பதினைந்து அல்லது பத்து நாட்கள் அல்லது திடீர் திடீர் என வலி ஊசியால் குத்துவது போன்ற துன்பத்தைத் தோற்றுவிக்குமானால், அது அர்தாவ பேதகம் எனப்படும் தலைவலியாகும். இது மூன்று தோஷங்களின் சீற்றத்தால் தோன்றுவனவாகும்.

மிகவும் வறட்சி கொண்ட உணவை உட்கொள்ளுதல், அளவுக்கு மீறி உண்ணல், கிழக்கு திசையிலிருந்து வீசும் காற்றில் வசித்தல், பனியில் திரிதல், அளவுக்கு மீறிக் கலவி புரிதல், மலம் சிறுநீர் போன்றவற்றின் வேகத்தைத் தடுத்தல், மிக்க உடல் உழைப்பு, அளவுக்கு மீறிய உடற்பயிற்சி முதலிய காரணங் களால் சீற்றம் அடைந்த வாதம் தனியாகவோ, கபத்துடன் இணைந்தோ தலையின் பாதிப்பகுதி, மன்யாப்பகுதி, புருவம், பொட்டில், காது, கண், கபாலம் முதலிய பகுதிகளின் பாதி யளவைச் சார்ந்து, கத்தியால் வெட்டுவது போன்ற துன்பத்தை விளைவிக்கும். இந்நோய் முற்றினால் கண் பார்வை கெடும் அல்லது காது செவிடாகும்.

ஸூசுருதர் இது மூன்று தோஷங்களாலும் தோன்றுவதென்றார். சரகர் வாதத்தால் அல்லது வாதகபங்களால் தோன்றியது என்பார். பருவத்தில் உள்ளவர்களை இந்நோய் அதிக அளவில் துன்புறுத்தும். முதுமையில் உள்ளவர்களில் இது குறைந்து காணப்படுகிறது.

ஸூர்யாவர்தத்திற்குக் கூறியபடி நஸிய முறை, மேல் பூச்சு, கபளகிரஹம், சிரோவஸ்தி, உணவு முறை, பாற்சோறு உண்ணு தல், நெய்யைப் பயன்படுத்துதல் போன்ற அனைத்தையும் இதற்கும் பயன்படுத்த வேண்டும்.

அவபீடன நஸியத்திற்கு வாகை வேர், மூங்கில் வேர், கர்ப் பூரம் முதலியவற்றைப் பயன்படுத்தலாம். அல்லது மனோ சிலையைத் தேன் கலந்து அல்லது சந்தனத்துடன் நஸிய முறைக்கு பயன்படுத்தலாம். வசம்பு, திப்பிலித் தூள்களைப் பயன்படுத்தலாம்.

நன்னாரி, நீலாம்பல், கோஷ்டம், அதிமதுரம் ஆகியவற்றைக் காடி விட்டு அரைத்து தலையில் அதைப் பற்றாகப் பூச வேண்டும்.

பிராணாயாமம் செய்தல், எருக்க இலை சுரசத்தை நஸிய மாக பயன்படுத்துதல், ஷட்பிந்து தைலத்தை நஸியமாகப் பயன் படுத்துதல் மற்றும் நாள் தோறும் குறைந்தது 15 நிமிஷம் முதல் அரை மணி நேரம் வரை சவாசனத்தில் இருத்தல் என்பன நன்மை தரும்.

## சங்கிக ரோகம்

## (LATERAL SINUS THROMBASIS, MASTOID ABSCESS, ENCEPHALITIS)

வலிமை பெற்றுச் சீற்றமடைந்த வாதம், பொட்டில் பகுதியைச் சார்ந்து கப பித்தங்களையும், இரத்தத்தையும் சார்ந்து கடுமையான தலைவலியைத் தோற்றுவிக்கும். இது பொட்டில் பகுதியில் கடுமைய்ரன வலியைத் தோற்றுவிக்கும். மரணத்தைப் போல கொடுமை தரும் நோய் என்பர் மருத்துவர்கள். மூன்று நாட்களில் மரணத்தையும் தோற்றுவிக்கும். அதற்குள் தக்க மருத்துவரைக் கொண்டு சிகிச்சை பெற்று குணம் பெறலாம். இந்நோய்க்கு பாலிலிருந்து எடுத்த வெண்ணெயாலான நெய்யை நஸியமாகப் பயன்படுத்துதல், அதைப் பருகுதல் ஆகியவை செய்யத்தக்கவை.

சதாவரி, எள், அதிமதுரம், நீலாம்பல், அருகம்புல், சாரடை ஆகியவற்றைக் காடி விட்டு அரைத்து தலையில் பூச வேண்டும். குளிர்ச்சி தரும் திரவப்பொருளால் தலையை நனைத்துக் கொண் டிருத்தல், அவபீடன நஸிய முறையைச் செய்தல் ஆகியவை பயன்தரும்.

* * *

# அதர்வ வேதமும், ஆயுர்வேதமும்

**இக்கட்டுரையின் உள்ளே காணப்படும் துணைத் தலைப்புகள்: -**

1. வேத மந்திரங்களில் மரங்களின் பச்சையம்
   (i) ஸௌர ஸூக்தத்தில் ஒரு மந்திரத்தின் கருத்து
2. நோய்க் கிருமிகளைப் பற்றி வேத விளக்கம்
3. நோய்க் கிருமிகள் நம் உடலில் தங்கும் இடங்கள்
4. விஷூசிகா (காலரா) நோய்க் கிருமிகள்
5. கிருமிகளின் இருப்பிடம்
6. நுண் கிருமி வகைகள்
7. ருத்ர வர்ணனை

**ராக்ஷஸர்களை அழிக்கக் கூடிய மூலிகை**

8. அதர்வ வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மூலிகைகளின் )னவகை
9. அதர்வ வேதத்தில் இயற்கை மருத்துவம்
10. அதர்வ வேதத்தில் மூலிகைகள்
11. மணி, மந்திர ஔஷத சித்திகள்
    **மூலிகையை தாய்த்தாகச் செய்து கழுத்தில் கட்டிக்கொள்ளுதல்.**
12. அதர்வ வேத மந்திரங்களின் தேவை
13. அதர்வண வேதம் கூறும் சிகிச்சை முறைகள்
14. மகோதரத்திற்கு சிகிச்சை
15. அதர்வ வேதத்தில் மனநோய்களுக்குச் சிகிச்சை
16. அதர்வ வேதத்தில் சாரீரம் (அனாடமி) - உடல் கூறு.
17. மலட்டுத்தன்மை, கர்பதோஷம் முதலியன
18. வேத இலக்கியத்தில் மருத்துவக் குறிப்புகள்
19. ரிக்வேதத்தில் மருத்துவக் குறிப்புகள்
20. சுக்ல யஜுர் வேத ஸம்ஹிதையில் மருத்துவக் குறிப்புகள்
21. தைத்திரீய ஸம்ஹிதையில் மருத்துவக் குறிப்புகள்
22. ஸாம வேதத்தில் குறிப்புகள்
23. பிராம்ஹண கிரந்தங்களில் மருத்துவக் குறிப்புகள்
24. பிருஹதாரண்யகத்தில் குறிப்புகள்
25. வேதத்தில் மருத்துவத்தைப் பற்றி ஆராய்ந்த அறிஞர்கள்.

# அதர்வ வேதமும், ஆயுர்வேதமும்

"விஞ்ஞானம் வளர்ச்சி பெறாத காலத்தில் இயற்கையின் அற்புதங்களைக் கண்டு வியந்து உலகப் படைப்பு ஒரு மாபெரும் சக்தியின் விளையாட்டு எனக் கருதி அக்காலத்து அறிஞர்கள் பாடிய கற்பனை வளம் மிகு பாடல்களின் தொகுப்பே வேதம். அம் மாபெரும் சக்தியை வழிபடுதல் யாக்கையின் பயன் எனக் கருதி அதன் வழிபாட்டுக்கு உரிய வழி முறைகளை வகுத்துக் கூறுவதே வேதம். இன்று விஞ்ஞானம் வளர வளர அக் கருத்துக்கள் வெறும் கற்பனையே என உறுதியாகிறது" என்று வெளிநாட்டு அறிஞர்கள் மட்டுமல்ல, நம்நாட்டு அறிஞர்கள் பலரும் கருதுகின்றனர்.

விஞ்ஞானம் கண்டு கொண்டுள்ள பொருள்கள் அனைத்தும் வேத மந்திரங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன என நாம் கூறவில்லை. ஆனால் விஞ்ஞான வளர்ச்சிக்கு அடிப்படை யான கருத்துகள் பல வேத மந்திரங்களில் காணப்படுகின்றன என்பது அம்மந்திரங்களை ஆழ்ந்து ஆராய்ந்த அறிஞர்களின் கருத்தாகும். எடுத்துக்காட்டுக்கு ஒன்று:

## 1. வேத மந்திரங்களில் மரங்களின் பச்சையம்

### ஸௌர ஸூக்தத்தில் ஒரு மந்திரத்தின் கருத்து

ஆதவனே! மரங்களில் மாஹாரிமாணத்தை நிரப்பினாய். அவ்வாறே ஹாரிதிரவங்களால் ஹாரிமாணத்தை நிரப்புகிறாய். இதற்கு "ஒஜா" எனும் அறிஞர் தரும் விளக்கம்: "ஒ சூரியனே! எம் நிச்வாசத்திலிருந்து (நாங்கள் வெளிவிடும் மூச்சிலிருந்து) வெளிப்பட்ட "ஹாரிமாணம்" எனும் (கரியமில) வாயுவை நீ மரத்தில் நிரப்புகிறாய். அவ்வாறே எம் ஹாரிமாணத்தால் வனஸ்பதிகளை ஹாரிமாணப் பொருள் கொள்ளச் செய்கிறாய். மரங்களில் காணப்படும் ஹாரிததிரவியம் (பச்சையம்) ஆதவ னின் ஒளியால் ஹாரிமாணவாயுவினால் தோன்றுகிறது. ஹாரிதப் பொருளை (பச்சையத்தைத்) தோற்றுவிக்கக் கூடிய தாகையால் அதற்கு "ஹாரிமாணம்" என்ற பெயர் ஆயிற்று. ஹாரிமாணம் என்றால் ஹாரிதத்தைச் (பச்சை நிறப்பொருளை) செய்வதாகும். தத்ம எனும் சமஸ்கிருத வினைக்கு 'ஊதுதல்' என்று பொருள், ஆகையால் இது ஒரு வாயு என்பதை உணரலாம். உயிரினங்கள் வெளியிடும் கரியமிலவாயுவை மரங்கள் சுவாசித்து ஆதவனின் கிரணங்களால் பச்சையப் பொருளைச்

செய்து கொள்கின்றன என்பது இன்றைய விஞ்ஞானம் கூறும் பொருளையே வேதம் குறிப்பிட்டுள்ளது என்பது உணரத்தக்கது.

நுட்பமாக ஆராய்ந்தோமாயின் வேத மந்திரங்களில் நூற்றுக் கணக்கான விஞ்ஞானக் கருத்துக்களைக் காணலாம். தலைப்புக்கு ஏற்ப வேதங்களில் காணப்படும் மருத்துவப் பொருள்கள் இனி ங்கு விளக்கப்படுகின்றன.

சுகேஷு மே ஹாரிமாணம் சேபேணகாஸு தத்யஸி |

அதோ ஹாரித்ரவேஷு மே ஹாரிமாணம் நிதத்யஸி

"ஆயுர்வேதம் அதர்வ வேதத்திற்கு உபாங்கம்" என்கிறார் ஸுசுருதர். அதர்வ வேதத்தில் பதார்த்த விஞ்ஞானம், மனோ விஞ்ஞானம், கர்மஜவியாதி விஞ்ஞானம் (முன் வினையடியாகத் தோன்றும் நோய்களைப் பற்றிய அறிவு), ஆயுர்விஞ்ஞானம், சிகித்ஸா விஞ்ஞானம் முதலியவற்றைக் காணலாம்.

## 2. நோய்க்கிருமிகளைப் பற்றி வேத விளக்கம்

பொதுவாக நோய்கள் இரு வகைப்படும். உடலுறுப்புகளில் தோன்றும் கோளாறுகளால் தோன்றுவது ஒரு வகை. புறக்காரணங்களால் அதாவது அடிபடுதல், கீழே விழுதல், விஷக்கிருமிகளால், விலங்குகளால் தாக்கப்படுதல் ஆகிய காரணங்களால் தோன்றுபவை மற்றொன்று.

டேனிஷ் விஞ்ஞானி மூலர் (MULAR) என்பவர் கண் களுக்குப் புலனாகாத நுண்ணிய கிருமிகளைப் பற்றி ஆராய்ந்து பல விஷயங்களை வெளிப்படுத்தினார். 1840ல் பெர்லினைச் சார்ந்த ஹேநெல் (HEYNEL) என்பவர் நுண் கிருமிகளால் தொற்று நோய்கள் பரவுவதைக் கண்டு கொண்டார். பிரெஞ்சு நாட்டைச் சார்ந்த லூயிபாஸ்ச்சர் LOUIS PASTEUR என்பவர் நுண்கிருமிகளைப் பற்றி ஆராய்ந்து ஜீவ அணு விஞ்ஞானம் (MICRO BIOLOGY) எனும் சாஸ்த்திர பிரிவுக்குத் தந்தையானார்.

ஆனால் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்பே வேதம் நுண்கிருமிகளைப் பற்றி விளக்கம் தந்துள்ளது.

"கணகளுககு புலனாகக கூடியவையும புலனாகாதவை யுமான கிருமிகள் நம் உடலில் வலைபோல பரவி இருக்கின்றன. "சலுன அலகண்டு" எனப் பெயர் கொண்ட அந்தக் கிருமிகளை ஔஷதிகளால் அழிப்போம்."

இஹ கலு ஆயுர்வேதோ நாம யதுபாங்கமதர்வ வேதஸ்ய

ஸுசுருதஸம் -

த்ருஷ்ட மத்ருஷ்ட மத்ருஹ மதோ மத்ருஹம்

அல் கண்டூன் ஸர்வான் சலுனான் கிருமீன் வசஸா ஜம்பயா மிஸி|| (அதர்வ வேதம், காண்டம் 2, ஸூக்தம் 31, மந்திரம் 2)

(1) "நான் அல்கண்டூ எனும் பெயர் கொண்ட கிருமி களை ஔஷதியால் நாசம் செய்கிறேன். இவற்றில் சில ஔஷதி களால் எரிந்து போகின்றன. மற்றும் சில எரியாமலேயே மரித்துப் போகின்றன. அழியாமல் இருப்பவற்றை மூலிகைகளின் வேரைக் கொண்டு அழித்து விடுகிறேன்." (அதர்வவேதம்-கா- 2-ஸூ-32-ம-3).

(2) சமானரூபம் உள்ளவை இரண்டு, வேறு வேறு உருவங் களைக கொண்டவை இரண்டு, கருநிறமுள்ளவை இரண்டு, சிவப்பு நிறமுள்ளவை இரண்டு. இவற்றில் சில பப்ரு நிற முள்ளவை. சில பப்ரு வர்ணமுள்ள காதுகள் கொண்டவை. சில கழுகுகளின் தோற்றமுள்ளவை. சில ஓநாய்களைப் போன்றவை. இவை அனைத்தையும் அழித்துவிட வேண்டும். (அ.வே-5-ஸூ-23-ம-4)

(3) சில கிருமிகளின் விலாப்பகுதி வெண்மை, சிலவற்றின் புயங்கள் வெண்மை, சிலவற்றின் நிறம் கறுப்பு, மற்றும் சில பல வகை உருவங்கள் கொண்டவை. இவை அனைத்தையும் ஔஷதி யால் அழித்து விடுகிறேன். (அ.வே-கா - 5 -ஸூ-23-ம-5)

(4) சில கிருமிகள் மூன்று தலைகள் உள்ளவை. சில மூன்று திமில் (எருதுத்திமில் போன்ற உறுப்புகளை) கொண்டவை. சில வெண்ணிறமும் மற்றும் சில ஸாரங்கம் போன்றவை. இவற்றின் சிரங்களை வெட்டி விடுகிறேன், விலா எலும்புகளை முறித்து விடுகிறேன். (அ.வே-கா- 5 ஸூ-23-ம-9)

(5) பல உருவங்களைக் கொண்டவை, நான்கு கண் களைக் கொண்டவை, ஸாரங்க வர்ணமும், வெண்ணிறமும் கொண்டவையான கிருமிகளின் விலா என்புகளை முறித்துத் தலைகளை வெட்டி விடுகிறேன். (அ.வே-கா-2-ஸூ-32-ம-2)

(6) ஆண் கிருமிகளையும், பெண் இனத்தைச் சார்ந்த கிருமிகளையும் தலையைக் கல்லால் உடைத்தும் முகத்தை நெருப்பால் சுட்டும் கொன்று விடுகிறேன். (அ.வே. -கா-5-ஸூ-23-ம-13)

(7-8) ஓ கிருமியே என்னைத் துன்புறுத்தும் உன் இரு கொம்பு களையும் முறித்து விடுகிறேன். உன் உடலில் நஞ்சுடன் கூடி உள்ள பையை நசுக்கி விடுகிறேன். (அ.வே-கா-2-ஸூ-23-ம-6)

1. அல கண்டுந ஹன்மி மஹதாவதேன தூநா அதூநா அரஸா அபூவன் |

*சிஷ்டா நசிஷ்டான் நிதிராமி வாசா யதா க்ருமீணாம் நகி ருச்சிஷாதை|| அதர்வ -2-32-3.*

2. ஸரூபௌ த்வௌ வ்ரூபௌ த்வௌ க்ருஷ்ணௌ த்வௌ ரோஹிதௌ த்வௌ |

*பப்ருச்ச பப்ரு கர்ணச்ச க்ருத்ர : கோகச்ச தே ஹதா || அதர்வ -5-23-4.*

3. *யே க்ருமய: சிதிகக்ஷா யே க்ருஷ்ணா: சிதி பாஹவ: |*

*யே கே ச விச்வரூபாஸ்தான் க்ருமீன் ஜம்பயாமஸி || அதர்வ -5-23-5*

4. *த்ரி சீர்ஷாணாம் த்ரிக குதம் க்ருமிம் ஸாரங்க மர்ஜுனம் |*

*ச்ருணாம்யஸ்ய ப்ருஷ்டீரபி வ்ருச்சாபி யச்சிர :||*

*அதர்வ 5-23-9*

5. *விச்வரூபம் சதுரக்ஷம் க்ருமிம் ஸாரங்க மர்ஜுனம் |*

*ச்ருணாமி அஸ்ய ப்ருஷ்டீரபி வ்ருச்சாமி யச்சிர : || அதர்வ 2-32-2-4.*

## 3. நோய்க்கிருமிகள் நம் உடலில் தங்கும் இடங்கள்

(9). குடலிலும், தலையிலும் விலாப்பகுதிகளிலும் தங்குபவையும் பல வழிகளில் நம் உடலில் புகுந்து கொள்ளுபவையுமான கிருமிகளை அழித்து விடுகிறேன். அ.வே.-கா-2-ஸூ-31-ம-4

(10). கண்களில் புகுந்து கொள்பவையும், மூக்கினுள் புகுந்து கொள் பவையும், பற்களில் தங்குபவையுமான நோய்களைத் தோற்று விக்கும் கிருமிகளை அழித்துவிடுகிறேன். அ.வே.-கா-5-ஸூ-23-ம-3

(காலரா, குடல் நோயால் தோன்றும் காய்ச்சல், குடல் க்ஷயம் முதலிய நோய்களைத் தோற்றுவிக்கும் கிருமிகள், குடலி லும் ச்வஸதகஜ்வரம் (ந்யுமோனியா) தோற்றுவிக்கும் கிருமிகள், மற்றும் எலும்புருக்கி (ராஜயக்ஷ்மா) எனும் நோயைத் தோற்று

விக்கும் கிருமிகள் ஆகியவை புப்புசத்திலும் தங்கும் என்பது மருத்துவ நூல் கூற்றாகும்.)

## 4. விஷூசிகா (காலரா) நோய்க்கிருமிகள்

(11). ஸூசிகா எனும் பெயர் கொண்ட உயிரணுக்கள் தோள், புப்புசம், கல்லீரல், மண்ணீரல், சிறுநீர்க்குண்டிகை, பித்தாசயம், குடல் ஆகிய உறுப்புகளில் தங்குகின்றன. இவை கண்களுக்குப் புலப்படா. எப்பொழுதும் அசைந்து கொண்டிருப்பவையாகும். ஒரே முறையில் அவற்றை ஒழித்துவிட வேண்டும்.

ரிக்வேதம்-மண்டலம்-1-ஸூ-191-மந்-7

## 5. கிருமிகளின் இருப்பிடம்

(12). மலைகளிலும், வனங்களிலும், செடிகளிலும், விலங்கு களிலும், மாட்டுக் கொட்டகைகளிலும், நீரிலும் தங்கியிருக்கும் கிருமிகள் உடலில் புகுந்ததும் அவற்றை அழித்து விட வேண்டும்.

'இவை நம் உடலில் பட்ட விரணங்களின் வழியாக நம் உடலில் புகுந்து துன்புறுத்தும்' என இந்த மந்திரத்தின் உரையில் ஸாயணர் குறிப்பிட்டுள்ளார். அதர்வவேதம் -கா-2-ஸூ31-ம5

6. ஸர்வேஷாம் ச க்ருமீணாம் ஸர்வாஸாம் ச க்ருமீணாம்|
பினத்மி அச்மனா சிரோ தஹாம்யக்னினா முகம்||அதர்வ-5-23-13

7-8. ப்ரதே ச்ருணோமி ச்ருங்கே யாம்யாம் விதுதாயஸி|
பினத்மி தே குஷூம்ம யஸ்தே விஷதான:|| அதர்வ - 2-32-6

9. அன்வான் த்ரயம் சீர்ஷண்ய மதோ பார்ஷ்டேயம் க்ருமீன்|
அவஸ்கவம் வ்யக்வரம் க்ருமீன் வசஸா ஜம்பயாமஸி ||
அதர்வ - 2-31-4

10. யோ அக்ஷ்யௌ ஸர்பதி யோ நஸி பரி ஸர்பதி|
ததாம் யோ மத்யம் கச்சதி தம் க்ருமிம் ஜம்பயாமஸி ||
அதர்வ 5-23 -3

11. யே அம்ஸ்யா : யே அங்க்யா : ஸூசிகா யே ப்ரகம் கதா:|
அத்ருஷ்டா : விஞ்சனேஹ வ: ஸர்வே ஸாகம் நிஜஸ்யதே||
ரிக்-மண்டல - 1 - ஸூ. 191

*ப்ரகம் கதா : ப்ரகிருஷ்ட விஷா : (ஸாயண) ப்ரகேகதா : ப்ரக்ருஷ்ட பீடா ப்ரதாச்சஞ்சலா: (ஸ்வாமி தயானந்த பாஷ்யம்) ஸூசிகா ஸூசீவ வ்யதகா : (ஸ்வாமி தயானந்த)*

12. யேக்ருமய : பர்வதேஷு வனேஷு ஓஷதீஷு பசுஷு அப்ஸ்வந்த:|

*யே அஸ்மாகம் தன்வமாவி விசு: ஸர்வம் தத்தன்மி ஜனிம*

அதர் - 2-31-5

*தன்வ : தனூ : சரீராணி ஆவிவிசு : வ்ரணமுகேன*

*அன்ன பானாதி த்வாரேண ப்ரவிஷ்டா : (ஸாயண)*

## 6. நுண் கிருமி வகைகள்

(13). நிலத்தின்மேல் வசிக்கக்கூடிய கந்தர்வர், அப்ஸரஸ், அராதிகீமீதனம், ராக்ஷஸா, பிசாசு எனப் பெயர்களைக் கொண்ட நுண்ணுயிரினங்கள் உள்ளன. அவற்றிற்கு நாம் வெகு தொலைவில் இருக்க வேண்டும். (அதாவது அவற்றை அழித்துவிட வேண்டும்). (அதர்வ-கா-12-ஸூ-1-ம-5)

(உரையாசிரியர்கள் இப்பெயர்களுக்குப் பொருள் கூ யுள்ளனர். மனம் நுகரச் செய்பவை, கானம் செய்யக்கூடியவை, நிலத்தில் வசிப்பவை, நீரில் வசிப்பவை, வானத்தில் திரிபவை ஆகியவை கந்தர்வம் எனும் பெயர் கொண்டவை. உயிரைத் துன்புறுத்துபவை அஸுரர் எனப்படும். காப்பாற்றுபவரைப் போல் அருகில் சேர்த்து துன்புறுத்துபவை ராக்ஷஸம் எனப்படும்).

## 7. ருத்ர வர்ண

ருத்ர சப்தமும் சில வகைக் கிருமிகளைக் குறிப்பதாகும். ஆயுர்வேத நூலில் ருத்ரஜ்வரம் கூறப்பட்டுள்ளது. இது (வைரஸ் பீவர்) விஷக்காய்ச்சல் எனப்படுவதாகும்.

(14). தாமிர நிறமுள்ளவை, சிவப்பு நிறமுள்ளவை, பப்ரு வர்ணமுள்ளவை, நீல நிறக் கழுத்து கொண்டவை, வெண்ணிறக் கழுத்து கொண்டவை ஆகியவை ருத்ர எனும் பெயர் கொண்ட கிருமிகள். இவை நிலத்திலும், வானத்திலும், கடலிலும் வசிக்கின்றன. சில மரங்களின் மேல் வசிக்கின்றன. இவற்றின் நிறம் பச்சையாகும். சில சிவப்பு நிறமான உடலும் நீல நிறமுள்ள

கழுத்தும் கொண்டவை. இவற்றில் சில ருத்ர கிருமிகளுக்குத் தலைவனாகும். அவை மொட்டைத் தலையுடனோ அல்லது முடி நிறைந்த தலையுடனோ காணப்படும். சில காற்று மண்டலத்தில் சுற்றிக் கொண்டிருக்கும். (சுக்ல யஜுர்வேதம் - அத் -16)

முகம் வழியாகச் சென்று உடலில் புகும் கிருமிகள் சிறு குடலைச் சார்ந்த காய்ச்சல், விஷுசி, அதிஸார பேதி முதலிய நோய்களைத் தோற்றுவிக்கும்.

13. யே கந்தவீ அப்ஸரஸோ யே சாராயா : ன

பிசாசான் ஸர்வான் ரக்ஷாம்ஸி தானஸ்மத் பூமே யாவய

(அதர்வ 12-1-51.)

14. அஸௌயஸ் தாம்ரோ அருண உத பப்ரு: ஸுமங்கள : |

அஸ்மின் மஹத்யர்ணவே அந்தரிக்ஷே பவா அதி ||

நீலக்ரீவா: சிதிகண்டா: திவம் ருத்ரா உபாச்ரிதா: |

நீலக்ரீவா: சிதிகண்டா: சர்வா அத: க்ஷமாசரா: ||

யே வ்ருக்ஷேஷு சஷ்பிஞ்ஜரா நீலக்ரீவா விலோஹிதா: |

யே பூதானாமதிபதயோ விசிகாஸ: கபர்தின: |

யே தீர்த்தானி ப்ரசரந்தி ச்ருகா ஹஸ்தா நிஷங்கிண: ||

(சுக்ல - யஜுர்வேத அத் - 16)

நாசி வழியாகச் செல்பவை சுவாச உறுப்புகளைச் சார்ந்த எலும்புருக்கி (ராஜயக்ஷ்மா) இன்ப்ளூயென்ஸா, சுவாசகாசம் போன்ற நோய்களைத் தோற்றுவிக்கும்.

தோல் வழியாக உட்புகுந்தவை உபதம்சம், பூயமேகம், குஷ்டம், பூத உன்மாதம், அபஸ்மாரம், விஸர்ப்பம், அபதானகம் போன்ற நோய்களைத் தோற்றுவிக்கும்.

இந்தக் கிருமிகளை அழிக்கக் கூடிய மூலிகைகளையும் வேதம் குறிப்பிட்டுள்ளது.

**ராக்ஷஸர்களை அழிக்கக் கூடிய மூலிகை**

**1. பிருச்னி பர்ணி (மூலிகை)**

(15). இரத்தத்தைக் குடிக்கும் (கெடுக்கும்) ராக்ஷஸர்களையும், கருவை அழிக்கும் ராக்ஷஸர்களையும் பிருச்னி பர்ணி எனும் மூலிகை அழிக்கவல்லது. (அதர்வவேதம்-கா-2-ஸூ-25-ம-3)

**2. நாயுருவி (மூலிகை)**

(16). கெட்டகனவு, மனத்தின் கவலை ஆகியவற்றால் துன்பப் படுபவருக்கு நன்மையளிக்கும் அரக்கர்களையும் அர்சஸ் (மூல நோய்), தெற்றுவாய் முதலிய வாக்தோஷங்கள், க்ஷயம் முதலிய வற்றையும் அபாமார்கம் (நாயுருவி) போக்கவல்லது.

(அதர்வவேதம்-கா-4-ஸூ-17, ம-5-18-ம-7-8)

**8. அதர்வ வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மூலிகைகளின் இனவகை**

அதர்வ வேதத்தில் 8வது காண்டத்தில் 7வது ஸூக்தத்தில் மூலிகைகளின் இருவகை விளக்கப்பட்டுள்ளது.

(1) கபில (வெண் சிவப்பு) நிறமுள்ளவை, தூய வெண்ணி முள்ளவை, சிவப்பு நிறமுள்ளவை, நீலநிறமுள்ளவை, கருநிற முள்ளவை என வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன.

(2) வேரிலிருந்து கிளைகளாகப் பிரியும் மாதுளை முதலியவை, ஒரே வேருள்ள எருக்கன் முதலியவை, நான்கு பக்கங்களிலும் பரவிய வேர்களைக் கொண்ட பிராம்மி முதலி யவை, முட்கள் உள்ளவை, நுட்பமான உறுப்புகள் கொண்டவை, தண்டாக உள்ள (கரும்பு போன்றவை) கிளைகள் இல்லாதவை (தென்னை போன்றவை) முதலியன கூறப்பட்டுள்ளன. (அதர்வ-கா-8-ஸூ-7-ம-4)

15. அராய மஸ்ருக பாவானம் யச்ச ஸ்பாதிம் ஜிஹீர்ஷதி|
காபீதும் கண்வம் நாஸய ப்ருச்னி பர்ணீம் ஸஹஸ்வச||(அ2-25-3)

16. த்வவெளஷ்வப்ன்யம் த்வவெள ஜீவித்யம் ரக்ஷோ அச்வ மராரய :

துர்ணாம்நீம் ஸர்வா துர்வாசஸ்தா அஸ்மந்நாசயா மஸி|
அதர்வ-4 - 75

அபாமார்கேபி மார்ஷ்டு க்ஷேத்ரியம் சபதச்சய :|
அபாஹ யாதுதானீ ரபஸர்வா அராம்யய: ||
அபம்ருஜ்ய யாதுதானா ரப ஸர்வா அராய்ய:
அபாமார்க த்வயா வயம் ஸர்வம் ததபம்ருஜமஹே ||

(அதர்வ-4-18-7-8)

**தன்மையால், உயிரைக் காப்பவை, எந்நிலையிலும் கேடு விளைவிக்காதவை, உயிர்நிலைகளுக்கு வலிமை தருபவை,**

விரணங்களை (காயங்களை) ஆற்றுபவை என வகைப்படுத்திக் கூறப்பட்டுள்ளன.
(அதர்வ-கா-8-ஸு-7ம-6)

ஸம்சோதனம் (உடலைத் தூய்மைப்படுத்துபவை) ஸ்நேஹனம் (எண்ணெய் முறைக்கு உரியவை) என சில மூலிகைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன.
(அ.வே-கா-8-ஸூ-7-ம-7)

மீண்டும் மீண்டும் புத்துயிர் பெறுபவை, அக்னிக்கு இரையாகுபவை, நீரின் தன்மை மிக்கவை, நிலையாக இருப்பவை, ஆயிரம் பெயர்களைக் கொண்டவை என மூலிகைகள் குறிப்பிடப்பட்டுள்ளன. (அதர்வ-கா-8-ஸூ-7-ம-8)

நஞ்சைப் போக்குபவை. (அதர்வ-கா-8-ஸூ-7-ம-10)

கிருத்யா என ஏவல் முதலியவற்றால் உண்டாகும் துன்பங்களைத் தீர்ப்பவை. (அதர்வ-கா-8-ஸூ-7-ம-10)

உணவு அளிப்பவை, பால் தருபவை, புல், நெய் முதலியவற்றைத் தருபவை, எண்ணெய்ப்பசை கொண்டவை என வேறுபடுத்திச் சில மூலிகைகள் அதர்வவேதம் கா-8-ஸூ-7-ம-12லும், இலைகளைத் தருபவை அதர்வேதம் கா-8-ஸூ-7-ம-13லும், மணிகளைப் போல மாத்திரைகள் செய்து தரிக்கக் கூடிய மூலிகைகள் அதர்வதேவம் கா-8-ஸூ-7-ம-14லும் கூறப்பட்டுள்ளன.

மலர்களைக் கொண்டவை, மலர்கள் அற்றவை ஆனால் தளிர்கள் கொண்டவை, பழம் தருபவை, பழங்கள் (காய்கள்) அற்றவை எனச் சில அதர்வ வேதத்தில் கா-8-ஸூ-7-ம-17)ல் கூறப்பட்டுள்ளன.

## 9. அதர்வ வேதத்தில் இயற்கை மருத்துவம்

மண், நீர், மலை, ஆறு, அருவி, மேகம், பொழியும் நீர், நெருப்பு, மின்னல், காற்று, சூரியன், சந்திரன் ஆகிய இயற்கைப் பொருள்களும் சிகிச்சைக்குப் பயன்படும் என்று அதர்வவேதம் கூறுகிறது.

**மண்:-** ஸர்ப்ப விஷத்தை அறியும் தன்மையுள்ளது.

**சவுட்டு மண் :-** கபத்தையும், இருமலையும் தணிக்கும்.

**ஸௌராஷ்டிர மண்:-** (கோபி சந்தனம்) தலைமுடியை நீளமாக வளர்க்கும், கருநிறமுள்ளதாக்கும்.

**உயர்ந்த மலை :-** உயர்ந்த மலை மேல் ஓட்டமாக ஏறிச் செல்வதால் ஸர்ப்ப விஷம் இறங்கும்.

**நீர் :-** அப்பொழுதே ஏற்பட்ட காயம், ஸ்வப்ன தோஷம் தூக்கமின்மை, மரபு வழியாகத் தோன்றும் நோய்களைப் போக்கும்.

(பெருகும்) ஆற்று நீரில் மூழ்குவதால் ஸர்ப்ப விஷதோஷம் தணியும். கண் பார்வை நன்றாக இருக்கும்.

**நீர்வீழ்ச்சியில் உள்ள நீர்:-** இதயவலி, இதயத்தில் எரிச்சல், கண் எரிச்சல் முதலியன நீங்கும்.

**புதிதாகத் தோண்டப்பட்ட கிணற்று நீர்:-** உயரத்திலிருந்து கீழே விழும் நீர் விரணத்தில் தோன்றும் கெட்ட நீர்ப்பெருக்கைத் தணிக்கும்.

**மேகத்திலிருந்து விழும் நீர்:-** சிறுநீர்த்தடை, சிறுநீர்ப்பையில் கல், பித்தாசயத்தைச் சார்ந்த நோய்கள் முதலியவற்றைத் தணிக்கும்.

**நெருப்பு:-** குளிர்ச்சியால் தோன்றும் நோய்கள், ஸர்ப்ப விஷத்தால் தோன்றும் எரிச்சல் ஆகியவற்றைப் போக்கும். கிருமிகளால் கெட்ட உணவைத் தூய்மைப்படுத்தும். சிறுநீர் தடையையகற்றும், கருவுற்றவளுக்கு சுகப்பிரசவம் உண்டாக்கும்.

**மின்னல் :-** உணவில் உள்ள கிருமிகளை அகற்றும். சிறுநீர்த் தடையை அகற்றும்.

**வாயு:-** வாயு உடல் நலம் தரும்.

**மேகம் :-** மேக கர்ஜனமும், முழக்கத்துடன் பொழியும் மேகத்தின் நீரும் ஸர்ப்ப விஷத்தைத் தணிக்கும்.

**சந்திரன் :-** நிலா சிறுநீர்த்தடையைப் போக்கும். மரபு வழியாகத் தோன்றும் (வம்சாநுகத) நோய்களைத் தீர்க்கும்.

**சூரியன் :-** (இதய நோய், காமாலை, கண்டமாலை, தலை நோய்கள் ஆகியவற்றை சூரிய கிரணங்கள் போக்கும். பூச்சிகளின் விஷத்தைத் தணிக்கும். கிருமிகளை அழிக்கும். சூரிய உபாஸனை, சூரியஸ்நானம், சூரிய ஒளியில் உடற்பயிற்சி செய்தல் முதலியன பல நோய்களைப் போக்கும்.

## 10. அதர்வ வேதத்தில் மூலிகைகள்

1. நக்த ராமா, கிருஷ்ணா, அஸிக்னி, பிரும்மா எனும் மூலிகைகள் கிலாஸ குஷ்டத்தையும் தலை வழுக்கை விழுதலையும் போக்கும். (அதர்வ கா-1-ஸூ-13-ம-1-4)

2. ஸுபர்ணா, அஸுரி, ஸரூபா, சியாமா எனும் மூலிகைகள் தோல் நோய்களைப் போக்கும். (அதர்வ கா-1-ஸூ-1-14-ம)

3. புற்றில் தோன்றிய மூலிகைகள் அதிஸாரம், அதிமூத்ரம், நாடீ விரணம் ஆகியவற்றைப் போக்கும். (அதர்வ கா-2-ஸூ-3-ம-1-6)

4. பிருச்னிபர்ணி என்பது கருச்சிதைவு, இரத்த விகாரம் ஆகியவற்றைத் தணிக்கும். மற்றும் உடலைச் செழிப்புறச் செய்யும். (அதர்வ கா-2-ஸூ-25-ம-1-4)

5. குரங்கம் எனும் மானின் கொம்பும், அதன் தோலும் க்ஷயம், குஷ்டம், அபஸ்மாரம் கால்கை வலி எனும் நோய்களைத் தணிக்கும். (அதர்வ-கா-3-ஸூ-7-ம-1-3)

6. சதவீர்யா, தூர்வா ஆகியவை நீண்ட ஆயுளைத் தருவதுடன் பல நோய்களைத் தணிக்கும்.

7. விருஷா, சுஷ்மா என்பவை விந்துவை வளர்க்கும்.

(அதர்வ-கா-4-ஸூ-47-ம-1-8)

8. ரோஹிணீ எனும் ஔஷதி உடைந்த என்பை இணைக்கும், அடிபடுதலால் தோன்றும் காயத்தை ஆற்றும்.

(அதர்வ-கா-4-ஸூ-12-ம-1-7)

9. வர்ணனம், ஸஹதேவி, அபாமார்கம் என்பவை நாவறட்சி, பசி முதலாகப் புலன்களின் நோய்களைத் தணிக்கும்.

(அதர்வ கா-4-ஸூ-17-ம-8-14)

10. அபாமார்கம் வாயைத் தூய்மைப்படுத்தும், பற்களைத் தூய்மைப்படுத்தும். (அதர்வ கா-8-ஸூ-67-ம-1-3)

11. ஸிலாச்ய எனும் ஔஷதியின் பெருமை.

(அதர்வ கா-5-ஸூ-5-ம-1-9)

12. குஷ்டம் எனும் ஔஷதி காய்ச்சல், யக்ஷ்மா, குஷ்டம் எனும் நோய்களைத் தணிக்கும். (அதர்வ கா-5-ஸூ-4-ம-1-10)

13. குஷ்டம் எனும் மூலிகையின் புகை, காய்ச்சலைத் தணிக்கும். கிருமிகளைப் போக்கும். (அதர்வ கா-19-ஸூ-39-ம-1-10)

14. ஜங்கிட ஔஷதிகளின் சிறப்பு அவற்றாலான மணிகளின் சிறப்பு, அவற்றால் வாத நோய்கள், கப நோய்கள் பிருஷ்ட நோய்கள், பல வகைக் காய்ச்சல்கள் தணியும்.

(அதர்வ கா-2-ஸூ-4-ம-1-6)

15. விஷாணம் எனும் ஔஷதி இரத்தப் பெருக்கு, வாத நோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும். (அதர்வ கா-6-ஸூ-84-ம-1-3)

16. வரண எனும் ஔஷதி யக்ஷ்மா எனும் நோயைத் தணிக்கும்.

(அதர்வ கா-6-ஸூ-85-ம-1-3)

17. திப்பிலி அதிவிருத்தி, வாதநோய்கள் முதலியவற்றைத் தணிக்கும். (அதர்வ கா-6-ஸூ-109-ம-1-3)

18. சீபத்ரு எனும் ஔஷதி கப நோய்கள், வித்ரதி, ரோஹிகம் விஸல்யகம் எனும் நோய்களைத் தணிக்கும்.

(அதர்வ கா-6-ஸூ-127-ம-1-3)

19. தேவீத்திலி எனும் ஔஷதி தலை முடியை வளர்க்கும்.

(அதர்வ கா-6-ஸூ-136-ம-1-3)

20. குக்குலு தூபம், மணம் ஆகியவை யக்ஷ நோயைப் போக்கும். (அதர்வ கா-19-ஸூ-36-ம-1)

21. அஜசிருங்கி என்பது ஜலவாயுவால் பரவும் நோய்களைத் தணிக்கும். (அதர்வ கா-4-ஸூ-37-ம-1-12)

22. அச்வத்த நியக்ரோத சிகண்டி முதலிய ஔஷதிகள் தொற்றுநோய்களைத் தணிக்கும். (அதர்வ கா-4-ஸூ-37-ம-1-12)

23. அஸிக்னி, கிருஷ்ணா, பிருஷ்ணி, பிரஸ்த்ருணதி, ஸ்தம்பிரி, ஏகசிருங்கா, பிரதன்வதி, அம்சுமதி, கண்டினி, விசாகா, வைச்வ தேவீ, உத்ரா, அவகோல்வா, தீக்ஷ்ணசிருங்கி எனும் ஔஷதிகள் ஆகியவற்றின் தன்மைகள்.

பலவகை வனஸ்பதிகளின் சாற்றைக் கொண்டு செய்யப் பட்ட மாத்திரையாகிய வையாக்ரமணியின் சிறப்பு.

அச்வத்த, தர்ப்ப, ஸோம, விரீஹி, யவ முதலியவற்றி னுடையவும், புஷ்பாலி, பிரஸூமதி பலினி மற்றும் பழங் களற்ற ஔஷதிகளின் சிறப்புகள். (அதர்வ கா-8-ஸூ-7-ம-18)

24. தர்ப்ப - சண, யவ, ஸோம ஆகியவற்றின் சிறப்பு.
(அதர்வ கா-11-ஸூ-8-ம-15)

25. பிராம்ஹண எனும் ஔஷதி விஷத்தைப் போக்கும். அயஸ் கம்பம் எனும் ஔஷதி விஷத்தில் தோய்த்த அம்பு பட்டதாலான விரணத்தைப் போக்கும்.

பர்ண, அதிசிருங்க, குட்மல எனும் ஔஷதிகள் விலங்கு களின் மற்றும் தாவரங்களின் விஷத்தைத் தணிக்கும்.

(அதர்வ கா-4-ஸூ-6-ம-1-8)

26. வர்ணா, பிரக்யா முதலியவை விஷத்தைப் போக்கும். (அதர்வ கா-4-ஸூ-7-ம-1-7)

27. தாவுவ தஸ்ஸுவ முதலிய மூலிகைகள் பலவகை ஸர்ப்பங் களின் விஷத்தைப் போக்கும். (அதர்வ கா-5-ஸூ-13-ம-1-11)

28. மதுப, ருஷ்ணீசி, பாலா எனும் ஔஷதிகள் விஷ வகைகள் அனைத்தையும் தணிக்கும். (அதர்வ கா-6-ஸூ-12-ம-1-3)

29. புற்றுமண், ஸிலாச்யா எனும் ஔஷதி ஆகியவை நஞ்சைப் போக்கும். (அதர்வ கா-6-ஸூ-100-ம-1-3)

30. மதுகம் என்பது ஸர்ப்ப விஷம், கிருமி முதலியவற்றை நீக்கும். (அதர்வ கா-7-ஸூ-56-ம-1-8)

31. விஷ தோஹரணம் எனும் முறையால் நஞ்சைப் போக்குதல் (அதர்வ கா-6-ஸூ-12-ம-1-3)

32. மிருத்யுபயம் நீங்க தர்பமணி கட்டுதல் (அதர்வ கா-19-ஸூ-32-ம-1-2)

இவ்வாறு நூற்றுக்கணக்கான மூலிகைகளைப் பற்றி அதர் வண வேதம் கூறுகிறது. அவற்றில் இன்று பயன்படுத்தப்படும் சில மூலிகைகள் கீழே குறிப்பிடப்படுகின்றன.

1. அக்னி (சித்ரகம் - கொடிவேலி) - யோனிதோஷம், கருப்பை யில் தோன்றும் கிருமிகள் ஆகியவற்றைப் போக்கும்.

2. அஜசிருங்கி, சிறுகுறிஞ்சி - விஷக்கிருமிகளைப் போக்கும், பூத உன்மாதத்தைத் தீர்க்கும்.

3. அங்கம், ஸுகந்தி, கோலம் (அகில்) - ஆகியவை காய்ச் சலைத் தணிக்கும்.

4. அதிதி, பசு நெய், பால் முதலிய பஞ்சகவ்யம் - ஸர்ப்ப விஷத்தைத் தணிக்கும்.

5. அபாமார்க (நாயுருவி) வெள்ளை நாயுருவி - சுவையின்மை, சடராக்னிக் குறைவு, சோர்வு - மக்கட்பேற்றுக்குத் தடை ஆகியவற்றைத் தணிக்கும். சிவப்பு நாயுருவி - நாவறட்சி, பஸ்மகம் எனும் நோய் ஆகியவற்றைப் போக்கும். ஆண்குறி வலிமையின்மையைப் போக்கும். குதம், லிங்கம், யோனி ஆகியவற்றைச் சார்ந்த நோய்களையும், பகந்தரம் முதலிய

வற்றையும் தணிக்கும். முகத்திலும், நாக்கிலும் தோன்றும் அர்புதம் எனும் கட்டிகளைத் தீர்க்கும். ஸ்வப்ன தோஷம், உறக்கமின்மை, வலிவின்மை முதலியவற்றைப் போக்கும். விந்துவைக் கட்டும். தொற்று நோய்களைப் போக்கும்.

6. அர்க்கன் - ஆண்களின் பிறப்புறுப்புகளுக்கு வலிமை தரும் வாஜீகரண மருந்தாகும்.

7. அர்ஜுன விருக்ஷம் - மருதம். நிலத்தைப் பண்படுத்தி நல்ல விளைச்சல் ஏற்படுத்த இதன் பற்பம் (சாம்பல்) பயன்படும்.

8. அச்வஸ்த சமீஸ்த (வன்னி மரக்கிளையில் தோன்றிய அரசு) - கருவை நிலைக்கச் செய்யும். ஆண்கள் இதை உட்கொண்டால் ஆண் குழந்தை தோன்றும். பெண்கள் இதை உட்கொண்டால் பெண் குழந்தை தோன்றும். ஆண்களின் விந்துவையும் பெண்களின் ரஜஸ்ஸையும் தூய்மைப்படுத்தும்.

9. அச்வவாரம் - ஸர்ப்ப விஷத்தைத் தடுக்கும்.

10. அஸிக்னி - நரைமுடியைக் கருப்பாக்கும். வெண்குட்டம், களிதகுட்டங்களைப் போக்கும்.

11. அஞ்சனம் (ஸுரமா விருக்ஷம் - புந்தேல்கண்ட், மத்ய பிரதேசங்களில் கிடைக்கும்) - ஹலீமகம் எனும் பாண்டு நோய், சிற்றின்ப மிகுதியால் தோன்றும் நோய்கள், இதயம் மற்றும் சுவாசகோசங்களைச் சார்ந்த நோய்கள் ஆகியவற்றைப் போக்கும். ஆயுளை வளர்க்கும்.

12. ஆஞ்சன மணி, அஞ்சனசுரமா - இதன் மாத்திரை ஸர்ப்ப விஷத்தைப் போக்கும். மூர்ச்சை, ஸ்வப்ன தோஷம், உறக்கமின்மை ஆகியவற்றைப் போக்கும். விஷப்பூச்சிகளை அழிக்கும். பாண்டு, க்ஷயம், மனநோய்கள், இதய நோய், சுவாசம், கண் நோய் ஆகியவற்றைப் போக்கும். ஆண்மையை வளர்க்கும்.

13. ஆஸுரி (வெண்கடுகு) - வெண்குட்டம், களிதகுட்டம் ஆகியவற்றைப் போக்கும். பெண்களின் அழகை அதிகப்படுத்தும்.

14. இந்த்ர, இந்த்ராயணம் - பல வகை ஸர்ப்ப விஷங்களைப் போக்கும்.

15. ஔதும்பரமணி - உடலைச் செழிப்புறச் செய்யும். ஆண்மையை வளர்க்கும்.

16. கன்யா பெரிய ஓலம் - இதன் வேர் ஸர்ப்ப விஷத்தைத் தணிக்கும்.

17. கல்யாணி (மாஷபர்ணி) - வாஜீகரணமாகும்.

18. காச்யப வீவர்ஹ (சமரீ மிருகத்தின் வால்) - எல்லா நோய்களிலும் இதமானது.

19. காந்த விஷம், கந்த விஷம் - ஸர்ப்ப விஷத்தைத் தணிக்கும்.

20. குமாரிகா - எல்லா விஷங்களையும் போக்கும்.

21. குஷும்பக (குஸுமம்) - ஸர்ப்ப விஷத்தை முறிக்கும்.

22. குஷ்டம் (கோஷ்டம்) - காய்ச்சல், விஷக்காய்ச்சல் கண் நோய்கள் ஆகியவற்றைத் தணிக்கும்.

23. கேசவர்தினி (கரிசலாங்கண்ணி) - உடற்பொலிவு, விந்து ஆகியவற்றை வளர்க்கும். கூந்தலைக் கருப்பாக்கும்.

24. கம்பாரி (பூலாங்கிழங்கு) - காய்ச்சலைத் தணிக்கும்.

25. குக்குலு (குங்கிலியம்) - வாத நோய்கள், சாபத்தால் தோன்றும் மனநோய்கள், தொற்று நோய்கள், கிருமி நோய்கள், பூத உன்மாதம் ஆகியவற்றைத் தணிக்கும்.

26. கிருதாசீ (ஏலம்) - "கன்யா" எனும் மூலிகை குணங்கள் கொண்டது.

27. சீபத்ரு - கொப்புளங்கள், சீழ் கட்டிகள் ஆகியவற்றைப் போக்கும்.

28. ஜங்கிடமணி (ஸஹதேவி எனும் மூலிகைச் சாற்றால் செய்த குளிகை) - மனநோய்கள், ஆமவாதம், வாதநோய், நரம்புத் தளர்ச்சி, வீக்கம், உடலில் வெடிப்புகள் தோன்றுதல், தாது விகாரம், சோம்பல், ஏவலால் தோன்றிய நஞ்சு ஆகியவற்றைத் தணிக்கும். வலிமை, பொலிவு, ஆயுள் ஆகியவற்றை வளர்க்கும்.

29. ஜீவந்தி (கீரைப்பாலை) - ஆயுளை வளர்க்கும். உடலுக்கு வலிமை தரும்.

30. ஜீவலா (ஸிம்ஹபிப்பிலி) - பசுக்களின் நோய்களைப் போக்கும்.

31. தருணகம் (ஒரு வகைப் புல்) - பாம்பு தீண்டியபோது இதைக் கட்டினால் விஷம் இறங்கும்.

32. தஸ்துவம் (பேய்ச்சுரை) - ஸர்ப்ப விஷத்தை முறிக்கும்.

33. திலபிஞ்சி (எள்ளின் மலர்க்கதிர்) - பிறவியிலேயே தோன்றிய நோய்கள், தந்தை வழியே வந்த நோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

34. தர்ப்பமணி (அப்ரகவடி) (ரஸாயனமானது) - காய்ச்சல், பிள்ளைப் பேற்றால் வரும் நோய்கள், கருவை அழிக்கும் கிருமி நோய், கருவில் சிசு மரித்தல் போன்றவற்றைப் போக்கும்.

35. தசவிருக்ஷம் (தசமூலம்) - பிள்ளை பெற்றவளுக்கு வலிமை தரும். மகவைத் தோற்றுவிக்கும் சக்தியைத் தரும். ஸந்நீபாதம் அபஸ்மாரம் எனும் நோய்களைத் தணிக்கும்.

36. தாஸி (காகஜங்கா) - காய்ச்சலைப் போக்கும்.

37. தேவீ (ஸௌராஷ்டிரமணி) - தலை முடியை நீளமாகவும், கருநிறமாகவும் வளர்க்கும்.

38. நகமாரம் - விடாத காய்ச்சல், மலேரியா ஆகியவற்றைத் தணிக்கும்.

39. நகாரிஷ - நகமாரத்தைப் போன்ற தன்மைகளைக் கொண்டது.

40. நலதி (சடாமாஞ்சி) - கிருமிகளைப் போக்கும். இரத்த அழுத்தம், நஞ்சு, இதய நோய் ஆகியவற்றைப் போக்கும்.

41. பர்ஜன்ய (மரமஞ்சள்) - ஸர்ப்ப விஷத்தைப் போக்கும்.

42. பாடா (வட்டத்திருப்பி) - ஆயுதங்களால் தோன்றும் வெட்டுக் காயங்களுக்குச் சிறந்த மருந்து.

43. பிங்கம் (அரிதாரம்) - பிரஸூதி நோய்களையும் மற்றும் கருவை அழிக்கும் கிருமிகள், கருவில் சிசு மரித்தல் போன்ற தோஷங்களையும் போக்கும்.

44. பிப்பலி (திப்பிலி) - ஆக்ஷேபகவாதம், பக்கவாதம், வாத நோய்கள், காய்ச்சல், கிருமி, பூத உன்மாதம் ஆகியவற்றைப் போக்கும்.

45. பிருச்னிபர்ணி - குட்டம், பெண்குறிநோய், வீக்கம், கருச் சிதைவு, கிருமிநோய் கருப்பைக் கோளாறுகள் ஆகியவற்றைப் போக்கும்.

46. அர்க்க (எருக்கன்) - ஸர்ப்ப விஷத்திற்கு இதன் வேரை அரைத்துக் கடிபட்ட இடத்தில் பூசுதல், வேரின் தூளை உட்கொள்ளுதல் ஆகியவற்றால் விஷம் நீங்கும்.

47. பிரக்னீ (ஸோமலதை) - இது முன்பே விளக்கப்பட்டது.

48. பிரமந்தினி (காட்டாத்தி) - நஞ்சு, கிருமி நோய், பூத உன்மாதம் ஆகியவற்றைத் தணிக்கும்.

49. பிரும்மா (அத்தி) - பெண்குறி நோய், கருச்சிதைவு, மதுமேகம் போன்ற நோய்களைத் தணிக்கும்.

50. பத்ரா (கருநன்னாரி) - இரத்தப்பெருக்கு காயம், நெருப்பால் சுட்டபுண், எலும்பு முறிவு ஆகியவற்றைக் குணமாக்கும்.

51. பூரிமூலதர்ப்பம் (நாணல்) - மனநோய், பிரமம், மூர்ச்சை பைத்தியம் ஆகியவற்றைத் தணிக்கும்.

52. மதுஜாதா (தேனாலான சர்க்கரை) - விஷக் கிருமி, பூச்சிகளின் விஷம் ஆகியவற்றைத் தணிக்கும்.

53. முனிதேவ (அகத்திவேர்) - கண்டமாலை எனும் நோயைப் போக்கும்.

54. யவபலாலி (யவதானியத் தண்டு) - தந்தை வழியே வந்த நோய்களைப் போக்கும்.

55. ரோபணிகா (வெண்ணருகம்புல்) - காமாலை, பாண்டு, எலும்பு முறிவு, காயம், இரத்தப் பெருக்கு, எரிச்சல், நெருப்பால் சுட்ட புண், அலித்தன்மை, உடல் பளுவாகத் தோன்றுதல் முதலியவற்றைத் தணிக்கும்.

56. ரோஹணீ (மாம்ஸரோஹணீ) - நெருப்பால் சுட்ட புண் காயம் ஆகியவற்றைப் போக்கும்.

57. லவணம் (உப்பு) - கழுத்து, கையிடுக்கு, தொடை இடுக்கு ஆகிய இடங்களில் தோன்றும் கட்டி, கண்டமாலை ஆகியவற்றைப் போக்கும்.

58. லாக்ஷா (கொம்பரக்கு) - நாள்பட்ட காயம், எலும்பு முறிவு ஆகியவற்றைச் சீர்படுத்தும்.

59. வசஸ் (வசம்பு) - தாவர விஷத்தையும், மூர்ச்சையையும் போக்கும்.

60. வரணமணி, வரணாவதி (வில்வம்) - ஸர்ப்ப விஷத்தையும், தலைநோய்களையும் போக்கும்.

61. வருண - மணியாக அணிவதால் நோய்களைப் போக்கும்.

62. வாக (அகஸ்திய விருக்ஷத்தின் பஞ்சாங்கம்) - தாடைப்பிடிப்பு, கழுத்து நோய் (அபசி எனும் கட்டி), கிரந்தி நோய்களைப் போக்கும்.

63. வாதம் மூர்வா கந்தம் (பெருங்குரும்பை வேர்) - ஸர்ப்ப விஷத்தைப் போக்கும்.

64. விக்ஷரம் (கடல் நுரை) - சிலேத்துமத்தால் தோன்றும் இருமலைப் போக்கும்.

65. விச்வரூபா (கருஅகில்) - பசுக்களின் நோய்களைப் போக்கும்.

66. விஷாணா (மான் கொம்பு) - இதய நோய், தந்தை வழி நோய் ஆகியவற்றைப் போக்கும்.

67. விஷாணா அஜசிருங்கி - இரத்தப்பெருக்கு, வாதநோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

68. விருஷா - வாஜீகரணமானது.

69. சங்கமணி (சங்கவடி) - மனநோய், தலைச்சுற்றல், மூர்ச்சை ஆகியவற்றைத் தணிக்கும்.

70. சதவாரமணி (ரிஷபகவடி) - அலித்தன்மை, கருச்சிதைவு, நஞ்சு வாத நோய்கள் ஆகியவற்றைப் போக்கும்.

71. சூத்ரா பிரியங்கு லதா (ஞாழல்) - காய்ச்சலைத் தணிக்கும்.

72. சுவேத (வெள்ளை எருக்கு) - ஸர்ப்ப விஷம், அலித்தன்மை ஆகியவற்றைப் போக்கும்.

73. ஸமித (ஸுகந்தகாஷ்டம்) - கிருமிகளைப் போக்கும்.

74. ஸஹதேவி (மஹாபலா) - மனிதர்களுக்கும், பசுக்களுக்கும் தோன்றும் பல நோய்களைத் தணிக்கும்; ரஸாயனமானது.

75. ஸிந்துத (கொங்கணப் பகுதியில் ஏலக் கொடியைப் போன்ற செடி) - மனநோய்களைப் போக்கும்.

76. சுபா சாலபர்ணி - பசுக்களின் நோய்களைப் போக்கும்.

77. ஸோம (ஸோமலதை) - எல்லா நோய்களையும் போக்க வல்லது; ரசாயனமானது.

78. ஹவி - நெய் முதலியவற்றால் செய்யப்படும் ஹோமம் உடல் நலத்தையும், ஆயுளையும், அறிவாற்றலையும் வளர்க்கும்.

79. ஹாரிதிரவ (மரமஞ்சள்) - மரத்தின் கீழ் உறங்குவதால் இதன் காற்று உடல் மேல்படுவதால் இதன் சுரசம், கஷாயம் முதலியவற்றை உட்கொள்வதால், இதன் பட்டையை அரைத்துப் பூசுவதால் பாண்டு நோய், காமாலை ஆகியவை நீங்கும்.

## 11. மணி, மந்திர, ஔஷத சித்திகள்

மணிகள், மந்திரம், மூலிகைகள் இம்மூன்று வகைகளும் நமக்கு பல நன்மைகளை விளைவிக்கின்றன. இவற்றில் ஔஷதங்களைப் பற்றி முன்பு கூறப்பட்டுள்ளது. இனி மணிகள், மூலிகைகளால் ஆன தாயத்து நமக்கு பயன் தரும் வகைகளைக் காண்போம்.

1. **ஸுவர்ணம்** - நைனம் ரக்ஷாம்ஸி ந பிசாச்யா: ஸஹந்தே! தேவானாமோஜ: ப்ரதமஜம் ஹ்யேதத் யோ பிபர்த்தி தாக்ஷாயணம் ஹிரண்யம் ஸ ஜீவேஷு க்ருணுதே தீர்க்மாயு : ||

(அதர்வ-1- 35-2)

2. **அஞ்சனமணி:** யதாஞ்சனம் த்ரைககுதம் ஜாதம் ஹிமவத ஸ்பரி

யாதூம்ச்ச ஸர்வாண் ஜம்பயத் ஸர்வாச்ச யாதுதான்ய: உதோசி பரிமாணம் யாது ஜம்ப மஞ்ஜன: (அதர்வ-4-9-9, 4-9-3)

**மூலிகையைத் தாய்த்தாகச் செய்து கழுத்தில் கட்டிக் கொள்ளுதல்**

1. **ஸுவர்ணம்:** தங்கத்தை (பற்பமாக்கி) உட்கொள்பவர் அல்லது அதை தாயத்து செய்து அணிபவர் நீண்ட நாள் வாழ்வார். ராக்ஷஸ பிசாசங்களால் தோன்றும் நோய்கள் அவரைத் தாக்குவதில்லை. (அதர்வ-கா-1-ஸூ-35-ம-2)

2. **அஞ்சன மணி:** - இமயமலைப் பகுதியைச் சார்ந்த திரிககுத்மம் எனும் பெயர் கொண்ட மலையில் அஞ்சன மணி கிடைக்கும். இது ஸூர்ம எனப்படும் கல் ஆகும். இது அரக்கர்களை அழிக்கவல்லது. அரக்கர்களாலும், பிசாசங்களாலும் தோன்றும் நோய்களைப் போக்கும். சதபத பிராம்ஹணத்திலும் 'அஞ்சனம் த்ரைககுதம் பவதி' எனக் கூறப்படுள்ளது.

சுரமாக்கல் கருநிறமுள்ளது, வெண்ணிறமுள்ளது என இரு வகைப்படும். இவ்விரண்டின் தன்மைகள் ஒன்றே. இவை சீத வீரியமுள்ளவை. இனிப்புச்சுவையும், எண்ணெய்பசையும் கண்களுக்கு நன்மை பயக்கும் தன்மையும் கொண்டவை. இதைப் பயன்படுத்துவதால், இரத்த பித்தம், விஷம், க்ஷயம், வாந்தி இரத்தப் பிரதரம், ஸித்ம குட்டம் ஆகிய நோய்கள் தணியும். இவற்றில் கருநிறமுள்ளது கண்களுக்கு மையாக இடப் பயன்படும். இதை பயன்படுத்தும் வகை அதர்வ வேதத்தில் கூறப்பட்டுள்ளது. கண்களுக்கு மையாக இடுதல், மணியைப் போல உடலில் தரித்தல் (தாயத்து போல அணிதல்), நீரில் இட்டுக் குளியலுக்குப் பயன்படுத்துதல், நீரிலிட்டு அந்நீரைப் பருகுதல் என நான்கு வகைகளில் இதைப் பயன்படுத்தலாம். (அதர்வ-கா-19-ஸூ-45-ம-5)

(மகமதியர்கள் ஆண், பெண் இரு பாலரும் சுரமாக்கல்லைத் தேய்த்துக் கண்களில் மை போல இட்டுக் கொள்ளுதலை ஒரு மதச் சடங்கைப் போல கொண்டாடுவது இங்கு குறிப்பிடத்தக்கது)

**3. வையாக்ரமணி**

வையாக்ரோ மணி வீருதாம் த்ராயமானோ அபிசஸ்திபா: |
அமீவா: ஸர்வா: ரக்ஷாம் ஸ்யபஹந்து அதிதூரமஸ்மத:

வையாக்ரம் என்ற பெயர் கொண்ட மணி பல வகையான நறுமணமுள்ள மூலிகைகளால் செய்யப்படும் குளிகையாகும். இதைப் பயன்படுத்துவதால் ராக்ஷஸால் (ஜீவ அணுக்களால்) தோன்றிய நோய்களிலிருந்து விடுபடலாம்).

(அதர்வ-கா-8-ஸூ-7-ம-14)

**4. சதவாரமணி**

சதவாரோ அனீனசத் யக்ஷ்மான் ரக்ஷாம்ஸி தேஜஸா |
ச்ருங்காப்யாம் ரக்ஷோனுததே மூலேன யாதுதான்ய: ||
மத்யேன யக்ஷ்மம் பாததே நைனம் பாப்மாதி தத்ரதி |
சதம்வீரா ந ஜனயச்சதம் யக்ஷ்மான பாவயத் |||
துர்ணாம்ந: ஸர்வான் ஹத்வாவரக்ஷாம்ஸி தூனுதே |
ஹிரண்ய ச்ருங்கோ ரிஷப: சாதவாரோயம் மணி: ||
சதமஹே துர்ணாம்னீனாம் கந்தவீப்ஸரஸாம் சதம் |
சதம் சஸ்வத் வதீனாம் சதவாரேண வாரயே ||

அதர்வவேதம்-19-ஸூ-36

)ம் மந்திரங்களால், சதவாரமணி பலவகையான எலும்பு உருக்கி (டி.பி) நோய்களைத் தோற்றுவிக்கும் ராக்ஷஸ அப்ஸரஸ கந்தர்வ ஜீவ அணுக்களை அழித்து விடும். அர்சஸ் (மூலநோய்), இடைவிடாது இருக்கும் அல்லது அவ்வப்பொழுது தோன்றும் அபஸ்மாரம் முதலிய நோய்களைத் தீர்க்கும்.

சதவீரம் என்பது பல வீரர்களைத் தோற்றுவிக்கவல்லது வீரர்கள் என்றால் புத்திரர்கள் என இங்கு பொருள் கொள்க.

**புத்ரோ வை வீர :** (சதபதவிராம்ஹணம்) சதவீரம் என்பது முனையால் ராக்ஷஸர்களை அழிக்கும். வேரால் யாதுதானீ எனப்படும் ஜீவ அணுக்களை அழிக்கும். நடுப்பகுதியால் எலும்புருக்கி

நோயைத் தீர்க்கும். சதவாரம் என்பது ரிஷபகம் எனப்படும் மூலிகையாகும். (அதர்வ-கா-19-ஸூ-36)

**சத சாக்யாகான் ரோகான் நிவாரய தீதி சதவார :** என ஸாயணர் நூற்றுக்கணக்கான நோய்களைப் போக்குவதால் இதற்கு "சதவார" எனப் பெயராயிற்று என்று தம் உரையில் குறிப்பிட்டுள்ளார்.

வேத உரையாசிரியர் ஸாயணர் ஹிரண்ய ச்ரிங்கோ ரிஷப சதவாரோ அயம் மணி: என்பதால் சதவார என்பது ரிஷபகம் என்பது தெளிவாகிறது.

**5. ஜங்கிடமணி**

அயம் விஷ்கந்தம் ஸஹதே அயம் பாததே அத்ரிண: |

அயம் நோவிச்வபேஷஜோ ஜங்கிட: பாத்வஹும்ஸ: ||

தேவைர் தத்தேன மணினா ஜங்கிடேன மயோபுவ |

விஷ்கந்தம் ஸர்வாம் ரக்ஷாம்ஸி வ்யாயாமே ஸஹாமஹே
அதர்வ-2-4-3-4

தேர்ச்சி பெற்ற மருத்துவரால் செய்யப்பட்ட ஜங்கிடமணி பல நோய்களைத் தீர்க்கவல்லது. அபஸ்மாரம், பைத்தியம் முதலிய மன நோய்களையும் தணிக்கும். உடலைச் செழிப்புறச் செய்யும். ஜங்கிடம் என்பதைப் பற்றி அதர்வண வேதத்தில் 21 மந்திரங்களில் கூறப்பட்டுள்ளதால் இதன் சிறப்பு உணரலாம்.

(அதர்வ-கா-2-ஸூ-4-ம-3-4)

"ஜங்கிட : வ்ருக்ஷ விசேஷோ வாராணஸ்யா
ப்ரஸித்த : தேன சாதிதே மணி விப்ருமோ தாரயாம் :

என்று ஸாயணர் கூறியுள்ளதால் காசியைச் சார்ந்த பகுதியில் தோன்றும் மரம் ஜங்கிடம் என்பது அறியலாம். ஆனால் இது எந்த மரம் என்பது ஆராய்ச்சி நிலையிலேயே உள்ளது. இது "ஸோமலதா" எனும் ஓஷதி என்பது சிலர் கருத்து.

**6. ஸதம் புஷ்பாமணி**

ஆபசயது பரபசயது பராபசயது பசய;
திவமந்தரிக்ஷ மாத் பூமிம் ஸர்வம் தத் தேவி பச்யதி

ஸதம் புஷ்பா எனப்படும் மூலிகையால் செய்யப்படும் மணியை அணிவதால் அது முக்காலங்களிலும் தோன்றக்கூடிய அச்சத்திற்குக் காரணங்களை அறியக்கூடும்.

அதர்வ-கா-4-ஸூ-20

*யே கலு ப்ரம்ம க்ருஷ்யாதயோ பய ஹேதவ: தே ஸர்வே ப்ருதிவ்யாதி|*

*லோக த்ரயம் வ்யாப்ய வர்தந்தே தான் பச்யதி||* (ஸாயண)

*ஸாயணர்:* மூன்று உலகங்களிலும் பரவியுள்ள அச்சமூட்டும் நோய்க் கிருமிகளைக் கண்டு கொள்ளலாம்.

*'தர்சய யாது தானான தர்சயயாது தானய:*
*பிசாசான் ஸர்வான் தர்சயேதி த்வாரப ஓஷதே*

ஓ ஓஷதியே! நீ எனக்கு யாதுதான, மற்றும் யாதுதானீ ராக்ஷஸ கிருமிகளைக் காட்டுவாய் என்று உன்னை அணிந்து கொள்கிறேன்.

*யோ அந்தரிக்ஷேண பததி திவம் யச்சாதி ஸர்பதி|*

*பூமிம் யோ மன்யதே நாதம் தே பிசாசம் ப்ரதர்சய|*

வான வெளியிலும் த்யுலோகத்திலும், நிலவுலகிலும் திரிந்து கொண்டிருக்கும் பிசாசங்களை எனக்குக் காட்டு.

*கச்யபஸ்ய சக்ஷுரஸி சுன்யாச் சதுரக்ஷ்யா:|*

*வ்ரீக்ரே ஸூர்யமிவ ஸர்ப்ந்தே மா பிசாசம் திரஸ்கர:|*

ஓ ஓஷதியே, கசியபர் எனும் முனிவருக்கு நீ கண் ஆவாய். நான்கு கண்களைக் கொண்ட "தேவசுனி" எனும் தேவலோகத்து நாய்க்கும் நீ கண் ஆவாய். வானத்தில் இங்குமங்கும் அலைந்து கொண்டிருக்கும் பிசாசங்களை ஒளிக்காமல் எனக்கு காட்டு. இவ்வாறு பல மூலிகைகளைத் தாயத்து போலக் கட்டிக் கொண்டால் கிருமிகள் நம்மை அணுகாமல் பாதுகாத்துக் கொள்ளலாம். இனி மந்திரங்களைப் பற்றிக் காண்போம்.

## 12. அதர்வ வேத மந்திரங்களின் தேவை

முற்பிறவியில் செய்த தீவினைகளின் பயனாகப் பல நோய்கள் நம்மைத் தாக்குகின்றன. அவற்றை மருந்துகளை உட்கொள்வதாலும், தானம் கொடுத்தல், மந்திர ஜபம் செய்தல், ஹோமம் செய்தல், தேவதைகளை வழிபடுதல் எனும் முறைகளால் போக்கிக் கொள்ள வேண்டும் என ஆயுர்வேத நூல் கூறுகிறது.

திறமையுள்ள மருத்துவர் நல்ல மருந்து கொடுத்தாலும் நோய் குணமாகாமையை பல இடங்களில் காண்கிறோம். திறமையுள்ள மருத்துவரே கவனக்குறைவால் நோயைச் சரிவர கண்டு

கொள்ளாமை, ஒரு மருந்துக்குப் பதில் வேறு மருந்தைக் கொடுத்தல், ஒரு நோயாளிக்கு கொடுக்க வேண்டிய மருந்தை மற்றொரு நோயாளிக்குக் கொடுத்தல் அறுவைச் சிகிச்சையில் தவறான பகுதியில் அறுவைச் சிகிச்சையைக் கையாளுதல், நோயுற்ற கண்ணுக்குப் பதில் நோயற்ற கண்ணில் அறுவைச் சிகிச்சை செய்தல் போன்றவை நிகழ்வதைக் காண்கிறோம். இவற்றிற்கெல்லாம் மருத்துவரை மட்டும் குறை சொல்லக்கூடாது.

திறமையற்ற மருத்துவரை நாடிச் செல்வதற்கும் திவ்ய ஔஷதமே ஆனாலும் சரியாகச் செயல்படாமல் இருப்பதற்கும் மருத்துவரின் புத்தி மாறாட்டத்துக்கும் நோயாளியின் முற் பிறவித் தீவினைகளே காரணமாகும். ஆகவே தெய்வவழிபாடு, மந்திரஜபம் முதலியவற்றால் வினையைத் தீர்த்துக் கொள்வது டன் நல்ல முறையில் சிகிச்சை பெறுவதும் அவசியமாகும் என்பதே நம் முன்னோர் கருத்து. வினைப்பயனால் தோன்றும் தீமைகளைப் பற்றி அதர்வண வேதம் விளக்கம் தந்துள்ளது.

## 13. அதர்வண வேதம் கூறும் சிகிச்சை முறைகள்

*ஆதர்வணீராங்கிரஸீ வைவீர்மனுஷஜா உத।*

*ஒஷதய: ப்ரஜாயந்தே யதாத்வம் ப்ராணஜின்வளி॥*

ஆதர்வணீ, ஆங்கிரஸீ, தைவீ, மானுஷீ என சிகிச்சை முறைகள் நான்கு வகைப்படும்.

**ஆதர்வணீ** - ஜபம், யக்ஞம், தானம், ஸ்வஸ்திவாசனம், அவஸேசனம் அவமார்ஜனம், ஸ்நானம் முதலியவற்றைச் சார்ந்தது.

**ஆங்கிரஸீ :** - மானஸீக சக்தியைச் சார்ந்தது.

**தைவீ** :- வாயு, ஜலம், நிலம், சூரிய கிரணம் முதலிய இயற்கையைச் சார்ந்தவை.

**மானுஷீ** :- மருந்து வகைகள்.

*ருக்யஜு ஸாமாதர்வ வேதாபிஹிதை:*
*பரைச்சாஸீர்விதானை:।*

*ருபாத்யாயாபிஷஜச்ச ஸந்த்யோ ரக்ஷா குர்யு:॥* - ஸௌத்ரம்.

**ஸௌத்திரஸ்தானம்** என வேதத்தில் கூறப்பட்டுள்ள சாந்தி கர்மாக்களை ஸுசுருதரும் சிகிச்சை முறைகளாகக் கூறியுள்ளார்.

ஆதி தைவிகம், ஆத்யாத்மிகம், ஆதி பௌதிகம் எனப்படும் மூன்று வகை நோய்களுக்கு அவற்றின் தன்மைக்கு ஏற்றவாறு லகு சாந்தி அல்லது பிருஹத் சாந்தி முறைகளை அதர்வண வேதம் விதித்துள்ளது.

1. பூத, பிசாச, யக்ஷ, கந்தர்வ, அப்ஸரஸ், யாதுதான, ராக்ஷஸ, பிரும்ம கிருஹங்களால் தோன்றிய உன்மாதத்திற்கு சாதனகணம், அம்பாதி கணம், அபயகணம், அபராஜித கணம் ஆகிய பகுதிகளில் கூறப்பட்டுள்ள சாந்தி கர்மாக்களைச் செய்ய வேண்டும். அவ்வாறே 2. அபமிருத்யு, அகால மிருத்யு பயத்தைப் போக்க ஆயுஷ்ய கணத்தாலும் 3. தாவர ஜங்கம விஷங்களுக்கு கிருஹிணீ ரிக்குகளாலும் (4) கண்டமாலை குடலில் தோன்றும் யக்ஷ்மா ராஜயக்ஷ்மா, ஆந்தரிக சோதை (புளூரஸி) ஜலோதரம் போன்ற நோய்களுக்கு யக்ஷ்ம நாசன கணத்தாலும், வெண்குட்டம், பலிதகுட்டம், இரத்த தோஷம் அரிப்பு போன்ற பலவகை குட்ட நோய்களுக்கும் நச்சுப் பூச்சிகளால் தோன்றும் துன்பங்களுக்கும் தக்ம நாசன கணத்தாலும், அஸாத்ய தோஷங்களுக்கு ரௌத்ர கணத்தாலும், எல்லா வகைகளான பாபம், சாபம், பித்ரு மாத்ரு குலத்தில் தோன்றிய தோஷங்கள், அலித்தன்மைகள், மலட்டுத்தன்மைகள், கருச்சிதைவு, கர்பதோஷம் மரித்த சிசுக்கள் பிறத்தல், மிகுதியாக ருது ரத்தம் வெளியாகுதல் போன்ற துன்பங்களுக்கு அஹோராலிங்ககணத்தாலும் சாந்தி கர்மாக்களைச் செய்ய வேண்டும். இவ்வாறு (1) வைஷ்ணவீ (2) ஐந்த்ரீ (3) பிராம்மி (4) ரௌத்ரி (5) வாயவ்யீ (6) வாருணீ (7) கௌபேரி (8) பார்கவி (9) பிராஜாபத்தி (10) த்வாஷ்ட்ரீ (11) கௌமாரீ (12) வஹ்னிதேவதையைச் சார்ந்தவை (13) மருத்கணி (14) காந்தாரி (15) நைருதிகீ (16)ஆங்கீரஸி (17) யாம்யீ (18) பார்த்திவீ என்பன போன்ற பலவகை சாந்தி முறைகளை அதர்வண வேதத்தில் காணலாம். எடுத்துக்காட்டுக்கு ஒன்றிரண்டு நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் இங்கு விளக்கப்படுகின்றன.

**துஷ்ட விரணம்**

(1) அஸ்ய காண்ட 6,53 ஸூக்தஸ்ய ப்ருஹச்சக்ர ருஷி:

த்யௌ ப்ருத்வீ சுக்ர: ஸோம: அக்னி வாயு: ஸவிதா வைச்வாநர:||

த்வஷ்டா தேவதே| த்ரிஷ்டுப் ஜகதீ சந்தாகும்ஸி, துஷ்ட கண்ட விரிஷ்ட பேஷஜ்யே - அபிமந்த்ரணே - ஜபே ஹோமே விநியோக:

இந்த மந்திரத்தால் அபிமந்தரணம் செய்த எண்ணெயை நோயின் மேல் பூசுக.

(2) த்யௌச்ச இதம் ப்ருதிவீச ப்ரசேத ஸௌ சுக்ரௌ
ப்ருஹந்தக்ஷிணயா பிபர்த்து|
அனுஸ்வதா சிகிதா ஸோமோ அக்னிர்வாயுர்ந:
பாது ஸவிதா பகேச்ச|
புன: ப்ராண: புனராத்மா| ஐது புனச்ச க்ஷு:
புனரஸுர்ந ஏது|
வைச்வானரோ நோ அத ப்தருதனூபா அந்தஸ்
திஷ்டதி துரிதானி விச்வா||
ஸம் வர்சஸா பயஸா ஸம் தனூரபிரகன் மஹி
மனஸா ஸம் சிவேன|
த்வஷ்டா நோ அத்ர வரீய: க்ருணோத்வனு
நோ மார்ஷ்ட்டு தன்வோச யத்விரிஷ்டம் ||

இந்த மந்திரத்தை ஜபம் செய்வதும், இதனால் ஹோமம் செய்வதும் நோயைத் தணிக்கும்.

## 14. மகோதரத்திற்கு சிகிச்சை

ஜலோதர (மகோதர) நோய் கொண்டவருக்காக ஸோமலதை என்னும் மூலிகையை உலர்ந்த கோமயத்தை நெருப்பில் காய்ச்சித் தூபம் போட வேண்டும். ஸோமலதையுடன் தயிர் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. பாலும், மோரும் கலந்து பருகச் செய்க. தயிர் பால் தேன் கலந்து பருகச் செய்க. இவை அனைத்தையும் கீழே குறிப்பிட்டுள்ள மந்திரத்தினால் அபிமந்தரணம் செய்து பிறகு பருகச் செய்க.

அஸ்ய 6-96 ஸூக்தஸ்ய ப்ருக்வங்கிரா: - ருஷிவனஸ்பதி: ஸோம: தேவதே, அனுஷ்டுப் வ்ரிபாத்விராஞ்நாம காயத்ரி சந்தாகும்ஸி - அஹம் சோன் மூல னே. சாப பாப ஜனித அரிஷ்ட ஜலோதராதி பேஷஜ்யே விநியோக:

யா ஒஷதய: ஸோம ராக்ஞீர் வஹ்நீ: சதவிசக்ஷண: |
ப்ருஹஸ்பதி ப்ரஸூதாஸ்தாநோ முஞ்சத்வம் ஹஸ:||
முஞ்சந்து மா சாபச்யா இ த தோ வருண்யா துத|
அதோய மஸ்ய ஷட்வீசாத் விச்வே ஸ்மாத்தேவா கில்பிஷாத் |
யச்சக்ஷுஷா மனஸா யச்ச வாசோபாரிம
ஜாக்ரதோ யத்ஸ்வ பந்த :|
ஸோமஸ்தானி ஸ்வத்யயா ந: புனாது

## 15. அதர்வ வேதத்தில் மனநோய்களுக்குச் சிகிச்சை

மன நோய்களில் கொடுமையானது உன்மாதம் அல்லது பைத்தியம். இந்நோய் பல வகைப்படும். பொதுவாக உன்மாதம் கூடாத உணவு உட்கொள்வதாலும், தகாத பழக்கங்களாலும் தோன்றுவது ஒன்று, தீவினைகளாலும் பெரியோர்களின் சாபத்தினாலும் தோன்றுவது மற்றொன்று என உன்மாதத்தைப் பொதுவாக இரு வகைகளாகப் பிரிக்கலாம். தக்க மருத்துவரைக் கொண்டு நல்ல மருத்துகளால் சிகிச்சை செய்தும் பயனில்லாவிடில் அத்தகைய உன்மாதம் இரண்டாவது வகையைச் சேர்ந்தது என உணர்ந்து மந்திர ஜபம் முதலியவற்றால் தணிக்க முற்பட வேண்டும்.

உன்மாதத்திற்கு மந்திரங்களைக் கண்ட ரிஷிகள் 'சாதன' மற்றும் 'அக்னி ரக்ஷோஹா' எனும் பெயரால் அதை வர்ணனை செய்துள்ளனர். சாதன நோய்களைப் போக்குதல் எனும் இந்தப் பெயரால் பல ஸூக்தங்கள் கூறப்பட்டுள்ளன. அவை சாதன கணம் எனப்படும்.

உன்மாதத்தைத் தோற்றுவிக்கும் ராக்ஷஸர்களை அழிப்பது அக்னி ரக்ஷோஹா'. இந்த ராக்ஷசர்கள் பலவகைப்படுவர்.

1. துர்ஹார்தர் - மனத்தில் காயத்தை உண்டாக்குபவர்
2. ரக்ஷ - ராக்ஷஸா - புறத்தோற்றத்திற்கு நன்மை செய்பவர்களைப் போல இருந்து மறைவாக தீங்கு விளைவிப்பவர்.
3. அஸ்ருதிருப - பிறரை பலி கேட்பவர்.
4. தூர்வன - பிறருக்கு தீங்கு, காயம் அல்லது நாசம் விளைவிப்பவர்.
5. பங்குராவத - பிறருடைய உண்மையை அழிப்பவர்.
6. அபிதாஸன - பிறரைக் கொல்பவர் அல்லது கட்டிப் போடுபவர்.
7. ஹிம்ஸ்ர - பிறரைத் துன்புறுத்துபவர்.
8. சபாஹஜ் - காலால் உதைப்பவர்.
9. ரிஷ - நாசம் விளைவிப்பவர்.
10. க்ரவ்யாத் - பச்சைப்புலால் உண்பவர், இரத்தம் குடிப்பவர்.
11. மனுஷ்ய அச்வ - பசுக்களின் புலாலை உண்பவர்.
12. யாதுதான - பிறரைத் துன்புறுத்துபவர். இவ்வாறு ஐம்பது வகையானவர்களால் துன்பம் விளையலாம். அதைப் போக்க 'ரக்ஷோஹா' மந்திரஜபம் செய்ய வேண்டும்.

## 16. அதர்வ வேதத்தில் - (சாரீரம் - அனாடமி) உடல் கூறுகள்

மருத்துவருக்கு உடலுறுப்புகளைப் பற்றித் தெளிவான அறிவு தேவை. உடலுறுப்புகளைப் பற்றிய சாஸ்திரம் 'அனாடமி' என்பது 'சாரீரம்' என ஆயுர்வேதத்தில் கூறப்படுகிறது. நம் உடலைப் பற்றிய பல விஷயங்கள் அதர்வ வேதத்தில் குறிப் பிடப்பட்டுள்ளன.

நம் உடலில் உள்ள நாடிகள், தமனிகள், நூறு சிரைகள் ஆயிரம் தமனிகளைப் பற்றிய குறிப்புகள் 1-17, 1,4,7,36-2,7 ஆகிய பகுதிகளிலும், பல நோய்களுடன் பல உறுப்புகளைப் பற்றிய விளக்கம் 2, 33, 1, 7 ஆறு பகுதிகளிலும், பல உறுப்புகளின் விளக்கம் 2,. 33,. 2,4. 12,4-10-2.1-20, 9-13-25 ஆகிய பகுதிகளிலும் தலைமுடி, என்பு, ஸ்ராவம் மாமிசம், மஜ்ஜை, கணு, தொடை, பாதம், முழங்கால் தலை, கை, முகம், புட்டம், தனம், விலா, நாக்கு, கழுத்து, தோல் முதலியவற்றைப் பற்றி 11,10,11,15 ஆகிய பகுதிகளிலும் காணப்படுகின்றன.

## 17. மலட்டுத்தன்மை, கர்பதோஷம் முதலியன

உலக வாழ்க்கையில் பிள்ளைப் பேறு பெறுதல் அரிய பெருஞ் செல்வமாகக் கருதப்படுகிறது. அப்பேறு இல்லாதவர்கள் தாம் குற்றம் செய்தவர்களைப் போல வருந்துவதைக் காண் கிறோம். அதற்கான சிகிச்சை முறைகள் அதர்வண வேதத்தில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. ஆணின் உடலில் விந்துக் குறைவு, அலித்தன்மை ஆகியவற்றைப் போக்கும் முறைகள் கூறப் பட்டுள்ளன.

கர்ப தோஷ நிவாரணத்திற்கு மூலிகை, மந்திரம், ஹோமம் முதலியனவும் அதர்வ வேதத்தில் கூறப்பட்டுள்ளன.

## 18. வேத இலக்கியத்தில் மருத்துவக் குறிப்புகள்

அதர்வண வேதத்தில் அல்லாது மற்ற வேதங்களிலும் வேதங் களைச் சார்ந்த பிராம்ஹணங்கள், உபநிஷத்துகள் ஆகிய வற்றிலும் மருத்துவத்தைச் சார்ந்த குறிப்புகள் காணப்படுகின்றன. இவை மருத்துவ முறைகளை அறியப் பயன்படாவிட்டாலும் வேத காலத்தில் மருத்துவம் எவ்வாறு வளர்ச்சி பெற்றிருந்தது என்ற நிலையை அறிந்து கொள்ளப் பயன்படும்.

## 19. ரிக்வேதத்தில் மருத்துவக் குறிப்புகள்

வேதங்களில் முதலாவது ரிக்வேதம். ஆராய்ச்சியாளர்கள் இதன் காலம் கி.மு.2500 எனக் கூறுகின்றனர்.

1. கிழத்தன்மையால் தளர்ந்த உடல் கொண்ட சியவனரிஷியும் வந்தன ரிஷியும் அசுவினி குமாரர்களால் ரஸாயன முறையில் சிகிச்சை பெற்று மீண்டும் இளமை REJUVENATION பெற்றனர். (ரிக்-கா-1-ஸூ-116-ம-20; கா-1-117-13; கா 31-ஸூ-119-மந்-7.)

2. தாஸர்கள் (தஸ்யுக்கள்) தீர்க்கதமஸ் என்பவரை நெருப்பிலும், நீரிலும் விசினர். மீண்டும் பிழைத்து வந்த அவரது தலையைத் தாஸர்கள் கொய்து மார்பிலும் படுகாயத்தைத் தோற்றுவித்தனர். அச்வினி குமாரர்கள் அவருக்குச் சிகிச்சை புரிந்ததால் மீண்டும் உயிர் பெற்றதல்லாமல் இளமையையும் பெற்று பல்லாண்டுகள் வாழ்ந்து வந்தார். (ரிக்-கா-1-ஸூ-158-ம-4-6)

3. போர்க்களத்தில் பகைவர்கள் கேல அரசரின் மனைவி விச்பலா என்பவளின் காலை வெட்டிவிட்டனர். அச்வினி குமாரர்கள் அவளுக்கு இரும்பாலான செயற்கைக்காலை பொருத்தினார்கள். (ரிக்-கா-1-ஸூ-116-ம-15)

4. அத்திரி முதலியவர்களின் உறுப்புகள் வெட்டப்பட்டன. ஆனால் அவர்கள் சிகிச்சை முறையால் அவ்வுறுப்புகளை மீண்டும் சீர்படுத்திக் கொண்டனர். (ரிக்-கா-1-ஸூ-117-ம-19)

5. சியாவச்வர் என்பவரது உடலுறுப்பை பகைவர்கள் மூன்று துண்டுகளாக்கி விட்டனர். அவரும் சிகிச்சையால் மீண்டும் அவ்வுறுப்பு இணைக்கப்பட்டு பிழைத்தார்.

6. ததீசி முனிவருக்கு மதுவித்யை என்பது தெரியும். ஆனால் அதை வெளிப்படுத்தினால் தலைபோய் விடும் என்ற குருவின் ஆணையும் உண்டு. அச்வினி குமாரர்கள் அம்முனிவரின் தலையை வெட்டி, வேறுபடுத்திக் குதிரையின் தலையை இணைத்து மதுவித்யையை உபதேசம் பெற்ற பின் மீண்டும் குதிரைத் தலையை நீக்கி எப்பொழுதும் போல அவரது தலையை இணைத்து விட்டனர். (ரிக்-கா-1-ஸூ-116-ம-12. மற்றும் கா-1-ஸூ-117-ம-122)

7. ருஜ்ராச்வர் என்பவர் குருடராக இருந்தார். சிகிச்சை மூலம் மீண்டும் பார்வையைப் பெற்றார். (ரிக்-1-ஸூ-116-ம-16; 1-ஸூ-117-17)

8. குருடராக இருந்த கண்வர் சிகிச்சையால் பார்வை பெற்றார்.

9. நொண்டியாக இருந்த பராவிருஜர் மீண்டும் சிசிச்சையால் காலைச் சீராக்கி கொண்டார். (ரிக்-1-112-8)

10. வத்ரிமதி என்பவரின் கணவர் ஆண்மையற்றவராக இருந்தார். அவர் சிகிச்சை பெற்று மகப்பேறு பெற்றார். (ரிக்-1-116-13)

11. விச்வகர் என்பரின் மகன் மரிக்க மீண்டும் சிகிச்சையால் அவர் பிழைத்தார். (ரிக்-1-ஸூ-116-23)

12. ககூீவதி மகள் கோஷா என்பவர் குட்ட நோய் காரணமாகத் திருமணமாகாமல் பிறந்த வீட்டிலேயே இருந்தாள். சிகிச்சையால் நோய் நீங்கி அவள் கணவனை அடைந்தாள். (ரிக்-கா-1-ஸூ-117-ம-7)

13. சியாவர் என்பவர் தொழுநோயால் கருநிற உடல் கொண்டு துன்புற்று வந்தார். பிறகு சிகிச்சையால் உடல் நலம் பெற்று அழகிய மனைவியை அடைந்தார். (ரிக்-1-117-8.)

14. அசுவினி குமாரர்கள் ஔஷதி, வனஸ்பதி ஆகிய மூலிகைகளின் சிறப்புத்தன்மைகளை வெளிப்படுத்தினர். (ரிக்-1-116-8)

மனிதர்களுக்கு மட்டுமல்லாமல் அச்வினி குமாரர்கள் விலங்குகளுக்கும் மருத்துவம் செய்து வந்தனர்.

15. ஆர்சத்கர், ஸம்யு எனும் முனிவர்களின் பசுக்கள் கன்றுகளை ஈன்றும் வயது கடந்து நின்றபோது மீண்டும் அந்தப் பசுக்களுக்கு இளமையும் கன்றுகளை ஈன்று பால் தரும் வலிமையையும் அவர்கள் தோற்றுவித்தனர்.

இந்திரனும் சிகிச்சை முறையில் தேர்ச்சி பெற்றவன்.

16. பராவிருஜன் இந்திரனால் கண் பார்வை பெற்றார்.

17. சுரோணர் என்பவர் நொண்டியாக இருந்தவர், இந்திரனிடம் சிகிச்சை பெற்று நன்றாக நடக்கக்கூடியவர் ஆனார்.

18. அபாலாவின் தோல் நோய் இந்திரனால் நீங்கியது.

19. இந்திரனால் அபாலாவின் தந்தையின் வழுக்கைத் தலை சீர் பெற்றது.

ரிக்வேதத்தில் (1-191, 1-16) பல வகை விஷக் கிருமிகளின் வருணனை மற்றும் அவற்றினிடமிருந்து விடுபடும் வகைகள் ஆகியவை கூறப்பட்டுள்ளன.

பல வகையான யக்ஷ்மா (க்ஷய) நோய்களிலிருந்து நிவாரணம் பெறும் முறைகள் ரிக் 10-163-1-6ல் காணப்படுகின்றன.

சூரிய ஒளி சிகிச்சையால் இதய நோய் முதலியன தீரும் வகை ரிக் 1-50-11-13ல் விளக்கப்பட்டுள்ளது.

நீரைக் கொண்டு சிகிச்சை செய்யும் முறை ரிக் 10-137, 6-2, 23-19ல் கூறப்பட்டுள்ளது.

யக்ஷ்மா, இனம் தெரியாத நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் ராஜயக்ஷ்மா, கிராஹி, இதய நோய் முதலியன ரிக்வேத 10,97, 105-137-161,167ல் குறிப்பிடப்பட்டுள்ளன.

## 20. சுக்ல யஜுர்வேதஸம்ஹிதையில் மருத்துவக் குறிப்புகள்

சுக்ல யஜுஸ்ஸம்ஹிதையின் 12வது அத்தியாயத்தில் இரண்டு ஸூக்தங்களில் ஔஷதிகளின் நோய்களைத் தீர்க்கும் தன்மைகள், சிலேத்தும நோய்கள், அர்சஸ், சுவபது, கண்டு, சிலீபதம், யக்ஷ்மா, முகபாகம், க்ஷதம் முதலிய நோய்களைப் போக்குதல் ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன.

குதிரை மற்றும் மனித உடலுக்குள் உள்ள உறுப்புகளின் விளக்கம், யக்ஷ்மா, விஷுசிகா, இதயநோய், தோல் நோய் தொழுநோய் முதலியவற்றைப் பற்றிய குறிப்புகள், 19;81,93-20-5, 9-25 ஆகிய பகுதிகளில் காணப்படுகின்றன.

## 21. தைத்திரீய ஸம்ஹிதையில் மருத்துவக் குறிப்புகள்

தைத்திரீய ஸம்ஹிதையில் கண்பார்வை பெறுதல், யக்ஷ்மா, உன்மாதம் போன்ற நோய்கள் நீங்கச் சாந்தி முறைகள், யக்ஷ்மா முதலியவற்றால் தோன்றக்கூடிய வேறு நோய்கள் ஆகியவை பற்றிய குறிப்புகள் காணப்படுகின்றன.

## 22. ஸாம வேதத்தில் குறிப்புகள்

ஸாம வேதத்தில் ரிக் வேதத்தைச் சேர்ந்த மந்திரங்கள் காணப்படுவதால் ரிக் வேதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள மருத்துவ விஷயங்கள் கலந்துள்ளன.

## 23. பிராம்ஹண, கிரந்தங்களில் மருத்துவக் குறிப்புகள்

ஐத்ரேய பிராம்ஹணத்தில் அங்கங்கு மனித உடல் தோன்றும் வகை அச்வினீ தேவதைகள் தேவ மருத்துவர்களான விதம், ஞானேந்திரியங்களின் விளக்கம், ஓஷதிகளின் நோய் நீக்கும் தன்மைகள், அஞ்சனத்தால் கண் நோய்கள் நீங்குதல், சாபத்தால் உன்மாதம், குட்டம் முதலிய நோய்கள் தோன்றுதல், வருணனுடைய கோபத்தால் ஜலோதரம் எனும் நோய் தோன்றுதல் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன,

சாந்தோக்யத்தில் இதய நாடிகளின் வர்ணனை (8-1-6) காணப்படுகிறது.

உணவு செரிமானமடையும் வகை, பாமா எனும் நோயைப் பற்றிய வர்ணனை, நோய் நீங்கி நூறாண்டுகளுக்கும் மேலாக வாழும் வகை முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன.

## 24. பிருஹதாரண்யகத்தில் குறிப்புகள்

ரையின் உடல் உறுப்புகள், மனித உறுப்புகள், இதய நாடிகள், மனிதனுக்கும் மரத்திற்கும் உள்ள ஒற்றுமை, கண்களின் அமைப்பு, மரணத்தைப் பற்றிய விளக்கம், சாபத்தால் நோய்கள் தோன்றுதல் முதலியன பிருஹதாரண்யகத்தில் குறிப்பிடப் பட்டுள்ளன.

**ஸாம விதான ப்ராம்ஹணத்தில்** - ஸர்ப்பங்களிலிருந்து காத்துக் கொள்ளுதல், பூதங்கள் ஆக்ரமிப்பு ஆகியனவும் குறிப்பிடப் பட்டுள்ளன.

**தைத்திரீயாரண்யகத்தில்** - நோய்க்கிருமிகளைப் பற்றிய விளக்கம் காணப்படுகிறது.

**ஆச்வலாயனத்தில்** - யாகத்திற்குத் தக்க பசுக்கள், ருத்விக்குகள் முதலியவர்களில் விலக்கத்தக்க நோயாளிகளைப் பற்றிய விளக்கம் காணப்படுகிறது.

**ஆபஸ்தம்பத்தில்** - கிருமிகளைப் பற்றிய விளக்கம் காணப்படுகிறது.

**கோபிலஸூத்ரத்தில்** - நோய்களைப் போக்கும் மந்திரங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

**ஆபஸ்தம்ப கிருஹ்ய ஸூத்திரத்தில்** - நோயுள்ளவருக்குத் தாமரை இலை முதலியவற்றால் அபிமந்திரணம் செய்தல், நோய்களைத் தோற்றுவிக்கும் கிருமிகள், குழந்தைகளுக்கு அபஸ்மார நோய் தோன்றக் காரணம், சிறுவர்களுக்குத் தோன்றும் மற்றும் சில நோய்கள் ஆகியவை பற்றிய விளக்கம் காணலாம்.

**பாரஸ்கர ஸூத்திரத்தில்** - மர்தனம் (மாலிஷ்) செய்வதால் தலைநோய் நீங்குதல் குறிப்பிடப்பட்டுள்ளது.

**வாதிரகிருஹ்ய ஸூத்திரத்தில்** - கிருமிகளின் விளக்கம், பசுக்களுக்குத் தோன்றும் நோய்களைப் போக்க ஹோமம் செய்தல், ஸர்ப்ப விஷத்திற்கு சிகிச்சை முதலியன காணப்படுகின்றன.

## 25. வேதத்தில் மருத்துவத்தைப் பற்றி ஆராய்ந்த அறிஞர்கள்

வைதிக இலக்கியத்தில் ஆயுர்வேத சாஸ்திர விஷயங்களைப் பற்றி புளூம்பீல்ட் (M.BLOOM FIELD), ஹிலபிராண்ட் (A.HILLEBRANT), கேலெண்ட் (CALAND), டாக்டர். பி. கார்டியர் (Dr. P. CORDIER), ஜாலி (J. JOLLY), போலிங் (G.S.M. BOLLING), ஜிம்மர் (ZIMMER) போன்ற மேல் நாட்டு அறிஞர்கள் பலர் ஆராய்ச்சிகள் செய்துள்ளனர். நம் நாட்டு அறிஞர்களும் சிலர் சில நூல்களை வெளியிட்டுள்ளனர்.

கௌசிக ஸூத்ரம் எனும் நூலில் நோய்களுக்கு மந்திரங்கள், மூலிகைகள் போன்ற பல விஷயங்கள் குறிப்பிடப்பட்டுள்ளன.

வேத இலக்கியத்தைக் கண்ணுற்ற போது நம் நாட்டில் கி.மு. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பார்வையற்றோர்க்கு சிகிச்சை மூலம் பார்வை அளித்தல், வெட்டுண்ட உறுப்புகளைப் பொருத்துதல், செயற்கை உறுப்புகளை இணைத்தல் போன்ற - மருத்துவத்துறையில் இன்று சிறப்பாகக் காணப்படும் முறைகள் பழக்கத்தில் இருந்தன எனத் தெளிவாகிறது. இன்று மருத்துவம் கண்டறியாத கழுத்தை வெட்டி வேறு விலங்கின் கழுத்தைப் பொருத்துதல், மீண்டும் இயற்கைக் கழுத்தைப் பொருத்துதல் போன்ற அற்புத சிகிச்சை முறைகளும் செயல்முறையில் இருந்து வந்தன என்பது தெரிய வருகிறது. கி.மு.2500 அதாவது இன்றைக்கு ஏறக்குறைய 4500 ஆண்டுகளுக்கு முன்பே வேத காலம் துவங்கிவிட்டது என ஆராய்ச்சியாளர்கள் கருதுகின்றனர்.

அக்காலத்தில் நம்நாட்டில் மருத்துவம் சிறப்புற்று விளங்கிய நிலையையும் இன்று நம் நாட்டு மருத்துவத்தின் நிலையையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது காணப்படும் ஏற்றத்தாழ்வுகள் நாட்டுப்பற்றுள்ள அறிஞர்களுக்கு மிக்க கவலை தோற்றுவிக்காமல் இருக்காது.

வேத இலக்கியத்தில் பெரும்பகுதி மறைந்து போயிற்று என்பதையும், நமக்கு இன்று கிடைத்துள்ளது சிறுபகுதியே என்பதையும் இங்கு நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

இத்தாழ்வு நிலைக்குக் காரணம் என்ன என்று சிந்திப்பதை விட கிடைத்தவரையில் உள்ள வேத மந்திரங்களை நுட்பமாக ஆராய்ந்து முற்காலத்திலும், இக்காலத்திலும் அங்கங்கு சிறந்த அறிஞர்கள் வெளியிட்டுள்ள ஆராய்ச்சி நூல்களையும் ஆராய்ந்து வேத கால மருத்துவத்தைப் பற்றி எல்லோருக்கும் பயன்படத்தக்க வகையில் நோய் தீர்க்கும் மந்திரங்கள், ஹோமங்கள், அவற்றைப் பயன்படுத்தும் முறைகள், மூலிகைகளைப் பயன்படுத்தும் முறைகள் முதலியவற்றை விளக்கும் ஆராய்ச்சி நூல்கள் வெளியிடப்படுவது மிகவும் அவசியம் என்பதை வேதப்புலமை பெற்ற அறிஞர்கள் முன்னிலையில் நினைவுபடுத்த விரும்புகிறேன்.

# பிணிகள்

இந்நூலில் இடம் பெற்ற பிணிகளின் பெயர்கள் கீழே தரப்படுகின்றன.

**அ**

அதிஸாரம் (சிகி-1) - சிறுநீர்ப் பையில் கல்

அச்மரீ - சிறுநீர்ப் பையில் கல்

அர்திதம் (சிகி - 2) - வாத நோய்

அபதானகம் (சிகி-5)

அபதந்திரிகம் (சிகி-5)

அவபாஹுகம் - ஒரு வகை வாத நோய்

அம்ல மேஹம் (சிகி-11) - ஒரு வகை வாத நோய்

அஸ்திகத குட்டம் (சிகி-13) - எலும்பைச் சார்ந்த குட்டம்

அபஸ்மாரம் (சிகி-13)

அகோதரம் (சிகி-14) - உதர நோய்

அங்க மர்தம் (சிகி-14) - உதர நோய்

அபசி (சிகி-18) - கொழுப்பால் தோன்றும் சீழ்க்கட்டி

அர்புதம் (சிகி-18) - புரைகுழல்

அஜகல்லிகை (சிகி-19) - ஒரு வகை சர்ம வியாதி

அந்தாலஜி (சிகி-19) - அதிக சீழ் இல்லாத கட்டி

அலசம் (சிகி-19) - சேற்றுப் புண் நோய்

அரும்ஷிகா (சிகி-20) - தலைப்புண்

அவபாடிகா (சிகி-20) - சிறுவர்களுக்கு தோன்றும் நோய்

அஹி பூதனை (சிகி-20) - சிறுவர்களுக்கு தோன்றும் நோய்

அவமந்தம் (சிகி-22) - சூதங்கள்

அஷ்டீலிகா (சிகி-22)

அலஜி (சிகி-22)

அதிதந்தம் (சிகி-22) - பல்நோய்

அதிமாமிசம் (சிகி-22) - பல்நோய்

அத்ருஷம் (சிகி-22) - "

அதிஜிஹ்வா (சிகி-22) - உள் நாக்கு வளர்தல் - டான்சில்

அலஸகம் (சிகி-33)

அக்ஷிபாகம் (சிகி-33)

அயோகம் (சிகி-34) - வமன - விரேசன நோய்கள்

அதியோகம் (சிகி-34) - வமன - விரேசன நோய்கள்

அங்கபிரக்ரஹம் (சிகி-34) - வமன - விரேசன நோய்கள்

அநாஹம் (சிகி-34) - வமன - விரேசன நோய்கள்

அஷ்டீலா (சிகி-34)

அர்த்தாவபேதநம் (சிகி-40)

அதிமந்தம் (உத்-1) - கண்நோய்

அதிமாம்ச அர்மா (உத்-1)

அஜகாஜாதம் (உத்-1) - இரத்த கண் நோய்

அபிஷ்யந்தம் (உத்-1)

அஞ்சனநாமிகா (உத்-1)

அவிரண சுக்ரம் (உத்-1)

அர்ஜுனம் (உத்-1)

அந்யதோஹதம் (உத்-1)

அம்லாத்யுஷிதம் (உத்-1)

அக்ஷிபாக காட ்யம் (உத்-1)

அதிமாம்ஸார்மம் (உத்-1)

அசோப பாகம் (உத்-1)

அக்லின்னவர்த்மம் (உத்-1)

அர்சோவர்த்ம (உத்-3) - கண் இமை நோய்

அபரிக்லின்ன வர்த்ம (உத்-3)

கொள்ளப் பயன்படும். சிறுநீரகத்தில் உள்ள கல் போன்ற தடங்கல்களை நீக்கப் பயன்படும் - SHARP HOOK, USED FOR EXTRACTING THE SOLID BODIES, ESPECIALLY EMPLOYED FOR EXTRACTION OF FOREIGN STONE FROM THE URETHRA; FOR FIXING AND DRAGGING THE UVULA AND TONSIL BEFORE PERFORMANCE OF ANY OPERATION ON THESE PARTS



ஏஷணிகள்

(இரண ஆய்வுக் கருவி)

ஏஷணி - விரணம் முதலியவற்றில் புரையோடும் வழியைத் துழாவுவதற்குப் பயன்படும் - SHARP PROBE USED FOR ASCERTAINING THE COURSE OF THE FISTULOUS TRACK.



ஸூசிமுக ஏஷணி

(ஊசி முனை போன்ற கருவி)

சூசீமுகஏஷணி - பேதனம் எனும் பிளக்கும் செயலுக்குப் பயன்படுவது - NEEDLE SHAPED PROBE



கண்டூபத முக ஏஷணிகள்

மண்ணுளிப் பாம்பு போன்ற ஏஷணி

கண்டூபத ஏஷணி - மண்ணுளிப்பாம்பின் தலை போல வழுவழுண்டிருக்கும் முனை உள்ளது - THE ENDS SHAPED LIKE THE HEAD OF EARTH - WORM



கோலாஸ்தித்ளவதனம் - மூக்குக்குள் உண்டாகும் அர்சஸ் மற்றும் அர்புதம் என்னும் கட்டியைப் போக்கப் பயன்படும் - PLUMSEED LIKE USED FOR REMOVING NASAL TUMOUR



கஜம்

மூக்குக் குடையும் கருவி



முசுண்டீ யந்திரம்

முசுண்டி - அதிக ஆழமான புண்களிலுள்ள கெட்ட மாமிசத்தை இழுத்து வெளிப்படுத்தவும், களையப்பட்டு மிகுந்துள்ள கண் இமை முளைகளை எடுக்கவும் பயன்படும் - A TYPE OF FORCEP USED FOR REMOVAL OF PTERYGIUM

EAR & NOSE





தாள யந்திரங்கள்
(மீன் செதிள் போன்ற கூரிய
முனையுடைய கருவிகள்)

தாளயந்திரம் - காது மூக்கு முதலிய உறுப்புகளுக்குள் பதிந்த சல்யங்களை வெளியே எடுக்கப் பயன்படும் - PICK LOCK LIKE INSTRUMENT - USED FOR EXTRACTION OF SPLINTERS, AND GROWTHS FROM INSIDE THE NOSE, EARS AND OTHER BODILY ORIFICES.

ஊசிகள் (ஸூசீ)



சூசி - குத்துவது; தையல் போடுவது போன்றவற்றிற்குப் பயன்படுத்தப்படும் - NEEDLES, USED FOR SURGICAL PUNCTURING AND STICHING, ALSO FOR TESTING TISSUES.

விருத்தாங்குலத்வயம் - மாமிசம் குறைந்த பகுதியைத் தைக்கவும், காயங்களின் விளிம்புகளைத் தைக்கவும் பயன்படும் - (NEEDLE)



திரியங்குலம் - மூன்று அங்குல நீளமுள்ள ஊசி - மாமிசம் நிறைந்த தொடைப்பகுதி முதலியவற்றைத் தைக்கப்பயன்படும் - (NEEDLE)



சூசி - குத்துவது; தையல் போடுவது போன்றவற்றிற்குப் பயன்படுத்தப்படும் - NEEDLES, USED FOR SURGICAL PUNCTURING AND STICHING, ALSO FOR TESTING TISSUES.



தனுர்வக்ரம் - வயிற்றுப்பகுதி, குடல் விதைப்பை முதலிய நுட்பமான மர்மங்களைத் தைக்கப் பயன்படும் - (NEEDLE)

## DENTAL SCALARING



(b) சரபுங்கமுகம் (இது இருவகைப்படும்) கெட்டுப்போன பற்களைக்குத்தி வீழ்த்துவதற்குப் பயன்படும் - ARROW STEM LIKE.



சரபுங்கமுக சலாகைகள்

(அம்புமுனை போன்ற கருவிகள்)



தந்த லேகநம்

பல் சுரண்டும் கருவி

தந்த சங்கு - பறகளில் சேர்ந்துள்ள காரை (தந்த சர்க்கரை)யைச் சுரண்டி நீக்கப்பயன்படுத்தப்படும் - TOOTH SCALER USED FOR EXTRACTION OF SORDES AND TARTAR FROM THE TEETH

PILES



தர்வி - மூலநோய் விரணம் அல்லது முளையைப் போக்க கார மருந்து தடவுவதற்குப் பயன்படும் கருவி - WOODEN MADE SPOON (FOR APPLICATION OF POTENTIAL CAUTERY

அர்சோ யந்திரங்கள்

மூல நோய்கருவி



ஒரு தொளையுடையது

இரு தொளையுடையது



சமீ யந்திரம்

மூலநோய் முளையை

நசுக்கும் கருவி



ஜாம்பவோஷ்ட சலாகை

(நாவல் கொட்டை போன்ற முனையுடைய கருவி)

ஜாம்பவௌஷ்டம் - நெருப்பில் காய்ச்சி நோயுற்ற பகுதியைச் சுடுவதற்குப் பயன்படுத்தப்படும் - A TYPE OF PROBE - FOR SURGICAL PROBING

TONSILS



மண்டலாக்ரம்

கூர்மையான முனை வளைந்த கத்தி

மண்டலாக்ரம் - போதகீ, சுண்டிகா போன்ற கண் நோய்களுக்குத் தக்க அறுவை சிகிச்சைக்குப் பயன்படுத்தப்படும். 'டான்ஸில்ஸ்' எனப்படும் உறுப்பின் வீக்கத்தை அறுவையால் போக்கப் பயன்படும் - ROUND HEADED KNIFE, USED FOR.

EXCISION, SCRAPING OR SCARIFICATIONS, ESPECIALLY EMPLOYED IN THE OPERATION OF ENLARGED TONSIL



கர பத்திரம்

கைரம்பம்

கரபத்ரம் - என்புகளை அறுக்கப்பயன்படுத்தப்படும் - BONE SAW (FLAT SAW)



பின்புறமாக வளைந்த

வ்ருத்தி பத்திரம்

விருத்திபத்ரம் - அறுத்தல், வெட்டுதல், கிழித்தல் போன்றவற்றிற்கு பயன்படுத்தப்படும். சிறப்பாக ஆழமாக வீங்கிய கட்டிகளை அறுவையால் நீக்கப் பயன்படும் - RAZOR BLADE WITH HANDLES USED FOR SURGICAL INCISION AND EXCISION; ESPECIALLY USED IN THE REMOVAL OF SCROTAL TUMOUR



நீண்ட முனையுள்ள

வ்ருத்தி பத்ரம்

கூர்மையும் அகன்றும் உள்ள கத்தி



வ்ருத்தி பத்திரம்

(மற்றொரு வகை)



கர்ப்ப சங்கு

(கரு போன்றவற்றை அகற்றும் கருவி)

SANGU : The instrument used for the extraction of the bones of the perforated head of the dead foetus.



CAESARIAN OPERATION

கர்ப்ப சங்கு (மற்றொரு வகை)

சங்கு - மூடகர்ப்பத்தை வெளியேற்றப் பயன்படுத்தப்படும் -

HOOK USED FOR EXTRACTION OF THE BONES OF THE PERFORATED HEAD OF DEAD FOETUS.



அங்குலி சஸ்திரம்

விரல் கத்தி



அங்குலி சஸ்திரம்

(மற்றொரு விதம்)



மண்டலாக்ரம்

கூர்மையான முனை வளைந்த கத்தி

Mandalagram / Angulisastram. The Instrument used for perforating the skull of the dead foetus and also for the removal of the head and the broken skull.

YANTHRAM



(1) சிம்ஹமுகம் - LION - FACED



(2) வியாக்ரமுகம் - TIGER - FACED



(3) விருக்கமுகம் - WOLF - FACED



(4) ருக்ஷமுகம் - BEAR - FACED



(5) திவீபி முகம் - PANTHER - FACED



மார்ஜாரமுகம் - CAT - FACED



சிருகாலமுகம் - JACAL - FACED



MRUGERVARUKA



காகமுகம் - CROW-FACED



கங்கமுகம் - HERON-FACED



KURALA



CHAPA



பாசமுகம் - EAGLE FACED



சஷுமுகம் - BLUE JAY - FACED



KHATHEE



உலூகமுகம் - OWL-FACED



சில்லீமுகம் - KITE-FACED



CHVESAM



VRUTHRAM



கிரௌஞ்சமுகம் - CURLEW-FACED



பிருங்கராஜமுகம் -

BRUNGARAJAM

**பந்தனங்கள் (கட்டு வகைகள்)**



கோச பந்தநம்
(பெட்டி போல் மூடும் கட்டு)

கோச பந்தநம்
ஸ்தகிதம் என்ற பெயரும் உண்டு



ஸ்வஸ்திக பந்தநம்
8 எண் போன்ற கட்டு





தாம பந்தநங்கள்
கயிற்றினால் சுற்றிக்கட்டுதல்



அநுவேல்லித பந்தநம்
(கொடிபோல் சுற்றிக் கட்டுதல்)






முத்தோலீ பந்தநங்கள்

(முக்கோணக் கட்டுகள்)



கட்வா பந்தநம்

(முகவாய் கட்டையை தூக்கிக் கட்டுதல்)



விபந்த பந்தநம்

(அழுத்தமாக சுற்றிக் கட்டுதல்)



சீந பந்தநம்

(கண் கட்டைப் போன்ற கட்டு)




அடிப்புறம்

உத்ஸங்க பந்தநம்

(உறி போன்ற கட்டு)



ஸிராவ்யதை முறைகள்



ஸிராவ்யதை முறைகள்

(காரி இரத்தத்தைக் கீறி

எடுக்கும் முறைகள்)



சிரோவஸ்தி

(மூடாத மேல் பக்கம் உள்ள

தொப்பி போன்றது)



விதாந பந்தநம்
(தலைக்குமேல் தொப்பிபோல்
சுற்றிக் கட்டுதல்)



கோபண பந்தநம்
(கோவணம் போன்ற கட்டு)



பஞ்சாங்கி பந்தநம்
(கால்களில் பட்டைகள் வைத்து 5 இடங்களில்
சுற்றிக் கட்டுதல்)



இரண்டு கட்டுகளையுடையது யமக பந்தநம்



பலகை

# ஸுச்ருதஸம்ஹிதை

# சிகித்ஸாஸ்தானம்

## முதல் அத்தியாயம்

## *த்விவிரணீய சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் உபதேசம் செய்தபடி இரு வகை விரணங்களுக்குரிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 1-2

### 1. இரு வகை விரணங்கள்

தோஷங்களால் உடலில் தோன்றியவை, புறக்காரணங்களால் உடலில் தோன்றியவை என விரணங்கள் இரு வகைப்படும். வாதம், பித்தம், கபம், இரத்தம், [1]ஸந்நிபாதம் ஆகியவற்றால் தோன்றியவை ஒரு வகை. வேறு மனிதன் மற்றும் விலங்கு, பறவை, ஸர்ப்பம் முதலிய ஊர்வனங்கள் ஆகியவற்றின் தாக்குத லாலும், கசக்குதலாலும், அடித்தலாலும், கட்டை, கபாலம், கொம்பு, சக்கரம், அம்பு, கோடரி, [2]சக்தி முதலிய ஆயுதங்களால் அடிபடுதலாலும், மற்றும் நெருப்பு, க்ஷாரம், விஷம், தீக்ஷ்ணமான மருந்து முதலியவற்றாலும் தோன்றும் விரணங்கள் மற்றொரு வகை. இவ்விரண்டினாலும் தோன்றும் பொதுவாக விரணங்கள் ஒரே வகையை சார்ந்தவை. இரண்டு காரணங்களால் தோன்றுவ தால் விரணங்கள் இரு வகைப்படும் என கணக்கிடப்படுகின்றன. 3

### 2. புறக்காரணங்களால் தோன்றியவற்றிற்குச் சிகிச்சை

புறத்தாக்குதலால் தோன்றும் விரணங்கள் அனைத்திற்கும் அடிபட்டவுடன் வெப்பம் மிகாமல் இருக்கப் பித்தத்தின் சீற்றத்திற்கான குளுமையைத் தோற்றுவிக்கும் சிகிச்சை முறை களைப் பயன்படுத்த வேண்டும். விரணங்களில் சிதைந்த தோல் இணைவதற்காகத் தேனையும், நெய்யையும் பயன்படுத்த வேண்டும் என்பது த்விகரணோத்தான ப்ரயோஜனம் எனப்படும். பிறகு சீற்றமடைந்த தோஷங்களுக்கு ஏற்ப இயற்கையாக உடலில்

* **த்வி** - இரண்டு. விரணீயம் - விரணங்களைச் சார்ந்தது. வகை விரணங்களைப் பற்றிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயத்திற்கு **த்விவிரணீயசிகித்ஸிதம்** எனப் பெயர் ஆயிற்று.

1. ஸந்நிபாதம் - முத்தோஷங்களும் சேர்ந்த நிலை.
2. சக்தி - ஒரு வகை ஆயுதம்.

தோன்றிய விரணங்களுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 4

### 3. விரணங்களால் தோன்றும் துன்பங்கள்

விரணங்களால் தோற்றுவிக்கும் தோஷங்களின் செயல்கள் பதினைந்தாகும். இவை ஸூத்ரஸ்தானம் 21வது அத்தியாயத்தில் விரண பிரச்னாதிகாரத்தில் விளக்கப்பட்டன. 'சுத்தவிரணம்' என்றொரு வகை உண்டெனச் சிலர் அதை பதினாறாவது வகை யாகக் கொண்டனர். 5

### 4. விரண இலக்கணம்

பொது, சிறப்பு என விரணங்களின் இலக்கணம் இரண்டு வகையாகும். வலி தோன்றுவது பொது இலக்கணம். உடற் பகுதியைச் சிதைப்பது என்ற பொருளின் 'விரணம்' எனும் சொல் 'விரண' என்னும் வினையடியாகத் தோன்றியதாகும். வாதம் முதலிய தோஷங்களால் தோன்றுபவை சிறப்பு இலக்கணங்களாகும். 6

### 5. சிறப்பான இலக்கணங்கள்

வாதம் சீற்றமடைந்த விரணத்தில் கறுப்பு அல்லது சிவப்பு நிறம் தோன்றுதல், மெலிந்திருத்தல், குளுமைத்தன்மை எண்ணெய்ப்பசை கொண்டிருத்தல், சீழ் அல்லது நீர்ப்பெருக்கு குறைந்த அளவில் இருத்தல், வறண்டிருத்தல், சிட்பட் என்று துடித்துக் கொண்டிருத்தல், இழுப்பு போன்ற வலி உண்டாகுதல், உடைப்பது போலவும் குத்துவது போலவும் வேதனை தோன்று தல், சதைப்பற்றில்லாதிருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும்.

பித்தத்தின் சீற்றத்தால் தோன்றிய விரணத்தில் விரைவாகத் தோன்றுதல், மஞ்சள் நிறம் கொண்டிருத்தல், கழுவிய கல்யாண முருங்கை மலர் நீரைப் போன்ற நிறத்தில் விரணத்திலிருந்து சூடான நீர் பெருகிக் கொண்டிருத்தல், எரிச்சல், பக்குவ நிலையில் விகாரத்தைத் தோற்றுவித்தல், மஞ்சள் நிறமுள்ள சிறு கட்டிகளுடன் (பிடகை) கூடியிருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும்.

கபத்தின் சீற்றத்தால் தோன்றிய விரணத்தில் அரிப்பு மிகுதியாக இருத்தல், விரணத்தின் வாய் தடித்து காணப்படுதல், சிரை, சிநாயு முதலியன வலை போலப் பின்னிக் கொண்டு கடினமாக இருத்தல், வெண்ணிறம் கொண்டிருத்தல், துன்பம்

*குறைந்த அளவில் இருத்தல், வெண்ணிறமும் குளுமைத் தன்மையும் அடர்த்தியும் கொண்ட நீர்ப் பெருக்குடன் பெரிதாக இருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும்.*

*இரத்தத்தினால் தோன்றிய • விரணத்தில் பவழம் போன்ற நிறம் தோன்றுதல், கருநிறக் கொப்புளத்துடனும், பிடகை களுடனும் கூடியிருத்தல், குதிரை லாயத்திலுள்ளது போன்ற தீக்ஷ்ணமான துர்நாற்றமடைதல், வேதனை ஏற்படுதல், புகை சூழ்ந்தது போல இருத்தல், இரத்தப்பெருக்கு உண்டாயிருத்தல், பித்தத்தின் சீற்றத்தினால் தோன்றும் இலக்கணங்கள் உருவாகுதல் எனும் அறிகுறிகள் காணப்படும்.*

*வாதபித்தங்களால் தோன்றும் விரணத்தில் குத்தல் வலி, எரிச்சல் தோன்றுதல், விரணத்திலிருந்து புகை கிளம்புவது போலிருத்தல், மஞ்சள் அல்லது சிவப்பு நிறம் கொண்டிருத்தல், வாத பித்தங்களைப் போன்ற நிறம் கொண்ட கெட்ட நீர் பெருகிக் கொண்டிருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும்.*

*வாத கபங்களால் தோன்றிய விரணத்தில் அரிப்பு, ஊசி குத்துவது போன்ற வலி, வறட்சி ஏற்படுதல், பளுவாகத் தோன்றுதல், கடினமாக இருத்தல், அடிக்கடி குளுமையான எண்ணெய்ப் பசையுடன் கொழகொழப்புள்ள கெட்ட நீர் குறைவாகப் பெருகிக் கொண்டிருத்தல் என்பன தோன்றும்.*

*பித்த கபத்தால் தோன்றிய விரணத்தின் இலக்கணங்கள் குருத்தன்மை, எரிச்சல், சூடு, மஞ்சள் அல்லது வெண்ணிறம் கொண்ட பெருக்கு என்பனவாம்.*

*வாத ரத்தத்தால் தோன்றும் விரணத்தில் வறட்சியாக இருத்தல், மெலிந்திருத்தல், குத்தல் வலி மிகுதல், உறங்குதல் போல இருத்தல், சிவந்த நிறம் கொண்டிருத்தல். வாதரத்தங்களைப் போன்ற பெருக்கு கொண்டிருத்தல் என்பன காணப்படும்.*

*பித்த ரத்தத்தால் தோன்றிய விரணத்தில் நெய் மேல் உள்ள ஏட்டைப் போன்ற நிறமும், மீனைக் கழுவின நீரின் மணமும் மென்மையும் கொண்டு மேன்மேலும் பரவுவதான சூட்டுடன் கறுத்த நீர்ப்பெருக்கும் காணப்படும்.*

*கபரத்தத்தால் தோன்றிய விரணத்தில் சிவப்பு நிறமும், குருத்தன்மையும், எண்ணெய்ப் பசையும், கொழகொழப்பும், மிக்க அரிப்பும் நிலை பெற்றிருத்தலும், சிவப்பு வெண்மை நிறமுள்ள பெருக்கும் காணப்படும். வாத பித்த ரத்தம் மூன்றினாலும்*

தோன்றும் விரணத்தில் துடிப்பு, குத்தல்வலி, எரிச்சல், மிகுதியாகப் புகை கிளம்புதல், மஞ்சள் நிறத்துடன் மெலிந்த இரத்தப்பெருக்கு ஆகியவை காணப்படும்.

வாத கப ரத்தங்களால் தோன்றிய விரணத்தில் அரிப்பு, துடிப்பு, சும சும என்றிருத்தல், வெண்ணிறம் கலந்த இரத்தப்பெருக்கு ஆகியவை காணப்படும்.

பித்த கப ரத்தங்களால் தோன்றும் விரணத்தில் எரிச்சல், மிக்க அரிப்பு, வெண்ணிறமுள்ள இரத்தப் பெருக்கு ஆகியவை காணப்படும்.

வாத பித்த கபங்களால் தோன்றும் விரணம், மூன்று தோஷங்களின் நிறம், பெருக்கு, மிக்க துன்பம் என்னும் இலக்கணங்களைக் கொண்டிருக்கும்.

வாத பித்த கப ரத்தங்களால் தோன்றும் விரணம், எரிச்சல், கடைதல் போன்ற துன்பம், துடிப்பு, குத்தல் வலி, பக்குவம் பெறுதல், அரிப்பு, வழுவழுப்பாக இருத்தல், பல வகை துன்பங்கள், பல வகையான கெட்ட நீர்ப் பெருக்கு ஆகிய இலக்கணங்கள் கொண்டிருக்கும். தோஷங்களின் சீற்றமில்லாத விரணத்தில் நாக்கைப் போல சிவப்பு நிறம், மென்மை, எண்ணெய்ப்பசை, அடர்த்தி, துன்பம் இல்லாமல் இருத்தல், நல்ல நிலையில் இருப்பது போல் காணப்படுதல், கெட்ட நீர்ப் பெருக்கின்மை ஆகிய இலக்கணங்கள் காணப்படும். 7

## 6. விரணங்களுக்குச் செய்ய வேண்டிய ஆரம்ப சிகிச்சைகள்

விரணங்களுக்கு சிகிச்சையாகச் செய்ய வேண்டிய உபசாரங்கள் அறுபது வகைகளாகும். அவையாவன :-

[1]அபதர்ப்பணம், [2]ஆலேபம், பரிஷேகம், அப்யங்கம், ஸ்வேதம், விம்லாபனம், உபநாஹம், பாசனம், விஸ்ராவணம், ஸ்நேஹம், வமனம், விரேசனம், சேதனம், பேதனம், தாரணம், லேகனம், ஏஷணம், ஆஹரணம், வியதனம், விஸ்ராவணம், ஸீவனம், ஸந்தானம், பீடனம், சோணிதாஸ்தாபனம், நிர்வாபணம், உத்காரிகா, கஷாயம், வர்த்தி, கல்கம், ஸர்ப்பி, தைலம், ரஸ கிரியா, அவசூர்ணனம், விரணதூபனம், உத்ஸாதனம், அவஸாதனம், மிருது கர்மா, தாருண கர்மா, க்ஷாரகர்மா,

---

1. அபதர்ப்பணம் - பட்டினி கிடக்கச் செய்தல்.
2. ஆலேபம் - மேல்பூச்சு மருந்து பூசுதல்.

அக்னிகர்மா, கிருஷ்ணகர்மா, பாண்டுகர்மா, பிரதிஸாரணம், ரோமஸஞ்ஜனனம், லோமாபஹரணம், வஸ்திகர்மா, உத்தரவஸ்தி கர்மா, பந்தம், பத்ரதானம், கிருமிக்னம், பிரும்ஹனம், விஷக்னம், சிரோவிரேசனம், நசியம், கபலதாரணம், தூமம், மதுஸர்ப்பி, யந்திரம், ஆஹாரம், ரக்ஷாவிதானம் என்பனவாம். 8

இவற்றில் கஷாயம், வத்தி, விழுது, ஸர்ப்பி, தைலம், ரஸகிரியை, அவசூர்ணனம் ஆகியவை தூய்மைப்படுத்துவனவும், ஆற்றுவனவுமாகும். இந்த உபசாரங்களில் எட்டு அறுவைச் சிகிச்சையைச் சார்ந்தவை. சோணிதாஸ்தாபனம், க்ஷாரம், நெருப்பு, யந்திரம், ஆஹாரம், ரக்ஷாவிதானம், பந்தவிதானம் ஆகியவை முன்பு கூறப்பட்டுள்ளன.

எண்ணெய் மருந்து, உடல் வியர்க்கச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், வஸ்தி, உத்தரவஸ்தி, சிரோவிரேசனம், நசியம், தூமம், கபலதாரணம் முதலியவை வேறொரு இடத்தில் கூறப்படும். இவை தவிர மற்ற முறைகள் இங்கு விளக்கப்படும். 9

### 7. வீக்கத்திற்குச் சிகிச்சை

முன்பு வீக்கம் ஆறு வகை எனக் கூறப்பட்டது. அபதர்ப்பணம் முதல் விரேசனம் வரை பதினோரு உபசாரங்கள் அவற்றிற்கு ஏற்றவை. சிறப்பாக வீக்கத்தைத் தணிக்கப் பயன்படுத்தப்படுபவை, மற்றவை விரணங்களை ஆற்றப் பயன்படுபவையாகும். 10

### 8. அபதர்ப்பண முறை

எல்லா வீக்கங்களிலும் அபதர்ப்பணம் முதலில் செய்யத் தக்கது, சிறப்பானது. மனித உடலில் தோஷங்களின் சீற்றத்தைக் கண்டு அதைத் தணிப்பதற்காக தோஷத்தினுடைய வலிமை, மற்றும் நோயாளியின் வலிமையையும் ஆராய்ந்து அபதர்ப்பணம் என்னும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 11-12

### 9. அபதர்ப்பண முறைக்குத் தகாதவர்கள்

ஊர்த்வவாதம், நாவறட்சி, மிக்கபசி, வாய் உலர்ந்துபோதல், சோர்வினால் துன்புறுதல் எனுமிவற்றை கொண்டவர்களுக்கும், கருவுற்றவர், சிறுவர், முதியவர், உடல் வலிமை குறைந்துள்ளவர், மிக்க அச்சம் கொள்பவர் ஆகியவர்களுக்கும் அபதர்ப்பண முறையைப் பயன்படுத்தக்கூடாது. 13

## 10. ஆலேப முறை

வீக்கம் தோன்றியதும் அதன் மீது மேல்பூச்சு மருந்துகளைப் (ஆலேபமுறை) பூசச் செய்ய வேண்டும். விரணத்தின் மேலும் சீற்றமுற்ற தோஷத்தை உணர்ந்து அதற்கேற்ற மேல்பூச்சு மருந்தைப் பூசச் செய்ய வேண்டும். 14

எரிந்து கொண்டிருக்கும் வீட்டின் மேல் குளிர்ந்த நீரை ஊற்றுவது போல எரிச்சலும், துன்பமும் மிகுந்துள்ள வீக்கத்தின் மேல் லேபம் (மருந்தை) பூசுவதால் துன்பம் தணியும். துன்பத்தை நீக்கி நோயாளிக்கு சுகத்தை விளைவிக்கவும், வீக்கத்தைத் தணிக்கவும், விரணத்தை ஆற்றவும் இந்த லேபம் பயன்படுகிறது. 15-16

வாதத்தால் தோன்றிய வீக்கத்திற்கு துன்பத்தைத் தணிக்க நெய், எண்ணெய், கஞ்சி, புலால்சாறு [1]பத்ரதாரு முதலிய வாதத்தைப் போக்கும் பொருள்களாலான கஷாயம் முதலிய வற்றைச் சூடாக்கி இளஞ்சூட்டில் வீக்கத்தின் மீது ஊற்ற வேண்டும். பித்தரத்தம், அடிபடுதல், நஞ்சு தீண்டுதல் ஆகியவற் றாலான வீக்கத்திற்குப் பால், நெய், தேன், சர்க்கரைசர்பத், கருப்பஞ்சாறு, [2]காகோலி என்பவற்றாலான கஷாயம் மற்றும் ஆல் முதலியவற்றின் பால் ஆகியவற்றாலான குளிர்ந்த கஷாயத்தை ஊற்ற வேண்டும்.

கபத்தாலான வீக்கத்தில் எண்ணெய், சிறுநீர், க்ஷாரோதகம், சுரை என்னும் மது, சுக்தம் மற்றும் கபத்தைப் போக்கும் பொருள் களாலான சூடுள்ள கஷாயம் ஆகியவற்றை ஊற்ற வேண்டும்.

நீர் ஊற்றுவதால் நெருப்பு அணைவது போல் தோஷங்களால் தோன்றிய எரிச்சல் தணியும். 17-18

## 11. அப்யங்க முறை

தோஷங்களுக்கு ஏற்றபடி எண்ணெய் மருந்து தேய்த்தல் என்னும் முறையைப் பயன்படுத்துவதால் தோஷம் தணிவதுடன், மென்மையும் தோன்றும். உடல் வியர்க்கச் செய்தல், விம்லாபனம் முதலிய உபசாரங்களுக்கு முன்னதாகவும், இரத் தத்தை வெளியேற்றுதல் முதலிய உபசாரங்களுக்கு அச்செயல் களைப் பயன்படுத்திய பிறகும், அப்யங்க முறை பின்பற்றப்பட வேண்டும். 19-20

1. பத்ரதாரு - தேவதாரு எனும் நெடுமரம் (அசோக மரம்).
2. காகோலி - நறுமணமுள்ள பால் கசியக்கூடிய கிழங்கு மூலிகை.

### 12. உடல் வியர்க்கச் செய்தல்

வேதனையுடன் கூடி கெட்டியாகி, வாயுவால் வறண்டிருக்கும் வீக்கம் அல்லது இத்தகைய விரணத்தில் உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பின்பற்ற வேண்டும். 21

### 13. [1]விம்லாபன முறை

நிலையாக இருந்து வேதனையுடன் கூடிய (கபம் மிகுந்துள்ள) வீக்கத்தில் விம்லாபனம் என்னும் முறையைப் பின்பற்ற வேண்டும். எண்ணெய்க் குளியல் செய்வித்து உடல் வியர்க்கச் செய்து மூங்கிற்குழாய் அல்லது உள்ளங்கை அல்லது கட்டை விரலால் மெல்ல தேய்த்து விட வேண்டும். 22

### 14. [2] உபநாஹ முறை

பக்குவம் பெறாத அல்லது அரைகுறையாகப் பக்குவம் பெற்ற நிலையில் விரணத்தின் மேல் மருந்தைப் பூசிக்கட்டுதல் (உபநாஹம்) என்னும் முறையைப் பின்பற்ற வேண்டும். இதனால் பக்குவம் பெறாத வீக்கம் அடங்கிப் போகும். அரைகுறையாகப் பக்குவம் பெற்றது முழுதும் பக்குவம் பெறும். 23

### 15. உபநாஹத்திற்கு பயன்படும் பொருள்கள்

பேதியாகச் செய்தல் வரை கூறப்பட்டுள்ள முறைகளைக் கையாண்ட பிறகும் தீராத வீக்கத்திற்குக் கூறப்பட்ட சணல் விதை முதலிய பொருள்களைத் தயிர், மோர், சுரை, கஞ்சி, [3]சுக்தம், எண்ணெய் முதலியவற்றுடன் சேர்த்துக் கொழுக்கட்டை போல பக்குவம் செய்து தகுந்த அளவு உப்பும் சேர்த்து [4]உத்காரிகை என்பதைச் செய்க. இதை இளம் சூடாக்கி வீக்கம் உள்ள உடற்பகுதியில் வைத்துக் கட்டவும். அந்த வீக்கம் பக்குவம் பெற்ற பின் நோயாளிக்கு நல்ல உணவு தர வேண்டும். 24-26

### 16. இரத்தத்தை வெளியேற்றுதல்

வீக்கம் தோன்றிய துவக்கத்தில் அது தணியவும் பக்குவம் பெறுவதைத் தவிர்க்கவும் இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

---

1. விம்லாபனம் - வீக்கத்தில் மெல்ல தேய்த்து விடுதல்.
2. உபநாஹம் - மேல் மருந்தை பூசிக் கட்டுதல் (ஒற்றடம்).
3. சுக்தம் - ஒரு வகை மது. மோர்த் தெளிவு போன்றவற்றை மண்பாண்டத்தில் இட்டு, அதில் வெல்லம், தேன், காடி இவற்றைச் சேர்த்து மூன்று நாட்கள் நெற்குவியலில் புதைத்து வைக்கப்படும் பொருள், சுக்தம் (அ) சுக் எனப்படும்.
4. உத்காரிகை - பிட்டு.

வீக்கத்துடன் கடினமாகி வறண்டு வேதனையுடன் கூடி ஏற்றத் தாழ்வாகியிருக்கும் விரணத்தில், இரத்தத்தை வெளி யேற்ற வேண்டும். முக்கியமாக நஞ்சுடன் கூடிய விரணத்தில் அட்டையைக் கொண்டு, அல்லது கட்டியில் துளையிட்டு இரத்தத்தை வெளியேற்றுவதால் வேதனை குறையும். கட்டியும் பக்குவம் பெறாது. 27-29

**17. எண்ணெய் மருந்து பருகச் செய்தல்**

மிக்க துன்பத்துடன் வறண்டு போன விரணத்துடன் உடல் இளைத்துச் சோர்வுற்றிருக்கும் நோயாளியை எண்ணெய் மருந்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். 30-31

**18. பேதியாகச் செய்தல்**

வாதபித்தத்தால் தோன்றிப் பல நாள் தொடர்ந்திருக்கும் விரணத்தில், விரண சிகிச்சையில் தேர்ச்சி பெற்றவர்கள் பேதியாகச் செய்யும் மருந்தைப் பின்பற்ற வேண்டும் என்பர். 32

**19. அறுக்கத் தகுந்த விரணங்கள்**

கொழுப்பு, கபம் எனுமிவற்றால் தோன்றி, கிரந்தி மாமிசம் ஆகியவை பக்குவம் பெறாவிட்டாலும், அரைகுறையாகப் பக்குவம் பெற்றிருந்தாலும், அவற்றையும் மற்றும் கடினமாகி நிலைபெற்றிருக்கும் கட்டிகளையும் அடியோடு அறுத்து விடுதல் நலம். 33

**20. [1]பேதன முறையைப் பயன்படுத்துதல்**

உட்பகுதியில் சீழ்பிடித்து முகமின்றி உள்ளேயே புரையோடியிருக்கும் விரணங்களில் பிளத்தல் முறையைக் கையாளுதல் நலம். 34

**21. மென்மையான உடல் கொண்டவர்களுக்கு விரண சிகிச்சை**

சிறுவர், வயது முதிர்ந்தவர், அறுவைச் சிகிச்சையைப் பொறுக்க இயலாதவர், உடல் மெலிந்தவர், அச்சம் கொள்பவர் ஆகியவர்களுக்கும், மாதர்களுக்கும் தோன்றிய விரணங்கள், மற்றும் உயிர் நிலைகளில் தோன்றிய விரணங்கள் ஆகியவற்றில், நன்கு முற்றி நிலையாக நின்ற வீக்கத்தில் [2].பீடனப் பொருள்களைக் கொண்டு கட்டி அல்லது வீக்கம் தானாகப் பிளந்து போகும்படி செய்ய வேண்டும். தோஷங்கள்

1. பேதனம் - பிளத்தல்.
2. பீடனம் - அமிழ்த்தி விடுதல்.

விரணங்களின் மேல் முற்றிய பிறகு [1]தாரணப்பொருள்களைக் கொண்டு மேல் பூச்சு பூசுதல் நலம் அல்லது க்ஷாரப்பொருள் களைப் பயன்படுத்த வேண்டும். 35-37

### 22. [2]லேகன முறையைப் பயன்படுத்துதல்

கடினமாகிப் பெருத்தும் மற்றும் வட்ட வடிவம் கொண்டு, அடிக்கடி அடிப்பகுதியில் வெடிப்பு தோற்றுவித்துக் கொண்டிருக்கும் மேலெழும்பிய மாமிசமுள்ள விரணத்தில் லேகன முறையைக் கையாள வேண்டும். முழுவதுமாகக் கீறி எடுக்க வேண்டும். விரணங்களின் அடிப்பகுதி வரை தக்க கருவிகளைக் கொண்டு கீறி எடுக்க வேண்டும். 38-39

### 23. லேகனத்திற்குப் பயன் தரும் பொருள்கள்

நார்பட்டு ஆடை, பருத்தி நூல், பஞ்சு, யவக்ஷாரம், இந்துப்பு ஆகியவை லேகனத்திற்குப் பயன் தரும் பொருள்களாகும். 40

### 24. [3]ஏஷண முறையைப் பயன்படுத்துதல்

நரம்புச்சிலந்தி, சல்யத்துடன் கூடிய விரணம், மேல் நோக்கி உடலுக்குள் பரவிய விரணம் ஆகியவற்றில் முடி, விரல் அல்லது ஏஷண முறைக்குப் பயன்படும் கருவி முதலியவற்றால் மெல்ல விரணத்தின் ஆழத்தை அறிந்து கொள்ள வேண்டும். கண் இமை, ஆஸன வாய்ப்பகுதி, சிறிய முகத்துடன் கூடிய நரம்புச் சிலந்தி, இரத்தம் நிரம்பிய விரணம் முதலியவற்றில் ஏஷண முறையைப் பின்பற்ற வேண்டும். 41-42

### 25. அறுவைச் சிகிச்சை செய்யத் தக்க விரணம்

ஒரு சமயம் வாய் திறந்தும், மற்றொரு சமயம் மூடிக் கொண்டும் இருக்கும் விரணத்தை உடனே உயிரைப் போக்கவல்ல அல்லது உயிர்நிலைகளில் தோன்றியவற்றைத் தவிர்த்து, ஏனைய நிலை யில் உள்ள போது அறுவை முறையைப் பின்பற்ற வேண்டும். 43

### 26. [4]வியதன - விஸ்ராவண முறைகள்

கூர்மையான முனை கொண்ட கருவியால் குத்துதலைப் பயன்படுத்தத்தக்க விரணங்களில் அம்முறையைப் பயன்படுத்தி,

---

1. தாரணம் - கட்டிகளை உடையச் செய்யும் குணம்.
2. லேகன முறை - தோஷங்களைக் கிளப்பி வெளிப்படுத்தும் முறை.
3. ஏஷண முறை - கருவியை உட்செலுத்தி தோஷத்தை ஆராயும் முறை.
4. வியதனம் விஸ்ராவணம் - கருவியால் விரணத்தை குத்தி வெளிப்படுத்துதல்.

அளவு அறிந்து இரண்டு அங்குலம் வரை உட்செலுத்தி தோஷத்தை வெளிவரச் செய்ய வேண்டும். 44

### 27. [1]ஸீவன முறையைப் பயன்படுத்துதல்

பக்குமடைவதால் தோன்றி துன்பங்களில்லாத வாய் நன்கு திறந்த மாமிசப்பகுதியில் உள்ள விரணங்களில் ஸீவன முறையைப் பயன்படுத்த வேண்டும். 45

### 28. பீடனப் பொருள்களைப் பயன்படுத்துதல்

சீழ் நிரம்பிச் சிறிய முகம் கொண்டு உயிர் நிலைகளில் தோன்றிய விரணங்களில் பீடனத்திற்கு (அமிழ்த்தி விடுதல்) உரிய பொருள்களாலான மேல் பூச்சு மருந்தை விரணங்களைச் சுற்றிலும் பூசி அப்பூச்சு உலர்ந்து போகும்படிச் செய்ய வேண்டும். முகத்தில் இலேபம் (மருந்து) பூசக்கூடாது. அவ்வாறு பூசினால் தோஷங்கள் வெளியேறாமல் உள்ளேயே தங்கிவிடும். 46

### 29. இரத்தம் வெளியேறாமல் தடுத்தல்

நரம்புகளைத் துண்டித்தல் முதலான முறைகளால் இரத்தம் மிகுதியாக வெளிவந்த பின் முறையாக இரத்தத்தை மேலும் வெளிவராமல் தடுக்க வேண்டும். 47

### 30. [2]நிர்வாபண முறையைப் பயன்படுத்துதல்

பித்தம் சீற்றமடைந்து எரிச்சல் பக்குவம் பெறுதல் காய்ச்சல் தோன்றுதல் அல்லது இரத்தத்தால் சூழப்பட்டிருத்தல் எனும் நிலைகளில் உள்ள விரணங்களில் நிர்வாபண முறையைப் பயன்படுத்த வேண்டும். இம்முறையில் அறுகம்புல் முதலிய வற்றைப் பால் விட்டு அரைத்து நெய் சேர்த்து விரணத்தின் மேல் மெல்லிய பூச்சாகத் தடவ வேண்டும். மிக்க குளிர்ச்சி தரும் பொருள்களைக் கொண்டு பரிஷேக முறையைப் பயன்படுத்த வேண்டும். 48-50

### 31. வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்துதல்

மாமிசம் குறைந்துள்ள விரணம் மெல்லிய பெருக்குடன் கூடிய விரணம் பக்குவமடையாததும் கடினத்தன்மை கொண்டதும் வறண்டு மிக்க வலியுடன் கூடியதும், நடுக்கமுற்றதும் நிலையாக இருந்து மிக்க வேதனை தரக்கூடியதுமான விரணங்கள்

---

1. ஸீவனமுறை - மேல் தோலைச் சேர்த்து தையல் போடுதல்.
2. நிர்வாபணம் - மருந்து முதலியவற்றால் துன்பத்தைத் தணித்தல் நிர்வாபணமாகும்.

*ஆகியவற்றில் பத்ரதாரு முதலிய வாதத்தைப் போக்கக்கூடிய ஸௌவீரகம் துஷோதகம் முதலிய அமில வர்கத்தைச் சேர்ந்தவற்றால் அல்லது காகோலி முதலிய கணப்பொருள்கள் ஆகியவற்றால் நல்லெண்ணெய் ஆமணக்கெண்ணெய் கடுகெண்ணெய் ஆகியவற்றில் ஒன்றால் கொழுக்கட்டை போல் செய்து அதைக்கொண்டு இளஞ்சூடுள்ளபோது விரணங்களின் மேல் வைத்துக் கட்டி வியர்க்கச் செய்ய வேண்டும்.* 51-53

## 32. [1]சோதன கஷாய முறையைப் பயன்படுத்துதல்

*கெட்ட நாற்றமுள்ளதும் சேறுபோலச் சொதசொதப்பு கொண்டதுமான விரணத்தை முன் கூறிய சங்கு முதலான சோதனப் பொருள்களைக் கொண்டு கஷாயம் செய்து அம்முறையால் கழுவித் தூய்மைப்படுத்தும் முறையை கையாள வேண்டும்.* 54-55

## 33. சோதனத்துக்கு நெய் மருந்து

*பித்தத்தினால் கெடுக்கப்பட்டு ஆழமாக எரிச்சலுடன் பக்குவமடைந்துள்ள விரணங்களை அன்னபேதி அமுக்கராங்கிழங்கு முதலிய பொருள்களில் பருத்திக்காயைச் சேர்த்து அதைக் கொண்டு நெய் மருந்து தயார் செய்து அதைக்கொண்டு தூய்மைப்படுத்த வேண்டும்.* 56

## 34. சோதன முறைக்கு எண்ணெய்

*மேல் எழும்பிய மாமிசத்துடன் எண்ணெய்ப் பசையற்றுக் குறைந்த அளவான நீர்ப் பெருக்குள்ள விரணங்களுக்கு கடுகெண்ணெய், நல்லெண்ணெய்களுடன், மிச்ரகாத்யாயத்தில் கூறப்பட்டுள்ள மயூரம் முதலிய சோதனப் பொருள்களுடனும் எண்ணெய் தயார் செய்து பயன்படுத்த வேண்டும்.* 57

## 35. சோதனத்திற்கு ரஸ முறை

*எண்ணெய் மருந்தால் தூய்மையடையாத நிலையான மாமிசத்துடன் கூடிய விரணத்திற்குச் சோதன முறைக்கு உரிய மருந்துகளால் தயார் செய்த ரஸத்தைப் பயன்படுத்த வேண்டும். )தற்கு மிச்ரகாத்யாயத்தில் தூய்மைப்படுத்த கூறப்பட்ட [2]சாலஸாரம் முதலான பொருள்களைக் கொண்டு முறைப்படி*

---

1. *சோதன முறை - தூய்மைப்படுத்தும் முறை.*

2. *சாலஸார கூட்டுப்பொருள்கள் - சாலமரத்துப் பிசின், அஜகர்ணம், கருங்காலி, எட்டி, பாக்கு, பூர்ஜ பத்ரம், ஆடு தீண்டாப் பாளை, திணிசம், வெண் சந்தனம், சிவப்புச் சந்தனம், சிம்சுபா மரம், வாகை, மருதம், தவம், அஸன, பானை, சாகவிருட்சம், நக்தமாலம், மணிபுங்கன், அச்வகர்ணம் மஞ்சள் சந்தனம் ஆகியவை கூட்டுப்பொருள்களாகும்.*

கஷாயம் செய்து அந்தக் கஷாயத்தை மீண்டும் நெருப்பில் இட்டுக் காய்ச்சுக. பக்குவம் பெறும்போது அதில் அன்னபேதி மனோசிலை அரிதாரம் ஆகியவற்றைச் (கஷாயத்திற்கு நான்கில் ஒரு பங்கு) சேர்க்க வேண்டும். காய்ச்சும் போது கரண்டியில் ஒட்டக் கூடிய பக்குவத்தில் இறக்கி அதில் துரிஞ்சி பழச்சாறு, மற்றும் சிறிதளவு தேன் கலந்து விரணத்தின் மேல் பூச வேண்டும். இந்த பூச்சை மூன்று நாட்கள் வைத்திருக்க வேண்டும். 58-61

### 36. சோதன முறைக்குச் சூரணம்

கொழுப்புடன் கூடி ஆழமில்லாமல் (மேல் நோக்கி) கெட்ட நாற்றத்துடன் கூடிய விரணத்தில் அன்னபேதி முதலிய சோதனத்துக்குப் பயன்படும் மருந்துப் பொருள்களாலான சூரணத்தாலோ அமுக்கராங்கிழங்கு முதலியவற்றினாலான சோதன வத்திக்கு உரிய பொருள்களாலோ சிகிச்சை செய்ய வேண்டும்.

### 37. விர ஆற்றும் முறை

சுத்த விரணத்தின் இலக்கணங்களுடன் கூடிய விரணத்திற்கு அதை ஆற்றும் கஷாய முறையைப் பயன்படுத்துக. இதற்கு ஆலம் முதலாகக் கூறப்பட்ட பொருள்களைக் கொண்டு கஷாயம் தயார் செய்க. 62-63

### 38. சுத்த விரணத்திற்கு வத்தி

துன்பம் இன்றித் தூயதாகிக் கம்பீரமாக இருக்கும் விரணத்திற்கு அமுக்கராங் கிழங்கு, காகோலி முதலிய தூய்மைப் படுத்தும் மருந்துப் பொருள்களாலான வத்தியைப் பயன்படுத்தி விரணத்தை ஆறச் செய்க. 64

### 39. விரணத்திற்கு விழுது

விரணத்திலிருந்து மாமிசப்பகுதி சிதைந்து விழும் போதும், மாமிசம் நிலையாக இருந்தும் விரணத்தில் மாமிசம் சேர்ந்து அதை நிரப்பாதபோதும் எள்ளை விழுதாகச் செய்து தேன் கலந்து பயன்படுத்த வேண்டும். இந்த விழுது எண்ணெய்ப் பசையும், உஷ்ணமும், இனிப்புச் சுவையும் கொண்டிருப்பதால் வாதத்தைப் போக்கும். துவர்ப்பு, இனிப்பு, கசப்புச் சுவைகள் கொண்டிருப்பதால் பித்தத்தைப் போக்கும். மற்றும் சூடும், கசப்பும், துவர்ப்பும் கொண்டிருப்பதால் கபத்தையும் போக்கும். தூய்மைப்படுத்தும் பொருள்கள் மற்றும் ஆற்றும் பொருள்கள் ஆகியவற்றுடன் கூடிய எள்ளின் விழுது விரணங்களைத்

தூய்மைப்படுத்துவதுடன் அவற்றை ஆற்றவும் செய்யும். வேப்பிலை மற்றும் தேன் ஆகியவற்றுடன் கலந்துள்ள எள்ளின் விழுதும் தூய்மைப்படுத்தும். வேப்பிலை, தேன் மற்றும் நெய் ஆகியவற்றுடன் கூடிய எள்ளின் விழுதும் விரணத்தை ஆற்றும். சில ஆசிரியர்கள் எள்ளின் விழுதைப்போல யவதானியத்தின் விழுதும் விரணத்தை ஆற்றக்கூடியதாகக் கொள்கின்றனர். இது பக்குவம் பெறாத விரணத்தை ஆற்றி அரை குறையாகப் பக்குவம் அடைந்த விரணத்தை நன்கு பக்குவம் பெறச் செய்து நன்கு பக்குவம் பெற்ற விரணத்தை உடையச் செய்து உடைந்த விரணத்தைத் தூய்மைப்படுத்தி, ஆற்றவும் செய்யும். 65-69

## 40. பித்தரத்த விஷங்களாலான விரணத்தை ஆற்றும் முறை

பித்தரத்தம் விஷம் முதலியவற்றாலும் புறத்தாக்குதலாலும் தோன்றியவற்றுக்கும், கம்பீர விரணங்களுக்கும், மிச்ரகாத் யாயத்தில் கூறப்பட்ட விரணங்களை ஆற்றும் ஓரிலை முதலிய மூலிகைகளாலான பால் நெய் கலந்த மருந்தைப் பயன்படுத்தி ஆற்ற வேண்டும். 70

## 41. கபவாத விரணத்தை ஆற்றும் மருந்து

கபவாதங்களால் சூழப்பட்டுள்ள விரணத்தை காலத்திற்கு ஏற்றபடி விரணங்களை ஆற்றும் அகில் முதலிய பொருள்களைக் கொண்டு எண்ணெய் தயார் செய்து பயன்படுத்தி ஆற்ற வேண்டும். 71

## 42. மீண்டும் மீண்டும் சீற்றமுறும் விரணங்களுக்குச் சிகிச்சை

கட்டுப்போட இயலாத விரணங்கள், அசைந்து கொண்டிருக்கும் விரணங்கள், தூயதாகியும் மீண்டும் மீண்டும் தோஷங்களால் சீற்றமுறும் விரணங்கள் ஆகியவற்றை ஆற்றுவதற்கு மஞ்சள் மர மஞ்சள் முதலிய பொருள்களாலான ரஸ முறையைப் பயன்படுத்துக. 72

## 43. விரணங்களுக்குச் சூரணம்

மேலெழும்பியோ பள்ளமாகவோ இல்லாமல் சமமாக இருத்தல், கடினமான மாமிசம் கொண்டிருத்தல், தோல் பகுதியில் இருத்தல் எனும் இத்தகைய விரணங்களுக்குச் சூத்திரஸ்தானத்தில் கூறப்பட்டுள்ளபடி மருந்துப் பொருள்களாலான சூரணத்தைப் பயன்படுத்த வேண்டும். 73

## 44. [1]சோதன ரோபன முறைகளின் விளக்கம்

தூய்மைப்படுத்தும் முறை ஆற்றும் முறை (சோதன ரோபன முறைகள்) ஆகியவை உடலில் தோன்றியவை, புறத்தாக்குதலால் தோன்றியவை எனும் இரு வகை விரணங்களுக்கும் உரியவை. ஏனெனில் விரண வகைகள் அனைத்தும் தோஷங்களுடன் கூடியவையே ஆகும். 74

இந்த தூய்மைப்படுத்தும் முறை ஆற்றும் முறை ஆகியவை சாஸ்திரங்களில் கூறப்பட்டு கண்கூடாகப் பலன் தருவதைக் கண்டிருப்பதால், மந்திரத்தைப் போலப் பயன்படுத்தத் தக்கவையேயன்றி தர்க்க விசாரம் செய்யத்தக்கவையல்ல. (அதாவது இவற்றின் தன்மை, பயன் முதலியவற்றைப் பற்றி வாதம் புரிதல் கூடாதென்பதாம்). 75

## 45. மருத்துவர் தன் அறிவைக் கொண்டு சிகிச்சைகளைச் செய்தல்

கஷாயம், வத்தி, விழுது, நெய், எண்ணெய், ரஸம் எனும் மருந்துகள், சூரணங்கள் என இவ்வேழு வகைகளில் மருத்துவர் தன் அறிவாற்றலால் தகுந்தவைகளைத் தேர்ந்து எடுத்துக் கொண்டு பயன்படுத்த வேண்டும். 76

## 46. தோஷங்களுக்கு ஏற்ற பொருள்கள்

[2] பெரும்பஞ்சமூலம், [3] இலகுபஞ்சமூலம், பத்ரதாரு முதலிய கூட்டுப்பொருள்கள் ஆகிய வாதத்தைப் போக்கும் பொருள் களைக் கொண்டு வாதத்தால் தோன்றிய விரணத்திற்குக் கஷாயம், வத்தி முதலியவற்றைச் செய்ய வேண்டும்.

1. சோதன ரோபன முறைகள் - தூய்மைப்படுத்துதல், விரணத்தை ஆற்றுதல் எனும் முறைகள்.

2. பெரும் பஞ்சமூலம் - வில்வம், பெருங்குமிழ், பெருவாகை, பாதிரி, சிறுவழுதுணை ஆகிய இவ்வைந்தின் சேர்க்கை பெரும் பஞ்சமூலமாகும்.

3. இலகு பஞ்சமூலம் - கண்டங்கத்தரி, கத்தரி, சிறுமல்லிகை, பெரு மல்லிகை, நெருஞ்சில் ஆகிய இவ்வைந்தும் இலகு பஞ்ச மூலமாகும்.

[1]நியக்ரோதாதி, [2]காகோல்யாதி கூட்டுப் பொருள்களைக் கொண்டு பித்தத்தால் தோன்றிய விரணத்திற்குக் கஷாயம் முதலிய ஏழு வகை மருந்துகளைச் செய்ய வேண்டும். [3]ஆரக்வதாதி, [4]முஷ்ககாதி, [5]ஸுரஸாதி கூட்டுப் பொருள்களை கபத்தால் தோன்றிய விரணங்களுக்கு கஷாயம், வத்தி முதலிய ஏழு வகை மருந்துகளைச் செய்து பயன்படுத்த வேண்டும். இரண்டு அல்லது மூன்று தோஷங்கள் சேர்ந்து தோன்றிய விரணமானால், அந்தந்த தோஷங்களுக்குரிய பொருள்களைக் கலந்து பயன்படுத்துக. 77-80

**47. விரணத்திற்கு புகை போடுதல்**

வாதத்தால் தோன்றிய கடுமையான வலியைத் தோற்று வித்துக் கொண்டு கெட்ட நீரைப் பெருக்கிக் கொண்டிருக்கும் விரணத்தில் நெய், யவஅரிசி மற்றும் புகை போடத் தக்க பொருள்கள் ஆகியவற்றைக் கொண்டு புகை போட வேண்டும். 81

---

1. **நியக்ரோதாதி** - ஆல், அரசு, அத்தி, வெள்ளலொத்தி, உதியன், சிறுநாவல், பெருநாவல், மருதை, நீர்வஞ்சி, வெண்கருங்காலி, பூவரசு, மா, புளி, வஞ்சி, முரளஞ்செடி, முருக்கன், நந்த்யாவர்த்தம், இலந்தை, கடம்பு, தும்பை, அதிமதுரம், இலுப்பை ஆகியவை நியக்ரோதாதி கூட்டுப்பொருள்களாகும்.

2. **காகோல்யாதி** - காகோலி (ஒரு வகை கிழங்குச் செடி) க்ஷீரகாகோலி, ஜீவகம், ரிஷபகம், மேதா, மஹாமேதா, பயறு, உளுந்து, கீரைப்பாலை, அதிமதுரம் என்பனவற்றின் சேர்க்கை.

3. **ஆரக்வதாதி கணம்** - கொன்றை, வெப்பாலரிசி, பாதிரி, நாய்வேளை, வேம்பு, சீந்தில், பெருங்குரும்பை, கருமுருங்கை, வட்டத்திருப்பி, நிலவேம்பு, மருதோன்றி, பேய்ப்புடல், புங்கு, மணிப்புங்கு, ஏழிலைப்பாலை, சித்திரமூலம், பாகல், கருங்குறிஞ்சி, கமுகு என்பனவற்றின் சேர்க்கை.

4. **முஷ்ககாதிகணம்** - காட்டுப்பருத்தி, கள்ளி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், புலியுகிர் எனும் பூண்டு, முருக்கன், கருங்காலி, சிம்சுபா என்பனவற்றின் சேர்க்கை.

5. **ஸுரஸாதி கூட்டுப் பொருள்கள்** - துளசி, கருந்துளசி, கிடாரை, படுகிரணை, வாயுவிடங்கம், மருக்காரை, மருவகம், எலிச்செவி, தேக்கு, பொன்னாவிடை, தூதுவளை, தும்புருப் பத்திரி, சிறுதேக்கு, புங்கு, மணத்தக்காளி, ஒரு வகைச் சுரை, எட்டி, புல், ஜடாமாம்சி என்பனவற்றின் சேர்க்கை.

## 48. ஆலேப முறையும், புலால் உணவும்

விரணம் உலர்ந்த பின் அல்லது சிறிதளவே மாமிசம் கொண்டுள்ள போது அல்லது ஆழமாகப் பள்ளம் விழுந்துள்ள போது அதன் மேல் நாயுருவி, அமுக்கராங்கிழங்கு முதலிய [1]உத்ஸாதன பொருள்களுடன், நெய் மருந்து தயார் செய்து பூச வேண்டும். புலால் உணவுப் பழக்கமுள்ளவர்களுக்கு முறையாகத் தக்க உயிரினத்தின் புலாலைப் பக்குவம் செய்து உண்ணச் செய்ய வேண்டும். மனத்தெளிவு பெற்ற பின் நோயாளிக்கு புலால் உணவு உட்கொள்வதால் மாமிச வளர்ச்சி உண்டாகும். 82

## 49. [2]அவஸாதனப் பொருள்களைப் பயன்படுத்துதல்

விரணத்தில் மென்மையான மாமிசம் மேல் எழும்பி இருந்தால் அதன் மேல் அப்பகுதியை அமுங்கச் செய்யக்கூடிய முறையில் அன்னபேதி முதலிய மருந்துப் பொருள்களாலான தூளைத் தேன் கலந்து தடவ வேண்டும். 83

## 50. மென்மைபடுத்தும் சிகிச்சை முறை

கடினமான அல்லது சிறிதளவே மாமிசம் கொண்டுள்ள வாதத்தின் சீற்றத்தால் தோற்றுவிக்கப்பட்ட விரணங்களின் மேல் இனிப்புச் சுவையும், எண்ணெய்ப்பசையும், உவர்ப்பும், இளஞ்சூடும் உள்ள மருந்தைக் கொண்டு மென்மைப்படுத்தும் முறையைக் கையாள வேண்டும். ரத்தத்துடன் வாதம் சேர்ந்து தோற்றுவித்த விரணமானால், இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். கபமும் வாதமும் சேர்ந்துள்ள விரணமானால் பத்ரதாரு முதலான வாதத்தைப் போக்கும் பொருள்களுடன் எண்ணெய் மருந்து செய்து அதை விரணத்தின் மேல் ஊற்றிக்கொண்டிருக்க வேண்டும். இறுகக்கட்டும் முறைகளும் விரணங்களை மென்மைப்படுத்தும். விரைவில் ஆற்றும். 84-85

## 51. விரணங்களைக் கெட்டிப்படுத்துதல்

மென்மையான மாமிசம் கொண்ட விரணத்தைக் கெட்டிப் படுத்துதல் நலம். அதற்காக தவம், ஞாழல், அதோகு, கடுக ரோகிணி ஆகியவற்றின் பட்டைகள், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், கொன்றைமலர், பாச்சோத்திப் பிசின் ஆகிய வற்றைச் சம அளவில் எடுத்துக் கொண்டு மைய தூளாக்கி விரணத்தின் மேல் தூவவேண்டும். 86-87

---

1. உத்ஸாதனம் - மேல் எழும்பச் செய்தல்.

2. அவஸாதனம் - அமுங்கச் செய்தல்.

## 52.[1]க்ஷார முறையைப் பயன்படுத்துதல்

மாமிசம் மேல் எழும்பியிருந்து கடினமாகி அரிப்புடன் கூடியதான நாள் கடந்த விரணத்தில் க்ஷார முறையைப் பின்பற்றித் தூய்மைப்படுத்த வேண்டும். 88

## 53. [2]அக்னிகர்மாவைப் பயன்படுத்துதல்

சிறுநீர்ப்பையில் கல் தோன்றுதலாகிய அச்மரீ என்னும் நோயால் தோன்றி சிறுநீரைப் பெருகச் செய்யும் விரணத்தில் இணைப்புகள் விட்டுப் போன நிலையில் அக்னிகர்மா (நெருப்பால் சுடுதல்) எனும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 89

## 54. விரணங்கள் ஆறியபின் வெள்ளை வடுவை மாறச் செய்தல்

விரணங்கள் நன்றாக ஆறிய பிறகு அந்த இடத்தில் வெள்ளை நிறத்தில் வடு தோன்றும். அதைச் சீராக்கித் தோல் நிறத்தைத் தோற்றுவிக்கும் மற்றும் கருமை நிறத்தைத் தோற்றுவிக்கும் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். இதற்குப் பசுவின் சிறுநீரில் சேராங்கொட்டையைப் பாவனை செய்து அதை ஏழு நாட்கள் பசும்பாலில் வைத்திருக்க வேண்டும். பிறகு அதை இரு துண்டுகளாக்கி ஒரு இருப்புச் சட்டியில் இட்டு நிலத்தில் புதைத்து வேறு ஒரு இருப்புச் சட்டியால் மூடி வாய்ப் பகுதியைத் துணி சுற்றிச் சீலை மண் பூசிய பிறகு மேல் மூடியில் சுற்றிலும் வறட்டியை அடுக்கி தீ வைத்து நன்றாக எரியச் செய்ய வேண்டும். இதனால் உள்ளே இருக்கும் கொட்டையிலிருந்து எண்ணெய் வெளிவந்து விடும். அந்த எண்ணெயில் கிராமங்களில் அல்லது நீர்ப்பகுதியில் வாழும் பசுக்களின் குளம்பைச் சுட்டெரித்த சாம்பலைக் கலக்க வேண்டும். இந்த எண்ணெயை வெள்ளை நிறம் கொண்ட விரணப்பகுதி மேல் பூச வேண்டும். சேராங்கொட்டை முறையைப் போல ஸாலஸாராதி கணத்தில் கூறப்பட்ட பொருள்களிலிருந்தும் எண்ணெய் எடுக்கலாம். அந்த எண்ணெயிலும் கிராமங்களில் வாழும் அல்லது நீர்ப்பகுதியான இடங்களில் வாழும் பசுக்களின் குளம்புகளைச் சுட்டெரித்த சாம்பலைக் கலக்க வேண்டும். 90-93

1. க்ஷாரம் - மருந்துப் பொருளைச் சாம்பலாக்கி நீரில் கலந்து அடியில் தங்கிய வண்டலைக் கொள்க. இது க்ஷாரம் எனப்படும்.

2. அக்னி கர்மா - நெருப்பால் சுடுதல்.

## 55. கருநிறம் கொண்ட விரணத்தை வெண்மைபடுத்துதல்

விரணம் சீராகக் குணமடையாவிட்டால் கருநிறம் கொண்டதாகி விடும். அப்பொழுது அதை வெண்ணிறமுள்ளதாக மாற்ற வேண்டும். அதற்குக் கடுக்காய்த் தோலை ஏழு நாட்கள் ஆட்டுப்பாலில் வைத்திருக்கவும். பிறகு அந்தப் பாலுடன் சேர்த்து அரைத்து விரணத்தின் மேல் பூசவும். இது விரணப் பகுதியைத் தோலின் இயற்கை நிறமுள்ளதாகச் செய்யும். மனிதனின் புதிய மண்டை ஓட்டின் தூளுடன் (அல்லது உடைந்த மண்சட்டிச் சில்லின் தூளுடன்) பிரப்பம்வேர், அதிமதுரம், அன்னபேதி ஆகியவற்றின் தூளைச் சேர்த்துத் தேன் கலந்து விரணப்பகுதி மேல் பூசவும். விளாம்பழத்துக்குள் இருக்கும் கதுப்பை நீக்கி அந்த ஓட்டில் ஆட்டின் சிறுநீரை நிரப்பவும். இந்தச் சிறுநீரில் அன்னபேதி, கோரோசனம், மயில்துத்தம், அரிதாரம், மனோசிலை, மூங்கில் பட்டைத்தூள், ரஸாஞ்சனம் முதலியவற்றைக் கலக்கவும். பிறகு அந்த விளாம்பழ ஓட்டை மருத மரத்தின் வேரின் கீழ் ஒரு மாத காலம் நிலத்தில் பதித்து வைக்கவும். பிறகு அதை எடுத்து விரணத்தின் மேல் பூசவும். 94-98

## 56. பிரதிஸாரண முறை

கோழிமுட்டை ஓடு, சேராங்கொட்டை, அதிமதுரம், நத்தைக் கூடு அல்லது முத்துச் சிப்பி மற்றும் ஸ்படிகம் போன்ற மணிகள் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு பசுவின் சிறுநீருடன் அரைத்து மாத்திரைகளாகச் செய்க. இம்மாத்திரைகளை விரணங்களின் மேல் தேய்த்துக் கொண்டிருக்க வேண்டும். இம்முறை பிரதிஸாரணம் எனப்படும். 99-100

## 57. விரணம் ஆறிய பகுதியில் உரோமங்கள் வளரச் செய்தல்

யானை தந்தத்தைச் சுட்டுச் சாம்பலாக்கி ரஸாஞ்சனத்துடன் கலந்து (ஆட்டுப்பாலும் சேர்த்து) உள்ளங்கையில் பூசினாலும் அங்கு உரோமங்கள் வளரும். இனி விரணங்கள் ஆறிய பகுதியில் உரோமங்கள் முளைக்கும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. பசுக்களின் குளம்பு, தோல், உரோமம், கொம்பு, எலும்பு ஆகியவற்றை எரித்துச் சாம்பலாக்கிக் கொள்க. முதலில் விரணம் ஆறிய பகுதியில் எண்ணெயைத் தடவி அதன் மேல் முன் செய்து கொண்ட தூளைத் தூவுக. இதனால் அப்பகுதியில் உரோமங்கள் வளரும். அன்னபேதி, புங்கந்தளிர் ஆகியவற்றை விளாம்பழச்சாற்றுடன் அரைத்துப் பூசினாலும் அங்கு உரோமங்கள் தோன்றும். 101-103

### 58. உரோமங்களைப் போக்கும் முறை

விரணங்கள் முழுவதும் ஆறாதபோது அப்பகுதியில் உரோமங்கள் தோன்றினால் அவற்றை நீக்க வேண்டும். அதற்கென அமைந்திருக்கும் சூரகர்தரி என்னும் கத்திரி போன்ற கருவியால் அந்த உரோமங்களை நீக்கிவிட வேண்டும். சங்குத்தூள் (சங்கு பஸ்பம்) இரண்டு பங்கு, அரிதாரம் ஒரு பங்கு எனச் சேர்த்து அதைச் சுக்தம் எனும் காடி நீர்விட்டு அரைக்க வேண்டும். இதை மேல் பூச்சுக்குப் பயன்படுத்தலாம். சேராங் கொட்டையின் எண்ணெயையும், எருக்கம்பாலையும் சேர்த்துப் பூசப் பயன்படுத்தலாம். இம்முறைகள் உரோமங்களை உதிர்த்து விடும். வாழைப்பட்டையின் சாம்பல், அரிதாரம், இந்துப்பு, வன்னி விதை ஆகியவற்றைக் குளிர்ந்த நீர் விட்டு அரைத்துப் பூசலாம். * ஆகார கோதிகை என்னும் ஒரு வகை உடும்பின் வால், வாழை, அரிதாரம், காரை விதையின் எண்ணெய், விதை ஆகியவற்றை எரித்துச் சாம்பலை, எண்ணெய், நீர்விட்டுக் கலந்து இளஞ்சூடு பெறக் காய்ச்சிப் பூசினால் உரோமங்கள் உதிர்ந்து விடும். 104-108

### 59. வஸ்தி முறையைப் பயன்படுத்துதல்

வாதத்தால் கெடுக்கப்பட்ட விரணம் வறண்டு மிக்க வேதனையை விளைவிக்கும் போதும் முக்கியமாகத் தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியில் தோன்றிய போதும் அந்த நோயாளிக்கு ஆஸனவாய் வழியே மருந்து செலுத்தும் வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 109

### 60. உத்தரவஸ்தியைப் பயன்படுத்துதல்

சிறுநீர்த்தடை, சிறுநீர் தோஷம், விந்து தோஷம், சிறுநீர்ப் பையில் தோன்றும் அச்மரீ நோய், ருது ரத்தத்தைச் சார்ந்த தோஷங்கள் ஆகியவற்றில் உத்தரவஸ்தி (சிறுநீர்க்குழாய் வழியே மருந்து செலுத்தும்) முறையைப் பின்பற்ற வேண்டும். 110

### 61. கட்டு போடுதலால் பயன்

விரணங்களைக் கட்டுவதால் அவை தூய்மைப்படும். மென்மை பெறும். வலியின்றி ஆறும். ஆகையால் துணியைக் கொண்டு விரணங்களைக் கட்டுதல் நலம். 111

### 62. விரணங்களை இலை கொண்டு மூடிக் கட்டுதல்

நிலையாக நின்று மாமிசப்பகுதி குறைந்து வறட்சிகொண்டு விரைவில் ஆறாமல் இருக்கும் விரணத்தின் மேல் தோஷத்திற்கும்,

---

*ஆகாரகோதிகை - வீட்டின் சுவரில் திரியும் பல்லி வகை.

காலத்திற்கும் தகுந்தபடி இலையால் அவ்விரணப்பகுதியை மூடிக் கட்டுகட்ட வேண்டும். வாதத்தால் தோன்றும் விரணமானால் ஆமணக்கு, போஜமரம் புங்கன், மஞ்சள் எனுமிவற்றின் இலைகளில் ஒன்றால் மூடிக்கட்ட வேண்டும். இரத்தபித்தத்தால் தோன்றும் விரணமானால் அச்வபலை, குமிழன், ஆல் முதலிய பாலுள்ள மரங்களின் இலை, தாமரை போன்ற நீரிலுள்ள செடிகளின் இலை முதலியவற்றில் ஒன்றைப் பயன்படுத்த வேண்டும். கபத்தால் தோன்றிய விரணமானால் வட்டத்திருப்பி, பெருங் குரும்பை, சீந்தில்கொடி, மணத்தக்காளி, மஞ்சள், சுகநாஸா எனும் செடி ஆகியவற்றின் இலைகளில் ஒன்றைப் பயன்படுத்த வேண்டும். சுரசுரப்பில்லாமலும் கிழிந்து போகாமலும் பழமையாகி வாடிப் போனவையல்லாமலும் பூச்சிகளால் அரிக்கப் படாமலும் இளசாக இருப்பவையுமான இலையைப் பயன் படுத்துக. விரணங்களின் மேல் இலையால் மூடினால் உள்ளே பூசப்பட்டுள்ள மருந்து கட்டிய துணியில் ஒட்டிக் கொண்டு விடாது. அதனால் விரணத்தின் மேல் மருந்தைப் பூசி அதன் மேல் இலையை வைத்துக் கட்டுக் கட்ட வேண்டும். இரத்த பித்தத்தில் குளுமைத் தன்மையைத் தோற்றுவிக்கவும் வாதத்தால் தோன்றும் விரணத்தில் சூடு உண்டாக்கவும் மற்றும் விரணத்தின் மேல் பூசிய எண்ணெய் மருந்து வீணாகாமல் இருக்கவும் இலையைப் பயன்படுத்த வேண்டும் 112-118

## 63. விரணங்களில் கிருமிகள் தோன்றாமல் காத்தல்

ஈக்கள் விரணத்தின் மேல் உட்கார்ந்து கொண்டு கிருமிகளைத் தோற்றுவிக்கும். கிருமிகளால் தின்னப்பட்ட போது விரணத்தில் அச்சுறுத்தும்படி வீக்கம் காணப்படும். மற்றும் பலவகையான துன்பங்கள் தோன்றும். இரத்தப் பெருக்கும் உண்டாகும். அதற்கு *ஸுரஸாதிகணத்தில் கூறப்பட்ட பொருள்களைக் கொண்டு தோஷங் களைத் தணிக்கவும் விரணங்களைக் கழுவவும் பயன்படுத்த வேண்டும். ஏழிலைப்பாலை, புங்கன், எருக்கு, வேம்பு ஆகியவற்றைப் பசுவின் சிறுநீருடன் அரைத்துப் பூச வேண்டும். மாமிசத்துடன் கூடிய நரம்பால் மூடிக் கிருமிகளை நீக்க வேண்டும்.119-122

## 64. உடலைச் செழிக்கச் செய்தல்

வெகு நாட்கள் நோய்வாய்ப்பட்டிருந்ததால் உடல் இளைத்து, விரணத்தால் உடல் உலர்ந்து போன நோயாளிக்குச் சடராக்னியின் வலிமைக்குத் தக்கபடி உடலைச் செழிப்பாக்கும் மருத்துவ முறைகளைப் பின்பற்ற வேண்டும். 123

---

* ஸுரஸாதிகணம் - 77-80 ஸ்லோக குறிப்பில் காண்க.

**65. நஞ்சுள்ள விரணத்திற்குச் சிகிச்சை**

நஞ்சுடன் கூடிய விரணங்களின் இலக்கணம், நஞ்சைப் பரீட்சை செய்யும் முறைகள், அவற்றிற்குரிய சிகிச்சை முதலியவற்றை வேறாகக் கல்ப ஸ்தானத்தில் விளக்குவோம். 124

**66. [1]சிரோவிரேசன முறையைப் பயன்படுத்துதல்**

அரிப்புடன் கூடியதும் வீக்கமுள்ளதும் கழுத்துக்கு மேற்பகுதியில் தோன்றுவதுமான விரணத்திற்கு அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் சிரோவிரேசன முறையைப் பயன்படுத்த வேண்டும். 125

**67. [2]நசிய முறையைப் பயன்படுத்துதல்**

துன்பத்துடன் கூடியதும் வாயுவால் சூழ்ப்பட்டதும் வறண்டதும் தோள்பட்டை எலும்புக்கு மேல் தோன்றியதுமான விரணத்திற்கு மருத்துவர் நசிய முறையைப் பயன்படுத்த வேண்டும். 126

**68. [3] கவளகிரஹ முறையைப் பின்பற்றுதல்**

நாவின் மேலும், பற்களின் மேலும் தோன்றும் அழுக்கை நீக்கவும் தோஷங்களை வெளியேற்றவும் வலியையும் எரிச்சலையும் போக்கவும் வாயினுள் தோன்றும் விரணங்களைத் தூய்மைப் படுத்தவும் ஆற்றவும் சூடுள்ளதும் அல்லது குளிர்ந்ததுமான மருந்துக் கஷாயத்தைக் கொண்டு வாய் கொப்பளிக்கச் செய்ய வேண்டும். 127-128

**69. புகை பிடிக்கச் செய்தல்**

தோள்பட்டை எலும்புகளுக்கு மேலுள்ள உடற்பகுதியில் தோன்றும் விரணங்களை ஆற்றவும் கபவாதத்தால் தோன்றும் விரணத்தில் வீக்கம், கெட்ட நீர்ப்பெருக்கு, துன்பம் ஆகியவை தோன்றியபொழுதும், மருந்துப்பொருளைக் கொண்டு புகை பிடித்தல் என்னும் முறையைப் பின்பற்ற வேண்டும். 129

**70. மேலும் விரணங்களுக்குச் சில முறைகள்**

அப்பொழுதே ஏற்பட்ட அடியில் சூட்டைத் தணிக்கவும், தடுக்கவும், பிளவுபட்ட பகுதியை இணையச் செய்யவும், அகன்ற விரணத்தில் தேனும், நெய்யும் சேகரித்துத் தடவ வேண்டும். 130

---

1. சிரோவிரேசனம் - மூக்கில் மருந்திடுதல்.
2. நசியம் - மூக்கில் மருந்திடுதல்.
3. கவளகிரஹம் - வாய் கொப்பளித்தல்.

ஆழமாகவும், நுட்பமான வாய் கொண்டும், சல்யத்துடன் மிக்க துன்பம் விளைவித்துக் கொண்டும் உள்ள விரணத்தில் சல்யத்தைக் கையால் எடுக்க முடியாதபோது அறுவைக்குரிய கருவியைப் பயன்படுத்த வேண்டும். 131

## 71. விரண நோய் கொண்டவருக்கு உணவு

எல்லா வகை விரணங்களிலும் நோயாளிக்கு அளவில் இலகுவாகவும் (குறைவாகவும்), இலகுத் தன்மையுள்ளதாகவும், எண்ணெய்ப் பசையும், சூடும் கொண்டு சடராக்னியை வளர்க்கக் கூடியதாகவும் உள்ள உணவுப் பொருளை உண்ணக் கொடுக்க வேண்டும். 132

## 72. விரண நோயாளியை காக்கும் முறை

எப்பொழுதும் விரண நோயாளியை கண்ணுக்கு தெரியாமல் இருளில் சுற்றும் நோய் கிருமிகளாகிய அரக்கர்களிடமிருந்து காப்பாற்ற வேண்டும். அதற்காக குக்குலு, கடுகு முதலியவற்றைக் கொண்டு புகை போட வேண்டும். கொல்லாமை, புலனடக்கம் முதலிய அறநெறிகளை நோயாளியை பின்பற்றும்படி செய்ய வேண்டும். 133

## 73. விரண நோய்களைப் பற்றிப் பொது விளக்கம்

விரணங்கள் வாதம், பித்தம், கபம், ரத்தம், ஸந்நிபாதம், திடீர் தாக்குதல் எனும் ஆறின் அடியாகத் தோன்றும். அவை தோல், மாமிசம், நரம்பு, சிரை, இணைப்புகள், எலும்பு, குடல், உயிர்நிலை என்னும் எட்டு நிலைகளைக் கொண்டவையாகும். வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம், ஆகந்துஜம் (திடீரெனப் புறத்தாக்குதலால் தோன்றுதல்) என்னும் இலக்கணங்களை அவை கொண்டிருக்கும். மருத்துவம், நோயாளி, மருந்து, பணிவிடை செய்பவர் இந்நான்கும் தக்க நிலையில் இருந்தால் விரணங் களைச் சிகிச்சையால் வெற்றிகரமாக தீர்க்கமுடியும். 134

நூலில் விளக்கம் பெரிதாக இருந்தாலும், சிறு அளவில் தக்க மூலிகைகளால் தீர்க்கக்கூடிய முறைகளை அவற்றிற்குத் தக்க விரணங்களுக்குப் பயன்படுத்துவது தவறன்று. (அதாவது பெரிய அளவில் மருந்து செய்து கொடுக்க வேண்டுமெனக் கருதக்கூடாது. சிறிய விரணங்களுக்கு எளிய மூலிகைகளைக் கொண்டே சிகிச்சை செய்ய வேண்டும் என்பதாம்.) 135

நூலில் மருந்து முறைகளில் பல மூலிகைகள் கூறப்பட்டி ருந்தாலும் அவற்றில் கூடியவரை கிடைக்கக்கூடிய மூலிகைகளைக்

கொண்டு மருந்து செய்து பயன்படுத்தலாம். (ஏதோ ஒரு மூலிகை கிடைக்காத போது அதை நினைத்து அம்முறையையே விலக்கக்கூடாது என்பதாம்.) 136

மருத்துவர், கூட்டுப் பொருள்களில் ஏதேனும் ஒன்று நோயாளியின் நிலைக்கு அல்லது தோஷத்திற்கு ஏற்றதல்லா விடில், அதை நீக்கித் தக்க மூலிகைகளை மட்டும் கொள்ள வேண்டும். 137

விரணமும், நோயாளியின் துன்பங்களும் பல வகையாக இருக்கும். இங்கு மணம் முதலாக ஐந்து துன்பங்கள் விரணங் களுக்குக் கூறப்பட்டுள்ளன. காய்ச்சல், அதிஸாரம், நினை விழத்தல், விக்கல், வாந்தி, சுவையின்மை, இழுப்பு, இருமல், உணவு செரிமானமாகாமை, நாவறட்சி முதலியன விரண நோயாளிக்குத் தோன்றும் துன்பங்களாகும். 138-139

இங்கு விரணங்களுக்குச் சிகிச்சை முறைகள் விளக்கமாகக் கூறப்பட்டிருந்தாலும் புறத்தாக்குதல்களால் தோன்றும் விரணங் களுக்குச் சிறப்பான சிகிச்சை முறைகளை (அடுத்த அத்தியா யத்தில்) விளக்குகிறேன். 140

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**த்விவிரணீய சிகித்ஸிதம் எனும்**

**முதல் அத்தியாயம் முற்றும்.**

# இரண்டாம் அத்தியாயம்
# * ஸத்யோவிரணீயம்

இனி புறக்காரணங்களால் திடீரெனத் தோன்றும் ஸத்யோவிரணங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைத் தன் வந்தரி பகவான் கூறியபடி விளக்குகிறேன். 1-2

## 1. ஆசிரியரின் உரை

அறவழியில் சிறந்தவர்களில் முதல்வரான தன்வந்தரி பகவான், தம்மிடம் சீடராகச் சேர்ந்த விச்வாமித்ர குமாரராகிய ஸுசுருதரை நோக்கிப் 'பல கூரிய முனைகளைக் கொண்ட ஆயுதங்களால் உடலின் பல பகுதிகளில் தோன்றும் வேறு வேறு வகையான விரணங்களுக்கு உரிய இலக்கணங்கள், சிகிச்சை முறைகள் ஆகியவற்றை விளக்குகிறேன்' என்றார். 3-4

## 2. திடீரென விரணங்கள் தோன்றக் காரணம்

நீண்டவை, சமசதுரமானவை, மூன்று கோணங்கள் உள்ளவை, வட்டமானவை, நடுவில் பள்ளமாய் பிறை போன் றவை, விளிம்புப் பகுதியில் கூர்மையுள்ளவை, யவதானியம் போல இடையில் பருத்து இரு முனைகளிலும் மெல்லியதாகவும் அமைந்தவை எனப் பல வகையான ஆயுதங்களால் தாக்கப்படும் போது தோஷங்களின் சீற்றத்தால் தோல் சிதைந்து விரணங்கள் தோன்றும். அவை ஆகந்துஜம் எனப்படும். 5-6

## 3. விரணங்களைக் கண்டு அறிதல்

விரணங்களின் தோற்றத்தைப் பற்றி நன்கு அறிந்த மருத்துவர் தோஷங்களின் மிகுதியால் விகாரத் தோற்றம் கொண்டு காணப் படும் விரணங்களைப் பார்த்து குழப்பமடையமாட்டார். 7

## 4. திடீரெனத் தோன்றும் விரணங்களின் வகைகள்

முற்காலத்தில் இருந்த மருத்துவர்கள் திடீரெனத் தோன்றும் விரணங்கள் பல வகைகள் எனக் கூறியுள்ளனர்.

---

***ஸத்யோவிரணம்** - திடீரெனத் தோன்றும் விரணம். அதைப்பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயத்திற்கு ஸத்யோவிரணீயம் எனும் பெயர் வழங்கலாயிற்று.

சுருக்கமாக அவற்றின் இலக்கணங்களைக் கொண்டு கணக்கிடும் போது ஆகந்துஜம் ஆறு வகைப்படும். 8

சின்னம், பின்னம், வித்தம், பிச்சிதம், க்ஷதம், கிருஷ்டம் என ஆகந்துஜ விரணங்கள் ஆறு வகைப்படும். அவற்றின் இலக்கணங்களைக் கூறுகிறேன் கேள். 9

**5. *சின்னம் என்பதன் இலக்கணம்**

குறுக்காகவோ, நீளமாகவோ உடலுறுப்பு வேறுபடும்படி தோன்றிய அடி (சின்னம்) துண்டிக்கப்பட்டதாகும். 10

**6. பின்னம் என்பதன் இலக்கணம்**

ஈட்டி, சூலம், வாள், கொம்பு முதலியவற்றால் ஆழமாகக் குத்தப்பட்டு அதன் வழியே ஏதேனும் (இரத்தம், மாமிசம் முதலியன) வெளிவருமாயின் அந்த காயம் (புண்) **பின்னம்** எனப்படும். 11

**7. கோஷ்டங்கள்**

ஆமாசயம், அக்னி ஆசயம், பக்வாசயம், மூத்ராசயம், ரத்தாசயம், இதயம், உந்துகம், புப்புசம் என்பன கோஷ்டங்கள் எனப்படும். 12

**8. கோஷ்டங்களில் தோன்றும் விரணங்கள்**

கோஷ்டங்களில் தோன்றும் விரணம் 'பின்னம்' (சிதைவு அல்லது பிளவு) என்னும் வகையினதாகும். முன்பு கூறிய சிறுகுடல், சிறுநீரகம் முதலிய கோஷ்டங்களில் பிளவு தோன்றினால் இரத்தம் வழியும். காய்ச்சல் தோன்றும். சிறு நீரகம், ஆஸனவாய், வாய், மூக்கு ஆகியவற்றிலிருந்து இரத்தம் வெளியேறும். நினைவிழத்தல், பெருமூச்சு, உப்புசம், உணவில் விருப்பமின்மை எனுமிவை தோன்றும். சிறுநீர், அபானம், மலம் முதலியவை தடைபடும். உடல் மிகுதியாக வியர்க்கும். கண்கள் ஒளியின்றி உலர்ந்துபோகும். வாயிலிருந்து இரத்தத்தின் இரும்பு மணம் வீசும். உடலும் கெட்ட நாற்றம் கொண்டிருக்கும். இதயத்திலும், விலாப்பகுதிகளிலும் வலி தோன்றும். இவை கோஷ்ட விரணங்களின் பொது இலக்கணங்கள். இனி சிறப்பு இலக்கணங்களைக் கூறுகிறேன் கேள். 13-15

இரத்தம் ஆமாசயத்தைச் சேர்வதால் அடிக்கடி இரத்த வாந்தியாகும். வயிறு மிகவும் பருத்து வீங்கும். பொறுக்க முடியாத கொடிய வலி தோன்றும். இரத்தம் பக்வாசயத்தைச்

* **சின்னம்** - துண்டிக்கப்பட்டது.

சேர்ந்ததும், மிக்க துன்பமும் உடல் பளுவாகத் தோன்றுதலும் உண்டாகும். தொப்புளுக்குக் கீழ் உள்ள உடற்பகுதியில் குளுமை தோன்றும். சிறுநீர் மற்றும் மலவழிகளில் இரத்தம் வெளியேறும். 16-17

பானையின் வாயை நன்றாக மூடினாலும் அப்பானையின் மேல் பகுதியில் உள்ள நுட்பமான துளைகளால் பானைக்குள் நீர் நிறைந்து விடுவதுபோல ஆமாசயம் சிதைவுபடாமல் இருந்தாலும் அதன் நுட்பமான துளைகளின் வழியே * அந்த்ரப்பகுதி இரத்தத்தால் நிறைந்து விடும். 18

### 9. வித்தவிரண இலக்கணம்

நுண்ணிய முனைகொண்ட அம்பு முதலான சல்யம் உடலில் உயிர் நிலைகளைத் தவிர்த்து ஏனைய இடங்களில் குத்திக் கொண்டிருந்தாலும், சல்யம் நீங்கியிருந்தாலும் அப்பகுதியில் ஏற்பட்ட விரணம் வித்தம் எனப்படும். 19

### 10. க்ஷதம் என்பதன் இலக்கணம்

அதிகமாக வெட்டப்படாமலும் (துண்டிக்கப்படாமலும்) மற்றும் சின்னம், பின்னம் என்னும் இரு வகைகளின் இலக்கணங்களைக் கொண்டதாகியும் ஏற்றத்தாழ்வுடன் காணப்படும் விரணம் க்ஷதம் எனப்படும். 20

### 11. பிச்சிதவிரண இலக்கணம்

அடிக்கப்படுதலால் அல்லது அழுத்தப்படுதலால் எலும்புடன் கூடிய உறுப்பு நசுங்கிப் பெரிதாக வீங்கி மஜ்ஜை மற்றும் இரத்தத்துடன் கூடியிருக்குமானால் அது பிச்சிதம் எனப்படும். 21

### 12. கிருஷ்டவிரணத்தின் இலக்கணம்

உராய்வினாலோ மற்ற காரணங்களாலோ உடலின் மேல்தோல் மட்டும் சிதைந்து எரிச்சலும் நிணநீர்ப்பெருக்கமும் தோன்றுமாயின் அந்த விரணம் கிருஷ்டம் எனப்படும். 22

### 13. சின்னம் முதலியவற்றிற்குச் சிகிச்சை

சின்னம், பின்னம், வித்தம், க்ஷதம் எனும் நான்கு வகை விரணங்களிலும் இரத்தப்பெருக்குக் காணப்படும். இரத்தம் குறைந்து போவதால் வாதம் சீற்றம் பெற்று துன்பத்தை

---

* **அந்த்ரம்** - சிறுகுடல்.

விளைவிக்கும். இதில் எண்ணெய் மருந்தைப் பருகச் செய்ய வேண்டும். மற்றும் இளஞ்சூடுள்ள எண்ணெயை விரணத்தின் மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும்.

[1]வேஸவாரம் அல்லது [2]கிருஸரம் என்பதைக்கொண்டு ஒற்றடம் கொடுக்க வேண்டும். தானியங்களைக் கொண்டு உடல் வியர்க்கச் செய்க. எண்ணெய்ப்பசையுள்ள மருந்துகளைத் தடவுக. மற்றும் வாதத்தைத் தணிக்கும் பொருள்களாலான மருந்தைக் கொண்டு வஸ்தி முறையையும் பயன்படுத்த வேண்டும். 23-25

### 14. விரண நோயாளிக்கு உணவு

இரத்தம், தொடு உணர்ச்சி அனுஷ்ணசீதமாகக் காணப்படும். வாயுவும் உஷ்ண சீதங்கள் இல்லாதது. ஆகையால் உணவும் சமானமாக இருக்க வேண்டும். 26

### 15. பிச்சித - கிருஷ்ட விரணங்களுக்குச் சிகிச்சை

பிச்சிதம் மற்றும் கிருஷ்டம் என்னும் விரணங்களில் இரத்தம் வெளிவராது. இவற்றில் எரிச்சலும், பக்குவ நிலையும் தனித்தன்மை கொண்டிருக்கும். அந்தத் துன்பங்களைப் போக்க குளிர்ச்சி தரும் பூச்சுகளைப் பூச வேண்டும். குளுமை தரும் கஷாய வகைகளால் விரணப்பகுதியை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். 27

இவ்வாறு சின்னம் முதலிய ஸத்யோ விரண வகைகள் ஆறினுக்கும் சுருக்கமாகச் சிகிச்சைகள் கூறப்பட்டன. 28

### 16. 'சின்ன' விரணத்திற்குச் சிறப்புச் சிகிச்சை

அகன்றவாயுடன் தலை அல்லது விலாப்பகுதிகளில் தோன்றிய விரணத்திற்கு முறைப்படி தையல் போட வேண்டும். அதன் மேல் இறுகக் கட்டு போட வேண்டும். 29-30

### 17. அறுந்த காது முதலியவற்றிற்குச் சிகிச்சை

தன் இடம் விட்டு அகன்ற காதை அதன் இடத்தில் வைத்து முறைப்படி தையல் போட வேண்டும். வாதத்தைப் போக்கும் மருந்துகளாலான எண்ணெய் மருந்தைக் கொண்டு காதை நிரப்ப வேண்டும்.

---

1. வேஸவாரம் - எலும்பில்லாமல் நன்கு நசுக்கப்பட்டு வெல்லம், நெய், திப்பிலி, மிளகு ஆகியவற்றுடன் நன்கு பிசையப்பட்ட புலால்.

2. கிருஸரம் - எள் சோறு, உளுந்து எனுமிவற்றாலான பொங்கல்.

கழுத்து பின்பக்கம் வரை வெட்டப்பட்டிருந்தால் சரியாகப் பொருத்திக் கட்டுவதுடன் நான்கு பக்கங்களிலும் இடைவிடாமல் தையல் போட வேண்டும். ஆட்டு நெய்யை அப்பகுதியில் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். முதுகின் வலிமையில் மல்லாந்து உட்கார்ந்து கொண்டு மெல்ல உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். கழுத்தை அசைக்காமல் எச்சரிக்கையுடன் படுத்துறங்கச் செய்க. 31-33

### 18. வெட்டுண்ட கால் கைகளுக்குச் சிகிச்சை

கால் கைகள் வெட்டுண்டு குறுக்காக அடிபடுதலால் அகன்ற விரணம் ஏற்பட்டபோது மருத்துவர் விரைவாகச் செயல்பட்டு இணைப்பு எலும்புகளை சீராகப் பொருத்தித் தைக்க வேண்டும். பிறகு வேல்லிதம் எனப்படும் முறையில் கட்டுப் போட வேண்டும். விரைவாக அதன்மேல் ஸேசனம் என்னும் முறையைப் பயன்படுத்த வேண்டும். அல்லது தோலைக் கொண்டு கோபணம் என்னும் கட்டைக் கட்ட வேண்டும். 34-35

### 19. முதுகு, மார்புகளில் அடிபட்டபோது படுக்கும் முறை

முதுகுப்பகுதியில் அடிபட்டபோது முகத்தை மேல் நோக்கி வைத்து மல்லாந்து முதுகை அழுத்திக் கொண்டு படுக்க வேண்டும். மார்பில் அடிபட்ட போது முகத்தைக் கீழ் நோக்கி வைத்துக் கொண்டு குப்புறப்படுக்க வேண்டும். 36

### 20. கை தனியாக வெட்டுண்டபோது சிகிச்சை

கை அல்லது கால் வெட்டுப்பட்டு வேறு படுத்தப்பட்ட போது சூடுள்ள எண்ணெயைக் கொண்டு எரித்துக் [1]கோசபந்தநம் என்னும் முறையில் கட்டு கட்ட வேண்டும். பிறகு விரணத்தை ஆற்றும் முறையைப் பின்பற்ற வேண்டும். 37

### 21. விரணத்தை ஆற்றும் எண்ணெய்

சந்தனம், பதுமகம், பாச்சோத்தி, ஆம்பல், ஞாழல், மஞ்சள், இலுப்பை, பால் என்னும் எட்டுடன் எண்ணெயைக் கலந்து காய்ச்சிப் பயன்படுத்துக. இது விரணங்களை ஆற்றும். 38

சந்தனம், கர்கடகசிருங்கி, காட்டுப் பயறு, காட்டு உளுந்து, சடாமாஞ்சி, சீந்தில் கொடி, பட்டாணி, தாமரைத்தண்டு, [2]திரிபலை, பதுமகம், நீலாம்பல் ஆகிய இப்பதினொன்றையும்

---

1. கோசபந்தநம் - பெட்டி போல் மூடும் கட்டு.
2. திரிபலை - கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய்.

விழுதாகச் செய்து எண்ணெயை சேர்த்துக் காய்ச்சிப் பயன் படுத்தினால் விரணங்கள் ஆறும். மற்றும் இந்த எண்ணெயை விரணத்தின் மேல் ஊற்றிக் கொண்டிருக்கவும் வேண்டும். 39-40

### 22. பின்ன விரணங்களுக்குச் சிகிச்சை முறைகள்

கண்ணில் அடிபட்டுக் கண் பெயர்ந்து தொங்கிக் கொண டிருந்தால் உடனே கண்ணை சிரைகளுக்குத் துன்பம் நேராமல் மெல்லச் சரியாகப் பொருத்துக. பிறகு அதன் மேல் தாமரை இலையை வைத்துக் கையால் மெல்ல மெல்ல அழுத்தி நிலை பெறச் செய்ய வேண்டும். பிறகு தேனும் நெய்யும் சேர்த்துக் கண்களில் மேல் விட்டு தர்ப்பண சிகிச்சை செய்து அந்த நெய்யை மூக்கில் மருந்தாக விட வேண்டும். 41-43

ஆட்டின் நெய், பால் ஒரு ஆடகம், அதிமதுரம், தாமரை, சீவகம், ரிஷபகம் எனும் இவற்றைச் சேர்த்து அரைத்து அவ்விழுதைக் கொண்டு நெய் தயார் செய்க. கண்களில் படும் எல்லாவித அடிகளுக்கும் இது மேல் ஊற்றுவதற்குப் பயன்படுத்தத்தக்கது. 44

### 23. வயிற்றுக்குள்ளிருந்து குடலின் மேல் உள்ள கொழுப்புப் பகுதி வெளிவந்திருந்தால் அதற்குச் சிகிச்சை

வயிற்றுக்குள்ளிருந்து குடலின் மேல் படர்ந்திருக்கும் கொழுப்புப் பகுதி வெளி வந்திருந்தால் அதற்கு மருது முதலான துவர்ப்புச் சுவையுள்ள மரங்களின் க்ஷாரத்தையும், கருநிற மண்ணையும் மேற்பகுதியில் பூசி, மெல்லிய நூலைக் கொண்டு அப்பகுதியைக் கட்டி விட வேண்டும். பிறகு நெருப்பில் வைத்துக் காய்ச்சிய ஆயுதத்தைக் கொண்டு அப்பகுதியை வெட்டி எடுக்கவும். பிறகு அதன்மேல் தேனைப் பூசிக் கட்டு கட்ட வேண்டும்.

உணவு நன்கு செரிமானமடைந்த பின் நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். மற்றும் பாலையும் பருகச் செய்க. அந்தப் பாலில் சர்க்கரை, அதிமதுரம், கொம்பரக்கு, நெருஞ்சில் ஆகியவற்றுடன் ஆமணக்கு எண்ணெயையும் கலந்து உட் கொள்ளச் செய்ய வேண்டும். இதனால் நாவறட்சியும் எரிச்ச லும் தணியும். அறுத்து விடாவிட்டால் மிக்க துன்பமும் அல்லது கொடிய வலியும், மரணமும் நேரலாம். *மேககிரந்திக்கு சொல்லப்படும் எண்ணெய் மருந்தையும் பயன்படுத்தலாம். 45-49

---

* **மேககிரந்தி** - கொழுப்பு மிகுவதால் தோன்றும் கட்டி.

## 24. குடலில் தோன்றும் விரணம்

சல்யம், தோலையும் சிரை முதலியவற்றையும் பிளந்து கொண்டு அல்லது இவ்விரண்டையும் விட்டு விட்டுக் குடலில் தங்கியிருக்குமானால் கொடிய துன்பத்தை விளைவிக்கும். மலம், சிறுநீர், உண்ட உணவு ஆகியவை இந்த விரணத்தின் வழியாக வெளி வரக்கூடும். 50

குடலில் இரத்தம் சேர்ந்து விடும்போது நோயாளியின் உடல் வெளுத்துப் போகும். கை கால்களும் முகமும் குளிர்ந்து விடும். மூச்சும் குளிர்ந்து போகும். கண்களும் சிவந்து தாதுக்கள் செயலிழந்து தடுக்கப்பட்டுள்ள நிலையில் நோயாளி குணம் பெறமாட்டார். அந்நோயாளிக்குச் சிகிச்சை பயன் தராது. 51

ஆமாசயத்தில் இரத்தம் தங்கியிருக்குமானால் வாந்தியாகச் செய்வித்தல் பத்தியமாகும். பக்வாசயத்தில் இரத்தம் சேர்ந் திருந்தால் தயங்காமல் பேதியாகச் செய்ய வேண்டும். சிறிது சூடாகப் பசுவின் சிறுநீர் முதலியவற்றால் எண்ணெய்ப் பசையற்ற ஆஸ்தாபன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். யவதானியம், இலந்தை, கொள்ளு முதலியவற்றால் ஆன கஞ்சியுடனோ எண்ணெய் சேர்க்காத மாமிசச் சாற்றுடனோ உணவு உட்கொள்ளச் செய்க. பிறகு இந்துப்புடன் கஞ்சியைப் பருகச் செய்க. இரத்தம் உடலிலிருந்து மிகுதியாக வெளியேறி யிருந்தால் இரத்தத்தைப் பருகச் செய்க. 52-54

## 25. குடல் தாக்கப்பட்டும் பிழைக்கக்கூடியவர்

குடல் சல்யத்தால் பிளக்கப்பட்டிருந்தாலும், மலம், சிறுநீர், வாயு முதலியன தம் வழியில் தடங்கலின்றி வெளியேறுமாயின் அத்தகைய நோயாளி பிழைத்துக் கொள்வார். 55

## 26. குடல் வெளிவந்ததற்குச் சிகிச்சை

குடல் சிதைவுறாமல் வெளிவந்திருக்குமானால் முன்னிருந்த படி மெல்ல அழுத்தி வைக்க வேண்டும். குடல் பிளவு பட்டிருந்தால் அதன் இரு விளிம்புகளையும் சேர்த்துக் கட்டெறும்பால் கடிக்கச் செய்க. அது இரண்டு பகுதிகளையும் சேர்த்துப் பிடித்துக் கொண்டதும் எறும்பின் கழுத்துப்பகுதிவரை விட்டு மற்ற உடற்பகுதியை வெட்டி விடுக. பிறகு அத்துடன் உள்ளே செலுத்த வேண்டும் என்று சிலர் கூறியுள்ளனர். குடலில் இரத்தமும் தூசும் படிந்திருந்தால் அப்பகுதியைப் பாலைக்கொண்டு கழுவவேண்டும். பின் விரல் நகங்களை நன்கு கத்தரித்துக் கொண்டுள்ள மருத்துவர் அக்குடற்பகுதியில்

நெய்யைப் பூசிய பின் மெல்ல உள்பகுதியை நோக்கி அழுத்த வேண்டும். வெளிவந்துள்ள குடற்பகுதி உலர்ந்து போயிருந்தால் பாலால் அக்குடற்பகுதியைக் கழுவி நெய்யைப் பூசி மென்மைப்படுத்தி உள்ளேயழுத்த வேண்டும். விரல் நுனியால் கழுத்தில் மெல்ல கீறிவிட வேண்டும். குளிர்ந்த நீரை உடல் மேல் படச் செய்து நடுக்கத்தை உண்டாக்க வேண்டும். அல்லது வலிமை கொண்டவர்கள் நோயாளியின் கைகளையும், கால்களையும் மெல்ல உயரத்தூக்கிப் பிடித்துக் கொண்டு உடலைக் குடற்பகுதி உள்ளே செல்லும்படி அசைக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் வெளி வந்த குடற்பகுதி உள்ளே சென்று விடும். (அக்குடல் அதன் தலையை அழுத்தி அப்பகுதியில் தான் இருந்துவிடும்). விரணம் மிகச் சிறியதாகி வெளி வந்துள்ள குடற்பகுதி உள்ளே செல்ல இயலாமற் போன போது தேவையான அளவு வயிற்றுப்பகுதியைக் கீறிய பிறகு குடலை உள்ளே செல்லும்படி செய்ய வேண்டும். வெளி வந்த குடல் முன்போல உள்ளே சென்ற பிறகு விரணத்தைச் சீராக தைத்துவிட வேண்டும். ஏனெனில் இடத்தை விட்டகன்ற குடற் பகுதியும், ஒன்றோடொன்று பின்னிக் கொண்ட குடல் பகுதி களும் உயிரைப் போக்கவல்லவை. பிறகு ஆடையால் அந்த விரணப் பகுதியை நன்கு சுற்றிக் கட்டி நெய்யை அந்த விரணப் பகுதிமேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். சித்திரமூலத்தின் எண்ணெய், ஆமணக்கெண்ணெய் ஆகியவற்றுடன் கூடிய இளஞ்சூடான நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். இதனால் மலம் மென்மையாவதுடன் அபானமும் சீராக வெளியேறும்.

அச்வகர்ணம், தவம், இலவம், ஆடுதீண்டாப்பாளை, ஆனைவணங்கி, மருதம் எனுமிவற்றின் பட்டைகள் மற்றும் குமிழன், ஆலம், அரசு முதலிய பாலுள்ள மரங்களின் பட்டை கள், சிற்றாமுட்டிவேர் ஆகியவற்றையும் சேர்த்து எண்ணெய் காய்ச்சுக. இந்த எண்ணெயைக் கொண்டு விரணத்தை ஆற்ற மேல்பூச்சு பூச வேண்டும். இந்த எண்ணெயை ஓராண்டு காலம் வரை பயன்படுத்த வேண்டும். 56-65

## 27. விதைப்பகுதி வெளிவந்துள்ள நிலைக்குச் சிகிச்சை

அடிபட்டு விதை வெளிவந்திருந்தால், கண்களின் மேற்பகுதிகளையும் பாதங்களையும் குளிர்ந்த நீரால் நனையச் செய்து வெளிவந்துள்ள விதையை அதன் பை போன்ற பகுதிக்குள் செலுத்தித் *துன்னஸேவனியைக் கொண்டு தையல் போட வேண்டும். பிறகு கோபணிகா பந்தநம் என்ற முறைப்படி

* துன்னஸேவனி - கிழிந்த தோலை தைக்கும் முறை.

இடுப்பைச் சேர்த்துக் கட்டு போட வேண்டும். இங்கு விரணப்பகுதியில் நெய்யை விட்டு சிகிச்சை செய்யக்கூடாது. செய்தால் விரணப்பகுதி சிதைவுண்டு சதசதவென்றாகிவிடும். அகில், ஏலஅரிசி, மல்லி, சந்தனம், பதுமகம், மனோசிலை, மரமஞ்சள், சீந்தில்கொடி, துத்தநாகம் ஆகியவற்றை விழுதாக அரைத்துப் பூசி இந்த விரணத்தை ஆற்ற வேண்டும். 66-69

### 28. தலையில் அடிப்பட்டதற்கு சிகிச்சை

தலையில் அடிபட்டபோது சல்யத்தை எடுத்துவிட்டு அடி பட்ட இடத்தில் *பாலவர்த்தியை வைக்க வேண்டும். அந்த வத்தியை வைக்காவிட்டால் விரணத்திலிருந்து மஸ்துலுங்கம் (மூளைப்பகுதியில் உள்ள எண்ணெய் பசை மிகுந்த கபம்) வெளி வந்துவிடும். அதனால் வாயு சீற்றமடைந்து நோயாளியைக் கொன்று விடும். ஆகவே மேற்படி முறையில் சிகிச்சை செய்ய வேண்டும். விரண வாய் மூடிக்கொண்டு வரும் அளவில் வர்த்தி யிலிருந்து ரோமத்தை ஒவ்வொன்றாக எடுத்துவிட வேண்டும். 70

### 29. உடற்பகுதியில் பட்ட காயத்திற்குச் சிகிச்சை

உடலில் தலையைத் தவிர மற்ற பகுதியில் காயம் பட்ட போது சல்யத்தை நீக்கி அந்த இடத்தில் எண்ணெயில் தோய்த்த துணியாலான வர்த்தியை வைக்க வேண்டும். விரணத்தை இரத்தமில்லாமல் துடைத்து உடனே (காயத்துக்கு) அடிக்குத் தக்க சிகிச்சை செய்ய வேண்டும். 71-72

நீளமாகவும், ஆழமாகவும், நுண்ணியதாகவும் தோன்றிய விரணத்தை இரத்தமில்லாமல் துடைத்து மிக்க மெலிந்த நாளத்தைக் கொண்டு சக்ரதைலம் எனப்படும் அணு தைலத்தை விரணத்தினுள் புகச் செய்ய வேண்டும். 73

### 30. விரணத்தை ஆற்றும் எண்ணெய் மருந்து

மஞ்சிட்டி, மஞ்சள், பதுமம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், துத்தம், வாயுவிடங்கம், சித்திரமூலம், கடுக்காய், சீந்தில்கொடி, புங்கன் ஆகியவற்றைச் சேர்த்துத் தைலம் தயார் செய்க. இந்த எண்ணெய் மருந்து விரணங்கள் ஆறக்கூடிய நிலையில் இருக்கும் போது மிக்க பயன் தருவதாகும். 74

### 31. மற்றொரு தைல வகை

தாலிசபத்திரி, பதுமகம், சடாமாஞ்சி, அரேணுகம், அகில், சந்தனம், மஞ்சள், மரமஞ்சள், தாமரைவிதை, வெட்டிவேர்,

---

* பாலவர்த்தி - ரோமத்தால் செய்த திரிக்குப் பெயர்.

அதிமதுரம் எனுமிவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் விரணங்களை ஆற்றுவதில் சிறந்ததாகும். 75

### 32. காயத்திற்குச் சிகிச்சை

தேன், நெய், எண்ணெய் ஆகியவற்றை உடலில் பட்ட சாதாரண காயங்களின் மேல் ஊற்றுக. சிதைந்து காணப்படும் காயத்திற்கு உடைந்த பகுதிக்குக் கூறியுள்ளபடி சிகிச்சை செய்க. 76

### 33. உராய்வினால் தோன்றிய விரணத்திற்குச் சிகிச்சை

கடினமான பொருள் உடற்பகுதியில் உராய்ந்த போது தோன்றிய விரணங்களுக்கு (சிராய்ப்புகளுக்கு) குளுமை தரும் சிகிச்சை முறைகளால் வேதனையைக் குறைத்துப் பிறகு சால விரணத்தை ஆற்றப் பயன்படுத்தும் சூரணத்தை அப்பகுதிமேல் தூவுக. 77

### 34. கீழே விழுதலால் உடைந்த இணைப்புகளுக்குச் சிகிச்சை

உயரத்திலிருந்து விழுதல், நையப்புடைத்தல் முதலியவற்றால் இணைப்புகள் விலகிய உடல் கொண்டவரை எண்ணெய் நிறைந்த தோணியில் (தொட்டியில்) இருத்திவிட வேண்டும். அவருக்கு புலால் சாற்றை உணவாகக் கொடுக்க வேண்டும். உடல் மிகவும் இளைத்தவருக்கும், உயிர் நிலைகளில் அடிப்பட்டவருக்கும் இந்தச் சிகிச்சையையே செய்ய வேண்டும். 78

### 35. விரணத்திற்குத் தைலம் முதலியவற்றைப் பயன்ப( ம் முறை

விரணத்தை ஆற்ற பூசுதல், விரணத்தின் மேல் ஊற்றுதல், பருகச் செய்தல் எனும் முறைகளில் நோயாளியின் உடல் நிலை, பருவகாலம் முதலியவற்றைக் கவனித்து நெய் அல்லது எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். 79

பித்த வித்ரதிக்குக் கூறப்போகும் நெய் மருந்தை திடீரென ஏற்பட்ட காயத்தால் தோன்றிய விரணத்தில் நோயாளிக்குப் பருகக் கொடுக்க வேண்டும். 80

திடீர் (எதிர்பாராத) தாக்குதலால் உண்டான விரணத்தில் மிக்க வேதனை உண்டான போது மிகவும் குளுமையற்ற நெய்யை அல்லது பலா தன்வந்தரி தைலத்தை விரணத்தின் மேல் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்க. 81

## 36. திடீர் தாக்குதலாலான விரணத்திற்கு எண்ணெய் மருந்து

மஞ்சிட்டி, மஞ்சள், பதுமம், கடுக்காய், மயில்துத்தம், சூரியகாந்தி, பதுமகம், பாச்சோத்தி, அதிமதுரம், வாயுவிடங்கம், அரேணுகம், தாளிசபத்திரி, சடாமாஞ்சி, சந்தனம், தாமரைக் கேசரம்., *மஞ்சிட்டி, வெட்டிவேர், கொம்பரக்கு, ஆல் முதலிய பால் கொண்ட மரங்களின் தளிர் இலைகள், ஞாழல், திந்துகத்தின் பச்சைக்காய் எனும் இப்பொருள்களில் கிடைத்தவற்றைக் கொண்டு எண்ணெய் காய்ச்சுக. இது தோஷங் களால் விரணங்களை ஆற்றுவதில் சிறந்த மருந்தாகும். 82-84

## 37. திடீர் தாக்குதலால் தோன்றிய விரணங்களுக்குச் சிகிச்சை

திடீர் தாக்குதலாலான விரணங்களுக்கு ஏழு நாட்கள் வரை கஷாயம், இனிப்பு, குளுமை, எண்ணெய்ப்பசை கொண்ட முறைகளால் சிகிச்சை செய்க. அதற்குப் பிறகு த்விவிரணீயம் என்னும் முறையைப் பின்பற்றி சிகிச்சை செய்க. 85

## 38. துஷ்ட விரணத்திற்குச் சிகிச்சை

தோஷங்களால் கேடுற்ற விரணங்களுக்கு வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் என்னும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். உடலைச் சுண்டச் செய்யும் உணவு முறையைப் பயன்படுத்த வேண்டும். கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். கொன்றை முதலிய கூட்டுப் பொருள் அல்லது சுரஸாதி கூட்டுப் பொருள்களாலான கஷாயத்தால் விரணங் களைக் கழுவச் செய்ய வேண்டும். இந்தக் கஷாயத்தால் செய்த எண்ணெயைத் தூய்மைசெய்யப் பயன்படுத்த வேண்டும். அல்லது க்ஷாரப் பொருள்களைக் கொண்டு எண்ணெய் மருந்து தயார் செய்து பயன்படுத்துக. 86-88

பெருநேர்வாளம், புங்கன், நேர்வாளம், சித்திரமூலம், பெருஞ் சீரகம், வேப்பிலை, அன்னபேதி, மயில்துத்தம், சிவதை, தேசோ வதி, மஞ்சள், அவுரி, மரமஞ்சள், இந்துப்பு, எள், நிலக்கடம்பு, வாகை, கலப்பைக்கிழங்கு, மனோசிலை, மருதோன்றி, துமட்டி, பெருங்குரும்பை, எருக்கு, வாயுவிடங்கம், அரிதாரம், மணிபுங்கன் எனுமிவற்றில் கிடைத்தவற்றைக் கொண்டு எண்ணெய் மருந்து தயார் செய்க. அல்லது நெய் மருந்தோ விழுதோ தயார் செய்து அதைக் கொண்டு தூய்மைப்படுத்துக. 89-92

ண்டு முறை கூறப்பட்டிருப்பதால் இரண்டு பங்கு சேர்க்க வேண்டுமெனக் கொள்க.

இந்துப்பு, சிவதை, ஆமணக்கு இலை எனுமிவற்றைக் கொண்டு செய்த விழுது வாதசீற்றமுள்ள விரணத்திற்கும் சிவதை, மஞ்சள், அதிமதுரம், எள் எனுமிவற்றாலான விழுது பித்தச் சீற்றமுள்ள விரணத்திற்கும் எள், தேசோவதி, நேர்வாளம், ஸர்ஜக்ஷாரம், சித்திரமூலம் *ஆகியவற்றாலான விழுது கபத்தாலான விரணத்திற்கும் பயன்படுத்தத் தக்கவை. மற்றும் மேகநோய், குட்டம் ஆகியவற்றாலான விரணங்களுக்கும் இம்முறை பயன்படுத்தத்தக்கது. 93-94

**39. திடீர் தாக்குதலால் தோன்றும் விரணங்களின் வகை**

திடீர் தாக்குதலால் தோன்றும் விரணங்கள் ஆறு வகை. நன்கு ஆராய்ந்து பார்ப்பவர்களாலும் இதற்கு மேல் வேறு வகையொன்றைக் கண்டறிந்து கூற முடியாது. 95

சிலர் தம்மை மிக்க அறிவாற்றல் உள்ளவர்களாகக் கொண்டு உபஸர்கங்கள், நிபாதங்கள் ஆகியவற்றையும் இந்த ஆறு வகைகளின் பெயருடன் இணைத்து வேறு பல வகைகளாக வகுத்துள்ளனர். ஆனால் நன்கு ஆராய்ந்தால் அவை அனைத்தும் இந்த ஆறு வகைகளுக்குள் அடங்கியவையேயாகும். 96-97

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**ஸத்யோவிரணீய சிகித்ஸிதம் எனும்**

**இரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# மூன்றாம் அத்தியாயம்

# *பக்ன சிகித்ஸிதம்

இனி பகவான் தன்வந்தரி கூறியபடி பக்ன சிகிச்சை முறையை விளக்குவோம். 1-2

## 1. பக்ன விரண சிகிச்சைக்கு உட்படாத நிலை கொண்டவர்கள்

சிறிதளவு உணவு உட்கொள்பவர், ஆன்மஞானமற்றவர், இயற்கையில் வாதம் மிகுந்த உடல் கொண்டவர், உபத்ரவங்கள் உள்ளவர் ஆகியவர்களுக்குத் தோன்றும் பக்ன விரணங்களைச் சிகிச்சையால் குணப்படுத்துவது மிகவும் கடினமாகும். 3

## 2. பக்ன நோயுள்ளவர் விலக்கத்தக்கவை

உப்பு, கார்ப்புச்சுவை, க்ஷாரம், புளிப்பு, கலவி, புகை பிடித்தல், உடற்பயிற்சி, வறண்ட உணவு கொள்ளுதல் எனுமி வற்றை பக்ன விரணம் உள்ளவர் விலக்க வேண்டும். 4

## 3. பக்ன விரண நோயாளிக்கு உணவு

சம்பா அரிசிச்சோறு, புலால் சாறு, பால், நெய், பட்டாணி, நெய் கலந்து செய்த கஞ்சி முதலிய உடலைச் செழிப்பாகச் செய்யும் உணவு முறைகளைப் பக்ன விரணமுள்ள நோயாளிக்குப் பயன்படுத்த வேண்டும். 5

## 4. பக்னமான எலும்புள்ள உறுப்பைக் கட்டுவதற்கான மரத்துண்டுகள்

இலுப்பை, அத்தி, அரசு, புரசு, மருதம் ஆகியவற்றின் பட்டைகளையும், மற்றும் மூங்கில், ஆலம்பட்டை ஆகிய வற்றையும் உடைந்த எலும்புப் பகுதியைச் சேர்த்துக் (கட்டு) கட்டுவதற்குப் பயன்படுத்த வேண்டும். 6

* **பக்னம்** - உடைதல். எலும்பு முதலியவை உடைந்தபோது செய்ய வேண்டிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் அத்தியாயத்திற்கு பக்ன சிகித்ஸிதம் எனும் பெயர் ஆயிற்று.

### 5. உடைந்த எலும்புப் பகுதிக்கு மேல் பூச்சு

மஞ்சிட்டி, இலுப்பை, சிவப்புச் சந்தனம் ஆகியவற்றை விழுதாகச் செய்து நூறு முறை மடக்கித் தூயதாக்கிய நெய் கலந்து அதனுடன் சம்பா அரிசி மாவைக் கலந்து உடைந்த எலும்புப் பகுதிக்கு மேல் பூச்சாகப் பூச வேண்டும். 7

குளிர்காலத்தில் (பனிகாலத்தில்) ஏழு நாட்களுக்கு ஒரு முறை கட்டைப் பிரித்துப் புதுப்பிக்க வேண்டும். அதாவது கட்டை அவிழ்த்து வேறு துணியைக் கொண்டு புதிதாகக் கட்டு போட வேண்டும். கூதிர் பருவத்தில் ஐந்து நாட்களுக்கு ஒரு முறையும், வேனிற் பருவத்தில் மூன்று நாட்களுக்கு ஒரு முறையும் கட்டைப் புதுப்பிக்க வேண்டும். உடைந்த எலும்புகளுக்கு நோய்க்கு தக்க நிலையறிந்து அதற்கேற்ப புதுப்பிக்க வேண்டும். 8

### 6. உடைந்த எலும்புக்குக் கட்டு கட்டுதல்

எலும்பு முறிவில் கட்டை மிகவும் அழுத்திக் கட்டினால் வீக்கமும், துன்பமும் உண்டாகும். தளர்த்திக் கட்டினால் இணைப்பு சீராகு கூடாமற் போகும். எனவே மிக்க இறுக்கமாகவோ தளர்ச்சியாகவோ இல்லாமல் பார்த்துச் சம நிலையில் இருக்குமாறு கட்டு கட்ட வேண்டும். 9-10

### 7. மேல் ஊற்றும் கஷாய முறை விளக்கம்

விரணத்தின் மேல் ஊற்றும் கஷாய முறைக்கு ஆலம் முதலிய கூட்டுப் பொருள்களை பயன்படுத்துக. துன்பம் மிகுந்துள்ள போது பெரும் பஞ்ச மூலத்தால் தயார் செய்யப்பட்ட பால் அல்லது இளஞ்சூடுள்ள சத்ர தைலத்தைப் பயன்படுத்த வேண்டும். 11-12

தோஷத்தின் சீற்றம் காலம் முதலியவற்றை நன்கு ஆராய்ந்து சீற்றமுற்ற தோஷத்தைப் போக்கவல்ல மூலிகைகளுடன் கூடிய கஷாயப் பொருள்களையும் மற்றும் குளிர்ச்சியூட்டக் கூடியவற்றையும் பயன்படுத்த வேண்டும்.

### 8. எலும்பு முறிவுள்ளவருக்குப் பருகக் கொடுக்கும் மருந்து

காகோலி முதலிய இனிப்புச் சுவையுள்ள மூலிகைகளுடன் முதல் ஈற்றுப்பசுவின் நெய் சேர்த்து பக்குவம் செய்து கொம்பரக்குடன் கலந்து குளிர வைக்கவும். பின் அதை எலும்பு முறிவுள்ளவருக்குப் பருகச் செய்ய வேண்டும். 13-14

### 9. விரணத்துடன் கூடிய எலும்பு முறிவுக்கு மேல் பூச்சு

விரணத்துடன் கூடிய எலும்பு முறிவுள்ள போது தேன் கலந்த கஷாயத்தை மேல் பூச்சுக்குப் பயன்படுத்த வேண்டும். மற்றபடி எலும்பு முறிவு உடையவர்களுக்குக் கூறியுள்ளபடி தகுந்த உணவு முதலியவற்றைப் பயன்படுத்துக. 15

### 10. எலும்பு முறிவு எளிதில் ணைந்து விடும் நிலை

சிறுவர்களுக்குத் தோன்றிய எலும்பு முறிவு விரைவில் சீர் பட்டுவிடும். அவ்வாறே தோஷங்கள் குறைந்த அளவில் உள்ள உயிரினங்களுக்கு ஏற்பட்ட எலும்பு முறிவும் மற்றும் குளிர் காலத்தில் ஏற்பட்ட எலும்பு முறிவும் விரைவில் இணைந்து விடும். சிறுவர்களுக்கு உண்டான எலும்பு முறிவு ஒரு மாதத்தில் இணைந்து திடப்பட்டுவிடும். நடு வயதில் உள்ளவர்களுக்கு இரண்டு மாதங்களிலும் வயது முதிர்ந்தவர்களுக்கு மூன்று மாதங் களிலும் உடைந்த எலும்புகள் இணைந்து கெட்டிப்படும். 16-17

### 11. எலும்பு முறிவின் நிலையறிந்து இணையச் செய்தல்

முறிந்த எலும்பின் கீழ்நோக்கியுள்ள முனையை மேல் நோக்கி எழுப்ப வேண்டும். மேல் நோக்கியுள்ள முனையைக் கீழ்நோக்கி இணைத்து வைக்க வேண்டும். எலும்பு முறிந்து இரு பகுதிகளும் விலகியிருந்தால் ஒன்றோடொன்று இடையில்லாமல் நேராகப் பொருந்துமாறு செய்க. கீழ்நோக்கியுள்ளபோது இரண்டு முனைகளையும் மேல் நோக்கி நிமிரச் செய்து நேராக வைத்து இணையச் செய்ய வேண்டும். 18

முறிந்த எலும்புப் பகுதியில் அசையக்கூடியதும் அசை வற்றதுமான இடங்களை அறிந்து மேல் நோக்கி இழுத்தல் கீழ் நோக்கி அழுத்துதல் ஒன்றோடொன்று நெருங்கச் செய்தல் சேர்த்துக் கட்டுதல் ஆகியவற்றை நேராக இருக்க வேண்டிய முறைப்படி சரி செய்து கட்டு கட்ட வேண்டும். 19

### 12. எலும்பு பொடித்துப் போன நிலையில் சிகிச்சை

எலும்பு பொடியாக உடைந்து அல்லது இணைப்பு நழுவி யுள்ள போது இணைப்புகளைச் சேர்க்காமல் அப்படியே விட்டு காயத்தின் மேல் குளிர்ச்சி தரும் மேல் ஊற்றும் முறையையும் மேல் பூச்சு மருந்தையும் பயன்படுத்த வேண்டும். அடிபட்ட இடத்தில் காயமும் துன்பமும் ஆறியபிறகு நெய்யில் நனைந் துள்ள ஆடையால் அப்பகுதியைச் சுற்றியபின் மரப்பட்டை முத லியவற்றை அதன் மேல் வைத்துக் கட்டு போட வேண்டும். 20-22

இனி அந்தந்த உறுப்புகளில் பொடித்துப் போன எலும்புகளுக்குச் சிகிச்சை முறை விளக்கப்படுகிறது.

**13. நகப்பகுதி சிதைந்ததற்குச் சிகிச்சை**

நகம் சதையுடன் இணைந்திருக்கும் பகுதியில் அடிபட்டு இரத்தம் நிறைந்திருக்கும் நிலையில் [1]ஆரா என்னும் கருவியைக் கொண்டு அப்பகுதியை நன்றாகச் சீவி எடுத்துவிட்டு இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு அரிசி மாவை அப்பகுதி மேல் பூச வேண்டும். 23

**14. விரல் இணைப்பு அறுந்ததற்குச் சிகிச்சை**

விரல் உடைந்து அல்லது இணைப்பு விட்டுப் போன போது அவ்விரலைச் சீராகப் பொருத்தி மெல்லிய துணியைக் கொண்டு சுற்றி அதன் மேல் நெய்யை ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 24

**15. பாதம் முறிந்ததற்குச் சிகிச்சை**

அடிபட்டுப் பாதம் முறிந்த போது நெய்யை அப்பகுதி மேல் பூசி அதன் மேல் மரப்பட்டை முதலான குசம் எனப்படும் கட்டு கட்டுவதற்கேற்றதை வைத்து துணியைச் சுற்றிக் கட்டு கட்ட வேண்டும். 25

மிக்க கவனத்துடன் முழங்கால் தொடைப்பகுதிகளில் எண்ணெயைத் தடவி அவற்றை மெல்ல சரியாக இழுத்து விட வேண்டும். பிறகு ஆலம் முதலிய குளிர்ச்சி தரும் மரங்களின் பட்டையை வைத்துக் கட்டு கட்ட வேண்டும். 26

**16. மேல் நோக்கி உடைந்த எலும்புக்குச் சிகிச்சை**

வெளியே நீட்டிக் கொண்டு அல்லது தன் நிலை விட்டு நகர்ந்து மேல் நோக்கி உடைந்த எலும்புக்கு நான்குபக்கங்களிலும் [2]சக்ரயோகத்தால் சுற்றி உட்கார வைத்து பிளந்த அல்லது சிதைந்த எலும்புகளுக்கும் முன்போலவே கட்டு கட்ட வேண்டும்.27

**17. இடுப்பு முறிந்ததற்குச் சிகிச்சை**

இடுப்பு எலும்பு முறிந்த போது மேல் நோக்கிச் சென்ற எலும்பை கீழ்நோக்கியும் கீழ்நோக்கிச் சென்ற எலும்பை மேல் நோக்கியும் இழுத்து விட வேண்டும். பிறகு இணைப்புப் பகுதியைச் சீராகப் பொருத்தி [3]வஸ்தி முறையில் சிகிச்சை செய்க. 28

---

1. ஆரா - அரம்.
2. **சக்ரயோகம்** - சக்ரத்தின் மேல் வைத்துச் சுற்றுதல் (அ) காலை நீட்டிப் பிடித்துச் சுற்றுதல்.
3. **வஸ்தி முறை** - ஏதேனுமொரு கருவியால் ஆசனத்துவாரத்தின் வழியாக தைலம் முதலியவற்றைச் செலுத்தி குடலைக் கழுவும் முயற்சி.

### 18. விலா எலும்புகளின் முறிவுக்குச் சிகிச்சை

விலா எலும்புகள் உடைந்த போது நோயாளியை நேரே நிறுத்தி வைத்து நெய்யைப் பூச வேண்டும். வலம் அல்லது இடப் பக்கத்து விலா எலும்புகளில் உள்ள தசை நார்களின் மேல் நெய்யைப் பூசி கவலிகை(மூங்கில்பட்டை)யில் அகலப் பஞ்சைப் பரப்பி விலாப்பகுதியில் வைத்துக் கட்டு கட்ட வேண்டும். நோயாளியை எண்ணெய் நிரம்பிய தொட்டியில் படுக்க வைக்க வேண்டும். 29-30

### 19. தோள் பட்டை மூட்டு விலகியதற்குச் சிகிச்சை

தோள் பட்டை இணைப்பு நழுவியபோது அக்குளில் உலக்கையை வைத்து மேல் நோக்கி எழுப்ப வேண்டும். அந்த இடத்தில் 'ஸ்வஸ்திக பந்தம்' எனும் கட்டு கட்ட வேண்டும். 31

### 20. முதுகெலும்பு மேலுள்ள முனையில் இருக்கும் இணைப்பு விலகியதற்குச் சிகிச்சை

முதுகெலும்பு, தலை எலும்புடன் சேரும் கழுத்துப் பகுதியில் உள்ள இணைப்பு விட்டுப் போயிருக்குமானால் கட்டை விரலால் மெல்ல தேய்த்து வேறான பகுதியை இணைப்பில் சீராகப் பதியச் செய்யவும். தலைப்பகுதியை இழுத்து மெல்ல இணைப்பில் பொருந்துமாறு அழுத்தி வைத்து அப்பகுதி மேல் எண்ணெயை ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 32

### 21. முழங்கால் மணிக்கட்டு முதலிய இணைப்புகள் விலகியதற்குச் சிகிச்சை

முழங்கால் மூட்டு, கைகால்களில் உள்ள மணிக்கட்டுப் பகுதிகளில் உள்ள இணைப்புகள் விலகிய போதும் முன் கூறிய படியே சிகிச்சை செய்க. 33

### 22. உள்ளங்கை உடைந்ததற்குச் சிகிச்சை

உள்ளங்கை பகுதி உடைந்த போது இரு கைகளையும் சம மாக வைத்துக் கட்டு கட்ட வேண்டும். பிறகு ஆம தைலத்தை அக்கைகளின் மேல் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்க. உடைந்த பகுதி சீராகிக் கட்டைப் பிரித்தவுடன் கையில் மண்ணை வைத் திருக்கச் செய்க. பிறகு உப்பு குவியலைக் கையில் தாங்கச் செய்து சிறிது வலிமை வந்ததும் கல்லை கையில் பிடித்துக் கொண்டிருக்கச் செய்க. 34-35

### 23.* அக்ஷக எலும்பு கீழ்நோக்கி அழுந்தியதற்குச் சிகிச்சை

அக்ஷக எலும்பு கீழ்நோக்கி அழுந்திய் போது உலக்கையால் மேல் நோக்கி எழுப்ப வேண்டும். மேல் நோக்கி எழும்பிய எலும்பை உலக்கையைக் கொண்டு கீழ் நோக்கி அழுந்தச் செய்க. அப்பகுதியைப் பிசைந்து விட்டு கட்டு போட வேண்டும். 36

### 24. தோள் பகுதி எலும்பு முறிவுக்குச் சிகிச்சை

தோள் பகுதியெலும்பு உடைந்தால் தாடை எலும்புக்குக் கூறப்பட்ட முறையையே பின்பற்ற வேண்டும்.

### 25. கழுத்து எலும்பு உடைந்ததற்குச் சிகிச்சை

கழுத்து எலும்பு கோணிப் போனாலும், கீழ்நோக்கி அழுந்தியிருந்த போதிலும் கழுத்தின் பின்பகுதி(பிடரி)யைப் பிடித்துக் கொண்டு மெல்ல மேல் நோக்கி இழுக்க வேண்டும். பிறகு கட்டு கட்டுவதற்கான மரப்பட்டை அல்லது சில்லுகளை வைத்துக் கட்டு போட வேண்டும். தாமதமின்றி இச்சிகிச்சையைச் செய்து ஏழு நாட்கள் வரை நோயாளி முதுகை கீழே வைத்து மேல் நோக்கி மல்லாந்தவாறு படுக்கச் செய்ய வேண்டும். 37-38

### 26. தாடை எலும்பு மூட்டு விலகியதற்குச் சிகிச்சை

தாடை எலும்பின் இணைப்பு விட்டுப் போன போது அந்த எலும்புகளைச் சீராகப் பொருத்தி அப்பகுதியை வியர்க்கச் செய்ய வேண்டும். நன்கு பொருந்திய பிறகு பஞ்சாங்கி என்னும் கட்டு கட்ட வேண்டும். பத்ரதாரு மற்றும் மூவிலை அல்லது காகோலி முதலியவற்றை கொண்டு தயார் செய்த எண்ணெயை நசிய முறையில் பயன்படுத்த வேண்டும். 39-40

### 27. அடிபட்டுப் பல் ஆடிய போது செய்ய வேண்டிய சிகிச்சை

வாலிப பருவத்தில் இருக்கும் மனிதனின் பல் உடையாமல் அசைந்து விடுமாயின் இரத்தத்துடன் கூடிய பல்லை அதன் இடத்தில் அழுந்த வைத்து வெளியே குளிர்ச்சி தரும் பூச்சு பூச வேண்டும். குளிர்ந்த நீரை மேல் தெளிக்கச் செய்ய வேண்டும். தேன், நெய் முதலான இணைய வைக்கும் மருந்து பொருள் களைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். தாமரைத் தண்டை கொண்டு பால் பருகச் செய்ய வேண்டும். முதியவர் பல் ஆடிப் போனால் அதற்கு சிகிச்சை செய்யாமல் விட வேண்டும். 41-42

---

* அக்ஷகம் - தோள்பட்டை.

## 28. கோணிப்போன மூக்குக்குச் சிகிச்சை

அழுந்திய அல்லது கோணிப்போன மூக்கை சலாகையைக் கொண்டு சீராக்கி இரண்டு மூக்குத் துளைகளிலும் இரண்டு முகங்களைக் கொண்ட குழாயைப் பொருத்த வேண்டும். பிறகு துணியைச் சுற்றி நெய்யை விட்டு நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். 43-44

## 29. உடைந்த காதுக்குச் சிகிச்சை

காது உடைந்த போது அதைச் சரியாகப் பொருத்திக் கட்டி நிறைந்த அளவு நெய்யுடன் கூடிய தேனை விட்டு அடிபட்டதும் செய்யத்தக்க முறைப்படி எண்ணெய் தேய்த்தல், அப்பகுதி மேல் மருந்து விட்டுக் கொண்டிருத்தல் முதலிய சிகிச்சைகளைச் செய்ய வேண்டும். 45

## 30. தலை எலும்பு உடைந்ததற்குச் சிகிச்சை

மண்டை ஓடு உடைந்த போது *மஸ்துலுங்கம் உடையாத போது தேன், நெய் பூசிக் கட்டு கட்ட வேண்டும். ஏழு நாட்கள் வரை நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். 46

## 31. கீழே விழுந்து அடிபடுதலுக்குச் சிகிச்சை

கீழே விழுந்து அடிபட்டுக் காயமாகி வீக்கம் இல்லாதபோது அந்தக் காயத்தின் மேல் குளிர்ச்சி தரும் பூச்சுகளைப் பூசுதல், குளிர்ச்சி தரும் மருந்து தெளித்துக் கொண்டிருத்தல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். 47

## 32. முழங்கால், தொடை எலும்புகள் முறிதலுக்குச் சிகிச்சை

முழங்கால் தொடை ஆகியவற்றின் முறிவு உண்டானபோது நோயாளியை மரப்பலகை மேல் படுக்க வைத்து அவரை அசையாமல் இருக்கச் செய்க. பாதத்தின் அருகில் ஒன்று முழங்காலுக்கு இரு பக்கங்களிலும் இரண்டு தொடைக்கு இரண்டு பக்கங்களிலும் இரண்டு என உடலை சேர்ந்தாற் போல் மரப் பலகைகளில் ஐந்து ஆணிகளை அடித்துச் நோயாளியை அசை யாமல் இருக்கச் செய்க. முழங்கால் எலும்பு முறிந்த போது உள்ளங்காலைச் சார்ந்து ஒன்று கால் மணிக்கட்டுப் பகுதியில் இரண்டு முழங்கால் மூட்டுக்கு இரு பக்கங்களிலும் இரண்டு என ஆணிகளை அடிக்க வேண்டும். தொடை எலும்பு முறிந்த போது முழங்கால் இணைப்புக்கு அருகில் இரு பக்கங்களிலும் இரண்டு மற்றும் தொடை இடுக்குக்கு இரு பக்கங்களிலும் இரண்டு உள்ளங் கால் அருகில் ஒன்று என ஆணிகளை அடிக்க வேண்டும். 48-49

* **மஸ்துலுங்கம்** - மூளைப் பகுதியில் உள்ள ஓர் உறுப்பு.

### 33. பின்தட்டு முதலிய இடங்களில் ஏற்பட்ட முறிவுக்குச் சிகிச்சை

பின்தட்டுகள், மார்பு, தோள் பட்டை எலும்பு முதலியன முறிந்த போதும் அல்லது அவ்விடங்களில் உள்ள இணைப்புகள் நழுவிய போதும் நோயாளியை அசையாமல் படுத்திருக்கச் செய்ய வேண்டும். 50

### 34. நாட்கள் கடந்த விடுபட்ட இணைப்புகளுக்குச் சிகிச்சை

இணைப்புகள் பல நாட்களுக்கு முன்பு விட்டுப் போய் இருந்தால் முதலில் எண்ணெய் மருந்தை தடவுதல், வியர்க்கச் செய்தல் முதலிய முறைகளால் சூடு உண்டாக்க வேண்டும். பிறகு மருத்துவர் தக்க உபாயம் அறிந்து முன் கூறிய சிகிச்சைகளுக்குக்கேற்ப சிகிச்சை செய்ய வேண்டும். 51

### 35. நீண்ட எலும்புகள் முறிந்ததற்குச் சிகிச்சை

கைகால் முதலிய பகுதிகளில் நீளமாக உள்ள எலும்புகள் முறிந்து அல்லது ஏற்றத்தாழ்வாக இருந்து நாள் கடந்ததால் அவை நிலையாக நின்று விட்ட போது அவ்வெலும்புகளை மெல்ல விலகச் செய்து சீராக வைத்துப் பிறகு முன்கூறிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 52

### 36. விரணத்தின் மேல் எலும்பு வெளிவந்திருந்த போது சிகிச்சை

விரணத்தின் ஒரு பகுதியில் வெளிவந்து உலர்ந்து போன எலும்பு இருந்தால் கவனத்துடன் அதை அறுத்து நீக்கிவிடவும். மற்றும் விரணத்துடன் கூடிய எலும்பு முறிவில் இணைப்புக்கு அருகில் உள்ள எலும்பை அறுத்து நீக்கிவிடுக. பிறகு விரணத்துடன் கூடிய எலும்புக்கு கூறப்பட்ட சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 53

### 37. தலையில் எலும்பு முறிவுக்குச் சிகிச்சை

தலையில் எலும்பு முறிவு உண்டானால் *சிரோவஸ்தி, நெய் அல்லது எண்ணெயில் தோய்த்த பஞ்சை வைத்தல், காதில் எண்ணெய் விடுதல், நெய்யைப் பருகச் செய்தல், மூக்கில் மருந்திடுதல், (நசிய முறை) ஆகியவற்றை தக்கபடி பயன்படுத்த வேண்டும். கால் கை எலும்புகள் முறிந்துள்ள நிலையில் அனுவாஸன வஸ்தியைப் பயன்படுத்துதல் நலம். 54

* **சிரோவஸ்தி** - எண்ணெயைத் தலையில் தேக்கி அம்முறையால் தோஷங்களை வெளியேற்றல்.

## 38. எலும்பு முறிவுக்கு எண்ணெய் மருந்து

இனி முறிந்த எலும்பைச் சீராக்கும் முறைக்குப் பயன்படும் எண்ணெய் மருந்து விளக்கப்படுகிறது. கறுப்பு எள்ளை ஏழு நாட்கள் வரை ஆற்று வெள்ளத்தில் (மூட்டைக்கட்டி) வைத்து பகலில் வெயிலில் உலர்த்த வேண்டும். இவ்வாறு ஏழு நாட்கள் வைக்க வேண்டும். பிறகு ஏழு நாட்கள் பசும்பாலில் *பாவனை செய்ய வேண்டும். மூன்றாவது வாரத்தில் அதிமதுரக் கஷாயத்தில் பாவனை செய்ய வேண்டும். நான்காம் வாரத்தில் மீண்டும் பசுவின் பாலில் பாவனை செய்ய வேண்டும். அதன் பிறகு உலர்த்தி நன்றாக தூள் செய்ய வேண்டும். காகோலி முதலிய கூட்டுப்பொருள்கள், அதிமதுரம், மரமஞ்சள், நன்னாரி, கோஷ்டம், ஸர்ஜக்ஷாரம், சடாமாஞ்சி, தேவதாரு, சந்தனம், சதகுப்பை எனும் பொருள்களை சம அளவில் எடுத்துக் கொண்டு முன் செய்த எள்ளுப் பொடியுடன் கலக்க வேண்டும். பிறகு ஏலாதி கணப் பொருள்களால் செய்த பாலுடன் இந்த தூளைக் கலந்து அதிலிருந்து எண்ணெய் எடுக்க வேண்டும். இந்த எண்ணெயில் அதன் அளவுக்கு நான்கு மடங்கு பாலும் ஏலக்காய், ஓரிலை, ஜாதிபத்திரி, சீவகம், தகரை, பாச்சோத்தி, பிரபௌண்டரீகம், பால்முதுக்கன் கிழங்கு, நன்னாரி முதலிய வற்றையும் சேர்த்து அனைத்தையும் விழுதாகச் செய்த பிறகு மந்தாக்னியில் எண்ணெய் பக்குவம் செய்ய வேண்டும். இந்த எண்ணெய் எலும்பு முறிவு உள்ளவர்களுக்கு மேல்பூச்சு பூசுதல் உட்கொள்ளச் செய்தல் முதலான எல்லாவித சிகிச்சை முறைகளிலும் பயன்படுத்தத்தக்கது. ஆக்ஷேபகம், பக்கவாதம், தாடை வீக்கம், அர்திதம், மன்யாஸ்தம்பம், தலைநோய்கள், காதுவலி, தாடைப்பிடிப்பு, செவிட்டுத்தன்மை, திமிரம் என்னும் உறுப்புகள் மரத்துப் போகும் நோய், பெண்களின் சேர்க்கையால் தோன்றும் உடல் இளைப்பு முதலிய நோய்களிலும் பருகச்செய்தல் எண்ணெய் தேய்த்துக் குளிக்கச் செய்தல் மூக்கில் மருந்திடுதல் முதலிய முறைகள் பயன்படுத்தத்தக்கவை. இந்த எண்ணெயைப் பயன்படுத்துவதால் கழுத்து, புயம், மார்பு முதலியன நன்கு செழிப்புறும். தாமரை போல முகம் பொலிவு கொள்ளும். வாய் தாமரை போல மணக்கும். இந்த எண்ணெய் வாதத்தால் தோன்றும் நோய்கள் அனைத்தையும் போக்கவல்லது. மன்னர்கள் போன்ற செல்வந்தர்கள் பயன் படுத்தத்தக்கது. அறிவாற்றல் கொண்ட மருத்துவர் அத்தகையவர் களுக்காக இதைப் பயன்படுத்த வேண்டும். 55-66

---

***பாவனை** - இரவில் ஊற வைத்துப் பகலில் உலர்த்துதல்.

### 39. மற்றொரு எண்ணெய் முறை

கக்கரிவிதையோடு தான்றி அல்லது சாரைப் பருப்பின் எண்ணெய் ஆகியவற்றை காகோலி முதலிய கூட்டுப் பொருள்களுடன் பத்து மடங்கு பால் சேர்த்துக் காய்ச்சுக. வஸை கிடைத்தால் அதையும் சேர்த்துக் கொள்க. எலும்பு முறிவுக்கு இது மிகச் சிறந்த எண்ணெய் மருந்தாகும். விரைவில் நோயைத் தணிக்கும். உட்கொள்ளுதல், உடல் மேல் தேய்த்துக் கொண்டு குளித்தல், மூக்கில் மருந்திடுதல், நோய் கொண்ட பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருத்தல் முதலியவற்றிற்கும் வஸ்தி முறைக்கும் எண்ணெயைப் பயன்படுத்தலாம். 67-68

### 40. மருத்துவருக்கு அறிவுரை

எலும்பு முறிந்துள்ள போது மருத்துவர் அந்த நோய் கொண்ட இடம் பக்குவம் பெறாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மாமிசம், சிரை, நரம்பு முதலியன பக்குவம் பெற்று விட்டால் பிறகு நோயைத் தீர்ப்பது மிக்க கஷ்டமாகி விடும். 69

எலும்பு முறிவு உண்டான நோயாளி நினைவு தவறாத வராகிய போதும் உடலுறுப்பு குறைவு படாதபோதும் உறுப்பு மேல் நோக்கி எழும்பி இராத போதும் உறுப்பை மடக்குதல் நீட்டுதல் ஆகிய செயல்களை எளிதில் செய்ய முடிந்த போதும் அந்த முறிவைச் சீர் செய்வது எளிதாகும். 70

**ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**பக்ன சிகித்ஸிதம் எனும்**

**மூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# நான்காம் அத்தியாயம்

# * வாதவியாதி சிகித்ஸிதம்

தன்வந்தரி பகவான் ஸுசுருதருக்கு உபதேசித்தபடி வாத வியாதி சிகித்ஸிதம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

### 1. ஆமாசயத்தைச் சார்ந்த வாயுவுக்குச் சிகிச்சை

[1]ஆமாசயத்தை சார்ந்துள்ள வாத நோய்க்கு [2]முறைப்படி முதலில் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பிறகு ஏழு நாட்கள் வரை ஷட்தரணயோகம் எனும் மருந்தை வெந்நீருடன் உட்கொள்ளச் செய்ய வேண்டும். கொடிவேலி, வெப்பாலை, வா' ı த்திருப்பி, கடுகரோகிணி, அதிவிடயம், கடுக்காய் எனும் இவ்வாறும் ஷட்தரணம் எனப்படும். இது வாத நோயைப் போக்கும் சிறந்த மருந்தாகும். 3-4

### 2. பக்குவாசயத்தைச் சார்ந்த வாதத்திற்குச் சிகிச்சை

வாயு பக்குவாசயத்தைச் சேர்ந்துள்ள போது எண்ணெய் மருந்தைக் கொண்டு பேதியாகச் செய்ய வேண்டும். உடலைத் தூய்மைப்படுத்தும் வஸ்தி மருந்துகளைப் பயன்படுத்துக. உப்பு முக்கியமாகக் கலந்துள்ள உணவுப் பொருள்களை உட்கொள்ளச் செய்க. 5

### 3. காது முதலியவற்றைச் சார்ந்த வாத நோய்க்குச் சிகிச்சை

காது முதலிய பகுதிகளில் வாதம் சீற்றமுறுவதால் நோய் தோன்றிய போது வாதத்தைப் போக்கவல்ல எண்ணெய் மருந்துகளையும், உடல் வியர்க்கச் செய்யும் முறைகளையும் பயன்படுத்த வேண்டும். 6

* வாதவியாதி சிகித்ஸிதம் - வாதம் சீற்றமுறுவதால் தோன்றும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் வாத வியாதி சிகித்ஸிதம் எனும் பெயர் ஆயிற்று.

1. ஆமாசயம் - உணவுப்பை.

2. இங்கு முறைப்படி எனும் போது முதலில் எண்ணெய் மருந்தைக் கொண்டு உடல் வியர்க்கச் செய்யும் முறையை பயன்படுத்த வேண்டும். வாந்தி எடுக்கச் செய்வதற்கான அளவு, வேகம், உடல் தூய்மைபெறுதல் முதலியவற்றைக் கவனித்துப் பயன்படுத்த வேண்டும் என்பது கருத்தாகும்.

**தோல், மாமிசம், ' சிரை முதலிட சார்ந்த வாத நோய்க்குச் சிகிச்சை**

தோல், மாமிசம், சிரை, இரத்தம் முதலியவற்றைச் சார்ந்த வாத நோய் தோன்றிய போது உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க்குளியல், ஒற்றடம் கொடுத்தல், எண்ணெய் மருந்தை உடல் மேல் தேய்த்தல், மருந்தை நோயுற்றப் பகுதியில் பூசுதல் மற்றும் முறையாக இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 7

**5. சிநாயு, இணைப்பு, எலும்பு முதலியவற்றைச் சார்ந்த வாத நோய்க்குச் சிகிச்சை**

சிநாயு, இணைப்பு, எலும்பு முதலியவற்றைச் சார்ந்துள்ள வாத நோய்க்கு எண்ணெய் மருந்தைப் பயன்படுத்துதல், ஒற்றடம் கொடுத்தல், நெருப்பால் சுடுதல், கட்டு கட்டுதல், மருந்தைத் தேய்த்தல் முதலிய தக்க சிகிச்சைகளைத் தாமதம் செய்யாமல் பயன்படுத்த வேண்டும். 8

**6. எலும்பைச் சார்ந்த வாத சீற்றத்திற்குச் சிகிச்சை**

எலும்பைச் சார்ந்த வாதம் சீற்றமுற்ற போது அதாவது எலும்புக்குள் வாயு நிரம்பி நோயைத் தோற்றுவித்தபோது ஆரா எனும் கருவியைக் கொண்டு எலும்பைக் கீறி அதற்குள் இருமுகம் கொண்ட நாளத்தைப் புகுத்தி வலிமை கொண்ட மருத்துவர் வாயுவை உறிஞ்சி வெளியேற்ற வேண்டும். 9

**7. விந்துவைச் சார்ந்த வாதத்திற்குச் சிகிச்சை**

விந்துவைச் சார்ந்துள்ள வாதத்தால் தோன்றிய நோய்க்கு விந்து தோஷத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும்.

**8. ஸர்வாங்க வாதத்திற்குச் சிகிச்சை**

உடல் முழுவதும் வாதம் பரவிச் சீற்றமுற்றுத் தோற்றுவித்த வாத நோயில் நன்கு நீரில் மூழ்கிக் குளித்தல், [1]குடீஸ்வேதம்,

---

1.குடீஸ்வேதம் - குடீ - குடிசை, ஸ்வேதம் - வியர்வை. ஒரு குடிசையின் சுவரில் வியர்வை தரக்கூடிய பொருட்களின் விழுதைப் பூசி சுவரின் அருகில் கும்மட்டி அடுப்புகளைச் சுற்றி வைக்க வேண்டும். பிறகு குடிசையின் நடுவில் பாய்விரித்து அதில் நோயாளியை அமர்த்தி அங்கு வெளிவரும் (மருந்து) ஆவியை நுகரச் செய்து வியர்வையை உண்டாக்குவது.

கர்ஷுஸ்வேதம், [1]பிரஸ்தர ஸ்வேதம், எண்ணெய்க் குளியல், வஸ்தி முறை, சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். ஏதேனும் ஒரு உறுப்பில் நொடி நேரம் வாதம் சீற்றமுற்றுத் துன்புறுத்தும் போது கொம்பைப் பயன்படுத்தும் முறையைக் கையாள வேண்டும். (ஒரு உறுப்பில் நிலையாக வாதம் தங்கித் துன்புறுத்தும் போது மருந்து கலந்த நீரில் மூழ்கிக் குளிக்கும் முறையைக் கையாள வேண்டும்.) 10-11

### 9. கபமும், பித்தமும் கலந்த வாததத்திற்குச் சிகிச்சை

வாதம், கப பித்தங்களுடன் கூடிச் சீற்றமடைந்து துன்புறுத்தும் போது அவற்றிற்கு விரோதம் அல்லாத முறையில் சிகிச்சையைக் கையாள வேண்டும்.

### 10. ஸுப்திவாதத்திற்குச் சிகிச்சை

இரத்தத்தைச் சூழ்ந்த வாதம் உடல் மேல் தோலில் தொடு உணர்ச்சியற்றுப் போகச் செய்யும். அந்நிலையில் தகுந்தபடி அடிக்கடி இரத்தத்தை வெளியேற்றும் சிகிச்சையைச் செய்ய வேண்டும். இரத்தத்தை வெளியேற்றிய பிறகு அந்த இடத்தில் இந்துப்பு மற்றும் ஒற்றடை ஆகிய இரண்டையும் நல்லெண்ணெயில் கலந்துப் பூச வேண்டும். 12

### 11. வாத நோய் கொண்டவருக்கு இதமானவை

[2]பெரும்பஞ்சமூலத்துடன் சேர்த்துக் காய்ச்சிய பால், புளிப்பு மாதுளை முதலியவற்றின் சாறு, புலால் சாறு, மிகவும் எண்ணெய்ப்பசை கொண்ட உளுந்து முதலியவற்றின் கஞ்சி ஆகியவை மிகவும் இதமானவை. 13

### 12. வாத நோய்க்கு ஒற்றடம் கொடுத்தல்

காகோலி முதலிய கூட்டுப்பொருள்கள் மற்றும் வாதத்தைப் போக்கும் பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள்கள், விதாரிகந்தாதி கூட்டுப் பொருள்கள், புளிப்புச் சுவை மிக்க சுக்தம், காஞ்சிகம் முதலிய மது வகைகள், தயிர், புளிப்பு மாதுளை முதலிய புளிப் புச் சுவையுள்ள பழங்களின் சாறு, நீரில் வாழும் ஆமை, மீன்

---

1. பிரஸ்தரஸ்வேதம் - மருந்துப் பொருள்களைச் சூடாக்கி நிலத் திலோ, கல்லிலோ பரப்பி விட்டு அதன் மேல் நோயாளியைப் படுக்க வைத்து வியர்வையை உண்டாக்குவது.

2. பெரும்பஞ்ச மூலம் - வில்வம், குமிழன், பெருவாகை, பாதிரி, சிறுவழுதுணை ஆகிய இவ்வைந்தின் வேர்கள்.

முதலியவற்றினுடையவும் மற்றும் நீர் நிலை மிகுந்த நிலத்தில் வாழும் எருமை, பன்றி முதலியவற்றினுடையவும் புலால், நெய், நல்லெண்ணெய், வசை, கொழுப்பு எனும் எண்ணெய் வகைகள் ஆகியவற்றுடன் உப்பை அதிக அளவில் சேர்த்து இளஞ்சூடுள்ள மேல் பூச்சு மருந்து தயார் செய்க. இது 'ஸால்வணம்' எனப்படும். இம்மருந்தைக் கொண்டு வாத நோய்க்கு ஒற்றடம், மேல்பூச்சு முதலியன செய்வித்தல் மிக்க நன்மை தரும். 14-15

### 13. வாத நோய்க்குச் சிறப்புச் சிகிச்சை

வாத நோயால் குறுகிப் போனது, மிக்க வலி கொண்டது, மரத்துப்போனதுமான உறுப்புகளின் மேல் பட்டு, பருத்தி, கம்பளி முதலியவற்றின் (தடித்த) ஆடையைக் கொண்டு இறுக்கிக்கட்ட வேண்டும். அல்லது நன்றாக எண்ணெய் தேய்த்துக் கொண்டு குளிக்கச் செய்து ஸால்வணத்தைக் கொண்டு ஒற்றடம் கொடுத்துப் பூனை, கீரி, எலி அல்லது மான் ஆகியவற்றில் ஒன்றின் தோலாலான பைக்குள் அந்த நோய் கொண்ட உறுப்பை வைத்துக் கொண்டிருக்கச் செய்க. 16 -18

தோள், மார்பு, திரிகப்பகுதி (இடுப்புப் பகுதியிலுள்ள முதுகுத் தண்டைச் சார்ந்த பகுதி) மற்றும் மன்யாஸ்தம்பம் எனப்படும் கழுத்துப் பகுதியைச் சார்ந்த நரம்பு ஆகியவற்றில் வாத நோய் தோன்றியபோது சாமர்த்தியமுள்ள மருத்துவர் வாந்தி எடுக்கச் செய்தல், மூக்கில் மருந்திடுதல் எனும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 19

### 14. தலையைச் சார்ந்த வாத நோய்க்குச் சிகிச்சை

தலையைச் சார்ந்துள்ள வாத நோய்க்கு சிரோவஸ்தி அல்லது இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் சிகிச்சைகளைச் செய்தால் நோய் தீரும். இம்முறையில் திறமையுடன் எண்ணெயை ஓராயிரம் மாத்திரை அளவு வரை நோயாளி தாங்கியிருக்க வேண்டும். (அதாவது ஆயிரம் நொடிகள் காலஅளவு வரை தலையில் எண்ணெய் மருந்தைத் தேக்கி வைக்கும் சிரோவஸ்தி என்னும் முறையைக் கையாள வேண்டும் என்பதாம்.) 20

### 15. ஏகாங்க, ஸர்வாங்க வாத நோய்களுக்குச் சிகிச்சை

ஓருறுப்பைச் சேர்ந்த வாத நோய் அல்லது உடலுறுப்புக்கள் அனைத்தையும் சார்ந்து தோன்றிய வாத நோய் ஆகியவற்றிற்கு பெரும் காற்றை மலை தடுத்து நிறுத்துவது போல வஸ்தி முறை ஒன்றே நோயைத் தடுக்கக் கூடியதாகும். 21

## 16. வாத நோய் கொண்டவர்கள் பயன்படுத்தத்தக்கவை

எண்ணெய்முறை, உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க் குளியல், வஸ்தி முறை, எண்ணெய் மருந்தைக் கொண்டு பேதியாகச் செய்தல், சிரோவஸ்தி, தலையில் எண்ணெயைத் தடவிக் கொள்ளுதல், எண்ணெயைக் கொண்டு புகை பிடிக்கச் செய்தல், இளம் சூடுள்ள எண்ணெய் மருந்தைக் கொண்டு வாய் கொப்பளிக்கச் செய்தல், எண்ணெய் மருந்தை மூக்கில் இடுதல், மாமிசச்சாறு, பால், மாமிசம், வசை, நெய், எள் எண்ணெய் ஆகிய எண்ணெய் வகைகள், எண்ணெய் கலந்த உணவு, மாதுளை முதலிய புளிப்புச் சுவை கொண்ட பழங்கள், எண்ணெயும் உப்பும் கலந்துள்ள உணவுப் பண்டங்கள், இளஞ்சூடுள்ள மருந்து எண்ணெய் முதலியவற்றை உடல் மேல் ஊற்றிக் கொண்டிருத்தல், காலைப் பிடித்து விடுதல், குங்குமப்பூ, அகில், இலவங்கப்பத்திரி, கோஷ்டம், பெரிய ஏலக்காய், தகரை முதலியவற்றைப் பயன்படுத்துதல், பட்டாடை, கம்பளித்துணி, உரோமங்களைப் போன்ற நூல்களைக் கொண்ட பருத்தி ஆடை முதலியவற்றைக் கொண்டு இறுக்கிக் கட்டுதல், காற்றோட்டம் இல்லாத வெப்பம் அதிகமுள்ள அறையில் வசித்தல், மென்மையான படுக்கையில் படுத்தல், நெருப்பில் சூடு காய்தல், பெண்களின் தொடர்பு அற்றிருத்தல் முதலிய உணவு மற்றும் பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் வாத நோய் கொண்டவர்களுக்கு மிக்க நன்மை தருவதாகும். 22-26

## 17. வாத நோய்க்கு [1]தில்வக கிருதம்

சிவதை, நேர்வாளம், கங்குஷ்டம், [2]சங்கநாகம், கள்ளி, திரிபலை, வாயுவிடங்கம் எனும் இவற்றின் விழுது ஒவ்வொன்றும் ஒவ்வொரு கர்ஷம், பாச்சோத்திப்பட்டை, கம்பில்லம் எனும் இவற்றின் விழுது ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் திரிபலை கஷாயம் இரண்டு ஆடகம் தயிர் இரண்டு ஆடகம் நெய் ஒரு ஆடகம் ஆகிய அனைத்தையும் சேர்த்துக் காய்ச்சவும். இது தில்வககிருதம் எனப்படும். இது வாத நோயாளிக்குப் பேதியாகச் செய்யும் நெய் மருந்தாகும். இதைப் போல தனித்தனியாக அசோகு, பெருவேம்பு ஆகியவற்றுடனும் நெய் மருந்து செய்யலாம். 27

## 18. வாதநோய்க்கு அணு தைலம்

எள்ளிலிருந்து பல காலம் எண்ணெய் எடுத்த செக்கின் கட்டைகளைச் சிறு துண்டுகளாக்கித் தூள் செய்க. பெரிய

1. தில்வகம் - பாச்சோத்தி.
2. சங்கநாகம் - ஒரு வகை நறுமணப் பொருள்.

வாணலி போன்ற பாத்திரத்தில் நீரில் மேற்படி தூளைச் சேர்த்து கஷாயம் காய்ச்சுக. நீரின் மேல் மிதந்து வரும் எண்ணெயைக் கரண்டியாலோ வேறு உபாயத்தாலோ வேறு படுத்துக. பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள்களுடன் அந்த எண்ணெயைச் சேர்த்து எண்ணெய்ப் பக்குவம் செய்க. பக்குவமான இது அணு தைலம் எனப்படும். வாத நோய்க்குச் சிறந்த மருந்தாகும். 28

## 19. வாத நோய்க்கு *ஸஹஸ்ரபாக, சதபாக தைலங்கள்

செடி கொடிகளற்ற வெறும் மண் கொண்ட நிலத்தில் பெரும்பஞ்சமூலச் செடிகளின் உலர்ந்த கட்டைகளை எரிக்கவும். நெருப்பு தானாக அணைந்த பின் சாம்பலை நீக்கவும். விதாரிகந்தாதி கணத்தால் செய்யப்பட்ட எண்ணெயையும் பாலையும் நூறு நூறு குடங்கள் அந்த நிலத்தில் ஊற்றவும். நன்றாக அந்நிலத்து மண் ஒரு நாள் ஊறிய பிறகு எண்ணெய்ப்பசை கொண்டிருக்கும் மண்ணை எடுத்து வெந்நீர் கொண்ட கடாய் போன்ற பாத்திரத்தில் சேர்க்கவும். நீரின் மேல் மிதந்து வந்த எண்ணெயை மெல்ல கையால் வேறு பாத்திரத்தில் எடுத்துக் கொண்டு வாதத்தைப் போக்கும் பத்ரதாரு ஆதிகணப் பொருள்களின் கஷாயம், மாமிசரசம், பால், காடி ஆகியவற்றை ஆயிரத்தில் ஒரு பங்கு வீதம் ஒவ்வொரு முறையும் சேர்த்து ஆயிரம் முறை காய்ச்சுக. இத்துடன் இமயமலைப் பகுதியிலும் தெற்கிலும் தோன்றும் நறுமணமுள்ளவையும் வாதத்தைப் போக்குபவையுமான மூலிகைகளின் விழுதையும் சேர்க்கவும். தைலம் பக்குவமாகும் போது ஆயிரம் அந்தணர் களுக்கு அன்னமிடவும். நன்றாகக் தைலம் தயாரான பிறகு இறக்கி வைத்து தங்கம், வெள்ளி அல்லது மண்ணாலான பாத்திரங்களில் வைத்துப் பத்திரப்படுத்தவும். இது மிகவும் எதிரில்லாத சக்தி வாய்ந்ததும் மன்னர்களுக்குப் பயன்படுத்தத் தக்கதுமான மருந்தாகும். இவ்வாறே இந்த மருந்தை நூறு முறை காய்ச்சினால் அது 'சதபாக தைலம்' எனப்படும். 29

## 20. வாதநோய்க்கு பத்ர லவணம்

ஆமணக்கு, மாவிலங்கை, புங்கன், ஆடாதொடை, சரக்கொன்னை, மணிபுங்கன், கொடிவேலி முதலியவற்றின் பச்சிலைகளைக் கொண்டு இந்துப்புடன் சேர்த்து உரலிலிட்டு நன்கு இடிக்கவும். பிறகு நெய் பானையிலிட்டு (நெய் வைத்துப் பல நாள் பழகிய பானை) சீலைமண் பூசி, பானை மேலும் மண்ணைப் பூசி விரட்டியால் புடம் செய்க. இது 'பத்ரலவணம்' எனப்படும். வாதநோய்களில் இதை பயன்படுத்துக. 30

---

* ஸஹஸ்ரபாகம் - ஆயிரம் முறை (மருந்து) கஷாயப் பொருட்களைக் காய்ச்சுதல்.

### 21. வாத நோய்க்கு காண்ட லவணம்

கள்ளித் தண்டுகள், கண்டங்கத்திரி, இந்துப்பு எனும் இவற்றைச் சேர்த்து நன்றாக அரைத்துப் பானையில் வைத்து நெய், எண்ணெய்,. வசை, மஜ்ஜை ஆகியவற்றைச் சேர்த்து பானையின் மேல் மண்ணைப் பூசி விரட்டியின் தீயால் புடம் போடவும். இது சிநேஹ லவணம் என்றும் காண்டலவணம் என்றும் பெயர் கொள்ளும். 31

### 22. கல்யாணக லவணம்

நீர்த்திப்பிலி, புரசு, கடுகரோகிணி, வில்வம், எருக்கன், கொடிக்கள்ளி, நாயுருவி, பாதிரி, கல்யாண முருங்கை, முன்னை, முருங்கை, கடப்பை, வேம்பு, கொடிவேலி, ஆடாதொடை, புங்கன், மணிபுங்கன், கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி, சேராங்கொட்டை, அழிஞ்சில், வைஜயந்தி (முன்னை), வாழை, பாஷ்பத்வயம், நீர்முள்ளி, பேய்த்துமட்டி, வெள்ளை மாவிலங்கை, அசோகு எனும் இவற்றின் வேர், இலைகளுடன் கிளைகளைப் பச்சையாகக் கொண்டு இவற்றுடன் இந்துப்பு சேர்த்து அரைத்து முன் கூறியபடி பானையில் வைத்து அதன் மேல் மண்பூசி விரட்டியால் புடம் போடவும். பிறகு க்ஷார முறைப்படி க்ஷாரம் எடுத்து ஹிங்கு ஆதி அல்லது பிப்பிலி ஆதி கணப் பொருள்களின் விழுதுடன் சேர்த்துப் பக்குவம் செய்க. இது கல்யாணகலவணம் எனப்படும். இது வாத நோய்கள், குன்மம், மண்ணீரல் வீக்கம், சடராக்னிக் குறைவு, அசீரணம், மூலநோய், சுவையின்மை, இருமல், கிருமி நோய்கள் முதலிய நோய்களில் பருகவோ உணவுடன் (சோற்றுடன்) கலந்து உட்கொள்ளவோ செய்யலாம். 32

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

வாதவியாதி சிகித்ஸிதம் எனும்

நான்காம் அத்தியாயம் முற்றும்.

# ஐந்தாம அத்தியாயம்

## * மகாவாதவியாதி சிகித்ஸிதம்

இனி மகாவாதவியாதி சிகிச்சை முறைகளை தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்த வகையில் விளக்குவோம். 1-2

### 1. வாதரத்த நோய்

சிலர் வாதரத்த நோய் மேல் எழும்பி சீற்றமுற்றது, உள்ளேயே சீற்றமுற்றது என இரு வகைப்படும் எனக் கூறியுள்ளனர். அது சரியல்ல. வாத ரத்தம் என்பது குஷ்ட நோயைப் போல துவக்கத்தில் (தோலையும், மாமிசத்தையும் சார்ந்து) புறத்தே தோன்றிப் பிறகு காலம் செல்லச் செல்ல உடலுக்குள் பரவ கூடியதாகும். (சரகர் வாதரத்தம் இருவகைப்படும் என்று கூறியதை ஸுசுருதர் மறுத்துக் காரணம் கூறுகிறார்). 3

### 2. நோயின் முற்குறிகள்

குருத்தன்மையும், சூடும் உள்ள பொருள்களை உட்கொள்ளுதல், வயறு நிறைய உண்டபின் மீண்டும் ஏதேனும் உட்கொள்ளுதல் முதலியவற்றால் இரத்தம் கெட்டு வாயுவின் வழிகளைத் தடுத்து வாயுவுடன் ஒன்றுபட்டு ஒரே சமயத்தில் வாதத்தாலும் ரத்தத்தாலும் தோன்றக்கூடிய வேதனைகளைத் தோற்றுவிக்கும். (ஆகையால் இந்த நோய் 'வாதரத்தம்' எனப்பட்டது). இது முதலில் கால் கைகளில் நின்று பிறகு உடல் முழுவதும் பரவும்.

இதற்கு முற்குறிகளாவன : ஊசியால் குத்துவது போன்ற வலி, எரிச்சல், அரிப்பு, வீக்கம், மரத்துப்போதல், தோல் கடினமாகுதல், சிரை நரம்பு மற்றும் தமனிகள் துடித்தல், முழங்கால்பகுதி வலுவின்றியிருத்தல், உள்ளங்கால், உள்ளங்கை விரல்கள், முழங்கால், மணிக்கட்டு முதலிய பகுதிகளில் கருநிறமுள்ள சிவந்த வட்டங்களான தடிப்புகள் காணப்படுதல் முதலியவையாகும். நோயில் இந்த இலக்கணங்கள் காணப்பட்ட உடனே தக்க சிகிச்சை பெற வேண்டும். இல்லாவிடில் உறுப்புகளுக்கு ஊறு ஏற்படலாம். 4

---

*** மகாவாதம் - கொடிய வாத நோய்கள் மகாவாத நோய்களாகும். அவற்றிற்கான சிகிச்சையை விளக்குவதால் இந்த அத்தியாயம் மாகவாத வியாதி சிகித்ஸிதம் எனப்படும்**

### 3. நோய் தோன்றக் காரணங்கள்

பொதுவாக வாத ரத்த சீற்றம், தவறான உணவு, பழக்க வழக்கங்கள் கொண்டவர்களுக்கும், மென்மையான உடல் கொண்டவர்களுக்கும், மற்றும் உடல் பருத்து (எந்த வேலையும் செய்யாமல்) சுகமாக வாழ்பவர்களுக்கும் தோன்றுகிறது. 5

### 4. வாதரத்த நோய் துவக்கத்தில் செய்ய வேண்டிய சிகிச்சை

பிராணன் (வலிமை) குறைதல், மாமிசம் குறைதல், நாவறட்சி, காய்ச்சல், நினைவிழத்தல், பெருமூச்சு (இழுப்பு), இருமல், மரத்துப் போதல், சுவையின்மை, உணவு சீராகச் செரிமானமாகாமை, விஸ்தாரமடைதல் (பரவுதல்), குறுகிப் போதல் முதலிய துன்பங்கள் இல்லாத உடல் வலிமையுள்ள, புலனடக்கமுள்ள தக்க சாதனங்களைக் கொண்ட (சிகிச்சைக்குத் தேவையானவற்றைப் பெறக்கூடிய பொருள் வலிமையுள்ள) நோயாளிக்கு சிகிச்சை செய்ய வேண்டும். 6

### 5. வாதம் மிகுதியாகச் சீற்றமடைந்துள்ள வாதரத்த நோய்க்குச் சிகிச்சை

வாதம் அதிக அளவில் சீற்றமுற்ற வாதரத்த நோயின் துவக்கத்தில் வழி தடுக்கப்படுவதால் வாயு மிகவும் சீற்றமடைந்து வறண்டுள்ளபோது தோஷமற்ற உறுப்புப் பகுதியிலிருந்து சீற்றமடைந்து கெட்ட ரத்தத்தை சிறிது சிறிதாக வெளியேற்ற வேண்டும். அதனால் வாதம் சீற்றமுறுவது தடுக்கப்படும். பிறகு வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாக செய்தல் எனும் முறைகளைப் பயன்படுத்தி ஸம்ஸர்ஜன முறையில் பேயம், விலேபி முதலிய முறைகளில் உணவு உட்கொள்ளச் செய்க. அல்லது ஆட்டுப்பாலில் பாதி அளவு நல்லெண்ணெய், ஒரு கர்ஷம் அளவு அதிமதுரம் கலந்தோ அல்லது மூவிலையுடன் கூடிய பாதியளவு எண்ணெயை ஆட்டுப்பாலில் கலந்தோ சர்க்கரை, தேன் சேர்த்து சுவை உண்டாக்கிப் பருகச் செய்க. அல்லது சுக்கு, சிருங்காடகம் மற்றும் பூலாங்கிழங்கு ஆகியவற்றுடன் பாதியளவு நல்லெண்ணெய் கலந்து ஆட்டுப் பாலைப் பருகச் செய்க. அல்லது வெண்சிவதை, சித்தரத்தை, ஓரிலை, உவகை, தண்ணீர் விட்டான் கிழங்கு, நெருஞ்சி, * தசமூலம் ஆகியவற்றுடன் பாதி யளவு எண்ணெய் கலந்து ஆட்டுப் பாலைப் பருகச் செய்க. எட்டு மடங்கு தசமூல கஷாயத்துடன் செய்யப்பட்ட பாலில்

---

* **தசமூலம்** - வில்வவேர், பெருவாகைவேர், குமிழம் வேர், பாதிரிவேர், முன்னைவேர், ஓரிலை, மூவிலை, கண்டங்கத்தரி, முள்ளங்கத்தரி வேர்கள், நெருஞ்சில் ஆகியவை.

அதிமதுரம், கர்கடகசிருங்கி, நெருஞ்சி, ஸரளமரம், பத்ரதேவதாரு, வசம்பு, சித்தரத்தை ஆகியவற்றின் விழுதைக் கலந்து தைல பக்குவம் செய்து பருகவும். மற்றும் உடல் மேல் தேய்த்து குளிக்கவும் பயன்படுத்துக. தண்ணீர்விட்டான் கிழங்கு, நாயுருவி, ஓமம், அதிமதுரம், பால்முதுக்கன் கிழங்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, திருணபஞ்சமூலம் ஆகியவற்றின் கஷாயம் அல்லது அவ்வாறே காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுது ஆகியவை சேர்த்து காய்ச்சிய எண்ணெய் அல்லது நூறு முறை காய்ச்சிய பலாதைலம் என்பன வற்றை பயன்படுத்துக. தசமூலத்துடன் காய்ச்சிய பால் அல்லது புளிப்புச்சுவையுள்ள சுரை என்னும் மது ஸௌவீரம் அல்லது துஷோதகம் ஆகியவற்றை உடல் மேல் ஊற்றிக்கொண்டிருக்கவும். யவதானியம், அதிமதுரம், ஆமணக்கு, எள், சாரடை ஆகிய வற்றை விழுதாக அரைத்து மேல் பூச்சாக பயன்படுத்தவும். யவ தானியம், கோதுமை, எள், பயறு, உளுந்து ஆகிய இவ்வைந்தை யும் தூளாக்கித் தனித்தனியாக காகோலி, க்ஷீரகாகோலி, ஜீவகம், ரிஷபகம், சிற்றாமுட்டி, பேராமுட்டி, தாமரைக் கிழங்கு, தாமரைத்தண்டு, ஓரிலை, கர்கடக சிருங்கி, சர்க்கரை, சிற்றரத்தை, வசம்பு ஆகியவற்றின் விழுது சேர்த்து நெய், எண்ணெய், வசை (நிணநீர்), கொழுப்பு, பால் ஆகியவற்றாலான ஐந்து வகை பாயஸம் ஆகியவற்றால் ஒற்றடம் கொடுக்க வேண்டும். அல்லது மேல் பூச்சாகப் பூசலாம். எண்ணெய்ப்பொருள் உள்ள பழங்களை கொழுக்கட்டை போலாக்கி அல்லது யவதானியம், கோதுமை, எள், பயறு ஆகியவற்றின் தூளுடன் மீன் மாமி சத்தைக் கலந்து வேஸவாரம் செய்து அல்லது வில்வக்கதுப்பு, தகரை, தேவதாரு, ஸரளமரம், சித்தரத்தை, அரேணுக விதைகள், கோஷ்டம், சதபுஷ்பம், ஏலக்காய், சுரை எனும் மது, தயிர், தயிர்த்தெளிவு ஆகியவை கலந்து அதனால் ஒற்றடம் கொடுத்தல், மேல் பூச்சு பூசுதல் எனும் சிகிச்சைகளை செய்க. துரிஞ்சிச்சாறு, இந்துப்பு, நெய்,தேன், முருங்கை வேர், எள் ஆகியவற்றை சேர்த்து விழுதாகச் செய்து அதை மேல் பூச்சுக்குப் பயன்படுத்த வேண்டும். வாதம் முக்கியமாகச் சீற்றமடைந்த வாதரத்த நோய்க்கு இச்சிகிச்சை மிக்க பயன்தருவதாகும். 7

### 6. பித்தம் மிகுதியாகச் சீற்றமடைந்த வாதரத்த நோய்க்குச் சிகிச்சை

பித்தம் அதிகமாகச் சீற்றமடைந்துள்ள வாதரத்த நோயில் திராட்சை, சரக்கொன்றை, காயபலம், பால்முதுக்கன், அதிமதுரம், சந்தனம், குமிழன் ஆகியவற்றின் கஷாயத்தில் சர்க்கரையும் தேனும் கலந்து இனிப்புச் சுவையுள்ளதாகச் செய்து பருகச் செய்க. அல்லது தண்ணீர் விட்டான் கிழங்கு, அதிமதுரம், பேய்ப்புடல் இலை, திரிபலை, கடுகரோகிணி ஆகியவற்றின் கஷாயம் சீந்தில் கொடி கஷாயம் சர்க்கரையும் தேனும் கலந்த பித்தக்காய்ச்சலைப் போக்கும் சந்தனாதி கூட்டுப் பொருள்களின் கஷாயம் காகோலி முதலிய கூட்டுப் பொருள்கள் பேய்ப்புடல் முதலிய கூட்டுப்பொருள்கள் மற்றும் திரிபலை முதலியவற்றின் கஷாயம் அல்லது இவற்றின் விழுதுடன் செய்த கிருதம் (நெய்மருந்து) ஆகியவற்றைப் பருகச் செய்க. தாமரைக் கிழங்கு, தாமரைத்தண்டு, வெண்சந்தனம், பதுமகம் ஆகியவற்றின் கஷாயத்தில் பாதி அளவு பால் கலந்து உடல் மேல் தாரையாக ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். பால், கருப்பஞ்சாறு, தேன், சர்க்கரை மற்றும் அரிசி கழுவிய நீர் அல்லது திராட்சை கருப்பஞ்சாறு கலந்து அதில் மஸ்து, காடி, தேன் ஆகியவற்றைக் கலந்து உடல் மேல் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்க. காகோலி, க்ஷீரகாகோலி முதலிய ஜீவனீயக் கூட்டுப் பொருள்களுடன் நெய் அல்லது காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுது அல்லது கஷாயத்தில் செய்த நெய் மருந்து ஆகியவற்றில் ஒன்றைக் கொண்டு உடலின் மேல் தேய்த்து எண்ணெய் குளியல் செய்ய வைக்கவும்.

சம்பா அறுபதாங்குறுவை ஆகியவற்றின் தாள், 'நாள்' எனப்படும் ஒரு வகை நறுமணமுள்ள பொருள், பிரம்பு, தாளிசபத்திரி, சிருங்காடகம், தாமரைவிதை, மஞ்சள், கைரிகம், பாசி, தாமரை இலை ஆகியவற்றைக் காடியுடன் அரைத்து நெய் சேர்த்து மேல் பூச்சாகப் பயன்படுத்துக. வாதம் அதிகமாகச் சீற்றம் பெற்ற வாத ரத்த நோயிலும் இதை இளஞ்சூடுள்ளதாக்கி மேல் பூச்சாகப் பயன்படுத்தலாம். 8

### 7. இரத்தம் மிகுதியாக சீற்றமுற்ற வாதரத்த நோய்க்குச் சிகிச்சை

இரத்தம் மிகவும் சீற்றம் பெற்ற வாதரத்த நோயிலும் இதே முறையைப் பின்பற்றுவதுடன் பல முறை இரத்தத்தை

வெளியேற்றிக் குளுமைத் தன்மையைத் தோற்றுவிக்கும் மேல் பூச்சு மருந்துகளைப் பயன்படுத்துக. 9

**8. கபம் மிகுதியாகச் சீற்றமுற்ற வாதரத்த நோய்க்குச் சிகிச்சை**

கபம் மிகுதியாகச் சீற்றமுற்ற வாதரத்த நோயில் நெல்லிக்காய், மஞ்சள் எனும் இவ்விரண்டின் கஷாயத்தில் தேனைச் சேர்த்துப் பருகச் செய்க. அல்லது திரிபலை கஷாயத்தைப் பருகச் செய்க. அதிமதுரம், சுக்கு, கடுக்காய், கடுகரோகிணி ஆகியவற்றைக் கலந்து விழுதாக்கித் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது வெல்லமும் கடுக்காயும் சேர்த்துப் பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்க.

எள் எண்ணெய், பசுவின் சிறுநீர், க்ஷாரோதகம் (க்ஷாரம் கலந்த நீர்), நீர், சுரை என்னும் மது, சுக்தம் எனும் மது மற்றும் கபத்தைப் போக்கும் மூலிகைகளின் கஷாயத்துடன் பருகச் செய்க. அல்லது சரக்கொன்றை முதலிய கூட்டுப் பொருள் களாலான கஷாயத்தை இளஞ்சூட்டுடன் உடல் மேல் தாரையாக ஊற்றச் செய்க. மஸ்து, பசுவின் சிறுநீர், சுரை, சுக்தம், அதி மதுரம், நன்னாரி, பதுமகம் ஆகியவற்றுடன் செய்த நெய் மருந்தை மேல் பூச்சாகப் பயன்படுத்துக. நல்லெண்ணெய், மற்றும் கடுகு, ஆளிவிதை, யவதானியம் ஆகிய இவற்றின் தூளுடன் நரிவிலி, விளாம்பழம், தேன், முருங்கை ஆகியவற்றைக் கலந்து க்ஷாரோதகம் மற்றும் பசுவின் சிறுநீருடன் விழுதாக்கி மேல்பூச்சாகப் பயன்படுத்துக. வெண்கடுகு, விழுது, எள்ளும் அமுக்கராங்கிழங்கும் சேர்த்து அரைத்த விழுது, சாரப்பருப்பு, நரிவிலி, விளாம்பழம் ஆகியவற்றின் விழுது, தேன், முருங்கை, சாரடை ஆகியவற்றின் விழுது, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகரோகிணி, ஓரிலை, கண்டங்கத்தரி முள்ளுக் கத்தரி, ஆகியவற்றைப் பாலுடன் அரைத்து யவதானியப் பொரி மாவைக் கலந்த விழுது எனும் இவற்றில் ஒன்றை மேல் பூச்சாகப் பயன்படுத்துக. 10

**9. தோஷங்கள் கலந்த ஸந்நிபாத சிகிச்சை**

வாதபித்தகபங்கள் எனும் தோஷங்களில் இரண்டு கலந்தோ மூன்றும் கலந்தோ தோற்றுவித்த வாதரத்த நோயில் தோஷங் களுக்குத் தனித்தனியாகக் கூறப்பட்ட சிகிச்சைகளை கலந்து பயன்படுத்துக. 11

## 10. வாத ரத்த நோய்க்குச் சிகிச்சை முறைகள்

வாத ரத்த நோய் வகைகள் அனைத்திலும் வெல்லமும், கடுக்காயும் கலந்த மருந்தைப் பயன்படுத்த வேண்டும். அல்லது நாள் தோறும் ஐந்து அல்லது பத்து திப்பிலிகள் வீதம் துவங்கி ஒவ்வொரு திப்பிலி வீதம் அதிகமாக்கிக் கொண்டே பத்து நாள்கள் வரை (பதினைந்து திப்பிலிகளாகும் வரை) பாலுடனோ நீருடனோ அரைத்து உணவுடன் உட்கொள்ளச் செய்து பதினோறாம் நாள் முதல் ஒவ்வொன்றாக குறைத்துக் கொண்டே வரவும். இம்முறை பிப்பிலீ வர்தமானகம் எனப்படும். இம்முறை வாதரத்தம், விஷக்காய்ச்சல், சுவையின்மை, பாண்டு நோய், மண்ணீரல் வீக்கம், மூல நோய், இருமல், இழுப்பு, வீக்கம், சோகை, சடராக்னிக் குறைவு, இதய நோய், வயிற்று நோய் ஆகியவற்றைப் போக்கும்.

வாதரத்த நோய்களில் ஜீவனீய கணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்களின் விழுதை பாலும் நெய்யும் சேர்த்துப் பக்குவப்படுத்தி அந்நெய் மருந்தை மேல் பூச்சுக்குப் பயன்படுத்த வேண்டும்.

காட( நாகபலை, சந்தனம், பெருங்குரும்பை, கோரைக்கிழங்கு, சாரைப்பருப்பு, தண்ணீர்விட்டான் கிழங்கு, கொட்டிக்கிழங்கு, தாமரைவிதை, அதிமதுரம், கடுகரோகிணி எனும் இவற்றைப் பாலுடன் அரைத்து நெய்யின் மேல் தெளிவு கலந்து * மெய்ப் பூச்சாகப் பயன்படுத்துக. அல்லது மருதோன்றி, ஆடாதொடை, சிற்றாமுட்டி, பேராமுட்டி, கீரைப்பாலை முதலியவற்றை ஆட்டுப்பாலுடன் அரைத்து விழுதாக்கி அல்லது குமிழன், அதிமதுரம், யவதானியப் பொரிமா ஆகியவற்றைக் கலந்து பசும்பாலுடன் அரைத்து விழுதாக்கி மேல் பூச்சாகப் பயன்படுத்துக. அல்லது தேன்மெழுகு, மஞ்சிட்டி, ஸர்ஜரஸம், நன்னாரி மற்றும் பால் சேர்த்துச் செய்த பிண்டத்தைலம் என்பதைக் கொண்டு எண்ணெய்க்குளியல் செய்விக்கவும்.

வாதரத்த நோய் வகைகள் அனைத்திலும் நெல்லிச்சாற்றுடன் பழைய நெய்யைப் பக்குவம் செய்து பருகச் செய்க. ஜீவனீய கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களைப் பழைய நெய்யுடன் பக்குவம் செய்து உடல் மேல் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்க. அல்லது காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின்

---

* **மெய்ப்பூச்சு** - உடல் மேல் பூசுதல்.

விழுது மற்றும் அக்கூட்டுப் பொருள்களின் கஷாயம் சேர்த்துச் செய்த பழைய நெய் அல்லது காட்டுப் பாகலின் கஷாயத்தை பழைய நெய்யுடன் பக்குவம் செய்து மேல்பூச்சு, எண்ணெய் குளியல், மேல் ஊற்றிக் கொண்டிருத்தல், உணவுடன் உட்கொள்ளுதல் முதலியவற்றிற்குப் பயன்படுத்துக. அவ்வாறே பலா தைலத்தையும் பயன்படுத்தலாம். பழைய சம்பா அரிசி, அறுபது நாள் குறுவை, மற்றும் கோதுமை, பால், காட்டு விலங்குகளின் புலால் சாறு, புளி சேர்க்காத பயற்றின் கஞ்சி முதலியவற்றை உட்கொள்ளச் செய்க. இடைவிடாது இரத்தத்தைத் தக்கமுறையில் வெளியேற்ற வேண்டும். அவ்வாறே நோய் (தோஷங்கள்) முற்றிய நிலையில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், அநுவாஸன வஸ்தி எனும் முறைகளையும் பயன்படுத்த வேண்டும். 12

**11. வாதரத்தத்தில் தோன்றும் துன்பத்தைப் போக்கும் முறை**

பேய்ப்புடல் இலை, திரிபலை, தண்ணீர்விட்டான் கிழங்கு, சீந்தில் கொடி, கடுகரோகிணி ஆகியவற்றின் கஷாயத்தைப் பருகச் செய்வதால் வாதரத்த நோயில் தோன்றும் வேதனை விரைவில் தணியும். 13

இவ்வாறு கூறப்பட்ட உபாயங்களால் புதிதாகத் தோன்றிய வாத ரத்த நோய்க்கு மருத்துவர் எளிதில் சிகிச்சை செய்யலாம். தோன்றிய நாட்கள் கடந்திருந்தால் அந்நோய் 'யாப்யம்' எனப்படும். 14

**12. வாதரத்த நோயாளிக்கு இதமானவை**

ஒற்றடம் கொடுத்தல், மருந்தை உடல் மேல் ஊற்றிக் கொண்டிருத்தல், மேல்பூச்சு, எண்ணெய்க்குளியல், காற்றோட்டம் மிகக் குறைந்துள்ள மனத்திற்கு மகிழ்ச்சியூட்டும் இல்லம், மென்மையான படுக்கை, மெல்ல மெல்ல மென்மையாக உடலைப் பிடித்து விடுதல் ஆகிய பணிவிடைகள் வாதரத்த நோயாளிக்கு மிக்க நன்மை தரும். 15-16

**13. வாதரத்த நோயில் விலக்க வேண்டியவை**

உடற்பயிற்சி, கலவி, சினம், உஷ்ணமான புளிப்பு, உவர்ப்புச் சுவைகளைக் கொண்ட உணவு, பகல் தூக்கம், * அபிஷ்யந்தியும் குருத்தன்மையும் கொண்ட உணவு முதலியவற்றை வாதரத்த நோய் கொண்டவர் விலக்க வேண்டும். 17

---

* **அபிஷ்யந்தி** - உடலிலுள்ள கபம், ரஸம், மாமிசம் முதலிய தாதுக்களை இறுகச் செய்யும் பொருட்களில் சிறந்தது.

## 14. அபதானக நோய்க்குச் சிகிச்சை

அபதானகம் எனும் நோயால் துன்பமடைந்த நோயாளி கண்பார்வை இழக்காமல் இருத்தல், புருவங்கள் கோணாமல் இருத்தல், ஆண் குறி விரைத்துக் கொள்ளாமல் இருத்தல், வியர்வையும் உடல் நடுக்கமும் தோன்றாமல் இருத்தல், ஒன்றுக்கொன்று தொடர்பில்லாத பிதற்றல் தோன்றாமல் இருத்தல், படுக்கையிலிருந்து விழாமல் இருத்தல், பஹிராயாமம் எனும் ஆக்ஷேபகவாத வகை நோய் தோன்றாமல் இருத்தல் என்ற நிலைகளில் உள்ளவற்றிற்கு சிகிச்சை செய்ய வேண்டும்.

முதலில் எண்ணெய் மருந்துகளை உடலின் மேல் தேய்த்து உடலை நன்றாக வியர்க்கச் செய்ய வேண்டும். தலையைத் தூய்மைப்படுத்துவதற்காக தீக்ஷ்ணமான மருந்துகளால் அவபீடன நசியம் செய்விக்க வேண்டும். அதன் பிறகு மூவிலை முதலிய கூட்டுப்பொருள்களின் கஷாயம், மாமிசச்சாறு, பால், தயிர் முதலியவை சேர்த்துச் செய்த தூய நெய்யை உட்கொள்ளச் செய்க. இவ்வாறு செய்வதால் வாதம் அதிக அளவில் பரவாது. பிறகு பத்ரதாரு முதலிய வாதத்தைப் போக்கும் கூட்டுப்பொருள்கள், யவதானியம், இலந்தை, கொள்ளு, அநூப மற்றும் நீர்வாழ் உயிரினங்களின் புலால் ஆகியவற்றை கலந்து கஷாயம் காய்ச்சுக. அதில் புளிப்புசுவையுள்ள பொருள்கள், பால் ஆகியவற்றைச் சேர்த்து காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதுடன் நெய், எண்ணெய், வசை, கொழுப்பு முதலியவற்றையும் சேர்த்துப் பக்குவம் செய்க. இந்த த்ரைவிருத கிருதமானது அபதானக நோய் கொண்டவருக்கு உடல் மேல் ஊற்றுதல், எண்ணெய் குளியல், நன்றாக மூழ்கிக் குளித்தல், பருகுதல், உணவுடன் உட்கொள்ளுதல், மூக்கில் நசிய மருந்தாகப் பயன்படுத்துதல் முதலியவற்றிற்கு ஏற்றவை. அத்துடன் முறைப்படி உடல் வியர்க்கவும் செய்ய வேண்டும். வாயுவின் சீற்றம் அதிகமானால் உமி அல்லது விரட்டிச் சாம்பல் நிறைந்த இளஞ்சூடுள்ள குழியில் நோயாளியைக் கழுத்து வரை ஆமிழ்ந்து இருக்கச் செய்யவும். அல்லது கம்மான் உலையின் மேல் அல்லது பாறை மேல் சுரை என்னும் மது ஊற்றி நனைத்து அதன் மேல் புரச இலையைப் பரப்பி அதன் மீது படுத்திருக்கச் செய்க. அல்லது எள், அரிசி, உளுந்து இம்மூன்றையும் சேர்த்துப் பக்குவம் செய்து இளஞ்சூடுள்ள அந்தப் பொங்கல் போன்ற சோற்றாலோ, வேஸவாரம் எனும் இளஞ்சூடுள்ள புலால் கலந்த உணவாலோ, பாயசத்தாலோ ஒற்றடம் கொடுத்து உடலை வியர்க்கச் செய்க.

முள்ளங்கி, ஆமணக்கு, காட்டுத் துளசி, கள்ளி, சங்கினி ஆகியவற்றுடன் காய்ச்சிய எண்ணெய் மருந்தை அபதானக நோய் கொண்டவருக்கு உடலின் மேல் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்க.

உணவு உட்கொள்ளாமல் இருக்கும்போது மிளகு, வசம்பு கலந்த புளிப்புத் தயிர் அல்லது எண்ணெய், நெய்,* வசை, தேன் ஆகியவற்றைப் பருகச் செய்தால் அபதானக நோய் தணியும். இம்முறைகள் வாத சீற்றத்தால் தோன்றும் அபதானக நோய்க்கு மட்டும் பயன்படுத்தத்தக்கது. மற்ற (கப பித்த) தோஷங்களுடன் கலந்த அபதானகத்திற்கு தோஷங்களுக்கு ஏற்ற சிகிச்சை முறைகளைக் கலந்து செய்ய வேண்டும். தோஷத்தின் வேகம் தணியும் போது அவபீடனம் எனும் நசிய முறையைப் பயன்படுத்த வேண்டும். சேவல், நண்டு, கருநிற மீன், முதலை, பன்றி முதலியவற்றின் வசை ஆகியவற்றை உட்கொள்ளச் செய்க. அல்லது வாதத்தைப் போக்கும் பொருள்கள் கலந்து காய்ச்சிய பால் அல்லது யவதானியம், இலந்தை, கொள்ளு, முள்ளங்கி, தயிர், நெய், எண்ணெய் முதலியவற்றுடன் செய்த யவாகூ எனும் கஞ்சியை உட்கொள்ளச் செய்க.

பத்து நாட்களில் நோயின் வேகம் தணியாவிடில் அபதானக நோயாளிக்கு எண்ணெய் மருந்து, பேதியாகச் செய்யும் முறை, ஆஸ்தாபன அநுவாஸன வஸ்தி முறைகள் முதலியவற்றால் சிகிச்சை செய்ய வேண்டும். வாத வியாதி சிகிச்சை முறையுடன் 'ரக்ஷா கர்மா' எனும் முறையையும் பயன்படுத்த வேண்டும். 18

15. பக்கவாதத்திற்குச் சிகிச்சை

பக்கவாதத்தால் துன்புறும் நோயாளி உடல் அல்லது உறுப்பு உலர்ந்து போகாமல் வேதனையுடன் கூடியிருந்த போதும், அவ்வாறே புலனடக்கமும் சிகிச்சைக்குரிய பொருள்களை எளிதில் பெறக்கூடியவரானபோதும் அத்தகையவருக்குச் சிகிச்சை செய்ய வேண்டும். முதலில் எண்ணெய் மருந்துகளைப் பயன்படுத்துதல், உடல் வியர்க்கச் செய்தல் ஆகியவற்றுடன் அநுவாஸன, ஆஸ்தாபன முறைக்ளைப் பயன்படுத்தி மென்மையான மருந்துகளால் உடல் தூய்மை பெறச் செய்க.

* வசை - நிணநீர்

தக்க நேரம் கடந்து போகாமல் [1]ஆக்ஷேபகம் நோய்க்கு கூறிய சிகிச்சையைச் செய்ய வேண்டும். சிறப்பாக இந்த நோயில் மஸ்திஷ்க்ய (மூளையைச் சார்ந்த) சிரோவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே எண்ணெய் குளியலுக்கு அணுதைலமும், உபநாஹ (ஒற்றடம் கொடுத்தல்) த்திற்குச் சால் வணமும், அநுவாஸன வஸ்திக்கு பலா தைலமும் பயன்படுத்த வேண்டும். தாமதம் செய்யாமல் இவ்வாறு மூன்று அல்லது நான்கு மாதங்கள் வரை சிகிச்சை செய்ய வேண்டும். 19

## 16. [2] மன்யாஸ்தம்பத்திற்குச் சிகிச்சை

தாடைப்பிடிப்பு ஆகிய மன்யாஸ்தம்ப நோய்க்கும் முறையையே பயன்படுத்த வேண்டும். சிறப்பாக வாத கபங்களைப் போக்கும் வறட்சி கொண்ட பொருட்களால் நசியம் இடுதல், உடல் வியர்க்கச் செய்தல் எனும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். 20

## 17. அபதந்திரக சிகிச்சை

அபதந்திரக நோயால் துன்புறும் நோயாளிக்கு லங்கணம் (பட்டினி கிடத்தல்) செய்விக்கக் கூடாது. வாந்தி எடுக்கச் செய்தல், அநுவாஸன, ஆஸ்தாபன முறைகள் ஆகியவற்றைப் பயன்படுத்தக் கூடாது. வாதம் மற்றும் கபத்தால் தடுக்கப்பட்ட சுவாசத்தை தீக்ஷ்ணமான பிரதமக நசிய முறையால் தணியச் செய்ய வேண்டும். தும்புரு (நேபாள தனியா), புஷ்கரமூலம், பெருங்காயம், புளிவஞ்சி, கடுக்காய், இந்துப்பு, பிடாலவணம், ஸர்ஜலவணம் ஆகியவற்றின் தூள் மற்றும் யவதானியத் தூளுடன் செய்த கஷாயத்தில் ஐம்பது கடுக்காய்கள், இரண்டு பலம் ஸௌவர்சல உப்பு, நான்கு மடங்கு பால் கலந்து ஒரு பிரஸ்தம் நெய்யுடன் செய்த மருந்தைப் பருகச் செய்க. மற்றும் வாத கபங்களைப் போக்கும் முறைகளைப் பின்பற்றவும். 21

## 18. அர்தித வாத சிகிச்சை

அர்தித வாதத்தால் துன்புறும் நோயாளி வலிமை கொண்டவராயும் சிகிச்சைக்கு உரியவற்றைப் பெறக்கூடியவ ராயும் உள்ள போது வாத நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை

1. **ஆக்ஷேபகம்** - உடல், கைகால்களில் உண்டாகும் 'இசிவு' அல்லது வலிப்பு நோய்.

2. **மன்யாஸ்தம்பம்** - கழுத்து நரம்புச்

முறைகளைக் கையாள வேண்டும். அவ்வாறே மஸ்திஷ்க்ய சிரோவஸ்தி முறையாலும், மூக்கில் மருந்திடுதல், புகை போடுதல், ஒற்றடம் கொடுத்தல், எண்ணெய் மருந்து, நாடீஸ்வேத முறையில் உடல் வியர்க்கச் செய்தல் எனும் முறைகளாலும் சிறப்பாக சிகிச்சைச் செய்ய வேண்டும். திருணபஞ்சமூலம், பெரும்பஞ்ச மூலம், காகோலி முதலான கூட்டுப் பொருள்கள், விதாரிகந்தா முதலான கூட்டுப்பொருள்கள், ஔதகம், நீர்ப்பாங்கான நிலத்தில் வாழும் உயிரினங்களின் புலால், நீர்ப்பாங்கான நிலத்தில் தோன்றும் கிழங்குகள் அனைத்தையும் ஒன்று சேர்த்து இரண்டு துரோணங்கள் நீரும் ஒரு துரோணம் பாலும் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி மீண்டும் ஒரு பிரஸ்தம் எண்ணெய் கலந்து அந்த எண்ணெய் பாலுடன் கலந்து விட்டதும் நெருப்பின் மீதிருந்து இறக்கி குளிர்ந்த பின் கடைய வேண்டும். இவ்வாறு எண்ணெய் கலந்த நெய் எடுத்து அத்துடன் காகோலி முதலிய கூட்டுப்பொருள் காட்டு உளுந்து ஆகியவற்றின் விழுது சேர்த்துப் பாலுடன் பக்குவம் செய்க. இந்த எண்ணெய் கலந்த பாலை அர்தித நோயாளிகள் பருகுதலுக்கும் எண்ணெய் குளியலுக்கும் பயன்படுத்தலாம். கண்களில் தர்ப்பண மருந்தாக பயன்படுத்துவதற்கு எண்ணெய் கலக்காத நெய் மருந்தைப் பயன்படுத்துக. 22

## 19. பலவகை வாத நோய்களுக்குச் சிகிச்சை

கிருத்ரஸி, விச்வாசீ, குரோஷ்டுகசிரம், கஞ்சம், பங்குலம், வாத கண்டகம், பாததாஹம், பாதஹர்ஷம், அவபாஹுகம், பாதிர்யம், தமனீகதம் முதலிய வாத நோய்களுக்கு அவபாஹு கத்தை தவிர மற்றவற்றிற்கு சிரோவேத முறையைப் பயன்படுத்தி வாத நோய்களுக்கான சிகிச்சையைச் செய்ய வேண்டும். 23

## 20. காது வலிக்கு மருந்து

காது வலி தோன்றினால் எண்ணெய், தேன், இந்துப்பு ஆகிய இம்மூன்றையும் இளஞ்சூடுள்ள இஞ்சியின் சுரஸத்தில் சேர்த்துக் காதில் விட வேண்டும். அல்லது ஆட்டின் சிறுநீர், தேன், எண்ணெய் அல்லது துரிஞ்சிச்சாறு, மாதுளைச்சாறு, புளிச்சாறு மற்றும் பசுவின் சிறுநீருடன் காய்ச்சிய எண்ணெய் அல்லது புளிக்காடி (சுக்தம்), சுரை எனும் மது, மோர், பசுவின் சிறுநீர், இந்துப்பு கலந்து காய்ச்சிய எண்ணெயைக் காதில் விடவேண்டும். நாடீஸ்வேத முறையைப் பயன்படுத்தி உடல் வியர்க்கச் செய்க. மற்றும் வாத நோய்க்கான சிகிச்சை முறைகளைப் பயன்படுத்துக. 24

## 21. [1]தூந் [2]பிரதூந் சிகிச்சை

தூந் அல்லது பிரதூந்யில் ஸ்நேக லவணத்தையோ, திப்பிலி முதலிய கூட்டுப் பொருள்களின் தூளையோ வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க.. அல்லது பெருங்காயம், யவக்ஷாரம் ஆகியவற்றைத் தகுந்த அளவு நெய்யுடன் சேர்த்து உட்கொள்ளச் செய்க. வஸ்தி முறையையும் பயன்படுத்துக. 25

## 22. ஆத்மான (வயிற்று உப்புசும் (அ) பொருமல்) சிகிச்சை

ஆத்மான நோயில் பட்டினி கிடத்தல் (லங்கனம்), சூடான உள்ளங்கையால் தேய்த்தல், சடராக்னியை வளர்க்கும் சூரணங்கள், பலவர்த்தி, பஞ்சகோலம் முதலான சடராக்னியை வளர்க்கும் மருந்துகள் முதலியவற்றைப் பயன்படுத்துதல் எனுமிவற்றுடன் வஸ்தி முறையையும் செய்விக்க வேண்டும். பட்டினி கிடந்தபின் உணவுடன் கொத்துமல்லி விதை சீரகம் முதலான சடராக்கினியை வளர்க்கும் பொருள்களைச் சேர்த்து உணவை உட்கொள்ளச் செய்து கொள்ளுதல் [3]பிரத்யாத் மானத்தில் வாந்தி எடுக்கச் செய்தல், பட்டினிகிடத்தல் மற்றும் சடராக்கினியை வளர்க்கும் பொருள்கள் ஆகியவற்றை பயன்படுத்துக. 26

## 23. வாத நோய்களுக்கு [4]உறிங்வாதி சூரணம்

பெருங்காயம், சுக்கு, மிளகு, திப்பிலி, வசம்பு, ஓமம், கொத்துமல்லிவிதை குராஸானி, ஓமம், மாதுளை, புளி, வட்டத்திருப்பி, கொடிவேலி, யவக்ஷாரம், இந்துப்பு, பிடாலவணம், ஸௌவர்சலவணம், ஸர்ஜக்ஷாரம், திப்பிலி மூலம், புளிவஞ்சி, பூலாங்கிழங்கு, புஷ்கரமூலம், ஹவுபேரம் (இமயமலைச்சாரலில் மட்டும் கிடைப்பது), செவ்யம், சீரகம், கடுக்காய் எனும் இவற்றைத் தூளாக்கித் துரிஞ்சிப்பழச் சாற்றில் பல முறை பாவனை செய்து ஒவ்வொரு

---

1. தூந் - குடலின் மேற்புறத்திலிருந்து கீழ்நோக்கிப் பரவுகின்ற ஒருவகை வாத நோய்.

2. பிரதூந் - ஆசனவாய் பக்கத்தில் தொடங்கி இரைப்பையின் பக்கமாக மேல்நோக்கி பரவுகின்ற ஒருவகை வாத நோய்.

3. பிரத்யாத்மானம் - தொப்புளுக்கு அருகில் மட்டும் உண்டாகும் வயிற்றுப் பொருமல்.

4. உறிங்கு - பெருங்காயம்.

* *கர்ஷம் அளவுள்ள மாத்திரைகளாகச் செய்க. வாதநோயால் துன்புறும் நோயாளி காலையில் ஒவ்வொரு மாத்திரை வீதம் நாள்தோறும் உட்கொண்டு வந்தால் இருமல், இழுப்பு, குன்மம், பெருவயிறு, சுவையின்மை, இதயநோய், ஆத்மானம், விலாவலி, வயிற்றுவலி, வஸ்தி சூலை, ஆநாஹம், சிறுநீர்த்தடை, மண்ணீரல்வீக்கம், மூலநோய், தூநீ, பிரதூநீ முதலிய நோய்கள் தணியும்.* 27-28

**24. மேலும் சில வாத நோய்களுக்குச் சிகிச்சை**

வேறு தோஷங்களுடன் சேராத வாதநோய் கப பித்தங்களுடன் சேர்ந்த வாத நோய் அல்லது ரசம், இரத்தம், மாம்சம், கொழுப்பு, எலும்பு முதலிய தாதுக்களால் சூழப்பட்ட வாதம் ஆகிய வாத நோய் வேற்றுமைகளை நோயாளியின் உடலில் உள்ள இலக்கணங்களை நன்கு ஆராய்ந்து கண்டு கொள்ள வேண்டும். ஒன்றுக்கொன்று விரோதம் இல்லாத முறையில் சிகிச்சையைக் கையாள வேண்டும். 29

**25. கொழுப்பால் சூழ்ந்த வாதத்திற்குச் சிகிச்சை**

கொழுப்பால் சூழ்ந்துகொள்ளப்பட்ட வாதத்தில் நோயாளியின் உடலில் மிக்க வலியும் கடினமான குளுமையுமுள்ள வீக்கங்களும் தோன்றும். அதற்கு வீக்கத்திற்குச் சொன்ன முறைப்படி சிகிச்சையை செய்ய வேண்டும். 30

**26. கபத்தாலும், கொழுப்பாலும் கொள்ளப்பட்ட வாத நோய்க்குச் சிகிச்சை**

கபத்தாலும் கொழுப்பாலும் சூழ்ந்து கொள்ளப்பட்ட வாதம், தொடைப்பகுதியைச் சேர்ந்த உறுப்புகளில் வலி, மயிர்க்கூச்சம், வலியுடன் கூடிய காய்ச்சல், மரத்துப் போதல், குளுமைத்தன்மை, தொடு உணர்ச்சியின்மை, பளுவாக தோன்றுதல், நிலையின்மை, தொடை இல்லாதது போல தோன்றுதல் முதலிய இலக்கணங்கள் காணப்பட்டால் அது ஊருஸ்தம்ப நோய் எனப்படும். சிலர் ஆட்ய வாதம் எனக் கூறுவர். 31-32

**27. ஊருஸ்தம்பவாத சிகிச்சை**

ஊருஸ்தம்பவாதத்தில் நான்கு வகை எண்ணெய்ப் பொருளற்ற ஷட்தரண சூரணத்தை நீருடன் உட்கொள்ளச் செய்க.

---

* **கர்ஷம்** - 1 தோலா அளவு.

அவ்வாறே திப்பிலி முதலான கூட்டுப்பொருள்களின் சூரணத்தை வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது திரிபலா சூரணத்தைக் கடுகரோகிணியும் தேனும் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது பசுவின் சிறுநீருடன் நல்லதான குக்குலு அல்லது சிலாஜத்து என்பதை உட்கொள்ளச் செய்க. இம்முறையால் கபத்தாலும் கொழுப்பாலும் சூழ்ந்து கொள்ளப்பட்ட வாயு, இதய நோய், சுவையின்மை, குன்மம், அந்தர்வித்ரதி எனும் நோய்கள் தீரும். யவக்ஷாரத்தைப் பசுவின் சிறுநீருடன் சேர்த்து உடல் வியர்க்கச் செய்தல், வறண்ட பொருள்களால் மேல் பூச்சு பூசுதல், மற்றும் போதிய அளவு பசுவின் சிறுநீர் , கலந்த புங்கன், மஞ்சள், கடுகு எனுமிவற்றைப் மேல் பூச்சாக பூசுதல் ஆகியவற்றை பயன்படுத்த வேண்டும். பழைய சம்பா, வரகு, காட்டு வரகு, அரிசி, சாமை முதலியவற்றின் சோறு, உலர்ந்த முள்ளங்கியின் கஷாயம் அல்லது புடலைச் சாறு, காட்டு விலங்குகளின் நெய் நீக்கிய மாமிசம், உப்பு சேர்க்காத சாகம் (கீரைத்தண்டு) முதலியன உணவாகக் கொள்ளத்தக்கவை. கபமும் கொழுப்பும் போதிய அளவு உடலில் குறைந்த பிறகு மீண்டும் எண்ணெய் முறை முதலியவற்றைப் பயன்படுத்துக. 33-39

## 28. குங்கிலியத்தின் பயன்

நறுமணமுள்ள குங்கிலியம் (குக்குலு) நுட்பமான (நாள) வழிகளிலும் செல்லக்கூடியது. தீக்ஷ்ணமும் உஷ்ணமும் கசப்புச் சுவையும் கொண்டது. பக்குவம் பெறுநிலையிலும் கசப்புச் சுவை கொண்டது. விரைவில் உடலில் பரவும் தன்மை கொண்டது. இதயத்திற்கு இதமானது. எண்ணெய்ப்பசையும் பிசுபிசுப்பும் கொண்டது. புதிய குக்குலு, மாமிசத்தையும் விந்துவையும் வளர்க்கக்கூடியது. பழைய குக்குலு இவ்விரண்டையும் குறைக்கும். குக்குலு தீக்ஷ்ணத்தன்மையும் உஷ்ண வீரியமும் கொண்டதால் கபத்தையும், வாயுவையும் அது விரைவில் பரவும் தன்மை கொண்டமையால் மலத்தையும், பித்தத்தையும், அது நறுமணம் கொண்டிருப்பதால் குடலில் உள்ள நாற்றத்தையும் போக்கும். அது நுட்பமானதால் சடராக்னியைத் தூண்டக் கூடியதாகும். காலையில் குக்குலுவைத் திரிபலை, மரமஞ்சள், புடலைக் கஷாயம், தர்பைக்கஷாயம் முதலியவற்றுடனோ பசுவின் சிறு நீருடனோ, க்ஷாரம் கலந்த நீருடனோ, வெந்நீருடனோ சேர்த்து உட்கொள்ள வேண்டும். இம்மருந்து செரிமானமடைந்த பிறகு கஞ்சி, புலால்சாறு மற்றும் பால் ஆகியவற்றுடன் உணவை உட்கொள்ள வேண்டும். இவ்வாறு

பயன்படுத்தி வந்தால் குன்மம், மேகநோய், உதாவர்த்தம், பெருவயிறு, பகந்தரம், கிருமிநோய், அரிப்பு, சுவையின்மை, வெண்குட்டம், அர்புதம் எனும் சீழ்க்கட்டி, நரம்புச் சிலந்தி, ஆட்யவாதம், வீக்கம், குட்டம், கெட்ட விரணம், குடலிலும் இணைப்புகளிலும் எலும்பிலும் சேர்ந்த வாயு ஆகியவை நீங்கும். மரத்தை இடி தாக்கி அழிப்பது போல ஒரு மாதம் உட்கொண்ட இம்மருந்து முன் கூறிய நோய்களைத் தணிக்கும். 40

ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

மகாவாத வியாதி சிகித்ஸிதம் எனும்

ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.

# ஆறாம் அத்தியாயம்

# * மூலரோக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதருக்கு உபதேசம் செய்தபடி மூலநோய் சிகிச்சை எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

## 1. மூலநோய்க்குச் சிகிச்சை வகைகள்

மூலநோய்க்கு உரிய சிகிச்சை நான்கு வகைப்படும். அவை (1) மருந்து (2) க்ஷாரத்தைப் (காரம்) பயன்படுத்துதல் (3) நெருப்பால் சுடுதல், (4) அறுவை சிகிச்சை என்பனவாம். இவற்றில் புதிதாகத் தோன்றியது, குறைந்த அளவு தோஷமுள்ளது, குறைந்த அளவு துன்பமும், இலக்கணமும் கொண்டதுமான மூலநோய் மருந்தை உட்கொள்ளச் செய்வதால் நீங்கும். மென்மையானது, பரவியது, ஆழமாக வேரூன்றியது, மேல் எழும்பி வீங்கியுள்ளதுமான மூலநோய், க்ஷார மருந்துகளால் நீங்கும். கடினமானது, நிலையானது, தடித்து உயர்ந்து நிற்பதுமான மூல நோய் நெருப்பால் சுடுவதால் போக்கத்தக்கது. எழும்பிப் பருத்துள்ளது, மெல்லிய வேர் கொண்டது, மேல் சேறு போல சதசதப்புடன் கூடியதுமான மூலநோய் அறுவைச் சிகிச்சையால் நீக்கத்தக்கதாகும். இவற்றில் மருந்தால் நீக்கக்கூடிய, நன்றாக வெளிப்படாத முளைகளைக் கொண்ட மூல நோய்க்கு மருந்துகளைக் கொண்டுச் சிகிச்சை செய்ய வேண்டும். க்ஷாரம், நெருப்பு அறுவை முறைகளால் நீக்கக் கூடிய மூலநோய்களுக்கான சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 3

## 2. மூல நோய்க்குச் சிகிச்சை முறைகள்

எண்ணெய்ப்பசையும் வியர்க்கும் தன்மையும் கொண்டு மூலநோயால் வருந்தும் வலிமைகொண்ட நோயாளிக்கு வாதத்தால் தோன்றிய மிகுந்த வேதனையைத் தணிக்க எண்ணெய்ப்பசையும் உஷ்ணமும் கொண்ட நீர்த்தன்மை மிகுந்த உணவைக் குறைந்த அளவில் உட்கொள்ளச் செய்து தனிமையும் தூய்மையும் கொண்ட இடத்தில் உட்கார வைக்கவும்.

* **மூல ரோகம்** - மூல நோயைப் பற்றிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயத்திற்கு மூலரோக சிகித்ஸிதம் எனப் பெயர் உண்டாயிற்று.

தெளிவான வானம் மற்றும் மிக்க குளிரோ மிக்க உஷ்ணமோ இல்லாத வேளையில் சமமான (ஏற்றத்தாழ்வற்ற) பலகை மீதோ படுக்கை மீதோ சூரியனை நோக்கி ஆஸனவாய் இருக்கும்படி மற்றொரு மனிதனின் மடியில் நோயாளியின் உடல் இடுப்பின் மேற்பகுதி இருக்கும்படி இடுப்பைச் சற்று மேல் பக்கமாக உயர்த்தி வைத்து கொண்டு படுக்கச் செய்க. கட்டு போடும் துணியால் கழுத்தையும் முழங்காலையும் சேர்த்துக் கட்டி விடவும். மருத்துவத்தில் உதவி செய்பவர் நோயாளியை அசையாமல் இறுகப் பிடித்துக் கொள்ள வேண்டும். ஆஸன வாய்ப்பகுதியில் நெய் தடவிய பிறகு நீண்டு நுட்பமான முகமுடைய கருவியிலும் நெய் தடவி அதை மெல்ல மெல்ல ஆஸன வாய்க்குள் புகுத்த வேண்டும். கருவி ஆஸனவாய்க்குள் புகுந்ததும் மூலநோயைக் கண்டு சலாகையால் அழுத்திக் கொண்டு பஞ்சு அல்லது துணியால் மூல நோய்ப் பகுதியைத் துடைத்துப் பிறகு க்ஷார மருந்தைப் போட வேண்டும். க்ஷார மருந்தைச் செலுத்திக் கருவியின் துவாரத்தை கையால் மூடிக்கொண்டு நூறு எண்ணும் வரை பொறுத்திருக்கவும். பிறகு மூலநோயை துடைத்துக் கார மருந்தின் வலிமையையும் நோயின் வலிமையையும் உணர்ந்து மீண்டும் கார மருந்தைப் போடவும். மூலம் பக்குவமடைந்த நாவற்பழம் போன்ற நிறம் கொண்டு சிதைந்து சிறிது சிறிது அழுத்தி அல்லது வளைந்து காணப்பட்ட போது கார மருந்தைத் துடைத்து விடவும். கார மருந்தைக் காஞ்சிகம், தயிர், சுரை, வண்டல் அல்லது சுக்தம், பழத்தின் புளிப்புச்சாறு என்பனவற்றில் ஒன்றால் கழுவி விட வேண்டும். பிறகு அதிமதுரத் துகள் கலந்த நெய்யால் கார மருந்து தடவியதால் தோன்றிய எரிச்சலைத் தணித்து அறுவை கருவியை நீக்கவும். நோயாளியை எழுப்பி சுடு நீரில் உட்கார வைக்கவும். மேலிருந்து குளிர்ந்த நீரை விடவும். சிலர் வெந்நீரை உடல் மேல் ஊற்ற வேண்டுமென்பர். பிறகு காற்றோட்டம் இல்லாத அறையில் நோயாளியை இருக்கச் செய்து உணவு முதலியவற்றை தர ஏற்பாடு செய்யவும். மூலமுளை உடலில் தங்கியிருந்தப் பகுதியை மீண்டும் கார மருந்தால் எரிக்கவும். இவ்வாறு ஏழு நாட்களுக்கு ஒரு மூல முளை வீதம் நீக்கிச் சிகிச்சை செய்ய வேண்டும். மூலமுளைகள் அதிக அளவில் இருந்தால் முதலில் வலது பக்கத்து முளைகளைப் போக்கவும். பிறகு இடது பக்கத்து முளைகளையும் அதன் பிறகு முதுகு பக்கத்தைச் சார்ந்த முளையையும் அதன் பிறகு முன் பக்கத்து முளையையும் நீக்க வேண்டும். 4

### 3. கப-பித்தங்களால் தோன்றிய மூலத்திக்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய மூல நோய்க்கு நெருப்பால் சுடுதல் அல்லது கார மருந்தைத் தடவுதல் என்பனவற்றாலும், பித்தத்தால் அல்லது இரத்தத்தால் தோன்றிய மூல நோய்க்கு மென்மையான கார மருந்தால் மட்டும் சிகிச்சை செய்ய வேண்டும். 5

### 4. சிகிச்சை முறையின் விளைவுகள்

வாயு கீழ் நோக்கிச் செல்லுதல், உணவில் விருப்பம் ஏற்படுதல், சடராக்னி வளர்ச்சியுறுதல், உடல் இலேசாகக் காணப்படுதல், உடல் வலிமையும் பொலிவும் மிகுதல், மனம் தெளிவாக இருத்தல் என்பன கார மருந்தால் நன்கு எரிக்கப்பட்டதன் விளைவுகளாகும்.

ஆஸனவாயில் பிளவு, எரிச்சல், நினைவிழத்தல், காய்ச்சல், அதிக நாவறட்சி, இரத்தம் அதிக அளவில் பெருகுதல், அதிக இரத்தப் போக்கால் துன்பம் விளைதல் என்பன தேவைக்கு அதிகமாக நோயுற்ற பகுதி எரிக்கப்பட்டதால் தோன்றும் விளைவுகளாகும். 6

### 5. வலிமையுடையவருக்குத் தோன்றிய பருத்த முளை கொண்ட நோய்க்குச் சிகிச்சை

உடல் வலிமையுள்ளவருக்குத் தோன்றிய மூலமுளை நன்கு பருத்துக் காணப்பட்டபோது அறுவைச் சிகிச்சையால் முளையை வெட்டி அகற்றி நெருப்பைக் கொண்டு அப்பகுதியைச் சுட வேண்டும். நன்றாக வெளியே தோன்றி வாதபித்த கபங்களால் அல்லது இரத்தத்தால் நன்கு நிறைந்துள்ள மூலநோயில் இயந்திரக் கருவியின் உதவியின்றி உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க்குளியல், எண்ணெய் மருந்தைப் பயன்படுத்துதல் [1]அவகாஹன, [2]உபநாஹ முறைகளைச் செய்தல், இரத்தத்தை வெளியேற்றல், மேல்பூச்சு பூசுதல், கார மருந்தைப் பயன்படுத்துதல், நெருப்பால் சுடுதல் மற்றும் அறுவைக் கருவியால் வெட்டி எடுத்தல் என்ற முறைகளைப் பயன்படுத்த வேண்டும்.

இரத்தப் பெருக்கு உள்ள மூலநோயில் இரத்த பித்தத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப்

---

1. அவகாஹனம் - மூழ்கியிருத்தல்.

2. உபநாஹம் - ஒற்றடம் கொடுத்தல்.

பயன்படுத்துக. மலத்தை அதிக அளவில் வெளிப்படுத்தும் மூலத்தில் அதிஸார நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளையும் மலக்கட்டு உள்ள மூலத்தில் எண்ணெய் மருந்தை உட்கொள்ளச் செய்தல் அல்லது உதாவர்த்த நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளையும் பயன்படுத்த வேண்டும். எல்லா இடத்திலும் பரவியுள்ள மூலநோயை எரிக்கும் முறை இங்கு கூறப்பட்டது. 7

மூலநோயைக் கண்டு தர்வி கூர்ச்சம் அல்லது சலாகை எனும் இயந்திரங்களில் ஒன்றினால் க்ஷாரமருந்தைத் தடவ வேண்டும். இயந்திரமின்றியே குதம் நழுவிய நிலையில் க்ஷாரமருந்தைப் பயன்படுத்துக. மூல நோய் வகைகள் அனைத்திலும் சம்பா அரிசி, அறுபதுநாள் குறுவை, யவதானியம், கோதுமை முதலியவற்றின் சோற்றில் நெய் கலந்து எண்ணெய்ப்பசை உண்டாக்கிப் பால் வேம்பின் [1]யூஷம் அல்லது புடலையூஷம் முதலியவற்றோடு உட்கொள்ளச் செய்க. தோஷத்திற்குத் தகுந்தபடி தண்டுக்கீரை, வாஸ்தூகம், கீரைப்பாலை, [2]அச்சபலை, சிறுமுள்ளங்கி, பாலக்கீரை, வேங்கை, சுஞ்சு எனும் கீரை, பட்டாணிக்கீரை மற்றும் இத்தகைய கீரை வகைகளுடன் உணவு உட்கொள்ளச் செய்க. மேலும் எண்ணெய்ப்பசையும் சடராக்னியை வளர்ப்பதும் மூலத்தைப் போக்குவதும் மலம் சிறுநீர் ஆகியவற்றை எளிதில் வெளியேற்றுபவையுமான உணவு குடிநீர் மருந்துப் பொருள்கள் முதலியவற்றைப் பயன்படுத்துக. 8

6. மூலத்தில் எண்ணெயைப் பயன்படுத்தும் முறைகள்

சுடப்பட்ட அல்லது சுடப்படாத மூலநோயில் எண்ணெய்க் குளியல் செய்வித்து சடராக்னியைத் தூண்டவும் வாயுவின் சீற்றத்தைத் தடுக்கவும் எண்ணெய் முறை முதலியவற்றைப் பொதுவாகப் பயன்படுத்த வேண்டும்..

வாதத்தால் தோன்றிய மூலத்தில் சிறப்பாக திப்பிலி முதலான கூட்டுப்பொருள்கள் மற்றும் வாதத்தைப் போக்கும் பத்ரதாரு முதலிய கூட்டுப்பொருள்கள் முதலியவற்றாலான எண்ணெயையும் வாதநோய்க்குக் கூறப்பட்ட ஹிங்கு முதலியவற்றின் தூளையும் சேர்த்துப் பருகச் செய்ய வேண்டும்.

---

1. யூஷம் - ஒருவகை கஞ்சி.
2. அச்சபலை - வெந்தயத்தின் வகை.

பித்தத்தால் தோன்றிய மூலத்தில் [1]பிரிச்னிபர்னி முதலான கூட்டுப் பொருள்களாலான கஷாயம் [2]திப்பிலி முதலான சடராக்னியைத் தூண்டும் கூட்டுப் பொருள்கள் சேர்த்துத் தயார் செய்யப்பட்ட நெய் ஆகியவற்றை பருகச் செய்ய வேண்டும். இரத்த மூலத்தில் மஞ்சிட்டி, முருங்கை முதலியவற்றின் கஷாயத்தாலான நெய் மருந்தையும், கபத்தால் தோன்றிய மூலத்தில் [3]சுரஸாதி கூட்டுப்பொருளாலான கஷாயத்துடன் தயார் செய்த நெய் மருந்தையும் உட்கொள்ளச் செய்க. குன்மம் காய்ச்சல் முதலிய துன்பம் இருந்தால் தோஷத்தை தணிக்கவல்ல மருந்துப் பொருள்களால் சிகிச்சை செய்க. 9

**7. அறுவை சிகிச்சையின்போது கவனம் தேவை**

ஆஸனவாய்ப்பகுதியில் காரமருந்து இடுதல் நெருப்பால் சுடுதல் அறுவைச் சிகிச்சை செய்தல் முதலிய முறைகளைப் பயன்படுத்தும்போது மிக்க கவனம் கொள்ள வேண்டும். முறை யாக இவை பின்பற்றப்படாதபோது அலித்தன்மை, வீக்கம், எரிச்சல், நினைவிழத்தல், வயிற்றுக்குள் 'குடகுட' ஒலி தோன்று தல், வயிற்று உப்புசம், அதிஸாரம், சீதபேதி முதலிய துன்பங்கள் விளையும். அல்லது நோயாளிக்கு உயிர் நீத்தலும் நேரலாம். 10

**8. இயந்திரங்களின் விளக்கம்**

இனி மூலநோயில் பயன்படுத்தத்தக்க இயந்திரங்கள் விளக்கப்படுகின்றன. இந்த இயந்திரங்கள் இரும்பு, தந்தம், கொம்பு அல்லது மரத்தால் செய்யப்பட்டவையாகும். பசு மாட்டின் மடிக்காம்பு போல அவை ஆண்களுக்கு நான்கு அங்குல நீளமும் ஐந்து அங்குலத் தடிமனும் கொண்டதாக இருக்க வேண்டும். பெண்களுக்கு உள்ளங்கை நீளமும் ஆறு அங்குல பருமனும் கொண்டதாகவும் இருக்க வேண்டும். அவற்றில் இரு துளைகள் இருக்க வேண்டும். ஒன்று நோயைக் காணவும் மற்றது

1. பிரிச்னிபர்னி கூட்டுப் பொருள் ஓரிலை, மூவிலை. கண்டங்கத்தரி, நெருஞ்சில் ஆகியவை.

2. திப்பிலி கூட்டுப்பொருள் :- திப்பிலி, பெருங்காயம், மிளகு, புளிவஞ்சி, ஓமம், சேராங்கொட்டை, பிரண்டை, கண்டந் திப்பிலி, செவியம், கொடிவேலி, சுக்கு (பஞ்சமூலம்) ஆகியவை.

3. சுரஸாதி கூட்டுப்பொருள் :- துளசி, கருந்துளசி, கிடாரை, படுகரணை, வாயுவிடங்கம், மறுக்காரை, மருவகம், எலிச்செவி, தேக்கு, பொன்னாடை, தூதுவளை, தும்புருப் பத்திரி, சிறுதேக்கு, புங்கு, மணித்தக்காளி, ஒருவகைச் சுரை, எட்டி, புல், ஜடாமாஞ்சி ஆகியவற்றின் சேர்க்கை.

மருந்தைப் பயன்படுத்தவும் ஏற்பட்டது. துளையின் நீளம் மூன்று அங்குலமும் பரப்பு சுட்டை விரலில் நடுப்பகுதி அளவும் இருக்க வேண்டும். மீதி இருக்கும் ஒரு அங்குலத்தில் அரை அங்குலத் திற்குக் கீழே அரை அங்குலப் பருமனுள்ள *கர்ணிகை இருக்க வேண்டும். சுருக்கமாக இயந்திரம் இவ்வாறு இருக்க வேண்டும். 11

### 9. மூலத்திற்கு உரிய மேற்பூச்சு மருந்துகள்

இனி மூலநோய்க்கு மேல் பூச்சாகப் பயன்படுத்தத்தக்க மருந்துகள் விளக்கப்படுகின்றன.

(1) கள்ளிப்பாலில் மஞ்சள் தூள் கலந்து செய்யப்பட்ட பூச்சு மருந்து (2) கோழி மலம், குன்றிமணி, மஞ்சள், திப்பிலித்தூள் ஆகியவற்றைப் பசுவின் சிறுநீர், பசுவின் பித்தம் சேர்த்து அரைத்துத் தயார் செய்யப்பட்ட பூச்சு மருந்து (3) நேர்வாளம், கொடிவேலி, சூரியகாந்தி, கலப்பைக்கிழங்கு ஆகியவற்றை பசுவின் பித்தத்துடன் பசுவின் சிறுநீர் விட்டு அரைத்த விழுது (4) திப்பிலி, இந்துப்பு, கோஷ்டம், வாகைக்காய் ஆகியவற்றைக் கள்ளிப்பால் அல்லது எருக்கம்பால் விட்டு அரைத்த விழுது, (5) அன்னபேதி, அரிதாரம், இந்துப்பு, அரளிவேர், வாயுவிடங்கம், புங்கன், பேய்ப்பீர்க்கு, நாவல், எருக்கம்பால், கீழ்க்காய் நெல்லி, நேர்வாளம், கொடிவேலி, வெள்ளைஎருக்கு ஆகியவற்றை எருக்கம்பால் விட்டுச் செய்த எண்ணெயையும் மூலநோய்க்கு பூச்சு மருந்துகளாகப் பயன்படுத்தலாம். 12

### 10. மூலநோய்க்கு மருந்துகள்

இனி மருந்தால் தீர்க்கத்தக்க ஆசனவாய்க்குள் கண்ணுக்குப் புலப்படாமல் இருக்கும் மூலநோய்க்கு தக்க மருந்துகள் கூறப்படுகின்றன.

நாள்தோறும் காலையில் வெல்லத்தையும் கடுக்காயையும் சேர்த்து உட்கொள்க. பிரும்மசரிய விரதம் இருந்து கொண்டு ஒரு துரோணம் பசுவின் சிறுநீரில் நூறு கடுக்காய்களைப் பாவனை செய்து தன் உடல் வலிமைக்கு ஏற்ப நாள்தோறும் காலையில் அந்தக் கடுக்காயைத் தேனுடன் உட்கொள்க. அல்லது நாயுருவி வேரை அரிசி கழுவிய நீரும் தேனும் கலந்து நாள்தோறும் உட்கொள்க. தண்ணீர்விட்டான் கிழங்கின் விழுதைப் பாலுடனோ, கொடிவேலி துகள் கலந்த ஸீது எனும் மதுவுடனோ

* கர்ணிகை - வளையம்.

உட்கொள்க. சேராங்கொட்டைத் தூளுடன் கூடிய பொரி மாவினால் செய்த மந்தம் எனும் கஞ்சியை உப்பு சேர்க்காமல் மோருடன் உட்கொள்க. பானைக்குள் கொடிவேலியின் வேரின் விழுதைப் பூசி அதில் மோரை வைத்து புளித்த அல்லது புளிக்காத அந்த மோரை பருகவும். உணவில் சேர்த்தும் பயன்படுத்துக. பரங்கிப்பட்டை, காக்கணங்கொட்டை, ஓமம், நெல்லிக்காய், சீந்தில்கொடி ஆகியவற்றின் விழுதைப் பூசிய பானையில் வைத்திருந்த மோரைப் பயன்படுத்துக. மற்றும் திப்பிலி, திப்பிலிவேர், செவியம், கொடிவேலி, வாயுவிடங்கம், சுக்கு, கடுக்காய் ஆகியவற்றின் விழுதைப் பூசிய பானையில் வைத்திருந்த மோரை பயன்படுத்துக. உணவைவிட்டு மோரை மட்டும் ஒரு மாத காலம் பருகி வந்தால் மூலநோய்த் தீரும். இஞ்சி, சாரடை வேர், கொடிவேலி எனும் இவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய கஷாயத்துடன் கூடிய பாலைப் பருகுக. குடசப்பாலை வேர்ப்பட்டையாலான பாண்டம் எனும் கஷாயத்தில் திப்பிலி முதலிய கூட்டுப்பொருள்களின் தூளையும் தேனையும் கலந்து உட்கொள்க. மஹாவாத வியாதி சிகிச்சையில் கூறப்பட்டுள்ள ஹிங்குவாதி சூரணத்தை உட்கொண்டு மோரை மட்டுமோ பாலை மட்டுமோ உணவாகக் கொள்க. யவக்ஷாரம், இந்துப்பு, கொடிவேலி வேர், க்ஷாரோதகம் என்பதால் செய்த யவதானியச் சோற்றை உணவாகக் கொள்க. அல்லது கொடிவேலி வேர், க்ஷாரோதகம் ஆகியவற்றுடன் தயார் செய்த பாலைப் பருகுக. புரசக்ஷாரத்தால் செய்த குல்மாஷம் எனப்படும் யவதானியச் சோற்றை உணவாகக் கொள்க. அல்லது பாதிரி, நாயுருவி, கண்டங்கத்தரி மற்றும் ஆடையால் நன்கு சலிக்கப்பட்ட புரசக்ஷாரம் ஆகியவற்றை நெய் சேர்த்து அல்லது குடசப் பாலை, வந்தாகம் ஆகியவற்றின் வேரை விழுதாகச் செய்து மோருடன் உட்கொள்க. கொடி வேலி, புங்கன், சுக்கு ஆகியவற்றின் விழுதை புங்கன் க்ஷாரத்துடன் உட்கொள்க. க்ஷாரோதகத்தால் செய்த நெய்யில் திப்பிலி முதலான கூட்டுப்பொருள்களின் தூளைக் கலந்து உட்கொள்க. கருப்பு எள் இரண்டு பலமோ ஒரு பலமோ நாள்தோறும் காலையில் மென்று தின்று குளிர்ந்த நீரைப் பருகுக. இந்த முறைகளால் சடராக்னி வளர்வதுடன் மூலநோயும் தீரும். 13

### 11. மூலநோய்க்குச் சிறந்த மருந்து

தசமூலம், நேர்வாளம், கொடிவேலி, கடுக்காய் ஆகியவற்றை ஒவ்வொரு துலாம் வீதம் கொண்டு நான்கு துரோணங்கள் நீரில் பக்குவம் செய்க. நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும் கஷாயத்தில் அது நன்றாகக் குளிர்ந்த பின் ஒரு துலாம் வெல்லம் சேர்த்து அதை நெய்யில் பழகிய பானையில் வைத்து ஒரு மாதகாலம் யவதானியக் குவியலில் வைத்திருக்கவும். இதை நாள்தோறும் தகுந்த அளவு உட்கொண்டு வந்தால் மூலநோய், கிரஹணி, பாண்டு (சோகை), உதாவர்த்தம், சுவையின்மை முதலிய நோய்கள் தீரும் மற்றும் சடராக்னி வளரும். 14

### 12. மூலநோய், குன்மம் முதலியவற்றிற்கு வேறு மருந்து

திப்பிலி, மிளகு, வாயுவிடங்கம், ஏலுவாலுகம், பாச்சோத்திப் பட்டை ஆகியவற்றை வகைக்கு இரண்டு பலம் வீதம் கொண்டு தும்மட்டி ஐந்து பலம் விளாம்பழக்கதுப்பு பத்து பலம் கடுக்காய் அரை [1] பிரஸ்தம் நெல்லிக்காய் ஒரு பிரஸ்தம் எனக்கொண்டு அனைத்தையும் நான்கு துரோணம் அளவு நீரில் சேர்த்து ஒரு துரோணம் மிகுந்திருக்கக் காய்ச்சுக. இது நன்றாகக் குளிர்ந்த பிறகு ஒரு துலாம் வெல்லம் சேர்த்து நெய்யில் பழகிய பானையில் நிரப்பி பதினைந்து நாட்கள் யவதானியக் குவியலுக்குள் வைத்திருக்கவும். இந்த அரிஷ்டம் மண்ணீரல் வீக்கம், சடராக்னி குறைவு, மூலநோய், கிரஹணி, இதயநோய், [2] பாண்டு வீக்கம், குட்டம், குன்மம், பெருவயிறு, கிருமிநோய் முதலியவற்றைப் போக்கவல்லது. உடல் வலிமையையும், நிறத்தையும் மிகச்செய்யும். 15

### 13. தோஷங்களால் சீற்றமடைந்த மூலத்திற்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய மூலநோய்க்கு எண்ணெய் மருந்து, உடல் வியர்க்கச் செய்தல் வாந்தியாகச் செய்தல் பேதியாகச் செய்தல் ஆஸ்தாபன அநுவாஸன முறைகள் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். பித்தத்தால் தோன்றிய மூலநோய்க்கு பேதியாகச் செய்தலையும், இரத்தத்தால் தோன்றிய மூலத்திற்கு ஸம்சமன சிகிச்சையையும் செய்ய வேண்டும். கபத்தால் தோன்றிய மூலநோய்க்கு இஞ்சியையும், கொள்ளையும் பயன் படுத்த வேண்டும். மூன்று தோஷங்களாலும் தோன்றிய மூல நோய்க்கு மூன்று தோஷங்களுக்கும் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையும் தோஷங்களைப் போக்கும் மருந்துப் பொருள் களாலான பாலையும் பயன்படுத்துக. 16

---

1. பிரஸ்தம் - 64 பலம் எடை கொண்டது.
2. பாண்டு - சோகை.

## 14. சேராங்கொட் ரப் பயன்படுத்தும் முறை

நன்றாகப் பக்குவமடைந்து வெடிக்காமல் உடையாமல் இருக்கும் சேராங்கொட்டைகளை கொண்டு அவற்றில் ஒன்றை இரண்டு மூன்று துண்டுகளாக்கிக் *க்வாத முறைப்படிப் பக்குவம் செய்க. அந்தக் க்வாதம் குளிர்ந்த பின் உள்தாடை நாக்கு உதடு ஆகியவற்றில் நெய்யை தடவிக்கொண்டு காலை வேளையில் பருகவும். நண்பகலில் பாலும் நெய்யும் கலந்த சோற்றை உண்ண வேண்டும். இவ்வாறு ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு சேராங் கொட்டையை அதிகப்படுத்தி ஐந்து சேராங்கொட்டைகளான பிறகு ஐந்து சேராங்கொட்டை வீதம் அதிகப்படுத்தி எழுபது சேராங்கொட்டைகள் ஆகும் வரை பயன்படுத்துக. பிறகு ஐந்து சேராங்கொட்டைகள் வீதம் குறைத்துக் கொண்டு, ஐந்து சேராங்கொட்டைகள் மிகும் வரை உட்கொள்க. பிறகு ஒவ்வொன்று வீதம் குறைத்துக் கொண்டே வருக. இவ்வாறு ஆயிரம் சேராங்கொட்டைகளையும் பயன்படுத்துக. இவ்வாறு உட்கொண்டவர் குட்ட வகைகள் அனைத்தும் நீங்கி மூலநோய் அற்றவராகி, உடல் வலிமைபெற்று என்றும் நோய்க்கு ஆகாதவர் ஆவார். 17

## 15. சேராங்கொட்டையின் எண்ணெயைப் பயன்படுத்துதல்

த்விவிரணீய சிகிச்சை முறையில் கூறப்பட்டபடி சேராங்கொட்டையின் எண்ணெய் தயார் செய்து நாள்தோறும் அதில் அரை பலம் அளவு காலையில் உட்கொண்டு மருந்து செரிமானமடைந்தபின் முன் கூறியபடி உணவு உட்கொள்க. இதனால் மிக்க நன்மை உண்டாகும். அல்லது சேராங்கொட்டையின் (கறுப்பு) பருப்பிலிருந்து எண்ணெய் எடுத்து வமன விரேசனங்களால் தோஷங்களை நீக்கிக் கொண்டு ஸம்ஸர்ஜன முறைப்படி பேயா, விலேபி முதலியவற்றைப் பயன்படுத்திக் காற்றோட்டம் இல்லாத அறையில் வசிக்க வேண்டும். உடல் வலிமைக்கு ஏற்றபடி ஒரு பலம் அல்லது இரண்டு பலம் வரை உட்கொள்க. சேராங்கொட்டை எண்ணெய் செரிமானமடைந்த பின் பாலும், நெய்யும் கலந்த சோற்றை உட்கொள்க. இந்த எண்ணெயை ஒரு மாத காலம் பயன்படுத்தி மூன்று மாத காலம் மேற்படி முறையில் உண்டு

*க்வாதமுறை - மருந்துப் பொருளுக்குப் பதினாறு மடங்கு நீர்விட்டு மண் பாத்திரத்தில் எட்டில் ஒரு பங்கு மிகுந்திருக்கும் படி காய்ச்சிய கஷாய முறை.

வரவேண்டும். கோபம் முதலியவற்றைத் தணித்துக் கொள்ள வேண்டும். உடன் இவ்வாறு செய்தால் எல்லா நோய்களி லிருந்தும் விடுபடலாம். இதனால் பொலிவு, வலிமைகளும், மற்றும் நினைவாற்றல், அறிவாற்றல் முதலியனவும் மிகுந்து நூறாண்டு காலம் வாழலாம். ஒரு மாதம் இம்மருந்தை உட்கொண்டால் ஒரு நூறு ஆண்டு காலம் ஆயுள் மிகும். பத்து மாதங்கள் இதை உட்கொண்டால் ஆயிரம் ஆண்டுகள் வாழலாம். கருங்காலியும் விஜயஸாரமும் எவ்வாறு குட்ட நோய்கள் அனைத்தையும் போக்குமோ அவ்வாறு குடசப் பாலையும், சேராங் கொட்டையும் மூலநோய் வகைகளைப் போக்கும். மஞ்சளைப் பயன்படுத்துவதால் நீரிழிவு நோய் வகை கள் தீருவது போல க்ஷாரமும், அக்னி கர்மாவும் மூல நோய் வகைகளைப் போக்கும். 18-20

தோஷங்களின் சீற்றத்தைக் கண்டு தீபநீய கண (திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களாலான) நெய் மருந்து, குடஜாதி லேஹியம், நவாயஸ லோஹம் (உலோக கலப்புவகை) சுரை எனும் மது மற்றும் ஆஸவம் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 21

## 16. மூல நோயில் கைவிடத்தக்கவை

மலம், சிறுநீர் முதலியவற்றின் வேகத்தைத் தடுத்தல், கலவி, குதிரை முதலியவற்றின் மீது ஏறுதல், தீக்ஷ்ணமுள்ள பொருள்களை உட்கொள்ளுதல், கடினமான இருக்கையில் இருத்தல், தோஷங்களை வளர்க்கும் பொருள்களை பயன் படுத்துதல் என்பனவற்றை மூலநோய் கொண்டவர் கைவிட வேண்டும். 22

**ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானம்**

**மூலரோக சிகித்ஸிதம் எனும்**

**ஆறாம் அத்தியாயம் முற்றும்.**

# ஏழாம் அத்தியாயம்
# *அச்மரீ சிகித்ஸி

அச் 'ரீ சிகிச்சை முறைகளைப் பகவான் தன்வந்தரி இனி ஸுசுருதர் முதலியவர்களுக்கு உபதேசித்தபடி விளக்குவோம். 1-2

அச்மரீ என்பது கொடிய நோயாகும். இது யமனுக்குச் சமமானது. நோய் தோன்றிய புதிதில் இதைத் தணிக்கலாம். நோய் முற்றினால் அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டியிருக்கும். 3

### 1. அச்மரீக்கு முதல் சிகிச்சை

அச்மரீ எனும் நோயின் முற்குறிகள் காணப்படும் போதே எண்ணெய்மருந்து, உடல் வியர்க்கச் செய்தல் எனும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். அதனால் இந்நோய் முழுவதும் நீங்கும். 4

### 2. வாதத்தால் தோன்றும் அச்மரீக்குச் சிகிச்சை

கல்லூர்வஞ்சி, வெள்ளையெருக்கு, சிவப்பு நாயுருவி அல்லது யானைத்திப்பிலி, புளியாரை, சதாவரி, நெருஞ்சி, கண்டங் கத்தரி, முள்ளுக்கத்தரி, பிராம்மி, கசப்புக்கோவை, கச்சகம், வெட்டிவேர், குன்றிமணி, விருக்ஷாதனி, வேங்கை, யவதானியம், கொள்ளு, இலந்தை, தேற்றா முதலிய பொருள்களின் க்வாதத்தில் ஊஷகாதி கூட்டுப் பொருள்களின் விழுதைச் சேர்த்து நெய் மருந்து தயார் செய்ய வேண்டும். இது வாதத்தால் தோன்றிய அச்மரீ நோயை எளிதில் போக்கும். 5-8

### 3. பித்தத்தால் தோன்றும் அச்மரீக்குச் சிகிச்சை

தர்ப்பை, நாணல், **ஸரம், கரும்புவேர், கல்லூர்வஞ்சி, தண்ணீர் விட்டான் கிழங்கு, குமிழன், முதுக்கன் கிழங்கு, சம்பாபயிரின் வேர், நெருஞ்சி, வாகை, பாதிரி, வட்டத்திருப்பி, பத்தங்கம், சாரடை ஆகியவற்றின் விழுதுடன் சிலாஜத்து, அதிமதுரம், நீலாம்பல் விதை, கக்கரி முதலியவற்றின் விதைகள்

---

*அச்மரீ - சிறுநீர்க்குழாயில் தோன்றும் கல். அந்நோய்க்கு உரிய சிகிச்சையை விளக்குவதால் இந்த அத்தியாயத்திற்கு அச்மரீ சிகித்ஸிதம் எனும் பெயர் வழங்கல் ஆயிற்று.

** ஸரம் - ஒருவகைப் புல்.

ஆகியவற்றைக் கலந்து செய்த நெய்மருந்தைப் பித்தத்தால் தோன்றும் அச்மரீயில் பயன்படுத்த நோய் தீரும். இந்தப் பித்தத்தைப் போக்கும் பொருள்களாலான க்ஷாரம், யவாகூ, யூஷம், கஷாயம் முதலியவற்றுடன் பக்குவம் செய்த உணவை உட்கொள்ள வேண்டும். 9-13

### 4. கபத்தால் தோன்றும் அச்மரீக்குச் சிகிச்சை

[1]வருணாதிகணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள், குக்குலு, ஏலக்காய், அரேணுகம், கோஷ்டம், பத்ராதி கூட்டுப் பொருள் (தேவதாரு, கோஷ்டம், மஞ்சள் முதலியன), மிளகு, கொடிவேலி, தேவதாரு ஆகியவற்றின் கஷாயத்தில் [2]ஊஷகாதி கணத்தைச் சார்ந்த கூட்டுப்பொருள்களின் விழுதைச் சேர்த்துத் தயார் செய்த ஆட்டு நெய்யைப் பயன்படுத்தினால் கபத்தினால் தோன்றும் அச்மரீ விரைவில் நீங்கும். கபத்தைப் போக்கும் பொருள் களாலான க்ஷாரம், யவாகூ, யூஷம், கஷாயம், பால் முதலிய வற்றுடன் உணவு உட்கொள்ள வேண்டும். 14-16

### 5. சிறுநீர்ப்பையில் தோன்றும் மணல் போன்ற (சர்க்கரை) பொருளுக்குச் சிகிச்சை

பருத்தி மலர், அழிஞ்சில் விதை, தேற்றாங்கொட்டை, நீலாம்பல் விதை ஆகியவற்றைத் தூளாக்கி நீருடன் வெல்லமும் சேர்த்துக் கரைத்துப் பருகச் செய்தால் சிறுநீர்ப்பையில் தோன்றும் மணல் போன்ற பொருள் (சர்க்கரை) வெளியேறிவிடும். 17

கிரௌஞ்சப்புள், ஒட்டகம், கழுதை எனுமிவற்றின் எலும்புகள், நெருஞ்சி, நிலப்பனைக் கிழங்கு, ஓமம், கடம்பவேர், சுக்கு ஆகியவற்றைத் தூளாக்கி இளஞ்சூடுள்ள நீர் அல்லது

---

1. வருணாதி கணம் - மாவிலங்கை, கொக்குமந்தாரை, பில்வம், நாயுருவி, சித்ரமூலம், முன்னை, அரளி, வெண்முருங்கை, கருமுருங்கை, சிறுவழுதுணை, கண்டங்கத்தரி, செங்குறிஞ்சி, வெண்குறிஞ்சி, கருங்குறிஞ்சி, மருள், ஆடுதீண்டாப்பாளை, நிலவேம்பு, வேலிப்பருத்தி, கோவை, புங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு ஆகியவற்றின் கூட்டுப் பொருள்.

2. ஊஷகாதி கணம் - உவர்மண்ணுப்பு (ஊஷகம் - மிளகு என்று சிலர் கூறுவர்), மயில்துத்தம், பெருங்காயம், அன்னபேதி, புஷ்ப்புகாஸீஸ் எனும் மற்றொரு வித அன்னபேதி, சிலாஜித்து ஆகியவற்றின் கூட்டுப் பொருள்.

சுரை எனும் மது என்பதுடன் உட்கொள்ளச் செய்தால் சர்க்கரை வெளியேறும். நெருஞ்சிவிதைத் தூளை தேனுடனும், ஆட்டுப் பாலுடனும் ஒரு வாரம் உட்கொள்ளச் செய்தால் அச்மரீ எனும் நோய் தணியும். 18-20

வருணாதி கணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்களை ஆட்டின் சிறுநீரில் ஊறவைத்து கழுவிச் செய்த க்ஷாரம், கிராமத்தில் வாழும் விலங்குகளின் சாணத்தின் க்ஷாரம் ஆகியவற்றைக் கலந்து ஊஷகாதி கணப்பொருள் மற்றும் திரிகடுகம் என்பனவற்றின் விழுதுடன் மெல்ல மெல்லப் பக்குவம் செய்து கொண்ட க்ஷாரம் அச்மரீ, குன்மம், சர்க்கரை ஆகியவற்றைப் போக்கும். 21-22

எள், நாயுருவி, வாழை, புரசு, யவதானியம் ஆகியவற்றின் விழுதால் செய்த க்ஷாரத்தை ஆட்டின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்தால் அது சர்க்கரை நீங்கச் சிறந்த மருந்தாகும். 23

பாதிரி, அரளி எனுமிவற்றை முன் கூறிய முறைப்படி க்ஷாரம் செய்து பயன்படுத்துக. அல்லது நெருஞ்சி, அதிமதுரம், *பிராம்மி ஆகியவற்றின் விழுதை ஒரு கர்ஷம் அளவு ஆட்டின் சிறுநீருடன் பருகச் செய்க. ஏடகம் எனும் புல், முருங்கை, கரிசலாங்கண்ணி என்பனவற்றைப் பயன்படுத்துக. அல்லது பிராம்மி வேரை காஞ்சி முதலிய புளிப்புக்காடி வகையுடன் உட்கொள்ளச் செய்க. திரிபலை அல்லது சாரடையுடன் தயார் செய்த பாலைப் பருகச் செய்க. வீரதரு முதலான கூட்டுப்பொருள்களாலான நெய், பால், கஷாயம், கஞ்சி முதலியவற்றுடன் உணவை உட்கொள்ளச் செய்க. 24-26

### 6. அச்மரீக்கு அறுவைச் சிகிச்சை

நெய், க்ஷாரம், கஷாயம், பால், நிரூஹ அல்லது எண்ணெய் மருந்தால் செய்த உத்தரவஸ்தி ஆகிய சிகிச்சை முறைகளால் அச்மரீ எனும் நோய் தணியாவிடில் இனி கூறப்போகும் முறைப்படி அறுவைச் சிகிச்சையைச் செய்க. 27

தேர்ச்சி பெற்ற மருத்துவரால் செய்யப்பட்டாலும் அறுவைச் சிகிச்சை வெற்றி தரும் என்பது உறுதியில்லை. அதனால் அறுவைச் சிகிச்சை கடைநிலைச் சிகிச்சையாகும். 28

அறுவைச் சிகிச்சை செய்யாத போது நோயாளி மரிப்பது உறுதி. ஆனால் அறுவைச் சிகிச்சை செய்தாலும் பிழைப்பார்

---

* பிராம்மி - வல்லாரை.

*என்பது உறுதியற்றது. ஆகவே மன்னருடைய (நோயாளியின்) அனுமதி பெற்ற பிறகே அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும்.* 29

*பிறகு நோயாளியை வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் தூய்மைப்படுத்த வேண்டும். பிறகு அவரை ஓரளவு வலிமையற்றவராகச் செய்து எண்ணெய்க் குளியலையும் செய்வித்து உடல் வியர்க்கச் செய்க. பிறகு உணவு அளிக்க வேண்டும். பிறகு தெய்வங்களுக்கு பலிகொடுத்தல் முதலான மங்களச் செயல்களைச் செய்க. பிறகு அக்ரோபஹரணீய அத்தியாயத்தில் கூறிய முறைப்படி யந்திரம் - சஸ்திரம், க்ஷாரம், சலாகை முதலிய கருவிகளைத் தயார் நிலையில் வைத்துக் கொள்க. நோயாளிக்கு ஆறுதல் கூற வேண்டும். வலிமை கொண்டவருக்கு அஞ்சாத (குழப்பமடையாத) நோயாளியை முழங்கால் உயரம் உள்ள ஆஸனத்தில் கிழக்கு நோக்கி உட்கார வைக்கவும். மற்றொரு வலிமையுள்ள புருஷரின் மடியில் நோயாளியின் இடுப்புக்கு மேல் உள்ள பகுதி இருக்குமாறு மல்லாந்து படுக்கச் செய்க. இடுப்புப் பகுதி சிறிது உயரமாக இருக்கும்படி இடுப்புக்குக் கீழே மெத்தென துணியை மடித்து வைக்கவும். கால் மணிக்கட்டையும் முழங்காலையும் சேர்த்து வலிமையான கயிறு அல்லது ஆடையாலான பட்டியைக் கொண்டு கட்டவும். அதன் பிறகு தொப்புள் பகுதியில் எண்ணெய் தடவி நன்றாகத் தேய்க்கவும். அச்மரீ நாபிப் பகுதிக்குக் கீழே வராதவரை அப்பகுதியை முட்டியால் அழுத்தவும். அதன் பிறகு நகங்களை வெட்டி எண்ணெய் தடவிய இடது கையின் சுட்டுவிரல், நடுவிரல் இரண்டையும் சேர்த்து நோயாளியின் ஆஸனவாய்க்குள் விட்டு உபாயத்துடனும் வலிமையுடனும் ஆஸனவாய் மற்றும் ஆண்குறிக்கு இடையில் அச்மரீ கல் கட்டியைப் போல மேலெழும்பி வரும்படி அழுத்தவும்.* 30

## 7. அறுவையைக் கைவிட வேண்டிய நிலை

*அச்மரீயைப் பிடித்தவுடன் நோயாளியின் கண்விழிகள் அசையாமல் குத்திட்டு நின்று நினைவிழந்து, கழுத்து தொங்கி அவர் சவம் போலானால், அவருடைய சல்யத்தை (அச்மரீயை) அறுவை சிகிச்சையால் வெளியேற்றக்கூடாது. வெளியேற்றினால் நோயாளி மரணமடைவார். இந்த இலக்கணங்கள் காணப்படாத போது நோயாளியின் அச்மரீயை அறுவைச் சிகிச்சையால் வெளியேற்ற வேண்டும்.* 31-32

வலது பக்கத்தில் ஸேவனி என்னும் நரம்பை ஒரு யவதானிய அளவுவிட்டு அச்மரியின் நீளத்திற்கு ஏற்ப கீறி அச்மரியை வெளியேற்றவும். அச்மரியை உடையாமலும் தூளாகாமலும் கவனமாக எடுக்கவும். ஏனெனில் அச்மரீத்துண்டு துளியளவு உள்ளிருந்தாலும் மீண்டும் பெரிதாக வளர்ந்து விடும். ஆகவே அச்மரியை முழுதுமாக **அக்ரவக்ரம்** எனும் ஆயுதத்தால் வெளியே எடுத்துவிட வேண்டும்.

பெண்களுக்கு வஸ்தி கருப்பையின் பக்கத்தில் அதைச் சார்ந்து இருக்கும். ஆகவே அவர்களுக்கு ஆழமாக ஸ்திரச் சிகிச்சை செய்யாமல் மேலெழுந்தபடியே கீறி எடுக்கவும். இல்லாவிடில் பெண்களின் சிறுநீர் வெளியேறும் குழாயில் விரணமும், சிறுநீர் பெருக்கும் தோன்றும். ஆண்களுக்கும் சிறுநீரக முனையில் விரணம் தோன்றிச் சிறுநீர் சுரக்கம் உண்டாகும். அச்மரியை வெளியேற்றக் கருவியால் கீறி விரணம் அல்லது வேறு காரணத்தால் அங்கு வெடிப்பு தோன்றின் அது இணையாமல் இரு பகுதிகளாக வெடித்து வஸ்தியுடைய அச்மரீ நோயாளி நோயற்றவர் ஆக மாட்டார். 33

அச்மரீ விரணத்தால் ஓரிடத்தில் வெடிப்பு கொண்ட வஸ்தியுள்ள நோயாளி ஆயுதத்தால் செய்யப்பட்ட பிளவு மற்றும் சிறுநீர்ப் பெருக்கில் அளவு மிகுந்திருப்பதால் பிழைத்திருப்பார். அச்மரியை வெளியேற்றிய பிறகு நோயாளியை இளஞ்சூடுள்ள நீர் நிரம்பிய படகு போன்ற தொட்டியில் உட்கார வைத்து உடல் வியர்க்கச் செய்க. இம்முறையால் வஸ்திப் பகுதியில் இரத்தம் சேர்ந்துவிடாமல் இருக்கும். வஸ்தியில் இரத்தம் நிரம்புமானால் புஷ்பநேத்ரம் எனும் வஸ்தியின் மூலமாக பாலுள்ள மரங்களின் கஷாயத்தைச் செலுத்த வேண்டும்.

உத்தரவஸ்தியின் வழியாக பாலுள்ள மரங்களின் கஷாயம் செலுத்தப்பட்டால் அச்மரீ மற்றும் வஸ்தியில் சேர்ந்த இரத்தம் விரைவில் வெளிவந்துவிடும். 34

சிறுநீர் வழியை தூய்மைப்படுத்த நோயாளியை வெல்லம் கலந்த சோற்றை உண்ணச் செய்ய வேண்டும். வெந்நீர்த் தொட்டியிலிருந்து நோயாளியை வெளிவரச் செய்து விரணத்தின் மேல் நெய்யையும், தேனையும் தடவ வேண்டும்.

சிறுநீரை வெளியேற்றும் பொருள்களான * திருணபஞ்சமூலம் நெருஞ்சி முதலியவற்றாலானதும் சூடான நெய் கலந்ததுமான யவாகூ எனும் கஞ்சியை மூன்று நாட்கள் இரு வேளையும் பருகச் செய்க. மூன்று நாட்களுக்குப் பிறகு சிறுநீரையும் இரத்தத்தையும் தூய்மைப்படுத்தவும் விரணம் ஆறவும் தேவையான அளவு வெல்லம் கலந்த பாலுடன் இளம் சூடுள்ள சோற்றை குறைந்த அளவில் பத்து நாட்கள் உண்ணச் செய்க. பத்து நாட்களுக்குப் பிறகு புளிப்புச் சுவை கொண்டதான மாதுளை மற்றும் காட்டுவிலங்குகளின் புலால் சாறு எனுமிவற்றை உட்கொள்ளச் செய்க. அதன் பிறகு பத்து நாட்கள் வரை மிக்க கவனத்துடன் எண்ணெய் அல்லது திரவப் பொருளால் நோயாளியின் உடலை வியர்க்கும்படி செய்க. மற்றும் பாலுள்ள மரங்களின் கஷாயத்தால் விரணத்தைக் கழுவச் செய்க.

பாச்சோத்தி, அதிமதுரம், மஞ்சிட்டி, பிரபௌண்டரீகம் எனும் நறுமணப்பொருள் ஆகியவற்றாலான விழுதை விரணத்தின் மீது பூச வேண்டும். இந்தப் பொருள்களுடன் மஞ்சளையும் சேர்த்து விழுதாக்கி எண்ணெய் அல்லது நெய் மருந்து செய்து அதைக் கொண்டு விரணத்தின் மீது மெல்ல தேய்க்க வேண்டும். வஸ்தியில் இரத்தம் சேர்ந்து விடுமானால் உத்தரவஸ்தியின் வழியாக சிகிச்சை செய்க. ஏழு நாட்களுக்குப் பிறகு சிறுநீர் தன் இயற்கை வழியாக வெளியேறாத போது சொல்லப்படும் முறையால் விரணத்தை நெருப்பால் சுடவும். சிறுநீர் இயற்கை வழியாக வெளியேறத் துவங்கிய பிறகு காகோலிகணம் மற்றும் க்ஷீரவிருக்ஷாதி கணம் என்பனவற்றைச் சார்ந்த பொருள்களாலான கஷயாத்தால் உத்தரவஸ்தி, ஆஸ்தாபன அநுவாஸன வஸ்திகளால் சிகிச்சை செய்க. தனக்குத்தானாக சிறுநீர்க்குழாயைச் சேர்ந்து கட்டிப் போன சுக்ராச்மரீ (விந்து கட்டிப்போதல்) என்பதைச் சார்ந்த சர்க்கரையைச் சிறுநீர்க்குழாய் வழியாகவே வெளியேற்ற வேண்டும். அவ்வாறு வெளியேறாவிடில் சிறுநீர்க்குழாயில் கீறி படிசம் எனும் கருவியால் அதை வெளியேற்றவும். விரணம் ஆறிய பின் ஓராண்டு காலம் வரை பெண்களுடன் சேரக்கூடாது. குதிரை, யானை, மலை, தேர், மரம் முதலியவற்றின் மீது ஏறக்கூடாது. நீரில் நீந்தக் கூடாது. மற்றும் குருத்தன்மையான உணவு உட்கொள்ளக் கூடாது. 35

* திருணபஞ்ச மூலம் - தர்ப்பம், ஞாழல், கரும்பு, பேய்க்கரும்பு, சம்பாத்தாள் என்பன.

சிறுநீர்க்குழாய், விந்துக் குழாய், விதைகளின் நாளம், வஸ்தி, முகத்தில் உள்ள ஸ்ரோதஸ், ஸேவனி, யோனி, குதம், சிறுநீர், குண்டிகை முதலியவற்றைச் சார்ந்த அறுவைச் சிகிச்சையில் அவை அறுபடாமல் கவனம் செலுத்த வேண்டும். சிறுநீர்குழாய் வெட்டுண்டால் மரணம் நேரும். வஸ்தி சிறு நீரால் நிரம்பிவிடும். விந்துக் குழாய் அறுபட்டால் மரணம் அல்லது அலித்தன்மை உண்டாகும். விதைகளின் ஸ்ரோதஸ் வெட்டுண்டால் த்வஜபங்கம் (ஆண் குறி எழுச்சியின்மை) உண்டாகும். வஸ்தி முகம் அறுபட்டால் விரணத்திலிருந்து சிறுநீர் பெருகிக் கொண்டிருக்கும். ஸேவனி வெட்டுண்டால் மிக்க வேதனை தோன்றும். வஸ்தி அல்லது குதப்பகுதியில் வெடிப்பு உண்டானதன் இலக்கணம் முன்பு 'மர்மநிர்தேசம்' எனும் பகுதியில் கூறப்பட்டுள்ளது. 36

### 8. அறுவைச் சிகிச்சை அறியாத மருத்துவரால் தீங்கு

அறுவைச் சிகிச்சை நுட்பங்களை அறியாத மருத்துவர் ஸ்ரோதஸ்களில் உள்ள மர்மங்களைக் (உயிர் நிலைகளை) கண்டு கொள்ள அறியாதவராவார். அவர் சிகிச்சை செய்வதால் நோயாளிகள் பலரைக் கொல்லக் காரணமாவார். 37

### 9. வஸ்திப்பகுதி உயிர் நிலைகள்

(1) ஸேவனி (2) விந்துக்குழாய் (3) விதைகளில் உள்ள ஸ்ரோதஸ் (4) குதம் (5) வஸ்தி முகம் (6) சிறுநீர்க்குழாய் (7) யோனி (8) வஸ்தி எனும் இந்த எட்டும் உயிர் நிலைகளாகும். 38

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**அச்மரீ சிகித்ஸிதம் எனும்**

**ஏழாம் அத்தியாயம் முற்றும்.**

# எட்டாம் அத்தியாயம்

# *பகந்தர சிகித்ஸிதம்

இனி பகந்தரம் எனப்படும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்த முறையை விளக்குவோம். 1-2

## 1. பகந்தர நோய் விளக்கம்

நிதானஸ்தானத்தில் ஐந்து வகையான பகந்தர நோய் விளக்கப்பட்டுள்ளது. அவற்றிற்கு மூன்று தோஷங்களின் சீற்றத்தால் தோன்றும் 'சம்பூகாவர்தம்' எனப்படும் நோய் மற்றும் காயம் படுவதால் தோன்றும் பகந்தரம் ஆகியவை சிகிச்சைக்கு உட்படாதவை. மற்ற மூன்று வகைகளும் மிக்கச் சிரமப்பட்டு சிகிச்சை செய்வதால் தீர்க்கக் கூடியவையாகும். 3

## 2. பகந்தரத்திற்குப் பொது சிகிச்சை

பகந்தர நோயில் [1]பிடைகைகளால் துன்பப்படுபவர், பக்குவம் பெறாத பிடைகைகளைக் கொண்ட நோயாளிகள் ஆகியவர்களுக்கு அபதர்ப்பணம் முதலாக பேதியாகச் செய்தல் வரை (திவிவிரணீய சிகிச்சைக்குக் கூறப்பட்டுள்ள) பதினோரு சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். பக்குவம் பெறாத (நன்றாக முற்றிய, பழுத்த) பிடைகைகளை கொண்ட நோயாளிக்கு எண்ணெய் முறையாலும் அவகாஹன ஸ்வேதந (வெந்நீர் நிரம்பிய தொட்டியில் உட்கார வைத்து உடல் வியர்க்கச் செய்தல்) முறையாலும் சிகிச்சை செய்த பிறகு படுக்கையில் உட்கார வைக்க வேண்டும். மூல நோய் அறுவை சிகிச்சைக்கு கூறியவாறு கட்டியபின் (முழங்கால், கால்மணிக்கட்டுப் பகுதியுடன் சேர்த்து அசையாமல் கட்டி) பகந்தர நோயை ஆராய்ந்து [2]ஏஷணி என்னும் கருவியைப் புகுத்திச் சற்று உயர்த்தி அறுவைச் சிகிச்சையைக் கையாள வேண்டும்.

---

*பகந்தரம் - பௌத்ரம் (ஆங்கிலத்தில் 'FISTULA-IN-ANO' எனப்படும்). இந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் பகந்தர சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

1. பிடகை - கட்டி.
2. ஏஷணி - இரண ஆய்வுக்கருவி.

உள்முகமாய் உள்ள பகந்தரத்திலும் இயந்திரத்தை உட்புகுத்தி நோயாளியின் பகந்தர முகத்தைப் பரீட்சை செய்து ஏஷணியின் உதவியால் சிறிது உயர்த்தி அறுவைச் சிகிச்சையைச் செய்க. பகந்தர நோய்கள் அனைத்திலும் இது பொதுவான சிகிச்சை முறையாகும். 4

### 3. பகந்தரத்திற்குச் சிறப்புச் சிகிச்சை

நன்கு தேர்ச்சி பெற்ற மருத்துவர் 'சதபோனகம்' எனப்படும் பகந்தர நோயில் நரம்புகளின் நடுப்பகுதியில் விரணத்தைத் தோற்றுவிக்க வேண்டும். இந்த விரணங்கள் ஆறியபின் மற்ற நாடிகளில் சிகிச்சை செய்யவேண்டும். ஒன்று மற்றொன்றுடன் தொடர்புற்ற நாடியில் ஒரு வகை விரணத்தைத் தோற்றுவித்தால் அந்த விரணம் பெரிதாகப் பரவி ஆஸனவாய்ப் பகுதியில் பிளவை உண்டாக்கும். அந்த பகுதியிலிருந்து மலமும் சிறுநீரும் வெளிவரத் துவங்கும். வாயுவும் சீற்றம் பெறும். அதனால் நோயாளிக்கு மிகுந்த துன்பம் உண்டாகும். இந்த நிலையில் நன்றாகத் தேர்ச்சி பெற்ற மருத்துவரும் கலக்கம் கொள்வார். அதனால் சதபோனக பகந்தர நோயில் விரணத்தை அகன்று விடச் செய்யக்கூடாது. 5-8

### 4. பல துளைகளைக் கொண்ட பகந்தரத்திற்குச் சிகிச்சை

பல துளைகளைக் கொண்ட இந்த சதபோனகம் எனும் பகந்தர நோய்க்கு சிகிச்சையில் கைதேர்ந்த மருத்துவர் 'அர்தலாங்கலகம்' (பாதி அளவு கலப்பையைப் போன்ற) அல்லது *லாங்கலகம் (கலப்பையின் தோற்றமுள்ள) விரணத்தை தோற்று விக்க வேண்டும். அல்லது 'ஸர்வதோபத்ரகம்' (வட்டவடிவ முள்ள) எனவும், 'கோதீர்த்தகம்' (பசுவின் குளம்பு போன்றதும்) எனவும் கூறப்படும் விரணங்களைத் தோற்றுவிக்கலாம். 9-10

மருத்துவர் நோயாளியின் நீர்ப்பெருகும் வழிகளை நான்கு பக்கங்களிலும் நெருப்பால் சுட வேண்டும். மென்மையான உடல் கொண்டவரும், மிகவும் அச்சம் கொள்பவருமானவருக்குத் தோன்றிய சதபோனக பகந்தர நோயைத் தீர்ப்பது மிகவும் சிரமமான செயலாகும். அத்தகையவருக்குத் துன்பத்தையும், (நீர்) பெருக்கத்தையும் தணிக்க விரைவில் ஸ்வேதன (உடல் வியர்க்கச் செய்யும்) முறையைக் கையாள வேண்டும். 11

5. **உடல் வியர்க்கச் செய்யும் முறை**

முன்பு கூறப்பட்ட ஸ்வேதன சிகிச்சைக்குப் பயன்படும் பொருள்களாலான *கிருசரம், பாயசம் மற்றும் கிராமங்களிலும், நீர்ப்பாங்கான இடங்களிலும் அல்லது நீரிலும் வாழும் உயிரினங்களின் மாமிசம், லாவகப்புள் முதலிய கூடுகட்டி வாழும் பறவைகளின் மாமிசம், விருக்ஷாதனி, ஆமணக்கு, பெரும்பஞ்ச மூலம் முதலிய பொருள்களாலான கஷாயத்தை எண்ணெய் பூசிய பானையில் வைத்திருந்து நாடீஸ்வேத முறையில் பகந்தர நோயாளிக்குச் சிகிச்சை செய்ய வேண்டும். 12-13

எள், ஆமணக்கு, அகத்திவிதை, உளுந்து, யவதானியம், கோதுமை, கடுகு முதலியவற்றுடன் புளிப்புக் காடிப் பொருள்களைச் சேர்த்து அகன்ற பாத்திரத்தில் கஷாயம் செய்து அதில் நோயாளியை உட்கார வைத்து உடல் வியர்க்கச் செய்க. இதனால் நோய் தணியும். 14-15

உடல் வியர்க்கச் செய்த பிறகு கோஷ்டம், ஐந்து உப்புகள், வசம்பு, பெருங்காயம், ஓமம் ஆகியவற்றை சம அளவில் கொண்டு நெய்யுடன் பக்குவம் செய்து உட்கொள்ளச் செய்க. திராட்சை மது, காஞ்சிகம், சுரை எனும் மது, ஸௌவீரகம் அல்லது அதிமதுரத்தின் விழுதைச் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் ஆகியவற்றை நோயாளியின் ஆஸன வாய்ப் பகுதியில் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். வாத நோய்களைத் தணிப்பவையாகக் கூறப்பட்ட எண்ணெய் மருந்துகளையும் நோய் கொண்ட பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருக்கலாம். இம்முறைகளால் மலமும் சிறுநீரும் இயற்கை வழிகளால் வெளியேறும். வேறு கடுமையான துன்பங்கள் தோன்றியிருந்தாலும் அவை அனைத்தும் தீரும். 16-19

6. **உஷ்ட்ரகிரீவ பகந்தர சிகிச்சை**

இது வரை சதபோனகம் எனும் பகந்தர நோய்க்குச் சிகிச்சை கூறப்பட்டது. இனி உஷ்ட்ரகிரீவம் எனும் பகந்தர நோய்க்குச் சிகிச்சை கூறப்படுகிறது. இந்நோயில் ஏஷணியை உட்புகுத்தி நோயைக் கண்டு விரணத்தில் கீறி அங்கு கார மருந்தைத் தடவ வேண்டும். இதில் கெட்ட நாற்றத்துடன்கூடிய மாமிசப்பகுதியை நீக்குவதற்கு நெருப்பால் சுடும் முறை சிறந்ததல்ல. இதற்கு எள்ளை நெய்யில் வறுத்து அதை நோய்ப்பகுதி மேல் பூச வேண்டும். பிறகு துணிப்பட்டியால் கட்டி அதன் மீது நெய்யை

* கிருசரம் - பொங்கல் போன்றது.

க் கொண்டிருக்க வேண்டும். மூன்றாம் நாள் மருத்துவர் கட்டை அவிழ்த்து பித்தத்தையும் அழற்சியையும் போக்கும் மருந்து மூலிகைகளால் விரணத்தைத் தூய்மைப்படுத்தி ஆற்றக் கூடிய நிலையில் இருக்கும்போது ஆற்றுவதற்கான சிகிச்சையை செய்ய வேண்டும். 20-22

### 7. கெட்ட நீர், சிறுநீர் முதலியன பெருகும் பகந்தரத்திற்குச் சிகிச்சை

அறிவாற்றல் மிக்க மருத்துவர் கெட்ட நீர் முதலியன பெருகிக் கொண்டிருக்கும் பகந்தரத்தில் பெருகும் வழிகளை அறுவைக்கு உரிய கருவியால் வெட்டி க்ஷார மருந்தை தடவ வேண்டும். அல்லது நெருப்பால் அவ்வழிகளைச் சுட வேண்டும். இளஞ்சூடுள்ள அணுதைலத்தை ஆஸனவாய்பகுதியில் ஊற்றிக் கொண்டிருக்கச் செய்ய வேண்டும். பசுவின் சிறுநீருடன் க்ஷாரப் பொருளைச் சேர்த்து அதனால் ஒத்தடம் கொடுக்க வேண்டும். அம்மருந்தை நோயுற்ற பகுதியில் தடவ வேண்டும். மருக்காரக்காய் முதலிய வாந்தி எடுக்கச் செய்யும் பொருள்களின் கஷாயத்தால் அப்பகுதியை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். இதனால் கெட்ட நீர் பெருகும். துன்பமும் குறையும். சற்று மென்மையடைந்த பிறகு கெட்ட நீர் பெருகும் வழியை ஏஷணி எனும் கருவியால் அறிந்து அறுவைச் சிகிச்சைக்கு உரிய கருவியால் பேரீச்சை இலை, அரைபிறை அல்லது சந்திரமண்டலம், ஊசிமுனை தோற்றத்திலோ அல்லது கீழ் நோக்கிய முகமாகவோ கீறி அந்தப் பகுதியில் க்ஷார மருந்தைத் தடவ வேண்டும். அல்லது நெருப்பால் நன்கு சுட வேண்டும். பிறகு மென்மையான சம்சோதன முறையைப் பயன்படுத்திக் குடலின் தன்மையை அறிந்து தீக்ஷ்ணமான விரேசன முறையைப் பயன்படுத்த வேண்டும். 23-27

### 8. சிறுவருக்குத் தோன்றும் பகந்தரத்திற்குச் சிகிச்சை

சிறுவர்களுக்கு வெளிமுகமாக அல்லது உள் முகமாகத் தோன்றிய பகந்தரத்தில் பேதியாகச் செய்தல், நெருப்பால் சுடுதல், அறுவைச் சிகிச்சை, க்ஷார மருந்துகளைப் பயன்படுத்து தல் என்னும் முறைகள் தீங்கு விளைவிப்பவையாகும். ஆகவே மிகவும் மென்மையும் மிகவும் தீக்ஷ்ணமும் அல்லாத நடுத்தரமான மூலிகைகளை கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். 28-29

கொன்றை, மஞ்சள், தகரை ஆகியவற்றின் தூளை தேனிலும், நெய்யிலும் கலந்து தடித்த நூல் வத்தி முனையில் பூசி அதை

விரணமுள்ள பகுதியில் செலுத்துக. இது விரணங்களைத் தூய்மைப்படுத்த நல்ல முறையாகும். இந்த வத்தி, கெட்ட நீர் பெருகும் வழிகளை காற்று மேகங்களைச் சிதறச் செய்வது போல விரைவில் போக்கும். 30

## 9. ஆகந்துக பகந்தரத்திற்குச் சிகிச்சை

புறக்காரணங்களால் தோன்றும் நோய்க்கு நாடி (கெட்ட நீர் பெருக்குள்ள வழியை) அறுவைக்குரிய கருவியால் வெட்டி நாவல்பழம் போன்ற நன்கு காய்ச்சப்பட்ட கருவியைக் கொண்டு முன் கூறிய முறைப்படி விரணப்பகுதியைச் சுட வேண்டும். விரணத்தில் உட்பகுதியிலிருந்து சல்யத்தை வெளியேற்ற உபாயம் செய்து கிருமிகளை அழிக்கும் முறையையும் பயன்படுத்த வேண்டும். 31-32

ஆகந்துக பகந்தரம் தீர்க்க இயலாதது என்பதை உணர்ந்து சிகிச்சை செய்ய முயல வேண்டும். மூன்று தோஷங்களும் சீற்றமடைவதால் தோன்றும் பகந்தர நோய் தீர்க்க இயலாதது என்பதால் அதற்குச் சிகிச்சை செய்யாமல் கைவிட வேண்டும். எல்லா வகையான பகந்தர நோய்களுக்கும் சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டன. 33

## 10. அறுவையால் தோன்றும் வேதனைக்குச் சிகிச்சை

அறுவை சிகிச்சை செய்வதால் மிக்க துன்பம் தோன்றினால் அப்பகுதியில் இளஞ்சூடுள்ள அணுதைலத்தை ஊற்றிக் கொண்டிருப்பது நலம் தரும். 34

வாதத்தைப் போக்கும் பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள்களாலான சூடுள்ள கஷாயம் நிரம்பிய பாத்திரத்தின் மீது துளையுள்ள வேறு பாத்திரத்தை மூடி நீராவியுடன் கூடிய சூடான அப்பாத்திரத்தின் மேல் நோயாளியின் ஆஸன வாயில் எண்ணெயைப் பூசி உட்கார வைக்க வேண்டும். அல்லது நோயாளியைப் படுக்க வைத்து வேதனையைப் போக்கும் நாடீஸ்வேதன முறையால் உடல் வியர்க்கச் செய்யவும். அல்லது வெந்நீர் நிரம்பிய அகன்ற பாத்திரத்தில் உட்கார வைப்பதால் வேதனை குறையும். 35-36

அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் கதளீமிருகம், உலோபாகம், பிரியகம் எனும் உயிரினங்களின் தோலில் மாமிசத்தை வைத்துப் பொட்டலம் போலச் செய்து அதனால் உடல் வியர்க்கச் செய்க. 37

## 11. பகந்தர நோயில் பயன்படுத்தத் தக்க மருந்துப் பொருள்கள்

திரிகடுகம், வசம்பு, பெருங்காயம், ஐந்து வகை உப்புகள், ஓமம் எனும் இவற்றின் தூளைக் காஞ்சிகம், கொள்ளு, கஷாயம், ஸௌவீரகம் ஆகியவற்றுடன் உட்கொள்ளச் செய்க. 38

மால்கங்கினி, கலப்பைக்கிழங்கு, கருஞ்சிவதை, நேர்வாளம், வெண்சிவதை, எள், கோஷ்டம், சோம்பு, வெள்ளை அருகம்புல், பாச்சோத்தி, காக்கணாங்கொட்டை, அன்னபேதி, காங்குஷ்டம் முதலியன பகந்தர நோயில் தூய்மைப்படுத்தும் பொருள்களாகப் பயன்படுத்தத்தக்கவை. 39

வெண்சிவதை, எள், நேர்வாளம், மஞ்சிட்டி முதலியவற்றைப் பாலுடனும் இந்துப்புடனும் தேனுடனும் கலந்து பூசுவதால் விரணம் நீங்கும். 40

ரஸாஞ்சனம், மஞ்சள், மரமஞ்சள், மஞ்சிட்டி, வேப்பிலை, வெண்சிவதை, தேஜோவதி, நேர்வாளம் ஆகியவற்றின் விழுது நாடீவிரணத்தைப் போக்கும். 41

கோஷ்டம், வெண்சிவதை, எள், நேர்வாளம், திப்பிலி, இந்துப்பு, தேன், மஞ்சள், திரிபலை, மயில் துத்தம் ஆகியவை விரணத்தை ஆற்றுவதில் சிறந்தவை. 42

திப்பிலி, அதிமதுரம், பாச்சோத்தி, கோஷ்டம், ஏலக்காய், அரேணுகம், மஞ்சிட்டி, கொன்றை மலர், நன்னாரி, மஞ்சள், மரமஞ்சள், தேன்மெழுகு, பதுமகம், தாமரைக் கேசரம், கள்ளி, வசம்பு, கலப்பைக்கிழங்கு, இந்துப்பு ஆகியவற்றை கலந்து இவற்றால் எண்ணெய் மருந்து செய்ய வேண்டும். இந்த எண்ணெய் கண்டமாலை, மண்டலம், நீரிழிவு ஆகிய நோய்களால் தோன்றும் விரணம் முதலியவற்றை ஆற்றுவதில் சிறந்தது. 43-46

*நியக்ரோதாதிகணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்கள் விரணத்தைத் தூய்மைபடுத்துவதிலும், ஆற்றுவதிலும் சிறந்தவை. இவற்றின் விழுது சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் அல்லது நெய் மருந்து பகந்தரத்தை ஆற்றுவதில் சிறந்தவை. 47

---

* நியக்ரோதாதிகணம் - ஆல், அரசு, அத்தி, வெள்ளலொத்தி, உதியன், சிறுநாவல், பெருநாவல், மருதை, நீர்வஞ்சி, வெண்கருங்காலி, பூவரசு, மா, புளிவஞ்சி, முரளஞ்செடி, முருக்கன், நந்தியாவர்த்தம், இலந்தை, கடம்பு, தும்பை, அதிமதுரம், இலுப்பை என்பன.

வெண்சிவதை, நேர்வாளம், மஞ்சள், எருக்கன்வேர், அகில், அரளிவேர், வாயுவிடங்கம், திரிபலை, கள்ளிப்பால், எருக்கம் பால், தேன், தேன் மெழுகு ஆகியவற்றைக் கொண்டு எண்ணெய் பக்குவம் செய்க. இந்த எண்ணெய் மருந்தைப் பகந்தர நோயைப்போக்கச் சிறப்பாகப் பயன்படுத்தவேண்டும். 48-49

கொடிவேலி, எருக்கு, சிவதை, வட்டத்திருப்பி, அரளி, கள்ளி, வசம்பு, கலப்பைக்கிழங்கு, ஏழிலைப்பாலை, மால்கங்கிணி ஆகியவற்றைச் சேர்த்து தைரியமுள்ள மருத்துவர் எண்ணெய் மருந்து செய்ய வேண்டும். இந்த எண்ணெய் தோஷங்களை வெளியேற்றும். இந்த எண்ணெயை பகந்தர நோயில் அதிக அளவு பயன்படுத்த வேண்டும். இது விரணங்களைத் தூய்மைப் படுத்துவதுடன் அவற்றை ஆற்றும். நோயால் கெட்டப்பகுதியில் உள்ள தோலில் இது இயற்கை நிறத்தை தோற்றுவிக்கும். விரணத்தின் நிலை அறிந்து அறிவாற்றல் மிக்க மருத்துவர் த்விவிரணீய சிகித்ஸாத்தியாயத்தில் கூறிய முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 50-52

## 12. பகந்தரத்தில் இயந்திரத்தைப் பயன்படுத்துதல்

தேர்ச்சி பெற்ற மருத்துவர் அர்சயந்திரத்தின் உதட்டுப் பகுதியின் துளையை மேல் பக்கம் பிடித்துக் கொண்டு பகந்தர நோய்க்குள் பாதி சந்திரன் வடிவத்தில் புகுத்த வேண்டும். 53

## 13. பகந்தர நோயில் விலக்க வேண்டியவை

பகந்தர நோய் ஆறிய பிறகு கூட உடற்பயிற்சி, கலவி, சினம், குதிரைச் சவாரி, குருத்தன்மை கொண்ட உணவு ஆகியவற்றை ஓராண்டு காலம் வரை விலக்க வேண்டும். 54

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**பகந்தர சிகித்ஸிதம் எனும்**

**எட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# ஒன்பதாம் அத்தியாயம்
# *குஷ்ட சிகித்ஸிதம்

## 1. குட்ட நோய் தோன்றக் காரணம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலியவர்களுக்கு உபதேசம் செய்தபடி குட்டநோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட அல்லது தன் உடலுக்குத் தகாத உணவு உட்கொள்ளுதல், அளவுக்கு மீறி உண்ணுதல், தனக்குப் பழக்கமற்ற பொருள்களை உட்கொள்ளுதல், சிறுநீர், மலம் எனுமிவற்றைத் தடுத்தல், எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறை முதலியவற்றை முறை கேடாகப் பயன்படுத்துதல் பாவச் செயல்களைப் புரிதல் மற்றும் தொல்வினைப்பயன் ஆகியவற்றால் தோலைச் சார்ந்த (குட்ட) நோய் உண்டாகிறது. 3

## 2. தோல் நோய் கொண்டவர் விலக்க வேண்டியவை

தோல் நோய் கொண்டவர், புலால், வசை (கொழுப்பு), பால், தயிர், எண்ணெய், கொள்ளு, உளுந்து, காராமணி, கருப்பஞ்சாற்றால் செய்யப்பட்ட பொருள்கள், மாவு பண்டங் களால் செய்த தின்பண்டங்கள், புளிப்புச் சுவை கொண்ட பொருள்கள், எரிச்சலையும் கபத்தையும் மிகுதியாகத் தோற்று விக்கும் பொருள்கள் மற்றும் ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட பொருள்களைக் கலந்து உண்ணுதல், உண்ட உணவு செரிமானமடையாத நிலையில் மீண்டும் உண்ணுதல் ஆகிய வற்றை அறவே விலக்க வேண்டும். மற்றும் பகலில் தூங்குதல், கலவி புரிதல் என்பனவற்றையும் அறவே விலக்க வேண்டும். 4

## 3. தோல் நோய் கொண்டவர் பயன்படுத்தத்தக்கவை

பழைய சம்பா அரிசி, அறுபதுநாள்குறுவை, யவதானியம், கோதுமை, காட்டில் தோன்றும் புல்லரிசிவகை தானியங்கள், பயறு அல்லது துவரையின் கஞ்சியில்

* குட்ட நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் அத்தியாயம் குஷ்ட சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

வேப்பிலை அல்லது சேராங்கொட்டைச் செடி இலைகளின் கஷாயத்தைச் சேர்த்துப் பருகுதல் அல்லது *மண்டூகபர்ணி முதலான கசப்புச் சுவை கொண்ட பொருள்களாலான கஷாயத்துடன் உணவு உட்கொள்ளுதல் என்பனவற்றைப் பயன்படுத்த வேண்டும். பருகுதல் நோய் கொண்ட பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருத்தல் எனும் சிகிச்சை முறைகளுக்கு கருங்காலிக் கஷாயத்தைப் பயன்படுத்துதல் மிகவும் நன்மை தரும். இத்தகைய உணவுப் பழக்கங்களால் நோய் தணியும். 5

**4. நோய்த் துவக்கத்தில் சிகிச்சை**

குட்ட நோய் தோன்றும் முற்குறிகள் காணப்பட்டதும் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் இரு முறைகளையும் பயன்படுத்தி உடலைத் தூய்மைப்பெறச் செய்ய வேண்டும். தோலைச் (லஸீகாவை) சார்ந்த நோயில் தூய்மைப் படுத்தும் பொருள்களை மேல்பூச்சுக்குப் பயன்படுத்த வேண்டும். இரத்தத்தைச் சார்ந்துள்ள நோயில் தூய்மைப்படுத்தும் முறை, மேல் பூச்சு மற்றும் கஷாயத்தைப் பருகச் செய்தல், இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் முறைகளைச் செய்ய வேண்டும். மாமிசத்தைச் சார்ந்த நோயில் உடலைத் தூய்மைப்படுத்துதல், மேல் பூச்சு பூசுதல், கஷாயத்தைப் பருகச் செய்தல், இரத்தத்தை வெளியேற்றல், அரிஷ்டம், ஆஸவம் எனும் மருந்து வகைகளைப் பயன்படுத்துதல், குளிர்ந்த நீரில் மருந்துப் பொருள்களின் தூளைச் சேர்த்துக் கடைந்து பருகச் செய்தல், இலேகிய வகைகளைப் பயன்படுத்துதல் எனும் முறைகள் அனைத்தையும் கையாள வேண்டும். கொழுப்பைச் சார்ந்த நோய் கொண்டவர் பத்திய முறைகளை சீராகக் கைப்பிடித்துத் தேவையான சிகிச்சைகளை முறையாகப் பெற்றால் இது காலம் கடத்தக் கூடிய நோயாகும். இந்நோயில் உடலைத் தூய்மைப்படுத்தும் முறையுடன் இரத்தத்தைப் போதிய அளவு வெளியேற்றிய பிறகு சேராங்கொட்டை, சிலாஜத்து, கருங்காலிச்சாறு, மஹாகுட்ட சிகிச்சையில் கூறப்பட்ட அயஸ்கிருதி முறை முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். என்பு முதலிய தாதுக்களைச் சார்ந்த நோயானால் சிகிச்சைக்கு உட்படாததென அறிந்து கைவிட வேண்டும். 6

---

* மண்டூகபர்ணீ - வல்லாரை வகை.

**5. மூன்று தோஷங்களால் தோன்றிய நோய்களுக்குச் சிகிச்சை முறைகள்**

குட்ட நோயில் முதலில் எண்ணெய் மருந்துகளால் வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாக செய்தல் எனும் முறைகளைக் கையாண்ட பிறகு வாதத்தினால் தோன்றிய குட்ட நோய்க்கு ஆடுதீண்டாப்பாளை, நெருஞ்சி, சீந்தில் கொடி, தசமூலங்கள் ஆகியவற்றைச் சேர்த்துத் தயார் செய்த நெய் மருந்தை உட்கொள்ளவும் மற்றும் உடலின் மேல் தேய்த்துக் குளிக்கவும் பயன்படுத்த வேண்டும். பித்தத்தாலான குட்டத்திற்கு தவம், அச்வகர்ணம், மருதம், புரசு, வேம்பு, பர்பாடகம், அதிமதுரம், பாச்சோத்தி, மஞ்சிட்டி ஆகியவற்றாலான நெய் மருந்தைப் பயன்படுத்துக. கபத்தாலான நோய்க்கு கொன்றை, வேம்பு, ஏழிலைப்பாலை, கொடிவேலி, மிளகு, வசம்பு, கோஷ்டம் முதலியவற்றால் அல்லது சேராங்கொட்டை, கடுக்காய், வாயுவிடங்கம் ஆகியவற்றால் ஆன நெய் மருந்தைப் பயன்படுத்துக. மூன்று வகை நோய்களிலும் ஸௌராஷ்டிர நாட்டு மண்ணாலான அல்லது சேராங்கொட்டையாலான எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். 7

**6. மகாதிக்தக கிருதம்**

ஏழிலைப்பாலை, கொன்றை, அதிவிடயம், வட்டத்திருப்பி, கோஷ்டம், சீந்தில் கொடி, திரிபலை, பேய்ப்புடல் இலை, வேம்பு, பர்பாடகம், காஞ்சொரி, பிராம்மி, கோரைக்கிழங்கு, சந்தனம், பதுமகம், மஞ்சள், திப்பிலி, குடசப்பாலை, தண்ணீர் விட்டான் கிழங்கு, நன்னாரி, ஆடாதொடை, வசம்பு, அதிமதுரம், நிலவேம்பு, முதுக்கன் கிழங்கு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு விழுதாகச் செய்து அதற்கு நான்கு பங்கு அளவு நெய்யும், நெய்யின் அளவிற்கு இரண்டு மடங்கு நெல்லிக்கனிச் சாறும், நெல்லிச் சாற்றுக்கு நான்கு மடங்கு அளவு நீர் சேர்த்துப் பக்குவம் செய்க. இது மகாதிக்தக கிருதம் எனப்படும். இது குட்டம், விஷக்காய்ச்சல், இரத்த பித்தம், இதயநோய், பைத்தியம், கால்கைவலி, குன்மம், பிடகை, இரத்தப் பெரும்பாடு, கலகண்டம், கண்டமாலை, யானைக்கால், சோகை, அக்கி, ஆண்மைக் குறைவு (அலித்தன்மை), அரிப்பு முதலியவற்றைப் போக்கும். 8

**7. திக்தக கிருதம்**

திரிபலை, பேய்ப்புடல் இலை, வேம்பு, ஆடாதொடை, கோஷ்டம், காஞ்சொரி, மண்டுகபிராம்மி, பர்ப்பாடகம் ஆகிய

இவற்றை இரண்டு பலம் வீதம் கொண்டு ஒரு * துரோணம் அளவுள்ள நீரில் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சுக. அரைப்பலம் மண்டூக பிராம்மி, கோரைக்கிழங்கு, குடசப்பாலை, சந்தனம், நிலவேம்பு, திப்பிலி எனும் இப்பொருள்களை விழுதாகச் செய்து முன்பு செய்த கஷாயமும் சேர்த்து ஒரு பிரஸ்தம் நெய்யுடன் பக்குவம் செய்க. இது திக்தகம் எனும் கிருதமாகும். இது குட்டம், விஷக்காய்ச்சல், குன்மம், மூலநோய், கிரகணி, வீக்கம், சோகை, அக்கி, அலித்தன்மை ஆகியவற்றைப் போக்கும். 9

### 8. நெய் மருந்தைப் பயன்படுத்தும் முறை

இந்த கிருத மருந்துகளில் ஏதேனும் ஒன்றினை எண்ணெய் முறையாகப் பயன்படுத்தி நோயாளியின் உடலை வியர்க்கச் செய்க. ஒன்று, இரண்டு, மூன்று, நான்கு அல்லது ஐந்து சிரைகளைக் கீறி மேலெழும்பியிருக்கும் மண்டலங்களைக் (வட்டமான தழும்புகளை) கீறி நீக்குக. அல்லது கடல் நுரை, பிறை, இலை, மயில் கொண்டைச் செடியின் இலை, காட்டாத்தி இலை ஆகியவற்றைக் கொண்டு நன்றாகத் தேய்த்துவிட்டு கொம்பரக்கு, ஸர்ஜக்ஷாரம், ரஸாஞ்சனம், தகரைவிதை, கார்போக அரிசி, தேஜோவதி, அரளிவேர், எருக்கன் வேர், குடசப்பாலை, கொன்றை வேர் ஆகியவற்றைப் பசுவின் சிறுநீருடன் அல்லது பசுவின் பித்தத்துடன் அரைத்துப் பூச்சு மருந்தாகப் பயன்படுத்துக. அல்லது ஸர்ஜக்ஷாரம், மயில்துத்தம், வாயுவிடங்கம், ஒட்டடை, கொடிவேலி, கோஷ்டம், கள்ளி, மஞ்சள், இந்துப்பு ஆகியவற்றை விழுதாக்கிப் பூசுக. இந்த மருந்துப் பொருள்களை க்ஷாரமாகச் செய்து புரசக்ஷாரம் சேர்த்துப் பக்குவம் செய்து மெழுகு போலானதும் அதை ஆறவைத்துப் பூச்சு மருந்தாகப் பயன்படுத்துக. அல்லது மால்கங்குணிக்காய், கொம்பரக்கு, மிளகு, திப்பிலி, மல்லிஇலை ஆகியவற்றையோ அரிதாரம், மனோசிலை, எருக்கம்பால், எள், முருங்கைவிதை, மிளகு ஆகியவற்றை விழுதாக அரைத்தோ பூச்சு மருந்தாகப் பயன்படுத்துக. அல்லது ஸர்ஜக்ஷாரம், கோஷ்டம், மயில்துத்தம், குடசப்பாலைப்பட்டை, கொடிவேலி, வாயுவிடங்கம், மிளகு, மனோசிலை ஆகியவற்றின் விழுது அல்லது கடுக்காய், புங்கன், மஞ்சள் கடுகு, இந்துப்பு, கோரோசனம், கார்போக அரிசி, மஞ்சள் ஆகியவற்றை விழுதாகச் செய்து மேல் பூச்சுக்குப் பயன்படுத்துக. 10

துரோணம் - 1024 தோலா அளவு.

எல்லா வகைக் குட்டங்களையும் போக்கவல்ல, நிச்சயமாகப் பயன்தரக்கூடிய மேல்பூச்சு மருந்துகள் கூறப்பட்டன. இனி தத்ரு குட்டம், வெண்குட்டம் ஆகியவற்றைப் போக்கவல்ல மருந்துகளைக் கூறுவோம். 11

### 9. தத்ருகுட்டத்திற்கு பூச்சு மருந்து

கொம்பரக்கு, கோஷ்டம், ஸரள தேவதாரு பிசின், மஞ்சள், சுக்கு, மிளகு, திப்பிலி, தகரை விதை, முள்ளங்கிவிதை ஆகியவற்றை மோருடன் அரைத்துப் பூசினால் தத்ருகுட்டம் நீங்கும். 12

இந்துப்பு, தகரை விதை, வெல்லம், நாககேசரம், ரஸாஞ்சனம் ஆகியவற்றை விளாம்பழச்சாற்றுடன் அரைத்துப் பூசினால் தத்ருகுட்டம் நீங்கும். 13

சுவர்ணக்ஷீரி, கொன்றை, வாகை, வேம்பு, ஸர்ஜக்ஷாரம், குடசப்பாலை, *அச்வகர்ணம் ஆகியவற்றைக் குளியலுக்கும் மேல் பூச்சுக்கும் நோயுற்ற பகுதி மேல் தேய்க்கவும் பயன்படுத்தினால் தத்ருகுட்டம் நீங்கும். 14

### 10. வெண்குட்டத்திற்கு மருந்து

பெரும்அத்தி மற்றும் சிறு அத்திமர வேர்களைச் சம அளவில் கொண்டு அரைத்து விழுதாக்கி நீருடன் கலந்து இளஞ்சூடுள்ள போது பருகி வந்தால் வெண்குட்டம் மற்றும் புண்டரீக குட்டத்தில் கொப்புளங்கள் தோன்றும். 15

சிறுத்தை அல்லது யானையின் தோலை எரித்து எண்ணெயுடன் கலந்து அந்தக் கொப்புளங்களின் மேல் பூசவும். கொன்றை மரக் க்ஷாரத்துடன் பூதிகீடம் என்பதன் க்ஷாரத்தையும் கலந்து பூசினால் வெண்குட்டம் நீங்கும். 16

கருநாகத்தை எரித்துச் சாம்பலைத் தான்றிக்காய் எண்ணெய்ச் சேர்த்துப் பூசினால் வெண்குட்டம் நீங்கும். 17

கருநாகத்தை எரித்துச் சாம்பலை க்ஷார முறைப்படி நீரில் ஏழு முறை தூய்மைப்படுத்தவும். இந்த க்ஷாரநீர் நான்கு பங்கு அளவு கொண்டு அதனால் எண்ணெய் மருந்து செய்து பூச்சு மருந்தாகப் பயன்படுத்தினால் வெண்குட்டம் தீரும். இது சிறந்த மருந்தாகும். 18

---

* அச்வகர்ணம் - சாலமரத்தின் ஒரு வகை.

### 11. வெண்குட்டத்திற்கு மற்றொரு மருந்து

தகரைவிதை, கோஷ்டம், அதிமதுரம் எனும் இம்மூன்றையும் தூளாக்கி அதில் நெய் கலந்து கொள்க. வெண்ணிறமுள்ள கோழியை ஒரு நாள் முழுதும் பட்டினி கிடக்கச் செய்து பிறகு மறுநாள் மாலையில் முன் செய்த நெய் மருந்தை உண்ணச் செய்க. அந்தக் கோழியின் எச்சத்தை பக்குவமடைந்த குட்டத்தின் மேல் நன்றாக பூசவும். ஒரு மாதம் இவ்வாறு பூசி வந்தால் தாதுக்களில் பரவியுள்ள வெண்குட்டம் தீரும். 19-20

நீர்த்திப்பிலியை நன்கு எரித்து க்ஷாரம் செய்க. அதைப் பல முறை யானையின் சிறுநீரில் கலந்து தூய்மைப்படுத்துக. இந்த க்ஷாரநீர் ஒரு துரோணமும், இதற்குப் பத்தில் ஒரு பங்கு கார்போக அரிசியும் சேர்த்துப் பக்குவம் செய்க. லேகியம் போல பக்குவமான பிறகு குளிகைகளாக்குக. வெண்குட்டம் தோன்றிய பகுதியை நன்கு கழுவிய பின்பும் மருந்தைப் பூசி வந்தால் தோல் நிறம் மற்ற உடற்பகுதியின் நிறத்திற்கேற்பச் சீராகும். 21-22

### 12. கிலாஸகுட்டத்திற்கு மருந்து

மா மற்றும் கடுக்காய் மரப்பட்டையைக் கொண்டு முறைப் படி கஷாயம் காய்ச்சுக. இந்தக் கஷாயத்திலும், ஆலமரப் பாலிலும் பஞ்சின் வத்தியை நன்றாகத் தோய்த்து உலர்த்துக. தாமிரத்தாலான அகல்விளக்கில் அந்த வத்தியை எரித்து மை தயார் செய்க. அதைக் கடுக்காய் கஷாயத்தில் பாவனை செய்து கடு தைலம் சேர்த்துக் கிலாஸ குட்டம் தோன்றிய பகுதியில் பல முறை பூசி வரவும். இதனால் கிலாஸ குட்டம் நீங்கும். 23-24

### 13. வெண்குட்டத்திற்கு வேறு மருந்து

கார்போக அரிசி, சுவர்ண மாக்ஷிகம், பேய் அத்தி, கொம்பரக்கு, இரும்புத்தூள், திப்பிலி, ரஸாஞ்சனம் எனும் இவை அனைத்தின் எடைக்குச் சமம் கறுப்பு எள் கொண்டு பசுவின் பித்தத்தால் அரைத்து வத்திபோல் செய்து வெண்குட்டத்தின் மீது பூசி வந்தால் நோய் தீரும். குருவேரை எரித்து மயிலின் பித்தம் கலந்து இதை வெண்குட்டம் தோன்றிய பகுதியில் பூசி வந்தால் நோய் தீரும். 25-26

### 14. வெண்குட்டத்திற்கு மற்றும் சில மருந்துகள்

மயில்துத்தம், அரிதாரம், கடுகரோகிணி, சுக்கு, மிளகு, திப்பிலி, ஆடாதொடை அல்லது செம்முருங்கை, எருக்கு,

அரளிவேர், கோஷ்டம், கார்போக அரிசி, சேராங்கொட்டை, அம்மாம்பச்சரிசி, கடுகு, கள்ளி எனுமிவற்றைச் சேர்த்து அரைத்துப் பூசினாலும் அல்லது பாச்சோத்தி, வேம்பு, பெருங் கோலி, கொன்றை இலை, வாயுவிடங்கம், அரளிவிதை, மஞ்சள், மரமஞ்சள், கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி - ஆகியவற்றைச் சேர்த்து அரைத்துப் பூசினாலும் வெண்குட்டம் நீங்கும். 27-28

## 15. குட்ட நோய்க்கு நீலகிருதம்

மணத்தக்காளி, பேய்அத்தி, கடுகரோகிணி, தனித்தனியாக இரு பிரஸ்தம், இரும்புத்தூள் இரு பிரஸ்தம், திரிபலை 3 ஆடகம், விஜயஸாரம் இரு பிரஸ்தம் ஆக இப்பொருள்களை மூன்று துரோணம் அளவு நீரில் பாதி அளவு மிகுந்திருக்க காய்ச்சுக. அக்கஷாயத்தில் குடசப்பாலை, சுக்கு, மிளகு, திப்பிலி, இலவங்கப்பட்டை, தேவதாரு, கொன்றை, நேர்வாளம், கார்போக அரிசி, சிறுநாகப்பூ, கண்டங்கத்தரி ஆகியவற்றை விழுதாகச் செய்து நெய் சேர்த்துப் பக்குவம் செய்க. இதை உட்கொள்ளவும் எண்ணெய் குளியலுக்கும் தோல் நோய்க்கும் பயன்படுத்தலாம். நீலகிருதம் எனப் பெயர் கொண்ட இம்மருந்து குட்ட நோய்களைத் தீர்க்கவல்லது. 29-33

## 16. தோல் நோய்களுக்கு மகா நீலகிருதம்

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் ஆகியவற்றின் தோல், சுக்கு, மிளகு, திப்பிலி, துளசி, மருதோன்றி, மணத்தக்காளி, கொன்றை ஆகியவற்றின் ஒவ்வொன்றும் இரண்டு துலாம், மணத்தக்காளி, எருக்கம், நேர்வாளம், குடசப்பாலை, கொடிவேலி, மரமஞ்சள், கண்டங்கத்தரி ஆகியவை ஒவ்வொன்றும் பத்து பலம் எனக்கொண்டு இவற்றை மூன்று துரோணம் அளவுள்ள நீரில் சேர்த்து ஆறு பிரஸ்தம் அளவு கஷாயம் மிகுந்திருக்கக் காய்ச்சுக. அதில் பசுஞ்சாணச்சாறு, தயிர், பசுவின் சிறுநீர், பசு நெய் ஆகிய இவ்வொவ்வொன்றும் இரண்டு * ஆடகம் வீதம் சேர்க்கவும். நிலவேம்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, கொடிவேலி, புங்கன்விதை, அவுரி (சிறியது), கருஞ்சிவதை, கார்போக அரிசி, காச்சிருக்கை, அவுரி (பெரியது), வேப்பம்பூ ஆகியவற்றின் விழுதுடன் முன் செய்த மருந்தைச் சேர்த்து நெய்ப் பக்குவம் செய்க. இது 'மகாநீலகிருதம்' எனப்படும். இம்மருந்து குட்ட நோயைப் போக்கும். இந்நெய் மருந்தை உடலின் மேல் தேய்ப்பதால் வெண்குட்டம் நீங்கித்

---

* ஆடகம் - 256 தோலா (64 பலங்கள்)

தோல் இயற்கை நிறம் பெறும். இம்மருந்து பகந்தரம், கிருமிநோய், மூலநோய் ஆகியவற்றையும் தீர்க்கும். 34-38

### 17. குட்ட நோய் கொண்டவர் பின்பற்றத் தக்க முறைகள்

பசுவின் சீறுநீரில் கொடிவேலி, சுக்கு, மிளகு, திப்பிலி, தேன் முதலியவற்றைச் சேர்த்து நெய்யில் பழகிய பானையில் வைத்து மூடி, பதினைந்து நாட்கள் வைத்திருக்கவும். பிறகு அதைப் பருகுவதுடன் குட்ட நோயாளிக்குக் கூறப்பட்டுள்ள பத்திய முறைகளைப் பின்பற்றுக. 39

புங்கன், எருக்கன், கள்ளி, தேவதாரு, கொன்றை, மல்லிச் செடியின் இலை ஆகியவற்றைப் பசுவின் சிறுநீர் விட்டு அரைத்துப் பூசி வந்தால் வெண்குட்டம், தத்ருகுட்டம், விரணம், நாள்பட்ட மூலம், நரம்புச்சிலந்தி முதலியன நீங்கும். 40

அதன் பிறகு கெட்ட இரத்தம் நீங்கி, உடலில் வலிமை தோன்றிய பின்பு நெய் மருந்தால் எண்ணெய் மருந்து முறையைச் செய்வித்துக் கொண்டு தீக்ஷ்ண குணமுள்ள மருந்துகளால் வாந்தி எடுக்கச் செய்து பிறகு தோஷங்களைத் தணிக்க வேண்டும். 41

வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனுமிவற்றை முறையாக செய்யாவிடில் குட்ட நோயுற்றவரின் உடலில் தோஷங்கள் பரவும். அவை மீண்டும் நோயைத் தோற்றுவித்துச் சிகிச்சைக்கு உட்படாததாக்கி விடும். அதனால் நோயாளியின் உடலிலிருந்து தோஷங்களை முழுவதுமாக வெளியேற்றிவிட வேண்டும். 42

### 18. குட்ட நோயில் தூய்மைப்படுத்தும் முறை

குட்ட நோயில் பதினைந்து நாட்களுக்குப் பிறகு வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அதன்பிறகு ஒரு மாதம் கழித்து பேதியாகச் செய்ய வேண்டும். ஒரு மாதம் சென்ற பின் மீண்டும் பேதியாகச் செய்க. ஆண்டுக்கு இருமுறை இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். இரத்தம் வெளியேறி இரண்டு மூன்று நாட்கள் கழித்து நசிய முறையைப் பயன்படுத்த வேண்டும். 43

### 19. குட்ட நோய்க்குச் சில முறைகள்

கடுக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, வெல்லம், எள் ஆகியவற்றைச் சேர்த்து உட்கொள்வதால் குட்ட நோய் நீங்கும். அல்லது நெல்லிக்காய், தான்றிக்காய், கடுக்காய், திப்பிலி, வாயுவிடங்கம் ஆகியவற்றைத் தூளாக்கி நெய் அல்லது தேன்

கலந்து உட்கொண்டால் குட்ட நோய் நீங்கும். அல்லது ஒரு பலம் மஞ்சளைப் பசுவின் சிறுநீருடன் ஒரு மாதம் உட்கொண்டால் நோய் தணியும். இதைப் போல கொடிவேலி அல்லது திப்பிலியைத் தூள் செய்து பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளலாம். 44-45

இதைப்போலவே பசுவின் சிறுநீருடன் ரஸாஞ்சனத்தை ஒரு மாதம் உட்கொண்டு அதை மேல் பூச்சாகவும் பயன்படுத்த வேண்டும். வேப்பம்பட்டை, ஏழிலைப்பாலை, கொம்பரக்கு, பெருங்கோரைக்கிழங்கு, தசமூலம், மஞ்சள், மரமஞ்சள், மஞ்சிட்டி, தான்றிக்காய், ஆடாதொடை, தேவதாரு, கடுக்காய், கொடிவேலி, சுக்கு, மிளகு, திப்பிலி, நெல்லிக்காய், வாயுவிடங்கம் எனும் இவ்வனைத்துக்கும் சமஅளவு வாயுவிடங்கம் சேர்த்துத் தூளாக்குக. இதில் ஒரு பலம் அளவுத் தூளைப் பசுவின் சிறுநீருடன் உட்கொண்டு வந்தால், குட்ட நோய் நீங்கும். அல்லது ஒரு துரோணம் அளவு திரிபலாகிருதம் திரிகடுகத்தூள் சேர்த்து உட்கொண்டால் குட்ட நோய் நீங்கும். அல்லது ஒரு துரோணம் பசுவின் சிறுநீரில் யவதிக்தத்தின் விழுது சேர்த்துக் காய்ச்சிய நெய் மருந்தைப் பயன்படுத்தினால் குட்ட நோய் நீங்கும். கொன்றை, ஏழிலைப்பாலை, பேய்ப்புடல் இலை, குடசப் பாலை, புங்கன், வேம்பு, மஞ்சள், மரமஞ்சள், மாவிலங்கை ஆகியவற்றின் விழுதை நெய் சேர்த்துக் காய்ச்சிய நாள்பட்ட மருந்து குட்ட நோயைத் தீர்க்கும். 46-49

## 20. எரிச்சலுடன் கூடிய குட்ட நோய்க்குச் சிகிச்சை

கொம்பரக்கு, வேம்பு, பதுமகம், பதங்கம், ஏழிலைப்பாலை, குடசப்பாலை, விஜயசாரம் ஆகியவற்றை கஷாயம் காய்ச்சி மிக்க எரிச்சல் கொண்ட குட்ட நோய் உள்ளவருடைய குளியலுக்குப் பயன்படுத்துக. அல்லது சிவதைத் தூளைத் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. 50

## 21. கிருமிகள் தோன்றும் குட்டத்திற்குச் சிகிச்சை

மாமிசம் கெட்டுச் சிதைந்து விழும் நிலையில் அதில் கிருமிகள் தோன்றும். அப்பொழுது வேம்பின் க்வாதத்தால் செய்யப்பட்ட எண்ணெய் மருந்துடன் பழைய பயற்றை உணவாகக் கொடுக்க வேண்டும். அல்லது நோயாளி வேம்பின் க்வாதம், சிவப்பு அல்லது வெள்ளை நிற மலர்களைக் கொண்ட எருக்கன், ஏழிலைப்பாலை ஆகியவற்றின் க்வாதம் என்பவற்றைப் பருக வேண்டும். 51

கிருமிகள் தோன்றுவதால் சிதைந்த உறுப்புகளின் மேல் அரளிவேர், வாயுவிடங்கம் எனும் இவ்விரண்டையும் பசுவின் சிறுநீர் விட்டரைத்துப் பூச வேண்டும். பசுவின் சிறுநீரால் நோயாளியை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். எல்லா உணவுப் பொருள்களிலும் வாயுவிடங்கத்தைச் சேர்த்துப் பயன்படுத்த வேண்டும். 52

## 22. குட்டநோய் விரணங்களுக்குச் சிகிச்சை

புங்கன், கடுகு, முருங்கை, காட்டு மாங்கொட்டை விதை ஆகியவற்றின் எண்ணெய் மருந்தை குட்ட விரணங்களின் மீது தடவ வேண்டும். அல்லது மிளகு முதலான உஷ்ண தன்மை யுள்ள பொருள்களையும் வேம்பு முதலிய கசப்புச் சுவையுள்ள பொருள்களையும் சேர்த்துச் செய்த க்வாதத்துடன் புங்கன் முதலான பொருள்களின் எண்ணெயைச் சேர்த்து பக்குவம் செய்து விரணத்தின் மீது பூச வேண்டும். 53

## 23. வஜ்ரக தைலம்

ஏழிலைப்பாலை, புங்கன், எருக்கு, மல்லி, அரளி, கள்ளி, வாகை, கொடிவேலி, காக்கணங்கொடி வேர், நாபிக்கிழங்கு, கலப்பைக்கிழங்கு மற்றும் வஜ்ரம் எனும் பெயர் உள்ள கள்ளி, அன்னபேதி, மனோசிலை, புங்கன்விதை, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், மஞ்சள், மரமஞ்சள், மஞ்சள் கடுகு, வாயுவிடங்கம், தகரைவிதை ஆகிய இப்பொருள்களைச் சேர்த்துப் பசுவின் சிறுநீருடன் விழுதாக அரைத்து, அவற்றால் எண்ணெய் மருந்து செய்க. இதுவே வஜ்ரக தைலம் எனப்படும். இந்த எண்ணெயைத் தடவித் தேய்ப்பதால் நரம்புச்சிலந்தி, கெட்ட (அழுகிய) விரணம் முதலியன நீங்கும். 54-56

## 24. மஹா வஜ்ரக தைலம்

மஞ்சள் கடுகு, புங்கன், மணிப்புங்கன், மஞ்சள், மரமஞ்சள், ரஸாஞ்சனம், குடசப்பாலை, வசம்பு, ஏழிலைப் பாலை, துமட்டி, கொம்பரக்கு, தகரை, எருக்கன், கலப்பைக்கிழங்கு, கொடிவேலி, கோஷ்டம், கொன்றை, கள்ளி, வாகை மற்றும் ஸௌராஷ்டிரமண், சேராங்கொட்டை, வாயுவிடங்கம், மஞ்சிட்டி, அரளி, மல்லி, பேய்ச்சுரை, முள்ளங்கி, இந்துப்பு, ஒட்டடை, வத்ஸநாபி, கம்பிப்பாலை, ஸிந்தூரம், மயில்துத்தம் எனும் இப்பொருள் களைச் சம அளவில் கொண்டு அரைத்து விழுதாக்குக. அதற்கு இரண்டு மடங்கு பசுவின் சிறுநீர், நான்கு மடங்கு எண்ணெய்

அல்லது சிறந்த தன்மை கொண்ட புங்கன் எண்ணெய், அல்லது மிக்க வலிமையுள்ள கடுகெண்ணெய் சேர்த்து எண்ணெய்ப் பக்குவம் செய்க. இந்த எண்ணெயை உடல் மேல் தடவித் தேய்த்தால் மிகக் கடுமையான குட்டம், கண்டமாலை, பகந்தரம், நரம்புச்சிலந்தி, கெட்ட (வெகுநாள்பட்ட) விரணம் ஆகியவை தீரும். இது மஹாவஜ்ரக தைலம் எனப்படும். சிறந்த குணமுள்ளதாகும். 57-63

## 25. லாக்ஷாதிக தைலம்

லாக்ஷாதிகணத்தைச் சேர்ந்த கூட்டு பொருள்களைப் பசுவின் சிறுநீருடன் அரைத்து விழுதாகச் செய்த பசுவின் பித்தத்தை (நீர்) சேர்த்து எண்ணெய் தயார் செய்க. இதை ஒரு வார காலம் பேய்ச்சுரைக் குடுக்கையில் வைத்திருக்கவும். நோயாளியைத் தகுந்த அளவு எண்ணெயைப் பருகச் செய்து இந்த எண்ணெயையே உடல் மேல் பூசித்தேய்த்து வெயிலில் காயச் செய்க. இதனால் உடலில் உள்ள தோஷங்கள் எல்லா வகையிலும் நீங்கும். 64-65

## 26. கருங்காலி யவாகூ

தோஷங்கள் வெளியேறிய பிறகு நோயாளியைக் கருங்காலிக் கஷாயத்தால் குளிக்கச் செய்த பிறகு கருங்காலி க்வாதத்தாலான யவாகூ எனும் கஞ்சியைப் பருகச் செய்க. 66

## 27. நோயை தூய்மைப்படுத்த மருந்தைப் பயன்படுத்துதல்

இவ்வாறே தூய்மைப்படுத்தும் மருந்துப் பொருள்கள் மற்றும் குட்டத்தைப் போக்கும் மருந்துப் பொருள்கள் ஆகியவற்றை சேர்த்துக் காய்ச்சிய நெய் மற்றும் எண்ணெய் மருந்துகளைப் பூசித் தேய்க்கவும். நாள்தோறும் காலையில் பேதியாகச் செய்யும் மருந்தை உட்கொண்டு ஐந்து, ஆறு, ஏழு, எட்டு நாள் பேதியாகச் செய்தால் பிறகு தோஷங்கள் மீண்டும் உடலில் சீற்றமடையா. 67-68

## 28. வேறு முறை

ஒட்டகத்தின் சிறுநீரைப் பருகி அது செரிமானமடைந்த பிறகு பாலை மட்டும் உணவாகக் கொண்டு ஆறு மாதங்கள் இவ்வாறு உட்கொண்டால் கிருமிகள் தோன்றும் குட்ட நோய் நீங்கும். 69

## 29. குட்டத்திற்குக் கருங்காலி

உணவிலும், பருகும் நீரிலும், குளியலுக்கான நீரிலும் மற்றும் எல்லா முறைகளிலும் கருங்காலியைப் பயன்படுத்துவதால் குட்ட நோய் நீங்கும். 70

குட்ட நோய் வளர்ந்து வலிமை கொண்டு நோயாளியைக் கொல்வது போல கருங்காலி நோயைத் தணித்து நீக்கக் கூடியதாகும். 71

## 30. குட்ட நோயாளிக்குப் பத்தியம்

நகங்களையும், தலைமுடியையும் வெட்டிக் கொண்டு இதமான பத்தியமான உணவு, மருந்து முதலியவற்றைப் பயன்படுத்திப் புலால், மது மற்றும் மாது ஆகிய இம்மூன்றையும் அறவே விலக்குபவர் விரைவில் குட்ட நோயிலிருந்து விடுபடுவார். 72

ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

குஷ்ட சிகித்ஸிதம் எனும்

ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்.

# பத்தாம் அத்தியாயம்
# * மகாகுஷ்ட ரோக சிகித்ஸிதம்

பகவான் தன்வந்தரி இனி ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசித்தபடி மஹாகுஷ்ட சிகிச்சித முறைகளை விளக்குவோம். 1-2

## 1. குட்டம் முதலிய நோய்களுக்கு சிகிச்சை

கடுமையான குட்டம், கபநோய், உடல் முழுவதும் வீங்கிய சோகை நோய் உள்ளவர்கள் மற்றும் உடலில் கொழுப்பு மிகுந்துள்ளதால் இளைக்க வேண்டுமென விரும்புகிறவர்கள் ஆகியவர்களுக்குக் கீழே குறிப்பிடும் முறையைப் பயன்படுத்துக.3

யவதானியத்தை இடித்து தோலை நீக்கி இரவில் பசுவின் சிறுநீரில் ஊற வைத்து, பகலில் மூங்கில் கூடை அல்லது மூங்கில் தட்டில் வைத்து உலர்த்தவும். இவ்வாறு ஏழு நாட்கள் இரவில் ஊற வைத்துப் பகலில் உலர்த்தவும். பிறகு அதை வறுத்து பொரிமாவாகச் செய்க. நாள் தோறும் காலையில் குட்டம், நீரிழிவு நோய் கொண்டவர்கள் சாலஸாராதி கணத்தைச் சேர்ந்த கூட்டுப்பொருள் அல்லது முள் உடைய கருங்காலி, கள்ளி போன்ற மரங்களின் கஷாயத்தால் அல்லது சேராங்கொட்டை, தகரை ஆகியவற்றின் விதைகள், கார் போக அரிசி, எருக்கன், கொடிவேலி, வாயுவிடங்கம், கோரைக்கிழங்கு ஆகியவற்றின் தூள் நான்கில் ஒரு பங்கு சேர்த்து அத்துடன் முன் கூறிய பொரிமாவை உட்கொள்ளச் செய்க.

)வ்வாறே சாலஸாராதிகணம் அல்லது ஆரக்வதாதி கணம் எனும் கூட்டுப் பொருள்களைக் கஷாயம் காய்ச்சி அதில் யவதானியத்தைப் பாவனை செய்து அல்லது பசுஞ்சாணத் தூள் வைத்து எடுத்து யவதானியத்தைப் பொரிமாவாகச் செய்து அதில் சேராங்கொட்டை முதலியவற்றின் தூளைக் கலந்து கருங்காலி, விஜயஸாரம், வேம்பு, கொன்றை, சீந்தில் கொடி ஆகியவற்றில் ஒன்றின் கஷாயத்துடன் சேர்த்துச் சர்க்கரையும்

---

* மகாகுஷ்டம் - கடுமையான குட்டம். அந்நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் மகாகுஷ்ட சிகித்ஸிதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

தேனும் கலந்து இனிப்புச் சுவை கொள்ளச் செய்து உட்கொள்ளச் செய்க. அவ்வாறே திராட்சை, மாதுளை, புளிவஞ்சி, இந்துப்பு ஆகியவற்றைச் சேர்த்து உவர்ப்புச் சுவை கொள்ளச் செய்து அத்துடன் முன் கூறிய பொரிமாவை உட்கொள்ளச் செய்க. 4

யவதானியத்தால் செய்த பொரியை அல்லது வறுத்த யவதானியத்தால் செய்த உணவுப் பண்டங்களை (ரொட்டி, பூரி முதலியவைகளாகச் செய்து) உட்கொள்ளச் செய்க. இவ்வாறே கோதுமை அல்லது மூங்கில் அரிசியைப் பக்குவம் செய்து உண்ணச் செய்க. 5

## 2. குட்டத்திற்கு அரிஷ்ட முறைகள்

புங்கன், செவியம், கொடிவேலி, தேவதாரு, நன்னாரி, நேர்வாளம், சிவதை, சுக்கு, மிளகு, திப்பிலி எனும் இவை ஒவ்வொன்றும் ஆறு பலம், இலந்தை ஒரு * குடவம், திரிபலை ஒரு குடவம் எனக் கொண்டு அனைத்தையும் தூளாக்குக. பிறகு திப்பிலி, தேன் நெய் ஆகியவற்றைப் பூசி வெயிலில் உலர்த்திய மட்பானையில் மேற்படி தூளை ஏழு குடவம் நீருடன் சேர்த்து, அரைக்குடவம் இரும்புத்தூளும், அரை துலாம் வெல்லமும் கலந்து பாதுகாப்பாக யவதானியக் குவியலில் ஏழு நாட்கள் வைத்திருக்கவும். பிறகு உடல் வலிமைக்கு ஏற்ற அளவு இந்த அரிஷ்டத்தை உட்கொள்ளச் செய்க. இந்த மருந்து குட்டம், மேஹ நோய், உடலில் கொழுப்பு மிகுதல், பாண்டு நோய் வீக்கம் ஆகியவற்றைப் போக்கும். இதைப் போலவே சாலஸாராதி கூட்டுப் பொருள், நியக்ரோதாதி கூட்டுப் பொருள், ஆரக்வதாதி கூட்டுப் பொருள் ஆகியவற்றாலும் தனித்தனியாக அரிஷ்டங்கள் செய்து பயன்படுத்தலாம். 6

## 3. குட்டத்திற்கு ஆஸவங்கள்

புரசுச்சாம்பலை வெந்நீரில் தூய்மைப்படுத்துக. அது குளிர்ந்த பின் அந்த சாம்பல் மூன்று ஆடகம், இரண்டு பங்கு பாணிதம் மற்றும் அரிஷ்ட முறைப்படி திரிபலை, இலந்தை முதலியவற்றின் தூளைக் கலந்து வைக்கவும். இதைப் போலவே எள் முதலியவற்றின் க்ஷாரம், சாலஸாராதி கூட்டுப் பொருள், நியக்ரோதாதி கூட்டுப் பொருள், ஆரக்வதாதி கூட்டுப் பொருள் ஆகியவற்றைத் தனித்தனியாக க்ஷார நீர் அல்லது பசுவின் சிறுநீருடன் ஆஸவ மருந்துகள் செய்து பயன்படுத்தலாம். 7

* குடவம் - சுற்றளவிலும், உயரத்திலும் நான்கு அங்குலம் கொண்டதாய் மண், மரம், மூங்கில், உலோகம் முதலியவற்றால் செய்யப்பட்ட பாத்திரத்தின் அளவு.

### ...த்திற்கு ஸுரை முறைகள்

சிம்சுபா, கருவேலம் ஆகியவற்றின் மரத்துண்டுகள் உள்ள சாரமான (வைரம் பாய்ந்த) நடுப்பகுதியைக் கொண்டு சிறு துண்டுகளாக்கி உத்தமாரணி (வன்னி), பிராமி (வல்லாரை வகை), தேவதாளி ஆகியவற்றுடன் க்வாத முறைப்படிக் கஷாயம் காய்ச்சிக் கொள்க. அந்தக் கஷாயத்துடன் சுராபீஜம் (மதுவின் வண்டல்) என்பதையும் கலந்து விரேசனாதிகாரத்தில் கூறப்பட்ட முறைப்படி ஸுரை எனும் மதுவைச் செய்க. இவ்வாறே சாலஸாராதி கணம், நியக்ரோதாதி கணம், ஆரக்வதாதிகணம் என்பனவற்றாலும் தனித்தனியாக ஸுரா வகைகள் செய்து பயன்படுத்தலாம். 8

### 5. குட்டத்திற்கு லேகிய முறைகள்

கருங்காலி, வேங்கை, வேம்பு, கொன்றை, சாலமரம் ஆகியவற்றின் சாரமான நடுப்பகுதியைக் கொண்டு கஷாயம் காய்ச்சுக. அதில் அதே பொருள்களின் தூளைக் கலந்து பக்குவம் செய்க. அதிக நீர்பாங்காகவோ கெட்டியாகவோ இல்லாமல் இலேகியம் போல பக்குவமானதும் குளிர்ந்தபின் தேன் சேர்த்து உட்கொள்ளச் செய்க. இதைப் போலவே சாலஸாராதிகணம், நியக்ரோதாதிகணம் ஆகியவற்றின் கூட்டுப் பொருள்களால் தனித்தனியாக இலேகிய முறைகள் செய்யலாம். 9

### 6. குட்டத்திற்கு சூரண மருந்துகள்

சாலஸாராதி கூட்டுப் பொருள்களின் ஸாரமான பகுதியைக் கொண்டு தூளாக்கி அதில் ஒரு பிரஸ்தம் எடுத்து ஆரக்வதாதி கூட்டுப்பொருளின் கஷாயத்தில் பலமுறை பாவனை செய்து, சாலஸாராதி கூட்டுப் பொருளின் கஷாயத்துடன் உட்கொள்ளச் செய்க. இதைப் போலவே நியக்ரோதாதி கூட்டு பொருள்களின் பழங்களைத் தூளாக்கிச் சூரணத்தைப் பயன்படுத்துக. 10

### 7. குட்டத்திற்கு உலோக ரஸாயனம்

தீக்ஷ்ணமான (மெல்லிய) உலோக (இரும்பு)த் தகடுகளை கொண்டு அவற்றின் மேல் லவணவர்கத்தைச் சேர்ந்த ஐவகை உப்புகளின் விழுதைப் பூசுக. பிறகு வரட்டி நெருப்பில் அத்தகடுகளைக் காய்ச்சி திரிபலை மற்றும் சாலஸாராதி கணத்தைச் சேர்ந்த கூட்டு பொருள்களின் கஷாயத்தில் அச்சூடுள்ள தகடுகளை பதினாறு முறை முக்கி எடுக்கவும். பிறகு கருங்காலிகட்டை நெருப்பில் பதினாறு முறை காய்ச்சுக. பிறகு

குளிர்ந்ததும் அதை தூளாக்கித் துணியால் சலித்து எடுத்துக் கொள்க. நோயாளியின் செரிமான வலிமைக்கு ஏற்ற அளவு நெய், தேன் கலந்து மிகச் சிறிய அளவில் உட்கொள்ளச் செய்க. மருந்து செரிமானமடைந்த பிறகு நோய்க்குத் தக்கபடி புளியும் உப்பும் நீக்கி உணவை உட்கொள்ளச் செய்க. இவ்வாறு இம்மருந்து ஒரு துலாம் அளவு உட்கொண்டால் குட்டம், மேகநோய், உடலில் கொழுப்பு மிகுதல், வீக்கம், பாண்டு, பைத்தியம், கால்கைவலி முதலிய நோய்கள் நீங்கி நோயாளி நூறாண்டுகள் காலம் வாழ்வார். ஒரு துலாம் மருந்து நூறாண்டுகள் ஆயுளைத் தரக்கூடியதாகும். இவ்வாறே தங்கம், தாமிரம் முதலிய உலோகங்களையும் பயன்படுத்தலாம். 11

சிவதை, முன்னை, கள்ளி, ஆமணக்கு, யவதிக்தம், பாச்சோத்தி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், புரசு, சிம்சுபா ஆகியவற்றின் சுரசத்தை புரசமரத்தால் செய்த தொட்டி போன்ற பாத்திரத்தில் வைத்து அதில் இருபத்தியோரு முறை கருங்காலி நெருப்பில் காய்ச்சிய இரும்பை முக்கி எடுக்கவும். அந்த இரும்பு முக்கிய கஷாய நீரை வரட்டி நெருப்பில் பக்குவம் செய்க. நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கும் போது இறக்கி வடிகட்டுக. மீண்டும் நெருப்பில் காய்ச்சிய இரும்புத் துண்டுகளை அதில் சேர்க்கவும். பக்குவம் பெறும்போது திப்பிலி முதலியவற்றின் தூள் ஒரு பகுதி, தேன் இரண்டு பகுதி, நெய் இரண்டு பகுதி ஆகியவற்றை சேர்க்கவும். பிறகு இம்மருந்தை இரும்புப் பாத்திரத்தில் பாதுகாப்பான இடத்தில் வைக்கவும். முறைப்படி உடல் வலிமைக்கு ஏற்றவாறு அரைப்பலம் முதல் ஒரு பலம் வரை உட்கொள்ளச் செய்யவும். இம்மருந்து செரிமான மடைந்த பிறகு நோய்க்கு தக்க பத்தியமான உணவை உண்ணச் செய்க. இந்த உலோக ரஸாயனம் வேறு மருந்தால் தீர்க்க இயலாத குட்டத்தையும், நீரிழிவு நோயையும் போக்கும். பருத்த உடல் கொண்டவரைத் தக்க அளவு இளைக்கச் செய்யும். வீக்கத்தைப் போக்கும். சடராக்னி குறையை தீர்த்து வலிமை பெறச் செய்யும். க்ஷய நோய்க்குச் சிறந்த மருந்தாகும். இம்மருந்தை முறையாக உட்கொள்பவர் நூறாண்டுகள் வாழக் கூடியவராவார்.

புரசமரத்தொட்டியில் சாலஸாராதி கணக்கூட்டுப் பொருள்களின் கஷாயத்தை நிரப்பி அதில் நன்கு காய்ச்சிய இரும்புத் துண்டை முக்கி எடுக்கவும். இந்தக் கஷாயத்தை இரும்புத்தூளுடன் வெய்யில் முதலியவற்றால் தூய்மைப்படுத்தப் பட்ட பானையில் வைத்து அத்துடன் திப்பிலி முதலிய

கூட்டுப்பொருள்களின் தூள் ஒரு பங்கு, தேனும் வெல்லமும் இரண்டிரண்டு பங்கு வீதம் கலந்துப் பத்திரப்படுத்துக. பதினைந்து நாட்கள் அல்லது ஒரு மாதம் அப்படியே வைத்திருந்த பின் நோயாளியின் சடராக்னியின் வலிமைக்கு ஏற்ற அளவு மருந்தை உண்ணச் செய்க. இதைப் போல நியக்ரோதாதிகணம் அல்லது ஆரக்வதாதி கணத்தைச் சேர்ந்த பொருள்களாலும் மருந்து செய்து பயன்படுத்தலாம். 12

## 8. குட்டத்திற்குக் கருங்காலி முறை

சிறந்த நிலத்தில் தோன்றிய பூச்சிகளால் அரிக்கப்படாத தக்க பருவத்தில் உள்ள (நன்கு வளர்ந்து முற்றிய) கருங்காலி மரத்தின் அடிப்பகுதியைச் சுற்றிலும் மண்ணைத் தோண்டி அம்மரத்தின் வேரில் ஒரு துளை செய்க. அந்தத் துளை வழியாக மரத்தின் சாறு வழியும்படி ஒரு இரும்புபாத்திரத்தை வைத்து மூடி அதன் மேல் சாணத்தையும், மண்ணையும் கலந்து பூசி வரட்டி முதலியவற்றை எரித்துச் சூடு செய்க. எரிந்து கொண்டிருக்கும் மரத்தின் சாறு இரும்புப் பாத்திரத்தில் சேரும்படிச் செய்க. பாத்திரம் நிரம்பிய பின் எடுத்து சாற்றை வடிகட்டி வேறு பாத்திரத்தில் சேர்த்துப் பாதுகாப்பாக வைக்கவும். அதில் தக்க நெல்லிச்சாறும் தேனும் நெய்யும் கலந்து தகுந்த அளவு உண்ணச் செய்க. மருந்து பக்குவம் பெற்ற பின் சேராங்கொட்டை முறையில் கூறியபடி உணவு உட்கொள்ளச் செய்க. அங்கு கூறிய விலக்கத்தக்க பொருள்களை நீக்குக. இம்மருந்து ஒரு பிரஸ்தம் அளவு உட்கொண்டால் ஆயுள் நூறாண்டுகள் வளரும்.

ஒரு தோலா கருங்காலிச்சாற்றை ஒரு துரோணம் அளவுள்ள நீரில் சேர்த்து பதினாறில் ஒரு பங்கு கஷாயம் மிகுந்திருக்கக் காய்ச்சி எடுத்து பாதுகாப்பாக வைக்கவும். இத்துடன் தகுந்த அளவு நெல்லிச்சாறு, தேன், நெய் ஆகிய மூன்றையும் கலந்து உட்கொள்ளச் செய்க. எல்லா மரங்களிலிருந்தும் இவ்வாறு சாறு எடுக்கலாம். ஒரு துலாம் கருங்காலி ஸாரத்தின் தூளை அல்லது வைரம் பாய்ந்த கருங்காலிக்கட்டையின் கஷாயத்தை தகுந்த அளவு நாள்தோறும் காலையில் உட்கொள்ளச் செய்க. அல்லது கருங்காலிச் சாற்றுடன் ஆட்டுப்பால் கலந்து அதிலிருந்து முறைப் படி எடுத்த நெய்யைத் தக்க அளவு உட்கொள்ளச் செய்க. 13

நாள்தோறும் காலையில் சீந்தில் கொடியின் சுரசத்தை அல்லது கஷாயத்தை அல்லது அதைக் கொண்டு செய்த நெய்யை உட்கொள்ளச் செய்து நண்பகலில் நெய்யுடன்

சோற்றை நெல்லிச் சாற்றுடன் உண்ணச் செய்க. இவ்வாறு ஒரு மாதம் உட்கொண்டால் குட்ட வகைகள் அனைத்தும் நீங்கும். 14

கரு எள்ளின் எண்ணெய், சேராங்கொட்டை எண்ணெய், நெல்லிச்சாறு, நெய், சாலஸாராதி கணப்பொருள்களின் கஷாயம் ஆகிய இவை ஒவ்வொரு துரோணம், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, சிற்றீச்சைப் பழக் கதுப்பு, வாயுவிடங்கம், கொடிவேலி, எருக்கன், கார்போக அரிசி, மஞ்சள், மரமஞ்சள், சிவதை, நேர்வாளம், துமட்டி, அதிமதுரம், அதிவிடயம், ரஸாஞ்சனம், ஞாழல் ஆகியவை ஒவ்வொரு பலம் என எடுத்துக் கொண்டு பிறகு இவை அனைத்தையும் சேர்த்து முறைப்படி எண்ணெய் பக்குவம் செய்க. பிறகு வடிக்கட்டிப் பாதுகாத்து வைக்க. வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைப்படி நோயாளியின் உடலைத் தூய்மைப்படுத்தி நாள்தோறும் காலையில் ஒரு பலம் மருந்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. மருந்து செரிமானமடைந்த பிறகு கருங்காலிச்சாற்றுடன் பக்குவம் செய்த சோறு சூடாக இருக்கும் போது நெய் கலந்து உப்பில்லாமல் பயற்றின் பருப்பு மற்றும் நெல்லிச்சாற்றுடன் கூடிய கஞ்சியுடன் உட்கொள்ளச் செய்து கருங்காலி கஷாயத்தைப் பருகச் செய்க. இவ்வாறு ஒரு துரோணம் அளவுள்ள மருந்தை உட்கொள்ளச் செய்தால் நோயாளியின் குஷ்ட வகைகள் அனைத்தும் தீரும். நினைவாற்றலும் உடல் தூய்மையும் கொண்டு நூறாண்டு வாழக் கூடியவராவார். 15

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**மகாகுஷ்ட சிகித்ஸிதம் எனும்**

**பத்தாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினொன்றாம் அத்தியாயம்

# * பிரமேஹ சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி நீரிழிவுச் சிகிச்சை முறைகளை விளக்குகிறோம். 1-2

## 1. நீரிழிவு வகைகள்

நீரிழிவு நோய் இருவகைப்படும். (1) பிறவியிலேயே தோன்றியது (2) தகாத உணவு பழக்கவழக்கங்கள் ஆகியவற்றால் தோன்றியது. இயற்கையாக பிறவியிலேயே தோன்றிய நீரிழிவு கொண்டவர் இளைத்த உடலும் வறண்ட மெய்த்தோல் கொண்டவரும் சிறிதளவே உணவு உட்கொள்பவரும் நீர் மிகுதியாகப் பருகக் கூடியவரும் ஆவார். மற்றொரு வகை நீரிழிவு நோய் கொண்டவர் பருத்த உடலும் அளவுக்கு மீறி உண்பவரும் எண்ணெய்ப் பசை கொண்டு மினுமினுப்புடன் காணப்படும் மெய்த்தோல் உள்ளவரும் பெரும் பாலும் இருக்கையில் உட்கார்ந்திருப்பவரும் பாயின் மேல் படுத்துறங்கும் பழக்கமுள்ளவரும் ஆவார். 3

## 2. நீரிழிவுக்குப் பொது சிகிச்சை

பிறவியிலேயே நீரிழிவு நோய் கொண்டவருக்கு மருந்து மூலிகைகளாலான உணவு, குடிநிர் வகைகளாலும், வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய முறைகளாலும் சிகிச்சை செய்ய வேண்டும். கூடாத உணவு முதலியவற்றால் தோன்றிய நீரிழிவுக்கு பட்டினி கிடத்தல், உடற்பயிற்சி செய்வித்தல், உடலைத் தூய்மைப்படுத்தும் முறைகளைக் கையாளுதல், கசப்பு கார்ப்புச் சுவைகளைக் கொண் பொருள்களை மிகுதியாகப் பயன்படுத்தச் செய்தல் முதலிய முறைகளால் சிகிச்சை செய்ய வேண்டும். 4

## 3. நீரிழிவு நோய் கொண்டவர் விலக்க வேண்டியவை

ஸௌவீரகம், துஷோதகம், சுக்தம், மைரேயம், சுரை, ஆஸவம், நீர், பால், எண்ணெய், நெய், வெல்லம் முதலிய

---

* பிரமேஹம் - நீரிழிவு. இந்நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் பிரமேஹ சிகித்ஸிதம் எனப் பெயர் கொண்டதாயிற்று.

கரும்புச் சாற்றால் ஆன பொருள்கள், தயிர், மாவுப் பண்டங்கள், புளிப்புச் சுவையுள்ள பழச்சாறு (சர்பத்) முதலியவை, கிராமங்களிலும் நீர்ப்பாங்கான இடங்களிலும் வாழும் விலங்குகளின் புலால், நீர் நிலைகளில் வாழும் மீன், ஆமை முதலியவற்றின் புலால் ஆகியவற்றை விலக்க வேண்டும். 5

### 4. நீரிழிவு நோய் கொண்டவர் பயன்படுத்தத்தக்கவை

பழைய சம்பா அரிசி, அறுபதுநாளில் பயிராகும் குறுவை, யவதானியம், வரகு, அரிசி, தினை, கடலை, துவரை, கொள்ளு, பயற்றின் பருப்பு, நேர்வாளம், கடுகெண்ணெய், அகத்திவிதை எண்ணெய் ஆகியவற்றையும் கசப்புச் சுவையுள்ள பேய்ப்புடல் முதலியவற்றையும் துவர்ப்புச்சுவை உள்ள ஆலந்தளிர் முதலியவற்றையும் உணவுடன் சேர்த்தும் மற்றும் மான் முதலிய காட்டு விலங்குகளின் புலால், கொழுப்பை நீக்கிய புலால் வகைகளையும் பயன்படுத்தலாம். 6

### 5. நீரிழிவு நோயில் தூய்மைப்படுத்தும் முறை

முதலில் எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்து முன் கூறிய எண்ணெய் வகைகளில் ஏதேனும் ஒன்றால் அல்லது ஞாழல் முதலியவற்றைச் சேர்த்துச் செய்த நெய் வகைகளால் தீக்ஷ்ண வாந்தி எடுக்கச் செய்து பேதியாகவும் தக்க மருந்தைக் கொடுக்க வேண்டும். பேதியான பிறகு சுரஸாதிகணப்பொருள்களாலான கஷாயத்தில் சுக்கு, தேவதாரு, கோரைக்கிழங்கு, தேன், இந்துப்பு முதலியவற்றைக் கலந்து ஆஸ்தாபனவஸ்தி கொடுக்க வேண்டும். பிறகு அழற்சி கொண்ட நீரிழிவு நோயாளிக்கு எண்ணெய் சேராத நியக்ரோதாதி கூட்டுப் பொருள்களின் கஷாயத்தைக் கொண்டு ஆஸ்தாபன வஸ்தி கொடுக்க வேண்டும். 7

### 6. நீரிழிவு நோய்க்கு ஐந்து முறைகள்

உடல் தூய்மைப்பெற்ற நீரிழிவு நோயாளிக்கு (1) மஞ்சளில் தேன் கலந்து நெல்லிக்கனிச் சாற்றுடன் உட்கொள்ளச் செய்க. (2) கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், துமட்டிக்காய், தேவதாரு, கோரைக்கிழங்கு ஆகியவற்றின் கஷாயத்தைப் பருகச் செய்க. (3) சாலமரம், கம்பிப்பாலை, மாவிலங்கை ஆகிய வற்றின் விழுது ஓர் கர்ஷம் கொண்டு அத்துடன் மஞ்சள் கஷாய மும் தேனும் கலந்து பருகச் செய்க. (4) குடசப்பாலை, விளாம் பழக் கதுப்பு, முள் முருங்கை, தான்றிக்காய், ஏழிலைப் பாலை யின் மலர் ஆகியவற்றின் விழுதை நெல்லிக்கனிச் சாற்றுடன் உண்ணச் செய்க. (5) வேம்பு, கொன்றை, ஏழிலைப்பாலை, மருள், குடசப்பாலை, வெள்ளைக்கருங்காலி, புரசு ஆகியவற்றின் பட்டை,

), வேர், காய், மலர் ஆகியவற்றின் கஷாயத்தில் தேனும் நெல்லிக்கனிச்சாறும் கலந்து பருகச் செய்க. எல்லா வகை நீரிழிவுக்கும் இவ்வைந்து முறைகள் பயன்படுத்த தக்கவையாகும்.8

## 7. சிறப்பான மருந்துகள்

பல வகை நீரிழிவு நோய்களுக்கும் பலவகை மருந்துகள் கூறப்படுகின்றன. (1) உதக மேஹத்திற்குப் பவழமல்லிகை கஷாயம் (2) இக்ஷு மேஹத்திற்கு வன்னிக்கஷாயம் (3) சுரா மேஹத்திற்கு வேம்பின் கஷாயம் (4) ஸிகதா மேஹத்திற்கு கொடிவேலிக் கஷாயம் (5) சனைர் மேஹத்திற்கு கருங்காலி கஷாயம் (6) லவன மேஹத்திற்கு வட்டத்திருப்பி, அகில், மஞ்சள் ஆகியவற்றின் கஷாயம் (7) விஷ்ட மேஹத்திற்கு மஞ்சள், மரமஞ்சள் ஆகியவற்றின் கஷாயம் (8) ஸாந்த்ர மேஹத்திற்கு ஏழிலைப்பாலையின் கஷாயம் (9) சுக்ர மேஹத்திற்கு அருகம்புல், பாசி, பில்வம், ஆகாயவல்லி, புங்கன், கசேருகம் அல்லது மருதம், சந்தனம் ஆகியவற்றின் கஷாயம் (10) பேன மேஹத்திற்கு திரிபலை, கொன்றை, திராட்சை ஆகியவற்றின் கஷாயத்தைத் தேன் கலந்து பருகச் செய்க. (11) பித்தத்தால் தோன்றிய நீல மேஹத்திற்கு சாலஸாராதி கூட்டுப் பொருளின் கஷாயம் அல்லது திப்பிலி பட்டைக் கஷாயம் (12) ஹரித்ரா மேஹத்திற்குக் கொன்றைக் கஷாயம் (13) அம்ல மேஹத்திற்கு நியக்ரோதாதி கணத்தைச் சார்ந்த கூட்டுப்பொருள் கஷாயம் (14) க்ஷார மேஹத்திற்கு திரிபலை கஷாயம் (15) மஞ்சிட்டி மேஹத்திற்கு மஞ்சிட்டி, சந்தனம் ஆகியவற்றின் கஷாயம் (16) சோனித மேஹத்திற்கு சீந்தில்கொடி, எட்டி விதை, குமிழன், பேரீச்சை ஆகியவற்றின் கஷாயத்தில் தேன் கலந்து பருகச் செய்க.

## 8. சிகிச்சைக்கு உட்படாத நீரிழிவுக்குச் சிகிச்சை

சிகிச்சைக்கு உட்படாத நீரிழிவு நோயை காலங்கடத்தக் கூடிய (யாப்ய) நோயாகச் செய்வதற்கு உரிய முறைகள் கூறப்படுகின்றன. ஸர்ப்பிர் மேஹத்திற்குக் கோஷ்டம், குடசப் பாலை, வட்டத்திருப்பி, பெருங்காயம் ஆகியவற்றின் விழுதை சீந்தில்கொடி, கொடிவேலி ஆகியவற்றின் கஷாயத்துடன் பருகச் செய்க. வஸா மேஹத்திற்கு முன்னை அல்லது சிம்சுபா கஷாயத்தைப் பருகச் செய்க. க்ஷௌத்ர மேஹத்திற்கு முன்னை அல்லது சிம்சுபா கஷாயத்தைப் பருகச் செய்க. க்ஷௌத்ர மேஹத்திற்கு வெண்கருங்காலி, பாக்கு ஆகியவற்றின் கஷாயத்தையும், ஹஸ்தி மேஹத்திற்கு தும்பிமரம், விளாம்பழக்கதுப்பு, வாகை, ?புரசு, வட்டத்திருப்பி, பெருங்குரும்பை, காஞ்சொரி ஆகியவற்றின் கஷாயத்தில் தேன் கலந்தும் பருகக் செய்க. மற்றும் யானை குதிரை பன்றி ஒட்டகம் ஆகியவற்றின்

எலும்பால் [1]க்ஷாரோதகம் செய்து அதைப் பருகச் செய்க. அழற்சி தோன்றிய நோயாளிக்கு நீரில் தோன்றும் தாமரைக்கிழங்கு முதலியற்றின் கஷாயத்தில் கஞ்சி அல்லது பால் கருப்பஞ்சாறு முதலியவற்றைக் கலந்து பருகச் செய்க. 9

### 9. நீரிழிவு நோய்க்கு அரிஷ்டம் முதலியன

ஞாழல், நன்னாரி, காட்டுமுல்லை, பாரங்கி, மருதோன்றி, மஞ்சிட்டி, வட்டத்திருப்பி, மாதுளம்பழத்தோல், ஓரிலை, தாமரைப்பூ, சிறுநாகப்பூ, காட்டாத்திப்பூ, பவழமரம், இலவம், ஸரளம்பிசின், இலவம்பிசின் முதலியவற்றால் அரிஷ்டம், உலோக ரஸாயனம், இலேகியம், ஆஸவம் ஆகியவற்றைச் செய்க. அல்லது சிருங்காடகம், சீந்தில்கொடி, தாமரைத்தண்டு, தாமரைக்கிழங்கு, நாணல், கசேரு, அதிமதுரம், மா, நாவல், விஜயசாரம், திரிசம், மருதம், கருமருதம், மலைவேம்பு, பாச் சோத்தி, சேராங்கொட்டை, புரசு, சர்மிவிருக்ஷம், காக்கணங் கொடி, சீதசிவம், பிரப்பங்கிழங்கு, சாலமரம், ஹரிவிருக்ஷம், மாதுளை, இலந்தை, [2]யஞ்ஜவிருக்ஷம் ஆகியவற்றைக் கொண்டு அரிஷ்டம், அய (இரும்பு) ரஸாயனம், இலேகியம், ஆஸவம் ஆகியவற்றைச் செய்து பயன்படுத்துவதுடன் யவதானிய சோற்றை உண்ணச் செய்க. 10

### 10. நீரிழிவுக்குச் சிறப்புச் சிகிச்சை

மிகுந்த செல்வம் கொண்டு தன் உடல் நிலைக்குத் தகாத உணவு உட்கொள்பவரும், மருந்தை வெறுப்பவரும் ஆன மன்னருக்கு வட்டத்திருப்பி, கடுக்காய், கொடிவேலி ஆகிய ஒன்றால் ஆன கஷாயத்தில் அதிக அளவில் தேன் கலந்து பருகச் செய்க. அல்லது காய்ச்சி எடுத்த மாத்வீகத்தை (திராட்சை யாலான மது) அடிக்கடிப் பருகச் செய்க. தேன், விளாம் பழக்கதுப்பு, மிளகு ஆகியவை கலந்த [3]பேயா எனும் கஞ்சியை உண்ணச் செய்க.

ஒட்டகம், கோவேறுக்கழுதை, கழுதை முதலியவற்றின் சாணத்தூளை உணவில் கலந்து உட்கொள்ளச் செய்க. பெருங்காயம், இந்துப்பு கலந்த யூஷம் எனும் கஞ்சி, கடுகு கலந்த [4]ராகம் எனும் உணவுப் பொருளுடன் உணவு உட்கொள்ளச்

---

1. க்ஷாரோதகம் - யவக்ஷார நீர்.
2. யஞ்ஜவிருக்ஷம் - ஒரு வகை இலந்தை.
3. பேயா - கஞ்சி.
4. ராகம் - சர்பத் போன்ற பானகம்.

செய்க. நோய்க்கு மாறான தன்மையற்ற இத்தகைய சுவை, மணம் கொண்ட பேயம், (நீர்த்தன்மையுள்ள கஞ்சி) உணவு ஆகியவற்றைப் பயன்படுத்துக. முற்றிய நீரிழிவு கொண்ட பெரியவரை உடற்பயிற்சி, மற்போர் விளையாட்டுகள், யானை, குதிரை போன்ற பிராணிகளின் மேலேறி சவாரி செய்தல், தேரில் சுற்றுதல், நடைப்பயிற்சி, ஆயுதப்பயிற்சி முதலியவற்றில் ஈடுபடச் செய்க. 11

## 11. பொருளற்ற நோயாளிக்குச் சிகிச்சை முறை

செல்வமற்ற, உறவு நட்பு முதலியவை அற்ற நீரிழிவு நோயாளி காலில் செருப்பு, குடை முதலியவை இல்லாமல் பிச்சை எடுத்து உண்பதும், நாளுக்கு ஒரு ஊர் எனத் திரிவதுமாக முனியைப் போல புலனடக்கம் கொண்டு நூறு யோசனங்கள் அல்லது அதற்கும் அதிக தொலைவு சுற்றி வர வேண்டும். வரகு போன்ற காட்டுப் புல்லரிசிச்சோறு, நெல்லிக்காய், விளாம்பழம், திந்துகம், கல்லூரர்வஞ்சிப்பழம் முதலியவற்றை உணவாகக் கொண்டு விலங்குகளுடன் கூடி வசிக்க வேண்டும். பசுஞ்சாணம், பசுவின் சிறுநீர் முதலியவற்றைப் பயன்படுத்திக்கொண்டு எப்பொழுதும் பசுக்களின் பின் சுற்றிக் கொண்டிருக்க வேண்டும். நோயாளி அந்தணனானால் நிலத்தில் உதிர்ந்துள்ள அரிசி போன்ற தானியங்களைப் பொறுக்கி உணவாகக் கொண்டு வேதம் கற்றுவர வேண்டும். உழவனானால் எப்பொழுதும் உழவுத் தொழிலில் ஈடுபட வேண்டும் அல்லது கிணறு வெட்டும் தொழில் செய்ய வேண்டும். இளைத்த நோயாளியானால் அவரைச் சார்ந்தவர் அந்நோயாளியைப் பாதுகாத்து வரவேண்டும். 12

செல்வமற்ற நோயாளி மருத்துவரின் யோசனைப்படி ஓராண்டு அல்லது அதற்குக் குறைவாக இவ்வாறு சுற்றி வந்தால் நீரிழிவு நோய் அகலும். 13

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**பிரமேஹ சிகித்ஸிதம் எனும்**

**பதினொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# பன்னிரண்டாம் அத்தியாயம்
# * பிரமேஹபிடகா சிகித்ஸிதம்

இனி தந்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலியவர்களுக்கு உபதேசம் செய்தபடி பிரமேஹ நோய் முற்றிய நிலையில் தோன்றும் பிடகைகளுக்கான (கட்டிகளுக்கான) சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. சிகிச்சைக்கு உட்படும் பிடகைகள்

சராவிகா முதலிய ஒன்பது வகை பிடகைகளின் விளக்கம் முன்பு (நிதானஸ்தானத்தில்) கூறப்பட்டுள்ளது. அவற்றில் வலிமை மிக்கவருக்குச் சிறிதளவு தோலில், புலாலில் தோன்றி இருக்கும் மென்மையான, குறைந்த அளவில் வேதனையுடன் கூடிய, விரைவில் பக்குவம் பெறக்கூடிய பிடகைகள் எளிதில் சிகிச்சையால் தீர்க்கக் கூடியவையாகும். 3

### 2. பிடகைகளுக்குச் சிகிச்சை முறை

நோயாளியின் நிலைமைக்கு ஏற்ப நீரிழிவின் நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளை பிடகைகள் தோன்றியவருக்குப் பயன்படுத்த வேண்டும். பிடகைகள் தோன்றும் முற்குறிகள் காணப்பட்ட போது ** அபதர்பணம், ஆல் முதலியவற்றின் கஷாயத்தை ஆட்டின் சிறுநீருடன் பருகச் செய்தல் ஆகிய முறைகளைப் பயன்படுத்த வேண்டும். இம்முறையைச் சரியாகப் பயன்படுத்தாமல் இனிப்புச் சுவை கொண்ட பொருள்களை உட்கொள்ளும் நோயாளியின் சிறுநீர், வியர்வை, கபம் முதலியன இனிப்புச் சுவை கொண்டிருக்கும். நீரிழிவு தோன்றும் அறிகுறிகள் காணப்படும். இந்நிலையில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் இவ்விரண்டு முறைகளால் நோயாளியின் உடலைத் தூய்மைப்படுத்திட வேண்டும். இம்முறைகளைக் கையாளாதபோது நோயாளியின் உடலில் தோஷங்கள் முற்றி இரத்தத்தையும் மாமிசத்தையும் கெடுக்கும். அதனால் வீக்கம் மற்ற துன்பங்கள் சில உண்டாகும். இந்நிலை

---

* பிரமேஹபிடகா - நீரிழிவு நோய் முற்றிய நிலையில் தோன்றும் கட்டிகள் 'பிரமேஹபிடகா' எனப்படும். அவற்றுக் ;ரிய சிகிச்சை முறைகளை விளக்கும் அத்தியாயமாகையால் )தற்குப் 'பிரமேஹ பிடகா சிகித்ஸிதம்' எனும் பெயராயிற்று.

** அபதர்பணம் - பட்டினிகிடத்தல் எனும் லங்கணமுறை.

யில் முன்கூறிய அபதர்ப்பணம் முதல் விரேசனம் வரை கூறப்பட்டுள்ள சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். இவ்வாறு பயன்படுத்தாதபோது வீக்கம் வளர்ந்து மிக்க வலியைத் தோற்றுவிக்கும். எரிச்சல் மிகும். இந்நிலையில் அறுவைச் சிகிச்சையையும் விரண சிகிச்சையையும் பயன்படுத்த வேண்டியிருக்கும். இம்முறைகளைப் பயன்படுத்தாதபோது அதிக அளவில் தோன்றிய சீழ் உடலுக்குள் உள்ள மாமிசம், * லஸீகா முதலியவற்றைக் கரைத்து துளை ஏற்படுத்திவிடும். இந்நிலையில் நோய் சிகிச்சைக்கு உட்படாததாகிவிடும். ஆகையால் நோய்க்கு முற்குறிகள் தோன்றிய நிலையிலிருந்தே நீரிழிவு நோயாளிக்குச் சிகிச்சை செய்ய வேண்டும். 4

### 3. தான்வந்தர கிருதம்

தான்வந்தரகிருதம், சேராங்கொட்டை, வில்வம், நன்னாரி, கொடிவேலி, கழற்றி (உதகிர்யா), சிவப்புச்சாரடை, வெள்ளைச் சாரடை, சித்திரமூலம், பூலாங்கிழங்கு, கொடிகள்ளி, நீர்வஞ்சி, புஷ்கரமூலம், நேர்வாளம், கடுக்காய் ஆகிய இவற்றில் ஒவ்வொன்றும் பத்து பலம், யவதானியம், இலந்தை, கொள்ளு ஆகியவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பிரஸ்தம் எனக்கொண்டு இப்பொருள்கள் அனைத்தையும் ஒரு துரோணம் நீரில் இட்டு நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்சி அடுப்பில் இருந்து இறக்கிவிட வேண்டும். பிறகு வசம்பு, சிவதை, கம்பிப்பாலை, பாரங்கி, யானைத்திப்பிலி, சுக்கு, வாயுவிடங்கம், பாச்சோத்தி, வாகை ஆகிய இப்பொருள்களை வகைக்கு அரைப்பலம் வீதம் கொண்டு விழுதாக்கி சேர்த்து ஒரு பிரஸ்தம் நெய் மருந்து பக்குவம் செய்க. இது தான்வந்தரகிருதம் எனப்படும். இம்மருந்து மேஹ நோய், வீக்கம், குன்மம், பெருவயிறு, மூலநோய், மண்ணீரல் வீக்கம், வித்ரதி எனும் சீழ்க்கட்டி, பிடகை எனும் நோய்களைப் போக்கும். 5

### 4. நீரிழிவுக்குத் தீக்ஷ்ண சோதனை முறை

உடலில் கொழுப்பு மிகுதியாகச் சேர்ந்து விடுவதால் நீரிழிவு நோய் தோன்றி வருந்துபவர்களுக்கு மிக்க சிரமப்பட்டு மலம் வெளியேறும். ஆகையால் அவர்களுக்குத் தீக்ஷ்ண (மிக்க வலிமை கொண்ட விரேசன மருந்தைப் பயன்படுத்த வேண்டும். பிடகைகளுடனும் மிக்க துன்பத்துடனும் கூடிய நீரிழிவு நோயில் சிறுநீர் முதலியன தேனைப்போல மணம் கொண்டிருக்கும் ஆகையால் இந்நோய் மது மேஹம் எனப்படும்.

---

* லஸீகா - தோலுக்கும், மாமிசத்திற்கும் இடையிலுள்ள நீர்ப்பொருள்.

ில் உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்தக் கூடாது. ஏனென்றால் அதனால் உடல் கரைந்துவிடும். 6-7

5. மதுமேஹ நோயில் உடலின் கீழ்ப்பாகத்தில் பிடகை தோன்றுதல்

நீரிழிவு நோயில் ரஸம், பித்தம், கபம், இரத்தம் ஆகிய வற்றைப் பரவச் செய்யும் ரஸாயனிகள் (தமனிகள்) வலிமை யற்றுப் போவதால் தோஷங்கள் மேல் நோக்கிச் செல்வதில்லை. ஆகையால் மதுமேஹ நோயில் உடலின் இடுப்புக்குக்கீழ் உள்ள பகுதியில் தான் பிடகைகள் தோன்றுகின்றன. 8

6. பிடகைகளுக்குச் சிறப்புச் சிகிச்சை

பக்குவம் பெறாத பிடகைகளுக்கு வீக்கம் (சோகை) எனும் நோய்க்குக் கூறப்பட்டது போலவும், பக்குவம் பெற்ற பிடகைகளுக்கு விரணத்திற்குக் கூறப்பட்டது போலவும் சிகிச்சை செய்ய வேண்டும். விரணத்தை ஆற்றும் மருந்துப் பொருள்களாலான எண்ணெயை முதலிலிருந்தே பயன்படுத்த வேண்டும். சரக்கொன்றை முதலான கூட்டுப்பொருள்களின் கஷாயத்தை உத்ஸாதனத்தில் அழுந்தியுள்ள விரணங்களை மேல் நோக்கி எழச் செய்வதற்கு பயன்படுத்த வேண்டும். சாலஸாராதி கணப்பொருள்களான கஷாயத்தைப் பருகச் செய்யவும், உணவுடன் கலந்து உட்கொள்ளவும் பயன்படுத்த வேண்டும். வட்டத்திருப்பி, கொடிவேலி, காகஜங்கா, கண்டங்கத்திரி, முள்ளுக்கத்திரி, நன்னாரி, காயபலம், ஏழிலைப்பாலை, குடசப்பாலைவேர் ஆகியவற்றைத் தூள் செய்து தேனுடன் உண்ணச் செய்ய வேண்டும். 9

7. சாலஸாராதி லேகியம்

சாலஸாராதி கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருளை நீரி விட்டு நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி மீண்டும் நெருப்பின் மேல் வைத்துக் காய்ச்சுக. பக்குவமாகும் போது நெல்லிச்சாறு, பாச்சோத்தி, ஞாழல், நேர்வாளம், இரும்பு பற்பம், தாமிரபற்பம் ஆகியவற்றைச் சேர்த்து இலேகிய பக்குவம் செய்க. முறைப்படி இதைப் பயன்படுத்துக. இந்த இலேகியம் மேஹநோய் வகைகள் அனைத்தையும் தீர்க்கும். 10

8. நவாயஸலோஹம் (சூரணம்)

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கொடிவேலி, சுக்கு, மிளகு, திப்பிலி, வாயுவிடங்கம், கோரைகிழங்கு ஆகியவற்றைக் கலந்து இவை ஒன்பது பங்கு, அனைத்துக்கும் சம அளவு

திருஷ்ண அயபற்பம் கலந்து அத்துடன் தக்க அளவு நெய்யும் தேனும் சேர்த்து உட்கொள்ளச் செய்க. இது நவாயஸ சூரணமாகும். இதைப் பயன்படுத்துவதால் உடற்பருமன் குறையும். சடராக்னி குறை நீங்கும். வீக்கம், பாண்டு, குட்டம், உணவு செரியாமை, இருமல், இழுப்பு, பிரமேஹம் ஆகிய நோய்கள் நீங்கும். 11

### 9. பிரமேஹத்திற்கு லோஹாரிஷ்டம்

சாலஸாராதி கூட்டுப் பொருள்களை நீரில் இட்டு நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் குளிர்ந்த பின் தேன் கலந்து தனியாக அந்தக் கஷாயத்தில் கரைக்கப்பட்ட வெல்லப் பானகம், திப்பிலி முதலிய கூட்டுப் பொருள்களின் தூள் கலந்து தேன் பூசிப் பழகிய நல்ல பானையில் வைத்திருக்க. தீக்ஷ்ணமான சிறிய இரும்புத் தகடுகள் பலவற்றை கருங்காலி நெருப்பில் நன்கு காய்ச்சி இந்த கஷாயத்தில் இடுக. பிறகு பானையின் வாயை நன்றாக மூடி மூன்று நான்கு மாதங்கள் யவதானியக் குவியலில் வைத்திருக்கவும். இது லோஹாரிஷ்டம் எனப்படும். நாள்தோறும் காலையில் தக்க உணவு உட்கொண்டு இம்மருந்தில் தகுந்த அளவு உட்கொண்டுவரச் செய்க. இது உடல் பருத்து இருப்பவரை இளைக்கச் செய்யும். சடராக்னியைத் தூண்டும். வீக்கம், குன்மம், குட்டம், மேஹநோய், பாண்டு நோய், பிளீஹஉதரம் (மண்ணீரல் வீக்கம்), விஷக் காய்ச்சல், மூத்திரா பிஷ்யந்தம் எனும் நோய்களைப் போக்கும். 12-19

### 10. நீரிழிவு நோய் நீங்கிய இலக்கணம்

சிறுநீர் அடர்த்தியும், பிசுபிசுப்பும் இன்றி, வறட்சியுடன், தெளிவாகக் கசப்பு, கார்ப்புச் சுவைகளுடன் வெளியேறுமாயின் நீரிழிவு நோய் தணிந்ததென்று அறிக. 20

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

பிரமேஹபிடகா சிகித்ஸிதம் எனும்

பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றும்.

# பதிமூன்றாம் அத்தியாயம்

# * மதுமேஹ சிகித்ஸிதம்

தன்வந்தரி பகவான் இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி மதுமேஹ நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

நீரிழிவு நோயில் ஒரு வகையான சர்க்கரை நோய்க்கு மருத்துவர்களால் கைவிடப்பட்டவருக்குத் தக்க முறைகளை விளக்குவோம். 3

## 1. [1]சிலாஜித்து உற்பத்தி

ஆனி, ஆடி மாதங்களில் ஆதவனின் கடும் கிரணங்களால் மலைகள் சூடு கொண்டு விடும் போது, அதில் உள்ள கற்பாறைகளிலிருந்து (உலோகங்கள் உருகி) அரக்கு போன்ற பிசின் சுரக்கும். இது சிலாஜித்து எனப்படும். இது நோய்கள் அனைத்தையும் போக்கவல்லது. இந்த சிலாஜித்து தங்கம், வெள்ளி, தாமிரம், ஈயம், கருநிறம் கொண்ட இரும்பு (கிருஷ்ண லோகம்) மற்றும் திரபு போன்ற உலோகங்களால் ஆறு வகைப்படும். 4-5

இந்த ஆறு வகைகளும் வேறு வேறு நிலப்பகுதிகளில் தோன்றுகின்றன. மணத்தைக் கொண்டு இதன் உலோக வகையை உணரலாம். உலோகங்களால் அரக்கு போல உற்பத்தி யாவதால் சிலாஜித்து எனப்பெயர் கொண்டதாயிற்று. 6

அந்தந்த உலோகங்களுக்கு உள்ள வீரியம் போன்ற தன்மைகள் அந்தந்த உலோகங்களால் தோன்றிய சிலாஜித்து களிலும் காணப்படும். [2]திரிபுஸம், ஈயம், இரும்பு, தாமிரம், வெள்ளி, தங்கம் ஆகிய இந்த ஆறு வகைகளிலும் முறையே தன்மைகளில் அடுத்தடுத்துச் சிறப்பு மிக்கவையாகும். 7

---

* மதுமேஹம் - சர்க்கரை நீரிழிவு நோய் - அதற்குரிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் மதுமேஹ சிகித்ஸிதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

1. சிலாஜித்து - பொன் நிமிளை முதலிய ஏழு உபதாதுக்களுள் ஒன்று (கற்பிசின்).

2. திரிபுஸம் - உலோக வகைகளில் ஒன்று.

### 2. சிலாஜித்தின் பொதுத்தன்மை

எல்லா வகையான சிலாஜித்துக்களும் கசப்பு, கார்ப்பு, துவர்ப்புச்சுவை கொண்டவை. மலத்தை வெளியேற்றும். பக்குவம் பெறும் நிலையில் கார்ப்புச் சுவை கொள்ளும். உஷ்ண வீரியமும் [1]சோஷண, [2]சேதன தன்மைகளும் கொண்டவையாகும். 8

### 3. சிறப்பான சிலாஜித்து

சிலாஜித்து வகைகளில் கருநிறம், பளு, எண்ணெய்ப்பசை, மணல் போன்ற பொருள்கள் அற்றதும் பசுவின் சிறுநீரின் மணம் கொண்டதுமான சிலாஜித்து சிறந்த பயன் தருவதாகும். 9

### 4. சிலாஜித்துவைப் பயன்படுத்தும் முறை

முதலில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் உடலைத் தூய்மைப்படுத்திக் கொண்ட நோயாளி பாவனை செய்து மைய தூளாக்கப்பட்ட சிலாஜித்தை தன் உடலின் சீரணசக்திக்குத் தக்கபடி சாலஸாராதி கணக் கூட்டுப் பொருள்களின் கஷாயத்துடன் காலையில் உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமானமான பிறகு காட்டு விலங்குகளின் புலால் சாற்றுடன் உணவு உட்கொள்ள வேண்டும். 10-11

### 5. சிலாஜித்து நீக்கும் நோய்கள்

அமுதத்திற்கு ஒப்பான, சிலாஜித்து நூறு பலம் அளவு உட்கொண்ட பின் சர்க்கரை நீரிழிவு நோய் முழுவதும் நீங்கி நோயாளி உடற்பொலிவும் வலிமையும் பெற்று நூறாண்டுகள் வாழக்கூடியவர் ஆவார். பத்து துலாம் (ஆயிரம் பலம்) உட்கொண்டால் ஆயிரம் ஆண்டுகள் வாழலாம். ஒவ்வொரு துலாமும் நூறாண்டுகள் வாழ்வு அளிக்கவல்லதாகும். சேராங்கொட்டையை உட்கொள்ளும் போது கூறிய வழிமுறைகளை சிலாஜித்து உட்கொள்ளும் போதும் பின்பற்ற வேண்டும். சிலாஜித்துவை சிறிது காலம் உட்கொண்டதுமே மேஹ நோய், குஷ்டம், அபஸ்மாரம், பைத்தியம், யானைக்கால், இடுவிஷ தோஷம், வீக்கம், சோர்வு, மூலம், குன்மம், பாண்டு, விஷக்காய்ச்சல் முதலியன நீங்கும். நீண்ட

---

1. சோஷணம் - சுண்டச் செய்தல்.

2. சேதனம் - பிளத்தல்.

நாட்களாக உள்ள சர்க்கரை நோய், அச்மரீ (சிறுநீர்ப்பையில் தோன்றும் கல்) முதலியவற்றைப் போக்கும். அந்தந்த நோய் களுக்கு உரிய கஷாய வகைகளில் இந்த சிலாஜித்துவைப் பாவனை செய்து அந்தக் கஷாயத்துடன் உட்கொள்வது பலன் அளிக்கும். 12-16

### 6. *மதுமேஹத்திற்கு ஸ்வர்ணமாக்ஷிக ரஜதமாக்ஷிகங்களைப் பயன்படுத்துதல்*

இதைப் போலவே தாபீ நதிக்கரையில் தோன்றும் அமுதத்திற்கு ஒப்பானதும், இனிமையானதும், தங்கத்தைப் போல உள்ள ஸ்வர்ணமாக்ஷிகம், வெள்ளியைப் போன்ற ரஜதமாக்ஷிகம் ஆகிய இவ்விரண்டையும் பயன்படுத்தினால் முதுமை, குட்டம், மேஹநோய், பாண்டு, க்ஷயம் முதலியன நீங்கும். 17-18

### 7. *சிலாஜித்து உட்கொள்ளும் போது விலக்கத்தக்கவை*

சிலாஜித்து, மாக்ஷிகம் ஆகியவற்றை உட்கொள்ளும் போது புறா, கொள்ளு இவ்விரண்டையும் விலக்க வேண்டும். 19

### 8. *அஸ்திகத குட்டத்திற்குச் சிகிச்சை*

ஐந்தாவது தாது ஆகிய எலும்பைச் சார்ந்த குட்டத்தில் உடலைத் தூய்மைப்படுத்தும் முறைகள் முதலியவற்றால் பயனில்லாத போது வலிமையுள்ள உயிர் பிழைக்க விருப்பமுள்ள நோயாளிக்குச் சிகிச்சை முறை கூறப்படுகிறது. இம்முறையினால் மதுமேஹத்திற்கும் சிகிச்சை செய்யலாம். 20

### 9. *துவரக முறை*

மேற்குக் கடற்கரை ஓரத்தில், அக்கடல் அலைகளால், அடிபட்டு வீசும் காற்றுகளால் வளர்ந்து, அசையும் இலைகளைக் கொண்டு விளங்கும் 'துவரகம்' எனப்படும் மரத்தின் பழங்களைப் பறித்து அவற்றின் சதைப்பகுதியை நீக்கிய பிறகு விதைகளை உலர்த்தித் தூளாக்கிச் செக்கிலிட்டு அரைத்து எண்ணெய் எடுக்க வேண்டும். இந்த எண்ணெயை மீண்டும் நெருப்பில் காய்ச்சி அதன் நீர்ப்பகுதியை வெளியேற்ற வேண்டும். கீழே இறக்கிப் பதினைந்து நாட்கள் எரிமுட்டைகளுக்குள் புதைத்து வைக்க வேண்டும். 21-23

வலிமை கொண்ட நோயாளி எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறைகளால் உடலைத் தூய்மைப்படுத்திக் கொண்டு பதினைந்து நாட்களுக்குப் பிறகு சுக்லபக்ஷத்தில் நல்ல நாளில் சதுர்த்த பக்தாந்தரித முறையில், மூன்றாம் நாள்

காலையில் ஸம்ஸர்ஜன முறையில் பேயா, விலேபி எனும் கஞ்சி வகைகளை உட்கொண்டு வரவேண்டும். உடல் வலிமை பெற்று மந்திரத்தால் புனிதமாகச் செய்யப்பட்ட இந்தத் துவரக எண்ணெய் ஒரு கர்ஷம் அளவு உட்கொண்டு வர வெண்டும். எண்ணெய்யை மந்திரிப்பதற்குப் பயன்படும் மந்திரமாவது: -

மஜ்ஜாஸார மஹாவீர்ய ஸர்வாந் தாதூந் விசோதய I

சங்கசக்ர கதாபாணிஸ்த்வாமாக்ஞா பயதேஅச்யுத: II

என்பதாகும். 24-26

இந்த எண்ணெயைப் பயன்படுத்துவதால் வாந்தியாலும், பேதியாலும் உடலில் உள்ள தோஷங்கள் வெளியேறிவிடும். பிறகு நோயாளிக்கு குறைந்த அளவு எண்ணெயும், உப்பும் சேர்ந்த குளிர்ந்த யவாகூ எனும் கஞ்சியை மாலையில் உட்கொள்ளச் செய்க. இந்த முறையால் நோயாளி ஐந்து நாட்கள் எண்ணெயை உட்கொண்டு பிறகு ஒரு பக்ஷம் வரை கோபம் முதலான கெட்ட குணங்களை விட்டு பயற்றின் கஞ்சியுடன் சோறு உட்கொள்ள வேண்டும். 27-28

இவ்வாறு ஐந்து நாட்களில் எல்லா வகைக் குஷ்டங்களும் நீங்கும். இந்த எண்ணெய் மூன்று பங்கு கருங்காலிக் கஷாயம் சேர்த்து முன்போல வரட்டிக் குவியலில் பக்குவம் செய்து பதினைந்து நாட்களுக்குப் பிறகு ஒரு மாதம் வரை சோம்பலின்றி இதைப் பயன்படுத்த வேண்டும். இந்த எண்ணெயை உடல் மேல் பூசித் தேய்த்துக்கொண்டு முன்போல பயற்றங் கஞ்சியுடன் உணவு உட்கொண்டு வரவும். குரல் மாறுபாடு, கண் சிவத்தல், மாமிசம் துண்டாகி விழுதல் புழுக்கள் தோன்றுதல் ஆகிய இலக்கணங்களைக் கொண்ட குஷ்ட நோய் நீங்கும். இந்த எண்ணெயுடன் நெய்யும் தேனும் சேர்த்து கருங்காலிச் சாற்றுடன் உட்கொண்டு மற்றும் பறவைகளின் புலால் சாற்றை உணவாக உட்கொள்பவர் இருநூறு ஆண்டுகள் வாழக் கூடியவர் ஆவார். இந்த எண்ணெயைப் பதினைந்து நாட்கள் மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்தினால் மனிதன் நல்ல உடல் நினைவாற்றல் மிக்கவனாகி முன்னூறு ஆண்டுகள் வாழக் கூடியவர் ஆவார். தகுந்த அளவு துவரக எண்ணெயைப் பருகுவதால் மனிதனின் உடல் தூய்மைபெறும். மிகவும் சிறந்த தன்மை கொண்ட துவரகம் குட்டம் மற்றும் நீரிழிவு நோய்களைத் தீர்ப்பதில் மிகச் சிறந்த மருந்தாகும். 29-34

துவரகக் கதுப்பு, இந்துப்பு, சுரோதோஞ்சனம் ஆகியவற்றை அந்தர்தூம முறைப்படி எரிய வைத்து அதைத் துவரக தைலத்துடன் சேர்க்க வேண்டும். பிறகு மை போல இடுவதால் கண் நோய்களாகிய பில்லா, காசம், நீலி மற்றும் இரவில் கண் தெரியாமை ஆகியவை அகலும். 35

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

மதுமேஹ சிகித்ஸிதம் எனும்

பதிமூன்றாம் அத்தியாயம் முற்றும்.

# பதினான்காம் அத்தியாயம்
# * உதர சிகித்ஸிதம்

பகவான் தன்வந்தரி இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி வயிற்று நோய்க்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

## 1. தீர்க்கக்கூடிய - தீர்க்க இயலாத உதர (வயிறு) நோய்கள்

எண்வகை வயிற்று நோய்கள் முன்பு நிதானஸ்தானத்தில் விளக்கப்பட்டன. அவற்றில் பத்தகுதோதரம் மற்றும் [1]பரிஸ்ராவி என்பவை சிகிச்சையால் தீர்க்க இயலாதவை. மற்றவை மிகவும் சிரமப்பட்டுத் தீர்க்கக் கூடியவை. உதர நோய்கள் அனைத்தும் மிகச் சிரமப்பட்டு சிகிச்சை செய்ய வேண்டியவை என கருதி விழிப்புடன் சிகிச்சை செய்ய வேண்டும். இவற்றில் முதல் நான்கான வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது கபத்தால் தோன்றியது ஸந்நிபாதத்தால் தோன்றியது என்பன மருந்தால் தீர்க்கக் கூடியவை. மற்ற பிலீஹோதரம், பத்தகுதோதரம், க்ஷதோதரம், அகோதரம் என்பன அறுவைச் சிகிச்சையால் நீக்கக் கூடியவை. நோய் தோன்றி நாள் கடந்தால் எல்லா வகைகளும் அறுவைச் சிகிச்சையால் நீக்கக் கூடியவையாகிவிடும் என்றறிக. 3

## 2. வயிற்று நோய்க்குப் பத்திய முறை

வயிற்று நோய் கொண்டவர் குருத்தன்மை, [2]அபிஷ்யந்தி, வறட்சித்தன்மை, மற்றும் எரிச்சல் ஆகியவற்றை தோற்றுவிப்பதும் எண்ணெய்ப் பசை கொண்டதுமான உணவுப் பொருள்களையும் குளித்தல் ஆற்றில் நீந்துதல் எனுமிவற்றையும் விலக்க வேண்டும். சம்பா அரிசி, அறுபது நாள் குறுவை, யவதானியம், கோதுமை, புல்லரிசி போன்றவற்றை உணவாகக் கொள்ள வேண்டும். 4

* உதரம் - வயிறு, பெருவயிறு முதலிய நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் உதர சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

1. பரிஸ்ராவி - வயிற்றுப் பகுதியில் நீர் சுரப்பதால் தொப்புளில் வீக்கமும், ஊசி குத்துதல் போன்ற வேதனையும், எரிச்சலும் மிகும் ஒரு வகை உதரநோய்.

2. அபிஷ்யந்தி - இளகச் செய்யும் தன்மை.

### 3. வாதோதரத்திற்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய பெருவயிறு கொண்டவருக்கு விதாரிகந்தாதி கூட்டுப் பொருளாலான நெய்யால் எண்ணெய் முறையையும் பாச்சோத்தியால் செய்த நெய்யைக்கொண்டு பேதியாகச் செய்யும் முறையையும் பயன்படுத்திப் போதுமான அளவு ஆமணக்கு எண்ணெய் கலந்த விதாரிகந்தாதி கூட்டுப் பொருள் கஷாயத்தால் ஆஸ்தாபன அநுவாஸன வஸ்திகளைப் பயன்படுத்த வேண்டும்.

### 4. பித்தத்தால் தோன்றும் வயிற்று நோய்க்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய பெருவயிறு நோய்க்கு காகோலி முதலிய கூட்டுப் பொருளாலான நெய்யைக் கொண்டு எண்ணெய் முறையையும் கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், சிவதை ஆகியவற்றால் ஆன நெய் மருந்தால் பேதியாகச் செய்வதையும் பயன்படுத்த வேண்டும் மற்றும் போதிய அளவு சர்க்கரை, நெய், தேன் கலந்த நியக்ரோதாதி கூட்டுப் பொருளாலான கஷாயத்தைக் கொண்டு ஆஸ்தாபன அநுவாஸன வஸ்திகளையும் செய்விக்க வேண்டும். பாயஸத்தை வயிற்றின் மேல் பூசி ஒற்றடம் கொடுக்கவும். விதாரி கந்தாதி கூட்டுப் பொருளாலான பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்க. 5-6

### 5. கபத்தால் தோன்றும் பெருவயிற்றுக்குச் சிகிச்சை

கபத்தாலான பெருவயிறு எனும் நோயில் திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களாலான கஷாயத்தைக் கொண்டு எண்ணெய் முறையையும் பக்குவம் செய்த கள்ளிப் பாலால் பேதியாகச் செய்தலையும் பயன்படுத்த வேண்டும். அதிக அளவில் சுக்கு, மிளகு, திப்பிலி, பசுவின் சிறுநீர், யவக்ஷாரம் ஆகியவற்றுடன் எண்ணெய் கலந்து முஷ்ககாதி கூட்டுப் பொருளாலான கஷாயத்தைக் கொண்டு ஆஸ்தாபன, அநுவாஸன வஸ்திகளைப் பயன்படுத்த வேண்டும். வயிற்றின் மேல் சணல், அகத்தி, காட்டாத்தி, சுராபீஜம், கடுகு மற்றும் முள்ளங்கிவிதை விழுதால் ஒற்றடம் கொடுத்து அதையே வைத்துக் கட்டுக. கொள்ளின் கஷாயத்தில் போதிய அளவு திரிகடுகத்தூள் கலந்த அல்லது பாயஸத்துடன் உணவு உட்கொள்ளச் செய்து அடிக்கடி உடல் வியர்க்கவும் செய்ய வேண்டும். 7

### 6. தூஷ்யோதரச் சிகிச்சை

தூஷ்விஷத்தால் தோன்றிய பெருவயிறு எனும் நோயைச் சிகிச்சையால் தீர்க்க இயலாது என்பதை நன்குணர்ந்து சிகிகைக்காய், கள்ளி, சங்கினி ஆகியவற்றின் சுரசத்துடன்

செய்த நெய்யைக் கொண்டு ஒரு மாதம் அல்லது பதினைந்து நாட்கள் பேதியாகச் செய்க. அல்லது கள்ளிப்பால், சுரை எனும் மது மற்றும் பசுவின் சிறுநீர் ஆகியவற்றுடன் தயார் செய்த நெய்யால் பேதியாகச் செய்க. குடல் தூய்மை பெற்ற பின் மதுவுடன் அரளி, குன்றிமணி, எட்டி (வாயஸதிந்துகி) ஆகியவற்றின் வேர்களின் விழுதை உட்கொள்ளச் செய்க. அல்லது கருநாகத்தைக் கொண்டு கரும்புத் துண்டையோ கத்தரிக்காய் முதலியவற்றையோ கடிக்கச் செய்து அதை உட்கொள்ளச் செய்க. அல்லது நஞ்சுள்ள வேர் அல்லது கிழங்கின் சாற்றை உட்கொள்ளச் செய்க. இதனால் நோயாளி குணம் பெறுவார். அவ்வாறு செய்யாவிடில் அவர் மரித்து விடுவார். 8

**7. பெருவயிறு நோயில் தோஷங்களைக் கீழ் நோக்கிச்**

பெருவயிறு நோயில், சீற்றமடைந்த வாயுவும், மலமும் சேர்ந்து விடுவது நோய் தோன்ற முக்கிய காரணமாகும். ஆகையால் பெருநோய் வகைகள் அனைத்திலும் பலமுறை பேதியாகச் செய்தல் சிறந்த சிகிச்சையாகும். 9

**8. வயிற்று நோய்க்கு சில சாமானிய முறைகள்**

ஆமணக்கு எண்ணெயை நாள்தோறும் பசுவின் சிறுநீர் அல்லது பாலில் நீரைத் தவிர்த்து ஒன்று அல்லது இரண்டு மாத காலம் உட்கொள்ள வேண்டும். அல்லது உணவின்றி எருமையின் சிறுநீரைப் பாலில் கலந்து ஏழு நாட்கள் உட்கொள்க. அல்லது உணவும், நீருமின்றி பன்னிரண்டு நாட்கள் ஒட்டகத்தின் பாலைப் பருக வேண்டும். அல்லது முன் கூறியபடி (வாதசோணித அத்தியாயத்தில் கூறியபடி) திப்பிலி முறையை ஒரு மாத காலம் பயன்படுத்துக. அல்லது ஓமமும் இந்துப்பும் கலந்து நேர்வாள எண்ணெயை உட்கொள்க. அல்லது வாதத்தால் தோன்றிய வலியில் ஆடகம் அளவு இஞ்சி மற்றும் சுக்கு சுரசத்தில் தயார் செய்த நேர்வாள எண்ணெயை உட்கொள்க. இஞ்சி சுரசத்தால் செய்த பாலை உட்கொள்க. அல்லது செவியம் இஞ்சி எனும் இவற்றின் விழுது அல்லது தேவதாரு கொடிவேலி எனுமிவற்றின் விழுதைப் பாலுடன் உட்கொள்க. அல்லது முருங்கை, மூவிலை, சியாமா, சாரடை ஆகியவற்றின் விழுதைப் பாலுடன் உட்கொள்க. அல்லது மால் சங்கினி எண்ணெயை ஸர்ஜக்ஷாரம் மற்றும் பெருங்காயம் சேர்த்துப் பாலுடன் உட்கொள்க.

அல்லது வெல்லத்தையும் கடுக்காயையும் சேர்த்து உட்கொள்க. அல்லது கள்ளிப்பாலில் ஆயிரம் திப்பிலிகளைப்

பாவனை செய்து அவற்றை எத்துணை நாட்களில் முடியுமோ அத்துணை நாட்கள் வரை உட்கொள்க. அல்லது கடுக்காய், திப்பிலி எனும் இவ்விரண்டின் தூளைக் கள்ளிப் பாலில் பாவனை செய்து கொழுக்கட்டை போல் தயாரித்து உட்கொள்க.

ஒரு பிரஸ்தம் கடுக்காய்த் தூளை ஓர் ஆடகம் நெய்யில் கலந்து நெருப்பில் உருகவைத்து கடைந்து பானையில் சேர்த்து மூடிய யவதானியக் குவியலுக்குள் பதினைந்து நாட்கள் வைத்திருக்கவும். பிறகு அதை வடிகட்டி கடுக்காய்க் கஷாயம் மற்றும் புளிப்புத் தயிர் கலந்து பக்குவம் செய்க. இதை முறைப்படி ஒரு மாதம் அல்லது பதினைந்து நாட்கள் உட்கொள்க.

பசுவின் பாலில் கள்ளிப்பால் கலந்து பக்குவம் செய்க. பக்குவமானபின் அடுப்பிலிருந்து இறக்கிக் குளிர்ந்த பிறகு மத்தினால் கடைந்து வெண்ணெய் எடுக்கவும். அந்த வெண்ணெயை மீண்டும் கள்ளிப்பாலுடன் பக்குவம் செய்க. பிறகு அதை முறைப்படி ஒரு மாதம் அல்லது பதினைந்து நாட்கள் உட்கொள்க.

செவியம், கொடிவேலி, நேர்வாளம், அதிவிடயம், கோஷ்டம், நன்னாரி, திரிபலை, ஓமம், மஞ்சள், சங்கினி, சிவதை, திரிகடுகம் எனும் இவை அரை கர்ஷம், கொன்றைப் பழக்கதுப்பு எட்டு பலம் எனக்கொண்டு இவை அனைத்தையும் ஒரு பிரஸ்தம் நெய்யில் சேர்த்துப் பக்குவம் செய்க. முறைப்படி ஒரு மாத காலமோ பதினைந்து நாட்களோ உட்கொள்க.

இம்மூன்றுடன் மற்றும் வாத வியாதி சிகித்ஸிதத்தில் கூறப் பட்ட தில்வககிருதம் முதலானவற்றை பெருவயிறு, குன்மம், வித்ரதி, அஷ்டீலா, ஆநாஹம், குட்டம், உன்மாதம், அபஸ்மாரம் ஆகியவற்றில் பேதியாகச் செய்யப் பயன்படுத்த வேண்டும். பசுவின் சிறுநீர், ஆஸவம், அரிஷ்டம் மற்றும் சுரை எனும் மதுவுடன் கள்ளிப்பாலைக் கலந்து அடிக்கடி உட்கொள்ள வேண்டும். அல்லது பேதியாகச் செய்யும் பொருட்களின் கஷாயத்துடன் சுக்குத்தூள் தேவதாருத் தூள் ஆகியவற்றை அதிக அளவில் கலந்து உட்கொள்ள வேண்டும். 10

**9. பெருவயிறு நோய்க்கு ஆநாஹவஸ்தி**

வாந்தி எடுக்கச் செய்யும் மருக்காரக்காய் முதலானவை பேதியாகச் செய்யும் சிவதை முதலானவை (சம்சோதன - சமநீய அத்தியாயத்தில் கூறப்பட்டவை) திப்பிலி முதலிய கூட்டுப்பொருள்கள், வசாதி, ஹரித்ராதி கூட்டுப் பொருள்கள் (திரவியஸங்கிரஹன அத்தியாயத்தில் கூறப்பட்டவை), ஐந்து

வகை உப்புகள் ஆகிய இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் கொண்டு அனைத்தையும் தூளாக்குக. இந்தத் தூளைப் பசுவின் சிறுநீர் முதலான எட்டு வகைச் சிறுநீர்களுடனும் ஒரு பிரஸ்தம் கள்ளிப்பாலுடனும் கலந்து விழுது எரிந்து போகாமல் மந்தாக்னியில் (சிறிதளவே எரியும் தீயில்) பக்குவம் செய்க. நன்றாகப் பக்குவம் பெற்ற பிறகு அடுப்பிலிருந்து இறக்கி குளிர்ந்த பின் ஒவ்வொரு கர்ஷம் அளவுள்ள மாத்திரைகள் செய்க. உடல் வலிமைக்குத் தகுந்தபடி ஒன்று, இரண்டு அல்லது மூன்று மாத்திரைகள் வீதம் மூன்று அல்லது நான்கு மாதங்கள் உட்கொள்க. மஹாவியாதிகளில் இந்த ஆநாஹ வஸ்தி பயன்படுத்தத்தக்கது. இது குடலில் சேர்ந்துள்ள கிருமிகளைக் கொல்லும். இருமல், இழுப்பு, கிருமிநோய், குட்டம், [1]பிரதிச்யாயம், சுவையின்மை, உணவு செரியாமை, உதாவர்த்தம் ஆகிய நோய்களையும் போக்கும். 11

மருக்காரக்காய் கதுப்பு, குடசப்பாலை, தேவதாளி, பேய்ச்சுரை, பெரும் பீர்க்கு, சிவதை, சுக்கு, மிளகு, திப்பிலி, கடுகு [2] ஐந்து வகை உப்புகள் ஆகியவற்றை கள்ளிப்பாலுடன் அல்லது பசுவின் சிறுநீருடன் அரைத்து கட்டைவிரல் அளவுள்ள வத்தி செய்க. பெருவயிறு நோயாளியின் ஆஸன வாயில் (ஆநாஹம் ஆன பிறகு) எண்ணெய் உப்பு ஆகியவற்றைப் பூசி இந்த வத்திகளில் ஒன்று அல்லது இரண்டை உட்புகச் செய்க. இம்முறை வாதத்தாலோ சிறுநீராலோ மலத்தாலோ தோன்றிய உதாவர்த்தம், அத்மானம் ஆநாஹம் ஆகியவற்றில் பயன்படுத்த வேண்டும். 12

### 10. மண்ணீரல் வீக்கத்திற்குச் சிகிச்சை

மண்ணீரல் வீக்கத்தால் பெருவயிறு கொண்ட நோயாளிக்கு எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தித் தயிருடன் உணவு உட்கொள்ளச் செய்த பிறகு இடது கை முழங்கைப் பகுதியின் உட்பகுதியில் உள்ள சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றுவதற்காக மண்ணீரலை உள்ளங்கையால் தேய்க்க வேண்டும். பிறகு பேதியாகச் செய்தல் வாந்தியாகச் செய்தல் எனும் முறைகளால் உடல் தூய்மை பெற்ற நோயாளியைக் கடலில் தோன்றும்

---

1. பிரதிச்யாயம் - தலைக்குள் வாதம் கோளாறடைந்து நாசியின் கீழுள்ள கப-பித்தங்கள் தலையை நோக்கி இழுக்கபடுதல்.

2. ஐந்து வகை உப்புகள் - சைந்தவம், சஞ்சபம், பிடம், உத்பிதம், சாம்பிகம்.

முத்துச்சிப்பியின் க்ஷாரத்தைப் பாலுடன் உண்ணச் செய்க. அல்லது பெருங்காயத்தையும் ஸர்ஜக்ஷாரத்தையும் பாலில் கலந்து பருகச் செய்க. அல்லது வடிகட்டிய புரசக்ஷாரத்துடன் யவக்ஷாரத்தை உட்கொள்ளச் செய்க. அல்லது பாரிஜாதம், நீர்முள்ளி, நாயுருவி எனுமிவற்றின் க்ஷாரத்தை உட்கொள்ளச் செய்க. அல்லது எண்ணெய் கலந்த முருங்கை கஷாயத்தில் திப்பிலி, இந்துப்பு, கொடிவேலி ஆகியவற்றைக் கலந்து பருகச் செய்க. அல்லது புளிக்காடியில் மணிபுங்கு க்ஷாரத்தை ஊறவைத்து வடிகட்டி, அதில் பிடாலவணம், திப்பிலி ஆகியவற்றை அதன் அளவில் கலந்து உட்கொள்ளச் செய்க. 13

11. **பெருவயிறு நோய்க்கு ஷட்பலகிருதம்**

திப்பிலி, திப்பிலிமூலம், செவியம், கொடிவேலி, சுக்கு, யவக்ஷாரம், இந்துப்பு ஆகிய இவை ஒவ்வொன்றும் ஒரு பலம் வீதம் நெய்யும் பாலும் வகைக்கு ஒரு பிரஸ்தம் எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்துப் பக்குவம் செய்க. இது ஷட்பலகிருதம் எனப்படும். மண்ணீரல்வீக்கம், சடராக்னிக்குறைவு, குன்மம், பெருவயிறு, உதாவர்த்தம், வீக்கம், பாண்டு, சுவாசகாசம் பிரதிச்யாயம், ஊர்த்வ வாதம், விஷக்காய்ச்சல் எனும் நோய்களைப் போக்கும். சடராக்னிக் குறைவுள்ள நோயாளி ஹிங்கு ஆதி சூரணத்தைப் பயன்படுத்த வேண்டும். 14

12. **கல்லீரல் வீக்கத்தால் தோன்றும் பெருவயிறு நோய்க்குச் சிகிச்சை**

கல்லீரல் வீக்கமுள்ள பெருவயிறு நோய்க்கு இம்முறையையே பின்பற்ற வேண்டும். ஆனால் இதில் வலது கையில் உள்ள சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 15

நோயாளியின் மணிக்கட்டைச் சிறிது வளைத்து இடது கட்டை விரலை நோக்கிச் செல்லும் சிரையை நெருப்பில் காய்ச்சிய பாணத்தால் சுட வேண்டும். 16

13. **பத்தகுத உதரம் மற்றும் பரிஸ்ராவி எனும் வயிற்று நோய்களுக்குச் சிகிச்சை**

பத்தகுதோதரம் மற்றும் பரிஸ்ராவி எனும் நோய்களில் எண்ணெய் முறை உடல் வியர்க்கச் செய்யும் முறை எண்ணெய்க்குளியல் ஆகியவற்றைச் செய்வித்துத் தொப்புளுக்குக் கீழ் இடப் பக்கத்தில் மயிர்க்காலுக்கு நான்கு அங்குலம் இடைவெளி விட்டு வயிற்றில் கீறி நான்கு அங்குலம் அளவு குடலை வெளிப்படுத்தி நன்கு ஆராய்ந்து பத்தகுதோதரத்திற்கு

காரணமான கல், மலம் முதலிய தடைகளைக் கண்டு நீக்கவும். பிறகு குடலில் தேனும், நெய்யும் தடவிக் குடலை எப்பொழுதும் போல உள்ளே அதற்குரிய இடத்தில் பொருத்தி, வெளி விரணத்தைத் தைக்கவும். பரிஸ்ராவி உதரத்திலும் இவ்வாறே உடலுக்குள் உள்ள சல்யத்தை நீக்கிக் குடலில் ஏற்பட்டுள்ள பரிஸ்ராவத்தை நீக்கித் துளைப்பட்ட குடற்பகுதியை நன்கு பொருத்தி அந்த இரு முனைகளும் இணைந்த பகுதியைக் கட்டெறும்பைக் கொண்டு கடிக்கச் செய்க. கட்டெறும்பு இரு பகுதிகளையும் சேர்த்துக் கடித்துக் கொண்டதும் அதன் உடலை தலையிலிருந்து துண்டித்து, எப்பொழுதும் போலக் குடலைப் பொருத்தித் தையல் போட வேண்டும். முன்கூறியபடியே விரணத்தை ஆற்ற வேண்டும். பிறகு காற்றில்லாத இல்லத்தில் நோயாளியை இருக்கச் செய்து பணியாளரிடம் ஒப்படைக்கவும். இந்த நோயாளியை எண்ணெய் அல்லது நெய் நிரப்பிய தொட்டியில் உட்காரவைத்து அவருக்குப் பால் மட்டும் உணவாகக் கொடுத்துவர வேண்டும். 17

### 14. ஜலோதரத்திற்குச் சிகிச்சை

ஜலோதர நோயாளிக்கு வாதத்தைப் போக்கும் எண்ணெயைத் தடவி தேய்த்து வெந்நீரை ஊற்றி உடல் வியர்க்கச் செய்க. வெந்நீரில் உட்கார வைக்க. திறமை உள்ளவர் அவருடைய இரு கையிடுக்குகளையும் பற்றி அசையாமல் பிடித்துக்கொள்ள வேண்டும். நாபிப் பகுதியில் ஆடையைச் சுற்றிக் கொண்டிருக்கும் அந்த நோயாளியின் தொப்புளுக்குக் கீழே இடது பக்கத்தில் உரோமக் காலுக்கு நான்கு அங்குலம் இடைவெளி விட்டு விரீஹிமுகம் எனும் கருவியைக் கொண்டு கட்டை விரற்பருமன் அளவு ஆழமாகத் துளையை ஏற்படுத்துக. அந்த துளையில் துத்தநாகம் முதலிய உலோகங்களால் அல்லது பறவைகளின் இறக்கையை இரு பக்கமும் வாயுள்ள குழாய் போன்றதைப் புகுத்தி கெட்ட நீர் வெளிவரச் செய்க. பிறகு குழாயை எடுத்துவிட்டு எண்ணெயையும் உப்பையும் தடவி விரணத்தின் மேல் கட்டு போட வேண்டும். ஒரே நாளில் கெட்ட நீர் முழுவதையும் வெளியேற்ற வேண்டாம். அவ்வாறு உடனே எல்லா நீரையும் வெளியேற்றிவிட்டால் நாவறட்சி, காய்ச்சல், அதிஸாரம், அங்கமர்தம், சுவாசம், கால்களில் எரிச்சல் ஆகியவை தோன்றும். அல்லது வலிமையற்ற நோயாளியின் வயிற்றில் மிக்க அதிக அளவு நீர் நிரம்பிவிடும். அதனால் மூன்று, நான்கு, ஐந்து, ஆறு, ஏழு, பத்து, பன்னிரண்டு, பதினாறு நாட்கள் இடைவெளிவிட்டு

சிறிது சிறிதாகக் கெட்ட நீரை வெளியேற்ற வேண்டும். கெட்ட நீர் வெளியேறியதும் ஆட்டின் தோல் அல்லது பட்டுத்துணி அல்லது வேறு ஏதேனும் தோலைக் கொண்டு விரணப் பகுதியை நன்கு மூடி கட்டு போட வேண்டும். இதனால் வாயு உட்புகுந்து அத்மானம் எனும் உப்புசத்தைத் தோற்றுவிக்காது. பிறகு ஆறு மாதங்கள் வரை பால், காட்டு விலங்குகளின் புலால் சாறு ஆகியவற்றுடன் உணவு உண்ணச் செய்க. அதன் பிறகு மூன்று மாதங்கள் பாதி அளவு நீர்கலந்த பால் பழங்களின் புளிப்புச்சாறு அல்லது காட்டு விலங்குகளின் புலால்சாறு ஆகியவற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்க. அடுத்த மூன்று மாதங்கள் உடலுக்கு நலம் விளைவிக்கக் கூடிய இலேசான (மென்மையான) உணவு உட்கொள்ளச் செய்க. இவ்வாறு ஓராண்டு காலம் சிகிச்சை செய்தால் நோயாளி குணம் பெறுவார். 18

திறமையுள்ள மருத்துவர் பெருவயிறு நோயாளிக்கு ஆஸ்தாபன, வஸ்தி முறை முதலியவற்றிலும் மற்றும் பருக, உணவுடன் உட்கொள்ளத் தக்க முறைகளிலும் பால் அல்லது காட்டு விலங்குகளின் புலால் சாற்றைப் பயன்படுத்த வேண்டும். 19

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

உதரசிகித்ஸிதம் எனும்

பதினான்காம் அத்தியாயம் முற்றும்.

## பதினைந்தாம் அத்தியாயம்

# * மூடகர்ப்ப சிகித்ஸிதம்

தன்வந்தரி பகவான் இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசித்தபடி மூடகர்ப்ப சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. மூடகர்ப்பத்திற்குச் சிகிச்சையின் சிறப்பு

மூட கர்ப்பம் எனும் சல்யத்தை வெளியேற்றுவதற்கு ஒப்பாக வேறு கடினமாக அறுவைச் சிகிச்சை ஏதும் இல்லை. அதாவது அறுவைச் சிகிச்சை முறைகளில் இது மிகக் கடினமானது என்பதாம். இதில் பெண்குறி, கல்லீரல், மண்ணீரல், குடல், ஆஸனவாய், கருப்பை இவைகளுக்கு இடையில் தொட்டு (ஸ்பர்சத்தால்) அறிந்து கொண்டு இது செயல் பட வேண்டியுள்ளது. (1) உத்கர்ஷணம் - கீழே நழுவிய கருவை உயர்த்துவது (2) அபகர்ஷணம் - கருவில் மேல் நோக்கிச் சென்ற குழந்தையைக் கீழ் நிலைக்குக் கொண்டு வருவது (3) ஸ்தானாபவர்த்தனம் - மேல் நோக்கிய முகம் கொண்ட கருக்குழந்தையின் முகத்தைக் கீழ்நோக்கி இருக்கச் செய்வது (4) உத்தர்தனம் - கீழ் நோக்கிய முகம் கொண்ட கருக்குழந்தையை சீராக மேல் நோக்கி இருக்கச் செய்வது (5) உத்கர்தனம் - மேல் நோக்கிச் சென்றுள்ள கருக்குழந்தையின் அவ்வுறுப்பை வெட்டி எடுப்பது (6) பேதனம் (7) சேதனம் - கருவில் மரித்த குழந்தையின் உடல் உறுப்புகளை வெட்டி எடுப்பது (8) பீடனம் - கருப்பை குழந்தை அழுத்துவது (9) ரிஜாகர்ணம் - கருவில் குறுக்காக இருக்கும் குழந்தையைச் சீரான நிலையில் இருக்கச் செய்வது (10) தாரணம் - பிளப்பது முதலிய செயல்களை கர்ப்பபையும் கருவுற்றவளும் கேடுறாமல் காத்துக் கொண்டே ஒரே கையால் செய்ய வேண்டும். ஆகையால் கணவரின் அனுமதி பெற்று மிகவும் கவனத்துடன் இச்செயல்களைப் புரிய வேண்டும். 3

---

* மூடகர்ப்பம் - கருவில் உள்ள குழந்தை சரியான வழியில் வெளிவராமல், குறுக்காக வழியை அடைத்துக் கொண்டிருப்பது மூடகர்ப்பமாகும். அந்நிலையில் குழந்தையை வெளியே எடுக்கும் சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் மூடகர்ப்பசிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

## 2. மூடகர்ப்பத்தின் நிலை

மூடகர்ப்பம் சுருக்கமாகச் சொன்னால் எட்டு வகைப்படும். 'யற்கையால் கருவெளிவராமல் தடைபடுவது மூன்று வகையாகும். (1) தலை கோணலாக இருத்தல் (2) தோள் மற்றும் புயங்கள் கோணலாக இருத்தல் (3) இடுப்பின் முன்பகுதி கோணலாக இருத்தல் (எட்டு வகை மூடகர்ப்பம் - ஸுசுருதஸம்ஹிதை நிதானஸ்தானம் தமிழ் மொழிபெயர்ப்பில் பக்கம் 456ல் காண்க.) 4

## 3. மூடகர்ப்பத்திற்கு மந்திரம்

கருவில் குழந்தை உயிருடன் இருக்கும்போது அந்நிலையிலேயே குழந்தையை வெளியே எடுக்க வேண்டும். குழந்தை வெளிவருவதில் சிரமம் தோன்றினால், சியாவன மந்திரங்களை ஓதப்பெற்று கருவுற்றவளைக் கேட்கச் செய்ய வேண்டும். 5

அந்த மந்திரங்களாவன -

1) இஹாம்ருதம் ச ஸோமச்ச சித்ரபானுச்ச பாமிநி 1

உச்சைச்ரவாச்ச துரகோ மந்திரே நிவஸந்து தே 11

2) இதமம்ருத மபாம் ஸமுத்ருதம் வை

தவலகு கர்பமிமம் பிரமுஞ்சது ஸ்திரி 1

ததனல பவனார்க வாஸவாஸ்தே

ஸஹ லவணார்வெள திசந்து சாந்திம் 11

3) முக்தா : பசோர்வி பாசாச்ச முக்தா: ஸூர்யேணரச்மய: 1

முக்த : ஸர்வபயாத் கர்ப ஏஹ்யேஹி விரமாவித: 11 6-8

## 4. மூடகர்ப்பத்தை வெளியேற்றும் முறை

மூடகர்ப்பத்தை வெளிவரச் செய்வதற்காக முன்பு சாரீரஸ்தானத்தில் அபராபாதன முறைக்காகக் கூறப்பட்ட மூலிகைகளைப் பயன்படுத்தலாம். கருவில் உள்ள குழந்தை மரித்து விட்டால் கருவுற்றவளை மல்லாந்து படுக்கச் செய்து இரு முழங்கால்களையும் மடக்கியிருக்கச் செய்க. பிறகு இடுப்பின்கீழ் ஆடை, தலையணை போன்றவற்றை வைத்து அப்பகுதியை மேல் நோக்கி உயர்ந்திருக்கச் செய்க. பின்பு இலந்தை இலையைப் போன்ற இலைகளைக் கொண்ட தருமரம், ஆனைவணங்கி,

இலவம் ஆகியவற்றின் இலையை அரைத்து நெய்யுடன் கலந்து கையில் பூசிக்கொள்க. அந்தக் கையை அம்மங்கையின் பெண்குறிக்குள் செலுத்திக் கருவை வெளியே எடுக்க வேண்டும். கால்களை முதலில் வெளியே நீட்டியிருக்கும் குழந்தையின் காலை அநுலோம (கீழே நோக்கியிருக்கச் செய்து) முறையில் வெளிப்படுத்தி ஒரு கால் வெளிவந்ததும் அடுத்த காலையும் வெளியே எடுத்துக் கருவினை வெளிப்படுத்துக. புட்டப் பகுதியை அழுத்தி மேலே தூக்கி முழங்கால்களை அகற்றியிருக்கச் செய்து கருவை வெளியே எடுக்க வேண்டும். கருவில் குழந்தை குறுக்காக இருக்கும் போது உடலின் இடுப்புக் கீழ்ப்பகுதியை உயரத்தூக்கித் தலைப்பகுதி கீழ் நோக்கி இருக்கச் செய்து பெண்ணுறுப்பின் வழியே குழந்தையை வெளிப்படுத்துக. ஒருபக்கமாக தலை இருந்த கர்ப்பத்தில் புயத்தை (பிடரிப்பகுதியை) அழுத்தி மேல் நோக்கிக் கொண்டு சென்று தலையைப் பெண்குறி வழியில் கொண்டு வந்து குழந்தையை வெளியேற்ற வேண்டும். இரு கைகளும் முதலில் வெளிவந்த கருவில் குழந்தையை மேல் நோக்கிப் பிடித்து, உடலின் மேல் பகுதியைக் கீழ் நோக்கிக் கொண்டு வந்து குழந்தையை வெளியே எடுக்க வேண்டும். இத்தகைய செயல்கள் பயன் தராத மூடகர்ப்பத்தில் அறுவைச் சிகிச்சையைப் பயன்படுத்த வேண்டும். 9

### 5. மூடகர்ப்பத்தை வெளியேற்ற அறுவைச் சிகிச்சை

கருவில் உயிருடன் இருக்கும் குழந்தையை ஒரு பொழுதும் அறுவைச் சிகிச்சையால் வெட்டி எடுக்கக் கூடாது. ஏனெனில் அவ்வாறு வெட்டினால் குழந்தையின் உயிருக்கும் தாயின் உயிருக்கும் தீங்கு நேரும். பொறுக்க இயலாத நோயில் கரு வீழ்ச்சிக்கு (கர்ப்பபாதம்) வழி செய்வது நல்லது. கருவுற்றவளை எவ்வழியிலேனும் காப்பாற்ற வேண்டும். கருவுற்ற பெண்ணுக்கு ஆறுதல் கூறி மண்டலாக்ரம் அல்லது அங்குளி சஸ்திரம் எனும் கருவியால் கருவில் உள்ள குழந்தையின் தலையைப் பிளந்து தலை, கபால என்புகள் ஆகியவற்றை வெளியே எடுத்து சங்கு யந்திரத்தினால் கருவில் உள்ள குழந்தையின் மார்பு அல்லது அக்குள் பகுதியைப் பிடித்துக் கருவை வெளியே எடுக்க வேண்டும். தலையைப் பிளக்காத போது கன்னம் அல்லது * அக்ஷிகூடப் பகுதியைப் பிடித்து புயங்களை வெட்டி துருத்திப்பையைப் போல வீங்கிப் பருத்துள்ள குழந்தையின்

அக்ஷிகூடப் பகுதி - கண்கள் இரண்டும் இணைந்துள்ள பகுதி.

வயிற்றைக் கீறிக் குடலை வெளி எடுத்துக் கரு சிதைந்த பிறகு வெளியே எடுக்க வேண்டும். இடுப்புக்குக் கீழ்ப்பகுதியைப் பிளந்து ஜகன கபாலத்தை அப்பகுதி என்புகளை வெட்டிக் கருவை வெளியே எடுக்க வேண்டும். 10 -12

எந்தெந்த உறுப்பு கரு வெளிவருவதைத் தடுக்குமோ அந்தந்த உறுப்பைத் தனியாக வெட்டி எடுத்த பின் கருவை வெளிப்படுத்த வேண்டும். 13

வாயுவின் சீற்றத்தால் கருவில் குழந்தையின் நிலை பல வகைகளாக இருக்கும். அந்நிலையில் அறிவுள்ள மருத்துவர் முறை அறிந்து செயல்படுத்த வேண்டும். 14

### 6. மரித்த குழந்தையை தாமதமின்றி வெளியேற்றுதல்

கருவில் மரித்த குழந்தையைக் கண நேரமும் தாமதப்படுத்தாமல் வெளியேற்றி விட வேண்டும். ஏனெனில் மூச்சு அடங்கிப் போனதும் விலங்கு மரிப்பது போல மரித்த கரு தாயையும் விரைவில் கொன்று விடும். 15

### 7. அறுவைக்குரிய கருவி

அறுவைச் சிகிச்சையில் கை தேர்ந்த மருத்துவர் மண்டலாக்ரம் எனும் கருவியினால் கருப்பைக்குள் அறுவைச் சிகிச்சையைச் செய்ய வேண்டும். ஏனெனில் விருத்திபத்ரம் எனும் கருவியில் முனை மிகவும் கூரியதாக இருக்கும். அதனால் (அக்கருவியால்) கருவை வெட்டினால் தாயின் உயிருக்குக் கேடு விளையும். 16

### 8. மாயையை வெளிப்படுத்துதல்

கரு வெளி வந்த பிறகு மாயை வெளிவராவிடில் முன்பு சாரீரஸ்தானத்தில் கூறிய முறைப்படி மாயையை வெளியேற்ற வேண்டும். அல்லது கருப்பையின் இருபக்கங்களையும் கையால் அழுத்தி மாயையை வெளிவரச் செய்ய வேண்டும். 17

அறிவுள்ள மருத்துவர் (கருவறைப்பகுதியில் எண்ணெயைத் தடவி) எண்ணெயில் நனைந்த குறிப்பகுதி உள்ள மங்கையின் கைகால்களைப் பிடித்துக் கொண்டு மெல்ல மெல்ல அவளது உடலை அசைய செய்து பிடரிப்பகுதியை அழுத்தி மாயை வெளிவரும்படி செய்ய வேண்டும். 18

## 9. அறுவைச் சிகிச்சைக்குப் பிறகு செய்ய வேண்டிய முறை

இவ்வாறு அறுவைச் சிகிச்சையால் மூடகர்ப்பத்தை வெளியேற்றிய பின் அம்மங்கையை வெந்நீரில் குளிப்பாட்டுக. பிறகு எண்ணெயில் தோய்த்த பஞ்சை அவளது கருவழியில் வைக்க வேண்டும். இதனால் பெண்குறி மென்மை அடைந்து வலியும் குறையும். 19

திப்பிலி, கொடிவேலி, சுக்கு, ஏல அரிசி, பெருங்காயம், பாரங்கி, ஓமம், வசம்பு, அதிவிடயம், சித்தரத்தை, செவியம் எனும் இப்பொருள்களைத் தூளாக்கி நெய்யுடன் தோஷங்கள் வெளியேறுவதற்கும் வேதனை தணிவதற்கும் உட்கொள்ளச் செய்க. அல்லது இந்தப் பொருள்களின் எண்ணெயற்ற கஷாயம், விழுது அல்லது தூளை உட்கொள்ளச் செய்க. மாவிலங்கைப் பட்டை, பெருங்காயம், அதிவிடயம், வட்டத்திருப்பி, கடுகரோகிணி, தேஜோவதி என்பனவற்றைத் தூளாக்கி நெய்யுடன் உட்கொள்ளச் செய்க. பிறகு மூன்று, ஐந்து அல்லது ஏழு நாட்கள் மீண்டும் எண்ணெயை உட்கொள்ளச் செய்க. இரவு வேளைகளில் முறைப்படி செய்த ஆஸவம், அல்லது அரிஷ்டம் எனும் மருந்தை உட்கொள்ளச் செய்க. வாகை, மருதம் எனும் இவற்றின் கஷாயம் வாய் கொப்பளிக்கவும், பருகவும் பயன்படுத்தத்தக்கது. வாத நோய், காய்ச்சல் முதலிய வேறு நோய்கள் தோன்றினால் அவற்றிற்கு உரிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். முழுமையாக உடல் நலம் பெற்ற பிறகு அம்மங்கை நாள்தோறும் எண்ணெய்ப்பசை கொண்ட பத்தியமான உணவைச் சிறிது குறைந்த அளவில் உட்கொள்ள வேண்டும். உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க்குளியல் ஆகியவற்றையும் செய்விக்க வேண்டும். சினம் கொள்ளக் கூடாது. பத்து நாட்கள் வரை வாதத்தைப் போக்கும் சதகுப்பி முதலான பொருள்கள் சேர்த்த பாலைப் பருக வேண்டும். 20-26

மற்ற நாட்களில் இதமான உணவு உட்கொள்ள வேண்டும். துன்பம் நீங்கி உடல் நன்றாகிய நான்கு மாதங்களுக்குப் பிறகு உணவுக் கட்டுப்பாட்டை நீக்கலாம். இத்தகையவளுக்கு பெண்குறியை நனைத்தல் எண்ணெய்க்குளியல் பருகுதல் வஸ்தி முறையில் பயன்படுத்துதல் உணவுடன் சேர்த்து உட்கொள்ளுதல் ஆகியவற்றிற்குக் கீழே குறிப்பிடப்போகும் பலா தைலத்தைப் பயன்படுத்த வேண்டும். 27-28

## 10. பிள்ளைப்பேறு நோய்க்கு பலா தைலம்

சிற்றாமுட்டி வேரின் கஷாயம், தசமூல கஷாயம், யவதானியம், இளந்தை, கொள்ளு எனுமிவற்றின் கஷாயம் என்பவற்றுடன் பால் எட்டு பங்கு வீதம் கொண்டு எண்ணெய் ஒரு பங்கு, காகோலி முதலிய இனிப்புச் சுவை கொண்ட பொருள்கள், இந்துப்பு, அகில், சர்ஜக்ஷாரம், ஸரளம், தேவதாரு, மஞ்சிட்டி, சந்தனம், கோஷ்டம் , ஏலக்காய், தகரை, சடாமாஞ்சி, இலவங்கப்பத்திரி, நன்னாரி, வசம்பு, தண்ணீர்விட்டான் கிழங்கு, சாரடை ஆகியவற்றின் விழுதைச் சேர்த்துப் பக்குவம் செய்க. எண்ணெய் மருந்து நன்கு பக்குவமான பிறகு தங்கம், வெள்ளி அல்லது மண் பாத்திரத்தில் அந்த எண்ணெய் மருந்தை வைத்திருந்து பத்திரப்படுத்துக. இது பலா தைலம் எனப்படும். இது வாத வியாதிகள் அனைத்தையும் தணிக்கும். பிள்ளை பெற்றவளுக்கு அவளுடைய உடல் வலிமைக்கு ஏற்ற அளவு இதைப் பயன்படுத்த வேண்டும். கருவைத் தாங்கவேண்டும் என்ற விருப்பம் கொண்ட மங்கை, விந்து குறைந்த ஆண் வாயுவால் இளைத்தவர், உயிர் நிலையில் காயம்படுதல் சிதைக்கப்படுதல் என்புமுறிதல் ஆகியவற்றால் துன்புறுபவர், மிக்க சோர்வினால் துன்பப்படுவோர் ஆகிய அனைவர்க்கும் எண்ணெய்க்குளியல், உட்கொள்ளுதல் வஸ்தியாகப் பயன்படுத்துதல் உணவுடன் உட்கொள்ளுதல் எனும் முறைகளில் இந்த எண்ணெய் பயன்படுத்தக்தக்கது. இது வாத வியாதிகளைப் போக்கும். கடுமையான விக்கல், இருமல், அதிமந்தம், குன்மம், இழுப்பு, குடல் வீக்கம் முதலிய நோய்களில் ஆறு மாதங்கள் இந்த மருந்தைப் பயன்படுத்தினால் நோய் நீங்கும். இந்த எண்ணெயை உட்கொள்வதால் ஆண்களின் உடலில் இரசம், இரத்தம் முதலிய தாதுக்கள் வளர்ச்சி பெறும். அதனால் அவர்களது இளமை நிலையாக இருக்கும். மன்னர்கள், அரசரை சார்ந்தவர்கள், சுகமாக வாழ்பவர், போகவிலாசங்களை விரும்பு கிறவர், செல்வந்தர் ஆகியவர்களுக்கு இந்த மருந்து ஏற்றது. 29-39

## 11. சதபாக பலாதைலம்

பல முறைகள் சிற்றாமுட்டி கஷாயத்தால் எள்ளைப் பாவனை செய்து அதிலிருந்து எண்ணெய் எடுக்கவும். அதைச் சிற்றாமுட்டிக் கஷாயத்தைக் கலந்து பக்குவம் செய்க. இவ்வாறு நூறு முறை பக்குவம் செய்க. காற்றில்லாத தனிமையான அறையில் இருந்து இதை உட்கொள்க. இம்மருந்து செரிமான மடைந்த பின் அறுபது நாள் குறுவை அரிசியாலான சோற்றில்

பாலும் நெய்யும் கலந்து உணவாகக் கொள்க. இவ்வாறு ஒரு துரோணம் அளவுள்ள பலாதைலத்தை உட்கொண்டவர் தனக்குத் தேவையான உணவை இரண்டு மடங்கு அளவு உட்கொள்வார். வலிமையும், பொலிவும் கொண்டு எல்லாப் பாவங்களும் நீங்கப்பெற்று நூறாண்டுகள் திடமாக வாழக்கூடியவர் ஆவார். ஒவ்வொரு துரோணம் அளவுள்ள இந்தத் தைலத்தை உட்கொள்வதால் நூறு நூற்றாண்டுகள் வீதம் ஆயுள் வளரும். 40-43

## 12. வேறு தைலங்கள்

பலாதைலத்தைப் போலவே பேராமுட்டி, சீந்தில் கொடி, சூரியகாந்தி, மருதோன்றி, தண்ணீர்விட்டான் கிழங்கு, நெருஞ்சில், விடதலை, அதிமதுரம், முதியார்கூந்தல் ஆகியவற்றைக் கொண்டு எண்ணெய் மருந்து செய்யலாம். நீலாம்பல் கிழங்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு ஆகியவற்றைப் பசுவின் பாலில் பக்குவம் செய்து அந்தப் பாலை பலா தைலத்திற்குக் கூறப்பட்ட மருந்துப் பொருள்களின் விழுதுடன் கலந்து நூறு முறை எள்ளைப் பக்குவம் செய்க. இவையனைத்தும் பலா தைலத்தைப் போன்ற தன்மை கொண்டவை என அறிக. 44-47

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

மூடகர்ப்ப சிகித்ஸிதம் எனும்

பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்.

# பதினாறாம் அத்தியாயம்
# *வித்ரதி சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி வித்ரதி எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குகிறோம். 1-2

## 1. வித்ரதிக்கு பொது சிகிச்சை

நிதானஸ்தானத்தில் ஆறுவகை வித்ரதிகள் கூறப்பட்டுள்ளன. அவற்றில் ஸந்நிபாதத்தால் தோன்றும் வித்ரதி சிகிச்சைக்கு உட்படாதது. மற்றவை பக்குவம் பெறாத நிலையில் வீக்கத்திற்கு கூறியபடி அபதர்ப்பணமுறை முதல் பேதியாகச் செய்யும் முறை வரை சிகிச்சை முறைகளைக் விரைவாக கையாள வேண்டும். 3

## 2. வாதத்தால் தோன்றிய வித்ரதிக்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய வித்ரதியில் வாதத்தைப் போக்கும் பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள்களின் வேரை விழுதாக அரைத்து நெய், எண்ணெய், கொழுப்பு ஆகியவற்றைச் சேர்த்து பொறுக்கக்கூடிய இளஞ்சூட்டில் அடர்த்தியாக பூச வேண்டும். நீர்ப்பாங்கான இடத்தில் வசிக்கும் எருமை முதலியவற்றின் மற்றும் நீரில் வாழும் மீன் முதலியவற்றின் புலால், காகோலி முதலிய கூட்டுப் பொருள், தானியங்களின் மேல்தோல், இந்துப்பு ஆகியவற்றை நெய், எண்ணெய், கொழுப்பு, மஜ்ஜை, புளிக்காடி முதலியவற்றைச் சேர்த்து சூடாக்கிப் பொட்டலம் கட்டி அதைக் கொண்டு ஒற்றடம் கொடுக்க வேண்டும். **வேஸவாரம், எள்ளும் அரிசியும் உளுந்தும் சேர்த்துக் காய்ச்சிய கஞ்சி, பால் பாயசம் முதலியவற்றால் இடைவிடாமல் உடல் வியர்க்கச் செய்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 4-6

இவ்வாறு சிகிச்சை செய்த பிறகு அந்தக் கட்டி பக்குவம் பெற்றிருக்கும் இலக்கணங்கள் காணப்பட்டால் அதை நன்கு பழுக்கச் செய்ய வேண்டும். பின்னர் கருவியால் கீறிப் பிறகு விரணத்தை ஆற்ற வேண்டும். 7

---

* வித்ரதி - சீழ்கட்டி - அதற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் வித்ரதிசிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

** வேஸவாரம் - சுக்கு, மிளகு முதலியவற்றைச் சேர்த்து இடிக்கப்பட்ட மாமிசம்.

பெரும்பஞ்சமூலக் கஷாயத்தால் விரணத்தைக் கழுவி பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள்கள் அதிமதுரம், இந்துப்பு (அதிக அளவில்) சேர்த்து எண்ணெய் கலந்து விரணத்தின் மேல் அந்த எண்ணையை விட வேண்டும். 8

ஸம்சோதன சமனீய அத்தியாயத்தில் கூறப்பட்ட விரேசனத் திற்குரிய பொருள்களின் தூளுடன் நெய், எண்ணெய், கொழுப்பு ஆகியவற்றைக் கலந்து அதைக் கொண்டு விரணத்தை கழுவி பிருதக்பர்ணி முதலான கூட்டுப்பொருள்களாலான எண்ணெயால் விரணத்தை ஆற்ற வேண்டும். 9

3. பித்தத்தால் தோன்றிய வித்ரதிக்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய வித்ரதிக்கு சர்க்கரை, தானியத்தின் தோல், அதிமதுரம், நன்னாரி, க்ஷீரகாகோலி, வெட்டிவேர், சந்தனம் ஆகியவற்றைப் பால் விட்டு அரைத்து அதைப் பூச வேண்டும். 10

மேற்படி மருந்துப் பொருள்களைக் கொண்டு காய்ச்சிய கஷாயம் அல்லது சீத கஷாயம், பால், கருப்பஞ்சாறு அல்லது சர்க்கரையுடன் கூடிய ஜீவனீய கணப்பொருள்களைக் கொண்டு செய்த நெய் மருந்தை நோயுற்ற பகுதிமேல் ஊற்றிக் கொண் டிருக்க வேண்டும். சிவதை, கடுக்காய்களின் தூளைத் தேன் கலந்து உட்கொள்ளச் செய்க. பிறகு பக்குவமடைந்த கட்டியைக் கருவியால் கீறி அட்டைப்பூச்சியைக் கொண்டு இரத்தத்தை உறிஞ்ச செய்து வெளியேற்ற வேண்டும். 11-12

பாலுள்ள ஆலம் முதலிய மரங்களின் அல்லது நீரில் தோன்றிய தாமரை, ஆம்பல் முதலியவற்றின் கஷாயத்தைக் கொண்டு விரணத்தைக் கழுவி அதிமதுரம், பால், நெய் கலந்த எள்ளின் விழுதைப் பூச வேண்டும். மெல்லிய ஆடையால் விரணத்தின் மேல் கட்டு கட்ட வேண்டும். 13

பிரபௌண்டரீகம், மஞ்சிட்டி, அதிமதுரம், வெட்டிவேர், பதுமகம், மஞ்சள் ஆகியவற்றின் விழுதை பால் கலந்து செய்த நெய் மருந்தால் விரணம் ஆறும். பால் முதுக்கன் கிழங்கு, மூவிலை, மஞ்சிட்டி, பாச்சோத்தி, சந்தனம், ஆலம் ஆகியவற்றின் இலை அல்லது அவற்றின் பட்டையைக் கொண்டு செய்த நெய் மருந்தால் விரணம் ஆறும். 14-15

### 4. கரஞ்சாதி கிருதம்

புங்கனின் புதிய இலை, காய், மல்லிகை இலை, புடலை இலை, வேப்பிலை, மஞ்சள், மரமஞ்சள், தேன்மெழுகு, கடுகரோகிணி, ஞாழல், தர்ப்பைவேர், நீர்வஞ்சிப்பட்டை மஞ்சிட்டி, சந்தனம், வெட்டிவேர், தாமரை, நன்னாரி, சிவதை ஆகியவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கர்ஷம் வீதம் கொண்டு விழுதாக்கி, அத்துடன் ஒரு பிரஸ்தம் நெய் சேர்த்து பக்குவம் செய்க. இது கரஞ்சாதி கிருதம் எனப்படும். இது கெட்ட (நாள்பட்ட) விரணம், நாடீவிரணம், அப்பொழுதே ஏற்பட்ட வெட்டுக்காயத்தாலான விரணம் முதலியவற்றைப் போக்கும். மற்றவகை விரணங்கள், வேறு சிகிச்சையால் குணமாகாத விரணம், நாடீவிரணம், கம்பீரவிரணம், நெருப்பு அல்லது க்ஷார மருந்துகளாலான விரணம், மேலும் கொடிய விரணங்கள் ஆகிய வற்றையும் போக்கும். 16-21

### 5. சிலேத்துமத்தால் தோன்றிய விரணத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய வித்ரதியில் காய்ச்சிய செங்கல், மணல், கல், சாணம், உமி, தூசி முதலியவற்றால் ஒற்றடம் கொடுத்தல் இடைவிடாமல் பசுவின் சிறுநீரை ஊற்றிக் கொண்டிருத்தல் முதலியவற்றை செய்ய வேண்டும். கஷாயம், வாந்தி எடுக்கச் செய்தல், மேல் பூச்சு, உபநாஹமுறை முதலியவற்றால் தோஷங்களைத் தணித்தல், சுரைக்குடுக்கையால் அடிக்கடி இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். பக்குவம் பெற்ற கட்டியைக் கீறிக் கொன்றைக் கஷாயத்தால் விரணத்தைக் கழுவ வேண்டும். மஞ்சள், சிவதை, பொரிமா, எள்ளில் விழுது ஆகியவற்றுடன் தேன் கலந்து அதைக் கொண்டு விரணத்தை நன்றாக நிரப்பி மெல்லிய ஆடையால் நன்றாகக் கட்டு கட்ட வேண்டும். கொள்ளு, நேர்வாளம், சிவதை, கருஞ்சிவதை எருக்கன், தில்வகம், இந்துப்பு, பசுவின் சிறுநீர் ஆகியவற்றுடன் எண்ணெய் தயார் செய்ய வேண்டும். 22-26

### 6. இரத்தத்தாலும், புறக்காரணங்களாலும் தோன்றிய வித்ரதிக்குச் சிகிச்சை

இரதத்ததால், மற்றும் புறக்காரணங்களால் தோன்றிய வித்ரதியில் பித்தத்தால் தோன்றிய வித்ரதிக்குரிய சிகிச்சை முறை முழுவதையும் கையாள வேண்டும். 27

### 7. அந்தர்வித்ரதிக்கு (உடலுக்குள் தோன்றிய)ச் சிகிச்சை

பக்குவம் பெறாத அந்தர் வித்ரதியில் *ஊஷகாதி கணக்கூட்டுப் பொருள் சேர்ந்த வருணாதிகணக்கூட்டுப் பொருள்களின் கஷாயத்தைப் பருகச் செய்ய வேண்டும். 28

இந்த இருவகைக் கூட்டுப் பொருள்கள் மற்றும் பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்களுடன் செய்த நெய் மருந்தை நாள் தோறும் காலை வேளையில் பருகச் செய்தால் விரைவில் வித்ரதி குணமாகும். 29

இந்த வருணாதி, ஊஷகாதி, பேதியாகச் செய்யும் கூட்டுப் பொருள்களின் கஷாயத்தில் எண்ணெய் கலந்து ஆஸ்தாபன, அநுவாஸன வஸ்தி முறைகளைக் கையாள வேண்டும். 30

அல்லது தோஷத்திற்கத் தக்கபடி குடிநீர், மேல்பூச்சு, உணவு ஆகியவற்றில் முருங்கை மரப்பட்டைத் தூளைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் பக்குவம் பெறாத வித்ரதி தீரும். 31

அல்லது நீர், புளிக்காடி, பசுவின் சிறுநீர், சுரை எனும் மது ஆகியவற்றுடன் முருங்கைப்பட்டைத்தூள், வாதம் முதலிய தோஷங்களைப் போக்கும் கூட்டுப் பொருள்களின் கஷாயம் ஆகியவற்றடன் சிலாஜித்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

சுக்கு தேவதாரு என்பனவற்றுடன் கூடிய சிறந்த மகிஸாக்ஷி குக்குலுவையும் உட்கொள்ளச் செய்ய வேண்டும். மற்றும் எண்ணெய் முறை, உபநாஹம், அநுலோமனம் எனும் முறைகளை யும் எப்பொழுதும் பயன்படுத்திக் கொண்டிருக்க வேண்டும். 32-33

### 8. கபத்தால் தோன்றிய வித்ரதியில் சிரோவியதை

கபத்தால் தோன்றிய வித்ரதியில் முன் கூறியபடி சிரையை கீற வேண்டும். ஆசிரியர்கள் சிலர் இரத்தம் மற்றும் பித்தத்தால் தோன்றிய வித்ரதியில் முழங்கைப் பகுதியில் சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றும் முறையை ஒப்புக்கொண்டுள்ளனர். 34

### 9. பக்குவம் பெற்ற வித்ரதிக்குச் சிகிச்சை

பக்குவம் பெற்ற அல்லது மேல் நோக்கி எழும்பிய வித்ரதியில் கீறிய பிறகு விரணத்திற்குச் செய்ய வேண்டிய முறைகளைக் கையாள வேண்டும். மேல் நோக்கி அல்லது

---

* ஊஷகாதிகணம் - (ஊஷகம் - முள்ளங்கி) முள்ளங்கி மயில்துத்தம், பெருங்காயம், அன்னபேதி, புஷ்பக அன்னபேதி, இந்துப்பு, சிலாஜித்து என்பனவற்றின் சேர்க்கை ஊஷகாதிகணம்.

கீழ்நோக்கிப் பரவும் வித்ரதயில் மைரேயம், புளிக்காடி, சுரை எனும் மது, ஆஸவம் முதலியவற்றுடன் வருணாதி கண கூட்டுப் பொருளின் அல்லது முருங்கைப்பட்டை ஆகியவற்றின் தூளைக் கலந்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். முருங்கை வேர்க் கஷாயத்துடனும் கடுகுடனும் சோறு, யவதானியம், இலந்தை, கொள்ளு ஆகியவற்றின் கஞ்சியுடன் உண்ணச் செய்க. அல்லது நாள் தோறும் காலையில் வித்ரதி தணிய சிறு அளவில் தில்வக கிருதத்தையோ, (தில்வகம் - பாச்சோத்தி, கிருதம் - நெய். பாச்சோத்தியால் செய்யப்படும் நெய் மருந்தாகும்.) சிவதை முதலிய கூட்டுப்பொருள்களாலான கஷாயத்தைக் கொண்டு செய்த நெய் மருந்தையோ உட்கொள்ளச் செய்க. வித்ரதியைப் பக்குவம் பெறச் செய்யக்கூடாது. 35-38

10. **மஜ்ஜையைச் சேர்ந்த வித்ரதிக்குச் சிகிச்சை**

வித்ரதி பக்குவம் பெற்ற பிறகு சிகிச்சை செய்யத் துவங்கினால் குணமாகும் என்பதை உறுதியாகக் கூற இயலாது. ஆகையால் மஜ்ஜையைச் சார்ந்த வித்ரதி சிகிச்சையால் தீர்ப்பது எளிதல்ல என்பது உணர்ந்து சிகிச்சை செய்ய வேண்டும். எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறை முதலியவற்றைச் செய்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். மஜ்ஜையைச் சார்ந்த வித்ரதியில் பக்குவம் பெற்ற பின் சிகிச்சைக்காக கூறிய முறைகளைக் கையாளவும். அல்லது என்பைப் பிளப்பதுவும் செய்யத் தக்கது. 39-40

வித்ரதி எனும் கட்டி, விரணத்தில் சீழ் முதலிய சல்யங்கள் இல்லாத போது விரணத்தை தூய்மைப்படுத்த வேண்டும். கசப்புச் சுவை கொண்ட பொருள்களின் கஷாயத்தால் விரணத்தைக் கழுவ வேண்டும். கசப்புச் சுவையுள்ள பொருள்களின் கஷாயத்தாலான நெய் மருந்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 41

வித்ரதியிலிருந்து மஜ்ஜை வெளிவருவது நிற்காவிட்டால் ஸம்சோதனீயப் பொருள்களாலான கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். 42

ஞாழல், காட்டாத்தி மலர், பாச்சோத்தி, காயபலம், தினிசம், இந்துப்பு ஆகியவற்றுடன் வித்ரதி விரணத்தை நிரப்பக் கூடிய எண்ணெயைத் தயார் செய்ய வேண்டும். 43

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**வித்ரதி சிகித்ஸிதம் எனும்**

**பதினாறாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினேழாம் அத்தியாயம்

# * விஸர்ப நாடீஸ்தன ரோக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்‹ உபதேசம் செய்தபடி அக்கி, நரம்பு நோய், தன நோய் ஆகியவற்றிற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

## 1. அக்கி நோய்க்கு உரிய சிகிச்சை முறை

வாதம், பித்தம், கபம் எனும் தோஷங்கள் சீற்றமுறும் மூன்று வகையான அக்கி நோய்களும் சிகிச்சையால் தீர்க்கக்கூடியவை. மூன்று தோஷங்களும் சேர்ந்து சீற்றமுறுவதால் தோன்றும் (ஸந்நி பாத) அக்கி சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும். சிகிச்சைக் குரிய அக்கி நோயில் வாதம் முதலான தோஷங்களைத் தீர்க்கும் கூட்டுப் பொருள்களாலான நெய் மருந்துகள், நோய்ப் பகுதியில் ஊற்றும் மருந்து, மேல்பூச்சு மருந்துகள் ஆகியவற்றைப் பயன் படுத்த வேண்டும். 3

## 2. வாதத்தால் தோன்றிய அக்கி நோய்க்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய அக்கி நோயில் கோரைக்கிழங்கு, சோம்பு, தேவதாரு, கோஷ்டம், நிலப்பனங்கிழங்கு, கொத்துமல்லி விதை, முருங்கை மற்றும் பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள், திப்பிலி முதலான கூட்டுப் பொருள் ஆகியவற்றின் மருந்தை நோய்ப்பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். மேல்பூச்சு, கஷாயம் முதலிய முறைகளையும் பயன்படுத்த வேண்டும். அவ் வாறே [1]கண்டகபஞ்சமூலம், லகுபஞ்ச மூலம், பெரும் பஞ்சமூலம் [2]வல்லீபஞ்ச மூலம் முதலிய பொருள்களால் மேல் பூச்சு மருந்து, நோய்ப்பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருக்கும் மருந்து, எண்ணெய் மருந்து ஆகியவற்றைச் செய்து முறைப்படி பயன்படுத்த வேண்டும். 4-5

* விஸர்பம் - அக்கி, நாடீ - நரம்பு, ஸ்தனம் - பெண் மார்பகம், அக்கிநோய், நரம்பு நோய், பெண் மார்பக நோய் ஆகியவற்றிற்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் விஸர்ப்பநாடீஸ்தனரோக சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

1. கண்டகபஞ்சமூலம் - கண்டங்கத்தரி, தண்ணீர்விட்டான் கிழங்கு, நெரிஞ்சில், ஜடாமாம்ஸி, கரமந்தம் என்பன. (பஞ்ச - ஐந்து, மூலம் - வேர்)

2. வல்லீபஞ்ச மூலம் - ஆடு தீண்டாப்பாளை, மஞ்சள், வெண் குப்பாளைக் கிழங்கு, நன்னாரி, சீந்தில்கொடி என்பன ஐந்து.

### 3. பித்தத்தால் தோன்றிய அக்கிக்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய அக்கியில் விரணத்தின் மேல் துணியை வைத்து தாமரை, பெருங்கோரைக்கிழங்கு, பாசி, ஆம்பற்கிழங்குடன் கூடிய சேறு முதலியவற்றுடன் நெய் கலந்து குளுமைத் தன்மையைத் தோற்றுவிக்கும் பூச்சு பூச வேண்டும். அக்கியின் மேல் (எரிச்சல்) துன்பத்தைத் தணிப்பதற்காக நன்னாரி, லாமஜ்ஜகம் எனும் புல், சந்தனம், ஸௌவீராஞ்சனம், முத்து, கைரிகம் ஆகியவற்றைப் பாலுடன் அரைத்து, நெய் கலந்து மெல்லிய பூச்சு பூச வேண்டும். 6-7

பிரபௌண்டரீகம், அதிமதுரம், பால்முதுக்கன்கிழங்கு, மஞ்சிட்டி, பதுமகம், சந்தனம், ஆம்பல், நன்னாரி முதலியவற்றை மேல் பூச்சு மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். பித்தத்தால் தோன்றும் வித்ரதிக்கு உரிய முறைகளையும், ஆலம் முதலான கூட்டுப்பொருள்களின் கஷாயம் அல்லது இவற்றின் சுரசத்தா லான நெய் மருந்து, குளுமையைத் தோற்றுவிக்கும் தேன் கலந்த நீர், கருப்பஞ்சாறு முதலியவற்றை மேல் ஊற்றிக் கொண் டிருக்கவும் பயன்படுத்த வேண்டும். 8-9

### 4. பித்தத்தால் தோன்றிய அக்கிக்கு கௌர்யாதி கிருதம்

மஞ்சள், அதிமதுரம், செந்தாமரை, பாச்சோத்தி, நன்னாரி, ராஜாதணம், கைரிகம், ரிஷபகம், பதுமகம், காகோலி, மேதா, வெள்ளைத்தாமரை, நீலாம்பல், சந்தனம், மதுசர்க்கரை, திராட்சை, மூவிலை, ஓரிலை, சோம்பு ஆகியவற்றின் விழுதுடன் ஆலம் முதலான கூட்டுப்பொருள், விதாரிகந்தாதி கூட்டுப்பொருள், பெரும்பஞ்ச மூலத்தின் நான்கு மடங்கு கஷாயம், நான்கு மடங்கு பால் ஆகியவற்றுடன் ஒரு பிரஸ்தம் நெய் கலந்து நெய் மருந்து செய்க. இந்த நெய் மருந்தை நோய்ப்பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருந்தால் அக்கி, நாடீவிரணம் ஆகியவை நீங்கும். இம்மருந்தை உட்கொண்டால் விஸ்போடம், கெட்ட (நாள்பட்ட) விரணம், தலை நோய்கள், வாய்பூத்தல் முதலியன நீங்கும். இது கௌர்யாதிகிருதம் எனப்படும். கிரகங்களால் தோன்றிய சோர்வினால் துன்புறும் சிறுவர்களுக்கு நன்மை தரும். 10-13

### 5. கபத்தால் தோன்றும் அக்கிக்குச் சிகிச்சை

காட்டுத்துளசி, அமுக்கராங்கிழங்கு, சரளமரம், மஞ்சிட்டி, சதாவரி, ஆடுதீண்டாப்பாளை ஆகியவற்றைப் பசுவின் சிறு நீருடன் அரைத்து கபத்தால் தோன்றும் அக்கிக்குப் பூச வேண் டும். இதனால் நோய் விரைவில் ஆறும். அகில், இலவங்கப்

பட்டை குன்றிமணி, சித்தரத்தை, வசம்பு, *சீதசிவம், துமட்டிக் காய், கருஞ்சிவதை, முஞ்சைப்புல், மஹீகதம்பம் ஆகியவற்றைப் பயன்படுத்தினால் கபத்தினால் தோன்றிய அக்கி தணியும். 14-15

### 6. அக்கியில் வருணாதிகணத்தின் பயன்

அறிவாற்றல் கொண்ட மருத்துவர் வருணாதிகணக் கூட்டுப் பொருள்களை அக்கி நோயில் பருகவும், உடலின் மேல் தேய்த்துக் குளிக்கவும், உணவோடு உட்கொள்ளவும் பயன்படுத்த வேண்டும். அக்கி நோயில் உடலைத் தூய்மைப்படுத்துதல், இரத்தத்தை வெளியேற்றல் சிறந்த சிகிச்சைகளாகும். பக்குவம் பெற்ற அக்கி நோய் வகைகள் அனைத்திலும் உடலைத் தூய்மைப்படுத்தி முன்கூறிய விரணத்தை ஆற்றும் முறைகளின் படி சிகிச்சை செய்ய வேண்டும். 16

### 7. நாடீவிரண சிகிச்சை, வாதத்தால் தோன்றிய நாடீ விரணத்திற்குச் சிகிச்சை

மூன்று தோஷங்களும் சேர்ந்து சீற்றமடைவதால் தோன்றும் நாடீ விரணம் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும். மற்றும் வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது, சல்லியங்களால் தோன்றியது என இந்த நான்கு வகை நாடீ விரணங்களும் முயன்று சிகிச்சை செய்வதால் தீர்க்கக் கூடியவை. வாதத்தால் தோன்றிய நாடீவிரணத்தில் (சீழை ஓரிடத்தில் சேர்ப்பதற்காக) முதலில் மேல் பூச்சு மருந்தைப் பயன்படுத்திச் சீழ் எது வரை பரவியுள்ளதோ, அப்பகுதிவரை கீறி விட வேண்டும். பிறகு எள், நாயுருவிவிதை, இந்துப்பு ஆகிய இம்மூன்றையும் அரைத்து விரணத்தின் மேல் வைத்துக் கட்டி விட வேண்டும். 17-18

நாடி விரணத்தைக் கழுவப் பெரும்பஞ்ச மூல கஷாயத்தை எப்பொழுதும் பயன்படுத்த வேண்டும். ஹிம்ஸ்ரா, மஞ்சள், கடுக ரோகிணி, சிற்றாமுட்டி, வில்வவேர், மயில்கொண்டை ஆகிய வற்றை விழுதாகச் செய்து எண்ணெய் கலந்து பக்குவம் செய்க. இந்த எண்ணெயால் விரணத்தைத் தூய்மைப்படுத்தி, விரணப் பகுதியில் இதை நிரப்புவதால் விரணம் விரைவில் ஆறும். 19

### 8. பித்தத்தால் தோன்றிய நாடீ விரணத்திற்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய நாடீ விரணத்தில் திறமையுள்ள மருத்துவர் முதலில் பால், நெய் கலந்து கொழுக்கட்டை போன்ற

---

* சீதசிவம் - சதகுப்பையின் வகை.

மருந்தை வைத்துக் கட்டிய பிறகு விரணப்பகுதியைக் கீறி எள், நாகதந்தி, அதிமதுரம் ஆகியவற்றின் விழுதை விரணத்தின் மேல் வைத்துக் கட்ட வேண்டும். விரணத்தைக் கழுவ நாள்தோறும் ஸோமலதை, வேம்பு, மஞ்சள் ஆகியவற்றின் கஷாயத்தைப் பயன் படுத்த வேண்டும். 20-21

### 9. குடலைச் சார்ந்த நாடீ விரணத்திற்குச் சிகிச்சை

சியாமா, (சமுத்ரப்பச்சை) சிவதை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், மஞ்சள், மரமஞ்சள், பாச்சோத்தி, குடசப்பாலை ஆகியவற்றின் விழுதுடன் பால் கலந்து செய்த மருந்தைக் கொண்டு தர்ப்பண முறையால் குடலைச் சேர்ந்த நாடீ விரணத்தைப் போக்க வேண்டும். 22

### 10. கபத்தால் தோன்றிய நாடீ விரணத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய நாடீ விரணத்தில் கொள்ளு, கடுகு, பொரிமா, சுராபீஜம் ஆகியவற்றைப் பொட்டலமாகக் கட்டி விரணத்தின் மேல் வைத்துக் கட்ட வேண்டும். விரணம் மென்மையடைந்த பிறகு ஏஷணி எனும் கருவியைக் கொண்டு விரணம் பரவியுள்ள வழியைக் கண்டு கருவியால் கீறிவிட வேண்டும். பிறகு வேம்பு, எள், ஸௌராஷ்டிரமண், இந்துப்பு ஆகியவற்றை அரைத்து வைத்துக் கட்டுக. விரணத்தைக் கழுவ புங்கன், வேம்பு, மல்லி, தான்றி, பெருங்கோலி ஆகியவற்றின் சுரசத்தைப் பயன்படுத்த வேண்டும். சூரியகாந்தி, இந்துப்பு, கொடிவேலி, நேர்வாளம், கீழாநெல்லிவேர், வெள்ளை எருக்கு, நாயுருவிவிதை ஆகியவற்றின் விழுதுடன் பசுவின் சிறுநீர் சேர்த்து எண்ணெய் மருந்து செய்து நாடீ விரணப்பகுதியில் நிரப்பி ஆற்ற வேண்டும். 23-25

### 11. புறக்காரணங்களால் தோன்றிய நாடீ விரணத்திற்குச் சிகிச்சை

காயம் படுதல் முதலியவற்றால் தோன்றிய நாடீ விரணத்தில் அப்பகுதியைக் கீறி சல்யத்தை வெளியேற்ற வேண்டும். விரணப்பகுதியில் தேன், நெய் கலந்த எள்ளின் விழுதால் விரணத்தைத் தூய்மைப்படுத்தி ஆற்ற வேண்டும். 26

ஆகாயத்தாமரை, பேரீச்சை, விளாம், வில்வம், ஆலம், அரசு முதலியவற்றின் இளம் பிஞ்சுகளின் கஷாயத்துடன் கோரைக் கிழங்கு, சிவதை, ஞாழல், சுகந்திப்பாலை, இலவம்பிசின், சிறுநாகப் பூ, பாச்சோத்தி, காட்டாத்திமலர் ஆகியவற்றின் விழுது சேர்த்து எண்ணெய் மருந்து செய்க. இதைப் பயன்படுத்துவதால் புறக் காரணங்களால் தோன்றிய நாடீவிரணம் விரைவில் ஆறும். 27-28

### 12. அறுவைச்சிகிச்சையைப் பயன்படுத்த தகாத நிலை

உடல் இளைத்த, வலிமை குறைந்த மிக்க அச்சம் கொண்டுள்ள நோயாளிகளுக்கும், உயிர் நிலைப் பகுதிகளைச் சார்ந்துள்ள நரம்பு விரணத்திற்கும் அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் அறுவைச் சிகிச்சையைப் பயன்டுத்திக் கீறக் கூடாது. க்ஷார மருந்து தடவிய நூலைக் கொண்டு கீறி விட வேண்டும். 29

### 13. க்ஷார நூல் கொண்டு சிகிச்சை செய்யும் முறை

ஏஷணியைக் கொண்டு விரணம் புரையோடிய அளவை அறிந்து, க்ஷார மருந்து தடவிய நூலைச் சுற்றிய ஊசியைப் புரையோடிய உட்பகுதி முனை வரை செலுத்தி பிறகு ஊசியை மேல் நோக்கிச் செலுத்தி விரணத்தைப் பிளந்து, ஊசியை வெளியே எடுத்து பிறகு க்ஷார நூலின் இரு முனைகளையும் சேர்த்துக் கட்டிவிட வேண்டும். பிறகு க்ஷார மருந்தின் வலிமை அறிந்து வேறு ஒரு க்ஷார மருந்து தடவிய நூலைப் புகுத்த வேண்டும். அறிவாற்றல் மிகுந்த மருததுவர் பகந்தர நோயிலும் இம்முறையைப் பயன்படுத்த வேண்டும். அர்புதம் முதலியவற்றை மேல் நோக்கி எழும்பச் செய்து அதன் வேர்ப்பகுதியில் க்ஷார நூலைக் கட்ட வேண்டும். அல்லது யவதானியம் போன்ற முனை உள்ள ஊசியால் அர்புதத்தின் நான்கு பகுதியிலும் வெட்டி, அதன் அடிப்பகுதியில் க்ஷார நூலைக் கட்ட வேண்டும். கட்டி வேறான பிறகு விரணத்திற்குரிய சிகிச்சையைப் பின்பற்ற வேண்டும். 30-33

### 14. நாடிகளில் பயன்படுத்தும் வத்தி முறை

த்விவிரணீய அத்தியாயத்தில் கூறப்பட்ட வத்தி முறைகளை நாடீவிரணத்திலும் பயன்படுத்த வேண்டும். இலந்தைப் பழத்தோல், இந்துப்பு முதலான ஐந்து வகை உப்புகள், கொம்பரக்கு, பாக்கு, கோவைஇலை ஆகியவற்றைக் கள்ளிப்பாலும் எருக்கம்பாலும் விட்டு அரைத்து விழுதாகச் செய்க. இந்த விழுதைக் கொண்டு செய்த வத்தி நாடீவிரணத்தை விரைவில் ஆற்றும். தான்றிக்கொட்டை, மாங்கொட்டை, ஆலமரத்து இளந்தளிர், அரேணுக விதை, சங்கினி விதை நிலப்பனங்கிழங்கு ஆகியவற்றை எண்ணெயுடன் கலந்து, நாடீ விரணத்தில் பயன்படுத்த வேண்டும். ஊமத்தை விதை, மரக்கலம், வரகுஅரிசி, தேவதாளி, சுகநாச, பேய்துமட்டி ஆகியவற்றின் விதைகள் அலங்கி விதை ஆகியவற்றின் தூளை நாடீவிரணத்தின் மீது தூவ வேண்டும். 34-36

### 15. குடலைச் சார்ந்த நாடீ விரணத்திற்குச் சிகிச்சை

குடலைச் சார்ந்த நாடீ விரணத்தைப் போக்க பசுவின் புலாலை எரித்த சாம்பல் மிகவும் பயனுள்ளதெனக் கூறப் பட்டுள்ளது. அல்லது இந்துப்புடன் தேனைச் சேர்த்துச் செய்யப் பட்ட வத்தி நாடீ விரணத்திற்கு நல்லதாகும். கெட்ட விரணங்களைப் போக்குவதற்காக கூறப்பட்ட தைலத்தை எல்லா வகையான நாடீ விரணங்களிலும் பயன்படுத்தலாம். இந்த பொருள்களைத் தூளாக்கி எண்ணெயுடன் கலந்து பயன்படுத் தினால் நாடீவிரணம் விரைவில் ஆறும். 37-39

இந்தப் பொருள்களின் விழுதும், பசுவின் சிறுநீரும் கலந்து செய்யப்பட்ட எண்ணெய் நாடீ விரணத்தை ஏழு நாட்களில் குணப்படுத்தும். நிலப்பனங்கிழங்கு, ஸர்ப்பகந்தி, வஜ்ரமெனப் பெயர் கொண்ட கிழங்கு ஆகியவற்றுடன் செய்த எண்ணெய் நாடீ விரணத்தை விரைவில் குணப்படுத்தும். 40

சேராங்கொட்டை, எருக்கன், மிளகு, இந்துப்பு, வாயு விடங்கம், மஞ்சள், மரமஞ்சள், கொடிவேலி ஆகியவற்றின் விழுதுடன் கரிசலாங்கண்ணிச்சாறு கலந்து செய்யப்பட்ட எண்ணெய் கப வாதங்களால் தோன்றிய நாடீ விரணம், அபசி விரணம் ஆகியவற்றைத் தணிக்கும். 41

### 16. ஸ்தன்ய தோஷத்திற்குச் சிகிச்சை

தோஷங்களால் தாய்ப்பால் கேடுற்ற போது செவிலித்தாயை நெய் பருகச் செய்து தேன், திப்பிலி கலந்த வேப்பிலைக் கஷாயத்தைக் கொண்டு மாலை வேளையில் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். வாந்தி எடுத்த பிறகு அடுத்த நாள் பயற்றங் கஞ்சியை உணவாகக் கொள்ளச் செய்க. இவ்வாறு 3,4 அல்லது 6 நாட்கள் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அல்லது திரிபலை கலந்த நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். 42-43

பாரங்கி, வசம்பு, அதிவிடயம், தேவதாரு, வட்டத்திருப்பி, கோரைக் கிழங்கு முதலான கூட்டுப் பொருள்கள், பெருங் குரும்பை, கடுகரோகிணி, ஆரக்வதாதி கூட்டுப் பொருள்களின் கஷாயத்தில் தேன் கலந்து, தாய்ப்பால் தூய்மை பெறுவதற்காக செவிலித்தாயைப் பருகச் செய்ய வேண்டும். 44

தாய்ப்பால் கெடுவதற்கு இது சாதாரண சிகிச்சையாகும். தாய்ப்பால் கெடுவதற்கக் காரணமான தோஷத்தின் சீற்றத்திற்கு ஏற்பச் சிறப்பான சிகிச்சையைக் கையாள வேண்டும். ஸ்தனத் 'ல் கட்டி தோன்றினால் நன்கு பரிசோதனை செய்து

வித்ரதிக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளில் மிகவும் பொருத்த மானதைக் கையாள வேண்டும். 45

ஸ்தனவித்ரதி பழுத்துக் கொண்டிருந்தாலும் ஒற்றடம் கொடுத்தல் முதலியவற்றால் பழுக்கச் செய்யக்கூடாது. நிறை வாக உண்ணச் செய்வதால் அதைப் பழுக்கச் செய்ய வேண்டும். ஏனெனில் மென்மையான மாமிசத்தாலான ஸ்தனம் (ஒற்றட முறையால் பழுக்கச் செய்தால்) முழுவதும் சிதைந்து விடும். அதனால் வெடித்து விடும். 46

ஸ்தனவித்ரதி பழுத்த பிறகு பாலைப் பெருகச் செய்யும் நரம்புகள், கருத்த முலைக்காம்புகள் ஆகியவற்றை பாதுகாத்து அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். பக்குவம் பெறாத, பாதி பழுத்த ஸ்தனங்களைக் கொண்ட போது அந்தத் ஸ்தனத்திலிருந்து தாய்பாலை அடிக்கடி வெளியேற்றிக் கொண்டிருக்க வேண்டும்.47

ஸுஶ்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

விஸர்பநாடீஸ்தனரோக சிகித்ஸிதம்

எனும் பதினேழாம் அத்தியாயம் முற்றும்.

# பதினெட்டாம் அத்தியாயம்

# *கிரந்தி, அபசி, அர்புத, கலகண்ட சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலியவர்களுக்கு உபதேசித்தபடி கிரந்தி, அபசி அர்புதம், கலகண்டம் எனும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

## 1. ஆம (பக்குவம் பெறாத) கிரந்தி சிகிச்சை

அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் பக்குவம் பெறாத வித்ரதியில் அபதர்ப்பண முதலாக விரேசன முறை வரை உள்ள பதினோறு வகை உடற்தூய்மைப்படுத்தும் முறைகளை அதிக அளவில் பயன்படுத்தி நோயாளியின் உடல் வலிமையைக் காத்து வர வேண்டும். ஏனெனில் நன்றாகப் பாதுகாக்கப்பட்ட உடல் வலிமை, நோயின் வலிமையைத் தணிக்கும். 3

## 2. ** ஆமகிரந்திக்கு எண்ணெய் முறை

மருத்துவர் எண்ணெய், நெய் இரண்டையும் கலந்து, அவ்விரண்டுடன் வசையும் சேர்த்து, பிரஸாரிணியும் தசமூலங் களுடன செய்யப்பட்ட நான்கு வகை (எண்ணெய், நெய், வசை, மஜ்ஜை எனும்) எண்ணெய் மருந்துகள், அவற்றில் இரண்டி ரண்டைத் கலந்து பயன்படுத்தும் முறைகளில் ஏதேனும் ஒன்றைக் கிரந்தியில் துன்புறும் நோயாளிக்குப் பருகத் தர வேண்டும். 4

## 3. வாதத்தால் தோன்றும் கிரந்திக்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றும் கிரந்திக் கட்டிக்கு ஹிம்ஸ்ரா, கடுகரோகிணி, சீந்தில்கொடி, பாரங்கி, முன்னை, வில்வம், அகில், முருங்கை, கோஜிஹ்வா ஆகியவற்றை அரைத்து மேல்பூச்சாகப் பூச வேண்டும். பல வகை எண்ணெய் மருந்துகள், ஒற்றடம் கொடுக்கும் முறைகள் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். அல்லது பக்குவம் பெற்ற கிரந்தியைக் கீறிச் சீழைவெளியேற்றி வில்வம், எருக்கன், கொன்றை முதலியவற்றின் கஷாயத்தால் விரணத்தைக் கழுவி எள், ஆமணக்கு இலை,

* கிரந்தி - கழுத்து, அக்குள் முதலான இடங்களில் சிறிய உருண்டை வடிவத்தில் உள்ள உறுப்புகள் வீங்கி உண்டாகும் கட்டி, அபசி - கொழுப்பால் தோன்றும் சீழ் கட்டி. அர்புதம் - புரைகுழல், கலகண்டம் - கழுத்து முதலான இடங்களில் தோன்றும் கட்டி. இந்நான்கு நோய்களுக்கும் உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் கிரந்தி அபசி அர்புத கலகண்ட சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

** ஆமகிரந்தி - பக்குவம் பெறாத கட்டி.

இந்துப்பு ஆகிய இம்மூன்றையும் விழுதாக அரைத்து விழுது அல்லது வாயவிடங்கம், அதிமதுரம், சீந்தில்கொடி ஆகியவற்றின் விழுதுடன் பால் கலந்து • தயார் செய்யப்பட்ட எண்ணெய் மருந்தால் ஆற்ற வேண்டும். 5-7

### 4. பித்தத்தால் தோன்றும் கிரந்திக்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றும் கிரந்தியில் அட்டைப்பூச்சியைப் பயன்படுத்திக் கெட்ட இரத்தத்தை வெளியேற்றுதல், பால், நீர் ஆகியவற்றை அப்பகுதியில் ஊற்றிக் கொண்டிருத்தல் என்பன நன்மை தரும். காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் சீத கஷாயத்தில் சர்க்கரையைச் சேர்த்து அல்லது கடுக்காய்த்தூளைத் திராட்சைச் சாறு, கருப்பஞ்சாறு ஆகியவற்றுடன் உண்ணச் செய்க. அதிமதுரம், நாவல், மருதம், வில்வம் ஆகிய மரங்களின் பட்டையைத் தூளாக்கி, அதை விரணத்தின் மீது பூச வேண்டும். அல்லது தாழை வேர், முசுகுந்தம் என்பனவற்றில் சர்க்கரையைக் கலந்து அடிக்கடி மேல் பூச்சாகப் பயன்படுத்த வேண்டும். 8-10

பக்குவம் பெற்ற கிரந்தியைக் கீறி சீழை வெளிப்படுத்தி ஆலம், அரசு முதலான மரங்களின் கஷாயத்தால் கழுவ வேண்டும். எள் விழுது, அதிமதுரத்தூள் ஆகியவற்றால் சோதனை செய்து இனிப்புச்சுவை கொண்ட காகோலி முதலான கூட்டுப் பொருள்களாலான நெய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 11

### 5. கபத்தினால் தோன்றிய கிரந்திக்குச் சிகிச்சை

எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், இரத்தத்தை வெளியேற்றுதல் முதலிய முறைகளைக் கையாண்டு கபத்தினால் தோன்றிய கிரந்தியின் தோஷத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு உடல் வியர்த்த நோயாளியின் கிரந்தியை விரல் நுனி, இரும்புத்துண்டு, கல், மூங்கில் கழி ஆகியவற்றால் அழுத்தித் தேய்த்து, வீக்கத்தைப் போக்க வேண்டும். கண்டங்கத்தரி, கொன்றை, சிவப்புகுன்றிமணி, கோவை, இங்குணம், கசப்புச்சுரை, எருக்கன், பாரங்கி, புங்கன், தகரை, மருக்காரைவேர் முதலியவற்றை அரைத்துப் பூச வேண்டும். 12-13

கிரந்தி உயிர் நிலையில் தோன்றாத போது, தக்க சிகிச்சை முறைகளால் தணியாத போது மருத்துவர் அதன் பக்குவம் பெறாத நிலையில் அதைக் கீறி தோஷத்தை வெளியேற்றி இரத்தம் நின்றதும் நெருப்பால் சுட வேண்டும். அப்பொழுதே ஏற்பட்ட காயத்திற்குக் கூறப்பட்ட முறையை (தேன் நெய் முதலியவற்றைப் பயன்படுத்தும் முறை) பயன்படுத்த வேண்டும். 14

மாமிசக்கட்டி பெரிதாகிக் கடினமாக இருந்தால் அதில்தான் முன்கூறிய சிகிச்சை முறையைத் தேர்ச்சி பெற்ற மருத்துவர் பயன்படுத்த வேண்டும். பக்குவம் பெற்ற கட்டியானால் விரைவாகக் கருவியால் கீறிக் கபத்தால் தோன்றிய விரணத்தைப் போக்கக் கூடிய கஷாயங்களால் கழுவி விட வேண்டும். மற்றும் சம்சோதன மருந்துகளில் யவக்ஷாரம், தேன், வெல்லம் ஆகிய வற்றைக் கலந்து விரணத்தைச் சோதனை செய்ய வேண்டும். தூய விரணத்தில் வாயவிடங்கம், வட்டத்திருப்பி, மஞ்சள் ஆகிய வற்றின் விழுதை கொண்டு தயார் செய்த எண்ணெயைப் பயன் படுத்த வேண்டும். 15-16

### 6. கொழுப்பால் தோன்றிய கட்டிக்குச் சிகிச்சை

கொழுப்பால் தோன்றிய கட்டியில் எள்ளின் விழுதைப் பூசி, அதன் மேல் இரண்டு மடிப்புள்ள துணியால் கட்டு போட்டு நெருப்பில் காய்ச்சிய இரும்புக் கம்பியைக் கொண்டு எரிந்து விடாமல் மெல்ல தேய்க்க வேண்டும். 17

அல்லது மரக்கட்டையில் கொம்பரக்கைப் பூசி சூடாக்கி அதைக் கொண்டு கட்டியை வியர்க்கச் செய்ய வேண்டும். அல்லது கட்டியை கருவியால் கீறிக் கொழுப்பை நீக்கிய பிறகு விரணத்தை நெருப்பால் சுட வேண்டும். அல்லது நன்கு பழுத்த கட்டியைக் கீறி பசுவின் சிறுநீரால் கழுவிய பிறகு எள், ஸர்ஜ க்ஷாரம், அரிதாரம், இந்துப்பு ஆகியவற்றின் தூளில் அதிக அள வில் தேன், நெய், யவக்ஷாரம் ஆகியவற்றைக் கலந்து அதனால் விரணத்தைத் தூய்மைப்படுத்த வேண்டும். புங்கன், மணிபுங்கன், குன்றிமணி, மூங்கிற்பட்டை, மஞ்சள், ஆகியவற்றை பசுவின் சிறுநீர் கலந்து எண்ணெய் பக்குவம் செய்து பயன்படுத்துக. 18-19

தேவதாளி, கசப்புப்பீர்க்கங்காய், நேர்வாளம், திரவந்தி, சிவதைவேர் ஆகியவற்றின் விழுதைக் கொண்டு தயார் செய்த நெய்மருந்து பெரிய அபசியைப் போக்கும். இந்த நெய் மிக்க வலிமை கொண்டது. மற்றும் அது வாந்தியாதல், பேதியாதல் எனும் இருவழிகளாலும் தோஷத்தை வெளியேற்றக்கூடியது. நாள்பட்ட அபசியில் அதிக அளவில் வாந்தி எடுக்கச் செய்ய நொச்சி, மல்லி, நன்னாரி ஆகியவற்றாலான இளஞ்சூடுள்ள கஷாயத்தில் தேவதாளி விழுது, தேன், இந்துப்பு ஆகியவற்றைக் கலந்து பயன்படுத்த வேண்டும். மலை வேம்பு அல்லது நொச்சி, கோவை, அரளிவேர் ஆகியவற்றினால் செய்த எண்ணெயைக் கொண்டு வாந்தி எடுக்கச் செய்தல், சிரோவிரேசன முறையைச் செய்வித்தல், சிருங்காடகத்தின் சுரசத்தைக் கொண்டு செய்த எண்ணெயை மூக்கிலிடு மருந்தாகவும், பேதியாகச் செய்யவும் பயன்படுத்துதல் நலம் தரும். அல்லது அதிமதுரத்தின் வைரம் பாய்ந்த பகுதியின் சாறு, முருங்கை, நாயுருவி, விதை ஆகியவை அவபீடன நசிய முறைக்குப் பயன்படுத்தத்தக்கவை. 20-23

உயிர்நிலையில் தோன்றாத கிரந்தியில் க்ஷாரம், நெருப்பால் சுடுதல், அறுவைச் சிகிச்சை ஆகியவற்றைப் பயன்படுத்துக. உயிர்நிலையில்லாத பக்குவம் பெறாத கட்டியில் கருவியால் கீறி தோஷத்தை வெளியேற்றிய பிறகு நெருப்பால் சுட வேண்டும். அல்லது முறைப்படி கருவியால் விரணப்பகுதியைச் சுரண்டி க்ஷார மருந்தைத் தேய்க்க வேண்டும். 24

### 7. அபசியில் நெருப்பால் சுடும் முறை

அறிவாற்றல் மிக்க மருத்துவர், முழங்கால் இணைப்புக்குப் பின் பகுதியில் கால்மணிக்கட்டுக்கு பன்னிரண்டு அங்குல தூரத்தை அளந்து இந்திரவஸ்தி எனும் மர்மத்தைக் காத்துக் கீறி, மீன் முட்டைகளைப் போல கொழுப்பை வெளிப்படுத்தி நெருப் பால் சுட வேண்டும். அதாவது ஏழு உலோகங்களைக் கலந்து செய்த கம்பியால் விரணப்பகுதியைச் சுட்டுவிட வேண்டும். அதனால் வலைபோல மீண்டும் கொழுப்பு படராது. 25

கால் மணிக்கட்டிலிருந்து முழங்காலை நோக்கி இருபது அங்குலம் அளக்க வேண்டும். அப்படி முழங்காலிலிருந்து அளக் கும்போது இரண்டரைஅங்குலம் விட்டு (இந்திரவஸ்தி எனும் உயிர்நிலைப்பகுதியை விட்டு) கண்டரையில் மூக்கின் அளவிற்கு நேராக கீற வேண்டும். ஆசிரியர்கள் சிலர் இரண்டு அங்குலம் விட்டுக் கீற வேண்டும் என உரைத்துள்ளனர். அல்லது அபசி நன்கு நீங்குவதற்காக மருத்துவர் மணிக்கட்டுப் பகுதிக்கு ஓரங்குலம் இடைவிட்டு மூன்று கோடுகள் போடவேண்டும். 26-27

விரணம் ஆறும்போது மயில், காகம், உடும்பு, பாம்பு, ஆமை ஆகியவற்றில் ஒன்றை எரித்த சாம்பல், சாரை விதை, எண்ணெய் ஆகியவற்றைக் கலந்து பூச வேண்டும். அவ்வாறே யானைக்கால் நோய்க்கு இனி கூறப்போகும் எண்ணெய் முறையைப் பயன்படுத்துக. நோயாளிக்கு பேதியாகச் செய்தல், புகைபோடுதல், மற்றும் பயறு யவதானியத்துடன் உணவு உட்கொள்ளச் செய்தல் எனுமிவற்றைப் பின்பற்ற வேண்டும். 28

### 8. வாதத்தால் தோன்றிய அர்புதத்திற்குச் சிகிச்சை

பூசணி, கக்கரி, தேங்காய், சாரைப்பருப்பு, ஆமணக்குவிதை ஆகியவற்றின் தூள், பால், நெய், நீர் கலந்து காய்ச்சிய இளஞ் சூடுள்ள எண்ணெயால் வாதத்தால் தோன்றிய அர்புதத்தில் ஒற் றடம் கொடுக்க வேண்டும். மற்றும் மாமிசம், வேஸவாரம் ஆகிய வற்றால் ஒற்றடம் கொடுக்கும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 29-30

திறமை மிக்க மருத்துவர் நாடீஸ்வேதம் செய்வித்த கொம்பி னால் பல முறை இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். அல்லது தேவதாரு முதலிய கூட்டுப் பொருள்களாலான கஷாயம், பால்,

கஞ்சி முதலியவற்றாலான சதபாகதிரிவிருதஸ்நேகம் என்பதைப் பருகச் செய்க. 31

### 9. பித்தத்தால் தோன்றிய அர்புதத்திற்குச் சிகிச்சை

மென்மையான பித்தத்தால் தோன்றிய அர்புதத்திற்கு உடல் வியர்க்கச் செய்தல், ஒற்றடம் கொடுத்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகள் நன்மை தரும். அத்தி, மாவிலங்கை பிரைஇலை முதலியவற்றால் அர்புதக்கட்டியைத் தேய்த்து ஸர்ஜக்ஷாரம், ஞாழல், பதங்கம், பாச்சோத்தி, அஞ்சனம், அதிமதுரம் ஆகிய வற்றின் தூளில் தேன் கலந்து பலமுறை பூச வேண்டும். திறமை மிக்க மருத்துவர் அர்புதக் கட்டியிலிருந்து கெட்ட இரத்தத்தை வெளியேற்றி கொன்றை, மயில்கொண்டை, ஸோமலதை, சிவதை ஆகியவற்றைப் பூச வேண்டும். சிவதை, ச்வேதனியந்தம், நீலாம் பல், திராட்சை, யவதித்தம் முதலியவற்றின் சாற்றை அதிமதுர விழுதுடன் சேர்த்துச் செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. 32-34

### 10. கபத்தால் தோன்றிய அர்புதத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய அர்புதக் கட்டிக்கு வாந்தி எடுக்கச் செய்வதால் தூய்மை பெற்ற நோயாளியின் கட்டியிலிருந்து சுரைக்குடுக்கை வழியாக இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் தோஷத்தை வெளியேற்றும் பொருள்களால் (அபசிக்காகத் கூறப்பட்ட) பொருள்களாலான விழுது செய்து பூச வேண்டும். புறா எச்சம், வெண்கலக்களிம்பு, சுக்ரம் (கிரந்திபர்ணி வகை), கலப்பைகிழங்கு, கோவை வேர் ஆகியவற்றைப் பசுவின் சிறுநீருடன் அரைத்துப் பூச வேண்டும். அல்லது க்ஷாரத்தைப் பசுவின் சிறுநீரில் கலந்து பூச வேண்டும். 35-36

சேம்பு, பிண்ணாக்கு, கொள்ளு ஆகியவற்றின் விழுதுடன் அதிக அளவில் மாமிசம், தயிர்த்தெளிவு ஆகியவற்றைக் கலந்து அர்புதத்தின் மேல் பூச வேண்டும். இதனால் ஈக்கள் அப்பகுதி யில் மொய்த்துக் கிருமிகளைத் தோற்றுவிக்கும். கிருமிகள் தின்று சிறிதே அர்புதம் மிகுந்திருக்கும் போது அப்பகுதியைச் சுரண்டி நெருப்பால் சுடவேண்டும். சிறிதளவு மிகுந்திருக்கும் அர்புதத்திற்கு ஈயம், தாமிரம், இரும்பு ஆகியவற்றின் மெல்லிய தகடு கொண்டு அப்பகுதியை மூடிக் கட்டு போட்டு நோயாளி யின் உயிரைக் காப்பாற்றிக் கொண்டே எச்சரிக்கையுள்ள மருத்துவர் க்ஷாரம், நெருப்பால் சுடுதல், அறுவைச் சிகிச்சை முதலியவற்றைப் பல முறை பயன்படுத்த வேண்டும். காக்கணங் கொட்டை, மல்லி, அரளி இலை ஆகியவற்றின் கஷாயத்தைக் கொண்டு விரணத்தைக் கழுவ வேண்டும். தூய்மை பெற்ற விரணத்தில் பாரங்கி, வாயுவிடங்கம், வட்டத்திருப்பி, திரிபலை ஆகியவற்றின் விழுதாலான எண்ணெயைப் பயன்படுத்த

வேண்டும். தானாகப் பழுத்த அர்புதக் கட்டிக்குத் திறமை மிக்க மருத்துவர் பக்குவம் பெற்ற விரணத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 37-40

## 11. கொழுப்பு மிகுவதால் தோன்றும் அர்புதத்திற்குச் சிகிச்சை

முதலில் உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பின்பற்றிப் பிறகு கட்டியைக் கீறி தூய்மைப்படுத்த வேண்டும். இரத்தப் பெருக்கு நின்றவுடன் விரைவாகத் தையல் போட வேண்டும். பிறகு மஞ்சள், ஒற்றடை, பாச்சோத்தி, பதங்கம், மனோசிலை, அரிதாரம் ஆகியவற்றின் தூளில் தேவையான அளவு தேன் கலந்து விரணத்தின் மேல் பூச வேண்டும். விரணம் தூய்மைப் பெற்ற பின் புங்க எண்ணெயைப் (வித்ரதி சிகிச்சையில் கூறிய படி) பயன்படுத்த வேண்டும். தோஷம் மிகுந்திருக்கும் அர்புதத் தில் மீண்டும் கட்டி தோன்றக்கூடும். ஆகையால் வேரோடு அந்நோயைப் போக்க வேண்டும். பொருள் முழுவதையும் நெருப்பு அழித்து விடுவது போல தோஷம் மிகாமல் முழுமை யாகப் போக்கப்பட வேண்டும். 41-42

## 12. வாதத்தால் தோன்றும் கலகண்டத்திற்குச் சிசிச்சை

தேர்ச்சிபெற்ற மருத்துவர் வாதத்தால் தோன்றிய கலகண்டத் திற்கு முதலில் வாதத்தைப் போக்கும் ஆமணக்கு முதலிய பொருள்களின் இலைகளை சூடுள்ள கஞ்சி, புளிக்காடி, எண்வகை சிறுநீர், பால், எண்ணெய், புலால்சாறு முதலிய வற்றால் நாடீஸ்வேத முறையைச் செய்ய வேண்டும். தாமதப்படுத்தாமல் வியர்வையால் தூய்மைபெற்ற கலகண்ட நோயிலிருந்து இரத்தத்தை வெளியேற்றி, விரணத்தைத் தூய்மைப்படுத்தி மருத்து வைத்துக் கட்ட வேண்டும். சணல், அகத்தி, முள்ளங்கி, முருங்கை, சுராபீஜம், ஞாழல், மஞ்சள், எள், தகரை, சீந்தில் கொடி, சாரடை, எருக்கன், யானைத்திப்பிலி, மனோசிலை, கோஷ்டம், வட்டத்திருப்பி குடசப்பாலை, பாச் சோத்தி ஆகியவற்றை சுரை மற்றும் புளிப்புக்காடி விட்டு அரைத்துப் பல முறை விரணத்தின் மேல் பூச வேண்டும். 43-46

சீந்தில் கொடி, வேம்பு, ஹம்ஸலதி, குடசப்பாலை, திப்பிலி, சிற்றாமுட்டி, பேராமுட்டி, தேவதாரு ஆகியவற்றாலான எண்ணெய் மருந்தை நாள் தோறும் கலகண்ட நோய் கொண் டவர் பருகும்படிச் செய்ய வேண்டும். 47

## 13. கபத்தால் தோன்றும் கலகண்டத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய கலகண்ட நோயில் உடல் வியர்க்கச் செய்தல், ஒற்றடம் கொடுத்தல் எனும் முறைகளை செய்து இரத் தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு காட்டுத்துளசி, அதிவிட

யம், கோஷ்டம் விசல்யா (கலப்பைக் கிழங்கு), கலப்பைக் கிழங்கு ஆடுதீண்டாப்பாளை, சர்மகாரவடம், குன்றிமணி ஆகியவற்றை புரசக்ஷார நீருடன் அரைத்து இளஞ்சூடுள்ள போது மேல் பூச்சாகப் பூச வேண்டும். திப்பிலி முதலான கூட்டுப்பொருள்களின் கஷாயம் மற்றும் விழுது சேர்த்துச் செய்த எண்ணெய் மருந்தில் ஐவகை உப்புகளை சேர்த்துப் பருகச் செய்ய வேண்டும். வாந்தி எடுக்கச் செய்தல், சிரோவிரேசன முறை, பேதியாகச் செய்யும் புகைப்போடும் முறை முதலியன செய்யத்தக்கவை. ஏதேனும் ஒரு வகையால் பக்குவம் பெற்ற பிறகு வாதத்தால் தோன்றிய மற்றும் கபத்தால் தோன்றிய கலகண்டங்களில் பக்குவம் பெற்ற விரணத்திற்குக் கூறிய சிகிச்சை முறைகளை மருத்துவர் எப்பொழுதும் பின்பற்ற வேண்டும். 48-50

கலகண்ட நோயில் (கண்டமாலை) சுக்கு, மிளகு, திப்பிலி தூளுடன் தேன் மற்றும் பசுவின் சிறுநீர் கலந்து யவதானியச் சோறு, இஞ்சி, புடலை, வேம்பு ஆகியவற்றுடன் பயற்றன் கஞ்சி செய்து உணவாக உட்கொள்ளச் செய்தல் நலம் தரும். 51-54

## 14. கொழுப்பால் தோன்றிய கலகண்டத்திற்குச் சிகிச்சை

கொழுப்பு மிகுவதால் தோன்றிய கலகண்டத்தில் எண்ணெய் பசை கொண்ட நோயாளிக்கு முன்பு அம்ஸஸந்திக்குக் கூறிய சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றும் முறையைப் பயன்படுத்த வேண்டும். பிறகு சிவதை, கள்ளி, மண்டூரம், நேர்வாளம் ரஸாஞ்சனம் ஆகியவற்றை மேல் பூச்சுக்குப் பயன்படுத்த வேண்டும். அல்லது ஸாலஸாராதி கணக்கூட்டுப் பொருள்களின் சாரத்தை பசுவின் சிறுநீரால் தூய்மைப்படுத்திக் காலையில் உட்கொள்ளச் செய்க. அல்லது கட்டியைக் கருவி யால் கீறி, கொழுப்பை வெளியேற்றி, விரணத்தை அகற்ற வேண்டும். அல்லது மஜ்ஜை, நெய், கொழுப்பு, தேன் முதலிய வற்றைச் சூடாக்கி அவற்றைக் கொண்டு விரணப்பகுதியை சுட வேண்டும். சூட்டினால் விரணம் எரிந்த பிறகு தேன், நெய் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். அந்த விரணத்தின் மீது அன்னபேதி, துத்தநாகம், கோரோசனம் ஆகியவற்றின் தூளை தூவ வேண்டும். விரணத்தின் மீது எண்ணெயைத் தடவி ஸால ஸாராதிகணம், சாணச்சாம்பல் ஆகியவற்றைப் பூச வேண்டும். விரணத்தைக் கழுவ திரிபலைக் கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். இறுக்கமாகக் கட்டு கட்டி யவதானியத்தை நாள் தோறும் உணவுக்குப் பயன்படுத்த வேண்டும். 55

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**
**கிரந்தி - அபசி - அர்புத - கலகண்ட சிகித்ஸிதம் எனும்**
**பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# * விருத்தி - உபதம்ச - சிலீபத சிகித்ஸிதம்

இனி ஸுசுருதர் தம் சீடர்களுக்கு உபதேசித்த விருத்தி, உபதம்சம், சிலீபதம் எனும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

## 1. விருத்தியில் விடத்தக்கவை

குடல் வீக்கத்தைத் தவிர்த்து மற்ற வாத - பித்த - கப - இரத்த - மேத - மூத்ரவிருத்தி எனும் நோய்களில் குதிரை வண்டி முதலான ஊர்திகளின் மேல் ஏறி சவாரி செய்தல், உடற்பயிற்சி செய்தல், கலவி புரிதல், மலம், சிறுநீர் ஆகியவை வெளியேற இருப்பதைத் தடுத்தல், வெகுநேரம் உட்கார்ந்திருத்தல், அதிகம் நடந்து செல்லுதல், பட்டினிகிடத்தல், குருத்தன்மை கொண்ட (எளிதில் செரிமானமாகாத) உணவை உட்கொள்ளுதல் முதலியவற்றை நீக்கி விட வேண்டும். 3

## 2. வாதத்தால் தோன்றிய விருத்திக்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய விரைவீக்க நோயில் வாத வியாதிக்குக் கூறப்பட்ட 'திரைவிருதஸ்நேஹம்' எனும் எண்ணெய் மருந்தால் எண்ணெய்ப்பசையைத் தோற்றுவித்து பதினைந்தாம் நாள் முறையாக பேதியாகச் செய்யும் மருந்தை உட்கொள்ளச் செய்க. அல்லது எரிமா, பாச்சோத்தி, ஆமணக்கு முதலியவற்றாலான எண்ணெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. அல்லது ஒரு மாத காலம் பாலில் ஆமணக்கு எண்ணெயைக் கலந்து உட்கொள்ளச் செய்க. அதன் பிறகு அறிவாற்றல் மிக்க மருத்துவர் எட்டாவது நாள் வாதத்தைப் போக்கும் பொருள்களாலான க்வாத முறையை மற்றும் விழுதைக் கொண்டு நிரூஹவஸ்தி முறையையும் பயன் படுத்த வேண்டும். இவ்வாறு நிரூஹவஸ்தி சிகிச்சை பெற்ற நோயாளிக்கு மாமிசரசத்துடன் அரிசிச்சோற்றினை உணவாகக் கொடுத்து அதிமதுரத்தாலான எண்ணெயால் அநுவாஸன

---

*விருத்தி - விரைவீக்கம், உபதம்சம் - ஸிப்லிஸ் எனப்படும் பால்வினை நோய், சிலீபதம் - யானைக் கால். இம்மூன்று நோய்களுக்கும் உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் விருத்தி - உபதம்ச - சிலீபத சிகித்ஸிதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

வஸ்தியை செய்விக்க வேண்டும். மற்றும் எண்ணெய் முறை, ஒற்றடம் கொடுத்தல், வாதத்தைப் போக்கும் மேல் பூச்சு என்பன வற்றைப் பயன்படுத்த வேண்டும். பக்குவம் பெறும் நிலையில் உள்ள விருத்தியைப் பழுக்கச்செய்து ஸேவனியைப் பாதுகாத்துக் கொண்டே கருவியால் கீறி த்விவிரணீய அத்தியாயத்தில் கூறியவாறு சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 4-8

### 3. பித்தத்தால் தோன்றிய விருத்திக்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய விருத்தி நோயில் பக்குவம் பெறாத போது பித்தத்தால் தோன்றும் கிரந்திக்குக் கூறிய சிகிச்சை முறைகள் நன்மை தரும். பக்குவம் பெற்ற விருத்தியில் அதைக் கீறி தேன், நெய் ஆகியவற்றால் தூய்மைப்படுத்திய பின் த்வி விரணீய அத்தியாயத்தில் கூறியபடி விரணத்தை ஆற்றுவதற் குரிய எண்ணெய், விழுது ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 9-10

### 4. இரத்தத்தால் தோன்றிய விருத்திக்குச் சிகிச்சை

இரத்தத்தால் தோன்றிய விருத்தி நோயில் அட்டைப் பூச்சியைக் கொண்டு கெட்ட இரத்தத்தை வெளியேற்றிய பிறகு சர்க்கரை, தேன் எனுமிவற்றைக் கலந்து பேதியாகச் செய்யும் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். பக்குவமடையாத மற்றும் பக்குவம் பெற்ற கிரந்திகளுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையும் பயன்படுத்த வேண்டும். 11

### 5. கபத்தால் தோன்றிய விருத்திக்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய விருத்தி நோயில் பசுவின் சிறுநீருடன் [1]வசாதி, [2]பிப்பல்யாதி, [3]முஷ்ககாதி கூட்டுப் பொருள்களை அரைத்துப் பூசுதல், மரமஞ்சள் கஷாயத்தில் பசுவின் சிறுநீரைக் கலந்து உட்கொள்ளச் செய்தல் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். விம்லாபனம் தவிர மற்ற சிலேத்தும கிரந்திக்குரிய சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். பக்குவம் பெற்று பிளவுண்ட விருத்தி நோயில் மல்லி, சேராங்கொட்டை, அங்கோலம், ஏழிலைப்பாலை ஆகியவற்றாலான எண்ணெயைப் பயன்படுத்தி விரணத்தை ஆற்ற வேண்டும். 12-14

1. வசா - வசம்பு.
2. பிப்பலீ - (திப்பிலி), அரிசித்திப்பிலி.
3. முஷ்ககம் - காட்டுப் ப(

### 6. கொழுப்பால் தோன்றிய விருத்திக்குச் சிகிச்சை

கொழுப்பால் தோன்றிய விருத்தி நோயில் உடல் வியர்க்கச் செய்து சுரசாதிகணம் அல்லது சிரோவிரேசனப் பொருள்களைப் பசுவின் சிறுநீருடன் அரைத்துப் பொறுக்கக் கூடிய அளவு சூடுபடுத்தி மேல்பூச்சுப் பூச வேண்டும். உடல் வியர்த்தபின் விருத்தியில் துணியால் கட்டுப்போட்டு நோயாளிக்கு ஆறுதல் கூறுக. பிறகு விரைகளையும், ஸேவனியையும் பாதுகாத்துக் கொண்டே விருத்திபத்ரம் எனும் கருவியால் கீறி கொழுப்பை வெளியே எடுக்கவும். பிறகு அதில் அன்னபேதி, இந்துப்பு ஆகியவற்றை நிரப்பி கோபணம் அல்லது ஸ்தகிகா என்ற முறைப்படி கட்டு போட வேண்டும். விரணம் தூய்மை பெற்ற பிறகு மனோசிலை, அரிதாரம், இந்துப்பு, சேராங்கொட்டை ஆகியவற்றாலான எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். 15-17

### 7. சிறுநீராலான விருத்தி நோய்க்குச் சிகிச்சை

மூத்திரஜவிருத்தியில் அண்டகோசத்தை வியர்க்கச் செய்த பிறகு துணியைச் சுற்றிக் கட்டி ஸேவனியின் பக்கத்திற்குக் கீழ்ப் பக்கத்தில் விரீஹி முகம் எனும் கருவியைக் கொண்டு கீறி இரு முகங்களைக் கொண்ட குழாய் வழியாகச் சிறுநீரை (லஸீகாவை) வெளிப்படுத்த வேண்டும். பிறகு குழாயை நீக்கி ஸ்தகிகா எனும் முறையில் கட்டு போட வேண்டும். விரணம் தூய்மை பெற்ற பிறகு விரணத்தை ஆற்றும் மருந்துப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். விருத்தி குடல் இறக்கத்தால் ஏற்பட்டதானால் அறுவைச் சிகிச்சை செய்யக்கூடாது. 18-20

### 8. குடல் இறக்கத்தால் தோன்றிய விருத்திக்குச் சிகிச்சை

குடல் இறக்கம் அண்டகோசம் அடையாத நிலையில் அதற்கு வாதத்தால் தோன்றும் விருத்திக்குரிய சிகிச்சை முறை களைக் கையாள வேண்டும். தொடை இடுக்கைச் சார்ந்த விருத்தி யில் அதன் வழியைத் தடுப்பதற்காக அர்த்தசந்திராகார சலாகை யால் சுடுதலைச் செய்ய வேண்டும். அண்டகோசத்தை அடைந்த குடல் இறக்கத்தில் நோய் சிகிச்சைக்கு உட்படாதது என அறிந்து சிகிச்சையைக் கைவிட வேண்டும். இடப்பக்கத்து குடலிறக்க மானால் வலது கால் கட்டை விரல் நடுப்பகுதித் தோலையும், வலது பக்கத்துக் குடல் இறக்க விருத்தியானால் இடது கால் கட்டைவிரல் நடுத்தோலையும் கீறிச் சுட வேண்டும். 21-22

வாதம் மற்றும் கபத்தால் தோன்றும் விருத்தி நோய்களில் இவ்வாறே கவனத்துடன் கால்கட்டை விரலின் நடுப்பகுதித்

தோலைக் கீறிச் சுட வேண்டும். ஆனால் இதில் சற்று ஆழமாகக் கீறிவிட வேண்டும். அல்லது குடலிறக்கத்தைத் தடுக்கச் சங்க (பொட்டில்) பிரதேசத்தின் மேல் காதின் முடிவில் ஸேவனியைக் காப்பாற்றிக் கொண்டு இடப்பக்கக் குடல் இறக்கமானால் வலப்பக்கத்திலும், வலப் பக்கக் குடல் இறக்கமானால் இடப் பக்கத்திலும் சிரையைக் கீறி விட வேண்டும். 23-24

### 9. உபதம்ச (பால்வினை நோய்) சிகிச்சை

பொதுவாகச் சிகிச்சைக்கு உட்படக் கூடிய உபதம்ச நோயில் எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தி நோயாளியின் ஆண்குறி நடுப்பகுதி சிரையைக் கீறியோ அட்டைப்பூச்சியைக் கொண்டோ கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 25

மிகவும் அதிகமான தோஷத்தில் வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் தோஷத்தை நீக்க வேண்டும். பிறகு நோயாளியின் வேதனை, வீக்கம் ஆகியவை தணியும். நோயாளி விரேசன முறைக்குத் தகாத அளவு வலிமை யற்றவனாக இருந்தால் மிகவும் வலிமை அடைந்த தோஷத்தைப் போக்க நிரூஹவஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 26-27

### 10. வாதத்தாலான உபதம்சத்திற்குச் சிகிச்சை

வாத உபதம்சத்தில் பிரபௌண்டரீகம், அதிமதுரம், சாரடை, கோஷ்டம், தேவதாரு, சிவதை, அகில், சித்தரத்தை ஆகியவற்றின் விழுதை மேல் பூச்சாகப் பயன்படுத்த வேண்டும். மற்றும் முன் கூறிய பிரபௌண்டரீகம் முதலியவற்றாலான கஷாயத்தை மேல் ஊற்றிக் கொண்டிருக்கவும் வேண்டும். 28-29

### 11. பித்தத்தால் தோன்றிய உபதம்சத்திற்குச் சிகிச்சை

கைரிகம், ரஸாஞ்சனம், அதிமதுரம், நன்னாரி, வெட்டிவேர், பதுமகம், சந்தனம், தாமரை ஆகியவற்றை விழுதாகச் செய்து எண்ணெய்ப்பசை தோற்றுவித்துப் பித்தத்தால் தோன்றிய உபதம்சத்திற்குப் பூச வேண்டும். செந்தாமரை, ஆம்பல், தாமரைத்தண்டு, ஸர்ஜகம், மருதம், நீர்வஞ்சி, அதிமதுரம் ஆகியவற்றின் விழுதில் நெய் சேர்த்து பழச்சாறு, பால், கருப்பஞ்சாறு, தேன், நீர் முதலியவற்றால் அல்லது வடாதிவர்கப் பொருளின் சீதல கஷாயத்தாலாவது பரிஷேக முறையை (மேல் ஊற்றிக் கொண்டிருத்தல்) செய்ய வேண்டும். 30-32

## 12. கபத்தால் தோன்றிய உபதம்சத்திற்குச் சிகிச்சை

சாலம், அச்வகர்ணம், அஜகர்ணம், தவம் என்பனவற்றின் பட்டையைச் சுரை எனும் மதுவிட்டு அரைத்து எண்ணெய் கலந்து சூடாக்கிக் கபத்தால் தோன்றிய உபதம்சத்திற்குப் பூச வேண்டும். அல்லது மஞ்சள், அதிவிடயம், கோரைக்கிழங்கு, சிவதை, தேவதாரு, தமாலபத்ரம், வட்டத்திருப்பி, பதங்கம் ஆகியவற்றின் விழுதைப் பூச வேண்டும். சுரஸாதி கணம், ஆரக்வதாதி கணக்கூட்டுப்பொருள்களின் கஷாயத்தை நோய்ப் பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 33-35

## 13. உபதம்சத்தில் நோயின் நிலைக்கு ஏற்பச் சிகிச்சை

இவ்வாறு தூய்மைப்படுத்துதல், மேல்பூச்சு பூசுதல், நோய்ப்பகுதிமேல் உரிய கஷாயத்தை ஊற்றிக் கொண்டிருத்தல், இரத்தத்தை வெளியேற்றுதல், ஸூத்ர ஸ்தானத்தில் த்விவிரணீய அத்தியாயத்தில் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பின்பற்றுதல் எனும் முறைகளால் பக்குவம் பெறாத உபதம்சத்திற்குச் சிகிச்சை செய்ய வேண்டும். உபதம்சம் எனும் நோயைப் பக்குவ நிலை பெற (நன்கு முற்றும்படி) விடக்கூடாது. அவ்வாறு விட்டால் குறிப்பகுதியில் உள்ள சிரை, நரம்பு, மாமிசம், தோல் முதலியன சிதைந்து போய் ஆண்குறியே தனிப்பட்டு விழுந்து போகும். பக்குவ நிலை விரைவாக அறுவைச் சிகிச்சையைப் பயன்படுத்த வேண்டும். விரணத்திலிருந்து சீழை வெளிப்படுத்தி நெய், தேன் கலந்த எள்ளின் விழுதைப் பூச வேண்டும். விரணத்தைக் கழுவுவதற்கு அரளி, மல்லி, கொன்றை, வன்னி ஆகியவற்றின் இலையின் கஷாயத்தைப் பயன்படுத்துக. 36-39

சௌராஷ்டிரமண், கைரிகம், துத்தநாகம், புஷ்பாஞ்சனம், அன்னபேதி, இந்துப்பு, பாச்சோத்தி, ரஸாஞ்சனம், மரமஞ்சள், அரிதாரம், மனோசிலை, அரேணுகவிதை, ஏல அரிசி ஆகிய வற்றை மையத்தூளாக்கி தேன் கலந்து உபதம்ச நோய்க்குப் பயன்படுத்துக. 40-41

## 14. *ஜம்பு ஆம்ராதி யோகம்

நாவல், மா, மல்லி, வேம்பு, ச்வேதஸ்யந்தம், காட்டு உளுந்து இலை, யானை வணங்கி, இலந்தை, வில்வம் மற்றும் புரசு திரிசமரம், பாலுள்ள மரங்களின் பட்டைகள், கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் ஆகியவற்றைக் கொண்டு கஷாயம் காய்ச்சி அதனால் நாள்தோறும் விரணத்தைக் கழுவ வேண்டும். திறமையுள்ள மருத்துவர் முன்கூறிய கஷாயத்தில் மயில்

*ஜம்பு ஆம்ராதி - நாவல், மா முதலியவற்றின் சேர்க்கை.

கொண்டை, வாயுவிடங்கம், அதிமதுரம், ஏலாதிகணக் கூட்டுப் பொருள் ஆகியவற்றின் விழுதைச் சேர்த்து எண்ணெயைப் பக்குவம் செய்க. இந்த எண்ணெயே எல்லா வகை உபதம்ச நோய்களிலும் விரணத்தை ஆற்றச் சிறந்த மருந்தாகும். 42-44

ஸர்ஜக்ஷாரம், துத்தநாகம், அன்னபேதி, சைலேயம், ரஸாஞ்சனம், மனோசிலை ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கிப் பயன்படுத்தினால் உபதம்சம் மற்றும் அக்கி எனும் நோய்கள் தீரும்.

படிகாரத்தை எரித்துச் சாம்பலாக்கி அரிதாரம், மனோசிலை ஆகியவற்றைக் கலந்து உபதம்சம் மற்றும் அக்கி நோய்களுக்குப் பயன்படுத்தினால் சிறந்த பயன் கிடைக்கும். கரிசலாங்கண்ணி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், நேர்வாளம், தாமிரப் பற்பம், உலோகபற்பம் ஆகியவற்றைக் கலந்து பயன்படுத்தினால் அம்மருந்து மரத்தை இடி எரித்து விடுவது போல நொடியில் உபதம்சநோயைப் போக்கும். இரத்தத்தாலும் மற்றும் ஸந்நிபாதத்தாலும் தோன்றும் உபதம்சம் சிகிச்சைக்கு உட்படாதது என அறிந்து, தோஷங்களின் வலிமைக்கு ஏற்ப இம்முறை களையே பயன்படுத்த வேண்டும். 45-48

## 15. மூன்று தோஷங்களாலும் தோன்றிய உப சிகிச்சை

மூன்று தோஷங்களாலும் தோன்றிய உபதம்சத்திற்குச் சிறப்பான சிகிச்சை முறையைக் கூறுகிறேன் கேள். இதில் துஷ்ட விரணத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். ஆண்குறியில் சிதைந்துபோன பகுதியைத் துண்டித்து நீக்கி விட வேண்டும். பிறகு நெருப்பில் காய்ச்சிய ஜாம்ப வௌஷ்டம் எனப்படும் கருவியால் ஆண்குறியில் மிகுந்துள்ள பகுதியைச் சுட வேண்டும். நன்கு சுட்ட அடையாளங்கள் காணப்பட்ட பிறகு தேன், நெய் முதலியவற்றைப் பயன்படுத்தி விரணம் தூய்மை பெற்ற பிறகு விரணத்தை ஆற்றுவதற்கு விழுது மற்றும் எண்ணெய் முறைகளைத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். 49-51

## 16. வாதத்தால் தோன்றிய யானைக்கால் நோய்க்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றிய யானைக்கால் நோயில் எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்தல் ஆகியவற்றைப் பயன்படுத்தி கால் மணிக்கட்டு இணைப்புக்கு நான்கு அங்குலம் மேற்பகுதியில் சிரையைக் கீறி விட வேண்டும். நோயாளி உடல் வலிமை

பெற்ற பிறகு நிரூஹவஸ்தியைப் பயன்படுத்தி ஒரு மாதம் வரை பசுவின் சிறுநீர் கலந்த ஆமணக்கு எண்ணெயை உட்கொள்ளச் செய்க. சுக்கு கலந்த பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்க. வாதநோய்க்குக் கூறிய திரைவிருத எண்ணெய் மருந்தைப் பயன் படுத்துக. இந்நோயில் நெருப்பால் சுடுதல் எனும் சிகிச்சையை விட ஜாம்பவௌஷ்டம் முதலிய கருவிகளால் சுடுதல் சிறந்த சிகிச்சையாகும். 52-54

## 17. பித்தத்தால் தோன்றிய யானைக்கால் நோய்க்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றிய யானைக்கால் நோயில் கால் மணிக்கட்டுக்குக் கீழே சிரையைக் கீறிப் பித்தத்தால் தோன்றிய அர்புதம் மற்றும் அக்கி நோய்க்குக் கூறியது போல பித்தத்தைப் போக்கும் சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 55

## 18. கபத்தால் தோன்றிய யானைக்கால் நோய்க்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய யானைக்கால் நோயில் கட்டை விரலைச் சார்ந்த சிறப்பான சிரையை மர்மபகுதிக்கு நான்கு அங்குல தூரம் மேற்பகுதியில் கீறி நோயாளியைத் தேன் கலந்த க்வாதத்தை அடிக்கடி பருகச் செய்ய வேண்டும். அல்லது எண்வகை சிறுநீரில் ஏதேனும் ஒன்றுடன் கடுக்காய் விழுதை உட்கொள்ளச் செய்ய வேண்டும். அல்லது கடுகரோகிணி, சீந்தில் கொடி, சுக்கு, வாயுவிடங்கம், தேவதாரு, கொடிவேலி ஆகிய வற்றின் விழுதை எதேனும் ஒரு சிறுநீர் வகையில் கலந்து உட்கொள்ளச் செய்க. அல்லது தேவதாரு, கொடிவேலி ஆகிய வற்றின் விழுதை நாள்தோறும் பூசி வருதல் நலம் தரும். அல்லது வாயுவிடங்கம், மிளகு, எருக்கன், சுக்கு, கொடிவேலி, தேவதாரு, ஏலவாலுகம், ஐந்து வகை உப்புகள் ஆகியவற்றுடன் தயார் செய்த எண்ணெயைப் பருகச் செய்க. யவதானியச் சோற்றை உண்ணச் செய்தல் நலம் தரும். 56-59

யானைக்கால் நோயில் கடுகெண்ணெய் அல்லது மணி புங்கன் இலைச்சாற்றினை உடல் வலிமைக்கு ஏற்றபடி உட் கொள்ளச் செய்க. இவ்வாறே புத்ரஜீவகச் சுரசத்தைப் பயன்படுத்துக. கேபுகம் எனும் கிழங்கின் பிசிறுடன் பிடல வணத்தைக் கலந்து உட்கொள்ளச் செய்க. 60-62

## 19. யானைக்கால் நோயில் பருகத் தக்க க்ஷாரம்

காகாதனி, காகஜங்கா, கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி, கதம்பபுஷ்பி, பேய்ச்சுரை, சர்மகாரவடம் ஆகியவற்றை எரித்து க்ஷார முறைப்படி பசுவின் சிறுநீரில் கழுவித் தூய்மைப்படுத்த

வேண்டும். அதில் பேய்அத்திச்சாறு, மருக்காரைக்கஷாயம் சர்மகார வட சுரசம் ஆகியவற்றைக் கலந்து பருகச் செய்தால் யானைக்கால், அபசி, கலகண்டம், கிரகணிதோஷம், அசீரணம், நஞ்சு வகைகள் ஆகியவை தீரும். இந்தப் பொருள்களாலான எண்ணெய் மூக்கிலிடும் மருந்தாகவும், எண்ணெய் குளியலுக்கும் பயன்படுத்தத்தகும். இது நோய்களையும், நாள் பட்ட விரணத்தையும் போக்கும். 63-67

எலிச்செவி, சிவதை, நேர்வாளம், அவுரி, சியாமா, கள்ளி, கொடிக்கள்ளி, சங்கினி ஆகியவற்றை எரித்துப் பசுவின் சிறுநீரில் இருபத்தோரு முறை கழுவித் தூய்மைப்படுத்துக. இதனால் செய்த க்ஷார நீரில் திரிபலைக் கஷாயத்தைக் கலந்து நோயாளிக்குப் பருகத் தர வேண்டும். இந்த க்ஷார நீருக்கும் முன் கூறிய க்ஷார நீருக்குரிய தன்மைகள் உண்டு. ஆகையால் முன் கூறிய நோய்களும் இதனால் தீரும். 68-69

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

விருத்தி - உபதம்ச - சிலீபத சிகித்ஸிதம் எனும்

பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.

# இருபதாம் அத்தியாயம்

# * க்ஷுத்ர ரோக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுச்ருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசித்த க்ஷுத்ரரோக சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

## 1. [1]அஜகல்லிகை நோய்க்குச் சிகிச்சை

சிறுவர்களுக்கு தோன்றும் 'அஜகல்லிகா' எனப்படும் சிறு கட்டிகளுக்கு உரிய சிகிச்சை கூறப்படுகிறது. இந்நோயில் அட்டைப் பூச்சிகளைக் கொண்டு கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு முத்துச் சிப்பி, ஸப்ஜிக்ஷாரம், யவக்ஷாரம் ஆகியவற்றை விழுதாக அரைத்துப் பூச வேண்டும். அல்லது அறிவாற்றல் மிக்க மருத்துவர் சியாமா, கலப்பைக் கிழங்கு, வட்டத்திருப்பி ஆகியவற்றின் விழுதைப் பூச வேண்டும். பக்குவம் பெற்ற அஜகல்லிகைக்கு விரண சிகிச்சைக்குரிய முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 3-4

## 2. [2]அந்தாலஜீ நோய்க்குச் சிகிச்சை

அந்தாலஜீ, யவபிரக்யா, பநஸிகா, கச்சபி, பாஷாண கர்தபம் எனும் நோய்களில் முதலில் உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். முன் கூறிய நோய்களில் மனோசிலை, அரிதாரம், கோஷ்டம், தேவதாரு ஆகியவற்றை விழுதாக அரைத்துப் பூச வேண்டும். பக்குவம் பெற்ற பிறகு கீறி விரணத்திற்கு உரிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 5-6

## 3.[3]விவிருதா முதலிய நோய்களுக்குச் சிகிச்சை

விவிருதா, இந்திர விருத்தா, கர்தபி, ஜாலகர்தபம் ஹரி வேல்லிகா, கஷா, விஸ்போடகம் முதலிய நோய்களுக்குப்

---

* க்ஷுத்ரம் - சிறியவை, மிகவும் சாதாரணமானவை. அத்தகைய நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இது க்ஷுத்ர ரோக சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

1. அஜகல்லிகை - ஒரு விதமான அக்கியைப் போன்ற சர்ம வியாதி.

2. அந்தாலஜீ - அடி சிறுத்து மேல்பாகம் விசாலமாய் முகம் காணப்படாமல் மேல் நோக்கிக் கிளம்பிய அதிக சீழில்லாத கட்டி.

3. விவிருதா - பழுத்த அத்திப்பழம் போன்றதாய் அகன்ற முகத்துடன் கூடிய விரணம்.

பித்தத்தால் தோன்றிய அக்கி நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். மற்றும் இனிப்புச் சுவை கொண்ட (காகோலி முதலிய) பொருள்களாலான நெய் மருந்தைக் கொண்டு விரணத்தை ஆற்ற வேண்டும். 7-8

### 4. சிப்யா நோய்க்குச் சிகிச்சை

சிப்யா (நகத்தை சார்ந்த மாமிசப் பகுதியில் தோன்றும்) நோயில் வெந்நீரை ஊற்றிக் கெட்ட மாமிசப் பகுதியை வெட்டிக் கெட்ட இரத்தத்தை வெளியேற்றி விரணத்தின் மீது சக்ர தைலம் (எண்ணெய் ஆட்டும் செக்கைக் கொண்டு செய்த தைலம்) பூசி ஸர்ஜக்ஷாரத்தைத் தூவிக் கட்டு போட வேண்டும். இம்முறையால் பயன் ஏற்படாவிடில் நெருப்பால் எரித்து இனிப்புச் சுவைக் கொண்ட பொருள்களாலான எண்ணெயைக் கொண்டு விரணத்தை ஆற்ற வேண்டும். 9-10

### 5. [1]குநகத்திற்குச் சிகிச்சை

அறிவாற்றல் மிக்க மருத்துவர் குநகத்திற்கும் இவ்வாறே சிகிச்சை செய்ய வேண்டும். அநுசயீ (நகத்தின் மேற் பகுதியைச் சார்ந்த உட்பகுதியில் பக்குவம் பெறும் பிடகை) எனும் நோயில் கபத்தால் தோன்றும் வித்ரதிக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 11

### 6. [2]விதாரிகா நோய்க்குச் சிகிச்சை

விதாரிகா நோய்க்கு உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க் குளியல், கட்டை விரலால் அழுத்தித் தேய்த்தல் எனும் முறைகளைக் கையாண்டு கிலுகிலுப்பை, சாரணை, வில்வவேர், ஆல் என்பனவற்றை நன்றாக அரைத்துப் பூச வேண்டும். அல்லது விரணமாக மாறிய பிறகு தூய்மைப்படுத்தும் முறைகளைக் கையாண்டு துவர்ப்பு இனிப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களின் கஷாயத்தாலான எண்ணெய் மருந்தை பயன்படுத்த வேண்டும். 12-13

### 7. பக்குவம் பெறாத விதாரிகைக்குச் சிகிச்சை

பக்குவம் பெறாத விதாரிகைக்கு பிரச்சான முறை அல்லது அட்டைப்பூச்சி என்பதால் இரத்தத்தை வெளியேற்றி அஜகர்ணம், புரசு ஆகியவற்றின் வேர்களின் விழுதைப் பூச

---

1. குநகம் - சொத்தை நகம்.
2. விதாரிகா - அக்குள், தொடை இடுக்கு ஆகிய பகுதிகளில் உள்ள கிரந்திகளில் தோன்றும் வீக்கம்.

வேண்டும். பக்குவம் பெற்ற பின் கருவியால் கீறி பேய்ப்புடல், வேப்பிலை ஆகியவற்றின் விழுதுடன் எள்ளின் விழுதையும், நெய்யையும் கலந்து பூசிக் கட்டு போட வேண்டும். பாலுள்ள ஆல் முதலிய மரப்பட்டைகள், கருங்காலி ஆகியவற்றின் கஷாயத்தால் நன்றாகக் கழுவித் தூய்மை பெற்றபின் ஆற்ற முற்பட வேண்டும். 14-16

## 8. சர்க்கரார்புதம், கண்டு முதலியவற்றிற்குச் சிகிச்சை

சர்க்கரார்புதம், கண்டூ (அரிப்பு) விசர்ச்சிகா, பாமா (சொறி) முதலிய நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் கூறப்படுகின்றன. சர்க்கரார்புதத்திற்கு கொழுப்பு மிகுவதால் தோன்றும் அர்புதத்திற் கான சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். கண்டூ, விசர்ச்சிகா, பாமா என்னும் நோய்களுக்குக் குஷ்ட நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். இந்த நோய் களில் தேன்மெழுகு, சோம்பு, மஞ்சள்கடுகு அல்லது வசம்பு, மரமஞ்சள், கடுகு ஆகியவற்றின் விழுதைப் பூசுவது நலம் தரும். அல்லது புங்கன் தைலம், கார்ப்புச் சுவை கொண்ட திப்பிலி முதலிய கூட்டுப் பொருள்களாலான ஸார தைலம் முதலிய வற்றைப் பூசித் தேய்ப்பதால் கிசிச்சை செய்ய வேண்டும். 17-18

## 9. பாததாரீ சிகிச்சை

பாததாரீ எனும் நோயில் சிரையைக் கீறி உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய்க் குளியல் எனும் முறைகளைப் பயன்படுத்தி தேன்மெழுகு, வசை, கொழுப்பு, ஸர்ஜக்ஷாரம் ஆகியவற்றாலான நெய் மருந்தில் யவக்ஷாரத்தையும், கைரிகத்தையும் கலந்து பூச வேண்டும். 19-20

## 10. அலஸம் நோய்க்குச் சிகிச்சை

அலஸம் எனும் (சேற்றுப்புண்) நோயில் அடியைக் காஞ்சிகம் எனும் புளிக்காடியால் கழுவி வேப்பிலை, எள், அன்னபேதி, அரிதாரம், இந்துப்பு ஆகியவற்றாலான விழுது அல்லது கொம்பரக்கின் சாறு மற்றும் கடுக்காய் விழுதைப் பூச வேண்டும். அல்லது இரத்தத்தை வெளியேற்றும் முறை அல்லது கண்டங்கத்திரிச் சாறினாலான கடுகு எண்ணெய் முறையை பயன்படுத்த வேண்டும். அல்லது அன்னபேதி, கோரோசனம், மனோசிலை ஆகியவற்றின் தூளை அப்பகுதி மேல் தேய்க்க வேண்டும். 21-22

### 11. [1]கதரம் நோய்க்குச் சிகிச்சை

கதரம் எனும் நோயில் கோகரு எனும் கருவியைக் கொண்டு கீறி சூடான எண்ணெயைக் கொண்டு அப்பகுதியைச் சுட வேண்டும். 23

### 12. இந்திரலுப்த நோய்க்குச் சிகிச்சை

இந்திரலுப்தம் (தலை முடி திட்டுத் திட்டாக உதிர்ந்து போதல்) எனும் நோய்க்கு எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்தல் ஆகியவற்றைக் கையாண்டு நோயாளியின் தலையில் உள்ள சிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்றவேண்டும். பிறகு மிளகு, மனோசிலை, அன்னபேதி, மயில் துத்தம் ஆகியவற்றின் விழுதையோ தகரை தேவதாரு ஆகியவற்றின் விழுதையோ அச்சிரை மீது பூச வேண்டும். அல்லது சிரையில் ஆழமாகக் கீறி நோயாளியின் துன்பம் குறைய அடிக்கடி குன்றிமணி விழுதைப் பூச வேண்டும். அல்லது ரஸாயன முறைக்கு ஏற்ப மேற்பூச்சு முறையைப் பயன்படுத்த வேண்டும். மல்லி, அரளி, கொடிவேலி, புங்கன் ஆகியவற்றின் விழுதாலான எண்ணெயைக் கொண்டு எண்ணெய்க் குளியல் செய்வித்தல் மிக்க நன்மை தரும். இதனால் இந்திரலுப்தம் எனும் நோய் தீரும். 24-26

### 13. [2]அரூம்ஷிகா நோய்க்குச் சிகிச்சை

அரூம்ஷிகா எனும் நோயில் இரத்தத்தை வெளியேற்றி வேம்பின் கஷாயத்தை மேல் ஊற்றிக் கொண்டிருந்து பிறகு குதிரைச் சாணத்தின் சாற்றில் இந்துப்பு கலந்து பூச வேண்டும். அல்லது அரிதாரம், மஞ்சள், தேன்மெழுகு, பேய்ப்புடல் இலை ஆகியவற்றின் விழுதையோ அதிமதுரம், நீலாம்பல், ஆமணக்கு, கரிசலாங்கண்ணி ஆகியவற்றின் விழுதையோ பூச வேண்டும். இந்திரலுப்த தைலம் என்பதைக் கொண்டு எண்ணெய்க்குளியல் செய்விப்பதும் நலம் தரும். 27-29

### 14 [3]தாருணகம் நோய்க்குச் சிகிச்சை

தாருணகம் எனும் நோயில் உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தி நோயாளியின் தலையில் உள்ள சிரையைக்

---

1. கதரம் - கல் அல்லது முள்ளால் பாதங்களில் உண்டாகும் காய்ப்பு - இது ஆணி விழுதல் எனப்படும்.

2. அரூம்ஷிகா - அதிகமான ஊன்நீரைப் பெருக்கும் பல கண்களைப் கொண்டு தலையில் உண்டாகும் புண்கள்.

3. தாருணகம் - மண்டையிலுள்ள சர்மம் அடிக்கடி வெடித்துப் போதல்.

கீறி அவபீடநசியம், சிரோவஸ்தி, எண்ணெய்க்குளியல் ஆகிய முறைகளைப் பயன்படுத்த வேண்டும். விரணத்தைக் கழுவ காட்டுப்புல்லரிசி க்ஷார நீரைப் பயன்படுத்த வேண்டும். 30

### 15. மசூரிகை நோய்க்குச் சிகிச்சை

முற்றிய மசூரிகை நோய்க்குரிய சிகிச்சை மிச்ரக சிகித்ஸிதம் எனும் அத்தியாயத்தில் கூறப்படும். மசூரிகை எனும் நோய்க்கு குஷ்டத்தைப் போக்கும் மேல் பூச்சு மருந்து முதலியவற்றையோ பித்த கபங்களால் தோன்றும் அக்கி நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளையோ பயன்படுத்துவது நலம் தரும்.. 31

### 16. ஜதுமணி, மசகம், திலகாலகம் ஆகிய நோய்களுக்குச் சிகிச்சை

ஜதுமணி, மசகம், திலகாலகம் எனும் நோய்களில் நன்றாகக் கீறி க்ஷார மருந்தை அல்லது நெருப்பால் மெல்ல சுடுதல் எனும் சிகிச்சையைப் பயன்படுத்த வேண்டும். 32

### 17. நியச்சம், வியங்கம், [1] நீலிகா ஆகிய நோய்களுக்கு சிகிச்சை

நியச்சம், வியங்கம், நீலிகா எனும் நோய்களில் சிரையைக் கீறுதல் இதமாகும். முறையறிந்து நெற்றி முதலிய இடங்களில் உள்ள சிரையைக் கீற வேண்டும். நோயுற்ற பகுதியை கடல் நுரை முதலியவற்றைத் தேய்த்துப் பிறகு பாலுள்ள மரங்களின் பாலுடன் கூடிய பட்டையை அரைத்துப் பூச வேண்டும். சிற்றாமுட்டி, பேராமுட்டி, அதிமதுரம், மஞ்சள் ஆகியவற்றை அரைத்துப் பூச வேண்டும். அல்லது அர்க்கபுஷ்பி, அகில், கருஞ்சந்தனம், கைரிகம், தேன், நெய், பன்றிப்பல்சாம்பல் ஆகியவற்றைக் கலந்து பூச வேண்டும். அல்லது விளாம் கதுப்பு, ராஜாதனம் எனும் கிரணிப்பழக்கதுப்பு ஆகியற்றின் விழுதைப் பூச வேண்டும். 33-36

### 18. யௌவன பிடகைக்குச் சிகிச்சை

யௌவனப் பிடகைக்கு வாந்தி எடுக்கச் செய்தல் நன்மை தரும். அல்லது வசம்பு, பாச்சோத்தி, இந்துப்பு, கடுகு அல்லது கொத்துமல்லி விதை, வசம்பு, பாச்சோத்தி, கோஷ்டம் ஆகியவற்றின் விழுதைப் பூச வேண்டும். 37

### 19. [2] பத்மினிகண்டக நோய்க்குச் சிகிச்சை

பத்மினிகண்டகம் எனும் நோயில் வேம்பின் கஷாயத்தால் வாந்தி எடுக்கச் செய்து வேம்பின் கஷாயத்தாலான நெய்

---

1 நீலிகா - கறுத்த வர்ணமான பிறவி மறு.

2. பத்மினி கண்டகம் - தாமரைத் தண்டின் முள்ளைப் போல் உண்டாகும் சர்மவியாதி.

மருந்தில் தேன் கலந்து உட்கொள்ளச் செய்தல், வேம்பு கொன்றை ஆகியவற்றின் விழுதைக் கொண்டு பூசித் தேய்த்தல் எனும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 38-39

### 20. பரிவர்த்திகா,. அவபாடிகா ஆகிய நோய்களுக்குச் சிகிச்சை

பரிவர்த்திகா எனும் நோயில் நெய்யைப் பூசி நன்றாக வியர்க்கச் செய்து கட்டு போடுதல் அல்லது ஒற்றடம் கொடுத்தல் என்பனவற்றைச் செய்ய வேண்டும். [1]மணி உள்ளே சென்றபிறகு தோலை ஸால்வணம் முதலான வாதத்தைப் போக்கும் உபநாஹ முறைகளைக் கொண்டு மூன்று அல்லது ஐந்து நாட்கள் அப்பகுதி நன்கு வியர்க்கும்படிச் செய்ய வேண்டும். வாதத்தைப் போக்கும் வஸ்தி முறைகளைப் பயன்படுத்தி எண்ணெய்ப்பசையுடன் கூடிய உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். அவபாடிகை எனும் நோய்க்கும் மருத்துவர் தோஷத்தை நன்கு உணர்ந்து அதற்கு ஏற்ற சிகிச்சையைப் பயன்படுத்த வேண்டும். 40-42

### 21. [2]நிருத்தப்பிரகசம் நோய்க்குச் சிகிச்சை

நிருத்தப்பிரகசம் எனும் நோய்க்கு இரு முனைகளிலும் துளைகளைக் கொண்ட இரும்பு, கொம்பு அரக்கால் செய்யப் பட்ட குழாய் முதலியவற்றின் மேல் நெய்யைத் தடவி குறிப் பகுதிக்குள் புகுத்த வேண்டும். குறியின் மணிப்பகுதியில் ஊற்றிக் கொண்டிருக்க முதலை அல்லது பன்றியின் கொழுப்பு, மஜ்ஜை மற்றும் வாதத்தைப் போக்கும் பொருள்களாலான சக்ரதைலம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு மூன்று நாட்கள் செய்த பிறகு முறையே தடித்த நாளத்தை நன்கு புகுத்தி சுரோதஸ்ஸின் வழியைப் பெரிதாக்க வேண்டும். எண்ணெய்ப் பசை மிக்க உணவு உட்கொள்ள செய்ய வேண்டும். அல்லது ஸேவனியைக் காத்துக் கொண்டே அறுவைச் சிகிச்சை செய்து அப்பொழுது பட்ட காயத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறையைப் பின்பற்ற வேண்டும். 43-45

### 22. [3]ஸந்நிருத்த குதத்திற்குச் சிகிச்சை

[illegible]ம், வல்மீகம், அக்னிரோஹிணி எனும் நோய்கள் சிகிச்சைக்கு உட்படாதவை என்பதை அறிந்து

---

1. மணி - ஆண்குறியின் முனை மொட்டு போன்ற பகுதி.

2 நிருத்தப் பிரகசம் - லிங்கத்வாரத்தை அடைத்துவிடும் சூகதோஷம்.

3. ஸந்நிருத்தகுதம் - ஆஸனவாய் வாயுவின் சீற்றத்தால் சுருங்கிப் போய் மலம் தாராளமாய் வெளிவர முடியாமற்போய் விடுதல்.

கொண்டே முறைப்படி சிகிச்சை செய்ய வேண்டும். அக்னி ரோஹிணி என்பதற்கு அக்கி நோய்க்குக் கூறப்பட்ட முறையையும், ஸந்நிருத்த குதம் என்பதற்கு நிருத்தபிரகசம் எனும் நோய்க்கு உரிய முறையையும் பின்பற்ற வேண்டும் 46-47

## 23. வல்மீகம் நோய்க்குச் சிகிச்சை

வல்மீகம் எனும் நோயில் அறுவைச் சிகிச்சையால் கத்தரித்து க்ஷாரம் அல்லது நெருப்பைக் கொண்டு அப்பகுதியைச் சுட வேண்டும். பிறகு அர்ப்புதத்திற்குக் கூறப்பட்ட கிசிச்சை முறைகளைக் கொண்டு விரணத்தைத் தூய்மைப்படுத்தி அதை ஆற்ற வேண்டும். மர்மபகுதியில் அல்லது மற்ற பகுதியில் தோன்றியதும் மற்றும் சிறியதுமான வல்மீக நோயில் தூய்மைப்படுத்தும் முறையைச் செய்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு கொள்ளுச் செடி வேர், சீந்தில் கொடி, இந்தப்பு, கொன்றை வேர், நேர்வாளவேர், கருஞ்சிவதை வேர், பிண்ணாக்கு, பொரிமா முதலியவற்றை ஒன்றாக்கிப் பூச வேண்டும். மற்றும் இளஞ்சூடுள்ள ஒற்றடம் கொடுத்த பின் கட்டு போட வேண்டும். வல்மீகம் பக்குவம் பெற்றதும் சீழை முழுவதும் வெளியேற்றிய பிறகு அறிவாற்றல் மிக்க மருத்துவர் முறையாக அதை கீறி நெருப்பால் சுட வேண்டும். கெட்ட மாமிசப்பகுதியைத் தூய்மைப்படுத்தி க்ஷாரத்தை தேய்த்து விரணம் தூயதான பிறகு ஆற்ற வேண்டும். மல்லிமொட்டு, சேராங்கொட்டை, மனோசிலை, கருநன்னாரி, சிறுஏலம், சந்தனம், அகில் முதலியவற்றைச் சேர்தது்ச் செய்த வேப்பெண்ணையை வல்மீகத்தை ஆற்றப் பயன் படுத்துவது மிக்க நலம் தரும். கால் கைகளின் மேற்பகுதியில் தோன்றுவது அல்லது பல துளைகள் உள்ளது மற்றும் வீக்கத்துடன் கூடியதுமான வல்மீக நோய்கள் சிகிச்சைக்கு உட்படாததாகையால் அவற்றை கைவிட வேண்டும். 48-56

## 24. அஹிபூதனை நோய்க்குச் சிகிச்சை

சிறுவர்களுக்கு தோன்றும் அஹிபூதனை நோய்க்குச் சிகிச்சையை அக்குழந்தைக்குப் பாலூட்டும் செவிலித்தாயின் பாலைத் தூய்மைப்படுத்துவதன் மூலம் செய்ய வேண்டும். பேய்ப்புடல் இலை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், ரஸாஞ்சனம் முதலியவற்றாலான நெய் மருந்தை உட்கொள்ளச் செய்து மிகவும் சிரமப்பட்டுத் தீர்க்கக் கூடிய அஹிபூதனை நோய்க்கும் சிகிச்சை செய்யத் தகும். 57

கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், இலந்தை, கருங்காலி ஆகியவற்றின் கஷாயத்தை விரணத்தை ஆற்றப் பயன்படுத்த வேண்டும். 58

அன்னபேதி, கோரோசனம், துத்தநாகம், அரிதாரம், ரஸாஞ்சனம் அல்லது வில்வப்பட்டை, இந்துப்பு ஆகியவற்றை புளிக்காடியுடன் அரைத்துப் பூசவேண்டும். விரணம் ஆறும்போது ஒட்டின்சல்லி மற்றும் துத்தநாகம் ஆகியவற்றின் தூளைப் பயன்படுத்த வேண்டும். 59-60

## 25. குதபிரம்ச நோய்க்குச் சிகிச்சை

குதபிரம்சத்தில் வெளிவந்த குதப்பகுதியை வியர்க்கச் செய்து எண்ணெய்ப்பசை உண்டாக்கி உட்புகுத்த வேண்டும். மற்றும் அபானவாயு வெளிவருவதற்கு நடுவில் துளை உள்ள தோலாலான கருவியைக் கொண்டு கட்டு போட வேண்டும். மெல்ல மெல்ல அப்பகுதியை வியர்க்கச் செய்ய வேண்டும். 61

பாலில் பெரும்பஞ்சமூலமும், குடல் நீக்கிய எலியையும் பக்குவம் செய்து, இந்தப் பாலைக்கொண்டு வாதத்தைப் போக்கும் பொருள்களின் விழுதுடன் எண்ணெய் பக்குவம் செய்ய வேண்டும். இந்த எண்ணெய் மருந்தை உட்கொள்ளச் செய்வதாலும் மேல் பூச்சாகப் பயன்படுத்துவதாலும் மிகவும் கஷ்டமான குதபிரம்ச நோயும் குணம் பெறும். 62-63

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**க்ஷுத்ரரோக சிகித்ஸிதம் எனும்**

**இருபதாம் 'யாயம் முற்றும்.**

# இருபத்தோராம் அத்தியாயம்
# * சூகரோக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சூகரோக சிகித்ஸிதம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

### 1. ஸர்ஷபி நோய்க்குச் சிகிச்சை

ஸர்ஷபி எனும் நோய்க்கு மிச்ரக அத்தியாயத்தில் கூறப்படும் சோதனைப் பொருள்களாலான கஷாயத்திற்குரிய மரங்களின் தூளை விரணத்தின் மேல் தூவித் தேய்க்க வேண்டும். பிறகு விரணம் ஆறுவதற்குக் கஷாயப் பொருள்களின் விழுதால் செய்த எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். 3

### 2. அஷ்டலிகா நோய்க்குச் சிகிச்சை

அறிவாற்றல் மிக்க மருத்துவர் அஷ்டலிகா எனும் நோய்க்கு அட்டைப்பூச்சியைக் கொண்டு அடிக்கடி கெட்ட இரத்தத்தை வெளியேற்றி இம்முறையால் ஆறாத நோய்க்கு கபத்தால் தோன்றும் கிரந்திக்கு (கடினமான கட்டி) உரிய அறுவைச் சிகிச்சையைச் செய்ய வேண்டும். 4

### 3. கிரீதிகம் நோய்க்குச் கிகிச்சை

அறிவாற்றல் மிக்க மருத்துவர் கிரீதிகம் எனும் நோய்க்கு நாடீஸ்வேத முறையைக் கொண்டு நாள்தோறும் வியர்க்கச் செய்து, எண்ணெய்ப்பசை கொண்ட இளஞ்சூடுள்ள உபநாஹ சிகிச்சையை செய்து விட்டு கட்டு போட வேண்டும். 5

### 4. ** கும்பிகை நோய்க்குச் சிகிச்சை

பக்குவம் பெற்ற கும்பிகையைக் கருவியால் கீறி விரணத்தைத் தூய்மைப்படுத்தி கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், பாச்சோத்தி, திந்துகம், எரிமா முதலியவற்றாலான எண்ணெய் மருந்தைக் கொண்டு விரணத்தை ஆற்ற வேண்டும். 6

---

* சூகரோகம் - மர்மஸ்தானத்தில் உண்டாகும் ஒரு வகை மேஹ விரணம். இந்நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் சூகரோக சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

** கும்பிகை - மாதுளம் விதை போன்ற கொப்புளம்.

### 5. [1]அலஜி நோய்க்குச் சிகிச்சை

அலஜி எனும் நோயில் அட்டைப்பூச்சியைக் கொண்டு வெளியேற்றி கஷாயத்திற்கான மரங்களின் கஷாயத்தை மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். கஷாய மரங்களின் கஷாயம் மற்றும் விழுது ஆகியவற்றுடன் செய்த எண்ணெய் மருந்தைக் கொண்டு விரணத்தை ஆற்ற வேண்டும். 7

### 6. [2] மிருதிதம் நோய்க்குச் சிகிச்சை

மிருதிதம் எனும் நோய்க்கு இளஞ்சூடுள்ள பலா தைலத்தை அப்பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். மற்றும் இனிப்புச் சுவை கொண்ட பொருள்களுடன் நெய் கலந்து இளஞ்சூட்டில் ஒற்றடம் கொடுத்துக் கட்டு போட வேண்டும். 8

### 7. ஸம்மூட பிடகா நோய்க்குச் சிகிச்சை

ஸம்மூட பிடகா எனும் நோய்க்கு அட்டைப் பூச்சியைக் கொண்டு இரத்தத்தை வெளியேறச் செய்ய வேண்டும். நோய் பக்குவம் பெற்ற பின் கருவியால் கீறி தேன், நெய் ஆகியவற்றைப் பூச வேண்டும். 9

### 8. [3]அவமந்த நோய்க்குச் சிகிச்சை

அவமந்தம் என்னும் நோய் பக்குவம் பெற்று உடைந்த பிறகு தவம், அச்சவகர்ணம், பதங்கம், யானைவணங்கி, திந்துகம் ஆகியவற்றின் கஷாயமும் விழுதும் சேர்த்துச் செய்த எண்ணெய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 10

### 9. புஷ்கரிகா நோய்க்குச் சிகிச்சை

புஷ்கரிகா எனும் நோய்க்கு முழுமையாகக் குளுமைப் படுத்தும் சிகிச்சை முறைகளைப் பயன்படுத்தி அட்டைப் பூச்சியால் கெட்ட இரத்தத்தை வெளியேற்றி நெய்யை மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 11

---

1. அலஜி - பல பருக்களுடன் கூடி வெளுப்பும் சிவப்புமான நிறங்கொண்டு மிக்க வேதனை தரும் கட்டி.

2. மிருதிதம் - தினவெடுத்துத் தேய்ப்பதால் வீங்கிப் போய்விடும் சூகம்.

3. அவமந்தம் - மிகுந்த வேதனையும், வெகு நீளமும் எண்ணிக் கையில் மிகுந்தும் உள்ள கொப்புளங்கள் போன்ற சூகங்கள்.

### 10. ஸ்பர்சஹானிக்குச் சிகிச்சை

ஸ்பர்சஹானியில் இரத்தத்தை வெளியேற்றி இனிப்புச் சுவை கொண்ட பொருள்களாலான விழுதை மேல் பூச்சுக்குப் பயன்படுத்தி குளிர்ந்த பால், கருப்பஞ்சாறு, நெய் ஆகியவற்றை அதன்மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 12

### 11. உத்தமாபிடகா நோய்க்குச் சிகிச்சை

உத்தமா எனும் பிடகைக்கு மருத்துவர் படிசம் எனும் கருவியைக் கொண்டு வெளிப்படுத்தி தேன் கலந்த கஷாயப் பொருள்களின் தூளை விரணத்தின் மேல் தூவ வேண்டும். 13

### 12. சதபோநகம் நோய்க்குச் சிகிச்சை

சதபோநகம் எனும் நோயில் முதலில் சுரண்டுதல் எனும் முறையைப் பயன்படுத்திய பிறகு ரஸகிரியையும், பிருஷ்டபர்யாதி கூட்டுப் பொருள்களாலான எண்ணெய் மருந்தையும் பயன்படுத்த வேண்டும். 14

### 13. துவக்பாகம் (த்வக் - தோல்) மற்றும் ரக்தஜ அர்புதம் நோய்களுக்குச் சிகிச்சை

துவக்பாகம் மற்றும் ரக்தஜ அர்புதம் எனும் நோய்களில் மருத்துவர் துவக்பாகத்திற்கு விஸர்ப்பம் எனும் அக்கி நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளைப் பின்பற்ற வேண்டும். ரக்தஜ அர்புதத்திற்கு ரக்தஜவித்ரதிக்கு உரிய சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே கஷாயம் விழுது நெய் எண்ணெய், மருந்துப்பொருள்களின் துகள், ரஸகிரியை தூய்மைப்படுத்தும் முறை, ஆற்றும் முறை ஆகியவற்றை த்விவிரணீய முறையில் கூறியபடி செய்ய வேண்டும். தோஷங் களுக்கு ஏற்ப நெய் பருகுதல் பேதியாகச் செய்தல் இரத்தத்தை வெளியேற்றுதல் இலேசான உணவு உட்கொள்ளுதல் ஆகியவை இரத்தத்தால் தோன்றும் அர்புதத்தில் நன்மை தரும். 15-17

அர்புதம், மாமிசபாகம், வித்ரதி, திலகாலகம் ஆகியவை சிகிச்சைக்கு உட்படாதவை என தெரிந்தும் மருத்துவர் திறமை யுடன் சிகிச்சையைக் கையாள வேண்டும். 18

**ஸுஶ்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**க்ஷுத்ரரோக சிகித்ஸிதம் எனும்**

**இருபத்தோராம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

# * முகரோக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் தம் சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி முகநோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 1-2

## உதட்டு நோய்கள்

### 1. உதட்டு நோய்க்குச் சிகிச்சைகள்

வாதத்தால் தோன்றும் உதட்டு நோயில் தேன் மெழுகுடன் கூடிய நான்கு எண்ணெய் வகைகளான நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை என்பனவற்றைச் சேர்த்து உதட்டின் மேல் தேய்த்தல் முறை மற்றும் நாடீஸ்வேதம் எனும் முறை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 3

### 2. வாதத்தால் தோன்றும் உதட்டு நோய்க்கு வேறு சிகிச்சைகள்

வாதத்தால் தோன்றும் உதட்டு நோயில் ஸால்வணத்தைக் கொண்டு உபநாஹ சிகிச்சை செய்தல், சிரோவஸ்தி முறையைக் கையாளுதல், வாதத்தைப் போக்கும் பொருள்களைக் கொண்டு செய்யப்பட்ட எண்ணெயை நசியமாகப் பயன்படுத்துதல் ியவையும் பயன்தரும். 4

வாதத்தால் தோன்றும் உதட்டு நோயில் ஸ்ரீவேஷ்டகம், ஸர்ஜரஸம், தேவதாரு, குக்குலு, அதிமதுரம் ஆகியவற்றின் தூளைக்கொண்டு நோயுற்ற பகுதியைத் தேய்த்தலும் நலம் தரும்.5

### 3. பித்தம், இரத்தம், அபிகாதம் என்பனவற்றால் தோன்றும் உதட்டு நோய்க்குச் சிகிச்சை

பித்தத்தாலும் இரத்தத்தாலும் அடிபடுதலாலும் தோன்றும் உதட்டு நோயில் அட்டைப்பூச்சியைக் கொண்டு கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். மற்றும் வித்ரதிக்குக் கூறப்பட்டது போல் தூய்மைப்படுத்தவும் தணிக்கவும் செய்யத் தக்க சிகிச்சை முறைகள் முழுவதும் பின்பற்றக் கூடியவையாகும்.6

---

* முகரோகம் - முகத்தில் தோன்றும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் முகரோக சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

**4. கபத்தால் தோன்றும் உதட்டு நோய்க்குச் சிகிச்சை**

கபத்தால் தோன்றும் உதட்டு நோயில் வெளியேற்றிய பிறகு சிரோவிரேசனம், புகைபோடுதல், உடல் வியர்க்கச் செய்தல், கபளமுறை (மருந்துப் பொருளை வாயில் வைத்துக் கொண்டிருந்து பிறகு உமிழ்தல்) எனும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். பிறகு சுக்கு, மிளகு, திப்பிலி, ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், பிடாலவணம் முதலியவற்றுடன் தேன் கலந்து அதைக்கொண்டு நோயுற்ற பகுதியைத் தேய்த்தல் எனும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 7-8

**5. கொழுப்பால் தோன்றும் உதட்டு நோய்க்குச் சிகிச்சை**

கொழுப்பால் தோன்றும் உதட்டு நோயில் உடல் வியர்க்கச் செய்த பின் கருவியால் நோயுற்ற பகுதியைக் கீறி விரணத்தைத் தூய்மைப்படுத்தி நெருப்பால் எரித்து ஞாழல், திரிபலை, பாச்சோத்தி ஆகியவற்றுடன் தேன் கலந்து, அதை அப்பகுதிமேல் தேய்த்தல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். 9

எளிதில் சிகிச்சையால் தீர்க்கக் கூடிய உதட்டு நோய்களுக்குச் சிகிச்சைகள் கூறப்பட்டன. இனி பற்களின் வேர்ப்பகுதியைச் சார்ந்த நோய்களுக்கு உரிய சிகிச்சைகள் கூறப்படும். 10

**பல் நோய்கள்**

**6. * சீதாதம் நோய்களுக்குச் சிகிச்சை**

சீதாதம் எனும் நோயில் இரத்தத்தை வெளியேற்றிய பிறகு சுக்கு, கடுகு, திரிபலை, கோரைக்கிழங்கு, ரஸாஞ்சனம் ஆகியவற்றின் கஷாயத்தை வாயில் வைத்துக் கொண்டு பிறகு உமிழ்தல் ஞாழல், கோரைக்கிழங்கு, திரிபலை ஆகியவற்றின் விழுதைப் பூசுதல் திரிபலை, அதிமதுரம், தாமரை, பதுமகம் ஆகியவற்றாலான எண்ணெயை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்துதல் என்பன செய்யத்தக்கவை. 11-12

**7. தந்தபுப்புடக நோய்க்குச் சிகிச்சை**

புதிதாகத் தோன்றிய தந்தபுப்புடக நோயில் இரத்தத்தை வெளியேற்றிய பிறகு ஐந்து லவணங்கள் யவக்ஷாரம் ஆகிய

---

* சீதாதம் - பல்வீறுகளிலிருந்து இரத்தமும், மிருதுவான சிறிய கெட்ட நாற்றம் கொண்ட மாம்ஸங்களும் சிதறும் ஒரு வகை பல்நோய்.

வற்றுடன் தேன் கலந்து நோயுற்ற பகுதியில் அதைத் தேய்த்தல், சிரோவிரேசன முறை, மூக்கில் மருந்திடுதல் எனும் முறைகளைப் பின்பற்றி எண்ணெய் பசைகொண்ட உணவை உட்கொள்ளச் செய்தல் நலம் தரும். 13

**8. தந்த வேஷ்டக நோய்க்குச் சிகிச்சை**

[1]தந்தவேஷ்டகம் எனும் நோயில் இரத்தத்தை வெளியேற்றி பதங்கம், பாச்சோத்தி, அதிமதுரம், கொம்பரக்கு ஆகியவற்றின் தூளுடன் அதிக அளவில் தேன் கலந்து அதை விரணப்பகுதியின் மேல் தேய்த்தல், பாலுள்ள மரங்களின் கஷாயத்தில் தேன், நெய், சர்க்கரை ஆகியவற்றைக் கலந்து அதை வாயில் வெகுநேரம் வைத்துக் கொண்டு கொப்பளித்தல் காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதுடன் பத்து மடங்கு பால் சேர்த்துக் காய்ச்சி எடுத்த நெய்யை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துதல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். 14-15

**9. [2]ஸௌஷிர நோய்க்குச் சிகிச்சை**

ஸௌஷிரம் எனும் நோயில் ஈறிலிருந்து இரத்தத்தை வெளியேற்றி பாச்சோத்தி, கோரைக்கிழங்கு, ரஸாஞ்சனம் ஆகியவற்றின் தூளுடன் தேன் கலந்து பூச வேண்டும். பாலுள்ள மரங்களின் கஷாயத்தை வாயில் கொண்டிருந்து கொப்பளிக்க வேண்டும். நன்னாரி, தாமரை, அதிமதுரம், பாச்சோத்தி, அகில், சந்தனம் ஆகியவற்றின் விழுதுடன் பத்து மடங்கு பால் கலந்து அதனால் செய்த நெய்யை மூக்கிலிடும் மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் சீதாதத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 16-18

**10. [3]உபகுசம் எனும் நோய்க்குச் சிகிச்சை**

உபகுசம் எனும் நோய்க்கு வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் இரண்டு முறைகளாலும் உடலையும் சிரோவிரேசன முறையால் தலைப்பகுதியையும் தூய்மைப் படுத்திக் காட்டாத்தி, கோஜிஹ்வா எனும் செடிகளின்

---

1. தந்த வேஷ்டம் - பயோரியா எனப்படும் பல் நோய்.

2. ஸௌஷிரம் - (பல்) ஈறுகளின் அடியில் உண்டாகும் புரையோடும் கட்டி.

3. உபகுசம் - பல்லீறு வெந்து போய் எரிச்சலெடுத்து பற்கள் ஆட்டம் கொள்ளும் ரோகம்.

இலைகளால் ஈற்றைத் தேய்த்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு தேன் கலந்த ஐந்து வகை உப்புகள், சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றின் தூளை அப்பகுதி மேல் தேய்க்க வேண்டும். திப்பிலி, கடுகு, சுக்கு, நீர்வஞ்சிக்காய் ஆகியவற்றின் தூளை இளஞ்சூடுள்ள நீரில் கலந்து அதை வாயில் வைத்துக் கொண்டு கொப்பளிக்கச் செய்ய வேண்டும். இனிப்புச் சுவை கொண்ட காகோலி முதலியவற்றாலான நெய்யை வாயில் கபளமாக கொள்ளவும். மூக்கிலிடு மருந்தாகவும் பயன்படுத்த வேண்டும். 19-21

### 11. தந்தவைதர்பத்திற்குச் சிகிச்சை

தந்தவைதர்பத்தில் பற்களின் வேரைக் கருவியால் கீறித் தூய்மைப்படுத்தி க்ஷார மருந்தைப் பயன்படுத்தி சீதல முறையை (குளுமைப்படுத்தும் முறையை) முழுமையாகப் பின்பற்ற வேண்டும். 22

### 12. அதிதந்தத்திற்குச் சிகிச்சை

அதிதந்தத்தைப் பிடுங்கி வேறுபடுத்தி நெருப்பால் சுடுதல், கிருமிதந்தத்திற்குரிய சிகிச்சை முறையைக் கையாளுதல் ஆகிய வற்றைத் திறமை மிக்க மருத்துவர் பயன்படுத்த வேண்டும். 23

### 13. அதிமாமிசத்திற்குச் சிகிச்சை

அதிமாமிசத்தைத் துண்டித்து நீக்கி வசம்பு, தேஜோவதி, வட்டத்திருப்பி, ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம் ஆகியவற்றின் தூளைத் தேன் கலந்து பயன்படுத்துதல் திப்பிலித் தூளில் தேன் கலந்து வாயில் வைத்துக் கொண்டிருக்கச் செய்தல் எனும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். விரணத்தைக் கழுவ (வாயை கொப்பளிக்க) பேய்ப்புடல் இலை, திரிபலை, வேம்பு ஆகியவற்றின் கஷாயத்தையும் மற்றும் சிரோவிரேசனம், வைரேசனம் புகை போடுதல் எனும் முறைகளையும் பயன்படுத்த தகும். 24-25

### 14. *தந்தநாடீ நோய்க்குச் சிகிச்சை

தந்தநாடீ எனும் நோய்க்குப் பொதுவாக நாடிக்குரிய சிகிச்சை முறையைப் பயன்படுத்த வேண்டும். . சிறப்பாகச் செய்யத்தக்க சிகிச்சை முறைகளாவன:- நாடீவிரணம் தோன்றிய பகுதியைச் சார்ந்துள்ள பல் அது மேல் வரிசையில் தோன்றியதல்லாத போது ஈற்றுப்பகுதி மாமிசத்தைக் கீறிப்

---

* தந்தநாடீ - பற்களின் வேரில் தோன்றும் நோய்.

பல்லை நீக்க வேண்டும். பிறகு விரணத்தைத் தூய்மைப்படுத்தி க்ஷார மருந்தைப் பயன்படுத்த வேண்டும். அல்லது நெருப்பால் சுட்டெரிக்க வேண்டும். அவ்வாறு செய்யாவிடில் நாடீவிரணம் பல் எலும்பைப் பிளந்து விடும். அசைந்து கொண்டிருக்கும் அப்பல்லை எப்படியும் நீக்க வேண்டியதாகி விடும். 26-28

மேல் வரிசை பற்களைப் பொருத்தமட்டில் நிலையான வேரைக்கொண்ட பல்லைப் பிடுங்கி எடுத்தால் இரத்தப்பெருக்கு அதிக அளவில் தோன்றும். அதனால் கடுமையான வலி உண்டாகும். காணம் அர்திகம் எனும் நோய்களும் உண்டாகும். ஆகையால் மேல் வரிசையில் அசைந்து கொண்டிருக்கும் பல்லாயினும் அதைப் பிடுங்கக்கூடாது. 29-30

தந்த நாடீயைக் கழுவுவதற்கு மல்லி,மருக்காரை, நெருஞ்சி, கருங்காலி ஆகியவற்றின் கஷாயத்தையும், விரணத்தைத் தூய்மைப்படுத்த மல்லி, மருக்காரை, கடுகரோகிணி, நெருஞ்சி அதிமதுரம், பாச்சோத்தி, மஞ்சிட்டி, கருங்காலி ஆகியவற்றின் கஷாயத்தால் செய்யப்பட்ட எண்ணெய் மருந்தையும் பயன்படுத்த வேண்டும். 31-32

பற்களின் வேரைச் சார்ந்த நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் கூறப்பட்டன. இனி பற்களின் நோய்களுக்குரிய சிகிச்சைகள் கூறப்படுகின்றன. 33

## 15. *தந்த ஹர்ஷத்திற்குச் சிகிச்சை

நான்கு எண்ணெய் வகைகளாவன : நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை எனப்படுபவை அல்லது மஹாவாதவியாதி சிகிச்சைக்குக் கூறிய திரைவிருதகிருதம் அவ்வாறே வாத நோயைப் போக்கும் பொருள்களாலான கஷாயத்தை இளஞ்சூடுள்ள நிலையில் கபளமாகக் கொண்டிருத்தல் என்பன தந்த ஹர்ஷம் எனும் நோயைப் போக்கும். 34

எண்ணெய் மருந்தைக் கொண்டு புகை போடுதல், எண்ணெய் மருந்தை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துதல் மற்றும் எண்ணெய்ப்பசை கொண்ட உணவு, புலால்சாறு, புலால் சாற்றாலான யவாகூ எனும் கஞ்சி, பால், பால்ஏடு, நெய், சிரோவஸ்தி வாதத்தைப் போக்கும் முறைகள் ஆகிய அனைத்தும் தந்தஹர்ஷத்தில் நன்மை தரக் கூடியவையாகும். 35

* தந்தஹர்ஷம் - பல் சிலிர்க்கை எனும் நோய்.

### 16. தந்த சர்க்கரை (பற்களில் கறல் கட்டுதல்) நோய்க்குச் சிகிச்சை

பற்களின் வேருக்குத் தீங்கு விளையாத முறையில் மருத்துவர் தந்த சர்க்கரையைப் போக்க வேண்டும். கொம்பரக்குத் தூளில் தேன் கலந்து நோயுற்ற பகுதி மேல் தேய்த்தல், தந்தஹர்ஷத் திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளை முழுமையாகப் பயன்படுத்துதல் என்பன செய்யத்தக்கவை. 36-37

### 17. கபாலிகா நோய்க்குச் சிகிச்சை

கபாலிகா என்பது மிகவும் சிரமப்பட்டுத் தீர்க்கக் கூடிய நோயாகும். இதற்கும் மேல்கூறிய சிகிச்சைகளையே கையாள வேண்டும். 38

### 18. [1]கிருமிதந்த சிகிச்சை

பல் அசையாத நிலையில் உள்ள கிருமிதந்த நோய்க்கு வியர்க்கச் செய்தல், இரத்தத்தை வெளிப்படுத்துதல், வாதத்தைப் போக்கும் அவபீடனநசியம் எண்ணெய்களைக் கொண்டு வாய் கொப்பளித்தல் பத்ரதாரு முதலிய அல்லது சாரடை முதலிய கூட்டுப் பொருள்களாலான மேல்பூச்சு எண்ணெய்ப்பசை மிக்க உணவு முதலியவற்றால் சிகிச்சை செய்ய வேண்டும். 39

அசைந்து கொண்டிருக்கும் பல்லானால் அதைப் பிடுங்கி எடுத்து விட்டு அங்கு தோன்றும் துளை சௌஷிரத்தால் தோன்றிய துளை ஆகியவற்றை நெருப்பால் சுட வேண்டும். பிறகு முதுக்கன் கிழங்கு அதிமதுரம் ஆகியவற்றின் விழுதைக் கொண்டு அதற்கு பத்து மடங்கு பால் சேர்த்துச் செய்த எண்ணெயை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 40

### 19. ஹநுமோக்ஷத்திற்குச் சிகிச்சை

[2]ஹநுமோக்ஷத்திற்கு அர்திதத்திற்குக் கூறப்பட்ட சிரோவஸ்தி, நசியம், புகைபோடுதல் உபநாஹம் முதலிய சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 41

பல் நோய்களால் துன்பப்படும் நோயாளி புளிப்புச் சுவை கொண்ட பழங்கள், குளிர்ந்த நீர், வறட்சியுள்ள உணவு, பல்குச்சி முதலியவற்றால் பல் துலக்குதல், மிகவும் கடினமான பொருள் களை உட்கொள்ளுதல் முதலியவற்றை விலக்க வேண்டும். 42

சிகிச்சையால் தீர்க்கக்கூடிய பல்நோய்களுக்கு சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டன.. இனி நாவில் தோன்றும் எளிதில்

---

1. கிருமிதந்தம் - பற்களில் கிருமி உண்டாகுதல்.
2. ஹநுமோக்ஷம் - கீழ்த்தாடை எலும்பு நழுவுதல்.

தீர்க்கக்கூடிய நோய்களுக்கான சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 43

## நாக்கு நோய்கள்

### 20. வாதத்தால் தோன்றும் [1]ஜிஹ்வாகண்டக நோய்க்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றும் உதட்டு நோய்களுக்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையே வாதத்தால் தோன்றும் ஜிஹ்வா கண்டகம் எனும் நோய்க்குப் பயன்படுத்த வேண்டும். 44

### 21. பித்தத்தால் தோன்றும் ஜிஹ்வாகண்டக நோய்க்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றும் ஜிஹ்வாகண்டகமெனும் நோய்க்கு நாவை நன்றாகத் தேய்த்து இரத்தத்தை வெளியேற்றிய பிறகு இனிப்புச் சுவை கொண்ட பொருள்களின் தூளைத்தேய்த்தல், கண்டூஷத்தை தரித்தல், நசிய முறை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 45

### 22. கபத்தால் தோன்றும் ாகண்டக நோய்க்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றும் ஜிஹ்வாகண்டகநோயில் நாவின் மேல் நன்கு தேய்த்து இரத்தத்தை வெளியேற்றிய பிறகு திப்பிலி முதலிய கூட்டுப்பொருள்களில் தேன் கலந்து நோயுற்ற பகுதியில் தேய்த்தல், மஞ்சள் கடுகு, இந்துப்பு ஆகியவற்றால் கபளதாரணம் செய்தல், பேய்ப்புடல், வேம்பு, கண்டங்கத்தரி, யவக்ஷாரம் முதலியவற்றுடன் கூடிய பால் சோறு உட்கொள்ளச் செய்தல் ஆகியவை நன்மை தரும். 46-47

### 23. [2]உபஜிஹ்விகா (டான்சில்) எனும் நோய்க்குச் சிகிச்சை

உபஜிஹ்விகா எனும் நோயில் நாவை நன்றாகத் தேய்த்து அதன் மேல் க்ஷாரத்தைத் தேய்த்து சிரோவிரேசனம், கண்டூஷ தாரணம், புகை போடுதல் எனும் முறைகளைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். 48

நாவில் தோன்றும் நோய்களுக்கான சிகிச்சை முறைகள் கூறப்பட்டன. தாடைப் பகுதியைச் சார்ந்த நோய்களுக்கான சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன.

---

1. ஜிஹ்வாகண்டகம் - நாக்கு முட்கள் கொண்டது போல் சுரசுரப்புடன் காணப்படும் நோய்.

2. உபஜிஹ்விகா - நாக்கின் அடியில் சதை போல் உண்டாகும் ஒருவித கட்டி.

## 24. 'களசுண்டிகா' எனும் நோய்க்குச் சிகிச்சை

நாவின் மேலுள்ள களசுண்டிகைக்குக் கட்டை விரலையும் சுட்டு விரலையும் இடுக்கி போல வைத்துக்கொண்டு அப் பகுதியைப் பற்றி இழுத்து மண்டலாக்ரம் எனும் கருவியைக் கொண்டு அதிக அளவோ, மிகக் குறைந்த அளவோ அல்லாமல் மூன்றில் ஒரு பங்கு கத்தரித்து நீக்க வேண்டும். 49-50

அதிக அளவில் கத்தரித்தால் இரத்தப்பெருக்கு அதிகமாகி நோயாளி மரிக்க நேரும். குறைந்த அளவு கத்தரித்தால் வீக்கம், உமிழ்நீர் மிகுதியாகப் பெருகுதல், மிக்க உறக்கம், தலைசுற்றல், கண்கள் இருண்டுபோதல் எனும் துன்பங்கள் தோன்றும். ஆகவே அறுவைச்சிகிச்சையில் நன்கு தேர்ச்சி பெற்ற மருத்துவர் கவனத்துடன் தகுந்த அளவு களசுண்டிகையைக் கத்தரித்து இனி கூறப்போகும் சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 51-52

மிளகு, அதிவிடயம், வட்டத்திருப்பி, வசம்பு, கோஷ்டம், குடசப்பாலை, இந்துப்பு ஆகியவற்றின் தூளில் தேன் கலந்து அப்பகுதியில் தேய்க்க வேண்டும். வசம்பு, அதிவிடயம் வட்டத்திருப்பி, சிற்றரத்தை, கடுகரோகிணி, வேம்பு ஆகிய வற்றின் கஷாயத்தைக் கபளதாரணத்திற்குப் பயன்படுத்த வேண்டும். அழிஞ்சில், நாயுருவி, நேர்வாளம், சிவதை, தேவதாரு எனும் இவ்வைந்து பொருள்களையும் அரைத்து நறுமணமுள்ள பஞ்சாகனிவர்த்தி செய்து அதைக்கொண்டு நாள் தோறும் இருமுறை புகை பிடிக்கச் செய்தல், பயற்றன் கஞ்சியில் யவக்ஷாரம் கலந்து உணவு உட்கொள்ளச் செய்தல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். 53-56

### தாடை, தொண்டை நோய்கள்

## 25. [1]துண்டிகேரி முதலிய நோய்களுக்குச் சிகிச்சை

துண்டிகேரி அத்ருஷம், கூர்மம், மாம்ஸஸங்காதம், தாலுபுப் புடம் எனும் நோய்களில் முன்கூறிய முறைகளைக் கையாளுவது டன் சிறப்பாக அறுவைச் சிகிச்சையைச் செய்ய வேண்டும். 57

## 26. [2]தாலுபாக சிகிச்சை

தாலுபாகத்திற்கு பித்தத்தைத் தணிக்கும் செயல் முறைகளைப் பயன்படுத்த வேண்டும்.

1 துண்டிகேரி - தொண்டையில் தோன்றும் ஒருவித நோய்.
2 தாலுபாகம் - தாடையின் வேக்காடு.

### 27. தாலுசோஷ சிகிச்சை

தாலு சோஷம் எனும் நோய்க்கு எண்ணெய் முறை வியர்க்கச் செய்யும் முறை மற்றும் வாதத்தைப் போக்கும் சிகிச்சை முறை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும்.

தாடை நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டன. இனி தொண்டை நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 58

### 28. ரோகிணி நோய்க்குச் சிகிச்சை

சிகிச்சையால் எளிதில் தீர்க்கக் கூடிய ரோகிணி எனும் நோயில் இரத்தத்தை வெளிப்படுத்துதல் வாந்தி எடுக்கச் செய்தல் புகை பிடித்தல் வாய்க்கொப்பளித்தல் மூக்கில் மருந்திடுதல் எனும் சிகிச்சை முறைகள் நன்மை தரும். 59

வாதத்தால் தோன்றும் ரோகிணியில் இரத்தத்தை வெளி யேற்றிய பிறகு ஐந்து வகை உப்புகளைத் தேய்த்தல், எண்ணெயுடன் கூடிய இளஞ்சூடுள்ள வாய் கொப்பளிக்க பயன் படும் மருந்துகளை அடிக்கடி வாயில் வைத்துக் கொண்டிருக்கச் செய்தல் ஆகிய முறைகளைப் பயன்படுத்த வேண்டும்.

பித்தத்தால் தோன்றும் ரோகிணியில் பதங்கம், சர்க்கரை, தேன் ஆகியவற்றை தேய்த்தல் திராட்சை, சிற்றீச்சை ஆகிய வற்றின் கஷாயத்தை வாயில் கொண்டிருக்கச் செய்தல் ஆகிய முறைகள் நன்மை தரும்.

கபத்தால் தோன்றும் ரோகிணியில் ஒற்றடை, கடுகரோகிணி ஆகியவற்றின் தூளை தேய்த்தல் சுவேதா, வாயுவிடங்கம் நேர்வாளம், இந்துப்பு ஆகியவற்றால் செய்த எண்ணெய் மருந்தைக் கபளதாரணத்திற்கும் மூக்கில் மருந்தாக இடுவதற்கும் பயன்படுத்துதல் எனும் முறைகளை கையாள வேண்டும்..

இரத்தத்தால் தோன்றும் ரோகிணி எனும் நோய்க்கு பித்தத்தால் தோன்றும் ரோகிணிக்கு உரிய சிகிச்சை முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

கண்டசாலூகம் என்பதில் இரத்தத்தை வெளியேற்றி துண்டி கேரி நோய்க்குரியது போல சிகிச்சை செய்ய வேண்டும். 60-64

### 29. *அதிஜிஹ்வா சிகிச்சை

நோயாளிக்கு ஒரு வேளை எண்ணெயுடன் கூடிய யவதானியச் சோற்றைக் குறைந்த அளவில் தர வேண்டும்.

*அதிஜிஹ்வா - உள் நாக்கு (டான்சில்) வளருதல்.

உபஜிஹ்வா நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளையே அதிஜிஹ்வா எனும் நோய்க்கும் பயன்படுத்த வேண்டும். 65

### 30. ஏகவிருந்தம், கிலாயு நோய்களுக்கு சிகிச்சை

ஏகவிருந்தம் எனும் நோயில் கெட்ட இரத்தத்தை வெளி யேற்றிய பிறகு சிரோவிரேசனம், புகைபிடித்தல், மேல்பூச்சு, க்ஷார முறை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். கிலாயு எனும் நோய்க்கு அறுவைச் சிகிச்சை செய்ய வேண்டும். 66

### 31. *களவித்ரதி நோய்ச் சிகிச்சை

மர்மஸ்தானத்தைத் தவிர்த்து மற்ற பகுதியில் தோன்றிய நன்கு பக்குவம் பெற்ற களவித்ரதிக்குக் கருவியால் கீறி சிகிச்சை செய்ய வேண்டும்.

### 32. ஸர்வஸர நோய்க்குச் சிகிச்சை

வாதத்தால் தோன்றும் ஸர்வஸர நோய்க்கு ஐந்து வகை உப்புகளைத் தேய்த்தல், வாதத்தைப் போக்கும் பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் மருந்தைக் கபளதாரணம் செய்வித்தல், அதை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துதல் எனும் முறைகள் நன்மை தரும். அறிவு மிக்க மருத்துவர் இந்நோயால் துன்புறும் நோயாளிக்கு புகை முறைக்குக் கீழே குறிப்பிடப்படும் மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 67-68

சாலமரம், ராஜாதனம், ஆமணக்கு, கருங்காலி முதலிய வைரம் பாயும் மரப்பகுதிகள் நஞ்சுண்ட மரம், இலுப்பையின் சாரப்பகுதி, குங்கிலியம், வாசனைப்புல், சாடமாஞ்சி, தகரை, இலவங்கம், ஸர்ஜரஸம், காட்டுசதகுப்பை, தேன்மெழுகு ஆகியவற்றைத் தூளாக்கி தகுந்த அளவு எண்ணெய் சேர்த்துக் கலந்து சிறு கொம்பில் (இலைக்காம்பு போன்றதன் மேல்) பூசிப் புகை பிடிக்கப் பயன்படுத்த வேண்டும்.

ஸர்வஸர நோயில் எண்ணெய்ப்பசையுடன் கூடிய இந்தப் புகை முறை மிகவும் நன்மை தரும். இது கபத்தையும் வாதத்தை யும் தணித்து முக நோயைப் போக்கவல்லதுமாகும். 69-71

### 33. பித்தத்தால் தோன்றும் ஸர்வஸரத்திற்குச் சிகிச்சை

பித்தத்தால் தோன்றும் ஸர்வஸர நோயில் வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் தூய்மைப் பெற்ற உடல் கொண்ட நோயாளிக்குப் பித்தத்தை போக்கவல்ல ›மச் சுவையுள்ள பொருள்களாலும் குளுமை தரும் முறை

* களவித்ரதி - தொண்டை முழுவதும் பரவும் சீழ்கட்டி.

களாலும் செய்யத்தக்க சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 72

## 34. கபத்தால் தோன்றும் ஸர்வஸரத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றும் ஸர்ஸரை நோய்க்கு மருந்துப் பொருளைத் தேய்த்தல் கண்டூஷதாரணம் தூய்மைப்படுத்தும் முறைகளையும் மற்றும் கபத்தைப் போக்கும் முறைகளையும் கையாள வேண்டும். அதிவிடயம், வட்டதிருப்பி, கோரைக்கிழங்கு, தேவதாரு, கடுகரோகிணி, கண்டங்கத்தரி ஆகியவற்றின் தூளைப் பசுவின் சிறுநீருடன் உட்கொள்ளச் செய்ய வேண்டும். இது கப நோய்கள் அனைத்தையும் போக்க வல்லதாகும். 73-75

பால், கருப்பஞ்சாறு, பசுவின் சிறுநீர், தயிர், தயிர்த்தெளிவு, தானியாமிலம், புளிக்காடி, எண்ணெய், நெய் ஆகியவை தோஷங்களுக்கு ஏற்பக் கபளதாரணத்திற்குப் பயன்படுத்தத் தக்கவையாகும். 76

சிகிச்சையால் எளிதில் தீர்க்கக்கூடிய முகநோய்களுக்கு உரிய முறைகள் கூறப்பட்டன. சிகிச்சையால் தீர்க்க இயலாத அசாத்ய முக நோய்களுக்குச் செய்யத்தக்க முறைகள் இனி விளக்கப்படுகின்றன. 77

மாமிசத்தால் தோன்றியது, இரத்தத்தால் தோன்றியது, மூன்று தோஷங்களாலும் (ஸந்நிபாதத்தால்) தோன்றியதும் ஆகிய உதட்டு நோய்கள் ஸந்நிபாதத்தால் தோன்றும் நாடி நோய் ஸௌஷிரம் என்பவை சிகிச்சை செய்யாமல் விடத்தக்கவை. 78

பல்நோய்களில் சியாவதந்தகம் பஞ்சநகம் என்பவை அசாத்தியமானவை. நாவில் தோன்றும் நோய்களில் அலாஸம், தாலுவைச் சார்ந்த அண்ணம் எனும் உள்வாயில் மேல்வரிசை பற்களைச் சார்ந்த பின்பகுதி நோய்களில் அர்புதம், தொண்டை நோய்களில் ஸ்வரக்னம், வலயம், விருந்தம், விதாரி, அலஸம், களௌகம், மாமிசதானம், சதக்னி, ரோகிணி என்பவை சிகிச்சையால் தீர்க்க இயலாத (அசாத்திய) நோய்களாகும். 79-80

பத்தொன்பது வகையான இந்நோய்கள் அசாத்தியமானவை. இவற்றை உணர்ந்தே இயன்றவாறு சிகிச்சை செய்ய வேண்டும். 81

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**முகரோக சிகித்ஸிதம் எனும்**

**இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்திமூன்றாம் அத்தியாயம்

# * சோத சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சோபை அல்லது சோதை எனப்படும் வீக்க நோய்க்கு உரிய சிகிச்சை முறைகள் கூறப்படுகின்றன. 1-2

**1. சோபை நோய்**

)லக்கணம் சிகிச்சை முறைகள் ஆகியவற்றைச் சார்ந்து உடல் உறுப்புகளில் தோன்றக்கூடிய சோபை எனும் நோய் ஆறு வகை எனக் கூறப்பட்டுள்ளது. உடல் முழுவதிலும் பரவி ருக்கக்கூடிய சோபை வாதத்தால் தோன்றியது, பித்தத்தால் தோன்றியது, கபத்தால் தோன்றியது, ஸந்நிபாதத்தால் தோன்றியது, விஷத்தால் தோன்றியது என ஐந்து வகைப்படும். 3

மிகவும் அதிக அளவில் உணவு உண்டு வழிநடத்தல் மாவுப் பண்டங்களை மிகுதியாக உட்கொள்ளுதல் பச்சை நிறமுள்ள மரக்கறி வகைகளையும் உப்புள்ள பண்டங்களையும் அதிக அளவில் உட்கொள்ளுதல் உடல் இளைப்பு (வலிமை குறைந்த உடல்) கொண்டவர் அதிக அளவில் புளிப்புச் சுவையுடைய பொருள்களை உட்கொள்ளுதல் மண்பாத்திரத்தில் பக்குவம் செய்யப்பட்ட பின் நெருப்பில் பக்குவம் செய்த சர்க்கரை கொண்ட பொருள் மற்றும் நீர்ப்பாங்கான அல்லது நீர் வாழ் உயிரினங்களின் புலால் ஆகியவற்றை அதிக அளவில் உட்கொள்ளுதல் அசீரண நோயுள்ளபோது கலவியில் ஈடுபடுதல் ஒன்றுக்கொன்று மாறான தன்மை கொண்ட உணவுப் பொருள்களைக் கலந்து உட்கொள்ளுதல் யானை, குதிரை, தேர், ஒட்டகம் போன்றவற்றில் ஏறி (வெகு தூரம்) பயணம் செய்தல் கால் நடையாக வெகுதூரம் நடத்தல் ஆகியவற்றால் உடலில் தோஷங்கள் சீற்றமுற்று தாதுக்களைக் கெடுத்து உடல் முழுவதும் வீங்கச் செய்து சோபை நோயைத் தோற்றுவிக்கும். 4

வாதத்தால் தோன்றும் வீக்கம் சிவப்பு அல்லது கறுப்பு நிறமுற்றதும் மென்மையானதும் நிலையற்றதும் ஊசியால்

---

* சோதம் - வீக்கம் (சோபை எனவும் கூறப்படும்), அதற்கு உரிய கிசிச்சை முறைகள் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் சோத சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

குத்துவது போன்ற துன்பம் விளைவிப்பதுமாகும். பித்தத்தால் தோன்றும் வீக்கம் மஞ்சள் அல்லது சிவப்பு நிறம் கொண்டு மென்மையானதும், விரைவில் பரவுவதும் மினுமினுப்பும் எரிச்சலும் விளைவிப்பதுமாகும். கபத்தால் தோன்றும் வீக்கம் மஞ்சள் அல்லது வெண்ணிறம் கொண்டு அடர்த்தியும் கடினத்தன்மையும் குளுமையும் உடையதாகி மெல்ல மெல்ல பரவுவதாகவும் அரிப்பு முதலிய துன்பங்களுடன் கூடியதாகவும் இருக்கும். இடுவிஷத்தால் நஞ்சு கலந்த அல்லது கெட்ட நீரைப் பருகுவதாலும் கெட்ட நாற்றமும் பூச்சிகளும் நிறைந்துள்ள நீரில் குளிப்பதாலும் நஞ்சுள்ள உயிரினங்களின் நாவின் தொடுகையாலும் அல்லது நச்சுப் பொருள்களின் தூள் உடல்மேல் படுவதாலும் நஞ்சுள்ள சிறுநீர் மலம் விந்து முதலியவற்றுடன் கூடிய புல் கட்டை முதலியன உடல் மேல் படுவதாலும் தோன்றுவது நஞ்சால் உண்டாகும் வீக்கமாகும். இந்த வீக்கம் மென்மை கொண்டு விரைவாகத் தோன்றுவதாகி நிலையாக உடலில் தங்கி அசைவதும் அசையாததுமாகி எரிச்சல் பக்குவமடைதல் சிவத்தல் முதலிய துன்பங்களைக் கொண்டிருக்கும். 5

ஆமாசயத்தில் தங்கியுள்ள தோஷம் உடலின் மேற் பகுதியிலும், பக்குவாசயத்தில் (சீரண உறுப்புகளில்) தங்கிய தோஷம் உடலின் நடுப்பகுதியிலும், மலாசயத்தில் தங்கிய தோஷம் உடலின் கீழ்ப்பகுதியிலும், உடல் முழுவதும் பரவியுள்ள தோஷம் உடல் உறுப்புகள் அனைத்திலும் வீக்கத்தைத் தோற்றுவிக்கும்.

உடலின் நடுப்பகுதியிலும் உடல் உறுப்புகள் அனைத்திலும் தோன்றிய வீக்கம் மிகவும் கஷ்டப்பட்டு சிகிச்சை புரிவதால் தீர்க்கக்கூடியதாகும். பாதி உடலில் தோன்றியதும் கீழிருந்து மேல் நோக்கி பரவுவதுமான வீக்கங்கள் உயிரைப் போக்கக்கூடியவையாகும். பெருமூச்சு (சுவாசம்) நாவறட்சி வலிவின்மை காய்ச்சல் வாந்தி சுவையின்மை விக்கல் அதிஸாரபேதி இருமல் ஆகியவற்றுடன் கூடிய வீக்கம் உயிரைப் போக்கும். இந்தத் துன்பங்களுடன் கூடிய வீக்கம் சிகிச்சைக்கு உட்படாததாகும். இந்நோய்களுக்கு பொதுவாகவும் சிறப்பாகவும் செய்யத்தக்க சிகிச்சை முறைகள் இனி விளக்கப்படுகின்றன. 6-9

## 2. வீக்க நோயில் விலக்கத் தக்கவை

எல்லா வகை வீக்க நோயிலும் புளிப்புச்சுவை கொண்டவற்றையும் உப்பு கலந்தவற்றையும் மற்றும் தயிர் வெல்லம், கொழுப்பு, பால், எண்ணெய், நெய், மாவுப்பண்டம்,

குருத்தன்மை கொண்ட (எளிதில் செரிமானமாகாத) உணவுப்பொருள்கள் ஆகியவற்றையும் பயன்படுத்தக்கூடாது. 10

3. **வாதத்தால் தோன்றும் வீக்கத்திற்குச் சிகிச்சை**

வாதத்தால் தோன்றும் வீக்கத்திற்குத் திரைவிருதஸ்நேஹம், ஆமணக்கு எண்ணெய் என்பனவற்றில் ஒன்றை நோயாளியின் வலிமைக்கும் நோயின் தரத்திற்கும் ஏற்ப ஒரு மாதம் முதல் பதினைந்து நாட்கள் வரை உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

4. **பித்தத்தால் தோன்றும் வீக்கத்திற்குச் சிகிச்சை**

பித்தத்தால் தோன்றும் வீக்கத்திற்கு [1]நியக்ரோதாதி கணத்தைச் சார்ந்த கூட்டுப் பொருள்களாலான கஷாயத்தால் செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

5. **கபத்தாலான வீக்கத்திற்குச் சிகிச்சை**

கபத்தால் தோன்றும் வீக்கத்திற்கு [2]ஆரக்வதாதி கணக் கூட்டுப் பொருள்களாலான கஷாயத்தால் செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

6. **ஸந்நிபாத வீக்கத்திற்குச் சிகிச்சை**

ஸந்நிபாதத்தாலான வீக்கத்திற்கு ஒரு ஆடகம் (64 பலங்கள்) கள்ளிப்பாலில் பன்னிரண்டு ஆடகம் புளிக்காடியுடன் நேர்வாள விழுது சேர்த்துச் செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும்.

7. **நஞ்சால் தோன்றும் வீக்கத்திற்குச் சிகிச்சை**

நஞ்சாலான வீக்கத்திற்கு உரிய சிகிச்சை முறை கல்பஸ்தானத்தில் விளக்கப்பட்டுள்ளது. 11

---

1. நியக்ரோதாதிகணம் - ஆல், அரசு, அத்தி, வெள்ளலொத்தி, உதியன், சிறுநாவல், மா, பெருநாவல், மருதை, நீர்வஞ்சி, வெண்கருங்காலி, பூவரசு, புளிவஞ்சி, முரளஞ்செடி, முருக்கன், நந்தியாவர்த்தம், இலந்தை, கடம்பு, தும்பை, அதிமதுரம், இலுப்பை என்பனவற்றின் கூட்டுப்பொருள்.

2. ஆரக்வதாதி கணம் - கொன்றை, வெப்பாலரிசி, பாதிரி, நாய்வேளை, வேம்பு, சீந்தில், பெருங்குரும்பை, கருமுறுங்கை, வட்டத்திருப்பி, நிலவேம்பு, மருதோன்றி, பேய்ப்புடல், புங்கு, மணிப்புங்கு, ஏழிலம்பாலை, சித்திரமூலம், பாகல், குருங்குறிஞ்சி, கமுகு எனும் இவற்றின் சேர்க்கை.

## 8. சாமானிய சிகிச்சை முறைகள்

இனி பொதுவான (சாமானிய) சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. வயிற்று நோய்க்குச் சிகிச்சை முறைகள் கூறும்போது தில்வகிருதம் முதலான நான்கு வகை நெய் மருந்துகள் விளக்கப்பட்டுள்ளன. அந்நான்கில் ஏதேனும் ஒரு வகையைப் பயன்படுத்துவதால் வீக்க நோய் தணியும். அல்லது வயிற்று நோய்களுக்குக் கூறப்பட்ட மூத்திர கணத்தாலான ஆநாஹவர்த்தி அல்லது நவாயசம் என்பதை நாள் தோறும் தேனுடன் உட்கொள்ளச் செய்க. அல்லது வாயுவிடங்கம், அதிவிடயம், குடசபாலை, தேவதாரு, சுக்கு, மிளகு ஆகியவற்றின் தூளை நான்கு உளுந்து எடை வெந்நீருடன் உட்கொள்ளச் செய்க. அல்லது சுக்கு, மிளகு, திப்பிலி, யவக்ஷாரம் உலோகபற்பம் ஆகியவற்றைத் திரிபலைக் கஷாயம் அல்லது பசுவின் சிறுநீருடன் சம அளவு பால் கலந்தோ அல்லது கடுக்காயையும் வெல்லத்தையும் சம அளவில் கலந்தோ உட்கொள்ளச் செய்க. அல்லது தேவதாருதூள், சுக்குத்தூள், குங்கிலியம், ஒன்றைப் பசுவின் சிறுநீருடனோ சாரடைக் கஷாயத்துடனோ உடகொள்ளச் செய்க. அல்லது வெல்லத்துடன் சம அளவு சுக்குத்தூள் கலந்து பாலுடன் ஒரு மாத காலம் உட்கொள்ளச் செய்க. அல்லது சுக்கு, மிளகு, திப்பிலி, சாரடைக் கஷாயம் ஆகியவற்றை நெய்யுடன் காய்ச்சி அதனால் வறுக்கப்பட்ட பயற்றை உட்கொள்ளச் செய்க. அல்லது திப்பிலி, திப்பிலி மூலம், செவியம், கொடிவேலி, நாயுருவி, சாரடை ஆகியவற்றால் செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. அல்லது காட்டு உளுந்து, சுக்கு, முருங்கைவேர் ஆகியவற்றாலோ சுக்கு, மிளகு, திப்பிலி, ஆமணக்கு, கருஞ்சிவதை ஆகியவற்றாலோ சாரடை, சுக்கு காட்டு உளுந்து, தேவதாரு ஆகியவற்றாலோ செய்த நெய் மருந்தை உட்கொள்ளச் செய்க. காட்டுச்சுரை தான்றி ஆகியவற்றின் விழுதை அரிசி கழுவிய நீருடன் உட்கொள்ளச் செய்க. யவக்ஷாரம், திப்பிலி, மிளகு, சுக்கு ஆகியவற்றைச் சேர்த்து உப்பில்லாமல் சிறிதளவு எண்ணெயுடன் கூடிய பயற்றங்கஞ்சியுடன் யவதானியம் அல்லது கோதுமையாலான உணவை உட்கொள்ளச் செய்க. குடசப்பாலை, எருக்கு, புங்கன், வேம்பு, சாரடை ஆகியவற்றின் கஷாயத்தை உடல் மேல் ஊற்றிக்கொண்டிருக்க வேண்டும். கடுகு, சூரியகாந்தி, இந்துப்பு, காகஜங்கா ஆகியவற்றை மேல் பூச்சுக்குப் பயன்படுத்த வேண்டும். தோஷத்திற்கு ஏற்ப தீக்ஷ்ண விரேசனம் ஆஸ்தாபன வஸ்தி ஆகியவற்றை மீண்டும் மீண்டும்

பயன்படுத்த வேண்டும். எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை, ஒற்றடம் கொடுத்தல் என்பனவற்றைப் பயன்படுத்த வேண்டும். குளுமைப்படுத்துதல், உஷ்ணப்படுத்துதல், எண்ணெய்ப்பசையைத் தோற்றுவித்தல் முதலியவற்றால் தணியாத வீக்கத்தில் சிரைகளிலிருந்து அடிக்கடி கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 12

வீக்கத்திலிருந்து )பட விரும்பும் நோயாளி மாவுப் பண்டத்தாலான உணவு, புளிப்புச் சுவையுள்ள பொருள்கள், உப்பு, மண், மது, நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் உயிரினங்களின் புலால், நெய், எண்ணெய், பால், எளிதில் செரிமானமாகாத குருத்தன்மை கொண்ட உணவுப் பொருள்கள் ஆகியவற்றைப் பயன்படுத்தக்கூடாது. மற்றும் பகல் தூக்கத்தையும், கலவியையும் தவிர்க்க வேண்டும். 13

ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

சோத சிகித்ஸிதம் எனும்

இருபத்திமூன்றாம் அத்தியாயம் முற்றும்.

# இருபத்திநான்காம் அத்தியாயம்

# * அநாகதாபாத பிரதிஷேதம்

இனி தன்வந்திரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு துன்பங்களைப் போக்கி நோயைத் தடுத்து நிறுத்தத் தக்க சிகிச்சை முறைகளை உபதேசித்தபடி விளக்குவோம். 1-2

உடல் நலம் பெற்று வாழ விரும்புகிறவர் நாள்தோறும் பின்பற்ற வேண்டிய நாட்கடன்கள் இனி விளக்கப்படுகின்றன. 3

1. **பல் துலக்கும் முறை**

முதலில் (விடியற்) காலையில் கண்விழித்ததும் பன்னிரண்டு அங்குலம் நீளமுள்ளதும், சுண்டு விரல் அளவு பருமன் உள்ளதும் கோணல் முடிச்சுகள் இன்றி துளை போன்றவை இல்லாமல் புதிதாகத் தோன்றியதும், நல்ல நிலத்தில் தோன்றியதும் பருவ காலம் மற்றும் வாதம் பித்தம் முதலிய தோஷங்களைப் போக்க வல்ல சாறு வீரியம் முதலியவற்றை நிறைவாகக் கொண்டதும் துவர்ப்பு, இனிப்பு, கசப்பு, கார்ப்பு எனும் சுவைகளில் ஒன்றைக் கொண்டதுமான மரக்குச்சியால் பல் துலக்க வேண்டும்.

கசப்புச் சுவையுள்ளவற்றில் வேம்பு, துவர்ப்புச் சுவை யுள்ளவற்றில் கருங்காலி, இனிப்பு சுவை கொண்டவற்றில் இலுப்பை, கார்ப்புச் சுவை கொண்டவற்றில் புங்கன் எனும் மரக்குச்சிகள் சிறந்தவை. தேன் மற்றும் சுக்கு, மிளகு, திப்பிலி இலவங்கப்பட்டை, ஏலக்காய், இலவங்கப்பத்திரி முதலியவற்றின் தூள், இந்துப்பு எண்ணெய் முதலியவற்றுடன் கூடிய குச்சியால் பல் துலக்குவது மிகவும் நன்மை தரும்.

பற்குச்சியின் மென்மையான பிரஷ் போன்ற குஞ்சிகையால் முன்கூறிய பற்பொடியைக் கொண்டு ஒவ்வொரு பல்லையும்

---

* அநாகதம் - சிறிதளவு தோன்றியுள்ள, ஆபாதம் - துக்கம், பிரதிஷேதம் - தடுத்தல். சிகிச்சை சிறிதளவு தோன்றியுள்ள போதே நோய்களை வளரவிடாமல் தடுத்து துன்பத்தைப் போக்கி கொள்ளும் முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் அநாகதாபாத பிரதிஷேதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

தனித்தனியாக ஈறுகளுக்குத் தீங்கு விளைவிக்காமல் காப்பாற்றிக் கொண்டு தேய்த்துப் பல் துலக்க வேண்டும். இந்தப் பற் பொடியைப் பயன்படுத்துவதால் வாய் நாற்றம், ஊத்தை, கோழை (கபம்) ஆகியவை நீங்கும். வாய் தூய்மை பெறும். உணவு சுவையாகத் தோன்றும். தொண்டை, தாடையுட்பக்கம், உதடு, நாக்கு முதலியவற்றைச் சார்ந்த நோய்கள் வாய்ப்பூத்தல், இருமல், இழுப்பு, விக்கல், வாந்தி முதலியவை கொண்டவரும் உடல் வலிமையற்றவரும் அசீரணம் உள்ள போது உணவு உட் கொண்டவரும் மூர்ச்சை அல்லது மதுவெறி கொண்டவரும் தலைவலி, நாவறட்சி, சோர்வு, மதுவருந்துவதால் சோர்வு கொண்டவரும், அர்திதம் (பக்கவாயு) காதுவலி, பல் நோய் முதலியவற்றால் துன்புறுபவரும் பல்குச்சியைப் பயன்படுத்தக் கூடாது. 4-12

## 2. நாவைத் தூய்மைப்படுத்தும் முறை

வெள்ளி, தங்கம், மரங்களின் மெல்லிய கிளைகள் முதலியவற்றாலான மென்மையும், அடர்த்தியும் கொண்டு பத்து அங்குலம் நீளமுள்ள கருவியைக் கொண்டு நாக்கை வழித்து அழுக்கைப் போக்கித் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். இதனால் வாயில் நாற்றம், விரஸம் (சுவையின்மை), வீக்கம், எரிச்சல் முதலியன நீங்கும். முகம் தெளிவாகும். எண்ணெயை வாயில் கொண்டு சிறிது நேரம் வைத்திருந்து பிறகு கொப்பளிப்பதால் பற்கள் திடப்படும். சுவை தோன்றும். 13-14

## 3. முகம் கழுவும் முறை

பாலுள்ள மரங்களின் கஷாயத்தையும் அல்லது பாலுள்ள மரங்களின் கஷாயத்தில் பாலைக் கலந்தும் முகம் கழுவ பயன்படுத்தலாம். அல்லது பாச்சோத்தி, நெல்லி ஆகியவற்றில் ஒன்றின் கஷாயம், குளிர்ந்த நீர் ஆகியவற்றால் வாயைக் கொப்பளித்தும் கண்களைக் கழுவியும் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டும். இம்முறையைப் பின்பற்றுவதால் நீலிகா (கறுத்த பிறவிமறு), வாய் உலர்தல், பிடகை (சிறிய கட்டி), வங்கு, இரத்தபித்தத்தால் தோன்றும் நோய்கள் முதலியன நீங்கும். முகம் இலேசாகவும், அழகாகவும் காணப்படும். கண் ஒளி மிகும். 15-17

## 4. கண்களில் அஞ்சனம் (மை) இடுதல்

சிந்து நதியில் தோன்றும் சுரோதோஞ்சனம் எனும் கல் தூய்மையானது, சிறந்தது. இதை சந்தனம் போல அரைத்து மை போல் கண்களில் இடுவதால் கண்களில் எரிச்சல், அரிப்பு,

பீளை, நீர்க்கசிவு, கண்வலி முதலியன தோன்றா. கண்களில் ஒளிமிகும். கண்களுக்கு காற்றையும், வெயிலையும் தாங்கும் சக்தி உண்டாகும். இதைப் பயன்படுத்தி வந்தால் கண் நோய்கள் தோன்றா. அதனால் தவறாமல் கண்களுக்கு அஞ்சனமிடுதல் வேண்டும். 18-19

### 5. அஞ்சனம் விலக்க வேண்டியவர்கள்

உணவு உட்கொண்டவர், தலை முழுகிக் குளித்தவர், வாந்தி எடுத்ததாலோ, ஊர்திகளில் ஏறிச்சவாரி செய்ததாலோ சோர் வுற்றவர், இரவில் கண் விழித்தவர், காயச்சலால் துன்புறுபவர் ஆகியவர்கள் அஞ்சனமிடுதலை விலக்க வேண்டும். 20

### 6. வெற்றிலை போடுதல்

பச்சைக்கற்பூரம், சாதிக்காய், வால்மிளகு, இலவங்கம், கஸ்தூரிப்பட்டை, சுண்ணாம்பு, பாக்கு ஆகியவற்றுடன் கூடிய வெற்றிலையை பயன்படுத்துதல் உடல் நலத்தை வளர்க்கும். வெற்றிலையை மெல்லுவதால் வாய்த்தூய்மை, நறுமணம், பொலிவு, அழகு முதலியன தோன்றும். தாடை, பல், குரல், மலம், நாக்கு, புலன்கள் ஆகியவை தூய்மை பெறும். உமிழ்நீர் மிகுதியாகத் தோன்றா. இதயம் வலிமை பெறும். தொண்டை நோய்கள் தோன்றா. தூங்கி விழித்துக் கொண்டவர், உணவு உட்கொண்டவர், குளித்தவர், வாந்தி எடுத்தவர் ஆகியவர் களுக்கு வெற்றிலை மிகவும் நன்மை தரும்.

### 7. வெற்றிலையை விலக்க வேண்டியவர்கள்

இரத்தபித்தம், அடிபடுதலால் உடல் இளைத்தல், நாவறட்சி, மூர்ச்சை, வறட்சி, உடல் வலிமை குறைதல், வாய் உலர்தல் எனும் துன்பங்களைக் கொண்டவர்கள் வெற்றிலையைப் பயன்படுத்தக் கூடாது. 21-24

### 8. தலையில் எண்ணெய் தடவுதல்

தலையில் எண்ணெயைத் தடவிக் கொள்வதால் தலைநோய்கள் விலகும். தலைமுடி மென்மையும், நீளமும், அடர்த்தியும், கரு நிறமும் கொள்ளும். தலைக்குத் தணிவும், முகத்திற்கு அழகும் கூடும். புலன்கள் வலிமை பெறும். தலை நிறைவு பெறும். (மூளை முதலிய உள் உறுப்புகள் நிறைவான வலிமை பெறும் என்பதாம்) 25-26

### 9. தலையில் தடவச் சிறந்த எண்ணெய்

அதிமதுரம், பால்முதுக்கன், சரளமரக்கட்டை, தேவதாரு, இலகுபஞ்சமூலம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு

கஷாயம் காய்ச்சிய பிறகு இவற்றின் விழுதையும் சேர்த்துக் காய்ச்சிய குளுமை கொண்ட சக்ர தைலம் தலையில் தடவிக் கொள்வதற்குச் சிறந்ததாகும். 27-28

தலைமுடியை வாரிக் கொள்வதால் முடி அழகு பெறுவதுடன் தூசி, அழுக்கு முதலியன நீங்கும். காதுகளில் எண்ணெய் விட்டுக் கொள்வதால் தாடை, மன்யா எனும் தாடைப் பகுதி, காது ஆகியவற்றில் தோன்றும் துன்பங்கள் நீங்கும். 29

## 10. எண்ணெய்க் குளியல்

உடல் மேல் எண்ணெய் தேய்த்துக் கொண்டு குளிப்பதால் மென்மை உண்டாகும். கப வாதங்கள் நீங்கும். தாதுக்கள் வலிமை பெறும். உடல் தூய்மையும், நிறமும் பொலிவும் கொள்ளும். 30

உடல் முழுவதிலும் நீர் ஊற்றிக் கொண்டு குளிப்பதால் சோர்வு நீங்கும். வாதம் நீங்கும். என்புகளில் தோன்றும் இணை நழுவுதல் முதலியன நீங்கி இணைப்புகள் திடப்படும். காயம்படுதல், நெருப்பால் விளைந்த சூடு, எதிர்பாராத தாக்குதல், உராய்வு முதலியவற்றாலான துன்பங்கள் நீங்கும். 31

வேரில் நீர் பாய்ச்சுவதால் மரம் எவ்வாறு முளைவிட்டு துளிர்த்து வளர்கிறதோ அதைப் போல எண்ணெய் தேய்த்துக் கொள்வதால் தாதுக்கள் நன்கு வளரும். 32

குளியலுக்குப் பயன்படுத்தும் எண்ணெய் சிரைகளின் முகம், மயிர்க்கால்கள், தமனிகள் முதலியவற்றின் வழியாக உடலைத் தணிவு பெறச் செய்து உடலுக்கு வலிமை தரும். 33

இயற்கை, உடலுக்கு ஏற்றத்தன்மை, பருவக்காலம், நாடு, உடலில் தோன்றும் தோஷங்களின் மாறுபாடு முதலியவற்றை உணர்ந்த மருத்துவர் மக்களை எண்ணெய் அல்லது நெய்யைத் தேய்த்துக் கொண்டு குளிக்கச் செய்ய வேண்டும். 34

## 11. எண்ணெய்க் குளியலை விலக்க வேண்டியவர்கள்

ஆம தோஷத்தில் எண்ணெயைப் பயன்படுத்தக்கூடாது. புதிதாகத் தோன்றிய காய்ச்சல், அசீரணத்தால் துன்புறுதல், பேதி, வாந்தி ஆகிய துன்பங்கள் கொண்டிருத்தல், நிரூஹ வஸ்தியைப் பயன்படுத்துதல் ஆகிய நிலைகளில் எண்ணெய்க் குளியலை விலக்க வேண்டும். அசீரணம், புதிய காய்ச்சல் ஆகிய துன்பங்கள் உள்ள போது எண்ணெய்க் குளியல் செய்தால் நோய் கஷ்ட சாத்தியமாகிவிடும். மற்ற பேதியாதல்

முதலியவை கொண்ட போது எண்ணெய்க் குளியலை செய்தால் சடராக்னி குறைந்து போதல் முதலான நோய்கள் தோன்றும். [1]ஸந்தர்ப்பணத்தால் தோன்றும் நோய்கள் கொண்ட போதும் எண்ணெய்க்குளியலை விலக்க வேண்டும். 35-37

12. **உடற்பயிற்சியின் பயன்**

உடலுக்கு சோர்வு தரும் செயல் வியாயாமம் அல்லது உடற் பயிற்சி எனப்படும். உடற்பயிற்சி செய்த பிறகு மெல்ல மெல்ல உடலைத் தேய்த்து விட்டுக் கொள்ள வேண்டும். உடற்பயிற்சி செய்வதால் உடலுக்கு செழிப்பு, பொலிவு, உடலுறுப்புகள் தக்க படி அழகு பெறுதல், சடராக்னி வளர்தல், சோம்பல் சிரமம் நீங்குதல், நிலைபெறுதல், இலேசாகுதல், உடல் வளர்ச்சி, [2]சிலேஷகம், நாவறட்சி, வெப்பம், குளுமை முதலியவற்றைத் தாங்கும் வலிமை, உடல் நலம் ஆகியவை தோன்றும். உடற்பருமனைக் குறைக்கும். உடல் திடமும், வலிமையும் பெறுதலால் பகைவரால் அச்சம் தோன்றாது. உடற்பயிற்சியை முறையாக விடாமல் செய்து கொண்டிருப்பவர்களை முதுமை விரைவில் நெருங்காது. உடற்பயிற்சி செய்பவரின் மாமிச பேசிகள் திடப்படும். 38-42

உடற்பயிற்சி செய்து வியர்வை தோன்றியவர் உடலையும், கால்களையும் நன்கு தேய்த்து விட்டுக் கொள்வதால் சிங்கத்தை எளிய விலங்குகள் நெருங்காதிருத்தல் போல நோய்கள் அவர் அருகில் வாரா. உடல் வலிமை பெற்று ஆயுளை வளர்க்கும். பொலிவும், குணமுமற்றவரையும் அழகுள்ளவராக்கும். உடற் பயிற்சி செய்பவர், ஒன்றுக்கொன்று மாறான தன்மையுள்ள உணவுப் பொருளை ஒன்று சேர உண்டாலும், புளிப்புச்சுவை மிகுந்துள்ளதாயும், சரியாக பக்குவம் பெறாததாயுமுள்ள உணவு வகைகளை உட்கொண்டாலும் அவை நன்கு செரிமானமடையும். எல்லா பருவக்காலங்களிலும் நாள்தோறும் தன் உடல் வலிமையில் பாதிக்கு ஏற்ற அளவு உடற்பயிற்சி செய்ய வேண்டும். அந்த அளவுக்கு மீறிப் பயிற்சி செய்தல் தீங்கு விளைவிக்கும். வியாயாமம் செய்யும் மனிதனின் இதயத்தில் நிலைபெற்ற உயிர்க்காற்று, வாய் வழியே வரத்துவங்கினால் அந்நிலை பாதி அளவு வலிமையாகுமென அறிக. ஆயுள், வலிமை, உடல் நிலை, நாடு, காலம், உணவு ஆகியவற்றை உணர்ந்து அவற்றிற்கு ஏற்ப உடற்பயிற்சி செய்ய வேண்டும். மாறாகச் செய்யும் பயிற்சியால் நோய்களே தோன்றும். 43-48

---

1.ஸந்தர்ப்பணம் - உடலுக்கும், மனதிற்கும் உவகையூட்டும் சிகிச்சை முறை.

2.சிலேஷகம் - (ச்லேஷ்கம்) ஸந்திகளில் இருந்து கொண்டு உட லுக்கு வன்மையையும் உறுப்புகளுக்குத் திறமையையும் தரும் கபம்.

### 13. அளவுக்கு மீறிய உடற்பயிற்சியால் விளையும்

அளவுக்கு மீறிய உடற்பயிற்சியால் க்ஷயம், நாவறட்சி, சுவையின்மை, வாந்தி, இரத்தபித்தம், தலைச்சுற்றல், சோர்வு, கிலேசம், இருமல், இழுப்பு முதலிய நோய்கள் தோன்றும். 49

### 14. உடற்பயிற்சியை விலக்க வேண்டியவர்கள்

இரத்தபித்த நோய் கொண்டவர், உடல் இளைத்தவர், விக்கம், இருமல், இழுப்பு, அடிபடுதல் முதலியவற்றால் துன்புறுபவர், உணவு, உட்கொண்டவர், கலவியால் உடல் இளைத்தவர், தலைச் சுற்றல் உள்ளவர் ஆகியவர்கள் உடற்பயிற்சியை விலக்க வேண்டும். 50

### 15. உடலுக்கு மேல் பூச்சுகளால் ஏற்படும் பயன்

தகுந்த மருந்துப் பொருள்களை உடலின் மேல் பூசிக்கொள்வ தால் வாதம் தணியும், கொழுப்புக்கரையும், உறுப்புகள் நன்கு நிலைபெறும். தலைமுடி தோல் மென்மை பெறும். சில எண் ணெய்ப் பசையற்ற மருந்துப் பொருள்களை உடலின் மேல் தேய்த்துக் கொள்வதாலும் எண்ணெயுடன் கூடிய மருந்துப் பொருள்களைத் தேய்த்துக் கொள்வதாலும் சிரைகளின் வாய்ப்பகுதி வளர்ந்து தோலைச் சார்ந்த பிராஜகபித்தம் (ஒளி) என்பது நன்கு பொலிவு பெறும். எண்ணெய் கலந்த மருந்துப் பொருள்களைப் பூசிக் கொள்வதால் பெண்களின் உடல் நன்கு பொலிவுடன் கூடியதாகும். உடல் மேல்பூச்சு உடலைத் தூய்மைப்படுத்தும். மற்றும் உடலை இலேசாக்கும். நல்ல தன்மைகளைத் தோற்றுவிக்கும். அரிப்பு, கோடம் எனும் துன்பம், வாதம் முதலியவற்றைப் போக்கும். 51-54

### 16. கடல் நுரையின் பயன்

கடல் நுரையைக் கொண்டு உடலின் மேல் தேய்த்துக் கொள்ளும் முறையைக் கையாள்வதால் முழங்கால்கள் நிலைபெறுவதுடன் இலேசாகும். அரிப்பு, கோடம், வாதத்தடை, மலம் ஆகியவற்றைப் போக்கும்.! 55

செங்கல்லைக் கொண்டு உடலின் மேல் தேய்த்துக் கொள்ளும் முறை கையாளப்படுவதால் தோலின் ஒளி (பிராஜக பித்தம்) மிகும். சிரைகளின் முகங்கள் நன்றாக விரிவடையும். அரிப்பு, கோடம் என்பவை அழியும். தூக்கம், அழற்சி, சோர்வு, வியர்வை, நாவறட்சி முதலியன நீங்கும். 56

### 17. குளியலின் பயன்

குளிப்பதால் இதயம் வலிமை பெறும். வியர்வை, கெட்ட நாற்றம் முதலியன நீங்கும், புலன்கள் தெளிவு பெறும். சோம் பலும், இதயத்தில் கலக்கமும் நீங்கும். மகிழ்ச்சி உண்டாகும். ஆண்மை மிகும். இரத்தத்தைக் குளியல் தூய்மைப்படுத்தும். சடராக்னி நன்கு வளர்ச்சி பெறும். 57-58

### 18. வெந்நீரின் பயன்

தலைக்கு மேல் வெந்நீரை ஊற்றிக் கொண்டு குளிப்பது கண்களுக்குக் கெடுதலை உண்டாக்கும். குளிர்ந்த நீரால் தலையைத் தூய்மைப்படுத்துவது கண்களுக்கு இதயமாகும். 59

கபம் மற்றும் வாதம் சீற்றமடைந்துள்ளபோது நோயின் வலிமையறிந்து சிகிச்சை முறைக்கு ஏற்ப தலை மேல் வெந்நீரை ஊற்றிக் கொண்டு குளிக்கச் செய்க. 60

குளிர்காலத்தில் மிக்க குளிர்ந்த நீர் கபத்தையும், வாதத்தையும் சீற்றமுறச் செய்யும். வெயில் மிகுந்துள்ள காலத்தில் மிக்க சூடுள்ள நீர் பித்தத்தையும், இரத்தத்தையும் சீற்றமுறச் செய்யும். 61

### 19. குளியலை விலக்க வேண்டியவர்கள்

அதிஸாரம், காய்ச்சல், காதுவலி, வாதத்தால் துன்பம், ஆத் மானம், சுவையின்மை, அசீரணம் முதலியவற்றால் துன்புறுபவர் களும், உணவு உட்கொண்டவரும் குளியலைத் தவிர்க்க வேண்டும். 62

### 20. மெய்ப்பூச்சு

மெய்ப்பூச்சு உடல் நிறத்தைச் சிறப்பாக்கும். மகிழ்ச்சியூட்டும். பொலிவு, வலிமை ஆகியவற்றை வளர்க்கும். வியர்வையாலான நாற்றத்தையும், நிறம் குறைதலையும், சோர்வையும் போக்கும். குளியலை விலக்க வேண்டியவர்கள் மெய்ப்பூச்சையும் கைவிட வேண்டும். 63

### 21. மலர் சூடுதல் முதலியவற்றால் ஏற்படும் பயன்

மலர்சூடுதல் அழகிய தூய ஆடை அணிதல் இரத்னாபரணங்களைச் சூடுதல் முதலியன மகிழ்ச்சியூட்டும். பூதங்களால் ஏற்படும் துன்பங்களைப் போக்கும். உடற்பொலிவை யும் சௌபாக்யத்தையும் மிகச் செய்யும். முகத்தில் பூச்சுகளைப்

பயன்படுத்துதலால் கண்கள் நிலைபெறும். தோள் முகம் முதலியவற்றில் வங்கு பிடகை எனப்படும் சிறுகட்டிகள் முதலியன நீங்கி முகம் அழகுடன் மலர்ந்த தாமரைபோல காணப்படும். கண்களில் மை இட்டுக் கொள்வதால் கண்விழிகள் தூய்மை பெறும். கண் பீளை முதலிய அழுக்குகள் நீங்கித் தெளிவாக விளங்கும். 64-66

### 22. இறைவணக்கம் முதலியவற்றின் பயன்

நாள்தோறும் தேவதைகள் விருந்தாளிகள் அறமும் பண்பும் மிக்கவர்கள் ஆகியவர்களை வணங்கி வழிபடுவதால் குலம் வளரும். புகழும் இம்மை மறுமைகளில் சுகமும் ஆயுளும் மிகும். செல்வமும் பொருளும் மேன்மேலும் வளர்ச்சி பெறும். 67

### 23. உணவின் பயன்

உணவு உடலைத் திடப்படுத்தும். வலிமையூட்டும்.ஆயுள் உடற்பொலிவு, ஊக்கம், நினைவாற்றல், சடராக்னி முதலியன நன்கு வளரும். 68

### 24. கால் கழுவுவதன் பயன்

கால்களைக் கழுவிக்கொள்வதால் கால்களில் உள்ள அழுக்கு நீங்கி தூய்மை உண்டாகும். நோயும் சோர்வும் நீங்கும். கண்கள் தெளிவு பெறும். வலிமை மிகும். அரக்கர்களால் துன்பம் நேராது. மனமும் தெளிவு பெறும். 69

### 25. கால்களில் எண்ணெய்த் தேய்த்துக் கொள்வதன் பயன்

கால்களில் (உள்ளங்கால்களிலும்) எண்ணெய் தடவி நன்கு தேய்த்துக் கொள்வதால் உறக்கம் வரும். உடலுக்கு சுகம் உண்டாகும். கண்களில் ஒளி மிகும். சோர்வும், தூங்கிவழிதலும் அகலும். கால்களின் மேல் தோல் மென்மைபெறும். ஆகவே பாதங்களில் எண்ணெயைத் தடவித் தேய்த்துக் கொள்ளுதல் உடல் நலத்தை வளர்க்கும். 70

### 26. காலணி அணிவதன் பயன்

காலணிகள் அணிந்து நடப்பதால் காலில் நோய்கள் தோன்றா. உடல் வலிமை தோன்றும். அரக்கர்களை அழிக்கும். மனம் தெளிவு பெறும். சுகமும் உடற்பொலிவும் வளரும். காலணியின்றி வெற்றுக்காலுடன் நடந்தால் நோய்கள் தோன்றும், ஆயுளும் குறையும். கண்களில் ஒளி மங்கும். 71-72

### 27. முடி, நகம், உரோமம் முதலியவற்றை நீக்குவதன் பயன்

தலைமுடி, நகங்கள், உடலில் மறைவிடங்களில் தோன்றும் உரோமங்கள் ஆகியவற்றை அடிக்கடி நீக்குவதால் அழுக்கு நீங்கும். மனம் தெளிவு பெறும். உடல் இலேசாகும். சௌபாக்யம் வளரும். ஊக்கம் மிகும். 73

### 28. கவசம் (சொக்காய் முதலியன) அணிவதன் பயன்

உடலை மூடச் சொக்காய் முதலியன அணிவதால் உடல் தூய்மை பெறும். நிறமும் பொலிவும் வலிமையும் வளரும். 74

### 29. தலைப்பாகை, குடை முதலியவற்றின் பயன்

தலை மேல் பாகையை அணிவதால் புனிதத்தன்மை நிலை பெறும். தலைமுடி வளரும். காற்று, வெயில், தூசி ஆகிய வற்றிலிருந்து தலை பாதுகாக்கப்படும். குடையைப் பிடித்துக் கொண்டு வழி நடப்பதால் மழை, காற்று, வெயில், தூசி, பனி ஆகியவற்றிலிருந்து தலை பாதுகாக்கப்படுகிறது. உடல் நிறம், கண்களில் ஒளி, உடற்பொலிவு ஆகியவை மிகும். இவ்வாறு பல நன்மைகளை விளைவிக்கும். 75-76

### 30. கைத்தடியின் பயன்

கையில் தடியைப் பிடித்துக்கொண்டு வழி நடத்தலால் நாய், பாம்பு முதலிய விலங்குகளாலும் கொம்புள்ள பசு முதலிய விலங்குகளாலும் அச்சம் விளையாது. சோர்வு, நடை சரிதல் முதலியன ஏற்படா. முதுமையில் கைத்தடி உறுதுணையாகும். நல்ல பண்பு, ஊக்கம், பொலிவு, நிலைபெறுதல், தைரியம், திறமை முதலியன மிகும். வழி நடக்கும் போது தடி உற்றதுணையாகி அச்சத்தைப் போக்கும். 77

### 31. ஓய்வு எடுத்துக் கொள்வதன் பயன்

சுகமாக அமர்ந்து ஓய்வு எடுத்துக் கொள்வதால் உடல் நிறம் மிகும். கபம் உடற்பருமன், மென்மை ஆகியவை தோன்றும். சுகமும் மிகும். 78

### 32. வழி நடத்தலின் பயன்

உடல் வலிமைக்கு ஏற்ற அளவு வழி நடத்தல் நிறத்தையும், கபத்தையும், உடற் பருமனையும், மென்மையையும் குறைக்கும். மிகத் தொலைவு நடப்பதால் விரைவில் முதுமையைத் தோற்றுவிக்கும். உடல் வலிமையைக் குறைக்கும். 79

**33. உலாவுவதன் பயன்**

உடலுக்குத் துன்பம் விளைவிக்காத அளவு உலாவும் பழக்கத்தை மேற்கொள்வதால் ஆயுள், வலிமை, அறிவாற்றல், சடராக்னி முதலியன வளரும். புலன்களுக்குச் செயலாற்றும் திறமை மிகும். 80

**34. நல்ல படுக்கை, இருக்கை முதலியவற்றின் பயன்**

மென்மையான விரிப்புகளுடன் கூடிய படுக்கையில் படுத்து உறங்குதல், அத்தகைய இருக்கைகளில் உட்காருதல் சோர்வையும் வாதத்தையும் போக்கும். வலிமை, செழிப்பு, உறக்கம், தைரியம் ஆகியவற்றை வளர்க்கும். மாறாகக் கடினமான படுக்கை இருக்கைகள் துன்பத்தை விளைவிக்கும். 81

**35. சாமரம், விசிறி முதலியவற்றைப் பயன்படுத்துதல்**

சாமரம், விசிறி முதலியவற்றால் உடலில் மென்மையான காற்றுபடும் படி வீசிக்கொள்வதால் ஈ முதலியன நெருங்கா. பனை ஓலை முதலியவற்றின் காற்று சோர்வு, அழற்சி, சிரமம், வியர்வை, நினைவிழத்தல் முதலியவற்றைப் போக்கும். 82

**36. கால் பிடித்து விடுதலின் பயன்**

கைகளால் கால்களை மெல்ல மெல்ல அழுத்திப் பிடித்து விட்டுக் கொள்வதால் தெளிவையும் உறக்கத்தையும் தோற்றுவிக்கும். உடல் வலிமை மிகும். கபம், வாதம், சோர்வு ஆகியவை நீங்கும். மாமிசம், இரத்தம், தோல் ஆகியவை செழிப்புறும். இவ்வாறு சுகம் விளைவிக்கும். 83

**37. அதிக காற்று முதலியவற்றால் தோன்றும் விளைவுகள்**

வலிமையுடன் வீசும் காற்றை உடல் மேல் படும்படி இருப்பதால் வறட்சித்தன்மை, நிறம் மாறுபடுதல், உடல் மரத்தல் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். அழற்சியையும் செரிமான வலிமையையும் போக்கும். வியர்வை, நினைவிழத்தல், நாவறட்சி ஆகியவற்றைப் போக்கும். எதிர் திசையிலிருந்து வீசும் இத்தகைய காற்று இதற்கு மாறான விளைவுகளைத் தோற்று விக்கும். முதுவேனில், மற்றும் சரத்ருதுக்களில் மனமகிழ்ச்சியுடன் விரைவாக வீசும் காற்று உடல் மேல் படும்படி இருக்க வேண்டும். ஆயுள் அறிவாற்றல் உடல் நலம் ஆகியவற்றை வளர்த்துக் கொள்ள விரும்புகிறவர் மிக்க வேகத்துடன் வீசாத காற்றுள்ள 'டத்தில் வசிக்க வேண்டும். 84-85

### 38. வெயில், நிழல் ஆகியவற்றின் பயன்

வெயிலில் இருப்பதால் பித்தம், நாவறட்சி, வியர்வை, வெப்பம், இரத்தபித்தம் ஆகியவை வளரும். நினைவிழத்தல் உண்டாகும். அழற்சியும், உடல் நிற மாறுபாடும் தோன்றும். நிழலில் இருப்பது இவற்றிற்கு மாறான தன்மைகளை விளைவிக்கும். 86

### 39. நெருப்பால் வெப்பப்படுத்திக் கொள்வதன் பயன்

நெருப்பால் உடலை வெப்பப்படுத்திக் கொள்வது (நெருப்பின் அருகில் வேலை செய்வது) வாதம், கபம், உடல் மரத்தல், குளிர்ச்சி, நடுக்கம் ஆகியவற்றைப் போக்கும். ஆமத்தையும் அபிஷ்யந்தத்தையும் எரிக்கும். இரத்தத்தையும் பித்தத்தையும் கெடுக்கும். 87

### 40. உறக்கத்தின் பயன்

தக்க சமயத்தில் உறங்குவதால் உடல் செழிப்புறும். நிறமும் வலிமையும் ஊக்கமும் மிகும். சடராக்னி வளரும். சோம்பலைப் போக்கும். தாதுக்களைச் சம நிலை பெறச் செய்யும். 88

### 41. யாத்திரை செல்வதற்கு முன் பின்பற்ற வேண்டியவை

வழி நடை அல்லது யாத்திரை துவங்குவதற்கு முன் தலை முடியை நகங்களை வெட்டிக் கொள்ள வேண்டும். புனித தூய வெண்ணிற ஆடையை அணிய வேண்டும். சிறு தலைப்பாகை, குடை, காலணி, கைத்தடி முதலியவை கொண்டு தக்க தருணத்தில் இதமான உரைகளைக் குறைந்த அளவு இனிமையுடன் கூறுபவரும், உயிரினங்களின்பால் அன்பும் சுற்றமனப்பான்மையும் கொண்டவரும் ஆசிரியர் அல்லது முதியவரின் அனுமதி பெற்று நல்ல துணையாகுபவர்களுடன் கூடி யாத்திரையை (பயணத்தை) துவங்க வேண்டும். இரவு நேரங்களில் பயணம் செய்யக்கூடாது. தலைமுடி, என்பு, முள், கல், சாம்பல், உமி, புற்கட்டு, மண்பாண்டம், நெருப்பு, புனிதமற்ற நிலையம், குளிக்கும் இடம், பலி கொடுக்கும் இடம், மிக்க உயரமான நிலம், தாழ்வான நிலம், யாகத்திற்கான கம்பம் நடும் நிலம், நான்கு வழிகள் கூடும் இடம் (நாற்சந்தி), பெரும்பள்ளம் முதலியவற்றை மிதித்துக் கொண்டு (அவற்றின் மேலாக) நடக்கக்கூடாது. 89

அரசாட்சிக்கு மாறான கடுமையான தன்னலத்தையே உணர்த்துவதான உரையாடல்களை தவிர்க்க வேண்டும். தேவதை, அந்தணர், வணக்கத்திற்கு உரிய பெரியவர் ஆகியவர்

களைப் பற்றிப் பழிச் சொல் கூறக்கூடாது. அரசுக்கு துரோகம் செய்பவர், பைத்தியக்காரன், அறவழியைத் தவிர்த்து நடப்பவர், நீசன், தாழ்மையான தன்மைகள் கொண்டவர், நல்லொழுக்க மற்றவர் ஆகியவர்களுடன் இணைந்து செல்லக்கூடாது. 90

மரம், மலை, மலைவீழ் அருவி, ஏற்றத்தாழ்வான நிலம், புற்று, துஷ்டத்தன்மையுள்ள (முரட்டுக்) குதிரை, யானை ஆகியவற்றின் மீது ஏறக்கூடாது. நீர் நிறைந்துள்ள ஆறு, கடல், ஆழமறியக் கூடாத குட்டை, பள்ளம், கிணறு ஆகியவற்றில் இறங்கக்கூடாது. சிதைந்து மக்கள் வாழாத வீடு, மயானம், மக்கள் இல்லாத வனம் அல்லது தோப்பு முதலியவற்றில் தங்கக்கூடாது. கொழுந்து விட்டெரியும் தீ, புலி, பாம்பு, பூச்சி முதலியவை உள்ள இடத்தை நெருங்கக்கூடாது. கடும் தொற்று நோய் பரவியுள்ள குளம், போர் கலகம், புலி, பாம்பு, கொம்புள்ள விலங்குகள் ஆகியவற்றிற்கு அருகில் செல்லக்கூடாது. 91

நெருப்பு, பசு, குரு, அந்தணர், ஊஞ்சல், ஆண் பெண்களுக்கு டயில் உள்ள நிலம் ஆகியவற்றிற்கு இடையில் புகுந்து செல்லக்கூடாது. தேவதை, பசு, அந்தணர், மயானத்தில் உள்ள மரம், கொடிக்கம்பம், நோயாளி, அறவழியை கைவிட்டவர், பாபச் செயல்புரிபவர் ஆகியவர்களின் நிழலைத் தாண்டக் கூடாது. மறைந்து கொண்டிருக்கும் அல்லது எழுந்து கொண்டி ருக்கும் சூரியனை பார்க்கக்கூடாது. கன்றுக்குப் பாலூட்டிக் கொண்டிருக்கும் பசு, சுயமாக ஏதேனும் பருகிக் கொண்டிருக்கும் அல்லது வேறு நிலத்தில் மேய்ந்து கொண்டிருக்கும் பசு ஆகியவை பற்றி யாருடனும் கூறக்கூடாது. நட்சத்திரம் விழுதல், வானவில் ஆகியவற்றைப் பிறருக்கு சுட்டிக்காட்டக்கூடாது. நெருப்பை வாயால் ஊதக்கூடாது. நீரையோ நிலத்தையோ பாதத்தால் அடித்து களிக்கக்கூடாது. 92

மலம், சிறுநீர் வெளிவர இருக்கும்போது அவற்றின் வேகத் தைத் தடுக்கக் கூடாது. மலம், சிறுநீர் முதலியவற்றை கிராமம், நகரம், கோவில், மயானம், நாற்சந்தி, குளம், நடக்கும் வ ஆகியவற்றின் அருகில் திறந்தவெளியில் கழிக்கக்கூடாது. காற்று, நெருப்பு, நீர், நிலா, சூரியன், பசு ஆகியவற்றையும் மற்றும் குருவையும் எதிர் நோக்கிக் கொண்டு மலங்கழிக்கக் கூடாது. 93

நிலத்தை நகத்தால் கீறக்கூடாது. வாயை கை அல்லது ஆடையால் மறைத்துக் கொள்ளாமல் சபையில் கொட்டாவி, ஏப்பம், பெருமூச்சு விடுதல், காறி உமிழ்தல், மூக்கைச் சிந்துதல் போன்றவற்றைச் செய்யக்கூடாது. குருவின் எதிரில் கட்டிலைச் சார்ந்தோ, காலை நீட்டிக்கொண்டோ உட்காரக்கூடாது. 94

தலை முடியை விரலால் கோதுதல் கூடாது. காது, மூக்கு, சுரோதஸ்கள், பல், கண் முதலிய துளைகளைக் கைவிரலால் குடைவது கூடாது. தலைமுடி, முகம், நகம், ஆடை, உடல் முதலியவற்றை தேவையின்றி அசைக்கக்கூடாது. உடல், நகம், முகம் முதலியவற்றால் தேவையின்றி ஒலி எழுப்பக்கூடாது. கட்டை, மண்கட்டி, புல் ஆகியவற்றைக் கொண்டு வீணாக முறித்தல், நசுக்குதல், கிள்ளுதல் போன்றவற்றைச் செய்யக்கூடாது. 95

எதிர்காற்று, எதிர் வெயில் ஆகியவற்றை உடல் மேல் படும்படி அனுபவிக்கக்கூடாது. உண்ணும்போது நெருப்பால் உடலைச் சூடுபடுத்திக்கொள்ளுதல் கூடாது. மிக்க உயரமான அல்லது சிறிய வெறும் கட்டையாலான ஆஸனத்தில் அமர்ந்திருக்கக்கூடாது. கழுத்தை ஒரு பக்கமாகச் சாய்த்து வைத்துக் கொண்டிருக்கக்கூடாது. உடலைக் கோணலாக வைத்துக் கொண்டு ஏதேனும் செய்தல், உணவருந்துதல் கூடாது. கண்களை அகலப்படுத்திக்கொண்டு மிக்க ஒளியுள்ள பொருள், சூரியன், மிக்க நுட்பமான பொருள், அசைந்து கொண்டிருக்கும் அல்லது சுற்றிக்கொண்டே இருக்கும் பொருள் ஆகியவற்றை உற்று நோக்கக் கூடாது. பளுவை தலை மேல் வைத்துக் கொண்டு சுமக்கக்கூடாது. உறக்கம், விழிப்பு, படுத்திருத்தல், உட்காருதல், சுற்றுதல், தேர் முதலிய ஊர்திகளின் மேல் சவாரி செய்தல், குதிரை முதலியவற்றின் மீது ஏறிச்செல்லுதல், குதித்தல், தாண்டுதல், நீந்துதல், சிரித்தல், உரையாடுதல், கலவி புரிதல், உடற்பயிற்சி முதலிய தக்க செயல்களாயினும் அளவுக்கு மீறிச் செய்யக் கூடாது. 96

பழக்கமான இதமல்லாத உணவு, செயல் முதலியவற்றை விடுதல், தனக்கு இதம் விளைவிப்பதான பழக்கமற்ற உணவு, செயல் முதலியவற்றைத் துவங்குதல் ஆகியவற்றின் போது ஒரேயடியாக விலக்குதலோ ஏற்பதோ செய்யாமல் நான்கில் ஒரு பங்கு விடுதலும் அவ்வாறே நான்கில் ஒரு பங்கு ஏற்றுக் கொள்ளுதலுமாக துவங்கிக் கிரமமாக அளவை மிகுதிப்படுத்திச் சில நாட்கள் சென்றபிறகு கூடாததை அறவே விலக்குதலும் கூடியதை முழுமையாக ஏற்றுக் கொள்ளுதலும் செய்ய வேண்டும். எந்தப் பொருளையும் முழுமையாக உடனே கைவிடுவதோ ஏற்றுக் கொள்வதோ கூடாது. 97

முகத்தில் வலிமையைத் தாங்கி உறங்கக் கூடாது. உடைந்த பாந்திரத்திலோ பாத்திரம் இல்லாமலோ உணவை உட்கொள்ளக் கூடாது. வெறும் கையால் நீரை எடுத்துப் பருகக்கூடாது.

(பாத்திரத்தில் நீரை வைத்தக் கொண்டு பருகவேண்டும் என்பதாம்). சமயத்தில் மருத்துவரால் பரிசோதனை செய்யப் பட்ட இதமான எண்ணெய்ப்பசையுள்ள இனிய சுவை கொண்ட உணவைச் சற்று அளவைக் குறைத்து உண்ண வேண்டும். கிராமத்தில் அனைவரும் சேர்ந்து உண்ணும் உணவு, தேரோட்டி முதலான பணியாளர்கள், தொழிலாளர்கள் கூட்டாக சேர்ந்து செய்யும் உணவு, வேசி, கடைக்காரர், பகைவர், முரடர், அறவழி பிறழ்ந்தவர் ஆகியவர்கள் அளிக்கும் உணவு, சத்திரம், யாகம் முதலிய விழாக்களில் அளிக்கப்படும் உணவு முதலியவற்றை விலக்க வேண்டும். மற்றும் தனக்குப் பிடிக்காதவர் அளிப்பதும் தனக்கு விருப்பமற்ற சுவை, தோற்றம், மணம், தொடுஉணர்ச்சி, சொல் ஆகியவை கொண்டதும் அத்தகைய மனிதன் அளிப்பதுமான உணவையும் விலக்க வேண்டும். மலம் சிறுநீர் ஆகியவற்றின் வேகத்தைத் தடுத்துக்கொண்டு மாலை அந்திப் பொழுதில் மனை முதலான இருக்கையில் அமராமல் காலம் கடந்து மிகக் குறைந்த அளவில் அல்லது அதிக அளவில் உணவு உட்கொள்வது எனும் செயல்களைத் தவிர்க்க வேண்டும். 98

நெய் நீக்கிய திரிந்து போன பழமையான பாலைப் பருகக் கூடாது. நெய், சர்க்கரை, பயற்றின் கஞ்சி, தேன், சூடான பொருள், நெல்லிச்சாறு, கலக்காத தயிர் ஆகியவற்றை இரவில் பயன் படுத்தக் கூடாது. அவ்வாறு பயன்படுத்தினால் குட்டம், அக்கி போன்ற நோய்கள் தோன்றலாம். நீரில் தன் நிழலைப் பார்க்கக் கூடாது. ஆடையின்றி நீரில் குளிக்க இறங்கக்கூடாது. 99-100

சூதாடுதல், அதிக அளவில் மதுபருகுதல், வீண்வம்பு பேசு தல், மிருதங்கம் முதலிய வாத்தியங்களை முழக்குதல் போன்ற செயல்களில் ஈடுபடக்கூடாது. மலர்மாலை, குடை, தங்கம், உடுத்திக்களைந்த ஆடை முதலிய பிறர் அணிந்தவற்றைத் தான் அணியக்கூடாது. அந்தணர், நெருப்பு, பசு ஆகியவற்றை எச்சில் கையுள்ளபோது அடுத்த கையாலாயினும் தொடக்கூடாது. 101

எந்தெந்த பருவத்தில் எந்தெந்த சுவையைப் பருக வேண்டுமோ அதை அறிந்து எந்தந்த மனிதனுக்கு எந்த பருவத்தில் எந்த தோஷம் சீற்றமுறுமோ அதை அறிந்து அதற்கு ஏற்ற சுவையை உட்கொள்ளுமாறு மருத்துவர் செய்ய வேண்டும். 102

மழைக்காலத்தில் சரத் (கூதிர் பருவத்தில்) ருதுவில் நீரைப் பருகக் கூடாது. அதாவது ஆனி, ஆவணி, புரட்டாசி, ஐப்பசி மாதங்களில் நீரைக் குறைந்த அளவில் பருக வேண்டும் என்பதாம். 103

பனி காலத்திலும் இளவேனில் காலத்திலும் வெந்நீரும், முதுவேனில் பருவத்தில் தேவையான அளவு குளிர்ந்த நீரும் பருகத்தக்கவை. பனிகாலத்திலும் இளவேனில் பருவத்திலும் சீது அரிஷ்டம் என்பவை பருகத்தக்கவை. 104

முதுவேனில் பருவத்தில் வெந்நீரை ஆறவைத்தும் கார்ப் பருவத்தில் மாமிச ரசத்தையும் பருக வேண்டும். மழைக்காலத்தில் கஞ்சியைப் பருகி அத்துடன் குளிர்ந்த நீரைப் பருகலாம். 105

உடல் நலம் பெற்றுள்ளவர் இவ்வாறு கூறப்பட்டபடியும், நோயுற்றவர் தோஷம் மற்றும் நோயகற்றும் உணவுக்கு ஏற்ற முறையிலும் நீரைப் பருக வேண்டும். சடராக்னி வளர்ச்சி பெற இந்துப்பு, திப்பிலித்தூள் என்பனவற்றுடன் எண்ணெயைப் பருகச் செய்ய வேண்டும். மலம் சிறுநீர் முதலியவற்றின் வேகத்தைத் தடுக்கக் கூடாது. சடராக்னி வளர்ச்சி பெறவும் நோய் தீண்டாமல் இருக்கவும் மழைக்காலம் கூதிர்பருவம் இளவேனில் பருவம் ஆகியவற்றில் நன்றாக எண்ணெயை உட்கொள்ள வேண்டும். 106-108

## 42. தோஷங்களைத் தணிப்பதில் உடற்பயிற்சியின் பயன்

கபம் மிகுந்தால் வாந்தி எடுக்கச் செய்தல், பித்தம் மிகுந்தால் பேதியாகச் செய்தல், வாதத்தைத் தணிக்க வஸ்தி முறை, மூன்று தோஷங்களையும் தணிப்பதில் உடற்பயிற்சி ஆகியவை சிறந்தவை. உடற்பயிற்சி செய்வதால் கூடாத உணவை உட்கொண்டாலும் கேடு விளையாது. அதாவது நன்கு செரிமான மாகும் என்பதாம். 109

## 43. கவனத்துடன் செய்ய வேண்டியவை

மலம், சிறுநீர் ஆகியவற்றைக் கழிதல், கலவி புரிதல், உணவு உட்கொள்ளுதல், வாந்தி எடுக்கச் செய்தல் போன்ற உடலைத் தூய்மைப்படுத்திக்கொள்ளும் முறைகள் ஆகியவற்றைச் செய்யும் போது மனம் செயலில் ஒன்றியிருக்க வேண்டும். உடலில் தோஷங்கள் சீற்றமடைந்து விடும் என்று அஞ்சி அறிவுள்ளவர் மனத்தையும் உடலையும் வருத்தக்கூடாது. 110

## 44. அதிக கலவியால் கேடு

புலனடக்கமுள்ளவர் கலவியில் அதிக அளவில் ஈடுபடக் கூடாது. வயிற்று வலி, இருமல், காய்ச்சல், இழுப்பு, உடல் வலிவின்மை, பாண்டு நோய், க்ஷயம், ஆக்ஷேபகம் எனும் வியாதி முதலியன அளவில் மிகுந்து கலவியில் ஈடுபடுவதால் தோன்றும். 111

### 45. மிதமான கலவியால் பயன்

மிதமாகக் கலவியில் ஈடுபடும் தன்மை கொண்ட புலன் அடக்கம் உள்ளவர் நீண்ட ஆயுளும் பல்லாண்டுகள் கழிந்த பின் முதுமை அடைபவரும் உடற்பொலிவு மிக்கவரும் வலிமையுடைய வரும் கடினமான நன்கு நிலைபெற்று மாமிச பேசிகள் கொண்டவருமாகி விளங்குவார். 112

அறிவாற்றல் மிக்கவர் எல்லாப் பருவங்களிலும் மூன்று நாட்களுக்கு ஒரு முறையும் முதுவேனில் பருவத்தில் பதினைந்து நாட்களுக்கு ஒரு முறையும் கலவியில் ஈடுபட வேண்டும். 113

மாதவிலக்கு கொண்டவள் கலவியில் விருப்பமற்றவள் அழுக்கடைந்த உடலுள்ளவள் தன்பால் விருப்பமற்றவள் நல்ல குலத்தில் பிறந்தவள் வயதில் தன்னைவிட மூத்தவள் நோயுற்றவள் உடலூனமுள்ளவள் கருவுற்றவள் வெறுப்பு கொண் டவள் பெண்குறி நோய் கொண்டவள் தன் கோத்திரத்தைச் சார்ந்தவள் குருவின் மனைவி துறவறம் பூண்டவள் கலவிக்குத் கூடாத முறையைச் சார்ந்த(மகள் போன்ற)வள் ஆகிய பெண்களை விலக்க வேண்டும். அந்திமாலையிலோ அமாவாசை போன்ற பூர்வநாட்களிலோ கலவியில் ஈடுபடக்கூடாது. 114-116

காலை வேளை நள்ளிரவு நண்பகல் வெட்கப்படத்தக்க திறந்த வெளி தூய்மையற்ற இடம் ஆகியவற்றிலும் பசி நோய் வருத்தும் முதலியவை கொண்டுள்ள போதும் மலம் சிறுநீர் ஆகியவற்றின் வேகங்களைத் தடுத்துக் கொண்டும் நாவறட்சி கொண்ட போதும் உடல் வலிமை குறைந்துள்ளபோதும் கலவியில் ஈடுபடக்கூடாது. விலங்குகளுடன் புணர்தல் பெண்குறியற்ற மற்ற சுரோதஸ்களில் புணர்தல் ஆகியவை கூடாது. விந்து வெளிவரும் வேகத்தைத் தடுக்கக்கூடாது. உடல் வலிமை கொண்ட ஆண்மகனாயினும் தோஷமுள்ள பெண்குறியில் விந்துவை விடுதல் கூடாது. 117-119

அதிக அளவில் விந்துவை வெளிவிடுதல் ஆண்குறி முனையைக் கசக்குதல் நின்றநிலையிலோ மல்லாந்து படுத்தோ விந்துவை வெளியேற்றுதல் முதலிய செயல்கள் இகழத்தக்கவை. தன் உடல் நலத்தை விரும்பும் அறிவாளி விளையாட்டாக விந்துவை வெளியேற்றுதல் செய்யக்கூடாது. 120

புலனடக்கமின்றி மாதவிலக்காகி உள்ள மங்கையைப் புணர்ந்தவரின் ஆயுள் பார்வை பொலிவு முதலியன குறைந்து போவதுடன் அறவழி பிறழ்ந்த தீவினையும் சேரும். 121

துறவறம் பூண்டவள் குருவின் மனைவி தன்கோத்திரத்தைச் சார்ந்தவள் வயதில் முதிர்ந்தவள் ஆகியவர்களுடன் கலவியில் ஈடுபட்டாலும் அல்லது அமாவாசை முதலிய கூடாத நாட்களிலோ மாலை முதலிய கூடாத நேரங்களிலோ புணர்ச்சியில் ஈடுபட்டாலும் வாழ்வைக் குலைக்கும். 122

கருவுற்றவளைப் புணர்ந்தால் கருவிற்கு துன்பமும் நோயுற்றவரை புணர்ந்தால் வலிமை அழிவதும் நேரும். உடல் ஊனமுற்றவள் அழுக்குள்ள உடல் கொண்டவள் வெறுப்புடையவள் காம இச்சை இல்லாதவள் ஆகியவர்களுடனும் திறந்தவெளி மற்றும் தூய்மையற்ற இடம் முதலியவற்றில் கலவி புரிந்தாலும் விந்து க்ஷீணமடையும். சோர்வு உண்டாகும். பசி துக்கம் கொண்டுள்ள போதும் நாவறட்சியுள்ள போதும் நண்பலிலும் உடல் வலிமை குன்றியுள்ளபோதும் உட்கார்ந்து கொண்டே கலவியில் ஈடுபடும் போதும் விந்து குறைதலும் வாயு )மடைதலும் உண்டாகும். 123-125

அளவுக்கு மீறிய கலவியால் விந்து குறைந்து போதலால் உடல் உலர்ந்து போகும். நோயுற்றவளுடன் கலவி புரிந்தால் துன்பம் மண்ணீரல் வீக்கம் நினைவிழத்தல் மரணம் போன்றவை நேரும். 126

காலை வேளையிலோ நள்ளிரவிலோ கலவியில் ஈடுபடுவதால் வாயுவும் பித்தமும் சீற்றமுறும். விலங்குகளுடன் புணர்தல் பெண்குறியற்ற மற்ற பகுதிகளில் புணர்தல் தோஷமுள்ள பெண்குறியில் புணர்தல் ஆகியவற்றால் உபதம்சம் எனும் நோய் வாதம் சீற்றமுறுதல் விந்து அழிதல் போன்றவை தோன்றும். 127

மலம் சிறுநீர் ஆகியவற்றின் வேகத்தைத் தடுத்தும் மல்லாந்து படுத்தும் விந்துவை வெளிவிடுவதால் சுக்ராச்மரி (விந்து கல் போல் ஆகும் நோய்) தோன்றும். ஆகவே இம்மை மறுமைகளில் தீங்கு விளைவிக்கும் இச்செயல்களைக் கைவிடவேண்டும். மோகத்தில் மூழ்கி விந்து வெளிவர இருக்கும்போது அதன் வேகத்தைத் தடுத்து நிறுத்துவதும் கூடாது. 128-129

வாஜீகரண முறைகளால் உடல் வலிமை பெற்றுக் கலவியில் ஊக்கமும் மனத்தெளிவும் பெற்றுள்ளவர் வயது தோற்றம் குணம் முதலியவற்றில் தனக்கு ஏற்றவளும் நற்பண்பு உள்ளவளும் கலவியில் விருப்பமுள்ளவளுமான நன்கு அலங்காரம் செய்து கொண்டுள்ளவளை முறைப்படி புணர்ந்து மகிழ வேண்டும். 130-131

கலவி புரிந்த பிறகு சர்க்கரை கலந்த உணவு, கற்கண்டு கலந்த பால், புலால் சாறு முதலியன உட்கொள்ளுதலும், குளித்தலும், நல்ல காற்று உடலில் பட உறக்கம் கொள்வதும் செய்யத்தக்கவை. 132

நன்னடத்தை முறைகள் இவ்வாறு சுருக்கமாகக் கூறப்பட்டன. ஆசாரமற்றவர் ஆயுள் உடல் நலம் செல்வம் முதலியவற்றை அடையமாட்டார். 133

ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

அநாகதாபாத சிகித்ஸிதம் எனும்

இருபத்துநான்காம் அத்தியாயம் முற்றும்.

# இருபத்தைந்தாம் அத்தியாயம்

## * மிச்ரக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்த முறைப்படி சில எளிய நோய்களுக்குச் சிகிச்சை முறைகள் விளக்கப்படுகின்றன. 1-2

### 1. கர்ணபாளியைச் (வெளிக்காது) சார்ந்த நோய்கள்

காதில் காதணி அணியப்படும் பகுதி கர்ணபாளி எனப் படும். அதில் பரிபோடம், உத்பாதம், உன்மந்தம், தூக்கவர்தனம், பரிலேஹி எனும் ஐந்து வகை நோய்கள் தோன்றக்கூடும். 3

### 2. பரிபோடக இலக்கணம்

மென்மையான உடல் கொண்டவர்களுக்குப் பல நாள் கழித் துக் காது குத்தும் போது அப்பகுதியில் துன்பமும் சிறிது வெடிப் புடன் கூடிய வீக்கமும் தோன்றும். இது பரிபோடகம் எனும் நோயாகும். வாயுவால் தோன்றும் இந்நோயில் அப்பகுதி சிறிது கறுத்துச் சிவந்து, மரத்துப்போனது போல காணப்படும். 4-5

### 3. உத்பாத இலக்கணம்

பளுவான காதணி அணிதல் காயம்படுதல் கைவிரல்களால் அப்பகுதியைத் தேய்த்துக் கொள்ளுதல் எனுமிவற்றால் அங்கு எரிச்சல், பாகம் (பக்குவத்தன்மை), துன்பத்துடன் கூடிய சிவந்த வீக்கம் ஆகியவை காணப்படும். அது உத்பாதம் எனப்படும். இது இரத்தம் மற்றும் பித்தத்தால் தோன்றும் நோயாகும். 6

### 4. உன்மந்த இலக்கணம்

வலிமையுடன் காதுத்துளைகளைப் பெரிதுபடுத்துவதால் வாயு சீற்றம் பெற்றுக் கபத்துடன் கூடி அதற்கு ஏற்ற நிறமும் வேதனையும் அரிப்பும் கொண்ட வீக்கத்தைத் தோற்றுவிக்கும். இது உன்மந்தம் எனப்படும். இது கபத்தாலும் வாதத்தாலும் தோன்றும் நோயாகும். 7-8

* மிச்ரகம் - கலப்பு. இந்த அத்தியாயத்தில் வேறு வேறு உறுப்புகளைச் சார்ந்த சிறு நோய்கள் சிலவற்றிற்குச் சிகிச்சைகள் கூறப்பட்டுள்ளன. அதனால் இந்த அத்தியாயம் மிச்ரக சிகித்ஸிதம் எனப் பெயர் பெற்றது.

**5. துக்கவர்தன இலக்கணம்**

காதுத் துளையைப் பெரிதாகச் செய்ய முற்படும்போது அரிப்பு, எரிச்சல்,துன்பத்துடன் கூடிய வீக்கம், பாகம் ஆகியவை தோன்றினால் இந்தத் தோல் நோய் துக்கவர்தனம் எனப்படும். 9

**6. பரிலேஹி இலக்கணம்**

கபம், இரத்தம், கிருமி, காதுத்துளைப் பகுதியில் அரிப்பு, எரிச்சல் மற்றும் வேதனையுடன் கெட்ட நீர்ப்பெருக்கும் கொண்ட கடுகு போன்ற சிறு கட்டிகள் தோன்றும். கபம், இரத்தம் மற்றும் கிருமிகளால் தோன்றும் இந்த வீக்கம் இங்குமங்குமாகப் புறக்காது முழுவதிலும் பரவும். இந்நோய் பரிலேஹி எனப்படும். 10-11

**7. கர்ணபாளி நோய்களுக்குப் பொது சிகிச்சை**

தவறான உணவு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றைக் கொண்டவர்களுக்கும், நோய்க்கு உரிய பணிவிடைகள் சீராகச் செய்யப்படாதவர்களுக்கும் கர்ணபாளியில் தோன்றும் இந்தக் கொடிய நோய்கள் அலட்சியம் செய்யப்பட்டால் காதில் அணி அணியக்கூடிய அந்தப் பாளி எனும் பகுதி முழுவதையும் அவை கெடுத்துவிடக்கூடும். ஆகையால் இந்நோய்க்கு உரிய எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை, எண்ணெய்க் குளியல், நோய்ப்பகுதிமேல் மருந்தை ஊற்றிக் கொண்டிருத்தல் மற்றும் இரத்தத்தை வெளியேற்றுதல் முதலிய சிகிச்சை முறைகளை விரைவாகச் செயல்படுத்த வேண்டும். 12-13

**8. பரிபோடகத்திற்குச் சிகிச்சை**

பொதுவாகவும், சிறப்பாகவும் காதின் துளைப்பகுதியில் பூசுவதற்குத் தக்க மருந்துகள் இங்குக் கூறப்படுகின்றன. நாயுருவி, அதிமதுரம், இந்துப்பூ, தேவதாரு, அமுக்கராங்கிழங்கு, முள்ளங்கி விதை, கார்போக அரிசி ஆகியவற்றை நன்கு அரைத்து நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை, தேன்மெழுகு ஆகியவற்றையும், பாலையும் அத்துடன் கலந்து பக்குவம் செய்க. பரிபோடகம் எனும் நோய்க்கு இம்மருந்தைக் காதின் துளைப்பகுதியில் பூச வேண்டும். 14-15

**9. உத்பாதம் எனும் பாளி நோய்க்குச் சிகிச்சை**

மஞ்சிட்டி, எள், அதிமதுரம், நன்னாரி, தாமரை, பதுமகம், பாச்சோத்தி, கதம்பம், சிற்றாமுட்டி, நாவல் இலை, மாவிலை ஆகியவற்றை விழுதாக அரைத்துப் புளிக்காடியுடன் பக்குவம்

செய்த எண்ணெய் மருந்து உத்பாதம் எனும் நோயைத் 16-17

**10. உன்மந்தம் எனும் பாளி நோய்க்குச் சிகிச்சை**

மூஷிகபர்ணி, அமுக்கராங்கிழங்கு, எருக்கு, கார்போக அரிசி, இந்துப்பு ஆகியவற்றின் விழுதை நண்டு, உடும்பு என்பனவற்றின் வசையுடன் கலந்து ஸரளமரக் கட்டை, கலப்பைக் கிழங்கு ஆகியவற்றையும் சேர்த்து எண்ணெய் மருந்து செய்க. அதை உன்மந்தம் எனும் நோய்க்கு மேல்பூச்சாக பயன்படுத்த வேண்டும். கல்லூர்வஞ்சி, நாவல் இலை, மாவிலை ஆகியவற்றின் கஷா யத்தை நோயுற்ற பகுதி மேல் ஊற்றிக் கொண்டிருப்பதால் உன் மந்தம் எனும் நோய் கொண்டவர்க்கு ஹிதமாக இருக்கும். 18-19

பிரபௌண்டரீகம், அதிமதுரம், மஞ்சிட்டி மஞ்சள், மரமஞ்சள் ஆகியவற்றின் தூளை எண்ணெயால் நனைக்கப்பட்ட கர்ணபாளி மேல் பூசித் தேய்ப்பதும், கொம்பரக்கு, வாயு விடங்கம் ஆகியவற்றின் விழுதைச் சேர்த்துச் செய்த எண்ணெய் மருந்தைப் பயன்படுத்துவதும் இந்நோய்க்கு நன்மை தரும். 20

**11. பரிலேஹிக்குச் சிகிச்சை**

சாண உருண்டையால் கர்ணபாளியை வியர்க்கச் செய்து வாயுவிடங்கத்தை மட்டும் விழுதாக்கிப் பூசுவதால் பரிலேஹி எனும் நோய் தணியும். அல்லது வெண்சிதை, கருஞ்சிவதை, எருக்கு ஆகியவற்றை விழுதாக்கிப் பூச வேண்டும். அல்லது புங்கன், அழிஞ்சில் விதை என்பனவற்றை அரைத்துப் பூசுவதும், குடசப்பாலை, சரக்கொன்றை என்பனவற்றை அரைத்துப் பூசு வதும், முன்கூறிய எல்லாப் பொருள்களுடனும் மிளகு, வேப் பிலை, தேன், மெழுகு எனுமிவற்றை சேர்த்துக் கடுகெண்ணெ யுடன் செய்த எண்ணெய் மருந்தைப் பூசுவதும் பரிலேஹி நோயைத் தணிக்கும். 21-23

**12. கர்ணபாளியைச் செழிப்பும், மென்மையும் பெறச் செய்யும் முறை**

நோயுற்ற மெலிந்து கடினமாகிய கர்ணபாளியைச் செழிப் புற்று மென்மை பெற செய்வதற்கு இனி கூறப்போகும் மருந்துப் பொருள்களால் அப்பகுதியைத் தேய்த்து விட வேண்டும். 24

**13. கர்ணபாளியை வளர்க்கும் எண்ணெய்**

நரி மற்றும் நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் உயிரினங்களின் மஜ்ஜை (கொழுப்பு), வசை, எண்ணெய்,

புதுநெய் ஆகியவற்றிற்குப் பத்து மடங்கு பால் கலந்து காகோலி முதலான கூட்டுப்பொருள்கள் நாயுருவி, அமுக்கராங்கிழங்கு, கொம்பரக்குச் சாறு சேர்த்துப் பக்குவம் செய்து வடிகட்டிப் பாதுகாத்து வைக்கவும். நன்கு வியர்க்கச் செய்து தேய்த்து விடப்பட்ட கர்ணபாளியில் இந்த மருந்தை எப்பொழுதும் பூசிக்கொண்டிருக்க வேண்டும். இதைப் பயன்படுத்துவதால் துன்பமின்றி கர்ணபாளி நன்றாக வளரும். மற்றும் செழிப்பும் மென்மையும் பெற்றுக் சமமாக எண்ணெய்ப் பசைகொண்டு அணிகலனைத் தாங்குவதற்கு ஏற்றதாக விளங்கும். 25-27

## 14. *பலித நோய்க்கு சிகிச்சை

அவுரி இலை, கரிசலாங்கண்ணி மருதம்பட்டை, மருக்காரை, காரிரும்புத்தூள், விஜயஸாரம், ஸஹசரமலர், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் ஆகியவற்றைத் தூளாக்கி அதற்குச் சமஅளவு தாமரை வேர் விழுதைச் சேர்த்து இரும்புப்பாத்திரத்தில் வைத்து மூடிப் பத்திரப்படுத்தவும். பதினைந்து நாட்களுக்குப் பின் அத்துடன் எண்ணெய் சேர்த்துக் கரிசலாங்கண்ணி, திரிபலை சுரசம் ஆகியவற்றையும் கலந்து எண்ணெய்ப் பக்குவம் செய்க. அந்த எண்ணெய் பக்குவமாகும் போது மகிழம்பூ இதழை அதில் சேர்த்து அதன் நிறம் நீலமாக மாறினால் பக்குவம் சீரானதாகத் தெரிந்து கொள்க. பிறகு அடுப்பிலிருந்து இறக்கி இரும்புப் பாத்திரத்தில் ஒரு மாதம் வரை வைத்திருக்கவும். இம்மருந்தை தலையில் தேய்த்துக் கொண்டால் நரைத்தல் எனும் பலித நோய் தீரும்.28-31

## 15. தலைமுடி கருநிறமாக முள்மருதோன்றி முதலியவற்றின் எண்ணெய்

முள்மருதோன்றி, நாவல், மருதம் மற்றும் குமிழன் மலர், எள், கரிசலாங்கண்ணி, மாங்கொட்டைப் பருப்பு, வெண்சாரடை, சிவப்புச்சாரடை, தாமரை வேர்ப்பகுதி சேறு, கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி, அன்னபேதி, மருக்காரை, விஜயஸாரம், திரிபலை, இரும்புத்தூள், ரஸாஞ்சனம், அதிமதுரம், நீலாம்பல், நன்னாரி, மல்லி ஆகியவற்றை விஜயஸாரக் கஷாயத்துடன் அரைத்து ஏழு பிரஸ்தம் அளவு விஜயஸார கஷாயத்தில் கலக்க வேண்டும். இந்தக் கலவையைப் பத்து நாட்கள் இரும்புப் பாத்திரத்தில் வைத்திருக்க வேண்டும். பிறகு இதனுடன் தான்றிக்காய் எண்ணெயை கலந்து முயற்சித்து எண்ணெய்ப் பக்குவம் செய்ய வேண்டும். இந்த எண்ணெயைப் புது இரும்புப்

* பலிதம் - நரைத்தல்.

பாத்திரத்தில் வைத்திருக்க வேண்டும். வாந்தி எடுத்தல், பேதி யாகச் செய்தல் ஆகியவற்றால் தூய்மைப்படுத்தப்பட்ட உடல் கொண்டவருக்கு இந்த எண்ணெயை மூக்கிலிடு மருந்தாகப் பயன் படுத்த வேண்டும். தேய்த்துக்கொள்ளவும் பயன்படுத்த வேண்டும். இதைப் பயன்படுத்தும் போது உளுந்தாலான உணவை அல்லது பொங்கலை உட்கொள்ள வேண்டும். ஒரு மாத காலம் இவ்வாறு முறையாக இதைப் பயன்படுத்தினால் தலைமுடி அடர்த்தி யாகவும் வண்டு' போல் கருநிறம் கொண்டும் வளரும். இதைப் பயன்படுத்தினால் நரை அல்லது வழுக்கை தோன்றாது. புலன்களும் வலிமை பெறும். முகத்தில் தோல் சுருக்கம் நீங்கும். விருப்பமற்றவர்க்கும், தேவையற்றவர்க்கும் நன்றி உணர்வில்லா தவர்க்கும் இந்த எண்ணையைக் கொடுக்க வேண்டாம். 32-37

## 16. முகத்தில் பூசிக்கொள்ள நெய் மருந்து

கொம்பரக்கு, பாச்சோத்தி, மஞ்சள், மரமஞ்சள், மனோசிலை, அரிதாரம், கோஷ்டம், சிறுநாகப்பூ, கைரிகம், வர்ணகம், மஞ் சிட்டி, வசம்பு, ஸௌராஷ்டிரமண், பத்தங்கம் மற்றும் கோரோ சனம், சுரோதோஞ்சனம், கொன்றைப்பட்டை, பழுத்த ஆலிலை, சந்தனம், காகோலி முதலிய கூட்டுப்பொருள் மற்றும் கொழுப்பு மஜ்ஜை, தேன் மெழுகு, பசு நெய் ஆகியவற்றைப் பசும்பால் மற்றும் பாலுள்ள மரப்பட்டைக் கஷாயத்துடன் பக்குவம் செய்க. இந்த நெய் மருந்தைப் பூசிக்கொள்வதால் வங்கு, நீலிகா எனும் நோய் முதலியன நீங்கும். முகம் தாமரையைப் போல பொலிவு டன் சுருக்கங்கள் நீங்கிக் காணப்படும். மன்னர், மங்கையர் மேலும் இத்தகையவர்களுக்கு இந்நெய் மருந்தை மருத்துவர் பயன்படுத்த வேண்டும். இம்மருந்து குட்டத்தைப் போக்கும். விபாதிகா எனும் நோய் கொண்டவர்களுக்கு இது மிகவும் ஹிதமானது. 38-42

## 17. மன்னர்களுக்கு உரிய

கடுக்காய்த்தூள், வேப்பிலை, மாமரப்பட்டை, மாதுளம் மொட்டு, மருதோன்றி இலை ஆகியவற்றால் செய்த உடற்பூச்சு மருந்து மன்னர்களுக்கு ஏற்றதாகும். 43

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**மிச்ரக சிகித்ஸிதம் எனும்**

**இருபத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்தாறாம் அத்தியாயம்

# * க்ஷீணபலீய வாஜீகரண சிகித்ஸிதம்

இனி இளைத்த உடல் கொண்டவர்களுக்குச் செழிப்பையும் விந்து வளர்ச்சியையும் தரும் சிகிச்சை பற்றி ஸுச்ருதர் முதலிய சீடர்களுக்குத் தன்வந்தரி பகவான் உபதேசம் செய்த முறைப்படி விளக்குவோம். 1-2

### 1. வாஜீகரணத்திற்கு ஏற்றவரின் இலக்கணம்

நோயற்ற வாலிபப் பருவத்தில் இருக்கும் மனிதன், வாஜீகரண மருந்துகளைப் பயன்படுத்துபவர் எனுமிவர்கள் எல்லாப் பருவங்களிலும் நாள் தோறும் கலவியில் ஈடுபடுவது தகுந்ததே. வயது முதிர்ந்தவர், கலவியில் விருப்பமுள்ளவர், பெண்களைத் தன்வயப்படுத்திக் கொள்ள விரும்புகிறவர், கலவியில் மிக்க ஈடுபாடு கொண்டதால் உடல் இளைந்தவர், ஆண்மையற்றவர், குறைந்த அளவு விந்து கொண்டு கலவியில் ஊக்கம் கொண்டவர், செல்வந்தர், அழகும் இளமையும் கொண்டவர், மனைவியர் பலரை உடையவர் எனும் இவர்கள் வாஜீகரண முறையைப் பின்பற்றத் தக்கவர்கள் ஆவர். 3-5

### 2. வாஜீகரண விளக்கம்

முறையாகப் பயன்படுத்துவதால் குதிரையைப் போல வேகம் கொண்டு கலவியில் பெண்களை மிகவும் மகிழ்விக்கத் தக்க வலிமை தரும் செயல் முறை வாஜீகரணம் எனப்படும். பல்சுவை உணவுகள், வகைவகையான பருகத்தக்க பொருள்கள், செவிக்கினிய. உரையாடல், மென்மையுடன் தீண்டுவதால் இன்பம் விளைவிக்கும் மெய்த்தோல், நிலவுடன் கூடிய இரவு, இளம் பருவ மங்கை அருகில் இருத்தல், செவிக்கினியதாகி மனத்தை ஈர்க்கும் இசை, குடிவகை, மது, மலர்மாலை, நறுமண ப்பொருள், அழகிய தோற்றம், உத்தியானம், மனத்தெளிவு ஆகியவை மனிதனை வாஜீ அதாவது வீர்யமுள்ளவராகச் செய்வனவாகும். 6-8

---

* க்ஷீணபலீயம் - இளைத்தவர்கள் உடலைச் செழிப்புறச் செய்தல், வாஜீகரணம் - விந்து மிகச் செய்தல் ஆகிய இம்முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் க்ஷீணபலீய வாஜீகரண சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

### 3. அலித்தன்மை தோன்றக் காரணங்கள்

கலவியில் ஊக்கம் கொண்டவர். மனத்தில் அச்சம், நம்பிக்கையின்மை, பெண்ணிடத்தில் குற்றம் காணல் முதலிய விரும்பத்தகாத எண்ணங்கள் தோன்றுதலாலும், அடிபடுதலாலும், பகைமை உணர்ச்சி கொண்ட பெண் தொடர்பாலும் தோன்றும் அலித்தன்மை மனத்தால் தோன்றுவது ஆகும். 9

கார்ப்பு, புளிப்பு, உவர்ப்புச் சுவைகள் கொண்ட பொருள்களை மிகுதியாக உட்கொண்டு ஸௌம்ய தாதுவாகிய விந்து குறைந்து போவதால் அலித்தன்மை தோன்றலாம். இது இரண்டாவது வகை அலித்தன்மையாகும். 10

கலவியில் அளவுக்கு மீறி ஈடுபட்டு வாஜீகரணப் பொருள்களைப் பயன்படுத்தாமையால் விந்து குறைந்து துவஜபங்கம் (குறி எழுச்சி இன்மை) என்பது தோன்றும். இது மூன்றாவது வகை. 11

கொடிய பால்வினை நோய் அல்லது ஏதேனும் வேறு காரணத்தால் விந்துவைத் தாங்கும் நரம்பு துண்டித்துப் போவதால் அலித்தன்மை தோன்றுதல் நான்காவது வகையாகும். 12

பிறவியிலேயே தோன்றும் அலித்தன்மை மற்றொரு வகையாகும். வலிமை கொண்டவர் பிரம்மசரியத்தை மேற்கொண்டு விந்து வெளிவருவதை தடுப்பதால் அது கடினத்தன்மை கொள்ளும். இது ஆறாவது வகை அலித்தன்மையாகும். 13

இவற்றில் பிறவியிலேயே தோன்றியது அல்லது விந்துவைத் தாங்கும் நரம்பு அறுபடுதலால் தோன்றியதுமான அலித்தன்மைகள் சிகிச்சையால் நீக்க இயலாதவையாகும். மற்ற வகைகளுக்கு காரணங்கள் அறிந்து அவற்றிற்கு மாறான முறைகளைக் கையாள்வதால் அலித்தன்மையை நீக்கி வாஜீகரணம் பெறலாம். 14-15

### 4. வாஜீகரணத்திற்கு *உத்காரிகை

இனி வாஜீகரண முறைகள் விளக்கப்படுகின்றன. எள், முதுக்கன் கிழங்கு ஆகியவற்றையோ, சம்பா அரிசி மாவையோ கருப்பஞ்சாற்றுடன் கலந்து பிசைந்து அந்தமாவில் இந்துப்பு, பன்றியின் கொழுப்பு எனுமிவற்றை கலந்து நெய்யுடன் உத்காரிகை போன்ற தின்பண்டமாகச் செய்து உட்கொள்வதால் நூறு பெண்களுடனும் கலவி புரியத்தக்க வலிமை உண்டாகும். 16-17

* உத்காரிகை - கொழுக்கட்டை.

5. வாஜீகரணத்திற்கு பூரி

ஆட்டின் விதைகளுடன் பாலைச் சேர்த்துப் பக்குவம் செய்து அந்தப் பாலில் பல முறை எள்ளைப் பாவனை செய்க. பிறகு அந்த எள்ளை அரைத்து அதை முதலையின் கொழுப்பில் பக்குவம் செய்து உட்கொள்பவர் நூறு பெண்களுடனாயினும் அபூர்வ முறையில் கலவியில் ஈடுபடக்கூடியவராவார். 18-19

6. மற்றொரு முறை

ஆட்டின் விதையைத் திப்பிலித்தூள், இந்துப்பு ஆகியவற்றுடன் கலந்து பாலில் எடுத்த வெண்ணெயைக் காய்ச்சிய நெய்யில் பக்குவம் செய்து உட்கொண்டால் நூறு பெண்களுடன் கலவி புரியும் வலிமை உண்டாகும். 20

7. வேறு முறை

திப்பிலி, உளுந்து, சம்பாஅரிசி, சோளம், கோதுமை ஆகியவற்றின் தூளைச் சம அளவில் கலந்து நெய்யில் பூரி போல் செய்து உட்கொண்டு சர்க்கரை கலந்த பாலைப் பருக வேண்டும். இம்முறையைப் பயன்படுத்துபவர் சிட்டுக் குருவியைப் போல எப்பொழுதும் பத்து முறை கலவியில் ஈடுபடக்கூடியவர் ஆவார். 21-22

8. வாஜீகரணத்திற்கு முதுக்கன் கிழங்கு

முதுக்கன் கிழங்கின் தூளை முதுக்கன் கிழங்கின் சுரசத்தில் பாவனை செய்து நெய் மற்றும் தேனுடன் கலந்து உட்கொள்வதால் பத்து மங்கையர்களுடன் கலவியில் ஈடுபடும் வலிமை உண்டாகும். 23

9. வாஜீகரணத்திற்கு நெல்லிக்கனி

நெல்லிக்கனித்தூளை நெல்லிக்கனிச்சாற்றில் பாவனை செய்து சர்க்கரை, தேன், நெய் ஆகியவற்றுடன் உட்கொண்டு பாலைப் பருக வேண்டும். இதைப் பயன்படுத்தினால் எண்பது ஆண்டு வயதானவரும் வாலிபரைப் போலக் காம வேகம் கொள்வார். 24

10. வேறு முறை

திப்பிலி இந்துப்பு ஆகியவற்றுடன் ஆட்டின் விதையையோ முதலையின் முட்டையையோ பக்குவம் செய்து உட்கொள்ள வேண்டும். இவை இரண்டும் வாஜீகரணத்தில் மிகவும் சிறந்தவை. நண்டு, ஆமை, நக்ரம் எனும் முதலை ஆகியவற்றின் முட்டைகளையும் இவ்வாறு பயன்படுத்தலாம். 25

எருது, எருமைக்கடா, ஆடு ஆகியவற்றின் விந்துவைப் பருகுதலும் வாஜீகரணத்தில் சிறந்ததாகும். 26

அரசம்பழம், வேர், பட்டை, இளந்தளிர் ஆகியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலில் சர்க்கரையும் தேனும் கலந்து உட்கொண்டால் குளிங்கம் எனும் பறவையைப் போலக் காமவேகம் அதிகமாகும். 27

பால்முதுக்கன் கிழங்கின் வேரை விழுதாகச் செய்து அத்திப் பழம் அளவு விழுதை இளஞ்சூடுள்ள பாலுடன் உட்கொண்டால் முதியவரும் வாலிபரைப் போன்றவராவார். 28

தேன், நெய் ஆகியவற்றுடன் ஒரு பலம் அளவு உளுந்தை உட்கொண்டு பாலைப் பருகினால் வீரியம் மிகும். - 29

பெருங்காஞ்சொரி விதையுடன் கூடிய கோதுமையைப் பாலுடன் பக்குவம் செய்து அது குளிர்ந்த பின் நெய் கலந்து உட்கொண்ட பின் பாலைப் பருகினால் விந்து மிகும். 30

முதலை, எலி, தவளை, சிட்டுக்குருவி ஆகியவற்றின் முட்டையை நெய்யில் பக்குவம் செய்து அந்நெய்யைப் பாதத்தில் தடவித் தேய்த்துக்கொண்டால் வலிமை உண்டாகும். இதைப் பூசிக்கொண்டதும் பாதத்தை நிலத்தில் பதிய வைக்கக் கூடாது. கால் தரையில் படாதவரை விந்து வெளியாகாமல் தடுத்துக் கலவியில் ஈடுபட்டிருக்கலாம். 31-32

பெருங்காஞ்சொரி, நீர் முள்ளி விதைகளைத் தூளாக்கிச் சர்க்கரை கலந்து கறந்த சூட்டுடன் கூடிய பாலுடன் உட்கொண்டால் விந்துக்குறை நீங்கும். 33

வெள்ளைக்குன்றிமணி வேரைத் தூளாக்கிக் கறந்த சூடு தணியாத பாலுடன் உட்கொள்வது சிறந்த முறையாகும். வலிமை விரும்புகிறவர் தண்ணீர்விட்டான்கிழங்கு. வெள்ளைக் குன்றிமணி வேர் ஆகியவற்றின் தூளை முன்கூறியபடி உட்கொள்ள வேண்டும். பெருங்காஞ்சொரிக் காயுடன் உளுந்துக் கஞ்சியைப் பருகினால் விந்து மிகும். 34

பெருங்காஞ்சொரிவிதை, நெருஞ்சி, வெள்ளைக் குன்றிமணி ஆகியவற்றின் தூளைப் பாலில் கலந்து பக்குவம் செய்க. அதில் சர்க்கரை கலந்து பாலுடன் உட்கொண்டால் இரவு முழுவதும் காமவேகம் தணியாமல் இருக்கும். 35

காஞ்சொரிவிதை, உளுந்து, முதுக்கன் கிழங்கு ஆகியவற்றைப் பசும்பாலுடன் பக்குவம் செய்து தேனும் சர்க்கரையும் நெய்யும்

சேர்த்து உட்கொண்டவர் குளிங்கப்பறவையைப் போல முழுவதும் காம வேகம் கொண்டிருப்பார். 36

முதன் முதலாகக் கன்றை ஈன்று, அக்கன்றுடன் ஓராண்டு வளர்ந்துள்ள ஆட்டின்பால், உளுந்து இலையை உணவாகக் கொண்ட பசுவின்பால் ஆகியவை வலிமை தருவனவாகும். 37

எல்லா வகைப் பாலும், எல்லாவகைப் புலாலும், காகோலி முதலிய கூட்டுப் பொருள்களும் வாஜீகரணத்தில் சிறந்த பொருள்களாகும். ஆகவே இவற்றைப் பயன்படுத்துவது வாஜீகரணத்தில் சிறந்த முறையாகும். 38

வாஜீகரண முறைகள் மனத்தெளிவு, நல்ல மக்கட்பேறு, உடல் வலிமை ஆகியவற்றைத் தரும். பருவக்காலத்தை அறிந்து வாந்தி எடுத்தல் முதலிய செயல்களால் உடற்தூய்மை பெற்ற பிறகு தக்கபடி வாஜீகரண முறைகளைப் பின்பற்ற வேண்டும். 39

ஸுஶ்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்

க்ஷீணபலீய வாஜீகரண சிகித்ஸிதம் எனும்

இருபத்தாறாம் அத்தியாயம் முற்றும்.

# இருபத்தேழாம் அத்தியாயம்

# * ஸர்வோபகாதசமனீய ரஸாயனம்

எல்லாவகைத் துன்பங்களையும் போக்கி நரை மூப்புகள் இன்றி நீடூழி வாழும் வகையைத் தோற்றுவிக்கும் இரஸாயன முறைகளைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

**1. இரஸாயன மருந்துக்குத் தக்கவர்கள்**

வாலிபம் அல்லது நடுவயதுள்ளவரும், எண்ணெய்ப்பசை கொண்ட தூய உடல் கொண்டவரும் இரஸாயன முறைகளைப் பின்பற்றத்தக்கவராவர். தூய்மைப்படுத்தும் முறைகளால் உடல் தூய்மை பெறாதவர்கள், அழுக்கடைந்த ஆடையில் சாயம் ஏற்றினால் அது நல்ல நிறம் பெறாதது போல இரஸாயன முறைகளைப் பின்பற்றுவதால் நல்ல பயன் பெற இயலாது என அறிக.3-4

வாதம் முதலான உடலைச் சார்ந்தவையும் இரஜோகுணம் முதலான மனதைச் சார்ந்தவையுமான தோஷங்களால் தோன்றும் மாறுபாடுகளைத் தணிக்கவல்ல முறைகள் இங்குக் கூறப்படுகின்றன.5

**2. ஆயுளை வளர்ப்பவை**

குளிர்ந்த நீர், பால், தேன், நெய் ஆகியவற்றைத் தனித்தனியாகவோ இரண்டிரண்டை அல்லது மூன்றை சேர்த்தோ அல்லது நான்கையும் சேர்த்தோ காலையில் பருகுவதால் ஆயுள் வளரும்.6

**3. வாயுவிடங்கம் முதலியவற்றின் பயன்**

வாயுவிடங்கத்தைத் தோல் நீக்கிய பிறகு எஞ்சியிருக்கும் விதைகளைத் தூளாக்கி அதில் அதிமதுரத்தூளையும், தேனையும் கலந்து உடல் வலிமைக்கு ஏற்ற அளவு குளிர்ந்த நீருடன் உட்கொள்ள வேண்டும். உடனே குளிர்ந்த நீரைப் பருக வேண்டும். நாள் தோறும் பருகும் முறையை ஒரு மாத காலம் பின்பற்ற வேண்டும். அல்லது வாயுவிடங்க விதைகளை சேற்றாங்கொட்டைக் கஷாயத்துடன் தேன் கலந்தோ தேன் கலந்த திராட்சைக் கஷாயத்துடனோ தேன் கலந்த நெல்லிக்காய்

---

*ஸர்வோபகாதசமனீயம் - எல்லா வகைத் துன்பங்களையும் அவற்றைப் போக்கும் இரஸாயன முறைகளையும் விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸர்வோபகாதசமனீய ரஸாயனம் எனும் பெயர் பெற்றது.

கஞ்சியுடனோ உட்கொண்டு நெய் கலந்த சோற்றை உண்ண வேண்டும். இம்முறைகளைப் பின்பற்றுவதால் மூலநோய் தணியும். வயிற்றில் உள்ள கிருமிகள் அழியும். அறிவாற்றலும், நினைவாற்றலும் மிகும். இம்முறைகளை ஒவ்வொரு மாத காலமும் பின்பற்றுவதால் நூறாண்டுகள் ஆயுள் வளரும். 7

**4. மற்றொரு முறை**

ஒரு *துரோணம் அளவு வாயுவிடங்க விதைகளைப் புல் வேய்ந்த கூடையில் வைத்துப் பிட்டு சமைப்பது போல ஆவியில் பக்குவம் செய்ய வேண்டும். பிறகு நீர்ப்பகுதியை நீக்கி அந்தப் பக்குவமான வாயுவிடங்க விதைகளைக் கல் மேல் வைத்து அரைத்த பின் அதை இரும்புப் பாத்திரத்தில் இட்டுத் தேவையான அளவு தேனும் நீரும் கலந்து வாயை மூடிக் கட்ட வேண்டும். கார்ப்பருவத்தில் அதை வீட்டில் சாம்பற்குவியலுக்குள் நான்கு மாதங்கள் வைத்திருக்க வேண்டும். கார்பருவம் முடிந்த பிறகு வாந்தி எடுத்தல் முதலான முறைகளால் உடலைத் தூய்மைப்படுத்திக்கொண்ட பிறகு ஸம்பாத மந்திரத்தால் ஆயிரம் முறை ஹோமம் செய்து நாள்தோறும் காலையில் தன் உடல் வலிமைக்கு ஏற்ற அளவு இம்மருந்தைப் பருக வேண்டும். மருந்து செரிமானமடைந்த பின் உப்பில்லாத சிறிதளவு நெய்யுடன் கூடிய பயறு, நெல்லிக்கனிகளின் கஞ்சியுடன் உணவு உட்கொள்ள வேண்டும். தூசியுடன் கூடிய படுக்கையில் உறங்க வேண்டும். இவ்வாறு ஒரு மாதம் கடந்த பிறகு இம்மருந்தைப் பயன்படுத்தியவரின் உடலிலிருந்து கிருமிகள் அனைத்தும் வெளியேறிவிடும். அவருடைய உடல் மேல் அணுதைலத்தைத் தேய்த்து அந்தக் கிருமிகளை மூங்கிற்பட்டையால் உடலிலிருந்து வழித்து நீக்க வேண்டும். இவ்வாறே அடுத்த மாதம் எறும்புகளையும் மூன்றாம் மாதம் பேன்களையும் நீக்க வேண்டும். நான்காம் மாதத்தில் அவ்ருடைய பற்கள், உரோமங்கள், நகங்கள் உதிர்ந்து விடும். ஐந்தாம் மாதத்திலிருந்து சிறந்த இலக்கணங்கள் உடலில் தோன்றும். உடற்பொலிவு மிகும். ஆதவனைப் போல ஒளி மிகுந்தவராவார். தொலைவில் தோன்றும் ஒலியையும் கேட்கும் திறன் உண்டாகும். மிக்க தொலைவில் உள்ளவற்றையும் காணக் கூடிய அளவு கண்பார்வைத் திறன் மிகும். நினைவாற்றலும் கவிதை புனையும் திறமையும் உண்டாகும். யானையைப் போன்ற வலிமையும் குதிரையின் வேகமும் தோன்றும். மற்றும் இம்மருந்தைப் பயன்படுத்தியவர் மீண்டும் இளமை பெற்று எண்ணூறு ஆண்டுகள் வாழ்வார். இம்மருந்தைப் பயன்படுத்துபவர் எண்ணெய்குளியலுக்கு அணுதைலத்தையும்

---

* துரோணம் - 1024 தோலா.

உடல் மேல் தேய்த்துக் கொள்ள சாலமரக்கஷாயம் அல்லது விழுதையும் குளியலுக்கு வெட்டிவேர் கலந்த கிணற்று நீரையும் மெய்ப்பூச்சுக்குச் சந்தனத்தையும் பயன்படுத்தத்தக்கவராவார். மற்றும் சேராங்கொட்டையைப் பயன்படுத்தும் போது பின்பற்றத் தக்க பத்திய முறைகளையும் விலக்கத்தக்கவைகளையும் இதற்கும் பின்பற்ற வேண்டும். 8

### 5. குமிழன்கிழங்கைப் பயன்படுத்தும் முறை

தூசி நிறைந்த படுக்கையையும், முறைகளையும் பின்பற்றி விதை நீக்கிய குமிழனைப் பயன்படுத்தவும் இம்முறையைக் கையாள வேண்டும். இதைப் பயன்படுத்தும் போது சூடான பாலுடன் உணவை உட்கொள்ள வேண்டும். மற்ற முறைகள் முன்கூறியபடியே பின்பற்றத்தக்கவை. பயனும் அத்தகையதே. இரத்தம் மற்றும் பித்தத்தால் தோன்றும் நோய்களைப் போக்கவும் இதைப் பயன்படுத்தலாம். 9

### 6. சிற்றாமுட்டி வேரைப் பயன்படுத்தும் முறை

முன் கூறியபடியே இல்லம் அடைந்து அரைப்பலம் அல்லது ஒரு பலம் சிற்றாமுட்டி வேரை அரைப்பலம் அல்லது ஒரு பலம் பாலில் கலந்து உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமான மடைந்த பிறகு பாலும் நெய்யும் கலந்த உணவை உட்கொள்ள வேண்டும். இவ்வாறு பன்னிரண்டு நாட்கள் பயன்படுத்தினால் பன்னிரண்டு ஆண்டுகளும் நூறு நாட்கள் பயன்படுத்தினால் நூறாண்டுகளும் வாழலாம். இவ்வாறு பேராமுட்டி, நாகபலை, பால்முதுக்கன்கிழங்கு, தண்ணீர்விட்டான்கிழங்கு முதலியவற்றை யும் பயன்படுத்தலாம். பேராமுட்டியை நீருடனும், நாக பலையைத் தேனுடனும், பால்முதுக்கன் கிழங்கு, தண்ணீர் விட்டான் கிழங்கு ஆகியவற்றின் தூளைப் பாலுடனும் உட்கொள்ள வேண்டும். இவற்றைப் பயன்படுத்தினால் விளை யும் பயன் முன் போன்றதேயாகும் என்று அறிக. வலிமை பெற விரும்புகிறவரும், உடல் உலர்ந்துபோனவரும், இரத்தபித்தத்தால் துன்புறுபவரும், இரத்த வாந்தி எடுத்தவரும், பேதியாக மருந்து உட்கொள்ளத்தக்கவரும் இவற்றைப் பயன்படுத்த வேண்டும். 10

### 7. காய்வள்ளிக்கிழங்கின் பயன்

ஒரு பலம் காய்வள்ளிக்கிழங்கு வேரின் தூளுடன் ஒரு பலம் தேன் கலந்து பாலில் சேர்த்து உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு நெய்யும் பாலும் கலந்த உணவை உட்கொள்ள வேண்டும். இதைப் பயன்படுத்தும் போது

முன்கூறிய விலக்க வேண்டியவற்றை விலக்க வேண்டும். இதைப் பயன்படுத்துபவர் நூறாண்டு வாழ்வார். பெண்களுடன் கலவியில் மிக்க திறமை கொண்டிருப்பார். முன்கூறிய தூளைப் பாலுடன் பக்குவம் செய்து குளிர்ந்தபின் கடைந்து நெய் தயார் செய்ய வேண்டும். இந்நெய்யுடன் தேன் கலந்து காலையிலும் மாலையிலும் இரண்டு வேளையோ ஒரு வேளையோ பயன் படுத்த வேண்டும். மருந்து செரிமானமடைந்தபின் பாலும் நெய்யும் கலந்த சோற்றை உண்ண வேண்டும். இவ்வாறு ஒரு மாத காலம் உட்கொண்டால் நூறாண்டுகள் வாழலாம். 11

### 8. விஜயஸாரம் முதலியவற்றைப் பயன்படுத்துதல்

கண்களில் ஒளி மிகுவதையும் உடல் வலிமையையும் பெற விரும்புகிறவர் விஜயஸாரம் மற்றும் முன்னைவேர் ஆகியவற்றின் கஷாயத்தில் ஒரு பிரஸ்தம் (768 கிராம்) உளுந்தைச் சேர்த்துப் பக்குவம் செய்ய வேண்டும். உளுந்து பக்குவமடையும் போது கொடிவேலியின் விழுது ஒரு கர்ஷமும், நெல்லிச்சாறு உளுந்தின் அளவில் நான்கில் ஒரு பங்கும் சேர்க்க வேண்டும். ஸம்பாத மந்திரத்தால் ஆயிரம் முறை ஹோமம் செய்த பிறகு அந்த உளுந்தைத் தன் உடல் வலிமைக்கு ஏற்ற அளவு உட்கொள்ள வேண்டும்.

உடலுக்கு ஏற்ற அளவு உப்பை விலக்க வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு நெய் கலந்த சோற்றை உப்பின்றி நெல்லிச்சாற்றுடன் கலந்து பக்குவம் செய்த பயற்றின் கஞ்சியுடன் அல்லது பாலுடன் மூன்று மாதங்கள் பயன்படுத்த வேண்டும். இவ்விரண்டு முறைகளாலும் பருந்தின் பார்வையைப் போல கண்களின் வலிமை மிகுந்து காணப்படும். உடல் வலிமையும் கலவியில் திறமையும் தோன்றும். குறையாத விந்து வலிமை உண்டாகும். பயன்படுத்தியவர் நூறாண்டுகள் வாழக்கூடியவராகவும் விளங்குவார். 12

### 9. சணல் பழவிதையைப் பயன்படுத்துதல்

பாலில் பக்குவம் செய்த சணல் பழ விதைகளைப் பாலுடன் உட்கொள்பவர் குறையாத ஆயுளைப் பெறுவார். உடலின் எத்தகைய மாறுபாடுமின்றி நீண்டநாள் வாழ்வார். 13

**ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**ஸர்வோபகாதசமனீய சிகித்ஸிதம் எனும்**

**இருபத்தேழாம் அத்தியாயம் முற்றும்.**

## இருபத்தெட்டாம் அத்தியாயம்

# * மேதாயுஷ்காமீய ரஸாயன சிகித்ஸிதம்

இனி பகவான் தன்வந்தரி ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி அறிவாற்றலையும், ஆயுளையும் வளர்க்கும் இரஸாயன முறைகளை விளக்குவோம். 1-2

### 1. வெள்ளைக் கார்போக அரிசி முறை

வெள்ளைக்கார்போக அரிசி விதைகளை வெயிலில் உலர்த்தித் தூளாக்கி அதனுடன் வெல்லம் சேர்த்து நெய்யில் பழகிய பானையில் இட்டுத் தானியக்குவியலுக்குள் ஏழு நாட்கள் வைத்திருக்க வேண்டும். பிறகு அதை எடுத்து வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் உடலைத்தூய்மைப்படுத்தி உடல் வலிமைக்கு ஏற்றவாறு விடியற் காலையில் உட்கொண்டு வெந்நீரைப் பருகச் செய்க. சேராங் கொட்டை முறைக்குக் கூறியபடி இல்லத்துக்குள் புக வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு நண்பகலில் குளிர்ந்த நீரில் நீராடி அறுபது நாள் குறுவை அரிசிச் சோற்றில் சர்க்கரையும் பாலும் கலந்து உட்கொள்ள வேண்டும். இவ்வாறு ஆறு மாதங்கள் உட்கொண்டவர் தீவினைகள் நீங்கியவராகி வலிமை, நல்லநிறம், நினைவாற்றல் கொண்டு நோயின்றி நூறாண்டுகள் வாழக்கூடியவராவார். குட்டம், பாண்டு நோய், பெருவயிறு முதலியவையுள்ளவர் கரு கார்போக அரிசித்தூளைப் பசுவின் சிறுநீரில் கலந்து விடியற்காலையில் ஒரு பலம் ,அல்லது 288 கிரைன் மருந்தை உட்கொள்ளவேண்டும். நண்பகலில் உப்பின்றி நெல்லிக்கஞ்சியுடன் நெய் கலந்த சோற்றை உட்கொள்ளச் செய்ய வேண்டும். இவ்வாறு ஒரு மாத காலம் செய்தால் நினை வாற்றலுடன் நோயின்றி நூறாண்டுகள் வாழக்கூடியவராவார். இவ்வாறு கொடிவேலியையும் மஞ்சளையும் பயன்படுத்தலாம். கொடிவேலியை இரண்டு பலம் அளவு பயன்படுத்த வேண்டும். மற்ற முறைகள் முன்கூறியபடியே பின்பற்றத்தக்கவை. 3

---

* மேதா - அறிவு. அறிவாற்றலையும், ஆயுளையும் வளர்க்கும் இரஸாயன முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் மேதா யுஷ்காமீய ரஸாயன சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

## 2. *மண்டூகபர்ணி சுரசத்தைப் பயன்படுத்தும் முறை

வாந்தி எடுத்தல், பேதியாகச் செய்து கொள்ளுதல் போன்ற உடலைத் தூய்மைப்படுத்திக்கொள்ளும் முறைகளைக் கையாண்ட பிறகு ஸம்ஸர்ஜனம் எனும் முறையில் பேயா, விலேபி எனும் கஞ்சி வகைகளை முறையாக உட்கொள்ள வேண்டும். அதற்குப் பிறகு சேராங்கொட்டையைப் பயன்படுத்தும் முறைக்குக் கூறிய படி இல்லத்தில் புகுந்து ஸம்பாத மந்திரங்களால் ஆயிரம் முறை ஹோமம் செய்ய வேண்டும். அதன் பின்னர் உடல் வலிமைக்கு ஏற்ற அளவு மண்டூகபர்ணி எனும் வல்லாரை வகையின் சுரசத்தை நெய்யுடன் கலந்தோ அல்லது பாலைத் துணை மருந்தாகக் கொண்டோ உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு பாலுடன் யவ அரிசிச் சோற்றை உண்ண வேண்டும். அல்லது எள்ளுடன் பாலைத் துணை மருந்தாகக் கொண்டு மண்டூகபர்ணியை மூன்று மாதங்கள் உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு நெய்யும் பாலும் கலந்த சோற்றை உணவாகக் கொள்ள வேண்டும். இவ்வாறு இம்மருந்தை உட்கொண்டவர் உடற் பொலிவு, தொலைவில் ஏற்படும் ஒலிகளைக் கேட்கும் வலிமை, மிக்க நினைவாற்றல், உடல் வலிமை ஆகியவை பெற்று நூறாண்டுகள் வாழ்வார். மூன்று நாட்கள் உபவாசம் இருந்து பிறகு மண்டூகபர்ணியை உட்கொள்க. மூன்று நாட்களுக்குப் பிறகு நெய்யையும் பாலையும் உட்கொள்க. அல்லது ஒரு பலம் மண்டூகபர்ணி விழுதைப் பாலில் கலந்து உட்கொள்க. இவ்வாறு பன்னிரண்டு நாட்கள் இம்மருந்தை உட்கொண்டவர் அறிவாற்றல் மிகுந்து நூறாண்டுகள் வாழ்வார். 4

## 3. வல்லாரை சுரசத்தைப் பயன்படுத்தும் முறை

வாந்தி எடுக்கச் செய்தல் முதலான உடலைத் தூய்மைப் படுத்தும் முறைகளைக் கையாண்ட பிறகு ஸம்ஸர்ஜன முறையில் பேயா, விலேபி முதலிய கஞ்சி வகைகளைப் பயன்படுத்துக. பிறகு இல்லத்தில் புகுந்து ஆயிரம் முறை ஸம்பாத மந்திரங்களால் ஹோமம் செய்து உடல் வலிமைக்கு ஏற்ற அளவு பிராம்மி எனப்படும் வல்லாரைச் சுரசத்தை உட்கொள்க. மருந்து செரிமானமடைந்த பின் நண்பகலில் உப்பில்லாத யவாகூ எனும் கஞ்சியை உடல் ஏற்றுக் கொள்ளுமானால் அதை பாலுடன் சேர்த்து உட்கொள்க. இவ்வாறு ஏழு நாட்கள் மருந்தை உட்கொண்டவர் உடற்பொலிவும், அறிவாற்றலும் மிகப்பெறுவார்.

---

* மண்டூகபர்ணீ - வல்லாரை வகை.

மீண்டும் ஏழு நாட்கள் இம்மருந்தை உட்கொண்டால் கவிதை புனையும் திறமையும், நினைவாற்றலும் பெறுவார். மூன்றாம் முறையாக உட்கொண்டால் இருமுறை நூறு சொற்களை ஒருவர் கூறக்கேட்டு அவற்றைத் தவறில்லாமல் மீண்டும் சொல்லக் கூடியவர் ஆவார். இவ்வாறு இருபத்தோரு நாட்கள் மருந்தை உட்கொள்வதால் துன்பமும் ஏழ்மையும் நீங்கும். கலைமகள் அவரது உடலில் புகுந்து கொள்வாள். மறை நூல் பொருட்கள் அனைத்தும் நினைவிற்கு வரும். ஒரு முறை கேட்ட சொற்களை அப்படியே எக்காலத்தும் திரும்பச் சொல்லும் அறிவாற்றல் தோன்றும். இத்தகைய பெருமைகளுடன் நூறாண்டுகள் வாழக் கூடியவராவார். 5

### 4. பிராம்மீக்ருத ரஸாயனம்

வல்லாரை சுரசம் இரண்டு பிரஸ்தங்கள், நெய் ஒரு பிரஸ்தம், வாயுவிடங்க அரிசி ஒரு குடவம், வசம்பு, சீந்திற்கொடிகள் இரண்டிரண்டு பலம், திரிபலை பன்னிரண்டு பலம் ஆகியவை அனைத்தையும் மைய அரைத்துப் பாதுகாப்பாக வைக்க வேண்டும். முன் மருந்துகளுக்குக் கூறிய முறையில் வலிமைக்கு ஏற்ற அளவு உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமானமான பிறகு பால், நெய் கலந்த சோற்றை உண்ண வேண்டும். முன்கூறிய விடத்தக்க பொருள்களை விலக்க வேண்டும். இதை உட்கொண்டால் உடலின் மேல், கீழ், இடைப்பகுதியிலிருந்து கிருமிகள் வெளிவரும். ஏழ்மை நீங்கும். தாமரை போன்ற நிறம் தோன்றும். ஆயுள் நிலை பெறும். கேட்ட சொற்களை நினைவிற்கொள்ளும் திறமை மிகும். உட்கொண்டவர் முந்நூறு ஆண்டுகள் வாழக்கூடியவராவார். குட்டம், விஷக்காய்ச்சல், கால்கைவலி, பைத்தியம், நஞ்சு, பூதங்களாலான துன்பம் போன்ற பெரும் நோய்களில் இது பயன்படுத்தத்தக்க மருந்தாகும். 6

### 5. வசம்பைப் பயன்படுத்தும் முறை

வாந்தி எடுத்தல் முதலான உடல் தூய்மை முறைகளைக் கையாண்டவர் இல்லத்தில் புகுந்து ஹோமம் செய்து நெல்லிக்கனி விழுதுக்கு சம அளவு வசம்பை விழுதாக்கி இரண்டையும் பாலில் கலந்து உட்கொள்ள வேண்டும். மருந்து செரிமானமடைந்த பிறகு நெய்யும் பாலும் கலந்த சோற்றை உணவாகக் கொள்ள வேண்டும். இவ்வாறு பன்னிரண்டு நாட்கள் பயன்படுத்தினால் வெகு தொலைவில் உள்ள ஒலிகளையும் கேட்கும் வலிமை உண்டாகும். மேலும் பன்னிரண்டு நாட்கள் உட்கொண்டால் நினைவாற்றல் மிகும். மூன்றாம் முறை

பன்னிரண்டு நாட்கள் பயன்படுத்தினால் கேட்டதையெல்லாம் நினைவிற்கொண்டு மீண்டும் தவறாமல் உரைக்கும் திறமை தோன்றும். நான்காம் முறையும் பயன்படுத்தினால் தீவினைகள் அனைத்தும் நீங்கியவராவார். பருந்தைப் போல கண் பார்வை மிகும். இம்மருந்து உண்டவர் நூறாண்டுகள் வாழ்ந்திருப்பார். உணவு முறை முதலியன முன் மருந்துகளுக்கு கூறியபடியே கொள்க. 7

**6. நூறு முறை பக்குவம் செய்த வசம்பு முறை**

வசம்புக் கஷாயம் மற்றும் விழுதுடன் நூறு முறை நெய்யைப் பக்குவம் செய்து அதில் ஒரு துரோணம் அளவு உட்கொண்டவர் ஐந்நூறாண்டுகள் வாழக்கூடியவராவார். கலகண்டம், அபசி, யானைக்கால், குரல் மாறுபாடு முதலியன நீங்கும். 8

இனி மந்திரஜபத்துடன் உட்கொள்ளும் ஓராண்டில் பயன் விளைவிக்கக்கூடிய ஆயுளை வளர்க்கும் இரஸாயன முறைகள் விளக்கப்படுகின்றன. 9

**7. ஆயுளை வளர்க்கும் இரஸாயன முறை**

பூச நட்சத்திரத்தில் ஸ்ரீஸூக்தத்தை ஓதி ஆயிரம் முறை ஹோமம் செய்தபின் நாள் தோறும் தங்க(பஸ்ப)த்துடன் வில்வத்தூளைத் தேனும் நெய்யும் கலந்து உட்கொள்ள வேண்டும். இதைப் பயன்படுத்துவதால் ஏழ்மை அகலும். வில்வ வேரை மேல் தோல் நீக்கிப் பக்குவம் செய்த கஷாயத்தை நாள் தோறும் நீராடி ஹோமம் செய்து பாலுடன் உட்கொண்டால் பத்தாயிரம் ஆண்டுகள் வாழலாம். 10-12

**8. தாமரைத்தண்டைப் பயன்படுத்தும் முறை**

ஹோமம் செய்த பிறகு தாமரைத்தண்டின் கஷாயத்தைத் தேனும், பொரியும் கலந்து உட்கொண்டால் ஆயிரம் ஆண்டுகள் வாழக்கூடியவர் ஆவார். இது சிறந்த இரஸாயனமாகும். 13

**9. ஏழ்மையைப் போக்கும் இரஸாயனம்**

தங்கபஸ்பம், தாமரைவிதை, தேன், பொரி, ஞாழல் ஆகியவற்றைப் பசும் பாலுடன் உட்கொண்டால் ஏழ்மை நீங்கும். 14

**10. நீலாம்பலைப் பயன்படுத்தும் முறை**

நீலாம்பல் கஷாயத்தைப் பசும்பால், தங்கபஸ்பம், தேன் மெழுகு, தேன் ஆகியவற்றைக் கலந்து உட்கொண்டவர் இரஸாயனத் திறமை கொண்டவர் ஆவார். 15

### 11. வேறு முறை

ஒரு லட்சம் முறை ஹோமம் செய்து பசும்பால், தங்கப் பஸ்பம், தேன் மெழுகு, தேன் ஆகியவற்றைக் கலந்து உட்கொள்வ தால் மனிதர் இரஸாயனப் பயன் பெறுவார். 16

### 12. அறிவாற்றலை வளர்க்கும் முறை

வசம்பு, தங்கபஸ்பம், வில்வத்தூள் ஆகியவற்றை நெய்யுடன் உட்கொண்டால் ஆயுள் வளரும். உடல் நலமும், செழிப்பும் பெறும். அறிவாற்றல் மிகும். 17

### 13. வேறு முறை

ஒரு தோலா ஆடாதொடை வேர்க்கஷாயத்தில் செய்த எண்ணெயை ஓராயிரம் முறை ஹோமம் செய்தபிறகு உட்கொண்டால் அறிவும், ஆயுளும் வளரும். 18

யவதானியத்தைத் தூளாக்கிச் சமைத்துத் தேன், திப்பிலிகளுடன் உட்கொண்டால் கல்வியில் நல்ல தேர்ச்சி பெறலாம். 19

### 14. துன்பம் நீக்கும் தேன் முதலியவற்றின் பயன்

நோயாளியின் நிலை, உயிர் பிழைப்பது ஐயத்திற்கு இடமானபோது தேன், நெல்லித்தூள், தங்க பஸ்பம் ஆகிய இம்மூன்றையும் குழைத்து உட்கொண்டால் உயிர் பெறலாம். 20

### 15. மன்னரையும் வயப்படுத்தும் முறை

நாள்தோறும் தேன், தங்கபஸ்பம் ஆகியவற்றுடன் சதாவரீகிருதம் எனும் நெய் மருந்தை முறையாக உட்கொண்டு வந்தால் மன்னரும் வயப்பட்டிருப்பார். 21

### 16. அனைத்து நன்மைகளையும் தரும் மருந்து

ஞாழல், புத்ரஜீவகம், அதிமதுரம், தேன், தங்கபஸ்பம் ஆகியவற்றைக் கலந்து உட்கொண்டு வந்தால் செல்வங்கள் அனைத்தையும் பெறலாம். 22

### 17. நலம் தரும் தாமரை மருந்து

அதிமதுரத்துடன் செங்கமலம் அல்லது நீலாம்பலின் கஷாயத்தையும் பசும்பாலையும் சேர்த்துக் காய்ச்சி அதனுடன் தங்கப் பஸ்பத்தை உட்கொள்ள வேண்டும். பிறகு அம்மருந்துப் பொருள்களைக் கொண்டு செய்த கஷாயத்துடன் கலந்து

காய்ச்சிய பாலை உட்கொள்ள வேண்டும். இம்முறை ஏழ்மையைப் போக்கும். ஆயுளை வளர்க்கும். அளவிலா செல்வத்தைத் தரும். 23-24

இம்முறைகளைத் தயார் செய்யும்போது மந்திரம் ஓதப் படாமல் இருந்தால் காயத்திரி மந்திரத்தையாவது ஜபம் செய்ய வேண்டும். 25

இந்த மூலிகைகள் துயரைத் துடைத்து ஏழ்மையைப் போக்கி அளவிலா செல்வத்தையும், யானைக்கு ஒப்பான உடல் வலிமையையும் தந்து மனிதரை தேவதைக்கு இணையானவராகச் செய்யும். 26

### 18. அறிவாற்றலை வளர்க்கும் முறை

எப்பொழுதும் இடையறாமல் கல்வியில் நாட்டம் கொண்டிருத்தல், தன்கொள்கைகளை நன்கு நிலைநாட்டிப் பிறருடைய கொள்கைகளை தக்க உத்திகளுடன் மறுத்து வாதம் புரிதல், தன்சாஸ்திரத்துடன் மற்ற நியாயம் முதலான சாஸ் திரங்களையும் கற்றல், இத்தகைய சாஸ்திரங்களைப் பிறருக்குக் கற்பித்தல், கல்வியிற் சிறந்த ஆசிரியர்களைச் சார்ந்து தொண்டு புரிதல் ஆகியவை அறிவாற்றலை வளர்க்கக் கூடியவையாகும். 27

### 19. ஆயுளை வளர்ப்பவை

முதலில் உண்ட உணவு நன்கு செரிமானமாகிய பிறகு உணவு உட்கொள்ளுதல், மலம், சிறுநீர் முதலியவற்றின் வேகத்தைத் தடுக்காமல் இருத்தல், புலனடக்கம், கொல்லாமை, துணிச்சல் மிக்க செயல்களில் ஈடுபடாமல் இருத்தல் ஆகியவை ஆயுளையும், அறிவாற்றலையும் வளர்க்கும். 28

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**மேதாயுஷ்காமீய ரஸாயன சிகித்ஸிதம் எனும்**

**இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்தொன்பதாம் அத்தியாயம்

# * ஸ்வபாவ வியாதி பிரதிஷேதநீய ரஸாயனம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி இயல்பாக தோன்றும் பசி, நாவறட்சி, முதுமை, சாவு முதலிய துன்பங்களை நீக்கும் முறைகளை விளக்குவோம். 1-2

### 1. ஸோமனின் சிறப்பு

முன்காலத்தில் பிரும்மா முதலிய தேவர்கள் முதுமை, சாவு முதலியவற்றைப் போக்கவல்ல ஸோமம் எனப் பெயர் கொண்ட அமிர்தத்தைத் தோற்றுவித்தனர். அதைப் பயன்படுத்தும் முறை விளக்கப்படுகிறது. 3

### 2. ஸோமனின் வகைகள்

ஸோமன் என்பது ஒன்றுதான். ஆனால் இடம், பெயர், தோற்றம், செயல்படும் திறன் முதலியவற்றால் அது இருபத்து நான்கு வகைகளாகியது. 4

அவையாவன - அம்சுமான், முஞ்சவான், சந்திரமா, இரஜதபிரபன், தூர்வாஸோமன், கனீயான், சுவேதாக்ஷன், கனகபிரபன், பிரதானவான், தாலவிருந்தன், கரவீரன், அம்சவான், ஸ்வயம் பிரபன், மஹாஸோமன், கருடாஹ்ருதன், காயத்ரன், திரைஷ்டுபன், பாங்தன், ஜாகதன், சாக்வரன், அக்னிஷ்டோமன், ரைவதன், திரிபதா காயத்திரி, உடுபதி எனும் இப்பெயர்களைக் கொண்டு மறை நூல்களில் ஸோமன் அழைக்கப்படுகிறது. 5-8

இந்த ஸோம வகைகள் அனைத்தையும் பயன்படுத்தும் முறையும், அவற்றால் விளையும் பயனும் ஒரே வகையாகும். இனி அவற்றைப் பயன்படுத்தும் முறை விளக்கப்படுகிறது.

அவற்றில் ஏதேனும் ஒரு ஸோமனை உட்கொள்ள விரும்புகிறவர் தேவையான பொருள்கள் அனைத்தையும்

---

* ஸ்வபாவவியாதி - இயல்பாகத் தோன்றும் பசி, நாவறட்சி, முதுமை, நரை முதலியன. அவற்றைப் போக்கும் இரஸாயன முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸ்வபாவ வியாதி பிரதிஷேதநீய ரஸாயனம் எனும் பெயர் பெற்றது.

திரட்டிக் கொண்டு சேவகர்களுடன் சிறந்த நிலத்தில் மூன்று பிரிவு (கட்டு) களாகக் கட்டப்பட்டுள்ள இல்லத்தில் முதலில் வமன முறை, விரேசன முறை முதலிய முறைகளால் உடலை தூய்மைப்படுத்திக் கொண்டு ஸம்ஸர்ஜன முறைப்படி பேயா, யவாகூ முதலிய கஞ்சி வகைகளை உட்கொண்டு, 'அக்னிஷ்டோமம்' எனும் யாகத்தைச் செய்த ரித்விக்குகளால் கொண்டு வரப்பட்ட அம்சுமான் எனும் ஸோமக்கிழங்குடன் நல்ல நாளில் புகவேண்டும். ஸோமக்கிழங்கை தங்க ஊசியால் குத்தித் தங்கப் பாத்திரத்தில் ஒரு குடவம் (16 தோலா) அளவுள்ள ஸோமரஸத்தை நிரப்ப வேண்டும். பிறகு அந்த ரஸத்தைச் சுவைக்காமல் ஒரே மூச்சில் பருகிவிட வேண்டும். பிறகு ஆசமனம் செய்து இரஸத்தை நீக்கிய அம்சுமான் எனப்படும் அக்கிழங்கை நீரில் போட்டு விட வேண்டும். யமம் நியமம் முதலிய யோக நெறிகளைப் பின்பற்றி மனத்தை ஒன்றியிருக்கச் செய்து மௌனமாக நண்பர்களுடன் உலாவ வேண்டும். 9-10

இரஸாயனத்தை உட்கொண்ட மனிதர் காற்றில்லாத இடத்தில் தான் பருகிய ஸோமத்தை நினைத்துக்கொண்டு புனிதமான நிலையில் அமர்ந்திருக்க வேண்டும். மற்றும் நிற்கலாம், இங்கு மங்கும் உலாவலாம். ஆனால் உறங்கக்கூடாது.11

அவர் மாலையில் உணவு உட்கொண்டபின் மங்கலச்சொற்களைக் கேட்டுக்கொண்டே கருநிறமான தோல் பரப்பிய தர்ப்பையாலான படுக்கையின் மேல் அமர்ந்து நண்பர்களுக்கிடையே படுக்கலாம். நாவறட்சி தோன்றினால் சிறிதளவு குளிர்ந்த நீரைப் பருகலாம். பிறகு விடியற்காலையில் விழித்துக்கொண்டு மங்கலச் சொற்களைக் கேட்டுக் கொண்டே படுக்கையை விட்டு எழுந்து ஸ்வஸ்திவாசன மந்திரங்களை ஓதிக்கொண்டே பசுவைத் தொட வேண்டும். பிறகு முன்போல உலாவ வேண்டும். ஸோமரஸம் செரிமானமடைந்த பிறகு வாந்தியாகும். இரத்தமும் கிருமியும் கலந்த வாந்தி தோன்றிய பிறகு மாலை வேளையில் காய்ச்சிய பாலைக் குளிர வைத்து பருக வேண்டும். மூன்றாம் நாள் கிருமிகளுடன் கூடிய பேதியாகும். இதனால் அவர் விருப்பமற்ற வேண்டாத உணவு முதலியவற்றிலிருந்து விடுபட்டு தூய்மை பெற்ற உடல் கொண்டவராவார். மாலையில் நீராடிய பிறகு முன்போலப் பாலைப்பருக வேண்டும். பட்டாடை பரப்பிய படுக்கை மேல் படுத்து உறங்க வேண்டும். நான்காம் நாள் அம்மனிதரின் உடலில் வீக்கம் தோன்றும். உடல் உறுப்புகளிலிருந்து கிருமிகள் வெளிவரும். அன்று படுக்கை மேல் தூசியை நிரப்பி உறங்க

வேண்டும். மாலையில் முன்போலப் பாலை உணவாகப் பருக வேண்டும். இவ்வாறே ஐந்தாம் நாளும், ஆறாம் நாளும் செய்ய வேண்டும். அந்நாட்களில் பாலை மட்டும் உணவாகக் கொள்ள வேண்டும்.

ஏழாம் நாள் மெய்த்தோலும், மாமிசமும் இன்றி என்பு மட்டும் உள்ளவராகி ஸோமத்தைப் பருகியதால் மூச்சை மட்டும் இழுத்து விட்டுக் கொண்டிருப்பார். அன்று இளஞ்சூடுள்ள பாலால் குளிக்கச் செய்து எள், அதிமதுரம், சந்தனம் ஆகிய வற்றை மைய அரைத்து உடலின் மேல் பூசவேண்டும். பாலைப் பருகச் செய்ய வேண்டும். எட்டாம் நாள் காலையில் பாலில் குளித்துச் சந்தனம் பூசிய உடல் கொண்டுள்ள அவருக்குப் பாலை உணவாகத் தர வேண்டும். பிறகு அவ்வரை தூசி நிரம்பிய படுக்கையிலிருந்து எழுப்பி பட்டாடை பரப்பிய படுக்கை மேல் படுக்கச் செய்க. பிறகு அவரது உடலில் மாமிசம் செழிப்படையத் துவங்கும். மெய்த்தோல் பிளவுபடத் துவங்கும். பல், நகம், உரோமம் முதலியன உதிர்ந்து விடும். ஒன்பதாம் நாள் அவரது உடலின் மேல் அணுதைலத்தைப் பூசித் தேய்க்க வேண்டும். பிறகு ஸோமபட்டையின் கஷாயத்தைக்கொண்டு நீராடச் செய்ய வேண்டும். பத்தாம் நாளும் இப்படியே செய்ய வேண்டும். இதனால் அவருடைய மெய்த்தோல் நிலைபெறும். பதினோராம் நாளும், பன்னிரண்டாம் நாளும் இம்முறையையே கையாள வேண்டும்.

பதிமூன்றாம் நாள் ஸோமபட்டை கஷாயத்தில் குளிக்கச் செய்க. இவ்வாறே பதினாறாம் நாள் வரை செய்ய வேண்டும். பதினேழாம் நாள் கூர்மையும், அடர்த்தியும் கொண்டு வைரம், வைடூரியம் எனும் இரத்தினங்களைப் போன்று ஒளிவீசுவனவும், சமமாய் நிலைத்திருப்பனவும் கடினத்தன்மையைப் பொறுக்கக் கூடியனவுமான பற்கள் தோன்றும். அன்று முதல் பழைய சம்பா அரிசியில் பால் சேர்த்துச் செய்த யவாகூ எனும் கஞ்சியை உட்கொள்ளச் செய்க. இவ்வாறு இருபத்தைந்தாம் நாள் வரை செய்ய வேண்டும். பிறகு இரண்டு வேளைகளிலும் சம்பா அரிசிச் சோற்றைப் பாலில் கலந்து உட்கொள்ளச் செய்க. அப்பொழுது அவருக்குப் பவழம், இந்திரகோபமெனும் பட்டுப்பூச்சி, இளஞ்சூரியன் முதலியவற்றின் ஒளியைப்போல் மிளிரும் நகங்களும், நிலைபெற்று எண்ணெய்ப்பசை கொண்ட நுட்பமான உரோமங்களும், தலைமுடியும் உண்டாகும். அவருடைய மெய்த்தோல், நீலாம்பல், அகத்திமலர், வைடூரிய மணி ஆகியவற்றைப் போன்ற ஒளி கொண்டதாகும்.

ஒரு மாதம் சென்ற பின் தலை முடியை வெட்டச் செய்து வெட்டிவேர், சந்தனம், கருநிறஎள் ஆகியவற்றின் விழுதைத் தலையில் பூசி பாலில் குளிக்கச் செய்க. ஏழுநாட்கள் சென்ற பிறகு வண்டு, மை போன்று கருநிறம் கொண்டு சுருட்டையாய் நிலையாக விளங்கும் முடி தோன்றும். மூன்று நாட்களுக்குப் பிறகு அவரை உட்கட்டிலிருந்து முதற் கட்டுக்கு வந்து அங்குச் சிறிது நேரம் இருந்து விட்டு மீண்டும் உள்கட்டுக்குச் செல்லும்படிச் செய்ய வேண்டும். அவருக்கு உடலில் தேய்த்துக் குளிக்க பலா தைலம், மேல் பூச்சுக்கு யவ அரிசிமா, குளியலுக்கு இளஞ் சூடுள்ள பால், வெட்டிவேர் ஊறிய கிணற்றுநீர், உடலின் மேல் தேய்க்க அஜகர்ணமெனும் மூலிகையின் விழுது, மெய்ப்பூச்சுக்கு சந்தனம் ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். நெல்லிக்கனிச் சாற்றாலான யூஷம், பருப்பு ஆகியவற்றை உணவுக்கும் பயன் படுத்த வேண்டும். மற்றும் பால், அதிமதுரம் ஆகியவற்றுடன் கருநிற எள்ளைச் சேர்த்து விழுதாக்கி உடலின் மேல் பூச வேண்டும். இவ்வாறு பத்து நாட்கள் செய்ய வேண்டும். பிறகு அதற்கு அடுத்த நாள் வீட்டின் இரண்டாவது கட்டில் வசிக்கச் செய்ய வேண்டும். அங்கு பத்து நாட்கள் தங்கியிருந்த பிறகு முதற்பகுதியில் உள்ள மூன்றாவது கட்டில் நிலையாக வசிக்கத் துவங்கவும். பத்து நாட்களுக்குப் பிறகு சிறிது நேரம் வெயிலிலும், காற்றிலும் வசித்து மீண்டும் வீட்டுக்குள் செல்ல வேண்டும். அழகுள்ளதாக மாறிய தன் உருவத்தைக் கண்ணாடியிலோ நீரிலோ பார்க்க வேண்டாம். அடுத்த பத்து நாட்கள் வரை சினங் கொள்ளுதல் போன்றதை விலக்க வேண்டும். இவ்வாறே மற்ற ஸோமங்களையும் பயன்படுத்தி முறையை உணர்க. சிறப்பாக கொடித் தோற்றமும், கிளைகளும் கொண்டு சிறுசெடியாக உள்ள ஸோமங்களை முறையே அந்தணர், அரசர், வைசியர் ஆகியவர்கள் பயன்படுத்த வேண்டும். இவற்றின் அளவு நாலரைப் பலங்களாகும். 12

### 3. ஸோமரஸத்திற்கு உரிய பாத்திரங்கள்

பல வகையான ஸோமனின் சாற்றை வைக்கத் தக்க பாத்திரங்களும் வேறுபடுகின்றன. அம்சுமான் எனும் ஸோமனின் சாற்றைத் தங்கப் பாத்திரத்தில் வைக்க வேண்டும். சந்தரிமா எனும் ஸோமனிற்கு வெள்ளிப்பாத்திரம் ஏற்றதாகும். இவ் விரண்டு ஸோமங்களையும் பயன்படுத்துவதால் மனிதர் அணிமா, லகிமா முதலிய எண்வகை ஸித்திகளைப் பெற்று பரம சிவனை அடைவார். மற்ற ஸோமங்களைச் செப்பு அல்லது மண்ணாலான பாத்திரங்களில் வைக்க வேண்டும். அல்லது

ரோஹிதம் எனப்படும் விலங்கின் தோலாலான பாத்திரம் ஏற்ற தாகும். முன்கூறியபடி ஸோமனைப் பயன்படுத்திய பிறகு நான் காம் மாதத்தில் பௌர்ணமி அன்று அந்தணர்களையும், தெய்வங் களையும் பூசை செய்து மங்களம் விளைவிக்கும் மந்திரங்களை ஓதச் செய்து பிறகு வீட்டை விட்டு வெளிவர வேண்டும். 13

### 4. ஸோமத்தின் சிறப்பு

மூலிகைகளுக்கு தேவனைப்போன்ற ஸோமத்தைப் பயன் படுத்திய அறிவாளி பத்தாயிரம் ஆண்டுகள் வரை புது உடல் பெற்று விளங்குவார். 14

நெருப்பு, நீர், நஞ்சு, போர்க் கருவிகள் ஆகிய எதுவும் ஸோமத்தைப் பயன்படுத்தியவரின் ஆயுளுக்கு தீங்கு விளைவிக்காது. 15

அறுபதாண்டுகள் நிறைந்த (வயதுள்ள) பத்ர ஜாதியைச் சார்ந்து பல முறைகள் தலையிலிருந்து மதநீர் பெருகப் பெற்ற யானைகள் ஆயிரங்களின் வலிமையை ஸோமரஸத்தைப் பயன்படுத்தியவர் பெறுவார். 16

க்ஷீரஸாகரம், இந்திரபுரி, உத்தரகுருதேசம் ஆகியவற்றை அடைவதற்கு மிக்க கடினமான நாடுகளிலும் ஸோமரஸத்தைப் பருகியவர் எளிதில் தங்கு தடையின்றி உலாவி வரக்கூடிய வராவார். 17

மன்மதனைப் போன்ற அழகும், சந்திரனைப் போன்ற பொலிவும் பெற்று அனைவரையும் மகிழ்விக்கக் கூடியவராக விளங்குவார். மற்றும் அவர் வேதங்கள், அவற்றின் உறுப்புகள், துணை வேதங்கள் ஆகிய எல்லா சாஸ்திரங்களின் உட் கருத்துகளையும் எளிதில் உணர்ந்து கொள்வார். அவரது எண்ணம் குறைவற நிறைவு பெறுவதாகும். தேவதையைப் போல இவ்வுலகில் அவர் விளங்குவார். 18-19

### 5. ஸோமத்தின் பொது இலக்கணம்

ஸோமவகைகள் அனைத்திலும் பதினைந்து இலைகள் இருக்கும். அவை வளர்பிறையில் முளைத்திருக்கும். தேய் பிறையில் உதிர்ந்து விடும். வளர்பிறையில் பிரதமை முதல் ஒவ்வொரு நாளும் அதிகமாகத் தோன்றி பௌர்ணமி அன்று பதினைந்து இலைகள் கொண்டிருக்கும். அதற்கு அடுத்த தேய் பிறை பிரதமை திதி அன்று ஓரிலை, அடுத்த நாள் இரண்டாவது இலை என உதிர்ந்து கொண்டே வந்து அமாவாசை அன்று வெறும் கொடி மட்டும் எஞ்சியிருக்கும். 20-22

### 6. ஸோமவகைகளின் சிறப்பிலக்கணம்

அம்சுமான் எனும் ஸோமன் நெய்மணம் கொண்டு வெள்ளியைப் போல மிளிரும் கிழங்குடையதாக இருக்கும். முஞ்சவான் எனும் ஸோமன் வாழையைப் போன்ற கிழங்கும், வெள்ளைப் பூண்டு போன்ற இலையும் கொண்டிருக்கும். 23

சந்திரமா, கநகபிரபம் என்பவை எப்பொழுதும் நீரில் பரவி இருக்கும். கருடாஹ்ருதம், சுவேதாக்ஷம் என்பவை பாம்புச் சட்டையைப் போன்ற தோற்றத்தில் வெண்ணிறம் கொண்டு மரத்தின் உச்சியைச் சார்ந்து அசைந்து கொண்டிருக்கும். மற்றவை வட்ட வடிவத்தில் சித்திரத்தில் வரையப்பட்டவை போல காணப்படும். எல்லா வகை ஸோமங்களும் பதினைந்து இலைகளையே கொண்டிருக்கும். இவற்றின் கிழங்குகளில் பாலும், மேற்பகுதியில் கொடியும் இருக்கும். இலைகள் பல வகைப் பட்டவையாக இருக்கும். 24-26

### 7. ஸோமங்கள் தோன்றும் நிலம்

இமயம், அர்புதம், ஸஹ்யம், மஹேந்திரம், மலயம், ஸ்ரீ பர்வதம், தேவகிரி, பாரியாத்ரம், விந்தியம், தேவஸுந்தம், பெரிய ஏரிகள் ஆகியவற்றில் ஸோமங்கள் உற்பத்தியாகும். விதஸ்தா எனும் ஆற்றுக்கு வடக்கில் மிகப் பெரிய மலைகள் ஐந்து உள்ளன. அவற்றின் அடியிலும் நடுப்பகுதியிலும் சிந்து எனப்படும் ஆறு உள்ளது. அதில் ஸோமத்தில் சிறந்த சந்திரமா என்பது பாசியைப் போல மிதந்து கொண்டிருக்கும். 27-29

முஞ்சவான், அம்சுமான் என்பவையும் சந்திரமா எனும் ஸோமத்தின் அருகிலேயே இருக்கும். காச்மீரத்தில் க்ஷுத்ரகமானஸம் எனும் ஏரி உள்ளது. அதில் காயத்ரம், திரைஷ்டுபம், பாங்தம், ஜாகதம், சாக்வரம் மற்றும் சந்திரமா என்பதைப் போன்ற ஒளிகொண்ட ஸோமங்கள் தோன்றும். 30-31

அதிர்ஷ்டமில்லாதவர், மருத்துவரை அவமானப்படுத்துபவர், அறவழிபிறழ்ந்தவர், நன்றி மறந்தவர், மூலிகைகளையும், அந்தணர்களையும் வெறுப்பவர் ஆகியவர்களால் இதை பெற இயலாததாகும். 32

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**ஸ்வபாவவியாதி பிரதிஷேதநீய ரஸாயன சிகித்ஸிதம் எனும்**

**இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

## முபபதாம அததயாயம

# * நிவிருத்தஸந்தாபீய ரஸாயனம்

இனி துன்பங்களை அகற்றக்கூடிய ரஸாயன சிகிச்சை முறைகளை தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

### 1. இரஸாயனச் சிறப்பு

சுவர்க்கத்தில் எத்தகைய துன்பமும் இன்றி தேவர்கள் எவ்வாறு மகிழ்ச்சியுடன் இருக்கின்றனரோ அவ்வாறு இந்த இரஸாயன முறையைப் பயன்படுத்தியவர் இந்நிலவுலகில் எத்தகைய துன்பமும் இன்றி மகிழ்ச்சி ஒன்றையே கொண்டு வாழ்வார்கள். 3

### 2. ரஸாயன தகாதவரகள

புலனடக்கம் அற்றவர், சோம்பல் மிக்கவர், ஏழ்மையால் துன்புறுபவர், முன்யோசனையின்றி செயலாற்றுபவர், விசனமுள்ளவர், குடி சூதாடுதல் முதலியவற்றில் மிக்க ஆர்வம் கொண்டு அவற்றில் ஈடுபட்டுக் காலம் கடத்துபவர், பாவச் செயல்களில் ஈடுபாடுள்ளவர், மூலிகைகளையும், சிகிச்சை முறைகளையும் அறிதலில் அவமானப்படுபவர் (அதாவது அதில் அலட்சிய மனப்பான்மை கொண்டவர்) ஆகிய ஏழு வகையினர் இரஸாயன முறைக்குத் தகாதவர்களாவர். ஏனெனில் அறிவின்மை, செயலாற்றலில் ஊக்கமின்மை, ஏழ்மை, நிலையற்ற மனம் உடைமை. பிறருக்கு வசப்பட்டு தானாகச் செயல் புரிய இயலாமை, அறநெறி பிறழும் தன்மை, நல்ல மூலிகைகளைப் பெறாமை எனும் காரணங்களால் இவர்கள் தகாதவர்களாவர் என அறிக. 4

### 3. ஸோமனைப் போன்ற வேறு மூலிகைகள்

அஜகரி, ச்வேதகாபோதி, கிருஷ்ணகாபோதி, கோநஸீ, வாராஹீ, கன்யா, சத்ரா, அதிச்சத்ரா, கரேணு, அஜா, சக்ரகா, ஆதித்யபர்ணீ, பிரும்மசுவர்ச்சலா, சிராவணீ, மஹாசிராவணீ,

---

* நிவிருத்தஸந்தாபீய - துன்பங்களைப் போக்குவது. இத்தகைய இரஸாயன மூலிகைகளைப் பற்றி விளக்குவதால் நிவிரத்தஸந் தாபீய ரஸாயனம் என அத்தியாயம் பெயர் கொண்டது.

கோலோமீ அஜலோமீ, மஹாவேகவதீ எனும் பதினெட்டு மூலிகைகளும் ஸோமத்திற்கு ஒப்பான சிறந்த தன்மைகள் கொண்டவையாகும். இவற்றைப் பயன்படுத்தும் முறைகளும் விளையும் பயன்களும் ஸோமத்திற்குக் கூறப்பட்டவையே என சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஹோமம் நடத்தும் இல்லத்தைச் சேர்ந்து இம்மூலிகைகளில் பால் உள்ளவற்றின் பால் நான்கு பலம் கொண்டு ஒரே முறையில் முழுவதையும் பருக வேண்டும். பால் இல்லாத மூலிகைகளில் சுட்டுவிரல் போல மூன்று துண்டுகளைப் பயன்படுத்த வேண்டும். கோநஸீ, அஜகரீ, கிருஷ்ண காபோதி ஆகியவற்றை ஒரு பிடி அளவு கொண்டு சிறு துண்டுகளாக்கிப் பாலில் பக்குவம் செய்க. பிறகு அதை வடிகட்டிச் சிறு துண்டுகளாக்கிச் சிறிது நெய் சேர்த்து ஹோமம் செய்த பிறகு ஒரே முறையில் முழுவதையும் உட்கொள்க. சக்ரகா என்பதன் பாலை ஒரே முறையில் பருக வேண்டும். பிரும்மசுவர்ச்சலா என்பதைப் பூரி, பொங்கல் போன்ற உணவுப்பண்ட முறையில் பக்குவம் செய்து ஏழு நாட்கள் உட்கொள்க. மற்ற மூலிகைகளில் ஐந்து பலம் வீதம் கொண்டு ஓர் ஆடகம் பாலில் பக்குவம் செய்து ஒரு பிரஸ்தம் அளவு பால் மிகுந்துள்ள போது அடுப்பிலிருந்து இறக்கி ஒரே முறையில் முழுவதையும் உட்கொள்க. உணவு, நடத்தை முதலியன ஸோமத்திற்குக் கூறியபடியே இருக்க வேண்டும். உடலில் தேய்த்துக் குளிக்க வெண்ணெயை மட்டும் பயன்படுத்துக. மற்ற பத்திய முறைகள் வீட்டை விட்டு வெளிவரும் வரை ஸோமத்திற்குக் கூறியபடியே என அறிந்து கொள்க. 5

### 4. இரஸாயன மூலிகைகளின் பயன்

இந்த மூலிகைகளை முறையாகப் பயன்படுத்தினால் மனிதருக்கு இளமை, சிங்கத்திற்கு ஈடான வலிமை, அழகு, நினைவாற்றல், நன்னடத்தை, ஆயிரம் ஆண்டுகள் வாழக்கூடிய நிலை என்பன உண்டாகும். 6

அம்மனிதர் புயத்தில் அணியும் அணி, காதணி, கிரீடம், மலர்மாலை, சந்தனம், நல்ல ஆடை ஆகியவற்றை அணிந்து எல்லா விருப்பங்களும் நிறைவேறியவராகி, வானத்தில் முகில் போல உலாவும் திறமையும் கொண்டு விளங்குவார். 7

இரஸாயன மூலிகைகளைப் பயன்படுத்தியவர் நீர்கொண்ட மேகம் போலவும், பறவைகளைப் போலவும் சஞ்சாரம் செய்யக்கூடியவர் ஆவார். ஸோமனைப் பெற்றவரின் நிலை இதைவிட உயர்ந்ததாகும். 8

**5. பலவகை ரஸாயன மூலிகைகளின் இலக்கணம்**

மூலிகைகளை வேறு வேறாக இனம் கண்டு கொள்ளும் முறை விளக்கப்படுகிறது.

அஜகரீ என்பது வட்ட வடிவமாகச் சாம்பல் நிறம் கொண்டு படத்தில் வரையப்பட்ட ஸர்ப்பம் போல ஐந்து இலைகளைக் கொண்டு ஐந்து முழ நீளமுள்ளதாகக் காணப்படும். ச்வேதகாபோதி என்பது இலையில்லாமல் தங்க நிறம்கொண்டு வேரில் இரண்டு அங்குல நீளம் உடையதாய் ஸர்ப்பம் போன்ற தோற்றம்கொண்டு முனையில் சிவப்பு நிறத்துடன் காணப்படும். கோநஸீ என்பது இரு இலைகள் அமையப் பெற்று சிவந்தவேர், கருநிறவட்டங்கள் கொண்டு இரண்டு முழ நீள்மும், பசுவின் குளம்பு போன்ற தோற்றமும் கொண்டு காணப்படும். கிருஷ்ணகாபோதி பாலுடன் சிறு உரோமங்களைப் போன்ற அமைப்பு கொண்டு மென்மையானதாய் கருப்பஞ்சாறு போன்ற சாறு உள்ளதாகி அதைப்போன்ற தோற்றமும் சுவையும் கொண்டிருக்கும். வாராஹி என்பது கருநாகம் போன்ற தோற்றம் கொண்டு கிழங்கில் தோன்றுவதாகி ஓரிலை உள்ளதாய் மிக அதிகமான சக்தி கொண்டு உடைத்தால் மைபோலப் பளபளப்புடன் காணப்படும். சத்ரா அதிச்சத்ரா என்பவை அரக்கர்களை அழிப்பனவாய் கிழங்கில் தோன்றி கிழத்தன்மையையும் மரணத்தையும் போக்கவல்லனவாகி ச்வேதகாபோதி போன்ற தோற்றம் கொண்டிருக்கும். கன்யா எனப்பெயர் கொண்ட இரஸாயன மூலிகை மயிலிறகு போல அழகுள்ளதாகவும், பன்னிரண்டு இலைகள் கொண்டதாகவும், கிழங்கில் தோன்றுவதாகித் தங்க நிறப்பால் கொண்டு காணப்படும். கரேணு என்பது அதிக அளவில் பாலினைக் கொண்டு யானையைப் போன்ற தோற்றத்திலுள்ள கிழங்குடன் யானைக்காது போன்று புரச இலை வடிவமான இரண்டு .ன் காணப்படும்.

அஜா எனப்படும் மூலிகை, ஆட்டு மூளை போன்ற கிழங்குடன் பாலுள்ள சிறு செடியாகிச் சங்கு முல்லை, நிலா போன்ற பொலிவுடன் காணப்படும். சக்ரகா எனும் மூலிகை வெண்ணிறமும் பல நிறங்களைக் கொண்ட மலர்களும் கொண்டு குன்றிமணிச் செடியைப் போன்ற தோற்றத்தில் முதுமையையும், சாவையும் போக்கவல்லதாகிக் காணப்படும். ஆதித்யபர்ணீ என்பது வேருடன் ஆதவனின் சிவந்த கிரணங்களைப் போல அழகுடன் மென்மையும் கொண்டு ஐந்து இலைகளுடையதாய்

எப்பொழுதும் சூரியனின் கதியைச் சார்ந்து காணப்படும். பிரம்மசுவர்ச்சலா என்பது தங்க நிறத்துடன் நீர்நிலைகளின் கரைகளில் வளர்வதாகிப் பாலுடன் தாமரைத்தண்டு போலக் காணப்படும். சிராவணீ என்பது ஒரு முழ நீளம் உடையதாய் ரண்டு அங்குல நீளமுள்ள இலைகளும், நீலாம்பல் போன்ற மலர்களும் உடையதாய் மை நிறக்காய்களுடன் காணப்படும். மஹாச்சிராவணீ என்பது தங்க நிறத்துடன் பளபளப்பும், பாலும் கொண்டு சாம்பல் நிறமுள்ள மஹாசிராவணீயின் இலக்கணங் களைக் கொண்டு காணப்படும். கோலோமீ, அஜலோமீ என்பவை உரோமங்களுடன் கிழங்கில் தோன்றுவனவாகி அன்னத்தின் அடிகளைப் போல வேரில் பிளவுண்டு வேரில் தோன்றும் இலைகளுடன் அல்லது சங்கபுஷ்பி எனும் மூலிகையின் தோற்றத்தில் காணப்படும். வேகவதீ என்பது விரைந்து படர்வதாகிப் பாம்பின் சட்டையைப் போன்ற தோற்றத்தில் கார்ப்பருவத்தின் முடிவில் தோன்றுவதாகும். 9-25

### 6. இரஸாயன மூலிகைகளை எடுக்கும் போது கூற வேண்டிய மந்திரம்

முதலில் நாகம் போன்ற தோற்றம் கொண்டவையாகக் கூறப் பட்ட ஏழு மூலிகைகளையும் நிலத்திலிருந்து எடுக்கும் போது

மஹேந்த்ர ராமக்ருஷ்ணானாம் பிராம்ஹணானாம் கவா மபி|

தபஸாதேஜஸாவாபி ப்ரசாம்யத்வம் சிவாயவை ||

எனும் மந்திரத்தைக் கூறிக்கொண்டே எடுக்க வேண்டும். 26-27

இந்த மந்திரத்துடன் அறிவாற்றல் மிக்க மருத்துவர் எல்லா மூலிகைகளையும் அபிமந்திரணம் செய்ய வேண்டும். சிரத்தை (ஆர்வம்) இல்லாதவர், சோம்பல் கொண்டவர், செய்நன்றி கொன்றவர், பாவச் செயல்களில் ஈடுபட்டுள்ளவர் ஆகியவர்கள் நிலாவைப் போன்ற ஸோம மூலிகையை அடைய முடியாது. 28

முன் கூறிய இரஸாயன மூலிகைகளின் சிறப்புத் தன்மைகளுக்குக் காரணம் யாதெனில் முன்பு பிரும்மதேவனைப் பின் தொடர்ந்த தேவதைகள் தாம் பருகிய பிறகு மிகுந்திருந்த அமிர்தத்தை சோமனைப் போல வீரியமுள்ள மூலிகைகளிலும், மூலிகைகளுக்கு அரசனான சந்திரனிலும் வைத்ததேயாகும். 29

### 7. இரஸாயன மூலிகைகள் தோன்றும்

முன் கூறிய இரஸாயன மூலிகைகள் தோன்றும் இடங்களை விளக்குவோம். நீர் நிலைகளில் சிறந்தவையான தேவஸுந்த,

*சிந்து நதிகளின் கரையில் அறிவாற்றலை வளர்க்கும் பிரும்ம சுவர்ச்சலா என்பது தோன்றும். இதைப் போலவே இளவேனில் பருவத்தில் ஆதித்யபர்ணீ என்பது தோன்றும். அஜகரி, கோநஸீ என்பவை கார்ப்பருவத்தில் காணப்படும். காச்மீரத்தில் க்ஷுத்ரகம் எனப்படும் ஏரி உள்ளது. அங்கு கரேணு, கன்யா, சத்ரா, அதிச்சத்ரா, கோலோமீ, அஜரோமீ, சிராவணீ, மஹாசிராவணீ என்பவை தோன்றும். வாராஹீ, கோநஸீ என்பவை இளவேனில் பருவத்தில் காணப்படும். கௌசிகி எனும் நதியைத் தாண்டி ஸஞ்சயந்தி என்பதன் கிழக்கில் புற்றுகள் நிறைந்த மூன்று யோஜனங்கள் அளவு கொண்ட நிலப்பகுதி உள்ளது. அங்கு சுவேதகாபோதீ உள்ளது. மலயபர்வதம், நலசேது எனும் பகுதிகளில் வேகவதீ எனும் மூலிகை கிடைக்கும். இதைக் கார்த்திகை மாத பௌர்ணமி அன்று உபவாசம் இருந்து உட்கொள்ள வேண்டும். ஸோமனைப் பருகிய போது கடைப்பிடிக்க வேண்டிய பத்திய முறைகளையே இதற்கும் பயன்படுத்த வேண்டும். எல்லா மூலிகைகளையும், ஸோமனையும் அர்புதகிரி எனும் மலையில் சேர்க்க வேண்டும். அம்மலை உச்சிகளில் தேவதைகள் உலாவுகின்றன. சிகரங்கள் மேகமண்டலத்தைப் பிளந்து கொண்டிருக்கும். அம்மலை புகழ்பெற்ற நீர் நிலைகள் கொண்டது. ஆகவே அங்கு தேவமுனிவர்கள், சித்தர்கள் வசிக்கின்றனர். அச்சுறுத்தும் மலை, குகைகளுடன் சிங்கக்கர்ஜனை எதிரொலிக்க, யானைகள் குடைந்தாடும் நதிகளைக் கொண்டு காணப்படும். பலவகை தாதுக்களும், மிக்க விசித்திரமான அரிய பொருள்களும் அங்கு நிரம்பி இருக்கும். நதி, மலை, நீர்நிலை, புனித காடுகள், ஆசிரமங்கள் முதலிய இடங்களில் இம்மூலிகைகளைத் தேட வேண்டும். ஏனெனில் பூமி எல்லாப் பகுதிகளிலும் சிறந்த பொருள்களைக் கொண்டு விளங்குவதாகும்.* 30-40

**ஸுச்ருதஸஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**நிவிருத்தஸந்தாபீய ரஸாயனம் எனும்**

**முப்பதாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தொன்றாம் அத்தியாயம்

# * ஸ்நேஹோபயௌகிக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் தம் சீடர்களாகிய ஸுசுருதர் முதலியவர்களுக்கு உபதேசித்தபடி எண்ணெயைக் கொண்டு சிகிச்சை செய்யும் முறைகள் விளக்கப்படுகின்றன. 1-2

**1. எண்ணெயின் சிறப்பு**

மனித உடலில் எண்ணெய் மிகவும் முக்கியமானது. உயிர் எண்ணெய்ப்பசையை சார்ந்து உடலில் நிலைபெற்றுள்ளது. ஆகவே அதை எண்ணெயின் வழியே தான் காப்பாற்ற வேண்டும். பருகுதல், அநுவாஸன வஸ்தி, சிரோவிரேசன முறை, சிரோவஸ்தி, உத்தரவஸ்தி, நசிய முறை, காதில் நிரப்புதல், உடலின் மேல் தேய்த்துக் குளித்தல், உணவாகுதல் எனும் முறைகளில் எண்ணெய் பயன்படுத்தப்படுகிறது. 3

**2. எண்ணெய் வகைகள்**

எண்ணெய் தாவரங்களிலிருந்தும், உயிரினங்களிலிருந்தும் பெறப்படுகிறது. எண்ணெய் நான்கு வகைப்படும். அவையாவன : நெய், எண்ணெய், வசை (நிணநீர்), மஜ்ஜை (கொழுப்பு) என்பனவாம். விலங்குகளினால் பெறப்படும் எண்ணெயில் பசுநெய்யும், தாவரங்களினால் பெறப்படும் எண்ணெயில் எள் எண்ணெயும் சிறப்பானவை. 4

**3. தாவரங்களிலிருந்து பெறப்படும் எண்ணெய் வகைகளும், பயனும்**

இனி தாவரங்களிலிருந்து கிடைக்கும் எண்ணெய் வகைகளும், அவற்றின் பயனும் விளக்கப்படுகின்றன. பாச்சோத்தி, ஆமணக்கு, எரிமா, நேர்வாளம், திரவந்தி, ஸப்தலா, சங்கினீ, புரசு, ஆடுதீண்டாப்பாளை, துமட்டி, கம்பில்லம், சரக்கொன்றை, அவுரி முதலியவற்றிலிருந்து கிடைக்கும் எண்ணெய் பேதியாகச் செய்வதற்குப் பயன்படுத்தப்படும்.

தேவதாளி, குடசப்பாலை, பேய்ச்சுரை, பேய்ப்பீர்க்கு, மருக்காரை முதலியவற்றின் எண்ணெய் வாந்தி எடுக்கச் செய்யப்

---

* ஸ்நேஹம் - எண்ணெய். அதைப் பயன்படுத்தி சிகிச்சை செய்யும் முறைகள் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் ஸ்நேஹோபயௌகிக சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

பயன்படுகிறது. வாயுவிடங்கம், நாயுருவி, முருங்கை, ஸூர்யவல்லி, பெருங்கோலி, கடுகு, வாலுளுவை முதலியவற்றின் எண்ணெய் சிரோவிரேசனம் எனும் முறைக்குப் பயன்படும். புங்கன், மணிபுங்கன், சரக்கொன்றை, துரிஞ்சி, அழிஞ்சில், நிலவேம்புகளாலான எண்ணெய் கெட்ட (நாள்பட்ட) விரணங்களை ஆற்றப் பயன்படும். துவரகம், விளாம், கம்பில்லம், சேராங்கொட்டை, பேய்ப்புடல் ஆகியவற்றின் எண்ணெய் கொடிய நோய்களைப் போக்கப் பயன்படும். கக்கரி, பூசணி, பேய்ச்சுரை முதலியவற்றின் எண்ணெய் சிறுநீர்த்தடையைப் போக்கப் பயன்படும். பிராம்மி, கார்போக அரிசி, கடுக்காய் முதலியவற்றின் எண்ணெய் சிறுநீர்ப்பையில் தோன்றும் சர்க்கரை, அச்மரி முதலிய நோய்களைப் போக்கப் பயன்படும். குசும்பம், கடுகு, அகத்தி, வேம்பு, மாதவிக் கொடி, மஞ்சிட்டி, பேய்ச்சுரை, வாலுளுவை ஆகியவற்றின் எண்ணெய் நீரிழிவு நோய்களில் பயன்படுத்தப்படும் பனை, தென்னை, பலா, வாழை, வில்வம், இலுப்பை, எரிமா, நரிவிலி முதலியவற்றின் எண்ணெய் பித்தத்துடன் சேர்ந்த வாத நோய்களில் பயன்படுத்தப்படும். தான்றி, சேராங்கொட்டை, மனோசிலை ஆகியவற்றின் எண்ணெய் உடல் தோலைக் கரு நிறம் கொள்ளச் செய்வதில் பயன்படுத்தப்படும். அழிஞ்சில், ஞாழல், டுண்டுகம் என்பனவற்றின் எண்ணெய் வெண்ணிறம் தோற்றுவிக்கப் பயன்படும். ஸரளம், தேவதாரு, சிம்சுபா, அகில் ஆகியவற்றின் எண்ணெய், தத்ரு, குஷ்டம், கிடிபம் எனும் நோய்களில் பயன்படுத்தப்படும். எல்லா எண்ணெய் வகைகளும் வாதத்தைப் போக்கும். எண்ணெய் வகைகளின் தன்மைகள் சுருக்கமாகக் கூறப்பட்டன. 5

## 4. கஷாயம், எண்ணெய்ப் பக்குவம் செய்முறை விளக்கம்

இனி கஷாயம், எண்ணெய் மருந்தைப் பக்குவம் செய்யும் முறை விளக்கப்படுகிறது. மூலிகைகளின் பட்டை, இலை, மலர் வேர் ஆகியவை ஒரு பங்கு, நான்கு பங்கு நீர் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் கஷாயம் காய்ச்ச வேண்டும் என்பர் சில நூலாசிரியர்கள். ஆறு அஞ்சலி (இரு உள்ளங்கைகளையும் சேர்த்துக் குவித்த அளவு) எண்ணெயில் நான்கு மடங்கு நீர் அல்லது மூலிகைகளின் சுரஸம் சேர்த்து நான்கு தான்றிக் காய்களின் அளவு விழுது சேர்த்து பக்குவம் செய்வது எண்ணெய் மருந்துக்கான முறையாகும் என்பர் வேறு சிலர். ஆனால் இம்முறை சிறந்ததல்ல. ஏனெனில் சாஸ்திரங்களில் இவ்வாறு கூறப்படவில்லை என்பது ஆராய்ச்சியின் முடிவாகும். 6

## 5. அளவுகளின் விளக்கம்

நடுத்தரமான அளவுள்ள பன்னிரண்டு உளுந்துகளின் எடை சுவர்ணமாஷம் எனப்படும். பதினாறு சுவர்ண மாஷங்கள் கொண்டது ஒரு சுவர்ணம் அல்லது கர்ஷம். அல்லது பத்தொன்பது நடுத்தரமான நிஷ்பாவங்களின் எடை ஒரு தரணம். மூன்றரை தரணங்கள் ஒரு கர்ஷம். நான்கு கர்ஷங்கள் ஒரு பலம். நான்கு பலங்கள் ஒரு குடவம். நான்கு குடவங்கள் ஒரு பிரஸ்தம். நான்கு பிரஸ்தங்கள் ஒரு ஆடகம். நான்கு ஆடகங்கள் ஒரு துரோணம் என அறிக. நூறு பலங்கள் அளவு துலா எனப்படும். இருபது துலாக்கள் ஒரு பாரம் எனப்படும். இந்த அளவு உலர்ந்த மூலிகைகளுக்குப் பொருந்தும். ஈரம் கொண்டவையானால் இதற்கு இரண்டு மடங்கு அளவாகக் கொள்க. 7

## 6. சரியான கஷாயம், எண்ணெய்ப் பக்குவம் செய்யும் முறை

இந்த அளவுகளில் அந்தந்த மருந்துக்கு தனியாகக் கூறப்பட்டுள்ள அளவுகளுக்கு ஏற்ப மூலிகைகளின் பட்டை, இலை, காய், வேர் ஆகியவற்றை வெயிலில் உலர்த்திக் கொள்க. அவற்றில் வெட்டக்கூடியவற்றைச் சிறு துண்டுகளாக வெட்டிக் கொள்ளவும். ஒடிக்கக் கூடியவற்றையும் சிறு துண்டுகளாக ஒடித்துக் கொள்ளவும். அனைத்தையும் எட்டு மடங்கு அல்லது பதினாறு மடங்கு நீரில் சேர்த்துக் காய்ச்ச வேண்டும். நான்கில் ஒரு பங்கு கஷாயம் மிகுந்துள்ள போது அடுப்பிலிருந்து இறக்கி விட வேண்டும். இது கஷாய முறையாகும். எண்ணெய் முறையில் எண்ணெய்க்கு நான்கு மடங்கு மருந்துப் பொருள்கள், எண்ணெய் அளவில் நான்கில் ஒரு பங்கு மூலிகைகளின் விழுது எனச் சேர்த்துப் பக்குவம் செய்ய வேண்டும். இது எண்ணெய் மருந்தின் செய் முறையாகும். அல்லது ஒரு துரோணம் அளவு நீரில் பட்டை, இலை, காய், வேர் ஆகியவற்றை ஒரு துலா அளவு சேர்த்துக் கஷாயம் காய்ச்ச வேண்டும். நான்கில் ஒரு பங்கு கஷாயம் மிகுந்திருக்கும்போது அடுப்பிலிருந்து இறக்க வேண்டும். இது கஷாய முறையாகும். ஒரு குடவம் அளவுள்ள எண்ணெயில் ஒரு பலம் மருந்துப் பொருள்களின் விழுது சேர்த்து நான்கு மடங்கு நீர்ப்பொருள் சேர்த்துப் பக்குவம் செய்வது எண்ணெய் முறையாகும். 8

தனியாக மருந்துகளில் அளவு குறிப்பிடப்பட்டிருந்தால் அதற்கேற்ற அளவு கொள்ள வேண்டும். அளவு குறிப்பிடப் படாமல் பொதுவாகச் சொல்லப்பட்ட போது கஷாய, எண்ணெய் முறைகளுக்கு இங்கு கூறியபடி அளவுகளைக் கொள்க.

திரவப்பொருள் (கஷாயம், விழுது முதலியவை) தனியாகக் குறிப்பிடப்படாத மருந்துகளில் நீரைக் கொள்க. கஷாயம் குறிப் பிடப்பட்டிருந்தால் அதையே எடுத்துக் கொள்ள வேண்டும். 9-10

### 7. சிறப்பு எண்ணெய் முறைகள்

எண்ணெய்ப்பக்குவம் மூன்று வகைப்படும். அவை மிருது, நடுத்தரம், கடினம் என்பவை ஆகும். எண்ணெயும், விழுதும் தனித்தனியாக மருந்துகளில் காணப்பட்டால் அது மிருது பாகம் எனப்படும். மருந்து விழுது தேன் மெழுகைப் போல தொட்டால் விரலில் ஒட்டாத அளவு பக்குவம் செய்யப்படுவது நடுத்தரப்பக்குவமாகும். மருந்துப் பொருள்களின் விழுது கறுத்து நன்றாக வறுக்கப்பட்டிருந்தால் அது கடின பாகமாகும். இதற்கும் மேலாகப் பக்குவம் செய்ய முற்பட்டால் எண்ணெய் எரிந்து போகும். அப்பொழுது மீண்டும் மருந்து செய்து கொள்ள வேண்டிவரும். உட்கொள்ளவும், பருகவும் பயன்படத்தக்க எண்ணெய் மருந்து மென்மையான (மிருது) பக்குவ நிலையிலும், மூக்கில் மருந்திடுதல், உடலின் மேல் தேய்த்துக் குளித்தல் ஆகியவற்றிற்குப் பயன்படும் எண்ணெய் நடுத்தர பக்குவத்திலும், வஸ்தி, காதுகளில் நிரப்புதல் ஆகியவற்றிற்குப் பயன்படும் எண்ணெய் கடின பாகத்திலும் செய்யப்பட வேண்டும். 11

### 8. எண்ணெய் முறையில் பக்குவ நிலையறிதல்

நெய் மருந்து காய்ச்சும் போது ஒலியடங்கி நுரை தணிந்து மணமும் நிறமும் சுவையும் ஏற்படும் போது அந்நெய் சரியான பக்குவ நிலையில் உள்ளதாகத் தெரிந்து கொள்க. எண்ணெய் மருந்து காய்ச்சுவதில் நுரை மிகுந்து மற்ற இலக்கணங்கள் நெய் மருந்துக்குக் கூறியதைப் போல இருக்கும் நிலையில் நன்றாகப் பக்குவம் பெற்றதாக அறிக. 12-13

### 9. எண்ணெய் மருந்தை உட்கொள்ளும் முறை

இனி எண்ணெய் மருந்தை உட்கொள்ளும் முறை விளக்கப் படுகிறது. நலம் உண்டாக்கும் மந்திரங்களை மங்களப் பாடல் களைச் சொல்லிக் குடல் இலேசாக இருக்கும் போது (உண்ட உணவு செரிமானமாகியிருக்கும் நிலையில்) காலையில் பொன் னிறக் கதிர்களை வீசி ஆதவன் கிழக்குத் திசையில் உதயமாகிக் கொண்டிருக்கும் நேரத்தில் உடல் வலிமையை அறிந்து அதற்கு ஏற்ப எண்ணெய் மருந்தை அல்லது நெய் மருந்தை உட்கொள்ள வேண்டும். மருந்தை உட்கொண்டதும் வெந்நீரால் ஆசமனம் செய்து காலணி அணிந்து நடக்க வேண்டும். 14

**10. நெய் மருந்தை உட்கொள்ள வேண்டியவர்கள்**

*காயம்படுதலால் அல்லது நஞ்சால் துன்பப்படுபவர்கள், வாத நோய் உள்ளவர்கள், பித்தத்தால் தோன்றும் நோய்கள் உள்ளவர்கள், அறிவாற்றல், நினைவாற்றல் குறைந்தவர்கள் ஆகியவர்கள் நெய் மருந்தை உட்கொள்ள வேண்டியவர்களாவர்.* 15

**11. எண்ணெய் மருந்தை உட்கொள்ள வேண்டியவர்கள்**

*குடலில் கிருமிகள் உள்ளவர், குடலில் வாதம் நிரம்பியுள்ளவர், கொழுப்பு, கபம் உடலில் மிகுந்துள்ளவர், எண்ணெய் ஒத்துக்கொள்ளும் உடல் கொண்டவர், உடலைத் திடப்படுத்திக் கொள்ள விரும்புகிறவர் ஆகியவர்கள் எண்ணெய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும்.* 16

**12. வசை (நிணநீர்) உட்கொள்ளத்தக்கவர்**

*உடற்பயிற்சியால் இளைத்தவர், விந்துவும் இரத்தமும் உலர்ந்து போனவர், வலியால் மிகவும் துன்பப்படுபவர், சடராக்னி மிக்க வலிமை கொண்டுள்ளவர், வாதத்தின் உதவியால் உயிரைக் காப்பாற்ற வேண்டிய நிலையில் உள்ளவர் ஆகியவர்கள் வசை எனப்படும் நிணநீரை உட்கொள்ளத் தக்கவர்கள்.* 17

**13. கொழுப்பை உட்கொள்ளத் தக்கவர்**

*கடினமான குடல் உள்ளவர், துன்பத்தைப் பொறுத்துக் கொள்ளக் கூடியவர், வாதத்தால் தோன்றிய நோயால் துன்புறுபவர், சடராக்னி வலிமை அதிக அளவில் உள்ளவர் ஆகியவர்களுக்கு ஏற்ற மருந்தால் ஆன மஜ்ஜை அல்லது நெய் மருந்தைப் பயன்படுத்த வேண்டும்.* 18

**14. நெய் மருந்து பயன்படுத்துவதில் சிறப்பு முறை**

*பித்தத்தால் தோன்றிய நோய்க்கு வேறு பொருள்கள் ஏதும் சேராத நெய் மட்டும், வாதத்தால் தோன்றிய நோய்க்கு உப்பு சேர்ந்த நெய்யும், கபம் மிகுந்த போது சுக்கு, மிளகு, திப்பிலி, யவக்ஷாரம் ஆகியவற்றுடன் கூடிய நெய்யும் உட்கொள்ளச் செய்யத்தக்கவை.* 19

*தோஷங்கள் குறைந்திருத்தல், மிகுந்திருத்தல், ஒன்றோடொன்று சேர்ந்திருத்தல் ஆகியவற்றை நன்கு ஆராய்ந்து தனிப்பட்டோ, மூலிகை மருந்துகளுடன் சேர்ந்தோ அறுபத்து நான்கு வகையான ரஸபேதங்களுடன் நெய்யைப் பயன்படுத்த வேண்டும்.*

எண்ணெய் உடலுக்கு பழக்கமாகி கஷ்டத்தை பொறுத்துக் கொள்ள கூடியவருக்கு தட்பவெப்ப நிலை சம அளவில் இருந்த பருவத்தில் எண்ணெய் மட்டும் (மூலிகை மருந்துகள் சேர்க்காமல்) பருகத் தர வேண்டும். ஏனெனில் அத்தகையவருக்கு எண்ணெய் மட்டும் மிக்க பயன் தருவதாகும். 20-21

குளிர் காலத்தில் பகலிலும், வெப்பம் மிகுந்த பருவங்களில் இரவு நேரத்திலும், வாதமும், பித்தமும் மிகுந்துள்ள போது இரவிலும், வாதகபங்கள் மிகுந்துள்ள போது பகலிலும் எண்ணெய் பருகத்தக்கதாகும். 22

## 15. பருவத்திற்கு ஏற்ப எண்ணெயைப் பயன்படுத்துதல்

வாத பித்தங்கள் மிகுந்துள்ள போது வெப்பம் மிகுந்துள்ள பருவங்களில் எண்ணெயைப் பருகினால் நாவறட்சி, நினைவு தவறுதல், பைத்தியம் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். வாத கபங்கள் மிகுந்துள்ள போது குளிர்காலத்தில் எண்ணெயைப் பருகினால் குருத்தன்மை (செரிமானமாகாமை) சுவையின்மை, வயிற்றுவலி ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். 23

## 16. எண்ணெய்ப் பருகியதால் தோன்றும் துன்பத்திற்குச் சிகிச்சை

எண்ணெயைப் பருகிய பிறகு நாவறட்சி மிகுந்தால் வெந்நீரைப் பருகக் கொடுக்க வேண்டும். இதனால் நாவறட்சி அடங்காவிடில் வெந்நீரைப் பருகி எண்ணெயை வாந்தி எடுத்துவிட வேண்டும். துன்புறுபவரின் தலையில் குளிர்ச்சி தரும் பொருள்களால் பற்றுபோடுதல், குளிர்ந்த நீரில் நீராடச் செய்தல் ்யவை நலம் தரும். 24

## 17. எண்ணெயின் அளவு

பகலில் ஒரு யாமம் (மூன்று மணி நேரம்) கடந்த பிறகு எண்ணெய் செரிமானமாகக்கூடிய அளவு உட்கொண்டால் சடராக்னியை வளர்க்கும். தோஷம் குறைந்த அளவு கொண்டு துன்புறுகிறவர்களுக்கு மிக்க நலம் தரும். நண்பகலுக்குப் பிறகு உட்கொள்ளப்பட்ட எண்ணெய் செரிமானமடைந்தால் அது விந்துவை வளர்க்கும். உடலைச் செழிப்புறச் செய்யும். இது நடுத்தர நிலையில் தோஷங்களால் துன்புறுகிறவர்களுக்கு நன்மை தரும். பகலில் ஒரு யாமம் மிகுந்திருக்கும் போது செரிமானமாகும் அளவு உட்கொள்ளப்பட்ட எண்ணெய் மிக்க கடுமையாகத் தோஷங்களால் துன்புறுகிறவர்களுக்கு நன்மை தரும். பகல் நேரம் முடிந்த பிறகு எண்ணெய் செரிமானடையும் அளவு உட்கொள்வதால் சோர்வு, நினைவு தவறுதல், வெறி முதலியவை தோன்றாமல் இருந்தால் அது சிறந்த அளவாகக் கொள்க.

தோஷங்களைச் சீற்றமுறச் செய்யாதபடி பகலிலோ இரவிலோ எண்ணெய் மருந்து செரிமானமாகும் அளவு உட்கொள்வதால் குட்டம், நஞ்சு, பைத்தியம், கால்கைவலி போன்ற நோய்கள் தீரும். 25-29

அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் நோயால் துன்புறுகிறவருக்கு அவருடைய செரிமானமாகும் தன்மைக்கு ஏற்ற அளவில் எண்ணெயைப் பருகச் செய்ய வேண்டும். அதிக அளவில் பருகச் செய்தால் உயிருக்கு மிக்க துன்பம் விளைவிக்கும். 30

### 18. எண்ணெய் உட்கொள்வதால் அசீரணத்திற்குச் சிகிச்சை

தவறான உணவு, பழக்கவழக்கம் ஆகியவற்றால் நோயாளிக்குப் பருகத் தகுந்த எண்ணெய் செரிமானமடையாத போது அல்லது மிகவும் கஷ்டப்பட்டு செரிமானமாகும் நிலையிலுள்ளபோது வெந்நீரைப் பருக செய்து எண்ணெயை வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். இலேசான குடல் கொண்ட நோயாளிக்கு மீண்டும் எண்ணெயைப் பருகத் தர வேண்டும். எண்ணெய் மருந்து செரிமானமடைந்ததும், அடையாததும் ஐயத்திற்கு இடமான போது வெந்நீரைப் பருகச் செய்க. 31-32

இவ்வாறு செய்வதால் ஏப்பம் வரும். உணவில் சுவை (விருப்பம்) தோன்றும். எண்ணெய் பக்குவம் பெறும் போது நாவறட்சி, அழற்சி, தலைச்சுற்றல், சோம்பல் எதிலும் விருப்பமின்மை, சோர்வு ஆகியவை தோன்றினால் நோயாளியை வெந்நீரில் குளிக்கச் செய்து குறைந்த அளவில் சோறு சேர்த்த சூடான கஞ்சியை விரும்பிய அளவு உட்கொள்ளச் செய்க. நறுமணம் கொண்டு எண்ணெய் சேர்க்காத கஞ்சியையோ புலால் சாற்றையோ பருகச் செய்க. அல்லது குறைந்த அளவு நெய் சேர்த்த விலேபி எனும் கஞ்சியைப் பருகச் செய்க. 33-35

### 19. எண்ணெய் பருகத் தக்க கால அளவு

மூன்று, நான்கு, ஐந்து, ஆறு நாட்கள் எண்ணெயைப் பருகச் செய்க. ஏழு நாட்களுக்கு மேல் உட்கொள்ளப்படும் எண்ணெய் உடலுக்கு ஏற்றதாகி (பழக்கமாகி) விடும். 36

### 20. மென்மையான உடலுடையவர்க்கு எண்ணெய் முறை

மென்மையான உடல், இளைத்த உடல் கொண்டவர்கள், முதியவர்கள், சிறுவர்கள், எண்ணெயை விரும்பாதவர்கள்,

நாவறட்சி மிக்கவர் ஆகியவர்களுக்கு வெப்பம் மிகுந்த பருவங்களில் கஞ்சி போன்ற உணவுடன் கலந்து எண்ணெயை உட்கொள்ளச் செய்க. 37

## 21. உட்கொண்டதும் பயன்தரும் எண்ணெய் முறை

திப்பிலி, இந்துப்பு மற்றும் நெய், எண்ணெய், வசை, கொழுப்பு எனும் நான்கு வகை எண்ணெய், தயிர், தயிர்த்தெளிவு ஆகியவற்றைக் கலந்து உட்கொண்டால் அது ஸத்யஸ்நேஹனம் (உண்டதும் பயன் தரும் எண்ணெய் முறை) ஆகும். 38

வறுக்கப்பட்ட புலால் சாற்றினால் செய்த எண்ணெயுடன் கூடிய கஞ்சியில் க்ஷுத்ர பாணிதம் என்பதைக் கலந்து உட்கொள்ளச் செய்தால் விரைவில் எண்ணெய் பயன் தரும். 39

குறைந்த அளவு அரிசியுடன் பால் சேர்த்துப் பக்குவம் செய்த நெய் கலந்த கஞ்சியை இளஞ்சூடுள்ள போது உட்கொண்டால் அது ஸத்யஸ்நேஹனமாகும். 40

திப்பிலி, இந்துப்பு, பிண்ணாக்கு, பன்றியின் கொழுப்பு ஆகியவற்றை கலந்து உட்கொண்டால் அது ஸத்யஸ்நேஹனமாகும். 41

பால் கறக்கும் பாத்திரத்தில் நெய் கலந்த சர்க்கரையை வைத்து அதில் பாலைக் கலந்து உட்கொண்டால் அது ஸத்யஸ்நேஹனமாகும். 42

யவதானியம், இலந்தை, கொள்ளு ஆகியவற்றின் கஷாயத்தில் திப்பிலியின் விழுது, பால் தயிர், சுரை எனும் மது ஆகியவற்றுடன் எட்டாவது பொருளாக நெய் கலந்து நெய்ப்பக்குவம் செய்து மன்னர் அல்லது மன்னருக்குச் சமமான செல்வம் கொண்டவர்களுக்குப் பயன்படுத்தத் தகும். 43-44

வலிமை குறைந்தவர், குறைந்த செரிமான வலிமையுள்ளவர், கலவியில் மிக்க ஈடுபட்டு இளைத்தவர், தோஷங்கள் குறைந்த அளவில் சீற்றமுற்றவர் ஆகியவர்களுக்கு முன் கூறிய முறைகளை நல்லபடி மருத்துவர் பயன்படுத்த வேண்டும். 45

## 22. எண்ணெய்க்குத் தகாதவர்கள்

அசீரணம் உள்ளவர், காய்ச்சல் தோன்றிய புதிதிலும் உடல் வலிமை குறைந்துள்ளவர், சுவையின்மையால் துன்புறுபவர், உடல் பருத்தவர், நினைவிழந்தவர், வெறி கொண்டவர்,

வாந்தியால் துன்புறுபவர், நாவறட்சி கொண்டவர், மிகவும் சோர்ந்து போனவர், அதிக அளவில் மது உட்கொண்டவர், வஸ்தி, விரேசன வமன முறைகளைப் பயன்படுத்திக் கொண்ட வர்கள் ஆகியோர், கூடாத நேரத்திலும், மேகமூட்டம் உள்ள நாளிலும் எண்ணெயைப் பருகக் கூடாது. குறை மாதத்தில் பிள்ளையைப் பெற்ற மாதுவும் எண்ணெயைப் பயன்படுத்தக் கூடாது. 46-48

இவர்கள் எண்ணெயைப் பருகினால் பலவகை நோய்கள் தோன்றக்கூடும். அந்நோய்கள் மிகவும் கஷ்டப்பட்டு சிகிச்சை செய்ய வேண்டியவையாகவோ, சிகிச்சைக்கு உட்படாதவை யாகவோ இருக்கும். 49

காலமற்றபோது பிள்ளையைப் பெற்றவளின் கருப்பையில் இரத்தம். சேறு போன்ற பொருள் (மலம்), அழுக்கு ஆகியவை தங்கியிருக்கும். அந்நிலையில் எண்ணெயைத் தவிர்த்து செரி மானத்தைத் தூண்டக்கூடிய வறட்சித் தன்மையுள்ள மருந்துப் பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். 50

பத்து நாட்கள் கடந்த பிறகு முறைப்படி எண்ணெயைப் பருகச் செய்ய வேண்டும். மலம் கெட்டிப்படுதல், வறண்டு போதல், உணவு மிகவும் சிரமப்பட்டு செரிமானமடைதல், மார்பில் எரிச்சல் தோன்றுதல், வாதம் குடலில் மேல் நோக்கிப் பரவுதல், உடல் நிறம் மாறுபடுதல், வலிமை குறைதல், உடல் வறண்டு போதல் என்பன தோன்றினால் எண்ணெயைப் பருகச் செய்ய வேண்டும். 51-52

### 23. எண்ணெய் நன்றாகப் பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம்

உடல் மேலும் தோல் மேலும் எண்ணெய்ப்பசை தோன்று தல், மலம் இலகுதல், சடராக்னி வலிமை பெறுதல், உடலில் மென்மை தோன்றுதல், சோர்வு, உடல் உறுப்புகள் இலேசாகத் தோன்றுதல், ஆஸனவாய் வழியே எண்ணெய் வெளிவருதல், எண்ணெயில் சுவையின்மை போன்ற இலக்கணங்கள் காணப் பட்டால் எண்ணெய் நன்கு பயன்படுத்தப்பட்டதாக அறிக. 53

### 24. எண்ணெய் அதிக அளவில் பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம்

உணவில் சுவையின்மை, உமிழ் நீர் பெருகுதல், ஆஸன வாயில் எரிச்சல், சீதபேதியாதல், மலம் அதிக அளவில் வெளி யேறுதல் என்பன எண்ணெயை அதிக அளவில் பயன் படுத்தியதன் இலக்கணங்களாகும். 54

## 25. வறட்சியுற்றவர்க்கும், எண்ணெயை மிகுதியாகப் பயன் படுத்தியவர்க்கும் சிகிச்சை

வறண்ட நிலையில் நோயாளிக்கு எண்ணெயைப் பயன் படுத்த வேண்டும். அதிக அளவில் எண்ணெயைப் பயன் படுத்தியதற்கு வரகு போன்ற அரிசிச் சோறு, மோர், பிண்ணாக்கு, பொரிமா முதலியவற்றைப் பயன்படுத்தி வறட்சியைத் தோற்றுவிக்க வேண்டும். 55

## 26. எண்ணெயைப் பருகியதன் பயன்

எண்ணெய்ப் பயன்படுத்துவதால் சடராக்னி வளரும். குடல் தூய்மை பெறும். தாதுக்கள் புத்துணர்ச்சி பெறும். உடல் வலிமையும், நிறமும் தோன்றும். புலன்கள் செயலாற்றும் திறமை மிகும். முதுமை விரைவில் நெருங்காது. பயன்படுத்தியவர் நூறாண்டுகள் வாழக்கூடியவர் ஆவார். நோயால் துன்புறுகிறவருக்கு வலிமை இழந்த சடராக்னியைத் தூண்டி உடல் செழிப்புறச் செய்ய எண்ணெயைப் பயன்படுத்தத்தகும். எண்ணெயைப் பருகுவதால் நன்கு வளர்ந்த சடராக்னியும், உடல் செழிப்பும் கொண்டபோது உணவின் குற்றத்தால் தோன்றிய விகாரங்கள் விரைவில் துன்பத்தை தோற்றுவிக்கா. 56-57

**ஸுஸ்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**ஸ்நேஹோபயௌகிக சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்தொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

## முப்பத்திரண்டாம் அத்தியாயம்

# * ஸ்வேதாவசாரணீய சிகித்ஸிதம்

இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்குத் தன்வந்தரி பகவான் உபதேசம் செய்தபடி ஸ்வேதாவசாரணீய சிகித்ஸிதம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

### 1. உடல் வியர்க்கச் செய்யும் முறைகள்

உடலை வியர்க்கச் செய்யும் முறை நான்கு வகைப்படும். அவை (1) தாபஸ்வேதம் (2) ஊஷ்மஸ்வேதம் (3) உபநாஹஸ்வேதம் (4) திரவஸ்வேதம் மற்றும் உடல் வியர்க்கச் செய்யும் மற்ற முறைகளும் இந்நான்கில் அடங்கும். 3

### 2. தாபஸ்வேத முறை

உள்ளங்கை, வெண்கலப்பாத்திரம், உலோகம் முதலியவற்றா லான பந்து போன்ற உருண்டைப் பொருள், மட்பாண்டத்தின் சில்லு, மணல், (பந்து போல் சுருட்டப்பட்ட) ஆடை முதலிய வற்றால் கருங்காலிக்கட்டையாலான நெருப்பில் பலமுறை சூடு காட்டி அதனால் நோயாளியின் உடலில் வெப்பம் தோற்று வித்து உடல் வியர்க்கச் செய்தல் தாபஸ்வேதம் எனப்படும். 4

### 3. ஊஷ்மஸ்வேத முறை

மண்பாண்ட உடைசல், கல், செங்கல், இரும்பு உருண்டை ஆகியவற்றை நெருப்பில் சூடாக்கி புளிப்புக்காடிப் பொருள்களை அதன் மேல் தெளித்து அல்லது ஈரமான துணியில் சுற்றி அதைக்கொண்டு நோயாளியின் உடலை வெப்பமுறச் செய்து வியர்க்கச் செய்தல் ஊஷ்மஸ்வேத முறையாகும். அல்லது மாமிசச்சாறு, பால், தயிர், புளிப்புக்காடி, ஆமணக்கு முதலிய வாதத்தைப் போக்கும் தாவரங்களின் இலை ஆகியவற்றாலான சூடுள்ள கஞ்சி வைக்கப்பட்டுள்ள பாத்திரத்தின் வாயை மூடி, அதிலிருந்து வெளிவரும் ஆவியால் நோயாளியின் உடலை வியர்க்கச் செய்ய வேண்டும். அல்லது வேறு பானையின் பக்கத்தில் ஓட்டை செய்து அப்பானையை முதலில் கூறியபடி சூடான கஞ்சி வைத்துள்ள பானையை மூடி பந்தனம் செய்து

---

* ஸ்வேதாவசாரணீயம் - உடல் வியர்க்கச் செய்யும் முறை. அதை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸ்வேதாவசாரணீய சிகித்ஸிதம் எனும் ⁽ யர் பெற்றது.

மேல் பானையின் துளையில் யானைத் துதிக்கை போன்ற குழாயைப் பொருத்தி அதன் வழியாக ஆவி நோயாளியின் துன்புற்ற பகுதியில் படச் செய்து வியர்க்கச் செய்ய வேண்டும். 5

சுகமாக உட்கார்ந்திருக்கும் அல்லது நன்கு எண்ணெய் தேய்த்துக் கொண்டிருக்கும் வாத நோயாளியின் உடலைக் கம்பளியால் மூடி மேற்கூறிய யானைத் துதிக்கை போன்ற குழாய் வழியாக வியர்க்கச் செய்ய வேண்டும். இதனால் எல்லா உறுப்புகளும் நன்கு வியர்க்கும். நோயாளிக்கு எத்தகைய துன்பமும் இருக்காது. 6

மூன்று முழம் (அர்தவியாமம்) நீளமும், மூன்று இடங்களில் வளைந்தும் உள்ள யானையின் துதிக்கை போன்ற தர்ப்பை, நாணல் முதலியவற்றாலான குழாய் போன்ற கருவி உடல் வியர்க்கச் செய்வதில் பயன்படுத்தத் தக்கதாகும். 7

### 4. பூஸ்வேத அல்லது அச்மஸ்வேத முறை

மனிதனின் நீளத்திற்கு ஏற்பத் தரையில் பள்ளம் வெட்டி அதில் கருங்காலிக்கட்டையைப் போட்டு எரித்து (நெருப்பை நீக்கிய பிறகு) பால், புளிக்காடி, நீர் ஆகியவற்றைத் தெளிக்க வேண்டும். பிறகு வாதத்தைப் போக்கும் தாவர இலைகளை அப்பள்ளத்தில் பரப்பி அதன் மேல் நோயாளியைப் படுக்க வைத்து உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். அல்லது பெரிய பாறை மேல் கருங்காலிக்கட்டையை எரித்துச் சாம்பலை நீக்கி அதன் மேல் முன் கூறிய முறைகளைச் செய்து அதன் மேல் நோயாளியைப் படுக்க வைத்து உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். 8-9

### 5. குடீஸ்வேதன முறை

நான்கு வாயில்கள் உள்ள குடிசையைக் கட்டி அதற்குள் நோயாளியை உட்கார வைத்து நான்கு வாயில்களிலும் நெருப்புத் தணல்களை வைத்து வெப்பமூட்டி நோயாளியின் உடலை வியர்க்கச் செய்ய வேண்டும். இது குடீஸ்வேதன முறையாகும். 10

### 6. பிரஸ்தரஸ்வேத முறை

பயறு, உளுந்து முதலிய தானியங்களை நன்றாகக் கொதிக்க வைத்து பாய் போன்ற பொருள்களின் மேல் பரப்பி அதன் மேல் நோயாளியைப் புரளச் செய்ய வேண்டும். அவ்வாறே நோயாளியைத் துணியால் போர்த்தி உடல் வியர்க்கச் செய்ய

வேண்டும். இவ்வாறே தூசி, சாணம், உமி, எள் செடியின் கட்டை முதலியவற்றைக் கொண்டும் வெப்பம் உண்டாக்கி நோயாளியின் உடலை வியர்க்கச் செய்ய வேண்டும். 11

### 7. உபநாஹஸ்வேத முறை

காடிவிட்டு அரைத்ததாயும், அதிக அளவில் உப்பும் எண்ணெயும் கலந்ததாயும் உள்ள வாதத்தைப் போக்கும் மூலிகைகளின் விழுதை உடல் பொறுக்கக்கூடிய அளவு சூடாக்கி நோயாளியின் உடலில் அதைக் கொண்டு ஒற்றடம் கொடுக்க வேண்டும். இவ்வாறே காகோலி முதலிய கூட்டுப் பொருள்கள், ஏலாதி கூட்டுப் பொருள்கள், ஸுரஸாதி கூட்டுப் பொருள்கள், எள், அகத்தி கடுகு ஆகியவற்றின் விழுது, பொங்கல், பாயஸம், கொழுக்கட்டை வேஸவாரம், ஸால்வணம் முதலியவைகளைச் செய்து அவற்றால் ஒற்றடம் கொடுக்கலாம். 12

### 8. அவகாஹனம் மற்றும் பரிஷேஷணம் முறைகள்

வாதத்தைப் போக்கும் பொருள்களாலான கஷாயம் நிரப்பிய தொட்டியில் நோயாளியை உட்கார வைத்துத் திரவஸ்வேத முறையைச் செய்ய வேண்டும். அவ்வாறே பால், புலால் சாறு, கஞ்சி, எண்ணெய், காடி, நெய், வசை, எண்வகை சிறுநீர் ஆகிய வற்றை இளஞ்சூடாக்கி உடலின் மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 13

### 9. தோஷங்களுக்கு ஏற்றபடி வியர்க்கச் செய்தல்

இம்முறைகளில் தாபஸ்வேதம், உஷ்ணஸ்வேதம் என்பவை கபதோஷத்தைப் போக்குவனவாகும். உபநாஹஸ்வேதம் வாதத்தைப் போக்கும். கபத்துடன் பித்தம் சீற்றமுற்றபோது திரவஸ்வேதம் பயன்படுத்தத்தகும். 14

### 10. நெருப்பில்லாமல் வியர்க்கச் செய்தல்

வாதம் கபத்துடனோ அல்லது கொழுப்புடனோ கலந்திருந் தால் காற்றோட்டம் இல்லாத இடம், வெயில், அடர்த்தியான துப்பட்டி முதலிய தடித்த ஆடைகளை உடல் மேல் போர்த்திக் கொள்ளுதல், மற்போர் செய்தல், உடற்பயிற்சி, பளுதூக்குதல், சினம் கொள்ளுதல் முதலிய முறைகளைக் கையாண்டு உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். 15

### 11. நான்கு வகைகளையும் இரு வகைகளில் பயன்படுத்துதல்

இங்குக் கூறப்பட்ட நான்கு வகை உடல் வியர்க்கச் செய்யும் வகைகளும், முழு உடலையோ அல்லது நோய் கொண்ட உடற் பகுதியையோ வியர்க்கச் செய்யப் பயன்படுத்தப்படும். 16

## 12. முதலில் அல்லது முடிவில் உடல் வியர்க்கச் செய்தல்

வஸ்தி அல்லது நசிய (மூக்கில் மருந்திடுதல்) முறை பயன்படுத்த வேண்டுபவருக்கும், உடல் தூய்மைப்படுத்தத்தக்க நோயாளிக்கும் முதலில் உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 17

மூடகர்ப்பத்தை வெளியேற்றிய பிறகு துன்பம் இல்லாத மூடகர்ப்ப பிரஸவத்திற்கு அல்லது சீர்ாகப் பிள்ளைப்பேறு ஏற்பட்டவளுக்கு பிள்ளை பெற்ற பிறகு உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். 18

பகந்தரம் (பௌத்ரம் எனும் உள் மூலம்) மூலநோய், அச்மரி (சிறுநீர்ப்பையில் கல்) எனும் நோய்களால் துன்புறுபவருக்கு அறுவைச் சிகிச்சையின் துவக்கத்திலும், சிகிச்சை முடிந்தபிறகும் உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும்.19

## 13. உடல் வியர்க்கச் செய்யும் முன் எண்ணெய் முறை

உடல் வியர்க்கச் செய்யும் முறையை நன்கு உணர்ந்த மருத்துவர் எண்ணெயைத் (பயன்படுத்தாத) தேய்த்துக் கொள்ளாத நோயாளிக்கு இம்முறையைப் பயன்படுத்தக் கூடாது ஏனெனில் எண்ணெயற்ற குடலில் உடல் வியர்க்கச் செய்தால் அது விரைவில் பிளவுபட்டுப் போகும். எண்ணெயுடன் கூடிய தாது தன்னிடம் இருக்கும் தோஷத்தையும், சாகைகளில் தடுக்கப் பட்டுள்ள தோஷங்களையும் நன்கு வியர்க்கச் செய்தபோது கரையச் செய்து சிறுகுடலைச் சேர்க்கும். பிறகு தூய்மைப் படுத்தும் முறையால் தோஷத்தை முழுவதுமாக உடலிலிருந்து வெளியேற்றிவிடும். 20-21

## 14. உடல் வியர்க்கச் செய்வதன் பயன்

உடல் வியர்க்கச் செய்வதால் சடராக்னி வளரும். உடல் மென்மையாகும். தோல் தூய்மைப்படும். உணவு சுவையாகத் தோன்றும். சுரோதஸ்ஸுகள் தூய்மைப்படும். தூக்கம், சோம்பல் முதலியவற்றை இம்முறை அகற்றும். இயங்காமல் போன இணைப்புகள் மீண்டும் நன்கு செயல்படத் துவங்கும். 22

## 15. உடல் வியர்க்கச் செய்யும் முறை நன்கு செயல்படுத்தப்பட்டதன் இலக்கணம்

நன்கு பயன்படுத்தப்பட்ட உடல் வியர்க்கச் செய்யும் முறையில் நோயாளியின் உடல் நன்கு வியர்த்துத் தோஷங்கள் வெளியேறுதல், நோய் தணிதல், உடல் இலேசாகத் தோன்றுதல்,

குளுமையில் விருப்பம் தோன்றுதல், மென்மையாக இருத்தல் எனும் இலக்கணங்கள் காணப்படும். சீராகப் பயன்படுத்தப் படாவிட்டால் இந்த இலக்கணங்களுக்கு மாறான தன்மைகள் காணப்படும். 23

## 16. அதிக அளவில் உடல் வியர்த்தலின் இலக்கணம்

அளவுக்கு மீறி உடல் வியர்த்தல் முறை பயன்படுத்தப்பட்டால் இணைப்புகளால் வலி, எரிச்சல், கொப்புளங்கள் தோன்றுதல், பித்தமும் இரத்தமும் சீற்றமுறுதல், நினைவிழத்தல், மிகச் சோர்வு போன்ற இலக்கணங்கள் காணப்படும். இந்நிலையில் விரைவாகக் குளுமைப்படுத்தும் முறைகளைக் கையாள வேண்டும். 24

## 17. உடல் வியர்க்கச் செய்யும் முறைக்குத் தகாத நோயாளிகள்

பாண்டு, நீரிழிவு, இரத்தபித்தம், க்ஷயம் எனும் நோய்களால் துன்புறுபவர், வலிமையற்றவர், அசீரணம் உள்ளவர், பெருவயிறு நோய் கொண்டவர், நஞ்சு, நாவறட்சி, வாந்தி ஆகியவற்றால் துன்புற்றவர் கருவுற்றவள், மதுமயக்கமுள்ளவர் அதிஸார நோயாளி ஆகியவர்கள் உடல் வியர்க்கச் செய்யும் முறைக்குத் தகாதவர்கள். இவர்களுக்கு உடல் வியர்க்கச் செய்தால் உடல் சீர்கெட்டுவிடும். நோய் எளிதில் சிகிச்சைக்கு உட்படாமல் போகும். உடல் வலிமை குறைந்தவரும், அசீரண நிலையில் உணவு உடகொண்டவரும் இம்முறையால் நோய் நீங்கக் கூடியவராக இருந்தால் அவ்வமயம் இதைப் பயன்படுத்தலாம். 25

முன் கூறிய நோய்களால் துன்புறுகிறவர் அல்லது வேறு நோயாளி உடல் வியர்க்கச் செய்வதால் சிகிச்சை பெறக் கூடிய நோய், நீங்கக் கூடிய நிலையில் இருந்தால் அவர்களுக்கு அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் மென்மையான (மிருது) உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்த வேண்டும். இதயம், விரைப்பகுதிகள் போன்ற உறுப்புகளில் மிருதுஸ்வேத முறையைப் பயன்படுத்த வேண்டும். 26

காற்றோட்டம் இல்லாத இடத்தில் உணவு செரிமானமடைந்த பிறகு எண்ணெயைத் தேய்த்துக் கொண்ட நோயாளிக்கே எல்லா வகையான உடல் வியர்க்கச் செய்யும் முறைகளையும் பயன்படுத்த வேண்டும். கண்களுக்குப் பயன்படுத்த வேண்டுமானால் அவ்வுறுப்பைக் குளிர்ந்த பொருள்களால் மூடிய பிறகு பயன்படுத்த வேண்டும். 27

உடல் வியர்க்கச் செய்யும் முறையைப் பயன்படுத்தும் போது நோயாளியின் இதயத்தின் மேல் குளிர்ந்த பொருளை அடிக்கடி வைத்து குளுமையைத் தோற்றுவிக்க வேண்டும். சீராக உடல் வியர்க்கச் செய்த பிறகு மெல்ல மெல்ல அப்பகுதியைத் தேய்த்துவிட்டு வெந்நீரால் குளிக்கச் செய்ய வேண்டும். 28

## 18. உடல் வியர்க்கச் செய்த பின் செய்ய வேண்டியவை

நன்றாக உடல் வியர்க்கச் செய்த பிறகு உடல் உறுப்புகளை ஆடையால் மூடி நோயாளியை காற்றோட்டமில்லாத இடத்தில் இருக்கச் செய்து சுரோதஸ்ஸுகளை தடுக்காத உணவு உட்கொள்ளச் செய்து பத்திய முறைகளைப் பின்பற்ற வேண்டிய பழக்கவழக்கங்களை உணர்த்த வேண்டும். 29

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**ஸ்வேதாவசாரணீயம் எனும்**

**முப்பத்திரெண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்திமூன்றாம் அத்தியாயம்

# * வமனவிரேசனஸாத்யோபத்ரவ சிகித்ஸிதம்

இனி வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் நீக்கத் தக்க நோய்களுக்குச் சிகிச்சை முறைகளை தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசித்த முறையை விளக்குவோம். 1-2

### 1. தோஷங்களின் நிலைக்கேற்ப சிகிச்சை

குறைந்த தோஷங்களை வளர்க்க வேண்டும். சீற்றம் பெற்ற தோஷங்களைத் தணிக்க வேண்டும். வளர்ந்த தோஷங்களை உடலிலிருந்து வெளியேற்ற வேண்டும். சமநிலையில் உள்ள தோஷங்களைக் காப்பாற்ற வேண்டும். இது சிகிச்சையின் முடிவாகும். 3

### 2. தோஷங்களை வெளியேற்றும் முறை

வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் சிறப்பாகத் தோஷங்கள் வெளியேற்றப்படுகின்றன. ஆகவே அம்முறைகள் இங்கு விளக்கப்படுகின்றன. 4

நன்கு வளர்ந்துள்ள சடராக்னி கொண்டவரும், உடல் வலிமை மிக்கவரும், அதிக அளவில் சீற்றமுற்ற தோஷங்கள் உள்ளவரும், கடுமையான நோயால் துன்புறுபவரும், வாந்தி எடுத்தலில் உடலுக்கு ஏற்றதை ஒத்துக்கொள்பவரும், எண்ணெய்ப் பசை கொண்டு உடல் வியர்க்கச் செய்யப்பட்டவருமான நோயாளியை, சுரோதஸ்களின் வழி நன்கு திறந்திருப்பதனாலும், தடைபட்ட தோஷங்கள் நெகிழ்ந்திருப்பதாலும் "நாளை வாந்தி எடுக்கச் செய்யும் மருந்தை உட்கொள்ளச் செய்கிறேன்" என மருத்துவர் முடிவு செய்து கொண்டு கிராமங்களிலும், நீர்ப் பாங்கான இடங்களிலும், நீர்நிலைகளிலும் உள்ள உயிரினங்களின் புலால், பால் சோறு முதலிய **அபிஷ்யந்தித் தன்மை கொண்ட உணவை நன்கு உண்ணச் செய்ய வேண்டும். 5

---

* வமனம் - வாந்தி, விரேசனம் - பேதி, வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் போக்கத்தக்க வியாதிகளுக்கு அம்முறைகளைப் பயன்படுத்தும் வகைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் வமனவிரேசனஸாத்யோபத்ரவ சிகித்ஸிதம் எனும் பெயருடையதாயிற்று.

** அபிஷ்யந்தி - அதன் பிசுபிசுப்பு, கனம், இளகும் தன்மை எனும் இவைகளால் (கபத்தையும், ரஸம், மாம்ஸம் முதலிய) தாதுக்களை அதிகப்படுத்தி உடலில் அவைகளின் துவாரங்களை அடைத்தல்.

ஏனெனில் எண்ணெய்ப்பசை கொண்டு உடல் வியர்க்கச் செய்வதாலும் தோஷங்கள் மென்மை (நெகிழ்ச்சி) யடையப் பலவகை உணவுகளாலும் அதைத் தூண்டியபிறகு வாந்தி எடுக்கச் செய்தால் அது சீராக செயலாற்றப்படுவதாகும். 6

இரண்டாம் நாள் காலையில் மிக்க குளிரோ வெப்பமோ இல்லாத நேரத்தில் நோயாளியின் குடலை நன்கு ஆராய்ந்து வாந்தியாகச் செய்யும் கஷாயம், விழுது, சூரணம், எண்ணெய் மருந்து ஆகியவற்றில் எது தகுமோ அதைத் தக்க அளவில் உட்கொள்ளச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். வாந்தி எடுக்கச் செய்யும் மருந்து உடலுக்குப் பழக்கமாகாததும், அருவருக்கத்தக்க தோற்றமுள்ளதும், கெட்ட நாற்றமுள்ளதும், பார்ப்பதற்கு வெறுப்பைத் தோற்றுவிக்கும் தோற்றமுள்ளதுமாக இருக்க வேண்டும். மென்மையான உடல் கொண்டவர், உடல் வலிமை குறைந்தவர், சிறுவர், முதியவர், அச்சம் கொள்பவர் எனுமிவர்களுக்கு வாந்தி எடுக்கச் செய்யும் மருந்துடன் பால், தயிர், மோர், கஞ்சி ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றைக் கலந்து வயிறு முட்டப் பருகச் செய்ய வேண்டும். மருந்தைப் பருகி நெருப்பில் கைகளைக் காய்ச்சி வெப்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்கும் நோயாளி இரண்டு நாழிகைகள் (48 நிமிஷங்கள்) வரை காத்திருக்க வேண்டும். நோயாளியின் உடல் வியர்த்தால் தோஷங்கள் சிதைந்து தாம் கட்டுப்பட்டிருந்த இடத்தைவிட்டு அகன்று வயிற்றைச் சேர்ந்துள்ளதாகத் தெரிந்து கொள்ள வேண்டும். குமட்டல் தோன்றியதும் நோயாளியை முழங்கால்களை ஊன்றி உட்கார செய்து சிறந்தவர்களால் நோயாளியின் நெற்றி, முதுகு, விலாப் பகுதிகள், கழுத்து முதலிய பகுதிகளை நன்கு பிடித்துக் கொள்ளச் செய்து விரலாலோ ஆமணக்குக் குச்சி, தாமரைத் தண்டு போன்றவற்றாலோ தொண்டையைத் தொட்டுக் கொள்ளச் செய்து சீராக தோஷங்கள் வெளிவரும் வரை வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 7

### 3. வாந்தி எடுக்கச் செய்தல் எனும் சிகிச்சை முறை சரியாகப் பயன்படுத்தப்படாமையின் இலக்கணம்

வாயில் உமிழ் நீர் மிகுந்த அளவில் தோன்றுதல், இதயம் பளுவாகக் குருத்தன்மை கொண்டிருத்தல், அரிப்பு ஆகியவை நன்கு வாந்தியாகாதபோது தோன்றும் இலக்கணங்களாகும். பித்தம் அதிகமாதல், உணர்ச்சியற்றுப்போதல், இதயத்திலும், தொண்டையிலும் வலி ஆகியவை தோன்றினால் அளவுக்கு மீறி வாந்தி எடுத்ததாகத் தெரிந்து கொள்ள வேண்டும். 8

**4. நன்கு வாந்தியானதன் இலக்கணம்**

கபத்திற்குப் பிறகு பித்தம் சுகமாக வெளிவருதல், இதயம், தலை, தொண்டை ஆகியவை தூய்மைப் பெற்றிருத்தல், உடல் இலேசாகத் தோன்றுதல், கபம் பெருகுதல் ஆனபிறகு வாந்தி எடுத்தலை சீராக நடைபெற்ற வாந்தி என அறிக. 9

**5. சீராக வாந்தி எடுத்த பின் செய்ய வேண்டியவை**

நன்கு வாந்தியான பிறகு சுரோதஸ்களில் ஒட்டிக் கொண்டிருக்கும் கபத்தை வெளிப்படுத்த எண்ணெயுடன் கூடி பேதியாகவும், தணிக்கவும் கூடிய புகை முறைகளில் ஒன்றைப் பயன்படுத்த வேண்டும். அதன் பிறகு உணவு முதலான கடைப்பிடிக்க வேண்டிய முறைகளை மருத்துவர் நோயாளிக்குத் தெரிவிக்க வேண்டும். 10

வெந்நீரில் குளிக்கச் செய்து உடல் தூய்மை பெற்ற நோயாளிக்குக் கொள்ளு, பயறு, துவரை ஆகியவற்றாலான கஞ்சி அல்லது காட்டில் வாழும் விலங்குகளின் புலால் சாற்றுடன் உணவு தர வேண்டும். 11

**6. வாந்தி எடுக்கச் செய்வதன் பயன்**

இருமல், சுரோதஸ்களில் அழுக்கு சேருதல், குரல் மாறுபாடு, தூக்கம், வாய் நாற்றம், நஞ்சால் தோன்றும் துன்பங்கள், கபப் பெருக்கு, கிரஹணி தோஷம் ஆகியவை வாந்தி எடுத்தவருக்கு எப்பொழுதும் தோன்றா. மரத்தை வெட்டியதும் அதன் மலர், காய், தளிர் முதலியன விரைவில் அழிந்துவிடுவது போல, தூய்மைப்படுத்தும் முறையால் கபத்தை நீக்கியதும், அதனால் தோன்றக்கூடிய தோஷங்கள் நீங்குகின்றன. 12-13

**7. வாந்தி எடுக்கத் தகாத நோயாளிகள்**

திமிரம் (உறுப்பு மரத்துப் போதல் எனும் வாதம்) ஊர்த்வ வாதம் (மேல் நோக்கிப் பரவும் வாதம்), குன்மம், பெருவயிறு, கிருமிநோய், சோர்வினால் துன்புறுதல், உடற்பருத்தல், காயம் படுதலால் இளைத்தல், உடல் இளைப்பு மற்றும் மிக்க முதுமை, சிறுநீரைச் சார்ந்த நோய், வாதத்தால் மட்டும் தோன்றிய நோய், குரல் மாறுபாடு, படிப்பதில் ஈடுபட்டிருத்தல், நன்கு வாந்தி எடுக்காமை, கடினமான குடல், நாவறட்சி, மேல் நோக்கிப் பரவிய * இரத்தபித்தம் முதலியவற்றால் துன்புறுபவர், சிறுவர்,

* இரத்த பித்தம் - ஒருவகை நோய். மேல் கீழ் வழியாக இரத்தம் போகும் நோய்.

பசியுடன் இருப்பவர், மிகவும் வறண்ட உடலுள்ளவர், கருவுற்றி ருப்பவர், உதாவர்த்தம் எனும் நோய் கொண்டவர், நிரூஹவஸ்தி முறை செய்து கொண்டவர் ஆகிய இத்தகையோர் வாந்தி எடுக்கச் செய்யும் சிகிச்சை முறைக்குத் தகாதவர்கள் ஆவர். 14-15

வாந்தி எடுக்கத் தகாதவர்களுக்கு இம்முறையைப் பயன் படுத்தினால் நோய் எளிதில் சிகிச்சையால் தீர்க்க இயலாத தாகிவிடும். ஆகையால் அத்தகையவர்களை வாந்தி எடுக்கச் செய்யக்கூடாது. 16

### 8. வாந்தி எடுக்கச் செய்யத் தகாதவர்களுக்குச் சிறப்பு விதி

வாந்தி எடுக்கச் செய்யக் கூடாதவர்களாக முன்பு கூறப்பட்ட வர்கள் அசீரணத்தால் அல்லது நஞ்சால் துன்புறுதல், மிகவும் அதிகமான கபம் கொண்டிருத்தல் எனும் நிலை கொண்டிருந்த போது அதிமதுரக்கஷாயத்துடன் வாந்தி எடுக்கச் செய்யும் பொருள்களைக் கலந்து உட்கொள்ளச் செய்ய வேண்டும். 17

### 9. வாந்தி எடுக்கச் செய்யத் தகுந்தவர்கள்

நஞ்சு கொண்டிருத்தல், சோஷம் (உலர்ந்து போதல்), தாய்ப் பால் கெட்டிருத்தல், சடராக்னி குறைவு, பைத்தியம், கால்கைவலி, யானைக்கால், சீழ்க்கட்டி, விதாரிகை, கொழுப்பு மிகுதல், நீரிழிவு, இடுவிஷம், காய்ச்சல், சுவையின்மை, ஆமாதிஸாரம், இதயநோய், பித்தத்தால் தலைசுற்றுதல், அக்கி, கட்டி, அசீரணம், முகபிரஸேகம், உற்ருல்லாஸம், இழுப்பு, இருமல், பீநசம், பூதி நாஸா எனும் மூக்கு நோய், தொண்டை, உதடு, வாய் முதலிய வற்றில் தோன்றும் பாகம் எனும் நோய், காதிலிருந்து சீழ் பெருகுதல், அதிஜிஹ்வா, கலசுண்டிகா, கீழ்நோக்கிய இரத்த பித்தம், கபத்திற்கு இருக்கையான இடங்களில் தோன்றும் நோய் கள், கபத்தின் சீற்றத்தால் தோன்றிய நோய் முதலியவற்றால் துன்புறுபவர்கள் வாந்தி எடுக்கச் செய்யும் சிகிச்சைக்குத் தக்கவர்கள் ஆவர். 18

### 10. பேதியாகச் செய்யும் முறை

எண்ணெய்ப்பசை கொண்டு உடல் வியர்க்கச் செய்து வாந்தி எடுக்கச் செய்த பிறகு அந்நோயாளிக்கு பேதியாகச்செய்யும் சிகிச்சை முறையைப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில், வாந்தி எடுக்கச் செய்வதால் தூய்மைப்படுத்தப்பட்டவருக்கும், உடலில் கீழ் நோக்கிப் பரவிய கபம் கிரஹணியைமூடிக் கொண்டு குருத்தன்மையை அல்லது சீதபேதியைத் தோற்று விக்கும். 19

## 11. பேதியாகச் செய்யும் மருந்தை உட்கொள்ளும் முறை

பேதியாவதற்கு மருந்து கொடுக்க வேண்டிய நோயாளிக்கு 'நாளை பேதியாக மருந்தைக் கொடுப்பேன்' என முடிவு செய்த மருத்துவர் காலையில் இலேசான உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். பிறகு துரிஞ்சிப்பழச் சாற்றையும் வெந்நீரையும் உட்கொள்ளச் செய்ய வேண்டும். அடுத்த நாள் ஆதுரோபக்ரமணீயம் எனும் அத்தியாயத்தில் கூறிய முறைப்படி சிலேத்துமம், இரஸதாதுக்குறைவு ஆகியவற்றை ஆராய்ந்து நோயாளிக்கு மருந்தின் அளவை அறிந்து அதற்கு ஏற்ப மருந்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 20

## 12. பலவகைக் குடலின் இலக்கணம்

குடல் மூன்று வகைப்படும் அவை (1) மென்மை (2) கடினம் (3) நடுத்தரம் என்பனவாம். பித்தம் மிகுந்துள்ளவரின் குடல் மென்மையானது. அது பால் உட்கொண்டாலும் பேதியாகக் கூடியதாகும். வாதமும், கபமும் மிகுந்துள்ளவரின் குடல் கடினத் தன்மை கொண்டிருக்கும். இது எளிதில் பேதியைத் தோற்றுவிக்காது. தோஷங்கள் சமநிலையில் உள்ளவர்களுடைய குடல் நடுநிலை கொண்டதாகும். சாதாரணமான மருந்து பொருள்களாலேயே பேதியைத் தோற்றுவிக்கும் மென்மையான குடல் கொண்டவர்களுக்குக் குறைந்த அளவிலும், கடினமான (கல்) குடல் கொண்டவர்களுக்கு (தீக்ஷ்ண) அதிகமான அளவிலும், நடுத்தரமான குடல் கொண்டர்களுக்கு நடுத்தர அளவிலும் மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். பேதியாகச் செய்யும் மருந்தை உட்கொண்டவர் அந்த நினைவிலேயே படுக்கைக்கு அருகில் பேதியாவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொள்ள வேண்டும். 21

## 13. பேதியாக மருந்து உட்கொண்டவர் விலக்க வேண்டியவை

பேதியாவற்கு மருந்து உட்கொண்டவர் மலம், சிறுநீர் ஆகியவற்றின் வேகங்களைத் தடுக்கக் கூடாது. காற்றோட்டமில்லாத இடத்தில் படுக்க வேண்டும். குளிர்ந்த நீரைத் தொடக் கூடாது. கால் கழுவவும் குளிர்ந்த நீரைப் பயன்படுத்தக்கூடாது.22

## 14. தோஷங்கள் வெளியேறும் முறை

வாந்தி எடுக்க மருந்து உட்கொண்டால் முதலில் உமிழ்நீர்ப்பெருக்கம், உட்கொண்ட மருந்து, கபம், பித்தம், வாயு என்பன முறையே வெளிவரும். அதைப்போல பேதியாவதற்கு

மருந்து உட்கொண்டபோதும் முறையே சிறுநீர், மலம், பித்தம், உட்கொண்ட மருந்து, கபம் என்பன வெளிவரும். 23

### 15. பேதியாவதில் குறைந்த அளவு, அதிக அளவு ஆகியவற்றின் இலக்கணம்

நன்கு பேதியாகாவிடில் கபமும், பித்தமும் சீற்றம் பெறும். அழற்சி, சுவையின்மை, குருத்தன்மை, சடராக்னிக்குறைவு ஆகியவை தோன்றும். நன்றாகப் பேதியாகாவிடில் இதயத்திலும், வயிற்றிலும் தூய்மையற்றிருத்தல், எரிச்சல், அரிப்பு, சிறுநீரும் மலமும் தடைபடுதல் ஆகிய இலக்கணங்கள் தோன்றும். அளவுக்கு அதிகமாகப் பேதியானால் நினைவிழத்தல், ஆஸனவாய் நழுவுதல், கபம் மிகுதியாகப் பெருகுதல், வலி ஆகியவை தோன்றும். 24

### 16. நன்கு பேதியானதன் இலக்கணம்

கபத்துடன் கூடிய பித்தம், மலம் ஆகியவை உடலிலிருந்து வெளிப்பட்ட பிறகு தொப்புள் பகுதி இலேசாகுதல், மனத் தெளிவு, வாயு கீழ்நோக்கி நன்கு பரவுதல் முதலிய இலக் கணங்கள் காணப்பட்டால் தக்க அளவில் பேதியானதாக அறியவும். 25

### 17. பேதியானபிறகு பின்பற்ற வேண்டிய பத்திய முறை

நோயாளி சடராக்னிக் குறைவால் துன்புற்றும், இளைக்காமலும், நன்கு பேதியாகாமலும் இருந்தால் அன்று அவருக்குப் பேயா எனும் கஞ்சியைப் பருகத் தரக்கூடாது. உடல் இளைத்து நாவறட்சி கொண்டு நன்கு பேதியான நோயாளிக்கு நீர்த்தன்மை மிகுந்து இளஞ்சூடுள்ள இலேசான பேயா எனும் கஞ்சியைப் பருகத்தரவேண்டும். 26

### 18. பேதியாவதன் பயன்

அறிவு தெளிவாகுதல், புலன்களின் திறமை மிகுதல், தாதுக்கள் நிலைபெறுதல், ஊக்கம் மிகுதல், சடராக்னி நன்கு வளர்தல், முதுமை நாள் கடந்து தோன்றுதல் ஆகியவை நன்றாகப் பேதியாவதன் இலக்கணங்களாகும். 27

நீர்நிலையில் உள்ள நீர் அகன்ற பிறகு தாமரை, மீன் முதலிய நீர்வாழ் தாவரங்களும், உயிரினங்களும் அழிந்து போகும். அதைப்போல பித்தம் (பேதியாவதால்) உடலிலிருந்து வெளியேறிய பிறகு பித்தத்தால் தோன்றும் நோய்களும் அழிந்துவிடும். 28

### 19. பேதியாகச் செய்யக்கூடாத நோயாளிகள்

சடராக்னி குறைவுள்ளவர், மிகுந்த அளவில் எண்ணெய்ப் பசை கொண்டிருப்பவர், சிறுவர், முதியவர், உடல் பருத்துவர், காயம்படுதலால் உடல் இளைத்தவர், அச்சம் கொண்டவர், மிக்க சோர்வு கொண்டவர், நாவறட்சி மிக்கவர், அசீரண நிலையில் உணவு உட்கொண்டவர், கருவுற்ற மகளிர் கீழ்நோக்கிய ரத்தபித்தம், அப்பொழுதே தோன்றிய சீதபேதி கொண்டவர் கள்வெறி கொண்டவர், சுரம் தோன்றி நாளாகாதவர், பிள்ளைப் பேறு பெற்று நாளாகாதவர், சல்யத்தால் துன்புறுபவர், எண்ணெய் மருந்து பயன்படுத்தாதவர் ஆகியவர்களுக்குப் பேதியாக மருந்து கொடுக்கக்கூடாது. பித்தத்தின் சீற்றத்தால் துன்புறுபவருக்கும் (மெல்ல மெல்ல) சிறுகச் சிறுக பேதியாகக் கூடிய மருந்தை பயன்படுத்த வேண்டும். பேதியாவதற்கு மருந்து கொடுக்கக்கூடாதவர்களுக்கு மதியற்ற மருத்துவர் பேதியாக மருந்து கொடுத்தால் நோயாளிக்கு மரணமே நேரும். 29-31

### 20. பேதியாக மருந்து கொடுக்கத் தக்கவர்கள்

காய்ச்சல், இடுவிஷம், சுவையின்மை, மூலநோய், சீழ்கட்டி, பெருவயிறு, கிரந்தி, வித்ரதி, பாண்டுநோய், கால்கைவலி, இதய நோய் வாதரத்தம், பகந்தரம், வாந்தி, பெண்குறி நோய், அக்கி, குன்மம், பக்குவாசயத்தைச் சார்ந்த நோய், மற்றும் மலக்கட்டு, விஷூசி, அலஸகம், சிறுநீர்த்தடை, குட்டம், விஸ்போடகம், நீரிழிவு, ஆநாஹம், மண்ணீரல் வீக்கம், வீக்கம், விரைவாதம், ஆயுதங்களால் அடிபடுதல், க்ஷாரமருந்துகளால் சுடப்படுதல், நெருப்பால் சுடப்படுதல், கெட்ட விரணம், அக்ஷிபாகம், இருமல், திமிரம், அபிஷ்யந்தம், தலைநோய், காதுநோய், கண்நோய், மூக்கைச் சார்ந்த நோய், வாய் நோய், குதத்தை சார்ந்த நோய், மேலும் ஆண்குறியைச் சார்ந்த நோய், எரிச்சல், மேல் நோக்கிய இரத்தபித்தம், கிருமிகள் உள்ள குடல், பித்தத்தின் இருக்கைகளில் தோன்றும் நோய், பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் நோய் ஆகியவற்றால் துன்புறுகிறவர்களுக்கு பேதியாகச் செய்யும் முறை பயன்படுத்தத்தக்கதாகும். 32

### 21. வமன விரேசன முறைகளின் சிறப்பு

பரவுதல், நுட்பமாக இருத்தல், தீக்ஷ்ணம், வெப்பம் கொண்டிருத்தல், விகாசி (தாதுக்களைச் சிதைக்கும் தன்மை) எனும் தன்மைகளைக் கொண்டிருப்பதால், பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்கள் ஆஸனவாய் வழியாக தோஷங்களை வெளியேற்றும். அதைப்போல வாந்தி எடுக்கச் செய்யும்

பொருள்களும் தம் தன்மையால் மேல் நோக்கி தோஷங்களை வாந்தி மூலம் வெளியேற்றும். 33

பக்குவநிலையைப் பெற்று பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்கள், தோஷங்களை எடுத்துக்கொண்டு உடலின் கீழ்முகமான வழிகளில் இயங்குகிறது. வாந்தி எடுக்கச் செய்யும் பொருள்கள் பக்குவம் பெறாத நிலையில் தோஷங்களை எடுத்துக் கொண்டு தம் குணத்தின் சிறப்பால் உடலின் மேல்முக வழியாக வெளிப்படுகிறது.

இதன் விளக்கமாவது:- பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்கள் நிலையானவை, குருத்தன்மை கொண்டவை. நிலம் மற்றும் நீர் ஆகியவற்றின் தன்மைகளைச் சிறப்பாகக் கொண் டவை. நிலைபெற்றவையாகையால் பக்குவம் பெற்ற பிறகும் குருத்தன்மை கொண்டவையாதலால் கீழ் முகமாகவும் வெளிப் படுகின்றன. வாந்தி எடுக்கச் செய்யும் பொருள்கள் காற்று மற்றும் நெருப்பின் சிறப்புத்தன்மைகளைக் கொண்டிருப்பதால், விரைவாக செயல்படுபவையாகும். அதனால் பக்குவம் பெறாத நிலையில் இலேசாக இருப்பதால் மேல் வழியாக வெளிப்படுகின்றன என்பதாம். 34

## 22. நன்கு பேதியாகாமைக்குக் காரணம்

மிகவும் விரைவாக செயல்பட்ட மிக்க தீக்ஷ்ணமான விரே சனம் நன்கு வளர்ந்த சடராக்னியைக் கொண்ட மென்மையான குடல் கொண்டவருக்கு தோஷங்களை நன்கு வெளியேற்றாது. 35

## 23. பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்களின் சிறப்பு

காலை வேளையில் பருகச் செய்யப்பட்ட மருந்து, உணவு செரிமானமடையும் போது பக்குவம் பெறும். மற்றும் தோஷங் களை நன்கு வெளியேற்றும். இத்தகைய மருந்து சிறந்ததாகும். 36

## 24. வலிமை குறைந்துள்ளவர்களுக்கு தோஷங்களை வெளியேற்று வதில் சிறப்பு முறை

வலிமை குறைந்தவருக்கு தம் நிலையான இடத்தைவிட்டு அகன்று சீற்றம் பெற்ற தோஷங்களை வெளியேற்றுவதற்கு அடிக்கடி குறைந்த அளவில் மருந்து கொடுத்து தோஷங்களை வெளியேற்ற வேண்டும். குறைந்த அளவில் அசைவற்ற தோஷங் களைத் தணியச் செய்யவும் வேண்டும். 37

## 25. தம் இருக்கையைவிட்டகன்ற தோஷங்களை வெளியேற்றுதல்

வலிமையற்றவர் மற்றும் வலிமை குறைந்தவர்கள் உடலில்

தம் நிலை விட்டு அகன்று பக்குவம் பெற்ற தோஷத்தை வெளி யேற்ற வேண்டும். ஏனெனில் அவ்வாறு செய்யாவிடில் தோஷம் பல காலம் வரை நோயாளிக்குத் துன்பம் விளைவித்துக் கொண் டிருக்கும். 38

## 26. கல்குடலுள்ளவர்களுக்குத் தூய்மைப்படுத்தும் முறை

சடராக்னி குறைந்து கடினமான குடல் கொண்டுள்ள வர்களுக்கு க்ஷாரம் மற்றும் உப்பு கலந்த நெய் மருந்துகளால் சடராக்னியைத் தூண்டி எண்ணெய்ப்பசையுண்டாக்கி உடல் வியர்க்கச் செய்து பேதியாகச் செய்ய வேண்டும். 39

## 27. தூய்மைப்படுத்துவதில் எண்ணெய்ப்பசையுடன் உடல் வியர்க்கச் செய்வதன் சிறப்பு

எண்ணெயுடனும் உடல் வியர்க்கச் செய்வதுடனும் கூடிய நோயாளியின் உடலில் தோஷம் மருந்துகளால் வலிமையாக உறிஞ்சப்பட்டு வழிகளில் தங்க முடியாமல் எண்ணெய் குடத்தில் நீர் ஒட்டாதது போல உடலுறுப்புகளில் ஒட்டாமல் வெளிவந்து விடும். 40

## 28. அதிக அளவில் எண்ணெயை உட்கொண்டவருக்குச் சிறப்பு முறை

அதிக அளவில் எண்ணெயை உட்கொண்டவருக்கு எண்ணெய் கலந்த விரேசன மருந்தைப் பயன்படுத்தக்கூடாது. ஏனெனில் அவருடலில் தம் நிலையை விட்டகன்ற தோஷம் மீண்டும் வழிகளில் ஒட்டிக்கொண்டுவிடும். 41

## 29. பேதியாகச் செய்யும் முறைக்குத் தகாதவர்

நஞ்சு, அடிபடுதல், பிடகை, வீக்கம், பாண்டு, குட்டம், நீரிழிவு எனும் நோய்கள் உள்ளவர்கள், மிகுந்த எண்ணெய்ப்பசை கொள்ளாதவர் ஆகியவர்களுக்கு விரேசன முறையை விலக்க வேண்டும். 42

## 30. எண்ணெயால் தூய்மைப்படுத்தக் கூடியவர்களுக்குச் சிறப்பு முறை

எண்ணெயால் தூய்மை பெறக்கூடியவர்களுக்கு வறட்சி பெறச் செய்த பின் மீண்டும் எண்ணெய் கொள்ள செய்து பேதியாகச் செய்ய வேண்டும். அதனால் வெளியேறும் தோஷம் உடல் வலிமையை மிகச் செய்யும். 43

### 31. குடலின் தன்மை அறியப் பெறாதவர்களுக்குத் தூய்மைப் படுத்தும் முறை

இதற்கு முன் எப்பொழுதும் பேதியாகச் செய்யும் மருந்தைப் பயன்படுத்தாதவர்களுக்கு மென்மைத் தன்மையுள்ள மருந்தைப் பயன்படுத்திப் பேதியாகச் செய்ய வேண்டும். குடலின் தன்மை தெரிய வந்த பிறகு அதற்கு ஏற்ற மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 44

### 32. மன்னர்களுக்கு ஏற்ற சோதனை மருந்து

பருகுவதற்கு இனிமையாகித் தன்மை நன்கு தெரிந்ததாகியும் மனதிற்கு விருப்பம் தோற்றுவிப்பதாகியும் உள்ள மருந்தையும் குறைந்த அளவில் நல்ல குணங்கள் சிறந்து, கேடு விளைவிக்கும் தோஷம் மிகவும் குறைந்துள்ளதாகி விளங்கும் மருந்தையும் மன்னர்களுக்குப் பயன்படுத்த வேண்டும். 45

### 33. வறண்டிருக்கும் போது தூய்மைப்படுத்தலால் விளையும் கேடு

எண்ணெய்ப்பசை உண்டாக்காமலும் உடல் வியர்க்கச் செய்யாமலும் தூய்மைப்படுத்த மருந்து உட்கொண்டால் உலர்ந்த கட்டை எளிதில் உடைந்து போவது போல உடலும் விரைவில் கெடும். 46

### 34. தோஷங்கள் எளிதாக வெளிவருதல்

எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறைகளால் நெகிழ்ச்சியுண்டாக்கப்பட்டு எண்ணெய்ப்பசையுள்ள சாறுகளால் சீற்றமுற்றுக் குடலை அடைந்த தோஷங்கள் தூய்மைப்படுத்தும் முறைகளால் துன்பம் விளைக்காமல் சுகமாக வெளியேறிவிடும்.47

**ஸுச்ருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**வமனவிரேசன ஸாத்யோபத்ரவ சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்துமூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

## முப்பத்திநான்காம் அத்தியாயம்

# * வமனவிரேசன வியாபத் சிகித்ஸிதம்

இனி வாந்தி எடுத்தல், பேதியாதல் என்னும் முறைகளால் தோன்றும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்த முறையில் விளக்கப்படுகின்றன. 1-2

### 1. வமன விரேசனங்களின் பதினைந்து வகையான நோய்கள்

மருத்துவர் செய்த அல்லது நோயாளியின் தவறால் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாக செய்தல் என்பனவற்றால் பதினைந்து வகையான நோய்கள் உண்டாகின்றன. இவற்றில் வாந்தி எடுக்கச் செய்யும் மருந்து கீழ் வழியாகப் பரவுதல், பேதியாகச் செய்யும் மருந்து மேல் நோக்கிச் செயல்படுதல் என்பன அவ்விரண்டின் தனிப்பட்ட நோய்களாகும். மற்றவை பதினான்கும் இரண்டு முறைகளுக்கும் பொதுவானவை. அவையாவன (1) ஸாவசேஷௌதத்வம் (மருந்து உடலில் தங்கியிருத்தல்) (2) ஜீர்ணௌஷதத்வம் (மருந்து செரிமானமாகுதல்) (3) ஹீனதோஷாபாஹ்ருதத்வம் (தோஷங்களை முழுவதுமாகக் கொள்ளாமை) (4) வாதசூலம் (வாதத்தால் வலி தோன்றுதல்) (5) அயோகம் (செயல்படாமை) (6) அதியோகம் (அளவுக்கு மீறி செயல்படுதல்) (7) ஜீவாதானம் (உயிரைத் துன்புறுத்தல் (8) ஆத்மானம் (வயிறு வீங்குதல்) (9) பரிகர்த்திகா (எரிச்சலைத் தோற்றுவித்தல்) (10) பரிஸ்ராவம் (ஒழுகிக்கொண்டிருத்தல்) (11) பிரவாஹிகா (சீதபேதி தோன்றுதல்) (12) ஹ்ருதயோபஸரணம் (இதயத்தை அடைந்து துன்புறுத்தல்) (13) விபந்தம் (தடைபடுதல்) (14) அங்கபிரக்ரஹம் (உறுப்புகளை துன்புறுத்தல்) என்பனவாம். 3

### 2. வாந்தி எடுக்கச் செய்யும் மருந்து கீழ்நோக்கிப் பரவுதல்

பசியால் துன்புறுபவர், மிகவும் கடுமையான சடராக்னியைக் கொண்டவர், மென்மையான குடல் கொண்டவர், உடல் வலிமையற்றவர் ஆகியவர்களுக்குக் கொடுத்த வாந்தி எடுக்கச்

---

* வமனம் - வாந்தி, விரேசனம் - பேதி. இவற்றால் தோன்றும் நோய்களுக்குரிய சிகிச்சை இதில் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் வமனவிரேசனவியாபத் சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

செய்யும் மருந்து பக்குவம் ஆகிக் கொண்டிருக்கும் போது நழுவுதல் எனும் தன்மையை (விரேசன மருந்துகளைப் போல) பெற்றிருப்பதால் கீழ் வழியை நோக்கிப் பரவும். இதனால் விரும்பிய பயன் கிடைக்காமல் போகும். அதாவது வாந்தியாகாமல் போகும். மற்றும் கபம் வளர்ந்துவிடும். இந்த நிலையில் நோயாளிக்கு விரைவாக எண்ணெய்ப்பசை யுண்டாக்கி முன்னைவிட தீக்ஷ்ணமுள்ள மருந்துப் பொருள் களைப் பயன்படுத்தி வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 4

### 3. பேதியாகச் செய்யும் மருந்து மேல் நோக்கிப் பரவுதல்

நோயாளியின் ஆமாசயம் தூய்மையற்று கபம் நிறைந் துள்ளபோது அல்லது உணவு சீராக செரிமானமாகாதபோது அல்லது அவருக்கு விருப்பமில்லாத போது அளவுக்கு மீறி பருகக் கொடுக்கப்பட்ட பேதியாகச் செய்யும் மருந்து மேல் நோக்கி பரவும். இதனால் விரும்பிய பயன் (பேதியாதல்) கிடைக்காதது மட்டுமல்ல, பித்தமும் வளர்ந்து விடும். இந்நிலையில் தூய்மை யற்ற ஆமாசயம், வளர்ந்த கபம் முதலியவற்றை வாந்தி எடுக்கச் செய்து முன்பு பயன்படுத்தியதை விட தீக்ஷ்ணமான பேதியாகச் செய்யும் மருந்தைக் கொண்டு பேதியாகச் செய்ய வேண்டும். ஆமம் அதிகமாக உள்ளபோது பட்டினி கிடக்கச் செய்தல், பக்குவம் பெறச் செய்தல் ஆகிய முறைகளை பின்பற்ற வேண்டும். விருப்பமில்லாத, மற்றும் அளவுக்கு மீறிய மருந்து கொடுத்திருந்த நிலையில் விருப்பமுள்ள மருந்தை தக்க அளவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். இம்முறையிலும் பேதியாகக் கொடுத்த மருந்து மேல் நோக்கிச் சென்றால் மூன்றாம் முறை பேதியாக மருந்து கொடுக்கக் கூடாது. இந்நிலையில் தேன், நெய், பாணிதம் என்பன போன்றவற்றை நாவினால் நக்கி உண்ணச் செய்து பேதியாகச் செய்ய வேண்டும். 5

### 4. மருந்து உடலில் தங்கியதன் (ஸாவசேஷ) இலக்கணம்

வாந்தி எடுக்கச் செய்ய அல்லது பேதியாகச் செய்யக் கொடுத்த மருந்து செரிமானமடைந்த பிறகு தோஷத்துடன் கூடியதாகிக் குறைந்த அளவில் இருக்கும்போது தோஷங்களை வெளியேற்ற இயலாததாகியிருக்கும். இந்நிலையில் நாவறட்சி, விலாவலி, வாந்தி, நினைவிழத்தல், இணைப்புகளில் துன்பம், குமட்டல் (வாயில் உமிழ் நீர் பெருகுதல்), எதிலும் மனம் ஈடுபடாமை, ஏப்பம், தூய்மையற்றிருத்தல் போன்ற இலக்கணங் கள் காணப்படும். வாந்தி எடுக்கக் கொடுத்த மருந்து குடலில் தங்கி இவ்வாறு துன்பம் விளைவித்திருந்தால் வெந்நீரைப் பருகச்

செய்து விரைவாக வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பேதியாவதற்காகக் கொடுத்த மருந்து உடல் வலிமையுள்ளவரின் உடலில் சீராகப் பேதியாகாமல் தங்கித் தோஷங்களுடன் கலந்து செரிமானமாகாமல் மீதியுள்ள மருந்தையும் முன் கூறியபடி வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 6

**5. மருந்து செரிமானமடைந்த (ஜீர்ணௌஷத) நிலையில் ரம்**

சடராக்னி மிகவும் தீக்ஷ்ணமாக உள்ளவருக்கும், கல் குடல் கொண்டவருக்கும் குறைந்த அளவுள்ள அல்லது வலிமை குறைந்த மருந்து கொடுத்தால் அது உணவைப் போல செரிமானமடைந்து செயல்படாமல் இருந்துவிடும். அந்நிலையில் வெளிப்படாத தோஷங்கள் குடல் முதலிய பகுதிகளில் துன்பங்களை விளைவிக்கும். அப்பொழுது தீக்ஷ்ணத்தன்மையுள்ள மருந்தை அதிக அளவில் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 7

**6. தோஷங்களைக் குறைந்த அளவில் வெளியேற்றியதன் (ஹீநதோஷாபஹ்ருத்தவம்) இலக்கணம்**

எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தாமல் குறைந்த தன்மை கொண்ட மருந்தைக் கொடுத்த போது அம்மருந்து தோஷங்களை ஓரளவே வெளியேறச் செய்யும். அந்நிலையில் வாந்தியாகக் கொடுத்த மருந்து உடல் பளு வாதல், ஓக்காளம் தோன்றுதல், இதயத்தை (கெடுத்தல்) மாசு படுத்துதல் எனும் துன்பங்களை உண்டாக்கும். நோயும் வளர்ச்சி பெறும். இந்நிலையில் எண்ணெய் முறை, வியர்க்கச்செய்தல் முறை ஆகியவற்றைப் பயன்படுத்தி வாந்தி எடுக்கச் செய்யும் மருந்தை உட்கொள்ளச் செய்து நோயாளியை அதிக அளவில் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். பேதியாக செய்ய மருந்து கொடுத்த போது இந்நிலை ஏற்பட்டால் தங்கியிருக்கும் தோஷம் ஆஸனவாய்ப் பகுதியில் கத்தரிப்பது போன்ற வலி, வயிற்று உப்புசம், தலை பளுவாதல், வாயு தடைபடுதல், நோய் வளர்ச்சி பெறுதல் எனும் துன்பங்கள் தோன்றும். இந்நிலையில் நோயாளிக்கு மீண்டும் எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தித் தீக்ஷ்ணகுணமுள்ள மருந்துகளால் பேதியாகச் செய்ய வேண்டும். பல தோஷங்கள் அல்லது நெகிழ்ச்சியுற்ற தோஷங்களை கொண்ட திடமான உடல் உள்ளவருக்கு எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தியபிறகு மூன்றாம் நாள் குறைந்த தன்மை கொண்ட மருந்துகளையும் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 8

### 7. வாதத்தால் வலி தோன்றியதன் (வாத சூலை) இலக்கணம்

எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன் படுத்தாமல் பிரம்மசர்ய நிலையில் இல்லாதவருக்குக் கொடுத்த வறட்சித் தன்மை கொண்ட மருந்து வாதத்தைச் சீற்றம் பெறச் செய்யும். அவ்வாறு சீற்றமடைந்த வாதம், விலா, பின்தட்டு, இடுப்பு, மன்யாபிரதேசம், இதயம் முதலிய இடங்களில் வலியையும், நினைவிழத்தல், தலைச்சுற்றல், வெறி, உணர்ச்சி யற்றுப்போதல் முதலியவற்றைத் தோற்றுவிக்கும். இந்நிலை வாதசூலை எனப்படும். இதில் எண்ணெயை நோயாளியின் உடல்மேல் நன்கு தேய்த்து உளுந்து முதலிய பருப்பு வகைகளால் உடல் வியர்க்கச் செய்து அதிமதுரக்கஷாயத்தால் செய்த எண்ணெய் மருந்தைக் கொண்டு அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 9

### 8. மருந்து செயல்படாமையின் (அயோக) இலக்கணம்

வாந்தியாக அல்லது பேதியாகச் செய்யும் மருந்தை எண் ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறைகளைப் பயன்படுத்தாத நோயாளிக்குக் கொடுத்தால் அளவில் குறைந்து அல்லது தன்மையில் குறைந்துள்ள அம்மருந்து மேல் நோக்கியோ கீழ்நோக்கியோ செயல்படாமல் இருந்து விடும். தோஷங்களைத் (தூண்டி) கலக்கி அவற்றுடன் இருந்து உடல் வலிமையைக் குறைத்து விடும். இந்நிலையில் ஆத்மானம், இதயப்பிடிப்பு, நாவறட்சி, நினைவிழத்தல், அழற்சிஆகிய துன்பங்கள் தோன்றும். இந்நிலை அயோகம் (செயல்படாமை) எனப்படும். வாந்தியாகக் கொடுத்த மருந்து செயல்படாத போது மருக்காரை, உப்பு கலந்த நீரை உட்கொள்ளச் செய்து விரைவில் வாந்தியாகச் செய்ய வேண்டும். பேதியாகக் கொடுத்த மருந்து செயல்படாத போது மிகவும் தீக்ஷ்ணமான மருந்துப் பொருள்களாலான கஷாயத்தை கொடுத்து பேதியாகச் செய்ய வேண்டும். நன்றாக வாந்தியாகாத போது சீற்றம் பெற்ற தோஷங்கள் உடலில் பரவி அரிப்பு, வீக்கம், குட்டம், பிடகை, காய்ச்சல், உறுப்புகளில் வலி, ஊசியால் குத்துவது போன்ற வலி முதலியவற்றைத் தோற்றுவிக்கும். மருந்தை அதிக அளவில் உட்கொள்ளச் செய்து அந்த தோஷங்களை வேருடன் அழிக்க வேண்டும்.

எண்ணெய் முறை வியர்க்கச் செய்யும் முறைகளை பயன்படுத்தாத போது முறையற்ற பேதியானவருக்குத் தொப்பு ளுக்கு கீழ்ப்பகுதி அசைவற்றுப் போதல், அல்லது உணர்வு விழுதல், வலி, அபானவாயு மலம் முதலியன தடைபடுதல்,

அரிப்பு, மண்டலம் (வட்டமாக தோன்றும் படை) முதலியன தோன்றும். அத்தகைய நோயாளிக்கு முதலில் ஆஸ்தாபன வஸ்தியை பயன்படுத்திய பிறகு எண்ணெய் வஸ்தியால் எண்ணெய் பசையை உண்டாக்கி தீக்ஷ்ண கஷாயங்களால் பேதி யாகச் செய்ய வேண்டும். பேதியின் வேகம் நன்கு இல்லாத போது அல்லது பேதியாகக் கொடுத்த பொருள்கள் கெட்டு தடை பட்டபோது அதைத் தூண்டிவிடுவதற்கு வெந்நீரைப் பருகச் செய்ய வேண்டும். உள்ளங்கையை சூடாக்கி விலா, வயிறு பகுதி களுக்கு வெப்பமூட்ட வேண்டும். இதனால் தோஷங்கள் வெளி யேறும். தோஷங்கள் குறைந்த அளவில் வெளிப்பட்ட போது மருந்து பொருள் செரிமானமடைந்த நிலை, தோஷங்கள் மிகுதியாக இருத்தல், (நாள்) பகல் பொழுது மிஞ்சியிருத்தல், நோயாளியின் உடல் வலிமை முதலியவற்றை நன்றாக ஆராய்ந்து மீண்டும் தகுந்த அளவு மருந்தை உட்கொள்ளச் செய்ய வேண்டும். தோஷங்கள் வெளியேறாத போது பத்து நாட்கள் சென்ற பின் எண்ணெய் முறை, வியர்க்கச்செய்யும் முறை ஆகியவைகளால் உடலைத் தூய்மைபடுத்தி மீண்டும் வாந்தியாகச் செய்தல் பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் தூய்மைப்படுத்த வேண்டும். மிகக் கஷ்டப்பட்டு பேதியாகச் செய்ய வேண்டியுள்ள நோயாளிக்கு முதலில் நிரூஹவஸ்தியைக் கொடுத்து பிறகு எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்திப் பேதியாகச் செய்ய வேண்டும். வெட்கம், அச்சம், உலோபம் முதலியன கொள்வதால் மலம் மற்றும் சிறுநீர் வெளிவர இருக்கும்போது அவற்றின் வேகத்தை தடுக்கும் தன்மை கொண்டவர்கள் பெண்கள், அரசனருகில் இருக்கும் பணியாள், வியாபாரம் செய்பவர், வேதம் படிப்பவர் முதலியவர்களா வார்கள். இத்தகையவர்கள் மிகவும் சிரமப்பட்டு பேதியாகச் செய்யத் தக்கவர்களாவர். ஏனெனில் இவர்களது உடலில் வாயு அதிக அளவில் தங்கியிருக்கும். ஆகையால் நன்றாக எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறைகளை பயன்படுத்தி இவர்களுக்கு உடற்தூய்மையைத் தோற்றுவிக்க வேண்டும். 10

**9. அளவுக்கு மீறி மருந்து செயல்படுவதன் (அதியோக) ரம்**

எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறைகள் அதிக அளவில் பயன்படுத்தப்பட்டவருக்கு அல்லது மிகவும் மென்மை யான குடல் கொண்டவருக்கு மிகவும் தீக்ஷ்ணமான மருந்தையோ அல்லது வேறுவகை மருந்தை அளவுக்கு அதிகமாகவோ பயன்படுத்திய போது மிகவும் வேகம் கொண்டு மருந்து

செயல்படும். வாந்தி அதிக அளவில் இருந்தால் பித்தம் மிகுந்துவிடும். உடல் வலிமை குறையும். வாயு மிகவும் சீற்றம் பெறும். இந்நிலையில் நோயாளியின் உடலின் மேல் நெய் தடவித் தேய்த்து குளிர்ந்த நீரில் குளிக்கச் செய்ய வேண்டும். மற்றும் தோஷங்களுக்கு ஏற்ப சர்க்கரையும் தேனும் கலந்த லேகியங்களைக் கொடுக்க வேண்டும். பேதி அதிக அளவிலா னால் முதலில் கபம் மிகுதியாக வெளியேறும். பிறகு இரத்தம் கலந்த கபம் வெளிவரும். இந்நிலையிலும் உடல் வலிமை குறைந்து வாதம் சீற்றமுறும். மிகக் குளிர்ந்த நீரில் நோயாளியைக் குளிக்கச் செய்து அல்லது குளிர்ந்த நீரில் மூழ்கி இருக்கச் செய்து தேன் கலந்த அரிசிக்கழுவிய நீரைக் கொண்டு வாந்தி எடுக்கச் செய்க. இவருக்குப் பிச்சாவஸ்தி (கொழ கொழப்புள்ள பொருள்களாலான வஸ்தி) கொடுக்க வேண்டும். பாலும் நெய்யும் கலந்துள்ள அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். அரிசி கழுவிய நீருடன் ஞாழல் கலந்துள்ள அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். அரிசி கழுவிய நீருடன் ஞாழல் முதலிய கூட்டுப் பொருள்களை உட்கொள்ளச் செய்ய வேண்டும். பால் அல்லது புலால் சாற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். 11

## 10. அளவுக்கு மீறி வாந்தி எடுத்ததன் விளைவுகள்

அளவுக்கு மீறி வாந்தியாகும் போது இரத்தம் வாந்தியாதல் அல்லது உமிழும் எச்சிலில் இரத்தம் கலந்து வருதல் தோன்றும். நாக்கு வெளியே வந்துவிடும். அல்லது உள்நோக்கி மடங்கிப் போதல், கண்கள் விரிவடைதல், தாடைப்பிடிப்பு, நாவறட்சி, விக்கல், காய்ச்சல், உணர்ச்சியற்றுப்போதல் முதலிய துன்பங்கள் தோன்றும். இந்த நிலையில் ஆட்டின் இரத்தம், சந்தனம், வெட்டிவேர், ஸௌவீராஞ்சனம், பொரிமா, சர்க்கரை ஆகிய வற்றை நீரில் கலந்து மந்தம் எனும் கஞ்சி தயார் செய்து அதைப் பருகச் செய்ய வேண்டும். நெய், தேன், சர்க்கரை ஆகியவற்றுடன் பழச்சாறுகளை அல்லது ஆலம் முதலிய மரங்களின் இளம் மொட்டு அல்லது இளம் பிஞ்சுகளைக் கலந்து அல்லது குடசப்பாலை முதலிய பொருள்காளலான தேன் கலந்த பேயா எனும் கஞ்சியையாவது பருகச் செய்ய வேண்டும். பால் அல்லது காட்டு விலங்குகளின் புலால் சாற்றுடன் உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். மிக்க இரத்தப் பெருக்கைத் தடுக்கக் கூடிய முறைகளைப் பயன்படுத்தி பணிவிடை செய்ய வேண்டும். வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் நாக்கில் சுக்கு, மிளகு, திப்பிலித்தூள் அல்லது உப்பைத் தேய்த்து எள் மற்றும்

திராட்சையைப் பூசி வாய்க்குள் அழுத்த வேண்டும். உள்ளே மடங்கிப் போன நாக்கைச் சீராக நீளச் செய்வதற்கு அந்நோயாளியின் முன்னிலையில் வேறு நபரைப் புளிப்புச் சுவையுள்ள பொருள்களைச் சுவைக்கச் செய்ய வேண்டும். வெளிவந்த விழிகளைச் சீராகச் செய்ய நெய்யைத் தடவி அழுத்த வேண்டும். தாடைப்பிடிப்பிற்கு வாதத்தை போக்கும் பொருள்களாலான மூக்கிலிடு மருந்தைப் பயன்படுத்தி அப்பகுதியை வியர்க்கச் செய்ய வேண்டும். நாவறட்சி முதலிய துன்பங்கள் தோன்றினால் அவற்றிற்கு உரிய சிகிச்சைகளை செய்ய வேண்டும். (நினைவு) உணர்ச்சி தவறிய போது புல்லாங்குழல், வீணை முதலிய இசைக்கருவிகளை இயங்கச் செய்து அவ்வொலி காதில் படும்படிச் செய்ய வேண்டும். 12

## 11. அளவிற்கு மீறி பேதியாவதால் தோன்றும் விளைவுகள்

அளவிற்கு மீறி பேதியாவதால் மயிலிறகுக் கண் போன்ற நிறத்தில் நீர் வெளிவரும். அதற்கு பிறகு புலால் கழுவிய நிரைப் போல ஜீவ இரத்தம் வெளிவரும். அதன் பிறகு ஆஸனவாய் நழுவுதல், நடுக்கம் மற்றும் அளவுக்கு மிகுதியாக வாந்தியாவதால் தோன்றும் துன்பங்கள் ஆகியவை தோன்றும். இதற்கு அதிக அளவில் இரத்தப் பெருக்கு ஏற்பட்டால் அதற்குச் செய்ய வேண்டியதாகக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளை இங்கும் பின்பற்ற வேண்டும். ஆஸனவாய் நழுவியபோது அங்கு எண்ணெயைத் தடவி வியர்க்கச் செய்து உள்நோக்கி அழுத்திவிட வேண்டும். நடுக்கத்திற்கு வாத நோய்க்கு உரிய சிகிச்சையைப் பின்பற்ற வேண்டும். நாக்கு வெளி வந்ததற்குச் சிகிச்சை முன்பு கூறப்பட்டது. ஜீவசோணிதம் எனும் இரத்தம் வெளியேறியதற்கு குமிழன் பழம், வில்வம், பால், வெட்டிவேர் ஆகியவற்றாலான பாலில் பால் ஏடு, ஸௌவீராஞ்சனம் கலந்து குளிர வைத்து அதைக்கொண்டு ஆஸ்தாபன வஸ்தி செய்விக்க வேண்டும். ***நியக்ரோதாதி** கூட்டுப் பொருள்களாலான கஷாயத்தில் கருப்பஞ்சாறு, நெய், ஆட்டின் இரத்தம் கலந்து வஸ்தி மூலமாகப் பணிவிடை செய்ய வேண்டும். உமிழ் நீருடன் இரத்தம் கலந்து வந்த போது இரத்த பித்தத்திற்கும், இரத்த அதிஸாரத்திற்கும் கூறப்பட்ட முறைகளைப் பயன்படுத்த வேண்டும். உணவிலும் பருகும் நீரிலும் **நியக்ரோதாதி** கணக்கூட்டுப்பொருள்களைப் பயன்படுத்த வேண்டும். 13

* **நியக்ரோதம்** - ஆலமரம்.

### 12. ஆத்மானம் எனும் துன்பத்தின் விளக்கம்

உணவு சீராகச் செரிமானமாகாமை, பல தோஷங்களுடன் கூடியிருத்தல், வறண்டிருத்தல், வாதத்தைச் சிறப்பாக கொண்ட குடல் ஆகியவற்றைக் கொண்டவருக்கு எண்ணெயற்ற குளிர்ந்த மருந்துகளைத் தருவதால் ஆத்மானம் (வயிறு வீங்குதல்) உண்டாகும். இதில் அபான வாயு, மலம், சிறுநீர் ஆகியவை வெளியேறாமல் தடுக்கப்படும். வயிறு பெரியதாகும். விலாவலி தோன்றும். ஆஸனவாயிலும், சிறுநீர்பையிலும் ஊசியால் குத்துவது போன்ற வலி உண்டாகும். உணவில் விருப்பம் இருக்காது. இந்நிலைக்கு ஆத்மானம் என்பது பெயராகும். இந்நிலையில் வியர்க்கச் செய்து ஆநாஹவஸ்தி சடராக்னியை வளர்க்கும் முறை, பட்டினி கிடத்தல் போன்றவற்றையும் வஸ்தி முறையையும் பயன்படுத்த வேண்டும். 14-15

### 13. பரிகர்த்திகா எனும் துன்பத்தின் விளக்கம்

உடல் வலிமை குறைந்தவர், மிகவும் மென்மையான குடல் கொண்டவர், சடராக்னி வலிமை மிகவும் குறைவாக உள்ளவர், வறட்சிதன்மையுள்ளவர் ஆகியவர்களுக்கு மிகவும் தீக்ஷ்ணமும், உஷ்ணமும் கொண்ட அல்லது அதிக அளவில் உப்பு கலந்துள்ள மிகவும் வறட்சித் தன்மை கொண்ட மருந்தை பருகச் செய்தால் பித்தமும் வாயுவும் சீற்றமடைந்து பரிகர்த்திகா எனும் நோயைத் தோற்றுவிக்கும். இந்நோயில் ஆஸனவாய், தொப்புள், ஆண்குறி, சிறுநீரகம், தலை ஆகிய உறுப்புகளில் எரிச்சல், கத்தரியால் வெட்டுவது போன்ற வலி, அபானவாயு தடைபடுதல், வாயு நிலையாக நின்றுவிடல், உணவில் சுவை தோன்றாமை எனும் துன்பங்கள் தோன்றும். இதில் தேன் நெய் ஆகியவற்றுடன் கூடிய அதிமதுரத்தின் மற்றும் எள்ளின் விழுதுடன் கூட பிச்சாவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். மற்றும் நோயாளியைக் குளிர்ந்த நீரால் குளிக்கச் செய்ய வேண்டும். பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். நெய் தெளிவு அல்லது அதிமதுரம் என்பதாலான எண்ணெயைக் கொண்டு அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 16

### 14. பரிஸ்ராவம் எனும் துன்பத்தின் விளக்கம்

பல தோஷங்களுடன் கூடிய குடல் கொண்டவருக்கு மென்மைத் தன்மை கொண்ட மருந்தைக் கொடுத்தால் அது தோஷங்களைத் தூண்டி முழுவதும் வெளிவரும்படி செய்ய இயலாததாகும். அதனால் தோஷங்கள் பெருக்கெடுத்து வெளிவரத் துவங்கும். இந்நோயில் வலிவின்மை, வயிற்றில்

வாயு கோளாறு, உணவில் விருப்பமின்மை உறுப்புகளில் வலி போன்ற துன்பங்கள் தோன்றும். வலியுடன் கூடி பித்தமும் கபமும் வெளிவரும் இந்நிலையைப் பரிஸ்ராவம் என்பர். இந்நிலையில் அஜகர்ணம், தவம், திநிசம், புரசு, சிற்றாமுட்டி ஆகியவற்றின் கஷாயத்தில் தேன் கலந்து ஆஸ்தாபன வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். பரிஸ்ராவம் (தோஷங்கள் ஒழுகுதல்) நின்ற பிறகு எண்ணெய் முறையைப் பயன்ப( மீண்டும் தூய்மைபடுத்தும் முறையைப் பின்பற்ற வேண்டும். 17

15. **பிரவாஹிகை (சீதபேதி) எனும் துன்பத்தின் விளக்கம்**

மிகவும் வறண்ட அல்லது மிகவும் எண்ணெய்ப்பசை கொண்ட மனிதனுக்குப் பயன்படுத்திய மருந்து வாதம் மற்றும் மலத்தைச் சேராத வேகத்தைப் பரவச் செய்து அல்லது வேகத்தை தடுத்து பிரவாஹிதை எனும் நோயைத் தோற்றுவிக்கும். அதாவது மிகவும் வறட்சித் தன்மை கொண்டவருக்குத் தந்த மருந்து வாயு மற்றும் மலத்தைச் சேராத வேகத்தை வெளிப்படுத்தும். அப்பொழுது பிரவாஹிகை தோன்றும் அவ்வாறே மிகவும் எண்ணெய் பசை கொண்டவருக்குக் கொடுத்த மருந்து வேகத்தைத் தடுத்து விடுவதால் பிரவாஹிகை தோன்றும். இந்நோயில் வாதத்துடன் கூடிய எரிச்சல் மற்றும் வலியுடன் கூடியதாகி குருத்தன்மையும் பிசுபிசுப்பும் வெண்ணிறம் கருநிறம் அல்லது இரத்தம கலந்து மிகுந்த அளவில் கபம், மலம வெளிவரும போது துன்பத்தை விளைவித்து வெளிவரும். இதற்கு முன்பு . பரிஸ்ராவத்திற்குக் கூறியபடியே சிகிச்சை செய்ய வேண்டும் 18

16 **மருந்து செயல்படும் வேகத்தைத் தடுப்பதன விளைவுகள்**

மேல் நோக்கி அல்லது கீழ்நோக்கி மருந்து செயலபடும் போது அறியாமையால் அதன் வேகத்தைத் தடுத்தால் அப்பொழுது அந்த நோயாளியின் உடலில் சீற்றம் பெற்ற தோஷங்கள் இடத்தைச் சென்று அடையும். இதனால் உடலில் சிறப்பான உயிர் நிலையாகிய இதயம் தாக்கப்படுவதால் மிகவும் துன்ப மடைந்த நோயாளி பற்களை நறநறவென்று கடிப்பார். கண்கள் மேல் நோக்கிய விழிகளுடன் காணப்படும். நாக்கை கடித்துக் கொள்வார். நினைவிழந்து விடுவார். முடிவில் உணர்ச்சியற்றுப் போவார். அறிவிலிகள் (அவர் இறந்து விட்டதாகக் கருதி) இந்நிலையில் அவருக்குச் சிகிச்சையளிப்பதில்லை.

இந்நிலையில் நோயாளியை எண்ணெய் தேய்த்துக் குளிக்கச் செய்வித்து தானியஸ்வேதன முறையைப் பயன் படுத்தி உடல் வியர்க்கச் செய்து அதிமதுரத்துடன் கூடிய எண் ணெயைக் கொண்டு அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். தீக்ஷ்ணமான சிரோவிரேசனத்தை கையாள

வேண்டும். பிறகு அதிமதுரம் கலநதுள்ள அரிசிக்கழுவிய நீரால் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். தோஷங்களின் சீற்றத்தை அறிந்து வஸ்தி முறைகளைப் பயன்படுத்திச் சிகிச்சை செய்ய வேண்டும். 19

## 17. விபந்தம் எனும் துன்பத்தின் விளக்கம்

தோஷங்கள் மேல் நோக்கி அல்லது கீழ்நோக்கிச் செயல் படும் போது நோயாளி குளிர்ந்த அறையில் வசித்தல், நீர், வாயு மற்றும் குளுமைத் தன்மை மிக்க பொருள்களைப் பயன்படுத்தி னால் அவருடலில் தோஷஙகள் ஸ்ரோதஸ்களில் தங்கி கனத் தன்மைபெற்று வாயு, சிறுநீர், மலம் ஆகியவற்றை வெளிவராமல் தடுத்து விபந்தம் எனும் நோயைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் நோயாளிக்கு அழற்சி, காய்ச்சல், கடும் துன்பம் ஆகியவை தோன்றும். இத்தகையவருக்கு விரைவாக வாந்தி எடுக்கச் செய்து நிலைக்கு ஏற்றபடி கீழ்முகமாகத் தோஷங்களை வெளிப்படுத்தும் மருந்து பொருள்களை இந்துப்பு, புளிக்காடி, பசுவின் சிறுநீர் ஆகியவற்றுடன் கலந்து பேதியாகச் செய்வதற்காக உட்கொள்ளத் தர வேண்டும். ஆஸ்தாபன, அநுவாஸன வஸ்திகளைத் தோஷங் களுக்கு ஏற்றபடி பயன்படுத்த வேண்டும். தோஷங்களுக்கு ஏற்ப உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும் மேல் கீழ் எனும் இரு வழிகளினாலும் வெளிப்படும் தோஷங்களின் நிலையில் தோனறும் துனபங்களுக்கு ஏற்பச சிறப்பான சிகிச்சை முறைகளை தோஷங்களுக்கு ஏற்றபடி பின்பற்ற வேண்டும். 20

## 18. சில துன்பங்களைப் பற்றிச் சிறப்பு விளக்கம்

பேதியாகச் செய்யும் முறையில் ஆஸனவாயைக் கத்தரிப்பது போன்ற துன்பம் விளைவிக்கும் பரிகர்த்திகா எனும் துன்பத்தைப் போல வாந்தி எடுக்கச் செய்வதிலும் (கண்டக்ஷணநம்) தொண்டை எரிச்சல் எனும் துன்பம் தோன்றும். பேதியாகச் செய்வதில் தோஷங்களின் ஒழுகுதலான பரிஸ்ராவம் எனும் துன்பத்தை போல வாந்தியிலும் கபம் ஒழுகுதல் ஏற்படும். பேதியாகச் செய்வதில் பிரவாஹிகை (சீதபேதி) எனும் துன்பத்தைப் போல வாந்தி எடுப்பதில் வறண்ட ஏப்பம் தோன்றுதல் எனும் துன்பம் விளையும். இவ்வாறு வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் எனும் தூய்மைப்படுத்தும் முறைகளை அளவுக்கு மீறிப் பயன்படுத்துதல், தவறாகப் பயன்படுத்துதல், குறைந்த அளவில பயன்படுத்துதல் என்பனவற்றால் தோன்றுவனவாகும். 21-22

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**வமனவிரேசன வியாபத் சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்திநான்காம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தைந்தாம் அத்தியாயம்

# * நேத்ரவஸ்தி ப்ரமாண பிரவிபாக சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி வஸ்தியந்திர அளவு, தவறான வஸ்தியால் தோன்றும் துன்பம் முதலியவற்றின் விளக்கம் கூறப்படுகிறது. 1-2

## 1. வஸ்தியின் சிறப்பு

எண்ணெய்ப்பசை தோற்றுவித்தல் முதலான செயல்களில் ஆயுர்வேத ஆசிரியர்கள் வஸ்தி முறையைச் சிறந்ததாகக் கொள் கின்றனர். ஏனெனில் வஸ்தி பல செயல்களை நிறைவேற்றுகிறது. பல வகையான மருந்துப் பொருள்களின் கூட்டால் வஸ்தி தோஷங்களைத் தூய்மைப்படுத்துதல், தணித்தல், கைப்பற்றுதல் என்பனவற்றைச் செய்கிறது. விந்து குறைந்தவருக்கு விந்து வலிமையைத் தருகிறது. இளைத்தவரைச் செழிப்புறச் செய்கிறது. பருத்தவரை இளைக்கச் செய்கிறது. கண்களுக்கு வலிமை யூட்டுகிறது. முதுமை, நரை முதலியவற்றைப் போக்குகிறது. ஆயுளை நிலைபெறச் செய்கிறது. 3

நல்ல முறையில் பயன்படுத்தப்பட்ட வஸ்தி உடலுக்குச் செழிப்பு, நல்லமுக வலிமை, நலம், ஆயுள் ஆகியவற்றை தரும். 4

## 2. வஸ்தி முறையால் நீக்கத்தக்க நோய்கள்

வஸ்தியைச் சிறப்பாகப் பயன்படுத்துவதால் காய்ச்சல், அதிஸாரம், திமிரம், பிரதிஸியாயம், தலைநோய், அதிமந்தம், அர்திதம், ஆக்ஷேபகம், பக்கவாதம், ஏகாங்கவாதம், ஸர்வாங்க வாதம், ஆத்மானம், பெருவயிறு, பெண்குறியில் வலி, சர்க்கரை நோயால் வலி, விரைவீக்கம், உபதம்சம், ஆநாஹம், சிறுநீர்த்தடை, குன்மம், வாதசோணிதம், வாதம், மலம், சிறுநீர் முதலியன தடைபடுதல், உதாவர்த்தம், விந்து, ருதுரத்தம், தாய்ப்பால் முதலியன அழிதல், இதயப்பிடிப்பு, தாடைப்பிடிப்பு, மன்யாக்ரஹம், சர்க்கரைநோய், அச்மரீ, மூடகர்ப்பம் முதலிய நோய்கள் தணியும். 5

---

* நேத்ரவஸ்தி - வஸ்தி முறைக்குப் பயன்படும் யந்திரம், அதன் அளவு முதலியவற்றைப் பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயம் நேத்ரவஸ்தி பிரமாண பிரவிபாக சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

வாதம், பித்தம், கபம், இரத்தம் முதலியவை சீற்றமுறுதல், தோஷங்கள் ஒன்றோடு மற்றொன்று சேர்ந்து சீற்றமடைதல், ஸந்நிபாதம் (மூன்று தோஷங்களும் சீற்றமடைதல்) போன்ற துன்பங்களில் வஸ்தி முறை மிகவும் நலம் தருவதாகும். 6

### 3. வஸ்தியந்திரத்தின் அளவு

ஒன்று, எட்டு, பதினாறு ஆண்டு வயதானவர்களுக்கு முறையே ஆறு, எட்டு, பத்து அங்குலங்கள் நீளமும், சுண்டுவிரல் மோதிரவிரல் நடுவிரல் அளவு பருமனும், முனையில் ஒன்றரை அங்குலம், இரண்டு அங்குலம், மூன்றரை அங்குலமும் கொண்டு கர்ணிகையுடன் கூடியவையும், அடிப்பகுதியில் கங்கம், கழுகு, மயில் ஆகியவற்றின் இறக்கையின் நாடியைப் போல உட்புகும் வழியும், பயறு, உளுந்து, பட்டாணி கொள்ளும் அளவு துளை யுள்ளனவுமாகிய வஸ்தியந்திரங்களைச் செய்ய வேண்டும். இவற்றில் முறையே நோயாளியின் கை அளவுக்கு (இருகை களையும் சேர்த்துப் பிடித்துக் கொள்ளும் அளவுக்கு) இரண்டு பங்கு, அவ்வாறே நான்கு முதல் எட்டு பங்குகள் வரை உள்ள ஆஸ்தாபன வஸ்திகளுக்குரிய பொருள்களுடன் கூடிய கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். 7

முன்கூறிய ஆண்டுகளுக்கு மேல் வயதானவர்களுக்கு உடல் வலிமை, வயது, உடல் நிலை முதலியவற்றை நன்கு ஆராய்ந்து அவரவர்களுக்கு ஏற்ற அளவு இயந்திரத்தையும் வஸ்தி மருந்தையும் பயன்படுத்த வேண்டும். 8

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேல் வயது உள்ளவர்களுக்குப் பன்னிரண்டு அங்குல நீளம், அடியில் கட்டைவிரல் அளவுக்குப் பருமன், முனையில் சுண்டுவிரலின் நடுப்பகுதியளவு பருமன், முனையில் மூன்று அங்குலத் தொலைவில் கர்ணிகையுடன் கூடி கழுகின் நாடியைப் போன்ற அடித்துளை, இலந்தைத் கொட்டை புகும் அளவிற்கு முனையில் துளை (பொரிக்கப்பட்ட பட்டாணி கொள்ளும் அளவு எனச் சிலர்) இருக்க வேண்டும். எல்லா வஸ்தி களையும் கட்டுவதற்குக் கர்ணிகைகள் இருக்க வேண்டும். இவற் றில் பன்னிரண்டு அஞ்சலி அளவுள்ள ஆஸ்தாபன வஸ்தி மருந்து இருக்க வேண்டும். எழுபது ஆண்டுகளுக்கு மேலானவர்களுக்கும் வஸ்தி இயந்திரத்தின் அளவு இதுவேயாகும். ஆனால் மருந்தின் அளவு மட்டும் பதினாறு ஆண்டுகள் உரியவர்களுக்குக் கூறப்பட்ட அளவில் கொள்ள வேண்டும்.. 9

### சிறுவர் மற்றும் முதியவர்களுக்கான வஸ்தியின் சிறப்பு

சிறுவர் மற்றும் முதியவர்களுக்குச் சிறப்பான முறையில் மென்மையான வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் இந்த நிலையில் வஸ்தி முறை உடல் வலிமையையும், ஆயுளை யும் குறைக்கும். 10

### 5. விரணநேத்ர இலக்கணம்

விரணத்திற்குப் பயன்படுத்தத்தக்க இயந்திரம் எட்டு அங்குல நீளமுடன் பயற்றின் தோற்றத்தில் இருக்க வேண்டும். விரணத்தை ஆராய்ந்து தோஷத்திற்கு ஏற்ற கஷாயத்தைப் பயன்படுத்த வேண்டும். 11

### 6. வஸ்தி இயந்திரத்திற்குத் தக்க உலோகம் முதலியன

வஸ்தியந்திரம் தங்கம், வெள்ளி, செப்பு, இரும்பு, பித்தளை, யானைத்தந்தம், கொம்பு, ஸ்படிகம், மரத்தின் வைரம் பாய்ந்த பகுதி ஆகிய பல பொருட்களால் செய்யத்தக்கதாகும். வஸ்தி அடர்த்தியும், கெட்டித்தன்மையும் கொண்டு, பசு வாலின் தோற்றத்தில் நேராக வட்ட முகத்துடன் இருக்க வேண்டும். 12

### 7. வஸ்திக்கு (இயந்திரத்தில் மருந்து நிரப்பும் பை) உரிய பொருள்கள்

வஸ்தி முறையில் மருந்து நிரப்புவதற்கான வஸ்தி எனப்படும் பை பசு, எருமை, பன்றி, ஆடு முதலியவற்றின் சிறுநீரகத்தால் செய்யப்படவேண்டும். மென்மையும், மிக்க பருமனுமல்லாமல் திடமாகவும், அளவுக்கு ஏற்றவாறும் இருக்க வேண்டும். 13

வஸ்தியின் நேத்ரத்தை (குழாய் போன்ற உறுப்பு) மூங்கில், என்பு முதலியவற்றால் செய்வது நலம். வஸ்திக்குரிய பொருள் கிடைக்காவிடில் மெல்லிய தோல் அல்லது திடமான ஆடை ஆகியவற்றைப் பயன்படுத்தலாம். 14

### 8. வஸ்தியைச் செய்யும் முறை

இரத்தம், புலால் முதலியவற்றை நீக்கி நன்கு தூய்மைப் படுத்தப்பட்டதும், மென்மையானதும், பெரிதாகவோ சிறிதாகவோ இல்லாததும், பலமுறை எண்ணெய் பூசித் தேய்க்கப்பட்டதும், அகன்ற முகம் கொண்டு கீழ் முகமாக உள்ளதுமான வஸ்தியை நேத்திரத்தின் (குழாய் போன்ற உறுப்பின்) அடிப்பகுதியில் வைத்துக் கட்ட வேண்டும். பிறகு நன்கு சூடாக்கப்பட்ட இரும்புக் கம்பியால் தோலின் துளையைச் சுட வேண்டும். 15-16

வஸ்தியைக் கீழ் மேலாகத் திருப்பிக் கட்டி பாதுகாப்பாக வைத்திருக்க வேண்டும். இதைகொண்டு முறைப்படி ஆஸ்தாபன (நிரூஹ) வஸ்தியையும், எண்ணெய் வஸ்தியையும் பயனபடுத்த வேண்டும். 17

## 9. வ வகைகள்

(1) நிரூஹம (2) ஸ்நைஹிகம் என வஸ்தி இரு வகைபபடும். நிரூஹம் என்பதும், ஆஸ்தாபனம் என்பதும் ஒன்றே. மாது தைலிக வஸ்தியும் இதன் வகையே யாபனம், யுக்தரதம், ஸித்த வஸ்தி என்பன இதன் வேறு பெயர்களாகும். தோஷங்களை வெளியேற்றி உடலைப பிளப்பதால் இது நிரூஹவஸ்தி எனப் பெயர் பெற்றது. வயஸ்தை (வலிமையை) நிலைபெறச் செய்வதாலும ஆயுளை திடப்படுத்துவதாலும் இது ஆஸ்தாபன வஸ்தி எனப் பெயர் பெற்றது. மாதுதைலிகம் எனும் (தேனும் எண்ணெயும் கலந்த) வஸ்தி முறை நிரூஹகிரம சிகித்ஸிதம் எனும் அத்தியாயத்தில் விளககப்பட்டது. தன்னளவு, தன்மைகளுக்கு ஏறப ஆஸ்தாபனத்தில் நான்கில் ஒரு பஙகு கொண்ட அநுவாஸன வஸ்தி என்பது எண்ணெய் வஸ்தியில் ஒருவகையாகும். உடலில் தங்கியிருநத பிறகும் கேடுறாமல் நாள் தோறும் பயன்படுத்தத் தக்கதுமான வஸ்தி அநுவாஸன வஸ்தி எனப்படும். இந்த அநுவாஸன வஸ்தியில் மற்றொரு வகை மாத்ராவஸ்தி எனப்படும். இது ஒன்றரை பலம் அளவு கொண்டதும், எத்தகைய துன்பமும் விளைவிக்காததுமாகும். 18

## 10. தூய்மை பெற்ற உடம்பில் எண்ணெய் வஸ்தியின் தகுதி

நிரூஹவஸ்தி குடலைத் தூய்மைப்படுத்தும் தோஷங்களைத் கீறி வெளிப்படுத்தும், எண்ணெய் வஸ்தி உடலைச் செழிப்புறச் செய்யும். எத்தகைய குற்றமுமில்லாத (தடை) குழாயில் நீர் நன்கு ஊடுருவிச் செல்வது போல நிரூஹவஸ்தியால் தூய்மைபபடுத்தப் பட்டு எத்தகைய தோஷமும் தடையாக இல்லாத வழிகளில் எண்ணெய் நன்றாகப் பரவும். நிரூஹ மற்றும் அநுவாஸன வஸதிகள் எல்லா தோஷங்களையும் போக்கும். உடலைக் காக்கும் உயிராகும். அதனால் தூய்மை பெற்ற உடல் கொண்டவர்களுக்கே எண்ணெய் வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 19-20

## 11. வஸ்திகர்மாவுக்குத் தகாதவர்கள்

பைத்தியம், அச்சம், வருத்தம், நாவறட்சி, சுவையின்மை, அசீரணம், மூலநோய், பாண்டுநோய், தலைச்சுற்றல், வெறி, நினைவிழத்தல், வாந்தி, குட்டம், மேஹநோய், பெருவயிறு, உடற்பருமன், இருமல், இழுப்பு, தொண்டை உலர்ந்து போதல்,

வீக்கம், மார்பில் அடிபடுதல் ஆகியவற்றால் துன்புறுபவர்கள் மற்றும் உடல் இளைத்தவர், ஏழு மாதங்களான கரு கொண்ட மாது, சடராக்னியின் வலிமை மிகவும் குறைந்துள்ளவர், பொறுக்க இயலாத சிறுவர், முதியவர், வாதம் தவிர மற்ற காரணங்களால் உடல் இளைத்தவர் எனும் இத்தகையவர்களுக்கு அநுவாஸன மற்றும் நிரூஹம் எனும் வஸ்திகளைப் பயன்படுத்தக் கூடாது. 21

**12. ஆஸ்தாபன வஸ்தியை மட்டும் பயன்படுத்தத்தக்கவர்**

பெருவயிறு, நீரிழிவு, குட்டம் எனும் நோயால் துன்புறுபவர், உடல் பருத்தவர் ஆகியவர்களுக்கு அநுவாஸன வஸ்தியைத் தவறாமல் பயன்படுத்த வேண்டும். ஆனால் நிரூஹவஸ்தியைப் பயன்படுத்தக் கூடாது. 22

இந்த நோய்களால் துன்புறுகிறவர்களுக்கு அநுவாஸன வஸ்தி கொடுப்பதால் நோய் சிகிச்சைக்கு உட்படாததாகிவிடும். அந் நிலையிலும் உறுப்புகளில் துன்பத்தை மிகுதியாக்கும். 23

**13. வஸ்தியால் உடல் முழுவதும் தூய்மை பெறுதல்**

நல்ல முறையில் வஸ்தியைப் பயன்படுத்தினால் அது பக்குவாசயம், இடுப்புப்பகுதி, தொப்புள் பகுதிக்குக் கீழ் உள்ள உடல் பகுதிகளில் நான்கு பக்கங்களிலும் தங்கும். 24

பக்குவாசயத்திலிருந்து வஸ்தியின் திறமை சுரோதஸ்களின் வழியாக, வேர் உறிஞ்சும் நீர் மரத்தின் எல்லா உறுப்புகளிலும் பரவுவது போல எல்லாப் பகுதிகளிலும் பரவும். 25

அந்த வஸ்தியும் மலத்துடன் மட்டும் சேர்ந்து விரைவாக வெளிவந்துவிடும். ஆனால் அதன் வலிமை அபானம், உதானம், வியானம் முதலியவற்றின் வழியாக உடல் முழுவதும் பரவும். 26

வானத்திலிருக்கும் ஆதவன் நிலத்தில் உள்ள நீர்ப்ப( முழுவதையும் உறிஞ்சுவது போல பக்குவாசயத்தில் உள்ள வஸ்தி தன் திறமையால் தலை முதல் அடிவரை உள்ள தோஷங்கள் முழுவதையும் பற்றிக் கொள்ளும். 27

நன்றாகப் பயன்படுத்தப்பட்டவஸ்தி தன் வலிமையால் இடுப்பு, பின்தட்டு, குடல் ஆகிய பகுதிகளில் சேர்ந்த தோஷங் களை அசைத்து வேறுடன் பிடுங்கி வெளியேற்றும். 28

**14. வாதத்தின் சீற்றத்தைத் தணிப்பதில் வஸ்தியின் சிறப்பு**

மூன்று தோஷங்களையும் சீற்றமுறச் செய்வதில் தலையாயது வாதம். ஆகவே காற்றால் அலைக்கழிக்கப்பட்ட நீரின்

வேகத்தைத் தடுப்பதில் கடற்கரை எவ்வாறு வலிமை கொண் டுள்ளதோ அவ்வாறு உடலுக்குத் தீங்கு விளைவிப்பதாகிச் சீற்றமுற்ற வாயுவின் வேகத்தைத் தாங்குவதில் வஸ்தி, மற்ற முறைகளை விடச் சிறந்ததாகும். 29-30

நன்றாகப் பயன்படுத்தப்பட்ட வஸ்தி உடலைச் செழிப்புறச் செய்யும். நல்ல நிறத்தையும் வலிமையையும் தோற்றுவிக்கும். உடல் நலத்தை வளர்த்து ஆயுளை நீடிக்கச் செய்யும். 31

## 15. வஸ்தி முறையில் குறைபாடுகள்

வஸ்தி முறையில் (மருத்துவரின்) கவனக்குறைவால் நேரக் கூடிய குற்றங்களாவன (1) வஸ்தியின் நேத்ரம் அசைதல் (2) உள்ளே புகுந்ததும் வஸ்தி வளைதல் (3) வலது அல்லது இடது பக்கத்தை அழுத்துதல் (4) மிகவும் அதிகமாக மேல் நோக்கி எழும்புதல் (5) கீழ்நோக்கி அழுந்துதல் (6) கோணலாக உட்புகுதல் என இவ்வாறும் வஸ்தியைப் பயன்படுத்துவதில் நேரக்கூடிய குற்றங்களாகும். (1) மிகப்பருமனாக இருத்தல் (2) சுரசுரப்பாக இருத்தல் (3) கீழ்நோக்கி வளைந்திருத்தல் (4) பரமாணுக்கள் வேறுபடுதல் (5) கர்ணிகை நெருங்கி இருத்தல் (6) கர்ணிகை தொலைவில் இருத்தல் (7) துளை மிகச் சிறியதாக இருத்தல் (8) துளை பெரியதாக இருத்தல் (9) வஸ்திகருவி நீளமாக இருத்தல் (10) குறுகியிருத்தல் (11) விளிம்பு கொண்டிருத்தல் எனும் இப்பதினொன்றும் நேத்திரத்தின் குற்றங் களாகும். (1) புலாலுடன் கூடியிருத்தல் (2) சிறியதாகி இருத்தல் (3) துளையுடன் கூடி இருத்தல் (4) வலைபோலப் பின்னிக் கொண்டுள்ள நரம்புகளுடன் இருத்தல் (5) நன்றாகக் கட்டப் படாமை எனும் இவ்வைந்தும் வஸ்திப் பையின் குற்றங்களாகும். (1) அதிக அளவு அழுத்துதல், (2) குறைந்த அளவில் அழுத்துதல் (3) அடிக்கடி அழுத்துதல் (4) அழுத்த வேண்டிய காலத்தை நீடித்தல் என்பன நான்கும் வஸ்திப் பையை அழுத்துவதில் நேரக்கூடிய குற்றங்களாகும். (1) எண்ணெய் பக்குவம் பெறாமை (2) அளவில் குறைதல் (3) அளவில் மிகுதல் (4) மிகவும் குளிர்ந்திருத்தல் (5) மிகுந்த வெப்பம் கொண்டிருத்தல் (6) மிகவும் தீக்ஷ்ணமாக இருத்தல் (7) மிகவும் மென்மையாக இருத்தல் (8) எண்ணெப்பசை மிகுதியாகக் கொண்டிருத்தல் (9) மிகவும் வறண்டிருத்தல் (10) மிகவும் அடர்த்தியாக இருத்தல் (11) மிகவும் நீர்த்தன்மை கொண்டிருத்தல் எனும் இப்பதினொன்றும் மருந்துப் பொருளின் குற்றங்களாகும். (1) தலையைத் தாழ வைத்துக் கொண்டிருத்தல் (2) தலையை உயர்த்திக் கொண்டிருத்தல்

(3) வயிற்றின் வலிமையைச் சாரந்து படுத்திருத்தல் (4) உடல் தூக்கிய நிலையில் படுத்திருத்தல் (5) உடலை முடங்கிக் கொண்டு படுத்திருத்தல் (6) உட்கார்ந்திருத்தல் (7) வலப்பக்கமாக ஒருக்களித்து படுத்திருத்தல் எனும் ஏழும் வஸ்திமுறையைப் பயன்படுத்தும் போது நோயாளி படுத்திருக்கும் நிலையைச் சார்ந்த குற்றங்களாகும். மேலே கூறிய இருபத்திநான்கு குற்றங்களும் மருத்துவரின் கவனக்குறைவால் ஏற்படக்கூடியவை. நோயாளியால் ஏற்படக்கூடிய பதினைந்து வகை துன்பங்கள் 'ஆதுரோபத்ரவ சிகித்ஸிதம்' எனும் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன.

(1) மூன்று தோஷங்களின் காரணம் (2) உணவினால் அழுத்தப்படுதல் (3) மலத்துடன் கலந்து விடுதல் (4) தொலைவில் புகுந்து கொள்ளுதல் (5) வியர்க்கச் செய்யாமல் பயன் படுத்துதல் (6) குளுமையாக இருத்தல் (7) உணவு உட் கொள்ளமை (8) குறைந்த அளவு உணவு உட்கொள்ளுதல் எனும் இந்த எட்டு காரணங்களால் தடுக்கப்பட்ட எண்ணெய் திரும்ப வெளிவருவதில்லை. இந்த எட்டு குற்றங்கள் மருத்துவர் மற்றும் நோயாளியால் விளைபவையாகும். (1) இரு வஸ்திகளையும் பயன்படுத்தாமை (2) ஆத்மானம் (3) பரிகர்த்திகா (4) பரிஸ்ராவம் (5) பிரவாஹிகா (6) ஹ்ருதயோபஸரணம் (7) அங்க பிரக்ரஹம் (8) அதியோகம் (9) ஜீவாதானம் எனும் இந்த ஒன்பது வகைகளும் மருத்துவரால் ஏற்படக்கூடிய குற்றங் களாகும். 32

)வ்வாறு முப்பத்திரண்டு குற்றங்கள் கூறப்பட்டன. முதலில் இவற்றின் இலக்கணங்களும் மற்றும் இவற்றிற்குச் சிகிச்சை முறைகளும் இனி விளக்கப்படும். 33

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**நேத்ரவஸ்தி பிரமாண பிரவிபாக சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

## முப்பத்தாறாம் அத்தியாயம்

## * நேத்ரவஸ்தி வியாபத் சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி வஸ்தி முறையை தவறிப் பயன்படுத்துவதால் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. நேத்ரம் அசைவதற்குச் சிகிச்சை

வஸ்தியைப் பயன்படுத்தும் போது இயந்திரம் அசைவதாலும் ஆஸனவாய் உள்ளே புகுந்ததும் மடங்குவதாலும் ஆஸனவாயில் காயமும், வலியும் தோன்றும். அதற்கு காயம்பட்டதும் செய்யத் தக்கவையாகக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பின்பற்ற வேண்டும். 3

### 2. நேத்ரம் மேல் நோக்கி எழும்புவதாலும், கீழ்நோக்கி அழுந்துவதாலும் தோன்றும் துன்பங்களுக்கு சிகிச்சை

நேத்ரம் மேல் நோக்கி எழும்பினாலும் கீழ்நோக்கி அழுந்தினாலும் ஆஸனவாயில் வலி தோன்றும். இதற்குப் பித்தத்தைத் தணிக்கும் சிகிச்சை முறைகளைப் பயன்படுத்துவதுடன் அப் பகுதியில் எண்ணெயை ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். அதாவது எண்ணெயால் அப்பகுதியை நனைக்க வேண்டும். 4

### 3. நேத்ரம் கோணலாகப் புகுவதனால் துன்பம்

நேத்ரம் குறுக்காக புகுந்தால் இரு பக்கங்களையும் அழுத்தும். அதையொட்டி நேத்ரத்தின் அடிப்பகுதி தடுக்கப்படுவதால் வஸ்தி முறை நன்கு செயல்படாது. அதனால் மருத்துவர் திறமையுடன் அதை நேராக பயன்படுத்த வேண்டும். 5

வஸ்தி இயந்திரம் பருமனாகவோ சுரசுரப்புடன் கூடியதாகவோ விளிம்புகளைக் கொண்டதாகவோ இருந்தால் அதைப் பயன்படுத்துவதால் ஆஸனவாயில் உராய்வு ஏற்படும். அதனால் விரணமும், துன்பமும் தோன்றும். இதற்கு முன்போல

---

* நேத்ரவஸ்திவியாபத் - நேத்ரவஸ்தியைத் தவறான முறையில் பயன்படுத்துவதால் தோன்றும் துன்பம். அத்தகைய துன்பங்களுக்கு உரிய சிகிச்சைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் நேத்ரவஸ்தி வியாபத் சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

பட்ட உடல் செய்யத் தக்கதாகக் கூறப்பட்ட சிகிச்சையைக் கையாள வேண்டும். 6

**4. வஸ்தி கர்ணிகை அருகில் இருத்தலுக்குச் சிகிச்சை**

வஸ்தியந்தின் அடிப்பகுதி கர்ணிகை மிக அருகில் இருந்தாலும், பரமாணுக்கள் வேறு பட்டிருந்தாலும் வஸ்தி முறையைப் பயன்படுத்துதல் வீணாகி விடும். ஏனெனில் அத்தகைய வஸ்தியிலிருந்து மருந்து ஒழுகி விடும். ஆகவே இத்தகைய வஸ்தி இயந்திரங்களைக் கைவிட வேண்டும். 7

**5. கர்ணிகை தொலைவில் இருப்பதால் தோன்றும் துன்பத்திற்கு சிகிச்சை**

கர்ணிகை நேத்திரத்தின் அடிப்பகுதியிலிருந்து மூன்று அங்குலம் தாண்டி நான்கு அங்குலம் தொலைவில் இருந்தால் ஆஸனவாய் மர்மத்தை துன்புறுத்தும். அதனால் இரத்தப்பெருக்கு தோன்றும். இந்தத் துன்பத்திற்குப் பித்தத்தைத் தணிக்கும் முறை களைக் கையாள வேண்டும். பிச்சாவஸ்தி முறையைப் பயன் படுத்த வேண்டும். 8

**6. துளை சரியான அளவில் இல்லாத வஸ்தியால் நேரும் துன்பத்திற்குச் சிகிச்சை**

அளவு சீராக இல்லாத மற்றும் துளை மிகச் சிறியதாக உள்ள வஸ்தியைப் பயன்படுத்தினால் துன்பம் உண்டாகும். மருந்தும் பயனற்றுப்போகும். மருந்து பின் நோக்கி வருவதால் சிறு நீரகத்தைத் துன்புறுத்தும். நீர்ச்சுருக்கு, சிறுநீர்தடை போன்ற நோய்கள் தோன்றும். 9

**7. மிகவும் நீளமான அல்லது பெருந்துளை கொண்ட வஸ்தியால் நேரும் துன்பம்**

மிகவும் நீளமான அல்லது மிகப்பெரிய துளை கொண்ட வஸ்தி இயந்திரத்தைப் பயன்படுத்துவதால் வஸ்தி அழுந்துவதால் தோன்றும் துன்பங்கள் உண்டாகும். வஸ்திப்பை நரம்புகளுடன் கூடியிருந்தால் மிகப்பருமனாக இருப்பதால் தோன்றும் துன் பங்கள் விளையும். 10

**8. வஸ்தி சிறியதாக இருப்பதால் நேரும் விளைவு**

வஸ்தி இயந்திரம் சிறியதாக இருந்தால் மருந்து அளவில் குறைந்து உள்ளே செல்லும். அதனால் பயன் குறையும். வஸ்தியைச் சரியாக இணைக்காமல் இருந்தால் அல்லது வஸ்தி

இயந்திரத்தில் விரிசல் இருந்தால் இயந்திரம் உடைந்து போனால் தோன்றும் இலக்கணங்கள் உண்டாகும். 11

### 9. வஸ்தி அழுந்துவதால் தோன்றும் துன்பத்திற்குச் சிகிச்சை

அளவுக்கு மீறி உள்நோக்கி அழுத்தி வஸ்தியைப் பயன் படுத்துவதால் ஆமாசயத்துக்குள் புகுந்துவிடும். அதனால் வாயு வினால் தூண்டிவிடப்பட்டு வஸ்தி மருந்து மூக்கு அல்லது வாய் வழியாக வெளிவரும். இந்நிலையில் விரைவாக நோயாளியின் தொண்டையை அழுத்துதல் அல்லது தலை முடியைப் பிடித்துக் கொண்டு தலையை அசைத்து விடுதல் என்பதான சிகிச்சை செய்ய வேண்டும். தீக்ஷ்ணமான சிரோவிரேசனம் மற்றும் காய விரேசனம், குளிர்ந்த பொருள்களால் உடலை நனைத்தல் போன்ற சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 12-13

வஸ்தியை மெல்ல அழுத்துவதால் அது பக்குவாசயத்தை அடையாது. தூய்மைப்படுத்தும் செயலையும் சரிவரச் செய் யாது. அதனால் தகுந்த அளவு வஸ்தியை அழுத்திப் பயன்படுத்த வேண்டும். 14

அடிக்கடி வஸ்தியை அழுத்துவதால் வயிற்றில் வாயு அழுத் தப்படும். அதனால் ஆத்மானம், கொடியவலி ஆகியவை தோன் றும். இந்நிலையில் எத்தகையவருக்கு எந்த வகை வஸ்தி தகுமோ அதைப் பயன்படுத்த வேண்டும். 15

வஸ்தி மருந்தைச் செலுத்த வேண்டிய கால அளவுக்கு ஏறக் குறைய (கொடுக்க வேண்டிய காலத்தை விட விரைவாகவோ, அளவுக்கு மீறி தாமதமாகவோ) கொடுத்தால் நோயும் துன்பமும் விளையும். இந்நிலையில் நோயின் வலிமையைத் தணிக்கக் கூடிய வஸ்தியைப் மீண்டும் பயன்படுத்த வேண்டும். 16

### 10. வஸ்தி மருந்து பொருளின் குறைபாட்டால் தோன்றும் துன்பம்

வஸ்தி மருந்தில் பயன்படுத்த வேண்டிய எண்ணெய் சீராகப் பக்குவம் பெறாவிடில் ஆஸனவாய் பகுதியில் ஈஷிக்கொள்ளுதல், வீக்கம் என்பன தோன்றும். இந்நிலையில் சம்சோதன வஸ்தியையும், பேதியாகச் செய்யும் முறையையும் பயன்படுத்த வேண்டும். 17

வஸ்தி மருந்து அளவில் குறைந்திருந்தால் அது சீராகப் பயன்தராது. மருந்து அளவில் மிகுந்திருந்தால் ஆநாஹம், கிலமம், அதிஸாரம் என்பன தோன்றும். 18

மருந்து அளவில் குறைவாக எண்ணெய் வஸ்தி, நிரூஹவஸ்தி ஆகியவற்றைப் பயன்படுத்துவதால் சிறப்பான பயன் விளையாது. மருந்து அளவில் மிகுந்தால் ஆநாஹம், கிலமம், அதிஸாரம் எனும் நோய்கள் தோன்றும். 19

மிகவும் வெப்பம் கொண்ட மற்றும் தீக்ஷ்ணத் தன்மை கொண்ட வஸ்தியால் நினைவிழத்தல், அழற்சி, அதிஸாரம் ஆகியவை தோன்றும். பித்தம் சீற்றமுறும். குளுமைத்தன்மை கொண்ட மற்றும் மென்மையான வஸ்தியால் வாதம் தடுக்கப்படுதல் ஆத்மானம் போன்ற துன்பங்கள் தோன்றும். 20

வஸ்தியில் மருந்து அளவில் குறைவு போன்ற தோஷங்களில் அவற்றிற்கு எதிர் மாறான முறைகளைக் கையாளுதல் (அதாவது தோஷத்திற்கு காரணமானதற்கு எதிர் மாறாக செயல்படுதல்) நன்மை தரும். எடுத்துக்காட்டாக அடர்த்தியான மருந்துப் பொருள் ஆஸனவாய், வஸ்தி முதலியவற்றில் ஈஷிக்கொண்டு விடும். நீர்ப்பகுதி மிகுந்த வஸ்தி, தன்மையில் குறைந்து பிரவாஹிகை முதலிய தோஷங்களைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் அடர்த்தியான வஸ்தியாலான தோஷத்திற்கு தனுவஸ்தி அதாவது மருந்து நீர்ப்பகுதி மிகுந்திருக்கக் கொடுப்பதும், தனுவஸ்தியாலான தோஷத்திற்கு அடர்ந்த மருந்துப்பொருளால் வஸ்தி முறையைப் பின்பற்றுவதும் நலம் தரும். 21-22

எண்ணெய்ப்பசை மிகுந்த வஸ்தி கிலேதத்தையும், வறட்சி தன்மை கொண்ட வஸ்தி மரத்துப் போதல் ஆத்மானம் என்பன வற்றையும் தோற்றுவிக்கும். மிகுதியாக எண்ணெய்ப் பசை கொண்ட வஸ்தியில் தோஷத்திற்கு வறண்ட வஸ்தியும் வறண்டத் தன்மை கொண்ட வஸ்திக்கு எண்ணெய்ப்பசை மிகுந்த வஸ்தியும் பயன்படுத்தத்தக்கவை. 23

### 11. படுக்கை முதலியவற்றாலான தோஷங்களுக்குச் சிகிச்சை

வஸ்தியை பயன்படுத்தும் போது தலையைத் தாழ வைத்திருந்தால் மிகவும் அழுத்தமாக வஸ்தியை பயன்படுத்துவதாலான தோஷங்கள் தோன்றும். தலையை உயர்த்தி வைத்துக் கொண்டிருக்கும்போது வஸ்தி கொடுத்தால் அது ஆண்குறியை விரைக்கச் செய்யும். இந்நிலையில் நோயாளியை வியர்க்கச் செய்து சுகத்தைக் கொடுக்கும் உத்தர வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். முகத்தை கீழ்நோக்கி வைத்து படுத்திருக்கும் போது கொடுக்கப்பட்ட வஸ்தி தவறான வழியில் சென்று பக்குவாசயத்தை அடையாது. சீற்றம் பெற்ற வாயு இதயம், ஆஸனவாய், பக்கு

வாசயம் எனும் பகுதிகளைத் துன்புறுத்தும். மல்லாந்து படுத்திருக்கும் போது வழி தடைபட்டிருக்கும்படி வஸ்தி பயன்படுத்தப்படுவதால் மருந்து உள்ளே நன்கு பரவாது. 24-26

வஸ்தி இயந்திரம் அசைவதால் நோயாளியின் உடலில் அசைவுற்ற வாதம் வயிற்றில் சீற்றமடையும். இரு முழங்கால்களை நோயாளி மடக்கிக் கொண்டிருக்கும் போது அல்லது உடலை முடங்கிக் கொண்டிருக்கும் போது, வாயு நிறைந்ததாகி வஸ்தி மருந்து நன்கு வெளிவராது. உட்கார்ந்திருக்கும் நோயாளிக்கு வஸ்தி கொடுத்தால் செலுத்தப்பட்ட மருந்து மிக விரைவில் வெளிவந்து விடும். 27-28

வலது பக்கம் ஒருக்களித்து படுத்திருக்கும் நோயாளிக்கு வஸ்தி கொடுத்தால் மருந்து நன்கு பக்குவாசயத்தை அடையாது. ஏனெனில் பக்குவாசயம் இடது பக்கத்தில் உள்ளது. ஆகவே ஆசயம் சீராக நிறைவு பெறாது. அதனால் வஸ்தி வீணாகி விடும். முகத்தைக் கீழ்நோக்கியிருக்கும்போது வஸ்தி கொடுத்தால் வாயு சீற்றம் பெறும். அதற்குத் தக்க சிகிச்சை செய்ய வேண்டும். எண்ணெய் வஸ்தியில் தோன்றக்கூடிய குற்றங்களும் அவற்றிற் கான சிகிச்சை முறைகளும் வேறு பகுதியில் கூறப் பட்டுள்ளன. 29-31

வஸ்தி செயல்படாமை முதலிய தோஷங்களுக்குச் சிகிச்சை நோய்களுக்கு சிகிச்சை கூறுமிடத்தில் விளக்கப்பட்டுள்ளன. குளிர்ந்த மருந்து பொருள் குறைவாக உள்ள வஸ்தியைக் கொடுத் தால் மருந்து திரும்பிவராது. விஷ்டம்பம், ஆத்மானம் வலி முத லிய துன்பங்களைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் தீக்ஷ்ணமான வஸ்தி, தீக்ஷ்ண விரேசனமுறை ஆகியவை நலம் தரும். 32-33

அசீரணம் கொண்ட நிலையில், அல்லது உணவு உண்ட பிறகு தோஷங்கள் அதிக அளவில் இருக்கும்போது மிகுந்த அளவு உணவு உட்கொண்டிருக்கும் போது மிகவும் வெப்பம் கொண்ட மற்றும் மிகவும் மெல்ல கொடுக்கப்பட்ட வஸ்தி, அவ்வாறே அதிக அளவில் இருக்கும்போது மற்றும் மலம் மிகுந்துள்ள போது கொடுக்கப்பட்ட குளுமைத்தன்மை கொண்ட உப்பு, எண்ணெய்ப் பசையற்ற வஸ்தி ஆகியவை விரைவில் ஆத்மானம் என்பதைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் இதயம், இடுப்பு, விலா, பின்தட்டு முதலிய உறுப்புகளில் கொடிய வலி தோன்றும். இந்த நிலையில் மிகவும் தீக்ஷ்ணமான நிருஹவஸ்தி மற்றும் அநுவாஸன வஸ்தி ஆகியவற்றைப் பயன்படுத்துவது நலம் தரும். 34-36

மிகவும் தீக்ஷ்ணமானதும் அதிக அளவு உப்பு கொண்டதும் வறட்சித் தன்மையுடையதுமான வஸ்தியை பயன்படுத்துவதால் பித்தத்துடன் வாயுவும் சீற்றமடைந்து பரிகர்த்திகா என்பதை தோற்றுவிக்கும். இந்நிலையில் நோயாளியின் தொப்புள் சிறுநீர்ப்பை, ஆஸனவாய் முதலிய பகுதிகளில் கத்தரியால் கத்தரிப்பது போன்ற வலி தோன்றும். இதற்கு பிச்சா வஸ்தியையும், இனிப்புச் சுவை கொண்ட பொருள்களான எண்ணெய் வஸ்தியையும் பயன்படுத்துதல் நலம் தரும். 37-38

மிக்க புளிப்புத் தன்மையுள்ள உப்புடன் கூடிய ண வஸ்தி, பரிஸ்ராவம் என்பதை தோற்றுவிக்கும். இந்நிலையில் நோயாளி உடல் வலிமை, உறுப்புகளில் வலி, 'பித்தப் பெருக்கு முதலியவற்றாலும், ஆஸனவாயில் எரிச்சலாலும் துன்புறுவார். இதற்கு பிச்சாவஸ்தியும், பாலும் நெய்யும் கலந்த வஸ்தியும் பயன்படுத்தத்தக்கவை. 39-40

அநுவாஸன வஸ்தியுடன் தீக்ஷ்ணமான நிரூஹவஸ்தியைப் பயன்படுத்துவதால் பிரவாஹிகா (சீதபேதி) எனும் நோய் தோன்றும். இந்நிலையில் அழற்சி, வலி ஆகியவற்றுடன் கபமும் இரத்தமும் வெளியாகும். நோயாளிக்கு உட்காருவது மிகவும் துன்பம் விளைவிப்பதாகும். இந்நிலையில் பிச்சாவஸ்தியைப் பயன்படுத்திப் பாலுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். இனிப்புச் சுவையுள்ள கூட்டுப் பொருள்களாலான எண்ணெய் கலந்த அநுவாஸன வஸ்தி பயன்படுத்தத்தக்கதாகும். 41-42

வாயுவுடன் மிகவும் தீக்ஷ்ணமான நிரூஹவஸ்தி அல்லது அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்துவதால், மருந்து இதயத்தை அடைந்து உறுப்புகளில் துன்பத்தை விளைவிக்கும். தோஷங்கள் சீற்றமடைவதால் வெறி, நினைவிழத்தல், உடல் பளுவாதல் போன்ற வேறு துன்பங்களும், உறுப்பு பளுவாகத் தோன்றுதலும் உண்டாகும். இந்நிலையில் எல்லா தோஷங்களையும் போக்க வல்ல தூய்மைப்படுத்தும் வஸ்தி முறைகளைப் பின்பற்ற வேண்டும். 43-44

வறண்ட மிக்க வாதம் கொண்டதும் முறை தவறிப் படுத்திருக்கும் நோயாளிக்குக் கொடுக்கப்பட்டதுமான வஸ்தி, உறுப்புகளில் பிடிப்பு எனும் துன்பத்தை விளைவிக்கும். மென்மையும் அளவில் குறைந்துள்ளதுமான வறண்ட வஸ்தி உறுப்புகளில் வலி, மரத்துப்போதல், உடலை முறித்துக்கொள்ளுதல், நடுக்கம், இணைப்புகளில் உடைப்பது போல வலி முதலிய துன்பங்களைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் வியர்க்கச் செய்தல்,

எண்ணெய்க்குளியல், தக்க வஸ்திகளைப் பயன்படுத்துதல் எனும் முறைகளைக் கையாள வேண்டும். 45-46

மிகவும் வெப்பமுள்ள, மிகவும் தீக்ஷ்ணமான, அளவில் மிகுந்துள்ள மற்றும் அதிக அளவில் வியர்க்கச் செய்த அல்லது குறைந்த அளவில் தோஷங்கள் உள்ளவருக்குக் கொடுக்கப்பட்ட வஸ்தி மிகுதியாக செயல்படுதல் எனும் குற்றத்தை விளைவிக்கும். இந்நிலையில் அதிக அளவில் பேதியாகச் செய்வதால் தோன்றுவதைப்போல துன்பங்கள் விளையும். இதற்கு பிச்சாவஸ்தி தந்து குளிர்ச்சியூட்டும் பணிவிடைகளைச் செய்வித்தல் நலம் தரும். 47-48

அதிக அளவில் பேதியாகச் செய்வதைப் போல அதிக அளவில் செயல்படுத்தப்பட்ட வஸ்தியிலும் உயிரான இரத்தம் (ஜீவ இரத்தம்) வெளிவரும். இந்நிலையில் இரத்தம் கலந்துள்ள நீர்த்தன்மை மிகுந்த பிச்சாவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 49

)யால் ஏற்படக்கூடிய ஒன்பது வகையான துன்பங்களின் விளக்கம் கூறப்பட்டது. இவற்றைப் போலவே எண்ணெய் வஸ்தியிலும் நேரக்கூடிய தோஷங்களை ஊகம் செய்து உணர்ந்து கொள்க. 50

)வ்வாறு எல்லாத் துன்பங்களுக்கும் சிகிச்சை முறைகள் விளக்கப்பட்டுள்ளன. மருத்துவர் இந்த குற்றங்கள் நேராதபடி முயன்று சிகிச்சை புரிய வேண்டும். 51

### 12. நிரூஹண அல்லது அநுவாஸன வஸ்திக்கு உரிய காலம்

நன்றாக வாந்தி எடுக்கச் செய்த பிறகு பதினைந்து நாட்கள் கழித்துப் பேதியாகச் செய்யும் முறையைப் பயன்படுத்தி அதற்குப் பதினாறாவது நாளில் நிரூஹணவஸ்தியை கொடுக்க வேண்டும். நிரூஹணவஸ்தியைக் கொடுக்கும் போதே அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். ஆனால் பேதியாகும் முறையைப் பயன்படுத்திய பிறகு ஏழு நாட்கள் கழித்தபின் அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 52

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**நேத்ரவஸ்தி வியாபத் சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்தாறாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தேழாம் அத்தியாயம்
# * அநுவாஸனோத்தரவஸ்தி சிகித்ஸிதம்

இனி அநுவாஸனம், உத்தரம் எனும் இரண்டு வகை வஸ்திகளைக் கொண்டு சிகிச்சை செய்யும் முறையைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

### 1. பேதியாகச் செய்த பிறகு அநுவாஸன முறை

பேதியாகச் செய்யும் முறையைப் பின்பற்றிய ஏழு நாட்களுக்குப் பிறகு வலிமை பெற உணவு உட்கொண்டவருக்கு அநுவாஸன வஸ்தியைத் தர வேண்டும். 3

### 2. அநுவாஸன வஸ்தியின் அளவு

வயதுக்கு ஏற்றபடி நிரூஹவஸ்திக்குக் கூறிய அளவில் நான்கில் ஒரு பங்கு எண்ணெய் வஸ்திக்கு உரிய அளவாகும். 4

### 3. அநுவாஸனத்தைப் பயன்படுத்துவதற்கு முன் செய்ய வேண்டியவை

வாயு, மலம், சிறுநீர் ஆகியவற்றை நன்கு வெளியேற்றியவருக்கு அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். ஏனெனில் இம்மூன்றும் உடலில் தங்கியிருந்தால் வஸ்தியைத் தடுத்து உள்ளே செல்லவிடாமல் செய்யும். 5

தூய்மை பெறாதவருக்கு எண்ணெய் வஸ்தியைக் கொடுக்கக் கூடாது. தூய்மை பெற்ற உடலில் எண்ணெய் வஸ்தியைச் செலுத்தினால் அது உடலுக்கு வலிமை தரும். உடலில் நன்கு பரவும். 6

### 4. அநுவாஸனத்திற்கு உரிய எண்ணெய்

இனி நோயாளிக்கு உட்கொள்ளவும் அநுவாஸன வஸ்தியில் பயன்படுத்தவும் நசிய முறைக்கு ஏற்றதான நோய்களை அகற்றும் தன்மை கொண்டதுமான எண்ணெய் வகைகள் விளக்கப்படுகின்றன. 7

---

*அநுவாஸன, உத்தரவஸ்திகளைப் பயன்படுத்தும் முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் அநுவாஸனோத்தரவஸ்தி சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

பூலாங்கிழங்கு, புஷ்கரமூலம், திப்பிலி, மருக்காரை, தேவதாரு, சோம்பு, கோஷ்டம், அதிமதுரம், வசம்பு, வில்வம், கொடிவேலி ஆகியவற்றை அரைத்து எண்ணெயின் அளவிற்கு இரு மடங்கு பாலும், நான்கு மடங்கு நீரும் சேர்த்துப் பக்குவம் செய்த எண்ணெயை வஸ்தி சிகிச்சையில் பயன்படுத்த வேண்டும். இதைப் பயன்படுத்துவதால் முடங்கி கிடக்கும் வாயு கீழ் நோக்கிப் பரவும். மூலநோய், கிரகணி, ஆநாஹம், விஷக் காய்ச்சல், இடுப்பு, தொடை, பின்தட்டு, குடல் ஆகியவற்றில் தங்கியிருக்கும் வாதம் முதலான நோய்கள் தீரும். 8-10

வசம்பு, புஷ்கரமூலம், கோஷ்டம், ஏலக்காய், மருக்காரை, தேவதாரு, இந்துப்பு, காகோலி, க்ஷீரகாகோலி, அதிமதுரம், மேதா, மஹாமேதா, கொன்றை, வட்டத் திருப்பி, ஜீவகம், கீரைப்பாலை, பாரங்கி, சந்தனம், காயபலம், ஸரளம், அகில், வில்வம், நன்னாரி, அமுக்கராங்கிழங்கு, கொடிவேலி, வாயுவிடங்கம், கருஞ்சிவதை, வெண்சிவதை, திப்பிலி, ரித்தி என்பனவற்றை அரைத்து பால், பஞ்சமூல கஷாயம் ஆகியவற்றுடன் எண்ணெய்ப் பக்குவம் செய்ய வேண்டும். இந்த எண்ணெயை அநுவாஸன வஸ்தியில் பயன்படுத்துவதால் குன்மம், ஆநாஹம், சடராக்னி குறைவு, கிரகணி, சிறுநீர்த்தடை, வாத நோய் முதலியன நீங்கும். 11-14

## 5. அநுவாஸனத்திற்குச் சித்ரகாதி தைலம்

கொடிவேலி, அதிவிடயம், வட்டத்திருப்பி, நேர்வாளம், வில்வம், வசம்பு, சோம்பு, ஸரளம், மூவிலை, சித்தரத்தை, அவுரி, கொன்றை, செவியம், ஓமம், காகோலி, மேதா, மஹாமேதா, தேவதாரு, ஜீவகம், ரிஷபகம், சாரடை, அஜகந்தா, சாம்பரேணு, அமுக்கராங்கிழங்கு, மஞ்சிட்டி, பூலாங்கிழங்கு, புஷ்கரமூலம், சோரகம் என்பனவற்றை அரைத்துப் பாலுடன் எண்ணெய் பக்குவம் செய்க. இந்த எண்ணெய் வாத நோய்களைப் போக்கும். இதை வஸ்தி வழியே பயன்படுத்துவதால் கிருத்ரஸி, கஞ்சம், குரஜம், ஆட்யவாதம், உதாவர்த்தம் எனும் வாதநோய், சிறுநீர்த் தடை, சடராக்னிக்குறைவு முதலியவை தீரும். 15-18

## 6. அநுவாஸ்னத்திற்கு பூதிகாதி தைலம்

கத்திருணம், ஆமணக்கு, சாரடை, சித்தரத்தை, ஆடா தொடை, ரோஹிஷப்புல், பாரங்கி, தசமூலப்பொருள்கள், காட்டு உளுந்து, திப்பிலி மூலம், தேவதாரு, சிற்றாமுட்டி, நாகபலை, பெருங்குரும்பை, அமுக்கராங்கிழங்கு, சீந்தில்கொடி, கடுக்காய், தண்ணீர்விட்டான்கிழங்கு, சுக்கு, காகநாசம், குமிழன்,

யவதானியம், உளுந்து, அகத்தி, இலந்தை, கொள்ளு ஆகியவற்றின் கஷாயத்தில், ஜீவனீய கணக் கூட்டுப்பொருள்களின் விழுதைக் கலந்து நான்கு மடங்கு பால் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் வஸ்தியில் பயன்படுத்துவதால் முழங்கால், தொடை, திரிகம், விலா, தோள், புயம், தாடைப்பகுதி, தலை எனுமிவற்றில் தங்கியுள்ள வாதத்தாலான நோய்கள் போகும். 19-22

## 7. ஜீவந்தி முதலியவற்றாலான தைலம்

கீரைப்பாலை, பேராமுட்டி, மேதா, காகோலி, க்ஷீரகாகோலி, ஜீவகம், ரிஷபகம், அதிவிடயம், திப்பிலி, காகநாசம், வசம்பு, தேவதாரு, சித்தரத்தை, மருக்காரை, அதிமதுரம், ஸரளம், தண்ணீர்விட்டான்கிழங்கு, சந்தனம், தொட்டால் சுருங்கி விதை, பூலாங்கிழங்கு, கர்காடகசிருங்கி, மூவிலை, வெள்ளைநன்னாரி, கருநன்னாரி ஆகியவற்றை அரைத்து எட்டு மடங்கு பால் சேர்த்து எண்ணெய் அல்லது நெய் மருந்துப் பக்குவம் செய்து அநுவாஸன வஸ்தியில் பயன்படுத்த வேண்டும். இம்மருந்து விந்து, சடராக்னி, உடல் வலிமை ஆகியவற்றை வளர்க்கும். உடலைச் செழிப்புறச் செய்யும். வாதத்தைப் போக்கும். குன்மம், ஆநாஹம் எனும் நோய்களைத் தணிக்கும். மூக்கிலிடு மருந்தாகவும் உட்கொள்ளவும் இதைப் பயன்படுத்தினால் தோளுக்கு மேல் உள்ள உடற்பகுதியில் தோன்றும் நோய்களைத் தணிக்கும். 23-26

## 8. மதுகாதி தைலம்

அதிமதுரம், வெட்டிவேர், குமிழன், கடுகரோகிணி, ஆம்பல், சந்தனம், சிவதை, பதுமகம், பெருங்கோரைக்கிழங்கு, இந்திரயவம், அதிவிடயம், நன்னாரி ஆகியவற்றை அரைத்து நான்கில் ஒரு பங்கு எண்ணெய் கலந்து நெய் எட்டு மடங்கு பாலுடன் சேர்த்து எண்ணெய் தயார் செய்து நியக்ரோதாதி கூட்டுக்பொருளின் கஷாயத்துடன் வஸ்தியில் பயன்படுத்த வேண்டும். இதனால் அழற்சி, இரத்தப்பெருக்கு, அக்கி, வாதரத்தம், சீழ்க்கட்டி, இரத்தபித்தம், பித்தத்தால் தோன்றும் நோய்கள் தணியும். 27-29

## 9. அநுவாஸனத்திற்கு மிருணாளாதி தைலம்

தாமரைத்தண்டு, தாமரை, தாமரைக்கிழங்கு, வெள்ளை நன்னாரி, கருநன்னாரி, சிறுநாகப்பூ, வெண்சந்தனம், சிவப்புச் சந்தனம், நிலவேம்பு, தாமரைக்கொட்டை, கசேருகம், புடலை இலை, [illegible]

ஆகியவற்றை அரைத்துத் திருணபஞ்சமூலத்தின் கஷாயத்துடன் இருமடங்கு பால் சேர்த்து எண்ணெய் அல்லது நெய் பக்குவம் செய்க. இதை வஸ்தி, மூக்கிலிடு மருந்து, எண்ணெய் குளியல் எனும் முறைகளிலும் உட்கொள்ளச் செய்யவும் பயன்படுத்தலாம். மிருணாளாதி தைலம் எனப்படும் இதனால் பித்தத்தால் தோன்றும் நோய்கள் பல தணியும். 30-32

## 10. அநுவாஸனத்திற்குத் திரிபலாதி தைலம்

திரிபலை (கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய்) அதி விடயம், பெருங்குரும்பை, வெண்சிவதை, கொடிவேலி, ஆடா தொடை, வேம்பு, கொன்றை, வசம்பு, ஏழிலைப்பாலை, மஞ்சள், மரமஞ்சள், சீந்தில்கொடி, தும்ட்டி, திப்பிலி, கோஷ்டம், கடுகு, சுக்கு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு அரைத்து சுரஸாதி கணக்கூட்டுப் பொருள்களின் கஷாயம் கலந்து எண்ணெய் பக்குவம் செய்து உட்கொள்ளவும். எண்ணெய்க் குளியலுக்கும், வாயில் கொப்பளிக்கவும், மூக்கிலிடவும், வஸ்தியாகப் பயன் படுத்தவும் செய்தால் உடல் பருத்தல், சோம்பல், அரிப்பு முதலா னவையும், கபத்தால் தோன்றும் நோய்களும் தணியும். 33-35

## 11. அநுவாஸனத்திற்குப் பாடாதி தைலம்

வட்டத்திருப்பி, ஓமம், காகஜங்கா, திப்பிலி, யானைத் திப்பிலி, சுக்கு, வெண்சிவதை, அகில், மஞ்சள், சந்தனம், பாரங்கி, செவியம், தேவதாரு, மிளகு, ஏலக்காய், கடுக்காய், கடுகரோகிணி, பூலாங்கிழங்கு, கொடிவேலி, காயபலம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு அரைத்துக் கண்டகபஞ்சமூலம், வல்லீபஞ்ச மூலம் எனும் கூட்டுப்பொருள்களின் கஷாயம் இரு மடங்கு சேர்த்து எள் எண்ணெய் அல்லது ஆமணக்கு எண்ணெய் கலந்து எண்ணெய் பக்குவம் செய்க. அதை அநுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்தினால் கபத்தினால் தோன்றும் நோய்கள் அனைத்தும் நீங்கும். 36-38

## 12. அநுவாஸனவஸ்திக்கு வாயுவிடங்காதி தைலம்

வாயுவிடங்கம், நன்னாரி, இந்துப்பு, பூலாங்கிழங்கு, புஷ்கரமூலம், கொடிவேலி, காயபலம், அதிவிடயம், பாரங்கி, வசம்பு, கோஷ்டம், தேவதாரு, மேதா, மருக்காரை அதிமதுரம், கருஞ்சிவதை, நீர்வஞ்சி, சுக்கு, சோம்பு, அவுரி, சித்தரத்தை, மூவிலை, ஆடாதொடை, பர்ப்பாடகம், வில்வம், ஓமம், திப்பிலி, நேர்வாளம், செவியம், கொன்றை ஆகியவற்றை அரைத்து முஷ்ககாதிகணக்கூட்டுப்பொருள்களின் கஷாயத்துடன் அல்லது

ஆமணக்கு எண்ணெயுடன் பக்குவம் செய்க. அதை அநுவாஸன வஸ்தியாகப் பயன்படுத்தினால் மண்ணீரல் வீக்கம், உதாவர்த்தம், வாதரத்தம், குன்மம், ஆநாஹம், கபத்தால் தோன்றும் நோய்கள், நீரிழிவு (சர்க்கரை நோய்), மூலநோய் முதலியன விரைவில் நீங்கும். 39-42

## 13. வாதசீற்றத்தில் தூய்மை பெறாதவர்களுக்குச் சிகிச்சை

உடல் தூய்மை பெறாதவர்களுக்கு வாயு மிகவும் சீற்றமடைந்துள்ள போது பகலிலும் இரவிலும் எல்லா வேளைகளிலும் அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். 43

வறட்சியுடன் மிகவும் சீற்றமுற்றவாதம் கொண்ட நோயாளிக்கு இரண்டு மூன்று முறைகள் அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்தி, அவரது உடல் எண்ணெய்ப்பசை கொண்ட பிறகு நிரூஹவஸ்தியைக் கொடுக்க வேண்டும். 44

வாயுவினால் மட்டும் மிகவும் துன்புற்று வறண்ட உடல் கொண்டவருக்கும் சிகிச்சை முறையில் தேர்ச்சி பெற்ற மருத்துவர் எண்ணெய் மிகுந்துள்ள நிரூஹவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 45

வாதம் முதலிய தோஷங்களில் நிரூஹணவஸ்தியை நன்றாகப் பெற்ற நோயாளிக்கு முறையாக வில்வம், அதிமதுரம், மருக்காரை ஆகியவற்றாலான எண்ணெயால் அநுவாஸன வஸ்தி கொடுக்க வேண்டும். 46

## 14. 'ல் வஸ்தி விலக்குதல்

இரவு வேளைகளில் தோஷங்கள் தம் இருக்கை விட்டு மிகவும் சீற்றமுற்றிருக்கும். அந்நிலையில் வஸ்தியில் வலிமை கொண்டுள்ள எண்ணெய் ஆத்மானம், உடல்பளு, காய்ச்சல் என்பனவற்றைத் தோற்றுவிக்கும். 47

## 15. பகலில் வஸ்தி கொடுப்பதன் பயன்

பகலில் தோஷங்கள் தம் இருக்கையான உடற்பகுதியில் இருந்து கொண்டிருக்கும். மற்றும் சடராக்னி உணவுச்சாற்றுடன் கூடியிருக்கும். சுரோதஸ்களில் முகம் திறந்திருக்கும். இந்தக் காரணங்களால் உடலில் எண்ணெயின் சக்தி நன்கு பரவும். 48

## 16. நோயின் நிலைக்கேற்ப இரவில் வஸ்தி கொடுத்தல்

பித்தத்தின் சீற்றமும் கபம் மிகக் குறைந்தும் உள்ளபோது வெப்பம் மிகுந்த நாட்களில் வாதத்தால் துன்புறும் வறண்ட

உடல் கொண்ட நோயாளிக்கு இரவில் அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். 49

வெப்பம் மிகுந்துள்ள (கோடை) நாட்களில் அல்லது பித்தம் மிகவும் சீற்றம் கொண்டுள்ள போது பகல் வேளையில் அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்துவதால் அழற்சி முதலான துன்பங்கள் தோன்றும். அதனால் .மருத்துவர் மாலை வேளை (அந்திப் பொழுதில்) இம்முறையைப் பயன்படுத்த வேண்டும். 50

### 17. பருவகாலத்திற்கேற்ப அநுவாஸன வஸ்தியைப் பயன் படுத்துதல்

எண்ணெயைப் பருகும் முறையை விளக்கிய அத்தியா யத்தில் கூறப்பட்டுள்ள குற்றங்களை விலக்க நினைக்கும் மருத்துவர், குளிர்காலம், இளவேனில் எனும் பருவங்களில் பகலிலும், முதுவேனில் கார்ப்பருவம் மற்றும் கூதிர் பருவங்களில் பகலின் முடிவான அந்தி வேளையிலும் எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 51

### 18. வாதம் மிகுந்தபோது வஸ்திக்கு உரிய வேளை

வாதம் மிக அதிக அளவில் சீற்றமுற்றிருந்தால், பகலிலும் இரவிலும் உணவு செரிமானமடைந்த பிறகு மிகவும் துன்பம் தோன்றினால் உணவு உட்கொள்ளச் செய்து அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். 52

### 19. உணவு உட்கொள்ளாத நிலையில் வஸ்தியை விலக்குதல்

உணவு உட்கொள்ளாத நிலையில் எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்தக் கூடாது. ஏனெனில் உடல் தூய்மை பெற்று குடல் வெற்று நிலையில் இருப்பதால் எண்ணெய் மேல் நோக்கிப் பரவும். 53

### 20 உணவு உண்டபின் வஸ்தி கொடுத்தல்

நோயாளிக்கு உணவு தந்து கை ஈரம் உலராத நிலை யிலேயே எப்பொழுதும் அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் உணவு செரிமானமடைந்து கொண்டி ருக்கும் நிலையில் வஸ்திகொடுத்தால் அதனால் காய்ச்சல் உண்டாகும். 54

மிகுந்த அளவில் எண்ணெய் கொண்ட உணவை உட்கொள் ளச் செய்து அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்தக்கூடாது. ஏனெனில் இரு வழிகளிலும் உடலுக்குள் செலுத்தப்

பட்ட எண்ணெய் வெறியையும் நினைவிழத்தலையும் தோற்றுவிக்கும். 55

வறட்சித்தன்மை கொண்ட உணவு உட்கொள்வதால் வலிமையும் உடல் நிறமும் குறையும். அதனால் குறைந்த அளவு எண்ணெய் கொண்ட உணவை உட்கொள்ளச் செய்து அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். 56

யூஷம் எனும் கஞ்சி, பால், புலால் சாறு அல்லது நோய்க்கு ஏற்ற உணவை (ஸம்ஸர்ஜன முறைப்படி உட்கொள்ளப்படும் உணவு) நான்கில் ஒரு பங்கு அளவு உண்ணச் செய்து அநுவாஸன முறையைப் பின்பற்ற வேண்டும். 57

## 21. அநுவாஸன வஸ்தி கொடுக்க வேண்டிய முறை

அநுவாஸன வஸ்திக்கு உரியவரை முதலில் நன்கு எண்ணெய்க் குளியல் செய்ய வைத்து, மெல்ல மெல்ல வெந்நீரால் உடல் வியர்க்கச் செய்ய வேண்டும். பிறகு மருத்துவ நூலில் கூறப்பட்டுள்ளபடி உணவு உட்கொள்ளச் செய்து பிறகு எண்ணெய் வஸ்தியைக் கொடுக்க வேண்டும். இதன் (வஸ்தியைக் கொடுக்க வேண்டிய) முறை நிரூஹவஸ்தியைக் குறித்த அத்தியாயத்தில் கூறப்படுகிறது. 58-59

முறையாக எண்ணெய் வஸ்தி கொடுத்த பிறகு நோயாளியை உடல் உறுப்புகளைப் பரப்பிக் கொண்டு மல்லாந்து படுத்திருக்கச் செய்ய வேண்டும். நூறு எண்ணும் வரை அப்படியே இருக்கச் செய்தால் எண்ணெயின் வீரியம் உடல் முழுவதிலும் நன்கு பரவும். 60

நோயாளியின் உள்ளங்கை, உள்ளங்கால், பின்தட்டு ஆகிய பகுதிகளில் மருத்துவர் தன் உள்ளங்கையால் மூன்று மூன்று முறை தட்ட வேண்டும். பிறகு நோயாளி படுத்த நிலையிலேயே அவரைப் படுக்கையுடன் சேர்த்து மூன்று முறை மேல் நோக்கித் தூக்கிவிட வேண்டும். இவ்வாறு வஸ்தி முறையைப் பயன்படுத்திய பிறகு குறைந்த அளவில் சோர்வும், உரையாடலும் கொண்ட நிலையில் நோயாளியைத் தன் படுக்கையில் உறங்கி இருக்கச் செய்து சினம் முதலியவற்றைக் கொள்ளாமல் இருக்கச் செய்ய வேண்டும். 61-62

எண்ணெயுடன் இந்துப்பும், சோம்பும் கலந்து இளஞ்சூடுள்ள நிலையில் வஸ்தியைச் செலுத்தினால் அது சுகமாக தக்க நேரத்தில் வெளிவந்து விடும். 63

மிகுந்த சூடு, தீக்ஷ்ணத்தன்மை, வாயுவின் அழுத்தம் எனுமிவை உள்ளதாகி, வாதத்துடன் கூடிய அல்லது அதிக அளவில் கொடுக்கப்பட்ட வஸ்தி மருந்துடன் எண்ணெய் குருத்தன்மை காரணமாக பயன்படுத்திய உடனே ஒரே தடவையில் வெளிவந்து விடும். அவருக்கு இரண்டாவது முறை குறைந்த அளவில் வஸ்தி கொடுக்க வேண்டும். ஏனெனில் எண்ணெயைத் தடுக்காவிடில் உடலுக்கு எண்ணெய்ப்பசை உண்டாகாது. 64-65

## 22. எண்ணெயற்ற அல்லது அதிக அளவு எண்ணெய் கொண்ட வஸ்தியின் குற்றம்

எண்ணெயற்ற அநுவாஸன வஸ்தி வாயு, சிறுநீர், மலம் ஆகியவற்றை வெளிவராமல் தடுக்கும். எண்ணெய் அளவில் மிகுந்த வஸ்தி அழற்சி, சதசதப்பு, மற்றும் சீதபேதி என்பனவற்றைத் தோற்றுவிக்கும். 66

## 23. நன்கு பயன்படுத்தப்பட்ட அநுவாஸனத்தின் இலக்கணம்

உடலுக்குள் வஸ்தியில் செலுத்தப்பட்ட எண்ணெய் வாயு, மலம் ஆகியவற்றுடன் எத்தகைய துன்பமும் இன்றி விரைவாக வெளிவந்தால் அது நல்ல முறையில் பயன்படுத்தப்பட்ட வஸ்தி என்று அறிக. 67

சடராக்னி நன்கு தூண்டப்பட்டுள்ள நிலையில் எண்ணெய் வெளிவந்த பிறகு முன்பு உண்ட உணவு செரிமானமடைந்த பின் விருப்பமான உணவை இலேசான அளவில் உட்கொள்ளச் செய்க. காலையில் கொத்துமல்லிவிதை மற்றும் சுக்கு சேர்த்துக் காய்ச்சிய வெந்நீரை கொடுக்க வேண்டும். இதனால் அநுவாஸன வஸ்தியைப் பெற்றவரின் உடலில் சடராக்னி நன்கு தூண்டப்படும். உணவில் விருப்பமும் மிகும். 68-69

## 24. எண்ணெய் வஸ்தியின் சிறப்பு முறைகள்

மருத்துவர் எண்ணெய் வஸ்தியை இவ்வாறு முறைப்படி பயன்படுத்த வேண்டும். இம்முறையில் ஆறு, ஏழு, எட்டு அல்லது ஒன்பது வஸ்திகள் கொடுக்க வேண்டும். இவற்றின் இடையில் நிரூஹவஸ்தியையும் பயன்படுத்த வேண்டும். முதல் முறை கொடுக்கப்பட்ட எண்ணெய் வஸ்தி சிறுநீரகம் மற்றும் தொடை இடுக்குப்பகுதிகளை எண்ணெய் பசை கொள்ளச் செய்யும். 70-71

முறையாகக் கொடுக்கப்பட்ட இரண்டாவது வஸ்தி தோள், எலும்புகளுக்கு மேல் உள்ள உடற்பகுதியில் தங்கிய வாதத்தைத்

தணிக்கும். மூன்றாம் முறையாகக் கொடுக்கப்பட்ட வஸ்தி உடலில் வலிமையையும், பொலிவையும் தோற்றுவிக்கும். 72

நான்காம் முறை கொடுக்கப்பட்ட வஸ்தி உடலில் ரஸதாதுவையும், ஐந்தாவது இரத்தத்தையும், ஆறாவது புலாலையும், ஏழாவது கொழுப்பையும் கொடுத்து எண்ணெய்ப் பசை கொண்டவையாக்கும். எட்டாவது, ஒன்பதாவது வஸ்திகள் முறையாக என்பு மற்றும் மஜ்ஜை என்பனவற்றை எண்ணெய்ப்பசை கொண்டவையாக்கும். இவ்வாறு விந்துவைச் சார்ந்த தோஷங்களை நீக்கப் பதினெட்டு முறை வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 73-74

## 25. அநுவாஸனத்தின் பயன்

இவ்வாற முறையாகப் பதினெட்டு எண்ணெய் வஸ்தியும், பதினெட்டு நிரூஹவஸ்தியும் செய்வித்துக் கொண்டவர் யானையைப் போன்ற வலிவும், குதிரையைப் போல விரைவும், தேவதைகளைப் போலப் பொலிவும் கொண்டு முற்பிறவித் தீவினைகள் அகல நினைவாற்றல் மிக்கவராகி ஆயிரம் ஆண்டுகள் உயிர் வாழக் கூடியவராக விளங்குவார். 75-76

## 26. வஸ்தியை அதிக அளவில் செலுத்துவதன் விளைவு

எண்ணெய் வஸ்தி அல்லது நிரூஹவஸ்திகளை எந்த தடவையிலும் அளவுக்கு மீறிக் கொடுக்கக்கூடாது. எண்ணெய் வஸ்தி அளவுக்கு மீறினால் சடராக்னி குறைந்து போகும். துன்பமும் உண்டாகும். நிரூஹவஸ்தி அளவுக்கு மீறினால் வாதம் சீற்றம் பெறும். 77

ஆகவே நிரூஹத்திற்கு பிறகு அநுவாஸனமும், அநுவாஸனத்திற்கு பிறகு நிரூஹமும் என முறைப்படி பயன்படுத்த வேண்டும். இவ்வாறு முறையாகப் பயன்படுத்துவதால் பித்தமோ, கபமோ சீற்றம் பெறாது. வாதம் சீற்றமுறும் என்ற அச்சமும் நேராது. 78

## 27. எண்ணெய் வஸ்தியை நிலைமைக்கு ஏற்ப பயன்படுத்துதல்

வறட்சித் தன்மை கொண்ட மிகவும் வாத சீற்றமுள்ள நோயாளிக்கு நாள் தோறும் மற்றவர்களுக்கு சடராக்னி குறைவு பெறும் என்ற அச்சத்தால் மூன்றாவது நாளும் எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 79

வறட்சித்தன்மை கொண்டவருக்கு குறைந்த அளவில் நீண்டகாலம் வரை கொடுக்கப்பட்ட எண்ணெய் வஸ்தி கேடு விளைவிக்காது. அவ்வாறே எண்ணெய் பசை கொண்டவருக்குக் குறைந்த அளவில் கொடுக்கப்படும் நிரூஹவஸ்தி கேடு விளைவிக்காது. நன்மையை தரும். 80

### 28. குறைபாடுகளால் தோன்றும் துன்பங்கள்

இனி எண்ணெய் வஸ்தியின் குறைபாடுகளால் தோன்றக் கூடிய துன்பங்கள் விளக்கப்படுகின்றன. வலிமை மிக்க வாதம் முதலிய தோஷங்கள் குடலில் இருந்த போது அவை குறைந்த வலிமை கொண்ட எண்ணெயை எதிர்த்து வேறுவேறு துன்பங் களை விளைவிக்கும். எண்ணெயையும் வெளியேற விடாமல் தடுக்கும். 81-82

வாதத்தால் மறுக்கப்பட்ட எண்ணெயால் முகம் சிவத்தல், உடலை முறித்துக் கொள்ளுதல், வாதத்தால் தோன்றும் வேறு வேறு வேதனைகள், நடுக்கம், விஷக்காய்ச்சல் என்பன தோன்றும். 83

பித்தத்தால் எதிர்க்கப்பட்ட எண்ணெயால் முகத்தில் கடு கடுப்பு, அழற்சி, நாவறட்சி, காய்ச்சல், வியர்வை ஆகியவை தோன்றும். கண், சிறுநீர் மற்றும் உறுப்புகள் மஞ்சள் நிறம் கொள்ளும். 84

கபத்தால் எதிர்க்கப்பட்ட எண்ணெயால் வாயிலிருந்து உமிழ்நீர் பெருகுதல், வாயில் இனிப்பு, உடல் பளு, வாந்தி, மூச்சு விடுதல் சிரமமாதல், குளிர்காய்ச்சல், சுவையின்மை என்பன தோன்றும். 85

### 29. முன் கூறிய நோய்களுக்கு சிகிச்சை

தோஷங்கள் எண்ணெயை எதிர்த்தபோது தோஷங்களைத் தணிக்கக் கூடிய சிகிச்சை முறைகளை கையாள வேண்டும். 86

### 30. அதிக உணவு உட்கொண்டபின் வஸ்தியின் விளைவு

மிகுந்த அளவு உணவு உட்கொண்ட பிறகு உண்ட உண வால் எதிர்க்கப்பட்ட எண்ணெய் வெளிவராதபோது ஆமாசயத் தில் பளு, வலி, வாயுதடைபடுதல், இதயத்தில் வலி, முகத்தில் விரஸத்தன்மை, பெருமூச்சு, நினைவிழத்தல், தலைச்சுற்றல், சுவையின்மை என்பன தோன்றும். இந்நிலையில் பட்டினிகிடக்க செய்த பிறகு சடராக்னியைத் தூண்டிக்கூடிய முறைகளை பின் பற்ற வேண்டும். 87-88

### 31. தூய்மையற்ற உடல் கொண்டவருக்கு வஸ்தியால் விளைவு

பேதியாக செய்யும் முறை, நிரூஹவஸ்தி முதலியவற்றைப் பயன்படுத்தாத தூய்மையற்றவருக்கு எண்ணெய் வஸ்தி கொடுத் தால் அந்த எண்ணெய் மலத்துடன் கலந்து வெளிவராது.

அதனால் உறுப்புகளில் வலி, ஆத்மானம், மேல்மூச்சு வாங்குதல், குத்தல் வலி என்பன தோன்றும். பக்குவாசயம் பளுவாகத் தோன்றும். இந்த நிலையில் நிரூஹணம் மற்றும் தீக்ஷ்ண மருந்து களால் ஆன தீஷ்ணமான அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 89-90

## 32. எண்ணெய் வயிற்றுக்குள் செல்வதன் விளைவு

தூய்மை பெற்ற உடல் கொண்டவருக்கு எண்ணெய் வஸ்தி கொடுத்தால் அந்த எண்ணெய் வயிற்றில் புகுந்து விடுமானால் உடல் உறுப்புகளின் மேல் எண்ணெய் பிசுபிசுப்பு தோன்றும். புலன்களில் மலம் மிகும். சோர்வு, வாயில் எண்ணெய் மணம், இருமல், இழுப்பு, சுவையின்மை ஆகியவை தோன்றும். இந் நிலையில் அதிக அளவில் வஸ்தியை அழுத்தியதற்குக் கூறப் பட்ட சிகிச்சை முறைகளைக் கையாண்டு நிரூஹவஸ்தியைக் கொடுக்க வேண்டும். 91-92

## 33. உடல் வியர்க்கச் செய்யாமலும், தூய்மைப்படுத்தாமலும் குறைந்த அளவு எண்ணெய் வஸ்தி கொடுத்தலின் விளைவு

வியர்க்கச் செய்தல் வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய முறைகளைக் கையாளாமல் தூய்மையற்ற உடல் கொண்டவருக்கு அளவில் குறைவான குளிர்ச்சியும் மென்மையும் கொண்ட எண்ணெய் வஸ்தி கொடுத்தால் அந்த எண்ணெய் மீண்டும் வெளிவராது. அல்லது மெல்ல மெல்ல வெளிவரும். அதனால் மலக்கட்டு, உடல்பளு, ஆத்மானம், பக்கு வாசயத்தில் வலி என்பன தோன்றும். இந்நிலையில் விரைவாக ஆஸ்தாபனவஸ்தியுடன் அநுவாஸன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 93-94

## 34. குறைந்த அளவு உணவு கொண்டவருக்குக் குறைந்த அளவு எண்ணெயுள்ள வஸ்தி கொடுப்பதன் விளைவு

குறைந்த அளவு உணவு உட்கொண்டவருக்குக் குறைந்த அளவு எண்ணெய் வஸ்தி கொடுத்தால் எண்ணெய் மந்த குணமுள்ளதாகி வெளிவராமல் நின்றுவிடும். அதனால் கிலமம் உத்கிலேசம், மிகவும் மனக்கலக்கம் என்பன தோன்றும். 95

இந்நிலையில் தூய்மைப்படுத்தும் வஸ்தியான ஆஸ்தாபன வஸ்தி கொடுக்க வேண்டும். தூய்மைப்படுத்தும் வஸ்தியுடன் அநுவாஸன வஸ்தியும் நலம் தரும். 96

### 35. எண்ணெய் வஸ்தியில் எண்ணெய் வெளிவராததன் விளைவு

இரவு பகல் (இருபத்து நான்கு மணி) அளவுக்குள் வெளி வராத எண்ணெய் துன்பத்தை விளைவிக்காது. வஸ்தியின் பயனையும் தரக்கூடும். ஆனால் செரிமானமடைந்த எண்ணெய் மிகவும் குறைந்த அளவு பயன் தரும். 97

வறட்சியின் காரணமாக எண்ணெய் வஸ்தி வெளிவராமல் போனால் அல்லது குறைந்த அளவு வெளிவருமானால் அது துன்பம் விளைவிக்காது. ஆகையால் அந்நிலையில் மருத்துவர் அலட்சியமாக இருந்துவிட வேண்டும். (சிகிச்சை செய்ய வேண்டியதில்லை என்பதாம்) 98

ஓரிரவு பகலில் (24 மணிக்குள்) எண்ணெய் வெளி வராவிடில் தூய்மைப்படுத்தும் முறையைக் கையாண்டு வெளிப் படுத்த வேண்டும். எண்ணெய் வஸ்தி வெளிவராத போது மற்றொரு எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்தக்கூடாது. 99

இதுவரை வஸ்தி இலக்கணங்களும், சிகிச்சை முறைகளும் விளக்கப்பட்டன. இனி உத்தரவஸ்தி முறைகள் விளக்கப்படு கின்றன. 100

## உத்தரவஸ்தி முறைகள்

### 36. நேத்ரபிரமாணம் (கருவியின் அளவு)

உத்தரவஸ்தி நோயாளியின் விரல் அங்குல அளவில் பதி னான்கு அங்குல நீளமும், மல்லிகை மலர்க்காம்பு போன்ற முனையும், கடுகு நுழையக் கூடிய அளவுள்ள துளையும் கொண்டிருக்க வேண்டும். 101

### 37. உத்தரவஸ்திக்குரிய மருந்தின் அளவு

உத்தரவஸ்தியில் எண்ணெயில் உயர்ந்தபட்ச அளவு ஒரு பலமாகும். இருபத்தைந்து வயதுக்குள் உள்ளவர்களுக்கான மருந்தின் அளவைத் திறமை மிக்க மருத்துவர் தாமே தம் அறிவினால் அறிந்து கொண்டு செயல்படுத்த வேண்டும். 102

### 38. பெண்களுக்கு உரிய உத்தரவஸ்தியின் அளவு

ஆண்களுக்கு உரிய உத்தரவஸ்திக் கருவியில் கர்ணிகை நடுப்பகுதியில் இருக்க வேண்டும். பெண்களுக்கு நேத்திரத்தில் நான்கு அங்குல தொலைவில் இருக்க வேண்டும். சிறுநீர் வெளி வரும் வழி பயறு நுழையக்கூடிய அளவுள்ள துளையாக இருக்க

வேண்டும். கருவியின் நீளம் பத்து அங்குலம் இருக்க வேண்டும். 103

வேறு சில ஆசிரியர்கள் நேத்திரத்தின் அளவு ஆண் குறியைப் போல இருக்க வேண்டும் என்பர். பெண்களுக்கு பிள்ளைப்பேறு உண்டாகும் வழியில் நான்கு அங்குல நீளமுள்ள நேத்திரத்தை புகுத்த வேண்டும். மற்றும் சிறுநீர்பாதையில் இரண்டு அங்குல நீளநேத்திரத்தை புகுத்த வேண்டும். பன்னி ரண்டாண்டு வயதுக்குட்பட்ட கன்னிப்பெண்களுக்குக் கருவியை ஓரங்குலம் புகுத்த வேண்டும். அவரவர்களுடைய விரல் அங்குல அளவிற்கு ஏற்ப கருவி இருக்க வேண்டும் 104-105

## 39. பெண்களுக்கு உரிய உத்தரவஸ்தியில் எண்ணெயின் அளவு

பெண்களுக்கு அவர்களுடைய விரல் அடிப்பகுதியைப் போல ஒரு பிரஸ்ருதம் (அஞ்சலி அளவு - குவிந்த கை அளவு) இருக்க வேண்டும். மிக்க வலிமையான நோயில் எல்லா நிலைகளிலும் அந்த அளவே பயன்படுத்த வேண்டும். நடுத்தரமும் குறைந்த துமான வலிமையுள்ள நோய்களில் மருத்துவர் தன் அறிவாற்ற லால் மருந்தின் அளவை முடிவு செய்து கொள்ள வேண்டும். 106

## 40. உத்தரவஸ்திக்கு ஏற்ற வஸ்தி (மருந்து நிரப்பும் பை) அளவு

செம்மறி ஆடு, பன்றி ஆகியவற்றின் வஸ்தி (சிறுநீரகம்) இதற்கு ஏற்றவை. அவை கிடைக்காவிடில் பறவைகளின் கழுத்துப் பகுதி தோலைப் பயன்படுத்தலாம். 107

அதுவும் கிடைக்காதபோது மென்மையான தோலைப் பயன் படுத்தலாம். எண்ணெயாலும் வியர்க்கச் செய்தலாலும் நோயா ளியின் ஆசயத்தை (சிறுநீரகத்தை)த் தளர்ச்சி பெறச் செய்து அவருடைய சடராக்னி வலிமைக்கு ஏற்ற அளவு நெய், பால் கலந்த யவாகூ எனும் கஞ்சியை உட்கொள்ளச் செய்க. பிறகு அவரை முழங்கால் அளவு உயரமுள்ள பலகையில உட்காரச் செய்து இளஞ்சூடுள்ள எண்ணெய் வஸ்தியை (சிறு நீர்க் குண்டிகை) மேற்புறப்பகுதியில் தடவி நன்கு தேய்த்து விட வேண்டும். பிறகு அவரது ஆண்குறியை விறைக்கச் செய்து முதலில் சலாகை எனும் (உலோகக்குச்சியாலான) கருவியால் சிறுநீர் வழியறிந்து பிறகு நெய் தடவிய உத்தரவஸ்தி நேத்திரத்தை மெல்ல மெல்ல ஆறு அங்குல நீளம் வரை குறிக்குள் புகுத்த வேண்டும். 108-111

ஆசிரியர்கள் சிலர் ஆண்குறி அளவுக்கு வஸ்திநேத்திரத்தை உட்புகுத்த வேண்டுமென்கின்றனர். வஸ்தியை (மருந்துள்ள

பையை) அழுத்தி மருந்தை உட்செலுத்திய பிறகு மெல்ல நேத்திரத்தை வெளியே எடுத்துவிட வேண்டும். 112

அறிவாற்றலுள்ள மருத்துவர் நோயாளிக்கு தந்த எண்ணெய் வெளிவந்த பிறகு அந்நோயாளிக்கு மாலையில் பால், கஞ்சி அல்லது புலால் சாற்றுடன் உணவு ஆகியவற்றை கொள்ளும் அளவு பருகச் செய்க. 113

## 41. பெண்களுக்கு உத்தரவஸ்தி பயன்படுத்தும் முறை

முழங்கால்களை உயர்த்தி வைத்துக்கொண்டு படுத்த பெண்ணுக்கு மூன்று அல்லது நான்கு வஸ்திகளை இம்முறையில் உட்செலுத்த வேண்டும். 114

வஸ்தியைச் செலுத்தும் போது பெண் குறியை அழுத்தி மூன்று கர்ணிகைகள் உள்ள வஸ்தியை பெண்குறிவாயில் செலுத்தி மெல்ல மெல்ல வஸ்தியை அழுத்த வேண்டும். 115

## 42. பெண்களுக்கு உத்தரவஸ்தியில் கஷாயத்தின் அளவு

பெண்களுக்குக் கருப்பையை தூய்மைப்படுத்தும்போது எண்ணெயின் அளவு முன்பு கூறிய (உள்ளங்கை குவித்த) அளவுக்கு இரண்டு மடங்காகக் கொள்க. நிரூஹவஸ்தி மருந்து ஆண்களுக்கானால் ஒரு பிரஸ்ருதமும் (அஞ்சலி அளவு). பெண்களுக்கு இரண்டு பிரஸ்ருதமும் அளவெனக் கொள்க. 116

## 43. உத்தரவஸ்தியில் எண்ணெய் வெளிவராவிடில் அதை வெளிப்படுத்தும் முறை

பிள்ளை பெற்றவள் அல்லது பெறாதவள், பன்னிரண்டாண்டு வயதுக்குள் உள்ள கன்னி ஆகியவர்களுக்குத் தூய்மைப்படுத்துவதற்குக் கஷாயத்தின் அளவு, ஆண்களுக்குப் போல ஓர் அஞ்சலி அளவாகக் கொள்க. உத்தரவஸ்தியில் எண்ணெய் திரும்ப பரவாவிடில் மீண்டும் தூய்மைப்படுத்தும் மருந்துப் பொருள்களுடன் கூடியவஸ்தியைச் செலுத்த வேண்டும். அல்லது தூய்மைப்படுத்தும் மருந்துப்பொருள்களுடன் கூடிய வத்தியை ஆஸனவாய்க்குள் செலுத்த வேண்டும். 117-118

அல்லது அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் சிறுநீர்வாயில் ஏஷணி எனும் கருவியைப் புகுத்த வேண்டும் அல்லது தன் கை முஷ்டியின் முனையால் வலிமையுடன் தொப்புளுக்குக் கீழ்ப்பகுதியை அழுத்த வேண்டும். 119

கொன்றை இலை, இந்துப்பு ஆகியவற்றை நொச்சி சுரசம் அல்லது பசுவின் சிறுநீருடன் அரைத்து நோயாளியின்

ஆயுளுக்கு ஏற்பப் பயறு, ஏலக்காய், கடுகு அளவுள்ள வத்தியாகச் செய்து, மருந்து வெளிவருவதற்காக சலாகையின் துணையுடன் அவ்வத்தியைச் சிறுநீர் வழியில் புகுத்த வேண்டும். 120-121

அல்லது ஒற்றடை, கண்டங்கத்தரி, திப்பிலி, மருக்காரை, இந்துப்பு, சுக்கு ஆகியவற்றை காடி, பசுவின் சிறுநீர், கள் ஆகியவற்றுடன் அரைத்து அதனால் வத்தி செய்து பயன்படுத்த வேண்டும். எண்ணெயைக் கொண்ட உத்தரவஸ்தியை கொடுத்த பிறகு பின்தட்டில் தட்டுதல் முதலான செயல்களை அநுவாஸனத்திற்குக் கூறியபடி இதற்கும் செய்ய வேண்டும்.

வஸ்தியால் அவ்வழியில் எரிச்சல் தோன்றினால் சர்க்கரை, தேன் ஆகியவை கலந்த குளிர்ந்த அதிமதுரக்கஷாயத்தை வஸ்தி போலச் செலுத்த வேண்டும். அல்லது பாலுள்ள மரத்தின் குளிர்ந்த கஷாயத்தில் பால் கலந்து வஸ்தி வழியில் செலுத்த வேண்டும். 122-124

## 44. உத்தரவஸ்தியின் பயன்

நீரிழிவுக்குத் தவிர மற்ற கெட்ட விந்து, பெண்களுக்கு ருதுரத்தம் மிகுதியாதல், மாதவிடாய்ச் சிக்கல், சிறுநீர்த்தடை, நீர்ச்சுருக்கு, பெண்குறிநோய், மாயை (பிள்ளைப் பேற்றில்) உள்தங்கிவிடுதல், பெரும்பாடு, சர்க்கரை நோய், சிறுநீர்ப்பையில் கல்; தொடை இடுக்கு அல்லது ஆண்குறியில் வலி, மற்றும் சிறுநீரகத்தைச் சார்ந்த கொடிய நோய்கள் ஆகியவற்றை போக்க உத்தரவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 125-126

நன்கு செயல்படுத்தப்படும் உத்தரவஸ்தியின் இலக்கணம், உத்தரவஸ்தியின் குற்றங்கள், சிகிச்சை முதலியன எண்ணெய் வஸ்திக்குக் கூறியபடியே கொள்க. 127

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**அநுவாஸனோத்தரவஸ்தி சிகித்ஸிதம் எனும்**

**முப்பதேழாம் அத்தியாயம் முற்றும்.**

# முபபத்தெட்டாம் அத்தியாயம்
# * நிரூஹக்ரம சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி நிரூஹ (எண்ணெயற்ற கஷாய) வஸ்தியால் சிகிச்சை செய்யும் முறைகளை விளக்குவோம். 1-2

1. **நிரூஹவஸ்தி முறை**

அநுவாஸனவஸ்தியைப் பெற்றவருக்கு ஆஸ்தாபன அதாவது அநுவாஸன வஸ்தியைக் கொடுக்க வேண்டும். நன்றாக வியர்த்து எண்ணெயுடன் கூடிய உடல் கொண்டு மலமும் சிறுநீரும் க திருக்கும் மனிதரைக் காற்றோட்டம் இல்லாத புனித இல்ல ல நண்பகல் நேரத்தில் அடிப்பகுதியில் நன்கு பிடித்துக் கொள்ள இயல்வதாகி இடுப்புப்பகுதியில் நன்கு பரந்து தலையணை யில்லாது பரப்பப்பட்ட படுக்கை மேல் இடதுபக்கமாக ஒருக் களித்துப் படுக்கச் செய்ய வேண்டும். அந்நபரை வலது காலை மடக்கி இடது காலை நன்கு நீட்டிக் கொண்டிருக்கச் செய்க. பிறகு தெளிந்த மனத்துடன் நன்றாக உணவு செரிமானமடைந் தவராக உள்ள அவரை மௌனமாகத் தோள் பகுதியை உயர்த்தி வைத்துக் கொண்டு ஓய்வாக இருக்கச் செய்ய வேண்டும். மருத் துவர் தன் இடது கால் மேல் வஸ்தியை வைத்துக் கொண்டு வலதுகால் கட்டைவிரல் மற்றும் விரல்களால் வஸ்தி கர்ணிகையை மேல் நோக்கி எழுப்பி வைத்துக் கொண்டு இடது கை, சுண்டு விரல் மற்றும் மோதிர விரல்களால் வஸ்தி முகத்தின் அரைப் பகுதியை மூடிக்கொண்டு நடுவிரல் சுட்டுவிரல், கட்டை விரல் களால் வஸ்தி முகத்தைத் திறந்து, வலது கையால் வஸ்திக்குள் மருந்தை நிரப்ப வேண்டும். மருந்து நிரம்பிய முனைப்பகுதியில் இரண்டு மூன்று முறைகள் நூலைச் சுற்றிக் கட்ட வேண்டும். பிறகு வலது கையால் வஸ்தியை நேராகப் பிடித்துக் கொள்ள வேண்டும். இடது கை நடுவிரல் சுட்டு விரல்களால் நேத்தி ரத்தைப் பிடித்துக் கொண்டு கட்டை விரலால் வஸ்தி நேத்திரத்தின் வாயை மூடிக் கொண்டு அதன் முனையில் நெய்யைத் தடவ வேண்டும். சிகிச்சைபெறும் நபரின் ஆஸன வாய்ப் பகுதியிலும் நெய்யைப் பூசி முதுகுத் தண்டுக்குக் கீழாகக் கர்ணிகையை நேராக மேல் நோக்கி வைத்துக் கொண்டு நேத்திரத்தை உட்செலுத்த வேண்டும். 3

---

* நிரூஹவஸ்தி முறைகளால் சிகிச்சை செய்யும் வகையை விளக்குவதால் இந்த அத்தியாயம் நிரூஹக்ரமசிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

|டது கையால் வஸ்தியை பிடித்துக்கொண்டு வலது கையால் ஒரே அழுத்தத்தில் அல்லது விரைவாக அல்லது மெல்ல மெல்ல வஸ்தியை அழுத்த வேண்டும். 4

நேத்திரத்தை வெளியே எடுத்து வஸ்தி கொடுத்ததிலிருந்து முப்பது மாத்திரைகள் (கண்ணிமைக்கும்) அளவுள்ள நேரம் வரை காத்திருந்து பிறகு நோயாளியை எழுந்து நிற்கச் சொல்ல வேண்டும். வஸ்தி மருந்து வெளிவருவதற்காக நோயாளியைக் குந்திய நிலையில் உட்காரச் செய்ய வேண்டும். வஸ்தி மருந்து வெளி வருவதற்குரிய நேரம் இரண்டு நாழிகைகள் (48 நிமிஷங்கள்) ஆகும். 5

வஸ்தி முறையில் தேர்ச்சி பெற்ற மருத்துவர் நோயாளியின் நிலைக்கு ஏற்ப இரண்டு மூன்று அல்லது நான்கு முறைகள் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 6

### 2. நிரூஹவஸ்தியின் அளவு

நிரூஹவஸ்தியை நன்கு பயன்படுத்தப்பட்ட இலக்கணங்கள் காணப்பட்டவுடன் (வஸ்தியை) நிறுத்திவிட வேண்டும். மென்மையான உடல் கொண்டவர்களுக்குச் சிறப்பாக வஸ்தி மருந்தை குறைந்த அளவில் பயன்படுத்த வேண்டும்.

நிரூஹவஸ்தி மருந்து குறைந்த அளவில் இருந்தாலும் தவறில்லை. ஆனால் எக்காரணத்தைக் கொண்டும் அளவு மிகாமல் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். 7

### 3. நிரூஹவஸ்தி சீராகப் பயன்படுத்தப்படாததன் இலக்கணம்

வஸ்தியின் தன்மை குறைந்த அளவில் இருத்தல், வேகம் குறைவாக இருத்தல், மலமும் வாயுவும் குறைந்திருத்தல், சிறுநீரைச் சார்ந்த துன்பம், சுவையின்மை, ஜடத்தன்மை (சுறுசுறுப்பின்மை) ஆகியவை காணப்பட்டால் அவை நிரூஹவஸ்தியைச் சீராகப் பயன்படுத்தப்படாததன் இலக்கணங்கள் என அறிக. 8

### 4. அதிக அளவில் நிரூஹம் பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம்

|க அளவில் பேதியாவதன் இலக்கணங்கள் முன்பு கூறப்பட்டுள்ளன. அவையே நிரூஹவஸ்தியை அளவுக்கு மீறிப் பயன்படுத்திய போதும் காணப்படும் என்று அறிக. 9

### 5. நிரூஹவஸ்தி சீராகப் பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம்

முறையே மலம், பித்தம், கபம், வாயு என்பன வெளிவந்து உடல் இலேசாகத் தோன்றினால் அது நிரூஹவஸ்தியை நன்கு பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம் என்றறிக. 10-11

### 6. நிரூஹவஸ்தியைச் சீராகக் கொடுத்த பின் செய்ய வேண்டியவை

பிறகு குளிக்கச் செய்து உணவு உண்ணச் செய்க. பித்தம், கபம், வாதம் ஆகியவற்றுடன் கூடியவருக்கு முறையே பால், யூஷம், புலால்சாறு என்பனவற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். 12

வயிறு கொள்ளும் அளவில் நான்கில் ஒரு பங்கு அல்லது பாதி அளவு அல்லது குறைந்த அளவு உணவு உட்கொள்ளச் செய்க. இந்த உணவின் அளவு நோயாளியின் சடராக்னி வலிமை, உடலில் உள்ள தோஷங்கள் ஆகியவற்றிற்கு ஏற்ப இருக்க வேண்டும். 13

### 7. எண்ணெய் வஸ்தியின் தன்மை

அதற்குப் பிறகு தோஷத்திற்கு ஏற்றபடி எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். ஆஸ்தாபனம் மற்றும் எண்ணெய் வஸ்தியைச் சீரான முறையில் பயன்படுத்திய பிறகு புலன்களின் செயல்திறன் வளரும். மனம் தெளிவாகும். உடலில் எண்ணெய்ப்பசை உண்டாகும். நோயும் தணியும். 14

நிரூஹவஸ்தியைப் பயன்படுத்திய அன்று நோயாளியின் உடலில் வாயு சீற்றம் பெறும் என்ற அச்சம் தோன்றும். அதனால் புலால் சாற்றுடன் சோற்றை உண்ணச் செய்து அன்றே அநுவாஸன வஸ்தியையும் பயன்படுத்த வேண்டும். 15

பிறகு சடராக்னியின் வலிமை, வாயுவின் செயல்கள் ஆகியவற்றை அறிந்து கொண்டு உணவாலும் குடிநீராலும் தடைப்பட்ட குடலில் எண்ணெய் வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 16

இரண்டு நாழிகைகளுக்குள் (48 நிமிடம்) நிரூஹவஸ்தி வெளியே வராதபோது தூய்மைப்படுத்தும் மருந்துகள், யவக்ஷாரம், பசுவின் சிறுநீர், காடி ஆகியவற்றுடன் கூடிய தீக்ஷ்ணத்தன்மை கொண்ட நிரூஹத்தின் வழியாக அதை வெளியேற்ற வேண்டும். 17

### 8. வஸ்தி அதிக நேரம் தங்கியிருப்பதன் விளைவு

மாறான வழியில் செல்லும் வாயுவால் தடுக்கப்பட்ட நிரூஹம் வெகுகாலம் வரை தடைப்பட்டிருக்கும். அதனால் வலி, எந்தச் செயலிலும் மனம் ஈடுபடாமை, காய்ச்சல், ஆநாஹம் என்பன தோன்றும். அல்லது மரணமும் நேரலாம். 18

### 9. உணவு உட்கொண்டபின் ஆஸ்தாபனவஸ்தியை விலக்குதல்

உணவு உண்டவருக்கு ஆஸ்தாபன வஸ்தியைப் பயன்படுத்தக் கூடாது. ஏனெனில் அவ்வாறு கொடுத்தலால் காலரா, அச்சுறுத்தும் வகையில் வாந்தி என்பன தோன்றலாம். அல்லது எல்லா தோஷங்களையும் சீற்றமுறச் செய்யலாம். ஆகையால் நிரூஹவஸ்தியை உணவு உட்கொள்ளாதவருக்கே பயன்படுத்த வேண்டும். 19-20

### 10. உணவு செரிமானம் ஆனபின் நிரூஹவஸ்தியைப் பயன்படுத்தியதன் பயன்

உணவு செரிமானமடைந்தவருக்கு நிரூஹவஸ்தி கொடுத்தலால் அவரது குடலில் சூழப்பட்ட பொருளின்மையால் தோஷம் உணவால் கேடுறாமல் முழுவதும் எளிதாக வெளிவந்துவிடும். 21

ஆஸ்தாபன வஸ்தியால் வலிமை குறைந்த சடராக்னி, உண்ட உணவைச் சேராமல் (உணவைப் பக்குவப் படுத்தாமல்) இருந்துவிடும். ஆகையால் திறமைமிக்க மருத்துவர் உணவு உட்கொள்ளாதவ்ருக்கே ஆஸ்தாபன வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 22

### 11. நிலைமைக்கு ஏற்ப உணவு உட்கொண்டவருக்கும் வஸ்தியைப் பயன்படுத்துதல்

நோயாளியின் உடல் நிலையை அறிந்து மருத்துவர் கடும்வலி, ஆத்மானம் முதலிய நோய்களில் சிகிச்சை முறையால் மேல் வழியாகத் தோஷங்கள் தூய்மை கொள்ளாத போது உணவு உட்கொண்டவருக்கும், பலவர்த்தி முதலியவற்றால் நிரூஹவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். அதாவது நோயாளியின் உடல் நிலையை அறிந்து அதற்கு ஏற்ற சிகிச்சை முறையைப் பின்பற்றி நிரூஹவஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் மலம் வெளியேறிய பிறகு தோஷம் வலிமையற்றதாகி விடும். 23

### 12. நிரூஹவஸ்தியில் பயன்படுத்தத்தக்க பொருள்கள்

பால்வகைகள், புளிப்புச்சாறுகள், சிறுநீர், எண்ணெய், கஷாயம், புலால்சாறு, உப்பு, திரிபலை, தேன், சோம்பு, கடுகு, வசம்பு, ஏலக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, சித்தரத்தை, ஸரளமரம், தேவதாரு, மஞ்சள், பெருங்காயம், கோஷ்டம், தூய்மைப்படுத்தும் சிவதை முதலான பொருள்கள் மற்றும்

கடுகரோகிணி, சர்க்கரை, கோரைக் கிழங்கு, வெட்டிவேர், சந்தனம், பூலாங்கிழங்கு, மஞ்சிட்டி, மருக்காரை, சிவப்பு அரளி, திராயமாணா (பிராம்மி), ரஸாஞ்சனம், வில்வம், ஓமம், ஞாழல், துமட்டி, காகோலி, க்ஷீரகாகோலி, ஜீவகம், ரிஷபகம், மேதா, மகாமேதா, ரித்தி, விருத்தி, மதூலிகா எனும் புல் வகை ஆகியவற்றில் எத்தனை மூலிகைகள் கிடைக்கின்றனவோ அத்தனையையும் சேர்த்து நிரூஹவஸ்தியில் பயன்படுத்தலாம். 24-28

### 13. தோஷங்களுக்கு ஏற்பக் கஷாயத்தின் அளவு

உடல் நலம் பெற்றுள்ளவருக்கு கஷாயத்தில் நான்கு பங்கும் எண்ணெய் ஐந்தாவது பங்காககவும், வாதம் சீற்றமுற்றுள்ளபோது எண்ணெய் நான்கில் ஒரு பங்காகவும், பித்தம் சீற்றமுள்ள நிலையில் ஆறில் ஒரு பங்காகவும், கபம் சீற்றமுற்ற நிலையில் எட்டில் ஒரு பங்காகவும் கொள்க. 29

மூன்று தோஷங்களும் சீற்றமடைந்திருந்தால் விழுது எட்டில் ஒரு பங்கும், உப்பு, தேன், சிறுநீர், காய், பால், காடி, புலால்சாறு ஆகியவற்றை மருத்துவர் தன் அறிவாற்றலால் தக்க அளவு ஊகம் செய்து சேர்க்க வேண்டும். இனி நிரூஹவஸ்தி தயார் செய்யும் முறை கூறப்படுகிறது. 30-31

### 14. வஸ்திக்குப் பொருள்களைச் சேர்க்கும் முறை

அறிவாற்றல் மிக்க மருத்துவர் விழுது, எண்ணெய், கஷாயம் ஆகியவை வேறுபடுத்த முடியாமல் நன்றாகக் கலந்திருக்க வேண்டும் என்பர். இதைப் பயன்படுத்துவதால் வாதம், பித்தம், கபம், இரத்தம் ஆகியவற்றைத் தணித்தல், தூய்மைப்படுத்தல், ஸங்கிரகணம், லேகனம் பிரும்ஹணம், வாஜீகரணம் மற்றும் இரஸாயனம் ஆகியவற்றின் சிறந்த பலன்களை தரக்கூடும். 32

முதலில் இந்துப்பு ஒரு கர்ஷம் அளவு கொண்டு தேன் இரு பிரஸ்ருதம் அதாவது நான்கு பலம் அளவு சேர்த்து கையால் நன்றாக அலசிக் கலக்க வேண்டும். கலக்கும் போது சிறிது சிறிதாக தேனின் அளவுக்குச் சமமாக எண்ணெயையும் சேர்க்க வேண்டும். நன்கு கலந்த பிறகு மருக்காரை விழுதையும், வாதம் முதலான தோஷங்களைப் போக்கும் மருந்துப் பொருள்களையும் சேர்த்து அரைத்த விழுதை, அவற்றின் அளவுக்கு ஏற்ப (அந்தந்த நிலைக்கு கூறப்பட்ட அளவின்படி) சேர்க்க வேண்டும். 33-34

பிறகு வேறு பெரிய பாத்திரத்தில் சேர்த்து அதிக அடர்த்தியாகவோ நீராகவோ இல்லாமல் சரியான அளவில் இருக்கும்படி நன்றாகக் கடைய வேண்டும். 35

புலால்சாறு, பால், காடி, சிறுநீர் ஆகியவற்றை தோஷங்களின் நிலைக்கு ஏற்றவாறு கலக்க வேண்டும். வடிக்கட்டபட்ட கஷாயம் ஐந்து பிரஸ்ருதம் அளவு இத்துடன் சேர்க்க வேண்டும். 36

## 15. பன்னிரண்டு பிரஸ்ருத அளவு செய்யும் முறை

இனி பன்னிரண்டு பிரஸ்ருதம் அளவுள்ள மருந்தைத் தயார் செய்யும் முறை விளக்கப்படுகிறது. முதலில் ஒரு கர்ஷம் அளவு இந்துப்பைக்கொண்டு அதனுடன் நான்கு பலம் தேன் கலந்து இரண்டையும் நன்றாகக் கலக்க வேண்டும். பிறகு மூன்று பிரஸ்ருதம் அளவுள்ள எண்ணெயைச் சேர்க்க வேண்டும். அது நன்றாக கலந்த பிறகு ஒரு பிரஸ்ருதம் அளவு விழுது சேர்க்க வேண்டும். எல்லாப் பொருள்களும் நன்கு கலந்த பின் நான்கு பிரஸ்ருதம் அளவுள்ள கஷாயத்தைக் கலக்க வேண்டும். இவ்வாறு செய்யப்பட்ட வஸ்தி 12 பிரஸ்ருதம் அளவுள்ளதாகும். 37-39

உயர்ந்த அளவாகும். இதில் அளவு குறைக்க வேண்டியிருந்தால் ஒரு பிரஸ்ருதம் அளவு குறைத்துக் கொள்ளலாம். 40

வெற்றி பெற விரும்பும் மருத்துவர் இந்துப்பு முதலாகக் கஷாயம் வரை நிரூஹவஸ்திக்கு இந்த அளவில் வயதுக்கு ஏற்றவாறு கொள்ள வேண்டும். 41

## 16. வாதம் முதலிய தோஷங்களுக்கு ஏற்ற வஸ்தி

இனி அந்தந்த தோஷங்களுக்கு ஏற்ப தோன்றக்கூடிய நோய்களைத் தீர்க்கும் வகையில் வஸ்தி முறை கூறப்படுகிறது. 42

## 17. சம்பாகம் (கொன்றை) முதலியவைகளாலான ஆஸ்தாபன வஸ்தி

கொன்றை, ஆமணக்கு, சாரடை, அமுக்கராங்கிழங்கு, பூலாங் கிழங்கு, இலகுபஞ்சமூலம், சிற்றாமுட்டி, சித்தரத்தை, சீந்தில் கொடி, தேவதாரு ஆகியவற்றை ஒவ்வொரு பலமும், மருக்காரைச் காய் எட்டு (நான்குமருக்காரை ஒரு பலம் எடையாக) சேர்த்து மொத்தம் பதினாறு பலம் மருந்துப்பொருளைக் கஷாயமாகக் காய்ச்ச வேண்டும். பிறகு இதில் திப்பிலி, கோரைக்கிழங்கு, குரு வேர், சோம்பு, இந்துப்பு, துமட்டி, ஞாழல், அதிமதுரம், ரஸாஞ் சனம் ஆகியவற்றின் விழுதைக் கலந்து தேன் முதலியவையும் சேர்த்து இளஞ்சூடுள்ள நிலையில் ஆஸ்தாபன வஸ்தியாகப் பயன்படுத்துக. 43-45

)தைப் பயன்படுத்துவதால் பின்தட்டுகளிலும், தொடைகளிலும், இடுப்பிலும் தோன்றும் வலி, சிறுநீர்ப்பையில் கல், மலம், சிறுநீர், வாயு முதலியன தடைபடுதல், கிரகணி, வாதம், மூலநோய் எனுமிவை தணியும். உடலில் இரத்தம் மிகும். புலால், வலிமை ஆகியவை கூடும். 46

### 18. சீந்தில்கொடி முதலியவற்றாலான ஆஸ்தாபனம்

சீந்தில்கொடி, திரிபலை, சித்தரத்தை, தசமூலம், சிற்றாமுட்டி, புலால் ஆகியவற்றை கஷாயம் காய்ச்சி, ஞாழல், கோரைக்கிழங்கு, இந்துப்பு, சோம்பு, வசம்பு, திப்பிலி, ஓமம், கோஷ்டம், வில்வக்கதுப்பு, வெல்லம் ஆகியவை ஒவ்வொரு கர்ஷம், மருக்காரை, அரைப்பலம் வீதம் கொண்டு அரைத்துக் கஷாயத்துடன் சேர்க்க வேண்டும். பிறகு இவற்றில் தேன், எண்ணெய், நெய், பால், சுக்தம், காடி, மஸ்தி, பசுவின் சிறுநீர் ஆகியவற்றையும் கலந்து வஸ்தியாகப் பயன்படுத்துக. 47-49

இதைப் பயன்படுத்துவதால் உடற்பொலிவு, நிறம், வலிமை, ஊக்கம், திறமை, சடராக்னி, பிராணன் ஆகியவை வளரும். வாதநோய்கள் அனைத்தையும் இது போக்க வல்லதாகும். 50

### 19. தர்ப்பை முதலியவற்றாலான ஆஸ்தாபன வஸ்தி

திருணபஞ்சமூலம், கோரைக்கிழங்கு, திரிபலை, நீலாம்பல், ஆடாதொடை, நன்னாரி, வெட்டிவேர், மஞ்சிட்டி, சித்தரத்தை, பர்பாடகம், சிற்றீச்சை ஆகியவற்றை ஒவ்வொரு பலம் எனக் கொண்டு நன்கு கஷாயம் காய்ச்சி அதில் தொட்டால் சுருங்கி விதை, யானைத்திப்பிலி, சிறுநாகப்பூ, அகில், சந்தனம், முதுக்கன் கிழங்கு, சோம்பு, மஞ்சிட்டி, ஞாழல், துமட்டி, இந்துப்பு, மருக்காரை, பதுமகம், அதிமதூரம் ஆகியவற்றைக் கலந்து அதனுடன் தேன், பால், நெய் ஆகியவற்றையும் கலந்து குளிர வைத்துப் புளிப்புச் சுவைப் பொருள்களற்றதாகி புலால் சாறு, கருப்பஞ்சாறு முதலியவற்றுடன் கூடிய ஆஸ்தாபன வஸ்தியைப் பயன்படுத்துவதால் அழற்சி, இரத்தப் பெரும்பாடு, இரத்தபித்தம், பித்தத்தால் தோன்றும் குன்மம் காய்ச்சல் ஆகியவை தீரும். 51-54

### 20. பாச்சோத்தி முதலியவற்றாலான ஆஸ்தாபன வஸ்தி

பாச்சோத்தி, சந்தனம், மஞ்சிட்டி, சித்தரத்தை, சிற்றாமுட்டி, ரித்தி, நன்னாரி, ஆடாதொடை, குமிழன், மேதா, அதிமதுரம், பதுமகம், இலகு பஞ்சமூலம், திருணபஞ்சமூலம் ஆகியவற்றில் மும்மூன்று பலம் வீதம் கொண்டு கஷாயம் காய்ச்சுக. அதில் வகம், காகோலி, க்ஷீரகாகோலி, ரித்தி, அதிமதுரம், நீலாம்பல்,

பிரபௌண்டரீகம், கீரைப்பாலை, மேதா, பர்பாடகம், சிற்றீச்சை, தண்ணீர்விட்டான்கிழங்கு, சோம்பு, இந்துப்பு, தும்ட்டி, வெட்டி வேர், பதுமகம் எனுமிவற்றை அரைத்துக் கலந்து அதனுடன் சர்க்கரை, நெய், தேன், பால் ஆகியவற்றையும் கலந்து தீக்ஷ்ணத் தன்மையும் புளிப்புச்சுவையுமுள்ள பொருள்களற்ற குளிர்ந்த வஸ்தியைப் பயன்படுத்தினால் குன்மம், இரத்தப்பெரும்பாடு, இதயநோய், பாண்டுநோய், விஷக்காய்ச்சல், இரத்தாதிஸாரம், பித்தாதிஸாரம், மற்றும் பித்தத்தால் தோன்றும் நோய்கள் ஆகியவை தீரும். 55-59

## 21. காயபலம் முதலியவற்றாலான ஆஸ்தாபனம்

காயபலம், வேப்பம்பட்டை, கொள்ளு, எருக்கன், கசப்புப் பீர்க்கு, சீந்தில்கொடி, தேவதாரு, நன்னாரி, கண்டங்கத்தரி, வட்டத்திருப்பி, பெருங்குரும்பை, கொன்றை, தும்ட்டி ஆகிய வற்றின் கஷாயத்தில் வசம்பு, மருக்காரை, கடுகு, இந்துப்பு தேவதாரு, கோஷ்டம், ஏலக்காய், திப்பிலி, வில்வக்கதுப்பு, சுக்கு ஆகியவற்றின் விழுதைக் கலந்து அதனுடன் கடுதைலம், தேன், யவக்ஷாரம், பசுவின் சிறுநீர், எள் எண்ணெய், காடி ஆகியவற்றையும் கலந்து வஸ்தியாகப் பயன்படுத்துக. இதனால் காமாலை, பாண்டுநோய், நீரிழிவு, சடராக்னி குறை, கொழுப்பு மிகுதல், கப நோய்கள், உணவில் வெறுப்பு தோன்றுதல், கல கண்டம், இடுவிஷம், சோர்வு, யானைக்கால், பெருவயிறு முதலிய நோய்கள் தீரும். 60-63

## 22. தசமூலாதி ஆஸ்தாபனம்

தசமூலம், மஞ்சள், வில்வக்கதுப்பு, புடலை இலை, திரிபலை, தேவதாரு ஆகியவற்றைக் கொண்டு கஷாயம் காய்ச்சுக. அதில் கோரைக்கிழங்கு இந்துப்பு, மரமஞ்சள், வட்டத்திருப்பி, திப்பிலி, கொடிவேலி ஆகியவற்றின் விழுது சேர்த்து எள் எண்ணெய், யவக்ஷாரம், தேன் பசுவின் சிறுநீர், காடி, மருக்காரை ஆகிய வற்றை நன்றாகச் சேர்த்து வஸ்தியாகப் பயன்படுத்துக. இதனால் கபம், பாண்டுநோய், சோம்பல், சிறுநீர், வாதம் முதலியன தடைபடுதல், ஆமம், ஆடோபம், அபசி, கபத்தால் தோன்றும் குன்மம், கிருமிகளால் தோன்றும் நோய்கள் தீரும். 64-66

## 23. விருஷாதி (ஆடாதொடை முதலியவற்றாலான) ஆஸ்தாபனம்

ஆடாதொடை, கல்லூரர் வஞ்சி, சாரடை, கொத்துமல்லி விதை, ஆமணக்கு, தசமூலம், சிற்றாமுட்டி, பெருங்குரும்பை, யவதானியம், இலந்தை, பூலாங்கிழங்கு, கொள்ளு, வில்வக்கதுப்பு

நிலவேம்பு எனும் இவற்றை ஒவ்வொரு பலம் வீதம் கொண்டு கஷாயம் காய்ச்சி அதனுடன் மருக்காரை, அதிமதுரம், வசம்பு, தேவதாரு, கடுகு, திப்பிலிவேர், இந்துப்பு, ஓமம், சோம்பு, துமட்டி ஆகியவற்றின் விழுதைச் சேர்த்து தேன், கருப்பஞ்சாறு, பால், பசுவின் சிறுநீர், நெய், எண்ணெய், புலால் சாறு ஆகியவற்றை நன்றாகக் கலந்து ஆஸ்தாபன வஸ்தியாகக் கொடுத்தால் ஸந்நிபாதத்தால் தோன்றும் நோய்கள் தீரும். மற்றும் கிருத்ரஸி எனும் வாத நோய், சர்க்கரை நோய், அஷ்டீலா, தூனீ, குன்மம் எனும் நோய்கள் தீரும். 67-70

### 24. ராஸ்னாதி (சித்தரத்தை முதலியவற்றாலான) ஆஸ்தாபனம்

சித்தரத்தை, கொன்றை, சாரடை, கடுகரோகிணி, வெட்டி வேர், கோரைக்கிழங்கு, திராயமாணா (பிராம்மி), சீந்தில்கொடி, மஞ்சிட்டி, இலகுபஞ்சமூலம், தான்றி, சிற்றாமுட்டி ஆகியவை ஒவ்வொருபலம் வீதம் கொண்டு கஷாயம் காய்ச்சுக. அதனுடன் மருக்காரை, அதிமதுரம், சோம்பு, இந்துப்பு, ஞாழல், துமட்டி ஆகியவற்றின் விழுதும், ரஸாஞ்சனம், புலால்சாறு, தேன், திராட்சை, ஸௌவீரம் ஆகியவற்றைக் கலந்து இளஞ்சூடுள்ள போது ஆஸ்தாபனவஸ்தியாகக் கொடுத்தால் ஆயுள், சடராக்னி எனுமிவை வளரும். குன்மம், இரத்தப்பெரும்பாடு, அக்கி, நீர் சுருக்கு, உரக்ஷதம் (மார்பில் அடிபடுதல்), க்ஷயம், விஷக்காய்ச்சல், மூலநோய், கிரகணி, வாத குண்டலிகா, முழங்கால், தலை, வஸ்தி முதலியவற்றில் உண்டாகும் பிடிப்பு, உதாவர்த்தம், வாதநோய்கள், வாதஇரத்தம், சர்க்கரை நோய், அஷ்டீலா, வயிற்றுவலி, பெருவயிறு, சுவையின்மை, இரத்த பித்தம், கபத்தால் தோன்றும் பைத்தியம், நீரிழிவு, ஆத்மானம், இதயப்பிடிப்பு எனும் நோய்கள் தீரும். 71-76

### 25. வாத நோய்களுக்கு ஆஸ்தாபன வஸ்தி

வாதத்தைப் போக்கும் ஓஷதிகளின் கஷாயத்தில் இந்துப்பு, சிவதை, காடி என்பனவற்றை கலந்து பொறுக்கக்கூடிய சூட்டில் வஸ்தியாகப் பயன்படுத்தினால் வாதத்தால் தோன்றும் நோய்கள் தீரும். 77

### 26. பித்த சீற்றத்திற்கு ஆஸ்தாபன வஸ்தி

காகோலி முதலான கூட்டுப் பொருள்களுடன் நியக்ரோதாதிகணத்தைச் சார்ந்த பொருள்களையும் சேர்த்துக் கஷாயம காய்ச்சி அதில் நெய்யும் சர்க்கரையும் கலந்து பித்தம் சீற்றமடைந்த போது வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். 78

### 27. கப நோய்களுக்கு ஆஸ்தாபன வஸ்தி

திப்பிலி முதலான கூட்டுப் பொருள்களுடன் கொன்றை முதலிய கூட்டுப் பொருள்களைச் சேர்த்து கஷாயம் காய்ச்சி அதில் தேன், பசுவின் சிறுநீர் ஆகியவற்றைக் கலந்து கபம் சீற்றமுற்ற போது வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். 79

### 28. இரத்த சீற்றத்தாலான நோய்களுக்கு ஆஸ்தாபன வஸ்தி

சர்க்கரை, கருப்பஞ்சாறு, பால், நெய் மற்றும் குளிர்ச்சி தரும் பால் உள்ள மரங்களின் கஷாயத்தைப் போதுமான அளவு கலந்து வஸ்தியாகப் பயன்படுத்தினால் இரத்த சீற்றம் தணியும். 80

### 29. சோதன ஆஸ்தாபன வஸ்தி

வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் ஆகியவற்றிற்குப் பயன்படுத்தத்தக்க மருந்துப் பொருள்களின் கஷாயத்தில் அப்பொருள்களின் விழுதைச் சேர்த்து அதனுடன் எண்ணெய், இந்துப்பு ஆகியவற்றைக் கலந்து நன்றாகக் கடைந்து தூய்மைப்படுத்துவதற்கு வஸ்தியாகப் பயன்படுத்துக. 81

### 30. லேகன (தோஷங்களைச் சுரண்டி எடுக்கும்) ஆஸ்தாபன வஸ்தி

திரிபலை கஷாயம், பசுவின் சிறுநீர், தேன், யவக்ஷாரம் ஆகியவற்றை ஊஷகாதிகணப் பொருள்களின் கஷாயத்தில் சேர்த்து வஸ்தியாக லேகன முறைக்குப் பயன்படுத்துக. 82

### 31. பிரும்ஹண (உடலைச் செழிப்புறச் செய்ய) ஆஸ்தாபன வஸ்தி

உடலைச் செழிப்புறச் செய்யும் பிரும்ஹணப் பொருள்களின் கஷாயத்தில் காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதையும், நெய் புலால் சாறு ஆகியவற்றையும் கலந்து வஸ்தியாகப் பயன்படுத்தினால் உடலுக்குச் செழிப்பு உண்டாகும். 83

### 32. வாஜீகரண (விந்துவை வளர்க்கும்) ஆஸ்தாபன வஸ்தி

ஊர்க்குருவி முட்டை, வெள்ளைக் குன்றுமணி எனுமிவற்றின் கஷாயத்தில் பால், நெய், சர்க்கரை, காஞ்சொறி விதைகளைக் கலந்து வஸ்தியாகப் பயன்படுத்தினால் விந்து வளர்ச்சி உண்டாகும். 84

### 33. பிச்சாவஸ்தி

இலந்தை, நாகபலை, சேலு, இலவம், மற்றும் தட மரத்தின் தளிரிலைகள் ஆகியவற்றைப் பாலுடன் பக்குவம் செய்து தேனும் இரத்தமும் கலந்து செய்த வஸ்தி பிச்சாவஸ்தி எனப்படும். இது கொழகொழப்புள்ளதாகும். இந்த வஸ்தியில் பன்றி, எருமை, செம்மறியாடு, பூனை, கரியமான், சேவல், ஆடு ஆகியவற்றின் புது இரத்தத்தைக் கலக்க வேண்டும். 85-86

### 34. ஸங்கிராஹணி ஆஸ்தாபன வஸ்தி

ஞாழல் முதலியவற்றின் கஷாயத்தில் அம்பஷ்டாதிகணக்கூட்டுப் பொருள்களின் விழுதைக் கலந்து தேனும் நெய்யும் சேர்த்துச் செய்த வஸ்தி ஸங்கிராஹணி வஸ்தியாகும். 87

### 35. வஸ்திகளால் எண்ணெய் வஸ்தி செய்தல்

மேலே கூறப்பட்ட இந்த வஸ்தி முறைகளில் தனித்தனி முறைகளுக்கோ சில வஸ்தி முறைகளைக் கலந்தோ எண்ணெயைக் கலந்து நல்ல முறையில் எண்ணெய் வஸ்தி செய்து பயன்படுத்தலாம். 88

### 36. மலட்டுத்தன்மையை நீக்கும் வஸ்தி

முறையாக வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளால் உடல் தூய்மை பெற்ற மலட்டுப் பெண்களுக்கு வாத நோய்களைப் போக்குவதற்கு முன்கூறிய சதபாகதைலத்தையோ, மூடகர்ப்ப சிகிச்சைக்குக் கூறிய பலாதைலத்தையோ, மஹா வாதவியாதிகளைப் போக்கவல்ல திரைவிருதஸ்நேஹம் எனும் எண்ணெய் மருந்தையோ வஸ்திவழியில் பயன்படுத்தினால் மலட்டுத் தன்மை நீங்கும். 89

### 37. உடல் வலிமைக்கு ஏற்ப வஸ்தியைப் பயன்படுத்துதல்

நல்ல உடல் வலிமை கொண்டவர்களுக்குத் தீக்ஷ்ணத்தன்மை யுள்ள வஸ்தியையும், நடுத்தர வலிமை கொண்டவர்களுக்கு நடுத் தர வஸ்தியையும், உடல் வலிமை குறைந்துள்ளவர்களுக்கு மென் மை தன்மையுள்ள வஸ்தியையும் பயன்படுத்தத்தக்கவையாகும். 90

### 38. காலம் முதலியவற்றின் வேற்றுமையறிந்து வஸ்தியைப் பயன்படுத்துதல்

அவ்வாறே பருவகாலம், உடல் வலிமை, தோஷங்கள் சீற்றம் பெற்றுள்ளதரம், வஸ்தி மருந்தில் பயன்படுத்தப்பட்டுள்ள

மருந்துப் பொருள்களின் வலிமை முதலியவற்றை நன்கு அறிந்து கொண்ட மருத்துவர் தக்கபடி வஸ்தியைப் பயன்படுத்த வேண்டும். 91

முதலில் தோஷங்களைத் தூண்டிவிட வல்ல வஸ்தியையும், இடையில் தோஷங்களை வெளியேற்றுவதற்காகத் தோஷங்களை வெளியேற்றும் பொருள்களுடன் கூடிய வஸ்தியையும், முடிவில் தோஷங்களைத் தணிக்கவல்ல பொருள்களுடன் கூடிய வஸ்தியையும் அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் பயன்படுத்த வேண்டும். 92

## 39. தோஷங்களைத் தூண்டிவிடும் வஸ்தி

ஆமணக்குவிதை, அதிமதுரம், திப்பிலி, இந்துப்பு, வசம்பு, கொட்டைக்கரந்தை, மருக்காரை ஆகியவற்றின் விழுதுடன் கூடிய வஸ்தி தோஷங்களைத் தூண்டிவிடும். 93

## 40. தோஷங்களை வெளியேற்றும் வஸ்தி

சோம்பு, அதிமதுரம், துமட்டி, மருக்காரை, காடி, பசுவின்சிறுநீர் எனும் பொருள்களைக் கொண்டு செய்யப்படும் வஸ்தி தோஷங்களை வெளியேற்றும். 94

## 41. தோஷங்களைத் தணிக்கும் வஸ்தி

ஞாழல், அதிமதுரம், கோரைக்கிழங்கு, ரஸாஞ்சனம், பால் ஆகியவற்றாலான வஸ்தி தோஷங்களைத் தணிக்கும். 95

## 42. மாதுதைலிகவஸ்தி

மன்னர்கள், அவர்களுக்குச் சமமான செல்வந்தர்கள், மாதர்கள், மென்மையான உடல் கொண்டவர்கள், சிறுவர்கள், முதியவர்கள் ஆகியவர்களுக்குத் தேனும், எண்ணெயும் கலந்த (மாதுதைலிக) வஸ்தி முறைகள் இனி சுருக்கமாகக் கூறப்படுகின்றன. 96-97

இந்த மாதுதைலிக வஸ்தியைப் பயன்டுத்தும் போது வாகனங்களின் மீது அமர்ந்து (சவாரி) பயணம் செய்தல், கலவி, உணவு உட்கொள்ளுதல் மது முதலிய குடிவகைகளைப் பருகுதல் போன்றவை மறுக்கப்படவில்லை. இவற்றால் நன்மையே உண்டாகும். தீங்கு விளையாது. 98

ஆகவே நிரூஹவஸ்தியை விரும்புகிறவர்களுக்குச் சுகமாக இவற்றைப் பயன்படுத்த வேண்டும். அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் நோயாளியின் விருப்பம் போல (அதாவது

எந்தநேரத்தில் நோயாளி விரும்புகிறாரோ அந்த நேரத்தில்) இந்த வஸ்திகளைப் பயன்படுத்த வேண்டும். 99

## 43. மாதுதைலிக வஸ்தி முறை

தேன் மற்றும் எண்ணெய் சம அளவும் இவ்விரண்டின் அளவுக்குச் சமமான ஆமணக்கு வேர்க்கஷாயமும், அதில் சோம்பு அரைப்பலம், இந்துப்பு ஒரு கர்ஷம், ஒரு மருக்காரை ஆகியவற்றை சேர்த்து மத்தால் நன்கு கடைந்து மாதுதைலிகம் எனப்படும் இந்த வஸ்தியை இளஞ்சூடுள்ள போது பயன்படுத்த வேண்டும். 100-101

## 44. யுக்தரதவஸ்தி

வசம்பு, அதிமதுரம், இந்துப்பு, திப்பிலி, மருக்காரை ஆகியவற்றின் கஷாயத்தில் எண்ணெயையும், புலால் சாற்றையும் கலந்து செய்த வஸ்தி யுக்தரதவஸ்தி எனப்படும். 102

## 45. தோஷஹர வஸ்தி

தேவதாரு, திரிபலை, சித்தரத்தை, சோம்பு, வசம்பு, தேன், பெருங்காயம், இந்துப்பு ஆகியவற்றுடன் கூடிய வஸ்தி தோஷஹரவஸ்தி (தோஷத்தை போக்கும்) எனப்படும். 103

)லகு பஞ்சமூலகஷாயத்தில் எண்ணெய், திப்பிலி, தேன், சோம்பு, இந்துப்பு ஆகியவற்றைக் கலந்து வஸ்தியாகப் பயன்படுத்த வேண்டும். 104

## 46. ஸித்தவஸ்தி முறை

யவதானியம், இலந்தை, கொள்ளு ஆகியவற்றின் கஷாயத்தில் திப்பிலி, தேன், இந்துப்பு, அதிமதுரம் ஆகியவற்றைக் கலந்து செய்த வஸ்தி ஸித்தவஸ்தி எனப்படும். 105

## 47. முஸ்தாதி ஆஸ்தான வஸ்தி

கோரைக்கிழங்கு, வட்டத்திருப்பி, சீந்தில்கொடி, கடுகரோகிணி, சிற்றாமுட்டி, சித்தரத்தை, சாரடை, மஞ்சிட்டி, கொன்றை, வெட்டிவேர், திராயமாணா (பிராம்மி), நெருஞ்சி,இலகுபஞ்சமூலம் ஆகியவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் வீதம் அவற்றுடன் எட்டு மருக்காரைக்காய் சேர்த்து ஒரு ஆடகம் நீர் சேர்த்துப் பக்குவம் செய்க. நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சிய கஷாயத்தில் அரை ஆடகம் பால் கலந்து பால் அளவு மட்டும் மிகுந்திருக்குமாறு மீண்டும் காய்ச்சுக.

ல் நான்கில் ஒரு பங்கு காட்டு விலங்குகளின் இரத்தம், சம அளவு தேன், நெய் மற்றும் சோம்பு, ஞாழல், அதிமதுரம், துமட்டி, ரஸாஞ்சனம், இந்துப்பு ஆகியவற்றின் விழுது ஒவ்வொரு கர்ஷம் வீதமும் சேர்த்து வஸ்தியாகப் பயன்படுத்துக.

இதனால் வாதரத்தம், நீரிழிவு, வீக்கம், மூலம், குன்மம், சிறுநீர்த்தடை, அக்கி, மலபேதம், இரத்தபித்தம் ஆகியவை தணியும். இந்த முஸ்தாதி வஸ்தி யாபனவஸ்திகளில் சிறந்தது. உடலுக்கு வலிமை தந்து உயிரை நிலை பெறச் செய்யும். விந்துவை வளர்க்கும். கண்களுக்கு மிக்க நன்மை விளைவிக்கும். வலியைப் போக்கும். 106-111

### 48. மற்றும் சில ஆஸ்தாபன வஸ்திகள்

நோயைப்பற்றி அறிந்த சாஸ்திர விற்பன்னரான மருத்துவர் தன் அறிவாற்றலால் மருந்தின் தன்மையையும், நோயின் தன்மையையும் நன்கு ஆராய்ந்து இந்த ஆஸ்தாபனவஸ்திகளை (தன் அறிவால் புதியவையும் செய்து) நூற்றுக்கணக்கில் செய்யக்கூடியவராவார். 112

### 49. ஆஸ்தாபன வஸ்தியைப் பெறுபவர் விலக்க வேண்டியவை

அசீரணமுள்ளபோது வஸ்தியைப் பயன்படுத்தக்கூடாது. வஸ்தியைப் பெற்ற பிறகு பகலில் உறங்கக்கூடாது. உணவு, மற்ற செயல்களைத் தம் உசிதம் போல் செய்யலாம். 113

### 50. மாதுதைலிகம் பெயருக்குக் காரணம்

இந்த வஸ்தியில் மது எனப்படும் தேனும், எண்ணெயும் சிறப்பாகக் பயன்படுத்தப்படுவதால், இதற்கு மாதுதைலிகம் என்ற பெயர் வந்தது. 114

### 51. யுக்தரதம் பெயருக்குக் காரணம்

இந்த வஸ்தியைப் பயன்படுத்திக் கொண்டவர் குதிரைபூட்டிய தேர், யானை முதலியவற்றின் மீது அமர்ந்து சவாரி செய்தாலும் தவறில்லை. ஆகையால் யுக்தரதம் எனப் பெயராயிற்று. 115

### 52. ஸித்தவஸ்தி பெயருக்குக் காரணம்

வலிமை, உடல் நிறம் தந்து நூற்றுக்கணக்கான நோய்களைப் போக்குவதாகையால் (மருத்துவருக்கு வெற்றி தருவதால்) ஸித்த வஸ்தி எனும் பெயர் கொண்டதாயிற்று. 116

சுகபுருடன், குறைந்த அளவில் தோஷம் உள்ளவர், எப்பொழுதும் எண்ணெய்ப்பசையுடன் கூடியிருப்பவர், மென்மையான குடல் கொண்டவர் என இத்தகையவர்களுக்கு மாது தைலிக வஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 117

மென்மையான வீரியமுள்ள மருந்துப்பொருள்களுடன் கூடியும், ஒன்பது அல்லது ஆறு பிரஸ்ருதம் அளவு கொண்டதாகியும், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளை விலக்காததாகியும் ஒரு வஸ்தியால் வெற்றி கிடைப்பதாகியும், விளங்குவதால் மாது தைலிகவஸ்தி ஸித்திதரும் வஸ்திகளில் சிறந்ததெனக் கொள்க. 118

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**நிரூஹக்ரம சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தொன்பதாம் அத்தியாயம்
# * ஆதுரோபத்ரவ சிகித்ஸிதம்

இனி தன்வந்தரி பகவான் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி துன்புற்ற (பஞ்சகர்மாக்களால் நோயுற்ற) வர்களுக்குச் சிகிச்சை செய்யும் முறையை விளக்குவோம். 1-2

## 1. தூய்மைப்படுத்திய சிகிச்சையின் விளைவு

எண்ணெய்ப்பசை உண்டாக்குதல், வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், கெட்ட இரத்தம் வெளியேற்றுதல், நிரூஹ வஸ்தியைப் பயன்படுத்துதல் எனும் தூய்மைப்படுத்தும் சிகிச்சை முறைகளைப் பெற்றவருக்கு சடராக்னி வலிமை குன்றியதாகும். 3

சிறியதாக எரிந்து கொண்டிருக்கும் நெருப்பில் பருமனான கட்டைகளை அதிக அளவில் சேர்த்தால் அணைந்து விடுவதைப் போல சடராக்னி குறைந்துள்ளவர் குருத்தன்மை கொண்ட உணவை உட்கொண்டால் அவருக்கு சடராக்னி வலிமை மேலும் குறைந்துபோகும். 4

சிறுசிறு சுள்ளிகளை ஒவ்வொன்றாக வைத்தால் சிறியதாக எரியும் நெருப்பு நன்கு பற்றி எரியத் துவங்குவது போல சட ராக்னி குறைந்துள்ளவர் இலேசான தன்மை கொண்ட உணவை குறைந்த அளவில் உண்டு வந்தால் சடராக்னி வளர்ச்சி பெறும். 5

## 2. தூய்மைப்படுத்துவதில் தோஷங்கள் வெளியேறியதன் அளவு

வெளியேறிய தோஷங்களின் அளவுக்கு ஏற்ப உணவு முறை அமைந்திருக்க வேண்டும். ஒரு பிரஸ்தம், அரை ஆடகம், ஒரு ஆடகம் என தோஷங்களின் வெளியேறிய அளவு மூன்று வகைகளாகும். 6

## 3. வெளியேறிய தோஷங்களுக்கு ஏற்ற உணவு

இதில் பிரஸ்த பிரமாணம் குறைந்த அளவாகும். அரை ஆடகம் நடுத்தரமாகும். ஒரு ஆடகம் என்பது உயர்ந்த

*ஆதுரர்-துன்புற்றவர். பஞ்சகர்மாக்கள் எனும் ஐந்துவகை சிகிச்சை முறைகளைச் செயல்படுத்துவதால் துன்பம் ஏற்படு மானால் அத்தகைய நோயாளிகளுக்கு உரிய சிகிச்சை முறை களை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஆதுரோபத்ரவ சிகித் ஸிதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

அளவாகும். ஒரு பிரஸ்தம் அளவு பேதியானால் குறைந்த அளவுள்ள பருக்கைகளுடன் கூடிய யவாகூ எனும் கஞ்சியை ஒரு முறை உட்கொள்ளச் செய்யவேண்டும். 7

அரை ஆடகம் அளவு வெளியேறிய பிறகு யவாகூ எனும் கஞ்சியை இரு முறை பருகச் செய்க. ஒரு ஆடகம் அளவு வெளியேறியபோது மூன்று முறை உட்கொள்ளச் செய்க. பிறகு இயற்கையாக உட்கொள்ளும் சோற்றில் நான்கில் ஒரு பங்கு சேர்த்து நன்கு கலக்கப்பட்ட சோற்றை நீக்கிய விலேபி எனும் கஞ்சியை முன் கூறியபடி ஒன்று இரண்டு மூன்று தடவைகள் முறையே உட்கொள்ளச் செய்க. அதன் பிறகு எண்ணெய், உப்பு ஆகியவை இல்லாத வெறும் பயற்றின் கஞ்சியுடன் இயற்கையாக உண்ணும் அளவில் பாதி அளவு நன்கு பக்குவமான அரிசி சோற்றை உண்ணச் செய்க. அதன் பிறகு மனதிற்கு விருப்பமான புலன்களுக்குத் தெளிவு உண்டாக்கக்கூடிய வேறு பொருள்களுடன் (உப்பு முதலியவற்றுடன்) செய்த கஞ்சியுடன் பழக்கமுள்ள உணவை இயற்கையான அளவிற்கு நான்கில் மூன்று பகுதியளவுக்கு உட்கொள்ளச்செய்க. அதன் பிறகு கரியமான், லாவுகப்பறவை போன்ற விலங்குகளின் பறவைகளின் புலால் சாற்றுடன் இயற்கையான (பழக்கமான) உணவை உட்கொள்ளச் செய்க. 8-11

### 4. உடல் நிலைக்கேற்ப உணவு

ஒன்று, இரண்டு, மூன்று தடவைகள் பேயா (யவாகூ), விலேபி முதலியன கொடுக்க வேண்டிய முறைகள் குறைந்த, நடுத்தர, உயர்ந்த அளவில் தூய்மை பெற்றவர்களுக்கு முறையே கூறப்பட்டன. கபம், பித்தம் ஆகியவை அதிக அளவில் கொண்டு நாள் தோறும் மதுபானம் செய்யும் நன்கு தூய்மை பெறாத உடல் கொண்டவர்களுக்கு பேயா எனும் கஞ்சி சுரோதஸ்களில் தடங்கலை உண்டாக்கும். அத்தகையவர்களுக்குப் பொரி, பொரிமா முதலியவற்றால் செய்யப்படும் தர்ப்பண முறையைப் பின்பற்ற வேண்டும். 12-13

துன்பம், விரும்பியவை கிடைக்காமை, விரதத்திற்காகப் பட்டினி கிடத்தல், மிக்க வருத்தம் கொண்டிருத்தல், பைத்தியம் முதலான மனநோய்களுக்கு உட்படுதலால் பட்டினி கிடத்தல் போன்ற நிலைமைகளில் உள்ளவர்களுக்கு பேதியாகச் செய்யப்பட்டவர்களுக்குப் போலவே பணிவிடைகளை செய்து மற்றும் உணவு முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 14

### 5. தோஷங்களின் அளவு பற்றி மற்றொரு கருத்து

தோஷங்கள் வெளியேறுவதில் பிரஸ்தம், அரை ஆடகம், ஒரு ஆடகம் என அளவுகள் முன்பு கூறப்பட்டதல்லவா!

முறையை நூலாசிரியர்கள் சிலர் ஒப்புக் கொள்ளவில்லை. பேதியாவதன் முடிவில் கபம் வெளியேறிவிட்டால் அதுவே நன்கு தூய்மை பெற்றதாகும். பேதியாவதில் வேறு அளவுமுறை ஏதும் இல்லை என்பது அவர்கள் கருத்து. 15-16

## 6. வலிமைக்கு ஏற்ப உணவு முறை

உடல் வலிமை மூன்று வகைப்படும். ஆகையால் உணவு முறையும் மூன்று வகைப்படும். வலிமை மிக்கவருக்கு ஒரே முறை. நடுத்தர வலிவுள்ளவருக்கு இரு முறைகள், வலிமை குறைந்தவருக்கு மூன்று முறைகள் எனக் கொள்க. மருத்துவ நூல் ஆசிரியர்கள் சிலர் சடராக்னி வலிமையின் உயர்ந்த, நடுத்தர, குறைந்த அளவுக்கு ஏற்றபடி உணவு முறை இருக்க வேண்டும் என்பர். 17-18

## 7. ஸம்ஸர்ஜன முறையில் சடராக்னி வலிமைக்கு ஏற்ப சுவைகள்

தூய்மைப்படுத்திய பிறகு உணவு உட்கொள்ள வேண்டி கூறப்பட்ட முறை அன்னஸம்ஸர்ஜன முறை எனப்படும். இம் முறையால் சடராக்னி வளர்ந்த போது தோஷங்கள் சீற்ற மடையக்கூடும் எனும் அச்சம் ஏற்படும். ஆகையால் இனிப்பு கசப்புச் சுவைகள் பிறகு எண்ணெய்பசை கொண்டவை, புளிப்புச் சுவை உள்ளவை, உவர்ப்பு மற்றும் கார்ப்புச் சுவை கொண்டவை, பிறகு இனிப்பும் புளிப்புமானவை பிறகு உவர்ப்புச் சுவையுள்ளவை பிறகு இனிப்புச் சுவை கசப்புச்சுவை கொண்டவை, எண்ணெய் பசை உள்ளவை, வறட்சித் தன்மை யுள்ளவை என உணவுப் பொருள்களை மாற்றி மாற்றி உட் கொள்ளச் செய்ய வேண்டும். அதாவது ஒரு சுவைக்கு பிறகு அதற்கு மாறான தன்மை கொண்ட சுவை உணவை உட் கொள்ளச் செய்ய வேண்டும். அதன் பிறகு இயற்கையாகப் பழக்கமானபடி உணவு உட்கொள்ளச் செய்யலாம். 19-20

## 8. எண்ணெய் முறை - வாந்தி எடுக்கச் செய்தல் முறைகளில் உணவு

எண்ணெய் உட்கொள்ளுதல், வாந்தி எடுக்கச் செய்தல் என் பனவற்றை மட்டும் பயன்படுத்திக் கொண்டவர்களை ஏழு நாட் கள் வரை இலேசான உணவை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 21

## 9. தூய்மையைப் பெற்ற பின் விடத்தக்கவற்றிற்குக் கால அளவு

இரத்தம் வெளியேற்றல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளை மேற்கொண்டவர்கள் ஒரு மாதம் வரை அல்லது நன்கு உடல் வலிமை பெறும் வரை சினங் கொள்ளுதல் முதலான விடத்தக்கவற்றை விலக்க வேண்டும். 22

## 10. வஸ்தி முறையில் விலக்க வேண்டிய கால அளவு

ஒவ்வொரு வஸ்தியைப் பெற்ற பின் மூன்று மூன்று நாட்கள் வரை சினங்கொள்ளுதல் முதலியவற்றை விலக்க வேண்டும். மூன்று நாட்களுக்கு பிறகு உடலுக்கு பழக்கமானவற்றை கைக் கொள்ளலாம். 23

## 11. வேறு நோய் கொண்டவர்களுக்கு ஏற்ற முறை

விரணத்தால் துன்புறுபவர், எண்ணெய்ப்பசை கொண்டு தூய உடல் கொண்டு கண் நோய் உள்ளவர், காய்ச்சல் அதிஸாரம் எனும் நோயால் துன்புறுபவர் ஆகியோர் எண்ணெய் பானை, மற்றும் சுடாத மண்பாண்டம் போன்றவர்களாவர். அதாவது நன்கு பாதுகாக்கப்படாவிடில் எளிதில் அழிந்து போவர். ஆகவே இவர்களுக்கு தூய்மைப் பெற்றவர்களுக்குப் போல (உபசாரங்கள்) பணிவிடைகள் செய்ய வேண்டும். 24

## 12. எண்ணெய் முறையைப் பின்பற்றியவர் விலக்கத்தக்கவற்றை விலக்காததன் விளைவு

எண்ணெய் முறையைப் பயன்படுத்துதல் முதலிய சமயங் களில் விலக்கத்தக்கவற்றை விலக்காவிடில் சினங்கொள்வதன் காரணமாக பித்தம் சீற்றமடைந்து அழற்சி, நாவறட்சி முதலிய பித்தத்தால் தோன்றக்கூடிய துன்பங்களை அது விளைவிக்கும். உடலுழைப்பு, வருத்தம் முதலியவற்றால் மனக்கலக்கம், அதாவது பிரமம், மோஹம், வெளி, அபஸ்மாரம், பைத்தியம் முதலிய மனநோய்கள் தோன்றக்கூடும். 25

கலவியில் ஈடுபடுவதால் ஆக்ஷேபகம், பக்கவாதம், உறுப்பு களில் பிடிப்பு, குறிப்பகுதியில் வீக்கம், கடுமையான இருமல், மேல் மூச்சுவாங்குதல், விந்துவைப் போல இரத்தம் வெளிவருதல் போன்ற கடுமையான நோய்கள் தோன்றக்கூடும். 26-27

பகலில் தூங்குவதால் கபச்சீற்றத்தால் தோன்றும் நோய்கள் உண்டாகும். மண்ணீரல் வீக்கம், பிரதிச்யாயம், பாண்டுநோய், வீக்கம், காய்ச்சல், மோஹம், உறுப்புகளில் வலி, உணவு செரியாமை, சுவையின்மை ஆகிய நோய்கள் தோன்றும். 28-29

உரத்த குரலில் பேசுவதால் வாயு தலையில் துன்பத்தை விளைவிக்கும். அவ்வாறே குருட்டுத்தன்மை, உணர்ச்சியற்றுப் போதல், மணம் உணர இயலாமை, செவிட்டுத்தன்மை, வாய்ப் பேசாமை, தாடை இணைப்புகள் விட்டுப்போதல், அதிமந்தம் எனும் கண்நோய், அர்திதம், நேத்ரஸ்தம்பம் அல்லது நிமேஹம்,

நாவறட்சி, இருமல், உறக்கமின்மை, பற்கள் அசைதல், மற்றும் வாதத்தால் தோன்றக்கூடிய வேறு நோய்கள் ஆகியவை உண்டாகும். குதிரை, தேர் போன்ற ஊர்திகளில் பயணம் செய் வதால் வாந்தி, நினைவிழத்தல், தலைச்சுற்றல், சோர்வு, உறுப்பு களில் பிடிப்பு, புலன்களில் கொடிய மாறுபாடுகள் ஆகியவை தோன்றக்கூடும். அவ்வாறே வெகுநேரம் உட்கார்ந்திருந்தல் அல்லது நின்றிருத்தல் போன்றவற்றால் இடுப்புப் பகுதியில் கடுமையான துன்பம் தோன்றும். 30-33

அளவுக்கு மீறி சுற்றுவதால் வாயுவினால் முழங்கால் பகுதி யில் துன்பம், முழங்கால் பகுதியில் வீக்கம் அல்லது உலர்ந்து போதல், பாதஹர்ஷம் போன்ற துன்பங்கள் தோன்றும். 34

குளிர்ந்த நீர், மலர்மாலை, சந்தனம் ஆகியவற்றை பயன் படுத்துவதால் வாதம் சீற்றமடைதல், அங்கமர்தம், விஷ்டம்பம் வலி, ஆத்மானம், நடுக்கம் முதலியன தோன்றும். 35

காற்றுப்படும்படியாகவோ வெய்யிலிலோ இருப்பதால் நிறம் மாறுபடுதல், காய்ச்சல் ஆகியவை தோன்றும். அவ்வாறே கூடாத உணவு, அதிக உணவு முதலானவற்றால் கொடிய நோய்கள் தோன்றும். அல்லது மரணமே நேரலாம். 36

உடலுக்குப் பழக்கமற்ற உணவு உட்கொண்டால் உடல் நிறம் மற்றும் வலிமை அழிவது உறுதி. கட்டுப்பாடற்ற மனிதர் விலங்கை போல அளவில்லாத உணவை உட்கொண்டால் பல நோய்களின் காரணமான அசீரணத்திற்கு உட்படுவார். 37

இத்தகைய துன்பங்களில் துன்பங்களுக்குக் காரணத்தை ஆராய்ந்து அறிவாற்றல் மிக்க மருத்துவர் நோயாளியின் உடல் நலத்திற்காக காரணமானதற்கு மாறான சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். 38

## 13. தூய்மைப்பெற்றவருக்கு ஏற்ற உணவு

வாந்தி எடுத்தல், பேதியாதல் எனும் முறைகளை மேற் கொண்டவருக்கு மான், கரியமான், லாவகபுள், முயல், மயில், தித்திரிப்புள் போன்றவற்றின் புலால் சாறு, அறுபது நாள் குறுவை அரிசி, பழைய அரிசியாலான சோறு, பயறு போன்ற வேறு இலேசான உணவுப் பொருள்கள் ஆகியவை பயன்படுத்தத் தக்கவையாகும். 39

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**

**ஆதுரோபத்ரவ சிகித்ஸிதம் எனும்**

**முப்பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

## நாற்பதாம் அத்தியாயம்

# * தூம நஸ்ய கபளகிரஹ சிகித்ஸிதம்

இனி தன்வந்தரிபகவான் ஸுச்ருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி புகை பிடித்தல், மூக்கில் மருந்திடுதல், வாயில் மருந்துப் பொருளை வைத்திருக்கச் செய்தல் எனும் முறைகளால் சிகிச்சை செய்யும் வகை விளக்கப்படுகிறது. 1-2

### 1. புகையின் வகைகள்

புகை பிடித்தல் ஐந்து வகைகளாகும். அவை (1) பிராயௌகிகம், (2) ஸ்நைஹிகம் (3) வைரேசனிகம் (4) காஸக்னம் (5) சமநீயம் என்பனவாம். 3

### 2. புகை பிடிப்பதற்கான வத்தி செய்யப் பயன்படும் பொருள்கள்

கோஷ்டம், தகரை என்பன தவிர மற்ற ஏலாதிகணத்தில் கூறப்பட்ட கூட்டுப் பொருள்களை நன்றாக அரைத்துக் கொள்க. பன்னிரண்டு அங்குல நீளம், சுண்டு விரல் அளவு பருமன் உள்ள நாணல் கட்டையின் மேல் எட்டு அங்குலமளவு பட்டுத் துணியைச் சுற்றி அதன் மேல் முன் செய்த மருந்தைப் பூசுக. இது நாள் தோறும் பயன்படுத்தத்தக்க (பிராயோகிக) புகைக்கும் வத்தியாகும். எள், முருங்கை விதை, தான்றிக்காய் போன்ற எண்ணெய்ப் பசையுள்ள விதைகளின் சாரம், தேன் மெழுகு, பிசின், குக்குலு முதலியவற்றுடன் எண்ணெய் கலந்து (ஸ்நைஹிகம்) எண்ணெய்ப்பசை கொண்ட வஸ்தியைச் செய்ய வேண்டும். வாயுவிடங்கம், நாயுருவி, முருங்கை முதலிய சிரோவிரேசனப் பொருள்களால் வைரேசனிகம் எனப்படும் வத்தியைச் செய்ய வேண்டும். கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி, சுக்கு, மிளகு, திப்பிலி, காஞ்சொரி, பெருங்காயம், அழிஞ்சில், இலவங்கப்பட்டை, மனோசிலை, சீந்தில்கொடி, கர்கடகசிருங்கி போன்ற இருமலைப் போக்கும் மருந்துப் பொருள்களால் காஸக்ன (இருமலைப்போக்கும்) வத்தி செய்ய வேண்டும். சிநாயு (நரம்பு), தோல், குளம்பு,

---

*தூமம்-புகைபிடித்தல், நஸ்யம் - மூக்கில் மருந்திடுதல், கபள கிரஹம் - மருந்துப் பொருளை வாயில் வைத்திருத்தல் எனும் இம் முறைகளில் சிகிச்சை புரியும் வகைகள் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் தூம நஸ்ய கபளகிரஹ சிகித்ஸிதம் எனும் பெயர் பெற்றது.

கொம்பு, நண்டின் எலும்பு, உலர்ந்த மீன், உலர்ந்த புலால் புழு மற்றும் வாந்தி எடுக்கச் செய்யப் பயன்படும் மருந்துப் பொருள்கள் ஆகியவற்றால் வாமநீய (வாந்தி எடுக்கச் செய்யும்) புகை வத்தியை செய்ய வேண்டும். 4

### 3. புகை முறைக்கு ஏற்ற நேத்ரம் (குழாய்)

வஸ்தியில் பயன்படுத்தத்தக்க குழாய்க்கு உரியவையான தங்கம், வெள்ளி, தாமிரம், ஈயம், வெண்கலம் போன்ற உலோகங்களாலான குழாய்களைப் புகை முறைக்கு உரிய குழாய்கள் செய்ய பயன்படுத்தலாம். பிரயோகிக தூம நேத்ரம் என்பது சுண்டு விரல் பருமன் உள்ளதாகவும், முனையில் பட்டாணி புகும் அளவு துளை உள்ளதாகவும் இருக்க வேண்டும். அதன் அடிப்பகுதி கட்டை விரல் அளவு பருமன் உள்ளதாகவும், நாற்பத்தெட்டு அங்குல நீளமுள்ள புகைவத்தி உட்புகக் கூடியதாகவும் இருக்க வேண்டும். ஸ்நைஹிக நேத்ரம் முப்பத்திரண்டு அங்குல நீளமும், வைரேசனிகம் இருபத்து நான்கு அங்குல நீளமும், காஸக்னம் மற்றும் *வாம நீயம் பதினாறு அங்குல நீளமும் கொள்வதாகி இருக்க வேண்டும். இவற்றின் துளைகள் இலந்தைக் கொட்டை உட்புகக்கூடிய அளவில் இருக்க வேண்டும். விரண தூமத்திற்கு விரணநேத்ரம் எட்டு அங்குலம் நீளம், பட்டாணி அளவு பருமன், ஒரு கொள்ளு புகுந்து வெளிவரும் அளவுக்கு துளை கொண்டதாக இருக்க வேண்டும். 5

### 4. புகை பிடிக்கும் முறை

சுகமாக (உடலுக்கு எத்தகைய துன்பமும் நேராத வண்ணம்) உட்கார்ந்து கொண்டு தெளிவான மனத்துடன் உடலை நேராக வைத்துக் கொண்டு பார்வையைத் தரையை நோக்கிச் செலுத்தி சோம்பல் இன்றி முனையில் எண்ணெய் பூசி எரியவைத்த புகைக்கு ஏற்ற வத்தியைக் குழாயின் துளைக்குள் செலுத்திப் புகை பிடிக்க வேண்டும். 6

முதலில் வாயாலும் பிறகு மூக்கினாலும் புகையை உட்கொள்ள வேண்டும். வாயிலும் மூக்கினாலும் உட்கொண்ட புகையை வாயினாலேயே வெளியிட வேண்டும். 7

வாயால் புகையை உள்ளே இழுத்து மூக்கினால் வெளிவிடுதல் கூடாது. ஏனெனில் மாறான வழியிற் செல்லும் புகை கண் பார்வையைக் கெடுக்கும். 8

* வாமநீயம் - ஒருவகைக் கருவியின் பெயர்.

பிராயோகிகம் என்னும் முறையில் புகையை மூக்கின் வழியே உள்ளே இழுத்துக் கொள்ள வேண்டும். ஸ்நைஹிக வகை புகையை வாயாலும், மூக்காலும் உட்கொள்க. வைரேசனிகத்தை மூக்கின் வழியாகவும், மற்ற காஸக்ன - வாமனீய முறைகளைச் சார்ந்த புகையை வாயின் வழியாகவும் மட்டும் உட்கொள்ள வேண்டும். 9

### 5. சிறப்பான புகை முறைகளுக்குச் சிறப்பு விதி

பிராயோகிகம் எனும் புகை முறையில் மருத்துவர் தருப்பைக் கட்டையிலிருந்து எடுக்கப்பட்டு, காற்றில்லாத நிழற்பகுதியில் உலர்த்தப்பட்ட புகை வத்தியைப் பற்ற வைத்து புகைக்காக உள்ள குழாயின் துளையில் வைக்க வேண்டும். நோயாளியிடம் தந்து புகைக்கச் சொல்ல வேண்டும். இவ்வாறே ஸ்நைஹிகம் மற்றும் வைரேசனிக முறைகளிலும் செய்ய வேண்டும். புகையோ நெருப்போ இல்லாத நன்கு அமைக்கப்பட்டுள்ள மண் மடக்கில் புகைக்குரிய வத்தியை வைத்து அதை அடிப்பகுதியில் துளை யுள்ள மற்றொரு மடக்கால் மூடி அழுத்தி வைக்க வேண்டும். புகைக்கு உரிய குழாயின் அடிப்பகுதியை அத்துளையில் பொருத்தி மற்ற காஸக்ன, வாமநீய வத்திகளைப் புகைக்கச் செய்ய வேண்டும். புகை அடங்கிப் போன பிறகு எரிந்தது போக மிகுந்திருக்கும் வத்தியை மீண்டும் மடக்கில் வைத்து நோயாளி யின் உடலில் தோஷம் நன்கு தூய்மைப்பெறும் வரை நோயா ளியைப் புகைபிடிக்கச் செய்ய வேண்டும். 10

### 6. புகை பிடிக்கத் தகாதவர்கள்

வருத்தம், சோர்வு, அச்சம், வெப்பம், நஞ்சு, இரத்தபித்தம், வெறி, நினைவிழத்தல் (மூர்ச்சை), அழற்சி, நாவறட்சி, பாண்டு நோய், உள் தாடை உலர்ந்து போதல், வாந்தி, தலையில் அடிபடுதல், ஏப்பம், பட்டினி கிடத்தல், திமிரம், நீரிழிவு, பெருவயிறு, ஆத்மானம், ஊர்த்வவாதம் ஆகியவற்றால் துன்புறு பவர், சிறுவர், முதியவர் உடல் வலிமையற்றவர், பேதியாகும் முறை, நிரூஹவஸ்தி முறை ஆகியவற்றைப் பயன்படுத்திக் கொண்டவர், இரவில் கண்விழித்தவர், கருவுற்றவர், வறண்ட உடல் கொண்டவர், காயம்படுதலால் இளைத்தவர், மார்பு தாக்கப்பட்டுள்ளவர், தேன், நெய், தயிர், பால், மீன், யவாகூ எனும் கஞ்சி ஆகியவற்றை உட்கொண்டுள்ளவர், கபம் குறைந்த அளவு கொண்டவர் ஆகியவர்கள் புகை பிடிக்கும் முறைக்குத் தகாதவர்களாவர். 11

### 7. தவறான காலத்தில் புகை பிடித்தலால் விளைவு

தகாத காலத்தில் புகை பிடிப்பதால் தலைச்சுற்றல், நினைவிழத்தல், தலைவலி, மூக்கு, காது, கண், நாக்கு ஆகிய உறுப்புகளில் கொடிய துன்பம் ஆகியவை தோன்றக்கூடும். 12

### 8. புகை பிடிப்பதற்கு உரிய நேரம்

முதலில் உள்ள மூன்று வகை புகைகளைப் பயன்படுத்துவதற்கு உரிய நேரங்களாவன : - தும்மல், பல் துலக்குதல், நஸிணம், குளியல், உணவு, பகல் தூக்கம், கலவி, வாந்தி, சிறுநீர் கழித்தல், சிரித்தல், கோபம் கொள்ளுதல், அறுவைச் சிகிச்சை பெறுதல் ஆகியவற்றை செய்த பிறகு முதலில் கூறப்பட்ட மூன்று வகை புகை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். சிறுநீர் கழித்தல், தும்மல், சிரித்தல், கோபம் கொள்ளுதல், கலவி புரிதல் ஆகியவற்றைச் செய்த பின் ஸ்நைஹிக முறையைப் பின்பற்ற வேண்டும். குளியல், வாந்தி எடுத்தல், பகல் தூக்கம் ஆகிய வற்றின் முடிவில் வைரேசனிக முறையைப் பயன்படுத்த வேண்டும். பல் துலக்குதல், குளியல், உணவு உட்கொள்ளுதல், அறுவைச் சிகிச்சை பெறுதல் ஆகியவற்றின் முடிவில் பிராயோகிக முறையைப் பின்பற்ற வேண்டும். 13

### 9. புகைக்கும் முறைகளின் சிறப்புச் செயல்

எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்தல், பூசிக்கொள்ளுதல் எனும் தன்மைகளால் ஸ்நைஹிக முறை வாதத்தை தணிக்கும். வறட்சி, தீக்ஷ்ணம், வெப்பம், விசதம் (விரைவில் பரவுதல்) எனும் தன்மைகளைக் கொண்டிருப்பதால் வைரேசனிக புகை முறை கபத்தைக் கிளறி விட்டு வெளிப்படுத்தும். பிராயோகிக முறை ஸ்நைஹிக . முறைகளின் பொது தன்மைகளைக் கொண்டிருப்ப தால் கபத்தைக் கிளறி வெளியேற்றும். 14

### 10. புகை பிடித்தலின் பயன்

மருந்துப் பொருளாலான புகை பிடிப்பதால் புலன்கள், பேச்சு, மனம் ஆகியவை தெளிவுபடும். பல், தலைமுடி, தாடி, மீசை ஆகியவற்றில் உள்ள முடிகள் திடப்படும். வாய் தூய்மைப் பெற்று நறுமணம் கொள்ளும். 15

மேலும் புகை முறையை மேற்கொண்டவருக்கு இருமல், இழுப்பு, சுவையின்மை, வாய் பூத்தல், குரல் மாறுபாடு, வாயில் எச்சில் ஒழுகுதல், தும்மல், வாந்தி, திடீரென மூச்சு தடைபடுதல், சோம்பல், தூக்கம், தாடைப்பிடிப்பு, மன்யாஸ்தம்பம், பீநசம்,

தலைநோய், காதுவலி, கண்வலி வாதகபங்களால் முகத்தில் ஏற்படும் நோய்கள் ஆகியவை தோன்றா.

### 11. புகை முறை நன்கு செயல்பட்ட செயல்படாத இலக்கணங்கள்

புகைமுறை நன்கு செயல்பட்டது, படாதது, அளவுக்கு மீறி செயல்பட்டது ஆகியவற்றின் இலக்கணங்களை அறிந்து கொள்ள வேண்டும். நோய் தணிவது நன்றாகச் செயல்பட்டதன் இலக்கண மாகும். நோய் தணியாவிடில் சரியாகச் செயல்படவில்லை என்றறிக. உள்தாடை உலர்ந்து போதல், தொண்டை வறண்டு போதல், அழற்சி, நாவறட்சி, நினைவிழத்தல், தலைச்சுற்றல், வெளிக் காதுகளில் இரைச்சல், கண் பார்வை கோளாறு, மூக்கு நோய், உடல் வலிமை குறைதல் போன்ற இலக்கணங்கள் காணப்பட்டால் புகை முறை அளவுக்கு மீறிப் பயன்படுத்தப் பட்டதென்று உணர்க. 16-17

### 11.அ. புகை முறையை பயன்படுத்தக் கால அளவு

பிராயோகிக முறையில் வாய் மற்றும் மூக்கினால் மூன்று மூன்று முறை புகையை உள்ளிழுக்க வேண்டும். நோய் மற்றும் நோயாளியின் வலிமைக்கு ஏற்ப இம்முறையை இரண்டு தடவை பயன்படுத்த வேண்டும். கண்களில் நீர்பெருகும் வரை ஸ்நைஹிக முறையையும், கபம் வெளிவரும் வரை வைரேசனிக முறையை யும் பயன்படுத்த வேண்டும். எள், அரிசி கலந்த யவாகூவைப் பருகி வாமநீயப் புகை முறையை மேற்கொள்ள வேண்டும். உணவு உட்கொள்வதற்கு இடையில் காஸக்ன முறையை பயன்படுத்த வேண்டும். 18

### 12. விரணத்திற்கு உரிய புகை முறை

மடக்குகளுக்கு இடையே பொருத்தப்பட்ட குழாய் வழியாகப் புகை விரணப்பகுதிமேல் படும்படி செய்ய வேண்டும். விரணத்திற்குப் புகை போடுவதால் வலி குறைதல், விரணம் தூய்மைபெறுதல், விரணத்திலிருந்து கெட்ட நீர் முதலியன பெருகுவது நிற்றல் என்பன ஏற்படும். 19

### 13. நஸ்ய (மூக்கிலிடு மருந்து) இலக்கணமும், வகைகளும்

புகையைப் பயன்படுத்திச் சிகிச்சை செய்யும் முறை சுருக்கமாகக் கூறப்பட்டது. இனி மூக்கில் மருந்திடும் முறைகள் விளக்கப்படுகின்றன. 20

மூக்குத் துளைகளின் வழியாக மருந்து கலந்த எண்ணெய் ஆகியவற்றை உட்செலுத்துவது நஸிய முறையாகும். இது இரண்டு வகைப்படும் (1) சிரோவிரேசன முறை (2) எண்ணெய் முறை. இவ்விரண்டு முறைகளும் ஐந்து வகைகளாகும். அவை (1) நஸியம், (2) சிரோவிரேசனம் (3) பிரதிமர்சம் (4) அவபீடனம் (5) பிரதமனம் என்பனவாம். இவற்றில் நஸியமும், சிரோவிரேசனமும் சிறப்பானவை. பிரதிமர்சம் நஸியத்தின் ஒரு வகையாகும். அவபீடனமும், பிரதமனமும் சிரோவிரேசன முறைகளாகும். இவ்வாறு நஸியம் எனப்படும் முறை ஐந்து வகைகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது. 21

### 14. எண்ணெய் (ஸ்நைஹிக) நஸிய முறை விளக்கம்

வெற்றுத்தலை, கழுத்து, தோள், மார்பு ஆகிய பகுதிகளில் எண்ணெய் பசை தோற்றுவித்து வலிமையுண்டாக்கவும், கண்களை தோஷ மற்றவைகளாகச் செய்யவும் எண்ணெயைப் பயன்படுத்தும் முறை ஸ்நைஹிக நஸியமாகும். இம்முறை வாதபித்தங்களைப் போக்கும் மருந்துப் பொருள்களால் செய்த எண்ணெயைக் கொண்டு வாதத்தால் தோன்றிய தலைநோய், பல், தலை முடி, மீசை உரோமங்கள் தாமாக உதிர்ந்து போதல், கொடிய காதுவலி, காதுகளில் இரைச்சல், திமிரம், குரல் மாறுபாடு, மூக்கு நோய், வாய் உலர்தல், அவபாஹுகம் (இளம் வயதிலேயே முகச் சுருக்கங்கள் நரை முதலான முதுமையின் இலக்கணங்கள் தோன்றுதல்), கொடுமையான வாத பித்தங்களால் தோன்றக்கூடிய நோய்கள், வாய் நோய்கள் போன்ற துன்பங்களைப் போக்க இம்முறை பயன்படுத்தத்தக்கதாகும். 22

### 15. சிரோவிரேசனத்திற்கு உரிய நோயாளி

கபம் நிறைந்த தாடை உட்பகுதி தொண்டையிலும் தலையிலும் கபம் நிறைதல், சுவையின்மை, தலைப்பளு, வலி, பீநசம், அர்தாவபேதகம், கிருமிநோய், பிரதிச்யாயம் கால்கைவலி, மூக்கு மணமறியும் தன்மையை இழத்தல் போன்ற தோள் என்புக்கு மேற்பட்ட உடற்பகுதியில் தோன்றும் நோய்களில் சிரோவிரேசனத்திற்கு கூறப்பட்ட மருந்துப் பொருள்களால் (திப்பிலி, வாயுவிடங்கம், முருங்கை, கடுகு, நாயுருவி முதலியவற்றால்) அல்லது இப்பொருள்களைச் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெயால் சிகிச்சை செய்யப்படும். 23

### 16. ஸ்நைஹிக வைரேசனிக நஸியங்களுக்கு உரிய நேரம்

ஸ்நைஹிக - வைரேசனிக நஸியமுறைகளை உணவு கொள்ளும் நேரம் தவிர்த்து உணவு உட்கொண்ட சிலேத்துமத்துடன்

கூடிய நோயாளிக்கு முற்பகலிலும், பித்தத்துடன் கூடிய நோயாளிக்கு நண்பகலிலும், வாதம் கொண்ட நோயாளிக்கு பிற்பகலிலும் பயன்படுத்த வேண்டும். 24

### 17. நஸிய முறையைப் பின்பற்றும் முறை

மேகமூட்டம் இன்றி வானம் தெளிவாக இருக்கும் போது சிரோவிரேசனம் செய்யத்தகும். அவ்வமயம் நோயாளி மலமும், சிறுநீரும் கழித்த பிறகு சிறிதளவு உணவு உண்ண வேண்டும். பின்னர் பல் துலக்குதல், புகை பிடித்தல் ஆகியவற்றால் வாயையும் ஸ்ரோதஸ்களையும் தூய்மைப்படுத்திக்கொள்ள வேண்டும். பிறகு உள்ளங்கை சூட்டினால் வியர்க்கச் செய்து நன்கு பிசைந்து விடப்பட்ட தொண்டை, கன்னம், நெற்றி முதலான பகுதிகளைக் கொண்டிருக்க வேண்டும். அதன் பின் காற்று, வெய்யில், தூசி முதலியவை இல்லாத இல்லத்தில் (அறையில்) மல்லாந்து படுத்து கால் கைகளைப் பரப்பிக் கொண்டு தலையைச் சிறிது தாழ்த்தி வைத்துக் கொண்டிருக்க வேண்டும். கண்களைத் துணியால் மூடிக்கொள்ள வேண்டும். அப்பொழுது இடது கை சுட்டுவிரலால் மூக்கு முனையைச் சற்று உயர்த்திப் பிடித்துக் கொண்டு தூயதான மூக்குத் துளையில் வென்னீரால் நன்கு சூடாக்கப்பட்ட வெள்ளி, தங்கம், தாமிரம், மணி, மண் ஆகியவற்றிலொன்றாலான பாத்திரத்தில் அல்லது முத்துச்சிப்பியில் வைக்கப்பட்டுள்ள இளஞ்சூடுள்ள மருந்து எண்ணெயை வலது கையால் முத்துச் சிப்பி அல்லது பஞ்சால் மெல்ல மெல்ல ஒரு தாரையாக கண்களில் படாமல் விட வேண்டும். 25

மூக்கில் மருந்தை விடும்போது நோயாளி தன் தலையை அசைக்கக் கூடாது. சினங்கொள்ளுதல், உரையாடுதல், தும்முதல், சிரித்தல் முதலிய செயல்களையும் செய்யக் கூடாது. 26

ஏனெனில் இந்நிலையில் விடப்பட்ட எண்ணெய் தான் சேர வேண்டிய இடத்தை நன்கு அடையாமல் இருமல், பிரதிசியாயம், தலைநோய், கண்நோய் ஆகியவற்றைத் தோற்றுவிக்கும். 27

### 18. எண்ணெய் நஸியத்தின் அளவு

ஒவ்வொரு மூக்குத் துளையிலும் விடப்படும் எண்ணெயின் அளவு எட்டுத் துளிகளாகும். சுட்டு விரலின் இரண்டு கணுககள வரை தோய்த்து எடுத்தால் விழும் சொட்டுகள் 32, இது இரண்டாவது அளவு, மூன்றாம் கணுவினால் தோய்த்து

எடுத்தால் விழும் சொட்டுக்கள் 64, இது மூன்றாவது அளவு. இம்மூன்று அளவுகளில் நோயாளியின் வலிமைக்கு ஏற்றதைக் கொள்ள வேண்டும். 28

## 18.அ. எண்ணெய் நஸியத்திற்குப் பின் செய்ய வேண்டியவை

எண்ணெய் நஸிய மருந்தை நோயாளி ஒரு பொழுதும் விழுங்கக்கூடாது. அவ்வாறு செய்தால் சிருங்காடக மர்மம் என்பதை (உயிர் நிலையை) நனைத்து அது வாய் வழியே வெளிவரும். ஆதலால் கபத்தைத் தூண்டி விடும் எனும் அச்சத்தால் மருந்தை வாயில் வைத்துக்கொள்ளாமல் உமிழ்ந்து விட வேண்டும். 29-30

நஸிய மருந்தைப் பயன்படுத்திய பிறகு நோயாளியின் கழுத்து, கன்னம் முதலிய பகுதிகளைக் கையால் மெல்ல பிசைந்து வியர்க்கச் செய்து புகை பிடிக்கச் செய்ய வேண்டும். மற்றும் அபிஷ்யந்தியைத் தோற்றுவிக்கும் பொருள்களை உட்கொள்ளச் செய்ய வேண்டும். நோயாளியை தூசி, வெய்யில், எண்ணெய், புகை, மது திரவப்பொருளைப் பருகுதல், தலை முழுகுதல், அதிக அளவில் சவாரி செய்தல், சினம் கொள்ளுதல் ஆகியவற்றை விலக்கச் செய்ய வேண்டும். 31

## 18.ஆ. எண்ணெய் நஸிய முறையைச் சீராக அல்லது அதிக அளவு பயன்படுத்தியதன் இலக்கணம்

எண்ணெய் நஸிய முறையைப் பயன்படுத்துவதில் சீராகப் பயன்படுத்துதல், அளவுக்கு மீறி பயன்படுத்துதல், சரியாகப் பயன்படுத்தாமல் அளவு குறைவாகச் செய்தல் ஆகியவற்றின் இலக்கணங்களாவன :-

எண்ணெய் நஸிய முறையால் தலை இலேசாகத் தோன்றுதல், சுகமாக உறங்குதல், துன்பமின்றி விழித்துக் கொள்ளுதல், நோயின் விகாரங்கள் தணிதல், புலன்கள் தூய்மை பெறுதல் மனத்தில் தெளிவும் சுகமும் தோன்றுதல் என்பன தோன்றினால் சீராக பயன்பட்டதாக அறிக. 32-33

கபம் வெளிவருதல், தலை பளுவாகத் தோன்றுதல், புலன் களில் அமைதியின்மை என்பன தோன்றினால் நஸிய முறை அளவுக்கு மீறிப் பயன்படுத்தப்பட்டதாக அறிக. இதற்கு வறட் சியைத் தோற்றுவிக்கும் பணிவிடைகளை செய்ய வேண்டும். 34

வாதம் முதலியவற்றின் தன்மைகளில் மாறுபாடு, புலன்களின் வறட்சி, துன்பங்கள் தணியாமை எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் எண்ணெய் நஸிய முறை

குறைந்த அளவில் பயன்படுத்தப்பட்டதாக அறிக. இந்நிலையில் மீண்டும் நஸிய முறையைப் பயன்படுத்த வேண்டும். 35

## 19. சிரோவிரேசன முறையின் அளவு

தோஷம் மற்றும் நோயாளியின் வலிமைகளுக்கு ஏற்ப நான்கு, ஆறு, எட்டு சொட்டுகள் வீதம் ஒவ்வொரு மூக்குத் துளையிலும் விட வேண்டும். 36

## 20. வைரேசனிக நஸியத்தை அளவோடு, அளவில் குறைந்து, அளவுக்கு மீறிப் பயன்படுத்துதலின் இலக்கணங்கள்

சாஸ்திரமறிந்தவர்கள் அளவோடு, அளவில் குறைந்து, அளவுக்கு மீறி சிரோவிரேசன முறையைப் பயன்படுத்திய 'லக்கணங்களை விளக்கியுள்ளனர். 37

தலை இலேசாகுதல், சுரோதஸ்கள் தூய்மை பெறுதல், நோய் தணிதல், மனமும், புலன்களும் தெளிவாகுதல், தலை தூய்மை பெறுதல் என்பன வைரேசன முறையைச் சீராகப் பயன் படுத்தியதன் இலக்கணங்களாகும். 38

அரிப்பு, உபதேஹம், சுரோதஸ்கள் பளுவாகத் தோன்றுதல், கபம் ஒழுகுதல் என்பன தலைப் பகுதியில் குறைந்த அளவில் தூய்மைப்படுத்தப்பட்ட இலக்கணங்களாகும். 39

மஸ்துலங்கம் வெளிப்படுதல், வாத வளர்ச்சி, புலன்களில் கோளாறு, தலை வெறுமை கொண்டதாகத் தோன்றுதல் என்பன அளவுக்கு மீறி வைரேசன முறை பின்பற்றியதன் இலக்கணங் களாகும். 40

குறைந்த அளவு அல்லது அதிக அளவு பயன்படுத்தப்பட்ட போது கபம் மற்றும் வாதத்தைத் தணிக்கும் பணிவிடைகள் செய்ய வேண்டும். சீராகப் பயன்படுத்துவதால் நன்கு தூய்மை பெற்ற போது நெய்யை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 41

ஒரு நாள், இரண்டு நாட்கள், ஏழு நாட்கள் இருபத்தோரு நாட்கள் அல்லது மருத்துவர் நோயாளிக்குத் தகுந்த அளவைக் கண்டு தோஷங்கள் நீங்கக் கூடிய நாட்கள் வரை இந்த நஸிய முறையைப் பின்பற்றலாம். 42

வாதத்தால் மிகவும் துன்புற்றுள்ள நோயாளிக்கு மருத்துவர் இரு வேளைகளிலும் நஸிய முறையைப் பின்பற்றலாம். 43

## 21. நஸியத்திற்குத் தகுந்தவர்

கொழுப்பு மற்றும் கபத்தால் சூழப்பட்ட தலை கொண்டவர், பாம்பின் விஷத்தால் நினைவற்றிருப்பவர் ஆகியவர்களுக்கு சிரோவிரேசனத்திற்கு உரிய பொருள்களில் ஏதேனும் ஒன்றை அரைத்து அல்லது கசக்கிச் சிரோவிரேசனம் போல அவபீடன நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். இளைத்தவர், இரத்த பித்த நோய் உள்ளவர் ஆகியவர்களுக்கு சர்க்கரை, கருப்பஞ்சாறு, பால், நெய், புலால் சாறு ஆகியவற்றில் ஒன்றைப் பயன்படுத்த வேண்டும். 44

இளைத்தவர், வலிமை குறைந்தவர், அச்சம் மிகுந்தவர், மென்மையான உடல் கொண்டவர், பெண்கள் ஆகியவர்களுக்கு தலையைத் தூய்மைப்படுத்த சிரோவிரேசனப் பொருள்களாலான எண்ணெய் மற்றும் இப்பொருள்களின் விழுது ஆகியவை பயன்படுபடுத்ததக்கவை. 45

## 22. பிரதமன நஸியமுறை

நினைவாற்றல் (உணர்ச்சியில்) கோளாறு, கிருமி, நஞ்சு ஆகியவற்றால் துன்புறுபவருக்கு சிரோவிரேசனீயப் பொருள் களாலான தூளைப் பிரதமன (மூக்குத் துளைக்குள் ஊதிச் செலுத்துதல்) நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். 46

## 23. நஸிய முறைக்குத் தகாதவர்கள்

உணவு உண்டவர், பட்டினிகிடப்பவர், மிக்க ளமைப் பருவம் கொண்டவர், பிரதிசியாய நோய் கொண்டவர், கருவுற்ற பெண், எண்ணெய், நீர் மது போன்ற ஏதேனும் திரவப் பொருளைப் பருகியவர், அசீரண நோயுள்ளவர், வஸ்தி முறையைப் பயன்படுத்திக்கொண்டுள்ளவர், சினம் கொண்டவர், இடு விஷத்தால் துன்புறுபவர், நாவறட்சி, வருத்தம் கொண்டவர், சோர்வுள்ளவர், சிறுவர், முதியவர், சிறுநீரையும் மலத்தையும் தடுத்துள்ளவர், தலை முழுகிக் குளிக்க விரும்புகிறவர், மாத விடாய் அற்றவள், மாதவிடாய் கொண்டுள்ளவள் ஆகியவர் களுக்கு வானம் மேகத்தால் சூழப்பட்டுள்ள நாளிலும் மூக்கில் மருந்திடும் நஸிய முறை மற்றும் புகை முறை ஆகிய இரண்டையும் விலக்க வேண்டும். 47

## 24. நஸிய முறையால் விளையக்கூடிய தீங்கு

அளவில் குறைந்து அல்லது அளவுக்கு மீறி நஸிய முறையைப் பயன்படுத்துவதாலும், மிக்க குளிர்ச்சி, மிகுந்த

உஷ்ணம் உள்ளதாலும் விரைவாகப் பயன்படுத்துவதாலும் தலையை அதிக அளவு தாழ்த்தி வைத்துக் கொண்டதாலும் தும்முவதாலும் தலையை அதிகம் அசைப்பதாலும் உணவு உட்கொண்டபோது அல்லது விலக்கத்தக்க நிலைகளில் நஸிய முறையைப் பயன்படுத்துவதாலும் தோஷங்கள் கிளர்ச்சி பெறுவதால் அல்லது தோஷங்கள் அளவில் குறைந்து போவதால் நாவறட்சி, ஏப்பம் போன்ற துன்பங்கள் விளையலாம். 48

நஸியம் மற்றும் சிரோவிரேசன முறைகளில் தவறு ஏற்படுவதால் தோஷங்கள் கிளர்ச்சி பெறுதல், இயற்கையாக இருக்க வேண்டிய அளவில் குறைந்து போதல் என இரு வகையான துன்பங்கள் தோன்றக்கூடும். நஸிய முறைத் தவற்றால் தோன்றியவை, வேறான சிரோவிரேசன முறையால் தோன்றியவை என வேறுபடுத்தித் தெரிந்து கொள்ள வேண்டும். 49

## 25. நஸியத்தாலான துன்பத்திற்குச் சிகிச்சை

தோஷங்கள் கிளர்ச்சி பெற்றபோது தோன்றும் துன்பங்களுக்கு அத்தோஷங்களைத் தணிக்கும் அல்லது தூய்மைப் படுத்தும் முறைகளையும், தோஷங்கள் அளவில் குறைவதாலான துன்பங்களுக்கு அவற்றிற்கு மாறான மற்றும் தோஷங்களுக்கு அநுகூலமான உடல் செழிக்கச் செய்யும் (ப்ரும்ஹண) முறைகளையும் கையாள வேண்டும். 50

## 26. பிரதிமர்ச நஸியத்திற்குத் தகுந்த வேளை

பிரதிமர்ச நஸியம் என்பது பதினான்கு வகை வேளைகளில் ஏற்றதாகும். அவை: 1) காலையில் துயில் எழுந்ததும் 2) பல் துலக்கியதும் 3) வீட்டிலிருந்து வெளிவந்ததும் 4) உடற்பயிற்சி செய்ததும் 5) கலவி புரிந்ததும் 6) வழி நடப்பதால் சோர்வு அடைந்ததும் 7) சிறுநீர் கழித்த பின்பும் 8) அபானவாயு கழித்த பின்பும் 9) கபளம் (வாயில் மருந்து கொள்ளல்) செய்த பின்பும் 10) கண்களில் மையாக மருந்திடுதலுக்கு பின்பும் 11) உணவு உட்கொண்ட பிறகும் 12) தும்மல் வெளியேறியதும் 13) பகலில் தூங்கி விழித்ததும் 14) மாலை நேரத்திலும். இந்நேரங்களில் பிரதிமர்சம் எனும் நஸிய முறையைக் கையாள வேண்டும். 51

## 27. தக்க நேரத்தில் பயன்படுத்திய பிரதிமர்சத்தின் பயன்

காலையில் துயில் எழுந்ததும் பிரதிமர்சநஸ்யத்தைப் பயன் படுத்துவதால் இரவில் மூக்கில் சேர்ந்த அழுக்கை வெளியேற்றும் மற்றும் மனதைத் தெளிவு பெறச் செய்யும். பல் துலக்கியதும்

பயன்படுத்திய பிரதிமர்சம் பற்களைத் திடப்படுத்தும் மற்றும் வாயில் நறுமணம் தோற்றுவிக்கும். வீட்டிலிருந்து வெளிவரும் போது பயன்படுத்திய பிரதிமர்சம் மூக்கில் ஈரப்பசை இருப்பதால் தூசி, புகை முதலியவற்றால் தீங்கு நேராமல் தடுக்கும். உடற்பயிற்சிக்கு பின், கலவிக்குபின், வழி நடத்தலால் சோர்வுற்றதும் பிரதிமர்சம் பயன்படுத்துவதால் சோர்வு நீங்கும். சிறுநீர் அபானம் வெளியேறிய பின் பயன்படுத்திய பிரதிமர்சம் பார்வையைத் தெளிவுபடுத்தி கண்கள் பளுவாகத் தோன்றுதலை நீக்கும். கபளம், கண்களில் மை இடுதல் ஆகியவற்றிற்குப் பின் பயன்படுத்திய பிரதிமர்சம் கண்களை தெளிவுபடுத்தும். உணவு உண்ட பிறகு பயன்படுத்திய பிரதிமர்சம் சுரோதஸ்களை தூய்மைப்படுத்தும் மற்றும் உடலை இலேசாக்கும். வாந்தி எடுத்ததும் பிரதிமர்சம் பயன்படுத்தினால் ஸ்ரோதஸ்களில் ஒட்டிக்கொண்டுள்ள கபத்தை வெளிப்படுத்தி உணவில் சுவையுண்டாக்கும். பகலில் தூங்கி விழித்ததும் பயன்படுத்திய பிரதிமர்சம் தூக்க மயக்கம், உடல் பளுவாகத் தோன்றுதல், மலம் ஆகியவற்றை நீக்கி மனத்தில் ஒருமைப்பாட்டைத் தோற்றுவிக்கும். மாலையில் பயன்படுத்திய பிரதிமர்சம் சுகமான உறக்கத்தைத் தந்து காலையில் தக்க நேரத்தில் கண் விழிக்கச் செய்யும். 52

### 28. பிரதிமர்சத்தின் அளவு

நஸியத்தில் பயன்படுத்தப்பட்டுள்ள எண்ணெய் சிறிதளவு தும்மல் வந்த பிறகு வாய்க்குள் வருமானால், அது பிரதிமர்சத்திற்குத் தகுந்த அளவு என்று அறிந்து கொள்க. 53

### 28.அ. நஸியத்தின் பொதுப் பயன்கள்

நஸிய முறையால் தோள் எலும்புக்கு மேல் உள்ள உடற்பகுதியில் தோன்றும் நோய்கள் தணியும். புலன்கள் தெளிவு பெறும், வாய் நறுமணமுள்ளதாகும். 54

தாடை, பல், தலை, திரிகப்பகுதி (முதுகு எலும்பு இடுப்பு எலும்புடன் இணையும் பகுதி), புயம், மார்பு எனும் பகுதிகள் வலிமை பெறும். முதுமையில் சுருக்கம், நரை, பல் விழுதல், வங்கு முதலியவை தோன்றா. 55

### 29. தோஷங்களுக்கு ஏற்ற எண்ணெய்

கபத்துடன் கூடிய வாத சீற்றத்தில் எண்ணெய், வாதத்தில் வசை (நிணநீர்), பித்தத்தில் நெய், வாதபித்தத்தில் மஜ்ஜை (கொழுப்பு) ஆகியவை பயன்படுத்தத்தக்கவை. 56

இவ்வாறு நான்கு வகை எண்ணெய்களைப் பயன்படுத்தும் முறை கூறப்பட்டது. இவற்றில் சிலேத்துமத்துக்கு இருக்கையான இடங்களுக்குப் பகையற்றதாகையால் எண்ணெய் சிறந்ததாகும்.57

**30. கபளங்கள் நான்கு வகை**

இனி கபளதாரண முறை (வாயில் மருந்தை அடக்கிக் கொண்டிருத்தல்) விளக்கப்படுகிறது. கபளம் நான்கு வகைப்படும். அவை (1) ஸ்நேஹி (எண்ணெய் உள்ளது) (2) பிரஸாதி (தெளிவு படுத்துவது) (3) சோதனம் (தூய்மைப்படுத்துவது) (4) ரோபணம் (ஆற்றுவது) என்பனவாம். 58

வாதசீற்றத்தில் எண்ணெய் மற்றும் சூடுள்ள எண்ணெய் மருத்துக் கபளம், பித்த சீற்றத்தில் இனிப்பு மற்றும் குளிர்ந்ததுமான பிரஸாதன கபளம், கபத்தில் கார்ப்பு, புளிப்பு, உவர்ப்பு, வறட்சி, உஷ்ணம் ஆகியவற்றைக் கொண்டதுமான சோதன கபள முறை பயன்படுத்தத்தகும். 59

விரணத்தில் துவர்ப்பு கசப்பு இனிப்பு கார்ப்பு, சூடு ஆகியவை உள்ள ரோபண கபளம் பயன்படுத்தத்தகும். நான்கு வகைக் கபளங்களின் சிறப்பு இவ்வாறு விளக்கப்பட்டுள்ளது. 60

**31. கபத்தைப் போக்கும் திரிகடுகம் முதலான கபளம்**

திரிகடுகம், வசம்பு, கடுகு, கடுக்காய் ஆகியவற்றின் விழுதை எண்ணெய், சுக்தம் எனும் கள், ஸுரை எனும் 'மது, பசுவின் சிறுநீர், க்ஷாரம், தேன் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றில் கலக்கி (கரைத்து) உப்பு சேர்க்க வேண்டும். அதைச் சூடுபடுத்திக் கழுத்து, கன்னம், நெற்றி ஆகிய பகுதிகளைக் கசக்கி வியர்க்கச் செய்த பின் கபள தாரணம் (வாயில் வைத்துக் கொள்ளல்) செய்ய வேண்டும். 61

**32. கபளம், கண்டுஷம் (கொப்பளித்தல்) ஆகியவற்றின் வேற்றுமை**

மருந்துப் பொருள் வாயில் துன்பமின்றி இங்குமங்கும் இயக்க இயலுதல் அல்லது பரவி கொண்டிருத்தல் கபளம் எனவும், அவ்வாறு இயக்க இயலாமல் இருத்தல் அல்லது பரவாமல் இருத்தல் கண்டூஷம் எனவும் அறிக. 62

**33. கண்டூஷதாரண கால அளவு**

கண்டூஷம் (வாயில் மருந்தைக் கொண்டு கொப்பளித்தல்), கபளம் என்பனவற்றில் ஒருமித்த மனத்துடன் உடலை நேராக

நிமிர்த்திய வண்ணம் மருந்தைத் தொண்டை கபத்துடன் நிறைவு பெறாதவரையிலும் மூக்குத்துளை கண் ஆகியவற்றில் நீர் தளும்பும் வரையிலும் வாயில் வைத்துக் கொண்டிருக்க வேண்டும். அதன் பிறகு வாயிலிருந்து கபளத்தை நீக்கி (உமிழ்ந்து) வேறு கபளத்தை வைத்துக் கொள்ள வேண்டும். 63

## 34. தோஷங்களுக்கு ஏற்ப கபளம்

இவ்வாறு எண்ணெய், பால், தேன், சாறு, பசுவின் சிறுநீர், புளிப்புக்காடி, கஷாயம் மற்றும் வெந்நீர் ஆகியவற்றைத் தோஷங்களுக்கு ஏற்றபடி கபளம் செய்தல் நன்மை தரும். 64

## 35. தூய கபளத்தின் இலக்கணம்

நோய் தணிதல், மகிழ்ச்சி தோன்றுதல், குற்றமின்மை, வாயில் இலேசுத் தன்மையும், புலன்களின் தெளிவும் தோன்றுதல் என்பன தூய கபளத்தின் இலக்கணங்களாகும். 65

கபள முறை குறைந்த அளவில் பயன்படுத்தப்பட்டால் உணர்ச்சியின்மை, கபம் வளர்தல், சுவை தெளிவாகத் தெரிய வராமை என்பன உண்டாகும். அளவுக்கு மீறி பயன்படுத்தப் பட்டால் முகம் பக்குவமடைதல், வாய்ப்புண் வருதல், உலர்தல், நாவறட்சி, சுவை இன்மை, கிலமம் (கொழகொழப்புடன்) கூடியிருத்தல் போன்றவை காணப்படலாம். 66

## 36. அழற்சியைப் போக்கும் கபளம்

சோதனீய கபளங்களில் எள், நீலாம்பல், நெய், சர்க்கரை, பால், தேன் ஆகியவற்றைக் கபளமாக வாயில் அடக்கி வைத்துக் கொண்டிருந்தால் அது வாயில் எரிச்சலுடன் கூடிய அழற்சியைத் தீர்க்கும். சுருக்கமாக இவ்வாறு கபள கிரஹண முறை கூறப்பட்டது. 67-68

## 37. முக நோயில் பிரதிஸாரண முறை

தன் அறிவாற்றலைக் கொண்டு தேர்ந்து எடுத்த மருந்துப் பொருள்களாலான விழுது, ரஸமுறை, தடித்த (கரகரப்புள்ள) தூள், தூள் ஆகிய தோற்றத்தில் செய்த மருந்தால் பிரதி ஸாரணம் (தூவித் தேய்த்தல்) என்னும் முறையைக் கையாள வேண்டும். 69

## 38. பிரதிஸாரணம் செய்த பின் செய்ய வேண்டியவை

முகத்தில் (வாயில்) நோய் கொண்டுள்ள நோயாளிக்குத் தோஷங்களுக்கு ஏற்றவாறு மருந்தை விரல் முனையில் கொண்டு

நோயுள்ள பகுதியில் தடவித் தேய்க்க வேண்டும். இதில் குறைந்த அளவு அல்லது அதிக அளவு பயன்படுத்தலின் விளைவுகள் முதலியவற்றை கபளக் கிரஹத்திற்குக் கூறியபடியே எனக் கொள்க. 70

கபளதாரணத்தால் நீங்கக் கூடிய நோய்கள் பிரதிஸாரண முறையாலும் தீரும். பிரதிஸாரண முறையைப் பின்பற்றும் போது தோஷத்தைப் போக்கக்கூடிய அபிஷ்யந்தியை விளைவிக்காத பொருள்களை உண்ணச் செய்ய வேண்டும். 71

**ஸுசுருதஸம்ஹிதை - சிகித்ஸாஸ்தானத்தில்**
**தூம நஸ்ய கபளகிரஹ சிகித்ஸிதம் எனும்**
**நாற்பதாம் அத்தியாயம் முற்றும்.**

**ஸுசுருதஸம்ஹிதை சிகித்ஸாஸ்தானத்திற்கு**
**சிருங்கட்டூர் நடாதூர் (எஸ்.என்.) ஸ்ரீராமதேசிகன் எழுதிய**
**தமிழ் மொழிபெயர்ப்பு முற்றுப்பெற்றது.**

# ஸுசுருதஸம்ஹிதை

# உத்தரஸ்தானம்

## முதல் அத்தியாயம்

## *ஔபத்ரவிகம்

பகவான் ஸுசுருதர் முதலில் தாம் ஸூத்ரஸ்தானத்தில் செய்துள்ள பிரதிஞ்ஞையை ஒட்டி ஸூத்ர-நிதான-சாரீர-சிகித்ஸா - கல்ப ஆகிய ஐந்து ஸ்தானங்களை விளக்கிய பிறகு மேலும் கூற வேண்டிய விஷயங்களை இந்த உத்தரஸ்தானத்தில் விளக்குகிறார்.

அஷ்டாங்கமாகிய ஆயுர்வேதம் சல்ய பிரதானமாக இந்தத் தந்திரம் கூறப்படுவதால் ஸூத்ரஸ்தானம் முதலாக ஐந்து ஸ்தானங்களிலும் சிறப்பாக சல்ய சிகிச்சைகளையும் அதற்கு ஏற்ப காய சிகிச்சை, விஷ சிகிச்சை, ரஸாயன சிகிச்சை, வாஜீகரண சிகிச்சை .என்பனவற்றை அந்தந்த இடத்திற்கு ஏற்ப விளக்கியுள்ளார். இனி சாலாக்ய - பூத - கௌமார பிருத்யம் எனும் மூன்று அங்கங்களும் காய சிகிச்சையில் சொல்லாமல் விடபட்டுள்ள பகுதிகளையும் விளக்கவேண்டியுள்ளது. மேலும் ஆயுர்வேதம் ஸ்வஸ்தவிருத்தபிரதானம் ஆகையால் அதையும் விளக்கவேண்டியுள்ளது. முன்பு ஸூத்திரம் முதலிய ஸ்தானங்களில் அங்கங்கு "மற்ற பொருள்களை உத்தரதந்திரத்தில் விளக்குவோம். இங்கு கூறப்பட்டவை, விளக்கப்படாதவையுமான பொருள்களை உத்தர தந்திரத்தில் கூறுவோம்" என்று உரைத்துள்ளார். ஆகவே இந்த உத்தரதந்திரம் அப்பொருள்களை விளக்கத் தோன்றியதாகும்.

முதலில் உபத்ரவங்களை (Complications) முக்கியமாகக் கொண்ட பொருள்களை இந்த அத்தியாயத்தில் விளக்குவோம். 1

### 1. உத்தரஸ்தானத்தில் கூறப்படும் விஷயங்கள்

ஸூத்ரஸ்தானம் முதலாக கல்பஸ்தானம் வரை நூற்றிருபது (46 + 16 + 10 + 40 + 8 = 120) அத்தியாயங்களிலும் அங்கங்கு "இந்தப் பொருளை உத்தரதந்திரத்தில் விளக்குவோம்" என்று கூறப்பட்டது. அப்பொருள்கள் இந்தத் தந்திரத்தில் விளக்கப்படும்.

---

* ஔபத்ரவிகம் - ஒரு நோயின் அடியாக தோன்றும் வேறு துன்பங்கள். அத்தகையத் துன்பங்களைச் சார்ந்த நோய்களுக்கு விளக்கம் தருவதால் இந்த அத்தியாயம் ஔபத்ரவிகம் எனப் பெயர் பெற்றது.

விதேஹ மன்னராகிய நிமி என்பவரால் இயற்றப்பட்ட சாலாக்யதந்திரத்தில் கூறப்பட்டுள்ள சிகிச்சைகள், நாம் கண்கூடாகக் கண்டறிந்த குமாரரோக சிகிச்சைகள், வாத பித்த கப ஸந்நிபாத ரக்தாகந்துக ஹேதுக்களாகிய உடல் நோய் களுக்குரிய காய சிகிச்சையின் விசேஷப் பொருள்கள், பூதத்தின் தொடர்பால் ஆகந்துகமாக தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சைகள், ஸ்வஸ்தவிருத்தத்திற்கு அனுகூலமான அறுபத்தி மூன்று ரஸஸம்ஸர்க பேதங்கள் முதலிய பொருள்கள் இந்த ஸ்தானத்தில் விளக்கப்படுகின்றன. 2-8

நிமி என்ற விதேக மன்னரால் இயற்றப்பட்ட ஆழம் காண முடியாத கடல் போன்ற சாலாக்ய தந்திரத்தை ஒட்டி இந்த உத்தரஸ்தானத்தில் முதலில் தலையில் தோன்றக்கூடிய நோய் களின் எண்ணிக்கை. இலக்கணம். சிகிச்சையால் தீர்க்கக்கூடியவை. தீர்க்க இயலாதவை ஆகிய பொருள்கள் விளக்கப்படுகின்றன. 9

**2. நேத்ர புத்புதஸ்வரூபம்**

கண்விழி அவரவர்களுடைய அங்குல அளவால் இரண்டங் குல நீளமும், தம் கட்டை விரலின் முதற் கணுவின் குறுக்களவுக்குச் சமமான அகலமும், மொத்தம் இரண்டரை அங் குல அளவும் கொண்டதாகும். மேலும் கோளம் போலப் பசுவின் முலைக்காம்பு போன்ற தோற்றம் கொண்டிருக்கும். இந்த நேத் திரபுத்புதம் ஐம்பெரும்பூதங்களைச் சார்ந்ததென்றும் தெளிக. 10

**3. நேத்ரபுத்புதத்தில் உள்ள பூதங்களின் பகுதிகள்**

கண் விழியில் உள்ள மாமிசம் நிலத்தையும், இரத்தம் ஒலியையும், கருவிழி வாதத்தையும், வெள்ளைவிழி நீரையும், கண்ணீர் பெருகும் நுண்ணியவழி ஆகாயத்தையும் சார்ந்தவை யாகும். 11

**4. திருஷ்டிபாக விளக்கம்**

கண் விழியில் நிமி மன்னர் கூறிய விளக்கம் வருமாறு: கண்விழியின் மொத்த அளவில் மூன்றில் ஒரு பங்கு கரு விழியின் அளவாகும்.

கண் விழியில் ஐந்து மண்டலங்கள், ஆறு இணைப்புகள், ஆறு படலங்கள் உள்ளன. மண்டலங்கள் என்றால் விழியைச் சுற்றியுள்ள வட்ட ரேகையைப் போன்றவை எனப் பொருள். வேறு வேறு பகுதிகள் இணைந்திருப்பது ஸந்தியாகும். படலம் என்றால் கண் விழியைச் சார்ந்த புரைகள்.

### 5. ஐந்து மண்டலங்கள்

கண் இரப்பைகளின் மேல் உரோமங்களைச் சார்ந்துள்ளது ஒரு மண்டலம். இரப்பைகளின் அடியில் உரோமங்களுக்குப் பின்பக்கத்தில் உள்ளது ஒரு மண்டலம். இரப்பைகளுக்கும், வெள்ளை விழிக்கும் இடையில் உள்ளது ஒரு மண்டலம். கருவிழிக்குள் உள்ள மணி போன்ற பார்வைக்குரிய பகுதியைச் சுற்றி உள்ளது ஒரு மண்டலம். ஆக ஐந்து மண்டலங்கள் உள்ளன.

### 6. ஆறு இணைப்புகள்

கண் இரப்பைகளின் மேல் இரப்பைக்கும் உரோமங்களுக்கும் இடையில் ஓர் இணைப்பு, இரைப்பைக்கும் வெண்விழிக்கும் இடையில் ஒரு இணைப்பு, வெள்ளை விழிக்கும் கருவிழிக்கும் இடையில் ஓர் இணைப்பு, கரு விழிக்கும் திருஷ்டி மண்டலத்திற்கும் இடையில் ஓர் இணைப்பு, கண்ணும் மூக்கும் சேரும் இடத்தில் தாரகம் எனப்படும் கோணத்தில் ஓர் இணைப்பு, கடைக்கண்ணில் ஓர் இணைப்பு - ஆக ஆறு இணைப்புகள் (ஸந்திகள்) உள்ளன.

இணைப்புகளை அறிவாற்றலால் கண்டு கொள்ள வேண்டுமே தவிர விளக்கமாக வெளிப்பார்வைக்கு இவை காணப்படா என்பதை உணர வேண்டும். 12-16

### 7. ஆறு படலங்கள்

கண் இரப்பையைச் சார்ந்த படலங்கள் இரண்டு. கண் விழியைச் சார்ந்த படலங்கள் நான்கு. இந்த நான்கு புரைகளில்தான் கொடியதான திமிரம் எனும் கண் நோய் தோன்றும்.

இப் படலங்கள் நான்கில் மேலிருக்கும் புரை ஒளி நீர் ஆகியவற்றைச் (இரத்தம்-நீர்) சார்ந்திருக்கும். அதற்குள் இருக்கும் புரை மாமிசத்தைச் சார்ந்திருக்கும். அதற்குள் உள்ள மூன்றாவது புரை கொழுப்பைச் சார்ந்திருக்கும். அதற்குள் உள்ள நான்காவது புரை எலும்பைச் சார்ந்திருக்கும்.

இந்தப் புரைகள் கண்ணில் உள்ள திருஷ்டி மண்டலத்தின் அளவில் ஐந்தில் ஒரு பங்கு தடிமனாக இருக்கும். இங்கு கூறப்பட்ட அளவுகள் பொதுவானவை. சிலருக்கு அதிகமாகவோ குறைவாகவோ இருப்பதுண்டு. 17-18

### 8. நேத்ரபந்தன நிரூபணம்

கண்விழிக்கு உட்பகுதியில் பழத்தின் காம்புகளைப் போல இருப்பவை நேத்ரபந்தனங்கள் எனப்படும். இவை தோஷங்களை (வாத பித்த கபங்களை)ப் பரவச் செய்யும் ஸிரைகள், தமனிகள்,

கண்டரங்கள், மேதஸ், சிரம், கபாலம் ஆகியவற்றைச் சார்ந்த நுட்பமான உறுப்புகள். அவற்றைச் சார்ந்து இழைகளைப் போல சிரக்கபாலத்திற்குள் உள்ள போதகரூபமான சிலேத்துமபாகத் துடன் பிணைக்கப்பட்டு இரண்டாக இருந்து பிணைந்திருக்கும். இத்தகைய பந்தனங்களில் சேர்ந்துள்ள சிரைகளைச் சார்ந்து மேல் நோக்கிப் பரவும் வாத பித்த கப இரத்த ரூபமான தோஷங்களால் பல கொடிய கண் நோய்கள் தோன்றும்.

**9. கண் நோயின் பொது இலக்கணம்**

கண் நோய்களில் கண்விழிகள் கலங்கி நோயுற்றிருத்தல், கண்ணீர் பீளையுடன் கூடியிருத்தல் கண் பளுவாகத் தோன்றுதல், எரிச்சல், அரிப்பு, சிவந்திருத்தல் மற்றும் அந்தந்த தோஷங்களுக்கு உரிய இலக்கணங்களை ஓரளவு கொண்டிருத்தல், கண்ணிரப்பைகளிலும் விழிகளிலும் குத்தல் வலி மணல் விழுந்திருப்பது போலிருத்தல் (முள் குத்துவது போலிருத்தல்) ஆகிய இலக்கணங்களுடன் பார்வையும் குறைந்து காணப்படும்.

**10. கண் நோய்களுக்கு மாறு செய்தல்**

அறிவுள்ள மருத்துவர் கண்களில் உள்ள தோஷங்களுக்கு நிலைகளை ஆராய்ந்து எளிதில் தீர்க்கக்கூடிய நோய்களில் தோஷங்களுக்கு ஏற்ற சிகிச்சையைச் செய்ய வேண்டும். துவக்கத் திலேயே சிகிச்சை செய்யாமல் விட்டால் கண் நோய்கள் எளிதில் சிகிச்சைக்கு உட்படாதவையாகவோ மிகவும் சிரமப் பட்டுத் தீர்க்கக்கூடியவையாகவோ ஆகும்.

**11. சுருக்கமாகச் சிகிச்சை**

கண் நோய்கள் அனைத்திலும் பொதுவாக கீழே கூறப்படும் செயல்களைக் கைவிடுதலே சுருக்கமாகச் சிகிச்சை எனலாம். வாதம் முதலிய தோஷங்களைத் தணித்தலும் சிகிச்சையாகும். சிறப்பான சிகிச்சை முறைகள் பிறகு கூறப்படும். 19-25

**12. கண் நோய்களுக்குப் பொது நிதானம்**

வெயில், நெருப்பு முதலியவற்றால் துன்புற்றவர் உடனே குளிர்ந்த நீரில் முழுகுதல், தொலைவில் இருக்கும் பொருள்களை அடிக்கடி உற்று நோக்குதல், தூங்க வேண்டிய நேரத்தில் தூங்காமல் கண் விழித்தல், தூங்கக் கூடாத நேரத்தில் உறங்குதல், பிரியமுள்ளவர்களின் பிரிவால் மிக்க துக்கப்படுதல், மிக்க சினங் கொள்ளுதல், பனி, காற்று, மழை முதலியவைகளால் அல்லது காய்ச்சலால் தோன்றும் உடற் துன்பத்தால் தாக்கப்படுதல், கலவியில் அளவுக்கு மீறி ஈடுபடுதல், ஆரநாளம், காடி, கள்

போன்ற புளிப்புச் சுவை உள்ள பொருள்களையும், கொள்ளு, உளுந்து ஆகியவற்றையும் அளவுக்கு மீறி உட்கொள்ளுதல், மலம் சிறுநீர் முதலியவற்றைத் தடுத்தல், வியர்வை மிகுதியாகத் தோன்றி கண்களில் புகுதல், தூசி புகை முதலியன கண்களில் புகுதல், வாந்தியைத் தடுத்தல், வாந்தி மிகுதியாக ஏற்படுதல், கண்ணீரைப் பெருகவிடாமல் தடுத்தல், மிகச் சிறிய பொருள்களை உற்று நோக்குதல் போன்றவற்றால் வாதம் முதலிய தோஷங்கள் சீற்றமுற்றுக் கண்களில் விகாரத்தைத் தோற்றுவித்து நோய்களை உண்டாக்கும். 26-27

## 13. வாதம் முதலியவற்றால் தோன்றும் கண் நோய்களின் எண்ணிக்கை

வாதத்தால் பத்து, பித்தத்தால் பத்து, கபத்தால் பதிமூன்று, இரத்த தோஷத்தால் பதினாறு, ஸந்நிபாதத்தால் இருபத்தைந்து, புறக்காரணங்களால் இரண்டு ஆக மொத்தம் கண்ணோய்கள் எழுபத்தாறு என மருத்துவர்கள் கணக்கிட்டுள்ளனர். 28

## 14. வாதத்தால் தோன்றும் கண் நோய்களின் விளக்கம்

வாதத்தால் தோன்றும் கண்நோய்களில் ஹுதாதிமந்தம், நிமிஷம், கம்பீரிகா, திருஷ்டி, வாதஹுதவர்த்மா என்பன சிகிச்சைக்கு உட்படாதவை. வாதத்தால் தோன்றும் காசரோகம் என்பது காலம் கடத்தக்கூடியது. அதாவது யாப்யம் ஆகும். சுஷ்காக்ஷிபாகம், அதிமந்தம், அபிஷ்யந்தம், வாதபர்யயம், அந்யதோஹுதம் என்பன ஐந்தும் சிகிச்சையால் எளிதில் தீர்க்கக்கூடியவையாகும். 29-30

## 15. பித்தத்தால் தோன்றும் கண் நோய்களின் விளக்கம்

பித்தத்தால் தோன்றும் கண் நோய்களில் ஹ்ரஸ்வஜாட்யம், ஜலஸ்ராவம் என்பன சிகிச்சைக்கு உட்படாதவையாகும். பரிம்லாயீகாசம், நீலகாசம் என்பன காலம் கடத்தக்கூடியவை. பித்தத்தால் தோன்றும் அபிஷ்யந்தம், அதிமந்தம், அம்லாத்யுஷிதம், சுக்திகா, பித்தவிதக்த, திருஷ்டி, தூமதர்சி என்பன சிகிச்சையால் எளிதில் தீர்க்கக் கூடியவையாகும். 31-32

## 16. கபத்தால் தோன்றும் கண் நோய்களின் விளக்கம்

கபத்தால் தோன்றும் கண் நோய்களில் கபஜஸ்ராவம் என்பது சிகிச்சைக்கு உட்படாததாகும். கபத்தால் தோன்றும் காச நோய் யாப்யமாகும். கபத்தால் தோன்றும் அபிஷ்யந்தம், அதிமந்தம், பலாஸகிரதிதம், சிலேஷ்ம விதக்ததிருஷ்டி, போதகீ, லகணம், கிருமிகிரந்தி, பரிகிலின்ன வர்த்மா, சுக்லார்ம, பிஷ்டகம், சிலேஷ்மோபநாஹம் எனும் இப்பதினொன்று நோய்களும் எளிதில் சிகிச்சையால் தீர்க்கக்கூடியவையாகும். 33-35

### 17. இரத்தத்தால் தோன்றும் கண் நோய்களின் விளக்கம்

இரத்தத்தினால் தோன்றக் கூடிய பதினாறு வகை கண் நோய்களில் ரக்தஸ்ராவம், அஜகாஜாதம், ரக்தார்சம், ஸவர்ண சுக்ரம் என்பன நான்கும் சிகிச்சைக்கு உட்படாதவை, இரத்தத்தால் தோன்றும் காசம் யாப்யமாகும். இரத்தத்தால் தோன்றும் அதிமந்தம், அபிஷ்யந்தம், கிலிஷ்டவர்த்ம, ஸிராஹர்ஷம், ஸிரோத்பாதம், அஞ்சன நாமிகா, ஸிரா ஜாலம், பர்வணீ, அவிரண சுக்ரம், சோணிதார்மம், அர்ஜுனம் எனும் இப்பதினொன்று கண் நோய்களும் சிகிச்சையால் தீர்க்கக் கூடியவையாகும். 36-38

### 18. ஸந்நிபாதத்தால் தோன்றும் கண் நோய்களின் விளக்கம்

ஸந்நிபாதம் அல்லது கண் முழுவதிலும் பரவும் நோய்களில் பூயஸ்ராவம், நகுலாந்தியம், அக்ஷிபாககாத்யம், அலஜீ எனும் இந்நான்கு நோய்களும் சிகிச்சைக்கு உட்படாதவையாகும். காசமும், பக்ஷ்மகோபமும் யாப்யமாகும் அல்லது நாள் கடத்தக் கூடியவையாகும். வர்த்மாவ பந்தம், ஸிராபிடகா, பிரஸ்தாரி அர்மம், அதிமாம்ஸார்மம், ஸ்நாயுஅர்மம், உத்ஸங்கிணி, பூயாலஸம், அர்புதம், சியாவகர்தமம், சியாவவர்த்மம், அர்சோவர்மம், சுஷ்கார்சம், சர்க்கராவர்த்தமம், ஸசோபபாகம், அசோபபாகம், பஹலவர்த்மம், அக்லின்னவர்த்மம், கும்பீகா, பிஸவர்த்மம் எனும் இந்தப் பத்தொன்பதும் சிகிச்சையால் தீர்க்கக் கூடியவையாகும். புறத்தாக்குதலால் காரணத்துடன் அல்லது காரணமின்றி தோன்றும் நோய்கள் இரண்டும் சிகிச்சையால் தீர்க்க இயலாதவையாகும். இவ்வாறு கண் நோய்கள் எழுபத்தாறு சுருக்கமாகக் கூறப்பட்டன. 39-43

இவ்வாறு கூறப்பட்ட கண் நோய்களில் கண்களைச் சார்ந்த இணைப்புகளில் தோன்றுபவை ஒன்பது, இமைகளைச் சார்ந்தவை இருபத்தொன்று, வெள்ளை விழிப்பகுதியில் தோன்றுபவை பதினொன்று, கருவிழிகளில் தோன்றுபவை நான்கு, எல்லாப் பகுதிகளையும் சார்ந்து தோன்றுபவை பதினேழு பார்வையைச் சார்ந்தவை பன்னிரண்டு, புறக்காரணங்களால் தோன்றும் கொடிய நோய்கள் இரண்டு மற்றும் இந்நோய்களின் வகைகள், இலக்கணங்கள், சிகிச்சை முறைகள் முதலியன அடுத்துவரும் அத்தியாயங்களில் விளக்கப்படும். 44-45

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**சாலாக்யதந்திரத்தில் ஔபத்ரவிகம் எனும்**

**முதல் அத்தியாயம் முற்றும்.**

# இரண்டாம் அத்தியாயம்

## *ஸந்திகதரோக விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கண்களில் உள்ள இணைப்புகளில் தோன்றும் கண் நோய்கள் விளக்கப்படுகின்றன. 1-2

### 1. இணைப்புகளில் தோன்றும் நோய்கள்

பூயாலஸம், உபநாஹம், நான்கு வகை **ஸ்ராவங்கள் பர்வணிகா, அலஜீ, கிருமிகிரந்தி எனக் கண்களின் இணைப்புளைச் சார்ந்து ஒன்பது வகை நோய்கள் தோன்றுகின்றன. 3

### 2. பூயாலஸ, உபநாஹ லக்கணங்கள்

கண்களின் இணைப்புகளில் முதலில் வீக்கம் தோன்றும். அது நன்கு பக்குவம் பெற்ற பிறகு அடர்த்தியாகிக் கெட்ட நாற்றத்துடன் சீழ் பெருகும். இது பூயாலஸம் எனப்படும் நோயாகும். கண்களின் இணைப்புகளில் பெரிய அளவில் பக்குவம் பெறாத சிறு அரிப்புடன் கூடியதாகி வலியின்றி காணப்படும் கட்டி உபநாஹம் எனப்படும். 4

### 3 நேத்ரஸ்ராவ லக்கணம்

தவறான உணவு உட்கொள்ளுதல் தவறான செயல்களைப் புரிதல் என்பனவற்றால் வாதம் முதலிய தோஷங்கள் கண்ணீர் சுரப்பிகள் வழியாக இணைப்புகளை அடைந்து கண்களின் கடை ப் பகுதி, மூக்கைச் சார்ந்துள்ள கண் பகுதி இணைப்புகளில் துன்ப மேதும் விளைவிக்காமல் கெட்டநீர் பெருக்கத்தைத் தோற்றுவிக்கும். ஆசிரியர்கள் சிலர் தம் நூல்களில் நீர்ப்பெருக்கு நரம்புகளின் வழியே வரும் என்கின்றனர். இந்நோய் நான்கு வகைப்படும்.5

(1) இணைப்புப் பகுதிகளில் பக்குவம் பெற்றபின் பலவகைத் தோற்றங்களில் சீழ் போன்ற கெட்ட நீர் பெருகும்.

* ஸந்தி - இணைப்பு. கண்களில் உள்ள இணைப்புகளில் தோன்றும் நோய்களைப் பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸந்திகதரோக விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

** ஸ்ராவங்கள் - கெட்ட நீர்ப் பெருக்குகள்.

வெண்ணிறமும், அடர்த்தியும், பிசுபிசுப்பும் கொண்டு எத்தகைய வலியும் இன்றி காணப்படும். இது சிலேத்தும ஸ்ராவம் எனப்படும் (2) இரத்தம் கேடுறுவதால் இரத்தத்துடன் கூடி வெப்பத்துடன் அதிக அளவில் அடர்த்தியற்று (நீர்த்து) வெளிவரும் நீர்ப்பெருக்கு ரத்தஸ்ராவம் எனப்படும். (3) மஞ்சள் நிறம் கொண்டு மற்றும் நீலம் நிறம் கொண்டு வெப்பத்துடன் நீரைப் போன்ற ஸ்ராவம் கண் இணைப்புக்கு இடையிலிருந்து வெளிவருவது பித்தஸ்ராவம் எனப்படும். 6-7

### 4. பர்வணி மற்றும் அலஜீ இலக்கணம்

இரத்தம் கேடுறுவதால் வெள்ளைவிழி கருவிழிகளின் இணைப்பில் சிவப்பு நிறம் கொண்டு மெலிந்த வட்டமான வீக்கம் தோன்றும். எரிச்சலும் குத்தல் வலியும் இருக்கும். இந்நோய் பர்வணி எனப்படும். இந்த வீக்கம் மெலிந்திராமல் தடித்துக் காணப்பட்டால் அது 'அலஜீ' எனப்படும். 8

### 5. கிருமிகிரந்தி நோய்

கண்ணிமைகளும், இமையைச் சார்ந்த உரோமங்களும் இணையும் பகுதியில் பல வகையான நுண்ணிய கிருமிகள் தோன்றி அரிப்புடன் சிறு கட்டிகளைத் தோற்றுவிக்கும். இவை கண்ணிமைப்பகுதி மற்றும் வெள்ளை விழிகளின் இணைப்பு பகுதியைத் தின்று கண்விழிகளின் உட்பகுதியிலும் சேர்ந்து அப்பகுதியைக் கெடுக்கும். இது கிருமிகிரந்தி நோய் எனப்படும். 9

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**ஸந்திகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**இரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# மூன்றாம் அத்தியாயம்

# *வர்த்மகத ரோக விஞ்ஞானீயம்

இனி(வர்த்ம) கண் இமைகளில் தோன்றும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

## 1. கண்ணிமைகளில் நோய் தோன்றுதல்

வாதம் பித்தம் முதலிய தோஷங்கள் தனித்தனியாகவோ இரண்டு அல்லது மூன்று கலந்தோ மிகவும் சீற்றமடைந்து கண்ணிமைகளில் உள்ள சிரைகளில் பரவி அங்கு நிலை பெற்று அங்குள்ள மாமிசம், இரத்தம் முதலியவற்றைச் சீற்றமுறச் செய்து நோயைத் தோற்றுவிக்கும். அவ்வாறு தோன்றும் நோய்களைக் கூறுகிறேன் கேள். 3-4

## 2. கண்ணிமை நோய்களின்

உத்ஸங்கினி, கும்பீகா, போதகீ, வர்த்மசர்க்கரா, அர்சோவர்த்ம, சுஷ்கார்சம், அஞ்சனநாமிகா, பஹலவர்த்ம, வர்த்மபந்தகம், கிலிஷ்டவர்த்ம, கர்தமவர்த்ம, சியாவவர்த்ம, பிரக்லின்னவர்த்ம, அபரிக்லின்னவர்த்ம, வாதஹதவர்த்ம, அர்புதம், நிமேஷம், சோணிதார்சம், லகணம், பிஸவர்த்ம, பக்ஷ்ம கோபம் என இவை இருபத்தொன்றும் கண்ணிமைகளில் தோன்றும் நோய்களாகும்.5-8

## 3. உத்ஸங்கினி இலக்கணம்

கீழ் இமையின் உட்பகுதி மையத்தில் உள்முகமாக ஆனால் வெளிப்பகுதியில் சற்று மேடாகி ஒரு சிறு கட்டி அல்லது பல சிறு கட்டிகள் தோன்றும். இவை உத்ஸங்கினி எனப்படும்.

## 4. ** கும்பீக பிடகை

கும்பீகம் எனும் பழ விதையைப் போல இமைகளில் தோன்றும் கட்டிகள் கும்பீக பிடகை எனப்படும். 9-10

---

* வர்த்ம - கண்ணிமை. அதைச் சார்ந்த நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை கூறுவதால் இந்த அத்தியாயம் வர்த்மகத ரோக விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

** கும்பீகம் என்பது கச்ச தேசத்தில் தோன்றும் மாதுளம்பழம் போன்ற பழம் கொண்ட கொடி என்பது நிகண்டு உரையாகும்.

**5. போதகீ இலக்கணம்**

மைப் பகுதியில் சிவந்த கடுகு போன்ற சிறு கட்டிகள் தோன்றும். இவற்றிலிருந்து கெட்ட நீர் ஒழுகிக் கொண்டிருக்கும். அரிப்பு, பளுவாகத் தோன்றுதல், வலி எனும் இலக்கணங்களும் காணப்படும் நோய் போதகீயாகும். 11

**6. வர்த்மசர்க்கரா இலக்கணம்**

இமைப்பகுதியில் கடினமாகவும் தடித்தும் ஒரு கட்டி ;ான்றிச் சிறியவையும் கடினத்தன்மையும் கொண்ட சிறுகட்டிகளால் சூழப்பட்டிருப்பது வர்த்மசர்க்கரா எனும் நோயாகும். 12

**7. சுஷ்கார்ச இலக்கணம்**

இமைப்பகுதியில் நீண்டு முனைப்பகுதி கடினத்தன்மை கொண்டு மிகவும் துன்பம் விளைவிப்பதான கட்டி நோய் சுஷ்கார்சம் எனப்படும். 13-14

**8. அஞ்சன நாமிகா இலக்கணம்**

இமைப்பகுதியில் தோன்றிய கட்டியில் அழற்சி, ஊசியால் குத்துவது போன்ற வலி, தாமிர நிறம், தொடுகையில் மென்மைத் தன்மை கொண்டு சிறிதளவே துன்பம் விளைவிப்பதாகி நுட்பமான தோற்றம் கொண்ட நோய் அஞ்சன நாமிகா எனப்படும். 15

**9. பஹுலவர்த்ம இலக்கணம்**

மைப்பகுதி முழுவதிலும் தோல் நிறம் கொண்டு ல் சமானமாகிச் சிறு கட்டிகள் அப்பகுதி முழுவதையும் மூடிக்கொண்டிருக்குமானால் அது பஹுலவர்த்ம எனும் நோயாகும். 16

**10. வர்த்மபந்த இலக்கணம்**

அரிப்பும் ஊசியால் குத்துவது போன்ற வலியும் இமைகளில் வீக்கமும் கொண்டு கண்களை நன்கு மூட முடியாமற் செய்யும் நோய் வர்த்ம பந்தம் எனப்படும். 17

**11. கிலிஷ்ட வர்த்ம இலக்கணம்**

இமைப்பகுதி திடீரென மென்மையும் குறைந்த அளவு துன்ப மும் கொண்டு முதலில் தாமிர நிறமும் பிறகு இரத்தச் சிவப்பு நிறமும் கொண்டால் அது கிலிஷ்ட வர்த்ம எனும் நோயாகும். 18

## 12. கர்தம வர்த்ம இலக்கணம்

கிலிஷ்டவர்த்ம எனும் நோயில் பித்தம் சீற்றமடைந்து இரத்தத்தைச் சூடுமிக்கதாகச் செய்து விடும்போது இமைப்பகுதி ஈரப்பசை கொண்டு சேறுடன் கூடியது போலக் காணப்படும். இது கர்தம வர்த்ம எனும் நோயாகும். 19

## 13. சியாவவர்த்ம நோயின் இலக்கணம்

இமைகளின் புறப்பக்கமும், உட்பக்கமும் புகை அல்லது கருநிறம் கொண்டு வீக்கம், அழற்சி, துன்பம், அரிப்பு முதலியவற்றுடன் சேற்று சொதசொதப்பு போல காணப்படு மாயின் அது சியாவவர்த்மம் எனும் நோயாகும். 20

## 14. பிரக்லின்னவர்த்ம இலக்கணம்

இமைகளில் மேற்பகுதி வீக்கம் கொண்டு துன்பமின்றியும் உட்பகுதி நீர்ப்பெருக்கும் சொதசொதப்பும் கொண்டு அங்கு அரிப்பும் ஊசியால் குத்துவது போன்ற வலியும் தோன்றுமாயின் அது பிரக்லிலின்னவர்த்ம எனும் நோயாகும். 21

## 15. அபரிக்லின்னவர்த்ம இலக்கணம்

இமைகளை அடிக்கடி கழுவிக் கொண்டிருந்தாலும் ஒட்டிக் கொண்டு பக்குவம் பெறாமல் இருக்குமானால் அது அபரிக் லின்ன வர்த்ம எனும் நோயாகும். 22

## 16. வாதஹதவர்த்ம இலக்கணம்

இமையும், வெள்ளை விழியும் இணையும் பகுதியில் இணைப்பு விட்டுப் போய் கண்களை மூட முடியாமல் உள்ள இந்நோய்களில் சிலருக்கு வலியும், மற்றும் சிலருக்கு வலியின்மை யும் காணப்படும் போது அந்நோய் வாதஹதவர்த்ம என அறியத்தகும். 23

## 17. வர்த்மார்புத இலக்கணம்

இமைகளின் உட்பகுதியில் துன்பமின்றி ஏற்றத்தாழ்வுள்ள சிறுகட்டிகள் கொண்டு பித்தமும் இரத்தமும் சேர்ந்திருப்பதால் சிவப்பு நிறம் கொண்டு இமைகளின் ஓரங்கள் ஒட்டிக் கொள்ளும் போது அது வர்த்மார்புதம் எனும் நோய் என்று அறிக. 24

## 18. நிமேஷ இலக்கணம்

வாதம் சீற்றமடைந்து கண்ணிமைகளில் உள்ள சிரைகளைச் சார்ந்திருந்து இமைகளை அதிக அளவில் (அசைக்கும்) படபடக்கச் செய்யும் நோய் நிமேஷம் எனப்படும். 25

### 19. வர்த்மார்ச இலக்கணம்

இமைகளில் இரத்தம் கேடுறுவதால் வீக்கத்தை தொட்டால் மென்மை கொள்ளும். முளைகள் போன்றவற்றை அடிக்கடி கத்தரித்தாலும் மீண்டும் மீண்டும் தோன்றி பித்தத்தின் தொடர்பால் அழற்சியும், கபத்தின் தொடர்பினால் அரிப்பும், வாதத்தின் தொடர்பால் வலியும் தோன்றுமாயின் அந்நோய் வர்த்மார்சம் எனப்படும். 26

### 20. லகண இலக்கணம்

இமைகளில் சிறு இலந்தைப் பழ அளவில் கட்டி தோன்றி பக்குவமடையாமல் தொட்டால் கடினத்தன்மை கொண்டு துன்பம் விளைவிக்காமல் அல்லது சிறிதளவு துன்பம் விளைவிப்ப தாகித் தூலமான (தடித்த) தோற்றத்துடன் அரிப்பும்,பிசுபிசுப்பும் கொண்டிருந்தால் அந்நோய் லகணம் எனப்படும். 27

### 21. பிஸவர்த்ம இலக்கணம்

இமைகளில் வீக்கமும், தாமரைத் தண்டுகளில் உள்ளது போல நுட்பமான பல துளைகளும் தோன்றினால் அது பிஸவர்த்ம எனும் நோயாகும். 28

### 22. பக்ஷ்ம கோப இலக்கணம்

வாதம் முதலிய தோஷங்கள் சீற்றமடைந்து இமைகளின் உரோமங்களை ஊசி முனைகளைப் போலச் செய்து இமைகளும் மடங்கிக் கண்களில் உராய்வு தோன்றி அதனால் துன்பம் விளையுமாயின் அது பக்ஷ்ம கோபம் எனும் நோயாகும். இந்நோயில் இமை உரோமங்களை அடிக்கடி நீக்கினால் துன்பம் குறையும். நோயாளி காற்று, வெயில், நெருப்பாலான வெப்பம் முதலியவற்றைப் பொறுக்க இயலாதவராவார். 29

**ஸுச்ருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**வர்த்மகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**மூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

## நான்காம் அத்தியாயம்

# *சுக்லகத ரோக விஞ்ஞானீயம்

இனி ஸுசுருதர் முதலிய சீடர்களுக்குத் தன்வந்தரி பகவான் உபதேசம் செய்தபடி கண்களின் வெள்ளை விழிப் பகுதியில் தோன்றும் நோய்களை விளக்குவோம். 1-2

### 1. வெள்ளை விழிப்பகுதியில் தோன்றும் நோய்கள்

கண்களில் வெண்மையான விழிப்பகுதியில் பதினோரு நோய்கள் தோன்றக்கூடும். அவற்றின் பெயர்களாவன - பிரஸ்தாரி அர்ம, சுக்ல அர்ம, க்ஷதஜ அர்ம - அதிமாம்ஸ அர்ம, ஸ்நாயு அர்ம, சுக்திகா, அர்ஜுநம், பிஷ்டகம், ஸிராஜாலம், ஸிராபிடகா, பலாஸ கிரதிதம் என்பனவாகும். 3-4

### 2. பிரஸ்தாரி அர்ம - சுக்ல அர்ம முதலியவற்றின் இலக்கணங்கள்

கண்களின் வெள்ளை விழிப்பகுதியில் விரிவாகப் பரவக் கூடிய இயல்பு கொண்டு இரத்தம் போன்ற சிவப்பு நிறத்துடன் சிறிது நீல நிறமும் கலந்து முடிச்சு போன்ற அல்லது கோடு போன்றது காணப்படும். இது பிரஸ்தாரி அர்ம எனப்படும்.

கண்களின் வெள்ளைவிழிப் பகுதியில் மென்மையும் வெண்ணிறமும் கொண்டு சமமாக மெல்ல மெல்ல வளர்ந்து படரும் கட்டி அல்லது கோடு போன்ற அமைப்பு சுக்ல அர்ம எனப்படும்.

கண்களின் வெள்ளைவிழிப் பகுதி மாமிசத்தில் செந்தாமரை நிறத்தில் மாமிசம் வளர்ந்து காணப்படும். இது லோஹித (க்ஷதஜ) அர்ம எனப்படும்.

கண்களின் வெள்ளைவிழிப் பகுதியில் கல்லீரல் போன்ற நிறத்தில் அல்லது கருநிறத்தில் தடித்துப் பரவும் நோய் அதிமாம்ஸ அர்ம எனப்படும்.

---

*சுக்லமண்டலம் - கண்களின் வெள்ளைவிழிப்பகுதி (Sclera) அதைச் சார்ந்த நோய்களுக்கு விளக்கம் தரப்படுவதால் இந்த அத்தியாயம் சுக்லகத ரோக விஞ்ஞானீயம் எனப் பெயர் பெற்றது.

கண்களின் வெள்ளைவிழிப் பகுதியில் உள்ள மாமிசத்தில் பிசுபிசுப்புடன் வெள்ளை நிறம் கொண்டு வளரும் நோய் ஸ்நாயு அர்ம எனப்படும். 5-6

**3. சுக்திகா மற்றும் அர்ஜுன நோயின் இலக்கணம்**

கண்களின் வெள்ளை விழிப் பகுதியில் வெள்ளையும் கறுப்பும் கலந்த நிறத்தில் அல்லது மாமிசத்தைப் போல பளபளப்புடன் முத்துச்சிப்பியைப் போல நுட்பமான புள்ளிகள் காணப்படும். இது சுக்திகா எனும் நோயாகும். 7

கண்களின் வெள்ளைவிழிப் பகுதியில் முயலின் இரத்தத்தைப் போன்ற பளபளப்புடன் கூடிய ஒரு புள்ளி காணப்பட்டால் அது அர்ஜுனம் எனப்படும்.

**4. பிஷ்டகம் மற்றும் ஸிராஜால நோயின் இலக்கணம்**

கண்களின் சிலேத்தும ஆவரணப் பகுதியில் அரிசி மாவு அல்லது நீரைப் போன்ற தோற்றத்தில் தோன்றும் புள்ளி பிஷ்டகம் எனப்படும். இது சற்று மேல் நோக்கி எழும்பி வட்டமாக இருக்கும்.

கண்களின் சிலேத்தும ஆவரணத்தில் பெரிய பெரிய மற்றும் கடினமான சிரைகளால் சிவப்பு நிறத்துடன் வலை போல் இங்குமங்கும் படர்ந்திருக்கும் அமைப்பு ஸிராஜாலம் எனப்படும். 8

**5. ஸிரா பிடகா, பலாஸ கிரதித நோய்களின் இலக்கணம்**

கருவிழிகளைச் சார்ந்து வெள்ளைவிழிப் பகுதியில் ஸிரைகளால் சூழப்பட்டு வெண்ணிறத்தில் சிறுகட்டிகள் (பிடகைகள்) தோன்றும். இவை ஸிராபிடகா எனப்படும்.

கண்களின் வெள்ளைவிழிப் பகுதியில் வெள்ளை நிறத்திலோ வெண்கல நிறத்திலோ அழுக்கு படர்ந்தது போன்ற பிடகைகள் கடும் துன்பம் விளைவிக்குமாயின் அது பலாஸ கிரதிதம் எனப்படும் நோயாகும். 9

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**சுக்லகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**நான்காம் அத்தியாயம் முற்றும்.**

## ஐந்தாம் அத்தியாயம்

# *கிருஷ்ணகதரோக விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கிருஷ்ணகத ரோக விஞ்ஞானீயம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

### 1. கருவிழியைச் சார்ந்த நோய்கள்

ஆசிரியர் முன்பே சுருக்கமாக கருவிழியைச் சார்ந்து விரணத்துடன் கூடிய சுக்ரம் அல்லது சுக்லம், விரணமற்ற சுக்ரம் அல்லது சுக்லம், பாகாத்யயம், அஜகாஜாதம் என நான்கு நோய்கள் தோன்றும் எனக் குறிப்பிட்டுள்ளார். 3

### 2. விரணத்துடன் கூடிய (ஸவிரண) சுக்ர இலக்கணம்

கருவிழியில் ஆழமாகத் தோன்றிச் சிரமத்துடன் காணத்தக்க தாகியும், ஊசியால் குத்தியதைப் போலக் காணப்படும் விரணம் கொண்டும் அதிலிருந்து சூடான நீர் பெருகிக்கொண்டிருந்து கொடிய வலியைத் தோற்றுவிப்பதுமான நோய் ஸவிரண சுக்ரம் எனப்படும். 4

### 3. தீர்க்கக்கூடிய சுக்கிர நோய் இலக்கணம்

வெண்விழியைச் சார்ந்துள்ள பகுதியில் தோன்றாமலும், அதிக ஆழமில்லாமலும் துன்பம் இல்லாமல் கண்ணீர் பெருகிக் கொண்டிருப்பதுமான இரண்டில்லாமல் ஒரே விரணம் தோன்றியிருந்தால் ஒரு வேளை அது சிகிச்சையால் தீர்க்கக் கூடிய விரணமற்ற சுக்ரமாகும்.

### 4. சிகிச்சைக்கு உட்படாத சுக்ரநோய் இலக்கணம்

விரணத்துடன் கூடிய சுக்ரம் அப்பகுதியில் உள்ள தாதுக்களைச் சிதைத்து, நடுப்பகுதியில் சிதைந்து அல்லது துளை யுடன் கூடி இருந்தால் அல்லது சிதையாது மாமிசம் போல உயர்ந்து எழும்பியிருக்கும் மாமிசத்துடன் கூடியோ சூழப் பட்டோ இருந்தால், ஸிரைகளுடன் கூடியிருப்பதால் அசைவுள்ள தாகி, பார்வையைத் தடுத்து இரு புரைகளைச் சார்ந்துள்ளதாகிச் சுற்றுபுறம் சிவப்பு நிறத்துடன் கூடியதாகித்தோன்றிப் பலநாட்கள் கடந்ததுமான விரணத்துடன் கூடியிருந்தால் அத்தகைய சுக்ர நோய் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும்.

---

*கிருஷ்ணகதம் - கருவிழியைச் சார்ந்துள்ளது. அத்தகைய நோய் களை விளக்குவதால் இந்த அத்தியாயம் கிருஷ்ணகதரோக விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

இந்த இலக்கணங்கள் இல்லாமல் விரணத்திலிருந்து மிக்க சூடுள்ள நீர் பெருகியதாகி கருவிழி மண்டலத்தில் பிடகை எனும் சிறு கட்டிகள் தோன்றி பயறு போன்ற தோற்றமும் கொண்டால் அந்நோயும் சிகிச்சைக்கு உட்படாததாகும்.

மற்றும் தித்திரிப்புள் இறக்கையைப் போன்ற நிறமுள்ள விரணத்துடன் கூடிய சுக்ரமென்னும் நோயும் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகும் என ஆசிரியர்கள் சிலர் கூறுகின்றனர். 5-7

**5. விரணமற்ற (அவிரண) சுக்ர லக்கணம**

அபிஷ்யந்தத்தால் (மிகுதியாக நீர்ப்பெருக்கு கொண்டது) கண்ணில் கருவிழிப் பகுதியில் வெண்ணிறம் தோன்றினால் அது அவிரணசுக்ரம் எனப்படும். இந்நோயில் துன்பமோ நீர்ப் பெருக்கோ இருக்காது. இந்நோயில் வெண்மையான தூயநிறம் கொண்டு மெல்லிய மேகத்தால் சூழப்பட்ட ஆகாயம் போல காணப்படும். விரணமற்ற இந்தச் சுக்ர நோய் சிகிச்சையால் தீர்க்கக்கூடியதாகும். ஆனால் விரணமற்ற சுக்ரம் ஆழமாகப் படர்ந்திருந்தால் அதாவது இரண்டாவது மூன்றாவது புரைவரை பரவி இருந்தால் பார்வைக்குத் தடித்துக் காணப்பட்டால் தோன்றிப் பல நாட்கள் கடந்ததாகி இருந்தால் அத்தகைய நோய் மிகவும் கஷ்டப்பட்டுத் தீர்க்கக் கூடியதாகும். 8

**6. அக்ஷிபாகாத்யயம் எனும் நோய் இலக்கணம்**

கண்ணின் கருவிழி முழுவதும் வெண்மைப் புரை படர்ந் திருந்தால் அது அக்ஷிபாகாத்யயம் எனப்படும். கண்கள் சீற்ற முறுவதால் இந்நோய் தோன்றும். கொடிய துன்பமும் காணப்படும். 9

**7. அஜகாஜாத நோய் இலக்கணம்**

கண்ணின் கருவிழி மண்டலத்தைச் சிதைத்துக் கொண்டு ஆட்டுப்பிழுக்கைகளைப் போன்ற தோற்றத்தில் துன்பம் விளைவித்துக் கொண்டு சிவப்பு நிறம் கொண்டுள்ளதாகிச் சிறிது சிவப்புநிறமும் பிசுபிசுப்பும் கொண்ட நீர்ப்பெருக்குடன் தோன்றும் ஒரு வகைப் பொருள் கொண்ட நோய் அஜகாஜாதம் எனப்படும். 10

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**கிருஷ்ணகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# ஆறாம் அத்தியாயம்

## *ஸர்வகதரோக [illegible] யம்

இனி ஸுசுருதர் முதலான சீடர்களுக்குத் தன்வந்தரி பகவான் உபதேசம் செய்தபடி கண்கள் முழுவதையும் சார்ந்து தோன்றும் நோய்களை விளக்குவோம். 1-2

### 1. ஸர்வகத் ரோகங்களின் எண்ணிக்கை

கண்ணின் முழுப்பகுதியையும் சார்ந்து நான்கு வகை **அபிஷ்யந்தி, அதாவது வாதாபிஷ்யந்தம், பித்தாபிஷ்யந்தம் கபஅபிஷ்யந்தம், இரத்த அபிஷ்யந்தம் என்பவையும், நான்கு வகை அதிமந்தம் அதாவது வாதாதிமந்தம், பித்தாதிமந்தம், கபாதிமந்தம், இரத்தாதிமந்தம் என்பவையும், அவ்வாறே வீக்கத்துடன் கூடிய பாகம், வீக்கமற்ற பாகம் என்பனவும் சேர்ந்து பத்து வகை நோய்களும், ஹதாதிமந்தம், வாதபர்யயம், சுஷ்க அக்ஷிபாகம், அன்யதோவாதம், அம்லாத்யுஷித திருஷ்டி, ஸிரோத்பாதம், ஸிராபிரஹர்ஷம் என்பன ஏழும் சேர்ந்து மொத்தம் பதினேழு வகை நோய்கள் தோன்றும். 3-4

பொதுவாக கண் நோய் வகைகள் அனைத்தும் அபிஷ் யந்தத்தால் (கெட்ட நீர்ப்பெருக்கு மிகுதியாவதால்) தோன்றுவன வாகும். ஆகையால் திறமைமிக்க மருத்துவர் அபிஷ்யந்தத்திற்குத் (உணவு, தவறான செயல்கள் முதலியவற்றால் அதிக நீர்ப் பெருக்கு ஏற்படுவதற்கு) தக்க சிகிச்சை செய்ய வேண்டும். 5

### 2. வாத அபிஷ்யந்த இலக்கணம்

வாதத்துடன் கூடிய அபிஷ்யந்த நோயில் கண்களில் ஊசியால் குத்துவது போன்ற துன்பம், அசைவற்றுப்போதல், மயிர்க்கூச்சம், ஏதேனும் பொருள் கண்களில் விழுந்தது போன்ற உராய்வு, உலர்ந்து போதல் அதாவது கண்களில் ஈரப்பசையற்றுப் போதல், குளிர்ந்த நீர்பெருக்குத் தோன்றுதல் எனும் இலக் கணங்கள் காணப்படும். 6

---

* ஸர்வகதம் - முழுவதும் பரவியது. அதாவது கண்களின் முழுப் பகுதியையும் சார்ந்து தோன்றும் நோய்களை விளக்குவதால் இந்த அத்தியாயம் 'ஸர்வகதரோக விஞ்ஞானீயம்' எனும் பெயர் பெற்றது.

**அபிஷ்யந்தம் - (Conjunctivitis) அதிகமான நீர்ப்பெருக்கு கொண்டது.

ம

பித்தத்தால் தோன்றிய அபிஷ்யந்த நோயில் கண்களில் எரிச்சல், பக்குவம் பெறுதல் என்பன தோன்றும். குளுமைத் தன்மை கொண்ட பொருள்களில் விருப்பம் மிகும். கண்களிலிருந்து புகை தோன்றுவது போல இருக்கும். நீர்ப்பெருக்கம், வெப்பமுள்ள கண்ணீர்பெருக்கு, கண்கள் மஞ்சள் நிறம் கொள்ளுதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 7

**4. சிலேத்தும அபிஷ்யந்த இலக்கணம்**

சூடுள்ள பொருள்களில் விருப்பம், வெயிலில் அமர்ந்திருப்பதில் மகிழ்ச்சி, கண்கள் பளுவாகத் தோன்றுதல், வீக்கம், அரிப்பு, கண்களில் பீளை மிகுதியாகச் சேருதல், கண்ணைத் தொட்டால் மிக்க குளிர்ந்திருப்பது போலக் காணப்படுதல், பிசுபிசுப்புள்ள நீர்ப்பெருக்கு அடிக்கடி தோன்றுதல் ஆகிய இலக்கணங்கள் சிலேத்தும அபிஷ்யந்தம் எனும் நோயில் காணப்படும். 8

**5. இரத்த அபிஷ்யந்த இலக்கணம்**

தாமிர நிறத்தில் கண்ணீர் பெருகுதல், கண்கள் சிவத்தல், கண்களின் நான்கு பக்கங்களிலும் இரத்த நிறக் கோடுகள் காணப்படுதல், பித்த அபிஷ்யந்த இலக்கணங்களாகிய எரிச்சல் முதலியனவும் காணப்படுதல் என்பன இரத்த அபிஷ்யந்த நோயில் காணப்படும் இலக்கணங்களாகும். 9

**6. அதிமந்த இலக்கணம்**

தவறான உணவு, கூடாத பழக்கங்கள் ஆகியவை கொண்டுள்ள நோயாளிக்கு அபிஷ்யந்த எனும் நோய் தோன்றி முற்றிய நிலையில் கொடிய துன்பம் விளைவிப்பதாகிய அதிமந்தம் எனும் நோய் தோன்றும். 10

கண்ணைத் தோண்டி எடுப்பது போன்ற உணர்ச்சி, கண்களில் குடைச்சல், தலையின் ஒரு பக்கத்தில் கொடிய வலி ஆகியவற்றுடன் சீற்றமடைந்த வாதம் முதலிய தோஷங்களுக்கு உரிய இலக்கணங்களும் காணப்படுமாயின் அது அதிமந்தம் எனும் நோய் என்று அறிக. 11

**7. வாத அதிமந்த இலக்கணம்**

விழிகள்ளத் தோண்டி எடுப்பது போன்ற உணர்ச்சி, கடைவது போன்ற வலி, கண்களில் மணல் விழுந்தது போன்ற

உராய்வு, ஊசியால் குத்துவது போன்ற குத்தல் வலி, கூரிய கருவியால் கண்களை அரிப்பது போன்ற துன்பம், கண்ணில் மாமிசம் அற்றது போன்ற நிலை, கண்ணில் பீளை அதிக அளவில் தோன்றுதல், கண் சிறுத்துப் போதல், துடிப்பது போன்ற உணர்ச்சி, வீக்கம், நடுக்கம், பாதித் தலை பாகத்தில் வலி தோன்றுதல் என்பன வாதத்தால் தோன்றும் அதிமந்தத்தின் இலக்கணங்களாகும். 12-13

**8. பித்தத்தால் தோன்றும் அதிமந்தத்தின் இலக்கணம்**

கண்களில் சிவப்பு நிறக் கோடுகள் பரவி இருத்தல், நீர்ப்பெருக்கு மிகுதியாகக் கொண்டிருத்தல், நெருப்பால் சுடுவது போன்ற எரிச்சல், கல்லீரலைப் போன்ற நிறத்தில் (அடர்ந்த தாமிர நிறத்தில்) கண் விழி காணப்படுதல், விரணத்தில் காரப் பொருளை தேய்ப்பது போன்ற எரிச்சல், இமைப்பகுதிகள் பக்கு வம் பெற்றிருத்தல், வீக்கம் காணப்படுதல், வியர்வை தோன்றுதல், எல்லாப் பொருள்களும் மஞ்சள் நிறம் கொண்டிருப்பது போலக் காணப்படுதல், அடிக்கடி நினைவிழத்தல் தோன்றுதல், தலையில் எரிச்சல் ஆகிய இலக்கணங்கள் பித்தத்தினால் தோன்றும் அதிமந்த இலக்கணங்களாகும். 14-15

**9. கபத்தினால் தோன்றும் அதிமந்த இலக்கணம்**

கண்களில் வீக்கம், அழற்சி, நீர்ப்பெருக்கு, அரிப்பு, குளுமைத் தன்மை, பளு, பிசுபிசுப்பு பீளை மிகுதல், மயிர்கூச்சம், தூசி படர்ந்த பொருள்களைச் சிரமப்பட்டுப் பார்த்தல் (எளிதில் அப் பொருள்கள் புலப்படாமை), மூக்கில் வீக்கம், தலைவலி முதலிய இலக்கணங்கள் காணப்பட்டால் அது சிலேத்தும அதி மந்தம் (கபத்தால் தோன்றும் அதிமந்தம்) எனும் நோயாகும் என்றுணர்க. 16-17

**10. இரத்த அதிமந்த இலக்கணம்**

செம்பருத்தி மலர் போலக் கண்கள் சிவப்பு நிறம் கொண்டு கண்ணைத் தொட்டால் பொறுக்க முடியாத துன்பம் விளைவிப்ப தாகி இரத்தத்துடன் கூடிய அல்லது இரத்தம் போன்ற நிறமுள்ள பெருக்கு மிகுந்து ஊசியால் குத்துவது போன்ற வலியுடன் எங்கும் தீப்பற்றி எரிவது போன்ற காட்சிகள் தோன்றிக் கண்கள் இரத்தத்தில் தோய்ந்த பொன்லைன் காய்களை போலக் காணப்பட்டாலும் கண்களில் பொறுக்க இயலாத எரிச்சல் தோன்றினாலும் கண்ணில் சுற்றுப்புறத்தில் சிவப்பு நிறம் காணப்பட்டாலும் அது இரத்தாதிமந்தம் எனும் நோயாகும். 18-19

## 11. அதிமந்த நோயின் சிறப்பிலக்கணம்

கபத்தால் தோன்றும் அதிமந்தம் தக்க சிகிச்சை செய்யா விடிலும் அல்லது தவறான உணவு, கூடாத பழக்கவழக்கங்களைக் கொண்டிருப்பதால் ஏழு நாட்களிலும் இரத்தத்தால் தோன்றும் அதிமந்தம் ஐந்து நாட்களிலும் வாதத்தால் தோன்றும் அதிமந்தம் ஆறு இரவுகளிலும், பித்தத்தால் தோன்றும் அதிமந்தம் அப்பொழுதே கண் பார்வையை அழித்துவிடும். 20

## 12. வீக்கத்துடன் கூடிய அல்லது வீக்கமற்ற பாக இலக்கணங்கள்

கண்ணில் அரிப்பு, பீளை மிகுதியாதல், கண்ணீர் பெருகுதல், நன்கு பழுத்த அத்திப்பழ நிறம் கொண்டிருத்தல், கண்ணில் அழற்சி, மயிர் கூச்சம், நெருடல், தாமிரநிறம், வீக்கம், ஊசியால் குத்துவது போன்ற வலி, பளுத்தன்மை, குறைந்த அளவில் வெப்பம், அல்லது குளுமை கொண்டு பிசுபிசுப்புடன் கூடிய நீர்ப்பெருக்கு வெளியாதல் என்பன வீக்கத்துடன் கூடிய பாகத்தின் இலக்கணமாகும். இந்த இலக்கணங்கள் வீக்கமற்றுக் காணப்பட்டால் வீக்கமற்ற பாகம் என்று உணர்க. 21-22

## 13. ஹதாதிமந்த இலக்கணம்

அதிமந்த நோய்க்கு உரிய சிகிச்சை செய்யாவிடில் ஸிரைகளில் பரவிய வாதம் சீற்றமடைந்து கண்களை உலர்த்திவிடும். கொடிய வலி தோன்றும். அந்நோய் சிகிச்சையால் தீர்க்க இயலாததாகிவிடும். இது ஹதாதிமந்தம் எனப்படும். இதைப் போலவே ஸிரைகளில் தங்கிச் சீற்றமடைந்த வாதம் கண்களைப் பிதுங்கச் செய்துவிடும். இதுவும் சிகிச்சைக்கு உட்படாத ஹதாதிமந்தம் எனப்படும். 23-24

## 14. வாதபர்யாய ணம்

தவறான உணவு உட்கொள்வதாலும் கூடாத பழக்கங்களைக் கொண்டிருத்தலாலும் சீற்றமடைந்த வாதம் ஒரு வேளை கண்களின் இமைகளிலும் மற்றொரு வேளை கண்விழிகளிலும் தங்கி இருந்து பரவி துன்பத்தை விளைவிக்கும். இது 'வாதபர்யாயம்' எனும் நோயாகும். 25

## 15. சுஷ்க அக்ஷிபாகம்

கண்களும், இமைகளும் சுருங்கியும் தொட்டால் வறண்டிருத்தலைப் போலக் காணப்பட்டும் கடினத்தன்மை கொண்டு பூச்சி பறப்பது போலப் பார்வை கொண்டும் கண்ணைத் திறந்தால் மிகவும் துன்பமும் தோன்றினால் அது சுஷ்க அக்ஷிபாகம் எனும் நோயாகும். 26

### 16. அன்யதோ வாத இலக்கணம்

நாள்பட்ட அதிமந்த நோய் முற்றிய பிறகு கண்ணில் ஏதேனும் ஒரு நரம்பை (மூளையைச் சார்ந்துள்ள ஐந்தாவது நரம்பை) உலர்த்தி அல்லது கெடுத்து தாடை, கழுத்து, காது போன்ற பகுதிகளில் உள்ள ஸிரை மற்றும் நரம்பைச் சார்ந்த அல்லது தலையின் பின் பக்கத்தில் வாதத்தைச் சீற்றமடையச் செய்து புருவம் அல்லது கண்களில் தாங்க இயலாத வலியைத் தோற்றுவிக்கும். இது அன்யதோவாதம் எனப்படும் நோயாகும்.27

### 17. அம்லாத்யுஷித இலக்கணம்

புளிப்புச் சுவை கொண்ட பொருள்களை மிகுதியாக உட்கொள்வதாலும் அல்லது அழற்சியைத் தோற்றுவிக்கும் பொருள்களை மிகுதியாக பயன்படுத்துவதாலும் சீற்றமடைந்த பித்தம் நான்கு பக்கங்களிலும் கண்களைச் சூழ்ந்து சிவப்பு அல்லது நீலநிறம் தோன்றச் செய்யும். கண்களில் வீக்கம் தோன்றும். இது அம்லாத்யுஷிதம் எனப்படும் நோயாகும். 28

### 18. ஸிரோத்பாத இலக்கணம்

கண்ணில் துன்பத்துடனோ துன்பம் இன்றியோ தாமிர நிறக் கோடுகள் மிகுந்து சிலகாலம் கழித்துக் கண்கள் முழுவதும் இரத்தம் போன்ற நிறம் கொள்ளச் செய்யும் நோய் ஸிரோத்பாதம் எனப்படும். 29

### 19. ஸிராபிரஹர்ஷ இலக்கணம்

அறியாமையால் ஸிரோத்பாதம் எனும் நோய்க்கு உரிய சிகிச்சை செய்யாவிடில் 'ஸிராபிரஹர்ஷம்' எனும் நோய் தோன்றும். இந்நோயில் தாமிர நிறம் கொண்டு அடர்த்தியாகித் தூய இரத்தப் பெருக்கு உண்டாகும். எந்தப் பொருளையும் காண யலாமல் போகும். இந்நோய் ஸிராபிரஹர்ஷம் எனப்படும். 30

**ஸுசுருதஸம்ஹிதை உத்தரஸ்தானத்தில்**

**ஸர்வகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**ஆறாம் அத்தியாயம் முற்றும்.**

## ஏழாம் அத்தியாயம்
## *திருஷ்டிகதரோக விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கண்ணின் கருமணியைச் சார்ந்த நோய்களைப் பற்றி விளக்குவோம். 1-2

### 1. கண்ணின் கருமணி (திருஷ்டி)

பயற்றின் பருப்பைப் போலத் தோற்றம் கொண்டு ஐம்பெரும் பூதங்களின் பகுதிகள் இணைவதால் மின்மினிப்பூச்சி, நெருப்புப் பொறிகளைப் போல பளபளக்கும் ஒளிகொண்டு வளர்ச்சிக் குறைதல் என்பன இன்றி கண்விழிப் புரைகளால் சூழப்பட்டு, புறத்திலிருந்து நோக்கும் போது சிறு துளை போலக் காணப்படுவதாகிக் குளுமைத் தன்மை கொண்ட உணவும் பழக்கவழக்கங்களும் தனக்கு இதமாகக் கொண்டிருப்பது கண்ணின் கருமணி (திருஷ்டி) எனப்படும். 3-4

### 2. கண்ணின் கருமணியைச் சார்ந்த நோய்கள்

கண்ணின் கருமணியைச் சார்ந்து பன்னிரண்டு, மற்றும் புரையைச் சார்ந்து தோன்றும் 'திமிரம்' எனும் நான்கு வகை நோய்களையும் விளக்குகிறேன். 5

### 3. முதல் புரையைச் சார்ந்த திமிர நோய் இலக்கணம்

கண்ணின் முதல் புரையைச் சார்ந்த தோஷங்கள், அங்கு நிலைபெற்று தவறான உணவு உட்கொள்ளுதல், கூடாத பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் ஆகியவற்றால் சிரைகளின் வழியாக கண்விழிகளின் உட்புறத்தில் சேர்ந்து விகாரத்தைத் தோற்றுவிக்கும். அதனால் நோயாளி எல்லாப் பொருள்களையும் தெளிவில்லாமல் காண்பார். அதாவது பொருள்கள் தெளிவாகப் புலப்படா என்பதாம். 6-7

### 4. இரண்டாவது புரையைச் சார்ந்த திமிர நோய் இலக்கணம்

தோஷங்கள் கண்விழியின் இரண்டாவது புரையைச் சார்ந்து அங்கு நிலைபெற்ற போது பார்வை முன்பிருந்ததைவிட மேலும்

---

* திருஷ்டி - கண்ணின் கருமணி. அதைச் சார்ந்த நோய்களை விளக்குவதால் இந்த அத்தியாயம் திருஷ்டிகதரோக விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

குழப்பமடையும். உண்மையில் கண்முன் இல்லாத பொருள்கள் இருப்பது போல தோன்றும். கண்ணின் முன் ஈ, கொசு, தலைமுடி, வலை போன்றவை இருப்பது போல காணப்படும். மேலும் வட்டம், கொடி, கானல் நீர், குண்டலங்களைப் போன்ற காட்சி, மழை பொழிவது போன்ற காட்சி, மேகம், காரிருள் முதலியனவும் (உண்மையில் அவை இல்லாமல் இருந்தும்) இருப்பது போன்ற தோற்றம் காணப்படும். அருகில் உள்ள பொருள் தொலைவில் இருப்பது போலவும், தொலைவில் உள்ள பொருள் அருகில் இருப்பது போலவும் காணப்படும். மிகவும் முயன்றும் ஊசியின் காதுத் துளையைக் காண முடியாது. 8-10

### 5. மூன்றாம் புரையைச் சார்ந்த திமிர இலக்கணம்

தோஷங்கள் கண்விழியின் மூன்றாம் புரையைச் சார்ந்து அங்கு நிலைபெற்ற போது பார்வையில் பல கோளாறுகள் தோன்றும். உயரத்தில் உள்ள பொருள்களைக் காணக்கூடும். ஆனால் கீழே இருக்கும் பொருள்களைக் காண இயலாது. பெரியவையான பொருள்கள் ஆடையால் மூடப்பட்டிருப்பவை போலக் காணப்படும். காது, மூக்கு, கண் முதலிய உறுப்புகள் கொண்ட மனிதரை நோக்கும் போது அவன் அவ்வுறுப்புகள் இல்லாதவரைப் போலக் காணப்படுவார். தோஷங்கள் வளரும் போது அந்தந்த தோஷங்களுக்கு ஏற்பக் கண்ணின் கருமணியின் நிறமும் மாறும். தோஷங்கள் அடிப்பகுதியில் தங்கியிருந்தால் அருகில் உள்ள பொருள்களைக் காண இயலாது. மேற்பகுதியில் இருந்தால் தொலைவில் உள்ள பொருள்களைக் காண இயலாது. பக்கத்தில் இருந்தால் பக்கத்தில் உள்ள பொருள்களைக் காண 'யலாது. நான்கு பக்கங்களிலும் பரவி இருந்தால் வேறு வேறாக இருக்கும் பொருள்கள் ஒன்றோடொன்று சேர்ந்திருப்பது போல தோன்றும். தோஷங்கள் கருமணியின் நடுவில் தங்கி இருந்தால் ஒரு பொருள் இரண்டாகக் காணப்படும். கருமணியில் தோஷங்கள் இரண்டு இடங்களில் தங்கியிருந்தால் ஒன்று மூன்றாகக் காணப்படும். தோஷங்கள் சரியாக நிலைபெறாத போது ஒரு பொருள் பல பொருள்களாக காணப்படும். இந்நிலையில் தோஷங்கள் நான்காம் புரையைச் சார்ந்து நிலை பெறும். இது திமிரம் எனும் நோயாகும். 11-15

### 6. லிங்கநாசம், நீலிகா, காசமணி எனும் நோய்களின் இலக்கணங்கள்

திமிரநோயில் தோஷங்கள் நான்காவது புரையைச் சார்ந்து நிலைபெற்ற பிறகு பார்வையை முழுவதாகத் தடுத்துவிடும். இது

லிங்கநாசம் எனும் நோயாகும். 'லிங்கம்' என்றால் பார்க்கும் வலிமை. அது அற்றுப் போவது லிங்கநாசமாகும். இந்நிலையில் தோஷங்கள் முழுமை பெற்றிருந்தால் பார்வை இருள் மண்டிய தாகும். தோஷங்கள் நன்கு வேரூன்றாமல் இருந்தால் அவர் ஒளியை காண்பார். சந்திரன், சூரியன் ஒளிவீசும் நட்சத்திரம், மின்னல், நன்கு எரியும் தீ முதலியவற்றையும், இவ்வாறு ஒளி மிகுந்த பொருள்களையும் காணக்கூடியவராவார். இந்நிலையில் உள்ள நோய் நீலிகா அல்லது காசம் எனப்படும். 16-18

**7. வாதிகதிமிர இலக்கணம்**

வாதத்தால் தோன்றிய திமிர நோய் கொண்டவர் காணும் பொருள் சுற்றித் கொண்டிருப்பதைப் போலவும், அழுக்கடைந்த தாகவும் சிறிது சிவப்பு நிறம் கொண்டுள்ளதாகவும், கோணலாக இருப்பதாகவும் காண்பார்.

**8. பித்தத்தால் தோன்றும் திமிர இலக்கணம்**

பித்தத்தால் தோன்றிய திமிரத்தில் நோயாளி சூரியன், மின்மினிப்பூச்சி, வானவில், மின்னல், மயில் இறகுகள் போன்ற சித்திர விசித்திரக் காட்சிகளையும், நீலம், கறுப்பு முதலிய நிறங்களையும் பொய்யாகத் காண்பார். 19-20

**9. கபத்தால் தோன்றும் திமிர இலக்கணம்**

கப னால தோன்றிய திமிர நோயாளி கபம் மிகுந்திருப்பதால் காணும் பொருள்கள் எண்ணெய்ப்பசை, வெண்ணிறம், சாமரம் போன்ற மஞ்சள் நிறம் கொண்டிருப்பதைப் போலவும், வெண்ணிற முகில்களைப் போல நிறம் கொண்டிருப்பதாகவும் காண்பார், சிறுபொருள்கள் பெரிய உருவம் கொண்டிருப்பது போலவும், வானில் மேகங்கள் இல்லாதபோது மேகமூட்டம் இருப்பது போலவும், பொருள்களை நீரில் மூழ்கி இருப்பவை போலவும் காண்பார். பொருள்களை நான்கு பக்கங்களிலும் அசைவற்றுப் பதிந்திருப்பவை போலவும் காண்பார். 21-22

**10. இரத்த தோஷத்தால் தோன்றும் திமிர இலக்கணம்**

இரத்த தோஷம் மிகுந்திருப்பதால் தோன்றும் திமிர நோயாளி ஒவ்வொரு பொருளையும் சிவப்பு நிறம் கொண்டு இருளால் சூழப்பட்டுப் பச்சை, மாநிறம், கறுப்பு நிறம் கொண்டு புகையால் சூழப்பட்டிருப்பது போலக் காண்பார். 23

**11. மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் திமிர லக்கணம்**

மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் திமிர நோய் உள்ளவர், சித்திர விசித்திரமான நான்கு பக்கங்களிலும் (வேறு ஏதோ பொருள்களால்) சூழப்பட்டிருப்பவைப் போலவும், ஒரு பொருள் பலவாகப் பிளவுபட்டிருப்பது போலவும், இரண்டாகவோ நான்காகவோ வேறுபட்டிருப்பது போலவும் காண்பார். ஒரு பொருளை அதன் உறுப்புகள் அற்றதாகவும் காண்பார். வானத்தில் நட்சத்திரங்கள் இல்லாதது போலவும், பல விகாரங்களைக் கொண்டுள்ளதாகவும் காண்பார். 24

**12. பரிம்லாயிகாசம் எனும் நோயின் இலக்கணம்**

இந்த நோயில் பித்தம் இரத்தத்தின் ஒளியுடன் கூடிப் பரிம்லாயி காசம் எனும் நோயைத் தோற்றுவிக்கும். இந்நோய் கொண்டவர் எல்லா திசைகளிலும் மஞ்சள் அல்லது இளஞ்சூரியனின் சிவப்பு நிறம் கொண்டுள்ளது போலக் காண்பார். மரங்கள் மின்மினிப் பூச்சிகளுடன் கூடி இருப்பன போலவும் அல்லது சூரியனின் ஒளி முதலியவற்றால் சூழப்பட்டிருப்பவை போலவும் காண்பார். 25

இனி கண் விழிகள் நிறமாறுபாடு கொள்வதால் தோன்றும் லிங்கநாசநோயின் ஆறு வகைகளை விளக்குகிறேன். 26

**13. தோஷங்களுக்கு ஏற்ப லிங்கநாசத்தின் இலக்கணம்**

வாதம் மிகுவதால் கண்விழி நிறமாறுபாடு கொள்வதால் சிவப்பு நிறமும், பித்தத்தின் மிகுதியால் மஞ்சள் நிறமும் அல்லது நீல நிறமும், கபத்தின் மிகுதியால் வெள்ளை நிறமும், இரத்தத்தின் சீற்றத்தால் சிவப்பு நிறமும், மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் சித்திர விசித்திர நிறமும் கொண்டதாகும். 27

**14. பித்தத்தால் தோன்றும் பரிம்லாயி இலக்கணம்**

இரத்தத்தால் அல்லது இரத்தத்தின் ஒளியால் தோன்றிய பரிம்லாயி எனும் நோயில் கண்ணின் கருமணி தடித்த கண்ணாடி போல நெருப்பைப் போன்ற சிவப்பு நிறத்துடன் காணப்படும். விழிமண்டலம் அழுக்கடைந்தது போல சிறிது நீல நிறம் கொள்ளும். இந்நோயில் வினைகள் குறைந்து சில நேரங்களில் ( சிலருக்கு) கண்பார்வையும் தோன்றும். 28

**15. தோஷங்களின் மாறுபாட்டால் ஆறு வகை லிங்கநாசங்களின் லக்கணம்**

வாதம் சீற்றமுறுவதால் தோன்றும் லிங்கநாசத்தில் விழிமண்டலம் சிவப்பு நிறம் கொண்டு எப்பொழுதும் அசைந்து

கொண்டு தொடுகைக்கு வறண்டிருப்பது போல காணப்படும். பித்தத்தால் தோன்றிய * லிங்கநாசத்தில் விழி சிறிது நீல நிறம் கொண்டு அல்லது வெண்கலம் போல வெண்ணிறம் கலந்த நீளமாகவோ, மஞ்சள் நிறமாகவோ காணப்படும். கபத்தால் தோன்றிய லிங்கநாசத்தில் விழி, தடித்து அடர்த்தியாகி சங்கு அல்லது மல்லிகை மலர்போல வெண்ணிறம் கொள்ளும். அசைந்து கொண்டிருக்கும் தாமரை • இலை மீதுள்ள நீர்த்துளி போலக் காணப்படும். இந்நோயில் விழி வெயிலில் சுருங்கிச் சிறியதாகவும், நிழலில் அகன்று பெரியதாகவும் காணப்படும். கண்ணைச் சற்று அழுத்தினால் இப்படியும் அப்படியும் அசைந்து கொண்டிருப்பது போல காணப்படும். இரத்த தோஷத்தால் தோன்றும் லிங்கநாசத்தில் விழி தாமரை இதழ் மற்றும் பவழம் போலச் சிவந்திருக்கும். மூன்று தோஷங்களாலும் தோன்றும் லிங்கநாசத்தில் கண்விழியில் விசித்திர நிறங்களைக் கொண்டுள்ளதாகக் காணப்படும். மேலும் வாதம் முதலிய தோஷங்களுக்குரிய இலக்கணங்கள் பலவும் காணப்படும். 29-33

### 16. கண்ணின் கருமணியில் தோன்றும் நோய்களின் விளக்கம்

முன்கூறிய ஆறு வகை லிங்கநாசங்களும், இனி கூறப்போகும் பித்தவிதக்த திருஷ்டி (பித்தத்தால் எரிக்கப்பட்ட கருமணி) போன்ற ஆறு வகை நோய்களும் சேர்ந்து கண்ணின் கருவிழியைச் சார்ந்து தோன்றக் கூடிய நோய்கள் பன்னிரண்டு வகையினவாகும். பித்தம் முதலியவற்றால் எரிக்கப்பட்டவை திவாந்த்யம் (பகலில் கண் தெரியாமை), சிலேத்துமத்தால் சிலேத்தும விதக்ததிருஷ்டி (இரவில் கண் தெரியாமை), தூமதர்சி (க்லௌகோமா - Glaucoma), ஹ்ரஸ்வஜாட்யம் (இரவில் கண் தெரியாமை), நகுலாந்ததா (இரவில் கண் தெரியாமை), கம்பீரிகா கண்ணைச் சார்ந்த நரம்பு செயலற்றுப் போதல்) எனும் நோய்களாகும். 34

### 17. பித்தவிதக்திருஷ்டி இலக்கணம்

தவறான உணவு, கூடாத பழக்கவழக்கங்களால் பித்தம் சீற்றமடைந்து கெடுப்பதால் கண்ணின் கருவிழி மஞ்சள் நிறம் கொள்ளும். இந்நோய் கொண்டவர் எல்லா பொருள்களையும் மஞ்சள் நிறம் கொண்டவையாகக் காண்பார். இந்நோயில் தோஷம் கண்விழியின் மூன்றாவது புரையைச்

---

* லிங்கநாசம் - கண்பார்வை இழத்தல் (Cataract)

சேர்ந்திருக்குமானால் அந்நோய் கொண்டவர் பகலில் கண்பார்வையற்றவர் ஆவார். இரவில் மட்டும் கண்பார்வை இருக்கும். ஏனெனில் இரவில் கண்களின் குளுமைத் தன்மையின் வலிமை சார்ந்திருக்கும். அதனால் பித்தத்தின் வலிமை குறைவ தால் கண்கள் பார்க்க கூடிய நிலைமையில் இருக்கும். 35-36

## 18. கபத்தால் எரிந்த கண் விழி ம

கபத்தின் சீற்றத்தால் கேடுற்ற கண்விழிகள் கொண்டவர் எல்லாப் பொருள்களையும் வெண்ணிறம் கொண்டவையாகக் காண்பார். இந்நோயில் தோஷம் கண்விழியின் மூன்றாவது புரையைச் சார்ந்திருந்தால் இரவில் கண்கள் தெரியாமற் போகும். பகலில் வெயிலின் வலிமையால் கண்களில் உள்ள கபச்சீற்றம் குறைவதால் பார்வை இருக்கும். 37-38

## 19. தூமதர்சி இலக்கணம்

வருத்தம், காய்ச்சல், மிக்க உடல் உழைப்பு, தலையில் மிக்க வெப்பம் சேர்தல் முதலிய காரணங்களால் கண்பார்வை தாக்கப்படும். இந்நோய் கொண்டவர் எல்லாப் பொருள்களையும் புகை சூழ்ந்தவையாகக் காண்பார். அதனால் இந்நோய் தூமதர்சி எனப்படும். 39

## 20. ஹ்ரஸ்வஜாட்ய இலக்கணம்

இந்நோய் கொண்டவர் பகலில் பொருள்களை மிகவும் கஷ்டப்பட்டுக் காண்பார் சாதாரணப் பொருள்களையும் மிகவும் சிறியவையாகக் காண்பார். 40

## 21. நகுலாந்திய இலக்கணம்

வாதபித்தங்களால் கேடுற்ற கண்விழி கீரியின் கண்களைப் போல பளபளக்கும். இந்நோய் கொண்டவர் பகலில் சித்திர விசித்திரக் காட்சிகளைக் காண்பார். இரவுநேரங்களில் கண்பார். அடியோடு கெட்டிருக்கும். இந்நோய் நகுலாந்தியம் எனப்படும்.41

## 22. கம்பீரிகா நோயின் இலக்கணம்

வாதத்தால் (மூச்சுக்காற்றால்) சூழப்பட்ட பார்வை விகாரப்பட்டு விடும். கண் சுருங்கும். கண்விழிகள் ஆழமாகப் பதிந்து விடும். கண்களில் கடும் துன்பம் தோன்றும். இது கம்பீரிகா எனும் நோயாகும். 42

### 23. காரணத்தோடு கூடிய அல்லது காரணமற்ற லிங்கநாச இலக்கணங்கள்

தலையில் மிக்க அழற்சி ஏற்படுவதால் தோன்றுவது ஸநிமித்தலிங்கநாசம் (காரணத்தோடு கூடியலிங்க நாசம்) எனப்படும். இந்நோயில் அபிஷ்யந்த நோயின் இலக்கணங்கள் காணப்படும்.

தேவதைகள், இருஷிகள், கந்தர்வர்கள், திவ்யஸர்ப்பங்கள் முதலியவற்றைக் காண்பதாலும், மிக்க ஒளி வீசும் பொருள்களைக் காண்பதாலும் பார்வை கெட்டுவிடுமானால் இது அநிமித்தலிங்கநாசம் எனப்படும். இந்நோயில் கருவிழி முன்பு இருந்ததைவிட அதிக அளவில் பளபளக்கும். வைடூரிய மணி போலத் தூயதாகக் காணப்படும். (உடலில் தோன்றும் தோஷங்கள் அற்றதால் இது (அநிமித்தம்) காரணமற்றது என்றுணர்க.) 43-44

### 24. அபிகாதஜலிங்க நாச இலக்கணம்

கல், கட்டை முதலியவற்றால் தாக்கப்பட்டவர் பார்வை சிதைவு பெறும். கொடிய வலியுண்டாகும் அல்லது பார்வை அடியோடு கெட்டு விடும். இது அபிகாதஜ (அடிபடுதலால் தோன்றும்) லிங்கநாசம் எனப்படும். 45

இவ்வாறு இந்த சாலாக்ய தந்திரத்தில் எழுபத்தாறு வகையான கண் நோய்கள் தனித்தனியாகத் தோற்றத்திற்குக் காரணம், வேற்றுமைகள் முதலியன விளக்கப்பட்டன. மேலும் சில விளக்கங்களும், பிறகு சிகிச்சை முறைகளும் இனிக் கூறப் போகிறேன். 46

**ஸுசுருதஸம்ஹிதை உத்தரஸ்தானத்தில்**

**திருஷ்டிகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**ஏழாம் அத்தியாயம் முற்றும்.**

# எட்டாம் அத்தியாயம்
# *சிகித்ஸித பிரவிபாக விஞ்ஞானீயம்

இனி கண் நோய்களில் எவை அறுவைக்கு உட்படுபவை, எவை சிகிச்சையால் தீர்க்கக் கூடியவை, எவை தீர்க்க இயலாதவை என்பன போன்ற விளக்கங்களைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

முன்பு பெயர், இலக்கணம், காரணம், முற்குறிகள், நோய்க்குரிய இலக்கணங்கள் போன்றவற்றுடன் எழுபத்தாறு கண் நோய்களைக் குறிப்பிட்டேன். இனி அவற்றிற்கு உரிய சிகிச்சை முறைகளைச் சுருக்கமாகவும், விளக்கமாகவும் கூறுகிறேன். 3

### 1. கண் நோய்களைப் பற்றிய விளக்கம்

கண் நோய்கள் எழுபத்தியாறில் அறுவையால் சிகிச்சைக்கு உரியவை பதினொன்று, கீறி நீக்கத்தக்கவை ஒன்பது, பிளக்கத் தக்கவை ஐந்து, [1]வியதனம் பதினைந்து, ஆயுதமின்றி மருந்தால் நீக்கத்தக்கவை பன்னிரண்டு, காலங்கடக்கத்தக்கவை (யாப்யங்கள்) ஏழு. எத்தகைய சிகிச்சையாலும் நீக்க இயலாதவை (கைவிடத் தக்கவை) பதினைந்து ஆகும். 2ஆகந்துகம் இரண்டும் காலங் கடக்கத்தக்கவை அல்லது சிகிச்சைக்கு உட்படாதவை என உணர்க. 4-5

### 2. அறுப்பதால் நீக்கத்தக்கவை

அர்சோவர்த்ம, சுஷ்கார்சம், வர்த்மார்புதம், ஸிரா பிடகா, ஸிராஜாலம், பிரஸ்தூரி, சுக்லம், லோஹிதம், அதிமாம்ஸஜம், சுக்லம் எனும் ஐந்து வகை அர்மங்கள், பர்வணிகா ஆகிய இந்தப் பதினோரு நோய்களும் அறுவை முறையால் நீக்கத்தக்கவை. 6

---

* சிகித்ஸிதபிரவிபாகம் - சிகிச்சைக்கு ஏற்ப வேறுபடுத்துதல். கண் நோய்களில் சிகிச்சைக்கு உட்படுபவை, உட்படாதவை போன்ற வேறுபாடுகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் சிகித்ஸிதபிரவிபாக விஞ்ஞானீயம் எனப் பெயர் பெற்றது.

1. வியதனம் - குத்துதல்.
2. ஆகந்துகம் - புறக்காரணங்களால் தோன்றுபவை.

### 3. லேக்ய (கீறுதல்) முறையால் நீக்கத் தக்க நோய்கள்

உத்ஸங்கினி, பஹலவர்த்ம, கர்தமவர்த்ம, சியாவவர்த்ம, பத்தவர்த்ம, கிலிஷ்டவர்த்ம, போதகீ, கும்பீகினி, வர்த்மசர்க்கரா எனும் இந்த ஒன்பது நோய்களும் லேக்யங்களாகும். 7

### 4. பேத்ய (பிளத்தல்) முறையால் நீக்கக் கூடிய நோய்கள்

சிலேத்துமஉபநாஹம், லகணம், பிஸவர்த்ம, கிருமி ஜன்ய கிரந்தி, அஞ்சனநாமிகா எனும் இவ்வைந்தும் பிளக்கும் (பேத்ய) முறையால் நீக்கத்தக்கவை. வியதனம் (குத்துதல்) எனும் முறையால் ஸிரோத்பாதம், ஸிராபிரஹர்ஷம், வீக்கத்துடன் கூடிய நேத்ரபாகம், வீக்கமில்லாத நேத்ரபாகம், அன்யதோ வாதம், பூயாலஸம், வாதவிபர்யயம், வாதிக - பைத்திக-சிலேத்துமிக ரக்தஜம் எனும் நான்கு வகை அதிமந்தங்கள், வாதிக பைத்திக சிலேத்துமிக, ரக்தஜ அபிஷ்யந்தங்கள் எனும் இந்தப் பதினைந்தும் நீக்கத்தக்கவை.

அறுவை சிகிச்சை முறைகளை நீக்க வேண்டிய கண் நோய்கள்: சுஷ்காக்ஷிபாகம், கபவிதக்ததிருஷ்டி, பித்தவிதக்த திருஷ்டி, அம்லாப்யுஷிதம், அவிரண சுக்ரம், அர்ஜுனன், பிஷ்டகம், அக்லின்னவர்த்ம, தூமதர்சி, சுக்திதா, பிரக்லின்னவர்த்ம, பலாஸகிரதிதம், ஆகந்துகங்களான இரு நோய்கள் ஆகியவற்றில் அறுவைச் சிகிச்சை முறையைப் பயன்படுத்தக்கூடாது. 8-10

### 5. யாப்யங்களான நோய்கள்

வாதிக, பைத்திக, சிலேத்துமிக, ரக்தஜ ஸந்நிபாதங்களாகிய காச நோய்களும், பரிம்லாயி என்பதும், பக்ஷ்ம கோபமும் காலம் கடத்தக்கூடியவை.

சிகிச்சைக்கு உட்படாத கண் நோய்களாவன : வாத சீற்றத்தால் தோன்றும் ஹ்ருத அதிமந்தம், நிமிஷம், கம்பீரிகா, வாதஹதவர்த்மா என்பனவும், பித்தசீற்றத்தால் தோன்றும் ஹ்ரஸ்வஜாட்யம், பித்தஜஸ்ராவமும் கபத்தின் சீற்றத்தால் தோன்றும் கபஜஸ்ராவமும், இரத்த விகாரத்தால் தோன்றும் ரத்தஜஸ்ராவமும், அலகாஜாதம், சோணிதார்சம், ஸவிரணசுக்ரம், மூன்று தோஷங்களாலும் தோன்றும் பூயாஸ்ராவமும், நகுலாந்த்யம், அக்ஷிபாகாத்யயம், அலஜீ என்பனவும் புறத்தாக்குதலால் தோன்றும் ஸநிமித்த - அநிமித்த நோய்கள் இரண்டும் என இவை அனைத்தும் சிகிச்சைக்கு உட்படாதவையாகும். 11

**ஸுசுருதஸம்ஹிதை உத்தரஸ்தானத்தில்**
**சிகித்ஸித பிரவிபாக விஞ்ஞானீயம் எனும்**
**எட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# ஒன்பதாம் அத்தியாயம்
# *வாதாபிஷ்யந்த பிரதிஷேதம்

இனி கண் நோய்கள் அனைத்திலும் அபிஷ்யந்தம் சிறப்பான இலக்கணமாகையால் அதற்குரிய சிகிச்சை முறைகள் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்குத் தன்வந்தரி பகவான் உபதேசம் செய்த முறையில் விளக்கப்படுகிறது. 1-2

## 1. அபிஷ்யந்தத்திற்குச் சிகிச்சை முறை

**அபிஷ்யந்தம் மற்றும் ****அதிமந்த** நோயால் துன்புறும் போது முதலில் நெய்யைக் கொண்டு எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்து வியர்க்கச் செய்ய வேண்டும். பிறகு உபநாஸிகா, நெற்றிக்கடைக்கண் பகுதிகளில் உள்ள சிரையை சஸ்திர முறைப்படிக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு எண்ணெய் மருந்தை உட்கொள்ளச் செய்து பேதியாகச் செய்ய வேண்டும். பிறகு எண்ணெய் வஸ்தி அல்லது நிரூஹண வஸ்தியால் சிகிச்சை செய்ய வேண்டும். தர்ப்பணம், புடபாகம், நெய் மருந்தைப் பருகச் செய்தல், ஆச்யோதன முறை, மூக்கில் மருந்திடுதல், எண்ணெய் முறை, பரிஷேகம், சிரோவஸ்தி, பிரதேஹம் மற்றும் எண்ணெய்த் தேய்த்துக் குளித்தல் எனும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 3-4

## 2. வாத அபிஷ்யந்த சிகிச்சை

வாதத்தைப் போக்கும் பொருள்கள் மற்றும் நீர்ப்பாங்கான இடங்களில் நீர் நிலைகளில் தோன்றும் உயிரினங்களின் புலால் மற்றும் புளிப்புச் சுவையுள்ள பொருள்கள் ஆகியவற்றாலான கஷாயத்தைக் கண்களின் மேல் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். நெய், எண்ணெய், வசை, கொழுப்பு எனும் நான்கு வகை எண்ணெய்களைச் சூடாக்கி, அதில் துணியை நனைத்து அத்துணியைக் கண்களின் மேல் வைத்து கஷாயத்தால் நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். ஆடு முதலியவற்றின்

---

*வாத அபிஷ்யந்தம் - வாதத்தால் தோன்றும் அபிஷ்யந்தம் அதற்கு பிரதிஷேதமாவது சிகிச்சை. அம்முறைகளை விளக்குவ தால் இந்த அத்தியாயம் வாதாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும் பெயர் கொண்டது.

**அபிஷ்யந்தம், அதிமந்தம் - கண் நோய்கள்.

சூடான பால், அவ்வாறே வேஸவாரம் அல்லது சால்வண ஸ்வேதத்திற்கான ஔஷதிகளைக் கொதிக்கும் நீரில் போட்டு அதன் ஆவி இவைகளைக் கொண்டு கண்களை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். அல்லது பாயஸத்தால் நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். அறிவாற்றல் மிக்க மருத்துவர் இங்கு கூறப்படாத ஒற்றடம் கொடுக்கும் முறைகளாலும் அபிஷ்யந்த, அதிமந்த நோய்களைத் தணிக்க முயல வேண்டும். இவ்வாறு கிராமங்களில் தோன்றும் மடு முதலிய நீர் நிலைகளில் தோன் றும் விலங்குகளுடைய மற்றும் பறவைகளுடைய புலால் சாறு, எண்ணெய்ப்பசை கொண்ட பொருள்களில் மாதுளை, நெல்லிக் கனி முதலியவற்றின் சுரஸத்தைச் சேர்த்து, அவற்றால் அபிஷ் யந்தம் மற்றும் அதிமந்த நோய் கொண்டவரின் கண்களை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். தண்ணீர்விட்டான் கிழங்கு, சுக்கு முதலியவற்றைச் சேர்த்துக் காய்ச்சிய பாலுடன் அரிசிச் சோற்றை உண்ணச் செய்ய வேண்டும். உணவு உண்டபின் நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். திரிபலை கஷாயம் சேர்த்துச் செய்த நெய் அல்லது பாலை அல்லது பழையதான நெய்யை மட்டுமோ அல்லது நன்கு காய்ச்சிய பாலையோ, வாதத்தைப் போக்கும் தசமூலம் முதலிய பொருள்களின் கஷாயத்தையோ அல்லது பிரதமாதி கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களின் கஷாயத்தையோ சேர்த்துக் காய்ச்சிய பாலைப் பருகச் செய்ய வேண்டும். 5-9

### 3. வேறு சிகிச்சை முறை

நான்கு வகை எண்ணெய்களில் நல்லெண்ணெயைத் தவிர்த்து மற்ற மூன்றையும் வாதத்தைப் போக்கும் பொருள்களுடன் சேர்த் துக் கஷாயம் காய்ச்சி அதைக் கொண்டு தர்ப்பண சிகிச்சையைச் செய்ய வேண்டும். எண்ணெய்ப் பொருள்களாலான புடபாகம், எண்ணெயுடன் கூடிய பொருள்களாலான புகை பிடிக்கும் முறை, எண்ணெய் மருந்தாலான நஸிய முறை ஆகியவற்றையும் பயன்படுத்த வேண்டும். புடபாகம் முதலியவற்றில் ஓரிலை, பால் முதுக்கன்கிழங்கு, இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப்பொருள் களாலான எண்ணெயைப் பயன்படுத்துதல் சிறந்த முறையாகும். அல்லது ஆமணக்கு இலை, ஆமணக்கு வேர், ஆமணக்கு பட்டை ஆகியவற்றுடன் கொதிக்க வைத்த ஆட்டின் பால் நஸிய முறைக்கும், புடபாக முறைக்கும் சிறந்தவையாகும். 10-11

### 4. ஸேசனம் (நனைத்துக் கொண்டிருத்தல்) முதலிய முறைகள்

முள்ளுக்கத்தரி வேரின் விழுதை அல்லது கஷாயத்தைச் சேர்த்துக் காய்ச்சிய பால், இந்துப்பு, கோரைக்கிழங்கு, அதிமதுரம், திப்பிலி ஆகியவற்றின் கஷாயமோ, விழுதோ

சேர்த்துக் காய்ச்சிய பால் அபிஷ்யந்தம் மற்றும் அதிமந்தம் எனும் கண் நோய்களில் நனைத்துக் கொண்டிருக்கப் பெரிதும் பயன்படும். 12

## 5. அர்தோதகப் (பாதி அளவு நீர் கலந்துள்ள) பால்

அபிஷ்யந்தம், அதிமந்தம் எனும் நோய்களில் கண்களின் மேல் ஊற்றிக் கொண்டிருக்க பாதி அளவு நீர் கலந்துள்ள சூடான பால் சிறந்ததாகும். அல்லது வெட்டிவேர், தகரை, மஞ்சிட்டி, அத்தி ஆகியவற்றின் பட்டைகளாலான விழுது அல்லது கஷாயத்துடன் காய்ச்சிய பாலைப் பயன்படுத்துவதும் சிறந்த முறையாகும். 13

## நோய்க்கு மை

அதிமதுரம், மஞ்சள், தேவதாரு ஆகியவற்றை சம அளவில் கொண்டு நீருடனோ, ஆட்டுப்பாலுடனோ அரைத்துச் செய்த மை போன்ற மருந்து வாதத்தாலான அபிஷ்யந்த நோய்க்குச் சிறந்த மை மருந்தாகும். 14

## 7. குடிகாஞ்சனம்

ஸுவர்ணகைரிகம் ஒரு பங்கு, இந்துப்பு இரண்டு பங்கு, திப்பிலி நான்கு பங்கு, சுக்கு எட்டு பங்கு கொண்டு நீருடன் அரைத்து மாத்திரை செய்து அதை ஆட்டுப்பாலில் தேய்த்து நோயுற்ற கண்களில் மை (குடிகாஞ்சனம்) போல் இட்டால் அபிஷ்யந்த நோயில் நன்மை உண்டாகும். எண்ணெய் கலந்த மை மருந்தும் பயன்படுத்தத்தக்கது. இம்முறை கிரியாகல்பம் எனும் அத்தியாயத்தில் விளக்கப்படும். 15-16

அன்யதோவாதம், வாதபர்யயம் எனும் கண் நோய்களிலும் வாத அபிஷ்யந்தத்திற்கு கூறிய முறைளைப் பயன்படுத்தலாம். 17

## 8. அந்யதோகத - வாதபர்யயங்களுக்குச் சிறப்பு முறை

அந்யதோவாதம், வாதபர்யயம் எனும் நோய்களில் உணவை உட்கொள்வதற்கு முன் நெய்யைப் பருகுதல் நன்மைதரும் அல்லது உணவுடன் பாலை உட்கொள்ளுதல் நலம். மேலும் விருக்ஷாதனி, விளாம், பெரும்பஞ்சமூலம் ஆகியவற்றின் விழுதை அல்லது கஷாயத்தை பால் அல்லது நண்டின் புலால் சாற்றுடன் தக்க அளவில் கலந்து அத்துடன் நெய் மருந்து செய்து அதைப் பருகச் செய்ய வேண்டும். அல்லது மத்தூர் (ஒரு வகை சாலிஞ்ச இனத்தைச் சேர்ந்த கீரை) கோவை, ஓமம் ஆகியற்றின் விழுதை

அல்லது கஷாயத்தைச் சேர்த்துக் காய்ச்சிய பாலைக்கொண்டு செய்த நெய்யைப் பயன்படுத்த வேண்டும். 18-19

**9. சுஷ்காக்ஷிபாகத்திற்குச் சிகிச்சை**

இந்துப்பு, மரமஞ்சள், சுக்கு · ஆகியவற்றைத் தூளாக்கி துரிஞ்சிப் பழச்சாற்றுடன் கலந்து வைக்க வேண்டும். சிறிதளவு அம்மருந்தை நீருடனோ, பாலுடனோ சேர்த்து மை போல கண்ணில் இட வேண்டும். அத்துடன் நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். கண்களுக்குத் தர்ப்பண முறையை பயன்படுத்த வேண்டும். ஜீவனீய கிருதம் அல்லது அணு தைலத்தைக் கொண்டு நஸிய முறையை பின்பற்ற வேண்டும். இந்துப்புடன் கூடிய குளிர்ந்த நீரைக் கொண்டு கண்களை நனைத்துக் கொண் டிருக்க வேண்டும். அல்லது மஞ்சள், மரமஞ்சள் ஆகியவற்றின் விழுது, கஷாயம் ஆகியவற்றுடன் நெய் மருந்து செய்து அதில் சிறிதளவு இந்துப்பு கலந்து உட்கொள்ள வேண்டும். அதை மை போல பயன்படுத்த வேண்டும். அல்லது பாலுடன் மை மருந்தை அரைத்துப் பயன்படுத்துக. சுக்கை பால் விட்டரைத்து அதை மை போலக் கண்களில் இடுவதும் நலம் தரும். 20-23

சுஷ்காக்ஷிபாகம் எனும் நோயில் நீர்ப்பாங்கான அல்லது நீரில் வாழும் உயிரினங்களின் வசையுடன் இந்துப்பு, சுக்கு ஆகியவற்றின் தூளை கலந்து மை போலப் பயன்படுத்த வேண்டும். 24

**10. வாத நோய்கள் அனைத்திற்கும் சிகிச்சை**

வாதத்தின் சீற்றத்தால் கண் பார்வையை கெடுக்கும் வாதத்திற்குத் தக்க முறைப்படி மருத்துவர் சிகிச்சை செய்ய வேண்டும். 25

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**வாதாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும்**

**ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்**

## பத்தாம் அத்த்யாயம்

# *பித்தாபிஷ்யந்த பிரதிஷேதம்

இனி பித்தத்தால் தோன்றும் அபிஷ்யந்த நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

### 1. பித்த அபிஷ்யந்தத்திற்கு உரிய முறைகள்

பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் அபிஷ்யந்தம் எனும் கண் நோய்க்கு கெட்ட இரத்தத்தை வெளியேற்றுதல், விரேசனம் முதலான உடல் முழுவதும் தூய்மைப்படுத்தும் முறை, பித்தத்தால் தோன்றும் அக்கி எனும் நோய்க்குக் கூறியபடி (1) ஸேகம் (மருந்தைக் கொண்டு நனைத்தல்) (2) ஆலேபம் (மேல்பூச்சு) (3) நஸியம் (4) மை முதலிய முறைகளைக் கொண்டு சிகிச்சை செய்ய வேண்டும். அவ்விரண்டு நோய்களிலும் குந்த்ரா எனும் ஒரு வகைப் புல், சம்பா பயிரின் வேர், பாசிக்கொடி, கல்லூர்வஞ்சி, மரமஞ்சள், ஏலக்காய், நீலாம்பல், பாச்சோத்தி, கோரைக்கிழங்கு. வெள்ளை ஆம்பல், சர்க்கரை, தர்ப்பை வேர், கரும்புவேர், நிலப்பனை, நீர் வஞ்சி, பதுமகம், திராட்சை, தேன், சிவப்புச்சந்தனம், அதிமதுரம், தாய்ப்பால், மஞ்சள், நன்னாரி ஆகிய இவை அனைத்தையும் சம அளவில் கொண்டு, விழுதாக அரைத்து அதற்கு நான்கு பங்கு நெய், நெய்க்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து, நெய் மிகுந்திருக்கச் காய்ச்சி வடிகட்டிக் கொள்க. இந்த நெய் மருந்து தர்ப்பணம், மேல் ஊற்றுதல், நஸியம் ஆகிய முறைகளில் பயன்படுத்தத்தக்கது. இம்மருந்துகளைச் சேர்த்துக் காய்ச்சிய ஆட்டின் பாலும் தர்ப்பணம், நனைத்தல், நஸியம் முதலிய முறைகளில் சிறந்தது. இந்த மருந்துப் பொருள்களில் தனித்தனியாகவோ, அனைத்தையுமோ கொண்டு செய்த மருந்தை பிரதிமர்ஷம் (தேய்த்தல்), அவபீடம், நஸியமுறை, சிரோவிரேசனம் எனும் நான்கு வகை நஸிய முறைகளிலும் பயன்படுத்தத் தகும். மேலும் பித்தத்தைத் தணிக்கும் சிகிச்சை முறைகளையும் கையாள வேண்டும். மூன்று மூன்று அல்லது நான்கு நான்கு நாட்களுக்கு ஒரு முறை க்ஷீரஸர்ப்பி (பாலிலிருந்து

---

*பித்தாபிஷ்யந்த பிரதிஷேதம் - பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் அபிஷ்யந்தத்திற்கு (கண்நோய்) உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் பித்தாபிஷ்யந்த பிரதிஷேதம் எனப் பெயர் கொண்டது.

எடுத்த) வெண்ணெய் (நெய்) கொண்டு நஸிய முறையைப் பயன்படுத்தலாம். 3-6

## 2. பித்த நோயில் மை இடுதல்

புரசு மலர் அல்லது வேர் அல்லது யானைவணங்கியின் சுரசத்தில் சர்க்கரையையும், தேனையும் கலந்து மை போல் கண்களில் இடுவதால் பித்தத்தால் தோன்றும் அபிஷ்யந்தம் தணியும். கருஞ்சிவதை அல்லது அதிமதுரத்தைக் கொண்டு *ரஸகிரியை செய்து அதில் சர்க்கரையும் தேனும் கலந்து, மை போல பயன்படுத்தினால் பித்த அபிஷ்யந்தம் தணியும். 7

## 3. பித்த அபிஷ்யந்தத்திற்கு கோரைக்கிழங்காலான மை

கோரைக்கிழங்கு, கடல்நுரை, தாமரை, வாயுவிடங்கம், ஏலக் காய், நெல்லிக்கனி, விஜயஸாரம் ஆகியவற்றை அரைத்து அல்லது ரஸகிரியை செய்து மையாகப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறே தாளிஸபத்திரி, ஏலக்காய், சுவர்ணகைரிகம், வெட்டி வேர், சங்கு ஆகியவற்றை நன்கு தூள் செய்த பிறகு அதை தாய்ப்பால் அல்லது பசுவின்பால் ஆகியவற்றுடன் மூன்று நாட்கள் கலந்து வைத்து உலர்த்திப் பத்திரப்படுத்த வேண்டும். இதை மை போலப் பயன்படுத்தினால் கண் நோய்களில் நல்ல பயன் தரும். 8

காட்டாத்தி மற்றும் ஸ்யந்தனம் என்பதை மைய அரைத்து அல்லது இவற்றால் ரஸகிரியை செய்து தாய்ப்பால் அல்லது பசுவின் பாலுடன் கண்களில் மையாக இட வேண்டும். அல்லது தங்கத்தை தாய்ப்பாலுடன் அரைத்து அல்லது புரச மலரைத் தூளாக்கி தேன் கலந்து கண்களில் மை போல் இட வேண்டும். 9

பாச்சோத்தி, திராட்சை, சர்க்கரை, தாமரை, அதிமதுரம், வசம்பு ஆகியவற்றைத் தூளாக்கி பாலுடன் அரைத்து மை போல் இட வேண்டும். அல்லது கொன்றைப்பட்டையை பாலுடன் அரைத்து மையாக இட வேண்டும். சந்தனம், அத்திப்பட்டை ஆகியவற்றின் தூளை நீரில் கலந்து தாய்ப்பாலுடன் அரைத்து மை போல இட வேண்டும். 10

கடல் நுரையைத் தாய்ப்பால், தேன் கலந்து அரைத்து மை யாக இட வேண்டும். அல்லது அதிமதுரம், பாச்சோத்தி, திராட்சை, சர்க்கரை, தாமரை ஆகியவற்றைத் தாய்ப்பாலில் ஊறவைத்து நன்றாக அரைத்து மை போலப் பயன்படுத்த வேண்டும். 11

---

* ரஸகிரியை - ஏதேனும் ஒரு மருந்துப் பொருளின் கஷாயத்தை மீண்டும் அடுப்பில் ஏற்றி பாகு போல செய்வதாகும்.

அதிமதுரம், பாச்சோத்தி, திராட்சை, சர்க்கரை, தாமரை ஆகியவற்றைத் தூளாக்கி பட்டுத் துணியில் பொட்டலமாகக் கட்டி அதைத் தாய்ப்பாலில் தோய்த்துத் தோய்த்து கண்களில் ஆச்யோதன முறைப்படி பயன்படுத்த வேண்டும். அல்லது அதி மதுரம், பாச்சோத்தி ஆகியவற்றை மைய அரைத்து நெய்யுடன் கலந்து அரைத்து மையாகவோ, ஆச்யோதன முறையாகவோ பயன்படுத்தலாம். அல்லது குமிழன் பட்டை, நெல்லிக்கனி, கடுக்காய் ஆகியவற்றை மைய அரைத்துப் பொட்டலமாகக் கட்டி நீரில் நனைத்து ஆச்யோதன முறையில் பயன்படுத்தலாம். இதைப் போலவே காயபலத்தை மட்டும் நன்கு தூளாக்கி பொட்டலம் கட்டி நீரில் நனைத்து ஆச்யோதன முறையில் பயன்படுத்தலாம். 12

அமிலாப்யுஷிதம் மற்றும் சுக்திகா எனும் நோய்களிலும் சிரையைக் கீறுதலைத் தவிர்த்து மற்ற ஸேகம், மேல் பூச்சு நஸியம், ஆச்யோதனம் எனும் முறைகளைப் பயன்படுத்தலாம். 13

அமிலாப்யுஷிதத்தில் திரிபலா கிருதம், தில்வக கிருதம் ஆகியவற்றில் ஒன்றையோ அல்லது பழைய நெய்யையோ பருக வேண்டும். சுக்திகா எனும் நோய்க்கு முன் கூறிய நெய் மருந்துகளைப் பருகச் செய்ய வேண்டும் அல்லது பேதியாகச் செய்வதன் மூலம் கீழ் வழியால் தோஷத்தை வெளியேற்றிய பிறகு குளுமையைத் தோற்றுவிக்கும் பொருள்களால் செய்த மை மருந்தை விரைவாகப் பயன்படுத்த வேண்டும். 14

### 4. வைடூர்யாஞ்சனம்

வைடூர்யமணி, படிகமணி, பவழம், முத்து, சங்கின்மையப் பகுதி, வெள்ளிபற்பம், தங்கபற்பம், சோழி ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நன்கு தூளாக்கி சர்க்கரை மற்றும் தேன் கலந்து கண்களில் மை போல் இடுவதால் சுக்தி எனும் நோய் விரைவில் தணியும். 15

### 5. தூமதர்சி நோய்க்குச் சிகிச்சை

தூமதர்சி எனும் கண் நோய் கொண்டவர் நெய்யைப் பயன் படுத்த வேண்டும். மற்றும் இரத்தபித்த நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். அல்லது பித்தத்தை போக்கும் சிகிச்சை முறைகள், பித்தத்தால் தோன்றும் அக்கிக்குக் கூறிய சிகிச்சை முறைகள் ஆகியவற்றை கையாள வேண்டும். 16

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**பித்தாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும்**

**பத்தாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினொன்றாம் அத்தியாயம்
# *சிலேஷ்மாபிஷ்யந்த பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சிலேத்துமத்தாலான அபிஷ்யந்தம் எனும் கண் நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. சிலேத்தும அபிஷ்யந்தத்திற்குப் பொது சிகிச்சை

கபத்தின் மிகுதியால் தோன்றும் அபிஷ்யந்தம் மற்றும் அதிமந்தம் எனும் நோய்களுக்கு முதலில் சிரைகளைக் கீறி கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். இரத்தத்தை வெளி யேற்றிய பிறகு வியர்க்கச் செய்தல், அவபீடனநஸியம், கண் களில் மருந்தை மையாக இடுதல், புகை பிடிக்கச் செய்தல், நனைத்தல், மேற்பூச்சு, கபளகிரஹம் (வாயில் மருந்தை வைத்துக் கொண்டிருத்தல்), வறட்சித் தன்மைக் கொண்ட ஓஷதிகளால் செய்த கஷாயம் முதலியவற்றைக் கொண்டு ஆச்யோதன முறையைச் செய்தல், வறட்சித் தன்மையுள்ள பொருள்களால் புடபாகம், அபதர்ப்பணம் எனும் முறைகளைச் செய்தல் முதலி யன பயன்படுத்தத் தக்கவையாகும். அபதர்ப்பணத்திற்குப் பிறகு மூன்று மூன்று நாட்களுக்குப் பிறகு காலையில் குஷ்டாதிகாரத்தில் கூறப்பட்ட திக்தகிருதம் எனும் நெய் மருந்தைப் பருகச் செய்ய வேண்டும். மேலும் கபத்தை வளர்க்காத பொருள்களைக் கொண்டு உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். உடல் வியர்க்கச் செய்வதற்கு தகரை, வெள்ளை எருக்கு அல்லது நொச்சி, கடும் மணம் கொண்ட மருவகம், வில்வவேர்ப்பட்டை அல்லது வில்வ இலை, பத்தூர எனும் கீரை வகை, உவகை, எருக்கு, விளாம் ஆகி யவற்றின் இலைகள் முதலியவற்றைப் பயன்படுத்த வேண்டும். அல்லது விளாமிச்சவேர், சுக்கு, தேவதாரு, கோஷ்டம் ஆகிய வற்றைக் கொண்டு கண்களுக்கு மேல் பூச்சு செய்ய வேண்டும். 3-6

### 2. மை - மைவ

(1) இந்துப்பு, பெருங்காயம், திரிபலை, அதிமதுரம், பிரபௌண்டரீகம், அஞ்சனக்கல், துத்தம், தாமிரம் எனும்

---

*சிலேஷ்மம் - கபம். கபத்தின் சீற்றத்தால் தோன்றும் அபிஷ் யந்த நோய்க்கு உரிய சிகிச்சைகளை விளக்குவதால் இந்த அத்தி யாயம் சிலேஷ்மாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

இப்பொருள்களை நீர்விட்டரைத்து யவதானியம் போல (சற்று நீண்ட) தோற்றமுள்ள வத்திகளைச் செய்து உலர்த்தி வைத்துக் கொள்க. பிறகு பன்னீர் அல்லது நீர்விட்டு இழைத்து சிலேத்தும அபிஷ்யந்த நோயாளியின் கண்களில் மை போல் இட வேண்டும். (2) கடுக்காய், மஞ்சள், அதிமதுரம் ஆகியவற்றைத் தூளாக நீர்விட்டு நன்றாக அரைத்து வத்தியாகச் செய்து பயன்படுத்துக. (3) சுக்கு, மிளகு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக் காய், மஞ்சள், வாயுவிடங்கச்சாறு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நன்கு தூளாக்கி நீருடன் அரைத்து வத்தி செய்க. (4) விளாமிச்சவேர், கோஷ்டம், தேவதாரு, சங்கு, வட்டத்திருப்பி நகம் (ஒரு வகைப் பூண்டு), சுக்கு, மிளகு, திப்பிலி, மனோசிலை ஆகியவற்றை சம அளவில் கொண்டு நீருடன் நன்கு அரைத்து வத்தியாகச் செய்து உலர்த்துக. (5) மல்லிப்பூ, புங்கன் விதைக் குள் உள்ள பருப்பு, அல்லது புங்கன் மலர், முருங்கை விதை அல்லது மலர் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர் விட்ட ரைத்து வத்தியாகச் செய்து உலர்த்துக. (6) மணிபுங்கன் காய் அல்லது மலர், முருங்கை விதை அல்லது மலர், கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி எனும் இவ்விரண்டின் விதை அல்லது மலர் ரஸாஞ்சனம், இந்துப்பு, சிவப்புச் சந்தனம், மனோசிலை, அரி தாரம், வெள்ளைப்பூண்டின் பருப்பு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து வத்தி செய்து உலர்த்துக. தேவை யான போது இந்த வத்திகளை நீர்விட்டு இழைத்துச் சிலேத்தும அபிஷ்யந்த நோயாளியின் கண்களில் மை போல இட வேண்டும். 7-10

### 3. பலாஸ நோய்க்கு மருந்து

பலாஸம் எனும் கண் நோய் கொண்டவருக்கு முதலில் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல், சிரோவிரேசனம், இரத்தத்தை வெளியேற்றுதல் எனும் முறைகளால் உடற்தூய்மை பெறச் செய்து, இனி கூறப்போகும் க்ஷாராஞ்சனத்தைப் பயன் படுத்த வேண்டும். (க்ஷாராஞ்சனம்) அரைகுறையாகப் பக்குவ மான அதாவது பால் நிலையில் உள்ள (நீல) யவதானியத்தைக் கொண்டு பசுவின் பாலில் ஏழு நாட்கள் பாவனை செய்ய வேண்டும். பிறகு உலர்த்தி அர்ஜகம், ஆஸ்போதகம், விளாம், வில்வம், நொச்சியிலை, மல்லிகைமலர் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு பாவனை செய்த யவதானியத்தையும் சேர்த்து எரித்து அந்த சாம்பலை ஒரு பிரஸ்தம் அளவு கொண்டு ஆறு பிரஸ்தம் அளவுள்ள நீரில் சேர்த்து, இருபத்தியோரு முறை வடிகட்டி எடுத்து, க்ஷாரம் கலந்த நீரை ஒரு மணி நேரம் படிய

வைத்துப் பிறகு, அகன்ற இரும்புச் சட்டியில் இட்டு, இந்துப்பு, மயில்துத்தம் கோரோசனம் அல்லது மஞ்சள் ஆகியவற்றின் தூளை க்ஷாரோதகத்தில் முப்பத்திரண்டில் ஒரு பங்கு சேர்த்துக் காய்ச்சி, உலர்ந்த அஞ்சனம் போலச் செய்து வைத்துக் கொள்க. இதைப் பலாஸம் எனும் கண்ணோய் கொண்டவரின் கண்களில் ஈயக்குச்சி அல்லது இரும்புக் குச்சியால் மை போலத் தடவ வேண்டும். இதைப் போல பணிஞ்சகம் முதலியவற்றின் மலர் களால் க்ஷாராஞ்சனம் செய்யலாம். 11-12

### 4. பிஷ்டக நோய்க்கு அஞ்சனம்

சுக்கு, திப்பிலி, கோரைக்கிழங்கு, இந்துப்பு, வெள்ளை மிளகு ஆகியவற்றை சம அளவில் தூள் செய்து துரிஞ்சிப் பழச் சாற்றுடன் கலந்து அரைத்து வத்தியாகச் செய்து உலர்த்தி, அதைக் கண்களில் மை போலிடப் பயன்படுத்தினால் பிஷ்டகம் எனும் கண் நோய் தீரும். 13

### 5. மற்றொரு முறை

கண்டங்கத்தரி பழுத்துக் கொண்டிருக்கும் நிலையில் அப் பழங்களில் சுரோதோஞ்சனத்தையும் திப்பிலித்தூளையும் நிரப்பி வைக்கவும். ஒரு வாரம் சென்ற பிறகு அவற்றைப் பழத்திலிருந்து எடுத்து துரிஞ்சிப்பழச்சாற்றுடன் அரைத்து வத்தியாகச் செய்து உலர்த்திக் கண்களில் மை போலிட பயன்படுத்தினால் பிஷ்டகம் எனும் கண் நோய் தணியும். 14

இதைப் போலவே முள்ளுக்கத்தரி, முருங்கை, துமட்டி, பேய்ப்புடல், நிலவேம்பு, நெல்லிக்கனி ஆகியவற்றின் பழங் களிலும் திப்பிலித் தூளையும், சுரோதோஞ்சனத்தையும் நிரப்பி ஏழு நாட்கள் வைத்திருந்து துரிஞ்சிப்பழச்சாறு விட்டரைத்து வர்த்தியாகச் செய்து உலர்த்திக் கண்களில் மை போலிடப் பயன்படுத்தலாம். 15

### 6. பிரக்லிஷ்ட வர்த்மாவுக்குக் கண் மை மருந்து (யோகாஞ்சனம்)

அன்னகபதி, கடல் நுரை, ரஸாஞ்சனம், மல்லிமொட்டு ஆகிய இவற்றைத் தேன் விட்டரைத்து பிரக்லிஷ்டவர்த்மா எனும் நோயில் கண்களில் மை போலிடப் பயன்படுத்த வேண்டும். இது யோகாஞ்சனம் எனப்படும். 16

### 7. கண் அரிப்புக்குச் சிகிச்சை

சிந்து நதிக்கரையில் கிடைக்கும் உப்பு, வெள்ளை மிளகு, மனோசிலை ஆகிய இவற்றைச் சம அளவில் கொண்டு துரிஞ்சி

பழச்சாறு விட்டு அரைத்து, ஒரு முறை மையாக இட்டால் அரிப்பு நீங்கும். 17

**8. கண் அரிப்புக்கு மற்றொரு சிகிச்சை**

சுக்கு, தேவதாரு, கோரைக்கிழங்கு, இந்துப்பு, மல்லிமொட்டு ஆகிய இவற்றைச் சம அளவில் கொண்டு சுரை எனும் மதுவுடன் அரைத்துக் கண்களில் மை போல இட்டால் அரிப்பு நீங்கும். 18

பலாஸகிரதிதம், பிஷ்டகம், பிரக்லிஷ்டவர்த்மா முதலாக கூறப்பட்ட எல்லா நோய்களிலும் மருத்துவர் மிகவும் கவனமாக அபிஷ்யந்தம், அதிமந்தம் எனும் நோய்களுக்கு கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்திச் சிறப்பாக மூக்கில் மருந்திடுதல், சாஸ்திர முறைப்படி பேயா, விலேபி முதலான ஸம்ஸர்ஜன எனும் முறைகளையும் பயன்படுத்த வேண்டும். 19

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**சிலேஷ்மாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும்**
**பதினொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# பன்னிரண்டாம் அத்தியாயம்
# *ரக்தாபிஷ்யந்த பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி ரக்தாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

## 1. நான்கு வகை ரக்தாபிஷ்யந்தங்களுக்குப் பொது சிகிச்சை

இரத்தம் கெடுவதால் தோன்றும் அதிமந்தம், அபிஷ்யந்தம், ஸிரோத்பாதம், ஸிராபிரஹர்ஷம் எனும் நான்கு வகை கண் நோய்களுக்கும் ஒரே வகையான சிகிச்சை முறையை மருத்துவர் கையாள வேண்டும். அதனால் அந்நான்கு வகை நோய்களால் பீடிக்கப்பட்ட நான்கு வகை நோயாளிகளுக்கு முதலில் கௌம் பம் எனும் (நூறாண்டுகள் பாதுகாக்கப்பட்ட) நெய்யைப் பருகத் தர வேண்டும். அதனால் உடலின் உட்பகுதி தூய்மைப்படும். பிறகு அதிக அளவில் புலால் சாற்றை உட்கொள்ளச் செய்க. அதன் பிறகு ஸிரோமோக்ஷண (ஸிரையை கீறி இரத்தத்தை வெளி யேற்றும்) முறையால் கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண் டும். அத்துடன் வாதம் முதலான தோஷங்கள் நீங்குவதற்காக சிவதை முதலான பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்களின் விழுது மற்றும் கஷாயம் ஆகியவற்றால் செய்யப்பட்ட நெய் மருந் தில் சர்க்கரை சேர்த்து பேதியாகச் செய்க. இவ்வாறு முழுவதும் தோஷங்கள் நீங்கப் பேதியான பிறகு சிரோவிரேசனப் பொருள் களை முகரச் செய்து ஸிரையைத் தூய்மைப்படுத்த வேண்டும். 3-5

பிரதேஹம், பரிஷேசனம், நசியம், புகைபிடித்தல், ஆச்யோ தனம், மருந்தெண்ணெயைக் கொண்டு குளியல் செய்தல், தர் பணம், எண்ணெய்ப்பசை உண்டாக்கும் புடபாகம் எனும் முறை களைக் கையாள வேண்டும். 6

## 2. மேற்பூச்சு

நீலாம்பல், வெட்டிவேர், மரமஞ்சள், அகில், அதிமதுரம், கோரைக்கிழங்கு, பாச்சோத்தி பதுமகம் ஆகியவற்றைச் சம

---

ரக்தாபிஷ்யந்தம் - இரத்தம் சீற்றம் பெறுவதால் தோன்றும் அபிஷ்யந்தம். அதற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த. அத்தியாயம் ரக்தாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

அளவில் கொண்டு தூளாக்கி நூறு முறை மடக்கித் தூய்மைப்படுத்தப்பட்ட நெய்யில் கலந்து கண்களைச் சுற்றி மேல் பூச்சாகப் பூச வேண்டும். 7

### 3. கண்களின் வலியை போக்கும் முறை

கண்களில் பொறுக்க முடியாத வலி தோன்றிய போது கண்களைச் சுற்றிலும் மென்மையாக வியர்க்கச் செய்ய வேண்டும். நன்கு வியர்த்த பிறகு அட்டைப் பூச்சியைக் கொண்டு கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். நெய்யை அதிக அளவில் உட்கொள்ளச் செய்தால் வலி குறையும். அதையடுத்து பித்த அபிஷ்யந்தத்திற்கு கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 8-9

### 4. ஆச்யோதன முறை

கொட்டிக்கிழங்கு, அதிமதுரம் ஆகியவற்றின் தூளைத் துணியில் சிறு பொட்டலமாகக் கட்டி அதைக் கார் பருவத்தில் நேராகப் பிடித்து வைத்த மழை நீரில் நனைத்து அதைக் கொண்டு கண்களின் மேல் மெல்ல மெல்ல ஒற்றடம் கொடுக்க வேண்டும். 10

### 5. கண்களில் மை இடுதல்

பாதிரி, மருதம், குமிழன், காட்டாத்தி, நெல்லிக்கனி, வில்வம், கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி எனும் இவ்விரண்டின் மலர்கள், பாச்சோத்தி, மஞ்சிட்டி இவ்வனைத்தையும் சம அளவில் கொண்டு நன்றாகத் தூளாக்கி தேன் அல்லது கருப்பஞ்சாறு விட்டு அரைத்து வத்தி செய்து உலர்த்துக. இரத்த அபிஷ்யந்த நோய் தணிவதற்காகக் கண்களில் இதை மை போலிட பயன்படுத்த வேண்டும். 11-12

### 6. மைவத்தி

சந்தனம், வெள்ளைத் தாமரை, சாதிப்பத்திரி, சிலாஜத்து, குங்குமப்பூ, உலோக பற்பம், தாமிர பற்பம், மயில் துத்தம், வேப்பம்பிசின், ரஸாஞ்சனம், பித்தளை மற்றும் வெண்கலக்களிம்பு இவை அனைத்தையும் சம அளவில் கொண்டு தேன் விட்டு அரைத்து வத்தியாகச் செய்து அதை இரத்த அபிஷ்யந்த நோய்க்குக் கண்களில் மையாக இட பயன்படுத்த வேண்டும். 13-14

### 7. சிரோத்பாதத்திற்குச் சிகிச்சை

சிரோத்பாதத்திற்கு ரஸாஞ்சனம், நெய், தேன் ஆகியவற்றை நன்றாக கலந்து மை போல் இடப் பயன்படுத்த வேண்டும்.

அவ்வாறே இந்துப்பு, அன்னபேதி இவ்விரண்டையும் சம அளவில் கொண்டு தூளாக்கி பசுவின் பாலுடன் அரைத்து மை போல் இடப் பயன்படுத்த வேண்டும். 15

சங்கின் நாபி, (சங்கின் மையப் பகுதி) மனோசிலை, மயில் துத்தம், மரமஞ்சள், இந்துப்பு ஆகிய இவற்றைச் சம அளவில் கொண்டு தேன் விட்டு அரைத்துக் கண்களில் மை போல இடுவதால் சிரோத்பாதம் எனும் நோயில் மிக்க நன்மை விளையும். அவ்வாறே சுரை எனும் மது, சுவர்ணமாக்ஷிகம் அல்லது தேன் ஆகியவற்றுடன் வாகை மலரின் சுரசத்தைக் கலந்து கண்களில் மை போல் இடப் பயன்படுத்துவதால் சிரோத்பாதம் எனும் நோய் தணியும். அவ்வாறே சுவர்ணகைரிகம் என்பதைத் தேன் விட்டுக் குழைத்து மை போல இடுவதும் நன்மை தரும். 16

### 8. சிரோஹர்ஷத்திற்குச் சிறப்புச் சிகிச்சை

சிரோஹர்ஷம் எனும் நோயில் *பாணிதம் என்பதைத் தேன் கலந்து அதை மை போல் இடப் பயன்படுத்த வேண்டும். அல்லது ரசாஞ்சனத்தைத் தேனுடன் குழைத்துக் கண்களில் மையிடப் பயன்படுத்த வேண்டும். அன்னபேதி, இந்துப்பு ஆகிய இவ்விரண்டையும் தேனில் கலந்து மையிடப் பயன்படுத்த வேண்டும். அல்லது புளிவஞ்சி, தாய்ப்பால், பாணிதம், இந்துப்பு ஆகிய இவற்றை ஒன்றோடொன்று கலந்து மை போலிடப் பயன்படுத்த வேண்டும். 17-18

### 9. அர்ஜுனம் எனும் நோய்க்குச் சிகிச்சை

அர்ஜுனம் எனும் நோய் தணிவதற்காகப் பித்தாபிஷ்யந்தத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகள் முழுவதையும் பயன்படுத்த வேண்டும். அத்துடன் கரும்பு, தேன், சர்க்கரை, பால் மரமஞ்சள், அதிமதுரம், இந்துப்பு எனும் இவற்றை நன்றாக அரைத்து கண்களில் ஊற்றிக் கொண்டிருத்தல் மற்றும் மை போல இடுதல் எனும் முறைகளில் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே ஆம்லவர்க்கத்தில் கூறப்பட்ட மாதுளை, ஆச்யோதன முதலியவற்றின் சுரசத்தைக் கொண்டு கண்களில் ஸேகாஞ்சன முறையைப் பயன்படுத்துதல் நன்மை தரும். அவ்வாறே சர்க்கரை, அதிமதுரம், இந்துப்பு, துரிஞ்சிப்பழச்சாறு, தயிர் மேல் தெளிவு, தேன், புளிக்காடி, இலந்தை பழச்சாறு, புளிப்பு மாதுளைச்சாறு அல்லது இவற்றின் விதைகள் மற்றும் புளிப்புச் சுவையுள்ள பொருள்களைத் தனித்

* பாணிதம் - கருப்பஞ்சாற்றைப் பாகு பதத்திற்குக் காய்ச்சினால் அது பாணிதம் எனப்படும்.

தனியாகவோ, இரண்டிரண்டு சேர்த்தோ, மும்மூன்று சேர்த்தோ உத்திக்கு ஏற்றபடி சேர்த்துக் கண்களில் ஆச்யோதன முறையில் பயன்படுத்த வேண்டும். 19-21

## 10. அர்ஜுன நோய்க்கு வேறு முறைகள்

படிகமணி, பவழம், சங்கின் நாபி, அதிமதுரம், தேன் ஆகியவற்றை ஒன்றோடொன்று சேர்த்து நன்கு தூளாக்கிக் கண்களில் மைபோல இடுவதால் அர்ஜுனம் எனும் நோய் தணியும். கடல் நுரை, சங்கின் நாபி, தேன், சர்க்கரை ஆகியவற்றை சேர்த்து அரைத்து கண்களில் மை போல் இட வேண்டும். இவ்விரண்டு முறைகளாலும் அர்ஜுனம் எனும் நோய் தணியும். அல்லது இந்துப்பு, தேன், தேற்றாங்கொட்டை ஆகியவற்றை சேர்த்து அரைத்து அல்லது ரஸாஞ்சனத்தை மட்டும் தேனுடன் கலந்து மையாகப் பயன்படுத்தலாம். அல்லது அன்னபேதியைத் தேன் விட்டு அரைத்து மையாக இடுவதும் தகும். 22-23

## 11. அர்ஜுனத்திற்கு மேலும் சில முறைகள்

தங்கம், வெள்ளி, தாமிரம், நாகம், வங்கம் முதலான உலோகங்கள், மனோசிலை, கந்தகம், அபிரகம் முதலான கனிப் பொருள்கள், இந்துப்பு, கடல் உப்பு பிடாலவணம், ஸௌவர்ச்சல லவணம், ரோமகம் எனும் உப்பு, எல்லா வகையான இரத் தினங்கள் (முத்து, பவழம், மாணிக்கம், வைரம், பச்சைக்கல், புஷ்பராகம், வைடூரியம் முதலியன), யானை முதலியவற்றின் தந்தங்கள், பசு, மான் முதலியவற்றின் கொம்புகள், அவஸாதக கணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்கள், கோழி முட்டையின் கரு, வெள்ளைப்பூண்டின் பருப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, புங்க விதை, ஏலக்காய் எனும் இப்பொருள்கள் அனைத்தையும் சம அளவில் கொண்டு நன்கு அரைத்து வைத்துக் கொள்க. இம் மருந்து லேக்யாஞ்சனம் எனப்படும். ரக்த விஸ்ராவணம் என்பது முதல் புடபாகம் என்பது வரை உள்ள நோய்களில் அபிஷ்யந் தியைப் போக்கும் இம்முறைகள் அனைத்தையும் பயன்படுத்திய பிறகு இம்மருந்தைப் பயன்படுத்த வேண்டும். திறமை மிக்க மருத் துவர் இந்த லேக்யாஞ்சனத்தால் அவிரண சுக்ரம் எனும் நோயையும் போக்குவார். 24-27

## 12. விரணத்துடன் கூடிய சுக்ரத்திற்குச் சிகிச்சை

விரணத்துடன் கூடிய சுக்ர நோயில் கண்விழி உயர்ந்து இருக்கும் அல்லது ஆழமாகப் பதிந்தது போலக் காணப்படும்.

கடினமாகக் (சுரசுரப்புடன்) காணப்படுவதும் உண்டு. அந்நிலையில் வாகை விதை, கரு மிளகு, திப்பிலி, இந்துப்பு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தூளாக்கியோ, இந்துப்பை மட்டும் தூளாக்கியோ கண்களின் மேல் தேய்க்க வேண்டும். அல்லது தாமிரத்தூள், வெள்ளித்தூள் சங்கின் மையப்பகுதி, மனோசிலை, கருமிளகு, இந்துப்பு ஆகியவற்றை இந்துப்பு வரை முறையே இரட்டிப்பாக்கிக் கொண்டே வந்து அனைத்தையும் தூளாக்கி மை போல இடுவதால் சுக்ரம் எனும் நோய் தணியும். அல்லது சங்கின்நாபி, இலந்தை கொட்டை, தேற்றாங்கொட்டை, திராட்சை, அதிமதுரம், தேன் எனும் இவற்றைச் சேர்த்து அரைத்து மை போலப் பயன்படுத்த வேண்டும். இதைப் போலவே தேன், யானை தந்தம், கடல்நுரை, வானகமலர் ஆகியவற்றை மைய அரைத்துக் கண்களில் மை போல இட வேண்டும். 28-31

## 13. மற்றும் சில முறைகள்

பலாஸகிரதிதம் எனும் நோய்க்குக் கூறப்பட்ட க்ஷாராஞ்சனம் என்பதை விரணத்துடன் கூடிய சுக்ர நோயில் பயன்படுத்துக. அல்லது மேல் தோல் நீக்கிய பயற்றின் பருப்பை வறுத்து பொடி செய்து அத்துடன் சங்கின் மையப்பகுதித் தூளைக் கலந்து மற்றும் தேன் கலந்து மை போல் இடுக. அல்லது இலுப்பையின் வைரம் பாய்ந்த பகுதியைத் தேன் விட்டு அரைத்துக் கண்களில் மை போலப் பயன்படுத்துக. அல்லது தான்றிக் கொட்டையை மைய அரைத்துத் தேனுடன் குழைத்து மை போல் இடுக. சங்கின் நாபி, முத்து, தேன், திராட்சை, அதிமதுரம், தேற்றாங்கொட்டை ஆகிய இவற்றை மைய அரைத்து மை போல் இடுவதால் கண்களில் தோன்றும் சுக்ர நோய் தணியும். 32-33

## 14. புரையைச் சார்ந்த வலிக்குச் சிகிச்சை

இரண்டாம் புரையைச் சார்ந்துள்ள சுக்ர நோயில் வலி தோன்றிய போது வாதத்தைப் போக்கும் சுரஸம் அல்லது கஷாயம் கொண்டு தர்ப்பண முறையைப் பயன்படுத்த வேண்டும்.

சுக்ர நோயில் நிறமாறுபாட்டைப் போக்க மூங்கில் முளை, தூய்மைப்படுத்தப்பட்ட சேராங்கொட்டை, பனங்காய், தேங்காய் ஓடு ஆகியவற்றை எள்ளின் கட்டையுடன் எரித்துச் சாம்பலாக்கி, மறுநாள் அந்தச் சாம்பலுக்கு ஆறு மடங்கு அல்லது எட்டு மடங்கு நீரில் கலந்து பல முறை வடிகட்டிக் கஷாயம் காய்ச்சி, நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்க எடுத்துக் கொள்க. இந்தச் சாம்பலை ஏழு நாட்கள் யானைக்குட்டியின் எலும்பின் சாம்பலுடன் நீரில் கலந்து பாவனை செய்து உலர்த்தி வைத்துக்

கொள்க. இதைக் கண்களில் மையாக இடப் பயன்படுத்தினால் சுக்ரத்தால் தோன்றும் நிறமாறுபாடு நீங்கும். 34-35

(தேன் பூசிய ஈயக்குச்சி அல்லது மையிடப் பயன்படுத்தத் தக்க வேறு உலோகக் குச்சியை இந்த அஞ்சனத்தில் தோய்த்து, பிறகு கண் விழிகளில் சுக்ரம் தோன்றியுள்ள பகுதியில் மெல்லத் தேய்த்துச் சிறிது நேரம் கழித்து, கண்களைத் திரிபலைக் கஷாயத் தால் அலம்பிவிட வேண்டும். இதனால் சுக்ர நோயில் தோன்றிய வெண்மை மாறி கருநிறம் தோன்றும்).

### 15. அஜகாஜாத நோய்க்குச் சிகிச்சை

ஊசியைக் கொண்டு அஜகாஜாத நோயில் பக்கத்தில் குத்தி நீரை வெளியேற்ற வேண்டும். பிறகு விரணத்தில் பசுவின் புலா லைப் பசு நெய்யுடன் சேர்த்து நிரப்ப வேண்டும். இந்த நோயில் கண்ணின் விழிப்பகுதி மேலெழும்பி இருந்தால் அதை பல முறை கருவியைக் கொண்டு கீறி சிகிச்சை செய்ய வேண்டும். 36-37

### 16. நேத்ரபாகத்திற்குச் சிகிச்சை

முன் அத்தியாயங்களில் கூறப்பட்ட வீக்கத்துடன் கூடிய நேத்ரபாகம், வீக்கம் இல்லாத நேத்ரபாகம் எனும் இரு நோய் களிலும் மருத்துவர் முதலில் எண்ணெய் முறை, வியர்க்கச் செய் யும் முறைகளைப் பயன்படுத்தி ஸிரா வேதை எனும் முறையால் கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பிறகு அங்கு ஸேகம், ஆச்யோதனம், நசியம், புடபாகம் எனும் முறைகளைப் பயன்படுத்த வேண்டும். 38

### 17. நேத்ரபாகத்திற்கு மை

தூய்மைப்படுத்தும் முறைகள் அனைத்தையும் பயன்படுத் திய பிறகு கீழே குறிப்பிடப்படும் மை மருந்தைப் பயன்படுத்த வேண்டும். ஒரு தாமிர பாத்திரத்தில் நெய்யையும், இந்துப்பையும் கலந்து சேர்த்து நிரப்பி ஒரு மாதகாலம் மூடி வைக்கவும். அல்லது மைரேயம் (சுரையையும் ஆஸவத்தையும் கலந்து செய்த ஒரு வகை மது) அல்லது தயிர் அல்லது தயிரின் மீதுள்ள ஏடு, தயிர் தெளிவு ஆகியவற்றில் ஒன்றைத் தாமிர பாத்திரத்தில் நிரப்பி ஒரு மாதம் வைத்திருக்கவும். அதன் பிறகுப் பாத்திரத்துடன் அதை அரைத்துக் கொள்க. (தாமிர பாத்திரம் மிக மெலிந்ததாக அரைப் பதற்கு ஏற்ற தகடாக இருக்க வேண்டும்.) அல்லது தாமிரத்தூளை ஒரு மாதக்காலம் மேற்படி பொருளில் ஊற வைத்து எடுத்துக் கொள்க. இதை நன்றாக மைய அரைத்து மையாகச் செய்து கொள்க. இதனால் நேத்ரபாகம் எனும் நோய் நீங்கும். 39-40

### 18. மேலும் சில முறைகள்

அன்னபேதியை நெய்யுடன் அரைத்து பயன்படுத்தலாம். இந்துப்பை பால் விட்டரைத்து மை போலிடலாம். இஹுப்பை யின் வைரம் பாய்ந்த பகுதி, அல்லது அதிமதுர ஸத்துவத்துடன் சுவர்ண கைரிகம் என்பதைச் சம அளவு கலந்து, தேனுடன் அரைத்து மையாகப் பயன்படுத்தலாம். நெய், இந்துப்பு, தாமிர பற்பம் ஆகியவற்றை தாய்ப்பாலுடனோ, பசுவின் பாலுடனோ அரைத்து மையாகப் பயன்படுத்தலாம். 41

மாதுளை, கொன்றைப்பருப்பு, மலைமாங்காய், இலந்தை ஆகியவற்றின் சாற்றுடன் இந்துப்பைச் சேர்த்து பாகு போல பக்குவம் செய்து கண்பாகத்திற்கு மையாகப் பயன்படுத்தலாம். 42

### 19. நேத்ரபாகத்திற்கு ஆச்யோதனம்

இந்துப்பு, சுக்கு எனும் இரண்டையும் தூளாக்கி நெய் கலந்து ஒரு மாத காலம் வைத்திருந்து பிறகு அதைப் பாலுடன் கலந்து ஆச்யோதன முறையாகப் பயன்படுத்தவும். அதனால் நேத்ரபாகம் எனும் கண் நோய் தணியும். 43

### 20. ஜாதிப்பூ அஞ்சனம்

மல்லிகைமலர், இந்துப்பு, இஞ்சி, திப்பிலி விதை, வாயு விடங்கத்தின் கஷாயத்துடன் நன்றாக அரைத்துத் தேன் கலந்து நேத்ரபாகத்திற்கு மையாக இட வேண்டும். 44

### 21. பூயாலஸத்திற்குச் சிகிச்சை

பூயாலஸத்திற்கு இரத்தத்தை வெளியேற்றுதல், உபநாஹம் ஆகியவற்றைப் பயன்படுத்துவதால் நன்மையுண்டாகும். மற்றும் நேத்ரபாகத்திற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். 45

### 22. காஸிஸாதி ரஸகிரியாஞ்சனம்

அன்னபேதி, இந்துப்பு, இஞ்சி ஆகியவற்றைத் தேனுடன் அரைத்து மையிடுதல் அல்லது இவற்றுடன் தாமிரபற்பமோ உலோ கபற்பமோ சேர்த்து அதையும் மையாகப் பயன்படுத்துதல் காஸிஸாதிரஸ கிரியாஞ்சனமாகும். 46

### 23. பிரக்லின்னவர்த்மா எனும் நோய்க்குச் சிகிச்சை

முதலில் எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை, பேதி யாகச் செய்யும் முறை, சிரோவிரேசன முறை, இரத்தத்தை வெளி யேற்றும் முறை முதலியவற்றால் உடலின் உள்ளும் புறமும் தூய் மைப்படுத்தித் தோஷங்களைப் போக்கிய பிறகு ஸேகம், மையிடு தல், ஆச்யோதனம், நசியம், புகை பிடித்தல் போன்ற முறைகளைப் பயன்படுத்திப் பிரக்லின்னவர்த்மாவைப் போக்க வேண்டும். 47

## 24. ஆச்யோதன முறை

கோரைக்கிழங்கு, மஞ்சள், அதிமதுரம், ஞாழல், கடுகு, பாச்சோத்தி, தாமரை, நன்னாரி ஆகிய இவற்றைச் சேர்த்து அரைத்து மழைநீர் அல்லது நீர் விட்டு அரைத்து இரவு முழுவதும் ஊற வைக்க. மறுநாள் வடிகட்டி, அந்நீரைக் கொண்டு ஆச்யோதன சிகிச்சை செய்ய வேண்டும். பிறகு சுரோதோஞ்சனத்தைத் தேனுடன் குழைத்து மையாக இட வேண்டும். 48

நெல்லின் இலை, காய் இரண்டையும் ஐந்து தோலா எடை கொண்டு 40 தோலா நீரில் பக்குவம் செய்து எட்டில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி மீண்டும் தாமிர பாத்திரத்தில் வைத்துப் பக்குவம் செய்து வத்தியாக செய்க அல்லது மூங்கில் வேரைக் கஷாயமாகக் காய்ச்சி தாமிர பாத்திரத்தில் ரஸகிரியை செய்து (பாகுபாகத்திற்கு காய்ச்சி) கொள்க. இவற்றை மை மருந்துகளாகப் பயன்படுத்துக. 49

அல்லது திரிபலை கஷாயம் காய்ச்சித் தாமிர பாத்திரத்தில் ரஸகிரியை செய்து வத்தியாகக் கொள்க. புரசமலர் அல்லது நாயுருவி கஷாயத்தைத் தாமிர பாத்திரத்தில் ரஸகிரியை செய்து வத்தி செய்க. அல்லது வெண்கலக்களிம்பின் பருத்தி ஆடையில் தோய்த்து எரித்துப் பாலுடன் அரைத்து மையாகப் பயன்படுத்துக. 50

வெண்கலக்களிம்பு முதலியவற்றாலான மை மருந்தில் மிளகுத் தூள், தாமிரத்தூள் அல்லது பற்பம் சேர்த்து பன்னீரையோ, தண்ணீரையோ சேர்த்துப் பிரத்யஞ்சனம் செய்ய வேண்டும். (நோய்க்கு மாறான மை பிரத்யஞ்சனம் எனப்படும்.) 51

கடல்நுரை, இந்துப்பு, சங்குபற்பம், பயறு, வெள்ளைமிளகு ஆகியவற்றைத் தூளாக்கிச் சலித்துச் சூர்ணாஞ்சனமாகக் கொள்க. இந்த மருந்து நேத்ரஜாட்யம் (கண் மரத்தல்), அரிப்பு, அக்லின்னவர்த்மா முதலியவற்றை விரைவில் தணிக்கும். இந்த மருந்துகளைத் தோஷங்களுக்கு ஏற்றபடி பிரக்லின்னவர்த்மா எனும் நோயில் பயன்படுத்தலாம். அவ்வாறே மயில்துத்தம், ரஸாஞ்சனம், கண்ணுக்கு இடும் சாதாரண மை ஆகியவற்றைத் தாமிர பாத்திரத்தில் பன்னீர் அல்லது தண்ணீர் சேர்த்து உலர்த்தி நெய் கலந்து மை போல் இடுவதால் அக்லின்னவர்த்மா மற்றும் பிரக்லின்னவர்த்மா எனும் நோய்கள் தீரும். 52-53

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**ரக்தாபிஷ்யந்த பிரதிஷேதம் எனும்**
**பன்னிரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# பதிமூன்றாம் அத்தியாயம்
# *லேக்யரோக பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி லேக்யரோக பிரதிஷேதம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

## 1. கருவியால் கீறி சிகிச்சை செய்யத்தக்க கண் நோய்கள்

ஸுசுருதர் கருவியைக் கொண்டு கீறி சிகிச்சை செய்ய வேண்டிவை என ஒன்பது நோய்களைக் குறிப்பிட்டுள்ளார். அவற்றிற்குப் பொதுவான சிகிச்சை முறையாவது : முதலில் எண்ணெய்ப்பசையுண்டாக்கி வாந்தி எடுக்கச் செய்து, பிறகு பேதியாகச் செய்து நோயாளியைக் காற்று புகாத, வெயில் படாத அறையில் இருக்கச் செய்து (அறுவை சிகிச்சைக்குரிய) பலகை மேல் மல்லாந்து படுக்கச் செய்ய வேண்டும். நன்மையை விரும்பும் பணியாட்களை நோயாளியின் கால், கைகள், மார்பு பகுதியை அசையாமல் அழுத்திப் பிடித்துக் கொள்ளச் செய்க. பிறகு மருத்துவர் தனது இடது கை கட்டைவிரலாலும் மற்ற விரல்களாலும் நோயாளியின் கண் இமையைப் பிடித்து அடிப்பக்கம் மேல் நோக்கியிருக்கும்படி மடித்துப் பிடித்துக் கொண்டு, மெல்லிய தூய ஆடை அல்லது பஞ்சை கொண்டு இளம் சூடுள்ள நீரால் அப்பகுதியைத் தடவி வியர்க்கச் செய்ய வேண்டும். மடிந்துள்ள இமை நழுவாமல் அசையாமல் இருக்கச் சிறிது பஞ்சை விரலுக்கும், இமைக்கும் இடையில் இருக்கும்படி வைத்துக் கொள்ள வேண்டும். பிறகு இமைப்பகுதியை தூய மெல்லிய துணியால் துடைத்து, மண்டலாக்ரம் எனும் கருவியால் மெல்லிய புரையைக் கீறி எடுக்க வேண்டும். அல்லது சுரசுரப்புள்ள தேக்கு, பாரிஜாத இலை முதலியவற்றாலாவது புரையை மெல்லக் கீறி எடுக்க வேண்டும். பெருகும் இரத்தத்தை பஞ்சால் துடைத்து இரத்தப்பெருக்கு நின்றவுடன், பொறுத்துக் கொள்ளக்கூடிய சூடுள்ள ஆடையால் ஒற்றி வெப்பம் தோற்றுவிக்க வேண்டும். பிறகு மனோசிலை, அன்னபேதி, சுக்கு,

---

*லேக்யம் - கீறுதல். அறுவைச் சிகிச்சைக்குரிய கருவியைக் கொண்டு கீறி சிகிச்சை செய்யத்தக்க கண் நோய்களைப் பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயம் லேக்யரோக பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

மிளகு, திப்பிலி ரஸாஞ்சனம் இந்துப்பு ஆகியவற்றை மைய அரைத்துத் தேன் கலந்து கண்ணின் மேல் பூசி சிறிது நேரம் சென்ற பின் இளஞ்சூடுள்ள நீரால் கழுவி, நெய்யைக் கொண்டு கண்ணை நிரப்பிப் பஞ்சு வைத்துக் கட்டு கட்ட வேண்டும். விரணத்திற்கு உரிய சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். அதாவது விரணத்திற்குச் செய்வது போல, மூன்று நாட்களுக்கு ஒரு முறை கட்டு அவிழ்த்துக் கண்ணைக் கழுவி மருந்து தடவி மீண்டும் கட்டு கட்ட வேண்டும். வியர்க்கச் செய்தல், அவபீடனம் என்ற முறைகளையும் மூன்று நாட்களுக்கு ஒரு முறை பயன்படுத்த வேண்டும். இவ்வாறு கீறி சிகிச்சை செய்தல் எனும் லேக்ய முறை கூறப்பட்டுள்ளது. 3-8

(உத்ஸங்கினி, பஹுளவர்த்மா, கர்தமவர்த்மா, சியாவவர்த்மா, பத்தவர்த்மா, கிலிஷ்டவர்த்மா, போதகீ, கும்பிகா, வர்த்மசர்க்கரா எனும் ஒன்பதும் இம்முறைக்கு உரிய நோய்களாகும்.)

### 2. லேக்ய முறை சீராகச் செய்யப்பட்டதன் இலக்கணம்

இரத்தமோ, வேறு வகை நீரோ கண்களிலிருந்து பெருகாமல் இருத்தல், அரிப்பு, வீக்கம் ஆகியவை இல்லாமை, கீறிய இமைப்பகுதி மற்ற பகுதியைப் போலவே எத்தகைய மாறுபாடுமின்றி இருத்தல், நகத்தைப் போன்ற நிறம் காணப்படுதல் என்பன லேக்ய முறை சீராகச் செய்யப்பட்டுள்ளது என்பதற்கு அடையாளங்களாகும். 9

### 3. லேக்ய முறை சீராகச் செய்யப்படாமையின் இலக்கணம்

மை, கண் மிகவும் சிவந்திருத்தல், அறுவையால் கீறிய த்திலிருந்து அடர்த்தியாக இரத்தம் வெளிவருதல், கண்ணில் சிவப்பு நிறமும் வீக்கமும் காணப்படுதல், கண்ணிலிருந்து நீர் பெருகிக் கொண்டிருத்தல், கண்ணின் முன் இருள் மண்டிகிடப்பது போலக் காணப்படுதல், நோய் தணியாமை, கண்ணிமை கருநிறம் கொண்டிருத்தல், பளுவாகத் தோன்றுதல், மரத்துப்போதல், அரிப்பு, மயிர்கூச்சம் தோன்றுதல், சேறு பூசியது போன்று காணப்படுதல் முதலியன அறுவைச் சிகிச்சை சீராகச் செய்யப்படாமையின் இலக்கணங்களாகும். கடுமையான நேத்ரபாகம் காணப்படும். இந்நிலையில் முதலில் எண்ணெய் முறையால் எண்ணெய்ப் பசையுண்டாக்கி மீண்டும் கீறி சிகிச்சை செய்ய வேண்டும். 10-12

### 4. அறுவை முறை அளவுக்கு மீறி செய்யப்பட்டதன் இலக்கணம்

கண் இமை அடிப்பகுதி மேல் நோக்கி மடங்கியபடியே இருந்து விடுதல், இமைகளின் உரோமங்கள் உதிர்ந்து போதல், கடுமையான வலி தோன்றுதல், நீர்ப்பெருக்கு அல்லது இரத்தப் பெருக்கு மிகுந்திருத்தல் என்பன தேவைக்கு அதிகமாகக் கீறியதன் இலக்கணங்களாகும். அந்நிலையில் வியர்க்கச் செய்தல், எண்ணெய் முறையைப் பயன்படுத்துதல், வாதத்தைப் போக்கும் முறைகளைக் கையாளுதல் என்பன பின்பற்றத் தக்கவையாகும். 13

### 5. சிறப்பு முறைகள்

வர்த்மாவபந்தம், கிலிஷ்டவர்த்மா, பஹுளவர்த்மா, போதகீ எனும் நோய்களில் முதலில் இமைப்பகுதியில் சிறு வெட்டுகளைச் செய்த பிறகு விருத்திபத்ரம் முதலிய கருவிகளால் உரோமப் பகுதியிலிருந்து உள்நோக்கி கீறி எடுக்க வேண்டும். சியாவவர்த்மா, கர்தமா வர்த்மா எனும் நோய்களில் ஆழமாகவோ, மேலாகவோ அல்லாமல் சீராக கீற வேண்டும். 14

கும்பீகிணி, வர்த்மசர்க்கரா, உத்ஸங்கினி எனும் நோய்களில் உயர்ந்திருக்கும் பகுதிகளை முதலில் கத்தரித்து நீக்கிய பிறகு லேகன முறையைக் கையாள வேண்டும். 15-16

இமையில் மிகவும் கடினமாக சிறியதாக, தாமிர நிறம் கொண்டு கட்டிகள் தோன்றி பக்குவம் பெற்றிருந்தால் முதலில் அவற்றைப் பிளந்து பிறகு கீறி எடுக்க வேண்டும். 17

இமைகளின் மேல் தோன்றியவை, மிகவும் சிறியவை, பக்குவம் பெறாதவை, அதிக துன்பம் விளைவிக்காதவையான கட்டிகளை வியர்க்கச் செய்தல், மேல் பூச்சு பூசுதல் தூய்மைப்படுத்துதல் முதலிய முறைகளால் தணிக்கச் செய்யும் முறைகளைக் கையாள வேண்டும். 18

**ஸுஶ்ருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**லேக்யரோக பிரதிஷேதம் எனும்**

**பதிமூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

## பதினான்காம் அத்தியாயம்
## * பேத்யரோக பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி பிளத்தல் எனும் முறையால் நீக்கத் தக்க கண் நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பிஸகிரந்திக்குச் சிகிச்சை

பிஸகிரந்தி எனும் நோயில் முதலில் வியர்க்கச் செய்து பக்குவம் பெற்றுள்ள நோயின் நிலை அறிந்து, துளைகளை இடைவெளியில்லாமல் பிளந்து இந்துப்பு, அன்னபேதி, திப்பிலி, புஷ்பாஞ்சனம், மனோசிலை, ஏலக்காய் ஆகியவற்றை மைய அரைத்த தூளைத் தூவிப் பிறகு தேனையும் நெய்யையும் கலந்து பூசிய பிறகு கட்டு கட்ட வேண்டும். 3-4

### 2. லகணம் எனும் நோய்க்குச் சிகிச்சை

முதலில் லகணம் எனும் நோய் கொண்ட பகுதியை விரீஹிமுகம் எனும் கருவியைக் கொண்டு பிளந்து கோரோசனம், யவக்ஷாரம், மயில்துத்தம், திப்பிலி, தேன் ஆகியவற்றை நன்கு அரைத்துத் தூவ வேண்டும். லகண நோயில் கட்டி பெரியதாக இருந்தால் அதை பிளந்த பிறகு க்ஷார முறையையும், நெருப்பால் சுடும் முறையையும் பின்பற்ற வேண்டும். பிறகு விரணத்திற்கு உரிய சிகிச்சையைக் கையாள வேண்டும். 5

### 3. அஞ்சன நாமிகா எனும் நோய்க்குச் சிகிச்சை

முதலில் வியர்க்கச் செய்து தானே உடைந்த அஞ்சனநாமிகா நோயைக் கண்டு விரலால் மெல்ல அழுத்தி சீழை வெளியேற்ற வேண்டும். பிறகு மனோசிலை, ஏலக்காய், தகரை, இந்துப்பு, தேன் ஆகியவற்றைக் கொண்டு பிரதிஸாரண முறையைப் பின் பற்ற வேண்டும். அஞ்சனநாமிகா தானே உடையாவிடில் அறுவைச் சிகிச்சையில் தேர்ச்சி பெற்ற மருத்துவர் கருவியால் பிளந்து ரஸாஞ்சனத்தையும், தேனையும் கலந்து பிரதிஸாரண முறையில் பயன்படுத்த வேண்டும். தீபசிகையால் சூடு படுத்த வேண்டும். 6-7

---

*பேத்யம் - பிளக்கத்தக்கது. அறுவை சிகிச்சைக்கு உரிய கருவியால் பிளந்து நீக்கத்தக்க கண் நோய்களை விளக்குவதால் இந்த அத்தியாயம் பேத்யரோக பிரதிஷேதம் எனும் பெயர் கொண்டது.

### 4. கிருமிகிரந்தி நோய்க்குச் சிகிச்சை

கிருமிகிரந்தி நோயில் முதலில் வியர்க்கச் செய்து, கருவியைக் கொண்டு பிளக்க வேண்டும். சீழ் முதலியவற்றை நன்கு வெளியேற்றிய பிறகு அஞ்சன நாமிகை எனும் நோய்க்குக் கூறப்பட்ட பொருள்களைக் கொண்டு பிரதிஸாரண முறையைப் பின்பற்ற வேண்டும். அவ்வாறே திரிபலை, மயில்துத்தம், அன்ன பேதி, இந்துப்பு ஆகியவற்றை கொண்டு முறைப்படி ரஸகிரியை செய்து அதைக் கண்களில் பூச வேண்டும். 8

### 5. கபத்தால் தோன்றும் உபநாஹத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றும் உபநாஹத்தில் முதலில் கருவியால் பிளந்து திப்பிலி, தேன், இந்துப்பு ஆகியவற்றால் பிரதிஸாரணம் செய்ய வேண்டும். பெரியதாகி வலியற்றிருக்கும் நோயில் **மண்டலாக்ரம்** எனும் கருவியைக் கொண்டு கீறி விட வேண்டும். இரத்தத்தைச் சார்ந்த உபநாஹத்தில் அங்கங்கு காயத்தை உண்டாக்கிப் பிறகு பிரதிஸாரணம் முதலிய முறைகளைச் செய்ய வேண்டும். 9

இவ்வாறு கூறப்பட்ட ஐந்து வகையான பிளக்கத்தக்க நோய்களில் முதலில் எண்ணெய் முறையைப் பயன்படுத்துக. பிறகு வேம்பு முதலியவற்றின் இலைகளைக் கொதிக்க வைத்து, அதன் ஆவியால் வியர்க்கச் செய்க. பிறகு முன் கூறியபடி உடலைத் தூய்மை பெறச் செய்து, பக்குவம் பெற்ற நோய்களைப் பிளந்து தூய்மைபடுத்தும் கஷாயங்களால் கழுவிய பிறகு விரணத்தை ஆற்றும் முறைகளைத் தக்கபடி பயன்படுத்த வேண்டும். 10-11

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**பேத்யரோக பிரதிஷேதம் எனும்**

**பதினான்காம் அத்தியாயம் முற்றும்.**

# பதினைந்தாம் அத்தியாயம்
# *சேத்யரோக பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி வெட்டி எடுத்து நீக்கத்தக்க கண் நோய்களைப் பற்றி விளக்குவோம். 1-2

### 1. அர்மத்தை வெட்டி எடுப்பதற்கு முன் செய்ய வேண்டிய முறை

முதலில் நோயாளிக்கு எண்ணெய்ப்பசை மிக்க உணவு தரவேண்டும். அல்லது முதல் நாள் இரவு எண்ணெயைப் பருகச் செய்து, மறுநாள் உணவு உட்கொள்ளச் செய்து முயற்சியுடன் எத்தகைய துன்பமும் நேராதபடி உட்காரச் செய்துப் பிறகு லாவணிக சூர்ணத்தை கண்களில் அஞ்சன முறைப்படி தூவிக் கண்களைக் கிளர்ச்சி பெறச் செய்ய வேண்டும். 3

### 2. அர்மத்திற்கு முக்கிய சிகிச்சை

லாவணிகத் தூளைப் பூசித் தேய்ப்பதால் சிதைந்த அர்மபகுதியை வியர்க்கச் செய்ய வேண்டும். கண்ணில் உள்ள அர்மா என்பது மடிப்புகள் கொண்டு சற்று மேலெழும்பியிருக்கும். அர்மா அதிக அளவில் சுருங்கிக் காணப்படும் இடத்தில் படிசம் எனும் கருவியால் பிடித்துக் கொள்ள வேண்டும். பிறகு கண்விழியைக் கடைக்கண் பக்கமாக அசைக்கச் செய்து மருத்துவர் எதிரில் உட்கார்ந்து கொண்டு வர்மாவை மேல் நோக்கி முசுண்டி எனும் கருவியால் மெல்ல தூக்க வேண்டும். விரைவு காட்டி அர்மா சிதைந்து விடும்படிச் செய்யக்கூடாது. ஊசியால் நூலை கோர்த்து அந்த மாம்சாங்குரத்தில் குத்தி நூலால் மேலெழும்படிச் செய்ய வேண்டும். அறுவை சிகிச்சையின் போது இமைகள் மூடிக் கொள்ளாமல் இரு இமைகளையும் ஸம்தம்சர எனும் கருவியால் பிடித்துக் கொள்ளச் செய்து, மூடாமல் அப்படியே இருக்கும்படி செய்ய வேண்டும். பிறகு கண்விழிகளிலிருந்து அகன்று உயரத் தூக்கிக் கொண்டிருக்கும் அர்மா எனும் புரையை கண்களின் நாசிப்

---

*சேத்யம் - வெட்டத்தக்கது. வெட்டி எடுத்து நீக்கத்தக்க கண்ணோய்களைப் பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயம் சேத்யரோக பிரதிஷேதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

பக்கமாகக் கொண்டு வந்து மூக்கின் பக்கத்தில் உள்ள கண்விழியின் பக்கத்தில் நான்கில் ஒரு பங்கு விட்டு மற்ற அர்மா எனும் புரையை (மூன்று பாகங்களை) மண்டலாக்ரம் எனும் கருவியால் வெட்டி எடுக்க வேண்டும். அர்மாவை வெட்டும்போது மூக்கின் பக்கமுள்ள கண்விழியில் நான்கில் ஒரு பங்கு மட்டும் இருக்கும்படி அர்மாவை வெட்ட வேண்டும். அவ்வாறு நான்கில் ஒரு பங்கு விடாமல் முழுவதையும் வெட்டி எடுத்தால் அப்பகுதியின் (மூக்குப் பக்கத்தில் உள்ள) கண்விழிப் பகுதி கூட வெட்டுப்படும், இரத்தம் அதிக அளவில் பெருகும். அங்கு நாளடைவில் துளை உண்டாகி விரணமாகித் துன்பம் விளைவிக்கும். நான்கில் ஒரு பங்குக்கும் அதிகமாக அர்மாவை விட்டு வைத்தால் மீண்டும் புரை வளர்ந்து கண்விழியை மூடிக் கொள்ளும். ஆகவே, சரியான அளவில் வெட்டிப் புரையை நீக்க வேண்டும். 4-9

அர்மா என்பது புரை போல் அல்லாது வலை போலக் கண்கள் கொண்டு தோன்றியிருந்தால், அதையும் முதலில் லாவணிகத்தூளைப் பூசி உயர்ந்து தூக்கிக் கொண்டிருக்கச் செய்து படிசம் அல்லது முகண்டி எனும் கருவியால் பிடித்துக் கொண்டு மேலுயர்த்தித் தூக்கி மண்டலாக்ரம் எனும் கருவியால் வெள்ளைவிழிக்கும், இமைக்கும் உள்ள இணைப்புப்பகுதி வரை வெட்டி விட வேண்டும். 10

### 3. அறுவைக்கு பின்

அவ்வாறு வெட்டிய பிறகு யவக்ஷாரம், திரிகடுகம், இந்துப்பு எனும் இவற்றைச் சேர்த்து தூளாக்கி, அந்தத்தூளை உலோகக் குச்சியின் உதவியால் அப்பகுதி மேல் தேய்த்து விட வேண்டும். பிறகு வெந்நீரில் துணியை நனைத்து அதைக் கொண்டு அல்லது ஆவியால் சூடேற்றப்பட்ட துணியைக் கொண்டு கண்களை வியர்க்கச் செய்து முறைப்படி கட்டு கட்ட வேண்டும். கட்டுவதற்கு முன் பருவம், வசிக்கும் இடம் முதலியவற்றிற்கு ஏற்ப எண்ணெயைப் பூச வேண்டும். பிறகு விரணங்களுக்குப் போலவே மூன்று நாட்களுக்கு ஒரு முறை கட்டு அவிழ்த்து மீண்டும் வியர்க்கச் செய்து கழுவித் தூய்மைப்படுத்தி எண்ணெய் விட்டு உடல் நலம் பெறும் வரை சிகிச்சை செய்ய வேண்டும். 11-13

### 4. அறுவையால் தோன்றிய துன்பத்திற்குச் சிகிச்சை

அர்மத்தை வெட்டி நீக்கிய பிறகு கண்ணில் வலி தோன்றினால் புங்கன் விதை, நெல்லிக்காய், அதிமதுரம்

ஆகியவற்றின் விழுதை மற்றும் கஷாயத்தைக் கொண்டு செய்த பாலில் தேன் கலந்து இரு வேளைகளும் கண்களில் ஆச்யோதன முறைப்படி பயன்படுத்த வேண்டும். 14

### 5. வலியைப் போக்கும் பூச்சு

முன்கூறிய ஆச்யோதன முறையைப் பின்பற்றுவதுடன் தாமரைக்கேசரம், அதிமதுரம், அருகம்புல் ஆகியவற்றைப் பால்விட்டு அரைத்து நெய் கலந்து நடுநெற்றியின் மேலும், கண்களின் மேலும் பூச வேண்டும். இதனால் வலி நீங்கும். 15

### 6. அர்மா மிகுந்திருப்பதற்குச் சிகிச்சை

அளவில் குறைந்து வெட்டுவதால் விழிகளின் மேல் அர்மாவின் பகுதி தங்கி இருந்தால் அதை லேக்ய மையைப் பூசி அகற்ற வேண்டும். 16

### 7. அர்மாவுக்குச் சுக்ர சிகிச்சை

அர்மா என்பது சிறியதாக தயிரைப் போல வெண்ணிறம் கொண்டோ, நீலமாகவோ, சிவப்பாகவோ, புகை நிறம் கொண்டோ மெலிந்து காணப்பட்டால் அதற்கு சுக்கிரத்திற்கு கூறிய முறைப்படிச் சிகிச்சை செய்ய வேண்டும். 17

உடலின் மேல் தோலைப் போலத் தடித்து சிநாயு அல்லது மாமிசத்தால் தோன்றியதாகி பெருமளவு பகுதியை மூடிக் கொண்டு கண்களின் கருமண்டலம் வரை பரவியிருந்தால், அந்த அர்மத்தை முன் கூறியபடி அறுவைச் சிகிச்சையால் வெட்டி எடுக்க வேண்டும். 18

### 8. நன்கு வெட்டப்பட்ட அர்மா இலக்கணம்

அர்மாவைச் சீராக வெட்டி எடுத்தால் கண்விழிகள் தூய்மை யாக இருக்கும். கண்கள் விரிதல், சுருங்குதல் போன்ற தன் இயற்கையான செயல்களைத் துன்பமின்றி செய்யும். வலி, வீக்கம், பக்குவம் பெறுதல் போன்ற வேறு துன்பங்கள் தோன்றா. 19

### 9. ஸிராஜால சிகிச்சை

ஸிராஜாலம் எனும் நோயில் சிரைகள் கடினமாகவோ, தடித்தோ காணப்படும். அவற்றைப் படிசம் எனும் கருவியால் பிடித்து உயர எழுப்பி மண்டலாக்ரம் எனும் கருவியால் வெட்டிவிட வேண்டும். 20

### 10. ஸிராபிடகா எனும் நோய்க்குச் சிகிச்சை

ஸிரைகளில் தோன்றும் பிடகை எனும் சிறு கட்டி மருந்தால் நீங்காவிடில் அர்மாவுக்கு போலவே மண்டலாக்ரமெனும் கருவி யால் வெட்டிச் சிகிச்சை செய்ய வேண்டும். 21

ஸிராஜாலம், ஸிராபிடகை எனும் நோய்களில் அர்மாவுக்குக் கூறிய பிரதிஸாரண முறையைப் பின்பற்றி தோஷத்திற்கு ஏற்ப வாத அபிஷ்யந்தம் முதலியவற்றிற்குக் கூறப்பட்ட லேகனம் முதலான முறைகளைப் பின்பற்ற வேண்டும். 22

### 11. பர்வணிகா எனும் நோய்க்குச் சிகிச்சை

திறமைமிக்க மருத்துவர் பர்வணிகா எனும் நோயில் முதலில் கண்ணின் கருவிழி வெள்ளை விழிப்பகுதியுடன் இணையும் இடத்தில் வியர்க்கச் செய்தல் எனும் முறையைப் பயன்படுத்திப் பிறகு படிசம் எனும் கருவியால் நான்கில் மூன்று பாகங்கள் அளவுள்ள பகுதியில் குத்தி மேல் நோக்கி உயர்த்தி, மண்ட லாக்ரம் எனும் கருவியால் பாதியளவில் வெட்டிவிட வேண்டும். பாதிக்குமேல் வெட்டினால் நரம்பில் துளை ஏற்பட்டு கண்விழிக்குக் கேடு விளையும். இந்நோயிலும் வெட்டியது போக மீதி இருக்கும் பகுதியில் இந்துப்புத் தூளைத் தேன் கலந்து தடவி மெல்ல தேய்த்து விட வேண்டும். நோயின் பகுதி தங்கி யிருந்தால் லேகநீய முறைக்குக் கூறிய தூளைக் கொண்டு அஞ்சனமிட்டுத் தேய்த்து சிகிச்சை செய்ய வேண்டும். 23-24

### 12. அர்மபிடகா - ஸிராஜாலம் முதலியவற்றைப் போக்கும் மை மருந்து

சங்கின் நாபிப் பகுதி, கடல்நுரை, பவழம், அச்மந்தகம் (ஒரு வகை மணி), வைடூரியம், படிகம், முத்து, இரும்பு ஆகியவற்றின் தூள் அல்லது பற்பம் சம அளவில் கொண்டு அனைத்துக்கும் சரிப்பட்ட அளவு தூயஸ்ரோதோஞ்சனம் கொண்டு அனைத் தையும் நன்றாக அரைத்து விழுதாகச் செய்து, ஆட்டின் கொம் பாலான பாத்திரத்தில் அல்லது கண்ணாடிக் குப்பியில் நிரப்பிப் பத்திரப்படுத்துக. பிறகு இரு வேளைகளிலும் கண்களில் இதை மையாக இடுக. இதனால் அர்ம, ஸிராபிடகா, ஸிராஜாலம் போன்ற நோய்கள் தணியும். 25-28

### 13. வர்த்மார்சத்திற்குச் சிகிச்சை

வர்த்மார்சம், சுஷ்கார்சம், அர்புதம், வர்த்மாவின் (கண் இமை) உட்பகுதியில் தோன்றும் நோய்களுக்கு இனி சிகிச்சை கூறப்படுகிறது. 29

கண்ணிமைகளைச் சார்ந்த அர்சஸ், அர்புதம் முதலிய நோய்களில் வெட்டி எடுப்பதற்கு முன் கண்ணிமைப் பகுதியை வியர்க்கச் செய்து கட்டைவிரல், மற்ற விரல்களால் இமையைப் பிடித்து மேல் நோக்கி மடித்து, ஊசியால் அந்த கண்களில் தோன்றிய அர்சஸ் எனும் முளையை அர்புதம் எனும் கட்டிகளின் அடிப்பகுதியில் பிடித்துக் கொண்டு மேல் நோக்கி உயர்த்தி கூர்மையான மண்டலாக்ரம் எனும் கருவியால் வெட்டி விட வேண்டும். பிறகு இந்துப்பு, அன்னபேதி, திப்பிலி ஆகியவற்றின் தூளைத் தூவ வேண்டும். இரத்தப்பெருக்கு நின்றபின் இமையில் நோய் கொண்ட பகுதியைச் சலாகையால் சுட்டு விட வேண்டும். இவ்வாறு சிகிச்சை செய்தும் நோய் தங்கியிருந்தால் க்ஷார மருந்தை அப்பகுதியில் தடவி அவலேகனம் செய்ய வேண்டும். இதை தவிர தோஷம் தணிய தீக்ஷ்ணமான வாந்தி எடுக்கச் செய்யும் முறை, பேதியாகச் செய்யும் முறை என்பனவற்றைப் பயன்படுத்தி, உடலின் மேல் கீழ்ப்பகுதிகளைத் தூய்மைப்படுத்தி, தோஷத்திற்கு ஏற்ப அபிஷ்யந்தத்திற்குக் கூறப்பட்ட முறைகளைக் கடைபிடிக்க வேண்டும். அறுவைக்குப் பிறகு ஒரு மாதம் வரை முறைப்படி உணவு பழக்கவழக்கங்களைக் கையாள வேண்டும். 30-33

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**சேத்யரோக பிரதிஷேதம் எனும்**

**பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினாறாம் அத்தியாயம்
# *பக்ஷ்மகோப பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கண்ணிமைகளைச் சார்ந்த உரோம வரிசையில் தோன்றும் நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பக்ஷ்மகோபத்திற்குச் சிகிச்சை

)மைப்பகுதியைச் சார்ந்த உரோமப்பகுதிகளில் தோன்றும் பக்ஷ்மகோபம் எனும் நோயைப் பற்றிய இலக்கணங்கள் முன் அத்தியாயத்தில் விளக்கப்பட்டுள்ளன. அங்கு அது 'யாப்யம்' (சிகிச்சையால் ஒரளவு தணிந்து நாள் கடந்த பின் துன்புறுத்துவது) எனக் கூறப்பட்டது. அந்த நோயில் முதலில் நோயாளிக்கு எண்ணெயைப் பருகத் தந்து உட்கார வைத்து அல்லது மல்லாந்து படுக்கச் செய்து கண்களை மூடிக் கொள்ளச் செய்ய வேண்டும். பிறகு இமைகளின் மேல் புருவத்திற்குக் கீழே குறுக்காக இரு பாகங்களில் அவ்வாறே இமைகளின் உரோமப் பகுதியில் இமையில் ஒரு பாகம் விட்டு கண்ணின் இரு முனைகளுக்கும் (கடைக்கண் மற்றும் நாசிக்கு அருகில் உள்ள முனை என இவ்விரண்டிற்கும்) நடுவில் இமையின் மேல் பக்கம் யவதானியம் அளவிற்கு வெட்டி எடுக்க வேண்டும். பிறகு குதிரையின் மயிரைக் கொண்டோ மெல்லிய நூல் கொண்டோ ஊசியால் வெட்டிய பிறகு பெருகும் இரத்தத்தைத் துடைத்து இரு முனைகளையும் மிக்க கவனத்துடன் சேர்த்துத் தைத்து நெய்யையும் தேனையும் கலந்து அங்கு பூசி விரணத்திற்குக் கூறியது போலச் சிகிச்சை செய்ய வேண்டும்.

நெற்றியின் மேல் ஒரு பட்டயத்தைச் சுற்றிக் காதுகளின் மேலாகக் கொண்டு தலையின் பின் பக்கத்தில் முடித்து விட வேண்டும். அந்தத் துணியையே அறுவைச் சிகிச்சை செய்த பகுதியின் மீது ஒரு சுற்றுச் சுற்றிக் கட்ட வேண்டும். அறுவைச் சிகிச்சை செய்த பகுதியை மறைத்துச் சுற்ற வேண்டும். அறுவைச்

---

*பக்ஷ்ம - கண்ணிமை முனையில் உள்ள உரோம வரிசை. அப்பகுதியில் தோன்றும் நோய்களுக்குச் சிகிச்சையை விளக்குவதால் இந்த அத்தியாயம் பக்ஷ்மகோப பிரதிஷேதம் எனப் பெயர் பெற்றது.

சிகிச்சை செய்த பகுதியின் மேல் பஞ்சு வைத்துச் சுற்றுதல் நல்லது. (கண்களின் மேல் வேறு கட்டு போடக் கூடாது). 3-6

### 2. பக்ஷ்மகோபத்திற்கு நெருப்பால் சுடுதலும், க்ஷாரமுறையும்

முன்செய்த அறுவைச் சிகிச்சையால் பக்ஷ்மகோபம் தணியாத போது அவருடைய கண் இமையை மடித்து நோயுற்ற ப மையை நெருப்பால் சுடுதலோ க்ஷார மருந்தைத் தேய்த்துக் குணப்படுத்துதலோ செய்ய வேண்டும். திறமைமிக்க மருத்துவர் நோயையும் தோஷங்களையும் ஆராய்ந்து இம்முறைகளைக் கவனத்துடன் பயன்படுத்த வேண்டும். 7

### 3. வேறு முறை

முன் கூறிய அறுவைச் சிகிச்சை, க்ஷார முறை, நெருப்பால் சுடுதல் முதலியவற்றால் நோய் நீங்காவிடில் புதியதாகத் தோன்றியுள்ள மற்றொரு உரோம வரிசையை மூன்று படிசங்களால் நன்றாகப் பிடித்து வெட்டிவிட வேண்டும். பிறகு கடுக்காய்த் தூளையோ தௌவரகத்தூளையோ நீரில் கரைத்து அதைக் கொண்டு பிரதிஸாரண முறையைப் பயன்படுத்த வேண்டும். 8

பக்ஷ்மகோப நோயைப் போக்கக் கூறப்பட்ட அறுவை சிகிச்சை, நெருப்பால் சுடுதல், க்ஷார முறை, மருத்துவ முறை என்பவை நான்கும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. இவற்றை தவிர பேதியாகச் செய்தல், ஆச்யோயதன முறை, புகைபோடுதல், நசியம், மேல் பூச்சு, மை இடுதல், எண்ணெய் முறை, ரஸமுறை, உபபக்ஷ்மா (இமைகளைச் சார்ந்து புதிதாகத் தோன்றிய உரோமங்களை வெட்டி எடுத்தல்) முதலியவற்றைத் தோஷங் ஏற்றவாறு பயன்படுத்த வேண்டும்.

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**பக்ஷ்மகோப பிரதிஷேதம் எனும்**

**பதினாறாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினேழாம் அத்தியாயம்
# *திருஷ்டிகதரோக பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கண்களின் கருமணிகளில் தோன்றும் நோய்களை மற்றும் முறைகளை விளக்குவோம். 1-2

### 1. கருமணியில் தோன்றும் நோய்கள்

கண்ணின் கருமணியில் தோன்றும் தூரமதர்சி, பித்தவிதக்த திருஷ்டி, சிலேத்துமவிதக்த திருஷ்டி என்பன மூன்றும் சிகிச்சையால் தீர்க்கக்கூடியவை. ஹ்ரஸ்வ ஜாட்யம், நகுலாந்த்யம், கம்பீரிகா என்பவை சிகிச்சைக்கு உட்படாதவை. இவ்வாறே அருணம் முதலான கசநோய்கள் காலம் கடத்தக்கூடியவை. இவற்றில் தூரமதர்சி எனும் நோய்க்குப் பித்த அபிஷ்யந்திக்கு உரிய சிகிச்சை முறையுடன் முன் கூறப்பட்டுள்ளது. 3

### 2. பித்தசிலேத்துமவிதக்த திருஷ்டி நோய்களுக்குச் சிகிச்சை

பித்தத்தின் சீற்றத்தால் கருமணியில் பார்வைக் கோளாறு தோன்றினால் பித்தாபிஷ்யந்தத்தைப் போக்கும் முறைகளையும், கபத்தினால் பார்வைக் கோளாறு நேர்ந்தால் கப அபிஷ்யந்த நோயைப் போக்கும் முறைகளையும் பயன்படுத்திச் சிகிச்சை செய்ய வேண்டும். ஆனால் இந்த நோய்களில் கருவியைக் கொண்டு சிகிச்சை செய்யக்கூடாது. 4

### 3. பித்தவிதக்த திருஷ்டி. நோய்க்குச் சிகிச்சை

பித்த விதக்த திருஷ்டிக்குப் பித்த அபிஷ்யந்த நோயைப் போக்குவனவாகக் கூறப்பட்ட நஸியமுறை, மேல் ஊற்றிக் கொண்டிருக்கும் முறை, மேல் பூச்சு, மை மருந்து, புடபாகம், தர்ப்பணமுறை ஆகியவற்றையும், அவ்வாறே சிலேத்துமவிதக்த திருஷ்டியில் சிலேத்தும அபிஷ்யந்த நோயைப் போக்குவனவாகக் கூறப்பட்ட நஸியம் முதலான சிகிச்சைகளையும் பயன்படுத்த வேண்டும். இவற்றைத் தவிர பித்தவிதக்த திருஷ்டியில் திரிபலாகிருதத்தைப் பருகச் செய்ய வேண்டும். சிலேத்துமதிருஷ்டி நோய்க்குத் திரிவிருதாதி நெய் மருந்தைப் பருகச் செய்ய வேண்டும். இந்நெய் மருந்துகள் கிடைக்காதபோது பழைய நெய்யை மட்டுமாவது உட்கொள்ளச் செய்ய வேண்டும். 5

---

* திருஷ்டி - கண்களின் கருமணி (Lens). அதைச் சார்ந்த நோய்களைப் பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயம் திருஷ்டிகதரோக பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

## 4. நோய்களுக்கும் அஞ்சன முறைகள்

1. கைரிகம், இந்துப்பு, திப்பிலி, பசுவினுடைய பல்லின் சாம்பல் 2, பசுவின் மாமிசம், வெள்ளை அல்லது கரிய மிளகு, வாகை விதை, மனோசிலை 3. விளாமரத்தின் தளிர் இலைகளுடன் கூடிய காம்புகளின் தூள் அல்லது சாம்பல் (தேன் கலந்து) 4.பெருங்காஞ்சொறிக் காய்த்தூள் (தேன் கலந்து) என இந்நான்கு வகைகளையும் தனித்தனியே அரைத்துக் கண்களில் மையாகப் பூசத் தக்க மருந்துகளாகும். 6-7

## 5. குப்ஜகாதி அஞ்சனம்

குப்ஜகம் (சாமந்தி வகை) அசோகு, சாலமரம், மா, ஞாழல், சிறிது சிவந்த தாமரை, நீலாம்பல் ஆகியவற்றின் மலர்கள், அரேணுகம், திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய் ஆகிய இவ்வனைத்தின் தூளை மூங்கில் குழாயில் வைத்திருந்து நெய்யும் தேனும் கலந்து பித்தகபங்களால் தோன்றிய கருமணி நோயைப் போக்க மையாகப் பயன்படுத்த வேண்டும். 8-9

## 6. பகலில் கண் தெரியாமை - 'ல் கண் தெரியாமைக்கு சிகிச்சை

பகலில் கண் தெரியாமை அல்லது இரவில் கண் தெரியாமை என்பனவற்றிற்கு மா மற்றும் நாவல் மர மலர்களின் சாற்றில் அரேணுகத்தின் தூளை கலந்து அரைத்துத் தேனும் நெய்யும் கலந்து மையாக இடவேண்டும். அல்லது சிறிது சிவந்த நிறம் கொண்ட தாமரை, நீலாம்பல், குங்குமப்பூ அல்லது தாமரை, நீலாம்பல் மலர்களின் கேசரங்கள், மற்றும் கைரிகம் ஆகியவற்றை மைய அரைத்து பசுஞ்சாணச்சாற்றுடன் அரைத்து குளிகையாகச் செய்க. தேவையான போது பன்னீரில் இதைக் குழைத்து மையாகப் பயன்படுத்த நோய் நீங்கும். 10-11

## 7. ரஸாஞ்சனாதி மை

ரஸாஞ்சனம், நெல்லி அல்லது மல்லிகை இலைகளின் சுரஸம், தேன், தாளிச பத்திரி, சுவர்ணகைரிகம் எனும் இவற்றைப் பசுஞ்சாணச்சாற்றுடன் அரைத்து பித்தத்தால் நோயுற்ற திருஷ்டிக்கு மையாகப் பயன்படுத்துக. 12

## 8. பித்தத்தைப் போக்கும் சீதாதிமை

ரஸாஞ்சனம் அல்லது பச்சைக்கற்பூரம் அல்லது ஸௌவீராஞ்சனம், பசு, பறவை முதலியவற்றின் புலால் சாற்றில் பாவனை செய்து பிறகு திறமைமிக்க மருத்துவர் ஆமை அல்லது ரோஹிதம் எனும் மீன் இவற்றின் பித்தத்தில் பாவனை செய்து உலர்த்திக் கண்ணாடிக் குப்பியில் வைத்துக்

கொள்க. பித்த அபிஷ்யந்தம் அல்லது பித்தவிதக்த திருஷ்டி முதலான பித்தத்தால் தோன்றும் கண் நோய்களுக்கு நாள் தோறும் இதைச் சூர்ணாஞ்சனமாகக் கண்களில் இடுதல் வேண்டும். 13-14

### 9. காச்மர்யாதி அஞ்சனம்

குமிழன் மலர், அதிமதுரம், மரமஞ்சள், பாச்சோத்தி, ரஸாஞ்சனம் எனும் இவற்றை நன்கு அரைத்துத் தேன் கலந்து பித்தவிதக்த திருஷ்டி எனும் நோயில் மையாக இடுவது மிக்க நலம் தரும். 15

### 10. ஸ்ரோதோஞ்சனாதிகளாலான மருந்து

ஸ்ரோதோஞ்சனம், இந்துப்பு, திப்பிலி, அரேணுகம் ஆகிய இவற்றை மைய அரைத்து ஆட்டின் பாலில் குழைத்து யவதானியம் போன்ற வத்திகளாகச் செய்து உலர்த்திக் கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்க. இந்த வத்தியைப் பன்னீர் விட்டுக் குழைத்து மை போல் இட்டால் இரவில் கண் தெரியாமை எனும் நோய் தணியும். 16

### 11. இரவில் கண் தெரியாமையைப் போக்கும் மை

தகரை, திப்பிலி, சுக்கு, அதிமதுரம், தாளிசபத்திரி, மஞ்சள், மரமஞ்சள், கோரைக்கிழங்கு எனும் இவற்றை நன்கு தூள் செய்து ஆட்டின் கல்லீரலின் சாற்றுடன் அரைத்து யவதானியம் போன்ற வத்திகளாகச் செய்து நிழலில் உலர்த்தி வைத்துக் கொண்டு நாள்தோறும் மை மருந்தாகப் பயன்படுத்தி வந்தால் இரவில் கண் தெரியாமை எனும் நோய் நீங்கும். 17

### 12. மனோசிலை அஞ்சனம்

மனோசிலை, கடுக்காய், சுக்கு, மிளகு, திப்பிலி, சிற்றாமுட்டி வேர், தகரை, கடல்நுரை என்பனவற்றை நன்கு அரைத்து ஆட்டின் பாலுடன் குழைத்து வத்தியாகச் செய்து உலர்த்துக. இதைக் கண்களில் மையாக இடப் பயன்படுத்தினால் இரவில் கண் தெரியாமை நீங்கும். 18

### 13. பசுவின் சிறுநீராலான ரஸகிரியை

பசுவின் சிறுநீர், பசு அல்லது ஆட்டின் பித்தம், மது, கல்லீ ரலின்சாறு, நெல்லிச்சாறு ஆகியவற்றைச் சேர்த்து பக்குவம் செய்து ரஸகிரியை செய்க. அல்லது கல்லீரலில் சாற்றைத் திரி பலையின் கஷாயத்துடன் ரஸகிரியை செய்க. இவற்றைக் கண் களில் மையாகப் பயன்படுத்தினால் இரவில் கண்தெரியாமை எனும் நோய் நீங்கும். 19

**14. மற்றொரு முறை**

பசுவின் சிறுநீர், நெய், கடல்நுரை, திப்பிலி, தேன், காய பலம், இந்துப்பு இவற்றை நன்கு அரைத்து உலர்த்தி மூங்கில் குழாயில் வைத்திருக்கவும். தேவையானபோது இதைக் கண்களில் மையாக இட்டால் இரவில் கண்தெரியாமை எனும் நோய் தணியும். 20

**15. ஆட்டின் கொழுப்பாலான மை**

ஆட்டின் கொழுப்பு, ஆட்டின் கல்லீரல், ஆட்டின் நெய், திப்பிலி, இந்துப்பு, தேன், நெல்லிச்சாறு ஆகியவற்றை நன்கு அரைத்து பக்குவம் செய்து ரஸகிரியை செய்க. பிறகு இதை உலர்த்தி கருங்காலிக்கட்டையாலான பாத்திரத்தில் வைக்கவும். இதைக் கண்களில் மையாகப் பயன்படுத்தினால் இரவில் கண் தெரியாமை எனும் நோய் தணியும். 21-22

**16 நொச்சி விதையாலான மை**

நொச்சிவிதை, திப்பிலி, ஆட்டின் எலும்பு மற்றும் கொழுப்பு, ஏலக்காய், ஆட்டின் கல்லீரல் எனும் இவற்றை அரைத்து உலர்த்திக் கண்ணாடிக் குப்பியில் வைத்திருக்க. சிலேத்தும விதக் ததிருஷ்டி எனும் நோயில் இதை மையாகப் பயன்படுத்துக. அல்லது கல்லீரலின் சாற்றில் மை தயார் செய்து அல்லது ஸ்ரோதோஞ் சனத்தை ஆட்டின் கல்லீரல் சாற்றில் கலந்து கண்களில் மையா கப் பயன்படுத்தினால் கபவிதக்த திருஷ்டி நோய் தணியும். 23

**17. உடும்பின் கல்லீரலாலான மை**

உடும்பின் கல்லீரலை இடையில் கீறி அதற்குள் திப்பிலி தூளை நிரப்பி அதன்மேல் சீலை மண் பூசி உலர்த்தி மந்தாக்கினி (குறைந்த அளவில் எரியும் தீயில்) புடம் போட்டு எடுத்து அதிலிருந்து திப்பிலி தூளை எடுத்துக் கல்லீரலை உட் கொள்ளவும், திப்பிலித் தூளைக் கண்களில் மையாக இடவும் பயன்படுத்துக. இரவில் கண் தெரியாமை எனும் நோய் நீங்கும். (திப்பிலியுடன் கூடிய கல்லீரலையும் மையாக இடலாம்). 24

**18. ஆட்டின் கல்லீரலாலான மை (மற்றொரு வகை)**

உடும்பின் கல்லீரலால் அஞ்சனம் செய்தது போலவே ஆட்டின் கல்லீரலைக் கொண்டு நடுவில் கீறித் திப்பிலித் தூளைத் திணித்து மூடி சீலை மண் செய்து உலர்த்தி புடம் போடவும். முன்போலவே கல்லீரலை உட்கொள்ளவும், திப் பிலித்தூளை மையாக இடவும் பயன்படுத்துக. இதனால் இரவில் கண்தெரியாமை எனும் நோய் தணியும். 25

**19. வேறு முறை**

உடும்பு அல்லது ஆட்டின் மண்ணீரலும், கல்லீரலும் கொண்டு வெட்டி அதன் மேல் நெய்யும், எண்ணெயும் தடவி இரும்புக் கம்பியில் குத்தி நெருப்பில் சுட்டு உட்கொள்க. மற்றும் அவ்விரண்டின் மேல் கடுகெண்ணெயைப் பூசி அரைத்து உலர்த்தி மையாகப் பயன்படுத்துக. இவ்வாறு உட்கொண்டு மையைப் பயன்படுத்தினால் இரவில் கண் தெரியாமை எனும் நோய் விரைவில் தணியும். 26

**20. குடிகாஞ்சனம்**

இந்துப்பு, பச்சைநிறப்பயற்றன்பருப்பு, சுக்கு, மிளகு, திப்பிலி, ஸௌவீராஞ்சனம், மனோசிலை, மஞ்சள், மரமஞ்சள், பசுவின் கல்லீரல், சிவப்புசந்தனம் ஆகிய இவை அனைத்தையும் நன்கு அரைத்து மாத்திரையாகச் செய்து உலர்த்திக் கண்ணாடி குப்பியில் வைக்கவும். தேவையானபோது இந்த மாத்திரையை மையாக இட்டால் பகலில் கண் தெரியாமை நீங்கும். 27

**21. யாப்யமான நோய்க்குச் சிகிச்சை**

திமிரம் எனும் காச நோய் (கண் நோய்) ஆறு வகையும், காலம் கடத்தக்கூடிய (யாப்ய) நோய்களாகக் கூறப்பட்டன. அவற்றில் முதலில் ஸிராமோக்ஷணம் செய்து கெட்ட இரத்தத்தை வெளியேற்றி பேதியாகச் செய்யும் பொருள்களின் விழுதும் கஷாயமும் சேர்த்துச் செய்த பழைய நெய் மருந்தைப் பருகச் செய்து பேதியாகச் செய்க. 28

**22. வாதபித்தங்களாலான திமிர நோய்க்குச் சிகிச்சை**

வாதத்தால் தோன்றிய திமிரம் எனும் கண் நோயில் ஆமணக்கு எண்ணெய் இளம் சூடுள்ள பாலில் கலந்து உட்கொள்ளச் செய்க. இரத்தத்தால் மற்றும் பித்தத்தாலான நோய்களில் திரிபலா கிருதம் எனும் மருந்தால் பேதியாகச் செய்து உடலைத் தூய்மைபடுத்த வேண்டும். 29

**23. கபத்தால் தோன்றிய திமிரத்திற்குச் சிகிச்சை**

கபத்தால் தோன்றும் திமிரத்திற்குச் சிவதை விழுது மற்றும் கஷாயம் என்பனவற்றால் செய்த நெய் மருந்தைப் பயன்படுத்தி பேதியாகச் செய்ய வேண்டும். மூன்று தோஷங்களாலும் தோன்றும் திமிர நோய்க்கு வாதபித்த கபங்களைப் போக்கும் மருந்துப் பொருள்களைச் சேர்த்துச் செய்த விழுது கஷாயம் என்பனவற்றால் செய்த நெய் மருந்தைப் பயன்படுத்துக. எல்லா வகை திமிர நோய்களுக்கும் பொதுவாக இரும்பு பாத்திரத்தில் வைத்திருந்த பழைய நெய்யைப் பயன்படுத்துவது நன்மை பயக்கும். 30

திரிபலாகிருதம் எந்நிலையிலும் நலம் பயக்கும். அவ்வாறே ஆடுதீண்டாப்பாளையின் காய்களின் விழுது மற்றும் கஷாயம் சேர்த்துச் செய்த நெய் கண்நோய்களில் எந்த நிலையிலும் பயன்படுத்தத்தக்கதாகும். பித்தத்தால் தோன்றிய திமிர நோயில் நன்கு தூள் செய்த திரிபலையை அதிக அளவு நெய் விட்டுக் கலந்து உட்கொள்ளுதல் நலம் தரும். 31

## 24. வாதத்தாலான திமிர நோய்க்குச் சிகிச்சை

திரிபலைத்தூளை எண்ணெயுடன் கலந்தும் கபத்தால் தோன்றிய திமிரத்திற்குத் தேன் கலந்தும் பயன்படுத்துவது நல்லது. அவ்வாறே பசுஞ்சாணத்தின் விழுது மற்றும் கஷாயம் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் மருந்து கபத்தாலான அல்லது எல்லா வகை திமிர நோய்களிலும் மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துவதால் நன்மை விளையும். 32

## 25. பித்தத்தாலான திமிரத்திற்கு மருந்து

ஆட்டின் நெய்யைக் காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப்பொருள்களின் விழுது மற்றும் கஷாயம் சேர்த்துப் பக்குவம் செய்து மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துவது பித்தத்தாலான திமிர நோயில் நன்மை தரும். வாதம் மற்றும் இரத்தத்தால் தோன்றும் திமிர நோயில் விதாரிகந்தாதிகணத்தைச் சேர்ந்த கூட்டுப் பொருள்களின் விழுது மற்றும் கஷாயம் சேர்த்து செய்த எண்ணெய் அல்லது காகோலி முதலிய இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப்பொருள்களாலான விழுது, கஷாயம் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் மற்றும் வாதநோய் சிகிச்சையில் கூறப்பட்ட அணுதைலம் ஆகியவை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துவது மிக்க நன்மை தரும். 33

## 26. வாதத்தால் தோன்றும் திமிரத்திற்குச் சிகிச்சை

காட்டுப்பயறு, அமுக்கராங்கிழங்கு, பேராமுட்டி, சதாவரி எனும் இவற்றின் விழுதைக் கொண்டு செய்த நெய் அல்லது எண்ணெய் அல்லது வாதவியாதிக்குக் கூறப்பட்ட திவிருதாதி கிருதம், வசை, மஜ்ஜை எனுமிவற்றுடன் கூடிய எண்ணெய் ஆகியவற்றை வாதத்தால் தோன்றும் திமிர நோய்க்கு மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்தத்தக்கவை. அல்லது நீரில் தோன்றும் மீன் முதலியவற்றின் நீர்ப்பாங்கான நிலத்தில் வாழும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் புலாலின் விழுது மற்றும் கஷாயம் சேர்த்துக் காய்ச்சிய பாலைக் கொண்டு செய்யப்பட்ட நெய் முன் கூறிய காட்டுப்பயறு, அமுக்கராங்கிழங்கு ஆகிய மருந்து பொருள்களின் விழுது மற்றும் கஷாயத்துடன் பக்குவம் செய்து

வாதத்தால் தோன்றும் திமிரத்திற்கு மூக்கிலிடு மருந்தாகப் பயன் படுத்த வேண்டும். 34

**27. புடபாகமும், மை மருந்தும்**

கழுகு மற்றும் மான் ஆகியவற்றின் புலாலுடன் இந்துப்பு, தேன் ஆகியவற்றை கலந்து புடபாக முறைப்படி (புடம் செய்து) கிரியா கல்பம் எனும் அத்தியாயத்தில் கூறியபடி செய்க. அவ்வாறே கழுகு, நாகம், கோழி ஆகியவற்றின் வசையை அதிமதுரத்தூளுடன் கலந்து மை மருந்தாகப் பயன்படுத்தினால் வாதத்தால் தோன்றும் திமிரம் நீங்கும். 35

**28. பிரத்யஞ்சனம்**

கண்களில் மையிட்ட பிறகு பயன்படுத்தப்படும் பொருள் பிரத்யஞ்சனம் எனப்படும். ஸ்ரோதோஞ்சனத்தை திரிபலாதி கஷாயத்தில் தூய்மைப்படுத்தி முறையே ஆடு முதலியவற்றின் புலால் சாறு, ஆட்டின்பால், நெய் ஆகியவற்றுடன் தனித்தனி யாக பாவனை செய்து உலர்த்தி பிரத்யஞ்சனமாகப் பயன்படுத்த வேண்டும். அல்லது இந்த ஸ்ரோதோஞ்சனத்தை கரு நாகத்தின் வாயில் வைத்து, வாயின் இருபகுதிகளையும் தர்ப்பையைக் கொண்டு சேர்த்துக் கட்டி ஒரு மாத காலம் வைத்திருந்து பிறகு அதை மல்லிகை மொட்டு, இந்துப்பு ஆகியவற்றுடன் சேர்த்து அரைத்துச் சிவப்பு நிறத்துடன் கூடிய திமிர நோயில் பயன் படுத்தினால் நோய் தணியும். அல்லது இந்த ஸ்ரோதோஞ் சனத்தை மூன்று நாட்கள் ஆட்டுப்பாலில் நன்கு பாவனை செய்து அரைத்து மையாகப் பயன்படுத்தினால் காச நோய் தீரும் என மருத்துவ நூல் அறிந்தவர்கள் கூறுகின்றனர். 36-37

**29. பித்தத்தால் தோன்றும் திமிரத்திற்குச் சிகிச்சை**

பித்தத்தால் தோன்றும் திமிரத்திற்கு ஆட்டுப்பால் அல்லது பசுவின் பாலிலிருந்து எடுத்த புதிய வெண்ணெயை இனிப்புச் சுவை கொண்ட காகோலி முதலான கூட்டுப் பொருள்களுடன் பக்குவம் செய்து மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துக. அவ்வாறே காட்டு விலங்கு, பறவைகளுடைய புலாலைச் சேர்த்துப் புடபாக முறைப்படி பக்குவம் செய்து கண்களில் தர்ப்பண முறையாகப் பயன்படுத்தினால் பித்தத்தால் தோன்றும் திமிரம் தணியும். 38

**30. ரஸகிரியையும், பிரத்யஞ்சனமும்**

ரஸாஞ்சனம், தேன், சர்க்கரை, மனோசிலை, அதிமதுரம் எனும் இவற்றை நன்கு அரைத்து நீர்சேர்த்து ரஸகிரியை செய்து கண்களில் மை போல் இட வேண்டும் ஸௌவீராஞ்சனத்தைத் தூய்மைப்படுத்தி மயில்துத்தத்துடன் சேர்த்து அரைத்துப்

பிரத்யஞ்சனமாகப் பயன்படுத்தினால் பித்தத்தால் தோன்றும் திமிரம் நீங்கும். 39

பிரத்யஞ்சனத்திற்காக தூய மயில் துத்தத்தைக் கொண்டு சூடாக்கி பாச்சோத்தி, ஏலாதிகண நறுமணப்பொருள்களின் கஷாயத்தில் மூன்று முறை அமுத்தி எடுத்து அரைத்து பத்திரப் படுத்துக. பித்தத்தால் தோன்றும் திமிர நோயில் இதைப் பிரத் யஞ்சனமாகப் பயன்படுத்துக. காசநோயில் ஆடுதீண்டாப்பாளை, ஸௌவீராஞ்சனம் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு ஸ்ரோதோஞ்சனம் அல்லது சங்கின் மையப்பகுதியுடன் அரைத்து மை போலப் பயன்படுத்தினால் கண்களில் தோன்றும் காசநோய் தணியும். 40

புரச வேர்ப்பட்டை, கல்யாண முருங்கை மரப்பட்டை, இலுப்பப்பட்டை ஆகியவற்றை சம அளவில் கொண்டு நன்கு தூளாக்கி கள் தெளிவும், தேனும் சேர்த்து மீண்டும் அரைத்து மையாகப் பயன்படுத்துக. (இதை ரஸகிரியையாகவும் செய்ய லாம்). இது காச நோயைப் போக்கும்.

### 31. கபத்தால் தோன்றும் திமிரத்திற்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றும் திமிரத்திற்கு வெட்டிவேர், பாச்சோத்தி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், ஞாழல் ஆகியவற்றின் விழுதை அப்பொருள்களின் கஷாயத்துடன் எள் எண்ணெயைச் சேர்த்து எண்ணெய் மருந்து செய்து அதை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்துக. 41

### 32. கபத்தால் தோன்றும் திமிரத்திற்குப் புகை

வாயுவிடங்கம், வட்டத்திருப்பி, நாயுருவி, அழிஞ்சில் பட்டை ஆகியவற்றுடன் வெட்டிவேரைச் சேர்த்துத் தூளாக்கி புகைப்பிடித்தால் கபத்தால் தோன்றிய திமிரம் தணியும்.

### 33. கண்களில் தர்ப்பணமாக விட மருந்து

ஆலம், அரசு முதலான பால் உள்ள மரங்களின் பட்டை களின் கஷாயம் மற்றும் மஞ்சள், வெட்டிவேர் விழுதுடன் நெய் மருந்து பக்குவம் செய்து கண்களில் தர்ப்பண மருந்தாக விட வேண்டும். 42

### 34. புடபாக முறை

திப்பிலி, தேன், இந்துப்பு, காட்டுவிலங்குகளின் பறவை களின் புலால் என இவற்றை ஒன்றாகச் சேர்த்து புடம் போட்டுக் கபத்தால் தோன்றும் திமிரத்திற்குப் பயன்படுத்துக.

### 35. ரஸகிரியை முறை

மனோசிலை, சுக்கு, மிளகு, திப்பிலி, சங்கின்நாபி, தேன், இந்துப்பு, அன்னபேதி, ரஸாஞ்சனம் ஆகிய இவற்றில் நான்கு மடங்கு நீர் சேர்த்து ரஸகிரியை முறைப்படி பக்குவம் செய்து கபத்தால் தோன்றும் திமிரத்திற்குப் பயன்படுத்தினால் நோய் தணியும். 43

### 36. வேறு முறை

அன்னபேதி, ரஸாஞ்சனம், வெல்லம், சுக்கு ஆகியவற்றை ரஸகிரியை செய்து கபத்தாலான திமிரத்திற்கு மையாகப் பயன்படுத்துக.

ஸந்திபாதத்தால் தோன்றும் திமிரத்திற்கு ஸௌவீராஞ்சனத்தை ஏழு முறையோ, இருபத்தோரு முறையோ, நெருப்பில் காய்ச்சிக் காய்ச்சி எண் வகை சிறுநீரில் முக்கி மீண்டும் அத்தனை முறை திரிபலை கஷாயத்தில் முக்கி கழுகு முதலான பறவைகளின் எலும்புத்துளையில் நிரப்பி மூடி ஒரு மாத காலம் ஓடிக் கொண்டிருக்கும் ஆறு முதலியவற்றின் நீரில் அமிழ்த்தி வைக்கவும். ஒரு மாதம் சென்ற பிறகு எடுத்து ஆடுதீண்டாப் பாளை மலர், அதிமதுரம் ஆகியவற்றின் தூள் சேர்த்து நன்கு அரைத்து மை மருந்து செய்து கண்ணாடி குப்பியில் வைத்திருந்து ஸந்நிபாதத்தால் தோன்றும் திமிர நோய்க்குப் பயன்படுத்தினால் அந்நோய் தணியும். 44-45

மேற்கூறிய மை மருந்துகள் தவிர ஸந்நிபாதத்தில் தோன்றிய திமிரத்திற்கு கண்களில் தர்ப்பண முறை, புடபாக முறை ஆகிய எல்லா சிகிச்சை முறைகளையும் பின்பற்ற வேண்டும். இரத்தச் சீற்றத்தால் தோன்றும் திமிரம் மற்றும் பரிம்லாயி காச நோயில் பித்தத்தால் தோன்றிய திமிரத்தைப் போக்கும் தர்ப்பணம் முதலிய முறைகள் நன்மை தரும். ஆறு வகை திமிர நோய்களிலும், காச நோய்களிலும் தோஷங்களுக்கு ஏற்றபடி அபிஷ்யந்தத்தைப் போக்கும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். அதாவது வாதத்தால் தோன்றிய திமிரத்திற்கு வாத அபிஷ்யந்த நோய்க்குக் கூறிய முறைகள் தகும். அவ்வாறே பித்தத்தால் தோன்றிய திமிரத்திலும் பித்த அபிஷ்யந்தத்திற்குக் கூறிய முறைகள் தகும் என்பதாம். 46

### 37. நஸிய முறை முதலியன

திமிர நோயில் வாதம் முதலிய தோஷங்களின் இலக்கணங்கள் தோன்றினால் அல்லது நோய் கண் விழி முழுவதிலும் பரவிய போது வாத அபிஷ்யந்தத்திற்குக் கூறப்பட்ட நெய் மருந்து மற்ற மூலிகைகள் முதலியவற்றைப் பயன்படுத்தக் கூடாது. ஆனால் பட்டினி கிடத்தல் பேதியாகச் செய்தல் முதலிய

வற்றால் உடலைத் தூய்மைப்படுத்தி மூன்று நாட்களுக்கு பிறகு அபிஷ்யந்தத்திற்கு கூறப்பட்ட நஸியம் முதலிய முறைகளைப் பின்பற்றுக. மேலும் இனி கூறப்போகும் கிரியா கல்பாத் யாயத்தில் விளக்கமாக கூறப்போகிற அஞ்சனம் முதலிய வற்றையும் இங்கு பயன்படுத்துவது நலம் தரும். 47

## 38. திமிர நோயில் உணவு முறை

பழைய நெய், திரிபலை, சதாவரி, புடலை இலை, பயறு, நெல்லிக்கனி யவதானியம் ஆகியவற்றை உட்கொள்ள வேண்டும். அவ்வாறு செய்பவருக்கு கொடிய திமிர நோயால் அச்சம் இல்லை. 48

சதாவரியுடன் பால் சேர்த்துத் தயார் செய்த பாயசம் அல்லது நெல்லிக் கனி விழுது சுரசம் ஆகியவற்றுடன் செய்த பாயசம் அல்லது திரிபலை கஷாயத்தில் அதிக அளவில் நெய் சேர்த்து அத்துடன் யவதானியத்தைக் கொதிக்க வைத்து செய்த சோறு ஆகியவற்றை நாள் தோறும் உண்பது திமிர நோயைப் போக்கும். 49

கீரைப்பாலை, புளியாரை, தண்டுக்கீரை சிறுமுள்ளங்கி, காட்டுப் பறவைகளின் புலால் முதலியன திமிர நோயில் நலம் தருபவையாகும். 50

புடலை, சுக்கரி, பாகல், கத்தரிக்காய், பழம், முருங்கைக்காய் முதலியவற்றை நெய்யில் பொறித்துச் செய்த கறிகாய் வகை கண்களுக்கு நன்மை தரும். 51

## 39. திமிர நோய்க்கு கூடாதவை

திமிர நோய் தோன்றிய போது ஸிரையைக் கீறி இரத்தம் வெளியேற்றல் முதலான அறுவைச் சிகிச்சை முறைகளைத் தவிர்க்க வேண்டும். அறுவைச் சிகிச்சை தோஷத்தை மேலும் சீற்றமுறச் செய்து பார்வையைக் கெடுக்கும். 52

## 40. சிகிச்சையால் தீர்க்கக்கூடிய - இயலாத திமிர நோய்கள்

கண்ணின் முதல் புரையில் தோன்றிச் சிவப்பு நிறம் கொள்ளாத திமிர நோய் சிகிச்சையால் தீர்க்கக்கூடியதாகும். இரண்டாவது புரையைச் சார்ந்து சிவப்பு நிறம் கொண்ட திமிரம் மிகவும் கஷ்டப்பட்டுச் சிகிச்சை செய்வதால் தீர்க்கக்கூடியது. மூன்றாவது புரையைச் சார்ந்த திமிரம் தீர்க்க இயலாதது. 53

திமிர நோயில் சிவப்பு நிறம் தோன்றிய பிறகும் நோயை யாப்யமாக (நாள் கடத்தக் கூடியதாக) செய்ய சாஸ்திர முறைப் படி சிகிச்சை செய்ய வேண்டும். அவ்வாறே அட்டைப் பூச்சியைக் கொண்டு கெட்ட இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 54

### 41. கபத்தால் தோன்றும் லிங்கநாசச் சிகிச்சை

கபத்தால் தோன்றிய லிங்கநாசத்திற்கு அறுவைச் சிகிச்சை முறையை விளக்குகிறேன். அறுவை சிகிச்சை செய்வதற்கு முன்பு கண்களின் கருமணியின் பிறை வடிவத்தோற்றம் அல்லது வியர்வைத் துளியைப் போன்ற அல்லது முத்து போன்ற அடையாளம் ஏதும் இல்லை என்பதை உறுதி செய்து கொள்ள வேண்டும். அல்லது நிலையான ஏற்றத்தாழ்வுள்ள மெலிந்த நடுப்பகுதியில் கோடு அல்லது பல தோற்றங்கள் கொண்டிராதது, துன்பம் மற்றும் சிவப்பு நிறம் போன்ற தோஷங்கள் ஏதும் கருமணியில் காணப்படாததுமான இலக்கணங்கள் உள்ள லிங்கநாசத்தில் அறுவைச் சிகிச்சை செய்யக்கூடாது. 55-56

### 42. லிங்கநாசத்தில் அறுவைச் சிகிச்சை

அறுவைச் சிகிச்சைக்கு முன் நோயாளிக்கு எண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். வியர்க்கச் செய்ய வேண்டும். மிக்க வெப்பமோ, மிக்க குளிரோ இல்லாத சமயத்தில் நோயாளியை நாற்காலியில் உட்கார வைத்து அல்லது படுக்க வைத்து அவரது கைகள், கால்கள், நடு உடல், தலை முதலியவற்றை அசையாமல் இருக்கும்படிக் கட்டி வைத்து நோயாளியை அவரது நாசி மேல் பார்வையைச் செலுத்தும்படிக் கூற வேண்டும். இதனால் கண்களின் கருவிழிப்பகுதி சரியாக நடு மையத்தில் இருக்கும். பிறகு திறமையுள்ள மருத்துவர் கருமணியிலிருந்து இரண்டுபாக அளவு வெள்ளை விழிப்பகுதியில் விட்டு கடைக்கண் பக்கத்தில் அதாவது புருவத்தின் முனைப் பகுதிக்கு அருகில் நன்கு திறந்துள்ள சிரைகள் அற்ற கண்விழிப்பகுதியில் அதிக அளவு கீழ்ப்பகுதியிலோ, அதிக அளவு மேற்பகுதியிலோ அல்லாமல் இயற்கையாக அமைந்துள்ள துளையில் நம்பிக்கையுடன் நடுவிரல், சுட்டுவிரல், கட்டைவிரல் ஆகியவற்றால் யவவக்ரம் எனும் கருவியை அசையாமல் பிடித்துக்கொண்டு குத்த வேண்டும். வலது கையில் இடது கண்ணையும், இடது கையால் வலது கண்ணையும் தன் வலது கையால் குத்த வேண்டும். 57-60

நன்கு குத்திய பிறகு ஒரு வகை ஒலி வரும். குத்திய இடத்திலிருந்து நீர்த்துளி போல ஒரு வகைப் பொருள் வெளிவரும். நன்கு குத்தப்படவில்லை என்றால் இரத்தம் வெளிவரும். ஒலியும் வராது. குத்தியபிறகு திறமையுள்ள மருத்துவர் குத்திய பகுதியை தாய்ப்பால் விட்டு நனைக்க வேண்டும். இந்நிலையில் நிலையாக இருந்தாலும், சென்றாலும் வெளிப்பகுதியை வியர்க்கச் செய்ய வேண்டும். வியர்க்கச் செய்வதற்கு முன் இமைகளை நன்கு திறந்து இமைகளின் மேல் சலாகையை வைத்து வாதத்தைப் போக்கும் ஆமணக்கு முதலியவற்றின் இலையின் மேல் நெய்யைத் தடவி சூடாக்கி அவற்றைக் கொண்டு வியர்க்கச் செய்ய வேண்டும். 61-62

### 43. லேகன முறை

முன் கூறியபடி வியர்க்கச் செய்த பிறகு மிகுந்திருக்கும் தோஷம் நீங்க (கபம் தணிய) சலாகையின் முனையால் கரு விழிப் பகுதியைக் கீற வேண்டும். அதன் பிறகு அறுவை சிகிச்சை செய்யப்பட்ட கண்ணுக்கு அடுத்த பக்கத்தில் உள்ள மூக்குத் துளையை மூடிக்கொண்டு சிந்த செய்வதால் கருவிழிப்பகுதியில் உள்ள கபத்தை வெளியேற்ற வேண்டும். 63

### 44. நன்கு லேகனம் செய்ததன் இலக்கணம்

முகில் மூட்டம் இல்லாத வானத்தில் சூரியன் ஒளிவீசிக் கொண்டிருப்பது போல பார்வை ஒளி வீசிக் கொண்டிருந்தால் எத்தகைய துன்பமும் விளையாமல் இருந்தால் லேகன முறை நன்கு செயல்படுத்தப்பட்டது என்றுணர்க. 64

### 45. மீண்டும் குத்துதல்

முன்பு கூறியபடிக் குத்திவிட்ட போதும் தோஷம், லிங்க நாசத்தால் தோன்றிய விகாரம் நீங்காத போது அல்லது தோஷம் மீண்டும் தோன்றிய போது உடல் மற்றும் கண் பகுதியை நன்கு எண்ணெய் பசை கொள்ளச் செய்து வியர்க்கச் செய்து மீண்டும் குத்துதல் எனும் அறுவை முறையைச் செய்ய வேண்டும். 65

### 46. அறுவைச் சிகிச்சைக்கு பிறகு செய்ய வேண்டியவை

அறுவைச் சிகிச்சைக்கு பிறகு நோயாளி காட்சிகளைக் காண முடிந்தால் மெல்ல மெல்ல சலாகையை எடுத்துவிட வேண்டும். அந்தக் கண்ணில் நெய்யை நிரப்பி பட்டயத்தால் கண்ணைக் கட்டி வைக்க வேண்டும். 66

பட்டயம் கட்டிய பிறகு தூசி, புகை, அதிகம் காற்று முதலியன இல்லாத அறையில் முதுகின் மேல் சார்ந்து படுக்கச் செய்ய வேண்டும். 67

### 47. விலக்கத்தக்கவை

இந்த அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட நோயாளி அச்சமயத்தில் ஏப்பம் விடுதல், இருமுதல், எச்சில் உமிழ்தல், உடலை நடுங்கச் செய்தல் போன்றவற்றைச் செய்யக்கூடாது. அவை ஏற்படாதவாறு சீரான எண்ணெய் உட்கொண்டவருக்குப் பத்தியமான உணவு முறைகளை கையாள வேண்டும். 68

### 48. பிறகு செய்ய வேண்டியவை

மூன்று நாட்களுக்கு ஒரு முறை பட்டயத்தை அவிழ்த்து வாதத்தைப் போக்கும் பொருள்களின் கஷாயத்தால் கண்களைக் கழுவி விட வேண்டும். வாதம் சீற்றம் ஏற்படுமெனும் அச்சத்தைப்

போக்க முன்போல மூன்று நாட்களுக்கு ஒரு முறை கண பகுதியை வியர்க்கச் செய்ய வேண்டும். 69

)வ்வாறு பத்து நாட்கள் வரை நோயாளியை மல்லாந்து படுத்திருத்தல் முதலான நியமங்களை கடைபிடித்துச் செய்த பிறகு கண்பார்வை தெளிவாக இருக்க மை, நசியம், தர்ப்பணம், சிரோவஸ்தி முதலிய செயல்களைச் செய்ய வேண்டும். ]லசான உணவு அளவோடு உண்ணச் செய்ய வேண்டும். 70

## 49. அறுவைச் சிகிச்சை விலக்கு

சிலேத்தும கலை லிங்கநாச நோயிலும் சிரையைக் கீறி இரத்தம் வெளியேற்றத் தகாதவர்கள் என்று முன்பு (சிறுவர் - முதிர்ந்தவர்) கூறியவர்களுக்கு இந்த அறுவைச் சிகிச்சையையும் விலக்க வேண்டும். இயற்கையாக உள்ள துளையைத் தவிர்த்து வேறு பகுதியில் குத்துவதும் கூடாது. 71

## 50. வேறு பகுதியில் குத்துவதால் தோன்றும் துன்பம்

இயற்கையாக உள்ள துளையை விட்டு வேறு பகுதியில் ரஸவாஹகஸிரை மற்றும் தமனியில் குத்தினால் இரத்தம் பெருகி அது கண்ணில் நிரம்பி விடும். இவ்வாறு ஏற்பட்டால் தாய்ப்பால் மற்றும் அதிமதுர விழுது மற்றும் கஷாயம் ஆகியவற்றைக் கொண்டு செய்த நெய்யை அந்தக் கண்ணில் நிரப்ப வேண்டும். 72

கடைக்கண் பகுதியில் குத்தியபிறகு வீக்கம், வலி, கண்ணீர் பெருக்கு, கண் சிவத்தல் முதலிய துன்பங்கள் உண்டாகும். அந்நிலையில் கண்புருவங்களுக்கு இடையில் உள்ள பகுதியில் வியர்க்கச் செய்து சூட்டுடன் கூடிய நெய்யைக் கொண்டு அப்பகுதியை நனைத்துக் கொண்டிருக்க வேண்டும். 73

கருவிழிக்கு அருகில் குத்துவதால் கண்களில் சிவப்பு நிறமும், கருவிழிப்பகுதியில் வீக்கமும் உண்டாகும். இந்நிலையில் பேதியாகச் செய்து இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். 74

அட்டைப் பூச்சியைக்கொண்டு இரத்தத்தை வெளியேற்ற வேண்டும்.

இயற்கையாக உள்ள துளைக்கு மேற்பகுதியில் குத்துவதால் கண்களில் வலியும், நோயும் அதிகமாகும். இந்நிலையில் இளஞ் சூடுள்ள நெய்யால் கண்ணை நனைத்தக் கொண்டிருக்க வேண்டும். 75

இயற்கையாக உள்ள துளைக்கு அருகில் கீழ்ப்பகுதியில் குத்தினால் கண்ணில் வலி, நிர்ப்பெருக்கு, சிவப்புநிறம் முதலிய துன்பங்கள் உண்டாகும். சலாகையை எடுத்ததும் மிகவும் கொழ கொழப்புள்ள திரவப் பெருக்கு உண்டாகும். இந்நிலையில் முன்

கூறியபடி இளஞ்சூடுள்ள நெய்யைக் கொண்டு நனைத்தல், பேதி யாகச் செய்தல் முதலிய முறைகளைக் கையாள வேண்டும். 76

அளவுக்கு மீறி ஆழமாகக் குத்துவதால் கண்சிவத்தல், நீர்ப் பெருக்கு, மரத்துப் போதல், கடும் துன்பம், சிலிர்த்தல் முதலிய துன்பங்கள் தோன்றும். இதற்கு மாறாக எண்ணெய் முறை, வியர்க்கச் செய்தல், அநுவாஸன முறையைக் கையாளுதல் முதலியன செய்யத் தக்கவை. 77

நோய் முற்றாத நிலையில் முத்து போன்ற நீர்த்துளி முழுமை யாக பக்குவம் பெறாத நிலையில் அதை அறுவைச் சிகிச்சையால் கீழ்நோக்கி இழுத்தால் அந்த தோஷம் மீண்டும் மேல் நோக்கிச் சென்று கண்களில் பல வகையான வெண்ணிறம், சிவப்பு நிறம் கொண்டு கொடிய வலி, பார்வை இழத்தல் முதலிய துன்பங் களைத் தோற்றுவிக்கும். இந்நிலையில் அதற்கு மாறாக இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள்களின் விழுது மற்றும் அவற் றின் கஷாயத்தைக் கொண்டு செய்த நெய்யை இளஞ்சூடுள்ள போது கண்களில் விடுதல் மற்றும் அப்பொருள்களாலான நெய் அல்லது எண்ணெயைக் கொண்டு சிரோவஸ்தி செய்தல் ஆகியவற்றைக் கையாள வேண்டும். உண்பதற்கு பலவகை விலங்கு களின், பறவைகளின் புலாலைப் பயன்படுத்த வேண்டும். 78-79

### 51. பக்குவமடைந்த நோயில் அறுவைச் சிகிச்சை கையாளுவதன் சிறப்பு

லிங்கநாசம் எனும் நோய் நன்கு முற்றிய பிறகு தடித்து முழு உருண்டை வடிவம் கொண்டுள்ள போது அதில் சலாகை முனையைச் செலுத்துவதால் அந்நோய் காற்றால் இலேசான மேகம் சிதைவது போல நீங்கும், கீழே விழுந்துவிடும் அல்லது வெளியேறிவிடும். 80

### 52. பக்குவம் பெறாத நிலையில் அறுவை செய்வதால் விளையும் தீங்கு

முத்து போலக் கெட்டிப்படும் நோய் பக்குவம் பெறாத துவக்க நிலையில் இருக்கும்போது அறுவைச் சிகிச்சையைப் பயன்படுத்துவதால் அந்நோய் தலையில் அடிபடுதல், உடற் பயிற்சி செய்தல், கலவியில் ஈடுபடுதல், வாந்தியாதல், நினை விழத்தல் போன்ற நிலைகளால் மீண்டும் தோன்றும். 81

### 53. கெட்ட சலாகையைப் பயன்படுத்துவதால் விளையும் கேடு

கடினத்தன்மை கொண்ட சலாகையைப் பயன்படுத்தினால் வலி, சுறசுறப்புள்ள சலாகையைப் பயன்படுத்தினால் தோஷம்

நான்கு பக்கங்களிலும் பரவுதல், தடித்த முனை கொண்ட சலா கையைப் பயன்படுத்தினால் கண்ணில் அகன்ற விரணம், கூர்மை யான சலாகையைப் பயன்படுத்துவதால் கண்ணில் பலவகை விரணங்கள் ஆகியவை தோன்றும். கோணலான சலாகையால் நீர்ப்பெருக்கு, நடுக்கத்துடன் கூடிய (திடமாக இல்லாத) சலாகை யால் பார்வை கெடுதல் என்பன தோன்றும். ஆகவே இத்தகைய குற்றங்களற்ற சலாகையை கண்ணில் பயன்படுத்துவது நலம் தரும். 82-83

### 54. சிறப்பான சலாகை

எட்டு அங்குல நீளமும், இடையில் நூல் சுற்றப்பட்டு கட்டைவிரலின் நடுப்பகுதியளவு பருமனும் கொண்டு இரு முனை களும் மலர் மொட்டு போன்ற தோற்றமும் கொண்டு இரும்பு அல்லது தங்கத்தால் செய்யப்பட்ட சலாகை சிறப்பானது. 84

### 55. தவறாகச் சலாகையைப் பயன்படுத்துவதன் விளைவு

மருத்துவ நூல் கூறியபடியல்லாது மருத்துவர் தன் மனம் போலக் குத்துவதால் அல்லது கூடாத உணவு உட்கொள்ளுதல், தவறான செயல்களைப் புரிதல் ஆகியவற்றால் கண்களில் சிவப்பு, வீக்கம், கட்டி, எரிச்சலுடன் கூடிய வலி நீர்க்குமிழ் போல மாமிசம் வளர்தல், பார்வை கீழ்நோக்கியிருத்தல், அதி மந்தம் முதலான பல நோய்கள் தோன்றுதல் என்பன தோன்றும். அந்தந்த துன்பத்திற்கு ஏற்றபடி சிகிச்சை செய்ய வேண்டும். 85-86

### 56. கெட்ட சலாகையினால், தவறான முறையால் விளையும் கேடுகளுக்குச் சிகிச்சை

கெட்ட சலாகையைப் பயன்படுத்துவதாலும், சலாகையைச் சரியாகப் பயன்படுத்தாமல் தவறாகக் குத்தியதாலும் தோன்றும் நோய்களுக்கும் தக்க சிகிச்சைகளை கூறுகிறேன். சுவர்ணகைரிகம், நன்னாரி, அருகம்புல், யவதானிய மாவு ஆகியவற்றை நெய் மற்றும் பாலுடன் நன்றாக அரைத்துத் தீயில் பக்குவம் செய்து கண்களில் சுகமாகப் பூசுதல் வேண்டும். இதனால் துன்பமும், சிவப்பு நிறமும் தணியும். 87

அவ்வாறே நெருப்பில் மென்மையாக வறுக்கப்பட்ட எள்ளைக் கொண்டு அதன் அளவுக்கு அத்துடன் வெள்ளைக் கடுகைச் சேர்த்து துரிஞ்சிப்பழச்சாற்றுடன் அரைத்து நெருப்பால் பக்குவம் செய்து சுகம் தோன்றப் பூசுவதால் கண்ணில் வலியும், சிவப்பு நிறமும் நீங்கும். 88

க்ஷீரகாகோலி, நன்னாரி, இலவங்கப்பத்திரி, மஞ்சிட்டி, அதி மதுரம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு ஆட்டுப்பாலுடன்

கல்மேல் வைத்துக் கொண்டு அரைத்து தீயில் பக்குவம் செய்து சுகமான மேற்பூச்சாகப் பயன்படுத்தினால் துன்பம் நீங்கும். 89

அவ்வாறே தேவதாரு அல்லது மரமஞ்சள், பதுமுகம், சுக்கு ஆகியவற்றை ஆட்டுப்பால் விட்டு அரைத்து சூடாக்கி கண்களில் மேல் பூச்சாகப் பயன்படுத்துவதால் வேதனையும், சிவப்பு நிறமும் நீங்கும். 90

பாச்சோத்தி, இந்துப்பு, திராட்சை, அதிமதுரம் ஆகியவற்றின் விழுதை அவற்றின் கஷாயத்துடன் கொதிக்க வைத்து ஆட்டுப் பாலுடன் கண்களில் மேல் விட்டுக் கொண்டிருந்தால் கொடிய வலியும், சிவப்பு நிறமும் நீங்கும். 91

அதிமதுரம், நீலாம்பல், கோஷ்டம், திராட்சை, கொம்பரக்கு, சர்க்கரை, இந்துப்பு ஆகியவற்றின் கஷாயத்தில் அவற்றின் விழுது சேர்த்துக் கொதிக்க வைத்து ஆட்டுப்பாலுடன் கண்களின் மேல் விட்டுக் கொண்டிருந்தால் வலியும், சிவப்பு நிறமும் நீங்கும். 92

தண்ணீர்விட்டாங்கிழங்கு, ஓரிலை, கோரைக்கிழங்கு, நெல்லிக்கனி, பதுமுகம் ஆகியவற்றின் விழுதும் கஷாயமும் ஆட்டுப்பாலுடன் கலந்து ஆட்டு நெய்விட்டுப் பக்குவம் செய்து அதனால் கண்களை நனைத்துக் கொண்டிருந்தால் வலியும், எரிச்சலும் நீங்கும். 93

முதலில் வாதத்தைப் போக்கும் பத்ரதாரு முதலான கூட்டுப் பொருள்களுடைய விழுதுடன் நான்கு மடங்கு ஆட்டுப்பாலில் காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதையும் சேர்த்து காய்ச்சி நெய் தயார் செய்க. இந்நெய்யைக் கண்களின் மேல் பூச மையாக இட நனைத்துக் கொண்டிருக்கப் பயன்படுத்தினால் கண்நோய் வகைகள் அனைத்தும் தணியும். 94

## 57. கண்வலியில் இரத்தம் வெளியேற்றல்

இவ்வாறு கூறிய மருந்து முறைகளால் கண்வலி தணியா விடில் முதலில் அந்நோயாளிக்கு எண்ணெய் முறையைப் பயன்படுத்தி வியர்க்கச் செய்ய வேண்டும். அதன் பிறகு உபநாஸிகா கடைக்கண் அல்லது நெற்றிப் பகுதி ஸிரையைக் கீறி இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். அவ்வாறு செய்தும் வலி தணியாவிடில் அந்த இடங்களில ஸிரையைச் சுட வேண்டும். 95

## 58. கண்களின் துன்பம் நீங்காமை

அறுவைச் சிகிச்சையால் லிங்கநாசம் எனும் நோய்க்கு கூறிய சிகிச்சை நல்ல பலன் தந்தபோது பத்து நாட்கள் வரை பனி

விடை, பத்திய முறை முதலியவையும் முடிந்த பிறகு கண்களைத் தூய்மைப்படுத்தப் பயன்படுத்தத்தக்க மை முறையைக் கூறுகிறேன்.

ஆடுதீண்டாப்பாளை மலர், வாகைமலர், தவம் எனும் மரத்தின் மலர், மல்லிகை மலர், முத்துத்தூள், வைடூரியம் ஆகிய வற்றை சம அளவில் கொண்டு நன்கு தூளாக்கி ஆட்டின் பாலு டன் அரைத்து ஒரு வாரம் தாமிர பாத்திரத்தில் வைத்திருக்க வேண்டும். எட்டாம் நாள் இதை யவதானியம் அளவு போன்ற வத்திகளாகச் செய்து உலர்த்திக் கண்ணாடிக்குப்பியில் வைத்திருக் கவும். இதைப் பன்னீர்விட்டுக் குழைத்துக் கண்களில் மை போல -வும். இதனால் பார்வை மிகவும் தெளிவாக இருக்கும். 96-97

## 59. மற்றொரு முறை

ஸ்ரோதோஞ்சனம், பவழம், கடல்நுரை, மனோசிலை, கறுப்பு அல்லது வெள்ளை மிளகு ஆகிய இவற்றைச் சம அளவில் கொண்டு நன்றாக அரைத்து ஆட்டின் பாலுடன் மீண்டும் அரைத்து வத்திகளாகச் செய்து உலர்த்திக் கண்ணாடிக்குப்பியில் வைத்திருக்கவும். பார்வை நன்கு நிலைபெற இந்த வத்தியைப் பன்னீர் விட்டு குழைத்துக் கண்களில் மையாக இட்டால் பார்வை தெளிவாக இருக்கும். 98-99

இனி கூறப்போகும் கிரியாகல்பம் எனும் அத்தியாயத்தில் விளக்கப்படும் மை முறைகளையும் நன்கு பயன்படுத்த வேண்டும். 100

**ஸுஸ்ருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**திருஷ்டிகதரோக பிரதிஷேதம் எனும்**

**பதினேழாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினெட்டாம் அத்தியாயம்
# *கிரியா கல்பம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி 'கிரியா கல்பம்' எனப்படும் கண் நோய்க்கு உரிய மருந்துகளின் செய் முறையை விளக்குவோம். 1-2

## 1. தன்வந்தரி பகவானின் உபதேசம்

எல்லா சாஸ்திரங்களையும் கரை கண்டவரும், தவநெறியால் மிக்க அறிவாற்றல் பெற்றவருமான காசிராஜ் முனிவரெனப் பாராட்டப்படும் தன்வந்தரி பகவான் விசுவாமித்ர முனிவரின் குமாரராகிய ஸுசுருதர் எனும் தன் சீடருக்கு ஆயுர்வேத சாஸ்திரத்தை உபதேசம் செய்தார். 3

## 2. இந்த அத்தியாயத்தில் விளக்கப்படும் பொருள்கள்

அவ்வாறு உபதேசம் செய்வதில் கண்நோய்களுக்குப் பயன் படுத்தத்தக்க தர்ப்பணம், புடபாகம், ஸேகம், ஆச்யோதனம், அஞ்சனம் எனச் சில முறைகளைக் கூறி அம்முறைகளில் பயன் படுத்தத் தக்க மருந்துகளையும் குறிப்பிட்டுள்ளார். அவற்றைச் செய்யும் முறை முதலான விளக்கங்கள் இங்கு கூறப்படுகின்றன. 4

## 3. தர்ப்பண முறை

முதலில் நோயாளியை வாந்தி எடுக்கச் செய்தல் பேதியாகச் செய்தல் முதலிய முறைகளால் உடலைத் தூய்மைப்படுத்தியப் பிறகு நஸிய முறை முதலியவற்றால் தலையில் உள்ள தோஷங் களை வெளியேற்றுக, பிறகு சிரோவிரேசன முறையை நன்றாகச் செய்க பிறகு நல்ல நாளில் நோயாளி உண்ட உணவு செரிமான மடைந்ததும் முற்பகலிலோ, பிற்பகலிலோ கண்களில் தர்ப்பணம் எனும் சிகிச்சை முறையைப் பயன்படுத்த வேண்டும். 5

அவ்வாறு தூய்மை பெற்ற நோயாளியை மிக்க காற்று, வெயில், தூசி முதலியன புகாத அறையில் மல்லாந்து படுக்கச் செய்த பிறகு, கெட்டியாக நீர்விட்டுப் பிசைந்த உளுந்தின்

---

* கிரியா கல்பம் - செயல் முறை. முன் அத்தியாயங்களில் கண் நோய்களுக்குக் கூறப்பட்ட தர்ப்பண - புடபாக - அஞ்சன மருந்து முறைகளைச் செய்யும் வகைகள் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் 'கிரியாகல்பம்' எனப் பெயர் பெற்றது.

மாவைக் கொண்டு அவருடைய கண்களைச் சுற்றி வட்டமாக வளையம் போலக் கண் குழிப்பகுதியில் எத்தகைய துன்பமும் விளைவிக்காதபடி அமைக்க வேண்டும். பிறகு வெந்நீரில் நெய்த் தெளிவைக் கலந்து கண்ணிமைகளின் உரோமங்கள் மூடும் வரை ஊற்ற வேண்டும். உடல் நலம் பெற்றவர் ஐந்நூறு எண்களை எண்ணக்கூடிய காலம் வரை அவ்வாறு நோயாளி (அந் நெய்யைக் கண்களில் தாங்கிக் கொண்டு) படுத்திருக்க வேண்டும். கபம் மிகுந்த உடல் கொண்ட நோயாளி அறுநூறு எண்ணும் வரையிலும், பித்தம் மிகுந்த நோயாளி எண்ணூறு எண்ணும் வரையிலும் அம்மருந்தைத் தாங்கிக் கொண்டிருக்க வேண்டும். இவ்வாறு செய்வதால் கண்களுக்குத் தர்ப்பண முறை நன்கு செயல்பட்டதாகும். 6-8

நோயின் நிலைக்கு ஏற்ப மருந்தைத் தாங்க வேண்டிய கால அளவை மருத்துவ நூலாசியர்கள் வேறுபடுத்திக் கூறியுள்ளனர். அதன்படி இணைப்பில் தோன்றிய நோய்க்கு முன்னூறு எண்ணும் காலம் (முன்னூறு நொடிகள்) வரையிலும், இமை களைச் சார்ந்த நோய்க்கு ஒரு நூறு எண்ணும் வரையிலும், சுக்லத்தில் தோன்றிய நோய்க்கு ஐந்நூறு எண்ணும் வரையிலும், கருவிழியில் தோன்றிய நோய்க்கு ஏழுநூறு எண்ணும் வரையிலும், கருமணியில் தோன்றிய நோய்க்கு ஆயிரம் எண்ணும் காலம் (நொடிகள்) வரையிலும் நெய்யின் தெளிவைக் கண்களின் மேல் தாங்கிக் கொண்டிருக்க வேண்டும். பிறகு கடைக்கண் வழியாக நெய்யைப் பெருகவிட்டு வெந்நீர் முதலியவற்றால் கண்களைக் கழுவிக் கொண்டு கண்களை மூடிக் கொண்டிருக்க வேண்டும். (இயற்கையாகக் கண்களை மூடித் திறக்கப்பிடிக்கும் நேரம் ஒரு மாத்திரை அல்லது கையை முழங்காலைச் சுற்றி வரச் செய்து நொடிக்குப் பிடிக்கும் கால அளவு ஒரு மாத்திரை எனக் கொள்க.) 9-10

கொதிக்க வைத்த யவதானிய மாவைக் கொண்டு (இளஞ் சூட்டில்) கண்களை ஒற்றியும் மற்றும் கபத்தைப் போக்கும் சிரோவிரேசன முறையில் கூறப்பட்ட புகை பிடிக்கும் முறையைப் பயன்படுத்தியும் முன்கூறிய தர்ப்பண முறையால் கண்களில் தூண்டப்பட்டுள்ள கபத்தை போக்க வேண்டும். 11

### 4. தர்ப்பண முறைக்குக் கால அளவு

தோஷம் குறைந்த அளவு கொண்டவர் வாததோஷத்திற்கு ஒரு நாளும், நடுத்தர தோஷம் அல்லது பித்தத்தால் ஆன தோஷத்திற்கு மூன்று நாட்களும், மிக்க அளவு தோஷம் அல்லது கபதோஷத்திற்கு ஐந்து நாட்களும் இந்த தர்ப்பண முறையைச் செய்ய வேண்டும். இம்முறையால் கண்களுக்குத் திருப்தி உண்டாகும். 12

**5. தர்ப்பண முறை நன்றாகச் செயல்பட்டதன் லக்கணம்**

தர்ப்பண சிகிச்சை நன்றாகச் செய்யப்பட்டபோது நோயாளி சுகமாக நேரத்திற்குத் தூங்கித் தக்க நேரத்தில் கண் விழித்துக் கொள்வார். பார்வை தெளிவாக இருக்கும். கண்களில் வெள்ளை, இரத்தம், கருமை என அந்தந்த இயற்கையான பகுதிகள் சீரான நிறமும் வலிமையும் கொண்டிருக்கும். நிறங்களைச் சரியாகப் பார்த்துத் தெரிந்து கொள்ள முடியும். கண்ணோய் தணிந்து சுகம் உண்டாகும். கண்களை மூடித்திறப்பதில் எத்தகைய துன்பமும் இன்றி இயற்கையாகச் செய்ய முடியும். 13

**6. தர்ப்பண முறை அளவிற்கு மீறிச் செய்ததன் இலக்கணம்**

அளவிற்கு மீறித் தர்ப்பண முறையைப் பயன்படுத்தினால் கண்கள் பளுவாகத் தோன்றுதல், கண்கள் கலங்கி (அழுக்கடைந்தது போல) இருத்தல், கண்களில் எண்ணெய்ப் பசை மிகுதல், கண்ணீர் பெருகுதல், கண்களில் அரிப்பு, கண்ணில் ஏதோ பூசியிருப்பது போல் அறிதல், வாதம் முதலிய தோஷங்கள் அதிக அளவில் சீற்றமுறுதல் என்னும் இலக் கணங்கள் காணப்படும். 14

**7. தர்ப்பண முறை குறைந்த அளவில் செய்ததன் இலக்கணம்**

தர்ப்பண முறை கால அளவில் குறைந்து செய்யப்படுவதால் கண்களில் வறட்சித் தன்மை, அழுக்கடைதல், கண்ணீர் அதிக அளவில் பெருகுதல், உருவங்களைச் சரியாகக் காண இயலாமை, நோய் அதிகமாதல் எனும் இலக்கணங்கள் காணப்படும். 15

**8. அதிக அளவில் அல்லது குறைந்த அளவில் தர்ப்பண முறையை கையாண்டதற்குச் சிகிச்சை**

அதிக அளவில் அல்லது குறைந்த அளவில் தர்ப்பண சிகிச்சை செய்வதால் சீற்றமுற்ற தோஷத்தை அறிந்து அதற்கு ஏற்பச் சிகிச்சை செய்ய வேண்டும். சிகிச்சை முறைகளை நன்கு அறிந்த மருத்துவர் புகைபிடித்தல், நஸியமுறை, மையிடுதல், வறண்ட மற்றும் எண்ணெய்ப்பசை தோற்றுவிக்கும் ஸேகமுறை முதலியவற்றில் தேவையான முறையை அறிந்து செயல்படுத்த வேண்டும். வாதம் சீற்றமுற்றபோது எண்ணெய்ப் பசையைத் தோற்றுவிக்கும் ஸேகம், கபம் மிகுந்த போது வறட்சியைத் தோற்றுவிக்கும் ஸேகம், பித்தம் மிகுந்துள்ள போது குளிர்ச்சி தரும் ஸேகம் எனப் பயன்படுத்த வேண்டும். 16

**9. தர்ப்பண முறைக்கு ஏற்ற கண்கள்**

கண்களுக்கு எதிரில் இருள் சூழ்ந்துள்ளது போலத் தோன்றுவ தால் கண்கள் சுருங்கியிருத்தல், கண்கள் ஒளியைக் காண

முடியாமல் கூசுதல், கண்கள் மிக்க வறண்டிருத்தல், மிக்க கடின மான துன்பம் கொண்டிருத்தல், கண்ணிமைகளின் உரோமங்கள் உதிர்தல், கண்கள் அழுக்கடைந்து கோணல்மாணலாகக் காணப் படுதல், கடும் நோயால் துன்பப்படுதல் என இத்தகைய இலக் கணங்களைக் கொண்ட கண்களுக்குத் தர்ப்பண சிகிச்சை மிக்க நலம் தருவதாகும். நோய் நீங்கும். 17

## 10. தர்ப்பண முறைக்குத் தகாத கண்கள்

வானத்தில் மேக மூட்டம் இருப்பது போலக் காணப்படுதல், மிக்க குளிர்காலம், மிகவும் வெப்பம் கொண்டுள்ள பருவம் ஆகிய வற்றிலும், கவலை, தலைச்சுற்று கொண்டவருக்கும் கண்களில் வீக்கம், சிவப்புநிறம், வலி முதலியன குறையாத போதும் தர்ப் பண சிகிச்சையைப் பயன்படுத்தக் கூடாது. 18

## 11. புடபாக முறையின் விளக்கம்

எந்த நிலையில் தர்ப்பண முறை பயன்படுத்தப்படுகிறதோ அதே நிலையில் புடபாக முறையையும் பயன்படுத்த வேண்டும். இதைத்தவிர எந்த நோய்க்கு நஸியமுறை விலக்கப்பட்டுள்ளதோ, எந்த நோயாளிகள் தர்ப்பண முறைக்கும் எண்ணெய் முறைக்கும் தகாதவர்கள் எனக் கூறப்பட்டுள்ளனரோ அவர்கள் புடபாக முறைக்கும் தகாதவர்களாவார்கள். அதாவது தர்ப்பணம், நஸியம், எண்ணெய் முறை ஆகியவற்றிற்குத் தகுந்தவர்களே புடபாக முறைக்கும் தகுந்தவர்களாவார்கள். எனவே தோஷங்கள் தணிந்த பிறகு தகுந்தவர்களெனக் கூறப்பட்ட கண் நோயாளிகளுக்குப் புடபாக முறையைப் பயன்படுத்த வேண்டும். 19-20

## 12. புடபாக வேற்றுமைகள்

[1]ஸிநேஹனம், [2]லேகநீயம், [3]ரோபணீயம் என புடபாக முறை மூன்று வகைப்படும். மிக்க வறட்சி கொண்ட கண்களுடையவருக்கு ஸிநேஹனமுறை, எண்ணெய்ப்பசை கொண்ட கண்களுடையவருக்கு ஸிநேஹனமுறை, எண்ணெய்ப் பசை கொண்ட நோயாளியின் கண்களுக்கு லேகனமுறை, கருமணியில் வலிமையைத் தோற்றுவிக்க அல்லது பித்தரத்த வாதங்கள் கொண்ட விரணமுள்ள கண்களுக்கு ரோபண முறை ஆகியவற்றைப் பயன்படுத்த வேண்டும். 21-22

---

1. ஸிநேஹனம் - எண்ணெய்ப் பசையைத் தோற்றுவித்தல்
2. லேகநீயம் - கீறி தோஷங்களை அகற்றுதல்.
3. ரோபணீயம் - ஆற்றுதல்.

**13. ஸிநேஹன புடபாகம்**

எண்ணெய், புலால், வசை, மஜ்ஜை, கொழுப்பு மற்றும் இனிப்புச் சுவையுள்ள மருந்துப் பொருள்கள் கலந்து செய்யப்பட்ட ஸிநேஹன புடபாகம் எண்ணெய் முறைக்கு ஏற்றது. அம்மருந்து இருநூறு எண்ணும் வரம்பு வரை நோயாளி தாங்க வேண்டும். 23

**14. லேகன புடபாகம்**

காட்டு விலங்குகளின் கல்லீரலின் புலால், சுக்கு, மிளகு, திப்பிலி முதலான லேகனப் பொருள்களைச் சேர்த்து அவ்வாறே காந்தம் (எனும் இரும்பின்) பற்பம், தாமிரபற்பம், சங்கபற்பம், பவழபற்பம், இந்துப்பு, கடல்நுரை, காஸ்ஸ பற்பம், சுரோ தோஞ்சனம், தயிர், தயிர்த் தெளிவு ஆகியவற்றையும் சேர்த்து லேகன புடபாகம் செய்ய வேண்டும். இம்மருந்தைத் தாங்க உயர்ந்த அளவு காலம் நூறு எண்ணும் வரையிலாகும். 24-25

**15. ரோபண புடபாகம்**

பால், காட்டு விலங்குகளின் புலால், தேன், நெய், கசப்புச் சுவை கொண்ட பொருள்கள் ஆகியவற்றைச் சேர்த்துச் செய்த ரோபண முறையை லேகன முறைக்குச் சொன்ன காலத்தைவிட மூன்று மடங்கு அதாவது முன்னூறு எண்ணும் நேரம் வரை நோயாளி தாங்க வேண்டும். 26

**16. புடபாகத்திற்கு உரிய கால அளவு**

ரோபண புடபாகத்தைத் தவிர்த்து மற்ற இரண்டிலும் தர்ப்பண முறைக்குக் கூறப்பட்ட புகை பிடிக்கும் முறையைப் பின்பற்ற வேண்டும். அவ்வாறே இவ்விரண்டிலும் எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்யும் முறை ஆகிய இரண்டையும் செய்ய வேண்டும். ரோபணத்தில் எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை இரண்டையும் பின்பற்ற வேண்டும். 27

சிலேத்துமத்தால் தோன்றிய கண்ணோயில் ஒரு நாள், பித்தத்தால் தோன்றிய நோயில் இரண்டு நாட்கள், வாதத்தால் தோன்றிய நோயில் மூன்று நாட்கள் இம்முறையைப் பயன் படுத்த வேண்டும். அல்லது லேகன புடபாகம் ஒரு நாள், ஸிநேஹன புடபாகம் இரண்டு நாட்கள், ரோபண புடபாகம் மூன்று நாட்கள் பயன்படுத்த வேண்டும். புடபாகத்தைப் பயன்படுத்தும் போது பத்திய முறைகளைப் பின்பற்ற வேண்டிய கால அளவு சிகிச்சை செய்யும் நாட்களின் அளவிற்கு இரண்டு மடங்காகும். 28

கண்களில் தர்ப்பண முறையைப் பின்பற்றிய பிறகும், புடபாக முறையைப் பின்பற்றிய பிறகும் வெளிச்சம், காற்று,

மின்னல், சூரியனின் ஒளி, புயல்காற்று, வானம், கண்ணாடி மற்றும் ஒளி மிகுந்த பொருள்கள் ஆகியவற்றைப் பார்க்கக் கூடாது. 29

தர்ப்பணம் அல்லது புடபாகம் ஆகியவற்றைத் தவறாகப் பயன்படுத்துவதால் தோன்றும் நோய்க்கு மை, ஆச்யோதனம், வியர்க்கச் செய்தல் ஆகிய முறைகளைத் தகுந்தபடி செய்து நீக்க வேண்டும். 30

### 17. நன்கு புடபாகம் செய்த இலக்கணம்

புடபாகம் நன்கு செயல்படுத்தியதால் கண்களின் நிறம், தெளிவு நன்றாக இருக்கும். வெயிலைக் கண் பொருத்துக் கொள்ளும். கண் இலேசாக இருக்கும். சுகமாக நேரத்திற்கு உறக்கம் தோன்றும். சரியான நேரத்தில் விழிப்பு உண்டாகும். இந்த நல்ல இலக்கணங்கள் புடபாக விதியில் தோன்றுபவை. 31

### 18. அளவுக்கு மீறிய புடபாக இலக்கணம்

அளவுக்கு மீறி புடபாக முறையைப் பயன்படுத்தினால் கண்களில் வலி, வீக்கம், பிடகை எனும் சிறு கட்டிகள் தோன்றல், கண்களின் முன் இருள் மண்டியிருத்தல் என்பன காணப்படும். புடபாகம் அளவில் குறைந்து செய்யப்பட்ட போது கண்களில் பாகம் (நோய் முற்றுதல்), கண்ணீர்ப் பெருக்கு, கூச்சம், மேலும் மற்ற துன்பங்கள் ஆகியவை தோன்றும். 32

### 19. புடபாக முறை

இனி புடபாக முறை விளக்கப்படுகிறது. நன்றாக அரைக்கப்பட்ட புலால் இரு உருண்டைகள் ஒவ்வொன்றும் ஒரு பலம் எடை இருக்கக் கொள்க. அத்துடன் முன்பு கூறப்பட்ட பொருள்கள் ஒரு பலம் கொள்க. திரவப்பொருள் நான்கு பலம் கொள்க. அல்லது மருத்துவ நூல் முறைப்படி இரண்டு மடங்காக அதாவது எட்டு பலம் கொள்க. ஸ்நேஹன புடபாகமானால் காகோலி முதலிய இனிப்புச் சுவையுள்ள கூட்டுப்பொருள்களும், கஷாயம் மற்றும் பால் சேர்ந்த லேகன புடபாகமானால் தேன், தயிர்த் தெளிவு, திரிபலைக் கஷாயம் ஆகியவையும், ரோபண புடபாக மானால் கசப்புச் சுவையுள்ள பொருள்களின் கஷாயமும் மேற்கூறிய அளவு கொண்டு அனைத்தையும் கல் மேல் வைத்து நன்றாக அரைத்து உருண்டையாகச் செய்து கொள்க. பிறகு அந்த உருண்டையை குமிழன், அல்லி, ஆமணக்கு இலை, தாமரை இலை அல்லது வாழை இலை ஆகிய ஏதேனும் ஒன்றில் சுற்றிக் களிமண்ணை நன்றாகப் பூசி உலர்த்தி கருங்காலிக் கட்டையாலான, கரியாலான புகையற்ற நெருப்புக்குள் அல்லது தேற்றா, எரிமா, ஆமணக்கு, பாதிரி, ஆடாதொடை, இலந்தை ஆகிய

வற்றின் விறகுகளால் அல்லது ஆல், அரசு முதலான விரகுகளாலான கரியால் புகை இல்லாத நெருப்பில் அல்லது விரட்டியின் புகையில்லாத நெருப்பில் வைத்துப் பக்குவம் செய்க. பிறகு நெருப்பிலிருந்து எடுத்து மண்ணை நீக்கி அதற்குள் உள்ள மருந்து உருண்டையை இரு கைகளால் பிடித்துக் கொண்டு அழுத்தி வரும் சாற்றைத் தர்ப்பண முறைப்படிக் கண்களில் பயன்படுத்துக. அதாவது உளுந்தின் மாவால் கண்களைச் சுற்றிலும் வளையம் போல அமைத்துக் கண்ணிமை உரோமங்கள் மூழ்கி இருக்கும் அளவிற்கு மருந்தின் சாற்றைக் கண்களில் நிரப்புக. 33-37

## 20. புடபாக மருந்தை நிரப்பும் முறை

மல்லாந்து படுத்திருக்கும் நோயாளியின் கண்களில் மூக்கின் பக்கத்திலுள்ள இமைகளின் இணைப்பு பகுதி வழியாகச் சாற்றைக் கண்களில் நிரப்ப வேண்டும். இரத்தம் அல்லது பித்தத்தால் தோன்றிய கண்ணோய்களில் தர்ப்பண முறைக்கும், புடபாக முறைக்கும் பயன்படுத்தும் சாறு நன்கு குளிர்ந்திருக்க வேண்டும். வாதம் கபம் ஆகியவற்றாலான நோய்களுக்குத் தர்ப்பண புடபாக முறைகளில் பயன்படுத்தப்படும் சாறு இளஞ் சூட்டில் இருக்க வேண்டும். 38

## 21. மிகச்சூடான தீக்ஷ்ண ரஸத்தால் தோன்றும் துன்பம்

தர்ப்பண புடபாகங்களில் பயன்படுத்தப்படும் சாறு மிக்க சூடாகவோ, தீக்ஷ்ணமாகவோ இருந்தால் அதை நிரப்புவதால் கண்களில் இடைவிடாத எரிச்சல், பக்குவம் பெறுதல் ஏற்படும். அவ்வாறே மிகக் குளிர்ந்த அல்லது குறைந்த அளவு நெய் கொண்ட மருந்தை நிரப்புவதால் கண்ணீர்பெருக்கை தடுத்துக் கண்களில் துன்பம், உராய்வு தோன்றும். 39

## 22. அளவுக்கு மீறிப் பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம்

தர்ப்பண முறை, புடபாக முறை ஆகியவற்றை அளவுக்கு மீறிப் பயன்படுத்தினால் கண்களில் சிவப்பு, கண் சுருங்குதல், துடித்தல் என்பன தோன்றும். குறைந்த அளவு பயன்படுத்தினால் நோய் மேலும் சீற்றம் பெறும். 40

## 23. தகுந்த அளவு பயன்படுத்தப்பட்டதன் இலக்கணம்

முறையாகத் தகுந்த அளவு பயன்படுத்தப்பட்ட தர்ப்பண - புடபாக முறைகளால் கண்களில் எரிச்சல், வீக்கம், வலி, உராய்வு, கண்ணீர் பெருக்கு ஆகியவை தணியும். கண்களில் அரிப்பு, சதசதப்பு, பீளை, கண்களில் தோன்றும் சிவப்புக் கோடுகள் ஆகியவையும் நீங்கும். 41

அதனால் தர்ப்பணம் மற்றும் புடபாகம் எனும் முறைகளை தீக்ஷ்ணம், வெப்பம் முதலான குற்றங்கள் இல்லாதபடி சுகம் தரும் வகையில் பயன்படுத்த வேண்டும். தர்ப்பண - புடபாக முறைகளைத் தவறாகப் பயன்படுத்துவதால் துன்பம் தோன்றி னால் வாதம் முதலிய சீற்றமுற்ற தோஷத்தை அறிந்து அதற்குத் தக்க நஸியம் புகை, மை முதலியவற்றால் துன்பத்தைத் தணிக்க வேண்டும். 42

## 24. முன்பின் செய்யத்தக்கவை

தர்ப்பண - புடபாக முறைகளைச் செய்வதற்கு முன்பு செய்தபின்பு வெந்நீரில் ஆடையை நனைத்து அதைக் கொண்டு கண்களில் ஒற்றடம் கொடுக்க வேண்டும். இம்முறைகளைப் பயன்படுத்திய பிறகு கபம் மிகுந்திருக்குமானால் புகை முறை யால் அதைப் போக்க வேண்டும். 43

## 25. ஆச்யோதன - ஸேக முறைகள்

வாதம் முதலிய தோஷங்களைப் போக்கும் மருந்து பொருள் களின் கஷாயம் அல்லது சுரசத்தைக் கண்களில் சொட்டுச் சொட்டாக விடும் ஆச்யோதன முறையால் நோய் வலிமை பெறாமல் இருந்தால் நீங்கும். மேற்கூறியபடி தோஷங்களுக்கு ஏற்ற மருந்தை கண்களில் ஊற்றிக் கொண்டிருக்கும் ஸேகம் எனும் முறையால் வலிமை கொண்ட நோயும் தணியும். 44

## 26. ஆச்யோதன - ஸேகங்களின் பயன்

ஆச்யோதனமும், ஸேகமும் வாதம் முதலான தோஷங்களால் தோன்றிய கண் நோயில் புடபாகத்தைப் போல எண்ணெய் முறை, லேகன முறை, ரோபண முறை என மூன்று வகைகளில் பயன்படுத்தப்படும். 45

## 27. ஆச்யோதனத்தின் அளவு

லேகனத்திற்காகப் பயன்படுத்தப்படும் ஆச்யோதனத்தில் மருந்தின் அளவு ஏழு அல்லது எட்டுத் துளிகள், எண்ணெய் முறையில் பயன்படுத்தப்படும் ஆச்யோதன மருந்தின் அளவு பத்து துளிகள், ரோபண முறையில் பயன்படுத்தப்படும் ஆச்யோ தன முறை அளவு பன்னிரண்டு துளிகள் என்று அறிக. 46

## 28. பரிஷேகத்தைத் தாங்கும் காலம்

ஸேகம் அதாவது கண்களை மருந்தால் நனைத்துக் கொண்டி ருக்கும் கால அளவு புடபாகத்திற்குக் கூறப்பட்ட அளவின்

இரண்டு மடங்காகும். அல்லது மெல்ல மெல்ல நோய் நீங்குதல், கண்கள் இயற்கை நிறம் பெறுதல், இமைகளை மூடித்திறப்பதிலும், பார்ப்பதிலும் எத்தகைய துன்பமும் விளையாமல் வீக்கம், வலி முதலியன இல்லாமல் போகும்வரை தோஷத்திற்கு ஏற்பப் பரிஷேக முறையைப் பின்பற்ற வேண்டும். 47

### 28. (அ) ஆச்யோதன பரிஷேக முறைகளுக்குக் கால அளவு

ஸேகத்தைத் தாங்க வேண்டிய அளவு இரட்டிப்புக்காலம் ஆகையால் லேகன ஸேகத்தில் 200 நொடிகளும், ஸ்நேஹன ஸேகத்தில் 400 நொடிகளும், ரோபண ஸேகத்தில் 600 நொடிகளும் மருந்தைத் தாங்கிக் கொண்டிருக்க வேண்டிய காலம் என்று உணர்க.

### 29. ஆச்யோதன பரிஷேக முறைகளுக்கு உரிய காலம்

இவ்விரண்டு முறைகளையும் பயன்படுத்துவதற்குத் தக்க காலம் முற்பகல், நண்பகல், அல்லது மாலை நேரமாகும். அதாவது கபத்தால் தோன்றிய கண்ணோய்க்கு லேகன ஆச்யோதனம் மற்றும் ஸேகம் முற்பகலிலும், வாதத்தால் தோன்றும் கண்ணோயில் ஸ்நேஹன ஆச்யோதன ஸேக முறைகள் பிற்பகலிலும் செய்ய வேண்டும். இரத்தத்தால் அல்லது பித்தத்தால் தோன்றும் கண்ணோய்களில் ரோபண முறைக்கான ஆச்யோதனம் மற்றும் ஸேகம் நண்பகலில் செய்ய வேண்டும். அல்லது எந்த நேரத்தில் நோய் அல்லது துன்பம் உண்டாகிறதோ அந்த நேரம் ஸ்நேஹனம் மற்றும் ஸேகம் செய்யத்தக்க நேரமாகும். இதைத் தவிர ஸ்நேஹனம் ஸேகம் முறைகளைச் செய்தலில் நன்கு செயல்பட்டது, குறைவாகச் செயல்பட்டது, செயல்படாமை, தவறாகப் பயன்படுத்தப்பட்டது போன்றவற்றின் இலக்கணங்களைத் தர்ப்பண முறைக்குக் கூறியபடியே அறிந்து கொள்க. 48

### 30. சிரோவஸ்தியின் பயன்

சிரோவஸ்தி, தலைக்குள் தோன்றிய அழற்சி முதலிய நோய்களைத் தணித்துத் தலையில் எண்ணெயைத் தடவுவதால் தோன்றும் தலைமுடியின் மென்மை, நீட்சி, மினுமினுப்பு, கருமை ஆகிய நன்மைகளைத் தோற்றுவிக்கும். 49

### 31. சிரோவஸ்தி முறையும், தாங்க வேண்டிய காலமும்

முதலில் பேதியாகச் செய்வதால் உடலின் கீழ்ப்பகுதியையும், வாந்தி எடுக்கச் செய்வதால் மேல்பகுதியையும், நஸ்ய முறையால் மூளைப் பகுதியையும் தூய்மைப்படுத்தி எண்ணெய்

முதலியவற்றால் எண்ணெய்ப்பசையைத் தோற்றுவித்து நன்கு வியர்க்கச் செய்து மாலை நேரத்தில் நோய்க்கு ஏற்றபடி உணவு உட்கொள்ளச் செய்து, முழங்கால் உயரம் உள்ள ஆஸனத்தில் நேராக நோயாளியை உட்காரச் செய்து பிறகு அவருடைய தலையில் பசு அல்லது எருமையின் தோலால் செய்த வஸ்திக்கு உரிய வளையம் போன்ற கோசத்தைக் கட்ட வேண்டும். தோஷத்திற்குத் தக்க மருந்துப் பொருள்கள் சேர்த்துப் பக்குவம் செய்த எண்ணெயை அந்தக் கோசத்திற்குள் நிரப்பி நீருடன் பிசைந்த உளுத்தமாவைக் கோசத்தின் அடிவிளிம்பைச் சுற்றிலும் எண்ணெய் கசியாமல் பூசி விட வேண்டும். தர்ப்பண முறைக்குக் கூறப்பட்டுள்ள நேரத்திற்குப் பத்து மடங்கு நேரம் இந்தச் சிரோ வஸ்தியை நோயாளி தாங்கிக் கொள்ள வேண்டும். அதாவது கபத்தால் தோன்றிய நோய்க்கு 6000 நொடிகளும், பித்த விகாரத்திற்கு 8000 நொடிகளும், வாத விகாரத்திற்கு 10,000 நொடிகளும் சிரோ வஸ்தியைத் தாங்க வேண்டிய நேரங்களாகும். 50-51

### 32. அஞ்சன முறை விளக்கம்

பக்குவம் பெறாத நிலையைக் கடந்து நோய்கள் தத்தம் இலக்கணங்களை நன்கு வெளிப்படுத்திய போது பேதியாகச் செய்தல், வாந்தி எடுக்கச் செய்தல் எனும் முறைகளால் உடலின் கீழ் மேல் பகுதிகளைத் தூய்மைப்படுத்திய பிறகு கண்களில் மட்டும் விகாரம் தோன்றினால் கண்களுக்கு மையிடும் முறையைப் பயன்படுத்துக. கண்ணுக்கு மையிடுதலில் லேகன, ரோபண, பிரஸாதனங்கள் என மூன்று வகைகள் உண்டு. 52

இந்த மூன்று வகை மை மருந்துகளில் இனிப்புச் சுவை லேகன முறைக்குள் பொருந்தாது. ஆகையால் அதை நீக்கி மற்ற ஐந்து வகைச் சுவைகள் கொண்ட பொருள்களால் (முறையே வாத-பித்த-கப இரத்த-ஸந்நிபாதங்களை) தோஷங்களுக்கு ஏற்ற வாறு தனித்தனியாக லேகன அர்சன முறையை மருத்துவர் தாமதமின்றிப் பயன்படுத்த வேண்டும். 53

### 33. லேகன அஞ்சனத்தின பயன்

லேகன மை முறை தன் வலிமையால் கண், கண்ணிமை இவ்விரண்டின் ஸிரைகள், கண்குறி, கண்ணீர் சுரோதஸ்கள், சிருங்காடகம் எனும் பெயர் கொண்ட உயிர்நிலை ஆகிய வற்றைச் சார்ந்துள்ள நோய்களைத் தோற்றுவிக்கும். தோஷங்களை வாய், மூக்கு, கண் ஆகிய வழிகளால் வெளிப்படுத்தும். 54

### 34. ரோபண மை முறையின் பயன்

துவர்ப்பு கசப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களாலான ரோபண மை சிறிது எண்ணெய்ப்பசை கொண்டிருக்க வேண்டும். இந்த மை எண்ணெய்ப்பசையும், குளுமையும் கொண்டிருப்பதால் கண்விழியின் நிறத்தையும், வலிமையையும் வளர்க்கும். 55

### 35. பிரஸாதன மையின் பயன்

இனிப்புச் சுவையுள்ள பொருள்களைச் சிறப்பாகக் கொண்ட பிரஸாதன மை எண்ணெய்ப்பசை கொண்டிருப்பதால் கண் விழியின் வறட்சித் தன்மையைப் போக்கி தோஷங்களை நீக்கி தெளிவை உண்டாக்கும். திறமையுள்ள மருத்துவர் தோஷங்களை அறிந்து நோய்க்கு ஏற்ற மை மருந்துகளை முற்பகல், மாலை, இரவு நேரங்களில் பயன்படுத்தலாம். 56-57

(கப நோய்க்குக் காலையில் லேகனமை, வாதநோய்க்கு மாலையில் ரோபணமை, பித்த நோய்க்கு இரவில் பிரஸாதன மை எனப் பயன்படுத்த வேண்டும்.)

### 36. அஞ்சன மை மருந்துகளின் தோற்றம்

குளிகை, ரஸகிரியை, தூள் என மை மருந்து மூன்று வகைப்படும். இவற்றில் முறையே முன்னிலையில் இருப்பவை வலிமை மிக்கவை. குளிகை மிக்க வலிமையுள்ளது. ரஸகிரியை நடுத்தர வலிமை கொண்டது. தூள் குறைந்த அளவு வலிமை கொண்டது என அறிக. ஆகையால் கடுமையான நோய்க்குக் குளிகையையும், நடுத்தர வலிமை கொண்ட நோய்க்கு ரஸகிரியையும், குறைந்த அளவு வலிமையுள்ள நோய்க்குத் தூளான அஞ்சனமும் பயன்படுத்தத்தகும். 58

### 37. அஞ்சன வத்தியின் அளவு

லேகன அஞ்சனத்திற்கு உரிய வத்தி அரேணுகம் (உருண்டைப்பட்டாணி) அளவிலும், பிரஸாதன அஞ்சனத்திற்கு உரிய வத்தி ஒன்றரைப் பட்டாணி அளவிலும் இருக்க வேண்டும். ரோபண அஞ்சன வத்தி இரண்டு பட்டாணிகள் அளவிலும் இருக்க வேண்டும். 59

### 38. ரஸாஞ்சன அளவு

லேகனத்திற்கு உரிய ரஸாஞ்சன வத்தி லேகன வத்தி அளவிலும், ரோபணத்திற்கு உரிய ரஸாஞ்சன வத்தி ரோபண வத்தி அளவிலும், பிரஸாதனத்திற்குரிய ரஸாஞ்சன வ

பிரஸாதன வத்தி அளவிலும் இருக்க வேண்டும் அவ்வாறே தூளான அஞ்சன வத்தியின் அளவும் முறையே லேகனத்திற்கு இரண்டு, ரோபணத்திற்கு மூன்று, பிரஸாதனத் திற்கு நான்கு சலாகைகளின் அளவாகும் எனக் கொள்க. 60

## 39. கண் மை வைக்கத்தக்க பாத்திரமும், சலாகையும்

கண்களுக்குப் பயன்படுத்தத் தக்க மையை அதன் குணத்திற்கு ஏற்ற பாத்திரத்தில் வைக்க வேண்டும். இனிப்புச்சுவை கொண்ட அஞ்சனத்தைத் தங்கப் பாத்திரத்திலும், புளிப்புச் சுவைகொண்ட அஞ்சனத்தை வெள்ளிப் பாத்திரத்திலும், உப்புச்சுவை கொண்ட அஞ்சனத்தை ஆட்டின் கொம்பாலான பாத்திரத்திலும், துவர்ப்புச் சுவை கொண்ட மையைத் தாமிரப் பாத்திரத்திலும், கார்புச்சுவை கொண்ட மையை வைடூரியத்தாலான பாத்திரத்திலும், கசப்புச் சுவை கொண்ட மையைத் வெண்கலப் பாத்திரத்திலும் வைக்க வேண்டும். சலாகைகளையும் இவ்வாறே தங்கம் வெள்ளி முதலான உலோகங்களால் செய்ய வேண்டும். 61

## 40. சலாகையின் தோற்றம்

சலாகை (உலோகக் கம்பி) இரு முனைகளும் மல்லிகை மொட்டு போன்ற தோற்றம் கொண்டு பட்டாணி அளவு தடிமன் கொண்டு எட்டு அங்குலம் நீளமுள்ளதாக இருக்க வேண்டும். இடையில் மெலிந்து நன்கு பிடித்துக் கொள்ளத் தக்கபடி அமைந்திருக்க வேண்டும். சலாகை தாமிரத்தாலும் வைடூரியம் முதலிய கற்களாலும் யானைத் தந்தத்தாலும், தங்கம் முதலிய உலோகங்களாலும் செய்யப்பட வேண்டும். 62-63

## 41. மை மருந்தைப் பயன்படுத்தும் முறை

இடது கையால் நோயாளியின் கண்ணிமைகளைத் திறந்து பிடித்துக் கொண்டு வலது கையில் அஞ்சனம் கொண்ட சலாகை யைப் பிடித்துக் கொண்டு முதலில் மூக்குப் பக்கத்துக் கண் முனையிலிருந்து கடைக்கண் பகுதி வரை மையைத் தடவ வேண் டும். மையிடும் போது சலாகையைப் புரட்டி நன்கு மைபடும்படிச் செய்ய வேண்டும். கண்ணிமைகளில் மட்டும் தடவ வேண்டிய மையைக் கை விரலாலேயே தடவ வேண்டும். 64-65

மையிடும் போது மூக்குப் பக்க முனை, கடைக்கண் எனக் கண்களில் இரு முனைகளிலும் மையை அதிக அளவில் தடவக் கூடாது. தடவும்போது கண்களுக்குத் துன்பம் விளையாதவாறு கவனமாகத் தடவவேண்டும். கண்களிலிருந்து கண்ணீர், அழுக்கு தோஷங்கள் நன்கு வெளிவந்துவிடும் வரை கண்ணைக் கழுவக்

கூடாது. ஏனெனில் தோஷங்கள் முழு அளவு வெளிவருவதற்கு முன் கண்களைக் கழுவினால் தோஷங்கள் உள்ளே அடங்கிக் கண் பார்வையைக் கெடுக்கும். அல்லது மீண்டும் சீற்றமடைந்து நோயைத் தோற்றுவிக்கும். 66

### 42. பிரத்யஞ்சனம்

தோஷம் நீங்கிய பிறகு கண்ணீர்பெருக்கு நின்ற பிறகு கண் பார்வை நன்றாக இருக்கும் போது கண்ணை நீரால் நன்றாகக் கழுவி வாதம் முதலிய தோஷங்களுக்கு ஏற்பப் பிரத்யஞ்சனம் என்பதைப் பயன்படுத்த வேண்டும். 67

### 43. மையைத் தவிர்த்தல்

சோர்வு, மேல்நோக்கிச் செல்லும் வாதம், அழுகை, மது மயக்கம், சினம், அச்சம், காய்ச்சல் முதலியவை இருக்கும் போது மலம் சிறுநீர் ஆகியவற்றின் வேகத்தைத் தடுத்தபோது தலையில் நோய் கொண்டிருக்கும் போது மை மருந்தைப் பயன்படுத்தக் கூடாது. இந்நிலையில் இருக்கும் நோயாளிகளுக்குக் கண் மை மருந்தைப் பயன்படுத்தினால் கண்கள் சிவத்தல், வலி, கண்களின் முன் இருள் சூழ்ந்திருப்பது போல் இருத்தல், கண்ணீர்பெருக்கு, கண்வலி, கண்களில் வீக்கம் முதலியன உண்டாகும். 68-69

### 44. தவறான நிலையில் மையிடுவதால் விளையும் தீமைகள்

உறக்கம் வராத போது அல்லது உறங்கி விழித்ததும் மை இடுவதால் கண்ணிமைகளை முடித் திறக்க இயலாமல் போகும். மிக்க காற்றுள்ள இடத்திலிருந்து கொண்டு மையிடுவதால் கண் களின் பார்க்கும் வலிமை குறையும். தூசி புகை முதலியவற்றால் துன்புற்ற கண்களில் மை இடுவதால் கண்கள் சிவத்தல் கண்ணீர் பெருக்கு, அதிமந்தம் எனும் கண்ணோய் ஆகியவை தோன்றும். நஸிய மருந்தைப் பயன்படுத்தியதும் மை மருந்தைப் பயன் படுத்துவதால் கண்களில் வீக்கமும், வலியும் தோன்றும். தலை யில் துன்பம் உள்ள போது மைமருந்து இடுவதால் தலைநோய் உண்டாகும். தலையை நனைத்துக்கொண்டு குளித்ததும், அல்லது மிக்க குளிர் உள்ள நிலையிலும் மை இடுவதால் அவ்வாறே ஆதவன் உதிக்குமுன் மை இடுவதால் தோஷங்கள் வெளிப் படாமல் கண்களுக்குள்ளேயே நிலையாக அடங்கி துன்பங் களைத் தோற்றுவிக்கும். அதனால் மையிடுவதால் எத்தகைய நன்மையும் விளையாது. தோஷங்களையே மிகைப்படுத்தும். அசீ ரணம் உள்ளபோது மை இடுவதால் அந்நிலையில் ஸ்ரோதஸ் களின் வழி தடுக்கப்பட்டிருப்பதால் மை மருந்து பயனற்றுப்

போவதுடன் தோஷங்களை வளர்க்கும். மலம் சிறுநீர் முதலிய வற்றின் வேகத்தைத் தடுத்துக் கொண்ட போது மை இடுவதால் கண்சிவப்பு, வீக்கம் போன்ற பல துன்பங்களைத் தோற்றுவிக்கும். ஆகையால் இத்தகைய துன்பங்கள் விளையாமல் கவனத்துடன் தக்க நேரத்தில் மை மருந்தைப் பயன்படுத்த வேண்டும். 70-73

### 45. மையால் தோன்றும் துன்பங்களுக்குச் சிகிச்சை

லேகன முறை மைமருந்துக்குத்தான் சிறப்பாகக் கூடாத நேரங்கள் முன் கூறப்பட்டன. இவ்வாறு கூடாத சமயத்தில் மை மருந்திடுவதால் அல்லது தகுந்த சமயத்தில் மை மருந்திந்திட் டாலும் (வேறு காரணங்களால்) துன்பம் தோன்றினால் தோஷத்திற்கு ஏற்றபடி ஸேகம், ஆச்யோதனம், லேபனம், புகை பிடித்தல் கபளதாரணம் போன்ற முறைகளாலும் நஸிய முறை யாலும் தீர்க்கவேண்டும். 74

### 46. லேகன மைமுறை நன்கு செயல்பட்டதன் இலக்கணம்

லேகன மைமுறை நன்றாகப் பயன்படுத்தப்பட்டபோது கண்கள் தெளிவாக இருத்தல், லேசாக இருத்தல், நீர்ப்பெருக்க மின்மை, பார்க்கும் செயல் முதலியவற்றில் வலிமை, கண்கள் மிகவும் தூய்மைப் பெற்றிருத்தல், எத்தகைய துன்பமும் இன்மை என்னும் இலக்கணங்கள் காணப்படும். 75

### 47. லேகனமுறை அளவுக்கு மீறிச் செய்வதால் தீங்கு -

லேகன மை முறையை அளவுக்கு மீறிப் பயன்படுத்தினால் கண்கள் கோணுதல், கடினத் தன்மை பெறல், பழுப்பு நிறம் கொள்ளல், கண்களில் சோர்வு, மிக்க வறண்டிருத்தல், நீர்ப்பெருக்கு மிகுதல் எனும் துன்பங்கள் தோன்றும். 76

அளவுக்கு மீறி லேகன முறையைப் பயன்படுத்துவதால் தோன்றும் துன்பங்களுக்கு தர்ப்பண முறை, வாதத்தைப் போக்கும் சிகிச்சை முறைகள் ஆகியவற்றைப் பின்பற்ற வேண்டும். 77

### 48. லேகன முறையைக் குறைந்த அளவில் பயன்படுத்துவதால் நேரும் துன்பங்களுக்கு சிகிச்சை

லேகன முறையைக் குறைந்த அளவில் பயன்படுத்துவதால் நோய் சீற்றமுறும். அந்நிலையில் புகைபிடித்தல், நஸியமுறை, மை மருந்தால் தோன்றும் தோஷங்களைப் போக்கத் தக்கச் சிகிச்சை ஆகியவற்றைப் பின்பற்ற வேண்டும். 78

### 49. பிரஸாதன அஞ்சனம்

பிரஸாதன அஞ்சன முறையை நன்கு பயன்படுத்துவதால் கண்களில் எண்ணெய்ப்பசை, நல்ல நிறம், வலிமை பெற்றிருத்தல் என்பன தோன்றும். பார்வை தெளிவாக எத்தகைய தோஷமும் இன்றி காணப்படும். துன்பங்கள் தணிந்து போவதால் இயற்கை நிலை பெற்றிருக்கும். இமைகளை மூடித் திறத்தல் இயற்கையாக இருக்கும். வெளிச்சம், புகை முதலியவற்றைத் பொறுக்கக் கூடிய நிலையில் இருக்கும். 79

### 49. (அ) பிரஸாதன அஞ்சனத்தை அதிகம் பயன்படுத்துவதால் தீங்கு

பிரஸாதன அஞ்சனத்தை அதிக அளவில் பயன்படுத்துவதால் விகாரங்கள் சிறிதளவே குறையும். இந்நிலையில் அதிக அளவில் தர்ப்பண முறையைப் பயன்படுத்துவதால் அளவில் மிகுந்த கபத்தைக் குறைக்க வறண்டதும் மென்மை (சீதவீரியம் கொண்ட) மருந்துகளைப் பயன்படுத்துவதே நலம் விளைவிக்கும்.80

### 50. ரோபணாஞ்சனம்

ரோபணமுறை மை மருந்தை அதிக அளவில் அல்லது குறைந்த அளவில் பயன்படுத்துவதால் தோன்றும் விளைவுகள் பிரஸாதனாஞ்சனத்தை அதிக அளவிலோ, நடுத்தர அளவிலோ, குறைந்த அளவிலோ பயன்படுத்துவதற்கு கூறப்பட்ட இலக்கணங்களையே கொண்டிருக்கும் அந்நிலைகளில் பிரஸாதன மை முறைக்குக் கூறப்பட்டபடியே இதற்குச் சிகிச்சைச் செய்ய வேண்டும். 81

எண்ணெய் முறையைச் சார்ந்த மை, ரோபண முறை முதலியவற்றைக் குறைந்த அளவில் பயன்படுத்துவதால் அவை பயனற்றுப் போகும். ஆகவே வெற்றியை விரும்பும் மருத்துவர் மை முறைகளைத் தக்க அளவறிந்து பயன்படுத்த வேண்டும். 82

### 51. புடபாகம் முதலியவற்றின் மை

அஞ்சன முறைகளில் சுருக்கமாக கூறப்பட்ட லேகன - ரோபண - பிரஸாதனங்களான மூன்று வகைகளைச் சார்ந்து புடபாகம், ஸேகம், ஆச்யோதனம், அஞ்சன முறை என்பவை அனைத்தும் லேகன-ரோபண-பிரஸாதனங்களென மைமருந்துகள் செய்யும் முறைகள் ஆயிரக்கணக்கில் செய்யலாம். 83

## 52. மன்னர்களுக்கு ஏற்ற மை

பார்வையின் வலிமையை வளர்க்கவும், காலங்கடத்தத்தக்க எல்லா நோய்களுக்கும் மன்னர்களுக்குப் பயன்படுத்தத்தக்க மருந்து வகைகளைக் கூறுகிறேன். கேள். 84

## 53. சிறந்த சூர்ண அஞ்சனம்

நீலாம்பலைப்போல ஒளிகொண்ட . சுரோதோஞ்சனம் எட்டு பங்கு, தாமிரத்தின் மென்மையான துகள் அல்லது பற்பம், தங்கத்தின், வெள்ளியின் தகடுகள் ஒவ்வொன்றும் ஒரு பாகம் எனப் பதினோரு பாகங்களைக் கல்வத்தில் இட்டு நன்றாக அரைத்துக் கொள்க. முனையில் வைத்து அதன் வாயை மூடி கருங்காலி அல்லது மலைமாமரக் கட்டைகளின் கரியாலான நெருப்பில் இட்டு அல்லது எரிமுட்டைத்தீயில் வைத்து நன்கு புடம் செய்க. பிறகு பசுஞ்சாணச் சாற்றில், பசுவின் சிறுநீரில், தயிரில், பசு நெய்யில், தேனில், எண்ணெயில், மதுவில், வசையில், மஜ்ஜையில், ஏலம் முதலான நறுமணப்பொருள்களின் கஷாயத்தில், திராட்சைச் சாற்றில், திரிபலைக் கஷாயத்தில், மிகவும் குளுமைத் தன்மை கொண்ட நன்னாரி முதலானவற்றின் கஷாயத்தில் என முறையே ஒவ்வொன்றோடும் தனித்தனியாக மருந்தைச் சூடாக்கி மும்மூன்று முறை அமிழ்த்தி (முக்கி) எடுத்துக் கொள்க. பிறகு இதை ஒரு பொட்டலமாக கட்டி மழை நீரில் ஒரு வாரம் அமிழ்த்தி வைக்கவும். எட்டாம் நாள் நீரிலிருந்து எடுத்து உலர்த்திக் கல்வத்தில் இட்டு மைய அரைத்து அத்துடன் முத்து, படிகம், பவழம், தகரம் ஆகியவற்றின் தூயத்துகளைக் கலந்து அரைத்துக் கொள்க. இது சூர்ணாஞ்சனம் எனப்படும். இதை யானையின் தந்தம், படிகம், வைடூரியம், சங்கு, கல், தங்கம், கொம்பு, வெள்ளி முதலியவற்றில் ஏதேனும் ஒன்றால் செய்த பாத்திரத்தில் வைக்க வேண்டும். பிறகு மன்னர் இம்மருந்தைப் பூசை செய்து மையாக இட்டுக் கொள்ள முற்பட வேண்டும். இதனால் மையிடப்பட்ட மன்னர் எல்லோருக்கும் காண்பதற்கு இனியவராவார். தேவர் - அசுர - கந்தர்வர்கள் முதலான எல்லா பூதங்களுக்கும் அடைய இயலாதவராவார். கண்நோய்கள் அனைத்திலிருந்தும் விடுபட்டவர் ஆவார். 85-93

## 54. பத்ரோதய அஞ்சனம்

கோஷ்டம், சந்தனம், ஏலக்காய், தாளிசபத்திரி, அதிமதுரம், ஸௌவீராஞ்சனம் அல்லது ஸ்ரோதோஞ்சனம், ஆடுதீண்டாப் பாளை மலர், தகரை, பத்மராகம், மரகதம், நீலம், வைடூரியம்,

முத்து, பவழம், புஷ்பராகம் என ஏழு இரத்தினங்கள், அல்லி, கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி, செங்கமலம் ஆகியவற்றின் மலர்கள், அவற்றின் மகரந்தங்கள், சிறுநாகப்பூ, வெட்டிவேர், திப்பிலி, சிறந்த மயில்துத்தம், கோழி முட்டையின் ஓடு, மரமஞ்சள், கடுக்காய், கோரோசனம், கருமிளகு, தான்றிக்காய் ஓடு, வீட்டுப் பல்லியின் மாமிசம் ஆகிய இவற்றைச் சம அளவில் கொண்டு நன்றாகத் தூளாக்கி முன்கூறியபடி யானை தந்தம் முதலியவற்றாலான பாத்திரத்தில் வைத்திருக்கவும். இதையும் முன் போலப் பூசை செய்து மன்னர்களுக்கு மை மருந்தாகப் பயன் படுத்தவும். இது 'பத்ரோதய அஞ்சனம்' எனப் பெயர் கொள்ளும். 94-97

### 55. தகராஞ்சனம்

தகரை, கருமிளகு, சடாமாஞ்சி, சிலாரஸம் ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு அனைத்திற்கும் சம அளவு மனோசிலை அவ்வாறே தாளிசபத்திரி நான்கு பங்கு சுரோதாஞ்சனம் அல்லது நீலாஞ்சனம் இவ்வனைத்துப் பொருளுக்கும் இரண்டு மடங்கு அதிமதுரம், அஞ்சனத்திற்குச் சம அளவு எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்து நன்கு தூள் செய்து முன்கூறியபடி யானைதந்தம் முதலியவற்றாலான பாத்திரத்தில் வைத்துப் பூசை செய்து மன்னர்களுக்குப் பயன்படுத்துக. 98-99

### 56. மனோசிலை அஞ்சனம்

மனோசிலை, தேவதாரு, மஞ்சள், மரமஞ்சள், கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், மிளகு, கொம்பரக்கு, பூண்டின் பருப்பு, மஞ்சிட்டி, இந்துப்பு, சிறு ஏலக்காய், சுவர்ணமாக்ஷிகம், பற்பம், பாச்சோத்தி, இரும்பு, தாமிரம் ஆகியவற்றின் மைய அரைத்த துகள் அல்லது பற்பம், தகரை, கோழிமுட்டை ஓடு ஆகிய இவ்வனைத்தையும் சம அளவில் கொண்டு நன்கு அரைத்த துகள் எனுமிவற்றில் ஏதேனும் ஒன்றை பசுவின் பாலுடன் மூன்று நாட்கள் அரைத்து குளிகைகளாக்கி உலர்த்திக் கண்ணாடிக்குப்பியில் வைத்துக் கொள்க. இந்தக் குளிகாஞ்சனத்தைக் கண்களில் அரிப்பு, திமிரம், சுக்லார்மம், கண்சிவத்தல் கண்களில் தோன்றும் சிவப்புக் கோடுகள் ஆகியவற்றைத் தணிக்கப் பயன்படுத்துக. 100-102

### 57. காம்ஸ்யாதி வத்தி

வெண்கலப்பாத்திரத்தைத் தேய்ப்பதால் தோன்றும் களிம்பு, அதிமதுரம், இந்துப்பு, ஆமணக்கு வேர்ப்பட்டை லை

ஒவ்வொன்றும் ஒவ்வொரு தோலா, கண்டங்கத்தரி பழமும் வேரும் சேர்ந்து இரண்டு தோலா எனக் கொண்டு அனைத்தையும் நன்றாக அரைத்துத் தூளாக்கி ஆட்டுப்பால் விட்டு மூன்று நாட்கள் அரைத்து தாமிர பாத்திரத்திற்குள் ஒரு பகுதியில் பூசி வைக்கவும். மறுநாள் உலர்ந்த அப்பூச்சை மீண்டும் கல்வத்தில் இட்டு ஒரு நாள் ஆட்டுப்பாலுடன் அரைத்துத் தாமிரப்பாத்திரத்தில் பகுதியில் பூசுக. இவ்வாறு ஏழு முறை செய்து வத்தி செய்து நிழலில் உலர்த்திக் கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்க. இந்த வத்தியைப் பன்னீர் விட்டுக் குழைத்துக் கண்களில் மையாக இட்டால் துன்பங்கள் தீரும். 103-104

### 58. பத்யாதி (கடுக்காய் முதலிய) வத்தி

கடுக்காய், மயில்துத்தம், அதிமதுரம் எனும் இவை ஒவ்வொரு தோலா கொண்டு கருமிளகு 16 தோலா கொண்டு அனைத்தையும் மையத்தூளாக்கித் தண்ணீருடன் அரைத்து வத்திகளாகச் செய்து கொள்க. இது பத்யாதிவத்தி எனப்படும். எல்லா கண் நோய்களுக்கும் சிறந்த மருந்தாகும். 105

சாஸ்திர முறைகளை அறிந்து மருந்துவர் மிக்க எச்சரிக்கையுடன் ரஸ்கிரியை எனும் முறையால் தயார் செய்து முறையாகப் பிண்டாஞ்சனம் செய்து கொள்க. 106

**ஸுச்ருதஸம்ஹிதை - உத்தர ஸ்தானத்தில்**

**கிரியாகல்பம் எனும்**

**பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# பத்தொன்பதாம் அத்தியாயம்
# *நயனாபிகாத பிரதிஷேதம்

இனி கட்டை, தடி முதலியவற்றால் தாக்கப்பட்ட கண்களுக்குரிய சிகிச்சை முறைகளைத் தன்வந்தரி பகவான் தன் சீடர்களாகிய ஸுசுருதர் முதலியவர்களுக்கு உபதேசித்தபடி விளக்குவோம். 1-2

### 1. கண்கள் தாக்கப்படுவதற்குப் பொது சிகிச்சை

தடி, கல், கத்தி முதலியவற்றால் கண்களில் அடிபடுவதால் தடுமாற்றம், கண்சிவத்தல், மிக்க வலி ஆகியவை தோன்றும். அத்தகைய நிலையில் அறிவாற்றல் மிக்க மருத்துவர் நஸியம், மேல்பூச்சு, ஸேகம், தர்ப்பணம் முதலான கண் நோய்களுக்குக் கூறிய முறைகளையும், அப்பொழுதே தோன்றிய விரணங்களுக்குக் கூறிய சிகிச்சை முறைகளையும், ரக்தாபிஷ்யந்தம், பித்தாபிஷ்யந்தம் முதலியவற்றிற்குக் கூறிய எண்ணெய் முறை, இனிப்புசுவை கொண்ட பொருள்களால் குளுமைப் படுத்தும் முறை போன்ற கண்களுக்குத் தெளிவை உண்டாக்கும் முறைகளையும் பயன்படுத்த வேண்டும். அவ்வாறே மிக்க வியர்வை, நெருப்பின் அனலால் தோன்றும் துன்பம், புகையால், அச்சத்தால், துக்கத்தால் தோன்றும் துன்பங்களுக்குக் கூறிய சிகிச்சை முறைகளையும் தக்கபடி பயன்படுத்த வேண்டும். 3-4

இவ்வாறு கூறப்பட்ட சிகிச்சை முறைகள் ஏழு நாட்களுக்குள் தோன்றிய நேத்ராபிகாதத்திற்கு பயன்படும். அடிபட்டு ஏழு நாட்கள் கடந்த பிறகு வாத அபிஷ்யந்தத்திற்குக் கூறப்பட்ட முறைகளைக் கையாள வேண்டும். அதிலும் வாதம் முதலாக சீற்றமடைந்த தோஷத்தை வளர்த்து சிகிச்சை செய்ய வேண்டும். கை முதலியவற்றால் கண்களில் தோன்றும் காயத்திற்குக் குறைந்த அளவு துன்பம் காணப்பட்டால் அக்கண்களின் மேல் வாய்ச் சூட்டைக் கொண்டு ஒற்றடம் கொடுத்து வியர்க்கச் செய்வதால் சிறிது நேரத்தில் துன்பம் நீங்கும். 5

---

* நயனம் - கண். அபிகாதம் - கட்டை, கல் முதலியவற்றால் தாக்கப்படுதல். கண்களில் அவ்வாறு தாக்கப்படுவதால் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை கூறுவதால் அத்தியாயம் நயனாபிகாத பிரதிஷேதம் எனப் பெயர் பெற்றது.

## 2. கண் தாக்கப்பட்ட நோயில் சிகிச்சைக்கு உட்படுபவையும் - உட்படாதவையும்

கண்களில் முதல் புரையில் தோன்றிய காயம் எளிதில் சிகிச்சையால் தீர்க்கக்கூடியதாகும். முதல் இரண்டு புரைகளில் தோன்றிய காயம் கஷ்டப்பட்டுக் கவனத்துடன் சிகிச்சை செய் தால் தீர்க்கக்கூடியதாகும். முதல் இரண்டு, மூன்று படலங் களிலும் தோன்றிய காயம் சிகிச்சைக்கு உட்படாததாகும். மிகவும் சிதைந்து மேல் நோக்கியோ கீழ் நோக்கியோ நழுவிய கண்விழிகள், இடம் விட்டு அகன்று தொங்கும் கண்கள், பார்வை இழந்த கண்கள் ஆகியவற்றில் தோன்றும் துன்பங்கள் காலம் கடத்தக்கூடியவையாகும். கண்விழி வீக்கத்தால் பெரிதாகிச் சிறிது சிவப்பு நிறம் கொண்டும், கண்பார்வை இருந்த போது கண்விழி இயற்கை நிலையில் இருந்தபோதும் எளிதில் சிகிச்சை யால் குணப்படுத்தலாம். 6

மூக்கை பிடித்தல், அதிக வாந்தி, தும்மல், புகைபோடுதல், கயிறு முதலியவற்றால் கழுத்து இறுக்கப்படுதல் என்பனவற்றால் கண்விழி உள்நோக்கி அழுந்திப் போனால், உடனே கண்விழி பிதுங்கிய போது த்விவிரணீய சிகித்ஸிதத்தில் கூறப்பட்ட சிகிச்சை முறையின்படி நாசியால் காற்றை வேகமாக உள்ளே நீண்ட நேரம் இழுத்தல், தலை மேல் நீரைத் தாரையாக ஊற்று தல் முதலிய முறைகளைக் கையாள வேண்டும். 7-8

## 3. குகூணக இலக்கணம் - சிகிச்சை

முன்கூறிய எழுபத்தாறு வகைக் கண் நோய்களும் பெரியவர் களுக்கும், சிறுவர்களுக்கும் தோன்றக்கூடியவை. இவற்றுக்கு மாறாகத் தாய்ப்பால் குற்றம் கபவாதபித்த இரத்தங்களின் சீற்றத்தால் சிறுவர்களுக்கு மட்டும் தோன்றக் கூடிய நோய் குகூணகம் எனப்படும். இந்நோய் தோன்றினால் கண்களில் அரிப்பு அதிகமாவதால் குழந்தை எப்பொழுதும் கண்களைக் கசக்கி விட்டுக் கொண்டிருக்கும். நெற்றியையும் தேய்த்துக் கொண்டிருக்கும். இதனால் இமைகளில் வீக்கம் தோன்றும். கண்களைத் திறக்க முடியாமற் போகும். ஆதவனின் ஒளியைப் பார்க்க முடியாமல் கண் கூசும். கண்களிலிருந்து இடைவிடாமல் கண்ணீர் பெருகிக் கொண்டிருக்கும். இந்நிலையில் இரப்பை யிலிருந்து அல்லது கண்களின் அருகிலிருந்து அட்டைப் பூச்சியின் மூலம் இரத்தத்தை வெளியேற்ற வேண்டும். பவழ மல்லி, பீர்க்கு முதலியவற்றின் இலைகளைக் கொண்டு லேகன முறையைப் பயன்படுத்தலாம். பிறகு திரிகடுகத் தூளைத் தேன் கலந்து அதனால் பிரதிஸாரணம் செய்ய வேண்டும். இவற்றைத் தவிர கர்ப்பிணி வியாகரணம் எனும் சாரீர ஸ்தானத்தில்

கூறப்பட்டுள்ளபடி தாய்ப்பால் குற்றத்தைப் போக்கும் சிகிச்சை முறைகளைத் தாய்க்கு கையாள வேண்டும். குழந்தைக்கும் தக்க சிகிச்சை செய்ய வேண்டும். 9-10

### 4. குகூணகத்திற்கு வாந்தி எடுக்கச் செய்தல்

குழந்தையை முதலில் தாய் அல்லது செவிலித்தாய்ப் பாலைப் பருகச் செய்து பிறகு தேனுடன் இந்துப்புதூள், நாயுருவித் தூள் குழைத்து நாக்கில் தடவி வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். அல்லது திப்பிலி, இந்துப்பு எனும் இவற்றைக் கலந்து தூளாக்கித் தேன், நாயுருவி விதைத் தூள் கலந்து அதனால் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். தானாகவே குழந்தை வாந்தி எடுத்தால் இந்த மருந்துகளால் வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். 11

பாலும் சோறும் என இரு வகை உணவையும் உட்கொள்ளும் குழந்தைக்குத் தூளை பாலிலோ, நீரிலோ கலந்து கொடுத்து வாந்தி எடுக்கச் செய்க. சோற்றை மட்டும் உட்கொள்ளும் குழந்தையானால் மருக்காரைத் தூளால் வாந்தி எடுக்கச் செய்க. 12

குகூணகத்தில் இமையைக் கழுவுதல், பரிஷேக முறையைச் செய்ய நாவல், மா, நெல்லி, எரிமா எனுமிவற்றின் துளிர் இலை, பட்டை ஆகியவற்றின் கஷாயத்தைப் பயன்படுத்துக. இவ்வாறு இந்த நோயில் ஆச்யோதனம் செய்வதற்கு வேம்பு, சீந்தில்கொடி ஆகியவற்றின் விழுது மற்றும் கஷாயத்தாலான நெய் அல்லது திரிபலை விழுது அதன் கஷாயம் ஆகியவற்றாலான நெய் ஆகியவை நன்மை பயக்கும். 13

### குகூணகத்திற்கு மை

மனோசிலை, கரு அல்லது வெள்ளை மிளகு, சங்கின் நாபி, ரஸாஞ்சனம், இந்துப்பு, வெல்லம், தேன் எனும் இவற்றைச் சம அளவில் கொண்டு நன்கு அரைத்து மையாகச் செய்க. அல்லது பெருங்குரும்பை, அதிமதுரம் மாம்பட்டை இவற்றை எரித்து மை செய்க. அல்லது காரிரும்பு மற்றும் தேன் நெய் கலந்துத் திரிகடுகம், வெள்ளைப்பூண்டு, அதிமதுரம், இந்துப்பு, கொம்பரக்கு, காவிக்கல் எனும் இவற்றைச் சம அளவில் அரைத்துச் செய்த குடிகாஞ்சனம் அல்லது வேப்பந்தளிர், அதிமதுரம், மரமஞ்சள் தாமிரபற்பம் (அல்லது தூள்) பாச்சோத்தி எனும் இவற்றை நீருடன் அரைத்து மாத்திரை செய்து குகூணகம் எனும் நோய்க்கு மையாகப் பயன்படுத்துக. 14-15

### 6. சிறுவர்களின் சுக்ர நோய்க்கு மை

பசுவின் தயிரில் சங்கின் நாபி, இந்துப்பு ஆகியவற்றை அரைத்து சுரோதோஞ்சனத்தின் மீது அதைப் பூசி உலர்த்துக. இவ்வாறு ஏழுரை நாட்கள் நாள்தோறும் ஒவ்வொருமுறை மருந்தைப் பூசி உலர்த்துக. பிறகு அந்த சுரோதோஞ்சனத்தை அரைத்து வத்தியாகச் செய்க. இந்த வத்தியை நீரில் குழைத்து மையாக இட்டால் சிறுவர்களுக்குத் தோன்றிய சுக்ர நோய் தணியும். மருத்துவத்தில் நன்கு தேர்ச்சி பெற்றவர் சிறுவர்களுக்குத் தோன்றும் கண் நோய்களுக்கு கப அபிஷ்யந்த நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைப் பயன்படுத்த வேண்டும். ஏனெனில் சிறுவர்களுக்கு கபம்தான் சிறப்புற்று விளங்கும் தோஷமாகும். 16

### 7. கண்ணோய்ச் சிகிச்சை - முடிவுரை

கடலைப் போன்ற மருத்துவ நூலில் ஒரு கோடி சுலோகங்களாலோ, பல்லாயிரக்கணக்கான சுலோகங்களாலோ சிகிச்சை முறைகளை நிறைவாக விளக்குவது இயலாத செயலாகும். ஆகவே நூலின் உண்மைப் பொருளைத் தன் அறிவால் நன்கு ஆராய்ந்து கொள்ளும் திறமை அற்றவரால் சாஸ்திரத்தின் நுட்பமான பொருள்களை உணர்ந்து கொள்ள முடியாது. 17-18

மிக்க நுட்பமான விஷயங்கள் விதைபோல இந்த சிகிச்சை முறைகளில் மறைவாக கூறப்பட்டுள்ளன. ஆகவே அறிவாற்றல் மிக்க மருத்துவரிடம் இவை நன்கு முளைவிட்டு வளரும். 19

நுட்பமான விதைப்போலக் கூறப்பட்டுள்ள இந்த சாலாக்ய தந்திரத்தின் விளக்கத்தைப் பல சாஸ்திரங்களைக் கரைகண்டு ஆகம சாஸ்த்திரத்தில் தேர்ச்சி பெற்ற மருத்துவர் நன்கு தர்க்கம் செய்து பொருள்களை ஊகித்து அறிந்து கொள்ள வேண்டும். 20

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**நயனாபிகாத பிரதிஷேதம் எனும்**

**பத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபதாம் அத்தியாயம்
# *கர்ணகதரோக விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் தன் சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி காதைச் சார்ந்த நோய்களைப் பற்றிய விளக்கம் கூறப்படுகிறது. 1-2

## 1. காதுகளைச் சார்ந்த நோய்களின் பெயர்களும், எண்ணிக்கையும்

காதுவலி, காதில் ஒலி, காது செவிடாதல், கர்ணக்ஷ்வேடம், காதுகளிலிருந்து சீழ் முதலியன பெருகுதல், காது அரிப்பு, கர்ணவர்சம், கிருமிகர்ணம் (புழுக்களுள்ள காது), கர்ணபிரதி நாஹம், இரு வகை கர்ணவித்ரதி (சீழ்கட்டி), கர்ணபாகம், பூதிகர்ணம், (சீழ் பிடித்த காது), நான்கு வகை கர்ண அர்சம், ஏழுவகை கர்ண அர்புதம் (கட்டி) மற்றும் நான்கு வகை வீக்கம் இவ்வாறு காதுகளில் தோன்றும் நோய்கள் இருபத்தெட்டாகும்.3-5

## 2. காதுவலி இலக்கணம்

தவறன உணவு உட்கொள்ளுதல், தவறான பழக்கவழக்கங் களை மேற்கொள்ளுதல் ஆகியவற்றால் காதுப் பகுதியில் இருக்கும் வாயு சீற்றம் பெற்றுக் கபம், பித்தம், இரத்தம் ஆகிய வற்றால் சூழப்பட்டு தவறான வழியில் பரவிக் காதின் நான்கு பக்கங்களிலும் மிக்க கடுமையான வலியைத் தோற்றுவிக்கும். இந்நோய் கர்ணசூலை (காதுவலி) எனப்படும். இது மிகவும் கஷ்டப்பட்டுச் சிகிச்சை செய்வதால் போக்கத்தக்கதாகும். 6

## 3. கர்ணநாத இலக்கணம்

அவ்வாறு காதில் நிலைபெற்ற வாயு ஒலியைக் கொண்டு செல்லும் நரம்புகளில் தவறான வழியில் பரவி அங்கு நிலை கொண்டு விடும் போது அதனால் அடிக்கப்பட்டு காதில் அடிக்கடி பல வகையான ஒலிகள் நோயாளிக்குக் கேட்கப்படும். இது காது ஒலித்தல் (கர்ணநாதம்) எனும் நோயாகும். 7

*கர்ணகதரோகம் - காது, அதைச் சார்ந்த நோய்களை பற் விளக்குவதால் இந்த அத்தியாயம் கர்ண கத ரோக விஞ்ஞானீயம் எனப் பெயர் பெற்றது.

**4. காது செவிடாதல்**

அவ்வாறு நிலைபெற்ற வாயு கபத்துடன் சேர்ந்து ஒலியை எடுத்துச் செல்லும் ஸிரைகளில் பரவி அங்கு தங்கிவிடும். சரி யாக சிகிச்சை செய்யாத போது அம்மனிதர் காது செவிடாகுதல் எனும் நோய்க்கு இலக்காவார். 8

**5. கர்ணக்ஷ்வேடம் எனும் நோயின் இலக்கணம்**

அதிக உழைப்பு, உடலில் தாதுக்கள் குறைதல், வறண்டு போதல், துவர்ப்புச் சுவை கொண்ட பொருள்களை மிகுதியாக உட்கொள்ளுதல், சிரோவிரேசன முறையைப் பயன்படுத்திக் கொண்ட பிறகு குளுமையைத் தோற்றுவிக்கும் உணவை உட் கொள்ளுதல் என்பனவற்றால் வாதம் சீற்றமடைந்து காது நரம்பு வழியில் நிலைத்துக் காதில் மிக்க கடும் ஒலியைத் தோற்று விக்கும். இது கர்ணக்ஷ்வேடம் எனும் நோயாகும். 9

**6. கர்ணஸம்ஸ்ராவ இலக்கணம்**

தலையில் அடிபடுதல், நீரில் மூழ்கிக் குளித்தல் அல்லது கர்ண வித்ரதி (காதில் கட்டி) எனும் நோய் பக்குவம் பெறுதல் ஆகியவற்றால் சீற்றம் பெற்ற வாயு காதிலிருந்து சீழ் வடியும் படிச் செய்யும். இது கர்ணஸம்ஸ்ராவம் எனும் நோயாகும். 10

**7. கர்ணகண்டு (காதில் அரிப்பு), கர்ணகூதம் எனும் நோய்களின் இலக்கணம்**

காதுக்குள் சேர்ந்த கபத்தால் 'கர்ண ஸ்ரோதஸ்' எனும் காது வழியில் மிக்க அரிப்பு உண்டாகும். அவ்வாறே கர்ண ஸ்ரோதஸ் ஸில் சேர்ந்த கபம் பித்தத்தின் வெப்பத்தால் உலர்ந்து போனால் கர்ண கூதம் (காதில் அழுக்கு சேருதல்) எனும் நோய் தோன்றும். 11

**8. கர்ண பிரதிநாஹ இலக்கணம்**

முன் கூறியபடி கர்ணகூதம் (காதுகளில் சேர்ந்த மலம்) தோஷங்களால் அசைவுற்று மூக்கு வாய் முதலியவற்றின் வழியாக வெளிவருமானால் அந்த நோய் கர்ணபிரதிநாஹம் எனப்படும். 12

**9. கிருமிகர்ண இலக்கணம்**

காதுகளுக்கு உட்பகுதியில் அல்லது புறத்தில் மலம் சேர்ந்து அல்லது அடிபடுவதால் காதில் விரணம் தோன்றிய போது அதைத் தூய்மைப்படுத்தி ஆற்றத்தக்க சிகிச்சையை

மேற்கொள்ளாவிட்டால் அப்பகுதியில் உள்ள தோல், மாமிசம், இரத்தம், மென்மையான எலும்பு ஆகியவை சிதைந்து அழுகத் துவங்கும். அந்நிலையில் அப்பகுதியில் கிருமிகள் (புழுக்கள்) தோன்றும். இது கிருமி கர்ணம் அல்லது கிருமி கர்ணகம் எனும் நோயாகும். 13

### 10. கர்ணவித்ரதி இலக்கணம்

முதலில் காயம்படுதல், அடிபடுதல் முதலியவற்றால் தோன்றிய கட்டி, வாதம் முதலிய தோஷங்கள் சீற்றம் பெறுவதாலும், இரத்தம், மாமிசம் முதலியவை கெடுவதாலும் தோன்றும் கட்டியாக மாறிவிடும். இது சிவப்பு மஞ்சள் கருஞ்சிவப்பு நிறத்தில் உள்ள இரத்தத்தைப் பெருகச் செய்து ஊசியால் குத்துவது போன்ற கடும் வலியைத் தோற்றுவிக்கும். எரிச்சலும் உண்டாகும். இது கர்ணவித்ரதி எனும் நோயாகும். 14

### 11. கர்ணபாகம் மற்றும் பூதிகர்ணத்தின் இலக்கணம்

பித்தத்தின் சீற்றத்தால் கர்ணபாகம் தோன்றும். இதனால் காதில் சிதைவு, சதசதப்பு உண்டாகும். அவ்வாறே பித்தத்தின் வெப்பத்தால் காது வழியே துன்பமில்லாமலேயோ வலியுடன் கூடியோ அடர்த்தியும், கெட்ட நாற்றமும் உள்ள சீழ் பெருகிக் கொண்டிருக்கும். இது பூதிகர்ணம் எனும் நோயாகும். 15

### 12. கர்ண அர்சஸ் எனும் நோய்

காதில் தோன்றும் அர்சஸ் எனும் மூல நோயின் (வீக்கம் அர்புதம் ஆகியவற்றைப் பற்றிய) இலக்கணம் மூல நோய்க்கு இலக்கணம் கூறிய பகுதியில் (நிதானஸ்தானத்தில்) விளக்கப் பட்டுள்ளது. அவற்றை மருத்துவர் இங்கு உணர்ந்து கொள்ள வேண்டும். 16

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**கர்ணகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**இருபதாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்தொன்றாம் அத்தியாயம்
# *கர்ணகதரோக பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கர்ணகதரோக (காதுகளைச் சார்ந்த) நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. காது நோய்களுக்குப் பொதுவானச் சிகிச்சை

எல்லா வகைக் காது நோய்களுக்கும் நெய்யைப் பருகுதல், ரஸாயன மருந்துகளை உட்கொள்ளுதல், உடற்பயிற்சியைக் கைவிடுதல், தலையைத் தவிர்த்து மற்ற உடற்பகுதி வரை (கழுத்து வரை) குளித்தல், பிரும்மசரியத்தைக் கடைப்பிடித்தல் (கலவியைத் தவிர்த்தல்), அதிகமாகப் பேசாமல் இருத்தல் என்பன பொதுவான சிகிச்சை முறைகளும், பத்திய முறையும் ஆகும். 3

### 2. காது வலி முதலியவற்றிற்குப் பொதுச் சிகிச்சை

காதுவலி, காதில் ஒலி, செவிட்டுத்தன்மை, கர்ணக்ஷ்வேடம் (காதில் மலம் - குறும்பி) சேருதல் எனும் இந்நான்கு வகை காது நோய்களில் நெய்யைப் பருகுதல் முதலான பொது சிகிச்சைகளுடன் இனி கூறப்போகும் எண்ணெய் முறை, உடல் வியர்க்கச் செய்தல், எண்ணெய் மருந்தால் பேதியாகச் செய்தல் எனும் பொதுச் சிகிச்சை முறைகள் சிறந்தவையாகும். 4

### 3. பொதுச் சிகிச்சை முறை

காது நோய் கொண்டவர் முதலில் நெய்யைப் பருகி எண்ணெய் தேய்த்துக் கொண்டு குளிப்பதால் உடலில் எண்ணெய் பசை தோன்றும். பிறகு வாதத்தைப் போக்கும் பொருள்களை நீரில் சேர்த்து அடுப்பில் ஏற்றி அது கொதிக்கும் போது தோன்றும் ஆவியால் அவரது காதுப் பகுதியை வியர்க்கச் செய்து பிறகு நாடீஸ்வேதம், பிண்டஸ்வேதம் எனும் முறைகளைப் பயன்படுத்தி மீண்டும் வியர்க்கச் செய்ய வேண்டும். 5

---

*கர்ணகதரோகபிரதிஷேதம் - காதைச்சார்ந்த நோய்களுக்கு மாறு செய்தல் அதாவது சிகிச்சை செய்தல் என்பதை விளக்குவதால் இந்த அத்தியாயம் கர்ணகதரோகபிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது

### 4. நாடீஸ்வேதத்திற்குப் பயன்படுத்தத்தக்க பொருள்கள்

வில்வம், ஆமணக்கு, எருக்கு, சாரடை, வில்வம், கரு ஊமத்தை, முருங்கை, நொச்சிவேர், அமுக்கராக்கிழங்கு, வன்னி, மூங்கில் குறுத்து ஆகியவற்றை அரைத்து ஆரநாளம் எனும் புளிப்புக் காடியுடன் பக்குவம் செய்து நாடீஸ்வேத முறையில் பயன்படுத்தினால் கப வாதங்களால் தோன்றும் காது வலி நீங்கும். 6-7

### 5. காதுவலி தணிய பிண்டஸ்வேத முறை

மீன், கோழி, லாவகப்புள் ஆகியவற்றின் புலால் கொண்டு அல்லது அப்புலாலின் கஷாயத்தைக் கொண்டு அல்லது (கோவாவைப் போல) கெட்டியாக காய்ச்சிய பாலைக் கொண்டு பிண்டஸ்வேதம் (பொட்டலம் போல சிறு மூட்டையாகக் கட்டி இளஞ்சூடுள்ள அதைக் கொண்டு வியர்க்கச் செய்தல்) எனும் முறையைப் பயன்படுத்தினால் காது வலி தணியும். 8

### 6. காது வலிக்கு எண்ணெயால் வியர்க்கச் செய்தல்

அரசமரத்து இலைகள் பலவற்றைச் சேர்த்து எண்ணெய் தடவி தொன்னை போல் செய்து அதில் புகையில்லாத தணல்களை நிரப்பிக் கருவியால் அதை காதின மேலாகப் பிடித்துக் கொண்டிருந்தால் நெருப்பின் சூட்டிற்கு இலையில் தடவிய எண்ணெய் உருகிக் காதுக்குள் சொட்டும். இதனால் காது வலி தணியும். 9-10

### 7. வியர்க்கச் செய்த பின் செய்ய வேண்டிய முறை

காதுப் பகுதியை வியர்க்கச் செய்து பிறகு பட்டுத் துணி, குங்கிலியம், அகில் ஆகியவற்றை நெய்யில் தோய்த்து நெருப்பில் இட்டு இதனால் காதுக்குப் புகை போட வேண்டும். உணவை மிக்க நெய் கலந்து உண்ணச் செய்ய வேண்டும். வாதத்தைப் போக்கும் பொருள்களாலான கஷாயத்தால் வஸ்தி முறையை (சிரோவஸ்தி) பயன்படுத்த வேண்டும். 11

இரவில் உணவு உட்கொள்ளாமல் நெய்யைப் பருகச் செய்து பிறகு இளஞ்சூடுள்ள பாலை உட்கொள்ளச் செய்க. 12

### 8. சதபாகபலாத்தைல முறை

ஸிரோவஸ்தி, நஸிய முறை, தலைமேல் ஊற்றிக் கொண்டிருத்தல், உணவு ஆகியவற்றில் சதபாகபலாதைலம் (நூறு முறை காய்ச்சி பக்குவம் செய்த பலாத் தைலம்) என்பதை பயன் படுத்துதல் சிறந்த முறையாகும். 13

### 9. கோழிவசை முறை

கண்டங்கத்தரி வேர் ஒரு பலம் கொண்டு எட்டு பலம் பால், பாலின் அளவுக்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து பால் மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டிக் கொள்க. அதில் ஒரு பலம் கோழியின் வசை (கொழுப்பு) சேர்த்து வசை மட்டும் மிகுந்திருக்கக் காய்ச்சி இளஞ்சூடுள்ள போது காதுகளில் விட வேண்டும். 14

### 10. காதுகளில் விட நான்கு வகை எண்ணெய்கள்

சிறுகீரைவேர், அழிஞ்சில் விதை, அஹிம்ஸ்ரைவேர், கேந்துக வேர், ஸரளமரக்கட்டை, தேவதாரு, வெள்ளைப்பூண்டு, மூங்கில் பட்டை ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு விழுதாக்கி புளிக்காடியுடன் அரைக்கவும். பிறகு நெய், எண்ணெய், வசை, மஜ்ஜை எனும் நான்கு வகை எண்ணெய்களை சம அளவில் சேர்த்து விழுதுக்கு நான்கு மடங்காகக் கொண்டு எண்ணெய் களுக்கு நான்கு மடங்கு புளிக்காடி, தயிர் முதலியவற்றைச் சேர்த்து எண்ணெய் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி இளஞ்சூடுள்ள போது காதில் விட்டால் நோய் தணியும். 15-16

### 11. லசுனாதி தைலம்

வெள்ளைப்பூண்டு, இஞ்சி, முருங்கைவிதை, முரங்கி (சிவப்பு முருங்கை விதை), முள்ளங்கி, வாழை சுரசம் எனும் இவற்றைத் தனித்தனியாகவோ அனைத்தையும் சேர்த்தோ, சுரசம் இவற்றைத் தனித்தனியாகவோ அனைத்தையும் காய்ச்சியோ காதிலிடப் பயன்படுத்தக் காதுவலி தணியும். 17

இஞ்சிசுரசம், தேன், இந்துப்பு, எண்ணெய் ஆகியவற்றைத் தனித்தனியாகவோ, சேர்த்தோ எண்ணெய்க்கு நான்கு மடங்கு நீர் விட்டு எண்ணெய் காய்ச்சி இளஞ்சூட்டில் காதில் விட்டால் துன்பம் நீங்கும். 18

### 12. காதுவலிக்கு நெய்

ஆட்டின் சிறுநீரில் மூங்கில்பட்டை சேர்த்துப் பக்குவம் செய்து காதில் இளஞ்சூட்டில் விட்டால் நோய் தணியும். 19

### 13. தீபிகாதைலம்

பெரும் பஞ்சமூலத்தைப் பதினெட்டு அங்குல நீளமுள்ள கட்டையைக் கொண்டு அதன் மேல் பட்டுத் துணியைச் சுற்றி எண்ணெயில் தோய்த்து எரியவைத்து ஏதேனும் ஒரு பாத்திரத்தின் மேலாக அக்கட்டையை (கருவியின் உதவியால்)

பிடித்துக் கொண்டிருந்தால் எண்ணெய் சொட்டு சொட்டாக பாத்திரத்தில் விழும். இது தீபிகாதைலம் எனப்படும். இதைக் காதில் விட்டால் அந்த நேரத்திற்கு வலி குறையும். 20-21

**14. தீபிகா தைல முறைப்படி வேறு எண்ணெய்கள்**

அறிவாற்றல் மிக்க மருத்துவர் தீபிகா தைல முறைப்படி தேவதாரு, கோஷ்டம், ஸரளமரம் முதலியவற்றின் கட்டைகளையும் பயன்படுத்தி எண்ணெய் எடுத்துப் பயன்படுத்தினால் காதுவலி தணியும். 22

**15. அர்க்காங்குர ரஸம்**

எருக்கந்துளிரைப் புளிப்புக்காடி விட்டு அரைத்து அதில் சிறிது நல்லெண்ணெயும், உப்பும் சேர்த்துக் கொடிக்கள்ளிக் கட்டையின் உட்பகுதியில் வைத்து எருக்க இலையால் வாயை மூடி சீலை மண் பூசி நெருப்பில் புடம் போட்டு எடுத்துச் சாறு பிழியவும். அர்க்காங்குரரஸம் எனப்படும். அதைக் காதில் விட்டால் வலி தணியும். 23-24

**16. விளாம் முதலியவற்றின் சாறு**

விளாம், துரிஞ்சிப்பழம், எலுமிச்சை, இஞ்சி முதலியவற்றின் சாறு பிழிந்து சூடாக்கி இளஞ்சூட்டில் காதில் விட்டால் வலி தணியும். 25

**17. சுக்ரிகா சாறு, எண்வகை சிறுநீர்**

'சுக்ரிகா' எனும் புளிச்சக்கீரையின் சாற்றைச் சூடாக்கி இளஞ்சூட்டில் காதில் விட்டால் வலி தணியும். கடல் நுரையை சூடுள்ள எண்ணெயில் விட்டு அந்நுரையைக் காதில் விடுவதால் நோய் தணியும். 26

எண் வகைச் சிறுநீரில் ஏதேனும் ஒன்றைச் சூடாக்கி இளஞ்சூடுள்ள போது காதில் விட்டால் வலி தணியும். 27

எண்வகைச் சிறுநீர்களில் ஏதேனும் ஒன்றில், அல்லது பத்ரதாரு முதலிய கூட்டுப் பொருள்களில் ஏதேனும் ஒன்றில், நெய்-எண்ணெய்-வசை-மஜ்ஜை என்பனவற்றில் ஏதேனும் ஒன்றைப் பக்குவம் செய்து காதில் விட்டால் நோய் தணியும். (இதுவரை கூறிய முறைகள் அனைத்தும் வாதத்தால் தோன்றிய காது வலிக்குப் பயன்படுத்தத்தக்கவை). 28

**18. பித்தத்தால் தோன்றும் காது வலிக்குச் சிகிச்சை**

பித்தத்தால் தோன்றும் காது வலிக்கு பித்தத்தைத் தணிக்கும் பொருள்களின் விழுது, கஷாயம் ஆகியவற்றாலான நெய்,

எண்ணெய் அல்லது தீபிகா தைலம் முதலியவற்றைப் பயன் படுத்த வேண்டும். காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் விழுதில் அதற்கு பத்து மடங்கு பால் சேர்த்து அல்லது கசப்புச் சுவை கொண்ட மருந்துப் பொருள்களின் விழுது கஷாயம் ஆகியவற்றுடன் நெய் சேர்த்துப் பக்குவம் செய்து இளஞ்சூடுள்ள போது காதில் விட வேண்டும். 29

## 19. வேறு முறைகள்

பாலுள்ள ஆலம் முதலியவற்றின் இலைகளின் விழுது மற்றும் அதன் கஷாயத்துடன் செய்த நெய் அல்லது அதிமதுரம் சந்தனம் ஆகிய இவற்றின் விழுதும், கஷாயமும் சேர்த்துச் செய்த நெய், அல்லது சர்க்கரை, அதிமதுரம் சிவதை முதலான பேதியாகச் செய்யும் மருந்துப் பொருள்களின் விழுதுடன் மூன்று மடங்கு நெய், நெய்யின் அளவிற்கு நான்கு மடங்கு நீர் சேர்த்துக் காய்ச்சிய நெய் ஆகியவற்றைக் காதில் விட்டால் பித்தத்தால் தோன்றும் காது வலி நீங்கும். 30

## 20. கபத்தால் தோன்றும் காது வலிக்குச் சிகிச்சை

கபத்தால் தோன்றும் காது வலிக்கு அழிஞ்சில், கடுகு ஆகியவற்றின் எண்ணெயைச் சூடாக்கி காதில் விட வேண்டும். இதைத் தவிர கசப்புச் சுவை கொண்ட மூலிகைகளின் கஞ்சி, அவ்வாறே கபத்தைப் போக்கும், வறட்சியைத் தோற்றுவிக்கும், வியர்க்கச் செய்யும் முறைகள் ஆகியவை நன்மை தரும். 31

சுரசாதி கணக்கூட்டுப் பொருள்களின் கஷாயமும், விழுதும் சேர்த்துச் செய்த எண்ணெய் அல்லது பெரும்பஞ்சமூலப் பொருள்களின் கஷாயமும், விழுதும் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெய் கபத்தால் தோன்றிய காது வலிக்குக் காதில் விட தக்கவை. அவ்வாறே துரிஞ்சிப்பழச் சாற்றுடன் வெள்ளைப் பூண்டின் சாறு இஞ்சி சுரசம் ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றை சூடாக்கி இளஞ்சூடுள்ள போது காதில் விடக் கப்த்தாலான காது வலி தணியும். அல்லது இப்பொருள்களின் விழுதும் சுரசமும் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெயைக் காதில் விட வேண்டும். இவற்றைத் தவிர நாயுருவி முதலானவற்றின் விதைத் தூளைக் கொண்டு தீக்ஷ்ண நஸிய முறையைப் பயன்படுத்தித் தலையில் உள்ள தோஷங்களை வெளியேற்றல், திப்பிலி முதலான தீக்ஷ்ண தன்மை கொண்ட பொருள்களின் கஷாயத்தால் கபளதாரணம் செய்வித்தல் ஆகியவை கபத்தாலான காது வலியில் பயன்படுத்தத்தக்க சிறந்த முறைகளாகும். 32-33

## 21. இரத்தத்தாலான காது வலிக்குச் சிகிச்சை

இரத்தத்தின் சீற்றத்தாலான காது வலிக்கு பித்தத்தாலான காது வலிக்குக் கூறப்பட்ட முறைகள் அனைத்தையும் பயன்

படுத்த வேண்டும். இவ்வாறு பொதுவாகக் காதுவலி, காதில் ஒலி, காது கேளாமை, காதில் மலம் சேருதல் எனும் நோய்களைத் தணிக்கும் முறை விளக்கப்பட்டது. இனிக் காது செவிடானதற்குச் சிறப்பாகப் பயன்படுத்தத்தக்க மருந்துகள் விளக்கப்படுகின்றன. 34

## 22. வில்வாதி தைலம்

பசுவின் சிறுநீருடன் வில்வக்கதுப்பை அரைத்து விழுதாக்கி அத்துடன் நான்கு மடங்கு எள் எண்ணெய், அதற்கு நான்கு மடங்கு ஆட்டுப்பால், பாலுக்கு நான்கு மடங்கு நீர் எனச் சேர்த்து எண்ணெய் மிகுந்திருக்க காய்ச்சி வைத்துக் கொள்க. இதைக் காது செவிடான போது காதில் நிரப்ப நோய் நீங்கும். 35

சர்க்கரை, அதிமதுரம், வில்வப்பழம் ஆகியவற்றை விழுதாக அரைத்து நான்கு மடங்கு எள் எண்ணெய், எண்ணெய்க்கு நான்கு மடங்கு ஆட்டுப்பால், பாலுக்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து எண்ணெய் பக்குவம் செய்க. சூடாக உள்ள இந்த எண்ணெயைச் சூடாக உள்ள கோவைக் கஷாயத்தில் சேர்த்து குளிர்ந்த பிறகு கையால் கடைந்து அதன் மேல் மிதக்கும் எண்ணெயை மட்டும் எடுத்துக் கொள்க. பிறகு அதில் கற்கண்டு அதிமதுரம், சந்தனம், ஆகியவற்றை விழுதாக அரைத்து எண்ணெய் அளவில் நான்கில் ஒரு பங்கு கலந்து எண்ணெயின் அளவிற்கு பத்து மடங்கு ஆட்டுப்பால், நான்கு மடங்கு வில்வக்கஷாயம் சேர்த்து நன்கு பக்குவம் செய்க. எண்ணெய் மட்டும் மிகுந்திருக்கும் போது எடுத்து வடிகட்டிக் கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்க. இந்த வில்வாதி தைலம் செவிட்டுத் தன்மையை போக்க வல்லது. 36-37

பிரதிச்யாயரோக அத்தியாயத்தில் கூறப்போகும் முறையைக் காது செவிடானதற்கு பயன்படுத்துக. வாத நோய்களுக்கு கூறப்பட்டுள்ள சிகிச்சை முறைகளும் இங்கு பயன்படுத்தச் சிறந்தவையாகும். 38

## 23. கர்ணஸ்ராவம் முதலியவற்றிற்கு பொதுச் சிகிச்சை

கர்ணஸ்ராவம், பூதிகர்ணம், கிருமிகர்ணம் ஆகிய நோய் களுக்குப் பொதுச் சிகிச்சையும், சிறப்பு முறைகளும் பயன் படுத்தத்தக்கவை. 39

## 24. கர்ணஸ்ராவம் முதலியவற்றிற்கு பொதுச் சிகிச்சை

சிரோவிரேசனம், புகைபோடுதல், காதை மருந்துப் பொருளால் நிரப்புதல், பிரமார்ஜனம் (மருந்துப் பொருளைத்

தேய்த்தல்), பிரக்ஷாளனம் (கழுவுதல்) முதலியவற்றில் நிலைமைக்குத்தக்க முறையைக் கையாள வேண்டும். 40

**25. கர்ணபிரக்ஷாளனம் (காதைக் கழுவுதல்)**

ராஜவிருக்ஷாதி கூட்டுப் பொருள்களின் கஷாயத்தால் அல்லது சுரஸாதி கணக் கூட்டுப்பொருள்களின் கஷாயத்தால் காதைக் கழுவ வேண்டும். இம்மருந்துப் பொருள்களின் தூளைப் பிரதமன முறைப்படி பயன்படுத்த வேண்டும். 41

**26. கர்ணஸ்ராவ பூரணம்**

பாலுள்ள ஐந்து மரங்களின் பட்டைக் கஷாயத்தில் அல்லது இனி 46ஆம் சுலோகத்தில் கூறப்போகும் எட்டி முதலானவற்றின் கஷாயத்தில் வில்வச் சுரசத்தைச் சேர்த்து தேன் கலந்து அதனால் காதை நிரப்பினால் கர்ண ஸ்ராவம் தணியும். 42

ஸர்ஜ (மஞ்சள் ஸால மரம்) மரப்பட்டைத்தூள், காட்டுப் பருத்திக்காய் சுரசம் எனும் இவற்றில் தேன் கலந்து காதில் நிரப்பக் கர்ணஸ்ராவம் தணியும். 43

கொம்பரக்கு, ரஸாஞ்சனம், ஸர்ஜத்தூள் ஆகியவற்றை மைய தூளாக்கி அதனால் காதை நிரப்பினால் கர்ணஸ்ராவம் தணியும்.44

**27. சைவலாதி தைலம்**

சைவலம் அல்லது அருகம்புல், கொடிக்கள்ளி, நாவல், மா ஆகியவற்றின் தளிர், கர்கடகசிருங்கி, தேன், பிராம்மி எனும் இந்த மூலிகைகளைச் சம அளவில் கொண்டு கல் மேல் நீர்விட்டு அரைத்து விழுதாக்கி அதற்கு நான்கு மடங்கு எள் எண்ணெய், எண்ணெயின் அளவுக்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து முறையாக எண்ணெய் பக்குவம் செய்க. இதைக் காதில் நிரப்பினால் கர்ண ஸ்ராவம் முதலான நோய்கள் தணியும். இது சிறந்த மருந்தாகும்.45

**28. திந்துகாதிபல கஷாயம்**

எட்டிப்பழம், கடுக்காய், பாச்சோத்தி, மஞ்சிட்டி, நெல்லிக் கனி எனும் இந்த ஐந்து பொருள்களின் கஷாயம் அல்லது சுரசத்துடன் தேன், விளாம்பழச் சுரசம் கலந்து கர்ண ஸ்ராவம் முதலான நோய்களில் காதில் விடச் சிறந்த மருந்தாகும். 46

**29. ஆம்ரகபித்தாதி சுரசம்**

மா (ஆம்ர), விளா (கபித்த), இலுப்பை, தவம் சாலமரம் ஆகியவற்றின் பட்டையைக் கொண்டு தனித்தனியாகவோ,

அனைத்தையும் சேர்த்தோ சுரசம் அல்லது கஷாயம் செய்து காதுகளில் நிரப்பினால் நோய் தணியும். இவற்றின் விழுதை இவற்றின் கஷாயத்தில் கலந்து எண்ணெய்க் காய்ச்சிப் பயன்படுத்துவதும் சிறப்பான பலன் தரும். 47

## 30. பிரியங்க்வாதி தைலம்

ஞாழல், அதிமதுரம், வட்டத்திருப்பி, காட்டாத்தி, மனோ சிலை, சாலபர்ணி (ஓரிலை) மஞ்சிட்டி, பாச்சோத்தி, அரச மரத்தின் அரக்கு ஆகிய இவற்றின் கஷாயம் அல்லது விழுதுடன் விளாம்பழச்சுரசம் சேர்த்து எள் எண்ணெயும் கலந்து பக்குவம் செய்க. இந்த எண்ணெயைக் காதில் விட்டால் கர்ணஸ்ராவம் தணியும். 48

தாய்ப்பாலில் ரஸாஞ்சனத்தை குழைத்து தேன் கலந்து நாள்பட்ட கர்ணஸ்ராவம் அல்லது பூதிகர்ண நோயில் காதில் விடச் சிறந்த மருந்தாகும். 49

நொச்சி இலைச் சுரஸம், எள்எண்ணெய், இந்துப்பு, ரஸாஞ் சனம், ஒட்டடை, வெல்லம் ஆகியவற்றைத் தனித்தனியாகவோ அல்லது அனைத்தையும் கலந்தோ எண்ணெய் பக்குவம் செய்து தேன் கலந்து பூதிகர்ண நோயில் காதில் விட நோய் தணியும். 50

## 31. கிருமிகர்ண நோய்க்குச் சிகிச்சை

காதில் தோன்றும் கிருமிகளை அழிக்க கிருமியை அழிக்கவல்ல மருந்தைப் பயன்படுத்த வேண்டும். இதற்கு கந்தரி அல்லது கண்டங்கத்தரியின் உலர்ந்த பழத்தைப் புகையில்லாத நெருப்புத் தணலில் போட்டு அப்புகையைக் காதில் படச் செய்தால் அல்லது கடுகெண்ணெயைச் சூடாக்கி இளஞ்சூடுள்ள போது காதில் விட்டால் நோய் தீரும். 51

பசுவின் சிறுநீரில் அரிதாரத்தின் மைய அரைத்த தூளைக் கலந்து காதில் விட்டால் காதில் தோன்றும் கிருமிகள் அழியும். 52

## 32. கர்ணதௌர்கந்த்ய நோய்க்குச் சிகிச்சை

காதில் கெட்ட நாற்றம் தோன்றினால் குங்கிலிய புகை போட வேண்டும். மேலும் வாந்தி எடுக்கச் செய்தல், புகை பிடித்தல், கபளகிரகணம் ஆகிய முறைகளைப் பயன்படுத்துவது சிறந்த பலன் தரும். 53

கடுகு எண்ணெயைச் சூடாக்கி இளஞ்சூட்டில் காதில் விட்டால் கர்ணக்ஷ்வேடம் தணியும்.

### 33. கர்ணவித்ரதிக்குச் சிகிச்சை

வித்ரதி நோய்க்குக் கூறிய சிகிச்சை முறைகளை காதில் தோன்றும் வித்ரதிக்கும் பயன்படுத்த வேண்டும். 54

அறிவாற்றல் மிக்க மருத்துவர் காதுகளில் சேர்ந்த மலத்தைப் போக்க முதலில் எண்ணெயை விட்டுப் பிறகு வியர்க்கச் செய்யும் முறையைப் பின்பற்றி திரவமான மலத்தைச் சலாக யந்திரத்தின் மூலம் வெளியேற்ற வேண்டும். பிறகு காதுகளைப் பீச்சாங்குழலால் கழுவித் தூய்மைபடுத்த வேண்டும். 55

### 34. கர்ணகண்டூதிக்குச் சிகிச்சை

நாடீஸ்வேதம், வாந்தி எடுக்கச் செய்தல், புகை பிடித்தல், காதுக்குப் புகை போடுதல், தீக்ஷ்ணத் தன்மையுள்ள நஸிய மருந்து கொடுத்துச் சிரோவிரேசனம் செய்வித்தல் ஆகிய முறைகளையும் மற்றும் கபத்தை போக்கும் சிகிச்சை முறைகளையும் பயன் படுத்திக் காதில் தோன்றும் அரிப்பைப் போக்க வேண்டும். 56

### 35. கர்ண பிரதிநாஹ சிகிச்சை

முதலில் நோயாளியையும், அவரது காதையும் எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை ஆகியவற்றால் தூய்மை படுத்தியப் பிறகு தீக்ஷ்ணத் தன்மையுள்ள நஸிய முறையால் சிரோவிரேசனம் செய்வித்து தலை வலியைப் போக்கும் மற்ற சிகிச்சை முறைகளையும் செய்ய வேண்டும். 57

### 36. கர்ணபாக நோய்க்குச் சிகிச்சை

கர்ணபாகம் எனும் நோய்க்கு பித்தத்தால் தோன்றும் அக்கி நோய்க்குக் கூறிய சிகிச்சை முறைகளைப் பின்பற்ற வேண்டும். அவ்வாறே காதில் புகுந்த பூச்சி முதலியவற்றை அல்லது கர்ணத்தில் தோன்றும் சதசதப்பு, மலம் ஆகியவற்றை அறிவாற்றல் மிகுந்த மருத்துவர் சிருங்கம் ( கொம்பு) அல்லது சலாகை எனும் கருவியால் வெளியேற்ற வேண்டும். மற்றும் சிகித்ஸாஸ்தானத்தில் கூறப்பட்டுள்ள காது நோய்க்குச் சிகிச்சை முறைகளையும் தக்கபடிப் பயன்படுத்த வேண்டும். 58-59

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**கர்ணகதரோக பிரதிஷேதம் எனும்**

**இருபத்தொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

# * நாஸாகதரோக விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி மூக்கைச் சார்ந்த நோய்களை பற்றி விளக்குவோம். 1-2

## 1. மூக்கைச் சார்ந்து தோன்றும் நோய்கள்

அபீநஸம், பூதிநஸ்யம், நாஸாபாகம், நாஸாகத ரத்த பித்தம், நாஸாகதபூய சோணிதம், க்ஷவது, பிரம்சது, தீப்தம், நாஸாநாஹம், நாஸாபரிஸ்ராவம், நாஸா சோதம் என இந்தப் பதினொன்றும், நான்கு வகை நாஸார்சம், நான்கு வகை நாஸாசோபம், ஏழு வகை நாஸார்ப்புதம், ஐந்து வகை பிரதிசியாயம் என்பனவும் சேர்ந்து முப்பத்தொன்று நோய்கள் மூக்கைச் சார்ந்து தோன்றக் கூடியவையாகும். 3-5

## 2. அபீநஸ இலக்கணம்

வ [illegible] னால் கபம் உலர்ந்து போவதால் தடைப்பட்டது போலத் தோன்றியதும், பித்தம் சீற்றமடைந்த பிறகு புகை வெளி வருவது போல இருப்பதும், கபம் சீற்றமுறுவதால் (சேறு போலச்) சதசதப்புடன் கூடியதும், பித்தத்தின் சீற்றத்தால் உலர்ந்து போவதும் ஆன நிலைகளில் மூக்கின் செயல் தடைப்பட்டுப் போவதால் மணம் அறியாமை, மூக்கைச் சார்ந்த நோய்கள் தோன்றுவதற்கான தோஷங்கள் ஏற்படுவதால் சுவையை அறிவிக்கும் நரம்புகளும் கெடுவதால் நாக்கும் இனிப்பு, புளிப்பு முதலான (பொருள்களின்) சுவையை அறிய இயலாததாகிவிடும். இத்தகைய நோயாளி 'அபீநஸம்' எனும் நோயால் துன்புறுகிறவர் என்று அறிக. இவ்வாறு வாதத்தாலும், பித்தத்தாலும் தோன்றும் இந்நோய்க்கு பிரதிசியாயத்திற்கு உரிய இலக்கணங்களைக் கூற வேண்டும். 6

## 3. பூதிநஸ்ய இலக்கணம்

இரத்த பித்தங்களுடன் கபம் கூடி (உவர்ப்பு, புளிப்புச் சுவைகளுக்கு மாறாகப் பக்குவம் பெறுவதால்) கபம் உலர்ந்து

* நாஸா - மூக்கு. அதைச் சார்ந்த நோய்களைப் ப[illegible] கூறுவதால் இந்த அத்தியாயம் நாஸாகதரோக விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

பித்த இரத்தங்களின் தோஷத்தால் தொண்டை, தாடையின் அடிப்பகுதியில் கெட்ட நாற்றத்தைத் தோற்றுவிப்பதால் காற்று வாய் வழியாலும், மூக்கு வழியாலும் கெட்ட நாற்றத்துடன் வெளிவருமானால் அது பூதி நஸ்யம் எனும் நோயாகும். 7

**4. நாஸாபாக இலக்கணம்**

மூக்கின் உட்பகுதியில் சீற்றமுற்ற பித்தம் தங்கி சிறு கட்டிகளைத் தோற்றுவித்துவிடும். அதனால் அங்கு விரணம் தோன்றி அப்பகுதியைக் கெடுத்து விடும். ஈரத்தால் சதசதப்பு தோன்றும். அந்நோய் நாஸாபாகம் எனப்படும். 8

**5. நாஸாகத ரத்தபித்தம்**

இனி கூறப்போகும் அத்தியாயத்தில் வாத பித்த கப ஸந்நிபாதங்களாலும், கல்லீரல், மண்ணீரல்களைச் சார்ந்த கோளாறுகளாலும் இரத்தம் கெட்டு மேல் நோக்கி அல்லது கீழ் நோக்கிய இரத்த பித்தம் எனும் நோயைத் தோற்றுவிக்கும். அவ்வாறு இரத்த பித்தம் மூக்கைச் சார்ந்து இருக்குமானால் அது நாஸாகத இரத்தபித்த நோயாகும். (இரத்தபித்த நோய்க்கு உரிய அத்தியாயத்தில் அந்நோயின் இலக்கணம் காணலாம்.) 9

**6. நாஸாபூய இரத்த இலக்கணம்**

பித்தம், இரத்தம் ஆகியவற்றின் சீற்றத்தால் கெட்ட தோஷங்களால் அல்லது நெற்றிப் பகுதியில் அடிபடுதலால் மூக்கில் (உள்ள உயிர் நிலைகள் கெட்டு) இரத்தம் கலந்த சீழ் வெளிவரும். இது நாஸாபூய இரத்தம் எனும் நோயாகும். 10

**7. தோஷத்தால் தோன்றும் *க்ஷவது இலக்கணம்**

மூக்கில் உள்ள சிருங்காடகம் எனும் மர்மம் (உயிர் நிலை) கேடுறுவதால் அங்குள்ள காற்று தவறான உணவு, தவறான பழக்க வழக்கங்களால் வேறு ஏதேனும் புறக்காரணங்களால் கேடடைந்து கபத்தைத் தொடர்ந்து அடிக்கடி ஒலியுடன் மூக்கிலிருந்து வெளி வரும். இது தோஷங்களால் தோன்றிய க்ஷவது எனப்படும். 11

**8. ஆகந்துக க்ஷவது இலக்கணம்**

கடுகு, மிளகு போன்ற தீக்ஷ்ணத் தன்மையுள்ள பொருள் களைப் பயன்படுத்துவதாலும், சுக்கு, மிளகு, திப்பிலி, புகை யிலை போன்ற பொருள்களை அதிக அளவில் முகர்வதாலும், ஆதவனை வெகுநேரம் உற்றுநோக்குவதாலும், நூல் துணி

* க்ஷவது - தும்மல்.

முதலியவற்றை மூக்கினுள் செலுத்துவதால் தோன்றும் உராய் வினாலும் மூக்கினுள் உள்ள நாஸாஜவனிகா எனும் தருணாஸ்தி - எலும்பு மற்றும் சிருங்காடகம் எனும் மர்மங்களில் குழப்பம் தோன்றுவதால் (ஏற்படும் மேல் நோக்கிச் செல்லும் வாயுவால்) தும்மல் உண்டாகும். இது ஆகந்துக க்ஷவது எனப்படும். 12

### 9. பிரம்சது இலக்கணம்

தலை அல்லது மூக்குப் பகுதியில் முன்பே சேர்ந்து அடர்ந்து நிலை பெற்றிருந்த உவர்ப்புச் சுவை கொண்ட கபம் பித்தத்தின் வெப்பத்தால் அல்லது ஆதவனின் வெப்பத்தால் கரைந்து நாக்கு வழியே மிகுந்த அளவில் பெருகத் துவங்கும். இது பிரம்சது எனப்படும். 13

### 10. தீப்த்த இலக்கணம்

மூக்கு கடும் எரிச்சலுடன் கூடி புகை வெளிவருவது போன்ற உணர்ச்சியுடன் மூச்சு காற்று வெளிவருமாயின் அந்நோய் தீப்த்தம் எனப்படும். 14

### 11. நாஸாபிரதீநாஹ இலக்கணம்

உதானம் எனப்படும் வாயு கபத்தால் சூழப்பட்டு தன் வழி வெளிச்செல்லும் போது மூக்கு அடைப்புக்கு உள்ளாகும். மூக்கில் ஆநாஹம் என்பது தோன்றுவதால் இது நாஸாபிரதீநாஹம் எனப்படும். 15

### 12. நாஸாபரிஸ்ராவ இலக்கணம்

நீரைப் போல மூக்கிலிருந்து நிறமற்ற சளி ஒழுகிக் கொண்டிருப்பது, இரவு நேரங்களில் மிகுதியாகப் பெருகுவதுமான நோய் நாஸாபரிஸ்ராவம் எனப்படும். 16

### 13. நாஸாபரிசோஷ இலக்கணம்

வாதம் சீற்றமடைந்து வறண்டு சீற்றம் பெற்ற பித்தத்தின் வெப்பத்தால் மூக்கில் உள்ள கபத்தை மிகுதியாக உலர்த்திவிடும். அதனால் மேல் மூச்சும், கீழ் மூச்சுமாக மிக்க சிரமத்துடன் நோயாளி மூச்சு விட்டுக் கொண்டிருப்பார். இது நாஸா பரிசோஷம் எனும் நோயாகும். 17

### 14. மூக்கில் தோன்றும் அர்சஸ், சோபம், அர்புதம் ஆகியவற்றின் இலக்கணம்

வாதம் முதலான மூன்று தோஷங்களாலும், தனித்தனி யாகவும், மூன்றும் சேர்ந்து ஸந்நிபாதத்தாலும் தோற்றுவிக்கும்

அர்சஸ் எனும் நோய் நான்கு வகையாகும். இதைப் போல வீக்கமும் நான்கு வகைப்படும். சாலாக்ய தந்திரப்படி நிதானத்தில் கூறப்பட்ட ஆறு வகை அர்புதங்களுடன் ஸந்நிபாதத்தால் தோன்றுவது ஒன்றும் ஆக ஏழு வகை அர்புதங்கள் உண்டாகும். இங்கு கூறப்பட்ட ஐந்து வகை பிரதிசியாய இலக்கணம் வரப்போகும் அத்தியாயத்தில் விளக்கப்படும். 18-19

இவ்வாறு மூக்கில் தோன்றும் முப்பத்தோரு நோய்களைப் பற்றிய இலக்கணங்கள் இங்கு கூறப்பட்டன. மூக்கு எனும் ஸ்ரோதஸ்களின் வழியில் பரவிய அர்புதம் எனும் கட்டியொன்றும் தோன்றும். 20

மூக்கு எனும் ஸ்ரோதஸ்ஸில் தோன்றக் கூடிய வீக்கம் என்பதன் இலக்கணம் சோப விஞ்ஞானீயம் எனும் அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ளது. அதைப் போல அர்சஸ் என்பது பற்றியும் அர்சஸ் எனும் நோய்க்கு நிதான ஸ்தானத்தில் கூறப்பட்டபடி காரணம், இலக்கணம், தோற்றம் ஆகியவற்றையும் அங்கு காண்க. 21

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**நாஸாகதரோக விஞ்ஞானீயம் எனும்**

**இருபத்திரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்திமூன்றாம் அத்தியாயம்
# * நாஸாகதரோக ப்ரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி மூக்கு நோய்களுக்கான சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

**1. அபீநஸ - பூதிநஸ்யங்களுக்குச் சிகிச்சை**

அபீநஸ, பூதிநஸ்ய நோய்களுக்கு முதலில் எண்ணெய் பசை தோற்றுவித்து வியர்க்கச் செய்து பிறகு வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் எனும் முறைகளைப் பின்பற்ற வேண்டும். பிறகு தக்க தீக்ஷ்ணமான, இலேசில் செரிமானமாகக் கூடிய உணவை அளவோடு உட்கொள்ளச் செய்க. குடிக்க வெந்நீரையே பயன்படுத்தச் செய்க. உணவு உட்கொண்ட பிறகு தோஷத்திற்கு ஏற்பப் புகை பிடிக்கச் செய்ய வேண்டும். 3

அபீநஸ, பூதிநஸ்ய நோய்களுக்குப் பெருங்காயம், சுக்கு, மிளகு, திப்பிலி குடசப்பாலை, வெள்ளைச்சாரடை, அரசமரப்பிசின், துளசி விதை, காயபலம், வசம்பு, கோஷ்டம், கடுகு, வாயுவிடங்கம், புங்கன் விதை ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நன்கு தூள் செய்து கண்ணாடிக் குப்பியில் வைத்துக் கொள்க. இதை அவபீடன நஸிய முறையில் பயன்படுத்துவது சிறந்த முறையாகும். இந்தப் பொருள்களின் விழுது செய்து அதற்கு நான்கு மடங்கு கடுகு எண்ணெய், எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு பசுவின் சிறுநீர் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சி அதை நஸியமாகப் பயன்படுத்துக. 4

**2. நாஸாபாகத்திற்குச் சிகிச்சை**

நாஸாபாக நோய்க்கு மூக்கின் புறம், அகம் எனும் இரண்டிலும் பித்தத்தைத் தணிக்கச் செய்யும் சிகிச்சை முறைகளை பின்பற்ற வேண்டும். மற்றும் கெட்ட இரத்தத்தை அட்டைப்பூச்சிகளைப் பயன்படுத்தி ஸிரைகளிலிருந்து

* நாஸாகத ரோகம் - மூக்கைச் சார்ந்த நோய்கள். அவற்றிற்கான சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் நாஸாகதரோக ப்ரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

வெளியேற்றிப் பாலுள்ள ஆல், அரசு முதலான மரங்களின் பட்டைக் கஷாயத்தால் மூக்கைக் கழுவி அக்கஷாயத்தைக் கொண்டு ஸேகம் (நனைத்துக் கொண்டிருத்தல்) எனும் முறையைச் செய்து நெய் கலந்த மருந்தை மேல் பூச்சாகப் பூச வேண்டும். 5

### 3. நாஸாகத இரத்த பித்தத்திற்குச் சிகிச்சை

நாஸாகத இரத்தபித்த நோய்க்கு சிகிச்சை இந்த ஸ்தானத்தில் நாற்பத்தைந்தாம் அத்தியாயமாகிய . இரத்த பித்த நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளில் கூறப்படும். நாஸாகதபூய ரக்தம் எனும் நோய்க்கு நாடீ விரணத்திற்கு உரிய சிகிச்சை முறையைக் கையாள வேண்டும். மற்றும் வாந்தி எடுக்கச் செய்து அவபீடன நஸிய முறையைப் பின்பற்ற வேண்டும். தீக்ஷ்ணத்தன்மை கொண்ட மருந்துப் பொருள்களால் புகை பிடிக்கச் செய்தல், சிரோவிரேசன முறை, மற்றும் வாந்தி எடுக்கச் செய்தல், பேதியாகச் செய்தல் என்பனவற்றால் மேல், கீழ் உடற் பகுதிகளைத் தூய்மை பெறச் செய்து நஸிய முறையைப் பின்பற்ற வேண்டும். 6

### 4. க்ஷவது, பிரம்சது எனும் நோய்க்குச் சிகிச்சை

க்ஷவது, பிரம்சது எனும் நோய்களில் சிரோவிரேசனம், நாடீ சூரணத்தைக் கொண்டு நாடீ யந்திரத்தின் வழியே பிரதமன நஸியமாகச் செய்ய வேண்டும். மேலும் வியர்க்கச் செய்தல், சிரோவஸ்தி, வாதத்தைப் போக்கும் எண்ணெய்ப்பசை கொண்ட புகைபிடித்தல் மற்றும் தக்க சிகிச்சை முறைகள் ஆகியவற்றை உக்தியுடன் பின்பற்ற வேண்டும். 7

### 5. தீப்த்தம் எனும் நோய்க்குச் சிகிச்சை

தீப்த்தம் எனும் நோய்க்குப் பித்தத்தைப் போக்கும் சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். உடலின் அகத்தையும், புறத்தையும் சார்ந்த பணிவிடைகளை இனிப்புச் சுவை மற்றும் குளுமைத் தன்மையைக் கொண்ட பொருள்களால் செய்ய வேண்டும். 8

### 6. நாஸாநாஹ நோய்க்குச் சிகிச்சை

நாஸாநாஹ நோய்க்கு உணவுக்கு முன்பும், உண்ட பிறகும் எண்ணெயை பருகச் செய்ய வேண்டும். மேலும் எண்ணெய் பசை கொண்ட புகை பிடிக்கச் செய்தல், சிரோவஸ்தி முறைகளைப் பின்பற்ற வேண்டும். மூடகர்ப்ப அதிகாரத்தில் கூறப்பட்ட் பலா தைலத்தைப் பருகவும், குளிக்கவும், அநுவாஸன

வஸ்தியாகச் செயல்படுத்தவும், சிரோவஸ்தியாகச் செய்யவும் பயன்படுத்த வேண்டும். வாத வியாதிக்கு உரிய சிகிச்சைக்குக் கூறிய அணுதைலம் முதலியவற்றை பயன்படுத்த வேண்டும். 9

### 7. நாஸாஸிராவத்திற்குச் சிகிச்சை

சிரோவிரேசனத்திற்குப் பயன்படுத்தப்படும் பொருள்களாலான தூளை அவ்வாறே பெருங்காயம், சுக்கு முதலான தீக்ஷ்ணப் பொருள்களாலான அவபீடந நஸிய முறையை நாடியின் வழியே பிரதமன நஸிய முறையில் மூக்குத் துளைக்குள் செலுத்த வேண்டும். மேலும் தேவதாரு, கொடிவேலி முதலிய பொருள்களால் தீக்ஷ்ணமான புகை பிடிக்கச் செய்ய வேண்டும். ஆட்டின் புலால் அல்லது அதனாலான சுரசம் என்பதுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். 10

### 8. நாஸா சோஷத்திற்குச் சிகிச்சை

நாஸா சோஷம் எனும் நோய்க்கு பாலைக் கடைந்து எடுத்த புதிய நெய்யைப் பருகச் செய்ய வேண்டும். மேலும் வாத வியாதிக்கு கூறப்பட்ட அணுகல்பன முறையால் செய்த எண்ணெய் மருந்தை நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். நெய்யைப் பருகுதல், காட்டு விலங்கு, பறவை ஆகியவற்றின் புலாலுடன் உணவு உட்கொள்ளச் செய்தல் ஆகியவை நல்ல முறைகளாகும். மற்றும் எண்ணெய் முறை, வியர்க்கச் செய்யும் முறை, எண்ணெய் பசை கொண்ட புகை பிடித்தல் ஆகியவையும் நலம் தரும். 11

மூக்கில் தோன்றக்கூடிய மற்ற அர்புதம், சோதம், அர்சஸ் முதலான நோய்களுக்கு அந்தந்த நோய்களுக்குரிய அதிகாரங்களில் சிகிச்சை முறைகள் கூறப்பட்டுள்ளன. அவற்றைப் பின்பற்றிச் சிகிச்சை செய்ய வேண்டும். 12

ஸுசுருதஸம்ஹிதை – உத்தரஸ்தானத்தில்

நாஸாகதரோக பிரதிஷேதம் எனும்

இருபத்திமூன்றாம் அத்தியாயம் முற்றும்.

# இருபத்திநான்காம் அத்தியாயம்

# * பிரதிசியாய பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக் உபதேசம் செய்தபடி பிரதிசியாயம் என்பதற்கு உரிய சிகிச்சை முறையை விளக்குவோம். 1-2

## 1. பிரதிசியாயம் தோன்றக் காரணம்

கலவியில் மிகுதியாக ஈடுபடுதல், தலை அதிக அளவு வெப்பத்திற்கு உட்படுதல், புகையின் தொடர்பு, தூசி நாசிக்குள் புகுதல், குளிர்ச்சி மிகுந்த இடத்தில் படுத்து உறங்குதல் அல்லது குளுமை அதிக அளவில் உடலில் படுதல், வெயிலில் சுற்றுதல், மலம், சிறுநீர் ஆகியவற்றின் வேகத்தைத் தடுத்தல் எனும் காரணங்களால் உடனே (பிரதிசியாயம்) சளி பிடிக்கும். 3

வாதம் முதலான தோஷங்கள், இரத்தம் ஆகியவை தனித்தனியாகவோ அனைத்தும் சேர்ந்தோ தலைக்குள் சேர்ந்து பிறகு வலிமை கொண்டவரை எதிர்த்தல், பகலில் உறங்குதல் போன்ற காரணங்களால் சீற்றம் பெற்று பிரதிசியாயம் எனும் நோயைத் தோற்றுவிக்கும். 4

## 2. பிரதிசியாயத்திற்கு முற்குறிகள்

தலை பளுவாகத் தோன்றல், தும்மல் மிகுதல், உறுப்புகளில் பிசைந்து விடுவது போன்ற வலி, மயிர்க்கூச்சம் அடிக்கடி தோன்றுதல், பலவகைக் காய்ச்சல், சுவையின்மை போன்றவை பிரதிசியாயத்தின் முற்குறிகளாகும். 5

## 3. வாதத்தால் தோன்றும் பிரதிசியாயம்

மூக்கு தடைப்பட்டது போல, அடைபட்டது போல தோன்று தல், மெல்லிய திரவம் ஒழுகிக் கொண்டிருத்தல், கழுத்து, தாடை, உதடு போன்ற பகுதிகளில் வீக்கம், பொட்டுப் பகுதியில் ஊசி யால் குத்துவது போன்ற வலி, குரல் மாறுபாடு என்பன வாதத் தால் தோன்றும் சளி (பிரதிசியரயத்தின்) இலக்கணங்களாகும். 6-7

---

* பிரதிசியாயம் - சளி பிடித்தல். இடைவிடாது சளி பெருகும் பிரதிசியாயம் எனும் நோய்க்கு உரிய சிகிச்சை முறைகளைக் கூறுவதால் இந்த அத்தியாயம் பிரதிசியாய பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

### 4. பித்தத்தால் தோன்றும் பிரதிசியாயம்

மூக்கு வெப்பத்துடன் மஞ்சள் நிறத்தில் சளி ஒழுகிக் கொண்டு வலிமை குறைந்து உடலில் மிக்க மஞ்சள் நிறம் தோன்ற வெப்பம் கொண்டு மிக்க நாவறட்சியுடன் நோயாளி காணப்படுவார். வாயிலிருந்தும், மூக்கிலிருந்தும் புகையுடன் நெருப்பு வெளிவருவது போன்ற உணர்ச்சி தோன்றினால் அது பித்தத்தால் தோன்றிய பிரதிசியாய நோய் என அறிக. 8

### 5. கபத்தால் தோன்றிய பிரதிசியாய இலக்கணம்

பிருந்து குளிர்ந்த வெண்ணிற சளி ஒழுகுதல், உடல் வெளுத்து காணப்படுதல், கண்கள் வீங்கி தலை, வாய்ப்பகுதி முதலியன பளுவாக தோன்றுதல், தலை உதடு தாடைப் பகுதிகளில் அரிப்பு தோன்றுதல் முதலியன கபத்தால் தோன்றும் பிரதிசியாயத்தின் இலக்கணங்களாகும். 9

அடிக்கடி சளி பிடித்து திடீரெனத் தானே மறைதல், சில சமயங்களில் பக்குவம் பெறுதல் (முற்றி போதல்), சில நேரங் களில் பக்குவம் பெறாமை போன்ற இலக்கணங்கள் காணப் பட்டால் அது அனைத்து தோஷங்களாலும் தோன்றிய பிரதிசி யாயம் என்று உணர்க. 10

### 6. இரத்தத்தின் சீற்றத்தால் தோன்றும் பிரதிசியாய இலக்கணம்

மூக்கிலிருந்து சிவப்பு நிறத்தில் சளி ஒழுகுதல், கண்கள் சிவத்தல், மார்பில் அடிபட்டது போன்ற துன்பம், மூக்கிலும் வாயிலிருந்தும் கெட்ட நாற்றம் தோன்றுதல், நோயாளிக்கு மணமறியும் திறமை இல்லாமை, வெண்ணிறத்தில் சிறு பூச்சிகள் மூக்கிலிருந்து விழுதல், கிருமிகளால் தோன்றும் தலை நோய்க்கு கூறிய இலக்கணங்களைக் கொண்டிருத்தல் என்பன இரத்தத்தால் தோன்றும் பிரதிசியாயத்தின் இலக்கணங்களாகும். 11-13

### 7. கெட்ட பிரதிசியாய இலக்கணம்

மூக்கு ஈரப்பசை கொண்டிருத்தல், சில நேரங்களில் உலர்ந்து விடுதல், சில நேரங்களில் திறந்திருப்பது போலத் தோன்றுதல், சில நேரங்களில் அடைப்பட்டிருத்தல், மூச்சு உள்ளிழுத்துக் கொள்ளும் போதும், வெளிவரும் போதும் கெட்ட நாற்றம் தோன்றுதல் எனும் இலக்கணங்களைக் கொண்ட பிரதிசியாயம் கெட்ட (துஷ்ட) பிரதிசியாயம் எனப்படும். இது மிகவும் சிரமப்பட்டு நீக்கக் கூடிய நோயாகும். 14-15

**8. பிரதிசியாயத்தில் தோன்றும் துன்பங்கள்**

தக்க சிகிச்சை செய்யாவிடில் வாதம் பித்தம் முதலிய தோஷங்களால் தோன்றிய பிரதிசியாயம் காலம் கடந்து வேறு வகை நோய்களைத் தோற்றுவிக்கும். அது கெட்ட பீநஸம் (கொடிய நாள்பட்ட சளி) எனும் நோயாகி விடும். நன்கு முற்றிய பிரதிசியாயம், பீநஸம், செவிட்டுத்தன்மை, குருட்டுத் தன்மை, மூக்கின் வலிமை அழிதல், கொடிய கண் நோய், இருமல், சடராக்னி குறைவு போன்ற துன்பங்களை விளைவிக்கும். 16-17

**9. பிரதிசியாயத்திற்குப் பொது சிகிச்சை**

புதிதாக தோன்றும் பிரதிசியாயத்தை விட்டு மற்ற பிரிதிசி யாயங்களில் நெய்யைப் பருகச் செய்தல் எனும் முறையால் சிகிச்சை செய்க. பிறகு பல வகையான வியர்க்கச் செய்யும் முறைகள் செய்வித்து தக்க சமயத்தில் நிலைமைக்கு ஏற்ப வாந்தி எடுக்கச் செய்து அவபீடன நஸிய முறையைப் பின்பற்றுக. 18

பக்குவம் பெறாத (நன்கு முற்றாத) பிரதிசியாயத்திற்கு பக்குவம் பெறச் செய்ய புளிப்புக்காடி முதலான புளிப்புச் சுவை மிக்க பொருள்களால் வியர்க்கச் செய்ய வேண்டும் அல்லது பாலில் இஞ்சிச் சாற்றைக் கலந்து காய்ச்சி பருகச் செய்க. மேலும் சுக்கும், வெல்லமும் சேர்த்துச் செய்த பண்டங்களை உட்கொள்ளச் செய்க. 19

**10. பக்குவம் பெற்ற பிரதிசியாயத்திற்குச் சிகிச்சை**

நன்கு முற்றியதாகி அல்லது தக்க சிகிச்சை செய்வதால் முற்றிய நிலையில் உள்ள பிரதிசியாயத்தில் கபம் அடர்த்தி பெற்றுக் கட்டியாகி மூக்கில் தொங்கிக் கொண்டிருக்கும். அந் நிலையில் தீக்ஷ்ண தன்மை கொண்ட நாயுருவி விதை, வாயு விடங்கம், திப்பிலி போன்றவற்றின் தூளைக் கொண்டு நஸிய முறையைச் செய்வித்து கபத்தை நீக்க வேண்டும். சிரோவிரே சனம் தவிர கஷாய விரேசனம், ஆஸ்தாபன வஸ்தி, புகைபிடித்தல், கபள கிரஹம் (மருந்துப் பொருளை வாய்க்குள் கொண்டிருத்தல்) போன்ற முறைகளால் தோஷத்திற்கு ஏற்ற சிகிச்சை செய்ய வேண்டும். 20

**11. பக்குவம் பெற்ற பிரதிசியாயத்தில் மேற் கொள்ளத்தக்கவை**

குளிர்காற்று புகாத அறையில் உறங்குதல் மற்றும் இருத்தல், விளையாட்டு முதலிய செயல்களில் ஈடுபடுதல், தடித்த துணியால் தலையைக் கட்டிக் கொள்ளுதல், தடித்த துணியால்

உடலைப் போர்த்திக் கொள்ளுதல், கம்பளியாலான ஆடை அணிதல், தீக்ஷ்ணத்தன்மை கொண்ட பொருள்களால் விரேசன சிரோவிரேசன முறைகளைப் பயன்படுத்துதல், புகைப்பிடித்தல், வறட்சித்தன்மை கொண்ட பொருள்களை உட்கொள்ளுதல், யவ தானியத்தாலான ரொட்டி முதலியவற்றை உணவாகக் கொள்ளுதல் போன்றவை பிரதிசியாய நோய் முற்றிய போது மேற்கொள்ளத் தக்கவையாகும். 21

### 12. பிரதிசியாய நோயில் விலக்கத்தக்கவை

குளிர்ந்த நீரைப் பருகுதல், குளிர்ந்த நீரில் குளித்தல், கலவியில் ஈடுபடுதல், நீரில் மூழ்கிக் குளித்தல், கவலைப்படுதல், குளிர்ச்சியுள்ள நீர் நிலை அருகில் தோட்டம் முதலியவற்றில் வசித்தல், மிக்க வறட்சி கொண்ட பொருள்களைப் பயன்படுத்துதல், மலம் சிறுநீர், விக்கல் முதலியவற்றின் வேகங்களைத் தடுத்தல், வருந்துதல், புதிய மது வகைகளைப் பருகுதல் போன்றவை பிரதிசியாய மற்றும் பீநஸம் எனும் நோய் கொண்டவர்கள் விலக்கத் தக்கவையாகும். 22

### 13. துன்பத்துடன் கூடிய பிரதிசியாய பீநஸங்களுக்குச் சிகிச்சை

வாந்தி, உறுப்புகளில் வலி, காய்ச்சல், உடல்பளு, சுவையின்மை, அதிஸாரம் போன்ற துன்பங்களுடன் கூடிய பிரதிசியாயத்தில் அல்லது பீநஸ நோய்க்கு முதலில் பட்டினி கிடக்கச் செய்த பிறகு செரிமானத்தைத் தூண்டும் பொருள்களை பயன்படுத்தச் செய்க. 23

வாதத்தாலும், கபத்தாலும் தோன்றும் நோய் கொண்ட நல்ல வாலிப பருவத்தில் உள்ள நோயாளிக்கு நீர்ப்பகுதி மிகுந்தவற்றைப் பருகச் செய்து வாந்தி எடுக்கச் செய்ய வேண்டும். காய்ச்சல். அதிஸாரம், சுவையின்மை போன்ற வேறு துன்பங்களுடன் கூடியிருக்கும் நோயாளிக்கு மருத்துவ நூலில் கூறப்பட்டுள்ள மருந்துப் பொருள்களால் கஞ்சி முதலிய உணவுப் பொருள்களைத் தந்து சிகிச்சை செய்ய வேண்டும். இவ்வாறு முன்பு கூறிய தலைப்பளு, தொண்டை தாடை முதலியவற்றில் தோன்றியக் துன்பங்கள் தணிந்த பிறகு பத்தியமான உணவு உண்ணுதல், தகுந்த பழக்க வழக்கங்களை மேற்கொள்ளுதல் முதலியன செய்யத்தக்கவை. 24

### 14. வாதபிரதிசியாய சிகிச்சை

முறையாக எண்ணெயைப் பருகச் செய்தல், ஐந்து வகை உப்புகளால் செய்த அல்லது விதாரிகந்தாதி கூட்டுப் பொருள்

களாலான விழுதையும், கஷாயத்தையும் சேர்த்து காய்ச்சிய நெய்யைப் பயன்படுத்துதல், மற்றும் அர்தித நோய்க்குத் தக்க நஸியம் முதலான சிகிச்சை முறைகள் முழுவதையும் பயன் படுத்துதல் ஆகியவை செய்யத்தக்கவையாகும். 25

## 15. பித்த மற்றும் இரத்தத்தாலான பிரதிசியாய சிகிச்சை

பித்தம் மற்றும் இரத்தத்தாலான பிரதிசியாயத்தில் காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் விழுதையும், கஷாயத்தையும் சேர்த்துக் காய்ச்சிய நெய் மருந்தைப் பருகச் செய்தல், குளிர்ச்சி தரும் பொருள்களின் சுரசம் அல்லது சீதகஷாயம் முதலிய வற்றால் உடலைச் சிறப்பாகத் தலையைப் பரிஷேகனம் செய்தல், சந்தனம், கர்ப்பூரம், இலவங்கம் போன்ற சீதாபிரகிருதிப் (இயற்கையாகக் குளுமைத் தன்மை கொண்ட) பொருள்களால் தலையில் பற்று போடுதல் முதலிய முறைகள் நன்மை தரும். 26

ஸரளம், தேவதாரு, பிசின், ஸர்ஜக்ஷாரம், சிவப்புச் சந்தனம், ஞாழல், தேன், சர்க்கரை, திராட்சை, சீந்தில் கொடி, கோஜிஹ்வா, குமிழன், அதிமதுரம் ஆகிய இப்பொருள்களின் விழுதாலான நெய்யைப் பருகச் செய்தல் அல்லது இப்பொருள் களாலான கஷாயத்தைக் கபளதாரண (வாயில் வைத்துக் கொண்டு கொப்பளித்தல்) முறையைச் செய்தல், அதிமதுரம் முத லிய இனிப்புச் சுவை கொண்ட மருந்துப் பொருள்களால் பேதி யாகச் செய்தல் போன்ற முறைகளைப் பின்பற்ற வேண்டும். 27

## 16. தவம் முதலானவற்றாலான எண்ணெய்

தவமரப்பட்டை, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கருஞ்சிவதை, பாச்சோத்தி, அதிமதுரம், குமிழன், மஞ்சள் எனும் இப்பொருள்களைச் சம அளவில் கொண்டு நீர் விட்டரைத்து விழுதாகச் செய்து இந்த விழுதுக்கு நான்கு மடங்கு எள் எண்ணெய், எண்ணெயின் அளவுக்குப் பத்து மடங்கு பசுவின் பால், நன்கு பக்குவம் பெற நான்கு மடங்கு நீர் சேர்த்து முறைப்படி எண்ணெய் மருந்து செய்து வடிகட்டிக் கண்ணாடிக் குப்பியில் வைக்கவும். இந்த தவாதிதைலத்தைப் பித்தத்தால் மற்றும் இரத்தத்தால் தோன்றும் பிரதிசியாய நோயில் தக்க சமயத்தில் நஸிய மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 28-29

## 17. கபத்தால் தோன்றும் பிரதிசியாய சிகிச்சை

கபத்தால் தோன்றும் பிரதிசியாயத்திற்கு முதலில் புகை பிடிக்கச் செய்து எண்ணெய் பசை உண்டாக்கி எள் மற்றும் உளுந்தாலான கஞ்சியைப் பருகச் செய்க. பிறகு கபத்தைப்

போக்க தக்க மருந்துகளை உட்கொள்ளச் செய்க. அல்லது பேயா முதலான சிறப்பு உணவு முறைகளைப் பின்பற்றச் செய்க. 30

### 18. பலாதி தைலம்

சிற்றாமுட்டி, பேராமுட்டி, முள்ளுக்கத்தரி, கண்டங்கத்தரி, வாயுவிடங்கம், நெருஞ்சில், நாகதந்தி, குமிழன், சாரடை ஆகிய வற்றைச் சம அளவில் கொண்டு நன்கு அரைத்து விழுதாக்கி அதற்கு நான்கு மடங்கு எள்எண்ணெய், எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து முறையாக எண்ணெய் பக்குவம் செய்க. இது பலாதி தைலம் ஆகும். இதைக் கபத்தால் தோன்றிய பிரதிசியாயத்தில் நஸிய முறைக்குப் பயன் படுத்துக. 31-32

### 19. பிரதிசியாயத்திற்கு வத்தி

ஸரளம், நாயுருவி, தேவதாரு, ஹிங்கோடம் (நஞ்சுண்டமரம்) ஆகியவற்றை சம அளவில் கொண்டு நீரில் அரைத்து வத்தி யாகச் செய்து உலர்த்திப் பத்திரப்படுத்துக. இதைப் புகைபிடிக்கப் பயன்படுத்தினால் பிரதிசியாயம் தணியும். 33

### 20. ஸந்நிபாத பிரதிசியாயத்திற்குச் சிகிச்சை

கார்ப்பு, கசப்புச் சுவைகளைக் கொண்ட பொருள்களாலான நெய் மருந்து, தீக்ஷ்ணதன்மையுள்ள பொருள்களாலான புகை பிடிக்கும் முறை, கார்ப்புச் சுவை கொண்ட பொருள்களாலான சூரணம், குளிகை, லேகியம் முதலியவற்றைப் பயன்படுத்துதல் ஆகியவை ஸந்நிபாத பிரதிசியாய நோயைத் தணிக்கும். 34

### 21. ரஸாஞ்சனாதி நஸிய தைலம்

ரஸாஞ்சனம், அதிவிடயம், கோரைக்கிழங்கு, தேவதாரு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு தண்ணீர் விட்டரைத்து விழுதாக்கி அதற்கு நான்கு மடங்கு எண்ணெய், எண்ணெய்க்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து முறைப்படி பக்குவம் செய்க. அறி வாற்றல் மிக்க மருத்துவர் இதை ஸந்நிபாத பிரிதிசியாயத்திற்கு நஸிய மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 35

### 22. முஸ்தாதி கபளம்

கோரைக்கிழங்கு, தேஜோவதி, வட்டத்திருப்பி, காயபலம், கடுகரோகிணி, வசம்பு, கடுகு, திப்பிலிமூலம், திப்பிலி, இந்துப்பு, கொடிவேலி, மயில்துத்தம், புங்கன் விதை, சாதாரண உப்பு,

தேவதாரு ஆகியவற்றைச் சம அளவில் கொண்டு நீர்விட்டு அரைத்து எட்டு மடங்கு நீருடன் கஷாயம் காய்ச்சி நான்கில் ஒரு பங்கு இருக்கும்போது இறக்கி அதை கபள தாரணத்திற்கு (வாயில் கொண்டிருந்து கொப்பளித்தல்) பயன்படுத்த வேண்டும். இவ்வாறே முன் கூறிய கோரைக்கிழங்கு முதலியவற்றின் விழுதால் பக்குவம் செய்த எண்ணெயால் சிரோவிரேசன முறையைச் செய்தல் நன்மை தரும். 36-37

**23. தசக்ஷீரகிருதம்**

காட்டு விலங்கு மற்றும் பறவைகளின் புலாலை விழுதாக்கி அதற்கு எட்டு மடங்கு பால், பாலின் அளவிற்குப் பாதி நீர், நீரில் தோன்றும் தாமரை முதலியவற்றின் விழுது, வாதத்தைப் போக்கும் தசமூலம், மற்றும் விதாரிகந்தாதி கூட்டுப் பொருள் களின் விழுது சேர்த்து பால் முறையாகப் பக்குவம் செய்க. பால் அளவு மிகுந்திருக்கும்போது இறக்கி குளிர வைத்துப் பாலை கடைந்து நெய் எடுக்கவும். அந்த நெய்யில் ஏலாதிக் கணக் கூட்டுப் பொருள் சேர்த்து சர்க்கரை, நன்னாரி, அதிமதுரம், சிவப்புச் சந்தனம், ஆகியவற்றின் விழுது நெய்யில் நான்கில் ஒரு பங்கு சேர்த்து நான்கு மடங்கு நீர் விட்டு நெய் பக்குவம் செய்க. இந்த நெய்யை நஸியமாகப் பயன்படுத்தினால் எல்லா வகை பிரதிசியாய நோய்களும் தீரும். இந்த நெய்யைப் போலவே வாதம் முதலிய தோஷங்களைப் போக்கும் மருந்துப் பொருள் களின் விழுதுடன் முறைப்படி எண்ணெய்ப் பக்குவம் செய்து அவற்றை நஸிய முறைக்குப் பயன்படுத்துக. 38-41

**24. நாஸாகிருமி நோய்க்குச் சிகிச்சை**

மூக்கில் கிருமிகள் தோன்றுவதற்கு கிருமிகளைப் போக்கும் வாயுவிடங்கம் முதலிய மருந்துப் பொருள்களை பசுவின் சிறுநீர் அல்லது பசுவின் பித்தம் சேர்த்து அரைத்து நஸியமாகப் பயன்படுத்துக. கிருமிரோகஹர அத்தியாயத்தில் புகை நஸியம் முதலியன கூறப்படும். அவற்றைப் பயன்படுத்த வேண்டும். தவிர ஸூரஸாதிக்கணக் கூட்டுப் பொருள்களையும் அறிவாற்றல் மிக்க மருத்துவர் பயன்படுத்த வேண்டும். 42

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**பிரதிசியாய பிரதிஷேதம் எனும்**

**இருபத்திநான்காம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்தைந்தாம் அத்தியாயம்
# * சிரோரோக விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சிரோரோக விஞ்ஞானீயம் எனும் அத்தியாயத்தை விளக்குவோம். 1-2

**1. தலையைச் சார்ந்து தோன்றும் நோய்கள்**

வாதம், பித்தம், கபம் இம்மூன்றும் சேர்ந்துள்ள ஸந்நிபாதம், இரத்தம், ரஸம் முதலான தாதுக்கள் குறைந்து போதல், கிருமிகள், மற்றும் ஸூர்யாவர்த்தம், அனந்த வாதம், அர்த்தாவபேதகம், சங்கம் என பதினோரு வகையான நோய்களால் மனிதனின் தலை துன்புறும். இத்தகைய பதினோரு நோய்களின் இலக்கணங்கள் இனி கூறப்படும். 3-4

**2. வாதிகசிரோரோக இலக்கணம்**

காரணம் இல்லாமல் தலையில் வலி தோன்றி இரவு நேரங்களில் அது அதிக அளவில் தோன்றுமானால் தலையைத் துணியால் இறுக கட்டியதாலும், நெருப்புத் தணலின் வெப்பத்தில் காய்ச்சிய துணியால் ஒற்றடம் கொடுப்பதாலும் வலி தணிந்தால் அது வாதத்தால் தோன்றிய நோய் என்று உணர்க. 5

**3. பித்தத்தால் தோன்றும் தலை நோய் இலக்கணம்**

தலை, கண், மூக்கு ஆகியவற்றில் எரிச்சல், அப்பகுதிகள் நெருப்பால் சுடப்படுவது போன்ற உணர்ச்சி, கண்களிலிருந்தும், மூக்குத் துளைகளிலிருந்தும் புகை வருவது போன்ற உணர்ச்சி, குளிர்ச்சி தரும் பனிவிடைகளாலும், இரவு நேரத்திலும் துன்பம் தணிதல் என்பன காணப்பட்டால் அது பித்தத்தால் தோன்றும் தலை நோய் என உணர்க. 6

**4. கபத்தால் தோன்றும் தலைநோய் இலக்கணம்**

தலை, கழுத்து முதலான உறுப்புகள் கபத்தால் சூழப்பட்டுப் பளுவாகத் தோன்றுதல், செயலற்றிருத்தல், பனிக்கட்டி போல

---

*சிரம் - தலை. தலையைச் சார்ந்த நோய்களை பற்றி விளக்குவதால் இந்த அத்தியாயம் சிரோரோக விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

குளிர்ச்சியுடன் இருப்பது போன்ற உணர்ச்சி, கண்விழிகள், முகம் ஆகியவை வீக்கம் கொண்டிருத்தல் என்பன கபத்தால் தோன்றிய தலை நோய் இலக்கணமாகும். 7

### 5. ஸந்நிபாதம், இரத்தம் ஆகியவற்றாலான தலை நோய் ›க்கணங்கள்

வாதபித்த கபங்களுக்குக் கூறப்பட்ட இலக்கணங்கள் கலந்து காணப்பட்டால் ஸந்நிபாதத்தால் தோன்றிய தலை நோய் என்று உணர்க. இரத்தத்தால் தோன்றிய தலை நோயில் பித்தத்திற்கு கூறப்பட்ட இலக்கணங்கள் காணப்படுவதுடன் தலையைத் தொடுதலை பொறுக்க இயலாத நிலை தோன்றும். 8

### 6. காயத்தால் தோன்றும் தலை நோய் இலக்கணம்

தலையில் அடிபடுவதால், உடலில் உள்ள வசை (உடலின் எண்ணெய்ப் பசை கொண்ட கொழுப்பு), எலும்புக்குள் உள்ள மஜ்ஜை எனும் சோறு, விந்து, மூளை மற்றும் கபம், இரத்தம் ஆகியவை குறைந்து போவதால் காயத்தால் தோன்றும் தலை நோய் உண்டாகும். இது மிகவும் துன்பம் விளைவிப்பதாகும். இந்த நோய் வியர்க்கச் செய்தல், வாந்தி, புகை பிடித்தல், நஸிய முறை, இரத்தம் வெளியேறுதல் முதலியவற்றால் வளர்ந்துவிடும்.9

### 7. கிருமிகளால் தோன்றும் தலை நோய் இலக்கணம்

ஊசியால் குத்துவது போன்ற வலி தலைக்குள் பரவி இருந்தால், அப்பகுதி கிருமிகளால் அரிக்கப்படுகிறது போன்ற உணர்ச்சி தோன்றினால், கபால எலும்புகளுக்குள் நடுக்கமும், பிளப்பது போன்ற துன்பமும் தோன்றினால், அந்நிலையில் மூக்கிலிருந்து இரத்தமும் சீழும் கலந்த சளி பெருகுமானால் அது கிருமியால் தோன்றிய தலை நோய் என்று உணர்க. 10

### 8. ஸூர்யாவர்த்த இலக்கணம்

ஆதவன் உதிக்கும் போது துன்பம் தோன்றி சூரியன் வானத்தில் செல்லச் செல்ல துன்பமும் மிகுந்து கண்களிலும், புருவப்பகுதியிலும் நண்பகலில் அதிக வலி தோன்றி மாலையில் கிரமமாக குறைந்து ஆதவன் மறைந்ததும் வலி தணிந்து விடுமானால் சில நேரங்களில் குளுமை தரும் சிகிச்சையாலும், சில நேரங்களில் வெப்பம் தரும் சிகிச்சையாலும் நோய் தணிந்தால் அது ஸூர்யாவர்த்த நோய் எனப்படும். 11-12

மருக்காரை முதலிய தீக்ஷ்ணத் தன்மை கொண்ட பொருள்களால் திரிகடுகம் முதலிய தீக்ஷ்ணத்தன்மை கொண்ட மருந்துப் பொருள்களின் கஷாயத்தைக் கொப்பளிக்கும் முறை முதலிய வற்றைப் பயன்படுத்த வேண்டும். அதன் பிறகு தூய நெய்யைப் பருகச் செய்து சில நேரம் வரை இடைவிடாமல் வியர்க்கச் செய்ய வேண்டும். 18-19

## 8. சிரோவிரேசனம்

கபத்தாலான தலை நோய் கொண்டவருக்கு முதலில் எண்ணெயைப் பருகச் செய்து இலுப்பையின் சாற்றினால் அல்லது அழிஞ்சிப்பட்டையின் தூளால் அல்லது ஆடுதீண்டாப் பாளையின் தூளால் நஸிய முறையைப் பயன்படுத்த வேண்டும். 20

## 9. புகை வத்தி

அழிஞ்சில்பட்டை, ஆடுதீண்டாப்பாளை எனும் இவற்றின் தூளை நீருடன் நன்கு மைய அரைத்து வத்தியாகச் செய்து அதைப் புகைக்க பயன்படுத்த வேண்டும். இதைத் தவிர காயபலத்தின் தூளை முகர்தல், அவ்வாறே கபத்தைப் போக்கும் திரிகடுக முதலான தீக்ஷ்ணத்தன்மை கொண்ட பொருள்களின் கஷாயத்தைக் கபள தாரணமுறையில் பயன்படுத்துதல் ஆகியவற்றைச் செய்ய வேண்டும். 21

## 10. தலைக்கு மேற் பூச்சு

தேவதாரு, கோஷ்டம், மணிபுங்கன், ஸரளமரம், ரோகிஷப் புல் ஆகியவற்றைச் சம அளவில் கலந்து இரண்டு தோலா அளவு கொண்டு சிறிதளவு உப்பு சேர்த்து க்ஷார நீருடன் அரைத்து இளஞ்சூட்டில் தலைக்குப் பற்றாக பூச வேண்டும். 22

## 11. கபத்தால் தோன்றும் தலை நோய்க்கு உணவு முறை

யவதானியம், அறுபதாங்குறுவை ஆகியவற்றின் சோற்றை சுக்கு, மிளகு, திப்பிலி ஆகியவற்றின் தூளுடன் கலந்து யவக்ஷாரத்தைச் சேர்த்துப் புடலை, பயறு, கொள்ளு ஆகியவற்றைக் கொதிக்க வைத்தச் சாற்றுடன், கபத்தால் தோன்றிய தலை நோய் கொண்டவரை அளவுடன் உட்கொள்ளச் செய்ய வேண்டும். 23

## 12. ஸந்நிபாதத்தால் தோன்றிய தலை நோய்க்குச் சிகிச்சை

மூன்று தோஷங்களாலும் தோன்றிய தலை நோய்க்கு மூன்று தோஷங்களையும் போக்கவல்ல சிகிச்சை முறைகளையும் செய்ய வேண்டும். சாதாரண நெய்யை பருகச் செய்தல் அல்லது பழைய நெய்யைப் பருகச் செய்தல் சிறந்த முறையாகும். 24

## 13. க்ஷயத்தால் தோன்றிய தலை நோய்க்குச் சிகிச்சை

ரஸம், இரத்தம் முதலிய தாதுக்கள் குறைந்து போன போது அவ்வாறு குறைவதற்கான காரணத்தை அறிந்து அதற்கு ஏற்றபடி உடலைச் செழிக்கச் செய்யும் மருந்துப் பொருள்களை பயன் படுத்த வேண்டும்.

வாதத்தைப் போக்கும் பத்ரதாரு முதலிய மருந்துப் பொருள் கள், காகோலி முதலான வாதத்தைப் போக்கும் இனிப்புச்சுவை கொண்ட மருந்துப் பொருள்களுடன் விழுதும், கஷாயமும் செய்து அவற்றால் நெய் மருந்து செய்து அதைப் பருகச் செய்யவும். மூக்கிலிடு மருந்தாகவும் அதைப் பயன்படுத்துக. மற்றும் க்ஷயத்தையும், காசத்தையும் போக்க வாஸாதி கிருதம் முதலானவற்றைப் பயன்படுத்துக. இவை க்ஷயத்தால் தோன்றும் தலை நோய்க்கு மிகவும் சிறந்த முறைகளாகும் 25

## 14. கிருமிகளால் தோன்றும் தலை நோய்க்கு சிகிச்சை

இனி கிருமிகளால் அரிக்கப்பட்ட தலைக்கு உரிய சிகிச்சை முறை விளக்கப்படுகிறது. முதன்முதலில் மூக்கில் இரத்தத்தை நஸிய மருந்தாக பயன்படுத்த வேண்டும். இதனால் மூக்கில் உள்ள கிருமிகள் இரத்தத்தின் மணத்தால் மதம் கொண்டு என்புப் பகுதியிருந்து இங்குமங்கும் திரியத் துவங்கும். இந்நிலையில் கூர்ச்சகம் எனும் கருவியால் அந்தக் கிருமிகளை வெளியேற்ற வேண்டும். அல்லது சிரோவிரேசனத்திற்குப் பயன்படும் வாயு விடங்கம், மிளகு, நாயுருவி, முருங்கை விதை முதலான மருந்துப் பொருள்களின் தூளாலான நஸியம் கொடுத்து அந்தக் கிருமி களை வெளிவேற்ற வேண்டும். அல்லது சிறுமுருங்கை விதை, வெண்கல களிம்பு ஆகியவற்றை பசுவின் சிறுநீருடன் அரைத்து அவபீடன நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். அல்லது விடங் காதியான கிருமிகளை அழிக்கும் கூட்டுப்பொருள்களை பசுவின் சிறுநீருடன் அரைத்து அவபீடன நஸியமாகக் கொடுக்க வேண்டும். 26-28

அழுகிப்போய் உலர்ந்த மீன்களை நெருப்பின் மேல் போட்டு அப்புகையை மூக்கில் படச் செய்க. அல்லது கிருமிகளைப் போக்கும் வாயுவிடங்கம் முதலான பொருள்களைத் தணல் மேலிட்டுப் புகை போடுவதால் கிருமிகள் வெளி வந்துவிடும். கிருமி நோய் கொண்டவருக்கு கிருமி பிரதிஷேதநீய அத்தியாயத் தில் கூறப்படும் தானியாம்லம் முதலான பொருள்களுடன் உணவு உட்கொள்ளச் செய்ய வேண்டும். அல்லது தானியாம்லம், விடங்காதி கூட்டுப் பொருள்களின் கஷாயம் ஆகியவற்றுடன் பொங்கல், கஞ்சி, ரொட்டி, சோறு முதலியவற்றை உண்ணச்

செய்ய வேண்டும். இவ்வாறு கிருமிகளைப் போக்கவல்ல பருகத்தக்க பொருள்களை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 29

### 15. ஸூர்யாவர்த்தத்திற்குச் சிகிச்சை

இந்த நோய்க்கு நஸியம் முதலிய முறைகளைக் கையாள வேண்டும். உணவுக்குக் காட்டு விலங்கு அல்லது பறவையின் புலால் சாற்றைக் கொடுக்க வேண்டும். மேலும் பாலால் செய்த பால் கோவா, பாயசம் முதலிய உணவு பண்டங்களைக் கொடுக்க வேண்டும். நெய்யைச் சூடான பாலில் விட்டுப் பருகச் செய்ய வேண்டும். 30

### 16. அர்தாவபேத நோய்க்குச் சிகிச்சை

அர்தாவபேதகம் எனும் நோயில் பொதுவாக ஸூர்யாவர்த்த நோய்க்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். மற்றும் வேறு சிகிச்சைகளையும், தோஷம், நாடு, பருவம் முதலியவற்றை ஆராய்ந்த நிலைமைக்கு ஏற்றபடிப் பயன்படுத்த வேண்டும். ஸூர்யாவர்த்தகம் மற்றும் அர்தாவபேதகம் எனும் நோய்களுக்கு வாகை வேர் மற்றும் அதன் காய்களை அரைத்து அவற்றின் சுரசத்தை அவபீடன நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். 31

### 17. வம்சமூலாதி அவபீடனம்

மூங்கில் வேர், கர்ப்பூரம் ஆகியவற்றை நீர்விட்டு அரைத்து அதை அவபீடன நஸியமாக பயன்படுத்த வேண்டும். மேலும் வசம்பு, திப்பிலி ஆகியவற்றின் தூளை அவபீடன நஸியத்திற்குப் பயன்படுத்த வேண்டும். 32

### 18. மதுகாதி அவபீடனம்

அதிமதுர தூளைத் தேனுடன் கலந்து அதை அவபீடன நஸியமாகப் பயன்படுத்த வேண்டும். தேன், சந்தனக்குழம்பு, மனோசிலைத்தூள் ஆகியவற்றைக் கலந்து அதை அவபீடன நஸியத்திற்குப் பயன்படுத்த வேண்டும். 33

### 19. மதுராதி நஸியம்

அவபீடன நஸிய முறையைச் செய்த பிறகு காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட பொருள்களின் விழுதையும், கஷாயத்தையும் சேர்த்துச் செய்த நெய்யை நஸியமாகக் கொடுக்க வேண்டும். அல்லது ஸூர்யாவர்த்த அர்த்தாவபேதக நோய்களில் நன்னாரி, நீலாம்பல், கோஷ்டம், அதிமதுரம் ஆகியவற்றைப் புளிப்பு காடியுடன் அரைத்து நெய்யும் எண்ணெயும் கலந்து

தலை மேல் அதைப் பற்றாக பூசுதல் நன்மை தரும். அவ்வாறே கபத்தால் தோன்றும் தலை நோய்க்கு உரிய அவபீடனம் மற்றும் மேல் பூச்சு மருந்துகளையும் பயன்படுத்த வேண்டும். 34-35

## 20. அநந்தவாதத்திற்குச் சிகிச்சை

அநந்த வாதம் எனும் நோய்க்கு ஸூர்யாவர்த்த நோய்க்குக் கூறப்பட்ட முறைகள் அனைத்தையும் பயன்படுத்த வேண்டும். தவிர அநந்தவாத நோயைத் தணிக்க ஸிராமோக்ஷணம் செய்து இரத்தத்தை அளவாக வெளியேற்ற வேண்டும். 36

## 21. உணவு முறை

நோயில் வாதம் மற்றும் பித்தத்தைத் தணிக்கவல்ல பொருள்களுடன் உணவை உட்கொள்ள வேண்டும். பூரணம் நிறைந்த போளி, ஹல்வா, நெய் நிறைந்த தின்பண்டங்கள் ஆகிய வற்றை உட்கொள்ளச் செய்ய வேண்டும். 37

## 22. சங்கக நோய்க்குச் சிகிச்சை

சங்கக நோயில் நஸியம், பருகுதல் முதலியவற்றிற்கு பாலி லிருந்து எடுத்த புதிய வெண்ணெயைப் பயன்படுத்த வேண்டும். இதைத் தவிர காட்டு விலங்குகளின் மற்றும் பறவைகளின் புலால் சாற்றுடன் உணவு உட்கொள்ளச் செய்க அல்லது எண்ணெய்ப் பசை கொண்ட (நெய் முதலியவற்றுடன்) உணவை உட் கொள்ளச் செய்க. 38

## 23. *லேபம்

சதாவரி, கறுப்பு எள், அதிமதுரம், நீலாம்பல், அருகம்புல் சாரடை ஆகியவற்றை நீருடன் அரைத்துத் தலையில் பற்றாகப் பூசுக. அல்லது நன்னாரி, அல்லது சிற்றரத்தை, சிவதை ஆகிய வற்றைக் காடி விட்டரைத்து தலையில் பற்றாகப் பூசுக. 39-40

## 24. சீதபரிஷேகம் முதலியன

இந்தச் சங்கக நோய்க்குக் குளிர்ச்சித் தன்மை கொண்ட பொருள்களால் (விதாரிகந்தாதி, காகோலி, உத்பலாதி கணங் களின் கூட்டுப்பொருள்களால்) பரிஷேக (மேல் ஊற்றிக் கொண்டிருத்தல் முதலான) முறைகளை பயன்படுத்த வேண்டும். அவ்வாறே ஸூர்யாவர்த்த நோய்க்குரிய பொருள்களால் அவ பீடன நஸிய முறையைப் பயன்படுத்த வேண்டும். 41

---

*லேபம் - மேல்பூச்சு.

அறிவாற்றல் மிக்க மருத்துவர், கிருமிகளால் தோன்றும் மற்றும் க்ஷயத்தால் தோன்றும் தலை நோய்களைத் தவிர மற்ற எல்லா வகை தலை நோய்களிலும் தூய்மைப்படுத்தும் மற்றும் நோயைத் தணிக்கும் ஸம்சோதன ஸம்சமனீய அத்தியாயங்களில் கூறப்பட்ட சிரோவிரேசனப் பொருள்களின் தூளில் தேன், எண்ணெய் ஆகியவற்றை சேர்த்து நஸிய மருந்தாகப் பயன்படுத்திச் சிரோவிரேசனம் செய்ய வேண்டும். அதற்குப் பிறகு கடுகெண்ணெயை மூக்கிலிடு மருந்தாகப் பயன்படுத்த வேண்டும். 42

இவ்வாறு சிகிச்சை செய்த பிறகு நோய் தணியாவிடில் முதலில் தலை நோய் கொண்டவருக்கு எண்ணெயை பருகச் செய்து எண்ணெய்ப்பசையை உண்டாக்கி வியர்க்கச் செய்து பிறகு ஸிராமோக்ஷண முறைப்படி இரத்தத்தை வெளியேற்றி நல்ல முறையில் சிகிச்சை செய்ய வேண்டும். 43

)வ்வாறு எழுபத்தாறு கண்நோய்கள், இருபத்தெட்டு காது நோய்கள், முப்பத்தோரு மூக்கு நோய்கள், பதினோரு தலை நோய்கள், அறுபத்தேழு முக நோய்கள் ஆகியவற்றின் விளக்கம் இந்த ஸம்ஹிதையில் கூறப்பட்டுள்ளன. நோய்களின் இலக்கணம், சிகிச்சை முறைகளும் விரிவாகக் கூறப்பட்டன. இந்த சாலாக்யதந்திரத்தில் தலையைச் சார்ந்த நோய்கள் அனைத்திற்கும் எண்ணிக்கை, இலக்கணம், சிகிச்சை முறைகள் ஆகியவை கூறப்பட்டன.

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**சிரோரோக பிரதிஷேதம் எனும்**

**இருபத்தாறாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்தேழாம் அத்தியாயம்
# *நவகிரஹாக்ருதி விஞ்ஞானீயம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலிய சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி நவகிரஹங்களின் தோற்றத்தை பற்றி விளக்குவோம். 1-2

ஸுசுருதா! சிறு குழந்தைகள் கிரகங்களால் பற்றிக் கொள்ளப் பட்ட பிறகு குழந்தைகளுக்கு தோன்றும் இலக்கணங்கள், சிகிச்சை முறைகள், அந்தக் கிரகங்களின் பிறப்பு, அவை சிறுவர்களைத் துன்புறுத்தக் காரணம் போன்றவற்றை விளக்குகிறேன். கேள். 3

### 1. கிரகங்களின் எண்ணிக்கை

ஸ்கந்தகிரகம், ஸ்கந்தாபஸ்மாரம், சகுனி, ரேவதீ, பூதனா, அந்தபூதனா, சீதபூதனா, முகமண்டிகா, நைகமேஷ அல்லது பித்ருகிரகம் என ஒன்பது கிரகங்கள் உள்ளன. 4-5

### 2. கிரகங்கள் சிறுவர்களைப் பற்றிக் கொள்ளக் காரணம்

சிறு குழந்தைகளுக்கு பாலூட்டும் தாய் அல்லது செவிலித் தாய் கர்பிணீவியாகரண அத்தியாயத்தில் கூறப்பட்ட தகாத பொருள்களை உண்ணுதல், மலம், சிறுநீர் ஆகியவற்றைக் கழித்த பிறகு சிறு குழந்தைகளின் ஆஸனவாயை நன்கு கழுவிவிடாமல் இருத்தல், மங்கல பொருள்களை (ஸ்வஸ்திகம், தர்ப்பை, அருகம் புல் முதலானவற்றை) தொடாமல் இருத்தல், பாபத்தைப் போக்கும் நற்பணிகளைச் செய்யாமல் இருத்தல், அச்சுறுத்தப் படுதல், மகிழ்வித்தல், அடித்தல் முதலியவற்றை செய்தல் எனும் காரணங்களாலும், குழந்தையின் பெரியவர்களால் தாம் பூசனை பெற வேண்டும் என்ற ஆவலாலும் கிரகங்கள் சிறு குழந்தை களைப் பற்றிக் கொள்கின்றன. 6

### 3. கிரகங்கள் புலனாகாமைக்கு காரணம்

உலகம் நிறைந்த தோற்றம் கொண்ட (விச்வரூபங்களாகிய) அனிமா முதலான (யோகசித்திகளை) பெரும் செல்வங்களை உடையவையாக இருப்பாதாலும் சிறுவர் உடலில் புகுந்து விடும்

---

*நவகிரஹாக்ருதி - குழந்தைகளைத் துன்புறுத்தும் ஒன்பது வகை கிரக நோய்கள். அவற்றைப் பற்றிக் கூறுவதால் இந்த அத்தி யாயம் நவகிரஹாக்ருதி விஞ்ஞானீயம் எனும் பெயர் பெற்றது.

இந்த கிரகங்கள் நம் கண்களுக்கு புலனாகாமல் இருக்கின்றன. அதனால் அவற்றின் இருக்கையை பற்றி நமக்கு நலம் விரும்பும் (ஆப்தர்களாகிய) ஆன்றோர் சொல்லே இதற்கு பிரமாணமாகக் கொள்ள வேண்டும். இந்தக் கிரகங்கள் குழந்தைகளின் உடலில் புகுந்து கொள்வதால் ஏற்படும் இலக்கணங்களைக் கூறுகிறேன். 7

### 4. ஸ்கந்த கிரகத்தால் தோன்றும் அறிகுறிகள்

ஸ்கந்த கிரகம் உடலில் புகுந்து கொண்டபோது குழந்தைகளின் உடலில் தோன்றும் இலக்கணங்கள், கண்களில் வீக்கம், உடல் இரத்தத்தின் மணம் கொண்டிருத்தல், தாய்ப்பால் பருகுவதில் விருப்பமின்மை அல்லது வெறுப்பு, வாய் சற்று கோணியிருப்பது போலக் காணப்படுதல், ஒரு கண் இமைகள் அடிக்கடி மூடித்திறத்தல், சில நேரங்களில் இமை அதிகமாகப் படபடத்தல், குழந்தை தளர்ந்து கண்களை மூடிக்கொண்டு சிறிதளவு அழுது கொண்டு கைப்பிடிகளை இறுக மூடிக்கொண்டிருத்தல், மலம் இறுகிக் கட்டிப்போய் வெளிவருதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் அது ஸ்கந்த கிரகத்தின் செயல்கள் என அறிக. 8

### 5. ஸ்கந்தாபஸ்மார கிரகம் பற்றியதன் இலக்கணம்

ஸ்கந்தாபஸ்மாரம் எனும் கிரகத்தின் பிடியில் இருக்கும் குழந்தை, அடிக்கடி நினைவிழந்து மீண்டும் நினைவு பெறுதல், கால் கைகளை நாட்டியம் புரிவது போல அசைத்தல், தெளிவற்ற விசித்தரமான ஒலி எழுப்பிக்கொண்டு மலம், சிறுநீர் ஆகியவற்றைக் கழித்தல், உடலை முறித்துக் கொள்ளுதல், வாயிலிருந்து நுரையுடன் உமிழ் நீர் சுரத்தல் ஆகிய இலக்கணங்களை கொண்டிருக்கும். 9

### 6. சகுனி கிரகம் பற்றியதன் இலக்கணம்

உடலுறுப்புகள் தளர்ந்து போதல், அடிக்கடி அச்சத்தால் திடுக்கிடுதல், உடல் பறவைகளின் புலால் நாற்றம் கொண்டிருத்தல், குழந்தை உடல் கெட்ட நீர் பெருகும் விரணங்களுடன் கூடி இருத்தல், எரிச்சலும், பக்குவமும் கொண்ட கொப்புளங்கள் தோன்றுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் குழந்தை சகுனி கிரகத்தின் பிடியில் சிக்கியிருப்பதாகத் தெரிந்து கொள்க.10

### 7. ரேவதீ கிரகம் பற்றியதால் தோன்றும் இலக்கணம்

முகம் சிவத்தல், மலம் பச்சை நிறம் கொண்டிருத்தல், உடல் வெளிறிக் காணப்படுதல், அல்லது கறுத்தல், காய்ச்சல், வாய் வெந்திருத்தல் போன்ற இலக்கணங்கள் காணப்பட்டால் ரேவதீ கிரகம் பற்றியதென்றறிக. 11

### 8. பூதனா கிரகம் பற்றியதன் இலக்கணம்

உடலுறுப்புகளில் தளர்ச்சி, பகலில் தூங்குதல், இரவு நேரங்களில் உறக்கம் கொள்ளாமை, பேதி நீர்த்திருத்தல், பேதியிலும், குழந்தையின் உடலிலும் காகத்தின் மணம் வீசுதல், வாந்தியாதல், மயிர்கூச்சம் மிகுதல், அடிக்கடி நீரைப் பருகுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் குழந்தையைப் பூதனாகிரகம் பற்றிக் கொண்டுள்ளதென்றறிக. 12

### 9. அந்தபூதனா எனும் கிரகம் பற்றியதன் இலக்கணம்

தாய்ப்பாலைப் பருகுவதில் வெறுப்பு, அதிஸாரம், இருமல், விக்கல், வாந்தி, காய்ச்சல் ஆகியவற்றால் துன்புறுதல், உடல் நிறம் கெடுதல், எப்பொழுதும் முகத்தைக் கீழ் நோக்கி வைத்துக் கொண்டு உறங்குதல், உடலிலிருந்து புளிப்பு மணம் வீசுதல் ஆகிய இலக்கணங்கள் காணப்பட்டால் அது அந்தபூதனா கிரகம் பற்றியதால் தோன்றுவன என மருத்துவர் கூறுவர். 13

### 10. சீதபூதனா பற்றியதன் இலக்கணம்

உடல் மிகவும் தளர்ந்திருத்தல், நடுக்கம் தோன்றுதல், அழுதுக்கொண்டிருத்தல், சிறிது நேரம் சென்றதும் போர்வையைச் சுருட்டிக்கொண்டு தூங்குதல், வயிற்றில் குடகுடவெனும் ஒலி, குடலிரைச்சல் தோன்றுதல், உடலிலிருந்து அழுகிய பொருளின் அழுகிய நாற்றம் வீசுதல், நீர்த்துப் பேதியாதல் ஆகியவை சீதபூதனா கிரகம் பற்றியதன் இலக்கணங்களாகும். 14

### 11. முகமண்டிகா கிரகம் பற்றியதன் இலக்கணம்

உடலுறுப்புகள் வாடியிருத்தல், கை, கால் முகங்கள் பொலிவுடன் காணப்படுதல், அதிக அளவு உணவு உட்கொள்ளுதல், வயிறு கருநிற நீலநிறமுள்ள ஸிரைகளுடன் கூடியிருத்தல், தடுமாற்றம் கொண்டிருத்தல், உடலில் சிறுநீர் நாற்றம் தோன்றுதல் எனும் இலக்கணங்கள் காணப்பட்டால் முகமண்டிகா எனும் கிரகம் பற்றியிருப்பதாக மருத்துவர் தெரிந்து கொள்ள வேண்டும். 15

### 12. நைகமேஷ கிரகம் பற்றியதன் இலக்கணம்

வாயிலிருந்து நுரை வெளிவந்து கொண்டிருத்தல், இடுப்புப் பகுதி வளைந்து காணப்படுதல், மேல்நோக்கி கொண்டு அமைதியற்றுக் குழந்தை அழுது கொண்டிருத்தல், . காய்ச்சல் தோன்றுதல், உடலில் கொழுப்பின் மணம் தோன்றுதல், அவ்வப் பொழுது குழந்தை நினைவிழந்து காணப்படுதல் என்பன நைகமேஷம் எனும் கிரகம் பற்றியிருப்பதன் இலக்கணங்களாகும். 16

## 13. மருத்துவத்திற்கு உட்படாத கிரக இலக்கணம்

உடல் மிக்க மரத்துக் காணப்படுதல், தாய்ப்பால் என்றாலே வெறுப்பு தோன்றுதல், கிரகம் பிடித்திருப்பதால் அடிக்கடி நினை விழத்தல், கிரகங்களுக்கு உரிய இலக்கணங்கள் அனைத்தும் காணப்படுதல் எனும் இலக்கணங்கள் தோன்றினால் குழந்தை விரைவில் மரிக்கும். 17

## 14. மருத்துவத்தால் விலக்கக்கூடிய கிரக இலக்கணம்

முன்கூறிய இலக்கணங்களுக்கு மாறான இலக்கணங்கள் காணப்படுதல், கிரகங்கள் பற்றிய இலக்கணங்கள் முழுமையாகக் காணப்படாதிருத்தல், கிரகம் பற்றிய புதிய நிலை ஆகியவற்றில் சிகிச்சை செய்வதால் எளிதில் கிரகத்தாலான துன்பத்தை நீக்க இயலும் என்றுணர்க. 18

## 15. கிரகம் பற்றிய போது செய்யத்தக்க சிகிச்சை முறை

முதன் முதலில் மருத்துவர் நீராடுதல், காலத்தில் செய்ய வேண்டிய இறை வணக்கம் ஜபம் முதலியவற்றைச் செய்து புனித ராகி, புனிதமான இல்லத்திற்குக் குழந்தையை எடுத்துச் சென்று பழைய நெய்யைத் தடவி குளிக்கச் செய்து அக்குழந்தையின் நான்கு பக்கங்களிலும் கடுகை இறைத்துக் குழந்தையின் பக்கத்தில் கடுகெண்ணெய் விளக்கு வைக்கச் செய்க. பிறகு அக் குழந்தையின் பக்கத்தில் அமர்ந்து நெருப்பில் ஏலாதிகணக் கூட்டுப்பொருள்கள், எள், கோதுமை, உளுந்து, நறுமணமுள்ள சந்தனம் முதலியவற்றை இட்டு ஹோமம் செய்க. ஹோமம் செய்வதற்கு முன்னதாக குழந்தையைக் குளிப்பாட்டி சந்தனம், கஸ்தூரி, பச்சைக்கர்ப்பூரம் முதலியவற்றை பூசி மலர்மாலை, தூய ஆடை முதலியவற்றால் அலங்காரம் செய்ய வேண்டும். பிறகு இடைவிடாது அக்னி, கிருத்திகை ஆகிய தெய்வங்களைக் குறித்து வேள்வி செய்ய வேண்டும். 19-20

## 16. ஹோமம் செய்ய மந்திரம்

"கிரகங்களுக்குத் தலைவனாகிய ஸ்கந்த தேவனை வணங்குகிறேன். ஓ ஸ்கந்த தேவா! நான் உம்மைத் தலை வணங்கி கேட்டுக் கொள்கிறேன். நான் தங்களுக்கு அளிக்கும் பலியை ஏற்று செய்த ஹோமம் மற்றும் பலி தானம் முதலியவற்றின் பெருமையால் விரைவில் இந்த (என்) குழந்தை துன்பத்திலிருந்தும், நோயிலிருந்தும் விடுபட்டு நலம் பெறுமாறு அருள் செய்வாயாக." என்ற பொருள் கொண்ட மந்திரம் ஓதி ஹோமம் செய்ய வேண்டும். 21

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**(குமாரதந்திரத்திய) நவகிரஹாக்ருதி விஞ்ஞானீயம் எனும்**
**இருபத்தேழாம் அத்தியாயம் முற்றும்.**

# இருபத்தெட்டாம் அத்தியாயம்
# * ஸ்கந்தகிரஹ பிரதிஷேதம்

இனி ஸ்கந்தகிரகம் சிறு குழந்தைகளைப் பற்றிக் கொள்வ தால் தோன்றும் துன்பங்களுக்குரிய சிகிச்சை முறைகளைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்த முறையை விளக்குவோம். 1-2

### 1. பரிஷேசனம்

ஸ்கந்த கிரகம் பற்றிய போது வாதத்தைப் போக்கக் கூடிய ஆமணக்கு இலை, வில்வ இலை, சிற்றரத்தை இலை ஆகியவற்றின் கஷாயத்தைக் கொண்டு பரிஷேசனம் (நன்கு நனைத்தல்) எனும் முறையைச் செய்ய வேண்டும். 3

### 2. அப்யங்கம்

வாதத்தைப் போக்குவனவாக கூறப்பட்ட ஆமணக்கு, வில்வம், சிற்றரத்தை ஆகியவற்றின் வேர், பெரும்பஞ்ச மூலங் களின் வேர் ஆகியவற்றின் கஷாயத்தில் ஏலாதிகண அல்லது சாதுர்ஜாதாதி கணக் கூட்டுப் பொருள்களின் விழுது, ஸுரை, ஏடு, பெருவேம்பு விழுது அல்லது கஷாயம் ஆகியவற்றைக் கலந்து செய்த எண்ணெயைக் கொண்டு எண்ணெய்க் குளியல் செய்வித்தல் நலம் தரும். 4

### 3. பாலைப் பருகச் செய்தல்

தேவதாரு, சிற்றரத்தை இனிப்புச் சுவை கொண்ட மரங் களாகிய (இலுப்பை, ராஜாதனம், கிரணி, அதிமதுரம் என்பன வற்றின் விழுதையும் கஷாயத்தையும் கலந்து செய்த நெய், பால் ஆகியவற்றைப் பருகக் கொடுக்க வேண்டும். 5

### 4. புகை போடுதல்

கடுகு, பாம்புச்சட்டை, வசம்பு, குன்றிமணி, நெய், மற்றும் ஒட்டகம், ஆடு, செம்மறியாடு, பசு ஆகியவற்றின் உரோமங்கள் ஆகிய அனைத்தையும் தணலில் போட்டு அப்புகையைக் குழந்தையின் உடலில் படும்படிச் செய்ய வேண்டும். 6

---

* ஸ்கந்தகிரஹம் - சிறு குழந்தைகளைப் பற்றும் ஸ்கந்தம் எனும் கிரகத்தால் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸ்கந்த கிரஹ பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

### 5. மருந்துப் பொருளால் காப்புக் கட்டுதல்

சீந்தில் கொடி, வெள்ளை அருகம்புல், வன்னி மற்றும் வில்வங்களின் முள், இந்திராயணத்தின் வேர் ஆகியவற்றை நூலால் கட்டி குழந்தையின் கழுத்தில் மாலையாக அணிவித்துக் காப்புக் கட்டுதல் நலம் தரும். 7

### 6. பலி கொடுத்தல்

சிவப்பு நிற மலர்களாலான மாலைகள் சிவப்பு நிறத்துணி (கொடி), குங்குமம், குங்குமப்பூ போன்ற சிவப்பு நிற நறுமணப் பொருள்கள், ஜிலேபி முதலான தின்பண்டங்கள், மணி, கோழியின் புலால் ஆகியவற்றை "நமஸ்கந்தாய தேவாய கிரஹாதிபதயே நம" எனும் மந்திரத்தை ஓதிக்கொண்டே பலி கொடுக்க வேண்டும். 8

### 7. நலம் தரும் பணிவிடைகள்

மூன்று நாட்கள் இரவு இரண்டு மணிநேரமான போது நான்கு வழிகள் ஒன்றாக இணையும் இடத்தில், குழந்தையைக் காயத்திரி மந்திரத்தால் காப்பு கூறிக்கொண்டே நீராடச் செய்து புதுசம்பாஅரிசி, யவதானியம், குங்குலியம் ஆகியவற்றை நெருப்பால் ஹோமம் செய்து எரிய விட வேண்டும். 9

### 8. குழந்தைக்குக் காப்பு முறை

இனி கிரகங்களால் தீங்கு விளையாமல் இருக்கக் காப்பு செய்யும் முறையைக் கூறுகிறேன். நாள்தோறும் மருத்துவர் தவறாமல் இம்முறையைப் பயன்படுத்த வேண்டும். "தவநெறி மிக்க ஒளி, புகழ், உடல்நலம் அழிவற்ற நிலை ஆகியவற்றை கொண்ட ஸ்கந்ததேவர் உன்பால் கருணை கொள்ளட்டும், கிர கங்களுக்கெல்லாம் ஸ்கந்த தேவர் தலைவர். தேவர்களின் படைக் கும் தலைவர் அவரே. எங்கும் பரவி இருப்பவர். தேவர்களின் பகைவர்களை அழிப்பவர். இத்தகைய பெருமை வாய்ந்த பக வான் உன்னைக் காப்பாற்றுவாராக. பெரும் செல்வம் கொண்ட வரும், தேவர்களுக்கெல்லாம் தேவனுமான மகாதேவனுடைய, அக்னி பகவானுடைய குமாரனென சொல்லப்படுபவரும் கங்கை, உமா, கிருத்திகை கன்னிகள் ஆகியவர்களுக்கு மைந்தன் எனப் புகழ் பெற்றவரும் உனக்கு நன்மையை அருள்வாராக. சிவப்பு மாலை, சிவப்பு ஆடை அணிந்து சிவப்பு சந்தனம் பூசி நன்கு ஒலிக்கும் சிவந்த மேனி கொண்ட கிரௌஞ்சம் எனும் மலையைப் பிளந்த கந்தபெருமான் உன்னைக் காப்பாற்றுவாராக". 10-14

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**ஸ்கந்தகிரஹ பிரதிஷேதம் எனும்**
**இருபத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

## இருபத்தொன்பதாம் அத்தியாயம்
## * ஸ்கந்தாபஸ்மார பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி ஸ்கந்தாபஸ்மார பிரதிஷேதம் எனும் சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பரிஷேசனம்

வில்வப்பட்டை, வாகைப்பட்டை, வெள்ளை அருகம்புல் அல்லது வசம்பு ஆகியவற்றை அவ்வாறே ஸுரஸாதிகணக் கூட்டுப் பொருளைக் கஷாயம் காய்ச்சி இளஞ்சூடுள்ள போது அதைக் கொண்டு குழந்தைக்கு **பரிஷேசனம் செய்ய வேண்டும். 3

### 2. எண்ணெய்க் குளியல்

முன்பு கூறியபடி நறுமணப் பொருள்கள் அனைத்தையும் சேர்த்து விழுதாக்கி அவற்றின் கஷாயம் ஆகியவற்றுடன் பக்குவம் செய்த எண்ணெயை கொண்டு குழந்தைக்கு எண்ணெய் குளியல் செய்விக்க வேண்டும். 4

### 3. நெய் மருந்து

ஆல், அத்தி, அரசு முதலிய பட்டைகளின் கஷாயத்தை அல்லது காகோலி முதலான கூட்டுப் பொருள்களின் விழுதுடன் செய்த நெய் மருந்தைப் பால் அல்லது நீருடன் கலந்து குழந்தையைப் பருகச் செய்க. 5

### 4. மேல் பூச்சு

வசம்பு மற்றும் பெருங்காயம் ஆகியவற்றை நீர்விட்டு அரைத்து அதைக் குழந்தையின் உடலின் மேல் பூசுதல் நலம் தரும். 6

### 5. புகை போடுதல்

கழுகு, கோட்டான் ஆகியவற்றின் எச்சம் (மலம்), ஆடு, செம்மறியாடு, பூனை ஆகியவற்றின் உரோமங்கள், யானை நகம், நெய், எருதின் உரோமங்கள் ஆகிய இவ்வனைத்தையும் நெருப்

---

* ஸ்கந்தாபஸ்மாரம் எனும் சிறு குழந்தைகளைப் பற்றும் கிரகத்திற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் ஸ்கந்தாபஸ்மார பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

** பரிஷேசனம் - நனைத்தல்.

யில் இட்டு புகையைக் குழந்தையின் உடலில் படச் செய்ய வேண்டும். 7

### 6. காப்புப் பொருள்கள்

நன்னாரி, இலவம், கோவை, நாயுருவி ஆகியவற்றின் வேர், கொடி, இலை ஆகியவற்றை சிவப்புநிற நூலால் கட்டி மாலையாகச் செய்து குழந்தையின் கழுத்தில் அணிவிக்க வேண்டும். 8

### 7. பலி முறை

பக்குவம் செய்த, பக்குவம் செய்யாத (பச்சை) புலால், ஸுரை எனும் மது, இரத்தம், பால், நெய் கலக்காமல் செய்த சோறு முதலியவற்றை மண் மடக்கில் வைக்கவும். நண்பகல், மாலை, அந்திநேரம், நள்ளிரவு ஆகிய வேளைகளில் நான்கு தெருக்கள் கூடும் இடம் அல்லது மயானம் உள்ள இடத்தில் சிறுபள்ளம் தோண்டி இதில் முன்கூறிய பலிப்பொருளை கந்தனின் நண்பனாகிய ஸ்கந்தாபஸ்மாரம் எனும் கிரகத்திற்கு மகிழ்ச்சியுண்டாக்கப் பலி கொடுக்க வேண்டும். 9

### 8. ஸ்நான முறை

முதலில் தான் குளித்துத் தூய்மை பெற்ற பிறகு ஸ்கந்தாபஸ்மார கிரகம் பற்றிய குழந்தையை நான்கு தெருக்கள் கூடுமிடத்தில் காப்பு கூறி குளிப்பாட்ட வேண்டும். 10

### 9. காப்பு

'கந்தபெருமானின் நண்பனாகிய, விகாரமானமுகம் கொண்ட விசாக எனப் பெயர் கொண்ட ஸ்கந்தாபஸ்மாரகிரகம் இந்தக் குழந்தையைக் காப்பாற்றட்டும்' எனக் காப்பு கட்டுதல் நலம் தரும். 11

**ஸுஸ்ருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**ஸ்கந்தாபஸ்மார பிரதிஷேதம் எனும்**

**இருபத்தொன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பதாம் அத்தியாயம்
# * சகுனி பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சகுனி எனும் கிரகம் குழந்தையைப் பற்றிய போது செய்யத்தக்க சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பரிஷேசனம்

சகுனி கிரகம் பற்றிய குழந்தைக்கு வஞ்சி, மாவிலை, விளாமரத்து இலை ஆகியவற்றின் கஷாயத்தைக் கொண்டு பரிஷேசனம் (நனைத்தல்) செய்ய வேண்டும். 3

### 2. எண்ணெய்க் குளியல்

ஆலம் முதலான துவர்ப்புச் சுவை கொண்ட பொருள்களை கஷாயம் காய்ச்சி காகோலி முதலிய இனிப்புச் சுவையுள்ள பொருள்களின் விழுதைச் சேர்த்துக் காய்ச்சிய எண்ணெயை உடலின் மேல் தடவி விட வேண்டும். 4

### 3. மேல் பூச்சு

அதிமதுரம், வெட்டிவேர், குருவேர், நன்னாரி, தாமரை, பதுமுகம், பாச்சோத்தி, ஞாழல், மஞ்சிட்டி, கைரிகம் ஆகியவற்றின் தூளை நீரில் கலந்து குழந்தையின் உடலின் மேல் பூசி விட வேண்டும். 5

### 4. விரணங்களுக்குச் சிகிச்சை

சகுனி கிரகம் பற்றிய போது குழந்தையின் மெய்த்தோலில் பிளவுகள் உண்டாகி விரணங்கள் ஏற்படும். இந்த விரணங்களுக்குத் த்விவிரணீய அத்தியாயத்தில் அல்லது மிச்ரக அத்தியாயத்தில் கூறப்பட்ட சோதன, ரோபண சூர்ணங்களைத் தூவி விட வேண்டும். இவ்வாறே விரணிதோபாஸனீய அத்தியாயத்தில் கூறப்பட்ட குறுவை அரிசி, பயறு, மாதுளை, இந்துப்பு ஆகிய பொருள்களைப் பத்தியத்தில் பயன்படுத்த வேண்டும். 6

---

* சகுனி - சகுனி எனப்படும் கிரகம் பற்றியதால் குழந்தைக்கு தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகள் விளக்கப்படுவதால் இந்த அத்தியாயம் சகுனி பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

### 5. புகை போடுதல்

ஸ்கந்த கிரக சிகிச்சையில் கூறப்பட்ட புகை போடத்தக்க பொருள்களால் (கடுகு, பாம்புச்சட்டை, வசம்பு, காகாதனி, நெய் முதலானவற்றால்) புகை போட வேண்டும். 7

### 6. அணியத்தக்கவை

சதாவரி, சுக்கங்காய், நாகதந்தி, கண்டங்கத்தரி, லக்ஷ்மணா, ஸஹதேவி, முள்ளுக்கத்தரி எனும் இவற்றில் ஏதேனும் ஒன்றை ஞாயிற்றுக்கிழமை காலையில் வேருடன் பிடுங்கி குழந்தையின் கழுத்தில் அல்லது கையில் கட்டி விடவேண்டும். 8

### 7. பலி முறை

இரவு நேரத்தில் குளித்துத் தூய உடம்புடன், எள், சோறு, மலர்மாலை, அரிதாரம், மனோசிலை ஆகியவற்றை சிறிதளவு வைத்து புங்கன் மரத்தடியில் பலியாக வைக்க வேண்டும். 9

### 8. ஸ்நான முறை

வீட்டைச் சார்ந்த தோட்டத்தில் முன்பு ஸ்கந்த கிரகத்திற்குக் கூறியபடி குழந்தையைக் குளிப்பாட்ட வேண்டும். 10

### 9. நெய்யைப் பயன்படுத்துதல் - பூசை முறை

ஸ்கந்தாபஸ்மாரத்திற்குக் கூறப்பட்ட நெய் முறையை இதற்கும் பயன்படுத்த வேண்டும். மேலும், மல்லி, நீலாம்பல் போன்ற பலவகை மலர்களால் சகுனி கிரகத்திற்கு பூசை செய்ய வேண்டும். 11

### 10. காப்பு

"வானத்தில் திரிந்து கொண்டிருக்கும் அனைத்து அலங்காரங் கூடிய இரும்பை போன்ற நிறம் கொண்ட கீழ் நோக்கிய கூரிய முகம் கொண்ட சகுனி எனப்படும் தேவி உன்னிடம் கருணை கொண்டு உன்னை காப்பாற்றட்டும். அச்சுறுத்தும் தோற்றம் கொண்ட தொங்கும் உடல் கொண்ட மஞ்சள் நிறக் கண்கள் கொண்ட சங்கைப் போல் காதுகளைக் கொண்ட சகுனி எனும் கிரகம் உன்பால் கருணை கொள்ளட்டும்" எனக் கூறிக் காப்பிட வேண்டும். 12

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**சகுனி பிரதிஷேதம் எனும்**
**முப்பதாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தொன்றாம் அத்தியாயம்
# *ரேவதீ பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி ரேவதீ எனும் கிரகம் பற்றியதால் குழந்தைகளுக்குத் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பரிஷேசனம்

அமுக்கராக்கிழங்கு, கர்கடகசிருங்கி, நன்னாரி, சாரடை, காட்டு உளுந்து, காட்டுப் பயறு, முதுக்கன் கிழங்கு ஆகியவற்றில் கிடைத்த சாற்றை நான்கு தோலா அளவு கொண்டு இரண்டரை சேர் நீர் கலந்து கஷாயம் காய்ச்சி நான்கில் ஒரு பங்கு அல்லது பாதியளவு மிகுந்திருக்கும் போது எடுத்து வடிகட்டுக. பிறகு அதைக் குழந்தையின் உடலில் விரணம் உள்ள பகுதியில் ஊற்றிக் கொண்டிருக்க வேண்டும். 3

### 2. எண்ணெய்க் குளியல்

கோஷ்டமும், ஸர்ஜக்ஷாரமும் கலந்து கஷாயம் காய்ச்சி அவற்றால் காய்ச்சிய எண்ணெயை விரணம் கொண்டுள்ள உடலில் தடவிவிட வேண்டும். 4

### 3. நெய் பருகுதல்

கொம்பாக்கு, வெட்டிவேர், கிரிகர்ணிகா, கதம்பமலர், தவம், சாலமரம், மருதமரம் எனும் இவற்றின் பட்டைகள், காட்டாத்தி மலர், எட்டிப்பட்டை, காகோலி முதலான கூட்டுப்பொருள்களின் விழுது ஆகியவற்றை 5 தோலா அளவு கொண்டு கஷாயம் காய்ச்சவும். பிறகு அதில் நெய் கலந்து நெய் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி வைத்துக் கொள்க. இதை 6 உளுந்து எடை வரை ஒரு தோலா இளஞ்சூடுள்ள பாலில் கலந்து குழந்தைக்கு பருகத் தருக. நாள்தோறும் இரண்டு அல்லது மூன்று முறைகள் இதைப் பருகச் செய்க. 5

---

*ரேவதீ - ரேவதீ எனும் கிரகம் பற்றியதால் குழந்தைகளுக்கு தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைக் கூறுவதால் இந்த அத்தியாயம் ரேவதீ பிரதிஷேதம் எனப் பெயர் பெற்றது.

**4. மேல் பூச்சு**

)லவங்கப்பட்டை, ஏலக்காய், தாளிசபத்திரி, சிறுநாகப்பூ, கர்ப்பூரம், கங்கோலம், அகில், குங்குமப்பூ, இலவங்கம், கொள்ளின்தூள், சங்குத் தூள் ஆகியவற்றை நன்கு தூளாக்கி நெய் அல்லது நீருடன் கலந்து குழந்தையின் உடலின் மேல் பூச வேண்டும். 6

**5. புகை போடுதல்**

கழுகு, கோட்டான் ஆகியவற்றின் எச்சம் (அல்லது உரோமம்), யவதானியம், மூங்கில் பட்டை, நெய் ஆகியவற்றைக் கலந்து காலை மாலை இருசந்தி வேளைகளில் புகை போட பயன்படுத்த வேண்டும். 7

**6. காப்பாக அணிதல்**

வருண, வேம்பு, நொச்சி, புத்ரஜிவம் ஆகியவற்றில் ஒன்றின் கட்டையாலான மாலையைக் குழந்தை அணியச் செய்ய வேண்டும். 8

**7. பலி இடுதல்**

நீராடி புனிதத் தன்மை பெற்று வெள்ளை மலர், பொரி, பால், அறுபதாங்குறுவை அரிசிச்சோறு ஆகியவற்றைச் சிறிது சிறிதாகக் கொண்டு பசுவின் கொட்டகையில் ரேவதீ கிரகத்தின் மகிழ்ச்சிக்காக பலி இட வேண்டும். இரு நதிகள் சங்கமம் ஆகும் இடத்திற்குச் சென்று தாய் அல்லது செவிலித்தாய், குழந்தை ஆகியவர்கள் நீராட வேண்டும். 9

**8. காப்பிட மந்திரம்**

"பலவகை ஆடைகளை அணிந்து சித்திரவிசித்தர மாலைகளையும் சந்தனமும் அணிந்து காதுகளில் குண்டலங்கள் அசைய கருநிறம் கொண்டு விளங்கும் ரேவதீ எனும் கிரகம் இந்தக் குழந்தையிடம் கருணை கொள்ளட்டும்" என்பது மந்திரமாகும். 10

"பல வகை ஆபரணங்களை அணிந்து வேறு தேவதைகள் இடைவிடாமல் தன்னை உபாசனை செய்ய நீண்டு, அச்சுறுத்தும் வளைந்த உடலுள்ள பல புத்ரிகளைக் கொண்ட ரேவதீ எனும் பெயர் கொண்ட கிரகம் உன்னைக் காப்பாற்றட்டும்." 11

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**ரேவதீ பிரதிஷேதம் எனும்**
**முப்பத்தொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்திரண்டாம் அத்தியாயம்

# *பூதனா பிரதிஷேதம்

இனி பூதனா கிரகத்தால் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைத் தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி விளக்குவோம். 1-2

**1. பரிஷேசனம்**

பிராம்மி, பெருவாகை, மாவிலங்கை, பாரிபத்ரம், நன்னாரி ஆகியவற்றைக் கஷாயம் காய்ச்சி, அதை குழந்தைக்குப் **பரிஷேசனம் செய்யப் பயன்படுத்த வேண்டும். 3

**2. எண்ணெய்க் குளியல்**

வசம்பு, பிராம்மி, வெள்ளை அருகம்புல், அரிதாரம், மனோசிலை, கோஷ்டம், ஸர்ஜக்ஷாரம் ஆகியவற்றை விழுதாகச் செய்து நான்கு மடங்கு எண்ணெய், அந்த எண்ணெய்க்கு நான்கு மடங்கு நீர் சேர்த்து எண்ணெய் மிகுந்திருக்கக் காய்ச்சி அதை எண்ணெய் குளியலுக்குப் பயன்படுத்த வேண்டும். 4

**3. நெய் மருந்து**

மூங்கில் உப்பு, காகோலி முதலான கூட்டுப் பொருள்கள், கோஷ்டம், தாளிசபத்திரி கருங்காலிப்பட்டை, வெண்சந்தனம், மருதம்பட்டை ஆகியவற்றை விழுதாக்கி நெய் பக்குவம் செய்து 3 உளுந்தெடை மருந்துடன் தேனும் சர்க்கரையும் கலந்து கொள்க. பிறகு இளஞ்சூடுள்ள பாலில் அதைக் கலந்து குழந்தையைப் பருகச் செய்க. 5

**4. புகை போடுதல்**

தேவதாருத்தூள், வசம்பு, பெருங்காயம், கோஷ்டம், காட்டு மல்லி, கடம்பமர மலர், சிறுஏலக்காய், அரேணுகம் ஆகிய வற்றைத் தூளாக்கி நெருப்புத்தணல் மேலிட்டுக் குழந்தைக்கு புகை போட வேண்டும். 6

---

* பூதனா - பூதனா எனும் கிரகம் பற்றிய போது குழந்தைக்கு தோன்றும் துன்பங்களைப் போக்கும் சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் பூதனா பிரதிஷேதம் எனப் பெயராயிற்று.

** பரிஷேசனம் - நனைத்தல்.

சித்தரத்தை, நீர்ப்பத்திரி, இலந்தைப்பட்டை, நண்டின் என்பு, நெய், கடுகு ஆகியவற்றை தூளாக்கி அதைக் கொண்டு புகை போடலாம். 7

**5. காப்பு அணிதல்**

வெள்ளைக் குன்றிமணி, தும்மட்டி வேர் அல்லது கண்டங்கத்தரி, சிவப்புக்குன்றிமணி ஆகியவற்றை மாலையாகச் செய்துக் குழந்தையை அணியச் செய்க. 8

**6. பலி இடுதல்**

ஒரு மடக்கில் மீன், சோறு, பொங்கல், புலால் ஆகியவற்றை வைத்து மக்கள் வசிக்காத பாழான வீட்டில் வைத்துப் பலி இட வேண்டும். 9

**7. குளியலும், பூசையும்**

ஏதேனும் ஒரு தேவதைக்கு (மகா தேவனுக்கு) அபிஷேகம் செய்த நீரைக் கொண்டு குழந்தையைக் குளிப்பாட்டி பூதனா தேவிக்கு தக்க பொருள்களைக் கொண்டு பூசை செய்ய வேண்டும். 10

**8. காப்புக்கேற்ற மந்திரம்**

"அழுக்கடைந்த ஆடை உடுத்தி அழுக்கடைந்த உடல் கொண்டு வறண்ட விரிந்த தலை முடியுடன், பாழான இல்லத்தில் வசிக்கும் பூதனை எனும் தேவி இந்தக் குழந்தையைக் காப்பாற்றட்டும்."

"பார்க்க அருவருப்பானவளும், கெட்ட நாற்றம் கொண்டவளும், அச்சுறுத்தும் தோற்றமும், மேகத்தைப் போல சுறுத்த நிறமும் கொண்டவளும் பாழடைந்த இல்லத்தில் வாழுபவளுமான பூதனை எனும் தேவி இந்தக் குழந்தையைக் காப்பாற்றட்டும்" இது காப்புக்கேற்ற மந்திரமாகும். 11

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**பூதனா பிரதிஷேதம் எனும்**

**முப்பத்திரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்திமூன்றாம் அத்தியாயம்
# *அந்தபூதனா பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி 'அந்தபூதனா' எனும் கிரகத்திற்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

1. **பரிஷேசனம்

வேம்பு, மலைவேம்பு ஆகிய கசப்புச் சுவை கொண்ட மரங்களின் இலைகள், அல்லது பட்டைகளைக் கஷாயம் காய்ச்சி அதனால் குழந்தைக்கு பரிஷேசனம் செய்ய வேண்டும். 3

2. எண்ணெய்க் குளியல்

ஸுரை, ஸௌவீரகம் இலை ஆகிய ஒவ்வொன்றும் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கும், கோஷ்டம், அரிதாரம், மனோசிலை, ஸர்ஜக்ஷாரம் என்பனவற்றை விழுதாக்கி எண்ணெயின் அளவில் நான்கில் ஒரு பங்கும் கொண்டு அனைத்தையும் சேர்த்து எண்ணெய் காய்ச்சுக. அந்த எண்ணெயைக் குழந்தையின் உடலின் தடவிக் குளிக்கச் செய்க. 4

3. நெய் மருந்து

திப்பிலி, திப்பிலிவேர், காகோலி முதலான இனிப்புச் சுவை கொண்ட கூட்டுப் பொருள்கள், தேன், ஓரிலை, கண்டங்கத்தரி, முள்ளுக்கத்தரி ஆகிய இவற்றில் தேன் தவிர மற்ற பொருள்களைச் சம அளவில் கொண்டு விழுதாக்கி அவ்விழுது 5 தோலா, எண்ணெய் 10 தோலா நீர் 2½ சேர் எனச் சேர்த்து நெய் பக்குவம் செய்து கொள்க. பிறகு அதை வடிகட்டிக் குளிர்ந்தபின் தேன் சேர்த்து இந்த நெய் மருந்து நான்கு உளுந்தெடை வீதம் எஞ்சூடுள்ள பாலில் கலந்து குழந்தைக்கு பருகத் தர வேண்டும். 5

* அந்தபூதனா எனப்படும் கிரகத்தால் சிறு குழந்தைக்குத் தோன்றும் நோய்களுக்கு உரிய சிகிச்சை முறைகளைக் கூறுவதால் இந்த அத்தியாயம் அந்தபூதனா பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

** பரிஷேசனம் - மருந்துப் பொருளாலான கஷாயம் அல்லது தைலத்தால் நனைத்துக் கொண்டிருப்பது என்று பொருளாகும்.

**4. புகை போடுதலும், மேல் பூச்சும்**

முன் கூறிய சாதுர்ஜாதக கர்ப்பூராதி நறுமணப் பொருள்களை குளிர்ந்த நீர் விட்டு அரைத்து குழந்தையின் உடலின் மேலும், கண்களின் மேலும் பூச வேண்டும். மற்றும் கோழி எச்சம், தலைமுடி, தோல், பாம்புச்சட்டை, சந்நியாசியின் கிழிந்த பழைய ஆடை ஆகியவற்றை புகையற்ற நன்கு எரிந்து கொண்டிருக்கும் தணல் மேலிட்டுக் குழந்தைக்கு புகை போட வேண்டும். 6

**5. காப்பு அணிதல்**

கோழி முட்டையைப் போன்ற வெள்ளை நிறமுள்ள கிழங்கையுடைய கொடி அல்லது இலவம் வேர், காஞ்சொரி வேர் அல்லது நாயுருவி வேர், சேம்பு, நன்னாரி ஆகிய மூலிகைகளை மாலையாகச் சேர்த்து குழந்தைக்கு அணிவிக்க வேண்டும். 7

**6. பலியிடுதல்**

பக்குவம் செய்த அல்லது பக்குவம் செய்யாத புலால், இரத்தம் ஆகியவற்றை ஒரு பாத்திரத்தில் வைத்து ஏதேனும் ஒரு நான்கு வழிகள் கூடும் இடத்தில் மற்றும் பாழான வீட்டிற்குள் பலியாக வைக்க வேண்டும். 8

**7. குளியல்**

சாதுரர்ஜாதகம், கர்ப்பூராதி கூட்டுப் பொருள்களைச் சேர்த்த நீரால் குழந்தையையும், தாயையும் குளிக்கச் செய்ய வேண்டும். 9

**8. காப்புக்கு மந்திரம்**

"அச்சுறுத்தும் தோற்றமும், பூனைக்கண் போல மஞ்சள் நிறக் கண்களும் கொண்டு மொட்டைத் தலையுடன் காவித்துணி அணிந்து கொண்டிருக்கும் அந்தபூதனா எனும் கிரகம் இந்தக் குழந்தையிடம் கருணை கொண்டு காத்தருளட்டும்." 10

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**அந்தபூதனா பிரதிஷேதம் எனும்**

**முப்பத்திமூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்திநான்காம் அத்தியாயம்
# *சீதபூதனா பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி சீதபூதனா எனும் கிரகத்தால் குழந்தை களுக்குத் தோன்றும் நோய்களுக்குரிய சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

1. **பரிஷேசனம்**

விளாம்பட்டை, சித்தரத்தை, கோவைப்பழம், வில்வப்பழம் அல்லது பட்டை ஸீனாங்கண்ணி, பூவரசு, சேராங்கொட்டை மரத்தின் வேர் ஆகியவற்றை நான்கு தோலா கொண்டு 2½ சேர் நீர் சேர்த்து கொதிக்க வைத்து வடிகட்டி அதைக் கொண்டு குழந்தைக்கு பரிஷேசனம் (நனைத்தல்) செய்ய வேண்டும். 3

2. **எண்ணெய்க் குளியல்**

ஆடு அல்லது பசுவின் சிறுநீர், எண்ணெய், எண்ணெய்க்கு நான்கு மடங்கு கோரைக்கிழங்கு, தேவதாரு, கோஷ்டம், சாதூர் ஜாதக கர்ப்பூராதி நறுமணக் கூட்டுப் பொருள் ஆகியவற்றைச் சேர்த்து நான்கில் ஒரு பங்கு மிகுந்திருக்கக் காய்ச்சி அந்த எண்ணெயைக் குழந்தையின் உடலில் தடவிவிடவேண்டும். 4

3. **நெய் பருகுதல்**

காயபலம் அல்லது மஞ்சிட்டி, ஸர்ஜக்ஷாரம், கருங்காலிப் பட்டை, புரச மரப்பட்டை, மருதமரப்பட்டை ஆகியவற்றை கஷாயம் காய்ச்சி அதில் பாலைச் சேர்த்து மேற்கூறிய மருந்து பொருள்களின் விழுதைக் கலந்து நெய் மருந்து முறைப்படி செய்து இரண்டு உளுந்து எடை அளவு குழந்தையை உட்கொள்ளச் செய்க. 5

4. **புகை போடுதல்**

கழுகு, கோட்டான் ஆகியவற்றின் எச்சம், அமுக்கராக் கிழங்கு, பாம்பின் சட்டை, வேப்பிலை, அதிமதுரம் ஆகியவற்றை

---

* சீதபூதனா எனும் கிரகத்தால் சிறு குழந்தைகளுக்குத் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் சீதபூதனா பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

எரியும் தீயிலிட்டு அப்புகை குழந்தையின் மேல்படும்படி செய்ய வேண்டும். 6

**5. காப்பு அணிதல்**

பேய்ச்சுரை, குன்றிமணி, வெள்ளைக் குன்றிமணி ஆகிய வற்றை மாலையாகக் கட்டி குழந்தையை அணியச் செய்க. 7

**6. பலி இடுதல், குளியல்**

பயற்றைச் சுண்டி மடக்கில் வைத்து ஆற்றங்கரை அல்லது நதியின் நடுப்பகுதியில் வைத்து பலி கொடுக்க வேண்டும். இவ்வாறே சீதபூதனா எனும் கிரகத்திற்கு மது மற்றும் இரத்தத்தைப் பலியாக கொடுக்க வேண்டும். குழந்தையை ஏரி அல்லது ஆற்றுக்குக் கொண்டு சென்று அதில் குளிப்பாட்ட வேண்டும். 8

**7. காப்பாகும் மந்திரம்**

"பயறு, அரிசிச்சோறு ஆகியவற்றை உண்பவளும், ஸுரை எனும் மதுவையும், இரத்தத்தையும் பருகுபவளும், நீர் நிலையருகில் வசிப்பவளும் ஆன சீதபூதனா எனும் கிரகம் இந்தக் குழந்தையைக் காப்பாற்றட்டும்." 9

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**சீதபூதனா பிரதிஷேதம் எனும்**

**முப்பத்திநான்காம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தைந்தாம் அத்தியாயம்
# *முகமண்டிகா பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி முகமண்டிகா எனும் கிரகத்தால் குழந்தைகளுக்குத் தோன்றும் துன்பங்களுக்குரிய சிகிச்சையை விளக்குவோம். 1-2

## 1. பரிஷேசனம்

விளாம், வில்வம், முன்னை, மூங்கில்உப்பு, ஆமணக்கு வேர், பாதிரி ஆகியவற்றின் கஷாயத்தைக் குழந்தையை சுற்றிலும் (பரிஷேசனம்) தெளிக்க வேண்டும். 3

## 2. எண்ணெய்க் குளியல்

வாதத்தைத் தணிக்கும் வில்வம், பெருவாகை, குமிழன், ஆமணக்கு ஆகியவற்றின் இலைகளின் சுரஸம், அஜகந்தா, அமுக்கராக்கிழங்கு ஆகியவற்றின் கஷாயத்துடன் நான்கு மடங்கு எண்ணெய், வசை ஆகியவற்றைச் சேர்த்து எண்ணெய் மிகுந்திருக்கக் காய்ச்சி வடிகட்டி அதைக் குழந்தையின் உடல் மேல் தடவிக் குளிக்கச் செய்க. 4

## 3. நெய் மருந்து

பெருங்குரும்பைக் கஷாயம் அல்லது சுரஸத்தில், பாலில், மூங்கில் உப்புடன், அல்லது காகோலி முதலிய கூட்டுப் பொருள்களின் சுரசத்தில் அல்லது இலகு பஞ்சமூல கஷாயத்தில் நெய் மருந்து தயார் செய்து அதில் ஒன்று முதல் நான்கு உளுந்து எடை வரை குழந்தையை உட்கொள்ளச் செய்க. 5

## 4. புகை போடுதல்

வசம்பு, கடுகு, கோஷ்டம், நெய் ஆகியவற்றைக் கலந்து நெருப்புத் தணல் மேல் இட்டுக் குழந்தைக்குப் புகை போட வேண்டும். 6

* முகமண்டிகா எனும் கிரகத்தினால் குழந்தைகளுக்குத் தோன்றும் துன்பங்களுக்கு உரிய சிகிச்சை முறையை விளக்குவதால் இந்த அத்தியாயம் முகமண்டிகா பிரதிஷேதம் எனும் பெயர் பெற்றது.

**5. காப்பு அணிதல்**

சிட்டுக்குருவி, ஜில்லி எனப்படும் ஒரு வகை வெட்டுக் கிளியின் நாக்கு அல்லது பாம்பின் நாக்கு ஆகியவற்றை எடுத்துக் கயிற்றில் கட்டிக் காப்பாகக் குழந்தையின் கழுத்தில் மாலை போல் அணிவிக்கவும். 7

**6. பலி இடுதல்**

கம்பில்லம் அல்லது கங்குட்டம், கோரோசனம் அல்லது அரிதாரம், சுண்ணாம்பு, மலர், ஸுரைமாக்கல், ரஸாஞ்சனம், பாதரசம், மனோசிலை ஆகிய இவ்வனைத்தையும் ஒரு சட்டியில் வைத்து மாட்டுக் கொட்டகையின் நடுவில் கிரகத்திற்குப் பலியாகக் கொடுக்க வேண்டும். மற்றும் ஒரு மண் பாத்திரத்தை, புல்கற்றை நெருப்பின் மேல் வைத்து அதில் பாயஸம் சமைத்து பலியாகக் கொடுக்க வேண்டும். 8

**7. குளியல்**

காயத்திரி முதலிய மந்திரங்களை ஓதிக்கொண்டே மாட்டு தொழுவத்தில் நீரால் குளிப்பாட்ட வேண்டும். 9

**8. காப்பிடும் மந்திரம்**

"பல நகைகளை அணிந்து கொண்டு அழகிய தோற்றத்துடன் விளங்கும் மிக்க செல்வமுள்ளவளும், தன் விருப்பம் போல பல தோற்றங்களை கொள்ளுபவளும், மாட்டுக் கொட்டகையில் எப்பொழுதும் வாசம் செய்பவளுமான முகமண்டிகா எனும் தெய்வம் உன்னைக் காப்பாற்றட்டும் எனக் கூறிக் குழந்தைக்குக் காப்பிட வேண்டும்." 10

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**முகமண்டிகா பிரதிஷேதம் எனும்**

**முப்பத்தைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தாறாம் அத்தியாயம்
# *நைகமேஷ பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி நைகமேஷம் எனும் கிரகத்தால் குழந்தை துன்புறுத்தப்படுவதற்குச் செய்யத்தக்க சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பரிஷேசனம்

வில்வப்பட்டை, வன்னிமரப்பட்டை, புங்கன்பட்டை ஆகிய வற்றாலான கஷாயத்தை குழந்தையைச் சுற்றிலும் தெளிக்க வேண்டும். அல்லது ஸுரை எனும் மது, ஸௌவீராஞ்சனம், புளிக் காடி ஆகியவற்றைத் தெளிக்க வேண்டும். 3

### 2. அப்யங்கம்

ஞாழல், ஸரளமரம் அல்லது வெண்சிவதை, நன்னாரி, சதகுப்பை, தகரை ஆகியவற்றை விழுதாகச் செய்து அவ்விழுது 5 தோலா, எள் எண்ணெய் 20 தோலா, பசுவின் சிறுநீர், தயிர், தயிர்த்தெளிவு, புளிப்புக்காடி ஆகிய இவை ஒவ்வொன்றும் எண்ணெயின் அளவிற்கு நான்கு மடங்கு, ஆனால் தயிர் மட்டும் எண்ணெயின் அளவு எனக் கொண்டு அனைத்தையும் சேர்த்து முறைப்படி எண்ணெய் காய்ச்சி எண்ணெய் குளியலுக்கு பயன்படுத்துக. 4

### 3. நெய் மருந்து

இலகு பஞ்ச மூலம், மஹாபஞ்சமூலம் ஆகியவற்றின் கஷாயம் நான்கு மடங்கு, ஒரு பங்கு பால், மதுரகம் முதலிய கூட்டுப் பொருள்களின் விழுது நான்கில் ஒரு பங்கு என அனைத்தையும் சேர்த்து நெய் மருந்துக் காய்ச்சுக. அல்லது பேரீச்சை மரக் குறுத்தின் நீரைக் கொண்டு நெய் மருந்து காய்ச்சி 3 உளுந்து எடை அளவு வரை இளஞ்சூடுள்ள பாலில் கலந்து குழந்தைக்குப் பருகக் கொடுக்கவும். 5

---

* நைகமேஷம் எனும் கிரகம் பற்றிய போது குழந்தைக்குத் தோன்றும் துன்பங்களைப் போக்கும் சிகிச்சை முறைகளை விளக்குவதால் இந்த அத்தியாயம் நைகமேஷ பிரதிஷேதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

### 4. காப்பு அணிதல்

வசம்பு, கடுக்காய், அருகம்புல், சடாமாஞ்சி ஆகியவற்றில் ஒன்றை நூலில் கட்டி மாலையாகக் குழந்தைக்கு அணிவிக்கவும். 6

### 5. புகை போடுதல்

வெண்கடுகு, வசம்பு, பெருங்காயம், கோஷ்டம், யவ தானியம், சேராங்கொட்டை ஓமம் ஆகியவற்றைத் தூளாக்கி அதைக் கொண்டு குழந்தைக்குப் புகை போடவும். 7

குரங்கு, கோட்டான், கழுகு ஆகியவற்றின் மலத்தைக் கொண்டு இரவில் மக்கள் உறங்கிய பிறகு குழந்தைக்கு அப்பொருள்களால் புகை போட வேண்டும். 8

### 6. பலி இடுதல்

எள், அரிசி, மலர்மாலை, பலவகை லட்டு முதலான தின்பண்டங்களை ஒரு மடக்கில் வைத்து குமாரபித்ரு மேஷம் எனும் கிரகத்தை குறித்து ஏதேனும் ஒரு மரத்தடியில் பலியாகக் கொடுக்க வேண்டும். 9

குழந்தையை ஆலமரத்தடிக்கு அடியில் எடுத்துச் சென்று அங்கு குளிக்கச் செய்து ஷஷ்டி திதியன்று அங்கு அந்தக் கிரகத்திற்கு உரிய பலியையும் கொடுக்க வேண்டும். 10

### 7. காப்பிடும் மந்திரம்

"ஆட்டின் முகம் போன்ற முகமும், கண்களும், அசைந்து கொண்டிரக்கும் புருவங்களும் கொண்டு மனம் போனபடி உருவம் தாங்கும் திறமை கொண்ட நைகமேஷம் எனும் தெய்வம் இக்குழந்தையைக் காப்பாற்றட்டும்" எனக் கூறி காப்பிட வேண்டும். 11

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**நைகமேஷ பிரதிஷேதம் எனும்**

**முப்பத்தாறாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தேழாம் அத்தியாயம்
# *கிரஹோத்பத்தி

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி கிரஹஉத்பத்தி என்பதை விளக்குவோம். 1-2

## 1. கிரகங்களின் விளக்கம்

குழந்தைகளைப் பற்றிக் கொண்டு துன்புறுத்துபவை எனக் கூறப்பட்ட ஸ்கந்தம் முதலான ஒன்பது கிரகங்களும் பெருஞ் செல்வம் உள்ளவை, திவ்யமான உடலைக் கொண்டவை, ஆண், பெண் தோற்றங்கள் உள்ளவையுமாகும். 3

## 2. கிரகங்கள் தோன்றக் காரணம்

சரவணத்தில் தோன்றிய தம் வலிமையால் தானே காப்பாற்றப்பட்ட கந்த பெருமானுக்குக் காப்பாக கிருத்திகை, பார்வதி, அக்னி, பரமசிவன் எனும் தெய்வங்களால் இந்தக் கிரகங்கள் தோற்றுவிக்கப்பட்டன. 4

பெண்ணுருவம் கொண்டவையாகக் கூறப்பட்ட கிரகங்கள், கங்கை, பார்வதி, கிருத்திகை கன்னிகள் ஆகிய தெய்வங்களின் அம்சங்களால் தோன்றியவை இராஜஸ, தாமஸ குணங்கள் உள்ளவையுமாகும். 5

ஆட்டின் முகம் கொண்டதாகக் கூறப்பட்டுள்ள நைகமேஷம் எனும் கந்த பெருமானுக்கு நண்பனும், காப்பாளனுமான கிரகத்தைப் பார்வதி தானே தோற்றுவித்தாள். 6

ஸ்கந்த அபஸ்மாரம் எனும் கிரகம் அக்னி பகவானால் தோற்றுவிக்கப்பட்டது. நெருப்பைப் போன்ற ஒளியுள்ளது. கந்தபெருமானுக்கு நண்பனான இந்தக் கிரகத்துக்கு விசாகன் எனும் பெயரும் உள்ளது. 7

பரமசிவன், கந்தன் எனும் கிரகத்தைத் தானே தோற்றுவித்தார். இந்தக் கிரகத்திற்குக் குமாரன் என்ற பெயரும் உண்டு. 8

* கிரஹோத்பத்தி - குழந்தைகளைத் துன்புறுத்தும் ஸ்கந்தன் முதலான கிரகங்களின் தோற்றம் முதலியவற்றை விளக்குவதால் இந்த அத்தியாயம் கிரஹோத்பத்தி எனும் பெயர் கொண்டதாயிற்று.

சிவனாலும், அக்னி பகவானாலும் தோற்றுவிக்கப்பட்ட கந்த பெருமான் குழந்தைகளைப் போலத் தானும் விளையாட்டுகளில் ஈடுபடுபவராவார். ஆனால் அவர் சிறு குழந்தைகளைப் பற்றிக் கொண்டு துன்புறுத்தும் இயல்பு உடையவர் அல்லர். இதை உணராத சிலர் அறிவில்லாதவர்களாகி ஸ்கந்தன் எனப் பெயர் கொண்ட கிரகம் கந்த பெருமானாக எண்ணி அவரைக் குறை கூறுவார்கள். உண்மையில் கந்த பெருமான் குழந்தைகளை பற்றிக்கொள்வது இல்லை. உண்மையை அறியாத அறிவிலிகள் சிலர் கந்தனைக் குறை கூறுகின்றனர். 9-10

கந்த பெருமான் வளர்ந்து பெரியவராகி தேவர்களின் படைக்குத் தலைமை தாங்கிய பிறகு இந்தக் கிரகங்கள் தம் உணவு முதலிய தேவைகளுக்கு வேண்டிய ஏற்பாடு செய்ய வேண்டுமெனக் கேட்டுக் கொண்டன. முருகனும் அந்த கிரகங் களைப் பற்றி சிவபெருமானிடம் விண்ணப்பித்துக் கொண்டார். பரமசிவன் அந்தக் கிரகங்களை நோக்கிக் கூறினார். 11-12

பகன் என்பவனின் கண்களைப் பறித்த பரமசிவன் அந்த கிரகங்களை நோக்கி இவ்வாறு கூறினார்: "விலங்குகள் (தாவரங் களும் மிருகங்களும்) மனிதர்கள், தேவர்கள் என மூன்று வகை யாக பிரிந்துள்ள இந்த உலக இனங்கள் ஒன்றுக்கொன்று உதவி புரிந்து வாழ்கின்றன. பசு மனிதர்களுக்குப் பால் கொடுக்கிறது. மனிதர்களும் பசுவைத் தாயைப் போல் கருதிக் காப்பாற்றுகின்றனர். மனிதர்கள் யக்ஞம் முதலியவற்றால் தெய்வங்களை வணங்குகின்றனர் தெய்வங்களும் மழை, வெப்பம் குளிர் முதலியவற்றைத் தோற்றுவித்து தாவரம் - மிருகங்கள் ஆகியவற்றை வாழ வைத்து மனிதர்களையும் வாழவைக்கின்றனர். இவ்வாறு ஒருவருக்கொருவர் உபகாரம் செய்து கொண்டு வாழ்கின்றனர் ஆகவே ஒரு வேலையும் தர இயலவில்லை. ஆகவே உங்களுக்கு சிறுகுழந்தைகளிடமே வேலை கிடைக்கப் போகிறது. 13-16

எந்தக் குலத்தில் தேவதைகள், பித்ருக்கள், பூசிக்கப்படு வதில்லையோ, எங்கு வேதம் கற்ற நல்லவர்கள், சாதுக்கள், குருக்கள், நல்லொழுக்கமுள்ளவர்கள் பெருமைப்படுத்தப்படுவ தில்லையோ, எந்தக் குலத்தில் மற்ற உயிரினங்களுக்குப் பலிகள், பிச்சை முதலியன வழங்கப்படுவது இல்லையோ, நல்ல ஒழுக்கம் எந்த குலத்தில் இல்லையோ, உடைந்த வெண்கலத் தட்டுகளில் உணவு உட்கொள்பவர் எந்த குலத்தில் காணப்படுகின்றனரோ அத்தகையவர்களின் இல்லங்களில் உள்ள சிறு குழந்தைகளை

ம்சித்து வாழ்ந்து கொள்ளுங்கள். அந்தக் குழந்தைகளைக் காப்பாற்ற முனைந்து அந்த இல்லத்தவர்கள் உங்களுக்கு பலி, தானங்கள் செய்து பூசை செய்வார்கள். அதனால் உங்களுக்கு நல்வாழ்வு கிடைக்கும்." 17-20

பொதுவாக இந்த கிரகங்களால் பற்றிக்கொள்ளப்பட்ட குழந்தைகள் எளிதில் சிகிச்சையால் உடல் நலம் பெற இயலாதவர்களாவர். கந்த கிரகத்தால் பற்றிய குழந்தைகள் உடல் ஊனம் எனப்படும். அதனால் இந்த கிரகங்களில் கந்தகிரகம் கொடுமையானது. மற்ற கிரகங்களும் தம் முழு இலக்கணங்களுடன் குழந்தைகளைப் பற்றிக் கொண்டபோது அக்குழந்தைகள் சிகிச்சைக்கு உட்படாதவர்கள் ஆவர். 21-22

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**

**கிரஹோத்பத்தி எனும்**

**முப்பத்தேழாம் அத்தியாயம் முற்றும்.**

# முப்பத்தெட்டாம் அத்தியாயம்
# *யோனிவியாபத் பிரதிஷேதம்

இனி தன்வந்தரி பகவான் ஸுசுருதர் முதலான சீடர்களுக்கு உபதேசம் செய்தபடி பெண்குறியில் தோன்றும் தோஷங்களுக்குச் சிகிச்சை முறைகளை விளக்குவோம். 1-2

### 1. பெண்குறியில் நோய்கள் தோன்றக் காரணம்

இயற்கையாக வறட்சித்தன்மை கொண்டவள் வலிமையற்று அல்லது மிக்க இளமை கொண்டு, நீண்டு வலிமை கொண்டு நன்கு வளர்ந்த ஆண்குறி கொண்ட ஆடவருடன் அளவுக்கு மீறிக் கலவியில் ஈடுபடுவதால் அவளது உடலில் வாதம் சீற்றமடைந்து பெண்குறிப்பகுதியை அடைந்து பல வகை நோய்களைத் தோற்றுவிக்கும். 3

### 2. பெண்குறி நோய்களின் எண்ணிக்கை

வாதம் பித்தம் கபம் எனும் மூன்று தோஷங்களால் அந்தந்த தோஷங்களுக்கு உரிய இலக்கணங்களுடன் பெண்குறிப்பகுதியில் தோன்றக்கூடிய நோய்கள் இருபது வகைப்படும். 4

### 3. நோய்களுக்குக் காரணம்

இருபது வகைகளாகக் கூறப்பட்ட இந்நோய்களுக்குக் காரணங்களாவன :- தவறான உணவு உட்கொள்ளுதல், தவறான பழக்கங்களை மேற்கொள்ளுதல் ஆகியவற்றால் மாதவிடாய் இரத்தம் கேடுறும். மற்றும் தாய் தந்தையர்களின் விந்து சோணிதங்களின் தோஷங்களால், தெய்வச் செயலால் (முற்பிறவி வினையால்) தோன்றும். அவற்றின் விளக்கம் தனித்தனியாக இனி விளக்கப்படும். 5

* யோனி - பெண்குறி. பிள்ளைப்பேறு ஏற்படும்போது பெண்குறியில் உள்ள தோஷங்களால் குழந்தைக்கு துன்பங்கள் தோன்றலாம். ஆகவே அத்தகைய தோஷங்களை விளக்கிச் சிகிச்சை கூறப்படுவதால் இந்த அத்தியாயம் யோனிவியாபத் பிரதிஷேதம் எனும் பெயர் கொண்டதாயிற்று.

### 4. பெண்குறியில் தோன்றும் நோய்கள்

1. உதாவர்த்தம் 2. வந்தியா 3. விப்லுதா 4. பரிப்லுதா 5. வாதலா எனும் இவ்வைந்து நோய்களும் வாதத்தின் சீற்றத்தால் தோன்றுவனவாகும். 6. ருதிரக்ஷரா 7. வாமினீ 8. ஸ்ரம்ஸினீ 9. புத்ரக்னீ 10. பித்தலா எனும் இவ்வைந்தும் பித்தத்தின் சீற்றத்தால் தோன்றுவனவாகும். 11. அத்யானந்தா 12. கர்ணினீ 13. சரணா 14. அதிசரணா 15. சிலேஷ்மலா எனும் இவ்வைந்தும் கபத்தின் சீற்றத்தால் தோன்றுவனவாகும். 16. ஷண்டீ 17. பலினீ 18. மஹதீ 19. ஸூசிவக்த்ரா 20. ஸர்வஜா எனும் இவ்வைந்தும் மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றுவனவாகும். 6-8

### 5. வாதத்தால் தோன்றும் பெண்குறி நோய்களின் இலக்கணம்

உதாவர்த்தம் - மிக்க துன்பம் விளைவித்துக் கொண்டு நுரை மிகுந்து மாதவிடாய் இரத்தம் வெளிவருமாயின் அது உதாவர்த்தா எனப்படும்.

வந்த்யா - மாதவிடாய் இரத்தம் வெளியேறாவிடில் அது வந்த்யா எனும் நோயாகும். விப்லுதா - எப்பொழுதும் குறிப்பகுதியில் வலி தோன்றிக் கொண்டிருக்குமாயின் அது விப்லுதா எனும் நோயாகும்.

பரிப்லுதா - கலவியின் போது மிக்க வலி தோன்றுமாயின் அது பரிப்லுதா எனும் நோயாகும். வாதலா - மிக்க வறண்டு கடும் வலியுடன் கூடி ஊசியால் குத்துவது போன்ற துன்பம் விளைவிப்பது வாதலா எனும் நோயாகும். இவ்வைந்தில் முதலில் கூறிய நான்கு வகை நோய்களில் வாத சீற்றத்தால் தோன்றும் வலி மிகுந்திருக்கும். 9-11

### 6. பித்தத்தின் சீற்றத்தால் தோன்றும் பெண்குறி நோய்களின் இலக்கணம்

லோஹிதக்ஷரா - மிக்க எரிச்சலுடன் மாதவிடாய் இரத்தம் வெளிவருமாயின் அது லோஹிதக்ஷரா (ருதிரக்ஷரா) எனப்படும்.

வாமினீ - வாதத்துடன் கூடி இரத்தத்துடன் உயிரணுவை வெளியே தள்ளிவிடும் பெண்குறி அல்லது மாதவிடாய் காலத்தில் உயிரணுவை வெளியே தள்ளிவிடும் குறி வாமினீ எனப்படும்.

பிரஸ்ரம்ஸினீ - கலவியால் துன்புற்று தன் நிலை விட்டு நழுவிவிடுவது அல்லது மிக்க துன்பத்துடன் குழந்தையை வெளி யேற்றுவதுமான குறி பிரஸ்ரம்ஸினீ (ஸ்ரம்ஸினீ) எனப்படும்.

புத்ரக்னீ - அடிக்கடி கருவில் நின்ற குழந்தையை இரத்தப்பெருக்குடன் வெளியே தள்ளிவிடும் குறி புத்ரக்னீ எனப்படும்.

பித்தலா - மிக்க எரிச்சலும், பக்குவம் பெறுதலும் காய்ச்சலைத் தோற்றுவிப்பதுமான குறி பித்தலா எனப்படும். இவ்வைந்துவகை நோய்களிலும் முதலில் கூறிய நான்கும் எரிச்சல் முதலான பித்தத்தால் தோன்றும் துன்பங்களை அதிக அளவில் கொண்டிருக்கும். 12-14

**7. கபத்தால் தோன்றும் பெண்குறி நோய்களின் இலக்கணம்**

அத்யானந்தா - கலவியில் திருப்தி தோன்றாமல் மேலும் மேலும் புணர்ச்சியை விரும்பும் குறி அத்யானந்தா எனப்படும்.

கர்ணினீ - கபமும் இரத்தமும் சீற்றமுறுவதால் குறியில் கட்டி போன்ற மாமிசம் தோன்றியுள்ளது கர்ணினீ எனப்படும்.

அசரணா - கலவியின் போது ஆடவருக்கு விந்து வெளிவருதற்கு முன்பே இன்பநீர்ப் பெருக்கும் கொள்ளும் குறி அசரணா (சரணா) எனப்படும்.

அதிசரணா - கலவியின் போது ஆடவருக்கு முன் பலமுறை இன்பநீர் பெருக்கு அடையும் குறி அதிசரணா எனப்படும்.

சிலேஷ்மலா - மிக்க பிசுபிசுப்பு அரிப்பு குளுமைத்தன்மை ஆகியவற்றை கொண்டிருக்கும் பெண்குறி சிலேஷ்மலா எனப்படும்.

ய்வைந்து நோய்களிலும் முதல் நான்கு நோய்களில் கபத்தின் இலக்கணம் மிகுந்து காணப்படும். 15-17

**8. ஸந்நிபாதத்தால் தோன்றும் பெண்குறி நோய்களின் ரம்**

ஷண்டீ - பெண்குறியில் மாதவிடாய் இரத்தம் தோன்றாது. மார்பகங்களும் நன்கு உருப்பெற்றிருக்காது. கலவியில் ஆண்குறி மிக்க கடினத்தன்மை கொண்டிருப்பதாகத் துன்பம் பெறும் குறி ஷண்டீ எனப்படும்.

பலினீ - வலிமையும் திடமும் கொண்ட ஆணுடன் வலிமை குறைந்த பெண் கலவி புரிவதால் தோன்றும் நோய் பலினீ எனப்படும்.

விவ்ருதா - குறிப்பகுதித்துளை மிகப்பெரியதாகி இருந்தால் அது விவ்ருதா எனும் நோயாகும்.

அதிஸம்வ்ருதா - குறிப்பகுதித் துளை மிகக் குறுகியதாகி யிருந்தால் அது அதிஸம்வ்ருதா எனும் நோயாகும்.

திரிதோஷஜா - மூன்று தோஷங்களும் சீற்றம் பெறுவதால் உண்டாகும் இலக்கணங்களைக் கொண்டிருப்பது திரிதோஷஜா எனப்படும்.

இந்நோய்களில் முதலில் கூறப்பட்ட நான்கிலும் மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் இலக்கணங்கள் மிகுந்து காணப்படும். மூன்று தோஷங்களும் சீற்றமுறுவதால் தோன்றும் பெண்குறி நோய்கள் சிகிச்சைக்கு உட்படாதவையாகும். 18-20

## 9. வாதத்தால் தோன்றும் நோய்க்குச் சிகிச்சை

சிகிச்சையால் தீர்க்கக்கூடிய பெண்குறி நோயில் தோஷத்திற்கு ஏற்ப எண்ணெய் மருந்துகளைப் பயன்படுத்த வேண்டும். சிறப்பாக வாதம் முதலானவற்றிற்குக் கூறப்பட்ட உத்தரவஸ்தி முறையைப் பயன்படுத்த வேண்டும். 21

கடினமாகி (வறண்டு) குளிர்ந்து கலவியைப் பொருக்க இயலாத பெண்குறிக்கு நீர்ப்பாங்கான இடங்களில் வாழும் விலங்குகளின் மற்றும் நீர்வாழ் உயிரினங்களின் புலாலைக் கொண்டு கும்பீஸ்வேதம் எனும் முறையைப் பயன்படுத்த வேண்டும். (நீர்வாழ் விலங்குகளின் புலால் மற்றும் வாதத்தைப் போக்கும் மருந்து பொருள்களையும் கஷாயம் காய்ச்சிச் சட்டியில் இட்டு அதை நிலத்தில் சிறு குழியில் வைத்து அதன்மேல் நோயுற்றவளைக் குப்புற படுக்கச் செய்து நன்கு காய்ச்சிய இரும்புக்குண்டு அல்லது கல்லை அக்கஷாயத்தில் இட்டு ஆவியைக் குறிப்பகுதியில் படும்படிச் செய்து வியர்க்கச் செய்தல் கும்பீஸ்வேதமாகும்). 22

காகோலி முதலான இனிப்புச்சுவை கொண்ட பொருள் களுடன் எலும்பு நீக்கிய மாமிசத்தைச் சேர்த்து இடித்துக்குறிப் பகுதிக்குள் வைக்க வேண்டும். அத்துடன் தாமதப்படுத்தாமல் எண்ணெயில் நனைத்த பஞ்சையும் வைக்க வேண்டும். அவ்வாறே வாதத்தைப் போக்கும் பொருள்களாலான கஷாயத்தைக் குறிப்பகுதியில் நிறப்பிவிட வேண்டும். 23

## 10. பித்தத்தால் தோன்றிய பெண்குறி நோய்களுக்குச் சிகிச்சை

எரிச்சலும் வெப்பமும் கொண்ட குறி நோய்களுக்கு இரத்த பித்தத்தைப் போக்கக் கூறிய குளிர்ச்சி தரும் சிகிச்சை முறை களைப் பயன்படுத்த வேண்டும். 24

கெட்ட நாற்றமும் பிசுபிசுப்பும் கொண்டுள்ள குறியில் ஆலம், அரசு, நாவல் முதலான பாலுள்ள மரங்களின் பட்டைகளின் தூளை நிரப்பி சரச்கொன்றை முதலிய கூட்டுப் பொருள்களின் பட்டையின் கஷாயத்தைக் கொண்டு கழுவி விட வேண்டும். 25

சீழ்பெருகிக் கொண்டிருக்கும் குறியில் மிச்ரக அத்தி யாயத்தில் கூறிய தூய்மைப்படுத்தும் மருந்துப்பொருள்களின் கஷாயத்தில் பசுவின் சிறுநீரும் உப்பும் கலந்து தூய்மைப்படுத்த வேண்டும். 26

## 11. கபத்தால் தோன்றும் பெண்குறி நோய்களுக்குச் சிகிச்சை

அரிப்பும், தொட்டால் வேதனையும் கொண்ட பெண்குறிக்கு கண்டங்கத்தரிப் பழத்தூளையும், மஞ்சள், மரமஞ்சள் ஆகிய வற்றின் தூளையும் நிரப்பி இந்தத் தூள்களைக் கொண்டு புகை போட வேண்டும். 27

## 12. கர்ணினீ பெண்குறி நோய்க்குச் சிகிச்சை

கர்ணினீ எனப்படும் மாமிசக்கட்டியுடன் கூடிய பெண் குறிக்கு மிச்ரக அத்தியாயத்தில் கூறிய தூய்மைப்படுத்தும் பொருள்களாலான வத்தியை வைக்க வேண்டும். இவ்வாறே நிலை தவறிய பிரஸ்ரம்ஸினி எனும் பெண்குறி நோய்க்கு நெய்யை நிரப்பி பாலைக்கொண்டு வியர்க்கச் செய்து பெண் குறியை உள்நோக்கி அழுத்திச் சரியான நிலையில் இருக்கச் செய்து பிறகு வேசவாரம் எனப்படும் எலும்பு நீக்கிய மாமிசத்தை வைத்து கட்டு கட்ட வேண்டும். 28-29

கபத்தால் தோன்றிய அல்லது எல்லா வகையான பெண் குறிநோய்களுக்கும் தோஷங்களுக்கு ஏற்ப ஸுரை எனும் மது, அரிஷ்டம், ஆஸவம் எனும் மருந்துகள் ஆகியவற்றைப் பயன் படுத்த வேண்டும். அவ்வாறே எப்பொழுதும் காலை வேளையில் பூண்டு சுரசத்தைப் பருக வேண்டும். பத்திய உணவாகப் பாலும் மாமிசச்சாறும் கலந்த உணவை உட்கொள்ள வேண்டும். 30

சுக்ரசோணித சுத்திசாரீர அத்தியாயத்தில் ஆணுக்கு விந்து தோஷங்களையும், பெண்ணுக்கு ருதுரத்த தோஷங்களையும் போக்கவும் மற்றும் விஸர்பநாடி, மார்பக நோய்கள் முதலிய வற்றைப் பற்றிய நிதான அத்தியாயத்தில் கூறப்பட்டவையும், மற்றும் க்ஷீணபலீய வாஜீகரண அத்தியாயத்தில் வலிமையையும் விந்துவையும் வளர்க்கக் கூடியவையும் ஆன சிகிச்சை முறை களையும் காண்க. மூடகர்ப்பநிதான சிகிச்சையில் மூடகர்ப்

பத்திற்குக் கூறிய காரணங்களையும் அவற்றிற்கான சிகிச்சை முறைகளையும் காண்க. இவ்வாறே கர்பிணீ வியாகரண சாரீர அத்தியாயத்தில் கருவுற்றவளுக்கு மாதந்தோறும் செய்யத் தக்கவையும், இரத்தப்பெருக்கு முதலியவற்றிற்குக் கூறப்பட்ட சிகிச்சை முறைகளையும் காண்க.

அறிவாற்றல் மிக்க மருத்துவர் இந்த அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ள சிகிச்சை முறைகளை அறிந்து யோனிவியாபத் எனும் இந்த அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள நோய்களுக்கு ஏற்ற சிகிச்சை முறைகளைக் கையாள வேண்டும். மற்றும் குறைமாத பிரஸவம் பெற்றவளுக்குக் காய்ச்சல் முதலிய நோய்கள் கண்ட போது செய்யத்தக்கவையாக உத்தரஸ்தானத்தில் கூறப்பட்டுள்ள சிகிச்சை முறைகளையும் நோக்கித் தக்க முறைகளைப் பின்பற்ற வேண்டும். 31-32

**ஸுசுருதஸம்ஹிதை - உத்தரஸ்தானத்தில்**
**யோனிவியாபத் பிரதிஷேதம் எனும்**
**முப்பத்தெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

**ஸுசுருதஸம்ஹிதை உத்தரஸ்தானத்துடன் இரண்டாம் பகுதிக்கு சிருங்கட்டூர் நடாதூர் (எஸ்.என்.) ஸ்ரீராமதேசிகன் எழுதிய தமிழ் மொழிபெயர்ப்பு முற்றுப்பெற்றது.**